# திருக்குறள் மூலமும்,

## பரிமேலழகருரையும்.

இவ்வுரைக்கியையுமாறு

*ஆசிரியர்*

**கோ. வடிவேலு செட்டியாரவர்கள்**

*இயற்றிய*

தெளிபொருள் விளக்கமும், கருத்துரையும்,

குறிப்புரையும்,

ஆங்கில மொழிபெயர்ப்புடன்.

இரண்டாம் பகுதி

## பொருட்பால்



*மதுரைப் பல்கலைக் கழகம்*

**மதுரை**

1976

# மதுரைப் பல்கலைக்கழகம்

## திருக்குறள் ஆய்வகம்

டாக்டர் தி. முருகரத்தனம்
திருக்குறள் துறை மதுரை–2,
16—1—'76.

'அணுவைத் துளைத்து ஏழ்கடலைப் புகட்டிக் குறுகத் தறித்த குறளை' நெடுக விரித்துரைத்தால் ஒழிய அது விளங்காதல்லவா ? விரித்துரைக்கும் பணியினை மேற்கொண்ட பதின்மருள் பார் புகழும் பரிமேலழகர் தலையாயவர். அவர் உரையோ தமிழிலக்கியத்தில் புலமை முற்றியோர்க்கே முற்றிலும் புலனாகும். அதனை எளிமைப்படுத்தல் இன்றையோர் கடனாயிற்று. அக்கடமையினை மேற்கொண்டு தொண்டாற்றிய சான்றோர் கோ. வடிவேலு செட்டியாரவர்கள். அவர்களது திருக்குறள் மூலமும் பரிமேலழகர் உரையும் என்னும் பதிப்பு பலப்பல ஆண்டுகளாகத் தமிழர்க்குக் கிடைக்காமல் இருந்தது. அதனை அச்சிட்டுத் தமிழுலகுக்கு வழங்கவேண்டிய கடமையினை மதுரைப் பல்கலைக்கழகம் உணர்ந்தது. அதன் முதல் துணைவேந்தர் மூதறிஞர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் அப்பதிப்புப் பணிக்குத் தொடக்கம் செய்து வைத்தனர் ; பேராசிரியர் மொ. அ. துரை அரங்கனார் ஊக்கம் தந்துதவினர் ; அடுத்த துணைவேந்தர் மூவாத் தமிழ் வளர்த்த முனைவர் மு. வ. அவர்கள் அதற்கு ஆக்கம் தந்து வந்தனர். இதன் அச்சீட்டுப் பணியினை அவர்களே திருக்குறள் துறைக்குச் சொல்லாது சொல்லித் தந்தனர். அவர் தந்த பணியினைத் தீஞ்சுளைப் பலவின் இன்னறுங் கனியென உளங்கொண்டு முட்புறத்தை மறந்து உட்புறத்தைச் சுவைத்து வந்தேன்.

ஆய்ந்தாய்ந்து புதுமணிகள் கண்டெடுத்துத் தமிழ்த்தாய்க்கு அணிவிப்பது எங்கள் ஆய்வகத்தின் பணி. ஆனாலும் மறைப்புண்டு கிடந்த பழமணிகளையும் புது

மெருகேற்றிப் பொலிவுபெற அணிவிப்பதும் எங்கள் பணியாக மேற்கொண்டோம். முப்பாலின் மூன்றும்பாலாகக் காமத்துப்பால் இப்போது வெளிவருகிறது.

இந்த நூற்றுண்டின் தொடக்கத்தில் வெளியிடப் பெற்ற இந்த நூல், ஆசிரியர் பதிப்பித்தவாறே வெளிவருகிறது. தவருக இடம்பெற்றுவிட்டன போலும் எனக் கருதப்பட்ட பிழைகள் மட்டிலுமே திருத்தப்பட்டன. முன்னைப் பதிப்பில் ஏறிய அச்சுப் பிழைகளும் திருத்தப் பட்டன. ஆங்கில மொழிபெயர்ப்பில் (அதனை நீக்கி விடலாம் என்ற எண்ணம் கைவிடப்பட்டு) சிற்சில மாற்றங்கள் செய்யப்பட்டன. சரியோ தவரோ என மயக்கம் உற்ற இடத்திலும் ஆசிரியர் பதிப்பித்தவாறே பதிப்பிக்கப்பட்டது. பாட்டு முதற் குறிப்பகராதி ஒன்று புதிதாய்ச் சேர்க்கப்பட்டது. வேறெவ்வகை மாற்றமும் இப்பதிப்பில் செய்யப்படவில்லை.

இவ்வரிய பதிப்பை நிறைந்த குறிப்புக்களோடு நமக்கு வழங்கிய பேராசான் கோ. வடிவேலு செட்டியார் அவர்கள்-தம் இம்மை வாழ்வு பற்றி நாம் ஒன்றும் அறியாதிருப்பது பெருங்குறை. பதிப்பாசிரியர்தம் பருவுடல் மறைந்தாலும் அவர்தம் திருக்குறள் பதிப்பு நின்று நிலவும். அப்பதிப்போடு அவர் வாழ்க்கை வரலாற்றையும் இணைத்தால் அவர் நினைவும் நின்று நிலவும். அதன்பொருட்டு அவர்தம் வாழ்க்கை வரலாறு எழுதப்பட்டு இப்பதிப்பில் தனியே சேர்க்கப்பட்டுள்ளது. பேராசான் கோ. வடிவேலு செட்டியார் அவர்களுடைய மாணவராகித் தமிழ் பயின்று இன்றும் அவரை உச்சிமேல் வைத்துப் போற்றிவரும் பேராசிரியர் டாக்டர் மொ. அ. துரைஅரங்கனுர் அவர்கள், அவர்தம் வாழ்க்கை வரலாற்றை எழுதி உதவினுர்கள். அன்னுருக்குத் தமிழ் உலகின் சார்பாகவும், எங்கள் ஆய்வகத்தின் சார்பாகவும் நன்றி தெரிவித்துக் கொள்ளு-கிறேன்.

திருக்குறள் உரைவளம் வந்துள்ளது; உரைக்கொத்து வந்துள்ளது; ஆராய்ச்சிப் பதிப்புக்களும் வந்துள்ளன.

இவற்றின் வளர்ச்சியாகத் திருக்குறளுக்கு அழகிய பதிப்புக்களும் அரிய பதிப்புக்களும் அனைத்தும் தாங்கிய பதிப்புக்களும் மேலும் மேலும் தோன்றுதல் வேண்டும். இவ்வாறு சில பதிப்புக்களைக் கொணரும் முயற்சியினைத் திருக்குறள் ஆய்வகம் மேற்கொள்ள எண்ணம் கொண்டுள்ளது. அவற்றுக்கு இப்பதிப்பு ஒரு முன்னோடி எனவே நான் கருதுகிறேன்.

இப்பதிப்புப் பணியில் ஆக்கமும் ஊக்கமும் தந்துவந்த முன்னைத் துணைவேந்தர் பெருமக்களுக்குத் தமிழுலகின் நன்றி உரியது. இப்பதிப்புக்கு அணிந்துரை தந்து எங்கள் பணிக்கு அறிவுரையும் ஆதரவும் தந்துவரும் இன்றைத் துணைவேந்தர் சை. வே. சிட்டிபாபு அவர்களுக்கு நான் நன்றி கூறக் கடமைப்பட்டிருக்கிறேன்.

அச்சகத்து மெய்ப்படிவங்களை (proofs) செல்வி காமாட்சி சீனிவாசன், செல்வி ஜலஜா, டாக்டர் திருமதி மீனாட்சி முருகரத்தனம் ஆகியோர் திருத்தி உதவினர். அவர்கள் நன்றிக்குமட்டும் அல்ல பாராட்டுக்கும் உரியவர்கள். இந்நூலைச் சிறப்புற அச்சிட்ட கீதா அச்சகத்தார் நன்றிக்குரியவர்கள்.

குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்.

—தி. முருகரத்தனம்

# துணைவேந்தர் அணிந்துரை

'வாலறிவின் வள்ளுவரும் தம் குறள்வெண்பா அடியால் வையத்தார் உள்ளுவ எல்லாம் ஓர்ந்து அளந்தார்' எனப் பரணர் என்னும் புலவர் திருக்குறளைப் போற்றினார். சின்னஞ்சிறு நூலாகிய திருக்குறள் உலகத்தார் நினைத்ததை எல்லாம் எவ்வாறு தன்னுள் கொண்டிருக்கிறது என்பதைப் பத்துப் பேராசிரியர்கள் முன்னர் உரையெழுதி விளக்கியுள்ளனர் எனத் தமிழ் வரலாறு கூறுகிறது. அவ்வாறு உரையெழுதி விளக்கம் தந்தவர்களுள் பரிமேலழகரும் ஒருவர். 'பாரில் உள்ள நூல் எல்லாம் வள்ளுவர் செய் நூலாமோ' எனக் கேட்டது போன்று 'நூலிற் பரித்த உரையெல்லாம் பரிமேலழகர் தெரித்த உரையாமோ' என அவர் உரையையும் தமிழுலகம் ஏற்றிப் போற்றும். திருக்குறளில் அரும்பொருளும் நுண்பொருளும் அடங்கிக் கிடப்பது போன்று பரிமேலழகர் உரையில் அரும்பொருளும் நுண்பொருளும் உண்டு என்பர் புலவோர். ஆனால் அவையெல்லாம் கற்றோர்க்கே அல்லாமல் மற்றோர்க்கு விளங்கும் அருமைப்பாடு உடையன. இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் தமிழ்ப் பேரறிஞராயும் சமயப் பேரறிஞராயும் விளங்கிய கோ. வடிவேலு செட்டியார் அவர்கள் இவ்வரும்பொருளையும் நுண்பொருளையும் இன்றைய உலகுக்கு எளிதாக்கி எடுத்துக்காட்ட வேண்டிப் பரிமேலழகர் உரையினை இன்றைய நடையில் எழுதிப் பதிப்பித்தார்கள். திருக்குறளிலும் பரிமேலழகர் உரையிலும் கிடக்கும் அரும்பெருங்கருத்துக்களுக்கு அவர்கள் ஏராளமாக இலக்கணக் குறிப்புக்களும் இலக்கியக் குறிப்புக்களும் சமயக் குறிப்புக்களும் எழுதிச் சேர்த்துள்ளார்கள். திருக்குறளைக் காட்டிலும், பரிமேலழகர் உரையைக் காட்டிலும் அவை நீளமாக அமைந்துள்ளன. இவையடங்கிய முப்பால் ஏறத்தாழ 1,500 பக்கங்கள் கொண்டுள்ளது. இந்த நூற்றாண்டில் திருக்குறள் பரிமேலழகர் உரைக்கு வெளிவந்த பதிப்புக்களில் இதுவே தலையாயது எனப்போற்றுகின்றனர் புலவர்.

மதுரைப் பல்கலைக் கழகத்தின் முன்னைய துணை வேந்தர்கள், பெருந்தமிழ்ப் பேராசிரியர்கள், அவர்களுக்கு ஆசிரியராய் விளங்கிய பெரும் பேராசிரியர் கோ. வடிவேலு செட்டியாரவர்கள். அவர்கள் சென்னை மாநகரில் எளிய வாழ்வு வாழ்ந்து அரிய புலமை பெற்றிருந்தவர்கள்; சமய சாத்திரங்களிலும் இலக்கண நூல்களிலும் துறைபோகக் கற்றுத் தெளிந்தவர்கள்.

அன்னாரின் பதிப்பு முதலில் 1904-இலும் பின்னர் 1918-இலும் வெளியிடப்பட்டது. அதன் பின்னர் நெடு நாட்களாக அது அச்சில் இல்லாது தமிழ் கூறு நல்லுலகத்தை வறுமைக்குள்ளாக்கி மறைந்து கிடந்தது. அச்செல்வத்தைத் தமிழ் மக்களுக்கு மீண்டும் வழங்க மதுரைப் பல்கலைக் கழகம் முன் வந்தது. மதுரையில் சங்கப் பலகை ஏறி வாகை சூடிய திருக்குறளை அச்சேற்றி வழங்குவதில் மதுரைப் பல்கலைக் கழகம் பெருமை கொள்ளுகிறது; அதனைத் தொண்டாகவும் கருதுகிறது.

மதுரைப் பல்கலைக்கழகத்தில் திருக்குறள் ஆராய்ச்சிப் பணியினை மேற்கொண்டுள்ள திருக்குறள் துறை தானே ஆராய்ச்சி செய்து நூல்களை வெளியிடுவதோடு மட்டு-மல்லாமல் திருக்குறள் பதிப்புப் பணியிலும் ஈடுபட்டுள்ளது. பேராசிரியர் கோ. வடிவேலு செட்டியாரவர்களது அறத்-துப்பாலை 1972-இல் அது வெளியிட்டது. இப்போது பொருட்பாலும் இன்பத்துப்பாலும் வெளிவருகின்றன. திருக்குறளின் நுட்பங்கள் அறிந்து உலகம் உயர்வதாக.

— சை. வே. சிட்டிபாபு

# பதிப்பாசிரியர் முகவுரை

கரண வியாபாரத்தைச் செவ்வையாகவுடைய எவ்வுயிர்களும் சர்வதுக்க நிவிர்த்தியும் பரமாநந்தப் பிராப்தியும் பெற விரும்புவதியற்கையாம் ; ஆனுல், அவை அவற்றிற்குப் பொருளல்லவற்றைப் பொருளாகக் கொள்ளும் மயக்கங் காரணமாக வுண்டாம் காமம் வெகுளி உள்ளவரையிலும் உண்டாகா வென்பது ஒருதலையாம் ; பொருளைப் பொருளாகவும், பொருளல்ல வற்றைப் பொருளல்ல வாகவும் கொள்ளுந் தத்துவ ஞான முதித்த விடத்து உண்டாமென்பது "பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு, மருளானு மாணுப் பிறப்பு" "ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே, மெய்யுணர் வில்லா தவர்க்கு" "காமம் வெகுளி மயக்க மிவை மூன்ற, னுமங் கெடக் கெடு நோய்" என்றற் றொடக்கத்துத் திருக்குறளால் நன்கு வெளியாம். உயிர்கள் கீழ்ப்போன ஜன்மங்களிற் செய்த புண்ணிய பரிபாகத்தால் நான்மறை வழங்கும் பரத கண்டத்தில் ஒழுக்கத்தை யுயிரினுஞ் சிறந்ததாகக் கொண்டு கடைப்பிடித்து நன்னெறியிற் செல்லும் நன்மக்கள் குலத்திற் பிறந்து விலக்கியனவற்றை ஒழித்து விதித்தனவற்றையே செய்துவந்தால், அவ்வுயிர்களுக்குத் தத்துவ ஞான வாயிலாகச் சர்வதுக்க நிவிர்த்தியும் பரமாநந்தப் பிராப்தியுமாகிய மோட்சம் ஒருதலையா யுண்டாமென்பது நன்னூல் உணர்ந்தோரது கொள்கையாம். மக்கள் தத்துவஞானம் பெறுதற்பொருட்டு, ஒவ்வொரு சிருஷ்டியி னாரம்பத்திலும் பரமேசுவரன் அநாதியான வேதத்தை எடுத்துக்கூறி வருகின்றாரென்பதும், தாமே குரு வடிவங்கொண்டு வந்து அதனை விரித்தும் சுருக்கியும் சிஷ்ய பரம்பரைக்குக் கூறி வருகின்றாரென்பதும் சாஸ்திர சம்மதமாம். இதனுல், மக்கள் தத்துவஞான மடைதற்கு ஏதுவாயுள்ளது வேதமேயா மென்பது பெறப்படும். இது "சத்தியமாகி வேத மொன்றுமே யளவை யாகும்" "வேதமோதியதே மெய்ப் பொருள் மற்றைப் பொருளெலா மித்தையே" "ஆதலான் மறையிற் சொலப்பட்ட அருத்தமே 'உண்மையானது"

என்று சூதசங்கிதை கூறுவதால் நன்கு விளக்கமாம். இதனை மூலமாகக் கொண்டு எழுந்த நூல்கள் பல; அவற்றுள் திருக்குறளும் ஒன்றாம். இது மாங்குடி மருதனார் "ஓதற் கெளிதா யுணர்தற்கரிதாகி, வேதப்பொருளாய் மிக விளங்கித்–தீதற்றோர், உள்ளுதொ றுள்ளுதொ றுள்ள முருக்குமே, வள்ளுவர்வாய்மொழி மாண்பு" என்றும், மதுரைப் பெருமருதனார் "வேத விழுப்பொருளை வெண் குறளால் வள்ளுவனார், ஓதவழுக்கற்ற துலகு" என்றும் திருவள்ளுவமாலையிற் கூறியிருத்தலால் செவ்வனே புலனாம். ஆகவே, "மறைக்கு விரோதமுறு, மொழியார் தருநற் புராணங்கள் முற்றும் பிரமாணங்களே" என்று சூதசங்கிதை கூறியவாறு திருக்குறளும் பிரமாண நூல்களுள் ஒன்று மென்றும் பெறப்பட்டது. இத்திருக்குறள் தமிழில் வெளி யாய நூல்களுள் அறம்பொருளின்பங்களை எப்பாலவரும் இயைந்தேற்குமாறு முறைப்படக் கூறுவதுபற்றித் தலைமை பெற்றுத் தமிழறிந்தாரியாவராலும் வேதம் போன்று போற்றப்பட்டுவருதலும், இதன் சீரறிந்து தெலுங்கு, இங்கிலீஷ், பிரஞ்சு, ஜர்மனி முதலிய பாஷைக் குரியாராலும் தத்தம் பாஷையில் மொழிபெயர்த்துக்கொண்டு பொன்னே போற் போற்றப்பட்டு வருதலும் குன்றின் மேலிட்ட விளக்காம். இத்திருக்குறளை ஒவ்வொருமதஸ்தரும் தத்தம் மதநூலென்று பாராட்டிவருதலினால், இது யாவரும் உய்யு நெறிகண் டெளிதினுய்யுமாறு இயற்றப்பட்ட நூலாம். இது "சமயக் கணக்கர் மதிவழி கூறா, துலகியல் கூறிப் பொருளிது வென்ற, வள்ளுவன்" என்று கல்லாடங் கூறுமாற்றானும் அறிதற்பாலதாம். "பல்காற் பழகினுந் தெரியா வுளவேல், தொல்காப் பியந்திரு வள்ளுவர் கோவையார், மூன்றினு முழங்கு மாண்டினுமிலையேல் வடமொழி வெளிபெற வழங்கு மென்க" என்று இலக்கணக் கொத்து நூலோர் கூறுவத னாலும் இதன் மாட்சிமை நன்கு வெளியாம். நாயனார், தேவர் என்றற் றொடக்கத்துத் திருநாமங்களுடைய தெய்வப் புலமைத் திருவள்ளுவநாயனாரால் அருளிச் செய்யப்பட்ட உத்தரவேதம், தெய்வநூல் என்றற் றொடக்கத்துத் திரு நாமங்களுடைய இத்திருக்குறளுக்கு உரையியற்றிய தருமர் முதலிய பதின்மருள் பரிமேலழகர் உரையே சீரிய உரையாய் நிலவிற்றென்பது "நூலிற், பரித்தவுரை யெல்லாம்

பரிமேலழகன், தெரித்தவுரை யாமோதெளி" என்றுள்ள பிரயோகத்தினுல் இனிதுவிளங்குவதாம். இப்பரிமேலழகர் உரை தருக்கம், இலக்கணம், சாங்கியம், யோகம், வேதாந்தம், தருமசாஸ்திரம், சங்கநூல் முதலியவற்றிற் பயிற்சியுடையவர்க்கேயன்றி மற்றையோர்க்குப் பெரிதும் பயன் படாதிருப்பது கருதி, இவ்வுரை முழுதிற்கும் நன்கு புலனும் வண்ணம் தெளிபொருள் விளக்கமும் கருத்துரையும் ஷெ உரையில் இலைமறைகாய் போலிருக்கும் விஷயங்கள் நன்கு விளங்குமாறு குறிப்புரையும் (பரிமேலழகர் மேற்கோளாக எடுத்துள்ள செய்யுள்களுக்குரையும் அவர் காட்டிய இலக்கணங்களுக்கு விளக்கமும், சாங்கியமத முதலியவற்றின் சித்தாந்தமும், பெரும்பான்மையும் மேற்கோளாய்க் காட்டியுள்ள செய்யுட்களின் நூற்பெயரும் நூற்பிரமாணங்களும் அக்குறிப்புரையில் விளக்கிக்) கற்ருேர்க்கேயன்றி மற்றை யோர்க்கும் உபாத்தியாயரின் சகாயம் பெரும்பான்மையுமின்றி யினிது விளங்குமாறெழுதி இந்நூல் அச்சிடப்பட்டது.

இந்நூலில் உரையுடன் திருவள்ளுவமாலையும் திருவள்ளுவரது சரித்திரமும் சேர்க்கப்பட்டிருத்தலே யல்லாமல் நாயனுரது வேறு சரித்திர விசேஷங்களும், அவரது பத்துத் திருநாமங்களுக் கர்த்தமும், திருக்குறளின் பத்துத் திருநாமங்களுக் கர்த்தமும், இலக்கண விசேஷங்களும், பரிமேலழகரது சரித்திரமும், வேறு சில விசேஷமும் எழுதிச் சேர்க்கப்பட்டுமிருக்கின்றன.*

15—7—1904. கோ. வடிவேலு செட்டியார்

* இவற்றுட் சில அறத்துப்பால் நூலில் சேர்க்கப்பட்டுள்ளன.

## புகழொடுதோன்றி இசையொடுவாழ்ந்த

# துணைவேந்தர் மு. வ.

### அறத்துப்பாலுக்கு நல்கிய முன்னுரையின் ஒருபகுதி

பழந்தமிழகத்தில் தோன்றிய சான்றோர்களில் திருவள்ளுவர் சிறப்பிடம் பெற்றவர். அவர் இயற்றியருளிய திருக்குறள் உலகப் புகழ்பெற்றது. ஜி. யு. போப், திரு. ஸ்வைட்சர் முதலான ஐரோப்பிய நாட்டுப் பெருமக்களால் போற்றப்பெற்றது; உலக மொழிகள் பலவற்றில் மொழி பெயர்க்கப்பெற்றது; 'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு' என்று கவிஞர் பாரதியார் தமிழ்நாட்டைப் போற்றுவதற்குக் காரணமாக அமைந்தது; "யாமெய்யாக் கண்டவற்றுள்" என்றும், "நூலோர் தொகுத்தவற்றுள்" என்றும் உள்ள அகச் சான்றுகளுக்கு ஏற்ப, நிறைந்த வாழ்க்கை அனுபவங்களைக் கொண்டும், நிரம்பிய நூற்கல்வியைக் கொண்டும் வாழ்வின் உண்மைகளைத் தெளிந்த மூதறிஞரால் இயற்றப்பெற்றது; அதனால் ஆழ்ந்து ஆழ்ந்து கற்குந்தோறும் ஆழமுடையன வாய் விளங்கும் கருத்துக்களைக் கொண்டது; உள்ளுந் தோறும் உள்ளுந்தோறும் உள்ளம் உவகை கொள்ளத்தக்க நயமும் தெளிவும் கொண்டது. இத்தகைய அரிய பெரிய நூலுக்கு விளக்கம் அளிக்க முன்வந்த அறிஞர் பெருமக்கள் மணக்குடவர், பரிமேலழகர் முதலாய பலர்; அவர்களுடன் சேர்த்துப் போற்றத் தக்க பெருமை உடையவர் பேராசிரியர் கோ. வடிவேலு செட்டியார் அவர்கள்.

இருபதாம் நூற்றுண்டின் முற்பாதியில் தமிழகம் போற்றும் பெரும் புலவராய்ச் சென்னை மாநகரில் நூற்றுக் கணக்கானவர்களுக்குத் தமிழ் இலக்கண இலக்கியங்களும் சமய சாத்திரங்களும் கற்பித்து நல்லாசானாய் விளங்கிய சான்றோர் பேராசிரியர் கோ. வடிவேலு செட்டியார் அவர்கள். அவர் திரு. வி. கலியாணசுந்தரனார் முதலான பெருமக்கள் பலருடைய நட்பும் உழுவலன்பும் பெற்று விளங்கினார், எத்துறையில் ஈடுபட்டாலும் அத்துறையில் பலரை வளர்த்து ஊக்கமூட்டி வாழ்வளித்தவர் அவர்

தருக்க வாதங்களிலும் இலக்கணப் போர்களிலும் தன்னிக ரற்று விளங்கிய அவர், தம் குரு சாது இரத்தின செட்டியா ரவர்கள் காட்டிய வழியில் பண்பட்டு நின்று, எளிய நடையில் எழுதுவதையும் பேசுவதையுமே தம் கடமையாக மேற்கொண்டார். எவரையும் தம் கல்வித்திறனால் வெல்ல வல்ல நுண்மாண் நுழைபுலன் பெற்றிருந்த அவர், எளிய மக்களிடம் உயரிய சமயக் கருத்துகளை எடுத்துரைப்பதில் மகிழ்ச்சி கொண்டு தொண்டாற்றிவந்தார் திருக்குறளையும் அதற்கு அமைந்த உயரிய விளக்கமாகிய பரிமேலழக ருரையையும் சிறிது கற்றவரும் உணர்ந்து போற்ற வேண்டும் என்ற ஆர்வம் தூண்டியதால், அவர் இந்த நூலை இயற்றி யருளினார்.

இந்நூலில்,' திருக்குறளுக்குப் பரிமேலழகர் நல்கிய உரைக்குத் தெளிபொருள் விளக்கம் உள்ளது; கருத்துரை உள்ளது; பரிமேலழகரின் உரையில் இலைமறை காய்போல் உள்ள நுண் பொருள்களுக்குக் குறிப்புரையான விளக்கம் உள்ளது; பரிமேலழகர் மேற்கோளாகக் காட்டியுள்ள செய்யுட்களுக்கு உரை உள்ளது; பரிமேலழகர் தமக்கே உரியவகையில் தந்த இலக்கணக் குறிப்புகளுக்கு விளக்கம் உள்ளது: பல சமயங்களின் கோட்பாடுகள் பற்றிய விளக்கமும் உள்ளது; மேற்கோள் காட்டப்பட்டுள்ள செய் யுள்களின் நூற்பெயர் முதலிய குறிப்புகளும் உள்ளன; பாடவேறுபாடுகளும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. இதன் முதல் பதிப்பு 1904-ஆம் ஆண்டில் வெளியானது. 1918-ஆம் ஆண்டில் இரண்டாம் பதிப்பு வெளியிடுகையில் ஒவ்வொரு குறட்பா விளக்கத்தின் இறுதியிலும் குறளின் ஆங்கில மொழி பெயர்ப்பும் சேர்க்கப்பட்டது.

---



1863 கட்டும் வீடும் 1936

இலக்கண இலக்கிய தருக்க வேதாந்த

போதகாசிரியர்

கோ. வடிவேலு செட்டியார்

பதிப்பாசிரியர்

## மஹாவித்வான் கோ. வடிவேலு செட்டியாரவர்களுடைய வாழ்க்கைக் குறிப்பு

திருவள்ளுவர் யாத்த திருக்குறளை உலகப் பொதுமறை என்று அறிந்தோர் அனைவரும் ஒப்பக் கூறுவர். அத்தகைய சிறப்புடைய திருக்குறளுக்குப் பழையோர் பதின்மர் உரை எழுதியுள்ளனர். அவ் வுரைகளுள் பரிமேலழகர் உரையே ஒப்புயர்வற்ற சிறப்புடைய தாகும். "பாரில், பரித்த உரையெல்லாம் பரிமே லழகர், தெரித்த-உரை ஆமோ தெளி," என்ற மேற்கோள் இதற்குச் சான்றாகும்.

பரிமேலழகர் உரை, இலக்கியமாகவும், இலக்கணமாகவும், தருக்கமாகவும், வேதாந்தமாகவும் த னி த் த னி யே கற்றற்கு அமைந்ததாகும். இந்த நாலுவகைக் கல்விப் பயிற்சியும் இருந்தா லொழியப் பரிமேலழகர் உரையை முழுதும் உணர்ந்து பயனடைய முடியாது. எனவே, பரிமேலழகர் உரையைப் பயில முற்பட்ட பலரும், தம்முடைய அறிவின் குறைவை ஏற்க முன்வாராது, அவருடைய உரைக்குக் குற்றம் கூறிவரலாயினர். இத்தகைய சூழ்நிலையில், தமிழ்நாடு செய்த தவப் பயனாய், இலக்கிய இலக்கணத் தருக்க வேதாந்தப் பயிற்சி நிறைந்தவராய்மட்டும் அமையாது, அவற்றைச் சிறிதே அறிவுடையவரும் பயின்று புலமை நிரம்புமாறு பயிற்றுவித்தலிலும் ஆற்றலுடையவராய், இலக்கண இலக்கியத் தருக்க வேதாந்த போதகாசிரியர் என ஆன்றோ ரெல்லாராலும் மதித்துப் பாராட்டப்பெற்ற மஹாவித்வான் கோ. வடிவேலு செட்டியார் அவர்கள், பரிமேலழகர் உரையை ஐயம் திரிபு சிறிதளவும் இல்லாது, தமிழறிவுடைய யாவரும் பயின் றுணருமாறு சிறந்த தொரு தெளிபொருள் விளக்க உரையை எழுதி அச்சிட்டு, அடக்க விலைக்கே யாவருக்கும் கிடைக்கும்படி வெளியிட்டார். அந்த உரை வெளிவந்த பிறகு, பரிமேலழகர் உரைக்குக் குற்றம் கூறிவந்த அனைவரும் வெட்கித் தலைகுனிந்து, வாய் மூடி மௌனியாயினர் என்றால், இந்தத் தெளிபொருள் விளக்க உரையை எழுதி உதவிய ஆசிரியர் வரலாற்றைப் பற்றிச் சி றி தே னு ம் அறிய விழைவு கொள்ளாமல் இருக்க முடியுமா ?

ஆசிரியர் கோ. வடிவேலு செட்டியாரவர்கள், சென்னையம்பதியில், கோமளேசுவரன் பேட்டையில் அமைந்த வேங்கடாசல ஆச்சாரி தெருவில், 14-ஆம் கதவிலக்கமுள்ள இல்லத்தில் பிறந்தவர். இவருடைய தந்தையார், பேரி செட்டியார் குலமென வழங்கும்

பேரிவைசிய குலத்தைச் சார்ந்த சுப்பராய செட்டியார்; தாயார் தனகோட்டி அம்மையார். சாலிவாகன சகாப்தம் 1786, ருத்ரோத்காரி ஆண்டு, சித்திரைத் திங்கள், ஞாயிற்றுக்கிழமை, பௌர்ணமி திதி, சுவாதி நட்சத்திரம், துலாலக்கினம் கூடிய நன்னாளே இவர் பிறந்த நன்னாள் என்று இவருடைய ஜாதகக் குறிப்புக் கூறுகிறது. இதன்படி, 1863-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்களில் இவர் பிறந்தார் என்பது தெளிவாகின்றது. இவர் பிறந்த திதியும் நட்சத்திரமும், இவர் காலத்தில் இவருக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாத புலவர் பெருமானாகவும், மருள் தீர்ந்து மாசறு காட்சியராய் இருள் தீர்ந்து இன்பத்தில் திளைப்பவராகவும் இவர் திகழ்வார் என்பதைக் குறிக்கும் என்று காலக்கணிதர் கூறினர். ஆனால், இவருடைய இருபத்தாறும் வயது வரையில், காலக் கணிதர் கூற்றுப் பொய்த்து விடுமோ என்று ஐயுறுமாறே இவர் வாழ்க்கை நிலவியது.

அக் கால வழக்கத்திற்கு இணங்க, இவர், தம் ஐந்தாம் வயதில், ஒரு திண்ணைப் பள்ளிக்கூடத்தில் கல்வி பயிலத் தலைப்பட்டார். திண்ணைப் பள்ளிக்கூடப் படிப்பு இவருடைய பத்தாம் வயதோடு முடிந்துவிட்டது. பிறகு, கல்வி குறித்து வேறெந்தக் கல்வி நிலையத்திலும் இவர் சேர்ந்து பயின்றதாகத் தெரியவில்லை.

பதினோராம் வயதிலேயே இவர் தம் மரபுக்குரிய வாணிகத் தொழில் செய்யத் தொடங்கினார். அதிலும், பெருந்தொழிலாகச் செய்ய இவருக்கு அக் காலத்தில் வாய்ப்பொன்றும் அமையவில்லை. பலசரக்கு மளிகைக்கடை ஒன்று இவருக்கு அமைத்துத் தரப்பட்டது. இருபதாம் வயதில் இவருக்குத் திருமணமும் நடந்தேறியது. நாள் முழுதும் கடையில் வியாபாரம் செய்வதும் குடும்பம் நடத்துவதுமாகத் தம் இருபத்தாறும் வயது வரையில் இவர் காலம் கழித்து வந்தார்.

இவர் வாழ்ந்துவந்த அதே கோமளேசுவரன் பேட்டையில், வாலாஜாபேட்டையிலிருந்து குடியேறி வாழ்ந்துவந்தார் இராமாநுஜ நாயக்கர் என்ற பெரும் புலவர். புலமையில் ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவராய் விளங்கியிருந்த அவர், அரசாங்கப் பணி ஆற்றி ஓய்வூதியம் பெற்றபின்னும், கோமளேசுவரன் பேட்டையிலேயே வாழ்ந்துவருவராயினார். அவர், நம் செட்டியார் தம் மளிகைக்கடையில், தம் குடும்பத்துக்குத் தேவையானவற்றை வாங்கிக்கொள்வது வழக்கம். அவருக்குச் சுருட்டுப் பிடிக்கும் பழக்கம் உண்டு. தம் கடையை அடைந்ததும், நாயக்கர் அவர்களுக்கு, இருக்கை தந்து, நல்லதொரு சுருட்டையும் தந்து, ஆர அமர அதைப் பிடிக்கும்படி, செட்டியார், அவரை வேண்டிக்கொள்வார்.

சுருட்டைப் பிடித்து முடிக்க ஓர் அரைமணி நேரமாவது ஆகும். அப்போது, நாயக்கர் அவர்கள், தனிப்பாடல் திரட்டிலிருந்து நகைச்சுவை நிரம்பிய பாடற்கருத்துக்களை விவரமாக எடுத்து விளக்கிக் கூறி, இறுதியில் அப்பாடல்களையும் இசையுடன் பாடிக் காட்டுவார். இப்படி, இரண்டோராண்டுகள் சென்றன. பல பாடல்கள் நம் செட்டியார் உள்ளத்தை அள்ளிக்கொண்டதுடன் அதில் நன்ருகவும் பதிந்துவிட்டன. தமிழ் மொழியைத் தாமும் கற்று அவரைப்போல் புலவராக ஏன் ஆகக் கூடாது என்ற எண்ணம் செட்டியார் உள்ளத்தில் வேர்கொள்ளலாயிற்று. செட்டியாரவர்கள் தம் கருத்தை நாயக்கரிடம் வெளியிட்டார். தமக்குத் திருமணம் ஆன இருபதாம் வயது முதல், செட்டியாரவர்கள், நாயக்கரிடம், தமக்குக் கடையிலேயே கிடைத்த ஓய்வு நேரத்திலும், கடை மூடி யிருக்கும் காலை மாலை நேரங்களிலும் இலக்கண இலக்கியங்களை முறையாகப் பயிலத் தொடங்கினுர் ; இவ்வாறு ஏழாண்டுகள் விடாமுயற்சியுடன் கற்றுத் தமிழில் புலமையும் நிரம்பப்பெற்ருர். பின்னர்த் திருவாளர்கள் இராமாநந்த யோகிகள் என்னும் மகா வித்வான் இராமசாமி நாயுடு அவர்கள், அப்பன் செட்டியாரவர்கள், மயிலைச் சண்முகம் பிள்ளை அவர்கள் ஆகியவர்களிடம் தொடர்பு கொண்டு தமிழ் இலக்கண இலக்கியங்களில் ஐயம் திரிபு அறவே நீங்கப்பெற்றுத் தண்தமிழ்க் கடலாய்த் திகழ்ந்தார், திருவாளர் செட்டியாரவர்கள்.

தமிழ்க் கல்வி ஏறஏறச் செட்டியாரவர்கட்கு வியாபாரத்தில் பற்றுக் குறையலாயிற்று என்பது சொல்லாமலே விளங்கும். இவருடைய உடன் பிறந்தவர்கள் இது கண்டு அவரைக் கண்டித்தும், அவருக்கு இடுக்கண்கள் பலவும் இழைத்தும் அவர் உள்ளத்தை வியாபாரத் துறையில் இழுத்து நிறுத்தப் படாதபாடு பட்டும் தோல்வியே யடைந்தனர்.

வியாபாரம் செய்துவருகையில், கடைக்குத் தேவையான சரக்குக்களை வாங்குவதற்குச் செட்டியாரவர்கள் வாரத்திற்கு இருமுறை அல்லது மும்முறை கொத்தவால் சாவடிக்குப் போவார். அப்போது அவருக்கு நிரம்ப நேரம் எடுத்துக்கொள்வதற்கு உரிமை கிடைக்கும். அந்த உரிமையைப் பயன்படுத்திக்கொண்டு, நம் செட்டியார், மேலே சொன்ன வித்வான்களுள் எவரையாவது அடைந்து பாடம் பயின்று திரும்புவார். செய்தி அறிந்த உடன் பிறந்தவர்கள், அப்போதும் விழிப்புடன் தடை செய்யத் தலைப் பட்டனர். அரையில் கட்டிய சிவப்புச் சாயத்துணியுடன் இவர் புறப்படுவாரனுல், சரக்குப் போடத்தான் அவர் போகிருர் என்று

அவர்கள் நம்பிக்கை கொள்வர். செட்டியாரவர்களோ, வெள்ளை வேட்டிசட்டைகளையும், படிக்கும் நூலையும் சாக்குப் பையில் போட்டு மறைத்துக் கக்கத்தில் வைத்துக்கொண்டு புறப்பட்டுச் சென்று, அரையில் உள்ள சாய வேட்டியை மாற்றி வெள்ளை வேட்டியை அணிந்துகொண்டு வித்வான்களை அடைந்து பாடம் பயின்று திரும்புங்கால், சரக்குக்களையும் வாங்கிக்கொண்டு கூவம் ஆற்றை நீந்திக் கடந்து வீட்டையடைவார்.

இவ்வாறு காலம் கழிந்துகொண்டிருக்கையில், இவருடைய இருபத்தொன்பதாம் வயதில், சென்னை, முத்தியாலுப்பேட்டை, தம்பு செட்டித் தெருவில் வேதாந்த பாஸ்கரராய் விளங்கிய குருதேவர் சை. இரத்தினச் செட்டியாரவர்களுடைய தொடர்பு இவருக்குக் கிடைத்தது.

குருதேவர் இரத்தினச் செட்டியாரவர்களை, ஓர் இல்லற ஞானியார் என்பர். இல்லறத்தில் இருந்துகொண்டே பற்றற்ற வாழ்க்கை நடத்தமுடியும் என்பதை அவர் தம் வாழ்க்கையில் நடத்திக்காட்டினர். ரிப்பன் அச்சுயந்திர சாலைக்கு உரிமை யாளராய் வேதாந்த சித்தாந்த சமய நூல்களை அடக்க விலைக்கு அச்சிட்டு வெளியிட்டுவந்ததோ டமையாது தம்மை யடைந்தோர்க் கெல்லாம் பயனென்றும் கருதாமல் வேதாந்த பாடங்களையும் அவர் பயிற்றுவித்துவந்தார்.

அவருடைய வாழ்க்கையில் தமக்கென வாழாப் பிறர்க்குரி யாளராய்த் திகழ்ந்திருந்தார் அவர் என்பதற்குப் பலப்பல நிகழ்ச்சிகளைக் கூறலாம். பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்பதற்கிணங்க அவற்றுள் ஒன்றை ஈண்டுக் குறிப்பிடலாம் :

அவருடைய அச்சுயந்திர சாலையில், அச்சுக் கோக்கும் பிரிவில், ஒருவன் பணியாற்றிவந்தான். அவன் ஒரு நாள் புதிய புத்தகம் ஒன்றை, யாரும் காணாத நேரத்தில், அங்கிருந்து எடுத்துச்சென்று மூர்மார்க்கெட்டில் ஒரு புத்தகக் கடையில் விற்பதற்கு விலை பேசிக் கொண்டிருந்தான். அப்போது குருதேவரிடம் உபதேசம் பெற்று அவரிடம் ஈடுபட்டிருந்த ஒரு போலீஸ் கான்ஸ்டேபிள் அவனைக் கையும் பிடியுமாய்க் கூட்டிக்கொண்டுபோய்க் குருதேவர் எதிரில் நிறுத்தி அவனைத் தோலுரித்துக் கட்டுவதற்கு அவரிடம் ஆணையை வேண்டிநின்றான். குருதேவரோ அவனைத் தம்மிடம் விட்டுவிட்டுப் போய்விடும்படி கான்ஸ்டேபிளிடம் கூறினர். அவனும் உடனே அவ்விடத்தை விட்டு நீங்கினன்.

அவன் போனபின்பு, களவாடியவனைத் தம் அருகில் அழைத்து, இன்முகம் காட்டி இன்சொல் கூறி உட்காரவைத்துக்கொண்டு, அவன் வரலாற்றைக் கூறும்படி அவர் கேட்டார். அவன், தன் வருவாயில் தன் தாயையும் தன் மனைவியையும் தன் இரண்டு குழந்தைகளையும் காப்பாற்றமுடியாது தவிப்பதையும், அதனால், தான் களவாட நேர்ந்த நிலையையும் கூறிக் கண்ணீர் வடித்தான். உடனே, தம் கணக்குப்பிள்ளையைக் கூப்பிட்டு, அவனுக்குக் கொடுக்கும் சம்பளம் எவ்வளவென்று குருதேவர் கேட்டார். பதினைந்து ரூபாய் அவனுக்குச் சம்பளம் என்று கணக்குப் பிள்ளை கூறினார். அது கேட்ட நம் குருதேவர் திடுக்குற்று அன்று முதல் அவனுக்கு மாதந்தோறும் நாற்பது ரூபாய் சம்பளம் கொடுக்கும்படி ஆணையிட்டுவிட்டு, வருந் தாமல் வேலை செய்து வாழ்ந்துவரும்படி அவனைத் தேற்றி அனுப்பினார். அவனுக்கு உண்டான மகிழ்ச்சியைப்பற்றி அளவிட்டுக் கூறவும் முடியுமோ !

அத்தகைய குருதேவரைத் தமக்கு ஆன்மகுருவாகக் கொண்டு அவரிடம் வேதாந்த பாடங்களைப் பயிலத் தொடங்கிப் பன்னிரண்டு ஆண்டுகள் அவரிடம் காலையிலும் மாலையிலும் வேதாந்த நூல்களைப் பாடம் கேட்டு நம் செட்டியாரவர்கள் வேதாந்த சாஸ்திரங்களில் தேர்ச்சி பெற்றதுடன் ஆன்ம தரிசனமும் பெற்றுத் தம் குருதேவரைப் போலவே ஓர் இல்லற ஞானியும் ஆயினர்.

சற்குரு இரத்தினச் செட்டியாரவர்கட்கு நம் செட்டியாரவர் களிடம் பேரன்பும் பெருமதிப்பும் அவரைச் சார்ந்த இரண்டோ ராண்டுகளிலேயே ஏற்பட்டன. எவற்றையும் மிகமிக விரைவில் தெளிவுடன் ஏற்றுக்கொள்ளக்கூடிய சிறந்த பக்குவம் வாய்ந்த அவருடைய நுட்பமதியைக் குருதேவர் அடிக்கடி பாராட்டுவார். தமிழும் வேதாந்தமும் பயிலத் தொடங்கிய நாலைந்து ஆண்டு களிலேயே நம் செட்டியாரவர்கள் நிறைகுடமாயினர். அது கண்ட குருதேவர், உரைநடையில் வேதாந்த சாரத்தை ஒரு நூல் வடிவில் எழுதுமாறு செட்டியாரவர்கட்குக் கட்டளையிட்டனர். செட்டியா ரவர்களும் மிக விரைவிலேயே தூய தமிழில், மிடுக்கான நடையில், ஒரு நூல் இயற்றித் தம் குருதேவரிடம் தந்து அவருடைய ஆசியை வேண்டிநின்றனர்.

குருதேவர் அந்த நூலை மதிப்புடன் ஏற்றுத் தொடக்கத்தில் உள்ள சில பக்கங்களைப் படித்துப்பார்த்தனர்; பின்னர் நடுவில் இரண்டொரு பக்கங்களைப் படித்தனர்; அதன்பின் அந்த நூலின் இறுதியில் அமைந்த இரண்டொரு பக்கங்களைப் படித்துவிட்டு அந்த நூலைச் செட்டியாரிடமே திருப்பிக் கொடுத்துப் பின்,

"இந்த நூலை நீரே படித்துக்கொள்ள எழுதினீரா, மற்றவர்களும் படித்துப் பயன்பெறுவதற்காக எழுதினீரா?" என்று கேட்டார்.

செட்டியாரவர்கள் திகைத்துநின்றார்.

குருதேவர், "சிறிதளவே கல்வியறிவுடையவரும் படித்துத் தெரிந்துகொள்ளும் வகையில்தான் நூல் எழுதவேண்டும். நீர் எழுதிய இந்த நூல் மிகமிகக் கடினமானது. பண்டிதர்களும் விளங்கிக்கொள்ள முடியாத நடையில் அமைந்த இந்த நூலை உலகில் வாழ விடலாகாது. இதை உடனே எரிக்கு இரையாக்கிவிடும்," என்று கூறி, ஒரு தீப்பெட்டியையும் அவரிடம் தரச்செய்தனர்.

ஒரு சிறிதும் குறுக்கே பேசாமல் குருதேவர் முன்னிலையிலேயே தாம் எழுதிய நூலின் ஏடுகளைச் செட்டியாரவர்கள் தீக்கு இரையாக்கினர்.

இந்தச் செயல் குருதேவருடைய உள்ளத்தை முழுதும் அள்ளிக் கொண்டது.

"இலக்கண இலக்கிய வேதாந்த நூல்களில் அறிவு பெற்றால் மட்டும் போதாது. தருக்க நூல் அறிவும் வடமொழிப் பயிற்சியும் இன்றியமையாதன," என்று கூறிச் செட்டியாரவர்களைத் தம் சொந்த பொருட் செலவில் அவற்றைப் பயின்றுவர ஏற்பாடும் செய்தனர் குருதேவர்.

தமிழ்ப்புலவர்களிடம் தமிழிலக்கண இலக்கியமும், குருதேவரிடம் வேதாந்தமும் பயின்றுகொண்டுவரும்போதே இடையிடையே கால வரையறை செய்துகொண்டு நம் செட்டியாரவர்கள் நடுக்காவேரி பிரம்மஸ்ரீ ஸ்ரீநிவாச சாஸ்திரியார், திருவிசைநல்லூர் பிரம்மஸ்ரீ வாசுதேவாச்சாரியார், தஞ்சை பிரம்ம ஞானியார் குப்புசாமி ராஜு என்பவர்கள் மூவரிடத்தும் தருக்க சாஸ்திரங்களும் வடமொழியும் பயின்று அவற்றில் சிறந்த பாண்டித்தியமும் நிரம்பப் பெற்றனர்.

கல்வியறிவு ஏறஏற, வியாபாரத் துறையில் ஈடுபடச் செட்டியாரவர்கட்கு நேரமும் கிடைக்கவில்லை; உள்ளமும் செல்லவில்லை. "வேறொன்றையும் சிந்தியாமல் என்னையே எந்த மக்கள் உபாசிப்பார்களோ, அவர்களுடைய யோக க்ஷேமங்களை நானே மேற்கொள்வேன்," என்ற கீதைக் கூற்றுக்கு ஏற்ப, இல்லற ஞானியாராய் வாழ்ந்த செட்டியாரவர்களுடைய யோக க்ஷேமங்களை ஆண்டவனே மேற்கொண்டான் என்று ஐயமின்றிக் கொள்ள அவருக்கென ஓர் அறப்பணி நாடி வந்தது. அஃது யாது?

19-ஆம் நூற்றுண்டின் இறுதியில் சென்னையில் மதமாற்றச் செயல் தன் தலைவிரித்தாடியது. அதற்கு வெள்ளையர் அரசாங்கமும் மறைமுகமாக ஒத்தாசையும் செய்தது. "இந்து சமயத்தைச் சார்ந்தவர்கள் மூட நம்பிக்கையுடையவர்கள்; கல்லையும் மரத்தையும் கடவுளாகத் தொழுபவர்கள். கிறித்தவமதமே உயர்ந்தது. அறிவாளிகளுக்குரிய மதம் கிறித்தவமே," என்று மேடைகளிலெல்லாம் முழக்கம் செய்து, இந்து மக்களைக் கிறித்தவர்களாக்கும் முயற்சியைக் கிறித்தவ மதத்தைச் சார்ந்தவர்கள் மேற்கொண்டிருந்தனர். அப்போது, கல்விகற்பதற்குக் கிறித்தவக் கல்விநிலையமே முன்னணியில் நின்றிருந்தது. அங்கே பயில வாய்ப்புப் பெற்ற இந்து மாணவர்களைக் கிறித்தவர்களாகவே பெரும்பான்மையாக அமைந்த ஆசிரியர்கள், ஏசியும் வன்முறை கொண்டும், கிறித்தவர்களாக மாற்ற அல்லும் பகலும் அரும்பாடுபட்டனர். சென்னை வாழ் இந்துக்கள் கிறித்தவர்களுடைய அட்டூழியத்தைக் கண்டு மனம் புழுங்கி ஒன்றும் செய்யமாட்டாது ஏங்கிநின்றனர்.

சென்னைவாழ் இந்து மாணவர்களை மதமாற்றம் தவிர்த்து உய்யுமாறு செய்ய ஆண்டவனுல் ஏவப்பட்டவர்போல ஓர் அறச் செல்வர் கொதித்தெழுந்தார். மஹாத்மா காந்தி தோன்றிய அதே குஜராத்திய மரபில் தோன்றினவர் அந்த அறச் செல்வர். அவர் பெயர் சிவசங்கர பாண்டியாஜி. அவருக்கு இரத்தினச் சற்குருவிடம் அளவிறந்த மதிப்பு உண்டு. அவரையும் வேறு பல சான்றோர்களையும் கலந்தாலோசித்துச் சென்னையில் தங்கசாலைத் தெருவில் இந்து தியலாஜிகல் கல்விநிலையம் ஒன்றை அவர் தோற்றுவித்தார். இன்றும் முன்னணியில் நிற்கும் இந்து தியாலாஜிகல் உயர் பாடசாலையே, அந்தக் கல்விநிலையம். 1896 ஜனவரியில் தொடங்கியது அந்தக் கல்வி நிலையம். இரத்தினச்சற்குருவின் வாரிசாக நம் செட்டியாரவர்கள் அக்கல்வி நிலையத்தில் முதல் தலைமைத் தமிழ்ப் பண்டிதராகப் பணியேற்ருர். அன்றுமுதல், செட்டியாரவர்களுடைய வாழ்க்கை என்றும் நீர் நிறைந்து யாவர்க்கும் ஒரே நேர்மையாகப் பயன்படும் ஒரு ஜீவநதிபோல் திகழலாயிற்று.

உயர் பாடசாலையில், தமிழுணர்வொடு சமயவுணர்வும் மிளிரும் வண்ணம், மாணவர்கள் விரும்பி மனம் கொள்ளுமாறு செட்டியாரவர்கள் பாடம் போதித்துவந்தார். 'மாட்டை மேய்ப்பது கோலைப் போடுவது' என்று சொல்லுவார்களே, அதுபோலல்லாமல் பாடசாலையில் பாடம் பயிற்றுவிக்கும் நேரம் போக ஒழிவு கிடைத்த நேரமெல்லாம், பயன் ஒன்றும் கருதாமல், இலக்கண இலக்கிய தருக்க வேதாந்த பாடங்களைத் தம்மை நாடி வந்தவர் அனைவர்க்கும் செட்டியாரவர்கள் போதித்துவந்தனர்.

இவருடைய வாழ்நாளில் இவரிடம் வந்து தம் ஐயங்களைக் கூறித் தெளிவுபெற்றுப்போகாத தமிழறிஞர்களோ, பண்டிதர்களோ, ஆசிரியர்களோ இல்லை எனலாம்.

நூல்களை இவர் பயிற்றுவிக்கும் முறையே ஒருவகைத் தனிச் சிறப்பு வாய்ந்ததாகும். எடுத்துக்காட்டாக, நன்னூலை இவர் பயிற்றுவிக்கும் முறையைக் கூறலாம். பத்துப் பன்னிரண்டு பேர்கள் ஒருங்குகூடி நன்னூல் பாடம் கேட்க வருவார்கள். அவருள் ஒருவர் சூத்திரத்தைப் படிப்பார். உடனே நம் செட்டியார் ஒரு கதை கூறுவதுபோல் அதன் பொருளை விளக்கிக் கூறுவார்; பின்னர், இந்தச் சூத்திரத்திற்குக் கோபால கிருஷ்ணமாச்சாரியார் இவ்வாறு பொருள் கூறுவர் என்பார்; அதன்பிறகு, ஆறுமுக நாவலர் இவ்வாறு கூறுவார் என்று அவரைப் பாராட்டுவார்; பின்னர், மயிலை நாதர் இவ்வாறு கூறுவார்; சங்கரநமச்சிவாயர் இவ்வாறு கூறுவார்; சிவஞான சுவாமிகள் இவ்வாறு கூறுவார் என்று படிப்படியாகப் பொருளைக் கூறிக்காட்டி விளக்கிவிடுவார்; அதன் பிறகு, மறுபடியும் சூத்திரத்-தைப் படிக்கும்படி கூறுவார்; கேட்பவர்களே, பதவுரை பொழிப்புரை முதலியவற்றைக் கூறும்படி செய்துவிடுவார்; பின்னர்ச் சிவஞான சுவாமிகள் விருத்தியுரையையே படிக்கும்படி கூறுவார். ஐயமோ திரிபோ சிறிதும் இல்லாதபடி, விருத்தியுரை அனைவர்க்கும் விளங்கிவிடும்.

அரையாண்டு, முழு ஆண்டு பள்ளி விடுமுறை நாட்களில் தமிழ் நாட்டிலுள்ள மூலைமுடுக்குக்களில் உள்ள ஊர்களுக்கெல்லாம் யார் அழைத்தாலும் மறுக்காமல் சென்று பெருங்கூட்டங்களிலே எல்லோருக்கும் எளிதில் விளங்கும் பேச்சு மொழியிலேயே சொற்பொழிவாற்றியும் தலைமை தாங்கியும் வேதாந்த உண்மைகளை அவர் பரப்பி வந்தார். அந்தந்த ஊர்களுக்குச் செல்லும்போதெல்லாம், தீராத ஐயங்களோடு திகைப்புற்றிருந்த பண்டிதர்கட்கெல்லாம் வற்றாத ஊற்றாய்த் திகழ்ந்து அவர்களுடைய ஐயங்களைப் போக்கி அவர்கட்கெல்லாம் நல்வாழ்வு அளித்தவர் நம் செட்டியாரவர்கள்.

பேசினாலும், எழுதினாலும் பிறர் விளங்கிக்கொள்ளும் வகையில் அஃது அமைய வேண்டும் என்று அவருடைய குருநாதராகிய இரத்தினச்சற்குரு இட்ட கட்டளையை நம் செட்டியாரவர்கள் என்றும் மறந்ததே இல்லை. இதையறியாத பண்டிதர்கள் பலர், செட்டியாரவர்கட்கு மிடுக்கான தூய செந்தமிழில் பேச இயலாது என்று எண்ணி அவரை அசட்டை செய்ததும் உண்டு.

ஒரு சமயம் வாலாஜாபாத்தில் வேதாந்த மாநாட்டு விழா நான்கு நாட்கள் நடைபெற்றது. நான்கு நாட்களிலும் தலைமை

பூணும் சிறப்புச் செட்டியாரவர்களுக்கு உரிமையாயிற்று. முதல் நாள் விழாத் தொடக்கவுரையை அந்த மாவட்டத்தைச் சார்ந்த கலெக்டர் நிகழ்த்த ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அதனால் சுற்றுப் புறங்களில் உள்ள ஊர்களிலிருந்து பண்டிதர்களும் தலைமையாசிரியர் களும் மற்றப் பேரறிஞர்களும் விழாவிற்கு வந்திருந்தனர். ஆனால், தொடக்கவுரை முடிந்ததும் பண்டிதர்கள் அனைவரும் புறப்பட்டுப் போவதற்கு எழுந்தனர். அவர்களுடைய குறிப்பறிந்த செட்டியா ரவர்கள், உடனே எழுந்து, "புலமையிற் சிறந்த பண்டிதர்களே, ஒரு வேண்டுகோள். இன்று நீங்களெல்லாம் என்னுடனிருந்து விருந்தயர ஏற்பாடாகியிருக்கிறது. அதனால், இன்று பகல்வரையில் இங்கேயே இருந்து உணவுண்டுதான் நீங்கள் செல்லவேண்டும்," என்றனர். அவர் களும் கண்ணோட்டத்தால் மறுக்க முடியாமல் உட்கார்ந்து வேண்டா வெறுப்புடன் கொச்சை மொழியில் தலைமையுரையாற்றிய செட்டியா ரவர்களுடைய கூற்றுக்களைத் தலைகுனிந்து கேட்டுக்கொண்டிருந் தனர். கூட்டம் முடிந்தது. விருந்து நடைபெறலாயிற்று. அப்போது செட்டியாரவர்கள் தமக்குத் தமிழ்மொழியிலக்கணத்திலும் இலக்கி யத்திலும் பல ஐயப்பாடுகள் உண்டு. அவற்றைப் பண்டிதர்கள் தீர்த்துவைப்பார்கள் என்று உறுதியுடன் கருதுவதாகக் கூறி, ஒவ்வொரு கேள்வியாக இடை விட்டுவிட்டுப் பத்துப் பதினைந்து கேள்விகள் கேட்டார். ஒன்றுக்கும் பண்டிதர்களிடமிருந்து விடை வரவில்லை. உடனே கூறுததற்குத் தாம் வருந்தவில்லை என்று கூறி, மறுநாள் பகல் விருந்தில் கலந்துகொண்டு அப்போது விடை பகர்ந்தா லும் போதும் என்றார் செட்டியார். மறுநாள்விருந்தில், அவர்கள் கலந்துகொண்டார்கள். ஆனால் விடைமட்டும் வரவேயில்லை. நாணம் மீதூர்ந்தவர்களாய் அந்த ஐயங்களுக்கு அவரையே விடை யளிக்குபடி செட்டியாரவர்களை அவர்கள் யாவரும் வணக்கமுடன் பணிந்து வேண்டிக்கொண்டார்கள். அவரும் அவர்கள் உள்ளம் மலரும் வண்ணம் தெளிவாக விடையிறுத்தார். அப்போதுதான் அவர்கள் அனைவரும் செட்டியாரவர்கள் நீறு பூத்த நெருப்பாவர் என்று தெளிந்து, அவரிடம் மதிப்பு வைக்கத் தலைப்பட்டனர். ஆனால், அப்போதும் அவர்களுடைய உள்ளம் முழு நிறைவு பெறவில்லை. "இவ்வளவு ஆழ்ந்த புலமையுடைய தாங்கள் மிடுக்கான நடையில் தூய தமிழில் ஏன் உரையாற்றக் கூடாது?" என்று அவர்கள் தங்கள் உள்ளக் கருத்தைப் பணிவுடன் அவரிடம் வெளியிட்டனர். செட்டியாரவர்கள், தம் குருநாதர் ஏவலை அவர்களிடம் தெரிவித்தார். அது கேட்ட அவர்கள், அப்படியானால் பண்டிதர்களே அடங்கிய பண்டிதர் சங்கத்தில் திருக்குறட் சிறப்புப் பற்றித் தூய தமிழில் பேசிப் பண்டிதர்களை மகிழ்விக்கவேண்டும் என்று செட்டியாரவர்களை வேண்டினர். அவரும் அவ்வாறே அந்த இரண்டாம் நாள் மாலையே

பண்டிதர்கள்மட்டும் அடங்கிய ஒரு சிறப்புக் கூட்டத்தில், மிடுக்கான தெள்ளிய தூய தமிழ்நடையில் அனைவரும் வியக்கும்வண்ணம் ஆழ்ந்த திருக்குறட் கருத்துக்கள் கொண்ட ஒரு பேருரையை இரண்டு மணி நேரம் ஆற்றி அவர்களிடமிருந்து விடைபெற்றனர்.

இந்த நிகழ்ச்சி அந்த ஊர் மட்டோடு நில்லாது விரைவில் தமிழ் நாடெங்கும் பரவிற்று. அதனால், அவர் காலத்தில் அவரை அறியாத தமிழறிஞரே தமிழ் நாட்டில் இலர் என்றுயினர்.

இவர் காட்சிக்கு எளியவராயும், கடுஞ்சொல் சொல்லாதவராயும், படாடோப மற்ற எளிய வாழ்க்கை யுடையவராயும், எக்காலத்தும் எந்த விடத்தும் மாணவர் விருப்பப்படி பாடம் சொல்லும் தன்மை வாய்ந்தவராயும், இதமாயும், மிதமாயும், வஞ்சனை கலவாத சொற்களைப் பேசுபவராயும், வாத சபையில் வாதஞ் செய்ய நேரிட்ட போதெல்லாம் நெறி தவறித் தம்மை அவமதிப்புடன் பேசத் தலைப் பட்டவரும் பிறகு வெட்கித் தலைகுனிந்து தம் வசமாகும்படி யுக்தி தருக்க அனுமானங்களுடன் அவையில் கூடியிருக்கும் அனைவரும் வியந்து வியந்து பாராட்டும்வண்ணம் வாதமிடும் ஆற்றல் வாய்ந்தவராயும் திகழ்ந்தார்.

பல்வேறு தொழில்களில் ஈடுபட்டவர்கட்குப் பாடம் கேட்க ஆவல் உண்டாகும். ஆனால், நாள்தோறும் குறிப்பிட்டதொரு நேரம் கிடைக்காது. அப்படிப்பட்டவர்கட்கு, அவர்களுக்கு வாய்ப்பான நேரத்தில் தெருவிளக்குக்கள் அடியிலோ, பூங்காவிலோ, டிராம் வண்டியில் பயணம் செய்யும் நேரத்திலோ இவர் பாடம் சொல்லிவந்தார் என்றால் இவருடைய எளிமையை என்னென்று எடுத்தியம்புவது !

தகுதியுடையவர்க்குத்தான் பாடம் சொல்வது என்ற திட்டத்தை இவர் ஒரு நாளும் பின்பற்றியதே இல்லை. விருத்திப் பிரபாகரம் என்பது வேதாந்தத்தைத் தருக்க மிடுக்கோடு விரிவாக எடுத்தியம்பும் ஒரு பெருநூல்; பல்லாண்டுகள் வேதாந்த பாடம் கேட்டவர்க்கும் இரும்புக் கடலையைப் போன்றிருக்கும். அந்த நூலைச் சிறிதே தமிழறிவு பெற்ற கன்னியப்பன் என்பவன் கோடை விடுமுறையில் மற்றவர் யாரும் வருவதற்கு விரும்பாத நண்பகல் நேரத்தில் பாடம் சொல்ல வேண்டும் என்று பேரார்வத்துடன் வேண்டிக்கொண்டு அவரையடைந்தான். செட்டியாரும் அவனுக்குத் தடையொன்றும் சொல்லாமல் அந்த நூலைப் பாடம் சொல்லத் தொடங்கினர். ஐந்து மணித்துளிகள் ஆனவுடனேயே அவன் உட்கார்ந்தபடியே குரட்டை விட்டுத் தூங்கத் தலைப்பட்டான். ஆனால், இவரோ, நிறுத்தாமல் ஒரு மணி நேரம் தொடர்ந்து பாடம் சொன்னர். இக் காட்சியை

ஒருநாள் பொறுமையுடன் தொலைவில் மறைவில் நின்று பார்த்துக் கொண்டிருந்த பல்கலைச் செல்வர் தெ. பொ. மீ. அவர்கள், பாடத்தை முடித்துநின்றதும், அவரை அணுகி, "அவன் தூங்கி விழுந்துகொண்டிருக்கிறுன். நீங்களோ நிறுத்தாமல் பாடம் சொல்லிக் கொண்டே இருக்கின்றீர்களே, ஈதென்ன வீண் விரையம்!" என்று உசாவினுர். அது கேட்ட செட்டியாரவர்கள், அவனைச் சார்பாகக் கொண்டு அந்த நூலைத் திரும்பிப் படிப்பதற்குத் தமக்கு வாய்ப்பளித் ததற்கு அவனுக்குத் தாம் நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருப்ப தாகக் கூறிய விடை, பல்கலைச் செல்வரை வியப்பில் ஆழ்த்தியது. அந்த நிகழ்ச்சியை, நம் பல்கலைச் செல்வர் என்றும் மறவாமல், தாமும், யார், எங்கே, எந்நேரத்தில் பாடம் கேட்டாலும், ஐயம் எழுப்பினுலும், தம் முடைய வேலை நெருக்கடிகளையும் ஒதுக்கி வைத்துவிட்டு, உடனே கூறும் பழக்கம் உடையவராய் இன்றும் திகழ்கின்ருர். செட்டியா ரிட்ட வித்து அவருடைய மாணவர்கள் பலரிடத்தில் இன்றும் தழைத்துப் பயனளித்துவருகின்றது.

நேற்றுத் தோன்றிய ஒரு வித்துவான், உரைநடையில் ஓர் இலக்கண நூலை எழுதி அவரிடம் கொண்டுவந்து தருவானுனுல், அந்த நூல் முழுதையும் அவர் படித்துக்கொண்டிருப்பார். அதைக் குறித்து யாராவது கேட்டால், அந்த நூலிலும் ஏதாவது ஒரு சிறந்த புதுக் கருத்து இருக்கலாமே, அதைப் பெற்றுப் பயனடையவே அதைப் படிப்பதாக அவர் பதிலளிப்பார்; "பல்லாண்டுகள் பயின்றவர்க்கே புலமை உரிமையாவதாம் என்று நினைத்தலாகாது; எவரிடமும் இயற்கையாகவே சிறந்த கருத்துக்கள் வெளிப்படலாம்," என்பார். "ஆன்றவிந்தடங்கல்" என்ற முடிசூடிய மன்னர் இவர் என்று சொல்லவும் வேண்டுமோ ?

போதகாசிரியராக மட்டுமல்லாமல், பத்திரிகாசிரியராகவும், நூலாசிரியராகவும், உரையாசிரியராகவும் இவர் மிளிர்ந்தார். பாட சாலையில் பணியாற்றும் நேரம் ஒழிந்த மற்ற நேரங்களிலெல்லாம் ஒய்வே கொள்ளாமல் பயன்பெறும் செயல்களைச் செய்வதில் உறுதி பூண்டு உழைப்பதான கருமயோக உண்மையைத் தெளிய உணர்ந் திருந்தா ராதலினுல் இவ்வாறெல்லாம் இவர் திகழலானுர் எனலாம்.

1911-ஆம் ஆண்டு முதல் 10 ஆண்டு காலம் "லோகோபகாரி" என்னும் வாரப் பத்திரிகையின் பதிப்பாசிரியராகவும், 5 ஆண்டு காலம் "சக்கரவர்த்தினி" என்னும் மாதப் பத்திரிகையின் பதிப் பாசிரியராகவும் இவரிருந்து தமிழ் நாட்டவர்க்கு மொழியிலும் சமயத்திலும் சிறந்த தொண்டாற்றினுர் நம் செட்டியார்,

இவர் 1919 ஆம் ஆண்டு, சென்னைச் சிந்தாதிரிப்பேட்டை, சாமி நாய்க்கன் தெருவில் வேதாந்த சங்கம் என்று ஒன்று தொடங்கி அதன் தலைவராய்த் தம் ஆயுட்காலம் முழுவதும் அதை உலகப்புகழ்பெற நடத்திவந்தார். அச் சங்கம் இன்று ஆல்போல் விழுதுகள் பல இறங்கப்பெற்றுப் பெரிதாய்த் தழைத்து ஆயிரம் இளமாணவர்கள் பயில்வதற்குரிய பாடசாலையாகவும், புலவர்கள் பட்டம் பெறப் பயிற்றுக் கூடமாகவும், வேதாந்தமும் தருக்கமும் கற்பார்க்குத் தாயக மாகவும் விளங்கிநிற்கின்றது.

இந்த வேதாந்த சங்கமே, இவருடைய முழு ஆற்றலையும் பலருக்கும் பயன்பட அளிப்பதற்கு உரிய சிறந்த நிலைக்களமாக விளங்கிய தெனலாம். ஆண்டுதோறும் நான்கு நாட்கள் மாநாட்டு விழா நடைபெறும். இந்து சமயத்தில் தேர்ச்சி பெற்றவர் மட்டுமன்றி ஜைன, பௌத்த, கிறித்தவ, இஸ்லாமிய சமயத்தில் தேர்ச்சி பெற்றவரும் இந்த மாநாட்டு விழாவில் சொற்பொழிவாற்ற இடம் பெறுவர். முடிவில் எல்லாச் சமயங்களிலும் உள்ள சமரசத்தை இவர் எடுத்துரைக்கும்போது சொற்பொழிவாற்றியோர், கேட்டோர் ஆக அனைவருமே, ஒரு தாய் வயிற்றிற் பிறந்த உடன்பிறந்தார்போல மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்ந்து ஒன்றுபடுவர். நாள்தோறும் காலையில் சிற்றுண்டி, பகல் பேருண்டி, இரவு சிற்றுண்டி விருந்து, அனைவர்க்கும் நான்கு நாட்களிலும் அளிக்கப்படும். சாதி சமய இன மொழி வேறுபாடின்றி அனைவரும் உடனிருந்து உணவு அருந்துவது கண் கொள்ளாக் காட்சியாய் இருக்கும். செட்டியார், தம் கையாலேயே உணவு பரிமாறுவர். அவருடைய மாணவர்களும் மற்றவரும் அத் தொண்டாற்றுவதில் போட்டி போட்டுக்கொண்டு முன்வருவர். உணவுப் பொருள்கள் எல்லாம், சிறப்பாகச் சிந்தாதிரிப்பேட்டையில் உள்ள மண்டிகளிலும் காய்கறிக்கடைகளிலும், பொதுவாகச் சென்னை யில் பல இடங்களிலும் செட்டியாரவர்கள் தலைமைதாங்கி நடத்தும் தொண்டர் படையாலேயே இனாமாக இனிமையுடன் வசூலிக்கப்படும்.

வேதாந்த சங்கம், ஒரு தென்னங்கீற்றுக் கொட்டகையில்தான் முதன் முதல் தொடங்கியது; தரை மட்டும் சிமிட்டியால் அமைந்தது. கொட்டகைக்கு நாட்டப்பட்ட சவுக்குத் தூண்களுள் ஒன்றில் சாய்ந்துகொண்டு, காலை மாலை வேளைகளில் குழுக்களாக வருவோர்க்குத் தளராது செட்டியாரவர்கள் பயன் கருதாமல் பாடம் சொல்லுவார்; நாள்தோறும் இரவு 7 மணி முதல் 8–30 மணிவரையில் வேதாந்த பாடங்கள் நடத்துவார். பள்ளிக்கூடம் போகும் நேரம், உணவு அருந்த வீட்டிற்குப் போகும் நேரம் தவிர மற்ற எல்லா நேரங்களிலும் செட்டியாரவர்கள் வேதாந்த சங்கத்தில்

ஏதாவது படித்துக்கொண்டோ, எழுதிக்கொண்டோ, பாடம் சொல்லிக்கொண்டோ, படி திருத்திக்கொண்டோ, தியானம் செய்து கொண்டோ இருப்பாரே தவிரப் பகலுறக்கம் செய்துகொண்டோ, ஒன்றும் செய்யால் இருந்துகொண்டோ காலம் கழிக்கக் கண்டவரே இல்லை.

அவர் எழுதி வெளியிட்ட நூல்கள் பல; உரை எழுதி வெளியிட்ட நூல்கள் பல; பதித்து அச்சிட்ட நூல்கள், மொழி பெயர்த்து அச்சிட்ட நூல்கள் பலப்பல. அவற்றையெல்லாம் பிற்சேர்க்கை 2-ல் விரிவாகக் காணலாம். அவர் எழுதி வெளிவாராது ஏட்டளவில் பல நூல்கள் அவருடைய மகனிடம் இன்றும் உள்ளன. அவை என்று பலர்க்கும் பயன்படும்வண்ணம் அச்சாகுமோ அறியோம்.

அவர் உரையியற்றிய நூல்களுள் திருக்குறள் பரிமேலழகர் உரைக்குத் தெளிபொருள் விளக்கவுரையையும், கைவல்ய நவநீத உரையையும் சிறப்பாகக் குறிப்பிடலாம்.

திருக்குறளுக்குப் பரிமேலழகர் உரையை நேரடியாக விளங்கிக் கொள்வதற்குப் பலப் பல சமய நூல்களின் தெளிவும், தருக்க நூலின் ஆழமும், வேதாந்த நூலின் அனுபவமும் இன்றியமையாதன. வழி வழியே பாடம் கேட்டவர்களே, பரிமேலழகர், திருவள்ளுவருடைய உள்ளக் கிடக்கையை எங்ஙனம் புலப்படுத்தியுள்ளார் என்பதை விளக்க வல்லவ ராவரே அன்றித் தான்றோன்றியாகப் படித்தவர்கள் ஆகவே ஆகார். தான்றோன்றியாகப் பயின்றவர்கள் அனைவரும் தம் அறியாமையை முன்னிட்டுக்கொண்டு பரிமேலழகர் உரைக்குக் குற்றமே கூறுவர்.

எடுத்துக்காட்டாக ஓரிரு குறளுரையைப் பரிமேலழகர் கூறிய வாறு பார்ப்போம்:

> தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
> தோன்றலிற் றோன்றாமை நன்று.

(பரி. உரை) மக்களாய்ப் பிறக்கின் புகழுக்கேதுவாகிய குணத்தொடு பிறக்க. அக்குணமில்லாதார் மக்களாய்ப் பிறத்தலின் விலங்காய்ப் பிறத்தல் நன்று (எ—று). புகழ்—ஈண்டு ஆகுபெயர். அஃதிலாரென்றமையின் மக்களாயென்பதூஉம், மக்களாய்ப் பிறவாமை யென்ற அர்த்தாபத்தியான் விலங்காய்ப் பிறத்த லென்பதூஉம் பெற்றாம். இகழ்வாரின்மையின் நன்றென்றவாறு.

நுனிப்புல் மேய்வார்க்குப் பரிமேலழகர் உரை விளங்கவே விளங்காது. இக் குறளுக்கு எத்தனையோ உரைகள் புதியனவாக

வந்துள்ளன. அவையெல்லாம் பரிமேலழகர் உரைக்கு மாறுபட்டவை; பரிமேலழகர் உரை தவறெனக் கூறுபவை; திருக்குறளின் கருத்தை இன்றைக்கும் தெளிய உணர்த்தாதவை.

செட்டியாரவர்களிடம் பாடம் கேட்டவர் அவருடைய தெளி பொருள் விளக்கவுரையையும் துணையாகக்கொண்டு இக்குறட் கருத்தை விளக்கும்போது திருவள்ளுவருடைய நுட்ப மதியையும், அவர் மதியின் ஆழத்தை அறிந்த பரிமேலழகர் மதிநுட்பத்தையும் நாம் அறிந்து மகிழலாம்.

கயமை என்ற அதிகாரத்தில் மக்களுடம்பு எடுத்தவர்கள் அனைவரையும் நாம் மக்களாகக் கொள்ளல் ஆகாது; அவருள் உண்மை மக்கள் சிலரே; மற்றவர் அனைவரும் கயவரே. ஆடுமாடு களை உடம்பால் வேறுபடுத்து உணரலாம். மக்களையும் கயவரையும் அங்ஙனம் வேறுபடுத்து உணர முடியவில்லையே என்று திருவள்ளுவர் அங்கலாய்ப்பதைப் பார்க்கிறோம்.

கயவராகிய இழிந்தவர் தம்மைத் தாமே உணர்த்தி வெளிப் படுத்தினால் ஒழிய நாம் அவரைக் கயவர் என அறிய முடியவே முடியாது.

இவ்வாறே கல்லாமை யென்ற அதிகாரத்தில், இலங்கு நூல் கற்றாரே மக்களெனவும் அல்லார் விலங்குகளெனவும் திருவள்ளுவர் கூறியிருத்தலை நாம் காணலாம். உரை விளக்கத்தில் பரிமேலழகர், "விலங்கின் மக்கட்கேற்றமாய உணர்வு மிகுதி காணப்படுவது கற்றார்கண்ணே யாகலின், கல்லாதாரும் அவரும் ஒத்த பிறப்பின ரல்லரென்பதாம்," என்று கூறியிருத்தல் வள்ளுவர் உள்ளத்தை அறிய எவ்வளவு சிறப்பாயமைந்துள்ளது என்பதை ஆன்றோர் நன்குணரலாம்.

இக்கருத்துக்களை உள்ளத்தில் பதித்துக்கொண்டு "தோன்றிற் புகழொடு தோன்றுக" என்ற குறளைப் படித்தால் அதன் உண்மைப் பொருளும் பரிமேலழகர்தம் உரையாழமும் நன்கு விளங்கிவிடும்.

'ஈதல்' 'வசையிலா வாழ்க்கை' முதலிய குணச்சிறப்பால் புகழ் பெற மாட்டாதவர் பலப்பல போலிச் செயல்களால் மேடைகளில் பல ரும் புகழத்தோன்றுவர். ஆனால், மேடையைவிட் டகன்றதும் அவரை அப்பலரும் புறங்கூறி இகழ்வர். எனவே, புகழுடையாரைஉண்மையாக அறிய முடிவதில்லை. உண்மைப் புகழுடையவராக வெளிக் காட்டிக்கொள்ள விரும்புவராயின் புகழுக்கு ஏதுவாகிய குணங் களோடு விளங்கவேண்டும். அக்குணங்களில்லாதவர் மக்களுடம்பிற்கு

வேருக விலங்குடம்பு தோன்றுவதுபோல், தம் உண்மையியல்பைச் சொல்லாலும் செயலாலும் தாமே வெளிப்படுத்திப் பின்பு கூறப்படும் புறங்கூறலுக்குத் தப்பிவாழ்தல் நல்ல தென்ற கருத்துப் பொதிந் திருப்பதை அப்போது நன்கு தெளியலாம். குணச்சிறப்புக்களால் புகழ் பெறமாட்டாது போலிப் புகழ் பெற்றவர், பின்னர் என்றும் புகழே பெருது பழியே பெறுவராகலிற் தாமே தம் சிறுமையை வெளிப்படுத்திவிடுவாராளுல், பின்னர்ப் படிப்படியாகப் புகழ் பெற்று உயர்வடைவராதலின், அங்ஙனம் புகழுக்குரிய குணங்கள் தம்மிட மில்லாதவர், விலங்கை வேறுபிரித்து அறிய இயல்வது போலத் தம்மை வேறு பிரித்தறியத் தாமே தம்மை வெளிப்படுத்திவிட வேண்டும் என்ற நுட்பமான விளக்கத்தை, "அஃதிலார் தோன்றலின் தோன்ருமை நன்று" என்ற பகுதிக்குக் கூறி, அக்கருத்தை அருத்தா பத்தி என்ற அளவையால் பெற்றும் என்று பரிமேலழகர் உணர்த்தி யுள்ளார்.

'தெய்வம் தொழாஅள்' என்ற குறள் தற்காலப் புலவரிடம் அகப்பட்டுக்கொண்டு படாதபாடு படுவதை நாம் உணர்வோம். கற்புடையவள் ஒருமனம் பெறும் தன்மையுடையவள் ஆவாள். கற்றல் கேட்டல் தெளிதல் என்ற வேதாந்த உண்மையை அறிவார், தியானப் பழக்கத்தால் ஒருமனம் பெற்றுயர்வார். ஒருமனம் பெறுவார் செயற்கரிய சித்திகளெல்லாம் பெறுவார். அவர் இறந்த வரையும் எழுப்புவர் என்ருல், அவர் "பெய்யென்ரு ல்மழை பெய்யும்" என்பதும் உண்மையாகும். அந்த ஒருமனத்தைக் கணவனைத் தொழு தெழும் கற்புடையாள் பெற்றுவிடுவாளாதலின் அவள் பெய்யென மழை ஏன் பெய்யாது? ஆனுல், சித்திபெற்றவரெல்லாம் தம்மைப் பறைசாற்றிக்கொண்டு திரிய விரும்பாமல், அந்த ஒருமனத்தால் மேலும் உயர்ந்து பிறப்பற்றுப் பேரின்பம் எய்தவே முயல்வர். அங்ஙனமே தன் ஒருமனத்தால் மழை பெய்விக்கும் சித்தியை வெளிப் படுத்திக்காட்ட முன்வாராது அடங்கி, மற்றீண்டு வாரா நெறி பற்றியே கற்புடையவள் சென்றுகொண்டிருப்பாள். கண்ணகி வீறு கொண்டெழ இன்றியமையாத ஒரு வாய்ப்பு ஏற்பட்டதுபோல் ஏற்படுமாயின், கற்புடையாள் மழை பெய்வித்துக் காட்டவும் செய்வாள். இவ்வாறெல்லாம் செட்டியார் தம் வேதாந்த தருக்க உணர்வு கொண்டு உரை விளக்கம் தருவார் என்பர் அவருடைய வழிவந்த அவர் மாணவர்.

'அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின்' என்ற குறள் வேத வேள்வியைக் கண்டிக்கிறதெனச் சிறிதளவும் ஆராய்ச்சியில்லாமல் மேடையில் பண்டிதர்களும் கூறிவருவதை நாம் கேட்கிறேும். "முகுந்தனின் முருகன் அழகன்" என்ருல் முகுந்தனைவிட முருகன்

அழகில் மிக்கவன் என்று பொருள்படுமென்பது உண்மையே. ஆனல்! முகுந்தன் அழகற்றவன் என்று பொருள்படுமென்று கூறமுடியாதே! 'முகுந்தன் அழகன்; அவனைவிட முருகன் அழகன்' என்றுதானே பொருள்படும்! அது போல, "வேத வேள்வியின் கொல்லாமை நன்று," என்ருல், "வேத வேள்வி நன்றுதான்; ஆனல் கொல்லாமை அதை விட நன்று," என்றுதானே பொருள்படும்! "அப்படியானல் வேத வேள்வியும் வரவேற்கப்படுவதுதானே! எப்படிக் கண்டிக்கப் படுவதாகும்?—திருவள்ளுவர் வேத வேள்வியை எங்கே கண்டிக்கிருர்? அவருக்கு வேத வேள்வி உடன்பாடேயாகும்," என்று இவ்வாறு செட்டியாரவர்கள் திருவள்ளுவர் கருத்தை எடுத்தியம்புவார்.

விளங்கிக்கொள்ள முடியாத சமயக் கருத்துக்களையும் இவ்வாறே செட்டியாரவர்கள் எளிமையாக்கிக் காட்டுவார்.

தோசை வேறு, தான் வேறு என்பது போலக் கடவுள் வேறு தான் வேறு என்று கூறும் நிலையே துவித நிலையாம். மிகுதியாகத் தோசையைத் தின்றபின், தானும் தன்ஞல் விழுங்கப்பட்ட தோசையும் ஒன்ருகவும், ஆனல் மிகுதியாகத் தின்று செரிக்கப்படாத நிலையில் தானும் தோசையும் வேருகவும் உள்ள நிலையே விசிட்டாத்துவித நிலையாம். தோசை செரிக்கப்பட்டபின், தானும் தோசையும் ஒன்ருய்விட்ட நிலையே அத்துவித நிலையாம். இவற்றுள் எந்த நிலை சிறந்தது? தோசை வேருக இருக்கும்போது, அது கிடைக்குமோ கிடைக்காதோ என்ற கவலையால் துன்பமேயன்றி இன்பம் இல்லை. வயிற்றுள் சென்று தோசை ஒன்ருய்விட்ட நிலையிலும், செரிக்கப் படாமல் வேருகத் தோன்றிநின்று, வயிற்றில் ஒருவகைச் சுமை தாங்குவதாகக் கவலை உண்டாக்குவதால், அப்போதும் துன்பமேயாம். ஆனல், செரித்து ஒன்ருய்விட்ட நிலையில், துன்பமில்லாத இன்பமாம், ஆதலின், அத்துவித நிலையே சிறந்ததாம்; அத்துவித சமயமே சிறந்த தாம் — என்று செட்டியார் அழகாக விளக்குவார்.

இத்தகைய மாபாண்டித்தியம் வாய்ந்த இவர், சமயப் பாது காவலுக்கென்றே ஏற்பட்ட இந்து தியலாஜிகல் உயர்நிலைப் பள்ளியில் 1896-ஆம் ஆண்டு தம் 33-ஆம் வயதில் தலைமைப் பண்டிதராகப் பணியேற்றவர், தம் ஆயுட் காலம் முழுதும் அங்கேயே பணியாற்றி வந்தார். ஒன்றுக்குப் பன்மடங்காக ஊதிய உயர்வு தருவதாகப் பல கல்லூரிகளிலிருந்து வற்புறுத்தலான அழைப்பு வந்தும், ஆசைக்கு அடிமையாகாமல் அப்பள்ளிக்கே தம்மை உரிமையாக்கிக்கொண்டவர் நம் செட்டியார். அதனல், பள்ளியில் மிகுந்த ஊதியம் கொடுத்து இவரை அப்பள்ளி நிர்வாகிகள் மடக்கிவைத்துக்கொண்டார்களா? இல்லவேயில்லை. பள்ளியை விட்டு முதுமை காரணமாக இவர் தம்

70-ஆம் வயதாகிய 1933-ஆம் ஆண்டு ஜனவரித் திங்களில் ஓய்வு பெற்ருர். அந்த இறுதியாண்டில் இவருக்குத் திங்கள் ஊதியம் ரூ. 65/-தான். தமக்கென வாழாப் பிறர்க்குரியாளராய் வாழ்ந்த தகவாளர் இவரெனற்கு ஐயம் உண்டோ ?

ஊதியம் குறைவுதான். ஆனுல் தமிழ்நாட்டில் மூலைமுடுக்குக் களி லெல்லாம் இவருக்கிருந்த புகழோ பெரிது! பெரிது! இவர் பள்ளியில் பணியாற்றிவந்த இறுதி ஆண்டுகளில் பள்ளிக்குத் தலைமை யாசிரியராக இருந்தவர், திரு. அரங்கசாமி ஐயங்கார், பி.ஏ., பி.எல்., எல். டி., என்பவர். அவர் ஒரு சமயம் திருநெல்வேலிக்குப் போய்த் திரும்பிச் சென்னைக்கு ரெயிலில் முதல் வகுப்பில் வந்துகொண் டிருந்தார். அப்போது அவருடன் பயணம் செய்துகொண்டிருந்த கனவான் ஒருவர் ஐயங்கார் அவர்களை இன்னுரென்று அறிந்து கொள்ள விரும்பினுர். ஐயங்கார் அவர்கள், தாம் சென்னை இந்து தியாலஜிகல் உயர்நிலைப்பள்ளியின் தலைமை ஆசிரியராகிய ஹெட் மாஸ்டர் என்று கூறினுர். அதைக் கேட்டதும், " இலக்கண இலக்கிய தருக்க வேதாந்த போதகாசிரியர் கோ. வடிவேலு செட்டியார் பணிபுரியும் தியலாஜிகல் உயர்நிலைப்பள்ளியிலா தாங்கள் தலைமை ஆசிரியராக இருக்கிறீர் ? " என்று அந்தக் கனவான் வியப்பு மேலிட்ட வராய் வினவினுர். செட்டியாரவர்களை முன்னிட்டுக்கொண்டு தலைமை ஆசிரியரைப் புரிந்துகொள்ளும் அளவு செட்டியாரவர்க ளுடைய புகழ், தமிழ் நாடெங்கும் பரவியிருந்த தென்பதற்கு ஈதொன்றே தக்க சான்ருய் அமையும். இந்தத் தகவல் ஐயங்கார் அவர்களே பயணம் முடிந்து திரும்பிவந்ததும் தம் பள்ளி ஆசிரியர் களிடம் கூறியதாகும்.

திருக்குறளில் சிறப்பாகக் கூறப்பட்டுள்ள ஓர் அறம் யாதென வினவுவார்க்கு, 'ஒன்ருக நல்லது கொல்லாமை' என்று திருவள்ளுவரே கூறியிருக்கிருரே என்று செட்டியார் பளிச்சென்று கூறுவார். அதற் கேற்பக் கொல்லாமை அறத்தைப் பரப்ப அவர் தம் உயிரையும் பணயம் வைத்த செய்தி ஈண்டு நினைவுகூரத் தக்கதாகும். அவர் காலத்தில் திருவொற்றியூர்ச் சிவபெருமான் கோயிலுள், தனிச் சிறப்பு வாய்ந்தவர் என வழிபடப்பெறும் வட்டப் பாறை நாச்சியார்க்கு, எருமைக்கடாவைப் பலி கொடுப்பது வழக்கம். அதனை நிறுத்தத் தாம் ஒருவராய் அங்கே சென்று, 'பலியிடுவது மூடப் பழக்கம்' என்று எடுத்துக்கூறியும் கேளாது பலியிட முந்திய போது, பலிபீடத்தில் படுத்துக்கொண்டு எருமைக்கடாவிற்குப் பதிலாகத் தம்மைப் பலியிடுமாறு மன்ருடினுர். பின்னர்க் கோயில் வழிபாட்டிற்கு வந்தவர்கள் அனைவரும் செட்டியாருக்கு உறுதுணை யாயினர். கோர்ட்டிலும் வழக்கு ஆடப்பட்டது. முடிவில் எருமைக்

கடாவைப் பலி கொடுப்பது அறவே நின்றொழிந்தது. வெறும் புத்தகப் பூச்சியாகமட்டும் நில்லாமல், அறம் வளர்க்கும் கருமவீர ராகவும் திகழ்ந்தார் செட்டியார் என்பதற்கு இதை விட வேறு சான்று தேவையில்லையன்றோ ?

இவரிடம் பயின்ற மாணவர்கள் பலப்பலர். இவரிடம் ஐயம் போக்கிக்கொள்ள வந்தவர் பல்லாயிரவர்.

முறையாகப் பாடம் கேட்டவர்களுள் சிறப்பாக இருவரையும், ஐயம் போக்கிக்கொள்ள வந்துசென்றவர்களுள் சிறப்பாக ஒருவரை யும் ஈண்டுக் குறிப்பிடலாம் :

முறையாகப் பாடம் கேட்டவர்களுள் தலையாயவர் பல்கலைச் செல்வர் தெ. பொ. மீ. அவர்கள். பல்கலைச் செல்வர், அக்காலத்தில் சிந்தாதிரிப்பேட்டையிலேயே செல்வச்சீமானாகவும் அப்பேட்டை வாசிகள் அனைவரும் மதிக்கும் பண்பாளராகவும் இருந்த உயர் திருவாளர் தெ. பொன்னுச்சாமி என்பவருடைய இரண்டாம் மகனாகத் தோன்றியவர். பிறப்பிலேயே செல்வாக்குப் பெற்றிருந்த தன்மையால் பல்கலைச் செல்வர் மற்றவர்களுடன் சமமாக இருந்து பாடங்கேட்கும் வாய்ப்பைப் பெற முடியவில்லை. கோடை விடுமுறை நாட்களில் மற்றவர்கள் பாடம் கேட்க வாராத உச்சிப் பொழுதில் நம் பல்கலைச் செல்வர் செட்டியாரவர்களிடம் பாடம் கேட்க வருவார். ஒருமணி நேரத்திற்கு ஒருமுறை ஒரு சிறிது காப்பியும் ஜாங்கிரியில், ஒரு சிறுதுண்டும் அருந்திவிடுவாரானால், செட்டியா ரவர்கள் சிறிதும் சோர்வு கொள்ளாமல் தொடர்ந்து பாடம் சொல்லுவார். இதை உணர்ந்த நம் பல்கலைச் செல்வர் நாலைந்து ஜாங்கிரியும், சூடு காக்கும் குவளையில் நாலைந்து கோப்பை காப்பியும் எடுத்துக்கொண்டு வந்துவிடுவார். எனவே, நாள்தோறும் உச்சிப் பொழுதிற்கு முன்னும் பின்னுமாக நாலைந்து மணிநேரம் தொடர்ந்து பாடம் நடக்கும் என்பது சொல்லாமலே விளங்கும். விவேகாநந்தர் வரிவரியாகப் படிக்காமல் பக்கம் பக்கமாகப் படிப்பார் என்றும், இராமகிருஷ்ணருக்குச் சிறப்புற்ற சீடராய் அமைந்தார் என்றும் கூறுவதுண்டு.

நம் பல்கலைச் செல்வருக்கும் செட்டியாரவர்களுக்கும் அமைந்த தொடர்பு நூற்றுக்கு நூறு விவேகாநந்தருக்கும் இராமகிருஷ்ணருக் கும் அமைந்த தொடர்பு போன்றதாம் என்று கூறினால் அது மிகையே ஆகாது. ஆனால், விவேகாநந்தர் பக்கம் பக்கமாகப் படிப்பவர் என்றால், பல்கலைச் செல்வர் சுவடி சுவடியாகப் படிப்பவர் என்று கூறலாம். பன்மொழிச் செல்வராயும் அமைந்த நம் பல்கலைச் செல்வர் கைபடாத நூலொன்றும் கன்னிமாரா நூல் (Connemara) நிலையத்திலோ, பல்கலைக் கழக நூல் நிலையத்திலோ யாரும் காணமுடியாது என்று கூறும் அளவிற்கு ஓயாது படிப்பதிலேயே

காலம் கழித்ததோ டமையால், சுவாமி வேதாசலம் என்னும் மறைமலையடிகள், திரு. வி. க. அவர்கள் போன்ற மற்றவர்களிடமும் பயின்று ஒரு நடமாடும் பல்கலைக் கழகமாகவும் விளங்கி ஈடெடுப் பில்லாத ஒருவராய் இன்றும் திகழும் நம் தெ. பொ. மீ. அவர்களை அறியாத தமிழர் யாரே !

தெ. பொ. மீ. அவர்களை எங்கே எப்போது கண்டாலும் நம் செட்டியாரவர்கட்கு, விவேகாநந்தரை இராமகிருஷ்ணர்க்கு எங்கே எப்போது பார்த்தாலும் எழும் ஊக்கமும் உற்சாகமும் எழும்.

ஓய்வு பெற்ற மூன்றாண்டுகட்குப்பின், 74-ஆம் வயதில் செட்டியாரவர்கள் சமாதி கூடிப் பூரணநிலையடைந்தார்கள். 'ஊழிற் பெருவலியாவுள' என்பதற்கிணங்க அவருடைய இறுதிக் காலத்தில் அதிசாரபேதி என்ற கோளாறு ஏற்பட்டு அவர் படுக் கையில் சோர்ந்துகிடந்தார். அப்போது அவரைப் பார்க்க நம் பல்கலைச் செல்வர் சென்றார். அவரைப் பார்த்தவுடன் செட்டி யாருடைய சோர்வெல்லாம் எங்கே போயிற்றோ தெரியாது. உடனே தெ. பொ. மீ. அவர்களைப் பார்த்து, "சேனாவரையத் திலிருந்து ஏதாவது ஐயம் இருந்தால், கேள்," என்று பணித்தார் செட்டியார்; அப்போது அவருக்குத் தொந்தரவு ஒன்றும் தருதல் கூடாது என்று தயங்கி நின்ற பல்கலைச் செல்வரைப் பார்த்து, "எனக்கு நினைவாற்றல் குன்றாதிருக்கிறதா என்று தெளிவதற்காகத் தான் உன்னைக் கேள்வி கேட்கச் சொல்கிறேன். அதனால் கேள்," என்று வற்புறுத்தினார். பின்னர், ஒரு மணி நேரம் கேள்வி பதிலாகக் காலம் கழிந்தது. நினைவாற்றல் சிறிதும் குன்றாதிருந்தவராய்த் திகழ்ந்ததோ டமையாமல் மிகமிக நுட்பமதியில் முழுமை நிறைந் தவராயும் செட்டியார் அந்த நிலையிலும் இருந்ததுகண்டு நம் பல்கலைச் செல்வர் வியப்புக் கடலில் ஆழ்ந்தார்.

ஈண்டே ஒரு சிறப்புச் செய்தி குறிப்பிடத்தக்கதாகும் :

நம் பல்கலைச் செல்வர் செட்டியாரிடம் இலக்கண இலக்கிய தருக்க வேதாந்த நூல்களைப் பயின்று வந்ததோடு, மறைமலையடி களிடம் சைவ சித்தாந்த நூல்களையும் பயின்று வந்தார். அப்போது சைவசித்தாந்திகளுள் தலைசிறந்தவராய் விளங்கியவர் மறைமலை யடிகள். சிவஞான போதம் என்பது சைவ சித்தாந்த உபநிடத மாகக் கருதப்படும் சிறந்த நூல். அந்த நூலுக்குச் செட்டியாரவர்கள் அத்துவித வேதாந்த நூலெனக் கொள்ளுமாறு உரை எழுதி, அந்த உரை ஏடுகளை நம் பல்கலைச் செல்வரிடம் தந்து அதை மறைமலை யடிகளுக்குக் காட்டி அதற்கு ஒரு கண்டனம் எழுதி வாங்கி வருமாறு

அவரைப் பணித்தார். மிகுந்த சங்கடமான நிலையில், இட்ட பணியை ஏற்று, மறைமலையடிகளிடம் சென்று, அவர்களிடம் ஏடுகளைத் தந்து தம்பணியைப் பல்கலைச் செல்வர் வெளியிட்டார். மறைமலையடிகள் நாலைந்து நாட்கள் அவ்வுரையைப் பன்முறையும் படித்து முடித்துப் பின், "வடமொழி உபநிடதங்களுக்கும் பகவத்கீதை போன்ற நூல்களுக்கும் அத்துவிதம், துவிதம், விசிட்டாத்துவிதம் சார்பாக உரைகள் அமைந்துள்ளன. அதனால் அந்த மூல நூல் களுக்குச் சிறப்பு மிகுந்துள்ளதே தவிரக் குறையவில்லை. அம் முறையில் சிவஞான போதத்திற்கு அத்துவித சார்பாக உரைஒன்று செட்டியாரவர்கள் எழுதியுள்ளதை நாம் பாராட்டுகிறோம்," என்று திரு. தெ. பொ. மீ. அவர்களிடம் கூறி அவருக்கும் ஆசிவழங்கினார். செட்டியாரவர்கள் உரையும் அச்சாகி வெளிவந்துள்ளது. செட்டியாரவர்கட்கும் மற்றப் பெரும் புலவர்கட்கும் இங்ஙனம் பாலமாக அமைந்த பெருமை பல்கலைச் செல்வர்க்கு அமைந்தது. மதுரைப் பல்கலைக் கழகத்தில் துணைவேந்தராய்ப் பணியாற்றி இன்று மஹரிஷி மகேஷ்யோகியின் அருட்பார்வையுடன் வேதாந்த உபதேசம் செய்துவரும் பல்கலைச் செல்வரை அறியாதார் யாரே!

செட்டியாரவர்களுடைய மற்றொரு சிறந்த மாணவர் பேராசிரியர் டாக்டர் மொ. அ. துரைஅரங்கனார் ஆவர். இவர் ஒரு சிற்றூரில் பிறந்து உயர்நிலைப் பள்ளிப் படிப்பை முடித்துக்கொண்டு கல்லூரிப் படிப்பைத் தொடர்ந்து பயில்வதற்கு ஊழால் தடை ஏற்பட்டபோது செட்டியாரவர்களைத் தம் குருவாகக் கொண்டு அவரிடம் தொண்டாற்றி அவருக்குக் கையேட்டுத் தம்பிரானாகவும், வேதாந்த மாணவர் வகுப்பில் சட்டாம்பிள்ளையாகவும் இருந்து அவரிடம் முறையாகப் பாடம் பயின்றவர். அவரிடம் பாடம் பயின்றுவரும் போதே அவரால் அறிமுகப்படுத்தப்பட்டு 1932-இல் அதே தியாலாஜிகல் பள்ளியில் இவர் துணையாசிரியராய்ப் பணியேற்றார், வித்துவான் தேர்விற்குச் சென்று பட்டம் பெறாமல் உயர்ந்த வகுப்புக்களுக்குப் பாடம் சொல்லக்கூடாது என்று சட்டம் வந்ததும் தேர்விற்குச் செல்ல இசைவு தரவேண்டும் என்று மன்றாடி வேண்டிக் கொண்டும், தம்மிடம் பயின்றவர் மற்றவரிடம் சான்று பெறச் செல்வது மதிப்புக் குறைவாம் என்று கூறி அரங்கனாருக்குத் தேர்விற்குச் செல்லச் செட்டியார் இசைவு தரவேயில்லை.

பல்கலைச் செல்வர் போலவே நம் அரங்கனாரும் செட்டியாரவர்களைக் கடைசியாகக் காணச் சென்றபோது செட்டியாரவர்கள், "நான் பயின்றவை அனைத்தையும் உனக்கே முழுதும் வழங்கியிருக்கிறேன். வேறொருவரிடமும் நீ ஒன்றும் கேட்டுத் தெரிந்துகொள்ளத்

தேவையேயில்லே, உன் வாழ்க்கையில் இனி நன்கு முன்னேறி அறவழியில் வாழ்வாயாக,'' என்று வாழ்த்தினர்.

செட்டியாரவர்கள் உயிர் வாழ்ந்திருந்த வரையில் வித்துவான் தேர்விற்குச் செல்லத் துரைஅரங்கனர் துணிவு கொள்ளவேயில்லே. அவர் மறைந்த ஓராண்டிற்குப் பிறகு 1937-இல்தான் வித்துவான் தேர்வில் மாவட்டத்திலே முதல்வராய் முதல் வகுப்பில் தேறிச் சென்னேப் பல்கலேக் கழகத்தில் ஏற்படுத்தப்பட்ட ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் நினைவுப் பரிசு ரூ. 1000/-த்தை முதன்முதலாகப் பெற்றவர் நம் துரைஅரங்கனர். பின்னர், தம் தனி முயற்சியால் எம்.ஏ., எம்.ஓ.எல்., பிஎச்.டி. பட்டங்களெல்லாம் பெற்று மதுரைப் பல்கலேக் கழகத்தில் தமிழ்த்துறைத் தலேவராய்ப் பணியாற்றி ஓய்வுபெற்ற அவருடைய மற்றைய வரலாறு தமிழுலகம் நன்கறியும்.

நேரே பயில வாய்ப்பில்லாதிருந்து அவ்வப்போது தாம் பிறந்த திருப்பத்தூரிலிருந்து வந்து ஐயங்களேக் கேட்டுத் தெளிவு பெற்று வித்துவான் பட்டமும் எம். ஏ,, எம். ஓ. எல்., பிஎச். டி., பட்டங் களேயும் பெற்றுச் சென்னேப் பல்கலேக் கழகத்தில் தமிழ்த்துறைத் தலேவராயும், பின்னர் மதுரைப் பல்கலேக் கழகத்தில் துணேவேந்த ராயும் பணியாற்றி மறைந்த டாக்டர் மு. வ. அவர்கள் நம் செட்டியாரவர்களுடைய முழு ஆதரவும் முழு ஆசியும் பெற்றவர் களுள் தலேசிறந்தவர் ஆவர்.

திண்ணேப் பள்ளிக்கூடத் தொடக்கக் கல்விமட்டுமே பயிலும் வாய்ப்புப் பெற்றவராய்த் தம் வாழ்க்கையைத் தொடங்கி, இறை யருளாலும் குருவருளாலும் தம் இடையருத முயற்சியாலும் தென் ஞட்டிலே தம்காலத்தில் வாழ்ந்த புலவர்கள் அனேவர்க்கும் முடிமணி யாய்த் தன்னலங் கருதாது தம்மையடைந்தவர் யாவருக்கும் வேற்றுமை பாராட்டாது அறிவுக் கண் வழங்கிய வள்ளலாய்த் தொடர்ந்து 37 ஆண்டுகள் ஒரே பள்ளியில் ஊதிய உயர்வு கருதாது உழைத்த உத்தமராய்த் திகழ்ந்த, இலக்கண இலக்கிய தருக்க வேதாந்த போதகாசிரியராகிய குருதேவர் கோ. வடிவேலு செட்டியார் அவர்கட்குச் சென்னே வேதாந்த சங்கத்தார் 1936-ஆம் ஆண்டில் ஒரு சிலேயைச் சென்னே வேதாந்த சங்கத்திலேயே நிறுவி ஒரு பெருவிழாக் கொண்டாடினர். அச்சிலே அவருடைய அன்பு கெழுமிய மாணவர் திரு. தை. ஆ. கனகசபாபதி முதலியாரவர் களால் செய்யப்பட்டது. அவ்விழா, அவருடைய முன்னிலே யிலேயே நடத்தப்பட்டது, சென்னே வேதாந்த சங்கத்தார் அவரை அன்பினுல் பிணித்த பிணிப்பிலேயே யாகும். ஏன்? தன்னலம்

சிறிதும் கருதாத குருதேவர், இத்தகைய விழாவில் வேட்கையோ அவாவோ கொள்ள இயையார் என்பது வெளிப்படையன்றோ!

அந்த விழாவின்போது தென்னாட்டில் பெருமையும் புகழும் சிறப்பும் வாய்ந்த பேராசிரியர்களும் புலவர்களும் நீதிபதிகளும் மற்றத்துறையில் புகழ் வாய்ந்திருந்தவர்களும் அன்புடன் அளித்த பாராட்டுரைகளாகிய சான்றுரைகள் அடங்கிய ஒரு நினைவுமலர் வெளியிடப்பட்டது. அவர்கள் அளித்த பாராட்டுரைகளின் சுருக்கம் பிற்சேர்க்கை 1–ல் தரப்பட்டுள்ளது.

1863-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்களில் தோன்றிய செட்டியாரவர்கள் 1936-ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 24-ஆம் நாள், தமது 74-ஆம் வயதில் (தாது வருடம் கார்த்திகை மாதம் 9-ஆம் தேதி வளர்பிறை தசமி திதியில்) சமாதியானார்.

இவருடைய ஒரே மகனார் திரு. கே. முத்துக் குமாரசாமி செட்டியார், பி.ஏ., பி.எல்., அவர்கள் வழக்குரைஞராய் வாழ்ந்து வருகிறார்.

* * *

# பிற்சேர்க்கை 1

## பாராட்டுரைகளும் அவற்றை வழங்கியவர்களும்

### மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள்.

சென்னை ஹிந்து தியாலஜிகல் ஹைஸ்கூலில் பல வருஷங்கள் தமிழாசிரியராக இருந்துவந்த ஸ்ரீமான் கோ. வடிவேலு செட்டியாரவர்களைத் தமிழகம் நன்கு அறியும். பாடசாலையில் பாடம் சொல்லும் நேரத்தையன்றி ஒழிந்த நேரங்களில் தனியே பல மாணாக்கர்களுக்குத் தமிழ்ப் பாடஞ் சொல்லியும், வேதாந்த சங்கத்தில் தொடர்புகொண்டு அவ்வப்போது சிறந்த உபந்யாசங்கள் புரிந்தும், தமிழ் அத்வைத நூல்களைப் பாடஞ்சொல்லியும், வடமொழியிலிருந்து பல வசன நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்து வெளியிட்டும், திருக்குறளைத் தெளிபொருள் விளக்கவுரையுடனும் பலவகை ஆராய்ச்சிக் குறிப்புக்களுடனும் வெளியிட்டும் "லோகோபகாரி" என்னும் தமிழ்ப் பத்திரிக்கையைப் பல வருஷங்கள் நடத்தியும் இவர்கள் தமிழுக்குச் செய்துவந்த தொண்டு பல திறப்பட்டதாகும். தமிழ் இலக்கண இலக்கிய நூல்களில் ஒழுங்கான பயிற்சியும் போதனா சக்தியும் இவர்களைப் போல் வாய்ந்தவர்கள் இக்காலத்தில் மிகச் சிலரே யாவர்.

### திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்கள்,

நவசக்தி ஆசிரியர்.

ஆசிரியர் திரு. கோ. வடிவேலு செட்டியாரவர்கள் ஒரு தமிழ் ஞாயிறு. இத் தமிழ் ஞாயிறு இலக்கியம், இலக்கணம், தர்க்கம், வேதாந்தம், பொதுமை, ஒழுக்கம், ஒப்புயர்வு முதலிய கதிர்கள் கான்றிய வண்ணமாயிருக்கும். ஒருவிதக் கலையில் பலர் புலவர் ஆகலாம். பலவிதக்கலையில் ஒருவர் புலவராதல் அருமை. மிகச்சிலரே பல்கலைப் புலவராகின்றனர். இப்பேறு அறிஞர் வடிவேலு செட்டியார்க்கு வாய்த்தது.

செட்டியார் பல்கலைப் புலவர். கலைகள் செட்டியார் உள்ளத்தில் ஒன்றி, அவர்தம் உள்ளமாய், ஊனாய், உடலாய்ப் பரிணமித்திருக்கின்றன. கலைகளே செட்டியார், செட்டியாரே கலைகள். அன்பர் செட்டியாரை ஒரு பல்கலைக் கழகம் என்று கூறல் மிகையாகாது, கலைகளின் ஞானஒளி செட்டியார் முகத்தில் நடம் புரிகிறது. அது கலைகளுக்கு விருந்தாகும்.

**பாஷா கவிசேகர மகாவித்துவான் திரு. ரா. இராகவையங்கார் அவர்கள்,**

*அண்ணுமலை யூநிவர்ஸிடி.*

*சென்னை வேதாந்த சங்கப்புலவர் திலகரும் செந்தமிழ் வளர்க்கும் பேரறிவாளருமாகிய ஸ்ரீமான் கோ. வடிவேலு செட்டியாரவர்கள் நம் தென்னுட்டிற்குச் செய்துள்ள நல்லுதவிகளைப் பாராட்டி, அவர்கள் "தலைச்சிலை" யமைத்து விழாக் கொண்டாடப் பலர் அறிவாளர் ஒருங்கு குழீஇயது எனக்குப் பெரிய மகிழ்ச்சியைத் தருவது. "தேவரனையர் புலவர்" என்பராதலின் நற்புலவர் வடிவத்தைத் தேவரைப் போலச் சிலையமைத்து வழிபடுவது மிகவும் பொருந்தியதாகும்.*

**திரு. வே. வேங்கடராஜுலு ரெட்டியாரவர்கள்,**

*வித்வான், மதராஸ் யூநிவெர்ஸிடி.*

*ஆசிரியர் ஸ்ரீமான் கோ. வடிவேலு செட்டியாரவர்கள் வேதாந்த நூல்களுட் கைவல்யம் முதலிய சிறந்த நூல்களுக்கு விளக்கவுரை எழுதியும், சிலவற்றை உரைநடையிலாக்கியும், பலவற்றைப் பதிப்பித்தும், வேதாந்த உலகிற்கு அரிய தொண்டினை ஆற்றியுள்ளார். அன்றியும் பலவிடங்களில் வேதாந்த சங்கங்கள் ஏற்படுத்துவித்து, உபந்யாஸமூலமாய் வேதாந்தப் பொருள்களைப் பலருக்கும் புகட்டி அறிவூட்டி ஞானவொளியைப் பரப்பியுள்ளார்கள். மேலும், பரிமேலழகருரைக்குத் தெளிவான விளக்கவுரை எழுதியும் அருஞ் சொற்களை நன்கு விளக்கியும் திருக்குறளைப் பதிப்பித்திருக்கின்றுர்கள்.*

*தமிழ்நாட்டில் தருக்க நூற்புலமையில் தலை சிறந்து விளங்கும் தமிழ்ப்புலவர் ஆசிரியர் செட்டியார் அவர்களே என்றலில் ஐயமின்று. நம் ஆசிரியரிடத்தில் இலக்கண இலக்கியங்களையும் தருக்க வேதாந்த நூல்களையும் கற்றுத் தேர்ந்த புலவர் பலர்.*

**திரு. தெ. பொ. மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள், எம்.ஏ., பி.எல்.,**

*வித்துவான்.*

*"தமிழ்க்கிழவர்" என என் நண்பர் ஒருவர் நம் பேராசிரியர் ஸ்ரீமான் கோ. வடிவேலு செட்டியாரவர்களுக்குப் பெயர் வைத்தார். "தமிழ்க்குழவி" என்ற பெயரே பொருத்தமானது என எனக்குத் தோன்றுகிறது. சட்ட திட்டங்களுக்கு அடங்கி நாற்காலி யாளென அசையாப் பொருளாக விழுந்து கிடக்காது, நடுவே நடுவே விளையாடி இப்பெரியார், திருக்கூட்டத்திற்கு நகைப்பூட்டுவதன்*

நுட்பத்தை இக்குழவி மனத்தின் உண்மையுணர்ந்தவரே அறிந்தவ ராவர். பலருக்கும் விளங்காத அரும்பொருள்களைப் பேசப்புகுந்து, கூட்டத்திலிருக்கும் குழந்தைகளின் வாயிலாகவே அவற்றை விளக்கி வைப்பது இவருடைய தெள்ளிய அறிவின் ஆழத்தை அளந்து காட்டுவதோடு, இவருடைய அன்பு ததும்பும் குழவியின் மனத்தையும் கட்புலனுக்கும். பேச்செப்படியோ, எழுத்தும் அப்படியே. இவர் நூல்களை ஓதுவிக்கும் இடமும் குழவிகளின் விளையாட்டிடம் போலவே தோன்றும். ஏதேனும் புதிய பொருளைக் கண்டதும் குழந்தை குதித்தோடி எல்லார்க்கும் அதனைக் காட்டி இன்புறுவதுபோல, இப்பெரியார், உண்ணும்போதும், உலவும்போதும், குளிக்கும்போதும். சாகப் பிழைக்கக் கிடந்த அந்நிலையிலும் தாம் கண்ட பொருளை விருந்தூட்டி மகிழ்ந்தார்; மகிழ்கின்றார்; மகிழ்வார். இவ்வாறு செய்யாவிடின் இவர் தலை வெடித்துப்போகும். வேதாந்திகளை இரண்ணியர்களே என நம்பினவர்களும், இப்பேராசிரியர், கற்றாவின் மனம் போலக் கசிந்துருகி, "சாம்ப சதாசிவ, சாம்ப சதாசிவ, சாம்ப சதாசிவ, சாம்ப சிவா," எனத் தாயைத் தொலைவிலே கண்டு கையை நீட்டும் குழவியேபோலத் தம்மையும் மறந்து வானத்தே கைந்நீட்டி நின்று, உடலுருக உளம் உருகப் பாடுவதைக் கேட்டபின் "நான் செத்தவா பாடித் தெள்ளேணம் கொட்டாமோ" என இவருடன் பாடத் தொடங்கினர். தமிழ்க்குழவி தமிழன்னையின் மடிமீது என்றும் தவழ்ந்து விளையாடி மகிழ்வதாக!

**திரு. வே. துரைசாமி ஐயரவர்கள்,**

*தலைமைத் தமிழாசிரியர், பி. எஸ். உயர்தரப்பாடசாலை, மயிலாப்பூர்.*

ஸ்ரீமான் கோ. வடிவேலு செட்டியாரவர்களைத் தமிழுலகில் அறியாதவர் யாருமே இல்லையென்பது உயர்வு நவிற்சியன்று. ஸ்ரீமான் செட்டியாரவர்கள் போதகாசிரியராகவும் நூல்களைத் திருத்தமுறப் பதிப்பிக்கும் பதிப்பாசிரியராகவும் பெருஞ்சபையில் பலரையும் மகிழ்ச்சியடையச் செய்யும் பேராற்றல் உள்ளவராகவும் இருப்பது தமிழகம் அறிந்ததே.

**திரு. மு. வரதராஜ முதலியாரவர்கள்,**

*வித்துவான், திருப்பத்தூர் உயர்தரப்பாடசாலை.*

நிறைந்த கல்வி, சிறந்த ஒழுக்கம், தளரா ஊக்கம், சலியா உழைப்பு, பொறுமை விளங்கும் முகம், அன்பு ததும்பும் மொழி ஆகிய இவ்வனைத்தையும் ஒருங்கே காணும் பொருட்டாகவே ஆசிரியர் அவர்களிடம் நான் பன்முறையும் சென்றிருக்கிறேன். என்னிடம் உள்ள குறைகளைப் போக்கிக்கொள்வதற்கு இவருடைய தூய குணங்களை நினைத்துப் பார்த்தலே உயரிய மருந்தாக இருக்கும் உண்மையை எனது வாழ்க்கையில் பலமுறை கண்டுவந்திருக்கிறேன்.

தொல்காப்பியம் போன்ற பெருநூல்களில் தீரா ஐயங்களாயிருந்துவருவனவற்றையும் தீர்த்து விளக்கும் வகையில் தம்மையடுத்த புலவர் பலரிடமும் உரையாடுதலை இவர் ஒருவகை விளையாடுதலாகவன்றே கொண்டுள்ளார். என்னைப் பொறுத்த வரைக்கும் இவர் குளித்துக்கொண்டோ, உணவருந்திக்கொண்டோ இருக்கும் நேரங்களில் கூடப் பல ஐயங்களைக் கேட்டுத் தெரிந்துகொண்டிருக்கிறேன். இவையெல்லாம் ஒரு புறமிருக்க, இம்முதுமையிலும் இவர் தந்நலம் சிறிதும் கருதாது, பிறர் நலமே பெரிதும் பேணி, மாணவர் பலர்க்கும் வேதாந்த தருக்க இலக்கண இலக்கிய பாடங்களைக் கற்பித்து வருதலை எவ்வகைத் தியாகம் எனலாம் !

குழந்தையின் மனமும், ஞானியின் பேச்சும், தியாகியின் செயலும் இவர்தம் வாழ்க்கையில் சிறக்கக் காணலாம். என்போன்றோர் உய்யுமாறு, எளிய வாழ்வு வாழ்ந்து அரிய சேவை செய்துவரும் பெரியார் இவரே யல்லரோ !

**திரு. ச. கந்தசாமி முதலியாரவர்கள்,**

*தமிழ்ப்பண்டிதர், இந்து தியலாஜிகல் உயர்தரப் பாடசாலை.*

சற்குருமூர்த்தி ஸ்ரீமான் கோ. வடிவேலு செட்டியாரவர்கள் வேதாந்தம் பயின்று பிரம்மத்தையுணர்ந்தவராகலின் உண்மைப் பிராம்மணராவார் ; ஆஸ்திகத்தையும், அத்வைத வேதாந்தத்தையும், திருக்குறள் பகவத்கீதைபோன்ற நூல்களையும் குறைகூறும் பகைவர்களை வீரவாதம் புரிந்து அழிக்கவல்லவராதலின் க்ஷத்திரியாம்சம் உடையவராவார் ; வைசிய குலத்திற் பிறந்து சில வருடம் வியாபாரமும் புரிந்துவந்தனராதலின் பிறப்பாலும்

தொழிலாலும் மாத்திரம் வைசியராவார் ; உடல் நோயுற்றிருக்கும் காலத்தும் பொதுநலம் கருதி ஓயாதுழைக்கும் சதுரராகலின் உழைப்பாளி எனப்படும் சூத்திரருமாவார்; உபந்நியாச காலத்துத் தம் கல்வி வன்மை காட்டாது கேட்போர்க்குப் பொருள் விளங்க உரைப்பதே கடனாகக் கொள்வார் ; உயர்ந்த பொருள்களையும் எளிய உதாரணங்களைக் கொண்டு விளக்கிப் பாமரரும் உணரும்படி செய்வார் ; தம்மை மதிப்பவர்க்குத் தாம் அடிமை என்பர் ; தம்மை மதியாரைத் தாமும் மதியாது வாழும் மானம் உடையவர் ; இவரது ஜாதகக் குறிப்பைக் காண்பவர்களும் இவரோடு ஒரு மாத காலமாவது நெருங்கிப் பழகுபவர்களும் இவர் உலகப் பற்றற்ற உத்தமஞானி என்றுணர்வர். இவர் பாதங்களைத் தஞ்சமாக அடைந்தவர் உளத்தூய்மை பெற்றுக் கடவுளை அறியும் மார்க்கத்தில் கலந்தவராவர் என்பது திண்ணம்.

**திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியாரவர்கள்,** *பி.ஏ., பி.எல்.,*

*காரியதரிசி, சைவ சமாஜம்.*

வேதாந்த சங்கத்தைப் பல ஆண்டுகள் செம்மையாக நடத்தி வந்த சிறப்பும், வித்துவான் தெ. பொ. மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களையுள்ளிட்ட பல தமிழர்கட்குத் தமிழிலும் சமயத்திலும் ஆழ்ந்த பற்றினை விளைவித்த சிறப்பும், தாழ்த்தப்பட்ட குடிமக்கள் முன்னேற்றம் முதலிய புதிய துறைகளில் முதிர்ந்த வயதிலும் உழைக்க முற்படும் சிறப்பும், திருவொற்றியூர் வட்டப் பாறை நாச்சியார் முன்பு நிகழும் எருமைக் கொலையை ஒழிக்க விடாமுயற்சி செய்யும் சிறப்பும் பிறவும் திரு. செட்டியாரவர்களைத் தமிழ் நாட்டின் நினைவில் என்றென்றும் நிலைபெறச் செய்யும். உயர்ந்த பொருள்களை உயர்ந்த நடையில் சிறந்த புலவர்கள் கூட்டத்தில் விவகரிக்கும் பேரறிஞர் பலரை யான் கண்டதுண்டு ; கேட்டதுமுண்டு. குறைந்த அறிவுடைய எளிய மக்கள் நிறைந்துள்ள பெருங்கடலில் உயர்ந்த பொருள்களை எளிய பேச்சு முறையில் விளக்கி மகிழ்ச்சியைப் பொங்குவிக்கும் பெரும்புலவர்களைக் காண்பதும் கேட்பதும் அருமை. திரு. செட்டியாரவர்கள் ஒள்ளியார்முன் ஒள்ளியராய் வெளியார் முன் எளியராகும் பெற்றியுடைய பெரும் புலவராவார். திருக்குறளில் அளவு கடந்த ஆர்வமுடைய இவர் அக்குறள் கூறும் அவையறிந் துரைத்தலுக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றார். தமிழறிஞர் ஸ்ரீமான் கோ. வடிவேலு செட்டியாரவர்கள் வாழி ! வாழி !

**திரு. எஸ். சச்சிதாநந்தம் பிள்ளை அவர்கள், பி.ஏ., எல்.டி.,**

*கல்வித்துறை அதிகாரி, சென்னை மாநகராட்சி.*

இலக்கிய இலக்கணத் துறையிலும் தருக்க வேதாந்தத் துறையிலும் செட்டியாரவர்கள் ஆற்றியுள்ள பணியை அளவிடல் அரிது. எழுத்துவன்மையோடு சொல்வன்மையும் ஒருங்குபடைத்த இப்புலவர் அறிவுக்களஞ்சியமாக இலகுவது மட்டுமன்றி அருள் நிறைந்த உளத்தினரு மாவர்.

கடந்த பல்லாண்டுகளாகச் சாதி சமய விகற்பங்கடந்த சர்வமத சாரக்கிராஹி நிலையில் நின்று பல விடங்களுக்குஞ் சென்று, உண்மை யான ஆஸ்திகத்தின் இயல்பை இனிது விளக்கி, அதற்குற்ற இன்னல் துடைத்த அறிவாற்றல் மிக்க தீரர் இவர்.

**திரு. ரா. நடேச நாயகரவர்கள்,**

*வித்துவான், பண்டிதர், தமிழாசிரியர்,*

*பச்சையப்பர் உயர்தரப் பாடசாலை, சென்னை.*

இத்தமிழ் நாட்டில் நாவலரவர்களென்றால் அது யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலரவர்களையும் பிள்ளையவர்களென்றால், அது திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளையவர்களையும் எப்படிக் குறிக்குமோ அப்படியே செட்டியாரவர்கள் என்றால் அது மகாவித்துவான் ஆசிரியர் ஸ்ரீமான் கோ. வடிவேலு செட்டியார் அவர்களையே குறிக்கும்.

எம்மாசிரியராகிய செட்டியாரவர்கள் பல நூலுக்கும் வரைந்த உரையனைத்தும் மணிகளே போன்று மிளிர்கின்றன. அவைகளுள் நடுநாயக மணிபோன்று திகழும் திருக்குறளின் விசேடவுரையை ஈண்டு எடுத்துக்காட்டாகக் குறிக்கலாம். அவ்வுரையானது பரிமேலழகரின் உரையாகிய கடற்கரையை யடைவதற்குக் கலங்கரை விளக்கே போன்று ஒளி செய்கின்றதை யாவரும் அறிவர்.

**திரு. ஈ. த. இராஜேசுவரி அம்மையாரவர்கள்**, எம்.ஏ., எல்.டி.,
பௌதிக விரிவுரையாளர்,
ராணி மேரி கல்லூரி, சென்னை.

தேசியத் துறையில் மகாநாடுகள் கூடுவது சற்றேக்குறைய அரை நூற்றாண்டுடைய பழக்கமாகும். கல்வித்துறைகளில் மகாநாடுகள் கூடுவது மிகவும் அரிது. அதிலும் ஆத்மவிசாரணைத் துறையில் மகாநாடு கூடுவது மிகவும் அரிது. கூட்ட முயன்றாலும், நூற்றுக் கணக்கான மக்கள் திரண்டுவருவது மிகவும் அரிதாம். இப்பெரியார், அனைவரும் ஆத்மராஜ்யம் பெற்று அரசராய் வாழ, வேதாந்த சங்கங்கள் என ஓங்கி அறிவொளி வீசும் அரண்மனைகளைக் கட்டி, ஆராய்ச்சியாம் அலகிட்டுப் பெருக்கி, விரிவுரைகளாம் பனிநீர் தெளித்து, தம்முடைய இலக்கண இலக்கிய தருக்க வேதாந்த மாணவர்களாம் பல நிறக் கோலமிட்டு, அறிவு எனும் திருவிளக் கேற்றி, வேதாந்தக் கட்டியைத் தமிழ்ப்பாலில் கரைத்துச் சமைத்த பேரின்ப உணவைத் தமது நூல்களாம் அமுத கலசங்களில் நிறைத்து வைத்து, என்றும் பெருவிருந்தூட்டுவதை யாவரும் அறிவர். பெரியோர் செயல்கள் எவர்க்கும் வழிகாட்டிகள் ஆதலின் இவ்வழியே இவ்வுலகம் சென்று இன்புறுவதாம்.

செட்டியார் இயற்றிய நூல்கள் பல. அவற்றுள் திருக்குறள் விருத்தியுரை, சிவஞான போதவுரை முதலியன இவருடைய கல்வித் திறத்தை வெளியிடும்.

**திரு. ஈ. ந. தணிகாசல முதலியார் அவர்கள்**, பி. ஏ., பி. எல்.,
அட்வகேட், சென்னை.

சென்ற நூற்றாண்டில் வேதாந்தத்திற்கும் சித்தாந்தத்திற்கும் நடந்த தருக்க வாதங்கள் கண்டவர் இக்காலத்திலும் சிலருளர்; அவர்களும் கண்டு களிக்குமாறும், வாக்குவாதம், அதனாலுண்டாகும் துவேஷம் முதலியன நேரா வண்ணமும், அபிப்பிராய பேதங்கள் உள்ளவர்களிடத்தும் அன்பு செலுத்தித் தமது மன்றில் அவர்களையும் அழைத்துச் சொற்பொழிவுகள் செய்வித்துத் தாமும் அவர் சங்கங்களுக்குச் சென்று சொற்பொழிவுகள் செய்து யாவரையும் களிப்பித்த பெரியார் செட்டியாராவர். இலக்கண இலக்கியங்களில் தலைமைப் புலமை வாய்ந்து சிறியோரும் எளிதில் உணருமாறு

தமது கொள்கைகளை விளக்கப் பல வருடங்களாய் மாலை வகுப்புக் களும் காலை வகுப்புக்களும் ஏற்படுத்தி இலவச பாடங்கள் ஓதி வருவது மிகவும் போற்றத் தக்கதாகும். ஆத்ம விசாரணைக்குரிய நூல்களைத் தினந்தோறும் தம்மிடம் வரும் மாணவர்களுக்கு ஊதியத்தைக் கருதாது விடாமுயற்சியுடன் விளக்கிவைத்தல், செய்வதற்கு அரியதொரு செய்கையாகும்.

## திரு. சிவத் தியாநாநந்த மஹரிஷி அவர்கள்

வேத ப்ரவசன மந்திரம், சென்னை.

வேதாந்திக்கு வேண்டிய 'மத்தர் பேயரொடு பாலர் தன்மை' ஆசிரியர் கோ. வடிவேலு செட்டியாரவர்களிடம் பெரிதும் மருவிக் கிடப்பது யாவரும் அறியக்கூடிய தொன்ருகும். இவர் தருக்க மீமாம்ஸைகளைக் கற்றுச் சங்கரரது மதத்தைத் துல்லியமாக எடுத்துரைக்கத் தக்க நாவன்மை பெரிதும் படைத்தவர். மறந்தான் அறக்கற் றறிவோ டிருந்து இருவாதனை யற்றவர் என்று இவரைச் சொல்வது மிகையாகாது. தமது காலமெல்லாம் பொது நலத்துக் கெனவே யுழைத்துத் தற்போதும் அவ்வழியில் ஊக்கத்தைக் கைவிடாது வேலை செய்துவருவதிலிருந்து இவரை இராமகிருஷ்ண பரமஹம்ஸரைப் போன்றவரென்று உறுதியாகக் கூறலாம். இவரது குறளுரை ஒன்றே இவரது கல்வித் திறமைக்கும் மதபோதத்திற்கும் தக்க சான்று பகரவல்லதாகும்.

## பிரசங்கபாநு

### திரு. வல்லம் வைத்தியலிங்கம் பிள்ளையவர்கள்.

வியாசர்பாடியின்கண் ஞாநபாநுவாயெழுந்தருளியிருந்த மஹான் சிவப்பிரகாச சுவாமிகளும் இவர்களைப் போதகாசிரியராகக் கொண்டு பல ஞான சாத்திரங்கள் பயின்ருர்களென்னின் ஆசிரியரவர்களின் உயர்நிலைக்கோ ரறுதியிட வல்லார் யாவர்? எழுபத்து நான்காவது பிராயமாகிய இன்றளவும் தமது முதுமைப் பருவத்தையும் யாக்கைத் தளர்வையும் கருதாது வேண்டுவார் வேண்டுகோட்கிரங்கித் தமிழ்நாடனைத்துஞ் சென்று பிரதிபலன் வேண்டாது கேட்டார்ப் பிணிப்பவும் கேளாரும் வேட்பவும் எத்தகைய அரியபொருளையும் எளிதின் விளங்குமாறு அவையமைந்த சொற்களால் சுருங்கக் கூறி விளங்கவைக்கும் சொல்வன்மையும் சமய வாதிகளின் எத்தகைய கடாவிற்கும் இடையுமாறும் எண்ணுமாறுமின்றி அவ்வப்போதே விடையளிக்கும் பேராற்றலும் அமையப்பெற்றவர் செட்டியாரவர்கள்.

**திரு. எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்கள்,**

*தமிழ் லெக்ஸிகன் பதிப்பாசிரியர்,*
*சென்னைப் பல்கலைக் கழகம்.*

*பல்லாண்டு தமிழணங்கின் பாங்காகி*
*உளமகிழ்ந்து பணிகள் செய்தான்*

*பல்லாண்டு மாணவர்க்குப் பயன்சிறக்கும்*
*ஆசானுய்ப் பதவி பெற்றுன்*

*பல்லாண்டு மன்னுயிர்க்குப் பரகதிசெய்*
*வேதாந்தம் பயிற்று வித்தான்*

*பல்லாண்டு வாழ்ந்திடுக பாரின்மிசை*
*வடிவேலுப் பனுவ லோனே.*

**திரு. மோ. கந்தசாமி முதலியார் அவர்கள்,** *பி. ஏ., எம். ஏ. எஸ்.,*

Supdt. of Dravidic Studies, Pachaiyappa's College, Member, Board of Studies of the Madras Annamalai and Andhra Universities

*உலகியல் தெரிக்கும் உயர்வுள குறளின்*
*பலபட விரிந்த பாநயம் விளக்கிஞேன்.*

* * *

*பற்பல கழகம் பரிவுடன் நிறுவியே*
*கற்றவர் போற்றும் காட்சியில் திளைத்தோன்*
*கவிநயம் கண்டு கழிபே ருணர்வு*
*செவியகம் நிறையச் சேர்ந்த மாணவரை*
*ஆளப் புகுந்திடும் அறியா மைதனை*
*வாளரந் துடைத்த வடிவேல் வள்ளல்*
*வாழ்க பன்னுள் வயங்குபா லாற்றின்*
*வாழ்க வாழ்க மணலினும் பலவே.*

**ஸ்ரீமத் தணிகை நிர்மலாநந்தம் க. வேதாசல சுவாமிகளவர்கள்**

(மறைமலையடிகள்)

*எந்தெய்வ மெனும்தணிகை வளர்வடிவே*
*வேலெயென்ன எவரும் போற்றச்*

*சந்தமுறும் தமிழ்ப்பயிரை விளைவித்தாங்*
*கதன்பயனைச் சலியா துண்ணத்*

*தந்தையென வந்தூட்டு மருந்தவ! நின்*
*னுற்றிறந்த சங்க மென்றும்*

*விந்தைபெற நல்வாழ்வு பெற்றிடவா*
*சீர்வதிக்க வேண்டு மைய!*

**M. R. Ry. K. Rangaswamy Aiyangar Avl.,** B. A., B. L., L. T.,
Headmaster, The Hindu Theological High School,
MADRAS.

Mr. Chettiar is a unique blend of erudition, wisdom and character. For 37 long years, he was the Senior Tamil Pandit of our school and served it with rare loyalty and devotion.

He is to-day an outstanding figure in the world of Tamil Literature and Philosophy.

**M. R. Ry. S. D. Sargunar Avl.,** B. A.,
Lecturer in Tamil,
The Christian College,
MADRAS.

" I have felt for sometimes as if there must be a blessing in store for a people that delight so utterly in compositions thus remarkably expressive of a hunger and thirst after righteousness. " So wrote the late Dr. G. U. Pope in the introduction to Naladiyar. And I feel there must be blessing in store for the present Tamil generation that delight in honouring their great men who have rendered them any service.

The numerous students and admirers of my esteemed friend Mr. K. Vadivelu Chettiar are making arrangements to set up a bust in the premises of the Vedanta Sangam, Chintadripet, in memory of the literary and philosophic services he has been *rendering for many a year to the public at large. It is an attempt* quite praiseworthy, for Mr. Chettiar is a versatile genius worth all honour.

**M. R. Ry. Rao Bahadur S. Subbuswami Aiyar,** B. A.,
Retired Deputy Accountant General,
Posts & Telegraphs.

For about 37 years Mr. Chettiar has been a Tamil Pandit of the local Hindu Theological High School and for over 40 years he has been preaching to numerous disciples the principles of Advaita Philosophy which he learnt at the feet of his Satguru Sadhu Rathina Chettiar and other masters.

He has edited numerous Tamil classical works and has himself composed works in verse and prose.

His edition of Kaivalya Navaneetham with a paraphrase of the stanzas in the form of a dialogue between Guru and disciple and with a numerous foot-notes has made it possible for a purely Tamil student to understand easily the principles of Advaita Philosophy.

His edition of Tirukkural is the best and the most learned in the field at present and it took him about 8 years to bring it out.

Cases of vedantists are not infrequent whose deeds run counter to their preachings. But our Pandit is not of that type. His words do not belie his thoughts and his deeds accord with his words.

I have great regard and admiration for his ripe scholarship, wonderful memory, clear exposition, ceaseless industry, courteous manners and saintly character.

Although he has passed his 73rd year of age, he is still doing active work amongst us.

# பிற்சேர்க்கை 2

## ஆசிரியர் நூற்கள்

**I. செட்டியாரவர்கள் உரை எழுதி வெளியிட்ட நூற்கள் :**

1. *திருக்குறள் : விரிவான உரையுடன் 2 வால்யூம்*
2. *கைவல்ய நவநீதம் : மூலம், மூலத்துக்கியைந்த வசன வினு விடை, விரிவுரை, மேற்கோளுடன்*
3. *வேதாந்த சூடாமணி : மூலம், வினுவிடை, பதவுரையுடன்*
4. *ஸ்ரீ பகவத் கீதை : மூலத்துக்கியைந்த வசனமும் விருத்தி யுரையுடன்*
5. *சசிவன்ன போதம் – மூலமும் மூலத்துக்கியைந்த வசனமும், விருத்தியுரையும் மேற்கோளுடன்*
6. *நாநாஜீவாதக் கட்டளை : குறிப்புரையுடன்*
7. *தர்க்கபரிபாஷை : விரிந்த வியாக்யாநத்துடன்*
8. *கந்தர் அநுபூதி : மூலம் – விரிவான உரையுடன்*
9. *சிவஞான போதம் : தெளிபொருள் விளக்கவுரையுடன்*
10. *உபநிடதம் : விரிவுரை, சாஸ்திர மேற்கோளுடன்*

**II. இவர் எழுதிய நூற்கள் :**

1. *மெய்ஞ்ஞான போதம் : 52 வேதாந்த உபந்நியாச வசனம், முதற்பாகம், இரண்டாம் பாகம்*
2. *வியாச போதினி 1–2 பாகம்*
3. *மஹாராஜா துறவு – வசனம்*
4. *புநிதவதி (காரைக்காலம்மையார்)*
5. *பரமார்த்த போத வசனம்*
6. *தர்மவாசகம் என்னும் அறவுரை*

7. ஒரு பெண்ணரசியின் பிரஹ்மஞானோபதேசம்
8. ஞாந உவமை வெண்பா, மனன உவமை வெண்பா, தத்துவா தத்துவ விவேகம்
9. அறிவாநந்த வுந்தியார்

III. இவர் அச்சிட்ட நூற்கள் :

1. அறிவாநந்த சித்தியார்
2. வேதாந்த சாரம்
3. திருக்கு திருசியவிவேகம்
4. வேதாந்த மனன வெண்பா
5. போத வெண்பா
6. சிவப்பிரகாசப் பெருந்திரட்டு (குறுந்திரட்டுடன்)
7. ரிபு கீதைத்திரட்டு, குறிப்புரையுடன்
8. விவேக சூடாமணி, அரும்பத உரையுடன்
9. பாகவதத் திரட்டு

IV. இவர் மொழிபெயர்த் தச்சிட்ட நூற்கள் :

1. சர்வ தரிசன சங்கிரகம்
2. சித்தாந்த பிந்து
3. வேதாந்த பரிபாஷை
4. தர்க்காமிர்தமும் பிரஸ்தானபேதமும்

V. இவர் இயற்றிய பாடசாலைக்குரிய நூற்கள் :

1. வாக்குண்டாம் உரை
2. நல்வழி உரை
3. நன்னெறி உரை
4. இலக்கணச் சுருக்கம் — 5-ம் வகுப்பு
5. சுந்தரவாசகம் – Forms I, II, & III

## VI. இவர் எழுதிவைத்துள்ள நூற்கள் :

1. யோக ரத்நாகரம்
2. திருக்குறள் வசனம்
3. நாலடி வசனம்
4. ஆசாரக்கோவை வசனம்
5. குசேலோபாக்கியான வசனம்
6. கைவல்லிய நவநீதம்—செய்யுளின் பதவுரை
7. தொல்காப்பிய எழுத்ததிகார வசனம்
8. யாப்பருங்கல வசனம்

திருக்குறள்

பாலியலதிகார அடைவு

## CONTENTS

## 2. பொருட்பால் (70) – On Property

### 1. அரசியல் — The Duties of the King

# 2. பொருட்பால்—ON PROPERTY

## 1. அரசியல் – The duties of the King

பரி:—இனி * இல்லறத்தின்வழிப் படுவனவாய பொருளின்பங்களுள் இருமையும் பயப்பதாய பொருள் கூறுவா னெடுத்துக் கொண்டார். அது தன் துணைக்காரணமாய அரசநீதி கூறவே அடங்கும். அரச நீதியாவது £ காவலை நடாத்து முறைமை. அதனை † அரசியல், ‡ அங்கவியல், $ ஒழிபிய லென மூவகைப்படுத்து, மலர்தலை யுலகிற் ¶ குயிரெனச் சிறந்த அரசனதியல்பு இருபத்தைந் ததிகாரத்தாற் கூறுவான் தொடங்கி, முதற்கண் இறைமாட்சி கூறுகின்றார்,

*தெளி :—இனி இல்லறத்தின் வழியிற் பொருந்துவன வாகிய பொருளின்பங்களில் இம்மைப்பயனும் மறுமைப்பயனும் தருவதாகிய பொருளைச் சொல்ல வெடுத்துக் கொண்டார் அப்பொருள் தனக்குத் துணைக்காரணமாயுள்ள அரசநீதி சொல்லவே அடங்கும். அரச நீதியாவது காவலை நடத்தும் முறைமையாம். அம்முறைமையை அரசியல், அங்கவியல், ஒழிபியல் என்று மூன்று பிரிவாக்கி, பரந்த விடத்தையுடையவுலகத்திற் குயிர்போற் சிறந்துள்ள அரசனது தன்மையை இருபத்தைந்ததிகாரத்தாற் சொல்லத் தொடங்கி, முதலில் இறைமாட்சி சொல்லுகின்றார். அரசநீதி – ராஜதருமம்.*

---

** பொருளும் இன்பமும் துறவறத்திற் குரியனவல்லவாகலின் ‘இல்லறத்தின் வழிப் படுவனவாய பொருளின்பங்கள்’ என்று கூறப் பட்டது.*

*£ காவலை – குடிகளை யிரட்சித்தலை.*

*† அரசியல் – அரசனது தன்மையைச் சொல்லும் பிரிவு.*

*‡ அங்கவியல் – அரசனுக்கு அங்கமாயுள்ள மந்திரி முதலியவர்களது தன்மையைச் சொல்லும் பிரிவு.*

*$ ஒழிபியல் – அரசியலிலும் அங்கவியலிலும் அடங்காதவற்றைச் சொல்லும் பிரிவு.*

*¶ அரசன் உலகிற் குயிர் போன்றவனென்பது புறநானூறு “நெல்லுமுயி ரன்றே நீருமுயி ரன்றே, மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்” என்றும், இராமாயணம் “தன்னுயி ராமென வுலகிற் றங்கிய, மன்னுயி ரனைத்தையும் புரக்கு மாட்சியான்” என்றும், பெரியபுராணம் “மண்ணில் வாழ்தரு மன்னுயிர் கட்கெலாங், கண்ணு மாவியு மாம்பெருங் காவலான்” என்றும் கூறுவதனாலு மறிதற் பாற்றும்.*

# முதல் அதிகாரம்

## இறைமாட்சி—Kingly Excellence

**பரி:—அஃதாவது அவன்றன் நற்குண நற்செய்கைகள். *உலக பாலர் உருவாய் நின்று உலகங்காத்தலின் ‘இறை’ என்றார். ††“திருவுடை மன்னரைக் காணிற் றிருமாலைக் கண்டேனே யென்னும்” என்று ‡பெரியாரும் பணித்தார்.**

*தெளி:—அஃதாவது அவ்வரசனது நற்குண நற்செய்கைகள். (அரசன்) உலகபாலர் வடிவாய் நின்று உலகத்தைக் காத்தலால் (அவனை) ‘இறை’ என்று கூறினர். திருமாலி னம்சமே அரசர்க ளென்று பெரியாரும் கூறியிருக்கின்றனர். இறை கடவுள்.*

**க. படைகுடி கூழமைச்சு நட்பர ணாறு**
**முடையா னரசரு ளேறு.**

**பரி:—(இ-ள்) படையுங் குடியுங் கூழும் அமைச்சும் நட்பும் அரணு மென்று சொல்லப்பட்ட ஆறங்கங்களையும் உடையவன் அரசருள் ஏறு போல்வான், (எ-று).**

*ஈண்டுக் குடியென்றது அதனுடைய நாட்டினை. $கூழென்றது அதற்கேதுவாய பொருளை. ¶அமைச்சு, நாடு, †அரண், பொருள், *படை, நட்பென்பதே ‡முறையாயினும், ஈண்டுச் செய்யுள் நோக்கிப் பிறழவைத்தார். ‘ஆறுமுடையான்’ என்றதனால், அவற்றுள் ஒன்று இல்வழியும் அரசனீதி செல்லாதென்பது பெற்றாம். வடநூலார்*

---

** உலகபாலர் உருவாய் நின்று உலகங்காத்தலின் – உலகத்தைக் காப்பவராய இந்திரன முதலிய விமையவர்களின் அம்சமாய் நின்று உலகத்தைப் பாதுகாத்தலால; இது மனுதர்மசாஸ்திரம் ஏழாவதத்தியாயம் அரசன் சிறப்பில் “இந்திரன், வாயு, யமன், சூரியன், அக்கினி, வருணன், சந்திரன், குபேரனென்னு மிவர்களி னம்சங்களினாலேயே அரசனுண்டாக்கப்பட்டான்” “இப்படிப்பட்ட தேவர்களி னம்சமாகையால் அரசன் மக்களியாவரினும் அதிக காந்தியுள்ளவனாகவும் அனைவரையும் ஆளத்தக்க வீரியமுள்ளவனாகவு மிருக்கிறான்” என்று கூறுவதாலு மறிதற் பாற்றாம்.*

*†† திருவாய் மொழி 34-ம் பதிகம் 8-வது செய்யுள். இதன் பொருள் (இப்பெண்) திருவையுடைய அரசரைக் கண்டால் திருமகள் மணாளனை விஷ்ணுவைக் கண்டேனென்று கூறுவாள் என்பது. திரு என்பது கண்டாரால் விரும்பப் படுந்தன்மை.*

*‡ பெரியார்-நம்மாழ்வார். $ கூழ் - உணவு. ¶ அமைச்சு-மந்திரி*

*† அரண்-நாட்டிற்குக் காவலான மதில் முதலியன.*

** படை-சேனை.*

*‡ அமைச்சு, நாடு, அரண், பொருள், படை, நட்பென்பதே முறையாமென்பது அங்கவியலில் 1-வது அதிகாரம் அமைச்சாகவும், 11-வது அதிகாரம் நாடாகவும், 12-வது அதிகாரம் அரணாகவும்,*

இவற்றிற்கு அங்கமெனப் பெயர் கொடுத்ததூஉம் அது நோக்கி. ஏறென்பது உபசார வழக்கு. இதனுல் அரசர்க் கங்கமாவன †இவை யென்பதூஉம் இவைமுற்றும் உடைமையே அவன் வெற்றிக்கேது வென்பதூஉங் கூறப்பட்டன.

தெளி :—(இ-ள்.) படை - படையும், குடி - குடியும், கூழ் - கூழும், அமைச்சு - அமைச்சும், நட்பு - நட்பும், அரண் - அரணும், (என்று சொல்லப்பட்ட), ஆறும் - ஆறங்கங்களையும், உடையான் - உடையவன், அரசருளேறு-மன்னருள் ஆண்சிங்கம் போல்வாணுவான், (எ - று).

இங்குக் குடியென்றது அக்குடியை யுடைய நாட்டினை. கூழ் என்றது அக்கூழிற்குக் காரணமான பொருளை. அமைச்சு, நாடு, அரண், பொருள், படை, நட்பு என்று சொல்லுவதே கிரமமாயினும், இங்குச் செய்யுள் நோக்கிப் 'படைகுடி கூழமைச்சு நட்பரண்' என் றம்முறை தவற வைத்தார். 'ஆறுமுடையான்' என்று கூறியதினுல், அவ்வாறனுள் ஒன்றில்லாதவிடத்தும் அரச னீதி நடவாதென்பது பெறப்பட்டது. வடநூலார் இவ்வாறனுக்கும் அங்கமெனப் பெயர் கொடுத்ததும் அவ்வாறனுள் ஒன்றில்லாதவிடத்தும் அரசனீதி செல்லாதென்பது நோக்கி யென்க. ஏறு போன்ற வரசனை ஏறு என்று கூறியது உபசார வழக்காம். இதனுல் அரசனுக்கு அங்கமாவன இவை யென்பதும், இவை முழுதுமுடையவனுயிருத்தலே அவ்வரசனது

---

13-வது அதிகாரம் பொருள் செயல் வகையாகவும், 14-வது அதிகாரம் படைமாட்சியாகவும், 16-வது அதிகாரம் நட்பாகவும் இருத்தலி-னுலும், 1-வது அதிகாரத்தின் அவதாரிகையில் "அவை யாறனுள்ளும் 'காவற்சாகாடுகைத்தற கண் அவ்வரசற்கிணையாய அமைச்சனதியல்பு பத்ததிகாரத்தாற் கூறுவான் ருெடங்கி முதற்கண் அமைச்சு கூறுகின்ருர்" என்றும், 11-வது அதிகாரத்தின் அவதாரிகையில் "இனி யவ்வரசனுலும் அமைச்சனுலும் கொண்டுய்க்கப்படுவதாய் ஏனையரண் முதலிய அங்கங்கட்கு இன்றியமையாச் சிறப்பிற்ருய நாடு ஓரதிகாரத்தாற் கூறுகின்ருர்" என்றும், 12-வது அதிகாரத்தின் அவதாரிகையில் "இனி யந்நாட்டிற் குறுப்பா யடங்குமாயினும் பகைவராற் ருெலைவுவந்துழி அது தனக்கும் அரசன்றனக்கும் ஏமமாதற் சிறப்புப்பற்றிப் பிறிதோரங்கமாக ஓதப்பட்ட அரண் இவ்வதிகாரத் தாற் கூறுகின்ருர்" என்றும், 13-வது அதிகாரத்தின் அவதாரிகையில் 'இனிப் பெரும்பான்மையும் நாட்டானும் அரணுனும் ஆக்கவும் காக்கவும் படுவதாய பொருளைச் செய்தலின்றிறம் இவ்வதிகாரத்தாற் கூறுகின்ருர்" என்றும், 14-வது அதிகாரத்தின் அவதாரிகையில் 'இனி யப்பொருளினுவதாய் வெலவதாய படை இரண்டதிகாரத்தாற் கூறுவான் ருெடங்கி முதற்கண் படைமாட்சி கூறுகின்ருர்' என்றும், 16-வது அதிகாரத்தின் அவதாரிகையில் "இனி அப்படைபோல அரசனுக்கு வினையிடத் துதவுவதாய நட்பினை ......கூறுகின்ருர்" என்றும் பரிமேலழகர் கூறுதலினுலும் நன்கு விளங்குமென்க.

† இவை - அமைச்சு முதலிய அங்கங்கள்.

வெற்றிக்குக் காரண மென்பதும் சொல்லப்பட்டன. குடி - குடிச் சனங்கள்.

(க - து.) அமைச்சு முதலிய ஆறங்கங்களுங் குறைவின்றி யிருப்ப வனே அரசருட் சிறந்தவனுவான் என்பது.

1. He who possesses these six things, an army, a people, wealth, ministers, friends and fortress is a lion among kings.

---

உ. அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கு
மெஞ்சாமை வேந்தற் கியல்பு.

பரி :- (இ - ள்.) அரசனுக்கியல்பாவது * திண்மையும் கொடையும் அறிவும் ஊக்கமு மென்னும் இந்நான்கு குணமும் இடைவிடாது நிற்றல், (எ - று).

ஊக்கம் - வினை செய்தற்கண் மனவெழுச்சி. † இவற்றுள், அறிவு ஆறங்கத்திற்கும் உரித்து; ஈகை படைக்குரித்து; ஏனைய வினைக்குரிய. ‡ உயிர்க்குணங்களுள் ¶ ஒன்றுதோன்ற ஏனைய அடங்கிவரும்; அவற்றுள், $ இவையடங்கின், அரசற்குக் கெடுவன பலவாமாகலின், இவை எப்பொழுதுந் தோன்றி நிற்றல் இயல்பாக வேண்டுமென்பார் 'எஞ்சாமை வேந்தற்கியல்பு' என்றார்.

தெளி :—(இ - ள்.) வேந்தற்கு - அரசனுக்கு, இயல்பு - இயல்பாவது, அஞ்சாமை - திண்மையும், ஈகை - கொடையும், அறிவு - விவேகமும், ஊக்கம் - மனவெழுச்சியும், இந்நான்கும் - (என்னும்) இந்த நான்கு குணங்களும், எஞ்சாமை - நடுவே நீங்காது நிற்றலாம், (எ - று).

ஊக்கம் - மேற்கொண்ட காரியத்தைச் செய்து முடிப்பதில் மன வெழுச்சி. இவற்றுள், அறிவு அமைச்சு முதலிய ஆறங்கங்களுக்கும் உரியது; ஈகை படைக்கு உரியது; மற்றையனவாய அஞ்சாமையும் ஊக்கமும் (போர் முதலிய) தொழிலுக்குரியன. உயிர்க்குணங்கள் ஒன்று தோன்ற மற்றவை அடங்கிவரும்; அவற்றுள், இக்குணங்கள் அடங்கினுல், அரசனுக்குக் கெடுவன பலவாம் ஆதலால், இவை எப்பொழுதும் தோன்றி நிற்றல் இயல்பாக வேண்டுமென்பார் 'எஞ்சாமை வேந்தற் கியல்பு' என்றார்.

---

* திண்மை—கலங்காநிலைமை † இவற்றுள் - அஞ்சாமை முதலிய நான்கனுள்.

‡ ''அது (உயிர்) சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், பிரயத்னம், தர்மம், அதர்மம், (பாவனை யென்னும்) சம்ஸ்காரம் என்னும் பதினுன்கு குணங்களுடையதாம்'' என்பது தருக்க கௌமுதி.

¶ சுகந் தோன்றியபோது துக்க முதலியனவும், துக்கந் தோன்றிய போது சுகமுதலியனவுந் தோன்ருது நிற்றலூகித்துணர்தற்பாற்றும்.

$ இவை - அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கமென்பன.

(க-து.) அரசனுக்கு அஞ்சாமை முதலிய நான்கு குணங்களும் இயல்பாக விருக்கவேண்டும் என்பது.

2. Never to fail in these four things, fearlessness, liberality, wisdom and energy, is the kingly character.

---

ங. தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்று
நீங்கா நிலனாள் பவற்கு.

பரி :—(இ - ள்.) நிலத்தினை ஆளுந் திருவுடையாற்கு * அக்காரியங் களில் விரைவுடைமையும் அவை யறிதற்கேற்ற கல்வியுடைமையும் ஆண்மையுடைமையுமாகிய இம்மூன்று குணமும் ஒருகாலும் நீங்கா, (எ-று).

*கல்வியது கூறுபாடு † முன்னர்க் கூறப்படும். ‡ ஆண்மையாவது ஒன்றனையும் பாராது கடிதிற்செய்வதாகலின், அஃது ஈண்டு உபசார வழக்கால் $ 'துணிவு' எனப்பட்டது. ¶ உம்மை இறந்தது தழீஇய வெச்சவும்மை. இவற்றுள், கல்வி ஆறங்கத்திற்கும் உரித்து; $ ஏனைய வினைக்குரிய; § நீங்காவென்பதற்கு மேலெஞ்சாமைக் குரைத்தாங் குரைக்க.*

---

* *அக்காரியங்களில்—உலகையாளுங் காரியங்களில்.*

† *முன்னர் என்றது இவ்வதிகாரத்தை யடுத்துள்ள கல்வியதிகாரத் தை.* ‡ *ஆண்மை - ஆளுந்தன்மை; அல்லது ஒன்றற்குந் தளராது நிற்றல்.*

$ *துணிவிற்குக் காரணமாய ஆண்மையைத் துணிவென்று கூறின மையின் இது காரியங் காரணமாய உபசாரவழக்கு; காரியவாகு பெய ரெனினும் ஒக்கும். ஒன்றனையும் கவனியாது விரைந்து ஒரு காரியத் தைத் துணிந்து செய்வதற்கு ஆண்மை வேண்டுமாதலால் ஆண்மை காரணமாயும் (ஒன்றனையும் கவனியாது விரைந்து ஒருகாரியத்தைச் செய்யும்) துணிவு காரியமாயு மிருக்கின்றன வென்க.*

¶ *மூன்றும் என்பதன் உம்மை 'அஞ்சாமை யீகை யறிவூக்க மிந் நான்கும்' என்று மேலே கூறியுள்ள நான்கும் என்பதைத் தழுவி நிற்றலின் இறந்ததுதழீஇய எச்சவும்மை யாயிற்றெனக அஞ்சாமை யீகை யறிவூக்கமென்னும் இந்நான்கு குணங்களுமேயன்றித் தூங்காமை கல்வி துணிவுடைமை யென்னு மிம்மூன்று குணங்களும் அரசனுக்கு நீங்காதிருத்தல் வேண்டும் என்பது கருத்து.*

$ *ஏனைய - தூங்காமையும் துணிவுடைமையும்.*

§ *நீங்கா என்பதற்கு மேலுள்ள 'அஞ்சாமை யீகை' என்னுங் குறளுரையில் 'உயிர்க்குணங்களுள், ஒன்று தோன்ற ஏனைய அடங்கி வரும்; அவற்றுள் இவையடங்கின் அரசற்குக் கெடுவன பலவாமாக லின், 'இவை யெப்பொழுதும் தோன்றிநிற்றல் இயல்பாக வேண்டும்' என்று உரைத்தாற்போல வுரைத்துக் கொள்க என்பது. தூங்காமை கல்வி துணிவுடைமை யென்னும் இம்மூன்று குணங்களும் இயல்பாக எப்போதும் அரசனுக்குத் தோன்றி நிற்றல் வேண்டுமென்பது கருத்து.*

தெளி :—(இ-ள்.) நிலனாள்பவற்கு - பூமியையாளுந் திருவினை யுடைவனுக்கு, தூங்காமை (உடைமை) - (அக்காரியங்களில்) விரைவுடைமையும், கல்வி (உடைமை) - (அக்காரியங்களை அறிதற்கேற்ற) கல்வியுடைமையும், துணிவுடைமை - ஆண்மையுடைமையும், (ஆகிய), இம்மூன்றும்-இம்மூன்று குணங்களும், நீங்கா - (ஒருபோதும்) நீங்காவாம், (எ-று).

கல்வியது கூறுபாடு மேலே சொல்லப்படும். ஆண்மையாவது ஒன்றையும் பாராமல் விரைவாகத் துணிந்து செய்வதாகலால், அஃது இங்கு உபசார வழக்குப்பற்றித் 'துணிவு' என்று கூறப்பட்டது. மூன்றுமென்ற வும்மை இறந்தது தழுவிய வெச்ச வும்மை. இம்மூன்றனுள், கல்வி ஆறங்கத்திற்கும் உரியது ; மற்றவை தொழிலுக்குரியன. நீங்காவென்பதற்கு முன்னர் எஞ்சாமை யென்பதற்கு உரைத்தபடி உரைத்துக் கொள்க.

(க-து) தூங்காமை முதலிய மூன்றும் அரசனுக்கு நீங்காதிருக்கத்தக்க குணங்களாம் என்பது.

3. Vigilance, learning and bravery, these three things, should never be wanting in the ruler of a country.

---

**ச. அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மான முடைய தரசு.**

பரி:—(இ-ள்) * தனக்கோதிய அறத்தின் வழுவாதொழுகி அறன் அல்லவை தன்னாட்டின்கண்ணும் நிகழாமற் கடிந்து வீரத்தின் வழுவாத தாழ்வின்மையினை யுடையான் அரசன், (எ-று).

அவ்வறமாவது $ ஓதல், வேட்டல், ஈதலென்னும் பொதுத் தொழிலினும், ¶ படைக்கலம் பயிறல், பல்லுயிரோம்பல், பகைத்திறந் தெறுதலென்னுஞ் சிறப்புத் தொழிலினும் வழுவாது நிற்றல். § "மாண்ட—அறநெறி முதற்றே யரசின் கொற்றம்" என்பதனால் ‡ இவ்வறம் பொருட்குக் காரணமாதலறிக. அல்லவை-கொலை, களவு △ முதலாயின $$ குற்றமாய மானத்தி னீக்குதற்கு ' மறனிழுக்கா

---

* தனக்கோதிய —அரசனாகிய தனக்குச்சொன்ன.

$ ஓதல், வேட்டல், ஈதலென்னு மூன்று தொழிலும் பிராமணர் முதலியவர்க்கும் உரியனவாக விருத்தல்பற்றி 'ஓதல், வேட்டல், ஈதல் என்னும் பொதுத் தொழிலினும்' என்று கூறப்பட்டது.

¶ " தலைமையுங் கொடையொடு தறுக ணண்மையும், நிலைமையுங் கிழ்ப்படா நெஞ்சி னீட்டமுங், கொலைபயில் போர்களிற் புறங்கொடாமையுஞ், சிலைமலை தோளினு யரசர் செய்கையே" என்பது பகவத்கீதை.

§ புறநானூறு-ருரு இதன்பொருள், மாட்சிமைப்பட்ட அறநெறி (தருமவழி)யை முதலாகவுடைத்து, வேந்தரது வெற்றி என்பது.

‡ இவ்வறம் - அரசற்குரிய தருமம்.

△ முதலாயின என்றதனால் சூதாடல், வியபிசாரஞ் செய்தல், மதுபானஞ் செய்தல் முதலியவற்றையுங் கொள்க.

$$ குற்றமாயமானம் - "அந்தணர் சான்றோ ரருந்தவத்தோர்

* மானம்' என்றூர்; அஃதாவது † ''வீறின்மையின் விலங்காமென மதவேழமு மெறியா, னேறுண்டவர் நிகராயினும் பிறர்மிச்சிலென் றெறியான், மாறன்மையின் மறம் வாடுமென் றிளையாரையு மெறியா, ஞறன்மையின் முதியாரையு மெறியானயி லுழவன்'' எனவும் ‡ ''அழியுநர் புறக்கொடை யயில்வே லோச்சான்'' எனவுஞ் சொல்லப்படுவது. ¶ அரசு-அரசனது தன்மை ; அஃது உபசார வழக்கால் அவன்றன்மே னின்றது

தெளி :—(இ-ள்.) அறன் - (தனக்குச்கூறிய) அறத்தில், இழுக்காது - தவருது (நடந்து), அல்லவை - அறமல்லாதவற்றை, நீக்கி - (தனது நாட்டிடத்தும் உண்டாகாமல்) ஒழித்து, மறன் - வீரத்திலிருந்து, இழுக்கா - தவருத, மானம் - மானத்தை (தாழுதலில்லாமையை), உடையது - உடையவன், அரசு - அரசனுவான் (எ-று).

அவ்வறமாவது வேதமோதல், வேள்வி செய்தல், ஈதல் என்னும் பொதுத் தொழில்களிலும் படைக்கலம் பயிலல் பல்லுயிரோம்பல், பகைத்திற மழித்தல் என்னுஞ் சிறப்புத் தொழில்களிலும் தவருது நிற்றல். இவ்வறம் பொருளுக்குக் காரணமாதலறிக அல்லவை கொலை களவு முதலானவை. குற்றமாகிய மானத்தினின்று நீக்குதற்கு 'மறனிழுக்கா மானம்' என்றூர். அரசு - அரசனது தன்மை; அஃது உபசார வழக்கால் அவ்வரசன் மேல் நின்றது.

---

தம்முன்னோர் தந்தைதா யென்றிவரை வணங்காமையும், முடிக்கப் படா தாயினும் கருதியது முடித்தே விடுதலு முதலாயின'' இது ''இவறலு மாண்பிறந்த மானமும்'' என்னும் குறளின் விசேட வுரையிலுள்ளது.

* மானத்திற் கிலக்கணம் மானமென்னு மதிகாரத்தின் அவதாரிகையில் '' அஃதாவது எஞ்ஞான்றும் தந்நிலையிற் றுழாமையும் தெய்வத்தால் தாழ்வு வந்துழி உயிர்வாழாமையுமாம்'' என்று கூறப் பட் டிருக்கின்றது.

† சீவகசிந்தாமணி மண்மகளிலம்பகம் ௱கூ௰. இதன்பொருள் ''(தனக்கெதிர்ப்பாரின்மையின்) வேலுழவன் மதவேழத்தை யெறிந் தாலும் விலங்கை யெறிந்தா னென்பரென்று நினைத்து, அதனுலே வெற்றியின்மையின் வேழத்தையும் வெட்டானுய், முன்பு வெட்டுண் டவர் தனக்கு ஒப்பாராயினும் பிறர்படை தீண்டின எச்சிலென்று அவரையும் வெட்டானுய்த், தனக்கிளையாரையும் நிகரன்மையின் மறம்வாடுமென்று வெட்டானுய், அறமன்மையிற் றன்னின் மூத் தோரையும் வெட்டானுய் நின்றுனென்க என்பது.

[இது நச்சினுர்க் கினியருரை.]

‡ புறப்பொருள் வெண்பாமாலை வஞ்சிப்படலம் உ௰-வது வெண்பாவின் கொளு (கருத்து). இதன்பொருள் (தனக்குக்) கெட் டோடுவாரது முதுகினிடத்தில் கூரியவாளை யெறியாதவீரன் என்பது.

¶ அரசனது தன்மையை அரசனென்று கூறுதல் குணம் குணியாய உபசார வழக்கு. தன்மை - குணம், அரசன் - குணி; பண்பாகு பெயருமாம்,

(க - து) தனக்கோதிய தருமத்திற் றவறுதொழுகித் தீயன வற்றை யொழித்து வீரத்திற் குறையாது மானத்தோ டிருப்பவன் அரசனுவான் என்பது.

4. He is a king who, with manly modesty, swerves not from virtue, and refrains from vice.

---

**ரு. *இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த**
**வகுத்தலும் வல்ல தரசு.**

**பரி:—(இ - ள்.) தனக்குப் பொருள்கள் வரும் வழிகளை மேன் மேலுளவாக்கலும், அங்ஙனம் வந்தவற்றை ஒருவழித் தொகுத்தலும், தொகுத்தவற்றைப் பிறர் கொள்ளாமற் காத்தலும், காத்தவற்றை அறம் பொருளின்பங்களின் பொருட்டு விடுத்தலும் வல்லவனே அரசன்.**

ஈட்டல், காத்தல், வகுத்தலென்றவற்றிற்கேற்ப 'இயற்றல்' என் பதற்குச் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. பொருள்களாவன: மணி, பொன், நெல் முதலாயின. அவை வரும் வழிகளாவன பகை வரை யழித்தலும், † திறைகோடலும், தன்னுடு தலையளித்தலும் முதலாயின பிறரென்றது பகைவர், கள்வர், சுற்றத்தார், வினை செய்வார் முதலாயினுரை. கடவுளர், அந்தணர், வறியோரென் றிவர்க்கும் புகழிற்குங்கொடுத்தலை அறப்பொருட்டாகவும், யானை குதிரை படை நாடு அரணென் றிவற்றிற்கும் பகையொடு கூடலிற் பிரிக்கப்படுவார்க்கும் தன்னிற் பிரிதலிற் கூட்டப்படுவார்க்குங் கொடுத்தலைப் பொருட் பொருட்டாகவும், மண்டபம் ‡வாவி §செய் குன்று ¶இளமரக்கா முதலிய செய்தற்கும் ஐம்புலன்களான் நுகர்வன வற்றிற்குங் கொடுத்தலை இன்பப் பொருட்டாகவும் கொள்க இயற் றன் முதலிய தவறுமற் செய்தல் அரிதாகலின் 'வல்லது' என்றுர். இவை நான்கு பாட்டாலும் மாட்சியே கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்.) இயற்றலும் - (தனக்குப் பொருள்கள் வரும் வழிகளை மேலுமேலும்) உண்டாக்கலும், ஈட்டலும் - (அவ்வாறு வந்த பொருள்களை ஓரிடத்துச்) சேர்த்து வைத்தலும், காத்தலும் - (சேர்த்து வைத்த பொருள்களைப் பிறர் கொள்ளாமல்) காத்தலும், காத்த - காத்துள்ள பொருள்களை, வகுத்தலும் - (அறம் பொருளின்பங் களின் பொருட்டுச்)செலவு செய்தலும், வல்லது - வல்லவனே, அரசு- அரசனுவான், (எ - று).

---

* "அரசன் அடையப்படாத பொருளைச் சம்பாதிக்க விரும்ப வேண்டும்; சம்பாதித்த பொருளை முயற்சியோடு காப்பாற்றவேண் டும்; காப்பாற்றிய பொருளை விருத்தி செய்யவேண்டும்; விருத்தி செய்த பொருளைச் சற்பாத்திரத்தில் செலவு செய்யவேண்டும்" என் பது மநுதர்ம சாஸ்திரம், ஏழாவதத்தியாயம். † திறை - வரி. ‡ வாவி - குளம்.

§ செய்குன்று - செயற்கை மலை. (மலைபோல் கட்டப்பட்டது.)

¶ இளமரக்கா - இளமையாய மரங்களையுடைய சோலை (நந்தவனம்).

ஈட்டல், காத்தல், வகுத்தல் என்பவற்றிற்குப் பொருந்த 'இயற்றல்' என்பதற்குப் பொருள்கள் வரும் வழிகளை என்னும் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. பொருள்களாவன: மணி, பொன், நெல் முதலானவை. அப்பொருள்கள் வரும் வழிகளாவன: பகைவரை யழித்தலும், திறைகொள்ளலும், தன்னாட்டைக் காத்தலும் முதலானவை. பிறரென்றது பகைவர், கள்வர், சுற்றத்தார், தொழில் செய்வோர் முதலானவரை. கடவுள் அந்தணர் வறியோர் என்கிற இவர்க்கும் புகழிற்கும் கொடுத்தலை அறத்தின் பொருட்டாகவும், யானை குதிரை படை நாடு அரண் என்கிற இவற்றிற்கும் பகைவரோடு கூடுதலினின்றும் பிரிக்கப்படுவார்க்கும் தன்னைவிட்டுப் பிரிதலினின்றும் கூட்டப்படுவார்க்கும் கொடுத்தலைப் பொருளின் பொருட்டாகவும், மண்டபம் வாவி செய்குன்று இளமரக்கா முதலாயினவற்றைச் செய்தற்கும் ஐம்பொறிகளால் அனுபவிப்பனவற்றிற்கும் கொடுத்தலை இன்பத்தின் பொருட்டாகவும் கொள்க. இயற்றுதல் முதலாயினவற்றைத் தவறுமற் செய்தல் அரிதாகலால் வல்லது என்றார். இவை நான்கு பாட்டாலும் அரசனது நற்குண நற்செய்கைகளாகிய மாட்சியே சொல்லப்பட்டது.

(க – து.) இயற்றல் முதலியவற்றுள் திறமையுள்ளவன் அரசனாவான் என்பது.

5. He is a king who is able to acquire wealth, to lay it up, to guard and to distribute it.

---

**௬. காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேன்**
**மீக்கூறு மன்ன னிலம்.**

**பரி:—(இ - ள்.) முறைவேண்டினார்க்குங் குறை வேண்டினார்க்குங் காண்டற்கெளியனாய் யாவர்மாட்டுங் கடுஞ்சொல்ல னல்லனுமாயின், அம்மன்னனது நிலத்தை எல்லா நிலங்களினும் உயர்த்துக்கூறும் உலகம், (எ - று).**

முறைவேண்டினார் - *வலியரான் நலிவெய்தினார். குறைவேண்டினார்-வறுமையுற்றிரந்தார். காண்டற் கெளிமையாவது பேரத்தாணிக்கண் அந்தணர் சான்றோர் உள்ளிட்டாரோடு செவ்வியுடையனாயிருத்தல். கடுஞ்சொல் †கேள்வியினும், ‡வினையினுங் கடியவாய

---

* வலியரான் நலிவெய்தினார் – தம்மின் வலியவரால் வருத்தமடைந்துவந்தவர்.

† கேள்வியினும் வினையினும் கடியவாயசொல் என்பதில் கேள்வியிற் கடியவாயசொல்—கேட்பதற்குப் பிரியமாகாத சொல் எனவும், வினையிற்கடியவாய சொல்—தொழிலில் தீமையைத் தருவதாயசொல் எனவும் கொள்க.

‡ வினைவினும் என்றும் பாடமுண்டு.

சொல். $நிலம் மீக்கூறும் எனவே, மன்னனை மீக்கூறுதல் சொல்ல வேண்டாவாயிற்று. மீக்கூறுதல் இவன் காக்கின்ற நாடு, பசி, பிணி, பகை முதலிய வின்றி யாவர்க்கும் பேரின்பந் தருதலின் தேவருலகி னும் நன்றென்றல். உலகமென்னும் எழுவாய் வருவிக்கப்பட்டது.

தெளி:—(இ - ள்.) காட்சிக்கெளியன் - (அரசன் முறைவேண்டி னார்க்கும் குறைவேண்டினார்க்கும்) காணுதற்கு எளியவனாய், கடுஞ் சொல்லனல்லனேல் - (யாவரிடத்தும்) கடுஞ்சொல் கூறுபவனல்லாத வனுமாயிருந்தால், நிலம் - (அவ்வரசனது) நிலத்தை, (உலகம்), மீக்கூறும் – (எல்லா உலகங்களிலும்) உயர்த்திச் சொல்லும், (எ - று).

முறைவேண்டினார்—வலியவரால் துன்பமடைந்தவர். குறை வேண்டினார்—தரித்திரமடைந்து யாசித்தவர். காணுதற்கெளிமை யாவது (முறைவேண்டினாருங் குறைவேண்டினாருங் காண்பதற்குப்) பெரிய அரசாட்சி மண்டபத்தில் அந்தணர் சான்றோர் முதலாயினா ரோடு சமயமுடையவனாயிருத்தல் கடுஞ்சொல் – கேள்வியிலும் தொழிலிலும் கடுமையாகிய சொல். நிலமீக்கூறும் (நிலத்தை உயர்த் திச் சொல்லும்) எனவே, மன்னனை மீக்கூறுதல் (உயர்த்திச் சொல் லுதல்) சொல்லவேண்டுவதில்லையாயிற்று உலக மீக்கூறுதல் (உயர்ந் தோர் உயர்த்திச் சொல்லுதல்) இவன் காக்கின்ற நாடு, பசி, பிணி, பகை முதலாயின வில்லாமல் யாவர்க்கும் மிகுந்த வின்பந்தருதலால் சுவர்க்கத்திலும் சிறந்ததென்று சொல்லுதல். மீக்கூறும் என்னும் பயனிலைக் கேற்ப உலகம் என்னும் எழுவாய் வருவிக்கப்பட்டது.

(க - து.) காணுதற் கெளியனாயும் இன்சொற் சொல்பவனாயு முள்ள அரசன் உயர்ந்தோரால் புகழப்படுவான் என்பது.

6. The whole world will exalt the country of the king who is easy of access and whose words are free from harshness.

———

எ. *இன்சொலா லீத்தளிக்க வல்லாற்குத் தன்சொலாற் றான்கண் டனைத்திவ் வுலகு.

பரி:—(இ - ள்.) இனிய சொல்லுடனே ஈதலைச்செய்து அளிக்கவல்ல அரசனுக்கு இவ்வுலகந் தன் புகழோடு மேவித் தான் கருதிய அளவிற்றாம், (எ - று).

---

$ நிலத்தை யென்றும் பாடமுண்டு.

* இன்சொலால் தன்சொலால் என்பனவற்றின் ஆல் உருபு "அறத்தான் வருவதே இன்பம்" என்றாற்போல உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது.

இன்சொல் – * கேள்வியினும் ¶ வினையினும் இனியவாய சொல். ஈதல் – வேண்டுவார்க்கு வேண்டுவன கொடுத்தல் அளித்தல் – தன் பரிவாரத்தானும் பகைவரானும் நலிவுபடாமற்காத்தல் இவை அரியவாகலின் 'வல்லாற்கு' என்றும், அவன் மண்முழுதும் ஆளு மாகலின் 'இவ்வுலகு' என்றுங் கூறினார். கருதிய அளவிற்றுதல் – கருதிய பொருளெல்லாஞ் § சுரத்தல்.

தெளி:—(இ-ள்) இன்சொலால் – இனிய சொல்லுடனே, ஈத்து – ஈதலைச் செய்து, அளிக்க—, வல்லாற்கு – வல்ல அரசனுக்கு, இவ் வுலகு — இந்தவுலகமானது, தன்சொலால் — தன்புகழோடு, (பொருந்தி), தான்கண்டனைத்து – தான் நினைத்த அளவினதாகும், (எ-று).

இன்சொல் – கேள்வியிலும் தொழிலிலும் இனிமையாகிய சொல். ஈதல் - வேண்டுவார்க்கு வேண்டுவனவற்றைக் கொடுத்தல் அளித்தல் – (குடிகளை) தன் பரிஜனத்தாலும் பகைவராலும் வருத்தமடையா வாறு காத்தல். (இன்சொல்லுடனே ஈதலுமளித்தலுமாகிய) இவை செய்தல் அரியனவாகலால் 'வல்லாற்கு' என்றும், அவன் பூமி முழுதும் ஆளுவானுதலால் 'இவ்வுலகு' என்றும் சொல்லினர். நினைத்த வளவினதாதல் – நினைத்த பொருளெல்லாங் கிடைக்கப் பெறுதல்.

(க-து.) இனிய சொல்லுடன் ஈதலைச் செய்து குடிகளைக் காத் தளிக்கவல்ல அரசனுக்கு நினைத்தவையெல்லா முண்டாகும்.

7. The world will praise and submit itself to the mind of the king who is able to give with affability, and to protect all who come to him.

---

அ. ‡ முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும்.

**பரி —(இ-ள்.) தான் முறைசெய்து பிறர் நலியாமற் காத்தலையுஞ் செய்யும் அரசன் பிறப்பான் மகனே யாயினும், செயலான் மக்கட்குக் கடவுளென்று வேறு வைக்கப்படும், (எ-று).**

முறை - † அறநூலும் நீதிநூலுஞ் சொல்லும் நெறி பிறரென்றது

---

* கேள்வியினும் வினையினும் இனியவாய சொல் என்பதில் கேள்வியி னினியவாய சொல் – கேட்பதற்குப் பிரியமான சொல் எனவும் வினையினினியவாய சொல் - தொழிலில் நன்மையைத் தருவ தாய சொல் எனவும் கொள்க.

¶ வினைவினும் என்றும் பாடமுண்டு. § சுரத்தல் – மேன்மே லுண்டாதல்

‡ நீதிநெறி விளக்கம் (உஎ-வது செய்யுள்) "அனைவோர்க்குந் தெய்வம். இலைமுகப் பைம்பூ ணிறை" என்று கூறுகின்றது.

† அறநூல் – மனுதரும சாஸ்திர முதலியன ; நீதிநூல் – சுக்ரநீதி முதலியன.

* மேற்சொல்லியாரை. வேறுவைத்தல் - மக்களிற் பிரித்து உயர்த்து வைத்தல்.

தெளி:—(இ-ள்.) முறைசெய்து – (தான்) முறைசெய்து, காப்பாற்றும் - (பிறர் வருத்தாமற்) காத்தலையுஞ் செய்யும், மன்னவன் – அரசன், (பிறப்பினால் மனிதனேயாயினும்), மக்கட்கு - மனிதர்களுக்கு, இறையென்று – (செயலினால்) கடவுளென்று, வைக்கப்படும் – (வேறு) வைக்கப்படுவான், (எ–று).

முறை – அறநூலும் நீதிநூலும் சொல்லும் வழி. பிறரென்று கூறியது முன்னர்க் கூறியவரை வேறு வைத்தல் - (முறைசெய்து காப்பாற்று மன்னவனை) மனிதரிற் பிரித்து உயர்த்தி வைத்தல்.

(க–து.) முறைப்படி குடிகளைக்காக்கும் அரசன் அக்குடிகளுக்குத் தெய்வமென் றுரைக்கப்படுவான் என்பது.

8. That king will be esteemed a God among men, who performs his own duties and protects his subjects.

---

**சு. § செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்**
**கவிகைக்கீழ்த் தங்கு முலகு.**

பரி:—(இ–ள்.) ‡ இடிக்குந் துணையாயினார் சொற்களைத் தன் செவி பொறுதாகவும் விளைவு நோக்கிப் பொறுக்கும் பண்புடைய அரசனது குடை நிழற்கண்ணே தங்கும் உலகம், (எ–று).

செவிகைப்ப என்றதற்கேற்ப $ இடிக்குந்துணையாயினா ரென்பது வருவிக்கப்பட்டது. ¶ நாவின் புலத்தைச் செவிமேலேற்றிக் 'கைப்ப'

---

* மேற்சொல்லியாரை என்றது இவ்வதிகாரத்தின் எ-வது குறளின் விசேட வுரையில் ''தன் பரிவாரத்தானும் பகைவரானும்'' என்று கூறப்பட்டவர்களை.

§ செவிவெறுப்ப என்னாது செவிகைப்ப என்றது பண்பு புலன் மாறிய உபசார வழக்காம். ''மருளறுகாரணம்'' என்னுஞ் செய்யுளினுரையில் பிரயோக விவேக நூலார் ''இன்சொல் வன்சொல், மதுரகவி, செவிகைப்பச் சொற்பொறுக்கும் என்னும் உபசாரங்களெல்லாம் பண்பு புலன்மாறி வந்தன'' என்றனர்.

‡ இடிக்குந்துணையாயினார்–பாவங்களும் நீதியல்லனவுமாய செயல்களைக் கண்டவிடத்து நெருங்கிக் கண்டித்துப் புத்தி சொல்லும் துணையாந் தன்மையா யிருப்பவர்.

$ இடிக்குந்துணை என்றும் பாடமுண்டு

¶ நாவின் புலத்தைச் செவிமேலேற்றிக் 'கைப்ப' என்றார் - நாவிந்திரியத்திற்கு விஷயமான கைப்பினை (கசப்பை)ச் செவியிந் திரியத்தின் மீதேற்றிச் 'செவிகைப்ப' என்றார் என்பது. இங்கு

என்றார். பண்புடைமை — விசேடவுணர்வினனாதல். † அறநீதிகளிற் றவறாமையின் மண்முழுதுந் தானே யாளு மென்பதாம்.

தெளி:—(இ-ள்.) சொல் – (கண்டித்துப் புத்திசொல்லுந் துணை யாயினவரது) சொற்களை, செவிகைப்ப - (தன்) செவி பொறுதாகவும், பொறுக்கும் – (அச்சொற்களின் பயனை நோக்கிப்) பொறுக்கும், பண்புடை – நற்குணமுடைய, வேந்தன் – அரசனது, கவிகைக்கீழ் – குடையின் நிழலிலே (அரசாட்சியின் கீழே), உலகு – உலகமானது, தங்கும் – நிலைபெறும், (எ - று).

செவிகைப்ப என்பதற்குப் பொருந்தக் கண்டித்துப் புத்தி சொல்லுந் துணையாயினவர் என்பது வருவிக்கப்பட்டது. நாவின் விஷயமான கைப்பைச் செவியின்மே லேற்றிச் 'செவிகைப்ப' என்றார். பண்புடைமை-சிறப்பறிவுடையவனாதல் அறநூல் நீதிநூல் கூறிய வழியில் தவறா தொழுகுதலால், பூமிமுழுதும் தானே ஆளுவானென்பதாம்.

(க-து.) அமைச்சர் முதலாயினோர் கண்டித்துச் சொல்லும் புத்தியைக் கேட்கு மரசன் உலகமுழுவதும் ஆளுவான் என்பது.

9. The whole world will dwell under the umbrella of the king who can bear words that embitter the ear.

---

கo. கொடையளி செங்கோல் குடியோம்ப னான்கு
முடையானாம் வேந்தர்க் கொளி.

பரி:—(இ-ள்) வேண்டுவார்க்கு வேண்டுவன கொடுத்தலும் * யாவர் மாட்டுந் தலையளி செய்தலும், முறைசெய்தலும், தளர்ந்த குடிகளைப் பேணலுமாகிய இந்நான்கு செயலையும் உடையவன் வேந்தர்க் கெல்லாம் விளக்காம், (எ-று).

தலையளி - முகமலர்ந்தினிய கூறல். ‡ செவ்விய கோல்போறலின் 'செங்கோல்' எனப்பட்டது. குடியோம்பலென எடுத்துக் கூறினமை

---

நாவின் விஷயம் செவியின் விஷயமாகச் சொல்லப்பட்டது. ஓரிந்திரியத்தின் விஷயத்தை மற்றோரிந்திரியத்தின் விஷயமாகக் கூறுதல் "கண்ணிற் சொலிச்செவியினோக்கு மிறைமாட்சி" "நாற்றங் கேட்டலுந் தின்ன நயப்பது" என்று வரும் பிரயோகங்களாலு மறிதற் பாற்றும்

† அறநீதிகளிற் றவறாமையானும் இடிக்குந் துணையாயினார் துணையுடைமையானும் என்றும் பாடமுண்டு.

* யாவர்க்கும் என்றும் பாடமுண்டு.

‡ செவ்வியகோல் போறலின்—கோணுதலில்லாத கோல் போன் றிருத்தலால் செவ்விய கோல்போன்ற முறை(நீதி)யைச் செங்கோலென்றது உவமையாகு பெயராம்.

யால் தளர்ச்சி பெற்றும். || அஃதாவது † ஆறிலொன்றாய பொருடன்னையும் ‡ வறுமை நீங்கியவழிக் கொள்ளல் வேண்டின் அவ்வாறு கோடலும் ¶ இழத்தல் வேண்டின் இழத்தலுமாம். $ சாதிமுழுதும் விளக்கலின் * 'விளக்கு' என்றார். § ஒளி—ஆகுபெயர். இவை யைந்து பாட்டானும் @ மாட்சியும் பயனும் உடன் கூறப்பட்டன.

தெளி :—(இ-ள்.) கொடை - (வேண்டுவார்க்கு வேண்டுவன வற்றைக்) கொடுத்தலும், அளி - (யாவரிடத்தும்) முகமலர்ந்து இன்சொற் சொல்லுதலும், செங்கோல் - முறைசெய்தலும், குடியோம்பல் - (தளர்ந்த) குடிகளைப் பாதுகாத்தலும், (ஆகிய), நான்கும் - இந்நான்கு செயல்களையும், உடையான் - உடையவன், வேந்தர்க்கு - அரசர்க்கெல்லாம், ஒளியாம் - விளக்காம், (எ-று).

செவ்விய கோல் போலுதலால் முறை செய்தல் 'செங்கோல்' என்று கூறப்பட்டது. குடியோம்பல் என்று எடுத்துச் சொல்லியதால் குடிகளின் தளர்ச்சி பெறப்பட்டது. அஃதாவது குடிகளிடத்து ஆறிலொன்றாகிய பொருளையும் வறுமை நீங்கிய விடத்து வாங்க வேண்டினால் அப்படி வாங்கலும் விட்டுவிட வேண்டினால் விட்டு விடுதலுமாம். தன்னரசசாதி முழுதும் விளக்கலால் 'விளக்கு' என்றார். ஒளி - பண்பாகு பெயர். இவை ஐந்து பாட்டாலும் அவ்வரசனது மாட்சியும் பயனும் உடன் சொல்லப்பட்டன.

---

|| குடியோம்பலாவது.

† குடிகளுக்குக் கிடைக்கும் பொருள்களுள், ஆறிலொரு பாகமே அரசனுக்குரிய பொருளாமென்பது இல்வாழ்க்கை அதிகாரம் 3-வது குறளின் விசேடவுரையில் (தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல், தான் என்னும்) 'ஐவகையும் அறஞ்செய்தற் கிடனாகலின் 'ஐம்புலம்' என்றார். அரசனுககு இறைப்பொருள் ஆறிலொன்றாயிற்று; இவ்வைம் புலத்திற்கும் ஐந்து கூறுவேண்டுதலா னென்பதறிக'' என்று கூறியிருத்தலா லறிதற் பாற்றுமெனக.

‡ விநாயகபுராணம் ''குடிதளர் வுற்றகாலைக் கொள்பொருளாறிலொன்றும் விடுவது செய்து'' என்று கூறுவதும் இங்கறியத் தக்கதாம்

¶ வறுமை நீங்காவழி இழத்தல் வேண்டின் என்றும் பாடமுண்டு.

$ பலவற்றினுந் தொடர்ந்து ஒன்றாய்த் தோன்றுந் தன்மையது சாதியெனப்படும். இங்குச் சாதி அதனையுடைய பொருளுக்கு இலக்கண நூலார் கொள்கைப்படி பண்பாகு பெயராம்.

* 'ஒளி' என்றார் என்றும் பாடமுண்டு.

§ ஒளியென்னும் பண்புப்பெயர் அதனையுடைய விளக்கிற் காதலால் பண்பாகு பெயராம்.

@ காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனாதல், இன்சொலா லீத்தளித்தல், முறைசெய்து காப்பாற்றல், செவிகைப்பச் சொற் பொறுத்தல், கொடையளி செங்கோல் குடியோம்பல் என்பன மாட்சியாம்; மீக்கூறுதல், தான்கண் டனைத்திவ் வுலகு, மக்கட் கிறையென்று வைக்கப்படும், கவிகைக்கீழ்த் தங்குமுலகு, வேந்தர்க் கொளியா மென்பன பயனும்.

*(க - து.) கொடைமுதலிய நான்கு செயல்களையு முடைய வரசன் அரசர்க்குள் விளக்குப்போன்று விளங்குவான் என்பது.*

10. He is the light of kings who has these four things beneficence, benevolence, rectitude, and care for his people.

———

## இரண்டாம் அதிகாரம்

## கல்வி—On Learning

பரி :—அஃதாவது அவ்வரசன் தான் கற்றற்குரிய நூல்களைக் கற்றல். அவையாவன † அறநூலும், நீதிநூலும், யானை, குதிரை, தேர், ‡ படைக்கல மென்றிவற்றி னூல்களும் முதலாயின. அரசன் அறிவுடைய னுயக்கால் தன்னுயிர்க்கேயன்றி $ மன்னுயிர்க்கும் பயன்படுதனேக்கி, இஃதரசியலுள் வைக்கப்பட்டதாயினும், யாவர்க்கும் உறுதி பயத்தற் சிறப்புடைமையிற் பொதுப்படக் கூறுகின்ருர். மேல் ¶ "தூங்காமை கல்வி" எனத்தோற்றுவாய் செய்த மாட்சியை விரித்துக் கூறுகின்றமையின் இஃதிறை மாட்சியின்பின் வைக்கப்பட்டது.

*தெளி —அஃதாவது அவ்வரசன் தான் கற்றற்குரிய நூல்களைக் கற்றல் அந்நூல்களாவன அறநூலும் நீதிநூலும், யானை குதிரை தேர் படைக்கலம் எனப்பட்ட இவற்றினூல்களும் முதலானவையாம். அரசன் அறிவுடையவனுயிருந்தால் தன்னுயிர்க்கேயன்றி மன்னுயிர்க்கும் பயன்படுதல் குறித்து, இக்கல்வி அரசியலுள் வைக்கப்பட்டதாயினும், யாவர்க்கும் நன்மையைத் தருவதாகிய சிறப்புடைமையினல் (அதனை) பொதுப்படச் சொல்லுகின்ருர். முன்னதிகாரத்தில் "தூங்காமை கல்வி" என்று தொடக்கஞ் செய்த மாட்சியை விரித்துச் சொல்லுதலால், இஃது (கல்வி) இறைமாட்சியின்பின் வைக்கப்பட்டது.*

க. கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக.

பரி :—(இ - ள்.) ஒருவன் கற்கப்படு நூல்களைப் பழுதறக் கற்க ; அங்ஙனங்கற்ருல் அக்கல்விக்குத் தக அவை சொல்லுகின்ற நெறிக் கண்ணே நிற்க, (எ - று).

---

*† "தவமுயன் றரிதிற் பெற்ற தனியிளங் குமரனுளும், சிவமுயன் றடையுந் தெய்வக் கலைபல திருந்த வோதிக், கவனமாம் புரவி யானை தேர்படைத் தொழில்கள் கற்றுப், பவமுயன் றதுவும் பேறே யெனவரும் பண்பின் மக்கான்" என்று பெரிய புராணம், திருவாரூர்ச் சிறப்பில் மனுநீதிகண்ட சோழனது மகன் ஓதியது பற்றியும் கற்றது பற்றியுங் கூறியிருப்பதிங்கு நன்குணர்தற்பாலதாம்.*

*‡ படைக்கலம்—ஆயுதம். $ தன்னரசாட்சியின் கீழ்வாழுமுயிர்க்கும்.*

*¶ இறைமாட்சி ௩.*

'கற்பவை' என்றதனுன், † அறம் பொருள் இன்பம் வீடென்னும் ‡ உறுதிப்பொரு ளுணர்த்துவன வன்றிப் $பிற பொரு ளுணர்த்துவன சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினர்க் காகாவென்பது பெற்றும். கசடறக் கற்றலாவது விபரீத ஐயங்களை நீக்கி மெய்ப்பொருளை நல்லோர் பலருடனும் பலகாலும் பயிறல். நிற்றலாவது இல்வாழ்வுழிக் ¶ ''கருமமு முள்படாப் போகமுந் துவ்வாத், தருமமுந் தக்கார்க்கே செய்'' தலினும், துறந்துழித் தவத்தான் மெய்யுணர்ந்து அவாவறுத் தலினும் வழுவாமை. § சிறப்புடை மகற்காயிற் கற்றல்வேண்டு மென்பதூஉம், அவனுற் *கற்கப்படு நூல்களும், அவற்றைக் || கற்கு மாறும், கற்றதனுற் @ பயனும் இதனுற் கூறப்பட்டன.

தெளி :—(இ-ள்.) (ஒருவன்) கற்பவை - கற்பதற்குரிய நூல்களை, கசடற - குற்றமொழிய, கற்க - கற்கக்கடவன், கற்றபின் - (அவ்வாறு) கற்றல், அதற்கு - அக்கல்விக்கு, தக - தகுதியாக, நிற்க - (அந்நூல்கள் சொல்லுகின்ற வழியிலே) நிற்கக்கடவன், (எ-று).

---

† ' கல்வி கரையில கற்பவர் நாள்சில, மெல்ல நினைக்கிற் பிணி பல தெள்ளிதி, னராய்ந் தமைவுடைய கற்பவே நீரொழியப், பாலுண் குருகிற் றெரிந்து'', ''அலகுசால் கற்பி னறிவு நூல்கல்லா, துலகநூ லோதுவ தெல்லாம் - கலகல, கூஉந் துணையல்லாற் கொண்டு தடுமாற்றம், போஒந்துணையறிவா ரில்'' என்று நாலடியார் கூறுவ தாலும் 'அறம் பொருளின்பம் வீடென்னு முறுதிப் பொருளுணர்த்து வன வன்றிப் பிறபொருளுணர்த்துவன சின்னாட் பல்பிணிச் சிற்றறி வினர்க் காகா என்பது பெற்றும்' என்பது நன்கு விளங்கும்.

‡ உறுதிப்பொருள் - புருஷார்த்தங்கள். புருஷர்களினிச்சைக்கு விஷயமாவது புருஷார்த்தமாம்.

$ பிறபொரு ளுணர்த்துவன - களவுநூல் காமநூல் முதலாயின.

¶ நாலடியார் அறிவுடைமை - ம். இதன் பொருள் (அறம் பொருள்களுக்குக் காரணமான) முயற்சிகளையும் உடன்பட்டுச் செய்து, (அவ்வறம் பொருள்களா லுண்டாகும்) இன்பத்தையு மனுபவித்து, )தான முதலாய) வறங்களைக் (கல்வியறிவு ஒழுக்கங்களால்) தகுதி யுடையவரா யிருப்பார்களுக்கே செய்து என்பது.

§ சிறப்புடை மகற்காயின் - முத்தியடைதற் குரிமை யுடைய மகனுக்காணுல்.

* கற்கப்படு நூல்கள் - அறம் பொரு ளின்பம் வீடென்னும் உறுதிப் பொருள்களை யுணர்த்தும் நூல்கள்.

|| கற்குமாறும் - பழுதறக் கற்கும் வகையும்.

@ பயனும் - அறமுதலிய வுறுதிப் பொருளை யுணர்த்தும் நூல்கள் கூறும் வழியிலே நிற்றலும்.

'கற்பவை' என்றதனுல் அறம் பொருள் இன்பம் வீடு என்கிற உறுதிப்பொருள்களை உணர்த்தும் நூல்களல்லாமல் வேறு பொருளுணர்த்தும் நூல்கள் சில வாழ்நாளையும் பல நோயையும் சிற்றறிவையுமுடைய மக்களுக்கு ஆகா என்பது பெறப்பட்டது. கசடறக் கற்றலாவது விபரீத சந்தேகங்களை நீக்கி மெய்ப்பொருளை நல்லோர் பலரோடும் பலதரமும் பழகுதல். நிற்றலாவது இல்வாழ்க்கையிலே நின்று கருமங்களைச் செய்து இன்பத்தையனுபவித்து யோக்கியருக்குத் தருமஞ்செய்தலிலும் துறவறத்தை மேற்கொண்டவிடத்துத் தவத்தால் மெய்யுணர்ந்து அவாவறுத்தலிலும் தவருமை. இதனுல் சிறப்புடைய புருஷனுக்கானுல் கற்கவேண்டுமென்பதும், அவனுல் கற்கப்படும் நூல்களும், அந்நூல்களைக் கற்கும் விதமும், கற்றதனுற் பயனும் சொல்லப்பட்டன.

(க – து.) ஒருவன் கற்கவேண்டிய நூல்களைக் குற்றமறக் கற்றுப் பின் அக்கல்வியறிவுக்குத் தக்கவாறு, அவை கூறும் வழியில் நிற்கக் கடவன்.

1. Let a man learn thoroughly whatever he may learn, and let his conduct be worthy of his learning.

---

உ. † எண்ணென்ப வேனை யெழுத்தென்ப இவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு.

பரி:—(இ - ள்) அறியாதார் எண்ணென்று சொல்லுவனவும் மற்றை யெழுத்தென்று சொல்லுவனவும் ஆகிய விக்கலைகள் இரண்டனையும் அறிந்தார் சிறப்புடைய உயிர்கட்குக் கண்ணென்று சொல்லுவர், (எ - று).

‡ எண்ணென்பது கணிதம்; அது ¶ கருவியுஞ் செய்கையுமென விரு

---

† ஔவையார் ஆத்திசூடியில் "எண்ணெழுத்திகழேல்" என்றும் கொன்றைவேந்தனில் "எண்ணுமெழுத்துங் கண்ணெனத்தகும்" என்றும் அருளியிருத்தலும் இங்குக் கவனிக்கத்தக்கதாம்.

எண் என்பது கணிதமும் அதனேடொற்றுமையுடைய தருக்கமுமாம். எழுத்தென்பது எழுத்தும் அதனேடொற்றுமையுடைய சொல்லுமாம்.

‡ "சர்வ சாஸ்திரத்தின் பொருளையுமறிதற்குத் தர்க்கமும் இலக்கணமும் மிகு உபகாரமாயிருக்கின்றன" என்றும், "தருக்கமும் இலக்கணமுமே மக்களுக் கிருகண்ணுகும்" என்றும் சொல்லப்பட்டிருப்பினும், பரிமேலழகர் தருக்கத்தைக் கணிதத்தி லடக்கி (எண் என்பது தருக்கமென்று கூருது) எண் ணென்பது கணிதம் என்று கூறினுரென்க தருக்க சாஸ்திரம் கணித சாஸ்திரத்திலே ருறுப்பாயடங்குவது உய்த்துணர்வார்க்கு நன்கு விளங்கும். எண் என்பது தருக்கத்தை யுணர்த்துதல் "காண்ட லனுமானங் கதையருத்தா பத்தியிவை, யீண்டிசைத்த வெண்ணெனவே யெண்" என்பதனுலறிக.

¶ கருவியும் செய்கையும் - காரணமும் காரியமும். தொல்

வகைப்படும். அவை ஏரம்ப முதலிய நூல்களுட்காண்க. எழுத்தெனவே, அதனோ டொற்றுமையுடைய சொல்லும் அடங்கிற்று. இவ்விருதிறமும் அறமுதற் பொருள்களைக் காண்டற்குக் கருவியாகலின் ' கண் ' எனப்

---

காப்பியச் சூத்திரவிருத்தி "இப்படலத்துள் விதிக்கப் படுவன வெல்லாம் கருவியும் செய்கையுமென விருவகைப்படும். அவற்றுள், கருவி நூன்மரபு முதலிய நான்கோத்தானும், செய்கை தொகை மரபு முதலிய வைந்தோத்தானும் கூறப்படும்" என்று கூறுவதனாலும் கருவியும் செய்கையும் இன்னவெவன நன்கு புலப்படும்.

கருவியுஞ் செய்கையும் வருமாறு :—

1. (1) புவியென்னுஞ் சொல்லுண்டாவதற்கு, பு - வி - என்னு மெழுத்துக்கள் கருவியாக விருத்தலின், பு - வி - என்னுமெழுத்துக்கள் கருவியாம்; புவியென்னுஞ் சொல் செய்கையாம். "சொல்லென் றது எழுத்தினா னாக்கப்பட்டு இருதிணைப் பொருட்டன்மையும் ஒருவ னுணர்தற்குக கருவியா மோசையாகிய பெயர், வினை, இடை, உரி யென்னு நால்வகைச் சொல்லும் பிறவுமாம்" என்று சங்கர நமச்சி வாயப் புலவர் நன்னூல் விருத்தியுரையிற் கூறியிருப்ப தீண்டுணர்தற் பாலதாம்.

(2) யான் அச்சுதனைத் தொழுதேன் என்னும் வாக்கிய முண்டா வதற்கு, யான் - அச்சுதன்-ஐ-தொழுதேன் என்னுஞ் சொற்கள் கருவியாக விருத்தலின், யான் - அச்சுதன் - ஐ - தொழுதேன் என்னுஞ் சொற்கள் கருவியாம்; யான் அச்சுதனைத் தொழுதேன் என்னும் வாக்கியம் செய்கையாம்.

2. (1) பத்து முதலிய பேரெண்க ளுண்டாவதற்கு, ஒன்று முதலிய சிற்றெண்கள் கருவியாக விருத்தலின், ஒன்று முதலிய சிற்றெண்கள கருவியாம்; பத்து முதலிய பேரெண்கள் செய்கை யாம். ஒன்று, பத்து, நூறு, ஆயிரம், அயுதம், இலக்கம், நியுதம், கோடி, அர்பபுதம், விருந்தம, கருவம், நிகருவம், சங்கம், பதுமம், சமுத்திரம், அந்தியம், மத்தியம், பரார்த்தமென எண்களின் ஸ்தானம் பதினெட்டாம; முப்பததாமென்று கூறுதலுமுண்டு. பத்து ஒன்றாலுறழ்ந்தது பத்து, பத்துப் பத்தாலுறழ்ந்தது நூறு என்றற் றொடக்கத்தனவாக வுணர்தல் வேண்டும். பின்பின் உள்ள எண்கள பேரெண்ணும்; முன்முன் உள்ள எண்கள் சிற்றெண்ணும். இரண்டு மூன்று முதலிய வெணகள் அநேக வொருமை யெண்களின் அபேட்சா புத்தியாற்றோன்றி, அதன் நாசத்தாற் கெடுவனவாமென்றிங் குணர்தல் வேண்டும்.

(2) மலை முதலிய விடங்களில் புகையைக் கண்டவிடத்து இம்மலை தீயுடையதென்னும் அநுமிதி ஞானமுண்டாவதற்கு, யாண்டுப்புகை ஆண்டுத்தீ யென்னும் நியதமான வுடனிகழ்ச்சிப் பிரத்தியட்ச ஞானம் கருவியாக விருத்தலின், யாண்டுப்புகை ஆண்டுத் தீ யென்னும் நியதமானவுட னிகழ்ச்சிப் பிரத்தியட்ச ஞானம் கருவியாம; இம்மலை தீயுடையதென்னும் அநுமிதி ஞானம் செய்கையாம். இவ்வாறே பிறவற்றையு முய்த்துணர்க.

பட்டன. † அவை கருவியாதல், ‡ " ஆதி முதலொழிய வல்லா தன வெண்ணி, னீதி வழுவா நிலைமையவான் - மாதே, யறமார் பொரு ளின்பம் வீடென்றிவற்றின், றிறமாமோ வெண்ணிறந்தாற் செப்பு ", ¶ " எழுத்தறியத் தீருமிழி தகைமை தீர்ந்தான், மொழித்திறத்தின் முட்டறுப்பா னாகு - மொழித்திறத்தின், முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து, கட்டறுத்து வீடு பெறும்" – இவற்று னறிக. என்ப என்பவற்றுள், முன்னைய இரண்டும் அஃறிணைப் பன்மைப் பெயர்; பின்னையது உயர்திணைப் பன்மைவினை. அறியாதார் அறிந்தா ரென்பன வருவிக்கப்பட்டன. சிறப்புடையுயிரென்றது மக்களுயிருள்ளும் உணர்வு மிகுதி யுடையதனை. இதனாற் கற்கப்படு

---

† அவை - எண்ணும் எழுத்தும்.

‡ (இதன்பொருள்): மாதே - பெண்ணே, ஆதி - சிருட்டியினாரம் பத்தில், (சீவர்களுய்யுமாறு கடவுளால் எடுத்துச் சொல்லப்பட்ட), முதலொழிய - (தருமார்த்த காமமோட்சங்களை ஐயந்திரிபற வுணர்த் தும்) முதல் நூலாகிய வேதம் தவிர, அல்லாதன - (வேதத்திற்கு மாறுபட்ட) மற்ற நூல்கள், எண்ணின் – ஆராய்ந்து பார்த்தால், நீதி வழுவாம் நிலைமைய - (தருமார்த்த காமமோட்சங்களை யுணர்த்து வதில்) முறைமைதவறிய நிலைமையினையுடையனவாம், எண்ணிறந் தால் - (முதல் நூற்பொருளை) கணித நூலோடு மாறுபட அறிந்தால், அறமார் பொருளின்பம் வீடென்றிவற்றின் திறம் - தருமார்த்த காமமோட்சமென்று சொல்லப்படும் இவற்றின் பாகுபாடு, ஆமோ - (ஒருவனுக்கு) சித்திக்குமோ (சித்திக்காதென்றபடி), செப்பு - (நீ) சொல்லு, (எ - று). ஆல் - அசை.

¶ (இதன் பொருள்): (ஒருவன்) எழுத்தறிய - இயற்றமிழை யறிந்தால் இழிதகைமை தீரும் - (அதனா லவனுக்கு) பேதைமை யானது ஒழியும், தீர்ந்தால் - (அப்பேதைமையானது) ஒழிந்தால், மொழித்திறத்தின் முட்டு - (அவன்) சொற்பகுப்பிற்றோன்றும் மாறு பாட்டை, அறுப்பானாகும் - ஒழிக்குந்தன்மையை யுடையவனாவான், மொழித்திறத்தின் முட்டறுத்த நல்லோன் - சொற்பகுப்பிற் றோன்றும் மாறுபாட்டை யொழித்த நல்லறிவுடையவன், முதனூற் பொருளுணர்ந்து - முதல் நூலின் பொருளை (ஐயந்திரிபற) அறிந்து, கட்டறுத்து - பந்தத்தை யொழித்து, வீடுபெறும் – மோட்சத்தை யடைவான், (எ - று).

[நன்னூல் சிறப்புப் பாயிரத்தினுரையில் " எழுத்தென்றது இயற்றமிழை. அது ' எண்ணென்பவேனை யெழுத்தென்ப ' என்பத னாலு முணர்க. இசைத்தமிழும் நாடகத்தமிழும் இவ்வியற்றமிழ்போல முதல்நூற் பொருளுணர்தற்குக் கருவியன்மையின் இயற்றமிழ் ஒன்றுமே கூறினர் " என்று சங்கர நமச்சிவாயப்புலவர் கூறியிருக் கின்றனர்].

" கற்பக் கழிமட மஃகு மடமஃகப், புற்கந்தீர்ந் திவ்வுலகிற் கோளு ணரும் கோளுணர்ந்தால், தத்துவ மாய நெறிபடரு மந்நெறி, இப்பா லுலகத் திசைநிறீஇ யப்பால், உயர்ந்த வுலகம் புகும் " என்று நான்- மணிக்கடிகை கூறுவது மிங்கறியத்தக்கதாம்.

நூல்கட்குக் கருவியாவனவும் அவற்றது இன்றியமையாமையுங் கூறப்பட்டன.

தெளி:—(இ-ள்.) (அறியாதவர்) எண்ணென்ப - எண்ணென்று சொல்லுவனவும், ஏனை யெழுத்தென்ப - மற்றை யெழுத்தென்று சொல்லுவனவும், இவ்விரண்டும் - (ஆகிய) இக்கலைகளிரண்டையும், (அறிந்தார்) வாழுமுயிர்க்கு - வாழ்தற்குரிய (சிறப்புடைய) மனிதர்க்கு, கண் - கண்களாகும், என்ப - என்று சொல்லுவார், (எ - று).

எண் என்பது கணிதம்; அக்கணிதம் கருவியும் செய்கையுமென் றிரு வகையாம். அக்கருவி செய்கைகளின் தன்மையை ஏரம்ப முதலிய நூல்களிற் காண்க. எழுத்தெனவே அவ்வெழுத்தோடு ஒருமைப் பாடுடைய (எழுத்தாலாகிய) சொல்லும் அடங்கிற்று. இவ்விரு வகையான எண்ணும் எழுத்தும் தருமார்த்த காமமோட்சமென்னும் நால்வகைப் பொருளையும் ஐயந்திரிபில்லாது கண்டுணர்தற்குக் காரணமா யிருத்தலால் 'கண்' என்று சொல்லப்பட்டன. இக்குறளி லுள்ள என்ப என்னும் மூன்றனுள், முன்னுள்ள இரண்டும் அஃறிணைப் பன்மை வினையாலணையும் பெயர்; மற்றது உயர்திணைப்பன்மை யெதிர் கால வினைமுற்று. இயைபு நோக்கி அறியாதவர் அறிந்தார் என்பன வருவித்துச் சொல்லப்பட்டன. சிறப்புடைய உயிரென்று கூறியது மனிதருயிருள்ளும் அறிவு மிகுந்திருப்பதனை, இதனால் கற்கப்படு நூல் களுக்குக் காரணமாவனவும் அவற்றினது அவசியமும் சொல்லப் பட்டன. கலைகள் – நூல்கள்.

(க - து.) மக்களுக்குக் கண்போன்றிருப்பன எண்ணுமெழுத்து மாம் என்பது.

**2. Numbers and Letters are the two eyes of man.**

---

**௩. கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு**
**புண்ணுடையர் கல்லா தவர்.**

பரி:—(இ - ள்.) கண்ணுடையரென்று உயர்த்துச் சொல்லப்படுவார் கற்றவரே; மற்றைக் கல்லாதவர் முகத்தின்கண் இரண்டு புண்ணுடையர், கண்ணிலர், (எ - று).

† தேய மிடையிட்டவற்றையுங் ‡ கால மிடையிட்டவற்றையுங் காணும் ஞானக்கண்ணுடைமையின், கற்றாரைக் 'கண்ணுடையர்' என்றும், அஃதன்றி நோய் முதலியவற்றான் துன்பஞ்செய்யும் ஊனக்

---

† தேயமிடையிட்டவற்றையும் - தாமிருக்கும் தேசத்தன்றி வேறு தேசத்திருப்பனவற்றையும்.

‡ காலமிடையிட்டவற்றையும் - நிகழ்காலத்தன்றி யிறந்த காலத்தி லிருந்தனவற்றையும் எதிர்காலத்தில் இருப்பனவற்றையும்.

கண்ணே உடைமையிற் கல்லாதவரைப் 'புண்ணுடையர்' என்றுங் கூறினர்.† மேற் கண்ணன்மையுணர நின்ற ஊனக்கண்ணின் மெய்ம்மை கூறியவாற்றான், $ பொருணூல்களையுங் ‡ கருவி நூல்களையுங்கற்றாரது உயர்வும் கல்லாதாரது இழிவும் இதனாற் றொகுத்துக் கூறப்பட்டன.

தெளி :—(இ-ள்.) கண்ணுடைய ரென்பவர் - கண்ணுடைய வரென்று உயர்த்திச் சொல்லப்படுவார், கற்றோர் - கற்றவரே, கல்லாதவர் - மற்றைக் கற்றிலாதவர், முகத்து - முகத்தினிடத்து, இரண்டு புண்ணுடையர் - இரண்டு புண்களுடையவர், (கண்ணிலார்), (எ - று).

எல்லா இடங்களிலும் எல்லாக் காலங்களிலும் உள்ளவற்றைக் காணும் ஞானக் கண்ணுடைமையால் கற்றோரைக் 'கண்ணுடையர்' என்றும், அந்த ஞானக்கண் இல்லாமல் நோய் முதலாயவற்றால் துன்பஞ்செய்யும் ஊன (மாமிச)க் கண்ணே யுடைமையால் கல்லாத வரைப் 'புண்ணுடையர்' என்றும் சொல்லினர். முற்கூறிய குறளில் கண்ணல்லாமை அறியுமாறிருந்த ஊனக்கண்ணினது மெய்ம்மை யாகிய சொரூபத்தைச் சொல்லிய விதத்தினால், பொருள் நூல்களையுங் கருவி நூல்களையுங் கற்றாரது உயர்வும் கல்லாதவர்களது இழிவும் இதனால் தொகுத்துச் சொல்லப்பட்டன.

(க - து.) கற்றவர் கண்ணுடையவரும் மற்றவர் குருடருமாவ ரென்பது.

3. **The learned are said to have eyes, but the unlearned have merely two sores in their face.**

---

**ச. உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரித**
**லனைத்தே புலவர் தொழில்.**

பரி :—(இ - ள்.) யாவரையும் அவர் உவக்குமாறு தலைப்பெய்து இனி இவரை யாம் எங்ஙனங் கூடுதுமென நினையுமாறு நீங்குதலாகிய அத் தன்மைத்து கற்றறிந்தாரது தொழில், (எ - று).

* தாம் நல்வழியொழுகல் பிறர்க்குறுதி கூறலென்பன இரண்டுந் தொழிலென ஒன்று யடங்குதலின் 'அனைத்து' என்றார். அத்தன்மை-அப்பயனைத் தருந்தன்மை. நல்லொழுக்கங் காண்டலானும், தமக்கு

---

† மேற்கண்ணன்மை யுணர நின்ற - 'எண்ணென்ப' என்று மேலுள்ள குறளில் எண்ணுமெழுத்து மறியாதவரது கண்கள் கண் களல்லவென்று அறியுமாறிருந்த.

$ பொருள் நூல்கள் - தருமார்த்த காமமோட்சங்களை யுணர்த்து நூல்கள்.

‡ கருவி நூல்கள்-கணிதமும் இலக்கணமும். * தாம் என்றது கற்றறிந்தாரை.

மதுரமும் உறுதியுமாய கூற்றுக்கள் நிகழ் வெதிர்வுகளின் இன்பம் பயத்தலானும், கற்றூர்மாட்டு எல்லாரும் அன்புடையராவ ரென்பதாம். இதனாற் கற்றூரது உயர்வு வகுத்துக் கூறப்பட்டது.

தெளி :—(இ – ள்.) புலவர் – கற்றறிந்தவரது, தொழில் – தொழிலாவது, உவப்ப – (யாவரையும் அவர்) மகிழும்படி, தலைக்கூடி – சேர்ந்து, உள்ள – (இனி இவரை நாம் எவ்வாறு கூடுவோமென்று) நினைக்கும்படி, பிரிதல் – நீங்குதலாகிய, அனைத்து – அத்தன்மையதாம், (எ – று).

தாம் சன்மார்க்கத்திற் செல்லுதல் பிறர்க்கு உறுதிதருவன வற்றைக் கூறுதலென்னு மிரண்டும் தொழிலென ஒன்றாயடங்கு தலால் 'அனைத்து' என்று அஃறிணை ஒன்றன்பாற் படர்க்கை வினை முற்றாகக் கூறினர். அத்தன்மை – உவப்பத்தலைக்கூடி யுள்ளப் பிரிதலாகிய அப்பயனைத்தரும் தன்மை. சன்மார்க்கத்தி லொழுகு தலைக் காண்பதனாலும், தங்களுக்கு இனிமையும் உறுதியுமான சொற்கள் நிகழ்காலத்திலும் எதிர்காலத்திலும் இன்பத்தைத் தருதலி னாலும், கற்றூரிடத்து யாவரும் அன்புடையராவரென்பதாம். இதனால் கற்றவரது உயர்வு பிரித்துக் கூறப்பட்டது.

(க – து.) தமது சேர்க்கையால் மகிழ்ச்சியுற்ற யாவரும் இவரை யினியெவ்வாறு காண்போமென்று நினையுமாறு அவரைப் பிரிதலே கற்றறிந்தாரது செய்கையாம் என்பது.

4. It is the part of the learned to give joy to those whom they meet, and on leaving, to make them think: Oh! when shall we meet them again.

---

**ரு. உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங் கற்றூர்**
**கடையரே கல்லா தவர்.**

பரி :—(இ–ள்.) ‡ "பிற்றை நிலை முனியாது கற்றல் நன்" றுதலான், செல்வர்முன் நல்கூர்ந்தார் நிற்குமாறுபோலத் தாமும் ஆசிரியர்முன் ஏக்கற்று நின்றுங் ¶ கற்றூர் தலையாயினார் ; அந்நிலைக்கு நாணிக் கல்லாதவர் எஞ்ஞான்றும் இழிந்தாரேயாவர், (எ-று).

உடையார் இல்லாரென்பன உலகவழக்கு. ஏக்கறுதல் – ஆசை யாற்றாழ்தல். 'கடையர்' என்றதனான் அதன் † மறுதலைப்பெயர்

‡ புறநானூறு ௱அ௩. இதன்பொருள் வழிபாட்டு நிலைமையை வெறாது (வெறுக்காது) கற்றல் ஒருவற்கு அழகிது என்பது.

¶ கற்றூர் தலையாயினார் என்பது நாலடியார் "கடைநிலத்தோ ராயினுங் கற்றுணர்ந்தோரைத், தலைநிலத்து வைக்கப்படும்" என்றும் புறநானூறு "வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும், கீழ்ப்பா லொருவன் கற்பின், மேற்பா லொருவனு மவன்கட் படுமே" என்றும் கூறுவதாலு முணரப்படும். † கடையர்க்கு மறுதலைப் பெயர் தலையாயினரென்பது.

வருவிக்கப்பட்டது. பொய்யாய மானநோக்கி மெய்யாய கல்வி யிழந்தார் பின்ஞெருஞான்றும் அறிவுடையராகாமையின் 'கடையரே' என்ருர். இதஞற் கற்ருரது உயர்வுங் கல்லாதாரது இழிவுங் கூறப்பட்டன.

தெளி :—(இ-ள்) உடையார் முன் (வழிபடுதலை வெறுக்காது கற்றல் நல்லதாகலால்) செல்வர் முன்னே, இல்லார் போல்-வறியவர் (நிற்கும் விதம் போல), ஏக்கற்றும் - (தாமும் ஆசிரியர் முன்) (படிக்க வேண்டும் என்னும்) ஆசையிஞல் தாழ்ந்து நின்றும், கற்ருர்-கற்றவர், (உயர்ந்தவராவார்), கல்லாதவர்-(அவ்வழிபடுதலுக்கு வெட்கமுற்றுக் கல்லாதவர், கடையரே-(எப்போதும்) இழிந்தவரே யாவர், (எ-று).

பொருளுடையாரை உடையரென்பதும், பொருளில்லாதாரை இல்லாரென்பதும் உலகவழக்காம். ஏக்கறுதல்-ஆசையிஞல் தாழ்தல். கடையர் என்றதஞல் அதன் மறுதலைப் பெயராகிய உயர்ந்தவ ரென்பது வருவிக்கப்பட்டது. பொய்யாகிய மானத்தை நோக்கி மெய்யாகிய கல்வியை இழந்தவர் பின்ஞெரு நாளும் அறிவுடையவ ராகாமையால் 'கடையரே' என்ருர். இதஞல் கற்றவர்களது உயர்வும் கல்லாதவரது இழிவும் சொல்லப்பட்டன மறுதலை-எதிர்.

(க-து.) ஆசிரியர் முன் தாழ்ந்து நின்று கற்ருேர் உயர்ந்தவ ராவார்; மற்றவர் தாழ்ந்தவராவார் என்பது.

5. The unlearned are inferior to the learned, before whom they stand begging, as the destitute before the wealthy.



## சு. தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக் கற்றனைத் தூறு மறிவு.

பரி :—(இ-ள்.) மணலின்கட் † கேணி தோண்டிய அளவிற்ருக ஊறும்; அதுபோல மக்கட் கறிவு * கற்ற அளவிற்ருக ‡ ஊறும், (எ-று).

ஈண்டுக் கேணி யென்றது அதன்கண் நீரை. அளவிற்ருக என்றது § அதனளவுஞ் செல்ல என்றவாறு. சிறிது கற்ற துணையான் அமையாது மேன்மேற் கற்றல் வேண்டு மென்பதாம். † இஃது ஊழ் மாறுகொள்ளா வழி யாகலின், மேல் 'உண்மையறிவே மிகும்' என்றதஞேடு மலையாமையறிக.

---

† கேணி - சிறுகுளம். இது திசைச்சொல் கேணியென்பது, அதன்கணுள்ள நீருக்காதலால். இடவாகுபெயராம்.

* "தாங்கற்ற, நூலளவே யாகுமா நுண்ணறிவு" என்பது மூதுரை.

‡ ஊறும் - உண்டாகும்.

§ அதனளவும் - நீர் வெளிப்படுமளவும்.

† இஃது (மாந்தர்க்குக் கற்றனைத்தூறு மறிவு என்பது) ஊழ் மாறுகொள்ளாவழி (ஊழ் விரோதப்படாதவிடத்து) ஆகலின் மேல்

தெளி :—(இ-ள்.) மணல்-மணலினிடத்து, கேணி-கேணியானது, தொட்ட அனைத்து-தோண்டிய அளவினதாக, ஊறும்-சுரக்கும், (அது போல), மாந்தர்க்கறிவு - மனிதருக்கு அறிவானது, கற்ற அனைத்து-கற்ற அளவினதாக, ஊறும்-சுரக்கும், (எ-று).

இங்குக் கேணியென்றது அக்கேணியிலுள்ள நீரை. அளவினதாக என்றது அக்கேணியில் நீர் வெளிப்படுமளவும் தோண்டிக்கொண்டு போக என்றபடியாம். சிறிது கற்றவளவினால் கற்றது போது மென்று விடாமல் மேலும் மேலும் கற்றல் வேண்டுமென்பதாம். இக்கல்வியறிவு மிகுதல் ஊழ் மாறுகொள்ளாவிடத்தாகலால், முன்னர் 'உண்மையறிவே மிகும்' என்றதனோடு விரோதப்படாமையறிக.

(க-து.) மனிதர்க்கு அறிவு அவர் கற்ற கல்வியினளவாக வுண்டாம் என்பது.

6. Water will flow from a well in the sand in proportion to the depth to which it is dug, and knowledge will flow from a man in proportion to his learning.

---

### எ. *யாதானு நாடாமா லூராமா லென்னொருவன் சாந்துணையுங் கல்லாத வாறு.

பரி:—(இ-ள்.) கற்றவனுக்குத் தன்னாடுந் தன்னூருமேயன்றி யாதானு மொருநாடும் நாடாம், யாதானுமோரூரும் ஊராம்; இங்ஙன-மாயின், ஒருவன் தானிறக்குமளவுங் கல்லாது கழிகின்றது என் கருதி, (எ-று).

உயிரோடு சேரலிற் 'சாந்துணையும்' என்றார். பிறர் நாடுகளும் ஊர்களுந் தமபோல உற்றுப் பொருட்கொடையும் பூசையும் உவந்து செய்தற்கேதுவாகலின், கல்வி போலச் சிறந்தது பிறிதில்லை; அதனையே எப்பொழுதுஞ் செய்க வென்பதாம்.

---

(ஊழதிகாரத்தின் மூன்றாவது குறளில்) 'உண்மையறிவே மிகும்' (ஊழானாய பேதைமையுணர்வே மேற்படும்) என்றதனோடு மலையாமை (மாறுபடாமை) யறிக.

இதனால் ஊழ் (விதி) விரோதப்படாதவிடத்துக் கற்ற அளவின-தாக அறிவுண்டாகுமென்றும், அது விரோதப்பட்டவிடத்துக் கற்ற அளவினதாக அறிவுண்டாகாதென்றும் பெற்றாமென்க. மாறு கொள்ளா ஊழ் - நல்வினை என்றும், மாறுகொண்ட ஊழ் - தீவினை என்றும் கொள்க.

* மூதுரை "மன்னனுக்குத் தன்றேச மல்லாற் சிறப்பில்லை கற்றோர்க்குச் சென்றவிடமெல்லாஞ் சிறப்பு" என்று கூறுவதும், பழமொழி "ஆற்றவுங் கற்றா ரறிவுடையா ரஃதுடையார், நாற்-றிசையுஞ் செல்லாத நாடில்லை - யந்நாடு, வேற்று நாடாகா தமவேயாமாயினால், ஆற்றுணா வேண்டுவதில்" என்று கூறுவது மிங்கறியத்தக்கனவாம்.

தெளி:— (இ - ள்.) (கற்றவனுக்குத் தன்னாடும் தன்னூருமே யல்லாமல்) யாதானும் - யாதாயினு மொருநாடும், நாடாம் - நாடாகும், (யாதானும் - யாதாயினுமோரூரும்), ஊராம்-ஊராகும், (இப்படியானால்), ஒருவன் சாந்துணையும் - ஒருவன்தான் இறக்கு மளவும், கல்லாதவாறு - கல்லாமற் கழிகின்றது, என் - என்ன நினைத்து, (எ - று).

ஆல் - அசைகள். இறந்த பிறகும் கல்வி உயிரோடுசெல்லுதலால் 'சாந்துணையும்' என்றார். பிறர்நாடுகளும் ஊர்களும் தம்நாடும் தம்மூரும் போலவிருந்து பொருள் கொடுத்தலும் பூசையும் மகிழ்ந்து செய்வதற்குக் காரணமாகலால், கல்விபோலச் சிறந்தது வேறொன்று இல்லை, அக்கல்வியையே எப்போதும் கற்கவேண்டும் என்பதாம்.

(க - து.) எவ்விடத்துஞ் சிறப்பைத்தருவது கல்வியாயிருத்தலின், அதனையொருவன் சாகுமளவுங் கற்காமலிருப்பது பெருமடமையாம் என்பது.

7. How is it that anyone can remain without learning even until his death, when to the learned man every country is his own country, and every town his own town.

---

அ. ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து.

பரி:—(இ-ள்.) ஒருவனுக்குத் தானொரு பிறப்பின்கட் கற்ற கல்வி எழுபிறப்பினுஞ் சென்று உதவுதலை யுடைத்து. (எ-று).

* வினைகள்போல உயிரின்கட்கிடந்து அதுபுக்குழிப் புகுமாகலின் 'எழுமையு மேமாப் புடைத்து' என்றார். § எழுமை மேலே கூறப் பட்டது. உதவுதல் - நன்னெறிக்கண் உய்த்தல்.

தெளி:—(இ-ள்.) ஒருவற்கு-ஒருவனுக்கு, தான்-, ஒருமைக்கண்-ஒரு பிறப்பினிடத்து. கற்றகல்வி-கற்ற கல்வியானது. எழுமையும்-ஏழு பிறப்பிலும், ஏமாப்பு - (போய்) உதவுதலை, உடைத்து-உடையதாம்.

கல்வியானது இருவினைகள்போல உயிரினிடத்துப்பொருந்தி அவ் வுயிர் சென்றவிடத்துச் செல்லுமாகலால் 'எழுமையுமேமாப்புடைத்து'

---

* நல்வினை தீவினைகளின் காரியமாகிய தருமாதருமங்கள் உயிரி னிடத்து (உயிர்க்குத் தடையாயுள்ள அந்தக் கரணத்திடத்து) அநுற் பூதமாய் (வெளிப்பாடின்றி) இருப்பது போலக் கல்வியறிவின் சம்ஸ் காரமும் உயிரினிடத்திருக்குமென்பதிங் குணரத்தக்கதாம்.

§ எழுமைமேலே கூறப்பட்டது-எழுபிறப்பின்வகை செய்ந்நன்றி யறித லதிகாரம் எ-வது குறளினுரையிற் சொல்லப்பட்டது என்பது. எழுவகைப் பிறப்பு-தேவர், மனிதர், விலங்கு (மிருகம்), பறவை, ஊர்வன (தவழ்வன), நீர்வாழ்வன, தாவரம் (மரமுதலியன) என்பனவாம்.

*என்றார். ஏழுபிறப்பின்வகை முன்னே சொல்லப்பட்டது. (தான் கற்ற கல்வி) உதவுதல்-நல்வழியில் சேர்த்தல்.*

(கு - து.) *ஒருவன் ஒருபிறப்பிற் கற்ற கல்வி அவனுக்கு எழுபிறப்பிலு முதவியாம் என்பது.*

8. The learning, which a man has acquired in one birth will yield him pleasure during seven births.

---

**கூ. தாமின் புறுவ துலகின் புறக்கண்டு**
**காமுறுவர் கற்றறிந் தார்.**

**பரி: -(இ-ள்.) தாமின்புறுவதற்கு ஏதுவாகிய கல்விக்கு உலகமின் புறுதலால், அச்சிறப்பு நோக்கிக் கற்றறிந்தார் பின்னும் அதனையே விரும்புவர், (எ-று).**

** தாம் இன்புறுதலாவது † நிகழ்வின்கட் () சொற்பொருளின் சுவை நுகர்வானும், புகழ் பொருள் பூசை பெறுதலானும், $ எதிர் வின்கண் அறம் வீடு பயத்தலானும், ¶ அதனன் இடையறாத இன்ப மெய்துதல். உலகின்புறுதலாவது இம்மிக்காரோடு தலைப்பெய்து ‡ அறியாதன வெல்லாம் அறியப்பெற்றே மென்றும், [] யாண்டு*

---

** தாம் என்றது - கற்றறிந்தாரை. † கற்கும்போது.*

*()(1) சொல்லில் தொடைமுதலியவற்றி னமைப்புப்பற்றி வருமின்பம் சொற்சுவையாம். (2) பொருளில் தன்மை உவமை முதலியவற்றினமைப்புப்பற்றி வருமின்பம் பொருட்சுவையாம். $ கற்றபிறகு.*

*¶ அதனன்-நுகர்தல் பெறுதல் பயத்தலென்னுங் காரணத்தினல்.*

*‡ அறியாதன வெல்லாம் அறியப் பெற்றேம்—அறிதற் கருமையான யோகாப்பியாச முதலிய விஷயங்களையெல்லாம் தெரியப் பெற்றேம்.*

*[]யாண்டு பலவாக நரையில மாயினேம்- (யோகப்பியாசத்தை யப்பியசிக்கும் வகையை நன்கு தெரிந்துகொண்டதனல் நமக்கு) வருஷம் பலவாகவும் (நரைத்தற்குரிய வயதுவந்தும்) நரைத்தலில்லாம லிருக்கிறேம். விசாரசாகரம் 5-வது தரங்கத்தில் "பிந்து எவரிடத் ததிகமாகவுண்டோ அவரது சரீரத்தில் அழகுங் காந்தியு முண்டாம். பிந்துவே சரீரத்தில் விளக்கமானது. பிந்து நசித்தால் சரீரமும் மனமும் நசிக்கின்றன. எவனுக்குப் பிந்து ஒருபோதும் நாசமடைவதில்லையோ அவனது சரீரம் நரையின்றி விளங்கும்" என்று கூறுவதும், திருமந்திரம் "அஞ்ஞனம் போன்றுடலை யறு மந்தியில், வஞ்சக வாத மறுமத்தியானத்திற், செஞ்சிறு காலையிற் செய்திடிற் பித்தறும், நஞ்சறச் சொன்னேம் நரைதிரை நாசமே", "கரையருகே நின்ற கான லுவரி வரைவரை யென்பர் மதியிலாமாந்தர், நுரைதிரை நீக்கி நுகரவல் லார்க்கு, நரைதிரை மாறு நமனுமங் கில்லையே" என்று கூறுவது மிங்குணர்தற்பாலனவாம். புறநானூறு " யாண்டு பலவாக*

பலவாக நரையில மாயினே மென்றும் உவத்தல். செல்வமாயின், ஈட்டல் காத்தல் இழத்தலென்றிவற்றாற் றுன்புறுதலும், பலரையும் பகையாக்கலும் உடைத்தெனை அறிந்து அதனைக் காமுறாமையிற் 'கற்றறிந்தார்' என்றும், (கரும்பு அயிறற்குக் கூலிபோலத் தாமின் புறுதற்கு உலகின்புறுதல் பிறவாற்றான் இன்மையின் அதனையே காமுறுவர்') என்றுங் கூறினார்.

தெளி:—(இ-ள்.) தாம் —, இன்புறுவது - இன்பமடைவதற்குக் காரணமாகிய கல்விக்கு, உலகு - உலகமானது, இன்புற - இன்ப மடைதலால், கண்டு - (அச்சிறப்பு) நோக்கி, கற்றறிந்தார் - கற்றறிந் தவர்கள், காமுறுவர் - (பின்னுங் அக்கல்வியையே) விரும்புவார், (எ - று).

தாம் இன்புறுதலாவது (கல்வியால்) நிகழ்காலத்தில் சொற் பொருள்களின் சுவையை யனுபவித்தலாலும், புகழும் பொருளும் பூசையும் பெறுதலாலும் எதிர்காலத்தில் (கல்வி) அறத்தையும் வீட்டையுந் தருதலாலும், அதனால் இடையறாத இன்பத்தை அடைதல். உலகு இன்புறுவதாவது இப்பெரியவரோடு கூடி அறியாத வற்றை யெல்லாம் அறியப்பெற்றோமென்றும். வருஷங்கள் பலவாக நரையில்லாம லாயினோமென்றும் மகிழ்தல். செல்வமானால், (அச்செல்வத்தை) சம்பாதித்தல் காப்பாற்றல் இழத்தல் என்கின்ற இவற்றால் துன்பமடைதலும், (செல்வம்) பலரையும் பகையாக்கலும் உடையது எனத்தெரிந்து அச்செல்வத்தை விரும்பாமையின் 'கற் றறிந்தார்' என்றும், கரும்பு தின்பதற்குக் கூலி பெறுவது போலத் தாம் இன்பமடைவதற்கு உலகமின்பமடைவது மற்றொரு வழியால் இல்லாமையால் அக்கல்வியையே 'காமுறுவர்' என்றும் சொல்லினர்.

(கூ - து.) கற்றவர் தாங்களின்பமடையுங் கல்விக்கு உலகத்தா ரின்பமடைதலைக் கண்டு அதனையே மேலுமேலும் விரும்புவர்.

9. The learned will long for more learning, when they see that while it gives pleasure to themselves, the world also derives pleasure from it.

---

கO. $ கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றை யவை.

---

நரையில வாகுதல். யாங்கா கியரென வினவுதிராயின், மாண்டவென் மனைவியொடு மக்களு நிரம்பினர், யான்கண் டனையரென் னிளையரும் வேந்தனும், அல்லவை செய்யான் காக்கு மதன்றலை, யான்றவிந் தடங்கிய கொள்கைச் சான்றோர் பலர்யான் வாழு மூரே" என்று கூறுவது மிங்கறியத்தக்கதாம்.

$ இலக்கணக்கொத்து "சூத்திரஞ் சில சில நோக்குதற் கரிதேல்" என்னும் சூத்திரவுரையில் "கலித்தொகையின் ஓர் காரணநோக்கி நிதிப்பொருளைக் கேடில்விழுச் செல்வம் என்றார். இவ்வடை (கேடில் விழு என்னும் அடை) கல்விக்குரித்தன்றிப் பிறவற்றிற்கு முரித்தோ

பரி:—(இ - ள்.) ஒருவனுக்கு அழிவில்லாத சீரிய செல்வமாவது கல்வி ; அஃதொழிந்தமணியும் பொன்னுமுதலாயின் செல்வமல்ல, (எ-று).

அழிவின்மையாவது * தாயத்தார், கள்வர், வலியர், அரசரென்றிவராற் கொள்ளப்படாமையும், $ வழிபட்டார்க்குக் கொடுத்துழிக் குறையாமையுமாம். சீர்மை தக்கார்கண்ணே நிற்றல். மணி பொன் முதலியவற்றிற்கு ‡ இவ்விரண்டும் இன்மையின், அவற்றை 'மாடல்ல' என்றார். இவையைந்து பாட்டானுங் கல்வியது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்.) ஒருவற்கு - ஒருவனுக்கு, கேடில் - அழிவில்லாத, விழு - சிறந்த, செல்வம் - செல்வமாவது, கல்வி - வித்தையாம், மற்றையவை - அது நீங்கலாகிய மணியும் பொன்னும் முதலானவை, மாடல்ல - செல்வமல்ல, (எ - று).

(கல்விச் செல்வத்திற்கு) அழிவில்லாமையாவது பங்காளிகள், கள்வர், வலியவர், அரசர் என்று சொல்லப்படும் இவர்களால் கொள்ளப்படாமையும், வழிபட்டவர்க்குக் கொடுத்தவிடத்துக் குறையாமையுமாம். சிறப்பு-யோக்கியரிடத்தே நிற்றல். மணி பொன் முதலாயினவற்றிற்கு இவ்விரண்டும் இல்லாமையால் அவற்றை 'மாடல்ல' என்றார். இவை ஐந்து பாட்டாலும் கல்வியது சிறப்புச் சொல்லப்பட்டது.

(கு - து.) ஒருவனுக் கழியாத செல்வம் கல்வியன்றி மற்றையன வல்ல என்பது.

10. Learning is the true imperishable riches; all other things are not riches.

---

## மூன்றும் அதிகாரம்

## கல்லாமை—On the neglect of learning

பரி:—அஃதாவது கற்றலைச் செய்யாமை; என்றது, அதனின்ஆய இழிபினை. கல்விச்சிறப்பு ¶ மேல் விதிமுகத்தாற் கூறியதுணையான் முற்றுப் பெறுமை நோக்கி, எதிர்மறை முகத்தானும் கூறுகின்றதாகலின், இது கல்வியின்பின் வைக்கப்பட்டது.

---

வென்பாரை நோக்கி, வழு வமைத்தார் நச்சினார்க்கினியார்" என்று கூறுகின்றது. இதனால் கேடில்விழு என்னும் விசேஷணம் கல்விக்கன்றிப் பிறவற்றிற் கின்றென்பது பெற்றும்.

* நாலடியார் " வைப்புழிக் கோட்படா வாய்த்தீயிற் கேடில்லை, மிக்க சிறப்பி னரசர் செறின்வவ்வார் " என்று கூறுகின்றது. $ கற்குமாறு வழிபாடு செய்கின்றவர்க்கு.

‡ இவ்விரண்டும் - தாயத்தார் முதலியவர்களால் கொள்ளப்படாமையும் கொடுத்துழிக் குறையாமையும்.

† மேல் - கல்வியதிகாரத்தில்.

தெளி :— அஃதாவது கற்றலைச் செய்யாமை; கற்றலைச் செய்யாமையென்றது, அக்கற்றலைச் செய்யாமையினாலாகிய இழிவை. கல்வியது சிறப்பை முன்னர் உடன்பாட்டு வாயிலாகச் சொல்லிய வளவால் முடிவுபெறுமையை நோக்கி (கல்லாமையென) எதிர்மறை வாயிலாகவுஞ் சொல்லுகின்றதாகலால், இது (கல்லாமை) கல்வியின் பின் வைக்கப்பட்டது.

**க. அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய**
**நூலின்றிக் கோட்டி கொளல்.**

பரி :—(இ-ள்.) அரங்கினை யிழையாது வட்டாடினாற் போலும், தான் நிரம்புதற்கேதுவாகிய நூல்களைக் கல்லாது ஒருவன் அவையின்கண் ஒன்றனைச் சொல்லுதல், (எ-று).

அரங்கு- ¶வகுத்த தானம். வட்டாடல் – †உண்டையுருட்டல். * இவை $"கட்டளையன்ன வட்டரங்கிழைத்து, கல்லாச் சிறாஅர் நெல்லி வட்டாடும்" என்பதனானறிக. நிரம்புதல் – அறியவேண்டு வனவெல்லா மறிதல். §கோட்டி யென்பது ஈண்டாகுபெயர்; ‡"புல்லாவெழுத்திற் பொருளில் வறுங்கோட்டி" என்புழிப்போல. சொல்லும் பொருளும் நெறிப்படாவென்பதாம்.

தெளி :— (இ-ள்.) நிரம்பிய – (தான்) நிரம்புதற்கு ஏதுவாகிய, நூல் – நூல்களை, இன்றி – கற்றலின்றி, (ஒருவன்) கோட்டிகொளல் – சபையினிடத்து (ஒன்றைச்) சொல்லுதல், அரங்கு – வகுப்பிடத்தை, இன்றி – ஏற்படுத்தாது, வட்டாடியற்று - உண்டையுருட்டினாற் போலும், (எ-று).

---

¶ வகுத்த தானம் - சூதாடுதற்கு வகுத்த அறை (வீடு)

† உண்டை - சூதாடு கருவி

* இவை - அரங்கு (வகுத்த தானம்), வட்டாடல் (உண்டை உருட்டல்).

$ நற்றிணை - ௩. இதன் பொருள்: அரசனது கட்டளை தவறுமை போல (உருட்டிய) உண்டை (சென்று நிற்றற்குரிய) வகுப்பிடத்தை ஏற்படுத்திப் படியாத சிறு பிள்ளைகள் நெல்லிக்காயைச் (சூதாடுதற்குரிய) உண்டையாகக் கொண்டு விளையாடும் என்பது. இச்செய்யுளில் அரங்கு என்பது வகுத்த தானம் (இடம்) என்றும், வட்டு என்பது உண்டையென்றும் பொருள்பட்டவாறறிக.

§ கோட்டி - அவை (சபை). அஃது அங்கு நிகழும் சொல்லை யுணர்த்தலின் இடவாகுபெயராம்.

‡ நாலடியார் மேன்மக்கள், (5) இதன்பொருள் : இலக்கணத்தினமைவு பொருந்தாத பொருள் விசேடமில்லாத பயனற்ற சபை என்பது. புல்லாத கோட்டி, பொருளில் கோட்டி என்றியைத்துக் கொள்க. இங்குக் கோட்டி (சபை) என்பது அவ்விடத்து நிகழும் சொல்லையுணர்த்துதலறிக.

*நிரம்புதல் - அறியவேண்டுவனவற்றை யெல்லாம் அறிதல். கோட்டியென்பதிங்காகுபெயர். நிரம்பிய நூலறிவில்லான் சபையில் ஒன்றைச் சொல்லின், அது சொல்லும் பொருளும் ஒருவழிப்படாமற்போமென்பதாம்.*

*(க-து.) கல்வியறிவில்லாதவன் சபையிற்பேசுதல் ஒழுங்கில்லா தொழியும் என்பது.*

**1. To speak in an assembly of the learned without fullness of knowledge, is like playing at chess on a board without squares.**

---

**உ. *கல்லாதான் சொற்கா முறுதன் முலையிரண்டு**
**மில்லாதாள் பெண்காமுற் றற்று.**

பரி :—(இ-ள்.) கல்வியில்லாதானொருவன் அவையின் கண் ஒன்று சொல்லுதலை அவாவுதல் இயல்பாகவே முலையிரண்டும் இல்லாதா ளொருத்தி பெண்மையை அவாவினாற்போலும், (எ-று).

*+ இனைத்தென அறிந்த சினையாகலின் தொகையொடு முற்றும்மை கொடுத்தார். சிறிதும் இல்லாதா ளென்பதாம். † அவாவியவழிக் கடை போகாது, போகினும் நகை விளைக்கு மென்பதாயிற்று.*

தெளி :—(இ-ள்.) *கல்லாதான் - கல்வியறிவில்லாதவனொருவன், சொல் – (சபையினிடத்து ஒன்று) சொல்லுதலை, காமுறுதல் – விரும்புதல், முலையிரண்டும் – (இயல்பாகவே) இரண்டு முலைகளும், இல்லாதாள் – இல்லாதவ ளொருத்தி, பெண் – பெண்மையை, காமுற்றற்று – விரும்பினாற்போலும், (எ-று).*

---

* "கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி, தானுமதுவாகப் பாவித்து, — தானுந்தன், பொல்லாச் சிறகைவிரித் தாடினாற் போலுமே, கல்லாதான் கற்ற கவி" என்பதுமிங்கறியத்தக்கதாம்.

+ முலையென்பது இவ்வளவினது (இரண்டு) என்று அறிந்த சினைப் பொருளாதலால், இரண்டென்னும் தொகையுடன் முற்றும்மை கொடுத்து 'முலையிரண்டும்' என்று கூறப்பட்டது. "கண்ணிரண்டும் குருடு", "காலிரண்டும் நொண்டி" என்றற்றொடக்கத்தனவாக வரும் பிரயோகத்தாலும் இது நன்கு விளங்கும். "இனைத்தென வறிந்த சினைமுதற் கிளவிக்கு, வினைப்படு தொகுதியி னும்மை வேண்டும்" என்பது தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம்.

† முலையிரண்டும் சிறிதுமில்லாத பேடி பெண்தன்மையை விரும்பிய விடத்து அது முடிவுபெறாது போம்; முடிவுபெற்றாலும் அஃது இறுதியில் சிரிப்பையுண்டாக்கும் ; அதுபோல, கல்வி யறிவு சிறிதுமில்லாதவன் சபையில் ஒன்றைச் சொல்லியவிடத்து, அது முடிவுபெறாதுபோம்; முடிவுபெற்றாலும் அஃது இறுதியில் சிரிப்பையுண்டாக்குமென்பதாம்.

முலையிரண்டும் என்றவும்மை இனத்தென் றறிபொருளில் வந்த முற்றும்மை. முலையிரண்டு மில்லாதாள் - முலை சிறிது மில்லாத வளென்பதாம். (கல்லாதான் சபையில் ஒன்றைச் சொல்லுதலை) விரும்பிய விடத்து (அது) முடிவுபெருது, முடிவுபெற்ருலும் நகையை யுண்டாக்கு மென்பதாம்.

(க - து.) கல்வி யறிவில்லாதவன் சபையிலொன்றைச் சொல்லின் அஃது அவனுக் கவமானத்தை யுண்டாக்கும் என்பது.

2. The desire of the unlearned to speak in an assembly, is like a woman without breasts desiring the enjoyment of womanhood.

---

### ந. கல்லா தவரு நனிநல்லர் கற்ருர்முற்
### சொல்லா திருக்கப் பெறின்.

பரி:—(இ-ள்.) † கல்லாதாரும் மிக நல்லவராவர் தாமே தம்மை யறிந்து கற்ருர் அவையின்கண் ஒன்றனையுஞ் சொல்லாதிருத்தல் கூடு மாயின், (எ-று).

உம்மை இழிவு சிறப்பும்மை. ‡ தம்மைத்தாம் அறியாமையின் $ அது கூடாதென்பார் * 'பெறின்' என்றும், § கூடின் ஆண்டுத் தம்மை வெளிப்படுத்தாமையானும், பின்கல்வியை விரும்புவராக லானும் 'நனிநல்லர்' என்றும் கூறினர். இவை மூன்று பாட்டானும் கல்லாதார் அவைக்கட் சொல்லுதற் குரியர் அன்மை கூறப்பட்டது.

தெளி:- (இ - ள் ) கல்லாதவரும் - படிக்காதவர்களும், நனி நல்லர்-மிகவும் நல்லவராவார், (தாமே தம்மையறிந்து), கற்ருர்முன்-கற்றோர் சபையிடத்து, சொல்லாதிருக்கப் பெறின் — (ஒன்றையும்) சொல்லாமலிருத்தல் கூடுமாஞல், (எ-று).

கல்லாதவரும் என்ற உம்மை இழிவு சிறப்பும்மை. (கல்லாதவர்) தம்மைத்தா மறியாமையால் அப்படியிருத்தல் கூடாதென்பார் 'பெறின்' என்றும், கூடுமாஞல் அங்குத் தம்மை வெளிப்படுத்தாமை யாலும், பின்பு கல்வியை விரும்புவாராகலாலும் 'நனிநல்லர்' என்றும் சொல்லினர். இவை மூன்றுபாட்டாலும் கல்லாதவர் சபை யினிடத்துப் பேசுதற்கு உரியவரல்லரென்பது சொல்லப்பட்டது.

---

† ''கல்லாது முதிர்ந்தவன் கண்ணில்லா நெஞ்சம்போற்
புல்லிருள் பரத்தரூஉம் புலம்புகொண் மருண்மாலை'' என்று கலித்தொகை கூறுவதிங்கு நன்குணர்தற் பாலதாம்.

‡ தம்மைத்தாம் அறியாமையின் - கல்லாதவர் தமக்குக் கல்வி யறிவில்லாமையைத் தாம் அறியாதிருத்தலால்.

$ அது - சபையில் ஒன்றையுஞ் சொல்லாதிருத்தல்.

* பெறின் என்பது பெறுதலின் அருமையை யுணர்த்தி நின்றது.

§ கூடின் - சபையில் ஒன்றையுஞ் சொல்லாதிருத்தல் கூடுமாஞல்.

(க-து.) கற்றூரது சபையில் யாதொன்றையும் பேசா தடங்கி யிருக்குங் கல்வியறிவில்லாதவர் மிகவும் நல்லவராவர் என்பது.

3. The unlearned also are very excellent men; if they know how to keep silence before the learned.

---

**ச. கல்லாதா ளொட்பங் கழியநன் ருயினுங்**
**கொள்ளா ரறிவுடை யார்.**

பரி:—(இ-ள்.) கல்லாதவனது ஒண்மை ஒரோவழி மிக நன்ருயிருப் பினும் அறிவுடையார் *அதனை ஒண்மையாகக் கொள்ளார், (எ-று).

ஒண்மை – அறிவுடைமை. அது நன்ருகாது; ஆயிற்ருயினும் † ஏரலெழுத்துப் போல்வதோர் விழுக்காடாகலின், நிலைபெற்ற நூலறிவுடையார் அதனை மதியாரென்பதாம்.

தெளி:—(இ-ள்.) கல்லாதான் – கல்லாதவனது, ஒட்பம் – அறிவுடைமையானது, கழியநன்ருயினும் – (ஒரோவிடத்து) மிக நன்ரு யிருப்பினும், அறிவுடையார் – விவேகமுடையவர், கொள்ளார் – (அதனை அறிவுடைமையாகக்) கொள்ளமாட்டார், (எ-று).

கல்லாதவனது அறிவுடைமை நன்ருகாது; நன்ருயிற்ருயினும் (அது) ஏரலெழுத்துப்போல்வ தொருவகையுடையதாகலால், நிலை பெற்ற நூலறிவினை யுடையவர் அவ்வறிவுடைமையை மதியா ரென்பதாம்.

(க-து.) கல்வியறிவில்லாதவனது அறிவுடைமை ஒரோவிடத்து நன்ருக விருப்பினும், அதனைக் கல்வியறிவுடையார் மதியார்.

4. Although the knowledge of an unlearned man may be very good at times, the wise will not accept it for true knowledge.

---

**ரு. £ கல்லா வொருவன் றகைமை தலைப்பெய்து**
**சொல்லாடச் சோர்வு படும்.**

---

* அதனை – ஒண்மையென்னும் அறிவுடைமையை.

† ஏரல்–நத்தை. ஏரலெழுத்தாவது நத்தை மணலிற் செல்லும்போது தற்செயலாகத் தோன்று மெழுத்தாம். ஏர லெழுத்துப் போல்வதென்பதனை வடநூலார் குணாட்சர நியாய மென்பர். கல்லாதாளொட்பம் ஏரலெழுத்துப்போல்வதாகலின், அதனை அறிவுடையார் கொள்ளாரென்பதாம்.

"நீர்மேலெழுத்துப் போல்வதோர்" என்றும் பாடமுண்டு. இப்பாடத்திற்குக் கல்லாதான் ஒட்பம் நீர்மேலெழுதிய எழுத்துப் போல மிக விரைந்தழியுமென்று பொருளாம். "ஈரமில்லா நெஞ்சத் தார்க் கீந்த வுபகாரம், நீர்மே லெழுத்திற்கு நேர்" என்று ஔவைப் பிராட்டியார் மூதுரையிலருளியிருப்பது மிங்குணர்தற் பாலதாம்.

£ "எழுத்தறியார் கல்விப் பெருக்க மனைத்தும், எழுத்தறிவார் காணினிலையாம்" என்பது நன்னெறி.

பரி:—(இ-ள்.) நூல்களைக் கல்லாதவொருவன் யான் அறிவுடையேனெனத் தன்னை மதிக்கும் மதிப்பு ‡ அவற்றைக் கற்றவன் கண்டு உரையாடக்கெடும், (எ-று).

*கற்றவனென்பது வருவிக்கப்பட்டது. யாதானுமோர் வார்த்தை சொல்லுந்துணையுமே நிற்பது, சொல்லியவழி வழுப்படுதலின், அழிந்துவிடுமென்பதாம். இவையிரண்டு பாட்டானுங் கல்லாதாரது இயற்கையறிவின் குற்றங் கூறப்பட்டது.*

தெளி:— (இ-ள்.) கல்லாவொருவன் - (நூல்களைக்) கல்லாதவொருவன், தகைமை-(யான் அறிவுடையேனென்று தன்னை மதிக்கும்) மதிப்பானது, தலைப்பெய்து - (அவற்றைக்கற்றவன்) கண்டு, சொல்லாட - பேச, சோர்வுபடும் - கெடும், (எ-று).

'சொல்லாட' என்பதற்கேற்பக் கற்றவனென்பது வருவிக்கப்பட்டது. (கல்லாதவொருவன் யானறிவுடையேனென்று தன்னை மதிக்கும் மதிப்பானது அவன்) யாதாயினும் ஒருவார்த்தை சொல்லு மட்டுமே நிற்பது, சொல்லியவிடத்துக் குற்றப்படுதலால், அழிந்துவிடுமென்பதாம். இவை இரண்டு பாட்டாலுங் கல்லாதவரது இயற்கையறிவின் குற்றம் சொல்லப்பட்டது.

*(க-து.) கல்லாதவன் தன்னைக் கற்றவனென்று மதிக்கும் மதிப்பானது அவன் கற்றவன்முன் பேசக்கெடும் என்பதாம்.*

5. The self-conceit of an unlearned man will fade away, as soon as he speaks in an assembly of the learned.

---

**சா. உளரென்னு மாத்திரைய ரல்லாற் பயவாக்**
**களரனையர் கல்லா தவர்.**

பரி:—(இ-ள்.) கல்லாதவர் காணப்படுதலான் இலரல்லர் உளரென்று சிலர் சொல்லு மளவினராதல் அன்றித் தமக்கும் பிறர்க்கும் பயன்படாமையால் விளையாத * களர் நிலத்தோடொப்பர், (எ-று).

*களர் தானும் பேணற்பாடழிந்து உயிர்கட்கும் உணவு முதலிய உதவாதது போலத் தாமும் நன்கு மதிக்கற்பாடழிந்து பிறர்க்கும் அறிவு முதலிய உதவா ரென்பதாம். இதனாற் கல்லாதாரது பயன் படாமை கூறப்பட்டது.*

தெளி:— (இ ள்) கல்லாதவர் - கல்லாதவர்கள், (காணப்படுதலால்), உளரென்னுமாத்திரையரல்லால் - (இல்லாதவரல்லர்) உள

---

‡ அவற்றை - நூல்களை.

* களர் நிலம் - நெல் முதலியன விளைதற் குரியதாகாத நிலம்.

ரென்று (சிலர்) சொல்லும் அளவினராதலின்றி, (தமக்கும் பிறர்க்கும் பயன்படாமையால்), பயவாக்களரனையர் - விளையாத களர்நிலத்தோ டொப்பாவார், (எ-று).

களர்நிலம் தானும் விரும்பப்படுவதழிந்து உயிர்களுக்கும் உணவு முதலியவற்றை உதவாதது போன்று கல்லாதவர் தாமும் நன்கு மதிக்கப்படுவதழிந்து பிறர்க்கும் அறிவு முதலியவற்றை உதவாரென்பதாம். இதனுல் கல்லாதவரது பயன்படாமை சொல்லப்பட்டது.

(க - து.) கல்லாதவர் களர் நிலம்போலத் தமக்கும் பிறர்க்கும் பயன்படுவதிலர் என்பது.

**6. The unlearned are like worthless barren land: all that can be said of them is that they exist.**

---

**எ. நுண்மா ணுழைபுல மில்லா னெழினல
மண்மாண் புனைபாவை யற்று.**

**பரி:—(இ - ள்.) நுண்ணிதாய் மாட்சிமைப்பட்டுப் பல நூல்களினுஞ் சென்ற அறிவிலாதவனுடைய $ எழுச்சியும் அழகும் சுதையான் மாட்சிமைப்படப் புனைந்த பாவையுடைய எழுச்சியும் அழகும்போலும், (எ-று).**

அறிவிற்கு மாட்சிமையாவது பொருள்களைக் கடிதிற்காண்டலும் மறவாமையும் ‡ முதலாயின. பாவை ஆகுபெயர். ¶ "உருவின் மிக்கதோருடம்பது பெறுதலு மரிது" ஆகலான் எழினலங்களும் ஓர் பயனேயெனினும், நூலறிவில்வழிச் சிறப்பிலவென்பதாம். இதனுல் அவர் வடிவழகாற் பயனின்மை கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்.) நுண் - நுட்பமுடையதாய், மாண் - மாட்சிமைப்பட்டு நுழை - (பல நூல்களிலும்) சென்ற, புலம் - அறிவு; இல்லான் - இல்லாதவனது, எழில் - எழுச்சியும், நலம் - அழகும், மண் - சுண்ணச் சாந்தினுல், மாண் - மாட்சிமைப்பட, புனை - அலங்கரித்த, பாவை யற்று - பாவையினது எழுச்சியும் அழகும்போலும், (எ - று).

---

$ "ஒப்புமுருவும்" என்னும் தொல்காப்பியச் சூத்திரவுரையில் "ஏராவது எழுச்சி; அஃது எழுகின்ற நிலைமையென நிகழ்காலமே குறித்து நிற்கும். எழிலாவது அங்ஙனம் வளர்ந்தமைந்த பருவத்தும் இது வளர்ந்து மாறியதன்றி இன்னும் வளருமென்பது போன்று காட்டுதல்" என்றனர் நச்சினுர்க்கினியர். "இல்ல மிளமை எழில் வனப்பு" என்று நாலடியார் கூறுவது மிங்குணரத் தக்கது.

‡ முதலாயின என்றதனுல் பிறர்க்குப் போதித்தல் பயன்படும் நூல்களியற்றுதல் முதலியவற்றையுங் கொள்க.

¶ சீவக சிந்தாமணி முத்தியிலம்பகம், (154). இதன்பொருள் (நல்வினையின் கட்டளையாலே) உருவான் மிக்கதோ ருடம்பை (அம்மக்கள் யாக்கையைப்) பெறுதலுமரிது என்பது.

அறிவிற்கு மாட்சிமையாவது நூல்களின் பொருள்களை விரைவாகவுணர்தலும் மறவாமையும் முதலானவை. பாவை என்பது அதன் எழுச்சியழகுகளை யுணர்த்துதலால் பொருளாகுபெயராம். உருவினால் மிகுந்ததோ ருடம்பைப் பெறுதலும் அரிது ஆகலால் எழில் நலங்களும் ஒரு பயனேயானாலும், அவை நூலறிவில்லாதவிடத்துச் சிறப்பில்லனவா மென்பதாம். இதனால் நூலறிவில்லாதவரது வடிவழகினால் பயனில்லாமை சொல்லப்பட்டது.

(௧ - து.) நூலறிவில்லாதவனது எழுச்சியும் அழகும் சிறப்புடையனவாகா என்பது.

7. The beauty and goodness of one who is destitute of knowledge, gained by the study of great and exquisite works, is like the beauty and goodness of a painted earthen doll.

---

**அ. நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே**
**கல்லார்கட் பட்ட திரு.**

**பரி: —(இ – ள்.) கற்றார்மாட்டுநின்ற வறுமையினும் இன்னாது கல்லாதார்மாட்டு நின்ற செல்வம், (எ - று).**

இழிவுசிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. *தத்தநிலையின் அன்றி மாறி நிற்றலான் தா †மிடுக்கட்படுதலும் ‡ உலகிற்குத் துன்பஞ்செய்-

* தத்தநிலையின் அன்றி - (செல்வமும் தரித்திரமும் முறையே கற்றாரிடத்தும் கல்லாதாரிடத்தும் நிற்றலில்லாது), மாறிநிற்றலான் - (செல்வம் கல்லாதாரிடத்தும் தரித்திரம் கற்றாரிடத்தும்) மாறுபட்டு நிற்றலால், தாமிடுக்கண்படுதலும் - (செல்வமும் தரித்திரமும் துன்பப் படுதலும்), உலகிற்குத் துன்பஞ் செய்தலும் - இரண்டற்குன் - (செல்வத்திற்கும் தரித்திரத்திற்கும்), ஒக்குமாயினும் என்பது.

¶ இடுக்கண்படுதலாவது - செல்வங் கல்லாதாரிடத் திருந்து பிறர்க்குபகாரஞ் செய்தற்குரியதாகாது போதலும், தரித்திரம் கற்றாரிடத்திருந்து அவரை வருத்துவதுமா மென்க.

|| உலகிற்குத் துன்பஞ் செய்தலாவது கல்லாதவர் செல்வமுடையவரானால் அவர் அச்செல்வத்தைக்கொண்டு நியாய அநியாயமறியாது பிறர்க்குத் தீமை செய்வாரென்பதும், கற்றவர் தரித்திரமுடையவரானால் அவர் அத்தரித்திரத்தினால் உலகிற்குபகாரஞ் செய்தற்குரியவராகாது போவரென்பதுமா மென்க.

"எனைத்துணைய வேனு மிலம்பாட்டார் கல்வி, தினைத்துணையுஞ் சீர்ப்பா டிலவாம்" என்றும், "வள்ளன்மை யில்லாதான் செல்வத்தின் மற்றையோன், நல்குரவே போலும் நனிநல்ல" என்றும் நீதிநெறி விளக்கம் கூறுவது மிங்குக் கவனிக்கத்தக்கதாம்.

தலும் இரண்டற்கும் ஒக்குமாயினும், திருக் கல்லாரைக் கெடுக்க வறுமை நல்லாரைக் கெடாது நிற்றலான், () வறுமையினுந் திரு இன்னாது என்றார். இதனால் அவர் திருவின் குற்றங் கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்.) கல்லார்கண் - கல்லாதவரிடத்து, பட்ட - நின்ற, திரு - செல்வமானது, நல்லார்கண் - கற்றவரிடத்து, பட்ட - நின்ற, வறுமையின் - வறுமையினும், இன்னாது - துன்பஞ் செய்வதாம், (எ - று).

வறுமையினும் என்ற இழிவு சிறப்பும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது. செல்வம் தனக்குரிய கற்றவரையும், வறுமை தனக்குரிய கல்லாதவரையும் விட்டு மாறி நிற்றலால் தாம் இடுக்கண் படுதலும் உலகிற்குத் துன்பஞ்செய்தலும் (செல்வம், வறுமை யென்னும்) இரண்டற்கும் ஒக்குமாயினும், செல்வம் கல்லாதவரைக் கெடுக்க, வறுமை கற்றாரைக் கெடுக்காது நிற்றலால் வறுமையினும் திரு இன்னாது என்றார். இதனால் கல்லாதவரது செல்வத்தின் குற்றம் சொல்லப்பட்டது.

(க - து.) கல்லாதவரிடத்துண்டாகிய செல்வம் கற்றவரிடத் துண்டாகிய தரித்திரத்தினும் மிகக் கொடியதாம் என்பது.

8. Wealth, gained by the unlearned, will give more sorrow than the poverty which may come upon the learned.

---

**௯. $ மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்றா ரனைத்திலர் பாடு.**

**பரி:—(இ - ள்.) கல்லாதார் உயர்ந்த சாதிக்கட் பிறந்தார் ஆயினும் தாழ்ந்த சாதிக்கட் பிறந்துவைத்துங் கற்றாரது பெருமை அளவிற்றாய பெருமை யிலர், (எ - று).**

* உடலோடொழியுஞ் ¶ சாதியுயர்ச்சியினும் உயிரோடு செல்லும்

---

() வறுமையின் என்றும் பாடமுண்டு.

$ "ஆக்கு மறிவா னலது பிறப்பினால், மீக்கொ ளுயர்விழிவு வேண்டற்க" என்று நன்னெறி கூறுவதும், "நாற்பாற் குலத்தின் மேற்பா லொருவன், கற்றில னாயிற் கீழிருப் பவனே, எக்குடிப் பிறப் பினும் யாவரே யாயினும், அக்குடிக் கற்றோரை மேல்வருகென்பர், அறிவுடை யொருவனை யரசனும் விரும்பும்" என்று வெற்றிவேற்கை கூறுவது மிங்கறியத்தக்கனவாம்.

* உடம்பின்கண் கற்பிக்கப்பட்ட சாதி யுடம்பொழிந்தபோது தான் சொல்லாமலே ஒழிதலால் 'உடலோடொழியுஞ் சாதி' என்று கூறப்பட்டது.

¶ நச்சினார்க்கினியார் தொல்காப்பியம், சொல்லதிகாரம் வேற்றுமையியல் "பொருண்மை சுட்டல்" என்னுஞ் சூத்திரத்தின் விசேடவுரையில் "பொருடன்மையாவது அப்பொருள்களின் சாதித் தன்மை. ஆ - (பசு) வென்னும் பொருள் கெட்டதேனும் அவ்வாவி னது சாதித்தன்மை எக்காலத்தும் கெடாது நிற்கு மென்பது

† கல்வியுயர்ச்சி சிறப்புடைத் தென்பதாம். இதனுல் அவர் சாதியுயர்ச்சியாற் பயனின்மை கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்.) கல்லாதார் - கல்வியில்லாதவர், மேற்பிறந்தாராயினும் - உயர்ந்த சாதியில் பிறந்தாராயினும், கீழ்ப் பிறந்தும் - தாழ்ந்த சாதியில் பிறந்திருந்தும், கற்றுரனைத்து - கற்றவரது பெருமையளவினதாகிய, பாடு - பெருமை, இலர் - இல்லாதவராவார், (எ - று).

உடம்போடு ஒழியும் சாதியுயர்ச்சியிலும் உயிரோடு செல்லும் கல்வியுயர்ச்சி சிறப்புடையதென்பதாம். இதனுல் கல்லாதவரது சாதியுயர்ச்சியால் பயனில்லாமை சொல்லப்பட்டது.

(க - து.) கற்றவர் தாழ்ந்த சாதியாராயினும், அவர் யாவரினும் மேம்பட்டவராவார் என்பது.

**9.** The unlearned, though born in a high caste, are not equal in dignity to the learned, though they may have been born in a low caste.

---

**கO.** * **விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்**
**கற்றுரோ டேனை யவர்.**

பரி:— (இ - ள்.) ¶ விலங்கொடு நோக்க மக்கள் எத்துணை நன்மையுடையவர் அத்துணைத் தீமையுடையவர் விளங்கிய நூலைக் கற்றுரோடு நோக்கக் கல்லாதவர், (எ - று).

இலங்கு நூலென்பது சாதியொருமைப் பெயர். விளங்குதல் மேம்படுதல். விலங்கின் மக்கட்கேற்றமாய உணர்வு மிகுதி காணப்

---

உணர்த்துதற்கு ஆவுண்டு என்றுர்'' என்றனர். பொருள் கெட்டாலுஞ்சாதி கெடாதிருக்கு மென்பது தார்க்கிகரது கொள்கை. தருக்க சங்கிரகம் சாதிக்கிலக்கணம் "சாமானியமாவது நித்தமாய், ஒன்றுய், பலவற்றின் ஒருங்கு சேறலை யுடைய சாதி" என்று கூறுகின்றது.

† கல்வி யுயிரோடு செல்வதென்பது "ஒருமைக்கட் டான் கற்ற கல்வி யொருவற், கெழுமையு மேமாப் புடைத்து'' என்னுங் குறளாலறிக.

* விலங்கொடு மக்க ளனையர் என்ற விடத்து ஒப்பல்லாத விலங்கு (மிருகம்) ஒப்பாகச் சொல்லப்படுதலால் விலங்கு ஒப்பலொப்புப் பொருளதாயிற்று இலக்கணக் கொத்து நூலார் "கருவி கருத்தா'' என்னுஞ் சூத்திர வுரையில் "விலங்கொடு மக்க ளனையர் ஒப்பலொப்பு'' என்றனர்.

¶ விலங்கை நோக்க மக்கள் நன்மையுடையவராயும் அவ்விலங்கு தீமையுடையதாயுமிருத்தல் போன்று, கல்லாதவரை நோக்கக் கற்றவர் நன்மையுடையவராயும் அக்கல்லாதவர் தீமையுடையவராயுமிருக்கின்றுரென்பதாம். "தக்க வின்ன தகாதன வின்னவென், றொக்க வுன்னல ராயி னுயர்ந்துள, மச்சளும் விலங்கே'' என்பது இராமாயணம்.

படுவது கற்றூர்கண்ணே யாகலின், கல்லாதாரும் அவரும் ஒத்த பிறப்பினரல்லரென்பதாம். ¶ மயக்க நிரனிறை. இதனுல் அவர் மக்கட் பிறப்பாற் பயனெய்தாமை கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்.) இலங்கு நூல் - விளங்கிய நூலை, கற்றூரோடு - கற்றவரோடு, (ஒப்பிட்டு) (நோக்க), ஏனையவர் - கல்லாதவர், விலங்கொடு - மிருகங்களோடு, (ஒப்பிட்டு) (நோக்க), மக்களனையர் - மனிதர் எவ்வளவு நன்மையுடையவர் அவ்வளவு தீமையுடையவ ராவர், (எ - று).

இலங்கு நூலென்பது (வருமொழி நோக்காது பன்மைப் பொரு ளுணர்த்துதலின்) சாதி யொருமைப் பெயர். விளங்குதல் - மேம்பட்டுத் தோன்றுதல். விலங்கைப் பார்க்கிலும் மனிதர்க்கு மேலான அறிவு மிகுதி காணப்படுவது கற்றவரிடத்தே யாதலால், கல்லாதவரும் அக்கற்றவரும் சமானமான பிறப்பினரல்லரென்பதாம். இஃது எதிர் நிரனிறைப் பொருள்கோள். இதனுல் கல்லாதவர் மனிதப் பிறப்பினுல் பயனடையாமை சொல்லப்பட்டது.

(க - து.) கற்றவர் மக்களாவர்; கல்லாதவர் மிருகங்களாவர்.

*10.* As beasts by the side of men, so are other men by the side of those who are learned in celebrated works.

---

## நான்காம் அதிகாரம்

## கேள்வி:—On Hearing (Instruction)

**பரி:—அஃதாவது கேட்கப்படும் நூற் பொருள்களைக் கற்றறிந்தார் கூறக் கேட்டல்; கற்ற வழி அதனின் ஆய அறிவை வலியுறுத்தலானும், கல்லாத வழியும் அதனை உண்டாக்குதலானும் இது கல்வி கல்லாமைகளின் பின் வைக்கப்பட்டது.**

தெளி:—அஃதாவது கேட்கப்படும் நூலின் பொருள்களைக் கற்றறிந்தவர் சொல்லக் கேட்டல் கற்றவிடத்து அக்கல்வியினுலாகிய

---

¶ வரிசையாகச் சொல்லப்பட்ட பொருள்களுக்குச் சம்பந்த முள்ளவற்றை யம்முறையே சொல்லுதல் நிரனிறையாம் அதில் மாறி வருவது மயக்க நிரனிறையாம். மயக்க நிரனிறை யெனினும் எதிர் நிரனிறை யெனினும் ஒக்கும்.

விலங்கு ஏனையவர் (கல்லாதவர்), மக்கள் கற்றூர் என முறையே வையாது விலங்கு கற்றூர். மக்கள் ஏனையவர் என மாறி வைத்த மையின், இது மயக்க நிரனிறையாயிற்று கற்றூர் மக்களாவர். ஏனையவர் விலங்காவர் என்று கொள்க. "களிறுங் கந்தும் போல, நளிகடற் கூம்புங் கலனுந் தோன்றும் தோன்றன் மறந்தோர் துறைகெழு நாட்டே" என்று நன்னூல் விருத்தியுரையில் எதிர் நிரனிறைக்குக் காட்டிய செய்யுளும் இங்குக் கவனிக்கத் தக்கதாம்,

அறிவை உறுதிப்படுத்தலாலும், கல்லாதவிடத்தும் அக்கல்வியறிவை உண்டாக்குதலாலும் இது (கேள்வி) கல்வி கல்லாமைகளின் பின் வைக்கப்பட்டது.

க. * செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வஞ்
செல்வத்து ளெல்லாந் தலை.

பரி: (இ-ள்) ஒருவற்குச் சிறப்புடைய செல்வமாவது செவியான் வருஞ்செல்வம்; அச்செல்வம் பிறசெல்வங்களெல்லாவற்றினுந் தலையாக லான், (எ-று).

*செவியான் வருஞ்செல்வம் - கேள்வியான் எல்லாப்பொருளையு மறிதல். ‡ பிறசெல்வங்கள் பொருளான் வருவன; ¶அவை நிலையா வாகலானும், தும்பவிளைவின வாகலானும் இது தலையாயிற்று. $ அவற்றை ஒழித்து இதனையே செய்கவென்பது § குறிப்பெச்சம்.*

தெளி:—(இ-ள்.) (ஒருவனுக்கு) செல்வத்துட் செல்வம் - செல்வங்களுள் (சிறப்புடைய) செல்வமாவது, செவிச்செல்வம் - செவியால் வருஞ்செல்வமாம், அச்செல்வம் - அச்செல்வமானது, செல்வத்து ளெல்லாம் - பிறசெல்வங்க ளெல்லாவற்றினும், தலை - தலைமையாயதாம், (ஆதலால்), (எ-று).

*செவியால்வருஞ் செல்வம் - கேள்வியினால் நூற்பொருளெல்லாவற்றையும் அறிதல். பிறசெல்வங்கள் பொருளால் வருவன; அவை நிலையில்லாதனவாகலாலும், தும்பந்தருவன வாகலாலும் இக்கேள்விச் செல்வம் தலையாயிற்று. அவற்றைவிட்டு இக்கேள்விச் செல்வத்தையே சம்பாதிக்கவேண்டுமென்பது குறிப்பெச்சம்.*

*(க-து.) செல்வங்களுள் சிறந்த செல்வம் கேள்விச்செல்வமாம்.*

---

* *செல்வத்துட் செல்வம் - மற்றைச் செல்வங்களெல்லாம் வறுமை யாமாறு வருஞ் செல்வம். ''இன்ப மிடையறு தீண்டு மவாவென்னுந், துன்பத்துட்டுன்பங் கெடின்'' என்னுங் குறளின் விசேடவுரையில் ''துன்பத்துட்டுன்பம் ஏனைத்துன்பங்களெல்லாம் இன்பமாகவருந் துன்பம்'' என்று கூறியிருத்தலு மிங்கறிதற்பாற்றும்.*

‡ *பிறசெல்வங்கள் - உண்டி உடைமுதலியன.* ¶ *அவை - பிற செல்வங்கள்.*

$ *அவற்றையொழித்து இதனையே செய்க - பிறசெல்வங்களை யொழித்துக் கேள்வியால் வருஞ் செல்வத்தையே சம்பாதிக்கக்கடவர்.*

§ *குறிப்பாலுணரப்படுவது குறைந்து நிற்பது குறிப்பெச்சமெனமப் படும் ''தத்தங் குறிப்பி னெச்சஞ் செப்பும்'' என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தின் விசேடவுரையில் ''கற்கறிக்க நன்கட்டாள் என்றால் தீங்கட்டாளென்னுங் குறிப்புத் தோன்றிய எஞ்சு பொருளினைத்தானே கூறி நின்றது'' என்று நச்சினார்க்கினியார் கூறியது மிங்கறியத் தக்கதாம்.*

1. Wealth gained by the ear is wealth of wealth ; that wealth is the chief of all wealth.

---

உ. **செவிக்குண வில்லாத போழ்து சிறிது வயிற்றுக்கு மீயப் படும்.**

பரி:— (இ - ள்.) செவிக்குணவாகிய கேள்வி யில்லாதபொழுது வயிற்றுக்குஞ் சிறிதுணவு இடப்படும், (எ-று).

*சுவை மிகுதியும் பிற்பயத்தலும் உடைய கேள்வி யுள்ளபொழுது வெறுக்கப்படுதலான் 'இல்லாத போழ்து' என்றும், ¶பெரிதாயவழித் தேடற்றுன்பமே யன்றி நோயுங் காமமும் பெருகுதலாற் 'சிறிது' என்றும், அது தானும் பின்னிருந்து கேட்டற்பொருட்டாகலான் 'ஈயப்படும்' என்றுங் கூறினர் ‡ ஈதல் வயிற்றது இழிவுதோன்ற நின்றது. இவையிரண்டு பாட்டானும் கேள்வியது சிறப்புக் கூறப் பட்டது.*

தெளி:—(இ - ள்.) செவிக்கு - காதுக்கு உணவு - உணவாகிய கேள்வி, இல்லாதபோழ்து -இல்லாதகாலத்து, வயிற்றுக்கும் - வயிற்றினுக்கும், சிறிது - சிறிதுணவு, ஈயப்படும் – இடப்படும், (எ - று).

*மிகுந்த சுவையையும் பின்னே பயன் தருதலையுமுடைய கேள்வி உள்ளபோது வயிற்றுணவு வெறுக்கப்படுதலால் 'இல்லாதபோழ்து' என்றும், உணவு அதிகமானவிடத்து அவ்வுணவைச் சம்பாதிக்கும் துன்பமே யல்லாமல் (அவ்வுணவால்) நோயும் காமமும் அதிகரித்தலால் 'சிறிது' என்றும், அச்சிறிதுணவு கொடுத்தலும் பின்னே பிழைத்திருந்து (நூற்பொருளைத் தக்காரிடத்துக்) கேட்டற்பொருட்*

---

*¶ பெரிதாயவழி (வயிற்றிற்கு உணவு அதிகமான விடத்து)த் தேடற்றுன்பமே யன்றி (உணவிற்காகப் பொருளைத் தேடுந் துன்பமே யல்லாமல்) நோயும் காமமும் (அவ்வுணவால் வியாதியும் மாதர்பால் விருப்பமும்) பெருகுதலால் (அதிகரித்தலால்) என்பது. அதிகமாக வுண்ணுதலால் நோயும் காமமும் பெருகுமென்பது "இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்கும், கழிபே ரிரையான்க ணோய்" என்று திருக்குறளும் "துயிற்சுவையுந் தூநல்லார் தோட்சுவையு மெல்லா, மயிற்சுவையி னுகுவ" என்று நீதி நெறி விளக்கமும் கூறுவதாலு மறிதற்பாற்றும்.*

*‡ ஈதல் இழிந்தோனுக்கல்லாமல் ஒப்போனுக்கும் மிக்கோனுக்கு மின்மையின் 'வயிற்றுக்கு மீயப்படும்' என்பதன்கணுள்ள ஈதல் வயிற்றினது இழிவு தோன்றுமாறு நின்றது. வயிறு இழிவுள்ளதென்பது "ஒருநா ளுணவை யொழியென்று லொழியா யிருநாளைக் கேலென்று லேலாய் - ஒரு நாளும், என்னோ வறியா விடும்பைகூ ரென்வயிறே, உன்னோடு வாழ்தலரிது" என்று நல்வழி கூறுவதாலு மறிதற் பாற்றும். ஈதல் இழிந்தோனுக்கென்பது "ஈயென் கிளவி யிழிந்தோன் கூற்றே" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தா லறிக.*

டாகலால் ஈயப்படும் என்றும் சொல்லினர். 'ஈயப்படும்' என்றது வயிற்றினது இழிவு தோன்ற நின்றது. இவை இரண்டு பாட்டாலும் கேள்வியது சிறப்புச் சொல்லப்பட்டது.

(க - து.) கேள்வியுணவு வயிற்றுணவிலும் சிறந்தது என்பது.

**2.** When there is no food for the ear, give a little also to the stomach.

௩. *செவியுணவிற் கேள்வி யுடையா ரவியுணவி
ஞன்றாரோ டொப்பர் நிலத்து.

**பரி:—(இ - ள்.) செவியுணவாகிய கேள்வியினையுடையார் நிலத்தின் கண்ணராயினும், $ அவியுண வினையுடைய தேவரோ டொப்பர்.**

செவியுணவு - செவியானுண்ணு முணவு. ¶ அல்வழிக் கண்வந்த இன்சாரியையது னகரம் வலிந்து நின்றது † அவியுணவு - தேவர்க்கு வேள்வித் தீயிற் கொடுப்பன. அறிவான் நிறைந்தமையான் 'ஆன்றார்' என்றும், துன்பமறியாமையான்‡ 'ஆன்றாரோ டொப்பர்', என்றும் கூறினர். இதனல் அதனை யுடையாரது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி:— (இ - ள்) செவியுணவின் - செவியுணவாகிய, கேள்வி - கேள்வியினை, உடையார் - உடையவர், நிலத்து - பூவுலகத்து, (இருப்பவராயினும்), அவியுணவின் - அவியாகிய வுணவினையுடைய, ஆன்றாரோடு - தேவரோடு, ஒப்பர் - ஒப்பாவார், (எ - று).

செவியுணவு - செவியாலுண்ணும் (கேட்கும்) உணவு (நற்கேள்வி). செவியுணவின் என்பதன்கண் அல்வழிப் பொருளில் வந்த இன்சாரியை

---

* நாக்கிந்திரியத்திற் குரிய வுணவைக் காதிந்திரியத்தின் மீதேற்றிச் 'செவியுணவு' என்று கூறப்பட்டது. இஃது ஓரிந்திரியத் திற்குரிய விஷயத்தை மற்றோரிந்திரியத்தின்மீ தேற்றிக் கூறிய உபசார வழக்காம். தொல்காப்பியம், பொருளதிகாரம், பொருளியலில் "உண்டற் குரிய வல்லாப் பொருளை யுண்டன போலக் கூறலு மரபே" என்று கூறுதலு மிங்கறிதற் பாற்றும்.

$ அவி - நெய், பொரி, சமித்து முதலியன.

¶ உணவிற் கேள்வி என்பது சாரைப் பாம்பு என்பது போல இரு பெயரொட்டுப் பண்புத் தொகையா யிருத்தலால் இன் என்பது அல்வழிக்கண் வந்த சாரியையாயிற்று. அஃது உணவாகிய கேள்வியென விரியும். இன் என்னும் சாரியையிடைச் சொல்லி னீற்றுனகரம் றகரமாகத் திரிதற்கு விதியில்லாமையால் னகரம் றகரமாகத் திரிந்து வந்தது செய்யுள் விகாரமாமென்க.

† அவியாகிய வுணவு என்றும் பாடமுண்டு.

‡ தேவரோடொப்பர் என்றும் பாடமுண்டு.

யினது னகரம் றகரமாக வலித்தல் விகாரம் பெற்று நின்றது. அவி யுணவு தேவர்களுக்கு யாகாக்கினியிற் கொடுக்கும் நெய் முதலியன. அறிவால் நிறைந்தமையால் 'ஆன்றார்' என்றும், துன்பமறியாமையால் 'ஆன்றாரோ டொப்பர்' என்றும் சொல்லினார். இதனால் கேள்வியை யுடையவரது சிறப்புச் சொல்லப்பட்டது.

(க – து.) கேள்வியறிவுடையவர் தேவருக் கொப்பாவர்.

3. Those who in this world enjoy instruction which is the food of the ear, are equal to the Gods who enjoy the food of the sacrifice.

---

ச. * கற்றில னாயினுங் கேட்க வஃதொருவற்
கொற்கத்தி னூற்றாந் துணை.

பரி:—(இ - ள்.) † உறுதி நூல்களைத் தான் கற்றிலனாயினும், அவற்றின் பொருள்களைக் கற்றறிந்தார் சொல்லக் கேட்க. அக்கேள்வி ஒருவனுக்குத் தளர்ச்சிவந்துழிப் பற்றுக் கோடாந் துணையாகலான், (எ-று).

‡ உம்மை கற்க வேண்டுமென்பதுபட நின்றது. தளர்ச்சி - வறுமையானுதல் அறிவின்மையானுதல் ¶ இடுக்கட்பட்டுழி மனந் தளர்தல். அதனைக் கேள்வியின் ஆய அறிவு நீக்குமாகலின், 'ஊற்றாந் துணை' என்றார். $ ஊன்றென்னு மாகுபெயரின் னகரம் திரிந்து நின்றது.

---

* "உணற்கினிய" என்னுஞ் செய்யுளில் பழமொழி "கற்றலிற் கேட்டலே நன்று" என்று கூறுகின்றது.

† உறுதி நூல்கள் – புருஷார்த்தங்களைக் கூறும் சாஸ்திரங்கள்.

‡ கற்றிலனாயினும் என்றவும்மை "மறப்பினும்" என்பதன் உம்மையைப் போன்று *எதிர்மறைப் பொருளதாய் நின்றது. "மறப்பினு மோத்துக் கொளலாகும்" என்னுங் குறளின் விசேடவுரையில் "மறந்தவழி இழிகுலத்தனு மாகலின், மறக்கலாகா தென்னுங் கருத்தான் மறப்பினும் என்றார்" என்று கூறியிருத்தலு மிங்கறியத்தக்கதாம்.

¶ "ஆங்கவையொருபால்" என்னுந் தொல்காப்பியச் சூத்திர விசேடவுரையில் "இடுக்கண் என்பது மலர்ந்த நோக்கமின்றி மையல் நோக்கம்பட வரும் இரக்கம்" என்றனர் நச்சினார்க்கினியார்.

$ ஊன்று என்னும் முதனிலைத் தொழிலாகு பெயரின் னகரம் புணர்ச்சி விகாரத்தால் றகரமாகத் திரிந்து ஊற்று என நின்றது.

ஊன்றுத (நாட்டுத) லென்னும் பொருளை யுணர்த்தும் ஊற்று என்னும் முதனிலை திரிந்த தொழிற் பெயர் அதனையுடைய கோலை உணர்த்துதலால் முதனிலை திரிந்த தொழிலாகு பெயராம்.

தெளி:—(இ - ள்.) கற்றிலனாயினும் - (உறுதி பயக்கும் நூல்களைத் தான்) கல்லாதவனானாலும், கேட்க - (அந்நூல்களின் பொருள்களைக் கற்றறிந்தவர் சொல்லக்) கேட்கக் கடவன், அஃது - அக்கேள்வியானது, ஒருவற்கு - ஒருவனுக்கு, ஒற்கத்தின் - தளர்ச்சிவந்தவிடத்து, ஊற்றாந்துணை - பற்றுக்கோடாந் துணையாம், (ஆதலால்), (எ - று).

'கற்றிலனாயினும்' என்ற உம்மை கற்கவேண்டுமென்பது தோன்ற நின்றது. தளர்ச்சி - வறுமையாலாவது அறிவில்லாமையாலாவது துன்பமடைந்த விடத்து மனந்தளர்தல். அத்தளர்ச்சியைக் கேள்வியாலாகிய அறிவு நீக்குமாதலால் 'ஊற்றாந்துணை' என்றார். ஊன்று என்பது ஊற்று எனத்திரிந்து ஆகுபெயராய் நின்றது.

(க - து.) ஒருவன் கல்லாதவனா யிருப்பினும், அவன் உறுதிப் பொருள்களைக் கற்றறிந்தவர் சொல்லக் கேட்கவேண்டும்; அக்கேள்வி அவனுக்குத் துன்ப நேர்ந்தவிடத்துப் பேருதவி செய்யும்.

**4. Although a man be without learning, let him listen to the teaching of the learned; that will be to him a staff in adversity.**

---

**ரு. இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே**
**யொழுக்க முடையார்வாய்ச் சொல்.**

**பரி:—(இ - ள்) வழுக்குதலை யுடைய சேற்று நிலத்து இயங்குவார்க்கு ஊன்றுகோல்போலுதவும்; ‡ காவற்சாகாடு உகைப்பார்க்கு ஒழுக்கமுடையார் வாயிற் சொற்கள், (எ - று).**

¶ அவாய் நிலையான் வந்த உவமையடையாற் பொருளடை

---

‡ "காவற் சாகா டுகைப்போன் மாணின், ஊறின் றாகி யாறினிது படுமே" என்பது புறநானூறு.

¶ ஒருபதம் தன்னை முடிப்பதொருபதம் இல்லாதவிடத்து முடிவுபெறாது நிற்றலென்னும் அவாய் நிலையால் 'இழுக்கலுடையுழி யூற்றுக்கோல்' என்பதில் வந்த இயங்குவார்க்கு என்னும் உவமையடையினால் 'ஒழுக்கமுடையார்வாய்ச் சொல்' என்பதில் காவற்சாகாடு உகைப்பார்க்கு என்னும் பொருளடை வருவிக்கப்பட்டது.

உவமான மெனினும் உவமையெனினும் ஒக்கும்; உவமேய மெனினும் பொருளெனினும் ஒக்கும். 'இழுக்கலுடையுழி யூற்றுக்கோல்' என்னும் உவமானத்திற்கு இயங்குவார்க்கு என்பது அடை (விசேஷணம்) என்றும், 'ஒழுக்க முடையார்வாய்ச் சொல்' என்னும் உவமேயத்திற்குக் காவற்சாகாடு உகைப்பார்க்கு என்பது அடையென்று மறிக.

வருவிக்கப்பட்டது. * ஊற்றுக்கோல்போ லுதவுதல் - § தளர்ந்துழி அதனைநீக்குதல். ‡ கல்வியுடையரேனும் ஒழுக்க மில்லாதார் அறிவில ராகலின், அவர் வாய்ச்சொற் கேட்கப்படாதென்பது தோன்ற ' ஒழுக்க முடையார் வாய்ச்சொல் ' என்முர். வாயென்பது தீச்சொ லறியாமையாகிய சிறப்புணர நின்றது. ¶ அவற்றைக் கேட்க வென்பது குறிப்பெச்சம்.

தெளி :—(இ-ள்.) இழுக்கலுடையுழி - வழுக்குதலை யுடைய சேற்று நிலத்தில், ஊற்றுக்கோலற்று - (நடப்பவர்க்கு) ஊன்று கோல்போ லுதவிசெய்யும், ஒழுக்கமுடையார் வாய்ச்சொல்-(ஆக்கினை சக்கரத்தைச் செலுத்தும் அரசருக்கு) ஒழுக்கமுடையவரது வாயிற் பிறக்குஞ் சொற்கள், (எ - று).

அவாய் நிலையால் வந்த நடப்பவர்க்கு என்னும் உவமான அடை யினல் ஆக்கினை சக்கரத்தைச் செலுத்தும் அரசருக்கு என்னும் உவமேயஅடை வருவிக்கப்பட்டது. ஊன்றுகோல்போ லுதவுதல் - தளர்ந்தவிடத்து அத்தளர்ச்சியை நீக்குதல். கல்வியுடையவராயினும் ஒழுக்கமில்லாதவர் அறிவில்லாராகலால், அவர் வாய்ச்சொல் கேட்கப்படாதென்பது தோன்ற ' ஒழுக்க முடையார்வாய்ச் சொல் ' என்முர். வாய் எனபது தீயசொல் அறியாமையாகிய சிறப்பு அறியு மாறு நின்றது. அச்சொற்களைக் கேட்கக் கடவரென்பது குறிப் பெச்சம். வழுக்குதல் - சறுக்குதல்.

(க - து.) நல்லொழுக்க முடையவரது சொல் ஆபத்துண்டான போது ஊன்றுகோல்போ லுதவிசெய்யும் என்பது.

5. The words of the good are like a staff in a slippery place.

---

சு. எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும்.

---

* ஒழுக்கமுடையாரது வாய்ச்சொல் ஊன்று கோல்போ லுதவி செய்தல்.

§ தளர்ந்துழி அதனை நீக்குதல்—வறுமையினுலாவது அறிவில் லாமையினுலாவது துன்பம் நேர்ந்தவிடத்து மனந் தளர்ந்தபோது அத்தளர்ச்சியை யொழித்தல்.

‡ '' உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங், கல்லா ரறிவிலாதார் '' என்னுங் குறளின் விசேட வுரையில் '' கல்விக்குப் பயன் அறிவும் அறிவிற்குப் பயன் ஒழுக்கமு மாகலின் அவ்வொழுகு தலைக் கல்லாதார் பலகற்று மறிவிலாதார் என்றுங் கூறினர் " என்று கூறியிருத்தலு மிங்குக் கவனிக்கத் தக்கதாம்.

¶ அவற்றை – ஒழுக்கமுடையாரது சொற்களை.

பரி:—(இ-ள்.) ஒருவன் சிறிதாயினும் உறுதிப் பொருள்களைக் கேட்க, அக்கேள்வி அத்துணையாயினும் நிறைந்த பெருமையைத் தரும் ஆகலான், (எ-று).

† எனைத்து அனைத்து என்பன கேட்கும் பொருண்மேலுங் காலத்தின்மேலும் நின்றன. அக்கேள்வி மழைத்துளிபோல வந்தீண்டி எல்லா அறிவுகளையும் உளவாக்கலின், சிறிதென்று இகழற்க வென்பதாம்.

தெளி:— (இ-ள்.) (ஒருவன்) எனைத்தானும் - எவ்வளவு சிறிதானாலும், நல்லவை - உறுதிபயக்கும் பொருள்களை, கேட்க - கேட்கக் கடவன், (அக்கேள்வியானது), அனைத்தானும் - அவ்வளவானாலும், ஆன்றபெருமை - நிறைந்த பெருமையை, தரும் - கொடுக்கும், (ஆதலால்) (எ-று).

எனைத்து என்பது கேட்கும்பொருள்மேலும் அனைத்து என்பது கேட்குங் காலத்தின்மேலும் நின்றன. அச்சிறிய கேள்வி மழைத்துளிபோல வந்து உள்ளே நிறைந்து எல்லாவறிவுகளையும் உண்டாக்கலால் (அக்கேள்வியைச்) சிறிதென்று இகழ்ச்சி செய்யாதொழிக என்பதாம்.

(க-து.) ஒருவன் சிறிதாயினும் உறுதிப்பொருள்களைக் கேட்கக் கடவன், அஃதவனுக்கு நிறைந்த பெருமையைக் கொடுக்கும்.

6. Let a man listen, never so little, to good instruction even that will bring him great dignity.

---

**எ. பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லா ரிழைத்துணர்ந் தீண்டிய கேள்வி யவர்.**

பரி:— (இ-ள்.) பிறழ வுணர்ந்த வழியும், தமக்குப் பேதைமை பயக்குஞ் சொற்களைச் சொல்லார், பொருள்களைத் தாமும் நுண்ணியதாக ஆராய்ந்தறிந்து அதன்மேலும் ஈண்டிய கேள்வியினை யுடையார்.

பிழைப்பவென்பது திரிந்துநின்றது. பேதைமை - ஆகுபெயர். ஈண்டுதல் – ‡ பலவாற்றான் வந்து நிறைதல். பொருள்களின் மெய்ம்

---

† எனைத்து என்பது கேட்கும் உறுதிப்பொருள்மேலும் அனைத்து என்பது உறுதிப்பொருளைக் கேட்கும் காலத்தின்மேலும் நின்றன.

‡ பலவாற்றான் வந்து நிறைதலாவது—தன்னாசிரியனோடு பழகுதலாலும், தன்னையொத்தவரோடு பழகுதலாலும், வேறு ஆசிரியர்களோடு பழகுதலாலும் வந்து கேள்வியறிவு நிறைதலாமென்க. "ஒருகுறி கேட்போனிருகாற் கேட்பிற், பெருக நூலிற் பிழைபாடிலனே" "முக்காற் கேட்பின் முறையறிந் துரைக்கும்" "ஆசானுரைத்த தமைவரக் கொளினும், காற்கூ றல்லது பற்றலனாகும்" "அவ்வினை யாளரொடு பயில்வகை யொருகாற், செவ்விதி னுரைப்ப வவ்விரு காலும், மையறு புலமை மாண்புடைத் தாகும்" என்றுள்ள நன்னூற் சூத்திரங்களும் இங்கறியத் தக்கனவாம்.

மையைத் தாமும் அறிந்து அறிந்தாரோடு ஒப்பிப்பதுஞ் செய்தார் $ தாமதகுணத்தான் மயங்கினராயினும், ‡அவ்வாறல்லது சொல்லாரென்பதாம். இவை நான்கு பாட்டாலுங் கேட்டார்க்கு வரும் நன்மை கூறப்பட்டது.

தெளி:— (இ-ள்) இழைத்துணர்ந்து - (பொருள்களைத் தாமும்) நுட்பமாக ஆராய்ந்தறிநது ஈண்டிய - (அதன்மேலும்) நிறைந்த, கேள்வியவர் - கேள்வியினை யுடையார், பிழைத்துணர்ந்தும் - (நூற்பொருள்களைத் தாம்) மாறுபாடாக அறிந்த விடத்தும், பேதைமை - (தமக்குப்) பேதைமையை உண்டாக்குஞ் சொற்களை, சொல்லார் - சொல்லமாட்டார், (எ-று).

பிழைப்ப வென்பது பிழைத்து எனத்திரிந்து நின்றது. பேதைமை யென்பது பேதைமையை யுண்டாக்குஞ் சொல்லை யுணர்த்துதலால் காரியவாகுபெயராம். ஈண்டுதல் - (கேள்வியறிவு) பலவழிகளால் வந்து நிறைதல். நூற் பொருள்களின் மெய்ம்மையைத் தாமும் அறிந்து அறிந்தவருடன்கூடி அவர் சொல்லக்கேட்டு ஒப்புப்பார்த்தும் இருப்பவர் தமோகுணத்தால் மயங்கினராயினும், அவ்வாறல்லது சொல்லாரென்பதாம். இவை நான்கு பாட்டாலும் கேள்வியுடைய வர்க்கு வரும் நன்மை சொல்லப்பட்டது.

(க.து.) கேள்வியறிவினை யுடையார் அறிவீனமான சொற்களைச் சொல்லார் என்பது.

7. Not even when they have imperfectly understood a matter will those men speak foolishly, who have profoundly studied, and diligently listened to instruction.

---

அ. கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற்
தோட்கப் படாத செவி.

பரி:—(இ-ள்) தம்புலமாய ஓசைமாத்திரத்தைக் கேட்குமாயினுஞ் செவிடாந் தன்மையவேயாம், கேள்வியால் துளைக்கப்படாத செவிகள், (எ-று).

ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது. ஓசை மாத்திரத்தான் உறுதியெய்தாமையிற் 'கேளாத் தகைய' என்றும், மனத்தின்கண் நூற்பொருள் நுழைதற்கு ¶ வழியாக்கலிற் கேள்வியைக் கருவி யாக்கியுங் கூறினர். பழைய துளை துளை அன்றென்பதாம்.

---

$ மந்தமாய், உன்மத்தமாய், மத்திமமா யிருப்பது தாமதகுண மெனப்படும். ஈசுவரகீதை "தமம் அஞ்ஞானமாம்" என்று கூறுகின்றது.

‡ அவ்வாறல்லது சொல்லாரென்பதாம் - (தாமதகுணத்தால்) அப்படி மயங்கியதேயல்லாமல் (தமக்குப் பேதைமையைத் தருஞ் சொற்களை) சொல்லாரென்பதாம். "இம்மூ வுலகி னிருள்கடியு மாய்கதிர்போல், அம்மூன்று முற்ற வறிதலால் - தம்மின், உறழா மயங்கி யுறழினு மென்றும், பிறழா பெரியோர்வாய்ச் சொல்" என்று புறப்பொருள் வெண்பாமாலை கூறுவது மிங்குக் கவனிக்கத் தக்கதாம்.

¶ வழியாக்கலின் - காதில் வழியை யுண்டுபண்ணுகின்றமையின்.

தெளி :—(இ - ள்.) கேள்வியால் - கேள்வியினால், தோட்கப் படாத - துளைக்கப்படாத, செவி - காதுகள், கேட்பினும் - (தமக்கு விஷயமான ஓசைமாத்திரத்தைக்) கேட்குமாயினும், கேளாத்தகையவே - செவிடாந்தன்மை யுடையனவேயாம், (எ-று).

தகையவே என்னும் ஏகாரம் தேற்றப்பொருளில் வந்தது. (செவிகள்) ஓசைமாத்திரத்தால் நன்மையை யடையாமையால் 'கேளாத்தகைய' என்றும், மனத்தில் நூற்பொருள் நுழைதற்கு வழியாக்கலால் கேள்வியைக் 'கேள்வியால்' எனக் காரணமாக்கியும் சொல்லினர். காதினது பழைய துளை துளையன்றென்பதாம்.

(கூ-து.) கேள்வியால் துளைக்கப்படாத காதுகள் செவிடேயாம் என்பது.

**8. The ear which has not been bored by instruction, although it hears, is deaf.**

---

**கூ. நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய**
**வாயின ராத லரிது.**

**பரி:—(இ - ள்.) நுண்ணிதாகிய கேள்வியுடைய ரல்லாதார் பணிந்த மொழியினை யுடையராதல் கூடாது, (எ - று).**

‡ கேட்கப்படுகின்ற பொருளினது நுண்மை கேள்விமே லேற்றப் பட்டது. வாய் ஆகுபெயர். பணிந்தமொழி $ பணிவைப் புலப்படுத்திய மொழி. † கேளாதார் உணர்வின்மையாற் றம்மை வியந்து கூறுவரென்பதாம். * அல்லாலென்பதூஉம் பாடம்.

தெளி.—(இ - ள்.) நுணங்கிய - நுட்பமானதாகிய, கேள்விய ரல்லார்-கேள்வியை யுடையவரல்லாதவர், வணங்கிய-வணக்கத்தைக் காட்டுகிற, வாயினராதல்-சொல்லையுடையவராதல், அரிது - கூடாது, (எ - று).

---

‡ கேட்கப்படுகின்ற பொருளினது நுட்பத்தைக் கேள்வியின்மே லேற்றி 'நுணங்கிய கேள்வி' என்று கூறினமையின், இஃது இடத்து நிகழ்பொருளின் குணம் இடத்தின் மேலாய உபசார வழக்காம்.

$ பணிவைப் புலப்படுத்தியமொழி-அடக்கத்தை வெளிப்படுத்திய சொல்.

† நுட்பமாகிய பொருள்களை யறிவுடையோ ரிடத்துக் கேட்டறியாதவர் "உணற்கினிய வின்னீர் பிறிதுழியில் லென்னும், கிணற்றகத்துத்தேரைபோல்" (இது பழமொழி) அறிவில்லாமையினால் தம்மைத் தாமே வியந்து சொல்லுவாரென்பதாம். இதனால் தம்மைத் தாமே வியந்து கொள்பவர் கேள்வி யறிவில்லாதவ ராவரென்பது பெறப்பட்டது.

* இப்பாடத்திற்கு நுணங்கிய கேள்வியரல்லாமல் ஏனையோர் வணங்கிய வாயினராத லரிது என்று பொருளாம்.

கேட்கப்படுகின்ற பொருளினது நுட்பம் கேள்வியின் மேல் ஏற்றப்பட்டது. வாய்-வாயிலுண்டாகுஞ் சொல்லை யுணர்த்துதலால் கருவியாகு பெயராம். கேளாதார் அறிவில்லாமையால் தம்மைத் தாமே வியந்து சொல்லுவாரென்பதாம்.

(க - து) கேள்வியறி வில்லாதார் வணக்கமான சொற்களைச் சொல்லார் என்பது.

9. It is a rare thing to find modesty of speech, with those who have not received choice instruction.

---

**கo. செவியிற் சுவையுணரா வாயுணர்வின் †மாக்க ளவியினும் வாழினு மென்.**

**பரி :— (இ - ள்.) செவியான் நுகரப்படுஞ் சுவைகளை யுணராத வாயுணர்வினையுடைய மாந்தர் சாவினும் வாழினும் உலகிற்கு வருவ தென்னை, (எ - று).**

செவியான் நுகரப்படுஞ் சுவைகளாவன :— ‡ சொற்சுவையும், $ பொருட்சுவையும். அவற்றுள் சொற்சுவை ¶ குணம், § அலங்கார

---

† மாக்கள் - மனவுணர்ச்சியில்லாதார்.

‡ சொற்சுவை - சொல்லின்கண் தோன்று மின்பம்.

$ பொருட்சுவை - பொருளின்கண் தோன்று மின்பம்.

¶ குணம் - தொடைகளைப்பற்றி நின்று காப்பியத்திற் கழகு செய்வதாம். (பல வடிகளிலேனும் பல சீர்களிலேனும் எழுத்துக்க ளொன்றி வருவது தொடை.)

அக்குணம் செறிவு, தெளிவு, சமநிலை, இன்பம், ஒழுகிசை, உதாரம், உய்த்தலில்பொருண்மை, காந்தம், வலி, சமாதி எனப்பத்து வகையாம். (இக்குணங்களில்லாதது கைகால் முதலிய உறுப்புக்களி ருந்தும் பதுமை உயிரின்மையால் மனிதனெனக் கொள்ளப்படாதது போலச் செய்யுளென்று கொள்ளப்படாதாம்.)

§ அலங்காரம் - சொல்லையும் பொருளையும் பற்றி நின்று அழகு செய்வதாம்.

சொல்லலங்காரம் - மடக்கு, கோமூத்திரி, கூட சதுர்த்தம் முதலியனவாகப் பலவகையாம்.

பொருளலங்காரம் - தன்மை, உவமை, உருவகம் முதலியனவாகப் பலவகையாம்.

குணங்கள் இளமை முதலியன போல ஒற்றுமை நயத்தி னின்று அழகு செய்வன; அலங்காரம் - கடகுண்டலாதிகளைப்போல வேற்றுமை நயத்தினின்று அழகு செய்வன என்றும், காப்பியத்திற் கழகு செய்வன குணங்கள்; அதற்கு அதிசயத்தைச் செய்வன அலங்காரங்கள் என்றும் கூறுவர்.

இருவகைத்து. பொருட்சுவை ‖காமம், ‡நகை, $கருணை, ¶வீரம் *உருத்திரம், @அச்சம், §இழிப்பு, ††வியப்பு, ‡‡சாந்தமென ஒன்பது வகைத்து. $$அவை யெல்லாம் ஈண்டுரைப்பிற் பெருகும். வாயுணர் வென்பது, இடைப்பதங்கள் ¶¶தொக்கு நின்ற மூன்றும் வேற்றுமைத் தொகை. அது வாயானுகரப்படுஞ் சுவைகளையுணரும் உணர்வென விரியும். சுவை – கைப்பு, காழ்ப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு,

---

‖ காமம் - புணர்ச்சிபற்றிய விருப்பமாம். உவகை யெனினும், காதலெனினும், சிங்காரமெனினும் ஒக்கும்.

‡ நகை - அங்கவிகார முதலியவற்றால் தோன்றுவதொரு களிப்பு.

$ கருணை - இஷ்ட ஜனமரண முதலியவற்றாலுண்டாகும் அழுகை.

¶ வீரம் - செய்வினையில் மனத்துணிவு. பெருமிதம் எனினும், உற்சாகமெனினும், வீரமெனினும் ஒக்கும்.

* உருத்திரம் - பிறர் செய்யும் தீங்கினாலாகும் மனக்கொதிப்பு. குரோத மெனினும், உருத்திரமெனினும், வெகுளியெனினும் ஒக்கும்.

@ அச்சம் - தெய்வம், விலங்கு, கள்வர் முதலானவர்களாலுண்டாகும் பயம்.

§ இழிப்பு - மூப்பு, பிணி, வருத்தம் முதலாயினவற்றை யறிதலாலுண்டாகும் அருவருப்பு. இளிவரல் எனினும், இழிப்பெனினும், இழிபெனினும், அருவருப் பெனினும் ஒக்கும்.

†† வியப்பு - புதியனவும், மிகப்பெரியனவும், மிகச் சிறியனவும் ஆகியவற்றை யறிதலாலுண்டாகும் மனப்பரப்பு. அற்புதமெனினும் வியப்பெனினும் மருட்கை யெனினும் ஒக்கும்.

‡‡ சாந்தம் - யான் எனதென்னும் பற்றற்றிருக்கும் நிலை. சமநிலை யெனினும், சமமெனினும், சாந்தமெனினும் ஒக்கும். "நகையே யழுகை" என்னுந் தொல்காப்பியச் சூத்திரவுரையில் நச்சினார்க்கினியர் "அதற்கு (சமநிலைக்கு) ஓர் விகாரமின்மையின், ஈண்டுக்கூறியதிலனென்பது; அதற்கு விகாரமுண்டெனின் முன்னைய வெட்டனுள்ளுஞ் சார்த்திக்கொள்ளப்படும். அஃதல்லதூஉம், அஃதுலகியல் நீங்கினார்பெற்றியாகலின், ஈண்டு உலகவழக்கினுட் சொல்லியதில னென்பது" என்று கூறியிருப்ப திங் குணர்தற் பாலதாம்.

$$ அவையெல்லாம் (சொற்சுவை பொருட் சுவைகளை யெல்லாம்) இங்குச் சொன்னால் விரியும். சொற்சுவை பொருட்சுவைகளின் பரப்பைத் தண்டியலங்கார சாரம், தண்டியலங்காரம், தொல் காப்பியம் முதலிய நூல்களிற் காண்க.

¶¶ தொக்கு நின்ற இடைப்பதங்கள் - நுகரப்படுஞ் சுவைகளை யுணரும் என்பன.

இடைப்பதங்கள் தொக்கு நிற்பதனைப் பிரயோகவிவேக நூலார் மத்தியபதலோபன் என்பர்.

தித்திப்பென ஆரும். * செத்தாலிழப்பதும் வாழ்ந்தாற் பெறுவதும் இன்மையின், இரண்டும் ஒக்குமென்பதாம். () வாயுணவின் என்று பாடமோது வாருமுளர். இவை மூன்று பாட்டானுங் கேளாதவழிப் படுங் குற்றங் கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்.) செவியிற்சுவை - காதுகளால் அனுபவிக்கப் படுஞ் சுவைகளை, உணரா - அறியாத, வாயுணர்வின் - வாயால் உண்ணப்படும் சுவைகளை அறியும் அறிவினையுடைய, மாக்கள் - மனிதர், அவியினும் - இறந்தாலும், வாழினும் - வாழ்ந்தாலும், என் - (உலகத்திற்கு வருவது) யாது, (எ-று).

காதுகளால் அனுபவிக்கப்படுஞ் சுவைகளாவன :—சொற்சுவையும், பொருட்சுவையும் ஆம். அவற்றுள், சொற்சுவை குணம் அலங்காரமென்றிருவகையாம். பொருட்சுவை காமம் முதலாக ஒன்பது வகையாம். அவற்றையெல்லாம் இங்குச் சொன்னால் விரியும்; அதுபற்றி அவை சொல்லாமல் விடப்பட்டன. வாயுணர்வென்பது இடையிலே பதங்கள் தொக்கு நின்ற மூன்றும் வேற்றுமைத் தொகை. இஃது உருபும் பொருளும் உடன்தொக்கதொகை யெனப்படும். வாய்ச்சுவைகள் கைப்பு முதல் அறுவகையாம். செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள் செத்தால் இழப்பதும், வாழ்ந்தால் பெறுவதும் இல்லாமையால் அவர்க்கு (சாவது வாழ்வதென்னும்) இரண்டும் சமமென்பதாம். இவை மூன்று பாட்டாலுங் கேளாதவிடத்து உண்டாகுங் குற்றம் சொல்லப்பட்டது.

(க - து.) சொற்சுவை பொருட்சுவைகளை யறியுந் திறமில்லாதவர் செத்தாலும் இருந்தாலும் பயனில்லை என்பது.

**10. What does it matter whether those men live or die, who can judge of tastes by the mouth, and not by the ear.**

---

## ஐந்தாம் அதிகாரம்

### § அறிவுடைமை—On Wisdom

பரி:—அஃதாவது கல்வி கேள்விகளின் ஆய அறிவோடு உண்மை அறிவுடையனாதல். ‡ அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

---

* செவியால் சொற்சுவை பொருட்சுவைகளை யுணராது மிருக மொத்து உண்பதொன்றையே கருதியிருப்பவர் செத்தாலிழப்பதும் வாழ்ந்தாற் பெறுவதுமின்றி யொழிவரென்பதாம்.

() வாயுணவின் மாக்கள் என்னும் பாடத்திற்கு வாயினாலுணவை யுண்ணும் மாந்தர் என்று பொருளாம்.

§ "ஒப்புமுருவும்" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தின் விசேடவுரையில் "அறிவாவது நல்லத னலனும் தீயதன் தீமையும் உள்ளவாறுணர்தல்" என்றனர் நச்சினார்க்கினியர்.

‡ அதிகார முறையும் - கேள்வி யென்னு மதிகாரத்தின்பின் அறிவுடைமையென்னு மதிகாரம் வைத்த முறையும்.

தெளி:—அஃதாவது கல்வி கேள்விகளினாலாகிய அறிவோடு உண்மை யறிவுடையவனாதல். அதிகார முறைமையும் இதனாலே விளங்கும்.

**க. அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கு**
**முள்ளழிக்க லாகா வரண்.**

பரி:—(இ - ள்.) அரசர்க்கு அறிவென்பது இறுதி வாராமற் காக்குங் கருவியாம்; அதுவேயும் அன்றிப் பகைவர்க்கு அழிக்கலாகாத உள்ளரணு மாம், (எ - று).

*காத்தல் - † முன்னறிந்து பரிகரித்தல். உள்ளரண் - உள்ளாய அரண்; ‡ உள்புக்கழிக்கலாகா $ அரணென்றுமாம். இதனால் அறிவினது சிறப்புக் கூறப்பட்டது.*

தெளி:—(இ - ள்.) *அறிவு* - (அரசர்க்கு) அறிவென்பது, *அற்றம்* - முடிவு, (வாராமல்), *காக்கும்* - பாதுகாக்கும், *கருவி* - படையாம், (அதுவேயும் அல்லாமல், *செறுவார்க்கு* - பகைவர்க்கு, *அழிக்கலாகா* - அழிக்க முடியாத, *உள்அரண்* - உள் அரணுமாம், (எ - று).

(அற்றத்தைக்) *காத்தல்* - (அதனை) முன்பறிந்து நீக்குதல். *உள்ளரண்* - உள்ளாகிய அரண்; உள்ளே பிரவேசித்தழிக்க முடியாத அரணென்றுமாம். இதனால் அறிவினது சிறப்புச் சொல்லப்பட்டது.

*(க - து.) பகைவரையடக்கி அரசர்க்கு முடிவு வராமற் காக்கும் கருவி அறிவேயாம் என்பது.*

1. Wisdom is a weapon to ward off destruction; it is an inner fortress which enemies cannot destroy.

---

**உ. சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ**
**நன்றின்பா லுய்ப்ப தறிவு.**

பரி:—(இ - ள்.) மனத்தை அது சென்ற புலத்தின்கட் செல்லவிடாது அப்புலத்தின் நன்மை தீமைகளை ஆராய்ந்து தீயதனினீக்கி நல்லதன்கட் செலுத்துவது அறிவு, (எ - று).

*வினைக்கேற்ற செயப்படு பொருள் வருவிக்கப்பட்டது. ¶ ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றமெனப் புலம் ஐந்தாயினும், ஒருகாலத்து*

---

*† முன்னறிந்து பரிகரித்தல் - அற்றத்தை (சோர்வினால் வரும் கெடுதியை) முன்னறிந் தொழித்தல்.*

*‡ (பகைவர்) உள்ளே பிரவேசித்து அழிக்க முடியாத அரண் (கோட்டை) என்றும் உள்ளழிக்கலாகாவரண் என்பதற்குப் பொருள் கொள்ளலாமென்பது.*

*$ அரண் (காவல்) — மலையரண், காட்டரண், மதிலரண், கடலரண் என நால்வகைப்படும்.*

*¶ மனம் ஒருகாலத்தில் ஒருவிஷயத்தில் செல்லுவதன்றிப் பல விஷயங்களில் செல்லாதென்பது கருத்து.*

ஒன்றின்கண் அல்லது செல்லாமையின் 'இடத்தால்' என்றார். † விடாது என்பது கடைக்குறைந்து நின்றது. குதிரையை நிலமறிந்து செலுத்தும் வாதுவன் போல ‡ வேறாக்கி மனத்தைப் புலமறிந்து செலுத்துவது 'அறிவு' என்றார்; அஃது உயிர்க்குண மாகலின்.

தெளி:—(இ - ள்.) (மனத்தை) சென்றவிடத்தால் - (அது)போன விஷயத்தில், செலவிடா - போகவிடாமல், (அவ்விஷயத்தின் நன்மை தீமைகளை ஆராய்ந்து), தீது - தீயதிலிருந்து, ஒரீஇ - நீக்கி, நன்றின் பால் - நல்லதனிடத்து, உய்ப்பது - போகவிடுவது, அறிவு - அறிவாம், (எ - று).

செலவிடாது என்னும் வினைக்கு ஏற்ப மனத்தை யென்னும் செயப்படு பொருள் வருவித்துரைக்கப்பட்டது சப்த பரிச ரூப ரச கந்தமென விஷயங்கள் ஐந்தாயிருந்தாலும், மனமானது ஒருகாலத்தில் ஒருவிஷயத்தில் செல்லுவ தல்லாமல் ஏனைய விஷயங்களில் செல்லாமையினால் (இடங்களாலெனப் பன்மையாற் கூறாது) 'இடத்தால்' என ஒருமையாகக் கூறினார். விடாது என்பது கடைக் குறைந்து விடா என நின்றது. குதிரையை நிலமறிந்து செலுத்தும் பாகன் போல வேறாக்கி மனத்தை விஷயமறிந்து செலுத்துவது 'அறிவு' என்றார்; அஃது (அறிவு) உயிர்க்குணமாகலால். இடமென்றது (சப்த முதலிய) விஷயத்தை.

(க - து) மனத்தை அது போன வழியே போக விடாது வேறு படுத்தி நல்வழியிற் செலுத்துவதே அறிவாம் என்பது.

2. Not to permit the mind to go where it lists, to keep it from evil, and to employ it in good, this is wisdom.

---

ங. எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

பரி:—(இ - ள்) யாதொரு பொருளை யாவர் யாவர் சொல்லக் கேட்பினும் அப்பொருளின் மெய்யாய பயனைக் காணவல்லது அறிவு.

$ குணங்கள் மூன்றும் மாறி மாறி வருதல் யாவர்க்கும் உண்மையின், உயர்ந்த பொருள் இழிந்தார் வாயினும், இழிந்த பொருள் உயர்ந்தாவாயினும், உறுதிப்பொருள் பகைவர் வாயினும், கெடு பொருள் நட்டார் வாயினும் ஒரோவழிக் கேட்கப்படுதலான் 'எப்

† விடாது என்பது செய்யுள் விகாரத்தால் கடைக் (துவ்விகுதி) குறைந்து விடா என நின்றது.

‡ வேறாக்கி - தன்னிஷ்டப்படி போகாவண்ணம் வேறுபடுத்தி.

$ குணங்கள் மூன்று - சாத்வீகம், இராசதம், தாமதம் என்பன வாம் அடக்கம், அன்பு, அருள், ஞானம் முதலியவற்றில் நாட்டங் கொண்டிருப்பது சாத்வீகம்; அகங்கார முதலியவற்றில் நாட்டங் கொண்டிருப்பது இராசதம்; மந்தமாயிருத்தல் முதலியவற்றில் நாட்டங் கொண்டிருப்பது தாமதம் ''சத்துவம் ஞானமாம் தமமஞ் ஞானமாம் மத்திமம் (இராசதம்) கலப்பதாம்'' என்று ஈசுவர கீதை கூறுகின்றது.

பொருள் யார்யார்வாய்க் கேட்பினும்' என்றார். அடுக்குப் பன்மை பற்றி வந்தது வாயென்பது ‡அவர் அப்பொருளின்கட் பயிலாமை ¶யுணர்த்தி நின்றது. மெய்யாதல் - நிலைபெறுதல். சொல்வாரது இயல்பு நோக்காது அப்பொருளின் பயனோக்கிக்கொள்ளுதல் ஒழிதல் செய்வ தறிவென்பதாம்.

தெளி :— (இ-ள்.) எப்பொருள் - யாதொரு பொருளை, யார் யார் வாய் - யாவர் யாவர் சொல்ல, கேட்பினுங் - கேட்டாலும், அப்பொருள் - அப்பொருளினது, மெய்ப்பொருள் - மெய்யாகிய பயனை, காண்பது - காணவல்லது, அறிவு - அறிவாம், (எ-று).

சத்துவம் ரசசு தமசு என்னு முக்குணங்களும் மாறிமாறி வருதல் யாவர்க்கும் இருத்தலால், உயர்ந்த பொருளை இழிந்தார் வாயிலும், இழிந்த பொருளை உயர்ந்தார் வாயிலும், உறுதிப் பொருளைப் பகைவர் வாயிலும், கெடுபொருளைச் சிநேகர் வாயிலும் ஓரோ-விடத்துக் கேட்கப்படுதலால் 'எப்பொருள் யார்யார் வாய்க் கேட்பினும்' என்றார்; யார்யார் என்னும் அடுக்குப் பன்மைப்பொருளில் வந்தது. வாய் என்பது அவர் அப்பொருளினிடத்துப் பழகாமையை அறிவித்து நின்றது. மெய்யாதல் - நிலைத்திருத்தல். சொல்லுவாரது இயல்பு நோக்காமல் அப்பொருளின் பயனை நோக்கி நல்லதைக் கொள்ளுவதையும் தீயதை விடுவதையுஞ் செய்வது அறிவென்பதாம். ஓரோவிடம் - சிலவிடம்.

(கரு-து.) பிறர் சொல்வதில் உண்மைப்பொருளை யறிவதே அறி-வாம் என்பது,

3. To discern the truth in everything, by whomsoever spoken, this is wisdom.

---

**ச. எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்**
**நுண்பொருள் காண்ப தறிவு.**

பரி:— (இ-ள்.) தான் சொல்லுஞ் சொற்களை *அரிய பொருள

---

‡ அவர் (இழிந்தார் உயர்ந்தார் பகைவர் நட்டார் என்னும் அவர்கள்) அப்பொருளின்கண் (உயர்ந்த பொருள் இழிந்த பொருள் உறுதிப்பொருள் கெடுபொருள்களினிடத்துப், பயிலாமை (அப்பியசித்திராமையை) யுணர்த்தி (அறிவித்து) நின்றதென்பது. இழிந்தார் வாய் உயர்ந்த பொருளையும், உயர்ந்தார் வாய் இழிந்த பொருளையும், பகைவர் வாய் உறுதிப்பொருளையும், நட்டார் வாய் கெடுபொருளையும் பழகியிராதென்பது கருத்து.

¶ உணர நின்றது என்றும் பாடமுண்டு.

* அரிய பொருளவாயினும் - அறிந்துகொள்ளுதற்கு அருமையான விஷயங்களை உடையனவா யிருந்தாலும்,

வாயினும் கேட்பவர்க்கு எளிய பொருளவாமாறு $மனங்கொளச்சொல்லிப் பிறர் வாய்க்கேட்கும் சொற்களின் நுண்ணிய பொருள் காண அரிதாயினும் *அதனைக் காணவல்லது அறிவு, (எ-று).

† *உடையவன் தொழில் அறிவின்மேல் ஏற்றப்பட்டது. சொல்லுவன வழுவின்றி இனிது விளங்கச் சொல்லுக வென்பார் சொன்மேல் வைத்தும், கேட்பன வழுவினும் இனிது விளங்காவாயினும் பயனைக் கொண்டொழிக என்பார் பொருண்மேல் வைத்துங் கூறினார்.*

தெளி.— (இ-ள்.) *(தான் சொல்லுஞ்சொற்களை அரியபொருளன வாயிருந்தாலும்) எண் பொருளவாக* - (கேட்பவர்க்கு) *எளியபொருளனவாம்படி, செல* - (மனங்) *கொள்ள, சொல்லி - கூறி, தான் -, பிறர் வாய் - பிறரதுவாயில் (கேட்குஞ் சொற்களின்), நுண்பொருள் - நுட்பமாகிய பொருளை, காண்பது - (காண்பதற்கு அருமையாயிருந்தாலும் அதனைக்) காணவல்லது, அறிவு — அறிவாம்,* (எ-று).

*அறிவுடையவனது (சொல்லிக் காண்பதாகிய) தொழிலை அறிவின் மேல் ஏற்றிச் சொல்லிக் காண்பது அறிவு என்று கூறினார். தான் சொல்லுவனவற்றை வழுவில்லாமல் நன்ருக விளங்கச் சொல்ல வேண்டுமென்பார் (எண்பொருளவாகச் செலச்) சொல்லி எனச் சொல்லின்மேல் வைத்தும், பிறர்சொல்லக் கேட்பன வழுவாயிருப் பினும் நன்ருக விளங்காமலிருப்பினும் அவற்றின் பயனைக்கொண்டு விடவேண்டுமென்பார் (பிறர்வாய்) 'நுண்பொருள் காண்பது' எனப் பொருளின்மேல் வைத்துங் கூறினார்.*

(க-து.) *பிறர்க்குத் தான் சொல்லும் விஷயம் அருமையாக இருப்பினும் அதனை யெளிதாகச் சொல்லிப், பிறர் சொல்லும் விஷயம் வழுவாகவேனும், விளங்காதாகவேனும் இருப்பினும் அதனை யறிய வல்லதே ஒருவனுக் கறிவுடைமையாம் என்பது.*

4. To speak so as that the meaning may easily enter the mind of the hearer ; and to discern the subtlest thought which may lie hidden in the words of others ; this is wisdom.

---

ரு. உலகந் தழீஇய தொட்ப மலர்தலுங்
கூம்பலு மில்ல தறிவு.

---

*$ மனங்கொள - மனத்திலமையுமாறு * அதனை - நுட்பமான பொருளை.*

*† அறிவுடையவனது (சொல்லுதல் காணுதல் ஆகிய) தொழிலை அவனது அறிவின்மேலேற்றிச் சொல்லிக் காண்பது அறிவு என்று கூறினார். அறிவுடையவனது தொழிலை அறிவின்மேலேற்றிக் கூறினமையின் இது குணி(அறிவுடையவன்) வினை குண(அறிவு) வினையாய உபசார வழக்காம்.*

**பரி:—(இ - ள்) உலகத்தை நட்பாக்குவது ஒருவனுக்கு ஒட்பமாம்; அந்நட்பின்கண் முன் மலர்தலும் பின் கூம்புதலுமின்றி † ஒரு நிலையனுவது அறிவாம், (எ - று).**

‡ தழீஇயது இல்லது என்பன அவ்வத் தொழின்மேனின்றன. $ உலகமென்றது ஈண்டுயர்ந்தோரை. அவரோடு ¶கயப்பூப்போல வேறுபடாது கோட்டுப்பூப்போல ஒரு நிலையே நட்பாயினுன் எல்லா இன்பமும் எய்துமாகலின், *அதனை 'அறிவு' என்றார். ()காரியங்கள் காரணங்களாக உபசரிக்கப்பட்டன. o இதனைச் செல்வத்தின் மலர்-தலும் நல்குரவிற் கூம்பலு மில்லாரென்று உரைப்பாருமுளர்.

தெளி :— (இ - ள்.) (ஒருவனுக்கு) உலகம் - உயர்ந்தோரை, தழீஇயது - நட்பாக்குவது, ஒட்பம் - அறிவுடைமையாம், மலர்தலும்-(முன்னே) விரிதலும், கூம்பலும் - (பின்னே) குவிதலும் இல்லது - (அந்நட்பினிடத்து) இல்லாது ஒரு தன்மையனுவது. அறிவு - அறிவாம், (எ - று).

தழீஇயது இல்லது என்னும் முற்றுக்கள் தழுவுதல் இல்லாதிருத்த லென அவ்வத் தொழிற் பெயர்ப் பொருளனவாய் நின்றன உலகம்.

---

† ஒரு நிலையனுவது—எப்பொழுதும் ஒரு தன்மையை யுடையவனு யிருத்தலாம்.

‡ தழீஇயது இல்லது என்பன அவ்வத் தொழில்மேல் நின்றன — தழீஇயது என்பது (தனது தொழிலான) தழுவுதல்மேலும் இல்லது என்பது (தனது தொழிலான) இல்லாதிருத்தல்மேலும் நின்றன வென்பது. தழீஇயது என்னுந் தெரிநிலை வினைமுற்றும் இல்லது என்னுங் குறிப்பு வினைமுற்றும் தொழிற்பெயர்ப் பொருளில் வந்தன வென்பது கருத்து.

$ ''அவனி திசையா காய முயர்ந்தோர், குலமிவை யுலகெனக் கூறலாகும்'' என்று (பிங்கலநிகண்டு) சூத்திரமிருத்தல் பற்றி 'உலக மென்றது ஈண்டுயர்ந்தோரை' என்று கூறப்பட்டது.

¶ ''கோட்டுப்பூப் போல மலர்ந்துபிற் கூம்பாது, வேட்டதே வேட்டதா நட்பாட்சி—தோட்ட கயப்பூப்போன் முன் மலர்ந்து பிற்கூம்புவாரை, நயப்பாரு நட்பாரு மில்'' என்பது நாலடியார்.

* அதனை - மலர்தலுங் கூம்பலு மில்லாததை.

() உலகத்தைத் தழுவுவதற்குக் காரணமான அறிவை 'உலகந்தழீஇய தொட்பம்' என்றும், மலர்தலுங் கூம்பலுமில்லா திருந்ததற்குக் காரணமான அறிவை 'மலர்தலுங், கூம்பலு மில்ல தறிவு' என்றும், கூறினமையின், 'காரியங்கள் காரணங்களாக உபசரிக்கப்பட்டன' என்று கூறப்பட்டது.

தழீஇயது காரியம், ஒட்பம் காரணம்; மலர்தலும் கூம்பலு மில்லாமை காரியம், அறிவு காரணம்.

o இதனை (மலர்தலும் கூம்பலுமில்லது, என்பதற்கு) செல்வம் வந்தவிடத்து மகிழ்ந்திருத்தலும் தரித்திரம் வந்தவிடத்து வருந்தி யிருத்தலு மில்லாததென்று சொல்லுவாரு முண்டென்பது.

என்பது இங்கு உயர்ந்தோரை யுணர்த்திற்று; அவ் வுயர்ந்தோரோடு நீர்ப்பூப்போல வேறுபடாமல் கோட்டுப்பூப்போல ஒரு நிலையே நட்பாயினுன் எல்லாவின்பமு முடையவனுதலால், அதனை 'அறிவு' என்றுர். தழுவுதல் என்னும் காரியமும் மலர்தலும் கூம்பலுமில்லாமை என்னும் காரியமும் ஒட்பம் அறிவு என்னுங் காரணமாக வுபசரிக்கப் பட்டன. நீர்ப்பூ - நீர் நிலையிலுள்ள பூ; அது தாமரைமலர் முதலா யினவாம். கோட்டுப்பூ - கிளைப்பூ; அது புன்னை மலர் முதலாயின வாம்.

(க - து) முன்னே விரிதலும் பின்னே குவிதலுமின்றி என்றும் ஒரு தன்மையதாக வுயர்ந்தோரை நேசிப்பதே அறிவாம்.

5. To secure the friendship of the great is true wisdom; it is also wisdom to keep that friendship unchanged and not opening and closing like the lotus-flower.

---

**சுா. *எவ்வ துறைவ துலக முலகத்தோ**
**டவ்வ துறைவ தறிவு.**

பரி:—(இ - ள்.) உலகம் யாதொருவாற்ருன் ஒழுகுவதாயிற்று அவ் வுலகத்தோடு மேவித் தானும் அவ்வாற்ருனொழுகுவது அரசனுக்கறிவு, (எ-று).

உலகத்தையெல்லாம் யான் †நியமித்தலான் என்னை நியமிப்பா ரில்லையெனக் கருதித் தானினைத்தவாறே ஒழுகிற் பாவமும் பழியுமா மாகலான், அவ்வாறெழுகுதல் அறிவன்றென விலக்கியவாருயிற்று. இவையைந்து பாட்டானும் அதனது இலக்கணங் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) உலகம் - உலகமானது, எவ்வது - எவ்விதத் திஞல், உறைவது - நடப்பதா யிருக்கிறது, உலகத்தோடு - அவ்வுலகத் துடன், (பொருந்தித்தானும்), அவ்வது - அவ்விதத்தால், உறைவது- நடப்பது, அறிவு - (அரசனுக்கு) அறிவாம், (எ-று).

உலகத்தை யெல்லாம் யான் நியமித்தலால் என்னை நியமிப்பவர் (ஒருவரும்) இல்லையென்று நினைத்துத் தான் நினைத்தபடியே நடந்தால் பாவமும் பழியுமா மாதலால், அப்படி நடத்தல் அரசனுக்கு அறிவன் றென்று விலக்கியபடியாயிற்று. இவை ஐந்து பாட்டாலும் அறி வுடைமையி னிலக்கணம் சொல்லப்பட்டது.

(க-து.) உலகத்தோ டொத்தொழுகுதலே அரசனுக் கறிவாம் என்பது.

6. To live as the world lives, is wisdom.

---

* "உலகத்தோ டொட்ட வொழுகல்" என்னுங் குறளும் அதனுரையும் இங்குக் கவனிக்கத் தக்கனவாம்.

† நியமித்தலான் - ஒழுங்குபடுத்தியாளுதலால்.

எ. அறிவுடையா ராவ தறிவா ரறிவிலா
ரஃதறி கல்லா தவர்.

பரி:—(இ - ள்) அறிவுடையராவார் வரக்கடவதனை முன்னறிய வல்லார்; அறிவிலராவார் அதனை முன்னறியமாட்டாதார், (எ - று).

முன்னறிதலாவது முன்னே யெண்ணியறிதல். அஃதறிகல்லாமை யாவது வந்தாலறிதல். இனி ஆவதறிவாரென்பதற்குத் தமக்கு நன்மை யறிவாரென் றுரைப்பாருமுளர்.

தெளி:—(இ - ள்.) ஆவது-வரக்கடவதனை, அறிவார் - (முன்னே) அறியவல்லவர், அறிவுடையார் - அறிவுடையவராவர், அஃது - அவ்வரக்கடவதனை, அறிகல்லாதவர் - (முன்னே) அறியமாட்டா தவர், அறிவிலார் - அறிவில்லாதவராவார், (எ-று).

முன்னறிதலாவது வரக்கடவதனை முன்னே யாலோசித்தறிதல். அஃதறிகல்லாமையாவது வரக்கடவதனை முன்னே யாலோசித்தறி-யாது அது வந்தாலறிதல்.

(க-து.) வரக்கடவதனை முன்னே யறியவல்லவர் அறிவுடை-யாராவர்; அறியாதவ ரறிவிலா ராவர் என்பது.

7. The wise are those who know beforehand what will happen; those who do not know this are the unwise.

———

அ. அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில்.

பரி:—(இ - ள்.) அஞ்சப்படுவதனை அஞ்சாமை பேதைமையாம்; அவ்வஞ்சப்படுவதனை அஞ்சுதல் அறிவார் தொழிலாம், (எ - று).

பாவமும் பழியுங் கேடு முதலாக அஞ்சப்படுவன பலவாயினும், † சாதி யொருமைபற்றி 'அஞ்சுவது' என்றார். அஞ்சாமை-எண்ணாது செய்துநிற்றல். அஞ்சுதல்-எண்ணித்தவிர்தல். அது காரியமன் றென்று இகழப்படாதென்பார் 'அறிவார் தொழில்' என்றார். ‡ அஞ்சாமை இறைமாட்சியாகச் சொல்லப்பட்டமையின், ஈண்டஞ்ச

---

† இலக்கணக்கொத்து "உயர்திணையியற் பெயர்" என்னுஞ் சூத்திரத்தினுரையில் "நூலெனப்படுவது நுவலுங்காலை 'அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ, தஞ்சலறிவார் தொழில்'... ..... இவை வருமொழியை நோக்காமலே தனக்குரிய ஒருமைப்பாலை விட்டுப் பன்மைப்பாலையே விளக்குதலால் அஃறிணைச்சாதி யொருமை யாயிற்று" என்று கூறுகின்றது.

‡ இறைமாட்சி யதிகாரத்தில் "அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கு, மெஞ்சாமை வேந்தற் கியல்பு" என்னுங் குறளில் அஞ்சாமையையும் அரசருக்குச் சிறந்தகுணமாகச் சொல்லியிருக் கின்றமையின், இங்கு அவ்வரசர் (அஞ்சப்படுவதனை) அஞ்சவேண்டும் இடம் சொல்லியபடியாமென்பது. இதனால் பாவமுதலியவற்றைத்

வேண்டுமிடங் கூறியவாறு. இவை யிரண்டு பாட்டானும் அதனை யுடையாரது இலக்கணம் கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்.) அஞ்சுவது-அஞ்சப்படுவதனை, அஞ்சாமை - அஞ்சாதிருத்தல், பேதைமை-அறியாமையாம், அஞ்சுவது-அவ்வஞ்சப் படுவதனை, அஞ்சல்-அஞ்சுதல், அறிவார் தொழில் - அறிவுடையவரது தொழிலாம்.

பாவமும் பழியும் கேடுமுதலாக அஞ்சப்படுவன பலவாயினும், சாதியொருமைபற்றி 'அஞ்சுவது' என்று கூறினர். அஞ்சாமை - (அஞ்சப்படுவதனை) ஆலோசியாது செய்து நிற்றல் அஞ்சுதல் (அதனை) ஆலோசித்துச் செய்யாது விடுதல். அவ்வஞ்சுதல் காரிய மல்லவென்று இகழ்ச்சி செய்யப் படாதென்பார் 'அறிவார் தொழில்' என்றார். அஞ்சாமை இறைமாட்சியாக முன்னே சொல்லப்பட்ட மையின், இங்கு அஞ்சவேண்டுமிடம் சொல்லிய படியாம். இவை இரண்டு பாட்டாலும் அவ்வறிவையுடையவரது இலக்கணம் சொல்லப்பட்டது.

(க-து.) அஞ்சப்படுவதற் கஞ்சாமை யறியாமையாம்; அதற் கஞ்சுதல் அறிவுடைமையாம்.

8. Not to fear what ought to be feared is folly; it is the work of the wise to fear what should be feared.

---

கூ. எதிரதாக் காக்கு மறிவினார்க் கில்லை
யதிர வருவதோர் நோய்.

பரி:—(இ-ள்.) வரக்கடவதாகிய †அதனை முன்னறிந்து காக்க வல்ல அறிவினையுடையார்க்கு அவர் நடுங்க வருவதொரு துன்பமுமில்லை. (எ-று).

‡ நோயென வருகின்றமையின், வாளா 'எதிரதா' என்றார். இதனாற் காக்கலாங் காலம் உணர்த்தப்பட்டது. காத்தல்-அதன் காரணத்தை விலக்குதல். ¶ அவர்க்குத் துன்பமின்மை இதனாற் கூறப்பட்டது.

---

தாராதகாரியங்களை அரசர் அஞ்சாது செய்யவேண்டுமென்றும், அவற்றைத் தருங் காரியங்களைச் செய்வதற்கு அஞ்சவேண்டுமென்றும் பெறப்பட்டன வென்க,

† அதனை - நோயை (துன்பத்தை).

‡ பின்னே 'அதிரவருவதோர் நோய்' என வருகின்றமையின் முன் னேயாதொரு விசேஷணமுந் தாராது வாளா (சும்மா) 'எதிரதா' என்று கூறினர். பின்னே நோய் என்பது வாராதிருந்தால் முன்னே நோய் எதிரதா என்று வரவேண்டுமென்க

¶ அவர்க்கு-(நோயையெதிரதாக் காக்கும்) அறிவுடையவர்க்கு.

தெளி :—(இ·ள்.) (வரக்கடவதாகிய துன்பத்தை) எதிரதாக் காக்கும்-முன்னே அறிந்து காக்கவல்ல, அறிவினார்க்கு - அறிவினையுடையார்க்கு, அதிர—(அவர்) நடுங்கும்படி, வருவதோர் நோய் - வருவதாகிய ஒருதுன்பமும், இல்லை—, (எ-று).

பின்னே நோயென வருகின்றமையின், வாளா 'எதிரதா' என்றார் இதனால் வரக்கடவதாகிய துன்பத்தைக் காத்தற்குரிய காலம் அறிவிக்கப்பட்டது. காத்தல் - அத்துன்பத்தின் காரணத்தை விலக்குதல். அவ்வறிவுடையவர்க்குத் துன்பமில்லாமை இதனால் சொல்லப்பட்டது.

(க·து) வரக்கடவதாய துன்பத்தை முன்னறிந்து நீக்கும் அறிவுடையவர்க்குத் துன்பமுண்டாகாது என்பது.

9 No terrifying calamity will happen to the wise who foresee and guard against coming evils.

---

**க0. ‡ அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா**
**ரென்னுடைய ரேனு மிலர்.**

பரி :—(இ - ள்.) அறிவுடையார் $ பிறிதொன்றும் இலராயினும் எல்லாமுடையராவர்; அறிவிலாதார் எல்லாமுடையராயினும் ஒன்றும் இலராவர், (எ-று).

செல்வங்களெல்லாம் அறிவாற்படைக்கவுங் காக்கவும்படுதலின், அஃதுடையாரை 'எல்லாமுடையார்' என்றும், அவையெல்லாம் முன்னேயமைந்து கிடப்பினும் அழியாமற் காத்தற்கும் ¶ தெய்வத்தானழிந்துழிப் படைத்தற்கும் கருவியுடைய ரன்மையின், அஃதில்லாதாரை 'என்னுடையரேனுமிலர்' என்றுங் கூறினார். § என்னுமென்புழி உம்மை விகாரத்தாற்றொக்கது. இதனான் அவரது உடைமையும் ஏனையாரது இன்மையுங் கூறப்பட்டன.

தெளி :—(இ-ள்.) அறிவுடையார் - அறிவினையுடையார், எல்லாமுடையார் - (வேறொன்றும் இல்லாதவராயிருந்தாலும்) எல்லாமுடையராவர், அறிவிலார் - அறிவில்லாதவர், என்னுடையரேனும் - எல்லா முடையவராயிருந்தாலும், இலர் - (ஒன்றும்) இல்லாதவராவர், (எ-று).

‡ "நுண்ணுணர் வின்மை வறுமை யஃதுடைமை, பண்ணப் பணைத்த பெருஞ்செல்வம்" என்பது நாலடியார்.

$ பிறிதொன்றும் இலராயினும் - அறிவொழிய வேறொன்றுமில்லாதவரா யிருந்தாலும்.

¶ தெய்வத்தான் - தீவினையால்.

§ எல்லாம் என்னும் பொருளை யுணர்த்திவந்த (எவன் என்னும் வினாவிடைச் சொல்லின் விகாரமாகிய) என்னும் என்ற உம்மை செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது.

செல்வங்களெல்லாம் அறிவினல் சம்பாதிக்கவும் காக்கவும் படுதலால், அவ்வறிவினையுடையவரை 'எல்லாமுடையார்' என்றும், அச்செல்வமெல்லாம் முன்னரே அமைந்து கிடந்தாலும் (அவற்றை) அழியாமற் காத்தற்கும் ஊழால் அழிந்தவிடத்துச் சம்பாதித்தற்கும் கருவியாகிய அறிவில்லாதவராதலால், அவ்வறிவில்லாதவரை 'என்னுடையரேனு மிலர்' என்றும் சொல்லினர். என்னும் என்பது உம்மை தொக்கு என் என வந்தது. இதனல் அறிவுடையவரது உடைமையும், மற்றவரது இல்லாமையும் சொல்லப்பட்டன.

(க - து.) அறிவுடையார் எல்லாமுடையராவர்; அறிவிலார் ஒன்றுமிலராவர் என்பது.

10. Those who possess wisdom, possess everything; those who have not whatever they may possess, have nothing.

---

## ஆரும் அதிகாரம்

## குற்றங்கடிதல் :—On The Correction of Faults

பரி:—அஃதாவது () காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை, மதமெனப்பட்ட குற்றங்களாறனையும் அரசன் தன்கண் நிகழா-

---

() (1) சிறுமை (காமம்), (2) சினம் (வெகுளி), (3) இவறல் (கடும்பற்றுள்ளம்), (4) மாண்பிறந்த மானம் (மானம்), (5) மாணுவுவகை (உவகை), (6) செருக்கு (மதம்) என்பன அரிவர்க்கமாம். இவற்றை இவ்வதிகாரத்தின் முதலிரண்டு குறளாலுமுணர்க. "கூறிடுங் கொடிய காமங்குரோதமே யுலோப மோகம், பாறிய மதங்க ளேமாற் சரியமுட்பகையாறென்ப" என்பது நிகண்டு,

1 காமம் - புத்திர (பிள்ளை) மித்திர (சிநேகர்) களத்திர (மனைவி) கிருகக் (வீடு) கிராம க்ஷேத்திர தனதான்யாதிகள் மேலும் மேலு முண்டாக வேண்டுமென்று விகற்பித்தெழுகின்ற சித்தவிருத்தி.

2 வெகுளி - தனக்குவேண்டிய காரியங்களை ஒருவன் விக்கினஞ் (தடை) செய்தால் அவனிடத்தில் ஆக்கிரகமாக விகற்பித்தெழுகின்ற சித்த விருத்தி.

3 கடும்பற்றுள்ளம் (லோபம்) - தான் சம்பாதித்த பொருள்களில் ஒருவருக்கும் ஒருகாசளவும் செலவு பண்ணலாகாதென்று விகற்பித்தெழுகின்ற சித்த விருத்தி.

4 மானம் (மற்சரம்) - அன்னியர் சுகமாயிருந்தா லவர்களைப் பார்த்துச் சகியாமல் விகற்பித்தெழுகின்ற சித்தவிருத்தி.

5 உவகை (மோகம்) - தான் சம்பாதித்த பொருள்களின்மேல் பிரியமோதப் பிரமோதமாய் விகற்பித்தெழுகின்ற சித்தவிருத்தி.

(இஷ்ட விஷயத்தைக் காண்டலா லுண்டாவது பிரியம்; அதனை யடைதலாலுண்டாவது மோதம்; அதனை யநுபவித்தலாலுண்டாவது பிரமோதம்.)

6 மதம் – ஐசுவரியத்தின் பெருக்கத்தினல் கருவங்கொண்டு செய் காரியம் தவிர் காரியமறியாமல் விகற்பித் தெழுகின்ற சித்தவிருத்தி என்று சப்தப் பிரகரணங் கூறுகின்றது.

1 காமத்திற் கிலக்கணம் " தாதவிழ்பூங் குழற்கனிவாய்த்தத்தை மொழி முத்துநகைத்தைய லார்மேல், காதலுறப் புரிசெயலேயென் வடிவு " என்றும், 2 வெகுளிக்கிலக்கணம் " சாற்றுமுள் ளுறும்விருப் பந்தடைப் படிலெழுஞ், சீற்றமே யுருவமாம்" என்றும், 3 உலோபத்-திற்கிலக்கணம் "உற்றபொருள் பற்றியுத வாமையுருவாம்" என்றும் 4 மானத்திற் கிலக்கணம், "வணங்குவதெத் தகையோர்க்கு மாற்று-வதே யொருவடிவு" என்றும், 5 மதத்திற்கிலக்கணம் " நெடியசெல் வமுடைமை கண்டு நெஞ்சிடைக் களிப்பதே, வடிவமாகும்" என்றும் பிரபோத சந்திரோதயங் கூறுகின்றது.

" தோஷம் ; இராகம், துவேஷம், மோகமென மூவகைத்து, அவற்றுள், [1] இராகம், காமம் (மைதுன விச்சை), மற்சரம் (தன் பயனை விசாரியாமலே பிறன் விரும்பியதைத் தடுக்க விரும்புதல்), ஸ்புருகை (தர்மவிரோதமின்றிய பொருளையடைய விரும்புதல்). திருஷ்ணை (இஃதுதென்னுடையது ஒருநாளுங் கெடலாகா தென்னும் விருப்பம்), உலோபம் (தர்மவிரோதமாகப் பிறர்பொருளையடைய விரும்புதல்), மாயை (பிறரை வஞ்சிக்க விரும்புதல்), இடம்பம் (உள்-ளே தர்மமுடைமை யில்லாதிருந்தும் வெளியில் தர்மமுடையவனுகத் தனது மேன்மையை யறிவிக்கவிரும்புதல்) என ஏழாம். [2] துவேஷம் குரோதம் (கண்சிவத்தல் முதலியவற்றிற்குக் காரணமாகிய துவேஷ விசேஷம்), ஈரிஷை (ஒரு சாதாரண வஸ்துவில் பிறனுடைமையாக அவ்வஸ்துவைக் கிரகிக்கும் புருஷனிடத் துண்டாவது), அசூயை (அந் நிய புருஷர்களது வித்தை முதலிய குணங்களிலுண்டாவது), துரோகம் (அந்நியரைக் கெடுக்கும் பொருட் டுண்டாவது), அமர்ஷம் (குற்றஞ் செய்வோனைத் தண்டிப்பதற்குச் சாமர்த்தியமின்றிய புருடனுக் குண் டாவது), அபிமானம் (அபகாரஞ் செய்தவனுக்கு அற்பமும் துன்பத் தைச்செய்யச்சாமர்த்திய மில்லாதவனுக்குத் தனது ஆத்மாவிடத் துண்டாகும் துவேஷம்) என ஆறும். [3] மோகம், விபரியயம் (மித்-தையாலாய வுணர்வு), சம்சயம் (ஒரு தர்மியின் மாறுபட்ட பல தரு-மங்களால் விசேடிக்கப்பட்ட வுணர்வு), தருக்கம் (வியாப்பியத்தை யாரோபித்தலால் வியாபகத்தை யாரோபிப்பது), மானம் (தன்னி டத்து இல்லாத குணங்களை யாரோபித்துக்கொண்டு உயர்வாகக் கருதும் புத்தி), பிரமாதம் (முன் கர்த்தவ்விய அகர்த்தவ்வியங்களாக நிச்சயித்தவற்றி லுண்டாகும் அகர்த்தவ்விய கர்த்தவ்வியத்தன்மை யாகிய வுணர்வு), பயம் (அநிஷ்டஞ் செய்பவன் யாதேனும் ஒரு காரணம் வாய்த்தகாலத்து அதனை விடுதற்குத் தகுதியில்லாமையை யறிதல்), சோகம் (இஷ்டவஸ்து பிரிந்தகாலத்து அது மீண்டும் கிடைத்தற்குரிய தாகாமையை யுணர்தல்) என ஏழாம் " என்று நியாயப் பிரகாசம் முதற்பரிச்சேதத்திற் கூறுகின்றது.

**மற் கடிதல். இவற்றைவடநூலார் $ அரிவர்க்கமென்ப. இவற்றைக் குற்ற மென்றறிதலும் கடிதலும் அறிவுடையார்க் கல்லது கூடாமையின் ‡ அதன் பின் வைக்கப்பட்டது.**

*தெளி:—அஃதாவது காமம், குரோதம், உலோபம், மானம், உவகை, மதம் என்னப்பட்ட ஆறு குற்றங்களேயும் அரசன் தன்னிடத்துத் தோன்ருமல் ஒழித்தல். இவ்வாறையும் வடநூலார் அரிவர்க்க மென்பர். இவற்றைக் குற்றமென்றறிதலும் ஒழித்தலும் அறிவுடையார்க் கல்லது மற்றவர்க்குக் கூடாமையால், இது (குற்றங்கடிதல்) அதன் பின் வைக்கப்பட்டது. அரி-பகை; வர்க்கம்-கூட்டம்.*

**க. செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார்**
**பெருக்கம் பெருமித நீர்த்து.**

**பரி:—(இ - ள்) மதமும் வெகுளியுங் காமமுமாகிய குற்றங்களில் லாத அரசரது செல்வம் * மேம்பாட்டு நீர்மையினையுடைத்து, (எ-று).**

*() மதம் - செல்வக்களிப்பு. ¶ சிறியோர்செயலாகலின், § அள விறந்த காமஞ் 'சிறுமை' எனப்பட்டது இவை நீதியல்லன செய்வித் தலான், £ இவற்றைக் கடிந்தார்செல்வம் நல்வழிப்பாடும் நிலைபேறும் உடைமையின், மதிப்புடைத் தென்பதாம். o மிகுதிபற்றி இவை முற் கூறப்பட்டன.*

*தெளி;—(இ - ள்.) செருக்கும் - மதமும், சினமும் - குரோதமும், சிறுமையும் - காமமும், (ஆகிய குற்றங்களை) இல்லார் - இல்லாத அரசரது, பெருக்கம் - செல்வமானது, பெருமிதநீர்த்து - மேம்பாட்டுத் தன்மையினையுடையதாம், (எ - று).*

---

*$ பகைவர்க்கமென்ப என்றும் பாடமுண்டு.*

*‡ அதன்பின் - அவ்வறிவுடைமையின்பின்.*

** மேம்பாட்டு நீர்மை - கம்பீரமான தன்மை.*

*() குலமதம், சீலமதம், தனமதம், அழகுமதம், யௌவனமதம், கல்வி மதம், தவமதம், இராஜ்யமத மென மதம் எட்டுவகையாம். குலமதம் - குலத்தாலுண்டாகுங் களிப்பு. ஏனையவற்றிற்கு மிங்ஙனமே பொருள்கொள்க.*

*¶ சிறியோர் - கல்வி கேள்வி யறிவு ஒழுக்கங்களில்லாதவர்.*

*§ அளவிறந்தகாமம் - அளவுகடந்த ஆசை (கொள்ளுதல்).*

*£ இவற்றை - மதம், வெகுளி, காமங்களை.*

*o காமம், வெகுளி, உலோபம், மானம், உவகை, மதமெனப்படும் ஆறு குற்றங்களுள், ஒருவனைக் கெடுத்தற்கு மிகுதியும் முற்பட்டுள்ள குற்றங்கள் மதமும் வெகுளியும் காமமுமாதலால், அம்மிகுதிபற்றி மதம் வெகுளி காமங்கள் முன்னே சொல்லப்பட்டன வென்பது.*

மதம் – செல்வத்தால் உண்டாகும் களிப்பு ; இது தனமதமெனப் படும் அளவுகடந்த காமங்கொள்ளுதல் சிறியவரது செயலாதலால், அது 'சிறுமை' என்று கூறப்பட்டது. மதம் வெகுளி காமமென்னும் இக்குற்றங்கள் அநீதிகளைச் செய்வித்தலால், இக்குற்றங்களை நீக்கினவரது செல்வம் நல்வழிப்படுதலும் நிலைபெறுதலுமுடைமை-யால், மதிப்புடையதாகுமென்பதாம். மிகுதி பற்றி இக்குற்றங்கள் முன்னே சொல்லப்பட்டன. மதிப்பு-கௌரவம்.

(க-து.) மதமும் கோபமும் காமமும் இல்லாத அரசரது செல்வம் மதிப்புடையதாகும் என்பது.

1 Truly great is the excellence of those kings who are free from pride, anger and lust.

---

உ. இவறலு மாண்பிறந்த மானமு மாணா
வுவகையு மேத மிறைக்கு.

பரி : (இ-ள்.) வேண்டியவழிப் பொருள்கொடாமையும், நன்மையி னீங்கிய மானமும் அளவிறந்த உவகையும் அரசனுக்குக் குற்றம், (எ-று).

* மாட்சியான மானத்தினீக்குதற்கு 'மாண்பிறந்த மானம்' என்றார். அஃதாவது § அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் தம் முன்னோர் தந்தை தாய் என்றிவரை ‡ வணங்காமையும், முடிக்கப்படா தாயினும் கருதியது முடித்தே விடுதலும் முதலாயின. அளவிறந்த உவகையாவது கழிகண்ணோட்டம் பிறருஞ் § "சினனே காமம் கழிகண்ணோட்டம்" என்றிவற்றை †"அறந்தரு திகிரிக்கு வழியடை-யாகுந், தீது" என்றார். இவையிரண்டு பாட்டானும் குற்றங்களாவன இவை என்பது கூறப்பட்டது.

---

* மாட்சியான மானம் – எஞ்ஞான்றும் தந்நிலையிற்றாழாமையும், தெய்வத்தாற் றாழ்வு வந்துழி உயிர்வாழாமையுமாம்.

§ "அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் தம்முன்னோர், தந்தை யாய் யென்றிவர்க்குத் தார்வேந்தே - முந்தை, வழிநின்று பின்னை வயங்குநீர் வேலி, மொழிநின்று கேட்டன் முறை" என்பது புறப்பொருள் வெண்பாமாலை.

‡ "அரச னுவாத்தியான் றாய்தந்தை தம்முன், நிகரில் குரவ ரிவ ரிவரைத், தேவரைப் போலத் தொழுதெழுக வென்பதே, யாவருங்-கண்ட நெறி" என்று ஆசாரக்கோவை கூறுவதனால் வணங்க வேண்டியவர்க ளின்னாரென்பது நன்கு விளங்குமென்க.

§ பதிற்றுப்பத்து 22 – இதன் பொருள் : கோபமும் காமமும் மிகுந்த தாட்சண்ணியமும் என்பது.

† இதன் பொருள் : தருமத்தையுண்டாக்கும் ஆக்கினை சக்கரத்-திற்கு (அது செல்லும்) வழியைத் தடுப்பதான குற்றம் என்பது. "சினனே காமங் கழிகண் ணோட்டம், அச்சம் பொய்ச்சொ லன்புமிக-வுடைமை, தெறல்கடு மையொடு பிறவுமிவ் வுலகத், தறந்தரு திகிரிக்கு வழியடை யாகும், தீது" என்பது பதிற்றுப்பத்து.

தெளி :—(இ-ள்.) இவறலும் - வேண்டியவிடத்துப் பொருள் கொடாமையும், மாண்பிறந்த மானமும் - நன்மையினீங்கிய மானமும், மாணுவுவகையும் - அளவிறந்த உவகையும், இறைக்கு - அரசனுக்கு, ஏதம் - குற்றங்களாம், (எ-று).

மாட்சி (பெருமை) யான மானத்தினின்று நீக்குதற்கு 'மாண்பிறந்த மானம்' என்ருர். அம்மாண்பிறந்த மானமாவது அந்தணர் சான்ருேர் அருந்தவர் தமது முன்னுேர், தந்தை தாய் என்ற இவரை வணங்காமையும், (செய்து) முடிக்கத் தகாததாயினும் நினைத்ததை (செய்து) முடித்தே விடுதலும், முதலானவை. அளவிறந்தவுவகையாவது மிகுந்த தாட்சண்யம். இவையிரண்டு பாட்டாலும் குற்றங்களாவன (காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை, மதமென்னும்) இவையென்பது சொல்லப்பட்டது.

(க-து.) அரசனுக்குக் குற்றமாயுள்ளவை உலோபமும், நன்மையினீங்கியமானமும், அளவுகடந்த உவகையுமாமென்பது.

2 Avarice, undignified pride, and low pleasures are faults in a king.

———

ங. தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார்.

பரி :—(இ-ள்.) பழியை யஞ்சுவார் தங்கண் தினையினளவாங் குற்றம் வந்ததாயினும் *அதனை அவ்வளவாக வன்றிப் பனையினளவாகக் கொள்வர், (எ-று).

‡ குற்றம் - சாதியொருமைப் பெயர். தமக்கேலாமையிற் சிறிது என்று $ பொருர் ; பெரிதாகக்கொண்டு வருந்திப் பின்னும் அது வாராமற் காப்பர் என்பதாம்.

தெளி :—(இ-ள்.) பழிநாணுவார் - பழிக்கு அஞ்சுவோர் தினைத்துணையாங் குற்றம்-தினையினளவான (சிறிய) குற்றமானது, வரினும்- (தம்மிடத்து) வந்ததாயினும், (அக்குற்றத்தை அவ்வளவாக வல்லாமல்) பனைத்துணையா - பனையினளவாக, (பெரிதாக), கொள்வர்- கொள்ளுவார், (எ-று).

குற்றம் ஈறு தோன்ருத சாதியொருமைப்பெயர். சிறிய குற்றமும் தமக்கு ஏற்காமையால் அதனைச் சிறிதென்று பொறுக்கார்; பொறுக்காது பெரிதாகக் கொண்டு வருந்திப் பின்னும் அக்குற்றம் (தம்மிடத்து) வாராமற் காப்பர் (அக்குற்றத்தையொழிப்பர்) என்பதாம்.

(க-து.) பழிக்கஞ்சுபவர் தமக்குத் தினையளவு குற்றம் வந்தாலும் அதனைப் பனையளவு குற்றமாகக் கருதுவாரென்பது.

---

* அதனை அவ்வளவாகவன்றி - அத்தினையளவாங்குற்றத்தை அத்தினையளவு குற்றமாகக் கொள்ளாமல்.

‡ குற்றம் - காமம் வெகுளி முதலியன.

$ தேருர் (தெளியார்) என்றும் பாடமுண்டு.

3. Those who fear guilt, if they commit a fault small as a millet seed, will consider it to be as large as a palmyra tree.

---

**ச. குற்றமே காக்க பொருளாகக் குற்றமே**
**யற்றந் தரூஉம் பகை.**

**பரி:—(இ-ள்.) தனக்கிறுதி பயக்கும் பகை குற்றமே, ஆகலான், அக்குற்றம் தன்கண் வாராமையே பயனாகக்கொண்டு காக்கவேண்டும், (எ-று).**

*இவைபற்றியல்லது பகைவர் அற்றந்தாராமையின் இவையே பகையாவனவென்னும் வடநூலார் மதம் பற்றிக் 'குற்றமே யற்றந் தரூஉம் பகை' என்றும், இவற்றது இன்மையே குணங்களது உண்மை யாகக் கொண்டென்பார் 'பொருளாக' என்றுங் கூறினார். குற்றமே காக்கவென்பது £ ''அரும்பண்பி னாற்றீமை காக்க'' என்பது போல நின்றது.*

*தெளி :—(இ-ள்.) அற்றம்-முடிவை, தரூஉம்பகை - (தனக்குத்) தரும் பகை, குற்றமே-குற்றமேயாம்,(ஆதலால்),குற்றமே-அக்குற்றம் (தன்னிடத்து வாராமையையே), பொருளாக-பயனாக, (கொண்டு), காக்க-காக்க வேண்டும், (எ-று).*

*காமம் வெகுளி முதலிய தீக்குணங்களைப்பற்றி யல்லாமல் பகைவர் தனக்கு முடிவைச் செய்யாமையின் இக்குற்றங்களே பகையாவன என்று கூறும் வடநூலாரது கொள்கை பற்றிக் 'குற்றமே யற்றந்தரூஉம்பகை' என்றும், இத்தீக்குணங்களது இல்லாமையே நற்குணங் களினது இருப்பாகக் கொள்ளவேண்டுமென்று சொல்லவந்தவர் 'பொருளாக' என்றும் கூறினார். காத்தல்-ஒழித்தல்.*

*(க - து.) ஒருவனுக்கு முடிவைத்தரும் பகை குற்றமாகலின், அதனை யவன் தன்னிடத்து வாராமற் காக்கக் கடவன் என்பது.*

4. Guard against faults as a matter of great consequence, for faults are a deadly enemy.

---

**ரு. வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை யெரிமுன்னர்**
**வைத்தூறு போலக் கெடும்.**

**பரி:—(இ-ள்.) குற்றம் வரக்கடவதாகின்ற முற்காலத்திலே †அதனைக் காவாத அரசன் வாழ்க்கை ‡அது வந்தால் ¶எரிமுகத்துநின்ற வைக்குவைபோல அழிந்துவிடும், (எ-று).**

---

*£ இதன்பொருள். (ஒருவன்) கிட்டுதற்கரிய நற்குணங்களைச் சம்பாதிப்பதனால் (தன்னிடத்துத்) தீமை (வாராதபடி அத்தீமையைக்) காக்கக் கடவன் என்பது.*

*† அதனைக்காவாத - குற்றத்தைத்தடுக்காத. ‡அது - குற்றம்.*

*¶ எரிமுகத்துநின்ற - தீமுன்பட்ட*

குற்றமென்பது அதிகாரத்தான் வந்தது. முன்னரென்றதனீற்றது பகுதிப்பொருள்விகுதி. வருமென்னும் பெயரெச்சம் *முன்னரென்னும் காலப்பெயர்கொண்டது; † அதனாற் காக்கலாங் காலம் பெறப்பட்டது. குற்றஞ் சிறிதாயினும் அதனாற் பெரிய செல்வம் அழிந்தேவிடுமென்பது ‡ உவமையாற் பெற்றும்.

தெளி:—(இ - ள்.) வருமுன்னர் - (குற்றம்) வருவதன்முன்னே, காவாதான் –(அக்குற்றத்தை) காவாத அரசனது, வாழ்க்கை - வாழ்க்கையானது, (அது வந்தால்), எரிமுன்னர் - தீமுகத்து, (நின்ற)- வைத்தூறுபோல – வைக்கோலின் கூட்டம்போல, கெடும்-அழிந்துவிடும், (எ-று).

குற்றமென்பது குற்றங்கடிதலென்னும் அதிகாரநோக்கி வருவிக்கப்பட்டது. முன்னரென்பதன் ஈற்றிலுள்ள அர் என்பது பகுதிப்பொருளை யுணர்த்திய விகுதி. வரும் என்னும் எதிர்காலப் பெயரெச்சம் முன்னர் என்னும் காலப்பெயரைக்கொண்டு முடிந்தது. முன்னரென்றதனால் (குற்றத்தைக்) காத்தலாங் காலம் பெறப்பட்டது. குற்றம் சிறியதாயிருந்தாலும் அதனால் பெரிய செல்வம் அழிந்தே விடுமென்பது 'எரிமுன்னர் வைத்தூறு போல' என்னும் உவமானத்தினால் பெறப்பட்டது.

(க–து.) குற்றம் வருமுன்னே அதனைக் காத்துக்கொள்ளாதவனது வாழ்வு அது வந்தபோது ஒருமிக்கக் கெடும் என்பது.

5. The prosperity, of him who does not timely guard against faults, will perish like straw before fire.

---

**சு.** **தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பி**
**னென்குற்ற மாகு மிறைக்கு.**

பரி:—(இ-ள்.) முன்னர்த் தன்குற்றத்தைக்கண்டு கடிந்து பின்னர்ப் பிறர் குற்றங் காணவல்லனாயின் அரசனுக்கு ஆகக்கடவ குற்றம் யாது? (எ-று).

அரசனுக்குத் தன்குற்றங் கடியாவழியே பிறர் குற்றங்கடிதல்குற்றமாம்; அதுகடிந்தவழி முறை செய்தலாமென்பார் 'என்குற்றமாகும்' என்றார். எனவே, தன் குற்றங் கடிந்தவனே முறை செய்தற் குரியவ

* காலப்பொருளையும் இடப்பொருளையு முணர்த்தும் முன் என்னும் இடைச்சொல் இங்குக் காலப்பொருளை யுணர்த்திப் பெயர்த் தன்மைப்பட்டு நின்றது.

† அதனாற் காக்கலாங்காலம் பெறப்பட்டது – முன்னர் என்னுமதனால் குற்றம் வாராமல் காக்கும் காலம்பெறப்பட்ட தென்பது. [குற்றம் வருவதற்கு முன்னே அது வாராமல் முயல வேண்டு மென்பது கருத்து ]

‡ நெருப்புச் சிறிதாயிருந்தாலும் அதனாற் பெரிய வைக்கோல் அழிந்து விடுவதுபோன்று குற்றம் சிறிதாயிருந்தாலும் அதனாற் பெரிய செல்வமும் அழிந்துவிடு மென்பதாம்.

னென்பதாயிற்று. இவை நான்குபாட்டானும் *அவற்றது கடிதற்பாடு பொது வகையாற் கூறப்பட்டது. இனிச் சிறப்புவகையாற் கூறுப.

தெளி:—(இ - ள்.) தன் குற்றம் - (முன்னே) தனது குற்றத்தை, நீக்கி - (கண்டு) ஒழித்து, பிறர் குற்றம்-(பின்னே) பிறரது குற்றத்தை, காண்கிற்பின் - காண வல்லவனானால், இறைக்கு - அரசனுக்கு, ஆகும் - ஆகக்கடவதாகிய, குற்றம்—,என் - யாது, (ஒன்றுமில்லை), (எ—று).

அரசனுக்குத் தன் குற்றத்தை யொழிக்காத விடத்தே பிறரது குற்றத்தை யொழித்தல் குற்றமாகும்; அக்குற்றத்தை யொழித்த விடத்து முறை செய்தலாகுமென்பார் ' என் குற்றமாகும் ' என்றார். எனவே தன் குற்றத்தை யொழித்தவனே முறை செய்தற்கு உரியவனென்பதாயிற்று. இவை நான்கு பாட்டாலும் அக்குற்றங்களை யொழித்தலின் தன்மை பொதுவகையினால் சொல்லப்பட்டது. இனிச் சிறப்பு வகையாற் கூறுவார். முறை - நீதி.

(க-ரு.) தனது குற்றத்தைக் கண்டொழித்துப் பிறரது குற்றத்தைப் பார்ப்பவனுக்கு யாதொரு குற்றமு முண்டாகாது.

6. What fault will remain, in the king who has put away his own evils, and looks after the evils of others.

---

எ. செயற்பால செய்யா திவறியான் செல்வ
உயற்பால தன்றிக் கெடும்.

பரி:—(இ—ள்.) பொருளாற் றனக்குச் செய்து கொள்ளப்படுமவற்றைச் செய்துகொள்ளாது அதன்கட் பற்றுள்ளஞ் செய்தானது செல்வம் பின் உளதாம் பான்மைத்தன்றி வறிதே கெடும், (எ - று).

செயற்பாலவாவன:- அறம் பொரு ளின்பங்கள். பொருளாற் பொருள் செய்தலாவது பெருக்குதல்; அது †" பொன்னி னாகும் பொருபடை யப்படை, தன்னி னாகுந் தரணியிற், பின்னை யாகும் பெரும்பொரு ளப்பொரு, டுன்னுங் காலைத்துன் னாதன வில்லையே "

* அவற்றது - காமம் வெகுளி முதலிய குற்றங்களது; கடிதற்பாடு - நீக்குதலின் தன்மை.

† சீவகசிந்தாமணி விமலையாரிலம்பகம், 35. இதன் பொருள். பொருளினால் போர் செய்தற்குரிய சேனை விருத்தியாகும்; அச்சேனையினால் இராஜ்ஜியம் விருத்தியாகும்; அவ்விராஜ்ஜியத்தினால் பிறகு மிகு பொருள் விருத்தியாகும்; அப்பொருள் கைகூடுமளவில் அடையாதன எவையுமில்லை என்பது. " முனிவரு மன்னரு முன்னுவ பொன்னான் முடியுமென " என்று திருக்கோவையார் கூறுவதாலும், பொருளே அறமுதலிய வெல்லாவற்றிற்குங் காரணமாயிருக்கின்றதென்பது இனிது விளங்கும். முத்தி பெறுவதற்குப் பொருளை விடுதலுமொருகாரணமா மென்பதிங் கூகித்துணர்தற்பாலது.

என்பதனறிக. $ அறஞ்செய்யாமையானும் பொருள் பெருக்காமை யானும் 'உயற்பாலதன்றி' என்றும், இன்பப்பயன் கொள்ளாமையாற் ' கெடும் ' என்றும் கூறினர். ¶ உயற்பாலதின்றி யென்று பாடமோது வாருமுளர்.

தெளி :—(இ-ள்.) செயற்பால - (பொருளால் தனக்குச்) செய்து கொள்ளப்படுவனவற்றை, செய்யாது - செய்துகொள்ளாமல், இவறியான் - (அப்பொருளினிடத்து) உலோபஞ் செய்தவனது, செல்வம் - செல்வமானது, உயற்பாலதன்றி - (பின்) உள்ளதாகும் பகுப்பினதன்றி, கெடும் - (வீணுகக்) கெடும், (எ-று).

செய்து கொள்ளப்படுவன:- அறம் பொருளின்பங்கள். பொருளால் பொருள் செய்தலாவது பொருளை விருத்தி யாக்குதல். செல்வமானது அறத்தைச் செய்யாமையாலும் பொருளை விருத்தி செய்யாமையாலும் ' உயற்பாலதன்றி ' என்றும், இன்பப்பயனை யனுபவியாமையால் ' கெடும் ' என்றும், சொல்லினர்.

(க - து.) தனக்குச் செய்து கொள்ளப்படுவனவற்றைச் செய்யாது உலோபஞ் செய்தவனது செல்வம் விரைவி லழியும் என்பது.

**7. The wealth of the avaricious man, who does not expend it for the purposes for which he ought to expend it, will waste away and not continue.**

---

அ· **பற்றுள்ள மென்னு மிவறன்மை யெற்றுள்ளு**
**மெண்ணப் படுவதொன் றன்று.**

**பரி:— (இ-ள்.) பொருளை விடத்தகுமிடத்து விடாது பற்றுதலைச் செய்யு முள்ளமாகிய உலோபத்தினது தன்மை குற்றத்தன்மைகளெல்லாவற்றுள்ளும் வைத்து எண்ணப்படுவ தொன்றன்று, மிக்கது, (எ-று).**

---

$ (செல்வம்) அறஞ்செய்யாமையாலும் (இம்மைப்பயன் மறுமைப்பயன் வீடு என்னும் மூன்றையுந் தரும் தருமத்தைப் பொருளைக் கொண்டு செய்யாமையாலும்) பொருள் பெருக்காமையாலும் (பொருள் சம்பாதித்தற்குரிய முயற்சி செய்து பொருளை விருத்தி செய்யாமையாலும்) 'உயற்பாலதன்றி' (பின்னுளதாகும் பான்மையதல்லாமல்) என்றும், இன்பப்பயன் கொள்ளாமையால் (பொருளால் இவ்வுலகத்திற்குரிய இன்பமாகிய பயனை யனுபவியாமையால்) (வீணே) ' கெடும் ' என்றும் கூறினரென்பது. அறஞ்செய்யாதவர்களது பொருள் பின்னுளதாகாது பல வழியாலும் ஒழிவதாயிருத்தல்பற்றி ' அறஞ்செய்யாமையானும் ' என்றும் கூறப்பட்டது. இதனல் பொருளினல் தனக்கு அறம் பொருளின்பங்களைச் செய்து கொள்ளாதவனுக்கு யாதொரு புருஷார்த்தமு மில்லையென்பது பெற்றாமென்க.

¶ உயற்பாலதன்றி என்பதற்குப் பிரதியாக உயற்பாலதின்றி என்றும் பாடமுண்டு; அதற்குப் பொருள் பின்னுளதாகும்பான்மைய தில்லாமல் என்பது.

இவறலது தன்மையாவது குணங்களெல்லாம் ஒருங்குளவாயினும் அவற்றைக் கீழ்ப்படுத்துத் தான் மேற்படவல்ல வியல்பு. † ஒழிந்தன அது மாட்டாமையின் 'எற்றுள்ளு மெண்ணப் படுவதொன் றன்று' என்றார். ‡ எவற்றுள்ளு மென்பது இடைக்குறைந்து நின்றது. இவையிரண்டு பாட்டானும் உலோபத்தின் தீமை கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) பற்றுள்ளமென்னும் - (பொருளை விடத்தகு மிடத்து விடாது) பற்றுதலைச்செய்யும் உள்ளமாகிய, இவறன்மை— உலோபத்தினது தன்மையாவது, எற்றுள்ளும் - குற்றத்தன்மைகளெல்லாவற்றுள்ளும், எண்ணப்படுவது - (வைத்து) எண்ணப்படுவது, ஒன்றன்று - ஒன்றல்ல, (மிகுந்ததாம்), (எ-று).

உலோபத்தின் தன்மையாவது நற்குணங்களெல்லாம் ஒருமித்திருப்பனவானாலும் அவற்றைக் கீழ்ப்படுத்தித் தான்மேற்படவல்ல வியல்பு. ஒழிந்த தீக்குணங்கள் அது செய்யமாட்டாமையால் 'எற்றுள்ளு மெண்ணப் படுவதொன் றன்று' என்றார். எவற்றுள்ளு மென்பது எற்றுள்ளும் என்றாயது இடைக்குறை விகாரம். இவையிரண்டுபாட்டாலும் உலோபத்தினது தீமை சொல்லப்பட்டது.

(க - து.) தீக்குணங்களிற் சிறந்தது உலோபமாம் என்பது.

8. Gripping avarice is not to be reckoned as one among other faults; it stands alone—greater than all.

---

கூ. ¶ வியவற்க வெஞ்ஞான்றும் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை.

பரி :—(இ-ள்.) தான் இறப்ப வுயர்ந்தஞான்றும் மதத்தாற் றன்னை நன்குமதியாதொழிக; தனக்கு நன்மை பயவா வினைகளை மானத்தால் விரும்பாதொழிக, (எ-று).

தன்னை வியந்துழி இடமுங் காலமும் வலியும் அறியப்படாமையானும், அறனும் பொருளும் இகழப்படுதலானும், எஞ்ஞான்றும் வியவற்க என்றும், கருதியது முடித்தேவிடுவலென்று அறம்

---

† ஒழிந்தன அது மாட்டாமையின் - காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை, மதமெனப்பட்ட தீக்குணங்களாறனுள் உலோபம் ஒழிந்த மற்றைய குணங்கள் நற்குண மெல்லாவற்றையும் கீழ்ப்படுத்தித் தாம் மேற்படும் தன்மையைச் செய்யமாட்டாமையினால்.

‡ எவற்றுள்ளும் என்பது எற்றுள்ளும் என இடையிலே வகரங் குறைந்து நின்றது.

¶ "தன்னை வியப்பிப்பான் றற்புகழ்த நீச்சுடர், நன்னீர் சொரிந்து வளர்த்தற்றாற் - றன்னை, வியவாமை யன்றே வியப்பாவ தின்பம், நயவாமையன்றே நலம்" - என்பது நீதிநெறிவிளக்கம்.

பொருளின்பங்கள் பயவா வினைகளை நயப்பின் அவற்றால் பாவமும் பழியுங் கேடும் வருமாகலின், அவற்றை 'நயவற்க' என்றுங் கூறினார். இதனான் * மதமானங்களின் தீமை கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) எஞ்ஞான்றும் – எக்காலத்திலும், (தான் மிகவும் உயர்ந்த காலத்திலும்), தன்னை வியவற்க - (மதத்தினால்) தன்னை நன்கு மதியாதிருக்கக் கடவன், நன்றி-(தனக்கு) நன்மையை, பயவாவினை-தாராத தொழில்களை, நயவற்க (மானத்தினால்) விரும்பாதிருக்கக் கடவன், (எ-று).

தன்னை நன்குமதித்தவிடத்து இடமும் காலமும் வலியும் அறியப் படாமையாலும், அறமும் பொருளும் இகழப்படுதலாலும், எஞ்ஞான்றும் வியவற்க என்றும், நினைத்த காரியத்தை முடித்தே விடுவேனென்று அறம் பொருளின்பங்களைத் தாராத தொழில்களை விரும்பினால் அத்தொழில்களால் பாவமும் பழியும் கேடும் வருமாகலால், அத்தொழில்களை 'நயவற்க' என்றும் சொல்லினார். இதனால் மதமானங்களினது தீமை சொல்லப்பட்டது.

(க - து.) தன்னை நன்கு மதித்தலையும் நன்மையைத் தாராத தொழில்களைச் செய்தலையும் ஒழிக்க வேண்டும் என்பது.

**9. Let no king praise himself at any time; let him not desire to do useless things.**

---

**கO. காதல காத லறியாமை யுய்க்கிற்பி**
**னேதில வேதிலார் நூல்.**

**பரி:—(இ-ள்.) தான் காதலித்த பொருள்களை ‡ அவர் அக்காத லறியாமல் அனுபவிக்க வல்லனாயின், பகைவர் தன்னை வஞ்சித்தற் கெண்ணும் எண்ணம் பழுதாம், (எ-று).**

அறிந்தவழி அவை வாயிலாகப் புகுந்து வஞ்சிப்பராகலின், அறியாமலுய்த்தால் வாயிலின்மையின் $ வஞ்சிக்கப்படானென் பதாம். ¶ காமம் வெகுளி உவகை யென்பன முற்றக்கடியும்

---

* தன்னைவியத்தல் மதமாம்; நன்றிபயவாவினையை நயத்தல் மானமாம். ‡ அவர் – பகைவர்.

$ தான்விரும்பிய பொருள்களை யரசன் பகைவரறியாமல் அனுபவிப்பானானால் அவ்வரசன் அப்பகைவரால் வஞ்சிக்கப் படானென்பது.

¶ காமம் வெகுளி உவகை யென்பன அரசருக்கு முழுதுமொழிக்கத் தக்க குற்றங்க ளல்லாமையால் இக்குறளால் அவர் பெரும்பான்மையதாகிய காமத்தைப் பகைவரறியாம லனுபவிக்கும் வகையைக் கூறி மற்றைச் சிறுபான்மையாகிய வெகுளி உவகைகளுக்குத் 'தினைத்துணையாங் குற்றம் வரினும்' என்னும் குறள் முதல் 'தன்குற்ற நீங்கி' என்னும் குறள் பரியந்தங் கூறியபொதுவகை விலக்கினையே மேற்கொண்டு விட்டாரென்பதாம். இதனால் அரசன் பெரும்பான்மையும் காமத்தைப் பகைவ ரறியாமலனுபவிக்கவேண்டுமென்பதும், வெகுளி உவகைகளைப் பெரும்பான்மையும் ஒழிக்கவேண்டுமென்பதும் பெறப்படுகின்றன வென்க.

குற்றம் அன்மையின், இதனாற் பெரும்பான்மைத்தாகிய காமம் நுகருமாறு கூறி, ஏனைச் சிறுபான்மை யவற்றிற்குப் பொதுவகை விலக்கினையே கொண்டொழிந்தார்.

தெளி :—(இ-ள்.) காதல - (தான்) விரும்பிய பொருள்களை, காதல் - (அவர்) அவ்விருப்பத்தை, அறியாமை – அறியாமல், உய்க்கிற்பின் – அனுபவிக்கவல்லவனாயின், ஏதிலார்-பகைவர், நூல் – (தன்னை வஞ்சித்தற்கு எண்ணும்) எண்ணமானது, ஏதில-பழுதாம், (எ-று).

பகைவர் தான்விரும்பிய பொருள்களை அறிந்த விடத்து அவ் விரும்பிய பொருள்கள் வழியாகப் பிரவேசித்து (தன்னை) வஞ்சிப் பாராதலால், (அவர்) அப்பொருள்களை அறியாம லனுபவித்தால் அப்பகைவர் பிரவேசிப்பதற்கு வழி யில்லாமையினால் அரசன் அவரால் வஞ்சிக்கப்படா னென்பதாம். காமம் வெகுளி உவகை என்பன முழுதுமொழிக்குங் குற்றமல்லாமையினால், இதனால் பெரும்பான்மையதாகிய காமத்தை யனுபவிக்கும் வகையைச் சொல்லி, மற்றைச் சிறுபான்மையாகிய வெகுளி உவகைகளுக்குப் பொதுவகையாகக் கூறிய விலக்கினையே மேற்கொண் டொழிந்தார். வஞ்சித்தல்–கெடுத்தல்.

(க-து.) தான் விரும்பிய வற்றைப் பகைவரறியாம லனுபவிக்கு மரசன் அப்பகைவரால் வஞ்சிக்கப்படான் என்பது.

10. If a king enjoys privately the things which he desires, the designs of his enemies will be useless.

---

## ஏழாம் அதிகாரம்

## பெரியாரைத் துணைக்கோடல்

## On Procuring the Aid of Great Men

பரி:—அஃதாவது மூவிருகுற்றமும் முறைமையிற் கடிதலிற் காவற் சாகாடு உகைத்தற்குரியனாய அரசன் தீநெறிவிலக்கி நன்னெறிச் செலுத் தும் பேரறிவுடையாரைத் தனக்குத் துணையாகக்கோடல். § அதிகார முறைமையும் இதனானே விளங்கும். பேரறிவுடையராவார் அரசர்க்கும் ‡ அங்கங்கட்கும் * மானுடத்தெய்வக் குற்றங்கள் வாராமற் காத்தற்

§ அதிகார முறையும்–குற்றங்கடிதலின் பின் பெரியாரைத் துணைக் கோட லென்னும் அதிகாரம் வைத்த முறையும்.

‡ அங்கங்கள் - அமைச்சு, நாடு, அரண், பொருள், படை, நட்பென்பன.

* தெய்வமானுடக் குற்றங்கள் என்றும் பாடமுண்டு. தெய்வத் தாலும் மானுடராலும் வருங் குற்றங்களை இவ்வதிகாரத்தின் இரண் டாவது குறளினுரையிற் காண்க.

குரிய †அமைச்சர், ‡புரோகிதர்.

தெளி:—அஃதாவது காமம் வெகுளி கடும்பற்றுள்ளம் மானம் உவகை மதமெனப்படும் மூவிரு (அறுவகைக்) குற்றங்களையும் முறைமைப்படியொழித்தலால் ஆக்கினை சக்கரத்தைச் செலுத்துதற் குரியவனான அரசன் தன்னைத் தீயவழியிற்செல்லாவாறு விலக்கி நல்வழியிற் செலுத்தும் பேரறிவுடையவரைத் தனக்குத் துணையாகக் கொள்ளுதல். அதிகாரமுறைமையும் இதனாலேவிளங்கும். பேரறிவுடையவராவார் அரசருக்கும் அங்கங்களுக்கும் மாநுடராலும் தெய்வத்தாலும் குற்றங்கள் வாராமல் காத்தற்குரிய அமைச்சர், புரோகிதர். முறை - நீதிநூல்.

## க. அறனறிந்து மூத்த வறிவுடையார் கேண்மை திறனறிந்து தேர்ந்து கொளல்.

பரி:—(இ-ள்.) அறத்தினது நுண்மையை அறிந்து தன்னின் மூத்த அறிவுடையாரது கேண்மையை அரசன் அதனது அருமையை ஓர்ந்து கொள்ளுந் திறமறிந்து கொள்க, (எ-று).

அறநுண்மை நூலானேயன்றி உய்த்துணர்வானும் அறிய வேண்டுதலின் 'அறனறிந்து' என்றார். மூத்தல் - அறிவானும் சீலத்தானும் காலத்தானும் முதிர்தல். அறிவுடையார் - நீதியையும் உலகியலையும் அறிதலையுடையார். திறனறிதலாவது நன்குமதித்தல், உயரச்செய்தல் - ¶ அவர்வரை நிற்றலென்பன $ முதலாக () அவர் பிணிப்புண்ணுந் திறனறிந்து செய்தல்.

தெளி:—(இ-ள்.) அறனறிந்து - அறத்தினது நுட்பத்தையறிந்து, மூத்த - (தன்னின்) மூத்த, அறிவுடையார் - அறிவுடையாரது, கேண்மை - நட்பை, தேர்ந்து - (அரசன் அந்நட்பினது அருமையை) ஆராய்ந்தறிந்து, திறனறிந்து - (கொள்ளுந்) திறத்தையறிந்து, கொளல் - கொள்ளக்கடவன், (எ-று).

தருமத்தினது நுட்பத்தை சாஸ்திரங்களின் வாயிலாக வறிதலே யல்லாமல் உலக நடையை யாராய்ந்தறிதலாலும் அறிய வேண்டுதலால் 'அறனறிந்து' என்றார். மூத்தல் - அறிவாலும் சீல (ஆசார)த்தாலும் காலத்தாலும் முதிர்தல். அறிவுடையார் - நீதியையும்

---

† அமைச்சர் - மந்திரிகள்.

‡ புரோகிதர் - பின்வருவன வற்றை முன்னறிந்து சொல்பவரும் கிருத்தியஞ் செய்விப்பவருமாகிய பிராமணர்கள். "மந்திரியர் புரோகிதர் சேனா பதியர், தந்திரத் தூதர் சாரண ரென்றிவர், அந்தமி லரசர்க் கைம்பெருங் குழுவே" என்பது பிங்கலந்தை.

¶ அவர்வரை நிற்றல் - அறிவுடையார் கூறிய எல்லையில் இருத்தல்.

$ முதலாக என்றதனால் தவறியபோது அவரால் கண்டிக்கப் படுதலை யேற்றுக்கொள்ளுதல், என்றும் வணக்கமுடையவனாயிருத்தல் முதலிய வற்றையும் கொள்க.

() அவர் பிணிப்புண்ணுந் திறனறிந்து செய்தல் - அறிவுடையார் தனக்குக் கட்டுப்படும் வகையைத் தெரிந்து செய்தல். [பிணிப் புண்டல் - அன்பினால் நீங்காமலிருத்தல்.]

உலகியலையும் அறிதலையுடையவர், திறனறிதலாவது (அரசன் அவரை) நன்கு மதித்தல், உயரச்செய்தல், அவர் சொல்வழி நடத்தல் என்பன முதலாக வுள்ளவற்றை அவர் தனக்கு வசமாகுந்திறத்தையறிந்து செய்தல்.

(க-து) அரசன் அறத்தினது நுட்பத்தை ஆராய்ந்தறிந்து, தன்னின் மூத்த அறிவுடையாரது சிநேகத்தைக்கொள்ளும் வகையைத் தெரிந்து கொள்ளக்கடவன் என்பது.

1. Let a king ponder well over its value, and secure the friendship of men of virtue and of mature knowledge.

---

## உ. உற்றநோய் நீக்கி யுறுஅமை முற்காக்கும் பெற்றியார்ப் பேணிக் கொளல்.

பரி:—(இ-ள்.) தெய்வத்தானுகை மக்களாளுகைத் தனக்கு வந்த துன்பங்களை நீக்குமா றறிந்து நீக்கிப் பின் அப்பெற்றியன வாராவண்ணம் முன்னறிந்து காக்கவல்ல தன்மையினை யுடையாரை அரசன் அவருவப்பன செய்து துணையாகக் கொள்க, (எ-று).

தெய்வத்தான்வருந் துன்பங்களாவன: மழையின் றின்மை மிகுதி-களானும், காற்றுத் †தீப்பிணி யென் றிவற்றுனும் வருவன. அவை கடவுளரையுந் ‡தக்கோரையும் நோக்கிச் செய்யுஞ் ¶ சாந்திகளான் நீக்கப்படும். மக்களான் வருந் துன்பங்களாவன: பகைவர், கள்வர், சுற்றத்தார், வினைசெய்வாரென்றிவர்களான் வருவன. அவை $ சாம §பேத @தான ||தண்டங்களாகிய நால்வகை உபாயத்துள் ஏற்றத-னுல் நீக்கப்படும். முற்காத்தலாவது தெய்வத்தான் வருவனவற்றை *உற்பாதங்களாலறிந்து அச்சாந்திகளாற் காத்தலும், மக்களால் வருவனவற்றை அவர் குணம், இங்கிதம், ஆகாரம், செயலென்பன-வற்றுன் அறிந்து அவ்வுபாயங்களுள் ஒன்றாற் காத்தலுமாம்.

---

† தீப்பிணி - நெருப்பும் நோயும்.

‡ தக்கோர் - கல்வியறிவு வொழுக்கங்கள் நிரம்பிய அந்தணர் முதலினேர்.

¶ சாந்தி - தோஷநிவாரண கர்மம்; அஃது ஓமம், ஜபம், அர்ச்சனை, நமஸ்கார முதலாயினவாம்.

$ சாமம் - சமாதானத்தினுல் காரியங் கொள்ளுதல்.

§ பேதம் - ஒருவருடன் மற்றொருவரைச் சேராவாறு பிரித்துக் காரியங் கொள்ளுதல்.

@ தானம் - பொருள்கொடுத்துக் காரியங்கொள்ளுதல்.

|| தண்டம் - படைகொண்டு வருத்துதலால் காரியங்கொள்ளுதல்.

* உற்பாதம் - துர்நிமித்தம்; அஃதாவது பின்னிகழுந் தீங்கை முன்னறிவிக்கும் குறி.

† ஆகவே, புரோகிதரையும் அமைச்சரையுங் கூறியவாருயிற்று. இங்கிதம் ‡குறிப்பான் நிகழும் உறுப்பின் தொழில். ஆகாரம் - குறிப்பின்றி நிகழும் வேறுபாடு. உவப்பன - நன்குமதித்தல், ¶முதலியன. இவை யிரண்டுபாட்டானும் பெரியாரது இலக்கணமும் அவரைத் துணையாகக் கோடல் வேண்டுமென்பதூஉம், கொள்ளு-மாறுங் கூறப்பட்டன.

தெளி :—(இ-ள்.) உற்ற - (தெய்வத்தாலாவது மனிதராலாவது தனக்கு) வந்த, நோய் - துன்பங்களை, நீக்கி - (நீக்கும்விதத்தையறிந்து) நீக்கி, உறுஅமை - (பின் அத்தன்மையனவாய துன்பங்கள்) வாராதபடி, முற்காக்கும் - முன் (அறிந்து) காக்கவல்ல, பெற்றியார் - தன்மையினை யுடையாரை, பேணி - (அவர்) மகிழத்தக்கனவற்றைச் செய்து, கொளல் - (அரசன் துணையாகக்) கொள்ளக்கடவன், (எ-று).

தெய்வத்தால் வருந் துன்பங்களாவன: மழையில்லாமையாலும், அதிக மழையாலும், காற்று, தீ, பிணி என்ற இவற்ருலும் வருவன. அத்துன்பங்கள் கடவுளரையும் தக்கோரையும் நோக்கிச் செய்யுஞ் சாந்திகளால் நீக்கப்படும். மக்களால் வருந் துன்பங்களாவன: பகைவர், கள்வர், சுற்றத்தார், தொழில் செய்வார் என்ற இவர்களால் வருவன. அத்துன்பங்கள் சாம பேத தான தண்டங்களாகிய நால்வகை யுபாயத்துள் தக்க வுபாயத்தால் நீக்கப்படும். முற்காத்தலாவது தெய்வத்தால் வருந் துன்பங்களை உற்பாதங்களால் அறிந்து அச்சாந்தி களால் காத்தலும், மனிதரால் வருந் துன்பங்களை அவரது குணம் இங்கிதம் ஆகாரம் செயல் என்பனவற்ருல் அறிந்து அந்நால்வகை யுபாயங்களுள் ஒன்ருல் காத்தலும் ஆம். ஆகவே, புரோகிதரையும் மந்திரிகளையும் சொல்லியபடியாயிற்று. இங்கிதம் - குறிப்பால் உண்டாகும் அவயவத்தினது தொழில், ஆகாரம் - குறிப்பில்லாது உண்டாகும் (உடம்பின்) வேறுபாடு. மகிழத்தக்கன - நன்கு மதித்தல் முதலாயின. இவையிரண்டு பாட்டாலும் பெரியாரது இலக்கணமும், அவரைத் துணையாகக்கொள்ள வேண்டுமென்பதும், துணைக்கொள்ளும் விதமும் சொல்லப்பட்டன. காத்தல் - நீக்குதல்.

(க-து.) துன்பங்களை நீக்கும்விதமறிந்து நீக்கி, பின் அத்துன்பங்கள் வாராமல் தன்னைக் காக்கவல்ல பெரியாரை அரசன்துணையாகக் கொள்ளக் கடவன் என்பது.

---

† தெய்வத்தால் வரும் துன்பங்களைச் சாந்திசெய்து நீக்குபவர் புரோகிதராயும், மக்களால் வரும் துன்பங்களை நால்வகையுபாயத்துள் ஒன்ருல் நீக்குபவர் அமைச்சராயும் இருத்தலால் 'ஆகவே, புரோகி-தரையும் அமைச்சரையும் கூறியவாருயிற்று' என்று கூறப்பட்டது.

‡ குறிப்பான் நிகழும் உறுப்பின் தொழில் – தனது கருத்தைத் தன்ளுேடு சேர்ந்தவர் குறிப்பாகவறிந்து கொள்ளுமாறுண்டாகும் கண்முதலிய அவயவங்களின் தொழில். அஃதாவது கண்சிமிட்டல், தலையைச்சொரிதல் முதலியனவாம்.

¶ முதலியன என்றதனுல் - உயரச்செய்தல், அவர்வரை நிற்றல் முதலியவற்றையுங் கொள்க.

2. Let a king procure and kindly care for men who can overcome difficulties when they occur and guard against them before they happen.

---

## ௩. அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப் பேணித் தமராக் கொளல்.

**பரி:—(இ-ள்.) அப்பெரியவர்களை அவர் உவப்பன அறிந்து செய்து தமக்குச் சிறந்தாராகக் கொள்ளுதல் அரசர்க்கு அரிய பேறுகள் எல்லா-வற்றுள்ளும் அரிது, (எ-று).**

*உலகத்து அரியனவெல்லாம் பெறுதற்குரிய அரசர்க்கு * இப்பேறு சிறந்ததென்றது, ‡ இதனால் அவையெல்லாம் உளவாதனோக்கி.*

தெளி:—(இ-ள்.) *பெரியாரை-அப்பெரியவர்களை, பேணி-(அவர்) மகிழத்தக்கனவற்றை யறிந்து செய்து, தமரா-தமக்குச் சிறந்தவராக, கொளல்-கொள்ளுதல், (அரசர்க்கு), அரியவற்றுளெல்லாம்-அரியபேறுகள் எல்லாவற்றுள்ளும், அரிது-அருமையுடையதாம்,* (எ-று).

*உலகத்துள்ள அரிய பொருள்க ளெல்லாவற்றையும் பெறுதற்குரிய அரசர்க்கு* (பெரியாரைப் பேணித்தமராகக் கொள்ளும்) *இப்பேறு சிறந்ததென்று கூறினது, இதனால் அவையெல்லாம் உண்டாதலைக் குறித்தென்க.*

(க-து.) *அரசர் பெரியவர்களை அவர் மகிழத்தக்கனவற்றைச் செய்து தமக்குச் சிறந்தவராகக்கொண்டொழுகுதல் அவர் பெறும் பேறுகளெல்லாவற்றுள்ளும் சிறந்ததாம் என்பது.*

3. To cherish great men and make them his own, is the most difficult of all difficult things.

---

## ச. தம்மிற் பெரியார் தமரா வொழுகுதல் வன்மையு ளெல்லாந் தலை.

**பரி:—(இ-ள்.) அறிவு முதலியவற்றால் தம்மின் மிக்கார் தமக்குச் சிறந்தாராகத் தாம் அவர்வழி நின்றொழுகுதல் அரசர்க்கு எல்லா வலியுடைமையினுந் தலை, (எ-று).**

*¶ பொருள், படை, அரண்களாகிய வலியினும் இத்துணைவலி*

---

* *இப்பேறு-இதனைப் பெறுவது.*

‡ *இதனால் அவையெல்லாம் - பெரியாரைப் பேணித்தமராகக் கொள்ளும் பேற்றினால் உலகத்து அரியனவெல்லாம்.*

¶ *பெரியவர் பொருள் படை அரண்களால் நீக்கப்படாத தெய்வத்துன்ப முதலியவற்றையும் நீக்குதற்குரியவரா யிருத்தலால். அரசருக்குப் பொருள் படை முதலியவற்றாலுண்டாகும் வலியிலும் பெரியவரைத் துணைக் கொள்ளுதலாகிய துணைவலி சிறந்ததென்பதாம்.*

சிறந்ததென்றது, இவர் அவற்றானீக்கப்படாத * தெய்வத்துன்ப § முதலியனவும் நீக்குதற்கு உரியராகலின்.

தெளி:—(இ-ள்.) தம்மிற்பெரியார் - (அறிவு முதலியவற்றால்) தம்மைப்பார்க்கிலும் மிகுந்திருப்பவரை, தமரா - தம்க்குச் சிறந்தவராக, (கொண்டு), ஒழுகுதல் - (தாம் அவர் வழியில்நின்று) நடத்தல், (அரசர்க்கு), வன்மையுளெல்லாம் - வலியுடைமை யெல்லாவற்றிலும், தலை - முதன்மையானதாம், (எ - று).

பொருள், படை, அரண்களாலாகிய வலியிலும் (பெரியாரைத் துணைக்கொள்ளுதலாகிய) இத்துணைவலி சிறந்ததென்றது, இப்பெரியார் பொருள் முதலியவற்றால் நீக்கப்படாத தெய்வத்துன்ப முதலியவற்றையும் நீக்குதற்கு உரியவராதலாலென்க.

(க-து.) அரசர் தம்மைப்பார்க்கிலும் அறிவுமுதலியவற்றால் மேம்பட்டுள்ள பெரியோரைத் தமக்குச் சிறந்தவராகக் கொண்டொழுகுதல் அவர்க்குச் சிறந்த துணையாம் என்பது.

4. So to act as to make those men, his own, who are greater than himself, is of all power the highest.

---

ரு. **சூழ்வார் கண்ணாக வொழுகலான் மன்னவன்**
**சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்.**

பரி:—(இ-ள்.) ¶ தன்பாரம் $ அமைச்சரைக் கண்ணாகக்கொண்டு நடத்தலான், அரசன் அத்தன்மையராய அமைச்சரை யாராய்ந்து தனக்குத் துணையாகக் கொள்க, (எ-று).

இரண்டாவது விகாரத்தாற்றொக்கது. தானே சூழ வல்லனாயினும், அளவிறந்த தொழில்களான் ஆகுலமெய்தும் அரசன்பாரம், அதுவே தொழிலாய அமைச்சரான் அல்லது இனிது நடவாமை பற்றி,

---

* தெய்வத்துன்பம் – தெய்வத்தால் வரும் துன்பம்.

§ முதலியன என்றது – மக்களால் வருந் துன்பத்தை.

¶ தன்பாரம் - தனதரசுரிமைப் பொறுப்பு (தனது ராஜ்யபாரம்).

$ அமைச்சர் அரசனுக்குக் கண்போலிருந்து அவனைக்காத்தலால், அரசன், அவ்வமைச்சரைக் கண்ணாகக் கொள்ளவேண்டியதாயிற்று. கண்ணில்லாதவன் ஒன்றையும் பார்க்க முடியாமைபோல அமைச்சரைக் கண்ணாகக் கொள்ளாத அரசன் தனது இராஜ்ய விஷயங்களிலொன்றையும் செவ்வையாக அறியாதவனாவனென்க. "ஒற்றர் தங்களை" என்னுஞ் சீவக சிந்தாமணிச் செய்யுளிலுள்ள "கற்றமாந்தரைக் கண்ணெனக் கோடலும்" என்னு மடிக்கு நச்சினார்க்கினியார் "நீதிநூல்கற்ற அமைச்சரைக் கண்ணென்று கோடலும்" என்று பொருளுரைத்திருப்பது மிங்கறியத்தக்கதாம்.

அவரைக் கண்ணுகக் கூறினர். ஆராய்தல் - * அமைச்சியலுட் சொல்லப்படும் இலக்கணத்தினரென்பதனை யாராய்தல். இவை மூன்று பாட்டானும் பெரியாரைத் துணைக்கோடலின் சிறப்புக் கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) சூழ்வார் - மந்திரிகளை, கண்ணுக - கண்ணுகக் (கொண்டு), ஒழுகலால் - (தன்பாரம்) நடத்தலால், மன்னவன் - அரசன், சூழ்வாரை - (அத்தன்மையராய) மந்திரிகளை, சூழ்ந்து - ஆராய்ந்து, கொளல் - (தனக்குத் துணையாகக்) கொள்ளக் கடவன், (எ-று).

சூழ்வாரையென்னும் (ஐயென்னும்) இரண்டனுருபு செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது. தானே ஆராயவல்லவனுயிருந் தாலும், அளவில்லாத தொழில்களால் வருத்தமடையும் அரசனது பாரம், அவ்வாராய்தலொன்றையே தொழிலாகவுடைய மந்திரிகளால் அல்லாமல் இனிது நடவாமை பற்றி, அம்மந்திரிகளைக் கண்ணுகச் சொல்லினர். ஆராய்தல் - அமைச்சியலில் சொல்லப்படுகிற இலக்கணமுடையவரென்பதனை ஆராய்தல். இவை மூன்று பாட்டாலும் பெரியாரைத் துணைக்கொள்ளுதலின் சிறப்புச் சொல்லப் பட்டது.

(க-து.) அரசன் மந்திரிகளைத் தனக்குக் கண்ணுகக் கொண்டு இராஜ்ய பாரத்தையறிந்து நடத்தவேண்டியவனுயிருத்தலின், அவர்களை யாராய்ந்து தனக்குத் துணையாகக் கொள்ளக்கடவன் என்பது.

5. As a king must use his ministers as eyes in managing his kingdom, let him well examine their character and qualifications before he engages them.

---

சு. தக்கா ரினத்தனய்த் தானொழுக வல்லானைச்
செற்ருர் செயக்கிடந்த தில்.

பரி :—(இ-ள்.) தக்காராகிய வினத்தை யுடையனய்த் தானும் அறிந்தொழுகவல்ல அரசனைப் பகைவர் செய்யக்கிடந்ததொரு துன்பமும் இல்லை. (எ-று).

தக்கார் - அறிவொழுக்கங்களால் தகுதியுடையார். ஒழுகுதல் - §அற நீதிகளின் நெறிவழுவாமல் நடத்தல். ¶வஞ்சித்தல், கூடினவரைப் பிரித்தல், வேறு பகை விளைத்த லென்றிவற்ருனும், வலியானும், பகைவர் செய்யுந் துன்பங்கள் பலதிறத்தவாயினும், தானுமறிந்து அறிவார் சொல்லுங் கொண்டொழுகுவான்கண் அவற்றுள் ஒன்றும் வாராதென்பார் 'செற்ருர் செயக்கிடந்ததில்' என்ருர்.

---

* அமைச்சதிகார முதல் அவையஞ்சாமை யதிகார மீருயுள்ள பத்ததிகாரங்களில் அமைச்சியல் சொல்லப்பட்டிருக்கின்றது.

§ அறம் – தரும சாஸ்திரம்.

¶ வஞ்சித்தல் - தனது பொருளை வஞ்சனையாகக் கவருதல்.

தெளி:—(இ-ள்) தக்காரினத்தனாய் - யோக்கியராகிய இனத்தினை யுடையவனாய், தானொழுக - தானும் (அறிந்து) நடக்க, வல்லானை - வல்ல அரசனை, செற்றார் - பகைவர், செயக் கிடந்தது - செய்யக் கிடந்ததொரு துன்பமும், இல் - இல்லை, (எ-று).

தக்கார் - அறிவொழுக்கங்களால் தகுதியுடையவர், ஒழுகுதல் - அறநூல் நீதிநூல்கள் கூறிய வழியில் தவறாது நடத்தல். வஞ்சித்தல், கூடினவரைப் பிரித்தல், வேறு பகையுண்டாக்குதல் என்ற இவற்றாலும், வலிமையாலும், பகைவர் செய்யும் துன்பங்கள் பல கூறுபாடுடையன வானாலும், தானும் அறிந்து அறிந்தோரது சொல்லையும் உட்கொண்டு நடக்கு மரசனிடத்து அத்துன்பங்களுள் ஒன்றும் வாராதென்பார் 'செற்றார் செயக்கிடந்த தில்' என்றார்.

(க-து.) பெரியோரினத்தை யுடையவனாய், தானும் ஆராய்ந் தொழுகவல்ல அரசனைப் பகைவர் வெல்லுதல் கூடாது என்பது.

6. There will be nothing left for enemies to do against him who has the power of acting so as to secure the fellowship of worthy men.

---

எ. இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர்.

பரி:—(இ-ள்.) தீயன கண்டால் நெருங்கிச் சொல்லுந் துணையாந் தன்மையையுடையாரை இவர் நமக்குச் சிறந்தாரென் றாளும் அரசரைக் கெடுக்கும் பெருமையுடைய பகைவர் உலகத்தியாவர், (எ-று).

தீயன - *பாவங்களும், §நீதியல்லனவும். துணையாந்தன்மை-யாவது தமக்கு அவையின்மையும், அரசன்கண் அன்புடைமையுமாம். $ அத்தன்மையுடையார் நெறியினீங்க விடாமையின், அவரையாளும் அரசர் ஒருவரானும் கெடுக்கப்படாரென்பதாம். ‡ நெருங்கிச் சொல்லும் அளவினோரை யென்றுரைப்பாருமுளர். இவையிரண்டு பாட்டானும் £ அதன் பயன் கூறப்பட்டது.

---

* பாவங்கள் - பாவத்தை யுண்டுபண்ணுஞ் செயல்கள்; அவை மதுபானஞ் செய்தல், சூதாடல், பொய் பேசுதல் முதலியனவாம்.

§ நீதியல்லன - தரும சாஸ்திரங்கள் சொல்லியவற்றுள் இக்-காலத்திற்குப் பொருந்தாதனவற்றை யொழித்துச் சொல்லாதன-வற்றுள் பொருந்துவனவற்றை மேற்கொண்டு உலகத்தோடு பொருந்த ஒழுகாது தான் விரும்பியவாறு செய்யுங் காரியங்கள்.

$ அத்தன்மையுடையார் - தீயனவின்மையும் அரசனிடத்து அன்-புடைமையுமுடையார்.

‡ இடிக்குந் துணையாரை என்பதற்கு நெருங்கிச் சொல்லும் அளவினோரை யென்று பொருள் கூறுவாருமுண்டென்பது.

£ அதன் பயன் - பெரியாரைத் துணைக் கொள்ளுதலின் பிரயோ-ஜனம்.

தெளி:— (இ - ள்.) (தீயனவற்றைக் கண்டால்) இடிக்கும் - நெருங்கிச் சொல்லும் (கிட்டிக் கோபித்துப் புத்தி சொல்லும்), துணையாரை - துணையாந் தன்மையை யுடையவரை, ஆள்வாரை - (இவர் நமக்குச் சிறந்தவரென்று கொண்டு) ஆளுகின்ற அரசரை, கெடுக்குந் தகைமையவர் - கெடுக்கும் பெருமையையுடைய பகைவர், யார் - (உலகத்தில்) யாவர், (ஒருவருமில்லை), (எ - று).

தீயன - பாவங்களும் நீதியல்லாதனவுமாம். துணையாந் தன்மை யாவது தமக்கு அத்தீயன வில்லாமையும் அரசனிடத்து அன்புடைமையும் ஆம். அத்தன்மையுடையவர் (அரசனை) நல்வழியி னீங்க விடாமையால், அவரை யாளுகின்ற அரசர் ஒருவராலும் கெடுக்கப் படா ரென்பதாம். இவை யிரண்டு பாட்டாலும் அதன் பயன் சொல்லப்பட்டது.

(க-து.) தீயனவற்றைக் கண்டால் அஞ்சாது நெருங்கிக் கண்டித்துப் புத்தி சொல்லும் மந்திரிகளைத் துணையாகக்கொண்டு அரசாளும் அரசரைக் கெடுக்கும் பகைவரொருவருமில்லை என்பது.

7. Who are great enough to destroy him who has as his advisers those that have power to rebuke him?

---

அ. **இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன்**
**கெடுப்பா ரிலானுங் கெடும்.**

பரி:— (இ - ள்.) † **கழறுதற்குரியாரைத் தனக்குத் துணையாகக் கொள்ளாமையிற் காவலற்ற அரசன் பகையாய்க் கெடுப்பார் இல்லையாயினும் தானே கெடும், (எ - று).**

‡ இல்லாத ஏமரா என்பன பெயரெச்சவடுக்கு. கெடுப்பார் உளராவரென்பது தோன்ற, 'இலானும்' என்றார். தானே கெடுதலாவது பாகனில்லாத யானைபோல நெறியல்லா நெறிச்சென்று கெடுதல்.

தெளி:— (இ - ள்.) இடிப்பாரை - கண்டித்துப் புத்தி சொல்லுதற்குரியவரை, இல்லாத - (தனக்குத் துணையாகக்) கொள்ளாமை —

---

† கழறுதல் - இடித்துக் கூறல்; அஃதாவது உறுதிச்சொல் லுரைத்தல்.

‡ இல்லாத என்னும் எதிர்மறைக் குறிப்புப் பெயரெச்சமும் ஏமரா என்னும் எதிர்மறைத் தெரிநிலைப் பெயரெச்சமும் "மூவா முதலாவுலகம்" "கற்ற கேட்ட பெரியோர்" என்றாற்போல அடுக்கி மன்னன் என்னும் கருத்தாப் பெயர்கொண்டு முடிந்தன. "கழாக் கால்" என்பதனுள் கழுவாத என்னும் பெயரெச்சம் கழா என்றும், தழாத்தொடர் என்பதனுள் தழுவாத என்னும் பெயரெச்சம் தழா என்றும் வந்தாற்போன்று ஏமம்மருவாத என்னும் பெயரெச்சம் ஏமரா என்று வந்ததென்க. [ஏமம்மருவாத என்பதற்குக் காவல் பொருந்தாத என்பது பொருள்.] இல்லாத ஏமரா என்னும் பெயரெச்ச மிரண்டனுள் இல்லாத என்பது கொள்ளாமையின் என வினையெச்சப் பொருளில் வந்தமை யிங்குணர்தற் பாலதாம்.

யால், ஏமரா - காவலற்ற, மன்னன் - அரசன், கெடுப்பாரிலானும் - (பகையாகக்) கெடுப்பவர் இல்லையானாலும், கெடும் – (தானே) கெடுவான், (எ - று).

இல்லாத என்னும் எதிர்மறைக் குறிப்புப் பெயரெச்சமும் ஏமரா என்னும் ஈறுகெட்ட எதிர்மறைத் தெரிநிலைப் பெயரெச்சமும் அடுக்கி நின்றன. கெடுப்பார் உண்டாயிருப்ப ரென்பது தோன்ற 'இலானும்' என்றார். (அரசன்) தானே கெடுதலாவது பாகனில்லாத யானைபோல வழியல்லாத வழியிற்சென்று கெடுதல்.

(க - து.) இடித்துரைக்கும் மந்திரிகளைத் தனக்குத் துணையாகக் கொள்ளாத அரசன் கெடுக்கும் பகைவரில்லாமற் போனாலுந் தானே கெடுவான் என்பது.

8. The king, who is without the guard of men who can rebuke him will perish, even though there be no one to destroy him.

———

௯. **முதலிலார்க் கூதிய மில்லை மதலையாஞ்**
**சார்பிலார்க் கில்லை நிலை.**

பரி:— (இ - ள்.) முதற்பொரு ளில்லாத வணிகர்க்கு † அதனால் வரும் ஊதியம் இல்லையாம், அதுபோலத் தம்மைத் தாங்குவதாந் துணையில்லாத அரசர்க்கு ‡ அதனான் வரும் நிலையில்லை, (எ – று).

முதலைப் பெற்றே இலாபம் பெற வெண்டுமாறு போலத் தாங்குவாரைப் பெற்றே நிலைபெற வேண்டுமென்பதாம். நிலை - அரசர் ¶ பாரத்தோடு சலியாது நிற்றல்.

தெளி: – (இ - ள்.) முதலிலார்க்கு - முதற்பொரு ளில்லாத வணிகர்களுக்கு, ஊதியம் (அதனால் வரும்) இலாபமானது, இல்லை - இல்லையாம், (அதுபோல), மதலையாம் – (தம்மைத்) தாங்குவதாகிய, சார்பிலார்க்கு - துணையில்லாத அரசர்க்கு. நிலை - (அதனால் வரும்) நிலையானது, இல்லை, (எ–று).

முதற்பொருளைப் பெற்றே வணிகர் இலாபம் பெற வேண்டும் விதம்போலத் தாங்குவாரைப் பெற்றே அரசர் நிலைபெற வேண்டுமென்பதாம். நிலை - அரசர் தமது அரசாட்சியின் பாரத்தோடு அசையாது நிற்றல்.

(க - து.) தம்மைப் பாதுகாக்கும் மந்திரிகளைத் துணையாகப் பெறாத அரசருக்கு நிலைபெறுதலுண்டாகாது என்பது.

9. There can be no gain to those who have no capital; and there can be no permanence to those who are without the support of adherents

———

† அதனால் - முதற்பொருளால். ‡ அதனான்–துணையால். ¶ பாரம்–அரசுரிமைப் பொறுப்பு.

**கO. பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்.**

*பரி:*—(இ-ள்.) தான் தனியனாய்வைத்துப் பலரோடும் பகை கொள்ளுதலிற் பதிற்றுமடங்கு தீமையுடைத்து அரசன் பெரியாரோடு நட்பினைக் கொள்ளா தொழிதல், (எ-று).

† பலர் பகையாயக்கால் ‡ "மோதி முள்ளொடு முட்பகை கண்டிடல், பேதுசெய்து பிளந்திடல்" என்பவையல்லது ஒருங்கு வினையாக்குதல் தீது; செய்தாலும் ஒருவாற்றா னுய்தல் கூடும்; நல்லார் தொடர் கைவிட்டால் ஒருவாற்றானும் உய்தல் கூடாமையின், இது செய்தல் அதனினுந் தீதென்பதாம். இவை மூன்று பாட்டானும் ¶ அது செய்யாதவழிப் படுங் குற்றங் கூறப்பட்டது.

**தெளி :**—(இ-ள்.) (அரசன்) நல்லார் - பெரியவரோடு, தொடர் - நட்பினை, கைவிடல் - கொள்ளா தொழிதல், (தான் தனியனாயிருந்து கொண்டு), பல்லார் - பலரோடும், பகைகொளலின் - விரோதங் கொள்ளுதலைப்பார்க்கிலும், பத்தடுத்த - பத்துப்பங்கு அடுத்த, தீமைத்து - தீமையை யுடையதாம், (எ-று).

பலர் பகையாய் ஒரு முகமாயெதிர்த்த காலத்துத் தனக்குப் பகைவரா யுறவா யிருப்பாரிருவரைத் தம்முள் வேற்றுமை யுண்டாக்கி ஒருவரைக் கொண்டு மற்றவரை வெல்லுதல், தம்முள் வேறு-பாடின்றிக் கூடிவந்து போர்புரிவாரைத் தம்முள்ளே பிரித்து, ஒரு-வரைத் தன்னோடு சேர்த்துக் கொள்ளுதலென்பவை யல்லாமல், ஒரு-மிக்கப்போர்புரிதல் தீயதாம்; போர் புரிந்தாலும் ஒருவிதத்தால்

---

† அரசன் தனக்குப் பலர் பகைவரான காலத்தில் முள்ளைக் கொண்டு முள்ளை யொழிப்பதுபோன்று தனக்குப் பகைவரா யுறவா யிருப்பா ரிருவரைத் தம்முள்ளே வேற்றுமையுண்டாமாறு செய்து ஒரு வரைக்கொண்டு மற்றவரை யழித்தல், தம்முள் வேற்றுமை யின்றிக் கூடிவந்து போர்புரிவாரைத் தம்முள்ளே பிரித்து ஒருவரைத் தன்னோடு சேர்த்துக் கொள்ளுதல் என்பவையல்லாமல் ஒருமிக்க எல்லாரொடும் போர்புரிதல் கொடியதாம்; போர்புரிந்தாலும் ஒருவிதத்தினால் தப்பிப்பிழைக்கவும் கூடும்; நல்லவர்களது சிநேகத்தை விட்டுவிட்டால் ஒருவிதத்திலும் தப்பிப்பிழைத்தல் கூடாமையால், நல்லார் சிநேகத்தை விட்டுவிடல் பலரோடும் பகைகொள்ளுதலினுங் கொடிய தென்பதாம்.

‡ சீவகசிந்தாமணி விமலையாரிலம்பகம் ௩உ. இதன்பொருள் : முள்ளைக்கொண்டு முள்ளைக் களையுமாறு போலத் தமக்கு ஒன்னாராய் (பகைவராய்) உறவாயிருப்பவ ரிருவரைத் தம்மிற் பேது (கலகம்) செய்து ஒருவரைக்கொண்டு ஒருவரை மோதியிடுதல், தம்மிற்கூடி வந்து வினைசெய்வாரை (போர்புரிவாரை)ப் பிரித்துத் தம்மோடே கூட்டிக் கோடல் (கொள்ளுதல்) என்பது. (இது நச்சினார்க்கினியருரை)

¶ அது - பெரியாரைத் துணைக்கொள்ளுதல்.

*பிழைத்தல் (கூடினும்) கூடும்; நல்லார் தொடர் கைவிட்டால் ஒரு விதத்தாலும் பிழைத்தல் கூடாமையால்; இது செய்தல் அது செய்தலிலும் தீயதென்பதாம். இவை மூன்று பாட்டாலும் அது செய்யாதவிடத்து உண்டாகுங் குற்றஞ் சொல்லப்பட்டது.*

(க-து.) *அரசன் பெரியாரது சிநேகத்தை விடுதல் பலரது பகையைக் கொள்ளுதலினும் தீயதாம் என்பது.* (௧௦)

**10. It is ten-fold more injurious to abandon the friendship of the good, than to incur the hatred of the many.**

---

## எட்டாம் அதிகாரம்

## சிற்றினஞ் சேராமை

## Against associating with evil persons

பரி:—(இ-ள்.) அஃதாவது சிறிய இனத்தைப் பொருந்தாமை. சிறிய இனமாவது †நல்லதன் நலனும் தீயதன் தீமையும் இல்லென்போரும் ‡விடரும் $தூர்த்தரும் ¶நடரும் *உள்ளிட்ட குழு. அறிவைத் திரித்து இருமையுங் கெடுக்கும் இயல்பிற்றாய ()அதனைப் பொருந்திற் பெரியாரைத் துணைக்கோடல் பயனின்றென்ப துணர்த்தற்கு [] இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

தெளி:—*அஃதாவது சிறியஇனத்தைப் பொருந்தாமை. சிறிய இனமாவது நல்வினையின் பயனாகச் சுகமும் தீவினையின் பயனாகத் துக்கமும் இல்லையென்று கூறும் லோகாயதரும், விடரும், தூர்த்தரும், நடரும் உள்ளிட்டுள்ள கூட்டம். அறிவை வேறுபடுத்தி (இம்மை மறுமையென்னும்) இருமையும் கெடுக்குமியல்பினதாகிய அதனைப்*

---

† "*நல்ல வினைக்கு நற்பயனுந் தீய வினைக்குத் தீப்பயனும், இல்லையெனும்வல் விழுதையரு மெள்ளும் விடருந் தூர்த்தர்களும், சொல்லு நடருமுதலாகத் தொக்க குழுவைச் சேர்ந்தொழுகின், புல்லு மறிவைத் திரித்திருமைப் பொருளுங் கெடுக்கும் புகழோடே*" *என்பது விநாயக புராணம்.*

‡ *விடர்—காமுகர் [பெண்கள் பலரைப் புணரவிரும்பியலையுங் காம ரோகிகள்.]*

$ *தூர்த்தர்—வஞ்சகர் [உள்ளே பகையும் உதட்டில் உறவுமாயிருப்பவர்.]*

¶ *நடர்—கூத்தாடிகள்.*

* *உள்ளிட்டகுழு—உட்கொண்டுள்ள கூட்டம்.*

() *அதனை நல்லதன் நலனும் தீயதன் தீமையுமில்லென்போர் முதலியோர் சேர்ந்துள்ள கூட்டத்தை.*

[] *இஃது—சிற்றினஞ் சேராமை; அதன்பின் - பெரியாரைத் துணைக்கோடலின் பின்.*

பொருந்தினுல் பெரியாரைத் துணைக்கொள்ளுதல் பயனில்லையென்பது அறிவித்தற்கு இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

**க. சிற்றின மஞ்சும் பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும்.**

**பரி:—(இ - ள்.) பெரியோரியல்பு சிறிய இனத்தை அஞ்சாநிற்கும்; ஏனைச்சிறியோரியல்பு *அது சேர்ந்தபொழுதே †அதனைத் தனக்குச் சுற்றமாக எண்ணித் துணியும், (எ - று).**

‡ தத்தம் அறிவு திரியுமாறும் ¶ அதனுல் தமக்கு வருந் துன்பமும் நோக்கலின் $ பெருமை அஞ்சும் என்றும், அறிவொற்றுமையாற் பிறிது நோக்காமையின் §'சிறுமைதான் சுற்றமாச் சூழ்ந்துவிடும்' என்றுங் கூறினுர். ° பொருளின் தொழில்கள் பண்பின்மே னின்றன. இதனுற் சிறிய இனம் பெரியோர்க் காகாதென்பது கூறப்பட்டது.

தெளி:— (இ - ள்.) பெருமை - பெரியோரியல்பு, சிற்றினம் - சிறிய இனத்தை. அஞ்சும் - அஞ்சாநிற்கும், சிறுமைதான் - மற்றைச் சிறியோரியல்பு, (அது சேர்ந்தபொழுதே அதனை), சுற்றமா- (தனக்கு) உறவாக, சூழ்ந்துவிடும் - எண்ணித் துணியும், (எ - று).

தம் தம் அறிவு வேறுபடும் விதமும் அதனுல் தமக்கு வரும் துன்பமும் நோக்குதலால் பெருமை அஞ்சும் என்றும், அறிவு ஒற்றுமைப் பட்டு நிற்கையால் வேறு நோக்காமையால் 'சிறுமைதான் சுற்றமாச் சூழ்ந்துவிடும்' என்றும் சொல்லினுர். பெரியோரும் சிறியோரும் ஆகிய பொருள்களினது அஞ்சுதலும் சுற்றமாச் சூழ்ந்துவிடுதலு மாகிய தொழில்கள் பெருமையுஞ் சிறுமையும் ஆகிய குணங்களின் மேலேற்றிச் சொல்லப்பட்டன. இதனுல் சிறியவினம் பெரியோர்க்கு ஆகாதென்பது சொல்லப்பட்டது.

(க - து.) சிற்றினத்திற் கஞ்சுதல் பெரியோரியல்பாம்; அதனைச் சுற்றமாகக் கொள்ளுதல் சிறியோரியல்பாம் என்பது. (க)

1. True greatness fears the society of the base; it is only the low-minded who will regard them as friends.

---

* அது - சிற்றினம். † அதனை - சிற்றினத்தை. ‡ தத்தம் - தமது தமது. ¶ அதனுல் - தம்மறிவு வேறுபடுதலால்.

$ அறிவுடையாரஞ்சுவர் என்றும் பாடமுண்டு.

§ அறிவிலாதார் தமக்குச் சுற்றமாகத் துணிவர் என்றும் பாடமுண்டு.

° பெரியோர் சிறியோரென்னும் பொருள்களது அஞ்சும் சுற்றமாச் சூழ்ந்துவிடும் என்னும் தொழில்கள் பெருமை சிறுமை யென்னும் குணங்களின்மேல் நின்றன என்பது. "சிற்றின மஞ்சும் பெருமை, இது குணவினை குணிவினையானது" என்பர் பிரயோக விவேக நூலார்.

உ. *நிலத்தியல்பா னீர்திரிந் தற்றுகு மாந்தர்க்
கினத்தியல்ப தாகு மறிவு.

பரி:—(இ - ள்.) தான் சேர்ந்த நிலத்தினது இயல்பானே நீர் தன் தன்மை திரிந்து அந்நிலத்தின் தன்மைத்தாம்; அதுபோல, மாந்தர்க்குத் தாம் சேர்ந்த இனத்தினது இயல்பானே அறிவுந் தன்தன்மை திரிந்து அவ்வினத்தின் தன்மைத்தாம், (எ - று).

† எடுத்துக்காட்டுவமை. விசும்பின்கண் ‡ தன்தன்மைத்தாய $ நீர் நிலத்தோடு சேர்ந்தவழி, நிறம் சுவை ¶ முதலிய பண்புகள் திரிந்தாற்போலத் § தனிநிலைக்கண் தன் தன்மைத்தாய அறிவு ° பிற வினத்தோடு சேர்ந்தவழிக் ⊙ காட்சி □ முதலிய தொழில்கள் திரியு மென ⊥ இதனால் அதனது காரணம் கூறப்பட்டது.

தெளி: — (இ - ள்.) நீர் - நீரானது, நிலத்து - (தான் சேர்ந்த) நிலத்தினது, இயல்பான் - இயல்பினாலே, திரிந்து - (தனது தன்மை) வேறுபட்டு, அற்றாகும் - அந்நிலத்தினது தன்மையதாகும், (அது போல), மாந்தர்க்கு - மனிதர்க்கு, அறிவு - அறிவும், இனத்து - (தாம் சேர்ந்த) இனத்தினது, இயல்பு - இயல்பினாலே, [ திரிந்து - (தனது தன்மை) வேறுபட்டு], அதாகும் - அவ்வினத்தினது தன்மைய தாகும், (எ - று).

---

* "நிலத்தின் வண்மையே நீரெனு மியற்கையா னீசக், குலத்தின் வண்மையாற் கொலைத்தொழிற் காலய மானேன்" என்று பாரதம் அரச நீதிச் சருக்கத்திற் கூறுவது மிங்கறியத் தக்கதாம்.

† நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகும் என்னும் வாக்கியத்திற்கும், மாந்தர்க் கினத்தியல்ப தாகு மறிவு என்னும் வாக்கியத்திற்கு மிடையே அதுபோல என்னும் சொல் தொக்கு நின்றமையின், இஃதெடுத்துக் காட்டுவமை யாயிற்று.

‡ தன் தன்மைத்தாய - நிலத்தின் சம்பந்தமின்றி யிருந்த.

$ "அப்பென்றும் வெண்மைய தாயினு மாங்கந் நிலத்தியல் பாய்த், தப்பின்றி யேகுண வேற்றுமை தான்பல சார்தலினால்" என்று பட்டினத்தடிகள் கூறியிருத்தலு மிங்கறியத் தக்கதாம்.

¶ முதலிய என்றதனால் கனம், பரிசம் முதலியவற்றையுங் கொள்க.

§ தனிநிலைக்கண் - ஒருவரிடத்துஞ் சேராது தனித்திருக்குமிடத்து.

° பிறவினத்தோடு சேர்ந்த வழி - வேறு கூட்டத்தோடு சேர்ந்த விடத்து.

⊙ "ஒட்டிய, காட்சி திரியி னறந்திரியு மென்றுரைப்பர்" என்று அறநெறிச்சாரங் கூறுகின்றது. காட்சி - காணுதல்.

□ முதலிய என்றதனால், கருதுதல் (எண்ணுதல்) ஒழுகுதல் முத-லியவற்றையுங் கொள்க.

⊥ இதனால் (இக்குறளால்) அதனது காரணம் (அறிவு மாறுபடு தலின் காரணம்) கூறப்பட்டது

இஃது எடுத்துக் காட்டுவமையணி. ஆகாசத்தில் தனது தன்மை யதாயிருந்த நீர் பூமியோடு சேர்ந்தவிடத்து நிறம் சுவை முதலிய குணங்கள் வேறுபட்டாற் போலத், தனித்திருக்கையில் தனது தன்மை யதாயிருந்த அறிவு பிறவினத்தோடு சேர்ந்தவிடத்துக் காட்சி முதலிய தொழில்கள் வேறுபடுமென்று இதனால் அதனது காரணம் சொல்லப் பட்டது.

(க-து.) மக்கட்கறிவு அவர் சேர்ந்த இனத்திற் கேற்றவாருகத் திரியுமென்பது. (உ)

2. As water changes its nature to (from) the nature of the soil in which it flows, so will the character of men resemble the character of their associates.

**ந. மனத்தானு மாந்தர்க் குணர்ச்சி யினத்தானு**
**மின்னு னெனப்படுஞ் சொல்.**

பரி:—(இ-ள்.) மாந்தர்க்குப் * பொதுவுணர்வு தம்மனங் காரணமாக உண்டாம்; இவன் இத்தன்மைய னென்று உலகத்தாராற் சொல்லப்படுஞ் சொல் இனங் காரணமாகவுண்டாம், (எ-று).

இயற்கையாய ‡ புலனுணர்வு மாத்திரத்திற்கு இனம் வேண் டாமையின் @ அதனை 'மனத்தானும்' என்றும், செயற்கையாய விசேடவுணர்வு பற்றி நல்லனென்றுகத் தீயனென்றுக நிகழுஞ்சொற்கு இனம் வேண்டுதலின், () அதனை 'இனத்தானும்' என்றுங் கூறினர். † உவமையளவை கொள்ளாது அத்திரிபும் மனத்தானு மென்பாரை நோக்கி இதனுன் அது மறுத்துக் கூறப்பட்டது.

---

* பொது உணர்வு – இயற்கையறிவு.

‡ புலனுணர்வு – சப்த முதலிய விஷயங்களை யறியும் அறிவு.

@ அதனை – புலனுணர்வை (பொதுவுணர்வை) () அதனை – அச்சொல்லை.

† மாந்தர்க்கு அறிவு இனத்தியல்ப தாகுமென்பதை "நிலத்தியல் பானீர்திரிந் தற்றுகும்" என்று உவமான வாயிலாக விளக்கியதை யொப்புக் கொள்ளாது பொதுவுணர்வேயல்லாமல் அத்திரிபும் (அறிவு தன் தன்மை திரிதலும்) மனங்காரணமாகவே யுண்டாகும் என்று கூறும் வாதியை நோக்கி இக்குறளால் அக்கொள்கை மறுத்துக் கூறப் பட்ட தென்பது. [அம்மறுப்பு: இன்னு னெனப்படுஞ் சொல் இனத்தானும் என்பது.]

இயற்கையறிவு மனங் காரணமாக வுண்டாகின்றது, அதற்கு இனமாகிய காரணம் வேண்டுவதில்லை; செயற்கையாகிய சிறப்பறிவு பற்றி ஒருவனை நல்லவனென்றுவது தீயவ னென்றுவது சொல்லுஞ் சொல்லுக்குக் காரணம் முறையே நல்லவர்களின் சேர்க்கையும் தீயவர்களின் சேர்க்கையும் என்று கொள்ளவேண்டி யிருத்தலால், செயற்கையாகிய சிறப்பறிவு இனத்தின் சம்பந்தமில்லாமலே மனங் காரணமாக வுண்டாகுமென்பது பொருந்தாதாயிற்று; பொருந்தா தாகவே, இனங்காரணமாக வுண்டாகும் செயற்கையாய சிறப் பறிவை விளக்குவதற்கு இன்றியமையாது 'நிலத்தியல்பா னீர்திரிந்

தெளி:—(இ-ள்.) மாந்தர்க்கு - மனிதர்க்கு, உணர்ச்சி - பொதுவறிவானது, மனத்தான் - (தம்) மனங்காரணமாக, ஆம் - உண்டாகும், இன்னுனெனப்படும் - (இவன்) இப்படிப்பட்டவனென்று (உலகத்தாரால்) சொல்லப்படுகிற, சொல் - சொல்லானது, இனத்தான் - இனங்காரணமாக, ஆம் - உண்டாகும், (எ-று).

இயற்கையாகிய ஐம்புலவறிவு மாத்திரத்திற்கு இனம் வேண்டாமையால் அதனை 'மனத்தானும்' என்றும், செயற்கையாகிய சிறப்பறிவுபற்றி நல்லவனென்றுவது தீயவனென்றுவது உண்டாகுஞ் சொல்லுக்கு இனம் வேண்டுதலால் அதனை 'இனத்தானும்' என்றுஞ் சொல்லினர். உவமானப் பிரமாணத்தை அங்கீகரியாமல் அவ்வறிவு வேறுபடுதலும் மனத்தாலா மென்பாரை நோக்கி இதனுல் அது மறுத்துக் கூறப்பட்டது.

(க-து.) உலகத்தாரால் ஒருவன் நல்லவனென்றுவது தீயவனென்றுவது சொல்லப்படுதல் அவன் சேர்ந்துள்ள இனத்தினுலேயாம் என்பது. (ந)

3. The power of knowing is from the mind; but from a man's associates will be determined what sort of a man he is.

---

**ச. மனத்து ளதுபோலக் காட்டி யொருவற்**
**கினத்துள தாகு மறிவு.**

பரி:—(இ-ள்) அவ்விசேடவுணர்வு ஒருவற்கு மனத்தின்கண்ணே உளதாவதுபோலத் தன்னைப் புலப்படுத்தி அவன் சேர்ந்த இனத்தின் கண்ணே உளதாம், (எ-று).

* மெய்ம்மை நோக்காமுன் மனத்துளது போன்று காட்டியும் ‡ பின்னேக்கியவழிப் பயின்ற இனத்துளதாயும் இருத்தலின், 'காட்டி' என இறந்த காலத்தாற் கூறினர். $ விசேடவுணர்வுதானும் மனத்தின்

---

தற்றுகும்' என்னும் உவமானப் பிரமாணம் வேண்டியதாயிற் றென்க.

* மெய்ம்மை நோக்காமுன் - உண்மையை விசாரித்துப் பார்ப்பதற்கு முன்னே.

‡ பின்னேக்கியவழி - பின்பு விசாரித்துப்பார்த்த விடத்து.

$ சிறப்பறிவுதானும் பொதுவறிவு உண்டாதற்குக் காரணமான மனத்தினிடத் தல்லவா உண்டாகின்றதென்பாரை நோக்கி, ஆண்டுப் புலப்படுந் துணையே யுள்ளது (அம்மனத்தில் சிறப்பறிவு வெளிப்படு மளவே இருக்கிறது) அச்சிறப்பறிவிற்குக் காரணம் இனம் என்பது இக்குறளால் சொல்லப்பட்டதென்பது. இதனுல் சிறப்பறிவு உண்டாதற்குக் காரணம் இனமென்றும் அச்சிறப்பறிவு வெளிப்படுதற் கிடம் மனம் என்றும் பெற்றுமென்க.

கண்ணே அன்றே உளதாவ தென்பாரை நோக்கி, ஆண்டுப்புலப்படுந் துணையேயுள்ளது, அதற்கு மூலம் இனமென்பது இதனாற் கூறப் பட்டது.

தெளி: — (இ - ள்.) அறிவு - அச்சிறப்பறிவு, ஒருவற்கு - ஒருவனுக்கு, மனத்து - மனத்தினிடத்தே, உளதுபோல - உண்டாவது போல, காட்டி - (தன்னை) வெளிப்படுத்தி, இனத்து - (அவன் சேர்ந்த) இனத்தினிடத்தே, உளதாகும் - உண்டாகும், (எ - று).

சிறப்பறிவு உண்மையை நோக்கி யறியாததற்கு முன்பு மனத்துள்ளது போலக் காட்டியும் பின்பு நோக்கியவிடத்துப் பழகிய இனத்துள்ளதாகியும் இருத்தலால், '(அறிவு மனத்துளதுபோலக்) காட்டி' என இறந்த காலத்தினாற் சொல்லினார். சிறப்பறிவும் மனத்தினிடத்தே அல்லவா உண்டாவதென்பாரை நோக்கி, அங்கு வெளிப்படுமளவே யுள்ளது, அவ்வறிவிற்குக் காரணம் இனமென்பது இதனால் சொல்லப்பட்டது.

(க - து.) ஒருவனுக்குச் சிறப்பறிவானது அவன் சேர்ந்துள்ள இனத்தினாலுண்டாகும் என்பது. (ச)

4. The knowledge of a man, while it appears to be from his mind, is really from his associates.

---

**ரு. மனந்தூய்மை செய்வினை தூய்மை யிரண்டு
மினந்தூய்மை தூவா வரும்.**

பரி: — (இ - ள்.) அவ்விசேடவுணர்வு புலப்படுதற்கிடனாய மனந்தூயனாதற் றன்மையும் செய்யும்வினை தூயனாதற் றன்மையுமாகிய இரண்டும் ஒருவற்கு இனந்தூயனாதற்றன்மை பற்றுக்கோடாக உளவாம், (எ - று).

மனந்தூயனாதலாவது விசேடவுணர்வு புலப்படுமாறு இயற்கையாய அறியாமையின் நீங்குதல். செய்வினை தூயனாதலாவது மொழி மெய்களாற் செய்யும் நல்வினை யுடையனாதல். தூவென்பது § அப்பொருட்டாதல் ¶ "தூவறத் துறந்தாரை" என்பதனானு மறிக. ஒருவன் இனந்தூயனாகவே அதனோடு பயிற்சி வயத்தான் மனந்தூயனாய் அதன்கண் விசேட வுணர்வு புலப்பட்டு அதனாற் சொல்லுஞ் செயலுந் தூயனாமென, இதனால் () இனத்துள்ளவாமாறு கூறப்பட்டது.

---

§ அப்பொருட்டாதல் - பற்றுக்கோடென்னும் பொருளையுடையதாதல்.

¶ கலித்தொகை—நெய்தற்கலி, க. இதன்பொருள்: பற்றுக்கோடொழிய நீங்கினவரை என்பது. நச்சினார்க்கினியார் 'தாவறத் துறந்தாரை' என்று பாடங்கொண்டு 'வலியில்லையாம்படி நம்மைத் துறந்தவரை' என்று பொருளுரைத்திருக்கின்றனர்.

() இனத்துள்ளவாமாறு - நல்லினத்தினால் மனம் வாக்குக் காய மென்பனவற்றிற்குப் பரிசுத்தத்தன்மை யுண்டாகும் வகை.

தெளி:— (இ - ள்.) மனம் - (அச்சிறப்பறிவு வெளிப்படுவதற்கு இடமாகிய) மனம், தூய்மை - பரிசுத்தனாதல் தன்மையும், செய்வினை - செய்யுந்தொழில், தூய்மை - பரிசுத்தனாதல் தன்மையும், (ஆகிய), இரண்டும்—, இனந் தூய்மை-(ஒருவனுக்கு) இனம் பரிசுத்தனாதல் தன்மை, தூவா - பற்றுக்கோடாக, வரும் - உண்டாகும், (எ - று).

மனம் பரிசுத்தனாதலாவது சிறப்பறிவு வெளிப்படும்படி இயற்கையாகிய அறியாமையினின்றும் நீங்குதல். செய்வினை பரிசுத்தனாதலாவது சொல்லாலும் உடம்பாலும் செய்யும் நல்ல தொழிலையுடையவனாதல். தூ என்பது பற்றுக்கோடென்னும் பொருளில் வந்தது. ஒருவன் இனத்தாற் பரிசுத்தனாகவே அவ்வினத்தோடு பழக்கவசத்தால் மனம் பரிசுத்தனாகி அம்மனத்தினிடத்துச் சிறப்பறிவு வெளிப்பட்டு அவ்வறிவால் சொல்லும் செயலும் பரிசுத்தமுடையவனாவனென்று, இதனால் இனத்தால் உண்டாகும் விதம் சொல்லப்பட்டது.

(க - து.) மனச்சுத்தமும் செய்தொழிற் சுத்தமும் ஒருவனுக்கு அவன் சேர்ந்துள்ள இனச்சுத்தத்தினா லுண்டாகும். (ரு)

5. Chaste company is the staff on which come these two things, purity of mind and purity of conduct.

சு. **மனந்தூயார்க் கெச்சநன் றாகு மினந்தூயார்க்**
**கில்லைநன் றாகா வினை.**

—— —

பரி:—(இ - ள்.) மனந்தூயராயினார்க்கு ¶ மக்கட்பேறு நன்றாகும்; இனந்தூய ராயினார்க்கு நன்றாகாத வினை யாதும் இல்லை, (எ - று).

* காரியங் காரணத்தின் வேறுபடாமையின் 'எச்சநன் றாகும்' என்றும், நல்வினைத்தோடெண்ணிச் செய்யப்படுதலின் § நன்றாகா வினையில்லை என்றுங் கூறினார்.

---

¶ மக்கட்பேறு - மக்களைப் பெறுதல்.

* நிமித்த காரணம் என்றுங் காரியத்திற்கு வேறுபட்டதாக விருத்தலால் இங்குக் காரணமென்றது முதற் காரணத்தை. காரியத்தோடு ஒற்றுமைச் சம்பந்தமுடையது முதற்காரணமாம். மனந்தூயராயினாரைக் காரணமாகவும் மக்கட்பேற்றைக் காரியமாகவுங் கொண்டு 'மனந்தூயார்க் கெச்ச நன்றாகும்' என்று கூறியது மனுதரும சாஸ்திரம் ஒன்பதாவது அத்தியாயம் புத்திர விஷயத்தில் 'ஒரு தானியத்தை விதைத்தால் மற்றொரு தானியமாக விளைகின்றதென்பதில்லை; எந்த வித்தை விதைக்கிறோமோ அந்தப்பயிர்தான் முளையும்'' என்றும், எடுகூறு கூறுமிடத்தில் '' தன்னாத்மாவிற்கும் பிள்ளைக்கும் வேற்றுமையில்லை'' என்றுங் கூறுவதாலும் நன்கு விளங்கும். இங்குத் '' தக்கார் தகவிலர் '' என்னுங் குறளின் விசேட வுரையும் அதன் குறிப்புரையும் கவனிக்கத்தக்கனவா மென்க முதற் காரணத்தின் பொதுக்குணம் அதன் காரியத்திலு மிருக்கு மென்பது இங்குணர்தற் பாற்றும்.

§ எல்லாவினையு நல்லவாம் என்றும் பாடமுண்டு.

தெளி:—(இ-ள்.) மனந்தூயார்க்கு - மனம் பரிசுத்தமானவர்க்கு, எச்சம் - மக்கட்பேறு, நன்றாகும் - நல்லதாகும், இனந்தூயார்க்கு - இனம் பரிசுத்தமானவர்க்கு, நன்றாகாவினை - நல்லதாகாத செயல், இல்லை - (யாதும்) இல்லை, (எ-று).

காரியம் காரணத்திலும் வேறுபடாமையின் (மைந்தன் தந்தையினும் வேறுபடாதென்பதனால்) 'எச்ச நன்றாகும்' என்றும், இனந்தூயரால் (வினை) நல்லினத்தோடு எண்ணிச் செய்யப்படுதலால் (அவர்க்கு) நன்றாகா வினையில்லை என்றும் சொல்லினார்.

(கு-து) இனச்சுத்த முள்ளார்க்கு எல்லா நன்மையு முண்டாம் என்பது. (சா)

6. To the pure-minded there will be a good posterity; by those whose associates are pure, no deeds will be done that are not good.

———

எ. மனநல மன்னுயிர்க் காக்க மினநல
மெல்லாப் புகழுந் தரும்.

பரி:— (இ-ள்) நிலைபெற்ற உயிர்கட்கு மனத்தது நன்மை செல்வத்தைக் கொடுக்கும்; இனத்தது நன்மை அதனோடு எல்லாப் புகழையுங் கொடுக்கும், (எ-று).

* மன்னுயிரென்றது ஈண்டு உயர்திணைமே னின்றது § தருமென்னும் இடவழுவமைதிச்சொல் முன்னுங் கூட்டப்பட்டது. £ உம்மை-இறந்தது தழீஇய எச்சவும்மை. ‡ மன நன்றாதல் தானே அறம்

---

* மனத்தினது நன்மையையும் இனத்தினது நன்மையையும் உடைத்தாயிருத்தல் அஃறிணையுயிர்க் கில்லாமையினால் 'மன்னுயிர் என்றது ஈண்டு உயர்திணைமே னின்றது' எனக் கூறப்பட்டது.

§ தனக்குரிய தன்மை முன்னிலையிடத்துச் சொற்களைவிட்டு இனநலம் என்னும் படர்க்கையிடத்துச் சொல்லோடு கூடி வழுவமைதியாய் வந்த தரும் என்னும் வினைச்சொல் மனநலம் என்பதனோடுங் கூட்டப்பட்டது "அவற்றுள் — தருசொல் வருசொல் லாயிரு கிளவியும், தன்மை முன்னிலை யாயீரிடத்த" என்னும் தொல்காப்பியச் சூத்திரம் இங்குக் கவனிக்கத் தக்கதாம்.

£ புகழும் என்னும் உம்மை இனநலம் செல்வத்தைத் தருவதல்லாமல் என்னும் பொருளையுணர்த்துதலால் இறந்தது தழுவிய எச்ச உம்மையாயிற்று.

‡ "மனத்துக்கண் மாசில னாத லனைத்தறன்" என்று அறன் வலியுறுத்த லதிகாரத்திலிருப்பதும் இங்குக் கவனிக்கத்தக்கதாம்.

ஆகலின், அதனை ஆக்கந்தரும் என்றும், * புகழ் கொடுத்தற்குரிய நல்லோர் தாமே இனமாகலின் 'இனநல மெல்லாப் புகழுந் தரும்' என்றும் கூறினூர். £ மேல் $ மன நன்மை இன நன்மை பற்றி வரும் என்பதனை உட்கொண்டு அஃதியல்பாகவே உடையார்க்கு அவ்வின நன்மை வேண்டா வென்பாரை நோக்கி ¶ அதுவேயன்றி அத்தன்மைய பலவற்றையும் தருமென அவர்க்கும் அது வேண்டு-மென்பது இவ்விரண்டு பாட்டானுங் கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) மன்னுயிர்க்கு - நிலைபெற்ற உயிர்களுக்கு, மன நலம் - மனத்தினது நன்மையானது, ஆக்கம் - செல்வத்தை, தரும் - கொடுக்கும், இன நலம் - இனத்தினது நன்மையானது, எல்லாப்-புகழும் - (அச்செல்வத்தோடு) எல்லாப் புகழையும், தரும் - கொடுக்கும், (எ-று).

மன்னுயிரென்னும் அஃறிணைப் பெயர் இங்கு (மக்களென்னும்) உயர்திணைப் பொருள்மேல் நின்றது. தரும் என்னும் இடவழு-வமைதிச் சொல் மனநலம் என்பதனோடுங் கூட்டப்பட்டது. புகழும் என்ற உம்மை - இறந்தது தழுவிய எச்சவும்மை. மனம் நன்றுதல் தானே அறமாகலால் அம்மனநலத்தை ஆக்கந்தரும் என்றும், புகழ் கொடுத்தற்குரிய நல்லோர் தாமே இனமாகலால் 'இனநலமெல்லாப் புகழுந்தரும்' என்றும் சொல்லினர். முன்னே மனந்தூய்மை, இனந் தூய்மை தூவாவரு மென்பதனை யங்கீகரித்து அம்மன நன்மையை இயல்பாகவே உடையவர்களுக்கு அவ்வினநன்மை வேண்டா வென்பாரைநோக்கி, அச்செல்வத்தையே யல்லாமல் அப்படிப்பட்ட பலவற்றையும் தருமென்று அவர்க்கும் அவ்வினநன்மை வேண்டும் என்பது இவ்விரண்டு பாட்டாலும் சொல்லப்பட்டது.

(கூ-து) இனநலமானது மனநலத்தால் வருஞ் செல்வத்தோடு எல்லாப்புகழையும் தருமென்பது. (எ)

7. Goodness of mind will give wealth, and good society will bring all praise, to men.

———

* அறநெறிச்சாரம் ''இம்மையடக்கத்தைச் செய்து புகழாக்கி யும்மை யுயர்கதிக் குய்த்தலால் - மெய்ம்மையே, பட்டாங்கறமுரைக் கும் பண்புடையாளரே, நட்டா ரெனப்படு வார்'' என்று கூறியிருத்-தலும் மிங்கறியத்தக்கதாம்.

£ மேல் – இவ்வதிகாரத்தின் ஐந்தாவது குறளில்.

$ மனந்தூய்மை யினந்தூய்மை தூவாவரும் என்றும் பாட-முண்டு.

¶ அதுவேயன்றி அத்தன்மைய பலவற்றையும் தருமென அவர்க்கும் அது வேண்டும் என்பது - மனநன்மை தருஞ் செல்வத்-தையே யல்லாமல் அச்செல்வம் போன்றனவாய பல புகழையும் தருமென்று மனநன்மையை யியல்பாகவே உடையார்க்கும் இன நன்மை வேண்டு மென்பது.

அ. மனநல நன்குடைய ராயினுஞ் சான்றோர்க்
கினநல மேமாப் புடைத்து.

பரி:—(இ-ள்.) மனநன்மையை முன்னைநல்வினையால் தாமே உடையராயினும் அமைந்தார்க்கு இனநன்மை அதற்கு வலியாதலை யுடைத்து, (எ-று).

£ நன்காலென்னும் மூன்றனுருபு விகாரத்தாற் றொக்கது. அந்நல்வினை உள்வழியும் மனநலத்தை வளர்த்துவருதலின், அதற்கேமாப் புடைத் தாயிற்று.

தெளி:—(இ-ள்.) மனநலம் - மனநன்மையை, நன்கு - (முன்னை) நல்வினையினால், உடையராயினும் - (தாமே) உடையவராயிருந்தாலும், சான்றோர்க்கு-(குணங்கள் பலவற்றாலும்) நிறைந்தோர்க்கு, இனநலம்- இன நன்மையானது, ஏமாப்பு-(அம்மன நன்மைக்கு) வலியாதலை, உடைத்து - உடையதாம், (எ - று).

நன்கால் என்னும் மூன்றனுருபு செய்யுள் விகாரத்தினால் தொக்கு (நன்கு என) நின்றது. அந்நல்வினை உள்ளவிடத்தும் மனநலத்தை வளர்த்து வருதலால், அம்மனநலத்திற்கு இனநலம் வலியாத லுடையதாயிற்று.

(க-து.) மன நன்மையை யுறுதிசெய்வது இனநன்மையாம். (அ)

8. Although they may have great natural goodness of mind, yet good society is an advantage to the wise.

---

கூ. மனநலத்தி னாகு மறுமைமற் றஃது
மினநலத்தி னேமாப் புடைத்து.

பரி :—(இ-ள்.) ஒருவற்கு மனநன்மையானே மறுமையின்பம் உண்டாம்;* அதற்கு அச்சிறப்புத்தானும் இனநன்மையான் வலிபெறுதலை யுடைத்து, (எ-று).

¶ 'மன நலத்தினாகு மறுமை' என்றது மறுமை பயப்பது மன நன்மைதானே, பிறிதொன்றன்றென்னும் மதத்தை $ உடம்பட்டுக்

---

£ நன்கால் எனக் கருவிப்பொருளில் வந்த மூன்றனுருபு செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது நன்கு என்பது நல்வினையை (நன்மைக் கேதுவாய வினையை) யுணர்த்துதலின், காரியவாகு பெயராம்.

*அதற்கு அச்சிறப்புத்தானும் - மன நன்மைக்கு மறுமை யின்பத்தைத்தரு மச்சிறப்பும்.

¶ "கெடுக்க வல்லதுங் கெட்டவர் தங்களை, யெடுக்க வல்லது மிம்மன மென்றதை, யடக்க வல்லவ னைய பவக்கடல், கடக்க வல்லவனவன் கடிதரோ" என்பது பிரபுலிங்கலீலை.

$ உடம்பட்டு – ஏற்றுக்கொண்டு.

கூறியவாறு. †மற்று - வினைமாற்று. §உம்மை - இறந்தது தழீஇய எச்சவும்மை. ஒரோவழித் தாமதகுணத்தான் மனநலந் திரியினும் நல்லினம் ¶ ஒப்ப நிறுத்தி மறுமைபயப்பிக்குமென நிலைபெறச்செய்யுமாறு கூறப்பட்டது இவையைந்து பாட்டானும் £ சிற்றினஞ் சேராமையது சிறப்பு நல்லினஞ்சேர்தலாகிய எதிர்மறை முகத்தாற் கூறியவாறறிக.

தெளி:– (இ-ள்.) (ஒருவனுக்கு) மனநலத்தின் - மனநன்மையாலே மறுமை - மறுமையின்பம், ஆகும்-உண்டாம், மற்றஃதும் - (அம்மன நன்மைக்கு) அச்சிறப்புத்தானும், இனநலத்தின் - இனநன்மையால், ஏமாப்பு - வலிபெறுதலை, உடைத்து - உடையதாம், (எ - று).

'மனநலத்தினுகு மறுமை'யின்பத்தைத் தருவது மனநன்மையே, மற்றொன்று அன்று என்கிற மதத்தை உடன்பட்டுச் சொல்லியபடியாம். மற்று - வினைமாற்றுப் பொருளில் வந்தது. அஃதும் என்ற உம்மை - இறந்தது தழுவிய எச்சவும்மை. ஒரோவிடத்துத் தாமத குணத்தினால் மனநலம் வேறுபட்டாலும் அதனை நல்லினம் சீர்பெறத் திருத்தி மறுமையின்பத்தை யடைவிக்கு மென்று இனநலம் மன நலத்தை நிலைபெறச் செய்யும் வகை சொல்லப்பட்டது. இவை ஐந்து பாட்டாலும் சிற்றினஞ் சேராமையினது சிறப்பு நல்லினம் சேர்தலாகிய எதிர் மறைமுகத்தாற்சொல்லியவா றறிக.

(க - து.) இனநன்மை மனநன்மையால் வரும் மறுமையின்பத்தை நிலைபெறச் செய்யும் என்பது. (கூ)

9. Future bliss is the result of goodness of mind; and even this acquires strength from the society of the good.

---

† மனநலம் இனநலத்தினால் ஏமாப்புடைய தாதலின்றாயின், அம் மன நலத்தினால் மறுமையின்பமுண்டாகாது என்று ஆகும் என்னும் வினையை ஆகாதென்னும் வினையாக மாற்றியதினால், மற்று வினை மாற்றுப்பொருள தாயிற்று.

§ அஃதும் என்னும் உம்மை இனநலம் மனநலவாயிலாக மறுமை யின்பத்தைத் தருதலேயல்லாமல் என்னும் பொருளையுணர்த்துதலின், இறந்தது தழுவிய எச்சவும்மையாயிற்று.

¶ ஒப்பநிறுத்தி மறுமைபயப்பிக்கும் - பொருந்துமாறு (சரியான நிலையில்) நிற்கச்செய்து (மனநன்மை வாயிலாக) மறுமையின்ப முண்டாகச் செய்யும்,

£ நல்லினஞ் சேர்தல் சிற்றினஞ்சேர்தலுக்கு எதிர்மறையாக விருத்தலால் 'சிற்றினஞ்சேராமையது சிறப்பு நல்லினஞ் சேர்தலாகிய எதிர்மறை முகத்தாற் (வாயிலாகக்) கூறியவாறறிக' என்று கூறப் பட்டது. எதிர்மறை - விரோதம்.

**௪௦. நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தி னல்லற் படுப்பதூஉ மில்.**

**பரி:—(இ - ள்) ஒருவற்கு நல்லினத்தின் மிக்க துணையும் இல்லை; தீயவினத்தின் மிக்க பகையும் இல்லை, (எ-று).**

† ஐந்தனுருபுகள் ‡ உறழ்பொருளின்கண் வந்தன. ஊங்கென்பது பின்னுங்கூட்டி உம்மை மாற்றியுரைக்கப்பட்டது. நல்லினம் அறியாமையின் நீக்கித் துயருறுமற் காத்தலின் அதனைத் ' துணை ' என்றும் தீயினம் அறிவின் நீக்கித் துயருறுவித்தலின் அதனை ¶ 'அல்லற்படுப்பதூஉம்' என்றுங் கூறினர். $ அல்லற்படுப்பதென்பது ஏதுப்பெயர். இதனால் * விதி யெதிர்மறைகள் உடன் கூறப்பட்டன.

தெளி:—(இ-ள்.) (ஒருவனுக்கு) நல்லினத்தினூங்கு - நல்ல இனத்தின் மிக்க, துணை(யும்) இல்லை-துணையும் இல்லை, தீயினத்தின்(ஊங்கு) - தீயஇனத்தின் மிக்க, அல்லற்படுப்பதூஉம்-பகையும், இல்-இல்லை, (எ-று).

நல்லினத்தின், தீயினத்தின் என்னும் ஐந்தாம் வேற்றுமை யுருபுகள் உறழ்பொருளில் வந்தன. ஊங்கு என்பது தீயினத்தின் என்பதனோடும் கூட்டி ஊங்கும் என்னும் உம்மையைப் பிரித்துத் துணையென்பதனோடு சேர்த்துச் சொல்லப்பட்டது. (ஒருவனை) நல்லினம் அறியாமையினின்றும் நீக்கித் துன்பமடையாவாறு காத்தலால் அதனைத் ' துணை ' என்றும் தீயினம் அறிவினின்றும் நீக்கித் துன்பமடையச் செய்தலால் அதனை ' அல்லற்படுப்பதூஉம் ' என்றும் சொல்லினர். அல்லற்படுப்பது என்பது காரணப்பெயர். இதனால் விதியும் எதிர்மறையும் சேர்த்துச்சொல்லப்பட்டன.

(க-து.) ஒருவனுக்கு நல்லினத்திற் சிறந்த துணையும் தீய வினத்தின் மிகுந்த பகையுமில்லை என்பது. (௪௦)

---

† நல்லினத்தின் தீயினத்தின் என்பவற்றிலுள்ள இன் என்னும் ஐந்தாம் வேற்றுமை யுருபுகள்.

‡ ஒன்றினொன்று மிக்கு (சமானமாகாது) மாறுபடுவது உறழ் எனப்படும். நச்சினர்க்கினியர் '' உறழ்தல் ஒன்றனின் ஒன்றை மிகுத்தல் '' என்பர். இக்காலவழக்கு எல்லைப்பொருளில் வந்தது என்ப.

¶ பகை என்றும் பாடமுண்டு.

$ அல்லற்படுப்பது (துன்பத்தை யுண்டாக்குவது) ஒருவனுக்குப் பகையா யிருத்தலால், பகையை அல்லற்படுப்பது என்று கூறியது ஏது (காரண)ப் பெயராமென்க. ஏதுப்பெயர் - ஒரு நிமித்தம் பற்றி வரும்பெயர்.

* 'நல்லினத்தினூங்குந் துணையில்லை' என்று விதியும் (உடம்பாடும்) 'தீயினத்தி னல்லற் படுப்பதூஉமில்' என்று எதிர்மறையும் உடன் சொல்லப் பட்டன. நல்லினத்திற்குத் தீயினம் எதிர்மறையா யிருத்தலால், நல்லினம் உடம்பாடும் தீயினம் எதிர்மறையு மாயின.

10. There is no greater help than the company of the good; there is no greater source of sorrow than the company of the wicked.

---

## ஒன்பதாம் அதிகாரம்

## 47 தெரிந்து செயல்வகை

## On Acting with Fore-thought

பரி:—அஃதாவது அரசன் தான் செய்யும் வினைகளை ஆராய்ந்து செய்யுந் திறம் அச்செயல் பெரியாரைத் துணைக்கோடல் பயனுடைத்தாய வழி அவரோடுஞ் செய்யப்படுவதாகலின், இது சிற்றினஞ் சேராமையின்பின் வைக்கப்பட்டது.

தெளி:—அஃதாவது அரசன் தான்செய்யுந் தொழில்களை ஆராய்ந்து செய்யுந்திறம். அச்செயல் பெரியாரைத் துணைக் கொள்ளுதல் பயனுடைய தாயவிடத்து அவரோடுஞ் செய்யப்படுவ தாகலால், இது (தெரிந்து செயல் வகை) சிற்றினஞ் சேராமையின் பின் வைக்கப்பட்டது.

**க. அழிவதூஉ மாவதூஉ மாகி வழிபயக்கு**
**மூதியமுஞ் சூழ்ந்து செயல்.**

பரி:—(இ-ள்.) வினை * செய்யுங்கால் அப்பொழுது அதனால் அழிவ-தனையும் அழிந்தாற்பின் ஆவதனையும் ஆய்நின்று பிற்பொழுது தரும் ஊதியத்தையுஞ் சீர்தூக்கி உறுவதாயிற் செய்க, (எ-று).

உறுவதாவது † நிகழ்வின்கண் அழிவதனில் ஆவது மிக்கு எதிர் வினும் அது வளர்ந்துவருதல். ‡ அழிவதின்மையின் எதிர்வின்கண்வரு மாக்கத்தை 'ஊதியம்' என்றார். எனவே, ¶ அவ்வூதியம் பெறின்

---

* "செய்யும் பொழுதே யழிபொருளிற் சிறப்ப தொப்ப திரண்டினுளொன், றுய்ய வுதவி வழிபயக்கு மொண்மை வினையைத் தேர்ந்துளத்தில், ஐய மகன்ற வினத்தோடு மாய்ந்துந் தனித்தும் புரிந்திடுக, வெய்ய வாக்கங் கருதிமுதல் விளிக்கும் வினையைப் புரியற்க" என்பது விநாயக புராணம்.

† நிகழ்காலத்தில் அழியும் பொருளிலும் ஆகும் பொருள் அதிக மாகி எதிர்காலத்திலும் அப்பொருள் விருத்தியடைந்து வருதல்.

‡ (காரியமுற்றுப் பெற்றபின் வரும்பொருளுக்கு) அறிவில்லாமை யினால், எதிர்காலத்தில் வரும் பொருளை 'ஊதியம்' என்று கூறினார். (தொழில் செய்யும்போது வரும்பொருளை ஆவது என்றும், தொழில் முடிந்த பின்வரும் பொருளை ஊதியம் என்றும் கூறினார்.)

¶ எதிர்காலத்தில் பொருளைப் பெறுவதா யிருந்தால், நிகழ் காலத்தில் அழியும் பொருளும் ஆகும்பொருளும் தம்முள் ஒத்திருந் தாலும் (தொடங்கிய காரியத்தை) விடுதல் கூடாதென்பது பெறப்

நிகழ்வின்கண் அழிவதும் ஆவதுந் தம்முளொத்தாலும்ஒழிதற்பாற்றன் றென்பது பெற்றும். † இரண்டு காலத்தும் பயனுடைமை தெரிந்து செய்கவென்பதாம்.

தெளி :—(இ-ள்.) (தொழில் செய்யுமிடத்து) அழிவதூஉம் (அப்போது அத்தொழிலால்) அழிவதையும், ஆவதூஉம் (அழிந்தால் பின்னே) ஆவதையும், ஆகி-ஆய், (நின்று), வழிபயக்கும்-பிற்காலத்துத் தரும், ஊதியமும் - இலாபத்தையும், சூழ்ந்து - சீர்தூக்கி, (உறுவதாயின்), செயல் - செய்யக்கடவன், (எ - று).

உறுவதாவது நிகழ்காலத்தில் (செய்கிறபோது) அழிவதில் ஆவது மிகுந்து பிற்காலத்தும் அவ்வாவது வளர்ந்துவருதல். அழிவதில்லாமை-யால் பின்வரும் ஆக்கத்தை 'ஊதியம்' என்றார். எனவே அவ்வூதியத்தைப் பெற்றால் நிகழ்காலத்தில் (செய்கிறபோது) அழிவதும் ஆவதும் தம்முள் ஒத்திருந்தாலும் ஒழியும் பான்மையதன் றென்பது பெறப்பட்டது. இரண்டு காலத்திலும் பயனுடைமையை யறிந்து செய்யவேண்டு மென்பதாம். சீர்தூக்கல் - ஆராய்தல். ஒழியும் பான்மையதன் றென்பது பெறப்பட்டது. இரண்டு காலத்திலும் பயனுடைமையை யறிந்து செய்யவேண்டு மென்பதாம். சீர்தூக்கல் - ஆராய்தல். ஒழியும்பான்மையதன்று - விடலாகாது.

(க-து.) அழிவதையும் ஆவதையும் இலாபத்தையும் ஆராய்ந்து தொழில் செய்யவேண்டும் என்பது. (க)

1. Let a man reflect on what will be lost, what will be acquired, and from these what will be his ultimate gain, and then, let him act.

---

**உ. தெரிந்த வினத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்
கரும்பொருள் யாதொன்று மில்.**

பரி:—(இ-ள்) தாம் தெரிந்துகொண்ட ‡இனத்துடனே செய்யத்தகும் வினையை ஆராய்ந்து பின்தாமேயும் எண்ணிச் செய்து முடிக்கவல்ல அரசர்க்கு எய்துதற் கரியபொருள் யாதொன்றும் இல்லை, (எ-று).

---

பட்டது; படவே, நிகழ்காலத்தில் அழியும்பொருள் அதிகமாயும் ஆகும் பொருள் குறைவாயுமிருந்தால் அத்தகைய காரியத்தை விட்டுவிட-வேண்டு மென்பதாயிற்றென்க. இதனால் ஒருதொழிலைச் செய்யு மிடத்து அது காரணமாக அழியும் பொருள் குறைவாகவும் அப்போதாகும் பொருள் அதிகமாகவும், பின்வரும் பொருள் விருத்தி யடைவதாகவும் இருக்கவேண்டுமென்றும், அவ்வாறன்றிப் பின்வரும் பொருளோடு அழியும் பொருளும் அப்போது ஆகும் பொருளும் சமமாகவாவது இருக்கவேண்டுமென்றும் பெற்றுமென்க.

† இரண்டுகாலத்தும் - நிகழ்காலத்திலும் எதிர்காலத்திலும்.

‡ இனம் - புரோகிதரும் அமைச்சரும். பெரியாரைத் துணைக் கோடலதிகாரம் இரண்டாங் குறளின் விசேடவுரையில் "புரோகிதரை யும் அமைச்சரையும் கூறியவாறுயிற்று" என்று கூறியிருத்தலு மிங்கறியத்தக்கதாம்.

ஆராயப் படுவனவெல்லாம் ஆராய்ந்து போந்த இனமென்றுமாம். 'செய்வார்க்கு' என்றதனால், வினையென்னுஞ் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. வினையாவது † மேற்சேறன் முதல் வேறல் ஈறாய தொழில். பொருள்கட் கேதுவாய ‡ அதனிற் றவறாமையின், அரிய பொருள்களெல்லாம் எளிதினெய்துவ ரென்பதாம். இவை யிரண்டு பாட்டானுஞ் செய்யத்தகும் வினையும் அது செய்யுமாறும் கூறப்பட்டன.

தெளி: — (இ-ள்.) தெரிந்த-(தாம்) தெரிந்துகொண்ட, இனத்தொடு - இனத்துடனே, தேர்ந்து - (செய்யத்தகுந்தொழிலை) ஆராய்ந்து. எண்ணி - (பின்னேதாமேயும்) எண்ணி, செய்வார்க்கு - செய்துமுடிக்க வல்ல அரசருக்கு, அரும்பொருள் - பெறுதற்கரிய பொருள், யாதொன்றும் —, இல் - இல்லை, (எ-று)

'தெரிந்த இனம்' என்பதற்கு ஆராயப்படுவனவெல்லாம் ஆராய்ந்து வந்த இனம் என்று பொருளுரைப்பினும் பொருந்தும் 'செய்வார்க்கு' என்று கூறியதினால் செய்யத்தகுந்தொழில் என்னும் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. தொழிலாவது போர்க்குச் செல்லுதல், தம் மதிலைக் காத்தல், பகைவருடைய மதிலை வளைத்துக் கொள்ளுதல், பகைவரோடு போர் செய்தல், பகைவரை வெல்லுதல் என்னுந் தொழிலாம். பொருள்களுக்கேதுவாகிய அத்தொழிலில் தவறாமையால், அரியபொருள்க ளெல்லாம் (தெரிந்த வினத்தொடு தேர்ந் தெண்ணிச் செய்வார்) எளிதிற் பெறுவாரென்பதாம். இவை யிரண்டு பாட்டாலும் செய்யத்தகுந் தொழிலும் அத்தொழில் செய்யும் விதமும் சொல்லப்பட்டன.

---

† மேற்சேறன் முதல் வேறல் ஈறாயதொழில் என்று கூறினமையின், இடை நின்றன தம்மதிலைக்காத்தல், பகைவருடைய மதிலை வளைத்துக் கொள்ளுதல், பகைவரோடு போர்செய்த லென்பனவாம்.

மேற்சேறல் வஞ்சித்திணையாம்; தம்மதிலைக் காத்தல் நொச்சித் திணையாம்; பகைவருடைய மதிலை வளைத்துக்கொள்ளுதல் உழிஞைத் திணையாம்; பகைவரோடு போர்செய்தல் தும்பைத்திணையாம்; பகைவரை வெல்லுதல் வாகைத்திணையாம்.

"மகிழ்நிரைகொள் வதுவெட்சி கரந்தை மீட்டல் மாற்றூர்பாற் செலல்வஞ்சி யூன்றல் காஞ்சி, பகர்மதிலைக் காக்குமது நொச்சி சுற்றிப் படைவளைத்த லுழிஞைபொரல் தும்பை வென்று, புகழ்படைத்தல் வாகை" என்று சிதம்பரப்பாட்டியல் கூறுவதும், "மாற்றூர் மேற்செலல் வஞ்சி யாகுமே", "காமரு தன்னரண் காப்பது நொச்சி", 'பகைஞரரணைப் பற்றுத லுழிஞை", "அதிரப் பொருவது தும்பை யாகும்", "மாற்றரோட வருத்தி வெல்வது, வாகை யெனப்பெயர் வைக்கப் படுமே" என்று முத்து வீரியங் கூறுவதும் இங்குணர்தற் பாலனவாம்.

‡ அதனிற் றவறாமையின் - பகைவருடைய நாட்டைக்கொள்ள நினைத்துப் போர்செய்தற்கு அப்பகைவர்மேல் செல்லுதல் முதலிய தொழில்களில் சிறிதும் தவறிப்போத லில்லாமையால்.

(க - து.) நல்லினத் தோடாராய்ந்து பின்னர்த் தாமு மாலோசித்துத் தொழில் செய்வார்க்குப் பெறுதற் கரிதான பொருள் ஒன்று மில்லை என்பது.

2. There is nothing too difficult to be attained by those who before they act, reflect well themselves, and thoroughly consider the matter with chosen friends.

———

**ங. ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
யூக்கா ரறிவுடை யார்.**

பரி :—(இ-ள்.) மேல் எய்தக்கடவ ஊதியத்தினை நோக்கிமுன்னெய்தி நின்ற முதல்தன்னையும் இழத்தற் கேதுவாய செய்வினையை அறிவுடையார் மேற்கொள்ளார், (எ-று).

கருதி யென்னும் வினையெச்சம் இழக்கு மென்னும் பெயரெச்சவினை கொண்டது. * எச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. ஆக்கமே அன்றி முதலையும் இழக்கும் வினைகளாவன: வலியுங் காலமும் இடனும் அறியாது பிறர் மண் கொள்வான் சென்று தம்மண்ணும் இழத்தல் போல்வன. முன் செய்து போந்த வினையாயினு மென்பார் 'செய்வினை' என்றார்.

தெளி:—(இ-ள்.) ஆக்கங்கருதி (பின்பெறக் கடவதாகிய) இலாபத்தை நோக்கி, முதல் - (முன்பெற்றுள்ள) முதலையும், இழக்கும் - இழத்தற்கு ஏதுவாகிய, செய்வினை - செய்தொழிலை, அறிவுடையார் - அறிவுடையவர், ஊக்கார் - மேற்கொள்ளார், (எ-று).

கருதி யென்னும் வினையெச்சம் இழக்கு மென்னும் பெயரெச்ச வினைகொண்டு (கருதி யிழக்கும் என) முடிந்தது. முதலும் என்னும் எதிரது தழுவிய எச்சவும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது ஆக்கத்தையே யன்றி முதலையும் இழக்குந் தொழில்களாவன வலியும் காலமும் இடமும் அறியாமல் பிறர் தேசத்தைப் பிடிக்கப் போய்த் தந்தேசத்தையும் இழத்தல் போல்வன. முன் செய்துவந்த வினையாயினு மென்பார் செய்வினை' என்றார்.

(க-து ) அறிவுடையார் இலாபத்தை நினைத்து முதலையுமிழத்தற் கேதுவாய தொழிலைச் செய்யார் என்பது. (ங.)

3. Wise men will not, for the sake of profit, undertake works that will consume their principal.

———

**ச. தெளிவி லதனைத் தொடங்கா ரிளிவென்னு
மேதப்பா டஞ்சு பவர்.**

---

* ஆக்கமே யன்றி முதலும் என்னும் எதிரதுதழீய வெச்சவும்மை.

**பரி.—(இ-ள்.) இனத்தோடும் தனித்தும் ஆராய்ந்து துணிதலில்லாத வினையைத் தொடங்கார், தமக்கு இளிவரவென்னும் குற்றமுண்டாதலை அஞ்சுவார், (எ-று).**

*தொடங்கின் இடையின் மடங்கலாகாமையின் † 'தொடங்கார்' என்றார். இளிவரவு - அவ்வினையாற் பின்னழி வெய்தியவழி ‡ அதன் மேலும் அறிவும் மானமும் இலரென்று உலகத்தார் இகழும் இகழ்ச்சி. அஃதுண்டாதல் ஒருதலை யாகலின், ¶ தெளிவுள்வழித் தொடங்குக வென்பதாம்.*

*தெளி :—(இ-ள்.) இளிவென்னும் - (தமக்கு) இளிவரவென்னும், ஏதப்பாடு - குற்றமுண்டாதலை, அஞ்சுபவர் - அஞ்சுவோர், தெளிவில தனை - (இனத்தோடும் தனித்தும் ஆராய்ந்து) நிச்சயித்தலில்லாத தொழிலை, தொடங்கார் - ஆரம்பித்துச் செய்யார், (எ-று).*

*(ஒரு தொழிலைச் செய்யத்) தொடங்கினால் (அதனை) நடுவிலே மடங்குதல் (விடுதல்) கூடாமையால் 'தொடங்கார்' என்றார். இளிவரவு - அத்தொழிலால் பின்னே அழிவை அடைந்த விடத்து அதன் மேலும் அறிவும் மானமும் இலரென்று உலகத்தார் இகழும் இகழ்ச்சியாம். அவ்விகழ்ச்சியுண்டாதல் நிச்சயமாதலால், தெளிவுள்ள விடத்துத் (தொழில் செய்யத்) தொடங்குக என்பதாம். இளிவரவு — அவமானம்.*

*(க-து.) குற்றத்திற் கஞ்சும் அரசர் ஆராய்த்து துணிதலில்லாத தொழிலைத் தொடங்கிச் செய்யார் என்பது. (ச)*

**4. Those who fear reproach will not commence anything which has not been thoroughly considered and made clear to them.**

---

**ரு. வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோ ராறு.**

**பரி:—(இ-ள்.) சென்றால் நிகழும் திறங்களையெல்லாம் முற்ற வெண்ணாது சில எண்ணிய துணையானே அரசன் பகைவர்மேற் $ செல்லு-தல் அவரை வளருநிலத்திலே நிலைபெறச் செய்வதொரு நெறியாம்.**

---

*† ஒரு காரியத்தைச் செய்ய ஆரம்பித்தால் நடுவே அக் காரியத்தை விட்டு நீங்குதல் தகாதாகலின் 'தொடங்கார்' என்றார் என்பது.*

*‡ அதன்மேலும் - அவ்வழிவின்மேலும்.*

*¶ செய்யலாமென்னும் நிச்சயமுண்டாய விடத்து.*

*$ செல்லுதல் பயனில்லாத காரியமாய் முடிதலினால், பகைவர் விழிப்புடையராய், வளரு நிலத்திலே பயிர் விருத்தியடைவது போன்று நால் வகைச் சேனையாலும் விருத்தியடைந்து, தம்மை யெதிர்க்கு மரசனை யெதிர்க்கும் மனவெழுச்சியோடு இருப்பாரென்-பதாம். அப்பகைவர் ஊக்கமுடையவராய் விருத்தி யடைந்து எதிர்ப்பதற்குக் காரணம் வகையறச் சூழாதெழுதலா மென்க.*

அத்திறங்களாவன: † வலி காலம் இடனென்றிவற்றால் தனக்கும் பகைவர்க்கு முளவாம் நிலைமைகளும், வினைதொடங்கு மாறும், அதற்கு வரும் இடையூறுகளும், அவற்றை நீக்குமாறும், வெல்லுமாறும், அதனாற் பெறும் பயனும் முதலாயின. அவற்றுள், சில எஞ்சினும் பகைவர்க்கு இடனும் ஆகலான், முற்றுப்பெற எண்ண வேண்டு மென்பதாம். இவை மூன்று பாட்டானும் ஒழியத்தகும் வினையும் ஒழியாவழிப்படும் இழுக்குங் கூறப்பட்டன.

தெளி:—(இ - ள்.) வகை - (சென்றால் நடக்கும்) வகைகளை (எல்லாம்), அறச்சூழாது - முற்றவெண்ணாமல், [சில வெண்ணிய வளவாலே], எழுதல் - (அரசன் பகைவர்மீது போர்க்குச்) செல்லுதல், பகைவரை - அப் பகைவரை, பாத்தி - வளருநிலத்திலே, படுப்பது - நிலைபெறச் செய்வதாகிய, ஓராறு - ஒருவழியாம், (எ - று).

அவ்வகைகளாவன: வலி காலம் இடம் என்னும் இவற்றால் தனக்கும் பகைவர்க்கும் உண்டாகும் நிலைமைகளும், தொழில் தொடங்கும் விதமும், அத்தொழிற்கு வரும் தடைகளும், அத்தடை களை யொழிக்கும் வகையும், பகைவரை வெல்லும் விதமும், அவ் வெல்லுதலினா லடையும் பயனும் முதலானவை. அவ்வகைகளுள், சில குறைந்தாலும் பகைவர்க்கு இடமாம் ஆதலால் முற்றுப்பெற எண்ணவேண்டு மென்பதாம். இவை மூன்றுபாட்டாலும் விடத்தகுந் தொழிலும் அதனை விடாத விடத்துண்டாகும் குற்றமும் சொல்லப் பட்டன.

(க - து.) அரசன் நன்கு யோசியாது பகைவர்மேற் போர்க்குச் செல்லுதல் அப்பகைவரை அவர் உள்ளவிடத்திலேயே யுறுதிப் படுத்துந் தன்மையினதாம் என்பதாம். (ரு)

5. One way to promote the prosperity of an enemy, is for a king to set out to war without having thoroughly weighed his ability to cope with its chances.

---

சா. செய்தக்க வல்ல செயக்கெடுஞ் செய்தக்க
செய்யாமை யானுங் கெடும்.

பரி:— (இ - ள்.) அரசன் தன்வினைகளுள் செய்யத் தக்கன அல்ல- வற்றைச் செய்தலாற்கெடும்; இனி அதனானே அன்றிச் செய்யத்தக்கன வற்றைச் செய்யாமை தன்னானுங் கெடும், (எ - று).

---

† "வலியே காலம் வினையிவற்றான் மாற்றான் றனக்கு முனக்குமுள, பலவா நிலையும் வினைதொடங்கும் பண்பு மதற்கா மிடையூறும், விலகாததனை விலக்குவதும் வெல்லு மாறும் வென்ற தனால், உலவாப் பயனு முதலனைத்து மோர்ந்து தெளிந்தே வினை செய்க" என்பது விநாயக புராணம்.

செய்யத் தக்கனவல்ல வாவன: பெரிய முயற்சியினவும், செய்தாற் பயனில்லனவும், அது சிறிதாயினவும், † ஐயமாயினவும், பின் துயர்விளைப்பனவு மென இவை. செய்யத்தக்கன வாவன: ‡ அவற்றின் மறுதலையாயின. இச்செய்தல் செய்யாமைகளான் அறிவு ஆண்மை பெருமை யென்னும் மூவகை யாற்றலுள் பொருள் படையென இருவகைத்தாய பெருமை சுருங்கிப் பகைவர்க்கு எளியனும் ஆகலான் ¶ இரண்டுங் கேட்டிற் கேதுவாயின. இதனாற் செய்வன செய்து ஒழிவன வொழிக வென இருவகையனவும் உடன் கூறப்பட்டன.

தெளி:— (இ - ள்.) (அரசன் தனது தொழில்களுள்) செய்தக்க வல்ல செய்யத்தகாத காரியங்களை, செய - செய்தலால், கெடும் - கெடுவான், (இனி அதனாலே யல்லாமல்), செய்தக்க - செய்யத்தக்க காரியங்களை, செய்யாமையானும் - செய்யாமையினாலும், கெடும் - கெடுவான், (எ - று).

செய்யத்தகாத காரியங்களாவன :- பெரிய முயற்சியை யுடையனவும், செய்தாற் பயனில்லாதனவும், அப்பயன் சிறிதாயினவும், ஐயமாயினவும், பின்னே துயரம் விளைப்பனவு மென்னும் இவையாம். செய்யத்தக்க காரியங்களாவன : அவற்றிற்கு மாறாயிருப்பன. இச் செய்தல் செய்யாமைகளால் அறிவு ஆண்மை பெருமை என்னும் மூன்றுவகை ஆற்றல்களுள் பொருளும் படையும் என விருவகையினதாய பெருமையானது சுருங்கிப் பகைவர்க்கு எளியவ னுவான் ஆதலால் இரண்டும் கேட்டிற்குக் காரணமாயின. இதனால் செய்யத் தக்கவற்றைச் செய்து விடத்தக்கவற்றை விடுக வென்று இருவகைச் செயல்களும் உடன் சொல்லப்பட்டன. ஆற்றல் - வல்லமை.

(க - து.) அரசன் செய்யத்தகாதவற்றைச் செய்வதாலும், செய்யத்தக்கவற்றைச் செய்யாமையாலுங் கெடுவான் என்பது. (சு)

6. He will perish who does what it is not fit to do; and he also will perish who does not do what it is fit to do.

எ. எண்ணித் துணிக கருமந் துணிந்தபி
னெண்ணுவ மென்ப திழுக்கு.

பரி:— (இ - ள்.) செய்யத்தக்க கருமமும் முடிக்கும் உபாயத்தை யெண்ணித் தொடங்குக; $ தொடங்கிவைத்துப் பின்னெண்ணக் கடவோம் என்றொழிதல் குற்றமாதலான், (எ - று).

---

† முடிவனவோ முடியாதனவோ வென்று சந்தேகத்திற் கிடமா யிருப்பனவும்.

‡ அவற்றின் மறுதலையாயின - சிறிய முயற்சியினவும், செய்தாற் பயனுள்ளனவும், பயன் பெரிதாயினவும், ஐய (சந்தேக) மில்லா தனவும், பின்பு இன்பம் விளைப்பனவுமா மென்னுமிவை.

¶ இரண்டும் - செய்தக்கவல்ல செயலும், செய்தக்க செய்யா மையும்.

$ தொடங்கிவைத்துப் பின்னெண்ணக் கடவோம் என்றொழிதல் - ஆரம்பித்த பிறகு ஆலோசிப்போமென்று ஆலோசியாமல் விடுதல்.

† துணிவுபற்றி நிகழ்தலின், துணிவெனப்பட்டது. சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. உபாயமென்பது ‡அவாய் நிலையான் வந்தது. அது கொடுத்தல், இன்சொற்சொல்லல், வேறுபடுத்தல், ஒறுத்தலென நால்வகைப்படும். இவற்றை வடநூலார் ¶ தான சாம பேத தண்டமென்ப. அவற்றுள், £ முன்னைய இரண்டும் ஐவகைய; * ஏனைய மூவகைய; அவ்வகைகளெல்லாம் ஈண்டுரைப்பிற் பெருகும். இவ்வுபாயமெல்லாம் எண்ணாது தொடங்கின், அவ்வினை மாற்றானால் விலக்கப்பட்டு முடியாமையானும், இடையின் ஒழிதலாகாமையானும் அரசன் துயருறுதலின், அவ்வெண்ணாமையை 'இழுக்கு' என்றார். செய்வனவற்றையும் உபாய மறிந்தே தொடங்குக வென்பதாம்.

தெளி:—(இ-ள்.) கருமம் - (செய்யத்தக்க) தொழிலும், எண்ணி - (முடிக்கும் உபாயத்தை) எண்ணி, துணிக - தொடங்கக்கடவன், துணிந்தபின் - தொடங்கிவைத்துப் பிறகு, எண்ணுவம் என்பது - எண்ணக்கடவோ மென்றொழிதல், இழுக்கு-குற்றம், (ஆதலால்), (எ-று)

---

† தொடங்குங் கருமம் துணிவினாலாதலால் 'துணிவுபற்றி நிகழ்தலின் (நடைபெறுதலின்) துணிவெனப்பட்டது' என்று கூறப்பட்டது. துணிவு காரணமாகத் தொடங்குங் கருமத்தைத் துணிவுஎன்று கூறினமையின், இது கருவியாகு பெயராம். இங்குத் துணிவு என்றது துணிந்த என்றதனை.

‡ எண்ணி யென்னும்வினை உபாயத்தை யென்னும் செயப்படு பொருளை அவாவி (விரும்பி) நின்றது.

¶ சாமம்—இனிதாகக்கூறல்; பேதம் — மென்மையாலும் வன்மையாலும் மனத்தினைப் பேதித்தல்; தானம்—பகைவர் மனமகிழ (அவர்க்கு வேண்டியவற்றைக்) கொடுத்தல்; தண்டம்—பின்பு அவர் ஆகாம லழித்தே விடுதல். இவ்வாறு நச்சினார்க் கினியர் "பண்ணியல் யானை மேலான்" என்னுஞ் சீவகசிந்தாமணிச் செய்யுளி னுரையில் வரைந்திருக்கின்றனர்

£ முன்னைய இரண்டும் ஐவகைய — முன்னுள்ள தானம் சாம மென்னுமிரண்டனுள் ஒவ்வொன்றும் ஐந்தைந்து வகைப்படும். அவை வருமாறு: — 1 கிடைத்தற்கரிய பொருளைக் கொடுத்தல், 2 தனக்குத் தரும்பொருளை வாங்காது விடுதல், 3 கொடுக்கவேண்டிய பொருளைக் கொடுத்தல், 4 பிறன்பொருள் கொடுத்தல், 5 கப்பம் வாங்காதொழிதலெனத் தானம் ஐவகையாம். 1 வணங்கல், 2 புகழ்தல், 3 எதிர்கொள்ளல், 4 நட்புக்கூறல், 5 உறவுகூறல் எனச்சாமம் ஐவகையாம்.

* ஏனைய மூவகைய — மற்றைய பேதம் தண்ட மென்னு மிரண்டனுள் ஒவ்வொன்றும் மும்மூன்று வகைப்படும். அவை வருமாறு:— 1 நட்பொழிதல், 2 கூடினவரைப் பிரித்தல், 3 வேறுபகை விளைத்தல் எனப் பேதம் மூன்றுவகையாம் 1 துன்பஞ் செய்தல், 2 பொருளைக் கொள்ளுதல், 3 கொல்லுதல் எனத் தண்டம் மூன்று வகையாம்.

துணிவு காரணமாக நிகழுதலால் கருமம் துணிவு என்று கூறப்பட்டது. கருமமும் என்னும் உயர்வு சிறப்பும்மை செய்யுள் விகாரத்தால் தொக்குநின்றது. உபாயமென்பது அவாய்நிலையால் வந்தது. அவ்வுபாயம் கொடுத்தல், இன்சொற் சொல்லல், வேறுபடுத்தல், ஒறுத்தல் என நால்வகைப்படும். இவற்றை வடநூலார் தானம்சாமம் பேதம் தண்டம் என்பர். அந்நான்கனுள், முன்னுள்ள இரண்டனுள் ஒவ்வொன்றும் ஐந்தைந்து வகையதாம்; பின்னுள்ள இரண்டனுள் ஒவ்வொன்றும் மும்மூன்று வகையதாம். அந்த வகைகளையெல்லாம் இங்குச்சொன்னால் விரிந்துபோம். இவ்வுபாயங்களெல்லாவற்றையும் எண்ணாது தொடங்கினால், அத்தொழில் பகைவனால் விலக்கப்பட்டு முடியாமையாலும், நடுவேவிடுதல் கூடாமையாலும் அரசன் துயரத்தை யடைவானாதலால், அவ்வெண்ணாமையை 'இழுக்கு' என்றார். செய்யத்தக்கனவற்றையும் உபாயம் அறிந்தே தொடங்கவேண்டுமென்பதாம்.

(க-து.) அரசன் செய்யுமாறு தான் மேற்கொண்ட தொழிலை நன்றாக ஆலோசித்துத் தொடங்கக்கடவன் என்பது. (எ)

**7.** **Think first, and then begin a work; after you have begun it, to say, " we will consider," is a reproach.**

---

**அ. ஆற்றின் *வருந்தா வருத்தம் பலர்நின்று**
**போற்றினும் பொத்துப் படும்.**

பரி:—(இ-ள்) முடியும் உபாயத்தாற் கருமத்தை முயலாதமுயற்சி, துணைவர்பலர் நின்று புரைபடாமற் காப்பினும் புரைபடும், (எ - று).

முடியும் உபாயத்தான் முயறலாவது கொடுத்தலைப் பொருணசையாளன் கண்ணும்; இன்சொல்லைச் செப்பமுடையான், மடியாளன், முன்னே பிறரோடு பொருது நொந்தவனென இவர் கண்ணும்; வேறுபடுத்தலைத் துணைப்படையாளன், †தன் பகுதியோடு பொருந்தாதானென இவர் கண்ணும்; ஒறுத்தலை ‡ இவற்றின் வாராதவழி இவர் கண்ணும் தேறப்படாத கீழ்மக்கள் கண்ணுஞ் செய்து, வெல்லுமாற்றான் முயறல். புரைபடுதல் - கருதிய நன்மையன்றிக் கருதாத தீமை பயத்தல். உபாயத்தது சிறப்புக் கூறியவாறு.

தெளி:—(இ - ள்.) ஆற்றின் - (முடியும்) உபாயத்தால், வருந்தா வருத்தம் - (மேற்கொண்ட கருமத்தை முடிக்க) முயற்சிசெய்யாத

---

* வருந்தா வருத்தம் என்பது பிரயாச மின்மையை யுணர்த்துவதாம்.

† தன் பகுதியோடு - தன தபிப்பிராயத்துடன்.

‡ இவற்றின் வாராதவழி—கொடுத்தல், இன்சொற் சொல்லுதல் வேறுபடுத்தலென்னும் இவற்றின் வழி வாராதவிடத்து.

முயற்சியானது, பலர் நின்று - (துணைவர்) பலர் நின்று, போற்றினும் (புரைபடாமல்) காப்பினும், பொத்துப்படும் - புரைபடும், (எ - று).

முடியும் உபாயத்தால் முயலுதலாவது கொடுத்தலைப் பொருளாசையுடையானிடத்தும்; இன்சொற்சொல்லுதலை நடுவுநிலையாளன், சோம்பலாளன், முன்னே பிறரோடு போர் செய்து நொந்தவன் என்னும் இவர்களிடத்தும்; வேறுபடுத்தலைத் துணைப்படையாளன், தன் பகுதியோடு பொருந்தாதவன் என்னும் இவர்களிடத்தும்; ஒறுத்தலை இவற்றின் வழிவராதவிடத்து இவர்களிடத்தும் நம்பப்படாத கீழ்மக்களிடத்தும் செய்து, (பகைவரை, வெல்லும் வழியால் முயற்சி செய்தலாம். புரைபடுதல் - தானெண்ணிய நன்மையைத் தாராது எண்ணாத தீமையைத் தருதல். நால்வகை யுபாயத்தின் சிறப்புக் கூறியவாறும். புரைபடுதல் - மேற்கொண்ட கருமம் முடியாதொழிதல்.

(க - து.) மேற்கொண்ட கருமம் முடியு முபாயத்தை யெண்ணாத முயற்சியானது துணைவர் பலர் நின்றுகாத்தாலும் குற்றமுடையதாம் என்பது. (அ)

8, The work, which is not done by suitable methods, will fail, although many stand up to protect it.

---

கூ. **நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்**
**பண்பறிந் தாற்றாக் கடை.**

**பரி:— (இ – ள்.) வேற்று வேந்தர்மாட்டு நன்றான வுபாயஞ்செய்தற் கண்ணுங் குற்ற முண்டாம்; * அவரவர் குணங்களை ஆராய்ந்தறிந்து அவற்றிற் கியையச் செய்யாவிடின், (எ – று).**

நன்றான வுபாயமாவது கொடுத்தலும் இன்சொற் சொல்லுதலுமாம் அவை யாவர் கண்ணும் இனியவாதற் சிறப்புடைமையின், உம்மை சிறப்பும்மை. ¶ அவற்றை அவரவர் பண்பறிந் தாற்றாமையாவது ‡ அவற்றிற் குரியரல்லாதார்கண்ணே செய்தல். தவறு - அவ்வினை முடியாமை.

தெளி: - (இ - ள்.) (வேற்றரசரிடத்து) நன்று - நல்ல வுபாயத்தை, ஆற்றலுள்ளும் - செய்தலுள்ளும், தவறு - குற்றம், உண்டு -

---

* அவரவர் - அந்தந்த வேற்று வேந்தர்களுடைய.

¶ அவற்றை - கொடுத்தலென்னுந் தானத்தையும் இன்சொற் சொல்லுதலென்னுஞ் சாமத்தையும்.

‡ பேதத்திற்கும் தண்டத்திற்கும் உரியவரிடத்தே தானமும் சாமமும் செய்தலாகாதென்பது. எனவே, எவரெவர்க்கு எது எது செய்யவேண்டுமோ அவரவர்க்கு அது அதுவே செய்யவேண்டும்; மாறிச் செய்தால் கெடுதி யுண்டா மென்பது பெறப்பட்டது.

உண்டாம், அவரவர் - அவரவருடைய, பண்பு - குணங்களை, அறிந்து- (ஆராய்ந்து) அறிந்து, ஆற்றுக்கடை - (அக்குணங்களுக்குப் பொருந்த) செய்யாவிடத்து, (எ - று).

நல்ல வுபாயமாவது கொடுத்தலும் இன்சொற் சொல்லுதலு மாம் கொடுத்தலும் இன்சொற் சொல்லுதலும் யாவரிடத்திலும் இனியனவாகும் சிறப்புடைமையினால். ஆற்றலுள்ளும் என்றவும்மை உயர்வு சிறப்பும்மை. அவற்றை அவரவர் குணங்களை யறிந்து செய்யாமையாவது அவற்றிற்கு உரியரல்லாதவரிடத்தே செய்தல். தவறு - அத்தொழில் முடியாமை.

(க - து.) செய்யவேண்டியவற்றை வேற்று வேந்தரது குணங்களை யறிந்து அவரவரது தகுதிக்கேற்பச் செய்யவேண்டும். (கூ)

9. There are failures even in acting well, when it is done without knowing the various dispositions of men.

---

**கO. எள்ளாத வெண்ணிச் செயல்வேண்டுந் தம்மொடு**
**கொள்ளாத கொள்ளா துலகு.**

**பரி:— (இ - ள்) அரசர் வினைமுடித்தற் பொருட்டுத் தந்நிலைமை- யோடு பொருந்தாத உபாயங்களைச் செய்வாராயின் † உலகந் ‡ தம்மை இகழா நிற்கும்; ஆகலான், அஃது இகழா வுபாயங்களை நாடிச்செய்க, (எ - று).**

தம்மென்பது ஆகுபெயர். தந்நிலைமையோடு பொருந்தாத உபாயங்களைச் செய்தலாவது தாம் வலியராய் வைத்து மெலியார்க் குரிய கொடுத்தன் முதலிய மூன்றனைச் செய்தலும், மெலியராய் வைத்து வலியார்க்குரிய ஒறுத்தலைச் செய்தலுமாம். $ இவையிரண்- டும் அறிவிலார் செய்வன வாகலின் உலகு கொள்ளாது என்றார். அஃது எள்ளாதன செய்தலாவது அவற்றைத் தத்தம் வன்மை மென்மைகட் கேற்பச் செய்தல். ¶ மேல் இடவகையான் உரிமை கூறிய உபாயங்கட்கு வினைமுதல் வகையான் உரிமை கூறிய-

---

† உலகம் - மேன்மக்கள். ‡ தம்மை - அரசராகிய தம்மை.

$ இவையிரண்டும் - வலியரான தாம் மெலியார்க்குரிய கொடுத்- தல் முதலிய மூன்றனைச் செய்தலும, மெலியரான தாம் வலியார்க் குரிய தண்டத்தைச் செய்தலும்.

¶ மேல் (இவ்வதிகாரத்தின் எட்டாவது குறளில்) (இன்னின்ன உபாயங்களைச் செலுத்துவதற்கு இன்னின்னார் தக்கவரென்று) இட வகையால் உரிமை கூறிய உபாயங்களுக்கு (இன்னின்னார் இன்னின்ன உபாயங்களைச் செய்வதற்கு உரியவரென்று) வினைமுதல் வகையால் உரிமை சொல்லியபடியா மென்க. வினையைச் செய்வதற்கு முதலா யுள்ளது வினைமுதலெனப்படும். வினைமுதலெனினும், செய்பவனெனி- னும், கருத்தா எனினும் ஒக்கும்.

வாறு. இவை நான்கு பாட்டானுஞ் செய்வனவற்றிற்கு உபாயமும் அதனது உரிமையுங் கூறப்பட்டன.

தெளி:—(இ - ள்.) தம்மொடு - (அரசர் தொழில் முடித்தற் பொருட்டு) தமது நிலைமையோடு, கொள்ளாத - பொருந்தாத உபாயங்களை, (செய்வாராயின்), உலகு - உலகமானது, கொள்ளாது- அங்கீகரியாது (தம்மை இகழும்), (ஆதலால்), எள்ளாத-(அவ்வுலகம்) இகழாத உபாயங்களை, எண்ணி - ஆராய்ந்து, செயல்வேண்டும் - செய்யக்கடவர், (எ - று).

தம் என்பது தமது நிலைமையை யுணர்த்துதலால் பொருளாகு பெயராம். தமது நிலைமையோடு பொருந்தாத உபாயங்களைச் செய்தலாவது தாம் வலியவராயிருந்தும் மெலியார் செய்தற்குரிய தான சாமபேதங்களென்னும் மூன்றனைச் செய்தலும், மெலியவராயிருந்தும் வலியார் செய்தற்குரிய தண்டத்தைச் செய்தலுமாம். இவை யிரண்டும் அறிவில்லாதவர் செய்வன ஆதலால் உலகு கொள்ளாது என்றார். அவ்வுலகம் இகழாத வுபாயங்களைச் செய்தலாவது அவ்வுபாயங்களைத் தமது தமது வன்மைக்கும் மென்மைக்கும் ஏற்பச் செய்தல். முன்னர் இடவகையால் உரிமைகூறிய வுபாயங்களுக்குச் செய்பவன் வகையால் உரிமை சொல்லியபடியாம் இவை நான்கு பாட்டாலும் செய்யும் தொழில்களுக்கு உபாயமும் அவ்வுபாயத்தினது உரிமையும் சொல்லப்பட்டன. வன்மை - வல்லமையுடைமை; மென்மை - அஃதில்லாமை.

(க - து.) அரசர் தங்காரியம் முடிதற்பொருட்டுத் தமது நிலைமை யோடு பொருந்தாதவற்றைச் செய்வாராளுல், அவற்றை யுலகம் ஏற்றுக்கொள்ளாது என்பது. (கய)

10. Let a man reflect, and do things which bring no reproach; the world will not approve, with him, of things, which should not be approved of.

---

## பத்தாம் அதிகாரம்

## 48 வலியறிதல்—On the Knowledge of Resources

**பரி:—அஃதாவது அவ் ¶ வுபாயங்களுள் ஒறுத்தல் குறித்த அரசன் ‡ நால்வகை வலியையும் * அளந்தறிதல். † அதிகாரமுறைமையும் இதனுனே விளங்கும்.**

---

¶ உபாயங்களுள் - தான முதலிய நால்வகை யுபாயங்களில் [உபாயம் - சூழ்ச்சி].

‡ நால்வகை வலி - வினைவலி, தன்வலி, மாற்ருன்வலி, துணைவலி.

* அளந்தறிதல் - வரையறுத்தறிதல்.

† தெரிந்து செயல்வகை என்னும் அதிகாரத்தின் பின் வலியறிதல் என்னும் அதிகாரம் வைத்த முறைமையும்.

தெளி:—அஃதாவது அவ்வுபாயங்களுள் தண்டஞ்செய்யக் கருதிய அரசன் நால்வகை வலியையும் அளந்து அறிதலாம். அதிகார முறைமையும் இதனுலே விளங்கும்.

க. **வினைவலியுந் தன்வலியு மாற்முன் வலியுந்**
**துணைவலியுந் தூக்கிச் செயல்.**

**பரி:—(இ - ள்.)** தான் செய்யக்கருதிய வினைவலியையும் அதனைச் செய்து முடிக்கும் தன்வலியையும் அதனை விலக்கலுறும் மாற்முன்வலி யையும் *இருவர்க்குந் துணையாவார் வலியையும் சீர்தூக்கித் தன்வலி மிகுமாயின், அவ்வினையைச் செய்க, (எ-று).

¶ இந்நால்வகைவலியுள் வினைவலி அரண்முற்றலும் கோடலும் ‡ முதலிய தொழிலானும், § ஏனைய மூவகையாற்றலானுங் கூறுபடுத்துத் தூக்கப்படும். தன்வலி மிகவின்கட் செய்க வென்ற விதியால், தோற்றல் ஒரு தலையாய குறைவின் கண்ணும் வேறல் ஐயமாய ஒப்பின்கண்ணும் ஒழிக வென்பது பெற்றும்.

**தெளி:—(இ-ள்.)** வினைவலியும்-(தான் செய்யக்கருதிய) தொழிலது வலியையும், தன்வலியும் - (அத்தொழிலைச் செய்துமுடிக்கும்) தனது வலியையும், மாற்முன் வலியும் - (அத்தொழிலை விலக்கும்) பகைவனது வலியையும், துணைவலியும் - (இருவர்க்கும்) துணையாவாரது வலி யையும், தூக்கி - ஆராய்ந்து, (தனதுவலி மிகுமாயின்), செயல் - (அத்தொழிலைச்) செய்யக்கடவன் (எ-று).

இந்நால்வகை வலியுள் வினைவலியானது கோட்டையை வளைத் தலும் பிடித்தலும் முதலிய தொழில்களாலும், மற்றையன மூவகை யாற்றல்களாலும் கூறுபடுத்தி ஆராயப்படும். (அரசன் பகைவரோடு போர்செய்தலைத்) தன்வலி மிகுந்த விடத்துச் செய்க என்ற விதியினல் தோற்றல் நிச்சயமாகிய குறைவினிடத்தும், வெல்லுதல் சந்தேக மாகிய சமநிலையிலும் அத்தொழிலை விடக்கடவனென்பது பெற்றும்.

**(க - து.)** அரசன் வினைவலி முதலிய நான்கு வலியையும் ஆராய்ந் தறிந்து செய்காரியத்தைச் செய்யக்கடவன் என்பது. (க)

---

* இருவர்க்கும் - தனக்கும் தன் பகைவனுக்கும்.

¶ இந்நால்வகைவலியுள் - வினைவலி முதலிய நால்வகைவலிகளில்.

‡ முதலிய என்றதனுல் தம் மதிலைக்காத்தல், பகைவரது சூழ்ச்சி தலையெடுக்காவண்ணஞ் செய்தல் முதலியவற்றையுங் கொள்க.

§ ஏனைய மூவகை யாற்றலானும் கூறுபடுத்து-மற்றைய (தன்வலி, மாற்முன்வலி, துணைவலிகளை) அறிவு ஆண்மை பெருமையென்னும் மூவகை யாற்றலாலும் பகுத்து.

1. Let a king weigh well the strength of the deed he purposes to do; let him consider his own strength, the strength of his enemy, and the strength of the allies of both, and then let him act.

---

**உ. ஒல்வ தறிவ தறிந்ததன் கட்டங்கிச்
செல்வார்க்குச் செல்லாத தில்.**

**பரி:—(இ - ள். ) தமக்கியலும் வினையையும் * அதற்கறிய வேண்டு-வதாய வலியையும் அறிந்து எப்பொழுதும் † மனமொழி மெய்களை அதன்கண் வைத்துப் பகைமேற்செல்லும் அரசர்க்கு முடியாத பொருளில்லை, (எ - று).**

*'ஒல்வது' எனவே ¶ வினைவலி முதலாய மூன்றும் அடங்குதலின் ஈண்டறிவதென்றது ** துணைவலியே யாயிற்று. எல்லாப் பொருளும் எய்துவ ரென்பதாம். இவையிரண்டு பாட்டானும் வலியின் பகுதியும் அஃதறிந்து மேற்செல்வா ரெய்தும் பயனும் கூறப்பட்டன.*

தெளி .—(இ - ள்.) ஒல்வது - (தமக்குப்) பொருந்தும் தொழிலை-யும், அறிவது - (அதற்கு) அறியவேண்டுவதாய வலியையும், அறிந்து - தெரிந்து, அதன்கண் - அத்தொழிலினிடத்து, தங்கி - (மன மொழி மெய்களை எப்போதும்) வைத்து, செல்வார்க்கு - (பகைவர்மேல்) செல்லும் அரசர்க்கு, செல்லாதது - முடியாத பொருள், இல் - இல்லை, (எ - று).

'ஒல்வது' என்று கூறவே வினைவலி முதலிய மூன்றும் அடங்குத-லால், இங்கு அறிவதென்றது துணைவலியே யாயிற்று. (நால்வகை வலியுமுடையார் எளிதிலே) எல்லாப்பொருள்களையும் அடைவார் என்பதாம். இவையிரண்டு பாட்டாலும் வலியின் பகுப்பும், அவ் வலியினை அறிந்து பகைவர்மேற் செல்வார் பெறும் பயனும் சொல்லப் பட்டன.

(க - து.) தமது வலியையும் அதற்கு வேண்டுவதாய துணை வலியையும் அறிந்து செய்யத்தக்க தொழிலைச் செய்வார்க்கு முடியாத காரியமில்லை என்பது. (உ)

---

* அதற்கு - அவ்வினைக்கு

† மனமொழி மெய்களை யதன்கண் வைத்து - மனம் வாக்குக் காயமென்னும் திரிகரணங்களையும் அத்தொழிலிற் செலுத்தி. (செலுத்தலாவது அதுபற்றி யாலோசித்தலும் புரோகிதர் அமைச்சர்-களுடன் கலந்து பேசுதலும் அதற்குதவியாவாரைக் காணலுமாம்).

¶ வினைவலி, தன்வலி, மாற்றான்வலி என்னு மூன்றும்

** துணைவலி - தமக்கும் பகைவர்க்கும் துணை (உதவி) யாயுள்ள வரது வலிமை.

2. There is nothing which may not be accomplished by those who, before they attack an enemy, make themselves acquainted with their own ability, and with whatever else is needful to be known, and apply themselves wholly to their object.

---

**ரு. உடைத்தம் வலியறியா ரூக்கத்தி னூக்கி**
**யிடைக்கண் முரிந்தார் பலர்.**

பரி:—(இ - ள்.) கருத்தாவாதலையுடைய தம் வலியின் அளவறியாதே * மனவெழுச்சியால் தம்மின் வலியாரோடு † வினை செய்தலைத் தொடங்கி ‡ அவர் அடர்த்தலான் ¶ அது செய்து முடிக்கப் பெறாது இடையே கெட்ட $ அரசர் உலகத்துப் பலர், (எ - று).

** உடைய வென்பது அவாய் நின்றமையின், செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. மூவகையாற்றலுள்ளும் சிறப்புடைய அறிவுடையார் சிலராதலின் 'முரிந்தார் பலர்' என்றார். அதனால் தம் வலி யறிந்தே தொடங்குக வென்பது எஞ்சி நின்றது.

தெளி:—(இ - ள்) உடை - (தலைவனாதலை) உடைய, தம்வலி — தமது வலியினளவை, அறியார் — தெரிந்துகொள்ளாதவராகியே, ஊக்கத்தின் — மனவெழுச்சியால், ஊக்கி - (தம்மின் வலியாரோடு) போர்செய்தலைத் தொடங்கி, (அவர் வருந்துதலால் அது செய்து முடிக்கப் பெறாமல்), இடைக்கண் — நடுவிலே, முரிந்தார் — கெட்ட அரசர், பலர் - (உலகத்தில்) பலராவர், (எ - று).

உடைய என்பது தலைவனாதலை என்னும் செயப்படுபொருளை அவாவி (விரும்பி) நின்றமையின், அது வருவிக்கப்பட்டது. அறிவு, ஆண்மை, பெருமை என்னு மூவகை யாற்ற (வல்லமை) லுள்ளும் சிறப்புடைய, அறிவுடையவர் சிலராதலால் 'முரிந்தார் பலர்' என்றார் அதனால் தம் வலி அறிந்தே (போர் செய்தலைத்) தொடங்குக என்பது குறைந்து நின்றது.

---

* மனவெழுச்சி - உற்சாகம்.

† வினை செய்தலை — போர் செய்து வெல்லும் தொழிலை

‡ அவர் — தம்மிலும் வலியவரான பகையரசர்.

¶ அது செய்து முடிக்கப் பெறாது — தாம் தொடங்கிய போர்த் தொழிலைச் செய்து முடித்தற்கியலாமல்.

$ அரசர் என்றது இராவணன், துரியோதனன் முதலாயினோரை.

** ஈறு குறைந்து நின்ற உடையென்னும் குறிப்புப் பெயரெச்சம் செயப்படுபொருளை யவாவி (வேண்டி) நின்றமையின், கருத்தாவாதலை என்பது வருவிக்கப்பட்டது.

(க-து.) தமது வலியறியாது வலியாரோடு போர்புரிந்து புறங்கொடுத்தோடிய வரசர் பலர் என்பது. (ந)

3. There are many who, ignorant of their want of power to meet it, have haughtily set out to war, and broken down in the midst of it

———

474 ச. அமைந்தாங் கொழுகா னளவறியான் றன்னை
வியந்தான் விரைந்து கெடும்.

பரி.—(இ-ள் ) அயல் வேந்தரோடு பொருந்தி ஒழுகுவதுஞ் செய்யாது தன் வலியளவறிவதுஞ் செய்யாது * தன்னை வியந்து அவரோடு பகைத்த அரசன் விரையக் கெடும், (எ-று).

† காரியத்தைக் காரணமாக உபசரித்து 'வியந்தான்' என்றார். ‡ விரையவென்பது திரிந்து நின்றது. நட்பாயொழுகுதல் வலியறிந்து பகைத்தலென்னும் இரண்டனுள் ஒன்றன்றே அயல்வேந்தரோடு செயற்பாலது; ¶ இவையன்றித் தான் மெலியனாய்வைத்து அவரோடு பகைகொண்டானுக்கு § ஒருபொழுதும் நிலையின்மையின் 'விரைந்து கெடும்' என்றார். இவையிரண்டுபாட்டானுந் தன்வலி யறியா வழிப்படும் இழுக்குக் கூறப்பட்டது.

தெளி:—(இ·ள்.) ஆங்கு - அயல்வேந்தருடன், அமைந்து பொருந்தி, ஒழுகான் - ஒழுகுவதுஞ் செய்யாமல், அளவு - (தன்வலி)

---

* தன்னை வியந்து - தன்னை மற்றை யரசரினும் மேம்பட்டவனாக மதித்து.

† வியத்தலா லுண்டாகும் பகையை வியந்தான் என்று கூறினமையின், இது காரியங் காரணமாய உபசார வழக்காம்.

[அயல்வேந்தருடன் பகைத்தல் காரியம்; அதற்குக் காரணம் தன்னை வியத்தல். பகைத்தான் என்று கூறாது வியந்தான் என்று கூறினமையால் காரியத்தை (பகைத்தலை)க் காரணமாக (வியத்தலாக) உபசரித்து வியந்தான்' என்றார் என்று கூறப்பட்டது.]

‡ கெடும் என்னும் (நிகழ்கால அல்லது எதிர்கால) செய்யுமென்னும் வினைமுற்றோ டொண்டுடன் நிகழ்வது செயவென்னும் வாய்பாட்டு வினையெச்சமாதலால், 'விரைய என்பது (விரைந்து எனத்) திரிந்து நின்றது' என்று கூறப்பட்டது. விரைந்து என்பது செய்தென்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம்.

¶ இவையன்றி-நட்பாயொழுகுதல் வலியறிந்து பகைத்தலென்னு மிரண்டு மல்லாமல்.

§ ஒருபொழுதும் நிலையின்மையின் - சிறிது பொழுதுகூட அழியாது நிற்ற லில்லாமையினால்.

அளவை, அறியான் - அறிவதுஞ் செய்யாமல், தன்னை வியந்தான் தன்னை மெச்சிக்கொண்டு (அவ்வயல் வேந்தரோடு பகைத்த) அரசன் விரைந்து - விரைவாக, கெடும் - கெடுவான் (எ-று).

பகைத்தான் என்னும் காரியத்தை (வியந்தானென்னுங்) காரணமாக வுபசரித்து 'வியந்தான்' என்று கூறினர். விரையவென்பது விரைந்து எனத்திரிந்து நின்றது. நட்பாயொழுகுதல் வலியையறிந்து பகைத்தல் என்னும் இரண்டனுள் ஒன்றல்லவா வேற்றரசரோடு செய்யத்தக்கது; இவையல்லாமல் தான் மெலியவனு யிருந்தும் அவ்வேற்றரசரோடு பகையைக் கொண்டவரசனுக்கு ஒருபோதும் நிலைத்திருத்த லில்லாமையால் 'விரைந்து கெடும்' என்றார். இவை யிரண்டுபாட்டாலும் தன்வலியை யறியாதவிடத்துண்டாகுங் குற்றம் சொல்லப்பட்டது

(க-து) அயல் வேந்தருடன் அமைந்தொழுகுவதும் தன் வலி யளவையறிவதுஞ்செய்யாது தன்னைப் புகழ்ந்துகொண்டு அவ்வேந்தரோடு பகைத்த அரசன் விரைவாகக் கெடுவான் என்பது. (ச)

4. He will quickly perish who, ignorant of the measure of his resources flatters himself with an idea of his greatness and does not live in peace with his neighbours.

---

ரு. **பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டஞ்**
**சால மிகுத்துப் பெயின்.**

**பரி:—(இ-ள்.) பீலியேற்றிய சகடமும் * அச்சுமுறியும்; அப்பீலியை அது பொறுக்கு மளவின்றி மிகுத்தேற்றின், (எ-று).**

† உம்மை சாகாட்டது வலிச்சிறப்பே அன்றிப் பீலியது. $ நொய்ம்மைச் சிறப்புந்தோன்ற நின்றது. ‡ இறுமென்னுஞ் சினைவினை முதன்மேனின்றது. ¶ எளியரென்று பலரோடு பகைகொள்வான் தான்

---

* அச்சு - உருள் (சக்கரம்) கோத்தமரம்.

† சாகாடும் என்னும் உம்மை உயர்வு சிறப்புப் பொருளையும் இழிவு சிறப்புப் பொருளையும் உணர்த்தி நின்றது.

$ நொய்ம்மை - மிகவிலேசாக விருக்குந் தன்மை.

‡ அச்சிறும் என்பதனுள், அச்சு என்பது சினை; அதனது வினை இறுதல். ''சினைவினை சினையொடு முதலொடுஞ் செறியும்'' என்று நன்னூல் கூறுவது மிங்கறியத்தக்கதாம்.

சினை யெனினும் உறுப்பெனினும் அவயவமெனினும் ஒக்கும். முதலெனினும் பொருளெனினும் ஒக்கும். சினையும், குணமும், தொழிலும், சாதியும் என்றும் தனித்திராது ஒருமுதலையேபற்றி நிற்கு மென்க.

¶ ''குறைந்த வலிய ராயிடினுங் கொற்ற மைந்தர் பலர்கூடின், நிறைந்த வலியென் னுமதனு னேரா தொழிக பலரோடு'' என்று விநாயக புராணங் கூறுவது மிங் கறியத் தக்கதாம்.

வலியனேயாயினும் அவர் தொக்கவழி வலியழியுமென்னும் பொருள் தோன்ற நின்றமையின், இது * பிறிது மொழிதலென்னும் அலங்காரம்: இதனை நுவலா நுவற்சி யென்பாரும் ஒட்டென்பாருமுளர். ஒருவன் தொகுவார் பலரோடு பகை கொள்ளற்க வென்றமையின், இதனுன் மாற்முன் வலியும் அவன் துணைவலியும் அறியாவழிப்படும் இழுக்குக் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) பீலி - மயிலிறகை, பெய் - ஏற்றிய, சாகாடும் - பண்டியும், அச்சிறும் - அச்சு முறியும், அப்பண்டம் - அம்மயிலிறகை, (அப்பண்டி சுமக்கு மளவி னல்லாமல்), சாலமிகுத்து - மிகவும் அதிகப் படுத்தி, பெயின் - ஏற்றினல், (எ-று).

சாகாடும் என்னும் உம்மை பண்டியினது வலியின் சிறப்பே யல்லாமல் மயிலிறகினது மெலிமைச் சிறப்புந் தோன்ற நின்றது. அச்சிறும் என்னுங் சினைவினை அச்சினையினது முதலாகிய பண்டியின் மேல் நின்றது. எளியரென்று பலரோடு பகையைக் கொள்வான் தான் வலியவனுகவே யிருந்தாலும் அவ்வெளியவர் பலர் கூடிய விடத்து வலி யழிவானென்னும் பொருள்பட நின்றமையால், இது பிறிது மொழிதலென்னும் அலங்காரமாம். ஒருவன் கூடுவார் பலருடன் பகைகொள்ளற்க வென்றமையின, இதனுல் பகைவன் வலி யையும்அவன் துணைவலியையும் அறியாதவிடத்துண்டாகுங் குற்றம்- சொல்லப்பட்டது.

(கூ - து.) தான் வலியவனென்று கருதி எளியார் பலரோடு பகைக்கும் அரசன் அவர் கூடி யெதிர்த்தபோது தவருது கெடுவான் என்பது. (ரு)

5. The axletree of a bandy loaded only with peacock' feathers will break, if it be greatly overloaded

———

* ஒரு பொருளைப் புலப்படுத்தற்கு அதனேடொத்த மற்ருெரு பொருளைக் கூறுதல் பிறிது மொழிதலென்னும் அலங்காரமாம்; அஃதாவது உவமானத்தை மாத்திரம் கூறி அதுவாயிலாக உவமே- யத்தைப் பெற வைத்தலாம். இங்குப் 'பீலிபெய் சாகாடு மச்சிறுமப் பண்டம், சால மிகுத்துப் பெயின்' என்று உவமானத்தை மாத்திரம் கூறி அது வாயிலாக எளியரென்று பலரோடு பகைகொள்வான் தான் வலியனேயாயினும், அவர் தொக்கவழி வலியழியும் என்னும் உவமே- யத்தைப் பெற வைத்திருத்தலைக்காண்க. பண்டியின் அச்சு பலமுடை யதாயிருந்தாலும் பலமில்லாத மயிலிறகை யளவுகடந்தேற்றிய விடத்து அது முறிவதுபோல, ஒருவன் எவ்வளவு பலமுடையவனு யிருந்தாலும் பலவீனர் பலர் கூடி எதிர்த்தவிடத்து அவன் அழிவான் என்பது திரண்ட பொருளாமெனக. இலக்கண விளக்கம் "கருதிய பொருடொகுத்தது புலப்படுத்தற், கொத்ததொன் றுரைப்ப தொட்டா மதுவே" என்னுஞ் சூத்திரத்தினுரையில் "ஒட்டெனி னும், உள்ளுறையுவமமெனினும், உவமப்போலியெனினும், பிறிது மொழிதலெனினும், நுவலாநுவற்சி யெனினும் ஒக்கும்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

**சா. நுனிக்கொம்ப ரேறினு ரஃதிறந் தூக்கி**
**னுயிர்க்கிறுதி யாகி விடும்.**

**பரி:—(இ - ள்.) ஒரு மரக்கோட்டினது நுனிக்கண்ணே ஏறி நின்றார் தம் ஊக்கத்தால் * அவ்வளவினைக்கடந்து மேலும் ஏற † ஊக்குவராயின், ‡ அவ்வூக்கம் அவருயிர்க்கு இறுதியாய் முடியும், (எ - று).**

¶ நுனிக்கொம்ப ரென்பது கடைக்க ணென்பதுபோலப் பின்முன்னாகத் தொக்க ஆறும் வேற்றுமைத்தொகை. $ பன்மை அறிவின்மை பற்றி இழித்தற்கண் வந்தது. இறுதிக்கேதுவாவதனை () 'இறுதி' என்றார். பகைமேற் செல்வான் தொடங்கித் தன்னாற் செல்லலாமளவுஞ் சென்று நின்றான், பின் அவ்வளவின் நில்லாது மனவெழுச்சியான் மேலுஞ் செல்லுமாயின், அவ்வெழுச்சி வினை முடிவிற் கேதுவாகாது அவன் உயிர் முடிவிற் கேதுவாமென்னும் பொருள் தோன்ற நின்றமையின், இதுவும் மேலை அலங்காரம். அளவறிந்து நிற்றல் வேண்டுமென்றமையின், இதனால் வினைவலி யறியாவழிப்படும் இழுக்குக் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) கொம்பர் - (ஒருமரக்) கொம்பினது, நுனி - நுனியிலே, ஏறினார் - ஏறி நின்றவர், (தமது மனவெழுச்சியால்), அஃது - அவ்வளவினை, இறந்து - கடந்து, ஊக்கின் - (மேலும் ஏற) மனவெழுச்சி கொள்ளுவாரானால், (அவ்வெழுச்சி). உயிர்க்கு-(அவர்) உயிர்க்கு, இறுதியாகி விடும் - முடிவாகிவிடும், (எ - று).

---

* அவ்வளவினைக்கடந்து - ஒரு மரக்கொம்பினது நுனியிலே ஏறி நின்ற அவ்வளவினைக்கடந்து.

† ஊக்குவராயின் - முயலுவாரானால். ‡ அவ்வூக்கம் – அந்த முயற்சி.

¶ கண்ணின்கடை யென்னும் ஆறும் வேற்றுமைத்தொகை பின் முன்னாகமாறிக் கடைக்கண் என நின்றாற்போன்று கொம்பர் நுனி யென்னும் ஆறும் வேற்றுமைத்தொகை பின்முன்னாகமாறி நுனிக் கொம்பர் என நின்றது. இவ்வாறு நுனிநா இடைநா முதனா மீகண் என வருதலையும் காண்க. இங்ஙனம் பின்முன்னாக மாறி வருவனவெல்லாம் இலக்கணப்போலியாம். கொம்பர் என்பது இடக்கர் வண்டர் என்பன போன்று கடைப்போலி மொழியாம்.

$ ஏறினார் என்னும் பன்மை (பலர்பால்) இழித்து (கீழ்ப் படுத்தி)க் கூறும் பொருளில் வந்தது. தொல்காப்பியம் சொல்லதிகாரம் கிளவியாக்கம் 'ஒருவரைக்கூறும் பன்மைக் கிளவியும்" என்னுஞ் சூத்திரத்தின் விசேட உரையில் சேனாவரையர் "தாம் வந்தார் தொண்டனார் எனப் பன்மைக் கிளவி இழித்தற்கண்ணும் வந்ததாலெனின், ஆண்டு உயர் சொற்றானே குறிப்பு நிலையால் இழிபு விளக்கிற்றென்பது" என்று கூறுதலுமிங்கறியத்தக்கது.

() இறுதிக்குக் காரணமாய ஊக்கத்தை இறுதி என்று கூறினமையின், இது காரியவாகு பெயராம்; காரியங் காரணமாய வுபசார வழக்குமாம்.

கண்கடை என்பது கடைக்கண் என முன்பின்னுயது போலக் கொம்பர்நுனி யென்பது நுனிக்கொம்பர் என்ருயது. இஃது ஆரும் வேற்றுமைத் தொகை. ஏறினுர் என்னும் பன்மை அறிவில்லாமை பற்றி இழித்துக் கூறுதலில் வந்தது. இறுதிக்குக் காரணமாகும் ஊக்கத்தை ‘இறுதி’ என்ருர். பகைவர்மேற் போர்க்குச் செல்லத் தொடங்கித் தன்னுற் செல்லுதற்குரிய வளவுஞ் சென்று நின்றவன், பின் அவ்வளவிலே நில்லாமல் மனவெழுச்சியினுல் மேலுஞ் செல்லு வானுயின், அவ்வெழுச்சியானது தொழில் முடிதற்குக் காரண மாகாமல் அவனுயிர் முடிதற்குக் காரணமாம் என்னும் பொருள் தோன்ற நின்றமையின், இக்குறளும் மேற்கூறிய பிறிதுமொழிதல் என்னும் அலங்காரமாம். அளவறிந்து நிற்றல்வேண்டுமென்றமையின், இதனுல் வினைவலியை அறியாதவிடத் துண்டாகும் குற்றஞ் சொல்லப்பட்டது.

(க-து.) அரசன் தான்மேற்கொண்ட வினைக்குத் தக்க அளவைக் கடந்து நடப்பானுயின், அவ்வினை அவனுக்குக் கேட்டைத் தரும் என்பது.

6. There will be an end to his life who having climbed out to the end of a branch ventures to go further.

---

477 எ. **ஆற்றி னளவறிந் தீக வதுபொருள்**
**போற்றி வழங்கு நெறி.**

பரி :—(இ-ள்.) ஈயுநெறியானே தமக்குள்ள பொருளின் எல்லையை யறிந்து அதற்கேற்ப ஈக; அங்ஙனம் ஈதல் பொருளைப் பேணிக் கொண்டொழுகும் நெறியாம், (எ - று).

ஈயும் நெறி மேல் *இறைமாட்சியுள் “வகுத்தலும் வல்லதரசு” என்புழி உரைத்தாம். எல்லைக்கேற்ப ஈதலாவது † ஒன்றுன

* இறைமாட்சி யென்னுமதிகாரம் ஐந்தாவது குறளிலுள்ள [‘வகுத்தலும் வல்லதரசு (காப்பாற்றியபொருளை) அறம்பொருளின் பங்களின் பொருட்டுச் செலவு செய்தலும் வல்லவனே அரசன்’] என்ற விடத்துக் கூறினும் என்பது, அங்குப் பரிமேலழகர் “கடவுளர் அந்தணர் வறியோர் என்றிவர்க்கும் புகழிற்குங் கொடுத்தலை அறப் பொருட்டாகவும், யானை குதிரை படை நாடு அரண் என்றி வற்றிற்கும் பகையோடு கூடலிற் பிரிக்கப்படுவார்க்கும் தன்னிற் பிரிதலிற் கூட்டப்படுவார்க்குங்கொடுத்தலைப் பொருட் பொருட்டா கவும், மண்டபம் வாவி செய்குன்று இளமரக்கா முதலிய செய்தற்கும் ஐம்புலன்களா னுகர்வனவற்றிற்குங் கொடுத்தலை இன்பப் பொருட் டாகவுங் கொள்க” என்று கூறியிருக்கின்றனர்.

† ஒன்றுன வெல்லையை நான்கு கூருக்கி - ஓரளவுட்பட்டுத் தமக்குரித்தாயுள்ள பொருளை நான்கு பாகமாக்கி.

வெல்லையை நான்கு கூறுக்கி அவற்றுள் இரண்டனைத் தன் செலவாக்கி ஒன்றனை மேல் இடர்வந்துழி அது நீக்குதற் பொருட்டு *வைப்பாக்கி நின்றவொன்றனை யீதல். † பிறரும் ‡ "வருவாயுட் கால்வழங்கி வாழ்தல்" என்றார். பேணிக் கொண்டொழுகுதல் ¶ ஒருவரோடு நட்பிலாத அதனைத் தம்மோடு நட்புண்டாக்கிக் கொண்டொழுகுதல். $ முதலிற் செலவு சுருங்கிற் பொருள் ஒருகாலும் நீங்கா தென்பதாம்.

**தெளி :—(இ – ள்.)** ஆற்றின் – (கொடுக்கும்) வழியினாலே, அளவு – (தமக்குள்ள பொருளின்) அளவை, அறிந்து—தெரிந்து, ஈக – (அப்பொருளளவிற்கு ஏற்பக்) கொடுக்கக்கடவர், அது – அவ்வாறு கொடுத்தலானது. பொருள் – பொருளை, போற்றி வழங்கும் நெறி – கா ப்பாற்றிக்கொண்டு நடக்கும் வழியாம், (எ–று).

கொடுக்கும் வழி முன்னே இறைமாட்சி யதிகாரத்தில் "வகுத்தலும் வல்லதரசு" என்றவிடத்துக் கூறினாம். பொருளின் அளவிற்கேற்பக் கொடுத்தலாவது ஒன்றான வளவை நான்கு பாகஞ்செய்து அவற்றுள் இரண்டு பாகத்தைத் தன் செலவுக்காக்கி ஒரு பாகத்தைப் பின்னே ஆபத்து வந்தவிடத்து அவ்வாபத்தை நீக்குதற் பொருட்டு இருப்பாக்கி நின்ற ஒரு பாகத்தைக் கொடுத்தல். காப்பாற்றிக் கொண்டு நடத்தலாவது ஒருவரோடு நட்பில்லாத அப்பொருளைத் தம்மோடு நட்புண்டாக்கிக்கொண்டு நடத்தல். வரவிற் செலவு சுருங்கினால் பொருள் ஒருகாலும் நீங்காதென்பதாம்.

(க – து.) அளவறிந்து கொடுக்கும் அரசனிடத்துப் பொருள் நிலை பெறும் என்பது.

---

* வைப்பாக்கி-ஆஸ்தியாக்கி.

† பிறரும் என்றது திரிகடுகமியற்றிய நல்லாதனாரை.

‡ திரிகடுகம், உக. இதன்பொருள், (தமக்கு) வரும் பொருள்களுள் நான்கிலொரு பாகத்தை (அறத்தின் பொருட்டுச்) செலவு செய்து வாழ்தலென்பது. "வந்த பொருளிற் காற்கூறு வருமேயிடர்நீக்குதற்க மைத்து, மைந்த விருகா னினக் காக்கி மற்றைக் காலே வழங்கிடுக" என்று விநாயக புராணங் கூறுவது மிங்குக் கவனிக்கத் தக்கதாம்.

¶ ஒருவரோடு நட்பில்லாத அதனைத் தம்மோடு நட்புண்டாக்கிக் கொண்டொழுகுதல் – எத்தன்மையாரோடும் சிநேகங்கொள்ளுதலில்லாத பொருளைத் தம்முடன் சிநேகமாக்கிக்கொண்டு தம்மை விட்டு நீங்காவாறு செய்து நடத்தலாம். பொருள் ஒருவரோடும் நட்புக்கொள்ளுதலின்றென்பது "திருமக ணிலைமையுஞ் செல்வர் கேட்டிரேன், மருவிய மனிதரை யிகந்து மற்றவள், பொருவறு புகழினர் புதிய காமுறு மொருவர்கண் ணுறவில ளுணர்ந்து கொண்மினே" என்று சூளாமணி கூறுவதாலும் பிறவாற்றாலு முணர்தற்பாற்றும்.

$ (தமக்கு வரும்) முதற் பொருளினும் செலவாகும் பொருள் குறைவாக விருந்தால் பொருள் ஒருகாலும் தம்மைவிட்டு நீங்கா தென்பதாம்.

7. Let a man know the measure of his ability to give, and let him give accordingly; such giving is the way to preserve his property.

---

அ· **ஆகா றளவிட்டி தாயினுங் கேடில்லை**
**போகா றகலாக் கடை.**

பரி :— (இ - ள்.) அரசர்க்குப் *பொருள் வருகின்ற நெறியளவு சிறி தாயிற்றாயினும் † அதனாற் கேடில்லையாம் ; ‡ போகின்ற நெறியளவு [] அதனிற் பெருகாதாயின், (எ - று).

¶ இட்டிதெனவும் அகலாதெனவும் வந்த $ பண்பின் தொழில்கள் () பொருண்மே னின்றன. பொருளென்பது அதிகாரத்தான் வருவித்து அளவென்பது பின்னும் கூட்டி உரைக்கப்பட்டன. முதலுஞ் செலவுந் தம்முள் ஒப்பினுங் கேடில்லை யென்பதாம்.

தெளி: - (இ - ள்.) ஆகா றளவு - (அரசர்க்குப் பொருள்) வருகின்ற வழியளவு, இட்டிதாயினும் — சிறிதாயிற்றானாலும், கேடு - (அதனால்) கெடுதல், இல்லை — இல்லையாம், போகாறு (அளவு) - போகின்றவழி அளவு, அகலாக்கடை - (அதனில்) விரியாதாயின், (எ - று).

இட்டிது எனவும் அகலாது எனவும் வந்த அளவு என்னுங் குணத்தின் தொழில்கள் வழியென்னுங் குணியின்மேல் நின்றன. பொருளென்பது வலியறிதலென்னும் அதிகாரத்தினால் வருவித்து அளவு என்பது போகாறு என்பதனோடுங் கூட்டிச் சொல்லப்பட்டன வரவும் செலவும் தம்முள் ஒத்திருந்தாலும் கேடில்லை யென்பதாம்

(க - து.) அரசருக்குப் பொருட்செலவு பெருகாதாயின், அப் பொருளின் வரவு சிறிதாயிருப்பினும் அதனால் கெடுதியில்லையாம்.

---

* பொருள் வருகின்ற நெறியளவு — திரவியங் கிடைப்பதற்கு ஏதுவாயுள்ள மார்க்கத்தினளவு.

† அதனால் - பொருள் வருகின்றவழி சிறிதா யிருப்பதனால்

‡ போகின்ற நெறியளவு - பொருள் செலவாகின்ற மார்க்கத்தினளவு.

[] அதனிற் பெருகாதாயின் - பொருள் வருகின்ற வழியளவினும் அதிகரிக்காதிருக்குமாயின்

¶ ஆகாறு அளவு இட்டிது ஆயினும் என்றும், போகாறு அளவு அகலாக்கடை என்றும் உள்ளவற்றில் இட்டிது என்னும் தொழிலும் அகலாது (அகலாக்கடை) என்னுந் தொழிலும் அளவென்னும் பண்பி (குணத்தி)ற்குரியனவாயிருந்தாலும், அத்தொழில்கள் அளவென்னும் பண்பையுடைத்தாயிருக்கின்ற நெறியென்னும் பொருளின் மேல் நின்றன என்பதாம். இது குணவினை குணிவினையாய உபசார வழக்காம்.

$ பண்பின் - அளவென்னுங்குணத்தின்.

() பொருண்மேல் - (நெறி வழி)யின் மேல்.

8. Even though the income of a king be small it will be no loss to him if his outgoings be not large.

---

**கூ. அளவறிந்து வாழாதான் வாழ்க்கை யுளபோல**
**இல்லாகித் தோன்றாக் கெடும்.**

பரி:— (இ - ள்.) தனக்குள்ள பொருளின் எல்லையை அறிந்து *அதற்கேற்ப வாழமாட்டாதான் வாழ்க்கைகள் உள்ளனபோலத் தோன்றி மெய்ம்மையான் இல்லையாய்ப் பின்பு அத்தோற்றமும் இன்றிக் கெட்டு விடும், (எ - று).

‡ அவ்வெல்லைக்கேற்ப வாழ்தலாவது அதனிற் சுருங்கக் கூடா தாயின் ஒப்பவாயினும் ஈத்துந் துய்த்தும் வாழ்தல். தொடக்கத்திற் கேடு வெளிப்படாமையின் † உளபோலத் தோன்று என்றார். ¶ முதலிற், செலவு மிக்கால்வரும் ஏதங் கூறியவாறு.

தெளி:— (இ - ள்.) அளவு - (தனக்குள்ள பொருளின்) அளவை, அறிந்து - தெரிந்து (அவ்வளவிற்குப் பொருந்த), வாழாதான் - வாழமாட்டாதவனது, வாழ்க்கை - வாழ்க்கைகள், உளபோல - உள்ளனபோல, தோன்று - தோன்றி, இல்லாகி - (மெய்ம்மையால்) இல்லையாகி, (பின்பு அத்தோற்றமும் இல்லாமல்), கெடும் - கெட்டு விடும், (எ - று).

அவ்வளவிற்குப் பொருந்த வாழ்தலாவது அவ்வளவிற் சுருங்கக் கூடாமலிருந்தால் அவ்வளவிற்குச் சமமாகவாயினுங் கொடுத்தும் அனுபவித்தும் வாழ்தல். ஆரம்பத்தில் வாழ்க்கையின் கேடு வெளிப் படாமையால் உளபோலத்தோன்று என்றார். வரவிற் செலவு மிகுந்தால் வருங்குற்றம் சொல்லியபடியாம்.

(க–து.) தனக்குள்ள பொருளினளவையறிந்து வாழாத அரசனது வாழ்க்கை விரைந்து கெடும் என்பது.

9. The prosperity, of him who lives without knowing the measure of his property, will vanish away and perish even while it seems to continue.

---

**க0. உளவரை தூக்காத வொப்புர வாண்மை**
**வளவரை வல்லைக் கெடும்.**

---

* அதற்கேற்ப - அப்பொருளளவிற் கேற்குமாறு.

‡ அவ்வெல்லைக்கேற்ப - அப்பொருளினளவிற்குப் பொருந்த.

† உளபோலத் தோன்றி என்றும் பாடமுண்டு.

¶ இங்கு " ஆன முதலி லதிகஞ் செலவானால், மான மழிந்து மதி கெட்டுப் - போனதிசை, எல்லார்க்குங் கள்ளனா யேழ்பிறப்புந் தீயனாய், நல்லார்க்கும் பொல்லனா நாடு " என்று நல்வழி கூறுவது மறியத்தக்கதாம்.

பரி:—(இ - ள்.) தனக்குள்ள * அளவு தூக்காமைக் கேதுவாய † ஒப்புரவாண்மையால் ஒருவன் செல்வத்தி னெல்லை விரையக்கெடும்.

ஒப்புரவேயாயினும் ‡ மிகலாகாதென்றமையான், ¶ இதுவுமது. இவை நான்குபாட்டானும் $ மூவகையாற்றலுள் பெருமையின் பகுதியாய பொருள் வலியறிதல் சிறப்பு நோக்கி வகுத்துக் கூறப் பட்டது.

தெளி :—(இ - ள்.) உளவரை - (தனக்கு) உள்ளவளவை, தூக்காத—ஆராயாமைக்குக் காரணமாகிய, ஒப்புரவாண்மை - உபகாரமுடைமையால், வளவரை - (ஒருவனது) செல்வத்தினளவு. வல்லைக்கெடும் - விரைவாகக்கெடும், (எ - று).

உபகாரமேயாயினும் மிகலாகாதென்று கூறினமையால், இதுவும் அது. இவை நான்கு பாட்டாலும் மூவகை ஆற்றலுள் பெருமையின் பகுதியாகிய பொருள் வலியறிதல் சிறப்புநோக்கி வகுத்துச் சொல்லப்பட்டது.

(க - து.) அரசன் தனக்குள்ள பொருளினளவை யாராயாது அளவு கடந்து செலவு செய்தால் அவனது செல்வம் விரைவாகக் கெடும் என்பது.

10. The measure of his wealth will quickly perish, whose liberality weighs not the measure of his property.

---

# பதினொன்றும் அதிகாரம்

## காலமறிதல்—On the discernment of a suitable time

பரி :—அஃதாவது () வலியான் மிகுதியுடையனும் பகைமேற்

---

* அளவு - பொருளினளவு.

† ஒப்புரவு - உலக நடையை யறிந் துதவிசெய்தல். ஒப்புர வாண்மை - ஒப்புரவை யாளுந் தன்மை.

‡ மிகலாகாது - பொருளளவிற்கு மேற்படலாகாது.

¶ இதுவுமது - இக்குறளும் 'அளவறிந்து வாழாதான்' என்னும் குறளிற் கூறியதுபோல என்பது; அஃதாவது முதலிற் செலவுமிக்கால் வரும் ஏதங்கூறியவாறு என்பதாம்.

$ அறிவு ஆண்மை பெருமை யென்னு மூவகையாற்றல்களுள் பொருள் படை யென்றிருவகைத்தாய பெருமையின் பகுதியாய பொருள், வலியறிதல் மற்றைய ஆற்றல்களை யறிதலினும் சிறப்புடையதாயிருத்தல் பற்றி வகுத்துச் சொல்லப்பட்டதென்க.

() வலியான் மிகுதியுடையனும் - வினைவலி தன்வலி மாற்றான்வலி துணைவலி யென்னும் நான்கனுள் தன்வலியும் துணைவலியும் மிகுதியாக உடையவனும்.

**சேறலுற்ற அரசன் *அச்செலவிற் கேற்ற காலத்தினையறிதல். † அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.**

*தெளி:—அஃதாவது வலியினால் மிகுதியுடையவனாய்ப் பகைவர் மேல் போருக்குச் செல்லத்தொடங்கிய அரசன் அச்செல்லுதலுக் கேற்ற காலத்தினை யறிதல். அதிகார முறைமையும் இதனாலே விளங்கும்.*

க ‡ **பகல்வெல்லுங் கூகையைக் காக்கை யிகல்வெல்லும்**
**வேந்தர்க்கு வேண்டும் பொழுது.**

**பரி:—(இ – ள்.) தன்னின் வலிதாய ¶கூகையைக் காக்கை ()பகற் பொழுதின்கண் வெல்லாநிற்கும். ‖ அதுபோலப் பகைவரது [] இகலை வெல்லக்கருதும் அரசர்க்கு அதற்கேற்ற †† காலம் இன்றியமையாதது.**

*§ எடுத்துக்காட்டுவமை, காலமல்லாவழி வலியாற் பயனில்லை*

---

* அச்செலவிற் கேற்ற காலத்தினை யறிதல் - அவ்வாறு பகைவர் மேற் போர்க்குச் செல்லுவதற்குத் தகுதியாயமைந்த காலத்தினை யாராய்ந்தறிதல்.

† வலியறிதலென்னும் அதிகாரத்தின்பின் காலமறிதலென்னும் அதிகாரம்வைத்த முறைமையும்.

‡ "இடத்தொடு பொழுது நாடி யெவ்வினைக் கண்ணு மஞ்சார், மடப்பட லின்றிச் சூழு மதிவல்லார்க் கரிய துண்டோ, தடத்திடைக் காக்கை யொன்றே யாயிரங் கோடி கூகை, யிடத்திடை யழுங்கச் சென்றுங் கின்னுயிர் செகுத்த தன்றே" என்பது சீவகசிந்தாமணி.

¶ "மரம்பயில் கூகையைக் கோட்டா னென்றலும்" என்பது தொல்காப்பியம் மரபியல்.

() பகற்காலத்தில் கூகைக்கு (கோட்டானுக்கு)க்கண் தெரியாமை யால் அக்கூகையை வெல்லக் காக்கைக்கு அப்பகல் தக்க காலமாயிற் றென்க.

காக்கைக்கிரவிலும் கூகைக்குப் பகலிலும் கண் தெரியாதென்ப திங் குணர்தற் பாலதாம்.

‖ ஆதலால் என்றும் பாடமுண்டு.

[] இகல்-இருவர் தம்முள்ளே போர்செய்து வலிமை தொலை தற்குக் காரணமாய மாறுபாடு

†† "சில மல்ல'ன நீக்கிச்செம் பொற்றுலைத், தால மன்ன தனி நிலை தாங்கிய, ஞால மன்னற்கு நல்லவர் நோக்கிய, கால மல்லது கண்ணுமுண்டாகுமோ" என்பது இராமாயணம்.

§ பகல் வெல்லுங் கூகையைக் காக்கை; இகல் வெல்லும் வேந் தர்க்கு வேண்டும் பொழுது என்றிரண்டு வாக்கியம் வந்திடையே அதுபோல என்னும் உவமவுருபு தொக்கு நின்றமையின், இக்குறள் எடுத்துக் காட்டுவமை யாயிற்றென்க.

யென்பது விளக்கி நின்றது. * இனிக் காலமாவது வெம்மையுங் குளிர்ச்சியுந் தம்முள் ஒத்து நோய் செய்யாது தண்ணீரும் உணவும் முதலிய உடைத்தாய்த் தானை வருந்தாது செல்லும் இயல்பினதாம். இதனாற் காலத்தது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்.) காக்கை - காக்கையானது, கூகையை - (தன்னிலும் வலியுடையதாகிய) கோட்டானை, பகல் - பகற்பொழுதில், வெல்லும்-வெல்லா நிற்கும், (அதுபோல), இகல்-(பகைவரது) மாறுபாட்டை, வெல்லும் - வெல்லக்கருதுகின்ற, வேந்தர்க்கு-அரசர்க்கு. பொழுது - (அவ்வெல்லுதற்கேற்ற) காலம், வேண்டும் - (அவசியமாய்) வேண்டும்.

இக்குறள் எடுத்துக்காட்டுவமையணி. இது காலமல்லாதவிடத்து வலியினால் பயனில்லை யென்பதை விளக்கி நின்றது. இனிக் காலமாவது வெம்மையும் குளிர்ச்சியும் தம்முள்ளே சமமாய் நோய் செய்யாமல் தண்ணீரும் உணவும் முதலியனவுடையதாய்ச் சேனை வருந்தாமல் செல்லுந் தன்மையதாம். இதனால் காலத்தினது சிறப்புச் சொல்லப்பட்டது.

(கு-து.) அரசர் பகைவரைக் காலமறிந்து கொல்லல்வேண்டும்.

1. A crow will overcome an owl in the day time: the king who would conquer his enemy must have a suitable time.

———

. பருவத்தோ டொட்ட வொழுக றிருவினைத்
தீராமை யார்க்குங் கயிறு.

பரி:—(இ - ள்.) அரசன் காலத்தோடு பொருந்த வினை செய்து ஒழுகுதல் ஒருவர் கண்ணும் நில்லாது நீங்குஞ் செல்வத்தைத் தன்னின் நீங்காமற் பிணிக்குங் கயிறும், (எ - று).

காலத்தோடு பொருந்துதல் — காலந் தப்பாமற் செய்தல். † 'தீராமை' என்றதனால் தீர்தன்மாலையதென்பது பெற்றும். வினை வாய்த்து வருதலான் ‡ அதனின் ஆகுஞ் செல்வம் எஞ்ஞான்றும் நீங்காதென்பதாம்.

தெளி:—(இ - ள்.) (அரசன்) பருவத்தோடொட்ட - காலத்தோடு பொருந்த, ஒழுகல்-(தொழில்செய்து) நடத்தல், திருவினை-(ஒருவரிடத்

* மனுதருமசாஸ்திரம் ஏழாவதத்தியாயத்தில் "சுபமான மார்கழிமாதத்தில் அரசன் சண்டைக்குப் போகவேண்டும்; தனக்குப் பலக்குறைவில்லா திருந்து பலகாலத் திலேயே சத்துருவின் தேசத்தை யெதிர்க்கவேண்டு மென்று மனமிருந்தால் பங்குனிசித்திரை மாதங்களிலும் போகலாம்", "மற்ற மாதங்களிலும் தனக்கு நிச்சயமாக வெற்றியுண்டாகு மென்றும், தன் சத்துரு சதுரங்கபல மில்லாமல் துன்பப்படுகிறானென்றும், தோன்றினால் போகலாம்" என்று கூறுவது மிங்கறியத் தக்கதாம்.

† (செல்வம்) தீராமை (நீங்காமல்) என்றதனால் (அது) தீர்தன்மாலைய (நீங்குந் தன்மைய) தென்பது பெற்றும்.

‡ அதனின் - வினைவாய்த்து (தொழில் கைகூடி) வருதலால்.

தும் நில்லாது நீங்குஞ்) செல்வத்தை, தீராமை - (தன்னிடத்தி னின்று) நீங்காமல், ஆர்க்கும் - கட்டும், கயிறு - கயிறுகும், (எ - று).

காலத்தோடு பொருந்துதல்—(மேற்கொண்ட தொழிலை) காலந் தப்பாமற் செய்தலாம். 'தீராமை' என்றதனுல் செல்வம் திருந் தன்மையதென்பது பெறப்பட்டது. தொழில் கைகூடிவருதலால் அதனுலுண்டாகும் செல்வம் எந்நாளும் நீங்காதென்பதாம்.

(க - து.) காலமறிந்து தொழில் செய்பவரிடத்துச் செல்வம் நீங்காதென்பது.

2. Acting at the right season, is a cord that will immovably bind success to a king.

---

**ங. அருவினை யென்ப வுளவோ கருவியாற்**
**கால மறிந்து செயின்.**

பரி:—(இ - ள்.) அரசரால் செய்தற்கரிய வினைகளென்று சொல்லப் படுவன * உளவோ, † அவற்றை முடித்தற்காங் கருவிகளுடனே செய்தற்காங் காலம் அறிந்து செய்வாராயின், (எ – று).

கருவிகளாவன ‡ மூவகையாற்றலும் ¶ நால்வகை உபாயங்களு மாம். £ அவை உளவாயவழியுங் காலம் வேண்டுமென்ப தறிவித் தற்குக் † 'கருவியான்' என்றார். எல்லாவினையும் எளிதின் முடியு மென்பதாம்.

தெளி:—(இ – ள்.) அருவினை யென்ப - (அரசரால்) செய்தற்கரிய தொழில்களென்று சொல்லப்படுவன, உளவோ - உண்டோ, கருவி யான் – (அத்தொழில்களை முடித்தற்காகும்) சாதனங்களுடனே, காலம் - (செய்தற்காகும்) காலத்தை, அறிந்து செயின்-தெரிந்து செய்வாராஞல், (எ - று).

கருவிகள் - மூவகையாற்றல்களும் நால்வகை உபாயங்களுமாம்- அவை உண்டாகியவிடத்தும் காலம் வேண்டுமென்பது அறிவித்தற்குக் 'கருவியான்' என்றார். இவ்வாறு செய்வார்க்கு எல்லாத் தொழில் களும் எளிதாக முடியுமென்பதாம்.

(க - து.) தாமேற்கொண்ட தொழிலைச் செய்தற்குரியகால மறிந்து அதற்குத்தக்க சாதனங்களுடனே செய்தால் அருமையான தொழில் யாதொன்றுமில்லை என்பது.

---

* உளவோ என்பது இல்லை யென்னும் பொருளை யுணர்த்தி நின்றது. (ஓகாரம் எதிர்மறைப்பொருளது.)

† அவற்றை - செய்தற்கரிய வினைகளை.

‡ மூவகையாற்றல் - அறிவு, ஆண்மை, பெருமை.

¶ நால்வகை யுபாயம் - தான சாம பேத தண்டம்.

£ அவை - மூவகையாற்றல், நால்வகையுபாயம்.

† கருவியாற் காலமறிந்து செயின் என்றும் பாடமுண்டு.

3. Is there anything difficult for him to do, who acts with the right instruments, at the right time?

---

ச. ஞாலங் கருதினுங் கைகூடுங் காலங்
கருதி யிடத்தாற் செயின்.

பரி:— (இ-ள்.) ஒருவன் ஞாலமுழுதுந் தானே ஆளக்கருதினன் ஆயினும் * அஃது அவன் † கையகத்ததாம்; ‡ அதற்குச் செய்யும் வினையைக் காலமறிந்து இடத்தோடு பொருந்தச் செய்வானாயின், (எ-று).

இடத்தான் என்பதற்கு ¶ மேற் கருவியான் என்பதற்கு உரைத்தாங்குரைக்க. கைகூடாதனவும் கைகூடுமென்பதாம். இவை மூன்று பாட்டானுங் காலமறிதற்பயன் கூறப்பட்டது.

தெளி:— (இ - ள்.) (ஒருவன்) ஞாலம் - பூமிமுழுதும், கருதினும், (தானே ஆள) நினைத்தானானாலும், (அது), கைகூடும் - (அவன்) கைக்குள்ளாம், (அதற்குச் செய்யுந்தொழிலை). காலம் - காலத்தை, கருதி - அறிந்து, இடத்தான் - இடத்தோடு, (பொருந்த), செயின் - செய்வானாயின், (எ-று).

இடத்தான் என்பதற்கு மேலுள்ள குறளில் கருவியான் என்பதற்குச் சொல்லியவாறு சொல்லிக்கொள்க. இவ்வாறு செய்வார்க்குக் கைகூடாதனவும் கைகூடுமென்பதாம். இவைமூன்று பாட்டாலும் காலமறிதலின் பயன் சொல்லப்பட்டது கைகூடுதல் - பெறப்படுதல்.

(க - ஞ.) காலம் பார்த்து இடத்திற்குத் தக்கவாறு தொழில் செய்யும் அரசன் உலகமுழுதும் ஆளுவான் என்பது.

4. Though a man should meditate the conquest of the world, he may accomplish it, if he acts in the right time, at the right place.

---

ரு. காலங் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர்.

பரி:— (இ - ள்) தப்பாது ஞாலமெல்லாங் கொள்ளக்கருதும் அரசர் தம் வலி மிகும்ஆயினும் * அதுகருதாது † அதற்கேற்ற காலத்தையே

---

* அஃது - உலகமுழுதும். † கையகத்ததாம் - வசத்ததாம்.

‡ அதற்கு - உலகமுழுதுந் தானே ஆளுதற்கு.

¶ மேல் ('அருவினையென்ப' என்னுங்குறளில்) மூவகையாற்றலும் நால்வகை யுபாயங்களுமாகிய கருவிக ளுண்டாயவிடத்தும் காலம் வேண்டுமென்றுரைத்தாற் போல இடம் உண்டாயவிடத்தும் காலம் வேண்டுமென்றுரைத்துக் கொள்க என்பது.

* அது கருதாது - தம் வலிமிகுதியை முக்கியமாக எண்ணுமல்.

† அதற்கேற்ற - உலகத்தைக் கைக்கொள்ளுதற்குத் தக்க.

கருதி *அது வருந்துணையும் பகைமேற் செல்லார், (எ - று).

தப்பாமை - † கருதியவழியே கொள்ளுதல். வலி மிகுதி 'காலங்கருதி' என்றதனாற் பெற்றும். ‡ அது கருதாது செல்லின் இருவகைப் பெருமையுந் தேய்ந்து வருத்தமும் உறுவராகலின் 'இருப்பர்' என்றார். இருத்தலாவது ¶ நட்பாக்கல், பகையாக்கல், மேற்சேறல், இருத்தல், பிரித்தல், கூட்டலென்னும் அறுவகைக் குணங்களுள் மேற்செலவிற்கு மாறாயது. இதனாற் காலம் வாராவழிச் செய்வது கூறப்பட்டது.

தெளி :— (இ - ள்.) கலங்காது - தப்பாமல், ஞாலம் - பூமியெல்லாம், கருதுபவர் - (கொள்ள) நினைக்குமரசர், (தம்வலி மிகுமாயினும் அதனை நினையாமல்), காலம் - (அதற்கு ஏற்ற) காலத்தையே, கருதி - நினைத்து, இருப்பர் - (அது வருமளவும் பகைவர்மேற்செல்லாது) இருப்பார், (எ - று).

தப்பாமை - நினைத்தபடியே கொள்ளுதல். வலிமிகுதி 'காலங் கருதி' என்றதனால் பெறப்பட்டது. அதை நினையாமற் (பகைவர் மீது போர்க்குச்) சென்றால் பொருளும் படையும் ஆகிய இருவகைப் பெருமையும் குறைந்து வருத்தமுமடைவராகலால் 'இருப்பர்' என்றார். இருத்தலாவது நட்பாக்கல், பகையாக்கல், பகைவர்மேற் செல்லுதல், இருத்தல், பிரித்தல், கூட்டல் என்னும் அறுவகைக் குணங்களுள் பகைவர்மேற் செல்லுதற்கு மாறாயது. இதனாற்காலம் வராதவிடத்துச் செய்வது சொல்லப்பட்டது.

(க - து.) பூமி முழுதும் ஆளநினைக்கும் அரசர் அதற்குரிய காலத்தை யெதிர்பார்த்திருப்பர் என்பது.

5 They who thoughtfully consider and wait for the right time for action, may successfully meditate the conquest of the world.

---

* அது வருந்துணையும் - (உலகத்தைக் கைக்கொள்ளுவதற்குத் தக்க) அக்காலம் வருமளவும்.

† கருதியவழியே கொள்ளுதல்—தாமெண்ணியபடியே உலகத்தைக் கைக்கொள்ளுதல்.

‡ அது கருதாது செல்லின் - அக்காலத்தை யறியாது நினைத்த போது பகைவர்மீது போர்க்குச் சென்றால்.

¶ மனுதருமசாஸ்திரம் ஏழாவதத்தியாயத்தில் "சத்துருவுடன் சமாதானமாதல், யுத்தஞ் செய்தல், யுத்தத்திற்குப் போதல், போகாமலிருத்தல், தன்சேனையை யிரண்டாகப் பிரித்தல், பலமுள்ள மற்றொருவனைத்தானடைதல் இவ்வாறனையும் ஆலோசிக்க வேண்டும்."

"இவ்வாறு யோசித்துப் பார்த்து எந்தெந்தக் காரியங்களுக்கு எதையெதைச் செய்ய வேண்டுமோ அதையதைச் செய்யவேண்டும்."

"இவ்வாறு குணங்களுள் ஒவ்வொன்றும் இரண்டிரண்டு விதமாகுமென்று சொல்லுகிறார்கள்" என்று கூறுவது மிங்கறியத்தக்கதாம். ஒவ்வொரு குணமும் இரண்டிரண்டு வகையாமென்பதை ஆண்டுக்காண்க.

சு. ஊக்க முடையா னொடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து.

பரி :—(இ - ள்.) வலிமிகுதியுடைய அரசன் பகைமேற் செல்லாது காலம் பார்த்திருக்கின்ற இருப்பு, பொருகின்ற தகர் § தன்பகை கெடப் பாய்தற்பொருட்டுப் பின்னே கால்வாங்குந் தன்மைத்து, (எ - று).

* உவமைக்கண் 'தாக்கற்கு' என்றதனுல் பொருளினும் வென்றி யெய்தற் பொருட்டென்பது கொள்க. இதனுல் $ அவ்விருப்பின் சிறப்புக் கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்) ஊக்கமுடையான் - வலிமிகுதியுடைய அரசன், ஒடுக்கம் - (பகைவர்மேற் செல்லாது) காலம் பார்த்திருக்கின்ற இருப்பு, பொருதகர் – போர்செய்கின்ற ஆட்டுக்கடா, தாக்கற்கு - (தன்பகை கெடப்) பாய்தற்பொருட்டு, பேருந்தகைத்து - பின்னே கால்வாங்குந் தன்மையதாம், (எ-று).

உபமானத்தில் 'தாக்கற்கு' என்று கூறியிருத்தலால் உபமேயத்திலும் வெற்றியடைதற் பொருட்டு என்பது கொள்க. இதனுல் அவ்விருத்தலின் சிறப்புச் சொல்லப்பட்டது.

(க - து.) வலிமையுள்ள அரசன் பகைவர்மேற் போர்க்குச் செல்லா தொடுங்கிக் காலம்பார்த்திருத்தல் வெற்றி பெறுதற் பொருட்டாம் என்பது.

6. The self-restraint of the energetic while waiting for a suitable time to act, is like the drawing back of the foot of a fighting-ram in order to butt.

---

எ. பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த்
துள்வேர்ப்ப ரொள்ளி யவர்.

பரி :—(இ - ள்.) அறிவுடைய அரசர் பகைவர் மிகைசெய்த பொழுதே

---

§ தன்பகை கெட - தனது பகையான மற்றோ ராட்டுக்கடா அழியும்படி.

* பொருதகர் தாக்கற்குப் பேருந்தகைத்து என்னும் உவமானத்தில் தாக்கற்கு என்று கூறியதினுல் ஊக்கமுடையானொடுக்கம் என்னும் பொருளினும் (உவமேயத்திலும்) வென்றி யெய்தற் பொருட்டு (ஜயமடையும் நிமித்தம்) என்பது கொள்க என்பது. வலி மிகுதியுடைய அரசன் பகைவர் மேற் செல்லாது வென்றி யெய்தற் பொருட்டுக் காலம் பார்த்திருக்கின்ற இருப்பு என்பது ஊக்க முடையா னொடுக்கம் என்பதற்குப் பொருளாமென்க.

$ அவ்விருப்பின் சிறப்பு - வெற்றியடையுமாறு பகைவர்மேற் செல்லாது காலம் பார்த்திருக்கின்ற இருப்பின் பெருமை.

அவரறியப் * புறத்து வெகுளார் ; தாம் அவரை வெல்லுதற்கேற்ற காலத்தினையறிந்து † அது வருந்துணையும் உள்ளே வெகுள்வர், (எ - று).

பொள்ளென என்பது குறிப்புமொழி. § வேரார் வேர்ப்பரெனக் காரணத்தைக் காரியமாக வுபசரித்தார். அறிய வெகுண்டுழித் தம்மைக் காப்பராகலிற் 'புறம்வேரார்' என்றும், $ வெகுளி ஒழிந்துழிப் பின்னும் மிகை செய்யாம லடக்குதல் கூடாமையின் 'உள்வேர்ப்பர்' என்றுங் கூறினர்.

தெளி:—(இ - ள்.) ஒள்ளியவர் - அறிவுடைய வரசர், ஆங்கே - (பகைவர் தவறு செய்த) அப்பொழுதே, (அப்பகைவரறிய), பொள்ளென - விரைவாக, புறம்வேரார் - புறத்திற் கோபஞ் செய்யார், காலம் - (தாம் அப்பகைவரை வெல்லுதற்கேற்ற) காலத்தை, பார்த்து - அறிந்து, (அக்காலம் வருமளவும்), உள் வேர்ப்பர் - உள்ளே கோபஞ் செய்வார், (எ - று).

பொள்ளென என்பது விரைவுப் பொருளுணர்த்துங் குறிப்பிடைச் சொல். கோபஞ்செய்யார் கோபஞ்செய்வார் என்னுங் காரணத்தை வேரார் வேர்ப்பர் என்னுங் காரியமாக வுபசரித்துக்கூறினர். பகைவரறியக் கோபஞ்செய்த விடத்து அவர் தம்மைக் காத்துக் கொள்ளுவாராகலால் 'புறம் வேரார்' என்றும், கோபம் ஒழிந்த விடத்துப் பின்னுந் தவறு செய்யாமல் அவரை அடக்குதல் கூடாமையால் 'உள்வேர்ப்பர்' என்றும் சொல்லினர்.

(க - து.) அறிவுடைய அரசர் வெல்லுதற்கேற்ற காலம் வருமளவும் பகைவர்மேற் கொண்ட கோபத்தை யடக்கியிருப்பர்.

7. The wise will not immediately and hastily show their anger ; they will watch their time, and restrain their anger within.

---

* விரைவாகப் புறத்து வெகுளார் என்றும் பாடமுண்டு.

† அது வருந்துணையும் - பகைவரை வெல்லுதற்கேற்ற காலம் வருமளவும்.

§ வெகுளார் வெகுள்வர் எனக்கூறாது வேரார் வேர்ப்பர் எனக் கூறினமையால், வேரார் வேர்ப்பர் எனக் காரணத்தைக் காரியமாக வுபசரித்தார்' என்று கூறப்பட்டது. வேர்த்தல்-உடம்பில் வேர்வை யுண்டாதல். வேர்த்தலுக்குக்காரணமான கோபத்தை வேர்த்தல் எனக் கூறினமையால், இது காரியவாகுபெயராம். இங்கு வெகுளு தலும் வெகுளாமையுங்காரணம் ; வேர்த்தலும் வேர்க்காமையுங் காரியமாம்.

$ வெகுளி யொழிந்துழிப் பின்னும் மிகைசெய்யாம லடக்குதல் கூடாமையின் - அரசர் கோபத்தை விட்டவிடத்துப் பகைவர்பின்னும் தவறுசெய்யாதபடி அப்பகைவரை யடக்குதல் கூடாதபடியால். "மிகைமிக் கியற்றித் திரிந்திடினும் வெல்லுங் காலம் வருமளவும், பகைமை புறத்திற் றோற்றுமற் பகைவர் தம்மைப் பண்போடு, நகை செய் தமர்போற் சுமந்திடுக" என்பது விநாயக புராணம். ஒன்றுஞ் செய்யாமல் அடக்குதல் கூடாமையின் என்றும் பாடமுண்டு.

**அ. செறுநரைக் காணிற் *சுமக்க விறுவரை
காணிற் கிழக்காந் தலை.**

பரி :—(இ - ள்.) தாம் வெல்லக் கருதிய அரசர் பகைவர்க்கு இறுதிக் காலம் வருந்துணையும் அவரைக் கண்டாற் பணிக; $ பணியவே, ‡ அக்காலம் வந்திறும்வழி ¶அவர் தகைவின்றி யிறுவர், (எ - று).

£ பகைமை ஒழியும் வகை மிகவுந் தாழ்கவென்பார் 'சுமக்க' என்றும், அங்ஙனந் தாழவே | அவர் தம்மைக்காத்த லிகழ்வராகலின் தப்பாமற் கெடுவ ரென்பார் ‖ அவர்தலை கிழக்காம் என்றுங் கூறினர். § தலைமேற்கொண்ட தொருபொருளைத் தள்ளுங்கால் அது தன்தலை கீழாக விழுமாகலின் அவ்வியல்பு பெறப்பட்டது. இவை இரண்டு பாட்டானும் இருக்கும் வழிப் பகைமை தோன்றுமலிருக்க வென்பது கூறப்பட்டது.

---

* சுமத்தல் – தலைமேற் கொள்ளுதல்; அஃதிங்கு இலக்கணையால் பணிதலுக்காயிற்று.

$ பணியவே – அவ்வாறு பணிந்திருக்கவே.

‡ அக்காலம் வந்திறும் வழி – பகைவர்க்கு முடிவுக்காலம் வந்து முடியுமிடத்து.

¶ அவர் தகைவின்றி யிறுவர் – அப்பகைவர் தடையில்லாமலழிவர்.

£ பகைமை யொழியும்வகை—தம்மீது பகைகொள்ள வில்லை யென்று பகைவர் நம்பிப் பகையொழியும்படி.

| அவர் தம்மைக்காத்த லிகழ்வராகலின் – அப்பகைவர் தம்மைப் பாதுகாத்துக் கொள்ளுதலை யவமதிப்பாராதலால்.

‖ அவர் தலைகீழாம் என்றும் பாடமுண்டு. இங்குக் கிழக்கு என்பது திசையையுணர்த்தாது கீழ் என்பதை யுணர்த்தி நின்றது. "கிழக்கிடு பொருளோ டைந்து மாகும்" என்னும் தொல்காப்பியம் உவமவியற் சூத்திரத்தின் விசேடவுரையில் நச்சினார்க்கினியர் "கிழக்கிடு பொருளென்பது கீழ்ப்படுக்கப்படும் பொருள்" என்று கூறியிருத்தலிங்குணர்தற் பாலதாம்.

§ தலையின்மேற் கொண்டதொரு சுமையைத் தள்ளும்போது (போடும்போது) அச்சுமை தனது தலை (மேலிடம்) கீழாகுமாறு விழுமாதலால், அத்தன்மை பகைவர்க்கும் பெறப்பட்டது. அஃதாவது ஒரு சுமையை வெளிப்படுத்த விரும்பியவன் அச்சுமையைத் தன் தலையின்மேற் சுமந்துசென்று அதனைப் போடுமிடத்தை யடைந்தபோது அச்சுமையைத் தலைகீழாகப் போடுதல்போல, பகைவரை யழிக்க விரும்பியவர் அதற்குத் தக்ககாலம் வருமளவும் அவர்களைத் தலைமேற் கொண்டு சிலாகித்து அழித்தற்குரியகாலம் வந்தபோது அப்பகைவரைத் தலைகீழாகத் தள்ளியழிப்பரென்பதாம். கிழக்காந்தலை என்பதற்குத் 'தகைவின்றி யிறுவர்' என்று பொருள்கூறி யிருத்தலால், அவர் தலை யுருண்டுவிழச் சாவர் என்பது பெறப்படுகின்றதென்க.

தெளி :—(இ - ள்.) (தாம் வெல்லக்கருதிய அரசர்) செறுநரை - பகைவரை, காணின்-கண்டால், சுமக்க-(அப்பகைவர்க்கு முடிவுக் காலம் வருமளவும்) பணியக்கடவர், (பணியவே), இறுவரைகாணின்- அம்முடிவுக்காலம் வந்து முடியுமிடத்து, தலை-(அவரது) தலை, (தடை யில்லாது), கிழக்காம்-கீழ்விழும், (எ – று).

பகைமை தீரும்படி மிகவும் வணங்குக வென்பார் 'சுமக்க' என்றும், அவ்வாறு வணங்கவே அவர் தம்மைக்காத்துக்கொள்ளுதலை யிகழுவாராதலால் தப்பாமல் கெடுவாரென்பார் 'கிழக்காந்தலை' என்றும் சொல்லினர். தலைமீதுகொண்டதொரு பொருளைத் தள்ளும்போது, அப்பொருள் தனது தலைகீழாக விழுமாதலால், அவ் விழுமியல்பு பெறப்பட்டது. இவ்விரண்டு பாட்டாலும் அரசர் காலம் பார்த்திருக்கு மிடத்துப் பகைமை தோன்றாமல் இருக்கவேண்டு மென்பது சொல்லப்பட்டது.

(க – து.) அரசர் பகைவரைக் கண்டால் அவர்க்கு முடிவுக்காலம் வருமளவும் பணிந்தொழுகி, அது வந்தபோதவரை வெல்லக்கடவர் என்பது.

8. If a king meets his enemy, let him show him all respect, until the time for his destruction is come ; when that is come, his head will be easily brought low.

---

௯. எய்தற் கரிய தியைந்தக்கா லந்நிலையே
செய்தற் கரிய செயல்.

பரி :— (இ - ள்.) பகையை வெல்லக்கருதும் அரசர் தம்மாலெய்து தற்கரிய காலம் வந்து கூடியக்கால், *அது கழிவதற்கு முன்பே † அது கூடாவழித் தம்மாற்செய்தற்கரிய வினைகளைச் செய்க, (எ – று).

‡ ஆற்றன் முதலியவற்றாற் ¶ செய்து கொள்ளப்படாமையின் 'எய்தற்கரியது' என்றும், அது தானேவந் தியைதல் அரிதாகலின் 'இயைந்தக்கால்' என்றும்; இயைந்தவழிப் பின்னில்லாது ஓடுதலின் 'அந்நிலையே' என்றும் அது பெறுவழிச் செய்யப்படாமையின்

---

* அதுகழிவதற்கு முன்னே - (தம்மாலடைதற்கரிதான) காலம் நீங்குவதற்கு முன்பே (அக்காலம் வாய்த்தபோதே).

† அது கூடாவழித் தம்மாற்செய்தற் கரிய வினைகளை – அக்காலம் வந்து கூடாதபோது தம்மால் செய்துமுடித்தற் கியலாத காரியங்களை.

‡ ஆற்றன் முதலிய என்றதனால் அறிவு ஆண்மை பெருமை யென்னும் மூவகையாற்றல்களே யன்றி நால்வகை உபாயமும், நால்வகை வலியும், ஐவகைத் தொழிலும், அறுவகைக் குணமும், பிறவுங் கொள்க.

¶ செய்துகொள்ளப் படாமையின் – (தம்மாலடைதற்கரிய காலத்தை) வருவித்துக்கொள்ளக் கூடாமையால்.

'செய்தற்கரிய' என்றுங் கூறினர். இதனுற் காலம் வந்துழி விரைந்து செய்கவென்பது கூறப்பட்டது.

தெளி :—(இ - ள்.) (பகைவரை வெல்ல நினைக்கின்ற அரசர்) எய்தற் கரியது – (தம்மால்) பெறுதற்கரிய காலம், இயைந்தக்கால் – வந்து கூடினுல், அந்நிலையே – அக்காலம் நீங்குவதற்கு முன்னே, செய்தற்கரிய – (அக்காலம் கூடாதபோது தம்மால்) செய்தற்கு அரிய தொழில்களை, செயல் – செய்யக்கடவர், (எ – று).

ஆற்றல் முதலாயினவற்ருல் செய்துகொள்ளப்படாமையால் 'எய்தற்கரியது' என்றும், அக்காலம் தானே வந்து கூடுதல் அரிதாகலால் 'இயைந்தக்கால்' என்றும், கூடியவிடத்துப் பின்னில்லாது ஓடுதலால் 'அந்நிலையே' என்றும், அக்காலம் பெருத விடத்துச் செய்யப்படாமையால் 'செய்தற்கரிய' என்றும் சொல்லினர். இதனுல் பகைவரை வெல்லக்கருதுமரசர் அதனைக் காலம் வந்த விடத்து விரைந்து செய்யக்கடவரென்பது சொல்லப்பட்டது.

(க – து.) பகைவரை வெல்லக்கூடிய காலம் வாய்த்தால், அக்காலத்திலேயே அவரை வெல்லல் வேண்டும் என்பது.

9. If a rare opportunity occurs, while it lasts, let a man do that which is rarely to be done, but for such an opportunity.

---

**௯0. *கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்**
**குத்தொக்க சீர்த்த விடத்து.**

பரி:—(இ - ள்.) வினைமேற் செல்லாதிருக்குங் காலத்துக் கொக்கு இருக்குமாறு போல இருக்க; மற்றைச் செல்லுங்காலம் வாய்த்தவழி அது செய்து முடிக்குமாறுபோலத் தப்பாமற் செய்து முடிக்க, (எ - று).

மீன்கோடற்கு இருக்கும் வழி அது வந்தெய்துந் துணையும் முன்னறிந்து தப்பாமற் பொருட்டு உயிரில்லதுபோன் றிருக்குமாகலானும், எய்தியவழிப் பின் தப்புவதற்கு முன்பே விரைந்து குத்து மாகலானும், இருப்பிற்குஞ் செயலிற்குங் கொக்கே ¶ உவமையாயிற்று 'கொக்கொக்க' என்ருராயினும் ‡ அது கூம்புமாறுபோலக் கூம்புகவென்றும், 'குத்தொக்க' என்ருராயினும்

---

* "அடக்க முடையா ரறிவிலரென் றெண்ணிக், கடக்கக் கருதவும் வேண்டா - மடைத்தலையில், ஓடுமீ னேட வுறுமீன் வருமளவும், வாடி யிருக்குமாங் கொக்கு" என்பது மூதுரை.

¶ கொக்கொக்க என்பது இருப்பிற்குவமானமாம்; அதன்குத் தொக்க என்பது செயலிற்கு உவமானமாம்.

‡ அது கூம்புமாறுபோலக் கூம்புக - அக்கொக்கு அடங்கியிருக்கும் விதம்போல அடங்கியிருக்கவேண்டும்.

* அது குத்துமாறு போலக் குத்துகவென்றும் உரைக்கப்படும். இது † தொழில் உவமமாகலின், உவமை முகத்தால் இருப்பிற்குஞ் செயலிற்கும் இலக்கணங் கூறியவாறாயிற்று.

தெளி : —(இ - ள்.) கூம்பும் பருவத்து – தொழிலின்மேல் செல்லா திருக்கவேண்டுங் காலத்தில், கொக்கொக்க – கொக்கு இருக்குமாறு போல இருக்கக்கடவன், மற்றுச்சீர்த்தவிடத்து – மற்றைச் (செல்லுங் காலம்) வாய்த்தவிடத்து, அதன் குத்தொக்க – அது தப்பாமற் செய்து முடிக்குமாறு போலத் தப்பாது செய்து முடிக்கக்கடவன், (எ - று).

(கொக்கு) மீன் கொள்ளுதற்கு இருக்குமிடத்து அம்மீன் வருமளவும் (அம்மீன் தன்முயற்சியை) முன்னறிந்து தப்பிப்போகாமற் பொருட்டு உயிரில்லதுபோல இருக்குமாகலாலும், (அம்மீன்) வந்த விடத்துப் பின்பு தப்பிப்போவதற்கு முன்பே (அதனை) விரைந்து குத்து மாதலாலும், இருத்தலுக்கும் செய்தலுக்கும் கொக்கே உபமான மாயிற்று. 'கொக்கொக்க' என்றாராயினும் அது கூம்புமாறுபோலக் கூம்புக என்றும், 'குத்தொக்க' என்றாராயினும் அது குத்துமாறு போலக் குத்துக என்றும் உரைத்துக்கொள்க. இது தொழிலுவமை யணியாதலால், உவமானவாயிலாக இருத்தலுக்கும் தொழில் செய்தலுக்கும் இலக்கணம் சொல்லியவாறாயிற்று.

(க - து.) பகைவரை வெல்லக்கூடிய காலம் வாய்க்காதவிடத்து அடங்கியிருந்து, அது வாய்த்தவழி அவரைத் தப்பாமற் கொல்லல் வேண்டும் என்பது.

10. At the time when a king should use self-control let him restrain himself like a heron ; and, like it, let him strike, when there is a favourable opportunity.

---

## பன்னிரண்டாம் அதிகாரம்

## 50 இடனறிதல்—On the Choice of a suitable place

பரி:—அஃதாவது வலியுங் காலமும் அறிந்து பகைமேற்செல்வான் தான் வெல்லுதற்கேற்ற நிலத்தினை அறிதல். ‡ அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

தெளி: —அஃதாவது வலியும் காலமும் அறிந்து பகைவர்மேற் போருக்குச் செல்லுமரசன் தான் வெல்லுவதற்குத் தகுந்த இடத்தினை அறிதலாம். அதிகார முறைமையும் இதனாலே விளங்கும்.

---

* அது குத்துமாறுபோலக் குத்துக - அக்கொக்கு மீனை விரைந்து குத்திக்கொல்வதுபோலப் பகைவரை விரைந்தழிக்கவேண்டும்.

† தொழிலை யுவமானமாகச் சொல்வது தொழிலுவமானமாம்.

‡ காலமறிதலென்னும் அதிகாரத்தின்பின் இடனறிதலென்னும் அதிகாரம் வைத்தமுறையும்.

## க. தொடங்கற்க வெவ்வினையு மெள்ளற்க முற்று மிடங்கண்ட பின்னல் லது.

பரி :—(இ-ள்.) பகைவரை முற்றுதற்காவதோரிடம் * பெற்றபின் அல்லது அவர்மாட்டு யாதொரு வினையையுந் தொடங்காதொழிக ; அவரைச் சிறியரென் றிகழாதொழிக, (எ - று).

† முற்றுதல் - வளைத்தல். அதற்காம் இடமாவது ‡ வாயில்களானும் ¶ நூழைகளானும் அவர் புகலொடு போக்கொழியும்வகை @ அரணினைச் சூழ்ந்து | ஒன்றற்கொன்று துணையாய்த் தம்முள் || நலிவிலாத $ பலபடையிருப்பிற்கும் மதிலும் ○ அகழு முதலிய § அரண் செய்யப்பட்ட * அரசிருப்பிற்கும் ஏற்ற நிலக்கிடைக்கையும் நீருமுடையது. அது பெற்றால் இரண்டுஞ் செய்க வென்பதாம்.

தெளி :—(இ-ள்.) முற்றும் - (பகைவரை) வளைத்துக்கொள்வதற் காவதாகிய, இடம் - ஓரிடத்தை, கண்டபின் னல்லது - பெற்ற பின்னல்லாமல், எவ்வினையும் - யாதொரு தொழிலையும், தொடங்கற்க - (அப்பகைவரிடத்துத்) தொடங்காதிருக்கக் கடவர், எள்ளற்க - (அப்பகைவரைச் சிறியவரென்று) இகழாதிருக்கக்கடவர், (எ-று).

முற்றுதல் - பகைவரை வளைத்துக் கொள்ளுதல். அப்பகைவரை வளைத்தற்கா மிடமாவது வாயில்களாலும், கீழறைகளாலும், அப்பகைவர் வருதலுடனே போகுதல் ஒழியும்வகை அரணைச்சூழ்ந்து. ஒன்றற்கொன்று துணையாய்த் தம்முள்ளே நலிவில்லாத பலபடைகள் இருப்பிற்கும், மதிலும் அகழும் முதலாகிய அரண்செய்யப்பட்ட அரசிருப்பிற்கும் ஏற்ற நிலக்கிடக்கையையும் நீரையும் உடையது. அவ்விடத்தைப் பெற்றால் தொடங்குதல், இகழுதலாகிய விரண்டும் செய்கவென்பதாம்.

---

* பெற்றபின் அல்லது - பெற்றாலல்லாமல்.

† பகைவர் எவ்வகையாலும் வெளியிற் செல்லாதபடி அவரை வளைத்துக்கொள்ளுதல் முற்றுகை யெனப்படும்.

‡ வாயில் - பலரும் கோட்டையினுள் வெளிப்படையாகப் போக்கு வரவு செய்தற்குரிய வழி.

¶ நூழை - போர்செய்தற் குரியவர்கள் இரகசியமாகப் போக்கு வரவு செய்தற்குரிய சுரங்கவழி. @ அரண் - கோட்டை.

| ஒன்றற்கொன்று துணையாய் - முன்னுள்ள சேனைக்கும் பின்னுள்ளசேனை யுதவியாய்.

|| நலிவிலாத - இளைத்தலில்லாத. $பலபடை - நால்வகைச்சேனை.

○ அகழ்-கோட்டையைச் சூழ்ந்துள்ள நீர் நிலை; அஃதாவது அகழி.

§ அரண் - காப்பு. * அரசிருப்பிற்கும் - அரசன் தங்குவதற்கும்.

(க-து.) பகைவரோடு போர்புரிவதற்கேற்ற விடத்தைப் பெறு தற்கு முன் அவரையெதிர்க்காதும் இகழாதும் இருத்தல் வேண்டும் என்பது.

1. Let not a king despise an enemy, nor undertake any thing against him, until he has obtained a suitable place for beseiging him.

---

உ. முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கு * மரண்சேர்ந்தா மாக்கம் பலவுந் தரும்.

பரி :—(இ - ள்.) மாறுபாட்டோடுகூடிய வலியினையுடையார்க்கும் அரணைச்சேர்ந் தாகின்ற வாக்கம் பல பயன்களையுங்கொடுக்கும், (எ-று).

மாறுபாடாவது ஞாலம் பொதுவெனப் பொரு அரசர் மனத்தின் கண் நிகழ்வதாகலானும், † வலியுடைமை கூறியவதனானும், ‡ இது பகை மேற்சென்ற அரசர்மேற்றுயிற்று. உம்மை – சிறப்பும்மை. ¶அரண்சேராதா மாக்கமும் உண்மையின், §ஈண்டாக்கம் விசேடிக்கப்-பட்டது. ஆக்கமென்றது | அதற்கேதுவாய முற்றினை. || அது கொடுக்கும் பயன்களாவன : பகைவரால் தமக்கு $ நலிவின்மையும், தாம் நிலைபெற்று நின்று () அவரை நலிதலும் முதலாயின.

---

* "மணிநீரு மண்ணு மலையு மணிநிழற், காடு முடைய தரண்" என்று அரண் அதிகாரத்துக் கூறுவதிங்குணர்தற்பாற்றும்.

† மொய்ம்பினவர்க்கும் என்று வலியுடைமை கூறியவதனாலும்.

‡ இது – மாறுபாடு (விரோதம்).

¶ அரண் சேராது ஆம் ஆக்கமும் இருத்தலால் 'அரண் சேர்ந்தாம் ஆக்கம்' என்று கூறப்பட்டதென்க. இதனால் அரண் (காப்பு) இல்லாமல் தமது வலிமையினால் பகைவரை வளைத்தலும், அரணோடு கூடிப் பகைவரை வளைத்தலும் என இருவகை முற்றுகை பெற்றுமென்க.

§ ஆக்கம் என்பது அரண்சேர்ந்தாம் என்னும் விசேஷணத்தோடு (அடையோடு) கூடிவந்தமையின், 'ஈண்டாக்கம் விசேடிக்கப்பட்டது' என்று கூறப்பட்டது. விசேடிக்கப்படல் விசேஷணத்துடன் கூடி-வருதல். இங்கு ஆக்கமென்பது அரண்சேர்ந்தாம் என்னும் விசேஷணத்துடன் கூடி 'அரண்சேர்ந்தாம் ஆக்கம்' என்று வந்திருத்தலைக் காண்க.

| அதற்கேதுவாய முற்றினை – ஆக்கத் (செல்வத்) திற்குக் காரணமான வளைத்தலை. ஆக்கத்திற்குக்காரணமான முற்றினை ஆக்கமென்றது காரியவாகு பெயராம்.

|| அது—தாம் அரணோடு கூடிப்பகைவரை வளைத்தல்.

$ நலிவின்மையும் – வருத்தமில்லாமையும்.

() அவரை நலிதலும் – பகைவரை வருத்துதலும்.

தெளி.—(இ-ள்.) முரண் - மாறுபாட்டோடு, சேர்ந்த கூடிய, மொய்ம்பினவர்க்கும் - வலியினை யுடையவருக்கும், அரண் - அரணை, சேர்ந்து - கூடி, ஆம் - ஆகின்ற, ஆக்கம் - பெருக்கமானது, பலவும் - பல பயன்களையும், தரும் - கொடுக்கும், (எ-று).

மாறுபாடாவது பூமி பலவரசர் ஆளுவதற்குப் பொதுவாயுள்ள தென்று பொறுக்காத அரசரது மனதிலே தோன்றுவதாதலாலும், வலியுடைமை சொன்னவதனாலும், இது பகைவர்மேற் போர்க்குச் சென்ற அரசர்மேலதாயிற்று. மொய்ம்பினவர்க்கும் என்ற வும்மை உயர்வு சிறப்பும்மை. அரண்சேராது ஆகின்ற ஆக்கமும் இருத்தலால், இங்கு ஆக்கம் விசேடிக்கப்பட்டது. ஆக்கமென்றது அவ்வாக்கத்திற்கு ஏதுவாகிய வளைத்தலை. அது கொடுக்கும் பயன்களாவன: பகைவரால் தமக்கு நலிவில்லாமையும், தாம் நிலைபெற்று நின்று அவரை நலிவுசெய்தலும் முதலானவை.

(க-து.) பகைவரரணை யடைந்துவளைக்குப் வலியுடைய வரசர்க்கு, அது பல பயன்களையுங் கொடுக்கும் என்பது.

2. Even to those who are men of power and expedients, an attack in connection with a fortification will yield many advantages.

---

ரு. ஆற்றாரு மாற்றி யடுப விடனறிந்து
போற்றார்கட் போற்றிச் செயின்.

பரி:—(இ-ள்.) வலியர் அல்லாதாரும் வலியராய் வெல்வர், *அதற்கேற்ற இடத்தினையறிந்து (தம்மைக்) காத்துப் பகைவர்மாட்டு (வினை) செய்வராயின், (எ-று).

† தம்மை யென்பதூஉம் வினையென்பதூஉம் அவாய் நிலையான் வந்தன. காத்தல் - பகைவரான் ‡ நலிவு வாராமல் ¶ அரணானும் படையானுங் காத்தல். £ இவ்வாற்றான் வினை செய்வாராயின் || மேற்சொல்லிய வலியின்றியும் வெல்வரென்பதாம்.

தெளி:—(இ-ள்.) ஆற்றாரும் வலியரல்லாதவரும், ஆற்றி - வலியுடையவராய், அடுப - வெல்வார், இடன் - (அதற்கேற்ற) இடத்தை, அறிந்து - தெரிந்து, போற்றி - (தம்மைக்) காத்துக் கொண்டு, போற்றார் கண் - பகைவரிடத்து, செயின் - (தொழிலைச்) செய்வாராயின், (எ-று).

---

* அதற்கேற்ற - (பகைவரை) வெல்லுதற்குத் தகுந்த.

† போற்றியென்னும் வினையும் செயின் என்னும் வினையும் செயப்படு பொருளை வேண்டி நிற்றலின், அதற்கேற்ப முறையே தம்மையென்பதும் வினையென்பதும் வருவித்துரைக்கப்பட்டன.

‡ நலிவு - கெடுதி. ¶ அரண் - மதில் முதலியன.

£ இவ்வாற்றான்—பகைவரை வெல்லுதற்குரிய இடத்தினையறிந்து தம்மைக் காத்துக்கொள்ளும் இவ்வழியால் இவ்வாறரசர் என்றும் பாடமுண்டு.

|| மேற்சொல்லிய - இவ்வதிகாரத்தின் இரண்டாவது குறளிற் கூறிய.

தம்மை யென்பதும் தொழிலை யென்பதும் அவாய் நிலையால் வந்தன. காத்தல் – பகைவரால் நலிவு வாரா திருக்கும்படி அரணாலும் படையாலும் காத்தல். இவ்வாறாகத் தொழில் செய்வாராயின், முற்கூறிய வலியில்லா திருந்தாலும் அவர் பகைவரை வெல்வ ரென்பதாம்.

(க–து.) வலியில்லாத அரசரும் இடமறிந்து போர்புரிந்தால் வலியுடையவராய்ப் பகைவரை வெல்வர் என்பது.

3. Even the powerless will become powerful and conquer, if they select a proper field of action, and guard themselves, while they make war on their enemies.

———

ச. எண்ணியா ரெண்ண மிழப்ப ரிடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின்.

பரி :—(இ-ள்.) தாம் வினைசெய்தற்கேற்ற இடத்தினை யறிந்து சென்ற அரசர் அரணைப் பொருந்திநின்று அதனைச் செய்வாராயின் * அவரை வெல்வதாக எண்ணியிருந்த பகைவர் அவ்வெண்ணத்தினை யிழப்பர், (எ-று).

† அரணென்பது அவாய்நிலையான் வந்தது. ‡ எண்ணமென்றது எண்ணப்பட்ட தம்வெற்றியை. ¶ 'எண்ணமிழப்பர்' என்றார்; $ அவர் வினைசெய்யாமல் தம்மைக் காத்தமையின். இதனால் | அவர் பகைவர் தோற்பரென்பதாயிற்று. இவை நான்குபாட்டானும் ‖ பகைவரரணின் புறத்திருப்பார் அதற்காமிடம் அறிதல் கூறப் பட்டது.

தெளி :—(இ–ள்.) இடன் – (தாம்தொழில் செய்தற்கேற்ற) இடத்தினை, அறிந்து – தெரிந்து, துன்னியார் - சென்றவரசர், துன்னி – (அரணைப்) பொருந்தி (நின்று), செயின் – (அத்தொழிலைச்)

* அவரை – அவ்வரசரை.

† துன்னி என்னும் வினை செயப்படுபொருளை வேண்டி நிற்றலால், அதற்கேற்ப அரண் என்பது வருவிக்கப்பட்டது.

‡ எண்ணமென்பது எண்ணப்பட்ட தம் வெற்றியையுணர்த்து தலால், தொழிலாகு பெயராம். எண்ணம் என்பது அம்ஈற்றுத் தொழிற்பெயர்.

¶ அதனை யிழப்பர் என்றும் பாடமுண்டு.

$ அவர்வினை செய்யாமல் - பகைவர் போர்செய்யாது.

| அவர்—இடமறிந்து போர்க்குச் சென்ற அரசர்.

‖ பகைவரது கோட்டையின் புறத்தே (வெளியே) தங்குவார் தங்குதற் காகுமிடமறிதல் சொல்லப்பட்டது.

செய்வாராயின், எண்ணியார் - (அவ்வரசரை வெல்வதாக) எண்ணியிருந்த பகைவர், எண்ணம் - அவ்வெண்ணத்தை, இழப்பர் - இழந்து விடுவார், (எ - று).

அரண் என்பது அவாய்நிலையால் வந்தது. எண்ணமென்றது எண்ணப்பட்ட தம் வெற்றியை. பகைவர் போர் செய்யாமல் தம்மைக்காத்துக் கொள்ளுதலால் 'எண்ணமிழப்பர்' என்றார். இதனால் அவர் பகைவர் தோற்பரென்பதாயிற்று. இவை நான்கு பாட்டாலும் பகைவரது அரணின் புறத்துத் தங்குவார் தங்குவதற்கு ஆகுமிடமறிதல் சொல்லப்பட்டது.

(க - து.) அரசர் இடமறிந்து சென்று போர் புரிந்தால், அவரை வெல்ல எண்ணிய பகைவரது எண்ணம் முற்றுப்பெறாதென்பது

4. If they who draw near to fight choose a suitable place to approach their enemy, those who have thought they will conquer them, will lose that thought.

---

**ரு. நெடும்புனலுள் வெல்லு முதலை யடும்புனலி**
**னீங்கி னதனைப் பிற.**

பரி:—(இ-ள்.) முதலை ஆழமுடைய நீரின்கண் ஆயின் $ பிறவற்றை யெல்லாந் தான் வெல்லாநிற்கும்; அப்புனலின் நீங்குமாயின் அதனைப் ‡ பிறவெல்லாம் வெல்லாநிற்கும், (எ - று).

எனவே, எல்லாரும் தந்நிலத்து வலியரென்பது கூறப்பட்டது. பிற என்பது முன்னுங் கூட்டப்பட்டது. நிலைப்படா நீரின்கண் பிற நிற்றல் ஆற்றாமையின், அவை யெல்லாம் முதலைக்கெளியவாம்; அவை இயங்குதற்குரிய நிலத்தின்கண் அஃதியங்கல் ஆற்றாமையின் அஃதவற்றிற்கெல்லாம் எளிதாமென்றது, மேற்செல்லும் அரசர் பகைவர் நிற்றல் ஆற்றாவிடனறிந்து செல்வராயின் அவர் தமக் கெளியராவர்; அன்றித் தாம் நிற்றல் ஆற்றாவிடத்துச் செல்வராயின் அவர்க் கெளியராவரென்னும் பொருள் தோன்ற நின்றமையின், இது பிறிது மொழிதலென்னும் அலங்காரம். அவரை அவர் நிற்றல் ஆற்றாவிடத்துச் சென்று வெல்க வென்பதாம்.

தெளி:—(இ - ள்.) முதலை –, நெடும்புனலுள் – ஆழமுடைய நீரில், (ஆனால்), பிற - பிறவுயிர்களை யெல்லாம், வெல்லும் - (தான்) வெல்லாநிற்கும், புனலின் - அந்நீரினின்றும், நீங்கின் - நீங்குமானால், அதனை - அம்முதலையை, பிற - பிறவுயிர்களெல்லாம், அடும் - வெல்லாநிற்கும், (எ - று).

எனவே, எல்லாரும் தமதிடத்தில் வலியராயிருப்பாரென்பது சொல்லப்பட்டது. பிற என்பது வெல்லுமென்பதற்கு முன்னுங் கூட்டப்பட்டது. நிலைப்படாத நீரினிடத்துப் பிறவுயிர்கள் நிற்றல் முடியாமையால் அவையெல்லாம் முதலைக்கு எளியனவாகும்; அவை

---

$ பிறவற்றை - யானை முதலிய பிராணிகளை.

‡ பிறவெல்லாம் - நரி முதலிய பிராணிகள்யாவும்.

சஞ்சரித்தற்குரிய நிலத்தினிடத்து அம்முதலை சஞ்சரித்தல் முடியாமையால் அஃது அந்த உயிர்கட்கெல்லாம் எளிதாமென்றது, பகைவர்மேற் போர்க்குச் சென்ற அரசர் பகைவர் நிற்றல் முடியாத விடத்தையறிந்து செல்லுவாராஞல் அப்பகைவர் தமக்கு எளியவராவார்; அவ்வாறல்லாமல் தாம் நிற்றல் முடியாத விடத்துச் செல்லுவாராஞல் அப்பகைவருக்கு எளியவராவர் என்னும் பொருள் தோன்ற நின்றமையால், இது பிறிது மொழிதலென்னுமலங்காரமாம். அப்பகைவரை அவர் நிற்கமாட்டாத விடத்துச் சென்று வெல்ல வேண்டுமென்பதாம்.

(கு - து.) தமக்கு வாய்ப்பான விடத்தைவிட்டுப் போர்புரியும் வலியவர், வாய்ப்பான விடத்திலுள்ள எளியவரிடத்துத் தோல்வியடைவார் என்பது.

5. In deep water, a crocodile will conquer all other animals; but if it leaves the water, other animals will conquer it.

---

**சு. கடலோடா கால்வ னெடுந்தேர் கடலோடு**
**நாவாயு மோடா நிலத்து.**

பரி: —(இ - ள்.) நிலத்தின்கண் ஓடுங் * கால்வலிய நெடிய தேர்கள் கடலின்கண் ஓடமாட்டா; இனி அக்கடலின்கண் ஓடும் $ நாவாய்கடாமும் நிலத்தின்கண் ஓடமாட்டா, (எ - று).

‡ ‘கடலோடா’ என்ற மறுதலையடையான் நிலத்தின்கண் ஓடுமென்பது வருவிக்கப்பட்டது. கால்வனெடுந்தேரென்பது ¶ ஓடுதற்கேற்ற காலும் பெருமையு முடையவாயினு மென்பதுபட நின்றது. மேற்சென்ருர் பகைவரிடங்களையறிந்து அவற்றிற்கேற்ற கருவிகளான் வினை செய்க வென்பது தோன்ற நின்றமையின், இதுவும் மேலை அலங்காரமாயிற்று.

தெளி —(இ - ள்.) கால்வல் - நிலத்தில் ஓடும்) வலிமை பொருந்திய உருளைகளையுடைய, நெடுந்தேர் - பெரிய தேர்கள், கடல் - கடலில், ஓடா - ஓடமாட்டாவாம், கடலோடும் - (இனி) அக்கடலில் ஓடும், நாவாயும் - மரக்கலங்களும், நிலத்து - நிலத்தில், ஓடா - ஓடமாட்டாவாம், (எ - று).

‘கடலோடா’ என்ற எதிர்மறையடையால் (கால்வனெடுந்தேர்) நிலத்தில்ஓடும் என்பது வருவிக்கப்பட்டது. கால்வனெடுந்தேர் என்பது

---

* கால் - சக்கரம். $ நாவாய்கடாமும் - மரக்கலங்களும்.

‡ கால்வல் நெடுந்தேர் என்பது கடலோடா என்னும் மறுதலை அடையோ (விசேஷணத்தோ)டு கூடிவந்தமையின், நிலத்தின்கண் ஓடும் என்பது வருவிக்கப்பட்டது [மறுதலையடை - எதிர்மறையாக வந்த விசேஷணம்.]

¶ (தேர்கள்) ஓடுதற்குத்தக்க சக்கரமும் உறுப்புக்களின் அமைப்பால் பெருமையு முடையனவாஞலும்,

ஓடுதற்கேற்ற காலும் பெருமையும் உடையனவா யிருப்பினுமென்பது தோன்ற நின்றது. பகைவர் மீது போர்க்குச் சென்றவர் பகைவரிடங் களையறிந்து அவ்விடங்களுக்கு ஏற்ற சாதனங்களால் தொழில் செய்ய வேண்டுமென்பது தோன்ற நின்றமையின், இக்குறளும் பிறிது மொழிதலென்னும் அலங்காரமாம். கால்வல் என்பது வல்கால் என் றன்வயிக்கப்பட்டது.

(க - து.) மிகமேன்மையுடையாரும் தமக்குரிய இடத்தை விட்டுச் சென்றால் ஒரு காரியமுஞ் செய்தல் முடியாது என்பது.

6. The strong-wheeled, lofty charriot cannot run on the sea; and ships, which sail on the sea, cannot run on the land.

---

**எ. அஞ்சாமை யல்லாற் றுணைவேண்டா வெஞ்சாமை யெண்ணி யிடத்தாற் செயின்.**

**பரி:—(இ-ள்.) பகையிடத்து வினைசெய்யுந் திறங்களையெல்லாம் ஒழியா தெண்ணி §அவற்றை அரசர் இடத்தோடு பொருந்தச் செய்வராயின், ‡ அச்செயற்குத் தந் திண்மையல்லது பிறிதொரு துணை வேண்டுவதில்லை, (எ - று).**

¶ திண்ணியராய் நின்று செய்துமுடித்தலே வேண்டுவதல்லது 'துணை வேண்டா' என்றார்; அவ்வினை தவறுதற் கேதுவின்மையின். இவை மூன்றுபாட்டானும் வினைசெய்தற்காம் இடனறிதல் கூறப் பட்டது.

தெளி —(இ-ள்.) (அரசர்) எஞ்சாமை - (பகைவரிடத்துத் தொழில் செய்யும் விதங்களை யெல்லாம்) குறையாமல், எண்ணி - ஆலோசித்து, (அவற்றை), இடத்தால் - இடத்தோடு, (பொருந்த), செயின் - செய் வாராயின், (அச்செயலுக்கு), அஞ்சாமையல்லாமல் - (தமது) தைரிய மல்லாமல், துணை - (வேறொரு) துணை, வேண்டா - வேண்டுவதில்லை, (எ - று).

அத்தொழில் தவறுதலுக்குக் காரணம் இல்லாமையால், தைரிய முடையவராய் நின்று செய்துமுடித்தலே வேண்டுவதல்லாமல் 'துணை வேண்டா' என்றார். இவை மூன்று பாட்டாலும் போர்செய்தற்கு ஆமிடமறிதல் சொல்லப்பட்டது.

(க - து.) பகைவரிடத்துச் செய்யவேண்டுந் தொழில்களைக் குறை விலா தாலோசித்து இடத்தோடு பொருந்தச் செய்யவல்ல அரசர்க்குத் தைரியத்தைவிட வேறுதுணை வேண்டுவதில்லை.

---

§ அவற்றை - பகைவரிடத்து வினைசெய்யுந் திறங்களை.

‡ அச்செயற்கு - இடத்தோடு பொருந்தச் செய்தற்கு.

¶ திண்ணியராய்நின்று செய்துமுடித்தலே வேண்டுவதல்லது - கலங்காத மனமுடையவராய் எதிர்த்துநின்று போர்செய்து பகை வரை முடிக்க வேண்டியதே யல்லாமல்.

7. You will need no other aid than fearlessness, if you thoroughly reflect on what you are to do, and select a suitable place for your operations.

---

அ. **சிறுபடையான் செல்லிடஞ் சேரி *னுறுபடையா**
**னூக்க மழிந்து விடும்.**

பரி :— இ - ள்.) பெரும்படையுடைய அரசன் ஏனைச் சிறுபடையுடையானை அழித்தல் கருதி $ அவன் புகலைச்சென்று சாருமாயின் ¶ அவனற்றன்பெருமை யழியும், (எ - று).

செல்லிடம் - அவனுக்குச் செல்லுமிடம். § அழிந்துவிடு மென்பது எழுந்திருக்கு மென்றாற்போல ஒரு சொல். 0 ஊக்கத்தின் அழிவு உடையான்மே லேற்றப்பட்டது. தன் ʃ படைப்பெருமைநோக்கி இடநோக்காது செல்வனாயின், அஃது அப்படைக் கொருங்குசென்று வினைசெயல் ஆகாமையானாகப் பயிற்சியின்மையானாக அப்பெருமையாற் பயனின்றித் தானழிந்து விடுமென்பதாம்.

தெளி :—(இ - ள்.) உறுபடையான் - பெருஞ்சேனையை யுடைய அரசன், சிறுபடையான் - (மற்றைச்) சிறிய சேனையுடையவனை, (அழிக்க நினைத்து), செல்லிடம் - (அவனுக்குப்) புகலாயுள்ள விடத்தை, சேரின் - போய்ச்சேர்வானானால், (அவனால்), ஊக்கம்-(தன்) பெருமை, அழிந்துவிடும் - அழியும், (எ - று).

செல்லிடம்-அச்சிறுபடையானுக்கதிகாரஞ்செல்லுமிடம். அழிந்துவிடுமென்ப தொருசொல். ஊக்கத்தினழிவு ஊக்கமுடையான் மேல் ஏற்றப்பட்டது. (உறுபடையான்) தன்சேனையின் பெருமையை நோக்கிஇடம்நோக்காமல்செல்வானாயின், அச்செலவு அச்சேனைக்கு ஒருமித்துச்சென்று போர்த்தொழில் செய்தல் கூடாமையாலாவது பழக்கமில்லாமையாலாவது அப்பெருமையாற் பயனில்லாமல் தான் அழிந்துவிடுவா னென்பதாம்.

---

* உறு - மிகுதிப்பொருளை யுணர்த்தும் உரிச்சொல்.

$ அவன்புகலை - சிறுபடையான் தங்கியிருக்கும் இடத்தை.

¶ அவனால் - அச்சிறுபடையானால்.

§ எழுந்திருக்கும் என்பது எழும் என்று பொருள்பட்டு ஒரு சொல்லாய் நின்றாற்போன்று, அழிந்துவிடும் என்பது அழியும் என்று பொருள் பட்டு ஒரு சொல்லாய் நின்றதென்க.

0 ஊக்கத்தின் (பெருமையின்) அழிவு ஊக்கமுடையான்மேல் ஏற்றிச் சொல்லப்பட்டது உறுபடையான் ஊக்க மழிந்து விடும் என்பது நம்பிபொன் பெரியன் என்றாற்போன்று திணைவழுவமைதியாம்.

ʃ படைப்பெருமை - சேனையின் மிகுதி.

(க - து.) சிறியசேனையுள்ள அரசன்மீது அவனது இடத்தே போர்செய்யக் கருதிச் செல்லும் அரசன் பெருஞ்சேனையுள்ளவனு யிருந்தாலும் அவனுலழிவான் என்பது.

8. The power of one who has a large army will perish, if he goes into ground where only a small army can act.

---

**கூ. சிறைநலனுஞ் சீரு மிலரெனினு மாந்த**
**ருறைநிலத்தோ டொட்ட லரிது.**

பரி: - (இ-ள்.) § **அரண் அழித்தற் கருமையும்** ‡ **பெருமையாகிய ஆற்றலும் உடையர் அல்லராயினும்,** ¶ **வினைக்குரிய மாந்தரை அவருறை இன்ற நிலத்தின்கட் சென்று** ○ **தாக்குதலரிது, (எ-று).**

† நிலத்தோடென்பது வேற்றுமை மயக்கம். ஆண்மை யுடையாரைச் $ சிறுமை நோக்கி இருப்பின்கட்சென்றுதாக்கின், * அவர் அதுவிட்டுப்போதற் றுணிவினர் அன்றிச் சாதற்றுணிவினராவர்; ஆகவே, அவர்க்குப் பெரும்படை உடையுமென்பதாம்.

தெளி :—(இ-ள்.) சிறைநலனும் - அரணழித்தற் கருமையையும், சீரும் - பெருமையாகிய ஆற்றலையும், இலரெனினும் - (உடையர்) அல்லராயினும், மாந்தர் - (தொழில் செய்தற்குரிய) மனிதரை, உறைநிலத்தோடு - (அவர்) வசிக்கின்ற இடத்தில், (சென்று), ஒட்டல் - தாக்குதல், அரிது - முடியாது, (எ று).

நிலத்தோடென்பது நிலத்திலென்னும் பொருளில் வந்தமையின், வேற்றுமை மயக்கமாம். ஆண்மை யுடையவரைச் சிறுமை நோக்கி அவரிருப்பிடத்திற் சென்று தாக்கினுல், அவர் அவ்விடத்தைவிட்டுப் போவதற்குத் துணிவினராகாமல் சாவதற்குத் துணிவுகொண்டவ ராய்ப் போர்செய்வாராவர்; ஆகவே, அவர்க்குப் பெரியசேனை தோற் றோடிப் போமென்பதாம்.

---

§ அரண் - கோட்டை. ‡ பெருமையாகிய ஆற்றல் - பொருளும் சேனையும்.

¶ வினைக்குரியமாந்தர் - போர் செய்தற்குரிய வீரர் ○ தாக்குதல்- வெல்லுதல்.

† நிலத்தோடு என்பதன் மூன்றனுருபு தனக்குரிய பொருளைவிட்டு (நிலத்தின் கண் என) ஏழாம்வேற்றுமைக்குரிய இடப்பொருளில் வந்தமையின் வேற்றுமை மயக்கமாயிற்று

$ சிறுமை நோக்கி - சிறைநலனுஞ் சீரு மில்லாமையைப்பார்த்து.

* ஆண்மை (பராக்கிரமம்) உடையவர் தாமிருக்கும் இடத்தை விட்டுப்போகும் நிச்சயமுடையவராகாமல் சாகும் நிச்சயமுடைய ராவர் ; ஆகவே, அவ்வாண்மை யுடையார்க்குப் பெருஞ்சேனை தோற்கும் என்பதாம்.

(க-து.) போர்செய்தற்குரிய பகைவர் அரண்வலியும் பெருமையும் இல்லாதவராயிருப்பினும், அவரை அவரிருப்பிடத்திற் சென்று வெல்லுதல் அரிதாம் என்பது.

9. It is an hazardous thing to attack men in their own country, although they may neither have power nor a good fortress.

---

**கO. காலாழ் களரி னரியடுங் கண்ணஞ்சா**
**வேலாண் முகத்த களிறு.**

**பரி:—(இ-ள்.) பாகர்க் கடங்காவுமாய் $ வேலாட்களைக் கோத்த கோட்டவுமாய * களிறுகளை, அவை காலாழும் இயல்பிற்றாய சேற்று நிலத்துப் பட்டுழி நரி கொல்லும், (எ-று).**

முகம்—ஆகுபெயர். ஆண்மையும் பெருமையும் உடையாரும் ¶ தமக்கேலா நிலத்துச் செல்லின் அவற்றாற் பயனின்றி மிகவும் எளியரால் அழிவரென்பது தோன்ற நின்றமையின், இதுவும் அவ் வலங்காரம். வேலாழ் முகத்த என்று பாடமோதுவாருமுளர். § வேற் படை குளித்த முகத்தவாயின் 0 அதுவும் நரியடுதற் கேதுவாய் முடிதலின், அது பாடம் அன்மையறிக. இவை மூன்று பாட்டானும் பகைவரைச் சார்தலாகாவிடனும் சார்ந்துழிப்படும் இழுக்குங் கூறப்பட்டன.

தெளி :— (இ-ள்.) கண்ணஞ்சா - பாகர்க்கு அடங்காதனவுமாய், வேலாண்முகத்த - வேலையுடைய ஆள்களைக்கோத்த கொம்பை யுடையனவும் ஆய, களிறு - யானைகளை, (அவை), காலாழ் - கால் புதையும் (இயல்பினதாகிய), களரில் - சேற்று நிலத்தில், (அகப் பட்டவிடத்து), நரி - நரிகள் அடும் - கொல்லும், (எ - று).

முகமென்னும் முதற்பொருளின் பெயர் அதன் சினைப்பொரு ளாகிய கொம்பை யுணர்த்துதலின், பொருளாகுபெயராம். ஆண்மையும் பெருமையும் உடையவரும் தமக்குத் தகாத இடத்திற்

---

$ வேலாட்கள் - வேற்படையையுடைய வீரர்.

* களிறு - களிப்பையுடையது (யானை); களிப்பு - மதமயக்கம்.

¶ தமக்கேலா நிலத்துச் செல்லின் - தமக்குப் போர்செய்தற்குரிய தாகாத விடத்துப்போனால். "தமக்குரிய வல்லா நிலத்துச்செல்லின்" என்றும் பாடமுண்டு.

§ வேற்படை தைத்த முகமுடையனவானால்.

0 அதுவும் நரி அடுதற்கேதுவாய் முடிதலின் - வேற்படை முகத்திற் குளித் (தைத்) திருத்தலும் நரி யானையைக் கொல்லு வதற்குக் காரணமாய் முடிதலால். [வேல்தைத்துப் பலவீனப்பட்டுப் போன யானையை நரி சேற்று நிலத்தில் கொல்லும் என்று கூறுவதில் யாதொரு சிறப்புமின்றாமென்பது.]

சென்றால் அவ்வாண்மை பெருமைகளால் பயனின்றி மிகவும் எளியவரால் அழிவரென்பது தோன்ற நிற்றமையால், இக்குறளும் பிறிது மொழிதலலங்காரமாம். இவை மூன்று பாட்டாலும் பகைவரைச் சார்தலாகாத இடமும் சார்ந்தவிடத்து உண்டாகும் குற்றமும் சொல்லப்பட்டன.

(க - து.) வலிமையுடையவர் தமக்குப்பொருந்தாத இடத்திற் போர்க்குச் செல்லுவாராயின், எளியவரால் தோல்வியடைவார்.

10. A fox can kill a fearless, warrior-faced elephant if it goes into mud in which its legs sink down.

---

## 51. பதின்மூன்றும் அதிகாரம்

## தெரிந்து தெளிதல் — On Reflection Before Decision

**பரி:—அஃதாவது அமைச்சர் † முதலாயினரைப் பிறப்புக்குணம் அறிவென்பனவற்றையும் செயலேயும் ‡ காட்சி, கருத்து. ஆகமமென்னும் அளவைகளான் ஆராய்ந்து தெளிதல். ¶ வலிமுதன் மூன்றுமறிந்து பகைமேற் செல்வானுக்குத் § தானே வினேயுற்றுச் செய்தற் பொருட்டும் $ அறைபோகாமைப் பொருட்டும் * இது வேண்டுதலின் [] அவற்றின் பின் வைக்கப்பட்டது.**

தெளி: *அஃதாவது மந்திரிமுதலாயினரைப் பிறப்புக் குணம் அறிவு என்பனவற்றையும் செய்கையையும் காட்சி, கருத்து, ஆகமம் என்னும் பிரமாணங்களினால் ஆராய்ந்து தெளிதல். வலிமுதலாகிய மூன்றையும் அறிந்து பகைவர்மேற் போர்க்குச் செல்லுவானுக்குச் சேனே போர்த்தொழிலே மனமொத்துச் செய்தற் பொருட்டும், அறைபோகாமைப் பொருட்டும் இது வேண்டுதலால் அவற்றின் பின் வைக்கப்பட்டது.*

---

† *முதலாயினர் - புரோகிதர், சேனாபதியர், தூதர், சாரணர் முதலானவர்.*

‡ *பிரத்தியட்சம், அனுமானம், சப்தமென்னும் பிரமாணங் களினால்.*

¶ *வலி முதன் மூன்றுமறிந்து - வலி, காலம், இடமென்னு மூன்றையுந்தெரிந்து. § தான் என்றும் பாடமுண்டு.*

$ *அறைபோகாமற் பொருட்டும் என்றும் பாடமுண்டு.*

*அறைபோதல் — கீழறுத்துச் செல்லுதல். அஃதாவது சத்துருவிற்குப் பயந்து கீழறையால் (சுரங்கவழியால்) செல்லுதல். அறைபோகாமை — கீழறுத்துச்செல்லுதலின்மை, அஃதாவது பின் வாங்காது நிற்றல்.*

* *இது—தெரிந்து தெளிதல்.*

[] *அவற்றின்பின் - வலியறிதல் முதலியவற்றின்பின்.*

**க. அறம்பொரு ளின்ப முயிரச்ச நான்கின்**
**றிறந்தெரிந்து தேறப் படும்.**

**பரி:— (இ - ள்.) அரசனாற் றெளியப்படுவான் ஒருவன் அறமும், பொருளும், இன்பமும், உயிர்ப்பொருட்டான் வரும் அச்சமும் என்னும் உபதை நான்கின் திறத்தான் மனவியல்பு ஆராய்ந்தால் பின்புதெளியப் படும், (எ – று).**

அவற்றுள், † அறவுபதையாவது புரோகிதரையும் ‡ அறவோரையும் விட்டு, அவரால் இவ்வரசன் அறவோன் அன்மையின் இவனைப்போக்கி அறனும் ¶ உரிமையுமுடையான் ஒருவனை வைத்தற்கெண்ணினம்; இதுதான் யாவர்க்கும் இயைந்தது, நின்கருத்து என்னை யெனச் சூளுறவோடு சொல்லுவித்தல். பொருளுபதையாவது சேனைத் தலைவனையும் அவனோடியைந்

---

[அறவுபதை – அறநெறியைக் கூறிச் சோதித்தல்.]

† "அறவோர் புரோகி தரைவிடுத் திட்டவரா லிந்த வரசன்றான்
அறவோ னல்ல னிவற்போக்கி யறனோ டுரிமை யுடையானை
உறவே வைத்தற் கெண்ணினமீ தொத்த தெவர்க்கு நின்கருத்தென்
உறவோ தெனச்சூ ளுறவோடு மோர்ந்தே யொருவன் றனைத்தெளிக.

[பொருளுபதை – பொருள் நெறியைக் கூறிச் சோதித்தல்.]

சேனைத் தலைவ னொடுமவனைச் சேர்ந்தா ரையும்விட் டிவ்வரசன்
ஈனப் பொருளா சைய னிவனை யிழுக்கிக் கொடையோ டுரிமையுடை
யானைப் புரத்தற் கெண்ணினமீ தமைந்த தெவர்க்கு நின்சருத்தென்
ஊனப் படாமை யுரைத்தியெனச் சூளோ டுரைப்பித் தேதெளிக.

[இன்பவுபதை—இன்பநெறியைக் கூறிச் சோதித்தல் ]

தொன்று தொட்ட வுரிமையொடு சூழ்ந்த தவமு தாட்டியைவிட்
டொன்று முரிமை தனியின்னு ளுனைக்கண் டுயங்கி யெனைவிடுத்தாள்
சென்றங் கவளைக் கூடுதியேற் சிறந்த பொருளுங் கூடுநினக்
கென்று தெளியச் சூளுறவோ டிசைப்பித் திதனு னுந்தெளிக.

[அச்சவுபதை—அச்சமுண்டாம் வழியைக் கூறிச் சோதித்தல்.]

ஒருநிமித்த மேலிட்டே யோரமைச்சா லவன் மனையிலேனையோரை
யொருமையுற வழைப்பித்திங் கிவர்பிழைப்பக் குழீஇயினரென்
[றுறுத்திக் காவல்
ஒருவனிலிவ் வரசனமை யொறுக்கமுயன் றுனிவனை யொறுத்து வேறே
ஒருவனைவைப் பதற்கிசைந்தே முன்கருத்தென் னெனச்சூளோ
[டுரைபபித் தோர்க"

என்று அறமுதலிய நால்வகைச் சோதனைகளைப்பற்றி விநாயக புராணங் கூறுவது மிங்கறியத்தக்கதாம்.

‡ அறவோர் – முனிவர். ¶ உரிமை – சுதந்திரம்.

தாரையும் விட்டு, அவரான் இவ்வரசன் இவறன் மாலையன் ஆகலின் இவனைப் போக்கிக் கொடையும் உரிமையுமுடையான் ஒருவனை வைத்தற் கெண்ணினம்; இதுதான் யாவர்க்கும் இயைந்தது, நின்கருத்தென்னை யெனச் சூளுறவோடு சொல்லுவித்தல். இன்ப வுபதையாவது * தொன்றுதொட்டு உரிமையோடு பயின்றுள் ஒரு † தவமுதுமகளைவிட்டு, அவளால் ‡ உரிமையுள இன்னுள் நின்னைக் கண்டு $ வருத்தமுற்றுக் ¶ கூடுவிக்க வேண்டுமென்று என்னை விடுத்தாள்; அவளைக் கூடுவையாயின் நினக்குப் பேரின்பமேயன்றிப் பெரும்பொருளுங் கைகூடுமெனச் சூளுறவோடு சொல்லுவித்தல். அச்ச வுபதையாவது ஒரு நிமித்தத்தின் மேலிட்டு ஓரமைச்சனுல் ஏனையோரை அவன் இல்லின்கண் அழைப்பித்து இவர் () அறை போவான் எண்ணற்குக் குழீஇயினுரென்று தான் காவல் செய்து ஒருவனுல் இவ்வரசன் நம்மைக் கொல்வான் சூழ்கின்றமையின் அதனை நாமுற்படச் செய்து நமக்கினிய அரசனெருவனை வைத்தல் ஈண்டை யாவர்க்கும் இயைந்தது, நின்கருத்தென்னை யெனச் சூளுற வோடு சொல்லுவித்தல். இந்நான்கினுந் திரிபிலனுயவழி எதிர் காலத்துந் திரிபிலனெனக் கருத்தளவையாற் றெளியப்படுமென்ப தாம். § இவ்வடநூற் பொருண்மையை யுட்கொண்டு இவரோதிய தறியாது பிறரெல்லாம் இதனை உயிரெச்சமெனப் பாடந்திரித்துத் தத்தமக்குத் தோன்றியவாறே உரைத்தார்.

தெளி:—(இ-ள்.) (அரசனுல் தெளியப்படுவானெருவன்) அறம் - அறமும், பொருள் - பொருளும், இன்பம் – இன்பமும், உயிரச்சம் – உயிர்ப் பொருட்டால் வரும் அச்சமும், நான்கின் – (என்னும் உபதை) நான்கினது, திறம் - திறத்தினுல், தெரிந்து - (மனவியல்பு) ஆராய்ந் தால், தேறப்படும் – (பின்பு) தெளியப்படுவான். (எ று).

அந்நான்கு உபதைகளுள், அறவுபதையாவது புரோகிதரையும் அறவோரையும் அனுப்பி அவரால் இவ்வரசன் அறமில்லாதவனு யிருத்தலால் இவ்வரசனை நீக்கி அறமும் உரிமையும் உடையா

---

* தொன்று தொட்டு - பழமைதொடங்கி அஃதாவது வெகு காலமாக

† தவமுதுமகள் – தவமூதாட்டி [மூதாட்டி – வயதுசென்றவள்].

‡ உரிமையுள் என்றும் பாடமுண்டு. உரிமையுள்-மனைவியருள்.

$ வருத்தமுற்று – காமவேதனையடைந்து.

¶ கூட்டுவிக்க என்றும் பாடமுண்டு.

() அறைபோவானெண்ணற்கு - கீழறுத்துச் செல்ல யோசித் தற்கு (நமக்குத் தீமை செய்ய ஆலோசித்தற்கு).

§ இவ்வடநூலி னருத்தத்தை யுட்கொண்டு திருவள்ளுவநாயனுர் கூறியதறியாமல், மற்றவரெல்லாம் உயிரச்சமென்பதனை உயிரெச்ச மெனத் திரித்துப் பாடங்கொண்டு தமக்குத் தமக்குத் தோன்றிய படியே பொருள் கூறினுரென்பதாம்.

ஞொருவனை வைத்தற்கு எண்ணினேம்; இதுதான் யாவர்க்கும் சம்மதம், உன்கருத்து என்னவென்று சபதத்தோடு சொல்லுவித்தல். பொருளுபதையாவது சேனைத்தலைவனையும், அவனோடு சம்பந்தமானவரையும் அனுப்பி, அவரால் இவ்வரசன் உலோபகுணமுடையவனாயிருத்தலால் இவனை நீக்கி ஈகையும் உரிமையும் உடையானொருவனை வைத்தற்கு எண்ணினேம்; இதுதான் யாவர்க்கும் சம்மதம், உன் கருத்து என்னவென்று சபதத்தோடு சொல்லுவித்தல். இன்பவுபதையாவது தொன்றுதொட்டு உரிமையோடு பழகியவளாகிய ஒரு தவமுதுமகளை அனுப்பி, அவளால் (அரசனுக்கு) உரிமையுள்ள இன்னாள் உன்னைக் கண்டு வருத்தமுற்றுக் கூடவேண்டுமென்று என்னை அனுப்பினாள்; அவளைக் கூடுவையானால் உனக்குப் பெருஞ் சுகமேயல்லாமல் பெருந்திரவியமும் கிடைக்குமென்று சபதத்தோடு சொல்லுவித்தல். அச்சவுபதையாவது ஒரு நிமித்தத்தின்மேல் வைத்து ஒரு மந்திரியினால் மற்றவரை அவன் வீட்டில் அழைப்பித்து இவர் அறைபோதலைப்பற்றி எண்ணுதற்குக் கூடினாரென்று தான் காவல்செய்து ஒருவனால் இவ்வரசன் நம்மைக்கொல்ல வெண்ணுகின்றமையால் அக்கொல்லுதலை நாம் முற்படச்செய்து நமக்கு இனிய அரசனொருவனை வைத்தல் இங்கு யாவர்க்கும் சம்மதம், உன்கருத்து என்னவென்று சபதத்தோடு சொல்லுவித்தல். இந்நான்கு உபதையினாலும் வேறுபடாதவனாயிருந்த விடத்துப் பிற்காலத்திலும் வேறுபடா னென்று அனுமானப் பிரமாணத்தினால் தெளியப்படுவானென்பதாம்.

(க-து.) அரசனால் தெளியப்படுவானொருவன் அறமுதலிய நான்குபதைகளாலும் ஆராய்ந்து தெளியப்படுவான் என்பது.

I. Let a minister be chosen, after he has been tried by means of these four things, his virtue, love of money, love of sexual pleasure, and fear of losing his life.

---

உ. குடிப்பிறந்து குற்றத்தி னீங்கி வடுப்பரியு
நாணுடையான் கட்டே தெளிவு

**பரி:—(இ-ள்) உயர்ந்தகுடியிற்பிறந்து குற்றங்களினின்று நீங்கி நமக்கு வடு வருங்கொலென்று அஞ்சா நிற்கும் நாணுடையவன் கண்ணதே அரசனது *தெளிவு, (எ-று.)**

குற்றங்களாவன: மேல் அரசனுக்குச்சொல்லிய $வகையாறும், ‡மடி,

* தெளிவு - நம்பிக்கை.

$ ஆறுவகைக் குற்றமாவன - காமம், வெகுளி, லோபம், மானம், உவகை, மதமென்பனவாம்.

‡ மடி - செய்தொழிலில் ஊக்கமின்றிச் சோம்பிக் கிடத்தல்.

மறப்பு, * பிழைப்பு என்றிவை † முதலாயவுமாம். ‡ நாண் - இழி தொழில்களின் மனஞ்செல்லாமை ¶ இவை பெரும்பான்மையும் தக்கோர்வாய்க் கேட்டலாகிய ஆகமவளவையாற் றெரிவன. $ இந்நான்குமுடையவனையே தெளிகவென்பதாம்.

தெளி :—(இ-ள்.) தெளிவு - (அரசனது) தெளிவாவது, குடிப் பிறந்து - (உயர்ந்த) குடியிற்பிறந்து, குற்றத்தின் - குற்றங்களி னின்றும், நீங்கி - விலகி, வடு - (நமக்குப்) பழுது, (வருமோவென்று), பரியும் - அஞ்சாநிற்கும் நாணுடையான் கட்டே - நாணமுடைய வனிடத்ததே, (எ-று).

குற்றங்களாவன : முன்னர் (குற்றங்கடிதலென்னு மதிகாரத்தில்) அரசனுக்குச் சொல்லிய ஆறுவகையும், சோம்பல் மறதி, தவறு என்ற இவை முதலியனவுமாம். நாணம் - இழிதொழில்களில் மனஞ் செல்லாமை. இவை பெரும்பான்மையும் யோக்கியர் வாயிற்கேட்ட லாகிய ஆகமப்பிரமாணத்தினல் தெரிவன. இந்நான்கு முடைய வனையே தெளிக என்பதாம்.

(கு-து ) அரசன் நற்குடியிற்பிறந்து குற்றமில்லாது தனக்கு வருங்குற்றத்திற்கஞ்சும் நாணமுடையவனைத் தனக்குரியவனுகத் தெரிந்துகொள்ளல் வேண்டும் என்பது.

2. The king's choice should fix on him, who is of good family, who is free from faults, and who has the modesty which fears the wounds of sin.

---

**ங. அரியகற் றசற்றார் கண்ணுந் தெரியுங்கா**
**லின்மை யரிதே வெளிறு.**

பரி :—(இ-ள்.) கற்றற்கரிய நூல்களைக் கற்று £ மேற்சொல்லிய குற்றங்கள் § அற்றார்மாட்டும் நுண்ணிதாக ஆராயுமிடத்து வெண்மை யில்லாமை அரிது, (எ-று).

---

* பிழைப்பு - செய்தொழிலை முறையாகச்செய்யாது தவறுதல்.

† முதலாய என்றதனல் கூடாநட்பு, கூடாவொழுக்கம், சிற்றினஞ் சேருதல், ஒப்புரவறியாமை முதலியவற்றையுங் கொள்க.

‡ நச்சினர்க்கினியார் "ஒப்புமுருவும்" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தினுரையில் "நாணுவது செயத்தகாதனவற்றின்கண் உள்ளமொடுங்குதல்" என்றனர்.

¶ இவை - குற்றமாறும் மடி முதலியனவுமாம்.

$ இந்நான்கும் - குடிப்பிறத்தலும், குற்றத்தினீங்குதலும், வடுப் பரிதலும், நாணுடைமையு மென்னு மிந்நான்கும்.

£ இவ்வதிகாரத்தின் இரண்டாவது குறளில் கூறிய குற்றங்கள்.

§ அற்றார் - இல்லாதவர்.

* வெண்மை - அறியாமை; † இஃது இவர்மாட்டுளதாவது மனத்தது ‡ நிலையாமையான் ஓரோவழியாகலின் ' தெரியுங்கால் ' என்றார். காட்சியளவையாற் றெரிந்தால் அதுவும் இல்லாதாரே தெளியப்படுவரென்பது குறிப்பெச்சம். ¶ இவ்வளவைகளான் இக் $ குணமுங் §குற்றமும் தெரிந்து குணமுடையாரைத் தெளிகவென்பது இவை மூன்று பாட்டானுங் கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) அரிய – (கற்றற்கு) அருமையாகிய நூல்களை, கற்று – படித்து, ஆசு – (முற்கூறிய) குற்றங்கள், அற்றார்கண்ணும் – அற்றவரிடத்தும் தெரியுங்கால் – (நுட்பமாக) ஆராயுமிடத்து, வெளிறு – அறியாமையானது, இன்மை-இல்லாதிருத்தல், அரிது – அருமையாம், (எ-று)

வெளிறென்னும் அறியாமை இவரிடத்து மனத்தினது நிலையாமையால் ஓரோவிடத்து உண்டாவதாதலால், 'தெரியுங்கால்' என்றார். பிரத்தியட்சப் பிரமாணத்தினால் தெளிந்தால் அவ்வெளிறும் இல்லாதாரே தெளியப்படுவரென்பது குறிப்பெச்சமாம். இந்தப் பிரமாணங்களால் இக்குணமும் குற்றமும் தெரிந்து குணமுடையவரைத் தெளிக வென்பது இம் மூன்று பாட்டாலும் சொல்லப்பட்டது.

(க-து ) பேரறிவாளரிடத்தும் அறியாமை யுண்டென்பது.

3. When even men, who have studied the most difficult works, and who are free from faults, are carefully examined, it is a rare thing to find them without ignorance.

---

* வெண்மைப்பண்பு வெண்கரும்பென இனம்பற்றியும், வெண்டிங்களென இனம்பற்றாமலும், வெண்டாமரையெனத் தனக்குரிய சினையை விட்டு உரிமையில்லாத முதலைப்பற்றியும், வெள்ளாடென வெதிர்வுபற்றியும், 'விலங்கன்னர் வெள்ளறிவினர்' என இழிபு பற்றியும், வெண்களமவெள்ளாளர் எனச் சாதிபற்றியும், வெள்ளோட்டமெனப் புதுமைபற்றியும், வெண்டேர் எனப்பொய்பற்றியும், வெளிற்றுமரமென உள்ளீடின்மை பற்றியும், வெளியார் முன்னென இயல்புபற்றியும், இன்னும்பிறவற்றைப் பற்றியும் வரும்.

† இஃது இவர்மாட்டுளதாவது-அறியாமை அரியகற்றுசற்றாரிடத்துண்டாவது

‡ நிலையாமையான்-தடுமாற்றத்தால்.

¶ அனுமானம், ஆகமம், பிரத்தியட்சமென்னும் பிரமாணங்களினால்.

$ குணம் – குடிப்பிறந்து குற்றத்தினீங்குதல் முதலியன.

§ குற்றம் – காமம், வெகுளி முதலியன.

ச. *குணநாடிக் குற்றமு நாடி யவற்றுண்
மிகைநாடி மிக்க கொளல்.

பரி:—(இ-ள்.) குணங்குற்றங்களுள் ஒன்றே உடையார் உலகத்தின்மையின், ஒருவன் குணங்களை ஆராய்ந்து ஏனைக் குற்றங்களையும் ஆராய்ந்து பின் அவ்விரு பகுதியுள்ளும் மிக்கவற்றை ஆராய்ந்து அவனை அம்மிக்கவற்றானே அறிக, (எ-று).

† மிகையுடையவற்றை 'மிகை' என்றார். அவையாவன: ‡ தலைமையானுகப் பன்மையானுக உயர்ந்தன. அவற்றான் அறிதலாவது குணமிக்கதாயின் வினைக்குரியனென்றும், குற்றமிக்கதாயின் அல்லனென்றும் அறிதல். குணமே உடையார் உலகத்தரியராகலின், இவ்வகை யாவரையும் தெளிக வென்பது இதனுல் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) (குணங்குற்றங்களுள் ஒன்றேயுடையார் உலகத்தில்லாமையால் ஒருவனது) குணம் – குணங்களை, நாடி – ஆராய்ந்து, குற்றமும் – (மற்றைய) குற்றங்களையும், நாடி – ஆராய்ந்து, அவற்றுள் – (பின்பு) (குணம் குற்றமென்னும்) அவ்விருவகையுள்ளும், மிகை – மிகுந்தவற்றை, நாடி – ஆராய்ந்து, மிக்க – அம் மிகுந்தவற்றாலே, கொளல் – (அவனை) அறியக்கடவன், (எ-று).

மிகையுடையவற்றை 'மிகை' என்று கூறினார். அம்மிகையாவன:- தலைமையினுலாவது பன்மையினுலாவது உயர்ந்தவை. அம்மிகுந்தவற்றால் அறிதலாவது (ஒருவனிடத்து) குணமிகுந்திருந்தால் (அவன்) தொழிலுக் குரியவனென்றும், குற்ற மிகுந்திருந்தால் தொழிலுக் குரியவனல்லனென்றும் அறிதல். குணமாத்திரமுடையவர் உலகத்தில் அரியராகலால், இவ்வகையாக யாவரையும் தெளிக என்பது இதனுற் சொல்லப்பட்டது.

(க-து.) அரசன் ஒருவனிடத்துள்ள குணங்குற்றங்களை யாராய்ந்து, குணமிகுந்திருந்தால் அவனைத் தொழிலுக்குரியவனென் றறியக் கடவன் என்பது.

---

* "குற்றமு மேனைக் குணமு மொருவனை, நட்டபி னுடித் திரிவேனேல் – நட்டான், மறைகாவா விட்டவன் செல்வுழிச் செல்க, அறைகடல் சூழ் வைய நக" என்பது நாலடி.

† மிகையென்னும் தருமத்தின் பெயர் மிகையுடைய தருமியை யுணர்த்தி நின்றது. தருமி – குணங்குற்றங்கள்.

‡ தலைமையால் உயர்தல் பன்மையால் உயர்தல்களைப் பற்றி "ஒரு பெயர்ப் பொதுச்சொல்" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தினுரையில் நச்சினார்க்கினியார் "பிறரும் வாழ்வாருளரேனும் பார்ப்பனச்சேரி யென்றல் உயர்திணைக்கண் தலைமை பற்றிய வழக்கு; எயினர் நாடென்பது அத்திணைக்கண் பன்மை பற்றிய வழக்கு. பிற புல்லும்மரனும் உளவேனும் கமுகந்தோட்டமென்றல் அஃறிணைக்கண் தலைமை பற்றிய வழக்கு; ஒடுவங்காடென்பது அத்திணைக்கண் பன்மை பற்றிய வழக்கு." என்று கூறியது மிங்கறியத்தக்கது.

4. Let a king consider a man's good qualities, let him also consider his faults, and then let him consider which of these are the greatest, and let him judge of his character by that which prevails.

---

ரு. பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங்
கருமமே கட்டளைக் கல்.

பரி :—(இ-ள்.) பிறப்புக் குணம் அறிவென்பனவற்ருன் மக்கள் எய்தும் † பெருமையாகிய பொன்னினளவறிதற்கும் மற்றைச் சிறுமையாகிய பொன்னினளவறிதற்கும் உரைகல்லாவது தாம் தாம் செய்யுங் கருமமே, பிறிதில்லை, (எ-று).

இஃது ‡ ஏகதேசவுருவகம். மக்களது பெருமையும் சிறுமையும் தப்பாமல் அறியலுறுவார்க்குப் ¶ பிறகருவிகளும் உளவாயினும், $ முடிந்த கருவி செயலென்பது தேற்றேகாரத்தாற் பெற்ரும். இதனுற் குணங்குற்றங்கள் நாடற்குக் கருவி கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) (குடிப்பிறப்பு, குணம், அறிவு என்பனவற்ருல் மனிதரடையும்) பெருமைக்கும் - பெருமையாகிய பொன்னின் மாற்றறிதற்கும், ஏனைச்சிறுமைக்கும் - மற்றைச்சிறுமையாகிய பொன்னின் மாற்றறிதற்கும், கட்டளைக்கல் - உரை கல்லாவது, தத்தங்கருமமே - தாம் தாம் செய்யும் செயல்களே, (மற்ருென்றில்லை), (எ-று).

இக்குற ளேகதேச உருவகவணி. மனிதருடைய பெருமையையும் சிறுமையையும் தப்பாமல் அறியத்தொடங்கியவர்களுக்கு வேறு சாதனங்களு மிருப்பனவாயினும், முடிவான சாதனம் அவர் செயல் என்பது 'கருமமே' என்னும் தேற்றேகாரத்தாற் பெறப்பட்டது. இதனுற் குணங் குற்றங்களை அறிதற்குச் சாதனம் சொல்லப்பட்டது.

(க-து.) ஒவ்வொருவரிடத்து முள்ள பெருமையையும் சிறுமையையும் அறிதற்கு முடிவான சாதனமாயுள்ளது அவரவரது செய்கைகளேயாம் என்பது.

5. A man's deeds are the touch-stone of his greatness and littleness.

---

† பெருமைக்கும் மற்றைச் சிறுமைக்கும் என்றும் பாடமுண்டு.

‡ கருமத்தைக்கட்டளைக்கல் (உரைகல்) என்றுருவகஞ் செய்தவர் பெருமை சிறுமைகளைப் பொன்னென்றுருவகஞ் செய்யாமையின், இக்குறள் ஏகதேசவுருவகமாயிற்றென்க.

¶ பிறகருவிகள் - இடம் பொருள் ஏவல் முதலியன.

$ முடிந்த கருவி - தேர்ந்த சாதனம்.

சூ. * **அற்றாரைத் தேறுத லோம்புக மற்றவர்**
**பற்றிலர் நாணார் பழி.**

பரி :—(இ - ள்.) சுற்றமில்லாதாரைத் தெளிதலை யொழிக ; அவர் உலகத்தோடு தொடர்பிலர்; ஆகலாற் பழிக்கஞ்சார், (எ-று).

*'பற்றிலர்' என்பதனால் சுற்றமென்பது வருவிக்கப்பட்டது. உலகத்தார் பழிப்பன வொழிதற்கும் புகழ்வன செய்தற்கும் ஏதுவாகிய உலக நடையியல்பு சுற்றமில்லாதார்க்கு இன்மையின், அவர் தெளியப்படாரென்பதாம்.*

*தெளி :—(இ-ள்.) அற்றாரை - (சுற்றம்) இல்லாதவரை, தேறுத லோம்புக - தெளிதலை யொழியக்கடவன், அவர் - (சுற்றமில்லாத) அவர், மற்றுப் பற்றிலர் - உலகத்தோடு சம்பந்தமிலர், (ஆதலால்), பழி - பழிக்கு, நாணார் - அஞ்சார், (எ-று).*

*சுற்றம் என்பது 'பற்றிலர்' என்று கூறியதினால் வருவித்துரைக்கப் பட்டது. உலகத்தார் பழிப்பனவற்றை யொழிதற்கும், புகழ்வன-வற்றைச் செய்தற்கும் காரணமாகிய உலகநடையினியல்பு சுற்ற-மில்லாதவர்க்கு இல்லாமையால், அவர் தெளியப்படாரென்பதாம். சுற்றம் - உறவினர்.*

*(க - து.) சுற்றமில்லாதவர் பழிக்கஞ்சாமையின், அவரை அரசன் தனக்குரியவராகத் தெளிதலொழியக்கடவன் என்பது.*

6. Let a king avoid choosing men who have no relations; such men have no attachments, and therefore have no fear of crime.

---

எ. **காதன்மை கந்தா வறிவறியார்த் தேறுதல்**
**£ பேதைமை யெல்லாந் தரும்.**

பரி :—(இ - ள்.) அன்புடைமை ‡பற்றுக்கோடாகத் தமக்கறிய வேண்டுவன அறியாதாரைத் தெளிதல் அரசனுக்கு எல்லா அறியாமை-யையும் கொடுக்கும், (எ - று).

*தன்னோடு †அவரிடைநின்ற அன்புபற்றி ||அரசன் அறிவிலார் மேல் வினையை வைப்பின், அஃது அவரறிவின்மையாற் கெடும்;*

---

* *''சுற்ற மிலரா னவர்தம்மைச் சூழேல் பழிபா வமுநாணார், பற்று மிலரா குவர்விடுக'' என்பது விநாயகபுராணம்.*

£ *பேதைமை - யாதுமறியாமை.*

‡ *பற்றுக்கோடு - ஆதாரம்.* † *அவரிடை - அறிவறியாரிடத்து.*

|| *''உடைப்பெருஞ் செல்வத் துயர்ந்த பெருமை, அடக்கமி லுள்ளத் தனாகி - நடக்கையின், ஒள்ளிய னல்லான்மேல் வைத்தல் குரங்கின்கைக், கொள்ளி கொடுத்து விடல்'' என்பது பழமொழி.*

கெட்டால் *அவர்க்குளதேயன்றி வினைக்குரியாரை அறியாமை, மேல் விளைவறியாமை ¶முதலாக அவனுக்கு அறியாமை பலவும் உளவா-மென்பதாம்.

தெளி:—(இ - ள்.) காதன்மை - அன்புடைமையானது, கந்தா-பற்றுக்கோடாக, அறிவு - (தமக்கு) அறியவேண்டுவனவற்றை, அறியார் - அறியாதவரை, தேறுதல் - தெளிதலானது, பேதைமை-யெல்லாம் - (அரசனுக்கு) எல்லா அறியாமையையும், தரும் - கொடுக்கும், (எ - று).

அரசன் தன்னோடு அவரிடத்துள்ள அன்புபற்றி அறிவில்லாதவ-ரிடத்துத் தொழிலை வைத்தால், அத்தொழில் அவரறிவில்லாமை-யினாற் கெடும்; கெட்டால் அவர்க்குள்ளது மாத்திரமல்லாமல் தொழிலுக்குரியவரை அறியாமை, பின்னுண்டாம் பயனை அறியாமை முதலாக அவ்வரசனுக்கு அறியாமை பலவும் உண்டாகும் என்பதாம்.

(க - து.) அறியவேண்டுவனவற்றை யறியாதவரை அரசன் அன்பு காரணமாகத் தனக்குரியவராகத் தெளிதல் அவனுக்குப் பேதைமை பலவற்றையு முண்டாக்கும் என்பது.

7. To choose ignorant men, through partiality, is the height of folly.

---

அ. **தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை**
**தீரா விடும்பை தரும்.**

பரி:— (இ - ள்.) தன்னோடு இயைபுடைய னல்லாதானைப் பிறப்பு § முதலியவற்றானும் செயலானும் ஆராயாது தெளிந்த அரசனுக்கு அத்தெளிவு தன் வழிமுறையினும் நீங்காத துன்பத்தைக் கொடுக்கும், (எ - று).

இயைபு - $தன் குடியொடு கோடா மரபு. இதனானே அதுவும் வேண்டுமென்பது பெற்றும். தெளிதல் - £அவன்கண்ணே வினையை வைத்தல். அவ்வினை கெடுதலால் தன்குலத்துப் பிறந்தாரும் பகைவர் கைப்பட்டுக் கீழாய்விடுவர் என்பதாம். நான்கனுருபு விகாரத்தாற் றொக்கது.

---

* அவர்க்குளதேயன்றி - அறிவறியார்க்கு ஒரறியாமை யுளதா யிருத்தலே யல்லாமல்.

¶ முதலாக என்றதனால் வினைவின்பின் உண்டாகுந் துன்பம், அறிவுடையாரால் பழிக்கப்படுதல் முதலியவற்றை யறியாமையுங் கொள்க.

§ முதலிய என்றதனால் குணமும் அறிவும் கொள்க.

$ தன்குடியொடு கோடாமரபு - தன்னாட்டில் வாழும் குடிகளுடன் மாறுபடாத முறைமை. "தன்குடியொடு தொடர்ந்த மரபு" என்றும் பாடமுண்டு.

£ அவன்கண்ணே - அப்பிறனிடத்தே.

தெளி.—(இ – ள்.) பிறனை – தன்னோடு சம்பந்தமுடையனல்லாத வனை, தேரான் – (பிறப்பு முதலியவற்றாலும் செய்கையாலும்) ஆராயாது, தெளிந்தான் – தெளிந்த அரசனுக்கு, (அத்தெளிவு), வழிமுறை – (அவன்றன்) சந்ததிக்கிரமத்திலும், தீரா - நீங்காத, இடும்பை – துன்பத்தை, தரும் – கொடுக்கும், (எ – று).

சம்பந்தம் – தன்குடியோடு கோணுதலில்லாத மரபு. இதனாலே அம்மரபும் வேண்டுமென்பது பெறப்பட்டது. தெளிதல் – அவனி டத்தே தொழிலைவைத்தல். அத்தொழில் கெடுதலால் தன்குலத்திற் பிறந்தவரும் பகைவர் வசத்தி லகப்பட்டுக் கீழாவரென்பதாம். தெளிந்தானுக்கு என்னும் நான்கனுருபு செய்யுள் விகாரத்தால் தொக்குநின்றது.

(க–து.) தன்னுடன் சம்பந்தமில்லாதவனைத் தனக்குரியவனாகத் தெளிந்து கொண்ட அரசனுக்கு நீக்கமுடியாத துன்ப முண்டாகும் என்பது.

8. Sorrow that will not leave even his posterity will come upon him who chooses a stranger whose character he has not known.

---

கூ. **தேறற்க யாரையுந் தேராது தேர்ந்தபிற்**
**றேறுக தேறும் பொருள்.**

**பரி:—(இ-ள்.) யாவரையும் ஆராயாது தெளியாதொழிக ; ஆராய்ந்த பின் தெளியும் பொருள்களை ஐயுறுதொழிக, (எ – று).**

* தேறற்க என்ற பொதுமையான் ஒருவினைக்கண்ணுந் தெளிய லாகாதென்பது பெற்றாம். ஈண்டுத்தேறுக என்றது † தாற்பரியத்தால் ‡ ஐயுறவினது விலக்கின்மேனின்றது. தேறும் பொருள் என்றது அவரவர் ஆற்றற்கேற்ற வினைகளை. ¶ பொருள் - ஆகுபெயர்.

தெளி:—(இ-ள்.) யாரையும்–யாவரையும், தேராது–ஆராயாமல், தேறற்க – தெளியாதிருக்கக்கடவன், தேர்ந்தபின்–ஆராய்ந்த பிறகு, தேறும் பொருள் – தெளியும் பொருள்களை, தேறுக–தெளியக்கடவன், (சந்தேகமுறா திருக்கக்கடவன்), (எ – று).

தேறற்க என்று பொதுப்படச் சொன்னமையால் யாதொரு தொழிலும் தெளியலாகாதென்பது பெறப்பட்டது. இங்குத் தேறுக

---

* தேறற்க என்ற பொதுமையான் – இன்னதொழிலில் தெளித லொழிக என்று சிறப்பு வகையாற் கூறாது பொதுவகையால் தேறற்க என்று கூறியதினால்.

† "கவிப்பொருள் சுருக்கிக் காட்டல்தாற் பரியம்" என்பது சூத்திரம்.

‡ ஐயுறவினது விலக்கு - சந்தேகமொழிதல்.

¶ பொருள் என்றது பொருளுக்குக் காரணமான **வினையை** யுணர்த்துதலால் காரியவாகு பெயராம்.

என்றது கருத்துவகையால் சந்தேகத்தினது விலக்கின்மேல் நின்றது. தேறும் பொருள் என்றது அவரவர் வல்லமைக்கு ஏற்றதொழில்களை. பொருள்-காரிய வாகுபெயர்.

(க - து.) அரசன் ஆராய்வதற்குமுன் எவரையுந் தனக்குரியவராகத் தெளியாது நன்றாய் ஆராய்ந்த பிறகு தெளியக்கடவன் என்பது.

9. Let a king choose no one without previous consideration; after he has made his choice, let him unhesitatingly select for each such duties as are appropriate.

---

கO. தேரான் றெளிவுந் தெளிந்தான்க ணையுறவுந்
தீரா விடும்பை தரும்.

பரி:—(இ-ள்.) அரசன் ஒருவனை ஆராயாது தெளிதலும் ஆராய்ந்து தெளிந்தவன்மாட்டு ஐயப்படுதலும் இவ்விரண்டும் அவனுக்கு நீங்காத துன்பத்தைக் கொடுக்கும், (எ-று).

வினை வைத்தபின் ஒருதவறு காணுதுவைத்து ஐயுறுமாயின், * அதனை யவனறிந்து இனி இது நில்லாதென்னுங் கருத்தான் அவ்வினையை நெகிழ்த்துவிடும்; அதுவே யன்றிப் பகைவரால் எளிதிற் பிரிக்கவும் படும். ஆகலான் 'தெளிந்தான்க ணையுறவும்' ஆகாதாயிற்று. தெளிவிற் செல்லை கூறியவாறு. இவை ஐந்துபாட்டானும் தெளியப்படாதார் இவரென்பதூஉம், அவரைத் தெளிந்தாற்படும் இழுக்கும், தெளிவிற்செல்லையும் கூறப்பட்டன.

தெளி:—(இ-ள்.) (அரசன்) தேரான் - (ஒருவனை) ஆராயாது, தெளிவும் – தெளிதலும், தெளிந்தான்கண் – ஆராய்ந்து தெளிந்தவனிடத்து, ஐயுறவும் – சந்தேகப்படுதலும், (இந்த இரண்டும் அவ்வரசனுக்கு), தீராவிடும்பை–நீங்காததுன்பத்தை, தரும்–கொடுக்கும், (எ - று).

அரசன் ஒருவனிடத்து ஒரு தொழிலை வைத்தபின் ஒருதவறு காணுதிருந்தும் (அவனிடத்து) சந்தேகமுறுவானுயின், அதனை அவன் அறிந்து இனி இது நில்லாதென்னுங் கருத்தால் அத்தொழிலைத் தளரவிடுவான்; அதுவேயல்லாமல் பகைவரால் எளிதிற் பிரிக்கவும் படுவான். ஆதலால் 'தெளிந்தான்க ணையுறவும்' ஆகாதாயிற்று. தெளிவிற்களவு கூறியவாறும். இவை ஐந்துபாட்டாலும், தெளியப்படாதவர் இவரென்பதும், அவரைத் தெளிந்தால் உண்டாகும் குற்றமும், தெளிவிற் களவும் சொல்லப்பட்டன.

---

* அதனை யவனறிந்து இனி இது நில்லாதென்னுங் கருத்தான் – சந்தேகப்படுதலைத் தொழிலை (உத்தியோகத்தை) யேற்றுக் கொண்டவன் தெரிந்துகொண்டு இனி இத்தொழில் நம்மிடத்து நிலைபெறுதென்னும் அபிப்பிராயத்தால்.

(க - து.) ஆராயாம லொருவனைத் தெளிதலும் தெளிந்தவனிடத்துச் சந்தேகமுறுதலுமுடைய அரசனுக்கு அவை நீங்காத துன்பத்தைத் தரும் என்பது.

10. To make choice of one who has not been examined, and to entertain doubts respecting one who has been chosen, will produce irremediable sorrow.

---

## பதினுன்காம் அதிகாரம்

### 52. தெரிந்து வினையாடல்

### On deliberation in the employment of servants

**பரி :—அஃதாவது அத்தெளியப்பட்டாரை அவர் செய்ய வல்ல வினைகளை அறிந்து அவற்றின்கண்ணே ஆளுந்திறம். * அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.**

*தெளி :—அஃதாவது அத்தெளியபட்டவரை அவர் செய்யவல்ல தொழில்களை அறிந்து அத்தொழில்களிலே ஆளுந்திறம். அதிகார முறைமையும் இதனாலே விளங்கும்.*

**க. † நன்மையும் தீமையு நாடி நலம்புரிந்த**
**தன்மையா னாளப் படும்.**

**பரி :—(இ - ள்.) அரசன் முதற்கண் ஒருவினையைத் தன்கண்வைத்தால், அதன்கண் ‡ஆவனவும் ¶ஆகாதனவும் ஆய செயல்களை ஆராய்ந்தறிந்து () அவற்றுள் ஆவனவற்றையே விரும்பிய இயல்பினையுடையான் பின் அவனாற் சிறந்த வினைகளிலே ஆளப்படும், (எ - று).**

*தன்னை $ உரிமை அறிதற் பொருட்டு அகம் புறங்கட்கு நடுவாயதோர் வினையை அரசன் தன்கண் வைத்தவழி அதன்கண் ஆம்செயல்களையே செய்தவன் பின்னும் அவ்வியல்பின னாதல்பற்றி அகமாய வினைக்கண்ணே ஆளப்படுவனென்பதாயிற்று. § 'புரிந்த' என்ற இறந்தகாலத்தான் முன் உரிமை அறிதற்பொருட்டு வைத்த வினையாதல் பெற்றும்.*

---

* தெரிந்து தெளிதல் தெரிந்து வினையாடற் கேதுவாயிருப்பது பற்றித் தெரிந்து தெளிதற்குப்பின் தெரிந்து வினையாடல் வைக்கப்பட்டது.

† "முன்னர்ப் பொதுவா கியவினையின் மூள விடுத்துத் தீதகற்றி நன்மை புரிந்து வருமாயி னூடி யவனைச் சிறந்தவினை, தன்னில் விடுக்க" என்பது விநாயகபுராணம்.

‡ ஆவன – நன்மை தருவன. ¶ ஆகாதன – தீமை தருவன.

() அவற்றுள் – ஆவன ஆகாதனவாகிய செயல்களில்.

$ உரிமை – நடத்தும் வகை.

§ புரிந்த என்பது இறந்தகாலத் தெரிநிலை யுடன்பாட்டுப் பெயரெச்சம்.

தெளி :—(இ - ள்.) (அரசன் முதலில் ஒரு தொழிலைத் தன்னிடத்து வைத்தால்) நன்மையுந் தீமையும் – (அத்தொழிலில்) ஆவனவும் ஆகாதனவும், (ஆகிய செயல்களை), நாடி–ஆராய்ந்தறிந்து, நலம்– (அச்செயல்களுள்) ஆவனவற்றையே, புரிந்த – விரும்பிய, தன்மையான் – இயல்பினையுடையவன், (பின்னே அவ்வரசனால்), ஆளப்படும் – (சிறந்த தொழில்களிலே) ஆளப்படுவான், (எ - று).

தன்னை உரிமை அறிதற்பொருட்டு அகத்திற்கும் புறத்திற்கும் நடுவாகிய ஒரு தொழிலை அரசன் தன்னிடத்து வைத்தவிடத்து அத்தொழிலில் ஆகுஞ் செயல்களையே செய்தவன் பின்னும் அத்தன்மையனுவது பற்றி அகமாகிய தொழிலிலே ஆளப்படுவா னென்பதாயிற்று. ' புரிந்த ' என்று இறந்தகாலத்தால் கூறியதால் முன்னர் உரிமையை அறிதற்பொருட்டு வைத்த தொழிலாதல் பெறப்பட்டது. அகம்-உள். புறம்–வெளி.

(க - து.) தான் செய்யுந் தொழிலில் நன்மை தீமைகளையாராய்ந்தறிந்து ஆவனவற்றைச் செய்ய விரும்புகின்றவனே அரசனு லாளப்படுவான் என்பது.

1. He should be employed by a king, whose nature leads him to choose the good, after having considered both the evil and the good.

---

உ. * வாரி பெருக்கி வளம்படுத் துற்றவை
யாராய்வான் செய்க வினை.

பரி :—(இ - ள்.) பொருள் வருவாயில்களை † விரியச்செய்து அப்பொருளாற் செல்வங்களை வளர்த்து அவ்வாயில்கட்கும் பொருட்குஞ் செல்வங்கட்கும் உற்ற ‡ இடையூறுகளை நாடோறும் ஆராய்ந்து நீக்கவல்லவன் அரசனுக்கு வினைசெய்க, (எ - று).

வாயில்களாவன: மேல் இறைமாட்சியுள்¶ 'இயற்றலும்' என்புழி

---

* வாரி - இகரவீற்றுத் தொழிலாகுபெயர்.

† விரியச்செய்து - அதிகப்படுத்தி.

‡ இடையூறு - விக்கினம் (தடை). [ஒரு காரியம் செய்யும்போது அதற்கிடையிற்றடையுண்டாவது இடையூறெனப்படும்.] " பரிசனம் பகைவர் கள்வர் படர்தரு முயிர்க டாமென், றுரைசெயைந் திடத்தினுலு முலகிடை யிடையூ றெய்தா, வரிசையிற் காத்து நீதி வழுக்கினர் தம்மை மொத்திக், கரிசறப் பொருளுங் கோடல் காவலர் தரும மைந்தா " என்பது விநாயகபுராணம்.

¶ 'இயற்றலும்' என்பதற்குத் தனக்குப்பொருள்கள் வரும் வழிகளை மேன்மே லுளவாக்கலும் என்பது பொருள்.

* உரைத்தனவும், † உழவு, பசுக்காவல், வாணிகமென்னும் வார்த்தையுமாம். செல்வங்களாவன: ‡ஆண்டுப் ¶பொருளும் இன்பமுமாக உரைக்கப்பட்டன. இடையூறுகளாவன: † அரசன் வினைசெய்வார், சுற்றத்தார், பகைவர், கள்வரென்று இவரான் வரும் நலிவுகள்.

தெளி :—(இ-ள்.) வாரி - (பொருள்) வரும் வழிகளை, பெருக்கி – விரியச்செய்து, வளம்படுத்து – (அப்பொருளால்) செல்வங்களை வளர்த்து, உற்றவை – (அப்பொருள் வரும் வழிகளுக்கும் பொருளுக்கும் செல்வங்களுக்கும்) வந்த இடையூறுகளை, ஆராய்வான் – (தினந்தோறும்) ஆராய்ந்து நீக்கவல்லவன், (அரசனுக்கு), வினைசெய்க – தொழில் செய்யக்கடவன், (எ - று).

வரும் வழிகளாவன : முன் இறைமாட்சி அதிகாரத்தில் ' இயற்றலும் ' என்றவிடத்து உரைத்தனவும், உழவு, பசுக்காவல், வாணிகம் என்னும் வார்த்தையுமாம். செல்வங்களாவன : அங்குப் பொருளும் இன்பமும் ஆகச்சொல்லப்பட்டவை. இடையூறுகளாவன : அரசன் தொழில் செய்வார், சுற்றத்தார், பகைவர், கள்வர் என்று இவர்களால் வரும் துன்பங்கள்.

(கூ-து.) பொருள்வரும் வழிகளை விருத்திசெய்து அவ்வரும் வழி முதலியவற்றிற்கு வந்த இடையூறுகளை யாராய்ந்து நீக்கவல்லவன் அரசனுக்குத்தொழில் செய்யக்கடவன் என்பது.

2. Let him do the king's work who can enlarge the sources of revenue, increase wealth, and consider and prevent the accidents which would destroy it.

---

* " பொருள்களாவன : மணி, பொன், நெல் முதலாயின. அவை வரும் வழிகளாவன : பகைவரை யழித்தலும், திறைகோடலும் (கப்பம் வாங்குதலும்), தன்னுடு தலையளித்த (காத்த)லும் முதலாயின " என்றுரைத்தனவும்.

† உழவு, பசுக்காவல், வாணிகமென்பனவற்றைப்பற்றிக் கூறும் வார்த்தையு (தருமசாஸ்திரமு)மாம். வார்த்தையாவது இது நன்மை பயப்பது இது தீமைபயப்பதென்றவற்றை விளக்கிக்கூறும் சாஸ்திரமாம். உழவினை விருத்தி செய்தலும், பசுக்களைப் பாதுகாத்தலும் வர்த்தகத்தை விருத்திசெய்தலும் அரசனுக்குப் பொருள்வரும் வழிகளாமென்பதிண்டுணர்தற் பாலதாம். மனுதர்மசாஸ்திரம் ஏழாவதத்தியாயத்துள்ள தீர்வைவிதி யிங்குக் கவனிக்கத்தக்கது.

‡ ஆண்டு – ' இயற்றலும் ' என்னுங்குறளின் விசேடவுரையில்.

¶ " யானை, குதிரை, படை, நாடு, அரணென்றிவற்றிற்கும், பகையொடு கூடலிற்பிரிக்கப்படுவார்க்கும், தன்னிற்பிரிதலிற் கூட்டப்படுவார்க்கும் கொடுத்தலைப் பொருட்பொருட்டாகவும், மண்டபம், வாவி, செய்குன்று, இளமரக்கா (நந்தவனம்) முதலிய செய்தற்கும், ஐம்புலன்களானுகர்வன (செவி முதலிய ஐந்திந்திரியங்களால் அனுபவிக்கப்படுவன) வற்றிற்குங் கொடுத்தலை இன்பப்பொருட்டாகவுங் கொள்க " என்றுரைக்கப்பட்டவை. † ராஜகாரியஞ் செய்வார்.

**ந. அன்பறிவு தேற்ற மவாவின்மை யிந்நான்கு**
**நன்குடையான் கட்டே தெளிவு.**

பரி:—(இ-ள்.) அரசன்மாட் டன்பும் அவனுக் *காவன அறியுமறிவும் அவை செய்தற்கட் கலங்காமையும் அவற்றால் பொருள் கையுற்றவழி அதன்மேல் அவாவின்மையுமாகிய இந்நான்கு குணங்களையும் நிலைபெற வுடையான்மேலதே வினையை விட்டிருக்குந் தெளிவு (எ-று).

† *இந்நான்கு நன்குடைமை இவன் செய்கின்ற வினைக்கண் யாதும் ஆராய வேண்டுவதில்லை யென்று அரசன் தெளிதற் கேது வாகலின்,‡ அவனை அதன் பிறப்பிடனாக்கிச் ¶ கூறினார். இவை மூன்று பாட்டானும் ஆடற்குரியானது இலக்கணங் கூறப்பட்டது.*

*தெளி:—(இ-ள்) அன்பு - (அரசடனித்து) அன்பும், அறிவு - (அவ் வரசனுக்கு ஆவனவற்றை யறியும்) அறிவும், தேற்றம் - (அவ்வாவன வற்றைச் செய்யுமிடத்துக்) கலங்காமையும், அவாவின்மை - (அவ்வாவனவற்றைச் செய்வதால் பொருள் கைகூடியவழி அப் பொருளின்மேல்) ஆசையில்லாமையும், (ஆகிய), இந்நான்கும் - இந்நான்கு குணங்களையும், நன்குடையான்கட்டே - நிலைபெற உடையவனிடத்ததே, தெளிவு - (தொழிலை விட்டிருக்கும்) தெளிவு, (எ - று).*

*இந்நான்கு குணமும் நன்றாகவுடைமை இவன் செய்கின்ற தொழிலில் சிறிதும் ஆராய வேண்டுவதில்லை யென்று அரசன் தெளிதற்குக் காரணமாகலால், அவனை அத்தெளிவின் பிறப்பிட-மாக்கிச் சொல்லினார். இவை மூன்று பாட்டாலும் ஆளுதற்கு உரியவனது இலக்கணம் சொல்லப்பட்டது.*

*(க - து.) அன்பு அறிவு தேற்றம் ஆசையில்லாமை யென்னு மிந்நான்கு முடையவனிடத்தே அரசனுக்குத் தெளிவுண்டாகும்.*

3. Let the choice of a king fall upon him who largely possesses these four things, love, knowledge, a clear mind and freedom from covetousness.

---

**ச. எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகையான்**
**வேறாகு மாந்தர் பலர்.**

பரி:—(இ-ள்.) எல்லாவகையானும் ஆராய்ந்து தெளிந்து வினை வைத்த பின்னும் அவ்வினையின் இயல்பானே வேறுபடுமாந்தர் உலகத்துப் பலர், (எ-று).

---

* *ஆவன - அனுகூலமானவற்றை.*

† *இந்நான்கு நன்குடைமை - அன்பு, அறிவு, தேற்றம், அவாவின்மை யென்னும் இந்நான்கு குணங்களும் நிலைபெறவுடை-யவனாயிருத்தல்.*

‡ *அவனை - அன்பு முதலிய குணங்களுடையவனை.*

¶ *'நன்குடையான் கட்டே தெளிவு' என்று கூறினார்.*

* கட்டியங்காரன்போல அரச இன்பத்தினை வெஃகி விகாரப்படுவ தல்லது அதனைக் குற்றமென் றொழிந்து தம்மியல்பி னிற்பார் அரிய ராகலின் 'வேறாகு மாந்தர் பலர்' என்றார். வினை வைப்பதற்கு முன் எல்லாக் குணங்களும் உடையராய் வைத்தபின் விகாரப்படுவாரை இடையாயதொரு வினையை வைத்தறிந்து ஒழிக்க வென்பதாம். இத னான் ஒருவகையா லொழிக்கப்படுவார் இவரென்பது கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்.) எனைவகையால் - எல்லாவகையாலும், தேறி யக் கண்ணும் - (ஆராய்ந்து) தெளிந்து தொழிலை வைத்த பின்னும், வினை வகையான் - அத்தொழிலினியல்பினாலே, வேறாகும் - வேறு படுகின்ற மாந்தர் - மனிதர், பலர் - (உலகத்தில்) பலர், (எ - று).

கட்டியங்காரன்போல அரச வின்பத்தினை விரும்பி வேறுபடுவதல் லாமல் அவ்வரச வின்பத்தினைக் குற்றமென்றொழிந்து தம் மியல்பில் நிற்பவர் அரியராதலால் 'வேறாகு மாந்தர் பலர்' என்றார். தொழிலை வைப்பதற்கு முன்னர் எல்லாக்குணங்களு முடையவராய் வைத்த பின் வேறுபடுவாரை அகத்திற்கும் புறத்திற்கும் நடுவானதொரு தொழிலைவைத்து அறிந்து ஒழிக்கவேண்டு மென்பதாம். இதனால் ஒருவகையால் ஒழிக்கப்படுவார் இவரென்பது சொல்லப்பட்டது.

(க - து.) ஆராய்ச்சிவகையால் வேறுபடாதிருந்து தொழில் வகையால் வேறுபடு மனிதர் பலராவரென்பது.

4. Even when a king has tried them in every possible way, there are many men who change, from the nature of the works in which they may be employed.

---

## ரு. அறிந்தாற்றிச் செய்கிற்பாற் கல்லால் வினைதான் சிறந்தானென் றேவற்பாற் றன்று.

பரி:—(இ - ள்.) செய்யும் உபாயங்களை அறிந்து செயலானும் இடையூறுகளானும் வருந்துன்பங்களைப் பொறுத்து முடிவுசெய்ய வல் லானை அல்லது வினைதான் இவன் நம்மாட்டு அன்புடையனென்று † பிறனொருவனை யேவும் இயல்புடைத்தன்று, (எ - று).

---

* கட்டியங்காரனென்பான் சீவகனது தந்தையான சச்சந்தனது மந்திரிகளுள் ஒருவன், இவன் சச்சந்தன் தன் மனைவியான விசயை யிடத்து மிகுந்த காதல்கொண்டு அரசாட்சியைக் கவனியாது போக மனுபவித்திருக்கும்போது அச்சச்சந்தனைக் கொன்று அரசாட்சியைக் கவர்ந்து கொண்டானென்பது கதை. இதன் விரிவைச் சீவகசிந்தா-மணி நாமக விலம்பகத்திற் காண்க.

† பிறன் - செய்யு முபாயங்களை யறிந்து செயலாலும் இடையூறுக ளாலும் வரும் துன்பத்தைப் பொறுத்துத் தொழிலை முடிவு செய்ய வல்லமை யில்லாதவன்.

* செய்கிற்பாற் கென்பது வேற்றுமை மயக்கம். அறி ‡வாற்றல் களான் அல்லது அன்பான் முடியாதென இதனால் வினையினது இயல்பு கூறப்பட்டது.

தெளி :—(இ - ள்.) வினைதான் - தொழில்தான், அறிந்து - (செய்யும் உபாயங்களை) அறிந்து, ஆற்றி - (செயலாலும் இடையூறுகளாலும் வருந்துன்பங்களைப்) பொறுத்து, செய்கிற்பாற்கல்லால் - (முடிவு) செய்ய வல்லவனை யல்லது, சிறந்தானென்று - (இவன் நம்மிடத்து) அன்புடையவனென்று, ஏவற்பாற்றன்று - (வேறொருவனை) ஏவுந் தன்மையை யுடையதன்று, (எ - று).

செய்கிற்பாற் கென்பது செய்கிற்பானையெனப் பொருள்பட்டமையின் வேற்றுமை மயக்கமாம். அறிவாற்றல்களா லல்லது அன்பினால் முடியாதென்று இதனால் தொழிலினது இயல்பு சொல்லப்பட்டது.

(க - து.) செய்யுமுபாயங்களை யறிந்து முடிப்பவரிடத்தல்லாமல் மற்றவரிடத்துத் தொழிலை வைத்தல் கூடாது என்பது.

5. A king's works can only be accomplished by a man of wisdom and patient endurance ; it is not of a nature to be given to another by mere personal attachment.

---

516 ௬. செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோ
டெய்த வுணர்ந்து செயல்.

பரி :—(இ - ள்.) முதற்கண்ணே செய்வானது இலக்கணத்தை ஆராய்ந்து பின் செய்யப்படும் வினையினது இயல்பை ஆராய்ந்து பின் அவனையும் அதனையுங் காலத்தோடு படுத்துப் பொருந்த அறிந்து அவனை அதன்கண் ஆடலைச் செய்க, (எ - று).

¶ செய்வானது இலக்கணமும் வினையினது இயல்பும் மேலே கூறப்பட்டன. காலத்தோ டெய்த உணர்தலாவது இக்காலத்து இவ்விலக்கணமுடையான் செய்யின் இவ்வியல்பிற்றாய வினை முடியு மென்று கூட்டியுணர்தல்.

தெளி :—(இ – ள்). செய்வானை - (முன்னே) செய்பவ னிலக்கணத்தை, நாடி - ஆராய்ந்து, (பின்னே), வினை - (செய்யப்படும்) தொழிலினியல்பை, நாடி-ஆராய்ந்து, (பின்பு அச்செய்வானையும் அத்தொழிலை-

---

* செய்கிற்பாற்கு என்னும் நான்கனுருபு தனக்குரிய பொருளை விட்டுச் செய்கிற்பானையென இரண்டனுருபின் பொருளில் வந்தமையின், வேற்றுமை மயக்கமாயிற்று. ‡ ஆற்றல் - பொறுமை.

¶ செய்வானது இலக்கணம் இவ்வதிகாரத்தின் முதல் மூன்று குறளிலும், வினையினது இயல்பு 'அறிந்தாற்றி' என்னும் ஐந்தாவது குறளிலும் சொல்லப்பட்டன.

யும்), காலத்தோடு-காலத்துடனே, (சேர்த்து), எய்த-பொருந்த, உணர்ந்து-அறிந்து, செயல்-(அச்செய்வானை அத்தொழிலி னிடத்து ஆளுதலைச்) செய்யக்கடவன், (எ-று).

செய்வானது இலக்கணமும் தொழிலினது இயல்பும் முன்னே சொல்லப்பட்டன. காலத்தோடு பொருந்த அறிதலாவது இக் காலத்தில் இவ்விலக்கணமுடையவன் செய்தால் இத்தன்மையதாகிய தொழில் முடியுமென்று கூட்டி அறிதல்.

(க-து.) அரசன் முன்னர்த் தொழில்செய்பவனை யாராய்ந் தறிந்து, பின்னர்த் தொழிலினியல்பை யாராய்ந்தறிந்து, அப்பால் அவனை அத்தொழிலில்வைத் தாளக் கடவன் என்பது.

6. Let a king act, after having well considered the agent whom he is to employ, the deed he desires to do, and the time which is suitable to it.

---

## எ. இதனை யிதனா லிவன்முடிக்கு மென்றாய்ந் ததனை யவன்கண் விடல்.

**பரி:—(இ-ள்.) இவ்வினையை இக்கருவியால் இவன் முடிக்க வல்லனெனக் கூறுபடுத் தாராய்ந்து, *மூன்றுந் தம்முள் இயைந்தவழி அவ்வினையை அவன்கண்ணே விடுக, (எ-று).**

கருவி - துணைவரும் பொருளும் †முதலாயின. வினைமுதலும், ‡ கருவியும், வினையுந் தம்முள் இயைதலாவது ¶ ஒரொன்றோடு ஏனைய இரண்டற்கும் பொருத்த முண்டாதல். விடுதல் - அதற்கு அவனை உரியனாக்குதல்.

தெளி:—(இ-ள்.) இதனை - இத்தொழிலை, இதனால் - இச்சாதனத்தால், இவன் முடிக்குமென்று - இவன் முடிக்கவல்லவனென்று, ஆய்ந்து - (கூறுபடுத்தி) ஆராய்ந்து, (மூன்றும் தம்முள் ஒத்திருந்த விடத்து), அதனை - அத்தொழிலை, அவன்கண் - அவனிடத்தே, விடல் - விடக்கடவன், (எ-று).

---

* மூன்றும் - தொழில் கருவி செய்பவ னென்னும் மூன்றும்.

† முதலாயின என்றதனால் காலம், இடம், படை முதலிய வற்றையுங் கொள்க.

‡ வினைமுதலின் (செய்பவனின்) தொழிற்பயனைச் செயப்படு பொருளிற் சேர்ப்பது கருவியெனப்படும். கருவியெனினும் காரக மெனினும் காரணமெனிலும் ஏதுவெனினும் சாதனமெனினும் ஒக்கும்.

¶ தொழிலோடு கருவிக்கும் செய்பவனுக்கும், கருவியோடு தொழிலுக்கும் செய்பவனுக்கும், செய்பவனோடு தொழிலுக்கும் கருவிக்கும் பொருத்தமுண்டாதல்.

சாதனம் – துணைவரும் பொருளும் முதலானவை. செய்பவனும், சாதனமும், தொழிலும் தம்முள் ஒத்திருத்தலாவது ஒவ்வொன்றோடு மற்றைய இரண்டற்கும் பொருத்தம் உண்டாகுதல். விடுதல் – அத்தொழில் செய்தற்கு அவனை உரியவனாக்குதல்.

(க-து.) அரசன் எத்தொழில் எவனால் முடியுமோ அத்தொழிலை அவனிடத்து வைக்கக் கடவன் என்பது.

7. After having considered, "this man can accomplish this, by these means," let the king leave with him the discharge of that duty.

---

அ. **வினைக்குரிமை நாடிய பின்றை யவனை யதற்குரிய னாகச் செயல்.**

பரி:—(இ-ள்.) ஒருவனை அரசன் தன் வினை செய்தற்குரியனாக ஆராய்ந்து துணிந்தால், பின் அவனை * அதற்குரியனுமாறு உயரச்செய்க, (எ–று).

உயரச்செய்தலாவது அதனைத் தானே செய்துமுடிக்கும் ஆற்றலுடையானாக்குதல். † அது செய்யாக்காலுங் கெடுமென்பது கருத்து.

தெளி:—(இ-ள்.) (ஒருவனை அரசன்) வினைக்கு - (தனது) தொழில் செய்தற்கு, உரிமை – உரியவனாக, நாடியபின்றை - ஆராய்ந்து துணிந்தால் பின்பு, அவனை –, அதற்கு - அத்தொழில் செய்தற்கு, உரியனாக – உரியவனாகும்படி, செயல் (உயரச்) செய்யக்கடவன், (எ–று).

உயரச்செய்தல் – அத்தொழிலைத் (அவன்) தானே செய்து முடிக்கும் வல்லமையுடையவனாக்குதல். அது செய்யாதவிடத்துங் கெடுமென்பது கருத்து.

(க–து.) அரசன் ஒருவனைத் தன் தொழிற்குரியவனாயிருத்தலை யாராய்ந்தறிந்து, பிறகு அவனை அத்தொழிற்கு உரியவனாகச் செய்யக் கடவன் என்பது.

8. Having considered what work a man is equal to, let the king employ him in that work.

---

க. **வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாக நினைப்பானை நீங்குந் திரு.**

பரி:—(இ-ள்.) எப்பொழுதுந் தன் வினையின்கண்ணே முயறலை

---

* அதற்குரியனுமாறு–அத்தொழில் செய்தற்குச் சுதந்தரனாகும்படி.

† அது செய்யாக்காலுங் கெடும் – அத்தொழில் செய்தற்கு அவனைச் சுதந்தரனாக்காவிடத்தும் (தொழில் முடிவின்றிக்) கெட்டொழியு மென்பதாம்.

**யுடையான் *அவ்வுரிமையாற் றனக்குக் கேளாய் ஒழுகுகின்ற தன்மையை §அது பொருதார் சொற்கேட்டு அரசன் மாறுபடக் கருதுமாயின், திருமகள் அவனை விட்டு நீங்கும், (எ-று).**

கேளாயொழுகுகின்ற தன்மையாவது தான் பிறனாய் நில்லாது கேளிர் செய்யும் உரிமை யெல்லாஞ் செய்தொழுகுதல். அவனை அவமதிப்பாகக் கொண்டு செறக்கருதுமாயின், பின் ஒருவரும் உட்பட்டு முயல்வாரில்லையாம்; ஆகவே, தன்செல்வங் கெடுமென்பது கருத்து. இந்நான்கு பாட்டானும் ஆடற்குரியானை ஆளுந்திறங் கூறப்பட்டது.

*தெளி :—(இ - ள்.) வினைக்கண் - (தனது) தொழிலினிடத்தே, வினையுடையான் - (எப்போதும்) முயற்சி செய்தலை யுடையவன், (அவ்வுரிமையால்), கேண்மை - (தனக்குச்) சுற்றமாய் நடக்கின்ற தன்மையை, (அது பொருதவரது சொல்லைக் கேட்டு), வேறாக - மாறுபட, (அரசன்), நினைப்பானை - நினைப்பானானால், திரு - சீதேவி, நீங்கும் - (அவ்வரசனை) விட்டு நீங்குவாள், (எ - று). (திரு-செல்வம்).*

*சுற்றமாய் நடக்கின்ற தன்மையாவது (வினையுடையான் அரசனுக்குத்) தான் பிறனாய் நில்லாமல் சுற்றத்தார் செய்யும் உரிமையையெல்லாம் செய்து நடத்தல். (அரசன்) அவனை அவமதிப்பாகக்கொண்டு கோபிக்க நினைப்பானாயின், பின் ஒருவரும் உட்பட்டு (தொழிலில்) முயல்வாரில்லையாம்; இல்லையாகவே, தன்செல்வம் கெடுமென்பது கருத்து. இந்நான்கு பாட்டாலும் (அரசன்) ஆளுதற்கு உரியவனை ஆளும்வகை சொல்லப்பட்டது.*

*(க - து.) தனது காரியத்தில் முயற்சியுடையவனா யிருப்பவனை மாறுபட நினைக்கும் அரசனது செல்வம் அழிந்துபோமென்பது.*

9. Prosperity will leave the king who doubts the friendship of the man who steadily labours in the discharge of his duties.

---

**க0. நாடோறு நாடுக மன்னன் வினைசெய்வான்**
**கோடாமை கோடா துலகு.**

பரி :—(இ - ள்.) **வினைசெய்வான் †கோடாதொழிய ‡உலகங் கோடாது; ஆதலான், அரசன் ¶அவன்செயலை நாடோறும் ஆராய்க.**

---

* *அவ்வுரிமையால் - தன்தொழிலைச்செய்யுஞ் சுதந்தரத்தினால்.*

§ *அது பொருதார் — கேளா யொழுகுகின்ற (சுற்றமாய் நடக்கின்ற) தன்மையைப் பொறுக்கமாட்டாதவர்.*

† *கோடாதொழிய - எண்ணம், சொல், செயல் என்பனவற்றுள் மாறுபடாதிருக்க.*

‡ *உலகங் கோடாது — உலகியல்பு மாறுபடாது.* ¶ *அவன் — வினை செய்வான்.*

* அஃதொன்றனையும் ஆராயவே †அதன்வழித்தாய உலக மெல்லாம் ஆராய்ந்தானும்; ‡அதனால் அவனுரிமை அழியாமற் றன்னுள்ளே ஆராய்ந்து போதுக வென்பதாம். இதனான் ¶ஆண்ட வழிச் செய்வது கூறப்பட்டது.

தெளி :—(இ - ள்.) வினை செய்வான் - தொழில் செய்பவன், கோடாமை - மாறுபடாதிருக்க, உலகு - உலகமானது, கோடாது - மாறுபடாது, (ஆதலால்), மன்னன் - அரசன், நாடோறும் - தினந் தோறும், நாடுக - (அவன் செயலை) ஆராயக்கடவன், (எ - று).

(அரசன்) அஃதொன்றனையும் ஆராயவே அதன் வழிப்பட்ட உலகமெல்லாம் ஆராய்ந்தவனாவன்; அதனால் அவனுரிமை அழியாமல் தன்னுள்ளே ஆராய்ந்துகொண்டு வரக்கடவனென்பதாம். இதனால் (அரசன் வினைசெய்வானை) ஆண்டவிடத்துச் செய்வது சொல்லப்பட்டது.

(க - து.) தனது தொழில் செய்பவன் மாறுபடாது தொழில் செய்வதனால் உலகம் மாறுபடா திருத்தலால், அவனை அரசன் நாள்தோறும் ஆராய்ந்து வரக்கடவன் என்பது.

10. Let a king daily examine the conduct of his servants; if they do not act crookedly, the world will not act crookedly.

## பதினைந்தாம் அதிகாரம்

## 53 சுற்றந்தழால் – On kindness to relatives

**பரி :—அஃதாவது அரசன் தன்கிளைஞரைத் தன்னினீங்காமல் அணைத்தல். வினைசெய்வாரைக் கூறி ஏனைச்சுற்றங் கூறுகின்றா ராகலின் இது தெரிந்து வினையாடலின்பின் வைக்கப்பட்டது.**

தெளி :—அஃதாவது அரசன் தனது சுற்றத்தாரைத் தன்னை விட்டு நீங்காதிருக்குமாறு தழுவுதல். தொழில் செய்வாரைச் சொல்லி மற்றைச் சுற்றத்தாரைச் சொல்லுகின்றார் ஆதலால், இது (சுற்றந்தழால்) தெரிந்து வினையாடலின்பின் வைக்கப்பட்டது.

521 **க. பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்**
**சுற்றத்தார் கண்ணே யுள.**

---

* அஃதொன்றனையும் — வினைசெய்வான் செயலொன்றை மாத்திரம்.

† அதன் — அச்செயலினது.

‡ அதனால் — அச்செயலினால்.

¶ ஆண்டவழிச் செய்வது — அரசன் ஒருவனை யொருதொழிற்கு உரியவனாக ஏற்படுத்தியவிடத்து அவனது செயலைத் தினந்தோறும் ஆராய்ந்து வரவேண்டுமென்பது.

**பரி:—(இ-ள்.) ஒருவன் செல்வந் தொலைந்து வறியனாய வழியும் விடாது தம்மோடு அவனிடைப் பழமையை எடுத்துக்கொண்டாடும் இயல்புகள் சுற்றத்தார்மாட்டே உளவாவன, (எ-று).**

* *சிறப்பும்மை வறியனாயவழிப் பாராட்டப் படாமை விளக்கி நின்றது. பழைமை - பற்றறாக் காலத்துத் தமக்குச் செய்த உபகாரம், பிறரெல்லாம் அவன் பற்றற்றபொழுதே தாமும் அவனோடு பற்றறுவ ராகலின், ஏகாரந்தேற்றத்தின்கண் வந்தது. இதனாற் †சுற்றத்தது சிறப்புக் கூறப்பட்டது.*

**தெளி:—(இ-ள்.)** *பற்றற்ற கண்ணும் - (ஒருவன்) செல்வந் தொலைந்து தரித்திரனான விடத்தும், பழைமை - (விடாமல் தம்மோடு அவனிடத்துள்ள) பழைமையை, பாராட்டுதல் - எடுத்துக்கொண்டாடு மியல்புகள், சுற்றத்தார் கண்ணே - சுற்றத்தாரிடத்தே, உள - உளவாவனவாம், (எ-று).*

*பற்றற்ற கண்ணும் என்ற சிறப்பும்மை தரித்திரனானவிடத்து (தம்மோடு அவனிடத்துள்ள பழைமையைப்) பாராட்டுத லில்லாமையை விளக்கி நின்றது. பழைமை - (அவன்) செல்வ மொழியாத காலத்தில் தமக்குச் செய்த உபகாரம். (சுற்றத்தா ரல்லாத) மற்றவரெல்லாம் அவன் செல்வ மொழிந்தபொழுதே தாமும் அவனோடு சிநேகம் விட்டு நீங்குவாராதலால் 'சுற்றத்தார் கண்ணே' என்னும் ஏகாரம் (சுற்றத்தார் பழைமை பாராட்டுதலைத் தெளிவிக்கத்) தேற்றப் பொருளில் வந்தது. இதனால் சுற்றத்தினது சிறப்புச் சொல்லப்பட்டது.*

**(கூ-து.)** *ஒருவனது செல்வம் நீங்கியவிடத்தும் அவனை விடாதிருந்து கொண்டாடுதல் சுற்றத்தாரிடத்துண்டு என்பது.*

1. Even when a man's prosperity is all gone, relatives will act towards him with their ancient kindness.

---

522 உ. **விருப்பறாச் சுற்ற மியையி னருப்பறா
வாக்கம் பலவுந் தரும்.**

**பரி:—(இ-ள்.) அன்பறாத சுற்றம் ஒருவற்கெய்துமாயின் அஃது அவற்குக் ‡ கிளைத்தலறாத செல்வங்கள் பலவற்றையுங் கொடுக்கும்.**

---

* *இழிவு சிறப்பும்மை.*

† *"அற்ற குளத்தி லறுநீர்ப் பறவைபோல், உற்றுழித் தீர்வா ருறவல்லர், அக்குளத்தில், கொட்டியு மாம்பலு நெய்தலும் போலவே, ஒட்டி யுறுவா ருறவு" என்பது மூதுரை.*

‡ *கிளைத்தலறாத - மேலுமேலும் விருத்தியாத லொழியாத.*

* உட்பகையி னீக்குதற்கு 'விருப்பறுச்சுற்றம்' என்றும், †தானே வளர்க்கும் ஒருதலையாய செல்வத்தி னீக்குதற்கு 'அருப்பறுவாக்கம்' என்றும், ‡விசேடித்தார். ¶தொடைநோக்கி விகாரமாயிற்று. 'இயையின்' என்பது அதனது அருமை விளக்கி நின்றது. $ஆக்க மென்பது ஆகுபெயர். பலவுமென்றது §அங்கங்கள் ஆறனையும் நோக்கி. பலர் கூடி வளர்த்தலின் £அவை மேன்மேற் கிளைக்கு மென்பது கருத்து.

தெளி: - (இ-ள்.) விருப்பறு - அன்பு நீங்காத, சுற்றம் - சுற்ற மானது, இயையின் - (ஒருவனுக்குக்) கிடைக்குமாயின், (அச்சுற்ற மானது), அருப்பறு - கிளைத்தல் நீங்காத, ஆக்கம் பலவும் - செல்வங்கள் பலவற்றையும், தரும் - (அவனுக்குக்) கொடுக்கும், (எ-று).

உட்பகையினின்றும் நீக்குதற்கு 'விருப்பறுச் சுற்றம்' என்றும், தானே வளர்க்கும் உறுதியுடையதாய செல்வத்தினின்றும் நீக்குதற்கு 'அருப்பறு வாக்கம்' என்றும் அடை கொடுத்துச் சொல்லினர். அரும்பு என்பது தொடை நோக்கி அருப்பு என விகாரமாயிற்று. 'இயையின்' என்பது அச் சுற்றங் கிடைத்தலினது அருமையை விளக்கி நின்றது. ஆக்கம் - காரியவாகு பெயர். பலவு மென்றது அங்கங்கள் ஆறனையும் நோக்கியாம். சுற்றத்தார் பலர் கூடி வளர்த் தலால் அவை மேலுமேலும் கிளைக்குமென்பது கருத்து.

---

* உட்பகையாவது புறப்பகைக்கு இடமாக்கிக் கொடுத்து அப்புறப் பகையானது வெல்லு மளவும் உள்ளாய் நிற்கும் பகை. அஃதாவது வெளியே நட்பா யிருந்து உள்ளே பகை கொண்டிருப்ப தென்பதாம். இதனை நீதிநெறி விளக்க நூலார் "புறநட் டகம் வேர்ப்பார் நச்சுப் பகைமை" என்றனர்.

† "நூற்றுக்குமேல் ஊற்று" என்னும் பழமொழிப்படி வேறு செல்வங்களைப் பெருகச்செய்தற்கு உறுதியுடையதாயிருக்கும் செல்வத் தினின்றும் நீக்குதற்கு 'அருப்பறுவாக்கம்' என்று கூறப்பட்டது.

‡ சுற்றம் என்பது விருப்பறு என்னும் விசேடணத்தோடும், ஆக்கம் என்பது அருப்பறு என்னும் விசேடணத்தோடும் கூடிவந் தமையின், சுற்றம் ஆக்கம் என்னு மிவ்விரண்டும் முறையே விருப்பறு அருப்பறு என்னும் விசேடணங்களால் விசேடிக்கப்பட்டனவாயின.

¶ அரும்பு என்னும் முதனிலைத் தொழிற்பெயர் தொடைநோக்கி அருப்பு என விகாரப்பட்டு நின்றது. (அரும்பறு என்பது விருப்பறு என்பதற்கியைய அருப்பறு என்று தொடைநோக்கி விகாரப்பட்டது பல வடிகளிலேனும் பல சீர்களிலேனும் எழுத்துக்களொன்றி வருவது தொடையெனப்படும்.)

$ ஆக்கத்திற்கு (மேலும் மேலு முயர்தற்குக்) காரணமாய செல்வத்தை ஆக்கமென்றது காரியவாகு பெயராம்.

§ அங்கங்கள் (உறுப்புக்கள்) - அமைச்சு, நாடு, அரண், பொருள், படை, நட்பு.

£ அவை - செல்வங்கள்.

**(க. து.)** ஒருவனுக்கு அன்புள்ள சுற்றங் கிடைக்கு மாஞல், அஃதவனுக்குப் பல செல்வங்களையுந் தரும் என்பது.

2. If a man's relatives remain attached to him with unchanging love, it will be a source of ever-increasing wealth.

———

**ரு. அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்**
**கோடின்றி நீர்நிறைந் தற்று.**

**பரி:—(இ - ள்.) அச்சுற்றத்தோடு நெஞ்சு கலத்தல் இல்லாதவன் வாழ்க்கை *குளப்பரப்புக் கரையின்றி நீர்நிறைந்தாற்போலும், (எ-று).**

*சுற்றத்தோடென்பது †அதிகாரத்தான்வந்தது. நெஞ்சுகலப்-புத்தன் ‡ளளவும் அதனளவும் உசாவுதலான் வருவதாகலின், ¶ அளவளா என்பது ஆகுபெயர். வாழ்க்கை யென்றதூஉம் அதற்-கேதுவாய செல்வங்களை. § நிறைதலென்னும் இடத்து நிகழ் பொருளின் தொழில் இடத்தின்மே னின்றது. சுற்றமில்லாதான் செல்வங்கள் ‖தாங்குவார் இன்மையிற் புறந்துப்போ மென்பதாம்.*

தெளி.—(இ - ள்.) *அளவளாவில்லாதான் – (அச்சுற்றத்தோடு)* நெஞ்சு கலத்தலில்லாதவனது, வாழ்க்கை - வாழ்க்கையானது,

---

* *குளப்பரப்பு - குளத்தின் விரிவான இடம்.*

† *சுற்றந்தழால் என்னும்இவ்வதிகாரத்தால்.* ‡ *அளவு - யோக-க்ஷேமம். முன்பு கிடையாதபொருள் கிடைப்பது யோகம்; கிடைத்த பொருளைப் பரிபாலித்தல் க்ஷேமம்.*

¶ *அளவளாதல் (யோகக்ஷேமங்களின் எல்லையை விசாரித்தறிதல்) என்பது அளவளா என நின்றது. அளவளா என்பது முதனிலைத் தொழிற்பெயர். அளவளா என்பது அதன் காரியமான நெஞ்சு கலப்பை யுணர்த்துதலால் கருவியாகுபெயராம். (ஒருவர்க்கொருவர் யோகக்ஷேமங்களை விசாரித்தறிவதால் மனக்கலப்புண்டாகு மென்பது திரண்டபொருள்).*

§ *குளத்திலுள்ள நீரினது தொழிலான நிறைதலைக் குளத்தின் மேலேற்றிக் 'குளவளாக் கோடின்றி நீர்நிறைந்தற்று' என்று கூறினமையின், 'நிறைதலென்னும் இடத்து (குளத்து) நிகழ் (இருக்கும்) பொருளின் (நீரின்) தொழில் இடத்தின் (குளத்தின்) மேனின்றது' என்று கூறப்பட்டது. பிரயோக விவேகநூலார் "மருளறு காரணம்" என்னுஞ் செய்யுளினுரையில் "குளவளாக்-கோடின்றி நீர்நிறைந் தற்று, இந்தப்பானை நாஞழி யரிசி பொங்கும். இவை புலமென்னும் இடத்து நிகழ் பொருளின் தொழில் இடத்தின்-மேல் நின்றன" என்றனர்.*

‖ *தாங்குவாரின்மையின் - வெளியிற் போகாவண்ணம் விழிப்-போடு காப்பவ ரில்லாமையிஞல்.*

குளவளா-குளப்பரப்பானது, கோடின்றி - கரையில்லாமல், நீர்-நிறைந்தற்று - நீர்நிறைந்தாற்போலும், (எ – று).

சுற்றத்தோடு என்பது அதிகாரத்தால் வருவிக்கப்பட்டது. நெஞ்சுகலப்புத் தன்னளவும் அச்சுற்றத்தினளவும் விசாரித்தறிதலால் வருவதாகலின், அளவளா என்பது கருவியாகுபெயர். * வாழ்க்கையென்றதும் வாழ்க்கைக்குக்காரணமான செல்வங்களை. நிறைதல் என்னும் இடத்து நிகழ் பொருளான நீரினது தொழில் இடத்தின்மேல் நின்றது. சுற்றமில்லாதவனது செல்வங்கள் தாங்குவாரில்லாமையால் வெளியே போய்விடுமென்பதாம்.

(க - து.) சுற்றத்தாரோடு மனங்கலந்து வாழாதவனது செல்வம் பாதுகாப்பவரில்லாமையால் அழிந்துபோம் என்பது.

3. The wealth of one who does not mingle freely with his relatives, will be like the full waters of a spacious tank, that has no banks.

---

**ச. † சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்**
**பெற்றத்தாற் பெற்ற பயன்.**

பரி.—(இ - ள்.) செல்வம் பெற்றவதனுல் ஒருவன் பெற்ற பயனாவது தன் சுற்றத்தால் தான் சூழப்படும் வகை அதனைத் ‡ தழீஇ யொழுகுதல், (எ - று).

$ பெற்ற என்பதனுள் அகரமும் அதனுலென்பதனுள் அன்சாரியையும் தொடைநோக்கி விகாரத்தாற்றொக்கன. இவ்வொழுக்குப் பகையின்றி அரசாடற் கேதுவாகலின், இதனைச் செல்வத்திற்குப் 'பயன்' என்றார். இவை மூன்றுபாட்டானும் சுற்றந்தழால் செல்வத்திற் கேதுவும் அரணும் பயனுமா மென்பது கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்.) செல்வம் - செல்வத்தை, பெற்றத்தால் - பெற்ற அதனுல். பெற்றபயன் - (ஒருவன்) பெற்றபயனாவது. சுற்றத்தால் - (தனது) சுற்றத்தினுல், தான் சுற்றப்பட - தான் சூழப்படும் வகை, ஒழுகல் - (அச்சுற்றத்தைத் தழுவி) ஒழுகுதலாம், (எ - று).

---

* வாழ்க்கையென்பது வாழ்க்கைக்குக் காரண மாய செல்வங்களையுணர்த்துதலால் காரியவாகுபெயராம்.

† "சுற்றத்திற் கழகு சூழ விருத்தல்" என்பது கொன்றைவேந்தன்.

‡ தழீ இயொழுகுதல் - உபசரித்து நடத்தல்.

$ பெற்றத்தால் என்பதனைப் பெற்ற அதனுல் எனப்பிரித்துப் 'பெற்ற என்பதனுள் அகரமும் அதனுல் என்பதனுள் அன்சாரியையும் தொடைநோக்கி(செய்யுள்) விகாரத்தாற்றொக்கன' என்று கூறப்பட்டது

பெற்றவதனுல் என்பது சுற்றத்தால் என்னும் தொடைநோக்கிச் செய்யுள் விகாரத்தால் பெற்றத்தால் எனவந்தது. (சுற்றத்தாற் சுற்றப்பட வொழுகும்) இவ்வொழுக்கம் (அரசன்) பகையில்லாமல் அரசாளுதற்குக் காரணமாகலால், இவ்வொழுக்கத்தினைச் செல்வத்திற்குப் 'பயன்' என்முர். இவை மூன்று பாட்டாலும் சுற்றத்தைத் தழுவுதல் முறையே செல்வத்திற்குக் காரணமும், அரணும், பயனும் ஆமென்பது சொல்லப்பட்டது அரண் – பாதுகாப்பு.

(க—து.) ஒருவன்தான் அடைந்த செல்வத்தால் அடையும் பயன் தன் சுற்றத்தாரோடு மனங்கலந்து வாழ்தலே யாம்.

4. To live surrounded by relatives, is the advantage to be derived from the acquisition of wealth.

———

## ரு. கொடுத்தலு மின்சொலு மாற்றி னடுக்கிய
## சுற்றத்தாற் சுற்றப் படும்.

பரி:—(இ – ள்.) ஒருவன் சுற்றத்திற்கு வேண்டுவன கொடுத்தலையும் இன்சொற் சொல்லுதலையும் வல்லனுயின் தம்மிற் $ றொடர்ந்த பலவகைச் சுற்றத்தானே சூழப்படும், (எ–று).

† இரண்டும் ¶ அளவறிந்தாற்றுதல் அரிதென்பது தோன்ற 'ஆற்றின்' என்முர். தம்மிற்றொடர்தலாவது சுற்றத்தது சுற்றமும் அதனது சுற்றமுமாய் ‡ அவற்முற் பிணிப்புண்டுவருதல். இவ் வுபாயங்களை வடநூலார் தானமுஞ் சாமமுமென்ப.

தெளி:—(இ – ள்.) (ஒருவன் சுற்றத்திற்கு) கொடுத்தலும் – (வேண்டுவனவற்றைக்) கொடுத்தலையும், இன்சொலும் – இன்சொற் சொல்லுதலையும், ஆற்றின் – செய்ய வல்லவனுயின், அடுக்கிய – தம்மில் தொடர்ந்த, சுற்றத்தால் – (பலவகைச்) சுற்றத்தாலே, சுற்றப்படும் – சூழப்படுவான், (எ - று).

இரண்டும் அளவறிந்து செய்தல் அரிதென்பது தோன்ற 'ஆற்றின்' என்முர். தம்மில் தொடர்தலாவது உறவினது உறவும் அதனது உறவும் ஆய் அவ்வுறவுகளால் சம்பந்தப்பட்டுவருதல். கொடுத்தலு மின்சொலுமாகிய இவ்வுபாயங்களை வடநூலார் தானமும் சாமமும் என்பர். கொடுத்தல் - தானமாம்; இன்சொற் சொல்லுதல் – சாமமாம்.

---

$ தொடர்தல் – உறவின் முறையாகத் தொடர்ந்திருத்தல்.

† இரண்டும் – சுற்றத்திற்கு வேண்டுவன கொடுத்தலும் இன்சொற் சொல்லுதலும்.

¶ அளவறிந்தாற்றுதல் - (செல்வ முதலியவற்றில்) தனதளவையும் சுற்றத்தினளவையும் தெரிந்து அவ்வளவிற்கேற்பச் செய்தல்.

‡ அவற்முற் பிணிப்புண்டு – சுற்றமும் அதனது சுற்றமும் அதனது சுற்றமுமாய அவற்முல் நெருங்கச் சூழப்பட்டு.

(க - து.) சுற்றத்தாரிடத்து ஈதலையும் இன்சொற் சொல்லு தலையும் உடையவன் அச்சுற்றத்தாரோடு என்றும் பிரிவின்றி வாழ்வன் என்பது.

5. He will be surrounded by numerous relatives who manifests generosity and affability.

**சு. பெருங்கொடையான் பேணான் வெகுளி யவனின்**
**மருங்குடையார் மாநிலத் தில்.**

பரி:—(இ-ள்.) ஒருவன் மிக்ககொடையை யுடையனுமாய் வெகுளியை விரும்பானும் ஆயின் அவன்போலக் கிளையுடையார் இவ்வுலகத்தில்லை. (எ-று).

மிக்ககொடை – ஒன்றுனும் வறுமை யெய்தாமற் கொடுத்தல், விரும்பாமை §இஃது அரசற்கு வேண்டுவதொன்றென்று அளவிறந்து செய்யாமை.

தெளி:—(இ - ள்.) (ஒருவன்) பெருங்கொடையான் – மிகுந்த கொடையை யுடையவனுமாய், வெகுளி - கோபத்தை, பேணான் - விரும்பாதவனும், (ஆனால்), அவனின் - அவனைப்போல, மருங் குடையார் - சுற்ற முடையவர், மாநிலத்து - (இப்)பெரிய உலகத்தில், இல் – இல்லை, (எ-று).

மிகுந்த கொடை - (சுற்றத்தார்) ஒன்றுலும் வறுமை யடையா-வாறு (அவர்க்கு வேண்டுவனவற்றைக்) கொடுத்தல். கோபத்தை விரும்பாமை - இஃது (கோபம்) அரசனுக்கு (அவசியமாய்) வேண்டுவ தொன்றென்று (கொண்டு அதனை) அளவுகடந்து செய்யாமை.

(க – து.) வரையாது கொடுத்தலையும் கோபத்தை யடக்கு தலையும் உடையவனைப்போலச் சுற்றத்தாரை யுடையவர் உலகத்தில் ஒருவருமில்லை என்பது.

6. No one, in all the world, will have so many relatives about him, as he who makes large gifts, and does not give way to anger.

---

§ இஃதாதற்கு (இக்கோபம் செல்வம் விருத்தி யடைவதற்கு) என்றும் பாடமுண்டு.

'இஃது அரசற்கு வேண்டுவ தொன்றென்று அளவிறந்து செய்யாமை' என்றதனால் அரசன் கோபத்தையளவறிந்து செய்ய வேண்டுமென்பது பெறப்படுவதாம்; படவே, கோபம் பற்றற வொழிக்குங் குற்ற மன்றென்ருயிற்று. குற்றங்கடிதல் அதிகாரம் பத்தாவது குறளின் விசேட வுரையில் "காமம் வெகுளி உவகை யென்பன முற்றக்கடியுங் குற்றமன்மையின்" என்றும், பேதைமை யதிகாரத்தின் அவதாரிகையில் "அப்பகைதான் முற்றக்கடியுங் குற்றமன்மையி னுளவாய வெகுளியானுங் காமத்தானும் வருவதாம்" என்றும் கூறியிருத்தலுமிங்குக் கவனிக்கத்தக்கதாம்.

எ. † காக்கை கரவா கரைந்துண்ணு மாக்கமு
மன்னநீ ரார்க்கே யுள.

பரி :—(இ-ள்.) காக்கைகள் தமக்கிரையாயின கண்டவழி மறையாது இனத்தை யழைத்து அதனேடுங்கூட வுண்ணு நிற்கும் ; ‡சுற்றத்தான் எய்தும் ஆக்கங்களும் அப்பெற்றித்தாய இயல்பினை யுடையார்க்கே உளவாவன, (எ-று).

அவ்வாக்கங்களாவன : பகையின்மையும் பெருஞ்செல்வமுடைமையும் *முதலாயின. எச்சவும்மையான் அறமும் இன்பமுமே யன்றிப் பொருளும் எய்துமென்பது §பெறுதும். அப்பெற்றித்தாய வியல்பென்றது தாம் நுகர்வனவெல்லாம் அவரும் நுகருமாறு வைத்தல்.

தெளி :—(இ-ள்.) காக்கை-காகங்கள், (தமக்கு இரையாயுள்ள வற்றைக்கண்ட விடத்து), கரவா-மறையாது, கரைந்து - (தம் மினத்தை) அழைத்து, உண்ணும் - (அவ்வினத்தோடுங்கூட) உண்ணு நிற்கும், ஆக்கமும் - (சுற்றத்தினலடையும்) பெருக்கங்களும், அன்ன நீரார்க்கே - அத்தன்மையதாய இயல்பினையுடையவர்க்கே, உள - உளவாகும், (எ-று).

அப்பெருக்கங்களாவன : பகையில்லாமையும்பெருஞ்செல்வ முடைமையும் முதலானவை. ஆக்கமும் என்ற இறந்தது தழுவியஎச்ச வும்மையால் அறமும் இன்பமுமே யல்லாமல் பொருளும் வந்தடையு மென்பது பெறப்படும். அத்தன்மையதாய வியல்பென்றது தாம் அனுபவிப்பன வெல்லாம் அச்சுற்றத்தாரும் அனுபவிக்கும்படி வைத்தல்.

(க - து.) தாம் அனுபவித்தற் குரியவற்றைச் சுற்றத்தாரோடு கூடியனுபவிப்பவர் பகையின்றிப் பெருஞ்செல்வராக வாழ்வார் என்பது.

7. The crows do not conceal their prey, but will call out for others to share with them while they eat it; wealth will be with those who show a similar disposition towards their relatives.

---

அ. பொதுநோக் கான் வேந்தன் வரிசையா நோக்கி
னதுநோக்கி வாழ்வார் பலர்.

பரி :—(இ-ள்.) எல்லாரையும் ஒருதன்மையராக நோக்காது அரசன் தத்தந் தகுதிக்கேற்ப ¶ நோக்குமாயின், அச்சிறப்புநோக்கி அவனை விடாது வாழுஞ் சுற்றத்தார் பலர், (எ - று).

---

† "காக முறவு கலந்துண்ணக் கண்டீர்" என்றார் தாயுமானவர்.

‡ சுற்றத்தான் எய்தும் ஆக்கங்கள் - உறவின் முறையாரால் அடையும் பேறுகள்.

* முதலாயின என்றதனுல் கள்வரால் நலிவின்மை, வினை செய்வாரால் கெடுதியின்மை முதலியவற்றையுங் கொள்க. § பெறுதும்-பெறுவோம். ¶ நோக்குமாயின் - உபசரித்து நடப்பானுயின்.

† உயர்ந்தார் நீங்குதல் நோக்கிப் பொதுநோக்கை விலக்கி, எல்லாரும் விடா தொழுகுதல் நோக்கி வரிசைநோக்கை விதித்தார். இந்நான்கு பாட்டானுஞ் சுற்றந் தழுவும் உபாயங் கூறப்பட்டது.

தெளி :—(இ - ள்.) வேந்தன்-அரசன், பொதுநோக்கான் - எல்லாரையும் ஒரு தன்மையராக நோக்காமல், வரிசையா - (அவரவர்) தகுதிக்கு ஏற்ப, நோக்கின் - நோக்குவானாயின், அது நோக்கி—அச்சிறப்பு நோக்கி, வாழ்வார் பலர்-(அவ்வரசனை விடாது) வாழுஞ் சுற்றத்தார் பலர், (எ - று).

உயர்ந்தார் நீங்குதலைக் குறித்துப் பொதுநோக்கை விலக்கி, எல்லாரும் விடாதொழுகுதலைக் குறித்து 'வரிசையாநோக்கி' என வரிசை நோக்கை விதித்தார். இவை நான்கு பாட்டாலும் சுற்றத்தைத்தழுவும் உபாயம் சொல்லப்பட்டது. வரிசை-கிரமம்.

(க - து.) அரசன் பொதுநோக்கை விட்டுச் சிறப்பு நோக்கோடு ஒழுகுவானாயின், அவனைச் சுற்றத்தார் விடாதிருப்பார்.

8. Many relatives will live near a king, when they observe that he does not look on all alike, but that he looks on each man according to his merit.

---

௯. **தமராகித் தற்றுறந்தார் சுற்ற மமராமைக்**
**காரண மின்றி வரும்.**

**பரி :— (இ - ள்.) முன்தமராய் வைத்துத் தன்னோடு ‡அமராது யாதானுமொரு காரணத்தால் தன்னைப் பிரிந்துபோயவர் பின்னும் வந்து சுற்றமாதல் அவ்வமராமைக் காரணம் தன்மாட் டில்லையாகத்தானே யுளதாம், (எ - று).**

அமராமைக் காரண மின்றி' என்றதனால், முன் *அஃது

† அரசன் உயர்ந்தா ரிழிந்தாரென்று கருதாது யாவரையும் ஒரு தன்மையராகக் கருதி நடந்தால், அந்நடக்கையை நோக்கி உயர்ந்தார் தம்மை யிழிவுபடுத்தியதாகவெண்ணி நீங்கிவிடுவது பற்றி அரசனுக்குப் பொதுநோக்குக் கூடாதென்றுவிலக்கிச் சிறப்பு நோக்கு விதிக்கப் பட்டது. சிறப்பு நோக்காவது உயர்ந்தா ரிழிந்தா ரென்றறிந்து அவரவரது தகுதிக்கேற்ற வண்ணம் நடத்தல். மலையமான் திருமுடிக் காரி யென்னுமரசனை நோக்கிக் கபிலர் என்னும் புலவர் (புறநானூற்றில்) ''ஒருதிசை யொருவனை யுள்ளி நாற்றிசைப், பலரும் வருவர் பரிசின் மாக்கள், வரிசை யறிதலோ வரிதே பெரிது, மீத லெளிதே மாவண் டோன்றல், அதுநற் கறிந்தனை யாயிற், பொதுநோக் கொழிமதி புலவர் மாட்டே'' என்று கூறியது மிங்கறியத்தக்கதாம்.

‡ அமராது - மனங்கலவாது.

* அஃது - அமராமைக் காரணம் (மனங்கலவாமைக்குரிய ஏது).

§ உண்டாய்த் துறத்தல்பெற்றும். அஃதாவது அரசன் தான் ‡நெறி கெட வொழுகல் *வெறுப்பன செய்தலென்றிவை $முதலியவற்றான் வருவது. ¶ஆக்கம் வருவிக்கப்பட்டது. ()இயற்கையாகவே அன்புடையராய சுற்றத்தார்க்குச் ||செயற்கையான் வந்த நீக்கம் அதனை ஒழிய ஒழியும்; ஒழிந்தால் அவர்க்கன்பு செய்துகொள்ள வேண்டாம்; பழைய இயல்பாய் நிற்குமென்பார் 'வரும்' என்றார்.

தெளி :—(இ - ள்.) தமராகி - (முன்னே) சுற்றத்தாராயிருந்து, தற்றுறந்தார் - (தன்னோடு பொருந்தாமல் யாதாயினும் ஒரு காரணத்தால்) தன்னைப் பிரிந்துபோனவர், சுற்றம் - (பின்னும்வந்து) சுற்றத்தார் (ஆகுதல்), அமராமைக்காரணம் - அப்பொருந்தாமை யின் காரணம், இன்றி - (தன்னிடத்து) இல்லையாக, வரும் - (தானே) உண்டாகும், (எ — று).

'அமராமைக் காரணமின்றி' என்று கூறினமையால், முன்பு அஃதிருந்து நீங்குதல் பெறப்படும். அவ்வமராமைக் காரணமாவது அரசன் தான் வழிதப்பி நடத்தல் வெறுப்பனவற்றைச் செய்தலென்ற இவை முதலியவற்றால் வருவது. ஆகுதல் என்னும் ஆக்கச்சொல் வருவிக்கப்பட்டது. இயற்கையாகவே அன்புடையராகிய சுற்றத் தார்க்குச் செயற்கையால் வந்த பிரிவு அச்செயற்கையை ஒழிய ஒழியும்; (அப்பிரிவு) ஒழிந்துபோனால் அச்சுற்றத்தார்க்கு அன்பு செய்துகொள்ள வேண்டாம்; (அன்பு) பழைய இயல்பாய் நிற்கு மென்பார் 'வரும்' என்றார்.

(க - து.) முன் சுற்றத்தாராயிருந்து பிரிந்தவர் பின்னும் சுற்றத் தாராகுதல் அப்பிரிவின் காரணம் ஒழியத்தானே யுண்டாம்.

---

§ உண்டாய்த் துறத்தல் - தன்னிடத்து உண்டாயிருத்தலால் சுற்றத்தார் தன்னை விட்டு நீங்கிப்போகுதல்

‡ நெறிகெட வொழுகல் - அறநூல், பொருள்நூல், நீதிநூல் கூறியவாறு நடவாது தான் விரும்பியவாறு நடத்தல்.

* வெறுப்பன செய்தல் - அறிவுடையாரியாவரும் வெறுக்கத்தக்க காரியங்களைச் செய்தல்.

$ முதலிய என்றதனால் பற்றறவொழிக்கும் குற்றமல்லாத காமம் வெகுளி யுவகைகளை அளவு கடந்து செய்தல், தீயகாரியங்கள் செய் வதைக் கண்டால் கண்டித்துப் புத்திசொல்லும் அமைச்சர் புரோகிதர்களை யாதரியாமை முதலியவற்றையுங் கொள்க.

¶ சுற்றம் என்பதனிறுதியில் ஆதல் என்னும் ஆக்கச்சொல் வருவித்துரைக்கப்பட்டது. () இயற்கையாகவே - சுபாவமாகவே.

|| நெறிகெடவொழுகல் வெறுப்பன செய்தல் முதலிய செயற்கை யால் வந்த பிரிவு அதனை (நெறிகெட வொழுகல் முதலிய செயற்கையை) நீங்க நீங்கும்; நீங்கினால் அவர்க்கு (சுற்றத்தார்க்கு) அரசன் அன்புசெய்து சுற்றமாகக் கொள்ளவேண்டாம்; அச்சுற்றத் தார் பழைய சுபாவமாகவே அன்புடையராயிருப்பார் என்பதாம்.

9. Those who have been friends and have afterwards forsaken him will return and join themselves to him, when the cause of disagreement is taken away.

---

## கo. † உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்த னிழைத்திருந் தெண்ணிக் கொளல்.

பரி :—(இ - ள்.) காரணமின்றித் தன்னிடத்துநின்றும் பிரிந்து போய்ப் ‡ பின்காரணத்தான் வந்த சுற்றத்தானை அரசன் அக்காரணத்தைச் *செய்து வைத்து ஆராய்ந்து தழீஇக்கொள்க, (எ - று).

$ வாளா 'உழைப்பிரிந்து' என்றமையின், பிரிதற்குக் காரணமின்மை பெற்றும். ¶ வருதற்காரணத்தைச் செய்யாதவழிப் பின்னும் பிரிந்து போய்ப் பகையோடு கூடுமாகலின் 'இழைத்திருந்து' என்றும், () அன்பின்றிப் போய்ப் பின்னுங் காரணத்தான் வந்தமையின் 'எண்ணிக்கொளல்' என்றுங் கூறினர். பிரிந்துபோய சுற்றத்தாருள் o தீமை செய்யப்போய் ||அதனை ஒழியவருவானும் ₹அது செய்யாமற் போய்ப் பின் §நன்மை செய்யவருவானும் தழுவப்படுமாகலின் []தழுவுமாறு முறையே இவ்விரண்டு பாட்டானுங் கூறப்பட்டது.

தெளி :—(இ - ள்) உழை - (தன்) இடத்தினின்றும், பிரிந்து - (காரணமில்லாமற்) பிரிந்துபோய், காரணத்தின் - (பின்பு) காரணத்தினால், வந்தானை - வந்தசுற்றத்தானை, வேந்தன் - அரசன், இழைத்திருந்து - (அக்காரணத்தைச்) செய்துவைத்து, எண்ணி - ஆராய்ந்து, கொளல் - (தழுவிக்) கொள்ளக்கடவன், (எ - று).

சும்மா 'உழைப்பிரிந்து' என்று கூறினமையால், பிரிதற்குக் காரணமில்லாமை பெறப்பட்டது. வருதற்குக்காரணத்தைச் செய்யாதவிடத்துப் பின்னும் பிரிந்து போய்ப் பகைவரோடு கூடுவானாதலால் 'இழைத்திருந்து' என்றும், அன்பில்லாமற் போய்ப் பின்னுங் காரணத்தால் வந்தமையால் 'எண்ணிக்கொளல்' என்றும் சொல்லினர். பிரிந்துபோன சுற்றத்தாருள் தீமை

---

† உழை - இடம். ‡ பின் காரணத்தான் - பின்பொரு நிமித்தத்தால்.

* செய்து வைத்து – பூர்த்திசெய்து (நிறைவேற்றி).

$ வாளா - அடை கொடுக்காது சும்மா.

¶ வருதற் காரணத்தைச் செய்யாதவழி - காரணமின்றித் தன்னிடத்தினின்றும் பிரிந்துபோனவன் தன்னிடத்து வருவதற்குரிய காரணத்தைச் செய்யாதவிடத்து.

() அன்பின்றிப்போய்-தன்னிடத்துஅன்பில்லாது பிரிந்துசென்று.

o தீமைசெய்ய - அரசனுகியதான் தீயகாரியங்களைச் செய்ய.

|| அதனை - தீய காரியங்களை. ₹ அது - தீமை.

§ நன்மைசெய்ய - நன்மையான காரியங்களைச் செய்வதனுல்.

[] தழுவுமாறு - அணைக்கும் வகை.

செய்யப்போய் அதனை விடவருவானும், அது செய்யாமற்போய்ப் பின்பு நன்மைசெய்ய வருவானும் தழுவப்படுமாதலால், (சுற்றத்தாரைத்) தழுவுமாறு முறையே இவ்விரண்டு பாட்டாலும் சொல்லப் பட்டது.

(க - து.) காரணமில்லாமற் பிரிந்துபோய்ப் பின்பொரு காரணம் பற்றி வந்து கூடியவனை அரசன் ஆராய்ந்து கொள்ளக் கடவனென்பது.

10. When one may have left him, and for some cause has returned, let the king fulfil the object for which he has come back and thoughtfully receive him again.

---

## பதினாறும் அதிகாரம்

## 54. * பொச்சாவாமை—Against Forgetfulness

**பரி:—அஃதாவது †உருவுந் திருவும் ‡ஆற்றலும் ¶முதலாயவற்றுள் மகிழ்ந்து தற்காத்தலினும் பகையழித்தன் §முதலிய காரியங்களினும் சோர்தலைச் செய்யாமை. மேற்சொல்லிய சுற்றத்தாராற் பயனுள்ளது இச்சோர்வில்வழி யாகலின், இது சுற்றந்தழாலின்பின் வைக்கப்பட்டது.**

---

* பொச்சாப்பு - மறவி. பொச்சாவாமை - மறவாமை. பொச்சாப்பென்பதும் மறவியென்பதும் ஒரு பொருட்கிளவிகளாமென்பது "வழுக்கொடு மறவி புன்மை மறலொடு பொல்லாங் கேகீழ், இழுக்கொடு சோர்வு பொச்சாப் பிகழ்ச்சியு மறத்த வின்பேர்" என்று சூடாமணி நிகண்டு கூறுவதால் நன்கு விளங்கும். நன்னூலார் பொச்சாப்பு வேறு, மறவிவேறு என்று கொண்டு, உரியியலின் "அறிவருளாசை" என்னுஞ் சூத்திரத்தில் "பொச்சாப் பூக்க மறமத, மறவி" என்று கூறுகின்றனர். நச்சினார்க்கினியார் "ஆங்கவையொருபால்" என்னுந் தொல்காப்பியம் மெய்ப் பாட்டியற் சூத்திரவுரையில் "பொச்சாப்பென்பது அற்றப்படுதல்; அஃதாவது பாதுகாத்துச் செல்கின்ற பொருட்கண் யாதானுமோ ரிகழ்ச்சியான் இடையறவுபடுதல்" என்று கூறியிருக்கின்றனர்.

† "குலமு முருவுங் குணமுந் திருவு, நலவுமுயர் கல்வி நயமும்- வலமுஞ், செருக்கைவிளைக் கின்றனவிச் செம்மற்கு நாளுந், திருக் கறுநன் மாண்பிற் செறிந்து" என்னுஞ்செய்யு ளிங்குக் கவனித்தற் குரியதாம். உருவு - வடிவழகு

‡ ஆற்றல் - அறிவு, ஆண்மை, பொருள்படை யென விருவகைத் தாய பெருமை.

¶ முதலாய என்றதனுல் நாடு, அரண் முதலியவற்றையுங் கொள்க.

§ முதலிய என்றதனுல் தனது சேனை பகைவர் வசமாகாவாறு செய்தல், அமைச்சர் புரோகிதர்களோடு கலந்தாலோசித்தல் முதலிய வற்றையுங் கொள்க.

தெளி:—அஃதாவது அழகும் செல்வமும் ஆற்றலும் முதலாயவற்றால் மகிழ்ந்து தன்னைக் காத்துக்கொள்ளுதலினும் பகைவரையழித்தல் முதலிய காரியங்களினும் மறத்தலைச் செய்யாமையாம். முற்கூறிய சுற்றத்தாரால் பயனுள்ளது இம்மறதி யில்லாதவிடத்தாகலால், இது (பொச்சாவாமை) சுற்றந்தழாலின்பின் வைக்கப்பட்டது.

**க. இறந்த வெகுளியிற் றீதே சிறந்த**
**வுவகை மகிழ்ச்சியிற் சோர்வு.**

**பரி:—(இ-ள்.) * மிக்க வுவகைக் களிப்பான் வரும் மறவி அரசனுக்கு அளவிறந்த வெகுளியினுந் தீது, (எ-று).**

$மிக்கவுவகை-பெருஞ்செல்வம், ‡பேரின்பம், ¶பெருமிதமென்றிவற்றான்வருவது. oஅளவு பகைவரை யடர்த்தற்கும் கொடியோரை யொறுத்தற்கும் வேண்டுவது இறந்தவெகுளி ஒரோவழிப் பகைவரையுங் கொல்லும்; § இஃது அன்னதன்றித் தன்னையே கோறலின் அதனினுந் தீதாயிற்று.

தெளி:—(இ - ள்.) சிறந்த வுவகைமகிழ்ச்சியின் - பெருஞ்சந்தோஷக் களிப்பால், (வரும்), சோர்வு-மறதியானது, இறந்த வெகுளியின் - அளவு கடந்த கோபத்திலும், தீது - (அரசனுக்குத்) தீயதாம். (எ-று).

பெருஞ்சந்தோஷம் - பெருஞ்செல்வம், பேரின்பம், பெருமிதம் என்ற இவற்றால் வருவது. அளவு பகைவரை வெல்லுதற்கும் கொடியோரைத் தண்டித்தற்கும் வேண்டுவது அளவுகடந்தகோபம் ஒரோவிடத்துப் பகைவரையும் கொல்லும்; இஃது அத்தன்மையதல்லாமல் தன்னையே கொல்லுதலால் அதனிலும் தீயதாயிற்று.

(க - து.) அரசனுக்கு மிகுந்த வுவகைக்களிப்பால் வரும் மறதியானது அளவு கடந்த கோபத்திலுந் தீயதாம்.

---

* மிக்க உவகைக்களிப்பு - பெருஞ்சந்தோஷத்தா லுண்டாகும் மதிமயக்கம். ' உள்ளக்களித்தலும்'' என்னுங் குறளின் விசேடவுரையில் பரிமேலழகர் களித்தல் - உணர்வழியாதது ; மகிழ்தல் - அஃதழிந்தது என்று கூறியிருக்கின்றனர்.

$ மிக்கவுவகை - அளவுகடந்த மகிழ்ச்சி. ‡ பேரின்பம்-மிகுசுகம்.

¶ பெருமிதம் - படை, அரண் முதலியன வாய்ப்பா யிருக்கின்றன வென்னுங் கர்வம் o அளவு-கோபத்திற்கு அளவு.

§ இஃது (மிக்கவுவகைக் களிப்பான் வரும் மறவி) அன்னதன்றி (அளவுகடந்த கோபம் ஒரோவிடத்துப் பகைவரையுங் கொல்லுவது போலாகாமல்) தன்னையே கொல்லுதலால் அதனிலும் (அளவுகடந்த கோபத்திலும்) கொடியதாயிற்று. [அளவுகடந்த கோபம் தன்னையும் ஒரோவிடத்துப் பகைவரையும் கொல்லும்; அளவுகடந்த வுவகைக் களிப்பால்வரும் மறதியோ தன்னையே கொல்லும்; ஆதலால் அளவு கடந்த கோபத்திலும் அளவுகடந்த வுவகைக்களிப்பால் வரும் மறதி மிகக்கொடியதாமென்க.]

1. More evil than excessive anger, is the thoughtlessness which springs from the intoxication of great joy.

---

உ. **பொச்சாப்புக் கொல்லும் புகழை யறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றுங்கு.**

**பரி :—(இ - ள்.)** ஒருவன் புகழினை அவன் மறவி கெடுக்கும்; *அறிவினை நிச்ச நிரப்புக் கெடுக்குமாறு போல, (எ - று).

*நிச்ச நிரப்பு - நாள்தோறும் இரவான் வருந்தித் தன் வயிறு நிறைத்தல். §அஃது அறிவுடையான்கணுண்டாயின் அவற்கு ¶இளிவரவானும் பாவத்தானும் எள்ளற்பாட்டினை விளைத்து அவன் ‡நன்குமதிப்பினை அழிக்கும்; அதுபோல மறவியும் புகழுடையான் கணுண்டாயின் அவற்குத் தற்காவாமையானும் காரியக் கேட்டானும் எள்ளற்பாட்டினை விளைத்து அவன் நன்குமதிப்பினை அழிக்குமென்பதாயிற்று. இவை யிரண்டு பாட்டானும் பொச்சாப்பினது குற்றங் கூறப்பட்டது.*

**தெளி :—(இ - ள்)** *நிச்சநிரப்பு - நித்திய வறுமையானது, அறிவினை - அறிவை, கொன்றுங்கு - கெடுக்கும் விதம் போல, புகழை - (ஒருவனது) கீர்த்தியை, பொச்சாப்பு - (அவன்) மறதியானது, கொல்லும் - கெடுக்கும், (எ-று).*

*நித்திய வறுமை - தினந்தோறும் யாசகத்தால் வருந்தித் தன் வயிற்றை நிறைத்தல். அந்நித்திய வறுமை அறிவுடையானிடத்து உண்டாயின் அவனுக்கு இளிவரவாலும் பாவத்தாலும் இகழப்படுதலை உண்டாக்கி அவனது நன்கு மதிப்பை அழிக்கும்; அதுபோல மறதியும் புகழுடையவனிடத்து உண்டாயின் அவனுக்குத் தன்னைக் காத்துக்கொள்ளாமையாலும் காரியக் கெடுதியாலும் இகழப்படுதலை உண்டாக்கி அவனது நன்குமதிப்பை அழிக்குமென்பதாயிற்று. இவ்விரண்டு பாட்டாலும் மறவியினது குற்றம் சொல்லப்பட்டது*

**(க - து.)** *ஒருவனது கீர்த்தியைக் கெடுப்பது அவனது மறதியேயாம் என்பது.*

2. Forgetfulness will destroy fame, even as constant poverty destroys knowledge.

---

* *தரித்திரம் அறிவினைக் கெடுக்குமென்பது "நீர்மையேயன்றி நிரம்ப வெழுத்ததங், கூர்மையு மெல்லா மொருங்கிழப்பர் – கூர்மையின், முல்லை யலைக்கு மெயிற்றாய் நிரப்பென்னும் அல்லலடையப்பட்டார்" என்று நாலடியார் கூறுவதாலு மறிதற்பாற்றும்.*

§ *அஃது - நிச்ச நிரப்பு நிரம்புதல் என்னும் தொழிற் பெயரின் விகாரமாய நிரப்பு என்னும் முதனிலைத் தொழிற்பெயர் எதிர்மறையிலக்கணையால் நிரம்பாமை (தரித்திரம்) என்னும் பொருளை புணர்த்தி நின்றது.*

¶ இளிவரவு - இழிவு (அவமானம்).

‡ நன்கு மதிப்பு - கௌரவம்.

**௩. பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை யதுவுலகத்**
**தெப்பானூ லோர்க்குந் துணிவு.**

பரி :—(இ - ள்.) பொச்சாந் தொழுகுவார்க்குப் புகழுடைமையில்லை; *அவ்வின்மை ‖இந்நீதிநூ லுடையார்க்கே யன்றி உலகத்து எவ்வகைப் பட்ட நூலுடையார்க்கும் ஒப்ப முடிந்தது, (எ - று).

*அரசர்க்கே யன்றி $அறமுதலிய நான்கினும் முயல்வார் யாவர்க்கும் §அவை கைகூடாமையின் புகழில்லை என்பது தோன்ற "எப்பானூலோர்க்கும் துணிவு" என்றார்.*

தெளி :—(இ - ள்.) *புகழ்மை - புகழுடையவராயிருத்தல், பொச்சாப்பார்க்கு - மறந்து நடப்பவர்க்கு, இல்லை - , அது - அவ்வில்லாமையானது, (இந்நீதிநூலுடையார்க்கே யல்லாமல்) உலகத்து - உலகத்தில், எப்பானூலோர்க்கும் - எப்படிப்பட்ட நூலுடையவர்க்கும், துணிவு - ஒப்பமுடிந்தது, (எ-று).*

*அரசருக்கேயல்லாமல் அறமுதலாகிய நான்கிலும் முயல்பவர் யாவர்க்கும் அவை கைகூடாமையினால் புகழில்லை என்பது தோன்ற 'எப்பானூ லோர்க்குந் துணிவு' என்றார். துணிவு - நிச்சயம்.*

(க - து.) *புகழுடையவராயிருத்தல் மறதியுடையார்க்கில்லை.*

3. The thoughtless will never acquire fame; this is the clear decision of all the books in the world.

---

**௪. அச்ச முடையார்க் கரணில்லை யாங்கில்லை**
**பொச்சாப் புடையார்க்கு நன்கு.**

பரி :—(இ - ள்.) காடு மலை ¶முதலிய அரண்களுள்ளே நிற்பினும் மனத்தின்கண் அச்சமுடையார்க்கு ‡அவற்றாற் பயனில்லை; அதுபோலச் செல்வமெல்லாம் உடையராயினும் மனத்தின்கண் மறவியை உடையார்க்கு அவற்றாற் பயனில்லை. (எ - று)

*[] நன்மைக்கேதுவாகலின் 'நன்கு' என்றார். அச்சமுடையார் நின்ற அரணழியுமாறு போல மறவியுடையாருடைய செல்வங்களும் அழியுமென்பதாயிற்று.*

---

* *அவ்வின்மை - புகழுடைமையில்லாமை.*

‖ *'பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை' என்னும் நீதிநூலுடைய-வர்க்கேயல்லாமல்.*

$ *அறமுதலிய நான்கு - தருமார்த்த காமமோட்சம்.*

§ *அவை - அறமுதலாகிய நான்கும்.*

¶ *முதலிய என்றமையின், மதிலும் கடலும் கொள்க.*

‡ *அவற்றால் - அவ்வரண்(பாதுகாவல்)களால்.*

*[]நன்மைக்கேதுவாய செல்வத்தை நன்கு என்றது காரியவாகு பெயராம்.*

தெளி:—(இ-ள்.) அரண் – (காடு மலை முதலிய) அரண்களுள்ளே, (இருந்தாலும்), அச்சமுடையார்க்கு – (மனத்தில்) அச்சத்தையுடையவர்களுக்கு, இல்லை – (அவ்வரண்களால் பயன்) இல்லை, ஆங்கு – அதுபோல, நன்கு – செல்வமெல்லாம், (உடையவராயிருந்தாலும்), பொச்சாப்புடையார்க்கு – (மனத்தில்) மறதியையுடையவர்க்கு, இல்லை – (அச் செல்வங்களால் பயன்) இல்லை, (எ-று).

செல்வம் நன்மைக்குக் காரணமாயிருத்தலால் அதனை 'நன்கு' என்றார். அச்சமுடையவரிருக்கும் அரண் அழியும் விதம்போன்று மறதியுடையவருடைய செல்வங்களும் அழியுமென்பதாயிற்று.

(க - து.) செல்வங்களால் வரும் பயன் மறதியுடையவர்க்கில்லை.

4. Just as the coward has no defence by whatever fortifications he may be surrounded, so the thoughtless has no good whatever advantages he may possess.

---

**ரு. முன்னுறக் காவா திழுக்கியான் றன்பிழை**
**பின்னூ றிரங்கி விடும்.**

பரி:—(இ-ள்) தன்னாற் காக்கப்படுந் துன்பங்களை அவை வருதற்கு முன்னே அறிந்து *காவாது மறந்திருந்தான் பின்வந்து உற்றகாலத்துக் †காக்கலாகாமையின் ‡அப்பிழைப்பினை நினைந் ¶திரங்கிவிடும், (எ-று).

காக்கப்படுந் துன்பங்களாவன: சோர்வு பார்த்துப் பகைவர் செய்வன. $ஊற்றின்கண் என்புழி உருபுஞ்சாரியையும் உடன்றொக்கன. §உற்ற காலத்துக் காக்கலாகாமையின் 'இரங்கிவிடும்' என்றார். இவை மூன்று பாட்டானும் பொச்சாப்புடையார்க்கு வரும் ஏதங் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்) (தன்னால் வாராமற் காக்கப்படுந் துன்பங்களை) முன்னுற – (அவைவருவதற்கு) முன்னே, காவாது – (அறிந்து) காவாமல், இழுக்கியான் – மறந்திருந்தவன், பின் – பின்பு, (வந்து),

---

* காவாது - தடுக்காது. † காக்கலாகாமையின்-தடுத்தல் முடியாமையால்.

‡ அப்பிழைப்பினை - தன்னாற்காக்கப்படுந் துன்பங்களை அவை வருவதற்கு முன்னேயறிந்து காவாது மறந்திருந்த தனது தப்பிதத்தை.

¶ இரங்கிவிடும் – அனுதாபப்படுவான்.

$ உறுதல் என்னும் பொருளையுணர்த்தும் ஊறு என்னும் முதனிலை திரிந்த தொழிற் பெயரினிடத்து ஏழனுருபும் இன்சாரியையும் உடன்றொக்கு நின்றன. இங்கு ஊறு என்பது உற்றகாலத்தை யுணர்த்தினமையின் தொழிலாகு பெயராம்

§ உற்றகாலத்துக் காக்கலாகாமையின் - (மறதிநோக்கிப்பகைவர் செய்யுந் துன்பங்கள்) நேர்ந்தகாலத்தில் (அவற்றைத்) தடுத்தல் முடியாமையால்.

*ஊறு - உற்ற காலத்தில், (காத்தல் கூடாமையால்), தன்பிழை - தன்னுடைய அத்தப்பிதத்தை, (நினைந்து), இரங்கிவிடும் - இரங்கிவிடுவான், (எ-று).*

*காக்கப்படுந் துன்பங்களாவன : மறதிபார்த்துப் பகைவர் செய்யுந்துன்பங்கள். ஊற்றின்கண் என்றவிடத்துக் கண்ணுருபும் இன் சாரியையும் உடன் தொக்கு நின்றன. ஊற்றின்கண் என்பது கண்ணென்னும் உருபும் இன்னென்னும் சாரியையுந் தொக்கு ஊறு என நின்றதென்பதாம். துன்பம் உற்றகாலத்தில் காத்தல் கூடாமையால் 'இரங்கிவிடும்' என்றார். இவை மூன்று பாட்டாலும் மறதியுடையவர்க்கு வரும் துன்பம் சொல்லப்பட்டது.*

*(க-து·) துன்பங்களை வருமுன் காக்காமல் மறந்திருந்தவன் பின்பு தனது குற்றத்தைக் குறித்து விசனப்படுவான் என்பது.*

5. The careless man, who provides not against the calamities that may happen, will afterwards think with sorrow of his fault.

---

**சா. இழுக்காமை யார்மாட்டு மென்றும் வழுக்காமை
வாயி னஃதொப்ப தில்.**

**பரி:—(இ - ள்.) அரசர்க்கு மறவாமைக்குணம் யாவர்மாட்டும் எக்காலத்தும் ஒழிவின்றி வாய்க்குமாயின் * அதனை ஒக்கும் நன்மை பிறிதில்லை, (எ-று).**

*‡ வினைசெய்வார் சுற்றத்தாரென்னுந் தம் பாலார்கண்ணும் ஒப்ப வேண்டுதலின் 'யார் மாட்டும்' என்றும், § தாம் பெருகிய ஞான்றும் சுருங்கிய ஞான்றும் ஒப்பவேண்டுதலின் 'என்றும்' என்றும், எல்லாக்காரியங்களினும் ஒப்பவேண்டுதலின் 'வழுக்காமை' என்றுங் கூறினார். ¶ வாயினென்பது முதனிலைத் தொழிற்பெயரடியாக வந்த வினையெச்சம். வாய்த்தல் - $ நேர்படுதல்.*

தெளி: —(இ-ள்.) *(அரசர்க்கு) இழுக்காமை - மறவாமைக்குணமானது, யார்மாட்டும் - யாவரிடத்தும், என்றும் - எக்காலத்திலும்,*

---

** அதனை - மறவாமைக்குணத்தை.*

*‡ பகைவரிடத்து மாத்திரமேயன்றி வினைசெய்வார் (இராஜகாரியஞ்செய்வார்) சுற்றத்தாரென்னுந் தம்பாலார்கண்ணும் என்றும் பாடமுண்டு.*

*§ தாம் செல்வமுதலியவற்றால் விருத்தியடைந்த காலத்திலும் அவையின்றிச் சுருங்கிய (குறைவடைந்துள்ள) காலத்திலும் சமமாக வேண்டுதலால் 'என்றும்' என்று கூறப்பட்டது*

*¶ வாயின் என்பது வாய் (வாய்த்தல்) என்னும் முதனிலைத் தொழிற் பெயரடியாகப் பிறந்த செயின் என்னும் வாய்பாட்டு (எதிர்கால) வினையெச்சம் $ நேர்படுதல் - பொருந்துதல்*

மை - ஒழிவில்லாமல், வாயின் - நேர்படுமாயின், அஃது - அதனை, ஒப்பது - ஒக்கும் நன்மையானது, இல்-(வேறொன்று) இல்லை, (எ-று).

*தொழில் செய்வார் சுற்றத்தார் என்னும் தம்மவரிடத்தும் (இழுக்காமை) சமமாக வேண்டுதலால் 'யார்மாட்டும்' என்றும், (செல்வ முதலியவற்றால்) தாம் பெருகிய காலத்திலும் சுருங்கிய காலத்திலும் சமமாக வேண்டுதலால் 'என்றும்' என்றும், எல்லாக் காரியங்களிலும் சமமாக வேண்டுதலால் 'வழுக்காமை' என்றும் சொல்லினார்.* வாயின் என்பது வாய் என்னும் முதனிலைத் தொழிற் பெயரடியாகப் பிறந்த வினையெச்சம்.

*(க - து.) யாவரிடத்தும் எக்காலத்தும் மறதியில்லாமை அரசனுக் கிருக்குமானால், அதனையொத்த நன்மை அவனுக்குப் பிறிதொன்றில்லை என்பது.*

6. There is nothing to be compared with unfailing thoughtfulness, at all times, and towards all persons.

எ. **அரியவென் றாகாத வில்லை *பொச்சாவாக்
கருவியாற் போற்றிச் செயின்.**

**பரி:—(இ - ள்.)** இவை செய்தற்கரியனவென்று சொல்லப்பட்டு ஒருவற்கு முடியாத காரியங்களில்லை, மறவாத மனத்தானே எண்ணிச் செய்யப்பெறின், (எ - று).

*பொச்சாவாத என்பதன் † இறுதிநிலை விகாரத்தாற்றொக்கது. ‡ அந்தக் கரணமாகலின் 'கருவி' என்றார். இடைவிடாத நினைவும் தப்பாத சூழ்ச்சியும் உடையார்க்கு எல்லாம் எளிதின் முடியுமென்பதாம். இவையிரண்டு பாட்டானும் பொச்சாவாமையது சிறப்புக் கூறப்பட்டது.*

**தெளி :—(இ - ள்.)** அரியவென்று (இவை செய்தற்கு) அரியன வென்று சொல்லப்பட்டு, ஆகாத - (ஒருவனுக்கு) முடியாத காரியங்கள், இல்லை—, பொச்சாவா - மறவாத, கருவியால் - மனத்தாலே, போற்றி - எண்ணி, செயின் - செய்யப்பெற்றால், (எ-று).

---

**பொச்சாவாக் கருவி என்பதுபற்றி "நிலனும் பொருளும்" என்னும் (தொல்காப்பியச்) சூத்திரவுரையில் சேனாவரையர் "நின்முகங் காணு மருந்தினே னென்னுமால்' என்புழிக் காட்சியை மருந்தென்று ஞதலின், காணுமருந்தென்பது வினைப்பெயர் கொண்டதாம். 'பொச்சாவாக் கருவியாற் போற்றிச்செயின்' என்புழிப் பொச்சாவாக் கருவி யென்பது மது" என்றும், நச்சினார்க்கினியர் "பொச்சாவாக் கருவியாற் போற்றிச் செயின்' என்பது கருவிக்கண் அடங்கும்" என்றும் கூறியிருக்கின்றனர்.*

*† இறுதிநிலை (தகர எழுத்துப்பேற்றோடு கூடிய அகரவிகுதி) விகாரத்தால் (செய்யுள் விகாரத்தால்) தொக்கு நின்றது.*

*‡ அந்தக்கரணம் - உட்கருவி; மனமென்பது அந்தக் கரணத்துள் ஒன்றும்.*

பொச்சாவா என்பது ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். அந்தக் கரணமாதலால் மனத்தைக் 'கருவி' என்றார். இடைவிடாத நினைவும் தவறாத உபாயமும் உடையவர்க்கு எல்லாக் காரியமும் எளிதில் முடியுமென்பதாம். இவை இரண்டு பாட்டாலும் மறவாமையினது சிறப்புச் சொல்லப்பட்டது.

(க - து.) மறவாது நன்காலோசித்துச் செய்யும் அரசனுக்குச் செய்தற்கருமையான காரியம் ஒன்றுமில்லை என்பது.

7. There is nothing too difficult to be accomplished, if a man sets about it carefully with a thoughtful mind.

அ. புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டுஞ் செய்யா
திகழ்ந்தார்க் கெழுமையு மில்.

பரி:—(இ - ள்.) நீதிநூலுடையார் இவை அரசர்க்குரியனவென்று உயர்த்துக்கூறிய செயல்களைக் * கடைப்பிடித்துச் செய்க, † அங்ஙனஞ் செய்யாது மறந்தவர்க்கு எழுமையினும் நன்மையில்லை ஆகலான்.

‡அச்செயல்களாவன ¶மூவகையாற்றலும், $நால்வகையுபாயமும், § ஐவகைத்தொழிலும், () அறுவகைக் குணமும் | முதலாய செயல்கள்

* கடைப்பிடித்து - மறவாது உறுதியாகக்கொண்டு.

† அங்ஙனம் செய்யாது - கடைப்பிடித்தல் செய்யாமல்.

‡ "உற்றிடு மாற்றன் மூன்று முபாயங்க ணான்கு நன்மை, பற்றிய தொழில்க ளைந்தும் பண்புறு குணங்க ளாறு, மற்றைய வனைத்துங் கேடாம் வளர்பிறப் பேழன் காறும், பற்றிடு நன்மை யின்றாம் பாழ்த்தபொச் சாப்புச் சாரின்'' என்பது விநாயக புராணம்.

¶ மூவகையாற்றல் - அறிவும், ஆண்மையும், பொருள்படையென இரு வகைத்தாய பெருமையும் ஆம்.

$ நால்வகையுபாயம் - கொடுத்தல், இன்சொற் சொல்லல், வேறுபடுத்தல், ஒறுத்தலாம்.

§ ஐவகைத்தொழில் - எளிய முயற்சியுடையது, செய்தாற் பயனுள்ளது, பெரும்பயன் தருவது, ஐயமில்லாதது, பின்பு இன்பம் தருவதாகிய தொழில்களாம். இவ்வாறு "பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்து, மிருடீர வெண்ணிச் செயல்" என்னுங் குறளிற் கூறிய ஐவகைத் தொழிலைக் கொள்ளினுமொக்கும். நச்சினார்க்கினியர் "அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கமும்" என்னுந் தொல்காப்பியச் சூத்திரவுரையில் அரசரின் ஐவகைத் தொழில் ஓதல், வேட்டல், ஈதல், காத்தல், தண்டஞ்செய்தல் என்று கூறுவர்.

() அறுவகைக் குணம் - நட்பாக்கல், பகையாக்கல், பகை மேற் சேறல், இருத்தல், பிரித்தல், கூட்டலாம்.

| முதலாய என்றதனால் அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்ட முதலியவற்றையுங் கொள்க.

சாதிதருமமாகிய * இவற்றின் † வழீஇயோர்க்குள்ளது நிரயத் துன்பமே யாகலின் 'எழுமையுமில்' என்றார். ‡ எழுமை ஆகுபெயர். இதனாற் பொச்சாவாது செய்யவேண்டுவன கூறப்பட்டன.

தெளி :—(இ-ள்) புகழ்ந்தவை - (நீதிநூலுடையார் இவை அரசர்க்கு உரியவை யென்று) உயர்த்திச் சொல்லிய செயல்களை, போற்றி - கடைப்பிடித்து, செயல்வேண்டும் - செய்யக்கடவர், செய்யாது - (அப்படிச்) செய்யாமல், இகழ்ந்தார்க்கு - மறந்தவர்க்கு, எழுமையும் - எழுபிறப்பிலும், (நன்மையானது), இல் - இல்லை, (ஆதலால்), (எ - று).

அச்செயல்களாவன : மூவகை யாற்றலும், நால்வகையுபாயமும், ஐவகைத்தொழிலும், அறுவகைக் குணமும் முதலான செயல்கள். (அரச) சாதிதருமமாகிய இவற்றினின்றும் வழுவிய அரசர்க்கு வருவது நரகத்துக்கமேயாதலால் 'எழுமையுமில்' என்றார். எழுமை - எண்ணலளவை யாகுபெயர். இதனால் மறவாது செய்யவேண்டுங் காரியங்கள் சொல்லப்பட்டன.

(க - து.) நீதிநூலுடையார் உயர்த்திக் கூறிய செயல்களைச் செய்யாது மறந்திருந்த அரசருக்கு ஏழுபிறப்பிலும் நன்மையில்லை என்பது.

8. Let a man observe and do those things which have been praised by the wise; if he neglects, and does not perform them, for him there will be no happiness throughout the seven births.



கூ. ¶ இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து.

பரி:—(இ - ள்.) அரசர் தம்மகிழ்ச்சிக்கண் தாம் வலியுறும்பொழுது முற்காலத்து அதனின் ஆய சோர்வாற் $ கெட்டவர்களை நினைக்க.

ం காரணங்களோடு அவர்க்குளதாய உரிமையை மகிழ்ச்சிமே

* இவற்றின் - மூவகையாற்றல் முதலியவற்றில்.

† வழீஇயோர்க்கு முள்ளது என்றும் பாடமுண்டு.

‡ ஏழு என்னும் எண்ணுப் பொருளையுணர்த்தும் எழுமை யென்பது எழுவகைப் பிறப்பினை யுணர்த்துதலால் எண்ணலளவை யாகுபெயராம்.

¶ "இகழ்ச்சியிற் கெடுவார்களை யெண்ணுக, மகிழ்ச்சி யின்பத்தின் மைந்துறும் போழ்தெனப், புகழ்ச்சி நூலுட் புகன்றனர். பூவினுட், டிகழ்ச்சி சென்றசெம் பொன்முடி மன்னனே" என்பது சூளாமணி.

$ கெட்டவர்கள் - இராவணன், துரியோதனன், சச்சந்தன் முதலாயினோர்.

ం காரணங்கள் - மகிழ்ச்சியடைதற்குக் காரணமாயுள்ள பொருள், படை, அரண், வலி, துணை முதலியவை.

லேற்றித் 'தம்மகிழ்ச்சியின்' என்றும், * இகழ்ச்சியுங் கேடும் உடன் தோன்றுமாகலின் 'மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து' என்றுங் கூறினர். கெட்டாரை உள்ளவே, நாமும் அவ்வாறே கெடுதுமென்று அதன்கண் மைந்துறு ரென்பது கருத்து. † எண்ணுக வென்று பாடமோதுவாருமுளர்.

தெளி :—(இ - ள்.) (அரசர்) தம்மகிழ்ச்சியின் - தமது மகிழ்ச்சியினிடத்து, தாமைந்துறும்போழ்து - தாம் செருக்குறும்பொழுது, இகழ்ச்சியின் - (முற்காலத்தில் அம்மகிழ்ச்சியினால் ஆகிய) மறதியினால், கெட்டாரை யுள்ளுக - கெட்டவர்களை நினைக்கக்கடவர், (எ-று).

மகிழ்ச்சிக்குக் காரணமாயுள்ளவற்றோடு அவர்க்கு உண்டாகிய உரிமையை மகிழ்ச்சியின்மே லேற்றித் 'தம்மகிழ்ச்சியின்' என்றும், இகழ்ச்சியும் கேடும் உடன் தோன்றுமாகலால் 'மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து' என்றும் சொல்லினர். கெட்டாரை நினைக்கவே நாமும் அப்படியே கெடுவோமென்று அம்மகிழ்ச்சியினிடத்துச் செருக்குறுரென்பது கருத்து.

(க - து.) அரசர் மகிழ்ச்சியினாற் கருவமடையும்போது மறதியினாற் கெட்டவர்களை நினைக்கக்கடவர் என்பது.

9. Let a king reflect on those who have been ruined by neglect, when his mind is elated with joy.

---

**க0. உள்ளிய தெய்த லெளிதுமன் மற்றுந்தா
னுள்ளிய துள்ளப் பெறின்.**

பரி:—(இ-ள்.) அரசனுக்குத் தான் எய்த நினைத்த பொருளை அந்நினைத்த பெற்றியே எய்துதல் எளிதாம், பின்னும் அதனையே நினைக்கக்கூடுமாயின், (எ - று).

‡ அது கூடாதென்பது ஒழிந்து நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. அதனையே நினைத்தலாவது மறவியின்றி அதன்கண்ணே முயறல். இவை யிரண்டு பாட்டானும் பொச்சாவாமைக்கு உபாயங் கூறப்பட்டது.

---

மகிழ்ச்சிக்குக் காரணமாயுள்ளவற்றுடன் அரசர்க்குளதாய உரிமையை (சுதந்தரத்தை) மகிழ்ச்சியின் மேலேற்றிக் கூறியது காரணத்தினுரிமை காரியத்தின் மேலாய உபசார வழக்காம். பொருள் முதலியன - காரணம், மகிழ்ச்சி - அதன் காரியம்.

* மகிழ்ச்சியினால் செருக்குறும்போது இகழ்ச்சியும் கேடும் உடன் தோன்றுமென்க.

† உள்ளுக என்பதற்குப் பிரதியாக எண்ணுக என்றும் பாடமுண்டு.

‡ அது கூடாது (தானடைய நினைத்த பொருளை யிடைவிடாது நினைத்தல் முடியாது.) என்னும் ஒழிந்த சொற்பொருளை யுணர்த்தினமையின் மன் ஒழியிசைப் பொருளில் வந்தது.

தெளி :—(இ-ள்.) (அரசனுக்கு) தான்—, உள்ளியது-(அடைய) நினைத்த பொருளை, எய்தல் – (அந்நினைத்தபடியே) அடைதல், எளிது மன் – எளிதாகும், மற்றும் – பின்னும், உள்ளியது – அந்நினைத்த பொருளையே, உள்ளப்பெறின் – நினைக்கக்கூடுமானால், (எ – று).

அது கூடாதென்பது ஒழிந்துநின்றமையின் மன் ஒழியிசைப் பொருளில் வந்தது. அந்நினைத்த பொருளையே நினைத்தலாவது மறதியில்லாமல் அந்நினைத்த பொருளினிடத்தே முயற்சி செய்தல். இவை இரண்டு பாட்டாலும் மறவாமைக்கு உபாயம் சொல்லப்பட்டது.

(க-து.) அரசன் மறதியின்றி முயற்சியுடையவனாயிருந்தால் அவன் தான் நினைத்த பொருளை எளிதிலடைவான் என்பது.

10. It is easy for a king to obtain whatever he may think of, if he thoughtfully pursues it.

---

## பதினேழாம் அதிகாரம்

## 55 செங்கோன்மை—On upright Government

பரி :—அஃதாவது அரசனாற் செய்யப்படும் §முறையினது தன்மை. அம்முறை ஒருபாற்கோடாது ¶செவ்விய கோல் போறலின் செங்கோலெனப்பட்டது. வடநூலாரும் *தண்டமென்றார். அது சோர்வில்லாத அரசனாற் செயற்பாலதாகலின், இது பொச்சாவாமையின் பின் வைக்கப் பட்டது.

தெளி :—அஃதாவது அரசனால் செய்யப்படும் முறையினது தன்மை. அந்த முறையானது ஒரு பக்கத்திற் சாயாமற் செவ்வை-யாகிய கோல்போலிருத்தலால் செங்கோலெனப்பட்டது. இதனை வடநூலார் தண்டமென்றனர். அம்முறை மறதியில்லாத அரசனால் செய்யத்தக்கதாகலால், இது (செங்கோன்மை) பொச்சாவாமையின் பின் வைக்கப்பட்டது.

---

$ " படையுங் கொடியுங் குடையு முரசு, நடைநவில் புரவியுங் களிறுந் தேருந், தாரு முடியு நேர்வன பிறவுந், தெரிவுகொள் செங்கோ லரசர்க்குரிய " என்பது தொல்காப்பியம் மரபியல்.

§ முறை – நீதி. ¶ செவ்வியகோல் என்பது செவ்விய கோல் போன்ற நீதியை யுணர்த்துவதால் உவமையாகு பெயராம்.

* தண்டம் – கோல். ஒரு பக்கத்திலும் கோணுதலில்லாத கோல் போன்ற நீதியை யுணர்த்துதலால் இதுவும் உவமையாகு பெயராம்.

க. † ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந் தியார்மாட்டுந்
தேர்ந்துசெய் வஃதே ‡ முறை.

பரி :—(இ - ள்.) தன்கீழ் வாழ்வார் குற்றஞ்செய்தால் அக்குற்றத்தை நாடி யாவர்மாட்டுங் *கண்ணோடாது ο நடுவுநிலைமையைப் பொருந்தி அக் குற்றத்திற்குச் சொல்லிய ¶ தண்டத்தை $ நூலோரோடும் ஆராய்ந்து அவ்வளவிற்றுகச் செய்வதே முறையாம், (எ - று).

நடுவுநிற்றல் இறைக்கியல்பாகலின் § அதனை ξ 'இறை' என்றும், உயிரினுஞ் சிறந்தார்கண்ணும் என்பார் 'யார்மாட்டும்' என்றுங் கூறினர். □ இறைமை இறையெனவும் செய்வது செய்வஃதெனவும் நின்றன. இதனற் செங்கோன்மையது இலக்கணங் கூறப்பட்டது.

தெளி :—(இ - ள்.) (தன்கீழ் வாழ்வார் குற்றஞ்செய்தால் அக் குற்றத்தை) ஓர்ந்து - நாடி, யார்மாட்டும் - யாவரிடத்தும், கண் ணோடாது - முகங் கொடாமல், இறைபுரிந்து - நடுவு நிலைமையைப் பொருந்தி, தேர்ந்து - (அக்குற்றத்திற்குச் சொல்லிய தண்டத்தை நூலோரோடும்) ஆராய்ந்து, செய்வஃதே - (அவ்வளவினதாகச்) செய்வதே, முறை - நீதியாம், (எ - று).

நடுவுநிலைமையைப் பொருந்துதல் இறை என்னும் அரசனுக்கு இயல்பாகலால் அதனை 'இறை' என்றும், உயிரினும் சிறந்தவரிடத் தும் என்பார் 'யார்மாட்டும்' என்றும் சொல்லினர். இறைமை - இறை என்றும், செய்வது - செய்வஃது என்றும் விகாரப்பட்டு நின்றன. இதனல் செங்கோலின் இலக்கணம் சொல்லப்பட்டது.

(க - து.) அரசன் தன் கீழ்வாழ்வார் செய்யுங் குற்றத்தை யாராய்ந்து யாவரிடத்திலும் நடுவுநிலைமையைப் பொருந்தி அரசாள்வதே செங்கோலாம் என்பது.

---

† "எய்திய குற்றத் தோர்கள் யாவரா யினுங்கண் ணோடா, தைதென நாடி நீதி யறந்தலைப் பிழையாத் தண்டம், செய்தலே செங்கோ லாகும்" என்பது விநாயக புராணம்.

‡ "முறையெனப் படுவது கண்ணோடா துயிர்வெளவல்" என்பது கலித்தொகை நெய்தற்கலி.

* தன்னுடன் பழகியவரைக் கண்டால் அவர் கூறியவற்றை மறுக்கமாட்டாமை கண்ணோட்டமெனப்படும். இது தாட்சண்ணியம் என்றும் முகங்கொடுத்தலென்றும் சொல்லப்படும்.

ο பகைவர் அயலோர் நட்பினர் என்னு மிம்மூவகையோரிடத்தும் அறத்தின் வழுவாமல் ஒப்பநிற்கும் நிலைமை நடுவுநிலைமையெனப்படும்.

¶ தண்டம் - தண்டனை. $ நூலோர் என்றது அமைச்சர் புரோகிதர்களை. § அதனை - நடுவு நிற்றலை.

ξ இறையென்னும் பொருட்பெயர் அதன் பண்பாகிய நடுவு நிற்றலை யுணர்த்துவதால் பொருளாகு பெயராம். இறை - அரசன்.

□ இறைமை இறையென்றுயது கடைக்குறை விகாரமாம்; செய்வது செய்வஃது என்றுயது விரித்தல் விகாரமாம்.

1. To examine into the crimes which may be committed, to show no favour to any one, to desire to act with impartiality towards all, and to inflict such punishments as may be wisely resolved on, this is rectitude.

---

உ. † வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி.

பரி:—(இ-ள்.) உலகத் துயிரெல்லாம் மழையுளதாயின் உளவாகாநிற்குமே எனினும் குடிகள் அரசன் செங்கோலுளதாயின் உளவாகா நிற்கும், (எ-று).

‡ நோக்கிவாழ்தல்-இன்றியமையாமை. ¶ வானினாயவுணவை 'வான்' என்றும், கோலினாய ஏமத்தைக் 'கோல்' என்றுங் கூறினார். அவ்வேமம் இல்வழி உணவுளதாயினுங் குடிகட்கு அதனாற் பயனில்லை யென்பதாம்.

தெளி:—(இ - ள்.) உலகெல்லாம் - உலகத்துயிர்களெல்லாம், வானோக்கி, (மழைபெய்யுமாயின்) அம்மழையைநோக்கி, வாழும் - உளவாகாநிற்கும், (என்றாலும்), குடி - குடிகள், மன்னவன் - அரசனது, கோனோக்கி — (செங்கோலுண்டானால்) அச்செங்கோலை நோக்கி, வாழும் - உளவாகா நிற்கும், (எ - று).

நோக்கிவாழ்தல் - இல்லாமல் கூடாமை. வானினாலாகிய வுணவினை 'வான்' என்றும், கோலினாலாகிய காவலைக் 'கோல்' என்றுங் கூறினார். அக்காவல் இல்லாவிடத்து உணவு உண்டாயிருந்தாலும் குடிகளுக்கு அவ்வுணவாற் பிரயோசனமில்லை என்பதாம்.

---

† "துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்த, னளியின்மை வாழு முயிர்க்கு" என்று பின் கொடுங்கோன்மையிற் கூறுவது மிங்குக் கவனிக்கத் தக்கதாம்.

‡ உயிர்கள் மழையையும் குடிகள் செங்கோலையும் நோக்கி வாழ்தல் இன்றியமையாதெ (அத்தியாவசியகமாமெ)ன்பது "மழையின்றி மாநிலத்தார்க் கில்லை" "கோனோக்கி வாழுங் குடியெல்லாம்" "வானத் துளி நோக்கி வாழு முலகம்" என்றுள்ள பிரயோகங்களாலும் அறிதற்பாற்றும். நோக்குதலென்பது இங்கு மனவெழுச்சியின்மேல் நின்றது; அஃதாவது கண்ணால் நோக்கும் நோக்கமின்றி மனத்தால் நோக்கும் நோக்கமாம்.

"தானோக்கா தெத்துயரஞ் செய்திடினுந் தார்வேந்தன், கோனோக்கி வாழுங் குடிபோன் றிருந்தேனே" என்று குலசேகர ஆழ்வார் கூறுவது மிங்குணர்தற்பாலதாம்.

¶ வான் வானாலாகிய வுணவையும், கோல் கோலாலாகிய காவலையும் உணர்த்துவதால் அவை கருவியாகு பெயர்களாம். வான் என்னும் இடப்பெயர் முன்னர் மேகத்தையும் பின்னர் அம்மேகம் பொழியும் மழையையும் அப்பால் அதனாலாகிய வுணவையும் உணர்த்துவதால் மும்மடியாகுபெயராம்.

(க - து.) மழைபெய்வதால் உயிர்கள் இருத்தல்போன்று செங்கோல் நடைபெறுவதால் குடிகள் இருக்கும் என்பது.

2. When there is rain, the world enjoys prosperity; and when the king rules justly, his subjects prosper.

---

௩. **அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்**
**நின்றது மன்னவன் கோல்.**

பரி :—(இ - ள்.) ‡ அந்தணர்க்குரித்தாய வேதத்திற்கும் அதனுற் சொல்லப்பட்ட அறத்திற்குங் காரணமாய் நிலைபெற்றது அரசனுற் செலுத்தப்படுகின்ற செங்கோல், (எ-று).

அரசர் வணிகரென்னும் ஏனையோர்க்கும் உரித்தாயினும், *

---

‡ அந்தணரென்பது இங்குச் சாதிப்பெயர் மாத்திரமாய் நின்றது.

* அந்தணர்க்கு வேதத்தை யோதுதலேயன்றி யோதுவித்தலு முரியதாயிருத்தலின், 'தலைமைபற்றி அந்தணர் நூல் என்முர்' என்று கூறப்பட்டது. தலைமை – முதன்மை. அரசர்க்கும் வணிகர்க்கும் வேதத்தைப் பிறர்க்கு ஓதுவித்தலில் அதிகாரமின்றி ஓதுதலில் அதிகாரமுண்டென்பது மனுதருமசாஸ்திரம் பத்தாவதத்தியாயத்தில் "க்ஷத்திரியனுக்குக் கத்தி பாண முதலிய ஆயுதங்களைத் தரித்து உலகாள்வதும், வைசியனுக்கு வர்த்தகஞ் செய்வது பசுவைக்காப்பது பயிரிடுவது என்னுமிவையும் ஜீவனோபாயமாம். மேற்சொல்லிய யாகஞ்செய்தல் தானங்கொடுத்தல் (வேதம்) ஓதல் இவை தர்மோபாயமாம்" என்று கூறுவதாலறிக. சூத்திரனுக்கு வேதத்தை யோதுவதற் கதிகாரமின்மையால் அவனுக்கு முத்தி சித்தியாதோ வெனின், வேதமும் வேதத்தின் பொருளை யையந்திரிபின்றி யெடுத்துக் கூறும் பாரத முதலிய நூல்களும் ஞானவாயிலாக முத்திக்குக் காரணமாயிருத்தலால் வேதம் ஓதினவர்களுக்கே முத்தியுண்டாமென்பது பொருந்தாதாயிற்று; ஆகவே, வேதத்தின் பொருளை யையந்திரிபின்றி யெடுத்துக்கூறும் பாரதமுதலிய நூல்களைத் தக்கவாறு படிப்பவரியாவர்க்கும் ஞானவாயிலாக முத்தியுண்டாதற்குத் தடையின்றுமென்க.

மனுதருமசாஸ்திரம் பத்தாவதத்தியாயத்தில் "ஹிம்சை செய்யாமை, சத்தியம், தீவினையாற் பொருள் சம்பாதியாமை, ஒழுக்கம், இந்திரிய நிக்கிரகம்...(பிரஹ்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரரென்னும்) நான்கு வருணத்தா (சாதியா)ர்க்கும் முக்கியமான தருமமாமென்று சுருக்கமாய் மனு சொல்லியிருக்கிமுர். அவை சங்கரசாதிகளுக்கும் இருக்கவேண்டியவை" என்றும், ஆறுவதத்தியாயத்தில் "இந்திரிய நிக்கிரகத்தாலும், இராகத்துவேஷமில்லாமையாலும், ஜீவஹிம்சை செய்யாமையாலும் மோட்சமடைதற்கு யோக்கியனுவான்" என்றும் கூறுவதும் இங்குக் கவனிக்கத் தக்கதாமென்க.

தலைமைபற்றி 'அந்தணர் நூல்' என்றார். ‡ மாதவர் நோன்பு

‡ இதன் பொருள்-சிறந்த தவசிகளது விரதமும் பெண்களது கற்பும் அரசனது காவலில் தங்கமாட்டா என்பது. மாதவர் நோன்பு மடவார் கற்புங், காவலன்றித் தங்கா என்றும் பாடமுண்டு. "காவலன்றித் தங்காவலா ளுகலின்" என்றும் பாடமுண்டு. இது பொருந்தும்.

"சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர், நிறைகாக்குங் காப்பே தலை" [நிறையாவது மறைபிறரறியாமல் ஒழுகுதல் என்றனர் நச்சினார்க்கினியர்.] என்றும், "உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை, யற்றே தவத்திற் குரு" என்றும் உள்ள குறள்களாலும், வான் சிறப்பு ஒன்பதாவது குறளின் விசேடவுரையில் "தவமாவது மனம் பொறிவழிப்போகாது நிற்றற் பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்கல் முதலாயின" என்றும், கள்ளாமை யதிகாரத்தின் அவதாரிகையில் "புறத்துப்போகாது மடங்கி யொருதலைப்பட்டு உயிரையே நோக்கற்பாலதாய அவர் (துறவிகளின்) மனம்" என்றும் பரிமேலழகர் கூறுவதாலும், மணிமேகலை உதய குமரன் அம்பலம் புக்ககாதையில் "கன்னிக் காவலும், கடியிற் காவலும் தன்னுறு கணவன் சாவுறிற் காவலும், நிறையிற் காத்துப் பிறர்பிறர்க் காணாது" என்று கூறுவதாலும், மனுதருமசாஸ்திரம் ஒன்பதாவதத்தியாயத்தில் "மாதர்கள் தங்களைத்தாமே காக்க வேண்டும்; அதுவே அவர்களுக்கு நல்லகாப்பாகும். நல்லகாவலரை வைத்து வெளியிற் போக வொட்டாமல் வீட்டிலேயே நன்றாகக் காப்பாற்றினாலும் (அவர்கள்) காக்கப்பட மாட்டார்கள்" என்றும், பன்னிரண்டாவதத்தியாயத்தில் "கண்ணுக்குத் தெரிகிறதாயும் தெரியாததாயுமிருக்கிற எல்லாப்பதார்த்தமும் பரமாத்மாவினிடத்து வாசஞ் செய்வதாக யோகத்தியானத்தால் பார்த்து வேறிடத்தில் மனம் வையாது பிரஹ்மசாட்சாத்காரஞ் செய்கிறவன் அதர்மத்தில் மனத்தை வைக்கமாட்டான்" என்றும், ஆறுவதத்தியாயத்தில் "பிரஹ்மசாட்சாத்காரஞ் செய்கிறவனுக்குக் கர்ம சம்பந்தம் வரமாட்டாது. அஃதாவது ஜனனமரண ரூபமான சம்சார சக்கரத்தில் துன்பப்படமாட்டா னென்பது கருத்து" என்றும் கூறுவதாலும். மாதவர் நோன்பும் மடவார்கற்பும் [கற்பாவது தன் கணவனைத் தெய்வமென்று உணர்வதோர்மேற்கோள் என்றனர் நச்சினார்க்கினியர்; மனவொழுக்கமாயிருத்தலின் அவை அரசனது காவலில் தங்கமாட்டாவாயினவென்க. ஆகவே மாதவர் நோன்பு மடவார் கற்புங், காவலன் காவலன்றித் தங்கா என்று கொள்ளுதல் இங்குத்தகுதியுடையதாகாது; ஏனெனின், "ஈண்டறமென்றது அவை யொழிந்தவற்றை" என்று கூறுதலாலென்க. மாதவரது விரதமும் பெண்களது கற்பும் அரசனது காவலினாலன்றித் தங்க மாட்டா என்பது அதன் பொருளாதலினாலும், இதன்படி அரசனது காவலினாலன்றித் தங்கமாட்டாத மாதவரது நோன்பையும் மடவாரது கற்பையும் ஒழித்துக் கூறுவது முரணுதலாலும் காவலன்றித் தங்கா என்பது பொருந்தாது. மாதவரது விரதமும் மகளிரது கற்பும் அவரவரது மனவொழுக்கத்தினாலேயே மனத்தில் நிலைபெறுவனவாயும் அரசனது பாதுகாவலில் தங்காதனவாயும் இருந்தாலும் அவை நிலைபெறுவதற்கு அரசனது காவல் பாகியத்தில் உதவியாயிருப்பதுபற்றி மணிமேகலை சிறைசெய்காதையில் "மாதவர் நோன்பு மடவார் கற்புங், காவலன் காவலின்றெனி லின்றாம்"

மடவார் கற்புங், காவலன் காவலிற் றங்கா ஆகலின், ஈண்டற மென்றது § அவை யொழிந்தவற்றை. ¶ வேதமும் அறனும் அநாதி யாயினுஞ் செங்கோல் இல்வழி நடவா ஆகலின் அதனை அவற்றிற்கு 'ஆதி' என்றும், $ அப்பெற்றியே தனக்காதியாவது பிறிதில்லை யென்பார் 'நின்றது' என்றுங் கூறினர். இவையிரண்டு பாட்டானுஞ் செங்கோலது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) மன்னவன்கோல்-அரசனாற் செலுத்தப்படுகின்ற செங்கோலானது, அந்தணர் நூற்கும்—அந்தணர்க்கு உரியதாகிய வேதத்திற்கும், அறத்திற்கும்—(அவ்வேதத்தாற் சொல்லப்பட்ட) அறத்திற்கும், ஆதியாய் - காரணமாய், நின்றது-நிலைபெற்றது, (எ-று).

---

என்றும், நான்மணிக்கடிகை நாற்பத்தொன்பதாவது செய்யுளில் 'தவமும் அரசிலா ரில்வழி யில்' என்றும் கூறினவென்க இதுவேயுமன்றி இராமாயணம் பாலகாண்டத்தில் விசுவாமித்திரர் தசரத சக்ரவர்த்தியை நோக்கி "என்னனைய முனிவரரு மிமையவரு மிடையூறுன் றுடைய ராஞல், பன்னகமு நகுவெள்ளிப் பனிவரையும் பாற்கடலும் பதும பீடத், தன்னகருங் கற்பகநாட் டணிநகரு மணிமாட வயோத்தியென்னும், பொன்னகரு மல்லாது புகலுண்டோ விகல் கடந்த புலவுவேலோய்" என்றும், 'தருவனத்துள் யானியற்றுந் தவவேள்விக் கிடையூருத் தவஞ்செய் வோர்கள், வெருவரச்சென் றடைகாம வெகுளியென நிருதரிடை விலக்கா வண்ணம், செருமுகத்துக் காத்தியென நின்சிறுவர் நால்வரினுங் கரிய செம்மல், ஒருவனைத் தந்திடுதி" என்றும் கூறியது மிங்குக் கவனிக்கத் தக்கதாம்.

§ அவை - மாதவர் நோன்பும் மடவார்கற்பும்.

¶ சீவர்கள் அநாதியா (உற்பத்தியில்லாதவரா) யிருத்தலால் அவர்களுக்குத் தர்மோபாயமா யுள்ள வேதமும் அதனாற் சொல்லப்பட்ட அறமும் அநாதியாயிருக்கின்றன வென்க. மனுதருமசாஸ்திரம் பன்னிரண்டாவதத்தியாயத்தில் "அந்த வேதசாஸ்திரமானது சுயம்புவேயல்லது ஒருவரால் செய்யப்பட்டதன்று", "அநாதியான வேதசாஸ்திரமானது ஜங்கம தாவர ரூபமான சகல பூதங்களையுங் காப்பாற்றுகிறது" என்றும், பராசரஸ்மிருதி முதலத்தியாயத்தில் "ஒருவரும் வேதத்தைச் செய்தவர்களல்லர். பிரஹ்மா வேதத்தைக் கேட்டு அப்படியே ஸ்மிருதிகளைச் செய்கிறார். கற்பங்களுக்கிடையிடையில் மனுவும் ஸ்மிருதிகளைச் செய்கிறார்" என்றும் கூறியுள்ளனவும் இங்கு அறியத்தக்கனவாம்.

$ அப்பெற்றியே தனக்காதியாவது பிறிதில்லை-[வேதத்தையும் வேதத்தாற் கூறப்பட்ட அறத்தையும் நடத்துதலாகிய] அத்தன்மையே (செங்கோலாகிய தனக்குக் காரணமாவது வேறொரு வகையாலன்றென்பதாம். செங்கோல் வேதத்தையும் அதனாற் கூறப்பட்ட அறத்தையும் நடைபெறச் செய்வது பற்றி அவற்றிற்குக் காரணமென்று சொல்லப்பட்டதென்க.

வேதமானதுஅரசர் வணிகரென்னும் மற்றையவர்க்கும் உரிய தாயினும், தலைமைபற்றி அதனை 'அந்தணர்நூல்' என்றார். துறவிகளது விரதமும் பெண்களது கற்பும் அரசனது காவலில் தங்குவனவன்றாதலால், இங்கு அறமென்பது அவையொழிந்தவற்றை. வேதமும் அறமும் அநாதியாயிருந்தாலும் செங்கோல் இல்லாதவிடத்து நடைபெறாவாகலால் அச்செங்கோலை அவ்வேதத்திற்கும் அறத்திற்கும் 'ஆதி' என்றும், அத்தன்மையே தனக்கு ஆதியாவது வேறில்லையென்பார் 'நின்றது' என்றும் சொல்லினர். இவை இரண்டுபாட்டாலும் செங்கோலது சிறப்புச் சொல்லப்பட்டது.

(க - து.) அரசனது செங்கோல், வேதமும் அதனால் சொல்லப்பட்ட தருமமும் நிலைபெறுவதற்குக் காரணமாயிருக்கின்றது.

3. The sceptre of the king is the firm support of the Vedas, of the Brahmins and of all virtues.

---

**ச. குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்ன**
**னடிதழீஇ நிற்கு முலகு.**

**பரி:—(இ - ள்.) தன்குடிகளையும் அணைத்துச் செங்கோலையுஞ் செலுத்தும் பெருநில வேந்தனடியைப் பொருந்தி விடார் உலகத்தார்.**

அணைத்தல் - இன்சொற் சொல்லுதலும் தளர்ந்துழி வேண்டுவன கொடுத்தலும் * முதலாயின. இவ்விரண்டனையும் வழுவாமற் செய்வான் நிலமுழுதும் ஆளுமாகலின் அவனை 'மாநில மன்னன்' என்றும், அவன்மாட்டியாவரும் நீங்கா அன்பினராவராகலின் 'அடிதழீஇ நிற்கு முலகு' என்றுங் கூறினர்.

தெளி:—(இ - ள்.) உலகு - உலகத்தார், குடிதழீஇ-(தன்) குடிகளையும் அணைத்து, கோலோச்சும் - செங்கோலையுஞ் செலுத்தும், மாநில மன்னன் - பெருநிலவேந்தனது, அடிதழீஇ - அடியைப்பொருந்தி, நிற்கும் - (விடாது) நிற்பார் (எ - று).

அணைத்தல் - இன்சொற் சொல்லுதலும் (குடிகள்) தளர்ந்தவிடத்து (அவர்களுக்கு) வேண்டுவனற்றைக் கொடுத்தலும் முதலானவை. இவ்விரண்டையும் தப்பாமற் செய்பவன் நிலமுழுதும் ஆளுவானாகையால் அவனை 'மாநிலமன்னன்' என்றும், அவனிடத்து யாவரும் நீங்காத அன்புடையவராவராகலால் 'அடிதழீஇ நிற்கு முலகு' என்றும் சொல்லினர்.

(க - து.) தனது குடிகளை யன்புடன் பாதுகாத்துச் செங்கோல் செலுத்தும் அரசனை யுலகத்தார் விடாது பற்றுவர் என்பது.

---

* முதலாயின என்றமையின் கள்வர் முதலாயினோரால் கெடுதியுண்டாகாதவாறு காத்தலையுங் கொள்க.

4. The world will constantly embrace the feet of the great king who rules his subjects with love.

---

**ரு. இயல்புளிக் கோலோச்சு மன்னவ னாட்ட**
**பெயலும் விளையலுந் தொக்கு.**

பரி:—(இ - ள்,) * பருவமழையுங் குன்றுதவிளைவும் ஒருங்கு கூடி நூல்கள் சொல்லிய இயல்பாற் செங்கோலைச் செலுத்தும் அரசனது நாட்டின் கண்ணவாம், (எ - று).

† உளியென்பது மூன்றுவதன் பொருள்படுவதோ ரிடைச்சொல். ‡ வானும் நிலனுஞ் சேரத் தொழிற்பட்டு வளஞ்சுரக்கு மென்பதாம்.

தெளி:—(இ - ள்.) பெயலும் - பருவமழையும், விளையுளும் - (குறையாத) விளைவும், தொக்கு – (ஒருமித்து) கூடி, இயல்புளி - (நூல்கள் சொல்லிய) இயல்பால், கோலோச்சும் – செங்கோலைச் செலுத்தும், மன்னவன் - அரசனது, நாட்ட - நாட்டிலுள்ளனவாம், (எ - று).

உளியென்பது மூன்றும் வேற்றுமைச் சொல்லுருபு. (இயல்புளிக் கோலோச்சும் மன்னவனது நாட்டில்) வானமும் நிலமும் சேரத் தொழிற்பட்டு வளஞ்சுரக்கு மென்பதாம்.

(க - து.) நீதியுள்ள அரசனது நாட்டில் காலமழையுங் குறையாத விளைவும் உளவாகாநிற்கும் என்பது.

5. Rain and plentiful crops will ever dwell together in the country of the king who sways his sceptre with justice.

---

**சா. வேலன்று வென்றி தருவது மன்னவன்**
**கோலதூஉங் கோடா தெனின்.**

---

* பருவமழை - பெய்யவேண்டுங்காலத்தில் தவறாது பெய்யுமழை.

† உளியென்னுமிடைச்சொல் மூன்றும் வேற்றுமையின் கருவிப் பொருளில் வந்தது. இலக்கணக்கொத்து "எழுவாய் வேற்றுமைக் குருபேயின்று" என்னுஞ் சூத்திரத்தினுரையில் "கொண்டு, பொருட்டு, உடைய, உளி, மாறு, ஒடு, ஓடு, கண்முதலியனவும் உவமவுருபுகளும் சொல்லேயுருபானுற் போல வென்க" என்று கூறியிருத்தலு மிங்குக் கவனிக்கத்தக்கது.

‡ வான் தொழிற்பட்டு வளஞ்சுரத்தல்-மேகம் பெய்யவேண்டுங் காலத்தில் தவறாது மழைபெய்தல், நிலம் தொழிற்பட்டு வளஞ் சுரத்தல் - விளைநிலங்கள் விளையவேண்டுங்காலத்தில் ஒன்றுனுங் குறைவின்றி விளைதல்.

**பரி :—(இ - ள்.) மன்னவனுக்குப் போரின்கண் வென்றியைக் கொடுப்பது அவன் எறியும் வேலன்று, கோல்; அஃதும் *அப்பெற்றித்தாவது தான் கோடாதாயின், (எ - று).**

கோல் செவ்விதாயவழியே வேல் வாய்ப்பதென்பார் 'வேலன்று' என்றார். † "மாண்ட - வறநெறி முதற்றே யரசின் கொற்றம்" என்றார் பிறரும். ‡ கோடானென்பது பாடமாயின், கருவியின் தொழில் வினைமுதன்மே னின்றதாக வுரைக்க.

**தெளி :—(இ - ள்.)** மன்னவன் - அரசனுக்கு, வென்றிதருவது - (போரில்) வெற்றியைக் கொடுப்பது, வேலன்று - (அவனெறியும்) வேற்படையன்றாம், கோல் - (அவனது) செங்கோலாம், அதூஉம் - அச்செங்கோலும், (அத்தன்மையதாவது), கோடாதெனின் - (தான்) கோணுதிருக்குமாயின்.

கோல் செவ்விதாயவிடத்தே வேல் பயன்படுவதென்பார் 'வேலன்று' என்றார். கோல் - நீதி. செவ்விதாதல் - ஒரு பக்கத்திற் சாயாதிருத்தல்.

(க - து.) அரசனுக்கு வெற்றியைக் கொடுப்பது அவனது செங்கோலே யன்றி அவனெறியும் வேற்படையன்று என்பது.

It is not the javelin that gives victory, but the king's sceptre, if it does no injustice.

---

**எ. இறைகாக்கும் வையக மெல்லா மவனை**
**முறைகாக்கு முட்டாச் செயின்.**

**பரி :—(இ - ள்.) வையகத்தையெல்லாம் அரசன் காக்கும் ; அவன் தன்னை அவனது செங்கோலே காக்கும், $ அதனை □ முட்டுவந் துழியும் முட்டாமற் செலுத்துவனுயின், (எ - று).**

முட்டாமற் செலுத்தியவாறு ¶ மகனை முறைசெய்தான் கண்ணும்,

---

* அப்பெற்றித்தாவது - வெற்றியைக் கொடுப்பதாவது.

† புறநானூறு ருரு. இதன் பொருள் மாட்சிமைப்பட்ட வற நெறியை முதலாகவுடையது அரசரது வெற்றி என்பது.

‡ கோடான் என்பது பாடமானல் செங்கோலாகிய கருவியின் தொழில் மன்னவனுகிய வினைமுதல் (எழுவாய்) மேல் நின்றதாக வுரைத்துக் கொள்க என்பதாம். தொழிலென்றது கோணுதலை.

$ அதனை - செங்கோலை.

□ முட்ட (தடைப்பட) வந்துழியும் என்றும் பாடமுண்டு.

¶ திருவாரூரில் அரசு செலுத்திய மநுநீதிச்சோழன் தனது புத்திரனை வீதி விடங்கன் தேரேறிச் சென்றபோது அறியாது பசுவின் கன்றைக் கொன்றதற்காக, அப்புத்திரனைக் கீழே கிடத்தித் தேரை யவன் மேற் செலுத்திக்கொன்று மீண்டுங் கடவுளருளால் அப்புத்திரனுய்யப் பெற்று வாழ்ந்தானென்பது கதை. " ஒருமைந்தன் தன்குலத்துக்

* தன்கை குறைத்தான் கண்ணுங் காண்க. §முட்டாதென்பதன் இறுதிநிலை விகாரத்தாற் றொக்கது. இவை நான்குபாட்டானும் அதனைச் செலுத்தினான் எய்தும் பயன் கூறப்பட்டது.

தெளி :—(இ - ள்.) இறை - அரசனானவன், வையகமெல்லாம் - பூமியை யெல்லாம், காக்கும் - காப்பாற்றுவான், முறை - (அவனது) செங்கோலே, அவனை—, காக்கும் - காப்பாற்றுவதாகும், முட்டாச் செயின் - (அதனைத் தடை நேரிட்டவிடத்தும்) தடை நேரிடாமற் செலுத்துவானாயின், (எ - று).

செங்கோலை முட்டாமல் செலுத்திய விதத்தைத் தன்மகனைத் தேர்க்காலில் வைத்தூர்ந்த சோழனிடத்தும், அயலார் வீட்டுக் கதவைத் தட்டிய தன்கையைக் குறைத்த பாண்டியனிடத்துங் காண்க. முட்டாது என்பது விகுதிதொக்கு முட்டா என வந்தது. இவை நான்கு பாட்டாலும் செங்கோலைச் செலுத்தினான் அடையும் பயன் சொல்லப்பட்டது.

(க - து.) நீதி தவறாது உலகத்தைக் காக்கும் அரசனை அவனது செங்கோலே காக்கும் என்பது.

---

குள்ளானென் பதுமுணரான், தருமந்தன் வழிச்செல்கை கடனென்று தன் மைந்தன், மருமந்தன் தேராழி யுறவூர்ந்தான் மனுவேந்தன், அருமந்த வரசாட்சி யரிதோமற் றெளிதோதான்'' என்று பெரிய புராணங் கூறுவது மிங்கறியத்தக்கதாம். இக்கதையின் விரிவைப் பெரிய புராணம் திருவாரூர்ச் சிறப்பிற் காண்க. முறை - நீதி.

* மதுரையில் அரசு செலுத்திய பாண்டியர்களுள் ஒருவன் தன்பாலடைக்கலமாக வைத்துச் சென்ற ஒரு வேதியனது மனைவியைப் பாதுகாத்துவரும் நாளில், ஓரிராத்திரி நகர்சோதனை வரும்போது தன் பாலடைக்கலமாகவுள்ள வேதியனது மனையாள் வீட்டில் ஆண்குரல் கேட்டுச் சந்தேகங்கொண்டு, உள்ளே யார் என்று கதவைத் தட்டினான்? தட்டவே, அன்று வந்து சேர்ந்த அவ்வேதியன் தட்டுபவன் யார் என்று கேட்க, அரசன் அச்சங்கொண்டு அங்குள்ள வீடுகளின் கதவுகளை யெல்லாம் தட்டிக்கொண்டேபோய் அரண்மனை சேர்ந்து, விடிந்தவுடன் காலைக்கடனை முடித்துச் சபைக்குச் சென்று மந்திரி புரோகிதர்களை நோக்கித் தனித்திருக்கும் மகளிருள்ள வீட்டின் கதவை நடுராத்திரியிற் சென்று தட்டினவனை யென்ன செய்யலாமென்று கேட்டான். அதற்கு அவர்கள் அவனது கையை வெட்டிவிட வேண்டுமென்றனர். உடனே அரசன் தன்கையை வாளால் வெட்டிக்கொண்டு நடந்த சமாச்சாரத்தைக் கூறிப் பொன்னாற் கை யொன்று செய்து தரித்துக்கொண்டு பொற்கைப் பாண்டியன் என்னும் பெயரோடு விளங்கினானென்பது கதை. இவனது இயற்பெயர் குலசேகரப் பெருமான் என்று கூறப்படுகின்றது. '' எனக்குத் தகவன்றா லென்பதே நோக்கித், தனக்குக் கரியவான் றானாய்த் தவற்றை, நினைத்துத் தன் கைகுறைத்தான் றென்னவனு (பாண்டியனு)ங் காணார், எனச்செய்யார் மாணா வினை'' என்று பழமொழி கூறுவது மிங்குக் கவனிக்கத் தக்கதாம்.

§ முட்டாது என்னும் எதிர்மறை வினையெச்சத்தின் இறுதி நிலை (துவ்விகுதி) செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது.

7. The king defends the whole world; and justice, when it is administered without defect, defends the king.

---

**அ. எண்பதத்தா னோரா முறைசெய்யா மன்னவன்**
**றண்பதத்தாற் றானே கெடும்.**

**பரி:—(இ-ள்.)** * **முறைவேண்டினர்க்கு † எளிய செவ்வியையுடை-யனாய் ‡ அவர் சொல்லியவற்றை || நூலோர் பலரோடும் ஆராய்ந்து நின்ற வுண்மைக்கொப்ப முறைசெய்யாத அரசன் தாழ்ந்த பதத்திலே நின்று தானே கெடும், (எ – று).**

*$ எண்பதத்தான் என்னும் முற்றுவினையெச்சமும், ஓரா வென்னும் வினையெச்சமும் செய்யாவென்னும் பெயரெச்ச எதிர்-மறையுட் செய்தல் வினை கொண்டன. தாழ்ந்தபதம் – பாவமும் பழியும் எய்திநிற்கும் நிலை. ¶ "அல்லவை செய்தார்க் கறங்கூற்றம்" ஆகலின் பகைவர் இன்றியுங் 'கெடும்' என்றார். இதனால் § முறை செலுத்தாதானது கேடு கூறப்பட்டது.*

தெளி:—(இ – ள்.) (முறைவேண்டி வழக்கறிவிப்பவர்க்கு) *எண்பதத்தான் – எளிய சமயத்தை யுடையவனாய், ஓரா –* (அவர் *சொல்லியவற்றை நூலோர் பலரோடும்*) ஆராய்ந்து, *முறைசெய்யா -* (நின்ற உண்மைக்குப் பொருந்த) *முறைசெய்யாத, மன்னவன் – அரசன், தண்பதத்தால்–தாழ்ந்த பதத்திலே,* (நின்று), *தானேகெடும்- தானே கெடுவான்,* (எ-று).

*வினையெச்சப் பொருளில் வந்த எண்பதத்தானென்னு முற்றும், ஓராவென்னும் வினையெச்சமும், செய்யாவென்னும் ஈறுகெட்ட எதிர் மறைப் பெயரெச்சத்தின் செய்தலென்னும் முதனிலை கொண்டு*

---

* *முறைவேண்டினர்க்கு – பிறர் தமக்குச் செய்த தீமையைக்கூறி நீதியை விரும்பினவருக்கு.*

† *எளிய செவ்வியை யுடையனாதல் – கொலுமண்டபத்தில் அந்தணர் சான்றோ ருள்ளிட்டாரோடு யாவருங்கண்டு தங்குறைகளைச் சொல்லுவதற்கு எளிய சமயத்தை யுடையவனாயிருத்தல். ‡ அவர் - முறைவேண்டினோர்.*

|| *நூலோர் - அமைச்சர் முதலாயினோர்.*

*$ எண்பதத்தான் என்னும் முற்று வினையெச்சமும் (எண்பதத்தா னென்னுங் குறிப்புவினைமுற்று இங்கு வினையெச்சப் பொருளில் வந்தது), ஓரா என்னும் (செய்யா என்னும் வாய்பாட்டிறந்தகால) வினையெச்சமும், செய்யா என்னும் (ஈறுகெட்ட எதிர்மறைத் தெரிநிலைப்) பெயரெச்சத்தின் முதனிலையான செய்தல் என்பதனைக் கொண்டன என்பது. வினைப்பகுதியெல்லாம் தொழிற் பெயரா மென்பது முன்னரே எழுதப்பட்டிருக்கின்றது.*

¶ *நான்மணிக்கடிகை. 85, இதன் பொருள். அறமல்லாத காரியங்களைச் செய்தவருக்கு அறம் யமனாகும் என்பது.*

§ *முறை செலுத்தாதானது – நீதியைச் செலுத்தாத அரசனது.*

முடிந்தன. தாழ்ந்தபதம்–பாவமும் பழியும் அடைந்து நிற்கும் நிலை தீய காரியங்களைச் செய்தவர்க்குத் தருமம் யமனாயிருத்தலால் பகைவரில்லாதிருந்தாலும் (முறைசெய்யா மன்னவன்) 'தானே கெடும்' என்றார். இதனால் முறைசெலுத்தாதவனது கேடு சொல்லப்பட்டது.

(க-து.) முறைவேண்டினார்க்கு எளிய சமயத்தை யுடையவனாய் நூலோர் பலரோடு மாராய்ந்து முறைசெய்யாத அரசன் ஒருவர் கெடுக்கவேண்டாது தானேகெடுவான் என்பது.

8. The king who gives not facile audience to those who approach him, and who does not examine and pass judgment on their complaints, will perish in disgrace.

---

௯. **குடிபுறங் காத்தோம்பிக் குற்றம் கடிதல்**
**வடுவன்று வேந்தன் றொழில்.**

பரி :— (இ - ள்.) குடிகளைப் † பிறர் நலியாமற் காத்துத் தானும் நலியாது பேணி, ‡ அவர்மாட்டுக் குற்ற நிகழின் § அதனை ஒறுப்பான் ஒழித்தல் வேந்தனுக்குப் பழியன்று, தொழில் ஆகலான், (எ–று).

துன்பஞ்செய்தல், பொருட்கோடல், கோறலென ஒறுப்பு மூன்று; அவற்றுள், ஈண்டைக்கெய்துவன முன்னையவென்பது 'குற்றங்கடிதல்' என்பதனாற்பெற்றாம். தன்கீழ் வாழ்வாரை ஒறுத்தல் அறனன்மையின் வடுவாமென்பதனை ஆசங்கித்து, $ அஃதாகாது, அரசனுக்கு அவரை அக் குற்றத்தினீக்கித் தூயராக்குதலுஞ் ¶ சாதிதரும மென்றார்.

தெளி :—(இ - ள்.) குடி – குடிகளை, புறங்காத்து – (பிறர் வருத்தாமற்) காத்து, ஓம்பி – (தானும்வருத்தாமல்) ஆதரவுசெய்து, குற்றம் – (அவரிடத்தில்) குற்றம் (உண்டானால்), கடிதல் – (அக் குற்றத்தைத் தண்டத்தால்) ஒழித்தல், வேந்தன்றொழில் – அரசனது தொழிலாம், (ஆதலால் அஃதவனுக்கு), வடுவன்று – பழியாகாது, (எ - று).

துன்பஞ்செய்தல், பொருளைக் கொள்ளுதல், கொல்லுதல் என ஒறுப்பு(தண்டம்) மூன்றாம்; அம்மூன்றனுள் இவ்விடத்திற்குப் பொருந்துவன முன்னுள்ள துன்பஞ் செய்தல் பொருளைக் கொள்ளுத-லென்னு மிரண்டு மென்பது 'குற்றங்கடிதல்' என்று கூறியதினால்

---

† பிறரென்றது பகைவர், கள்வர், சுற்றத்தார், வினைசெய்வார் முதலாயினோரை. ‡ அவர்மாட்டு – குடிகளிடத்து.

§ அதனை யொழிப்பா னொறுத்தல் என்றும் பாடமுண்டு.

$ அஃதாகாது – ஒறுத்தல் (குற்றஞ்செய்தவரைத் தண்டித்தல்) பழிப்பாகாது.

¶ சாதிதரும மென்பார் 'வடுவன்று வேந்தன் றொழில்' என்றார் என்றும் பாடமுண்டு.

தன்கீழ் வாழ்வாரை ஒறுத்தல் அறமாகாமையால் வடுவாமென்பதனை ஆட்சேபமாக்கிக்கொண்டு, அது வடுவாகாது, அரசனுக்கு அவரை அக்குற்றத்தினின்று நீக்கிப் பரிசுத்தராக்குதலுஞ் சாதிதருமமென்பார் 'வடுவன்று வேந்தன் தொழில்' என்றார்.

(க - து.) அரசனது தொழில் குடிகளைப் பாதுகாத்து அவர்களிடத்துண்டாகுங் குற்றங்களை அவர்களைத் தண்டித்தொழித்தலாம் என்பது.

9. In guarding his subjects against injury from others, and in preserving them himself, to punish crime is not a fault in a king, it is his duty.

---

**௬௦. † கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ் களைகட் டதனொடு நேர்.**

**பரி:— (இ - ள்.) அரசன் கொடியவர்களைக் () கொலையான் ஒறுத்துத் தக்கோரைக் காத்தல், உழவன் களையைக் களைந்து பைங்கூழைக் காத்ததனோடொக்கும், (எ — று).**

கொடியவரென்றது ‡ தீக்கொளுவுவார், நஞ்சிடுவார், கருவியிற் கொல்வார், கள்வர், ஆறலைப்பார், சூறைகொள்வார், பிறனில் விழைவாரென்றிவர் முதலாயினாரை. இவரை வடநூலார் ஆததாயிகளென்ப. ¶ இப்பெற்றியாரைக் கண்ணோடிக் கொல்லாவழிப் புற்களைக்கு அஞ்சாநின்ற பைங்கூழ் போன்று நலிவுபலவெய்தி உலகு இடர்ப்படுதலின், கோறலும் அரசர்க்குச் சாதிதருமமென்பதாயிற்று. இவை யிரண்டுபாட்டானுஞ் செங்கோல் செலுத்தும்

---

† "பயிரிடுகின்றவன் பயிருடனுண்டாய புல்முதலியவற்றைப் பிடுங்கிவிட்டுப் பயிர்களைக்காப்பாற்றுவதுபோல அரசன் தன் தேசத்திலுண்டான துஷ்டர்களைத் துரத்திவிட்டு நல்லோர்களைக் காப்பாற்றல்வேண்டும்" என்பது மனுதர்மசாஸ்திரம் ஏழாவது அத்தியாயம்.

() கொலையான் ஒறுத்து - கொலைசெய்தலால் தண்டித்து.

‡ "(வீட்டுக்கு) நெருப்புவைத்தவன், (அன்னத்தில்) விஷங் கலந்தவன், ஆயுதத்தினல் கொல்லவந்தவன், பொருளையபகரித்தவன், பூமியையபகரித்தவன், மனைவியையபகரித்தவனென்னும் இவ்வறுவரும் ஆததாயிகளென்று சொல்லப்படுவர். எதிர்ப்பட்ட ஆததாயிகளை விசாரிக்காமலே கொல்லல்வேண்டும். ஆததாயிகளைக் கொன்றவனுக்கு யாதொருதோஷமுமில்லை" என்று பத்ம புராணம் சிருஷ்டி காண்டத்தில் கூறுகின்றது.

¶ "மாநிலங்கா வலனாவான் மன்னுயிர்காக் குங்காலைத், தானதனுக்கிடையூறு தன்னாற்றன் பரிசனத்தால், ஊனமிகு பகைத்திறத்தாற் கள்வரா லுயிர்தம்மால், ஆனபய மைந்துந்தீர்த் தறங்காப்பா னல்லனோ" என்று பெரிய புராணம் கூறுவது மிங்கறியத்தக்கதாம்.

† வெண்குடை வேந்தர்க்குத் ‡ தீயார்மாட்டு மூவகையொறுப்பும் ஒழியற்பாலவல்ல வென்பது கூறப்பட்டது.

தெளி : – (இ – ள்.) வேந்து – அரசனுனவன், கொடியாரை - கொடியவர்களை, கொலையின் - கொலையினுல், ஒறுத்தல் - தண்டித்தல், (தண்டித்து நல்லோரைக் காப்பாற்றல்), (உழவனுனவன்), பைங்கூழ் – பயிரை, களைகட்டதனொடு – களையைக் களைந்து காப்பாற்றலோடு, நேர் – ஒக்கும்.

கொடியவ ரென்றது தீக்கொளுவுவார், நஞ்சிடுவார், படையிற் கொல்வார், கள்வர், வழியலைப்பார், கொள்ளையிடுவார், பிறனில்லாளை விரும்புவார் என்ற இவர் முதலாயிஞேரை. இவரை வடநூலார் ஆததாயிகளென்பர். இத்தன்மை யுடையவரைத் தாட்சண்யஞ் செய்து கொல்லாத விடத்துப் புல்லுக்களைக்கு அஞ்சாநின்ற பயிர்போன்று வருத்தம் பலவற்றை யடைந்து உலகத்தார் துன்பப்படுவராதலால், கொல்லுதலும் அரசனுக்குச் சாதி தருமமென்பதாயிற்று. இவை இரண்டுபாட்டாலும் செங்கோல் செலுத்தும் வெண்கொற்றக் குடையையுடைய அரசனுக்குத் தீயோரிடத்து மூவகைத் தண்டமும் ஒழிக்கத்தக்கனவல்ல வென்பது சொல்லப்பட்டது. களைகட்டல் – புல்முதலிய களைகளைப் பிடுங்கி யெறிதல்.

(க - து.) அரசன் கொடியவரைத் தண்டித்து நல்லவரைக் காப்பது உழுது பயிர்செய்வோன் களையைப்பிடுங்கிப் பயிரைக் காப்பதுபோலாம் என்பது.

10. For a king to punish criminals with death, is like pulling up the weeds in the green corn.

---

## பதினெட்டாம் அதிகாரம்

### 56 கொடுங்கோன்மை — On Unjust Government.

பரி :— அஃதாவது ¶ அம்முறையினது கோடுதற் றன்மை ஈண்டும்

---

† வெண்குடை – அரசனது வெற்றிக்கு அடையாளமாயுள்ளவற்றுள் ஒன்று. இது கலிங்கத்துப்பரணி அவதாரத்தில் "குவிகைகொ டரசர் சுற்றிய குரைகழ லபயன் முத்தணி, கவிகையினில வெறித்தது கலியெனுமிரு ளொளித்ததே" என்று கூறுவதாலு முணரப்படும்.

‡ கொடியவர்களிடத்தில் துன்பஞ்செய்தல், பொருளைக் கொள்ளுதல், கொல்லுதல் என்னும் மூவகைத்தண்டமும் ஒழிக்கத் தக்கனவல்லவென்பது சொல்லப்பட்டது என்பதாம்.

¶ அம்முறையினது - அச்செங்கோலினது. (முறை - நீதி).

உவமையின் பெயர் * பொருண்மேலாயிற்று. செங்கோன்மைக்கு மாறுகலின், † இஃது ¶¶ அதன்பின் வைக்கப்பட்டது.

தெளி:—அஃதாவது அம்முறையினது கோணுதற்றன்மையாம். இங்கும் உவமானமான கொடுங்கோலின் பெயர் உவமேயமான அநீதியின் மேலாயிற்று. செங்கோன்மைக்கு மாறுகலால், இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

———

**க. கொலைமேற்கொண் டாரிற் கொடிதே யலைமேற்கொண் டல்லவை செய்தொழுகும் வேந்து.**

பரி:—(இ-ள்.) பகைமைபற்றிக் கொல்லுதற் றொழிலைத் தம்மேற் கொண்டொழுகுவாரினுங் கொடியன், பொருள் வெஃகிக் குடிகளை ‡ அலைத்தற் றொழிலைத் தன்மேற்கொண்டு ¶ முறையல்லவற்றைச் செய் தொழுகும் வேந்தன், (எ-று).

() அவர் செய்வது ஒரு பொழுதைத் துன்பம், £ இவன் செய்வது எப்பொழுதுந் துன்பமாமென்பது பற்றி † 'கொலைமேற்கொண் டாரிற்கொடிதே' என்றார். $ பான்மயக்குறழ்ச்சி. வேந்தென்பது உயர்திணைப் பொருட்கண் வந்தஅஃறிணைச் சொல். அலை கொலை யினுங் கொடிதென்பதாயிற்று.

தெளி:—(இ-ள்.) அலை - (பொருளை விரும்பிக் குடிகளை) அலைத்தற் றொழிலை, மேற்கொண்டு - (தன்) மேற்கொண்டு, அல்லவை - முறை

---

* பொருள் உவமேயம்.

† இஃது - கொடுங்கோன்மை. ¶¶ அதன் - செங்கோன்மையின்.

‡ அலைத்தல்-வருத்துதல். ¶ முறையல்லவற்றை - அநீதிகளை.

() அவர் - பகைமைபற்றிக் கொல்லுதற் றொழிலைத் தம்மேற் கொண்டு நடப்பவர். £ இவன் - அரசன்.

† அவரினுங் கொடியன் என்றார் என்றும் பாடமுண்டு.

$ அலைமேற்கொண் டல்லவை செய்தொழுகும் வேந்து என்னும் ஒருமைப்பாலுக்குக் கொலைமேற்கொண்டாரென்னும் பன்மைப்பால் உவமானமாக வந்து உறழ்ந்து நின்றமையின், பால்மயக் குறழ்ச்சி யாயிற்றெனக. [ஒருமைப்பாலுக்கு ஒருமைப்பாலே உவமானமாக வாராது பன்மைப்பால் உவமானமாக வந்தும், கொண்டாரின் என்பதன்கணுள்ள (ஐந்தாம் வேற்றுமை) இன்னுருபு போல என்று ஒப்புப்பொருளில் வாராது, காட்டிலும் என்னும் உறழ்ச்சிப்பொருளில் வந்தும் நின்றமையின், ஒருமைப்பால் பன்மைப்பாலோடு மயங்கிய தாயும் இன்னுருபு உறழ்ச்சியதாயு மாயினவெனக. ஒன்றினொன்று மிக்கு (சமமாகாது) மாறுபடுவது உறழ்ச்சியெனப்படும். உறழ்ச்சி யெனினும் உறழ்பொருள் எனினும் ஒக்கும்]. "முதலுஞ் சினையுமென் றுயிரு பொருட்கு" என்னும் (தொல்காப்பியச்) சூத்திரத்தின் விசேடவுரையில் "கடம்பமர் நெடுவே ளன்ன மீளி, யுடம்பிடித் தடக்கையோடா வம்பலர்' என்பது ஒருமைப் பன்மை மயங்கிற்று" என்று நச்சினார்க்கினியர் கூறியது மிங்கறியத்தக்கதாம்.

யல்லாதவற்றை, செய்தொழுகும் – செய்து நடக்கும், வேந்து – அரசனானவன், கொலை – (பகைமைபற்றிக்) கொல்லுதற்றொழிலை, மேற்கொண்டாரின் – (தம்) மேற்கொண்டு நடப்பவரினும், கொடிதே – கொடியனாவான்.

அவர் செய்வது ஒரு நாளைத்துன்பம், இவன் செய்வது எந்நாளும் துன்பமாமென்பது பற்றிக் 'கொலைமேற்கொண் டாரிற் கொடிதே' என்றார். இது பன்மைப்பா லுவமானத்திற்கு ஒருமைப்பா லுவமேயமாகவந்த பால்மயக்குறழ்ச்சி. கொண்டாரின் என்னும் இன் உருபு உறழ்ச்சிப் பொருளில் வந்தது. வேந்து என்பது உயர்திணைப் பொருளில் வந்த அஃறிணைச்சொல். அலைத்தல் கொலையினுங் கொடியதென்பதாயிற்று.

(கூ-து.) அநீதி செய்தொழுகு மரசன் பகைமைபற்றிக் கொலை செய்பவர்களிலுங் கொடியவனாவன் என்பது.

1. More cruel than the man who lives the life of a murderer, is the king who gives himself to oppress and act unjustly towards his subjects.

———

உ. † வேலொடு நின்றா னிடுவென் றதுபோலுங்
கோலொடு நின்றா னிரவு.

பரி:—(இ-ள்.) ஆறலைக்குமிடத்துத் தனியே வேல்கொண்டு நின்ற கள்வன் ஆறுசெல்வானை நின்கைப் பொருள் தாவென்று வேண்டுதலோடு ஒக்கும், ஒறுத்தற்றொழிலோடு நின்ற அரசன் குடிகளைப் பொருள் வேண்டுதல், (எ-று).

'வேலொடு நின்றான்' என்றதனாற் ‡ பிறரொடு நில்லாமையும், ¶'இரவு' என்றதனால் * இறைப்பொருள் அன்மையும் பெற்றாம். தாராக்கால் ஒறுப்பலென்னுங் குறிப்பினனாகலின், இரவாற் கோடலுங் கொடுங்கோன்மையாயிற்று. இவை யிரண்டுபாட்டானுங் கொடுங்கோன்மையது குற்றங் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) கோலொடு–தண்டித்தற்றொழிலோடு, நின்றான்–நின்றஅரசன், இரவு – (குடிகளைப்பொருள்) வேண்டுதலானது, (வழியில் அலைத்துப் பொருள் பறிக்குமிடத்துத் தனியே), வேலொடு–வேற்படைகொண்டு, நின்றான் – நின்றகள்வன், இடுவென்றது போலும் – (வழிப்போக்கனை யுன்கைப்பொருளைத்) தாவென்று வேண்டுவதோடு ஒக்கும், (எ-று).

'வேலொடு நின்றான்' என்றதனால் பிறரொடு நில்லாமையும் 'இரவு' என்றதனால் இறைப்பொரு ளல்லாமையும் பெறப்பட்டன.

---

† உறையில் வாளொடு மாவழங் குறுவனத்தோடி, மறவனோர் பொருட்டருகென விரத்தலை மானும், இறைவன் வாழ்குடி தன்னிலொன்றொரு பொரு ளிரத்தல்'' என்று பிரபுலிங்கலீலை கூறுவது மிங்கறியத்தக்கதாம்.

‡ பிறர் என்றது அமைச்சர் புரோகிதர்களை. ¶ இரவு-யாசகம்.

* இறைப்பொருள் – வரிப்பணம்.

(பொருள்) தாராவிட்டால் தண்டிப்பேனென்னுங் குறிப்புடையவ னுதலால் இரத்தலினுல் (பொருளை) வாங்குதலும் கொடுங்கோன்மை யாயிற்று. இவை யிரண்டுபாட்டாலுங் கொடுங்கோன்மையினது குற்றஞ் சொல்லப்பட்டது. அலைத்தல்-அடித்து வருத்துதல்.

(க-து.) கொடுங்கோலரசன் குடிகளைப் பொருள்வேண்டுதல் திருடன் வழிப்போக்கனைப் பொருள் வேண்டுதலை யொக்கும்.

2. The request for money of him who holds the sceptre is like the word of a robber who stands with a weapon and says "give up your wealth".

---

**ந. நாடொறு நாடி முறைசெய்யா மன்னவ
னுடொறு நாடு கெடும்.**

**பரி:—(இ-ள்.) தன்னுட்டு நிகழுந் தீமைகளை நாடோறும் ஆராய்ந்து *அதற்கொக்க முறைமையைச் செய்யாத அரசன் நாடோறும் நாடிழக்கும், (எ - று).**

அரசனுக்கு நாடு † உறுப்பாகலின், ‡ அதன்வினை அவன்மே னின்றது. இழத்தல் - பயனெய்தாமை. ¶ மன்னவனுடு நாடொறுங் கெடுமென்றுரைப்பாரும் உளர்.

தெளி:— (இ - ள்.) நாடொறும் - தினந்தோறும், நாடி - (தன்னுட்டில் உண்டாகுந் தீமைகளை) ஆராய்ந்து, (அதற்கு ஒக்க), முறை - முறைமையை, செய்யா - செய்யாத, மன்னவன் - அரசன், நாடொறும் - தினந்தோறும், நாடுகெடும் - நாடிழப்பான், (எ - று).

அரசனுக்கு நாடு உறுப்பாகலால், அந்நாட்டின் கெடுதற்றொழில் அவன்மேல் நின்றது. இழத்தல் - (நாட்டின்) பயனடையாமை.

---

* அதற்கொக்க -அவ்வாராய்ச்சிக்குப் பொருந்த.

† அமைச்சு நாடு அரண் பொருள் படை நட்பென்னும் ஆறங்கங்களுள் நாடும் ஒருறுப்பா யிருத்தல் காண்க.

‡ அதன்வினை (நாட்டினது கேடு) அவன்மேனின்றது (அரசன்மேல் நின்றது). மன்னவன் நாடு கெடும் என்பது நம்பி நாடு பெரியன் என்முற்போன்ற திணைவழுவமைதியாம். இங்கு நாடாகிய வுறுப்பினது கெடுதலாகிய தொழில் முதலாகிய அரசன் மேல் நின்றதென்க; மன்னவன் நாடு கெடும் என்பதற்கு அரசன் நாட்டின் பயனை யடையமாட்டானென்பது கருத்தாமென்க.

¶ அரசன் நாடு தினந்தோறும் இழக்கும் என்று (மன்னவனுடொறு நாடு கெடும் என்பதற்குப்) பொருளுரைப்பாரு முண்டென்பது. இதற்கு அரசன் தனது நாட்டினைத் தினந்தோறுஞ் சிறிது சிறிதாக இழக்கப்பெறுவான் என்பது கருத்தாம்.

(க - து.) தன்னுட்டி லுண்டாகுந் தீமைகளை நாள்தோறு மாராய்ந்து செங்கோல் செலுத்தாத அரசன் ஒவ்வொருநாளுந் தனது நாட்டினை யிழப்பான் என்பது.

3. The country of the king will daily fall to ruin, who does not daily examine into and punish crimes.

---

ச. * கூழுங் குடியு மொருங்கிழக்குங் கோல்கோடிச்
சூழாது செய்யு மரசு.

பரி :—(இ - ள்.) † மேல்விளைவது எண்ணுது முறை தப்பச் செய்யும் அரசன் ‡ அச்செயலான் முன்னீட்டிய பொருளையும் பின்னீட்டுதற் கேதுவாகிய குடிகளையுஞ் சேர விழக்கும், (எ - று).

¶ கோடவென்பது திரிந்து நின்றது. முன்னீட்டிய பொருள் இழத் தற்கேது வருகின்ற பாட்டாற் கூறுப.

தெளி :—(இ - ள் ) சூழாது - (மேல்விளைவை) எண்ணுமல், கோல் கோடி - முறைதப்ப, செய்யும்—, அரசு - அரசனுனவன், (அச்செய லால்), கூழும் - (முன் சம்பாதித்த) பொருளையும், குடியும் - ( பின் அப்பொருளைச் சம்பாதித்தற்குக் காரணமாகிய ) குடிகளையும், ஒருங்கு - ஒருசேர, இழக்கும் - இழப்பான், (எ - று).

கோடவென்னும் வினையெச்சம் கோடியெனத் திரிந்து நின்றது. முன் சம்பாதித்த பொருளை இழத்தற்குக் காரணம் வருகிற பாட்டாற் சொல்லுவார்.

(க - து.) பின்வருவதைக் கருதாது முறைதப்ப நடக்குமரசன் பொருளையும் குடிகளையும் இழப்பான் என்பது.

4. The king, who, without reflecting on its evil consequences, perverts justice, will loose at once both his wealth and his subjects.

---

ரு. $ அல்லற்பட் டாற்று தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை.

---

* கூழ் - உணவு. கூழிற்குக்காரணமாய பொருளைக் கூழ் என்றது காரியவாகு பெயராம் † மேல் விளைவது - பின்னுண்டாவது.

‡ அச்செயலான் – முறை (நீதி) தப்ப (தவற)ச் செய்தலால்.

¶ கோலினது வினையாகிய கோடி யென்னும் (செய்து என்னும் வாய்பாட்டு வினை) எச்சம் அரசனது வினையாகிய செய்யும் என் பதைக் கொண்டு முடிதற்கு விதியில்லாமையின், ‘கோட வென்பது (கோடியெனத்) திரிந்து நின்றது’ என்று கூறப்பட்டது.

$ “ இருவர்தஞ் சொல்லையு மெழுதரங் கேட்டே, இருவரும் பொருந்தவுரையாராயின், மனுமுறை நெறியின் வழக்கிழந் தவர்தாம்.

**பரி:— (இ-ள்.) அரசன் முறைசெய்யாமையாற் குடிகள் துன்பமுற்று அதனைப் பொறுக்கமாட்டாது அழுத கண்ணீ † ரன்றே அவன் செல்வத்தைக் குறைக்கும் கருவி, (எ-று).**

*அழுதகண்ணீர் - அழுதலான் வந்த கண்ணீர். செல்வமாகிய மரத்தை யென்னுமையின், இஃது ஏகதேசவுருவகம். ‡ அல்லற் படுத்திய பாவத்தது தொழில் அதற்கேதுவாகிய கண்ணீர் மேனின்றது. அக்கண்ணீரிற் கொடிது பிறிதின்மையின், செல்வங் கடிதிற் றேயுமென்பது கருத்து.*

*தெளி :—(இ-ள்.) செல்வத்தை - (அரசனது) செல்வமாகிய மரத்தை, தேய்க்கும் - குறைக்கும், படை - வாளாவது, (அவன் முறைசெய்யாமையினுல்), அல்லற்பட்டு - (குடிகள்) துன்பமடைந்து, ஆற்ருது - (அத்துன்பத்தைப்) பொறுக்கமாட்டாமல், அழுதகண்ணீ ரன்றே - அழுதலால் வந்த கண்ணீரல்லவா, (எ-று).*

*கண்ணீரைப் படையாக உருவகஞ் செய்தவர் அதற்கேற்பச் செல்வத்தை மரமென்றுருவகஞ் செய்யாமையின், இஃதேகதேச வுருவகவணியாம். அல்லற்படுத்திய பாவத்தினது தொழில் அதற்குக் காரணமாகிய கண்ணீர் மேல் நின்றது. அக்கண்ணீரைக்காட்டிலும் கொடியது வேறில்லாமையால், செல்வம் விரைந்து கெடுமென்பது கருத்து.*

*(க-து.) கொடுங்கோலரசனது செல்வத்தை விரைவாக ஒழிப்பது அவனது குடிகள் அழுத கண்ணீராம் என்பது.*

5. Will not the tears, shed by a people who cannot endure the oppression which they suffer from their king, become a saw to waste away his wealth ?

---

**கூ. மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை யஃதின்றேன்
மன்னுவா மன்னர்க் கொளி.**

**பரி:—(இ ள்.) அரசர்க்குப் புகழ்கள்தாம் நிலைபெறுதல் செங் கோன்மையான் ஆம் ; அச்செங்கோன்மை யில்லையாயின், அவர்க்கு அப்புகழ்கள்தாம் உளவாகா, (எ-று).**

---

*மனமுற மறுகிநின் றழுத கண்ணீர், முறையுறத் தேவர் மூவர் காப்பினூஉம், வழிவழி யீர்வதோர் வாளா கும்மே" என்று வெற்றி வேற்கை கூறுவது மிங்கறியத் தக்கதாம்.*

*† அன்றே என்பது நிச்சயத்தையுணர்த்தி நின்றது.*

*‡ துன்பப்படுத்திய பாவத்தினது தொழில் அப்பாவத்தொழில் வெளிப்படுவதற்குக் காரணமான கண்ணீர்மேல் நின்றது. துன்பப் படுத்திய பாவத்தினது தொழிலை அத்தொழில் வெளிப்படுவதற்குக் காரணமாய கண்ணீர் என்று கூறியது ஒரு பொருளின் வினை (பாவத் தினது தொழில்) மற்ருெரு பொருளா(கண்ணீரா)ன உபசார வழக்காம்.*

* விகாரத்தாற்றொக்க மூன்றுவது விரித்து ஆக்கம் வருவித் துரைக்கப்பட்டது. மன்னுதற்கேது புகழாதல் [ "இந்நிலத்து மன்னுதல் வேண்டினிசைநடுக" என்பதனானும் அறிக. மன்னுமை - ‡ ஒருகாலும் நிலையாமை. பழிக்கப்பட்டால் ஒளி மன்னுவாம்; ஆகவே, தாமும் மன்னு ரென்பதாயிற்று. வென்றி, கொடை ¶ முதலிய ஏதுக்களாற் புகழ் பகுதிப்படுதலின், பன்மையாற் கூறினர். அவையெல்லாம் செங்கோன்மை யில்வழி இலவாமென்பதாம். இவை நான்கு பாட்டானுங் கொடுங்கோலனாயினான் எய்துங் குற்றங்கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) மன்னர்க்கு - அரசர்க்கு, மன்னுதல் -(புகழ்கள் தாம்) நிலைபெறுதல், செங்கோன்மை - செங்கோன்மையால் (ஆம்), அஃது - அச்செங்கோன்மை, இன்றேல் - இல்லையாயின், மன்னர்க்கு - அவ்வரசர்க்கு, ஒளி - அப்புகழ்கள் தாம், மன்னுவாம் - உண்டா காவாம்.

செங்கோன்மை யென்பதன்கண் செய்யுள் விகாரத்தாற்றொக்கு நின்ற ஆல் என்னும் மூன்றும் வேற்றுமையுருபை விரித்து ஆம் என்னும் ஆக்கச்சொல் வருவித்துச் சொல்லப்பட்டது. அரசர் பூமியில் நிலைபெறுதற்குக் காரணம் புகழாம். மன்னுமை (புகழ்கள்) ஒரு போதும் நிலைத்திராமை. (குடிகளால் அரசர்) பழிக்கப்பட்டால், (அவர்க்கு) ஒளி (புகழ்கள்) நிலைபெறுவாம்; நிலைபெறுவாகவே, தாமும் (அரசரும்) நிலைபெறுரென்பது பெறப்பட்டது. வெற்றி, கொடை முதலாகிய ஏதுக்களால் புகழ் பலவகைப் படுதலால் ஒளி மன்னுவாம் எனப்பன்மையாற் சொல்லினர். அப்புகழ்களெல்லாம் செங்கோன்மை (நீதி) யில்லாதவிடத்து இல்லையாமென்பதாம். இவை நான்குபாட்டாலும் கொடுங்கோன்மை யுடைய அரச னையுங் குற்றஞ் சொல்லப்பட்டது.

(க-து.) புகழ் செங்கோலுடைய அரசர்க்கன்றிக் கொடுங் கோலுடைய அரசர்க்குண்டாகாது என்பது.

6. Righteous government gives permanence to the fame of kings; without that their fame will have no endurance.

---

**எ. துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்த**
**னளியின்மை வாழு முயிர்க்கு.**

---

* செங்கோன்மையென்பது ஆன் என்னும் மூன்றும் வேற்றுமை யுருபு தொக்கு நின்றமையின், அதனை (செங்கோன்மையான் என) விரித்து ஆம் என்னும் ஆக்கச்சொல் வருவித்துச் சொல்லப்பட்டது.

[ நான்மணிக்கடிகை 15. இதன் பொருள், இந்தப் பூமியில் நிலைபெறுதலை விரும்பினால் கீர்த்தியை ஸ்தாபிக்கக்கடவன் என்பது.

‡ ஒருகாலும் நிலையாமை - சிறிதுபோதும் நிலைத்திராமை.

¶ முதலிய என்றமையின், கல்வி ஆண்மை முதலியவற்றையுங் கொள்க.

பரி :—(இ-ள்.) மழை யில்லாமை வையத்து வாழும் உயிர்கட்கு எவ்வகைத் துன்பம் பயக்கும், அவ்வகைத் துன்பம் பயக்கும் அரசன் £ தண்ணளி யில்லாமை அவனாட்டு வாழுங் குடிகட்கு, (எ-று).

† சிறப்புப் பற்றித் துளியென்பது மழைமேனின்றது; ‡ உயிரென்பது குடிகண்மேனின்றது. மேல் ¶ "வானோக்கிவாழும்" என்றதனை $ எதிர்மறைமுகத்தாற் கூறியவாறு.

தெளி :—(இ-ள்.) வேந்தன் - அரசனது, அளியின்மை - அருளில்லாமையானது, வாழும் - (அவனாட்டில்) வாழும் உயிர்க்கு - குடிகளுக்கு, துளியின்மை - மழை இல்லாமையானது, ஞாலத்திற்கு - பூமியில் வாழு முயிர்களுக்கு, எற்று - எவ்வகைத் துன்பந்தருமோ, அற்று - அவ்வகைத் துன்பந் தரும், (எ-று).

துளியென்பது சிறப்புப்பற்றி மழைமேல் நின்றது ; உயிரென்பது குடிகள்மேல் நின்றது. முன் 'வானோக்கி வாழும்' என்றதனை எதிர் மறை முகத்தாற் சொல்லியபடியாம்.

(க-து.) உயிர்களுக்கு மழை பெய்யாமையால் எவ்வளவு துன்பமுண்டாகுமோ அவ்வளவு துன்பம் அருளில்லாத அரசன் கீழ் வாழுங் குடிகளுக்குண்டாம் என்பது.

7. As is the world without rain so live a people whose king is without kindness.

---

அ. இன்மையி னின்னா துடைமை முறைசெய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின்.

பரி :—(இ-ள்.) முறைசெய்யாத அரசனது கொடுங்கோலின் கீழ் வாழின், யாவர்க்கும் பொருளினது இன்மையினும் § உடைமை இன்னாது.

@ தனக்குரிய பொருளோடமையாது மேலும் வெஃகுவோனது நாட்டுக் †† கைந்நோவ யாப்புண்டல் * முதலிய வருவது பொரு

---

£ தண்ணளி - பெருங்கருணை.

† பல பொருள் குறித்த துளியென்னுந் திரிசொல் ஞாலத்திற்கு என்ற சிறப்பால் மழையை யுணர்த்தி நின்றது. பால்துளி, நெய்துளி என்றுவரும் பிரயோகமு மிங்குக் கவனிக்கத் தக்கதாம்.

‡ உயிரென்றது அதிகாரம் நோக்கி அரசனது ஆறங்கங்களுள் ஒன்றாகிய நாட்டில் வாழுங் குடிகளை யுணர்த்தி நின்றது.

¶ செங்கோன்மை - உ. $ எதிர்மறை - துளியின்மை அளியின்மையென்பன. § உடைமை - பொருளை யுடைத்தா யிருத்தல்.

@ தனக்குரிய பொருளோடமையாது-மநுமுதலிய நூல்களில் தனக்கு விதித்துள்ள ஆறிலொருபங்குப் பொருளோடு திருப்தி யடையாமல்,

†† கைந்நோவ யாப்புண்டல் - கைகள் வருந்துமாறு கட்டப் படுதல்.

* முதலிய என்றமையின், அடித்தல், குத்தல், உதைத்தல், சிறைச்சாலையி லடைத்தல் முதலியவற்றையுங் கொள்க.

ளுடையார்க்கே யாகலின், *அவ்வுடைமை இன்மையினும் இன்னு தாயிற்று. இவையிரண்டு பாட்டானும் அவனாட்டு வாழ்வார்க்கு வருங்குற்றங் கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) முறை செய்யா – முறையைச் செய்யாத, மன்னவன் – அரசனது, கோற் கீழ் – கொடுங்கோலின் கீழ், படின் – வாழின், (யாவர்க்கும்), இன்மையின் - (பொருளினது) இல்லாமை யிலும், உடைமை – (பொருள்) உடைமையானது, இன்னுது-பெருந் துக்கந் தருவதாம்.

தனக்குரிய பொருளோடு அமையாது மேலும் (பொருளை) விரும்பு மரசனது நாட்டில் கைந்நோவக் கட்டுண்ணல் முதலாயின வருவது பொருளுடையார்க்கே ஆதலால், அவ்வுடைமை இல்லாமையினும் துன்பந்தருவதாயிற்று. இவை இரண்டு பாட்டாலும் அவனாட்டில் வாழ்வார்க்கு வருங்குற்றஞ் சொல்லப்பட்டது.

(க-து.) நீதிதப்பிய அரசன்கீழ் வாழுஞ்செல்வர்க்குண்டாகுந் துன்பம் வறுமையாலுண்டாகுந் துன்பத்திலுங் கொடியதாம்.

8. Property gives more sorrow than poverty, to those who live under the sceptre of a king without justice.

---

**கூ. § முறைகோடி மன்னவன் செய்யி னுறைகோடி**
**யொல்லாது வானம் பெயல்.**

பரி :—(இ-ள்.) மன்னவன் தான் செய்யும் பொருளை ‡ முறைதப்பச் செய்யுமாயின், அவனாட்டுப் ¶ பருவமழை இன்றும்வகை மேகம் பொழிதலைச் செய்யாது, (எ-று).

£ இரண்டிடத்துங் கோட வென்பன திரிந்து நின்றன. உறைகோ

---

* அவ்வுடைமை இன்மையினும் இன்னுதாயிற்று-அப்பொரு ளுடைமை தரித்திரத்திலுங் கொடியதாயிற்று.

§ "கோனிலை திரிந்திடிற் கோணிலை திரியும், கோணிலை திரிந்திடின் மாரிவறங் கூரும், மாரிவறங் கூரின் மன்னுயி ரில்லை" என்று மணிமேகலை கூறுவதும், "கோணிலை திரிந்து நாழி குறைபடப் பகல்கண் மிஞ்சி, நீணில மாரியின்றி விளைவஃகிப் பசியு நீடிப், பூண்முலை மகளிர் பொற்பிற் கற்பழிந் தறங்கண் மாறி, யாணையிவ் வுலகு கேடா மரசுகோல் கோடி னென்றான்" என்று சீவகசிந்தாமணி கூறுவது மிங்கறியத் தக்கனவாம் ‡ முறைதப்ப – நீதிகெட.

¶ பருவமழை – பெய்யவேண்டுங் காலத்தில் பெய்யுமழை.

£ முறைகோடி உறைகோடி என்னு மிரண்டிடத்து முள்ள கோடி யென்பன வேறு வினைமுதலின் வினையைக்கொண்டு முடிதற்கு விதியில்லாமையின், 'இரண்டிடத்துங் கோடவென்பன (கோடி யெனத்) திரிந்து நின்றன' என்று கூறப்பட்டது. இங்கு வேறு வினை முதலின் வினை செய்யின் என்பதும் ஒல்லாது என்பதுமாம். "அவற்றுள்-முதலி னான்கு மீற்றின் மூன்றும, வினைமுதல் கொள்ளும் பிறவுமேற் கும்பிற". "சொற்றிரியினும் பொரு டிரியா வினைக்குறை" என்னும் நன்னூற் சூத்திரங்கள் இங்குக் கவனிக்கத் தக்கனவாம்.

டுதலாவது பெய்யுங்காலத்துப் பெய்யாமை. அதற்கேது வருகின்ற பாட்டாற் கூறுப.

தெளி :—(இ - ள்) மன்னவன் - அரசன், (தான் சம்பாதிக்கும் பொருளை), முறைகோடி-முறை தப்ப, செய்யின்-சம்பாதிப்பானாயின், (அவனது நாட்டில்), உறை - பருவமழையானது, கோடி — இல்லாமற் போம்படி, வானம் - மேகமானது, பெயல் - பொழிதலை, ஒல்லாது - பொருந்தாது, (செய்யாது), (எ-று).

இரண்டிடத்திலுங் கோட என்பன கோடியெனத் திரிந்து நின்றன. பருவமழை கோடுதலாவது பெய்யவேண்டுங்காலத்தில் பெய்யாதொழிதல். பருவமழையில்லாமைக்குக் காரணம் வருகின்ற பாட்டாற்சொல்லுவார்.

(க - து) நீதிதப்பிய அரசனது நாட்டில் பருவமழை பெய்வ-தில்லை என்பது.

9. If the king acts contrary to justice, rain will become unseasonable, and the heavens will withhold their showers.

---

**கo. ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர்**
*** காவலன் காவா னெனின்.**

**பரி :—(இ – ள்.) காத்தற்குரிய அரசன் உயிர்களைக் காவான் ஆயின் அறனில்லாத அவனாட்டுப் பசுக்களும் பால்குன்றும், அந்தணரும் நூல்களை மறந்து விடுவார், (எ–று).**

ஆபயன் – ஆவாற் கொள்ளும் † பயன். அறுதொழிலாவன :— ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ‡ ஈதல், ¶ ஏற்றல் என இவை பசுக்கள் பால் குன்றிய வழி || அவியின்மையானும், $ அது கொடுத்தற்குரியார் ‡‡ மந்திரம் () கற்பமென்பன ஓதாமையானும்

---

* காவலன் – காவலை யுடையவன் இது காரண விடுகுறிப் பெயராயரசனை யுணர்த்தி நின்றது.

† பயன் - பால். ‡ ஈதல் - கொடுத்தல். ¶ ஏற்றல் - வாங்குதல்.

|| அவி – நெய் முதலிய தேவருணவு $ அது – அவி.

‡‡ " நிறைமொழி மாந்த ராணையிற் கிளந்த, மறைமொழி தானே மந்திர மென்ப " என்பது தொல்காப்பியம்.

() கற்பம் வேதாங்கமாறனுள் மூன்று; இது வேதத்தில் விதித்-துள்ள கேள்வி முதலியவற்றை நடத்தும் வகையைக் கூறும். போதாய நீயம், பாரத்வாசம், ஆபத்தம்பம் முதலிய நூல்கள் கற்பமாம்.

[] " தேவர்களை நோக்கி யக்கினியிற் செய்யுமோம (யாக)ங்கள் சூரியனை யடைகின்றன; அச்சூரிய னிடத்தினின்றும் மழை யுண்டா-கின்றது; அதனால் தானியங்க ளுண்டாகின்றன; அவற்றால் ஜீவகோடிகள் விருத்தியடைகின்றன வென்று வேதத்திற் சொல்லப்

[] வேள்வி நடவாதாம் ; ஆகவே, † வானம் பெயலொல்லா தென்ப-தாயிற்று. இவை இரண்டு பாட்டானும் அவனூட்டின்கண் நிகழுங் குற்றங் கூறப்பட்டது.

தெளி :— (இ - ள்.) காவலன் - காப்பாற்றற்குரிய அரசன், காவானெனின் - (உயிர்களைக்) காப்பாற்றானாயின், (தருமமில்லாத அவனது நாட்டில்), ஆ - பசுக்களும், பயன் குன்றும் - பால் (தருவது) சுருங்கும், அறுதொழிலோர் - அந்தணரும், நூல்-நூல்களை, மறப்பர் - மறந்துவிடுவார்.

ஆபயன் - ஆவி னின்றுங் கொள்ளும் பயன். (அந்தணர்க்குரிய) அறு தொழிலாவன:—வேதமோதல், ஓதுவித்தல், யாகஞ்செய்தல், செய்வித்தல், ஈதல், ஏற்றல் என்பவை. பசுக்கள் பால் கறவாது குன்றியவிடத்து அவிர்ப்பாக மில்லாமையாலும், அது கொடுத்தற் குரிய அந்தணர் மந்திரம் கற்ப மென்பனவற்றை யோதாமையாலும், யாகம் நடவாதாம்; நடவாதாகவே, மேகம் மழை பொழிதலைச் செய்யாதென்பதாயிற்று. இவை இரண்டுபாட்டாலும் அவன் நாட்டினிடத்து உண்டாகுங் குற்றஞ் சொல்லப்பட்டது.

(க - து.) உயிர்களைக் காப்பாற்றாத அரசனது நாட்டில் பசுக்களி-டத்தும் அந்தணரிடத்தும் பெறத்தக்கபயன் குறைந்துபோம்.

10. If the guardian of the country neglects to guard it the produce of the cows will fail, and the men of six duties will forget the Vedas.

---

## பத்தொன்பதாம் அதிகாரம்

### வெருவந்த செய்யாமை :—

### Against acting with a reign of terror.

பரி :— அஃதாவது குடிகள் அஞ்சுவதும், பகுதி அஞ்சுவதும், தானஞ்-சுவதும் ஆய தொழில்களைச் செய்யாமை. அவை செய்தல் கொடுங் கோன்மைப்பாற் படுதலின், இஃது ‡ அதன்பின் வைக்கப்பட்டது.

தெளி :- அஃதாவது குடிகள் அஞ்சுவதும், பகுதி (மந்திரி முதலாகிய அங்கங்கள்) அஞ்சுவதும், தான் அஞ்சுவதும் ஆகிய தொழில் களைச் செய்யாமை. அவை செய்தல் கொடுங்கோன்மையிற் சேர்த லால், இஃது (வெருவந்த செய்யாமை) அதன்பின் வைக்கப்பட்டது.

---

பட்டிருக்கின்றது" என்று மநுதர்ம சாஸ்திரம் மூன்றாவ தத்தியா-யத்திற் கூறுவதும், "பிரஹ்மா யக்ஞத்தோடு கூடிய ஜனங்களை யாதிகாலத்திற் சிருஷ்டித்து, இந்த யக்ஞத்தினாலே (நீங்கள்) விருத்தி-யடையுங்கள். இந்த யக்ஞ முங்கட்கு விரும்பிய போகத்தைத் தரக்கடவதாக வென்று கூறினார்" என்று பகவத்கீதை மூன்றாவ தத்தியாயத்திற் கூறுவது மீண்டுணர்தற் பாலனவாம்.

† "மழையின்றி மாநிலத்தார்க் கில்லை மழையும், தவமிலா ரில்வழியில்லை தவமும், அரசிலா ரில்வழி யில்லை யரசனும், இல்வாழ்வா ரில்வழியில்" என்று நான்மணிக் கடிகை கூறுவது மிங்கறியத் தக்கதாம்.

‡ அதன்பின் - கொடுங்கோன்மையின்பின்.

**க. தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தா**
**லொத்தாங் கொறுப்பது வேந்து.**

பரி:—(இ - ள்.) ஒருவன் தன்னின் * மெலியார்மேற் சென்றவழி || அதனை நடுவாக நின்று ஆராய்ந்து பின்னும் அது செய்யாமற் பொருட்டு ‡ அவனை அக்குற்றத்திற்கொப்ப ஒறுப்பானே அரசனுவான். ()

¶ *தக்காங்கு ஒத்தாங்கென்பன ஒரு சொல். தகுதியென்பது நடுவு நிலைமையாதல் $ 'தகுதி யெனவொன்று நன்றே' என்பதனானும் அறிக இதனானே தக்காங்கு நாடாமையும், பிறிதோர் காரணம் பற்றி மிகவொறுத்தலும், குடிகளஞ்சும் வினையாதல் பெற்றாம்.*

தெளி: —(இ - ள்.) *(ஒருவன் தன்னிலும் மெலியவன்மீது சென்ற விடத்து) தக்காங்கு - நடுவு நிலைமையாக, (நின்று), நாடி - (அதனை) ஆராய்ந்து, தலைச்செல்லாவண்ணத்தால் - (பின்னும்) அக்குற்றமான செயலைச் செய்யாமற் பொருட்டு, ஒத்தாங்கு - (அக்குற்றத்துக்கு) ஏற்ப, ஒறுப்பது - (அவனைத்) தண்டிப்பவனே, வேந்து - அரசனுவான், (எ - று).*

*தக்காங்கு ஒத்தாங்கு என்பன ஒரு சொல். தகுதி - நடுவு நிலைமை. இதனாலே தக்காங்கு ஆராயாமையும் வேறொரு காரணம் பற்றி அதிகமாகத் தண்டித்தலும், குடிகள் அஞ்சுந்தொழிலாதல் பெற்றாம்.*

(க - து.) *ஒருவனது குற்றத்தை நடுவு நிலைமையாக விருந் தாராய்ந்து, அவன் பின்னுங் குற்றஞ் செய்யாவாறு அவனை அக்குற் றத்திற்குத் தக்கவாறு தண்டிப்பவனே அரசனுவான் என்பது.*

1. He is a king who having equitably examined any injustice which has been brought to his notice, suitably punishes it, so that it may not be again committed.

---

**உ. கடிதோச்சி மெல்ல வெறிக நெடிதாக்க**
**நீங்காமை வேண்டு பவர்.**

---

* *மெலியார் மேற்சென்றவழி - பலஹீனர்களிடத்துக் குற்றமான செயலைச் செய்தவிடத்து.*

|| *அதனை - அக்குற்றமான செயலை.* ‡ *அவனை - குற்றஞ் செய்தவனை.* ¶ *தக்காங்கு ஒத்தாங்கு என்பன தொடர்மொழி யாகாமல் ஒரு மொழியாய் நின்றன என்பது.*

$ *திருக்குறள் நடுவுநிலைமை, 1. இதன் பொருள், நடுவுநிலைமை என்று சொல்லப்படும் ஓரறமுமே நன்று என்பது. நடுவுநிலைமை யாவது பகைவர் அயலார் நட்பினரென்னு மூவரிடத்தும் அறத்தி னின்றும் வழுவாது ஒப்ப நிற்கும் நிலைமையாம்.*

**பரி:—(இ-ள்.) அவ்வொத்தாங்கு ஒறுத்தல் தொடங்குங்கால் அள விறப்பச் செய்வார் போறற்றொடங்கி, செய்யுங்கால் அளவிறவாமற் செய்க, ஆக்கந் தங்கண் நெடுங்காலம் நிற்றலை வேண்டுவார், (எ - று).**

*கடிதோச்சல் குற்றஞ்செய்வார் * அதனை யஞ்சுதற் பொருட்டும், மெல்லவெறிதல் யாவரும் வெருவாமைப்பொருட்டும் ஆம். தொடங் கின அளவிற்குறைதல்பற்றி மென்மை கூறப்பட்டது. † ஓச்சுதல் எறிதலென்பன இரண்டும் உவமைபற்றி வந்தன. இவையிரண்டு பாட்டானுங் குடிகள் வெருவந்த செய்யாமையது இயல்பு கூறப் பட்டது.*

தெளி:— (இ - ள்.) ஆக்கம் - செல்வமானது, நெடிது - நெடுங் காலம், நீங்காமை - (தம்மிடத்து) நீங்காமையை, வேண்டுபவர் - விரும்புவோர், கடிதோச்சி - (அக்குற்றத்திற் கேற்பத் தண்டஞ் செய்யத்தொடங்கும்போது) அளவு கடக்கச் செய்வார்போலத் தொடங்கி, மெல்லவெறிக - (செய்யும்போது) அளவு கடவாமற் செய்யக்கடவர், (எ - று).

*கடிதோச்சல் குற்றஞ்செய்வார் அதனை அஞ்சுதற்பொருட்டும், மெல்ல வெறிதல் யாவரும் அஞ்சாமைப் பொருட்டும் ஆம். தண்டனை தொடங்கினவளவில் குறைதல்பற்றி 'மெல்ல' என அதற்குமென்மை கூறப்பட்டது. ஓச்சுதல் எறிதலென்னுமிரண்டும் கோலென்னும் உவமைபற்றி வந்தன. இவை இரண்டுபாட்டாலும் குடிகள் அஞ்சு வனவற்றைச் செய்யாமையினது இலக்கணஞ் சொல்லப்பட்டது.*

**(க - து.)** *ஒருவனை அவனது குற்றத்திற்குத் தக்கவாறு தண்டிக் கும்போது அத்தண்டனையைத் தொடக்கத்திற் பெரிதுபோற்காட்டி, முடிவில் எளிதாகச் செய்யும் அரசனிடத்துச் செல்வம் நிலைபெறும் என்பது.*

2. Let the king, who desires that his prosperity may long remain with him, make enquiries with strictness, and then punish with mildness.

---

**ங. வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயி
னொருவந்த மொல்லைக் கெடும்.**

**பரி:—(இ - ள்.) குடிகள் வெருவிய செயல்களைச் செய்து நடக்கும் வெங்கோலனுமாயின் அரசன் ஒரு தலையாகக்கடிதிற் கெடும், (எ - று).**

---

* *அதனை - அத்தண்டனையை.*

† (தண்டனை செய்வது கோலை) ஓச்சுதல் (உயரத்தூக்குதல்) போலவும் எறிதல் (வீசுதல்) போலவும் இருத்தல்பற்றி 'ஓச்சுதல் எறிதல் என்பன இரண்டும் உவமைபற்றி வந்தன' என்று கூறப் பட்டது

* 'வெங்கோலன்' என்பது ஈண்டு † வாளா பெயராய் நின்றது. ஒருவந்தம், ஒருதலை, ஏகாந்தம் என்பன ஒருபொருட்கிளவி. || அச் செயல்களுங் ¶ கேடுகளும் முன்னர்க் கூறப்படும்.

தெளி :—(இ - ள்) (அரசன்) வெருவந்த - (குடிகள்) அஞ்சிய செயல்களை, செய்தொழுகும் - செய்து நடக்கும், வெங்கோலனாயின் - கொடுங் கோலனாயிருந்தால், ஒருவந்தம் - நிச்சயமாக, ஓல்லை - கடிதில், கெடும் - கெடுவான், (எ - று).

'வெங்கோலன்' என்பது இங்கு வாளா பெயராய் நின்றது. ஒருவந்தம், ஒருதலை, ஏகாந்தமென்பன (நிச்சயமென) ஒரு பொருளுணர்த்துஞ் சொற்கள். அச்செயல்களும் கேடுகளும் பின்னே சொல்லப்படும்.

(க - து.) குடிகள் அஞ்சத்தக்க காரியங்களைச் செய்துவரும் அரசன் விரைவில் கெடுவான் என்பது.

3. The cruel-sceptred king, who acts so as to put his subjects in fear, will certainly and quickly, come to ruin.

——

**ச. இறைகடிய னென்றுரைக்கு மின்னாச்சொல் வேந்த
னுறைகடுகி யொல்லைக் கெடும்.**

**பரி :—(இ-ள்.) குடிகளான் நம்மிறைவன் கடியனென்று சொல்லப் படும் இன்னாத சொல்லையுடைய வேந்தன் ஆயுளுங்குறைந்து செல்வமுங் ‡ கடிதின் இழக்கும், (எ - று).**

நெஞ்சுநொந்து சொல்லுதலான், இன்னாமை பயப்பதாய

---

* வெருவந்த செய்தொழுகும் வெங்கோலன் என்பதன்கண் வெருவந்த செய்தொழுகும் என்னும் அடை (விசேஷணம்) கொடுங் கோன்மையைக் குறித்தலாலே வெங்கோலன் என்பது யாதொரு விசேடமு முணர்த்தாது அரசன் என்னும் பெயர் மாத்திரமாய் நின்றது. "பெயர்நிலைக் கிளவியினாஅ குநவும்" என்னுந்தொல் காப்பியம் சொல்லதிகாரம் எச்சவியற் சூத்திரவுரையில் நச்சினார்க் கினியர் "ஒள்வாள் - கறையடி யானைக் கல்ல, துறைகழிப் பறியா வேலோ னூரே" என்புழி வேலோனென்பது வேலையுடையோ னென்னும் பொருள் பெயர்ந்து ஒருபெயர்த்தன்மையாய் நின்றது. 'செழுந்தா மரையன்ன வாட்கண்' என்பதூஉம் அது" என்று வரைந்திருப்பது மிங்குணர்தற் பாலதாம்.

† வாளா - சும்மா.

|| அச்செயல்களும் - குடிகள் அஞ்சத்தக்க செயல்களும்.

¶ கேடுகள் - குடிகளஞ்சத்தக்க செயல்களைச் செய்பவனுக்குண் டாகுங் கெடுதிகள்.

‡ கடிதின் - விரைவில்.

சொல்லை 'இன்னாச்சொல்' என்றார். * உறையென்பது முதனிலைத் தொழிற் பெயர். அஃது ஈண்டு $ ஆகுபெயராய் உறைதலைச் செய்யும் நாண்மே னின்றது. ‡ அது குறைதலாவது அச்சொல்லில்லாதார்க்கு உள்ளதிற் சுருங்குதல்.

தெளி :—(இ - ள்.) இறை - (நம்) அரசனானவன், கடியனென்று - பொல்லாதவனென்று, உரைக்கும் - (குடிகளால்) சொல்லப்படுகிற, இன்னாச் சொல் - துன்பந்தருஞ் சொல்லையுடைய, வேந்தன் - அரசன், உறைகடுகி - ஆயுளுங்குறைந்து, ஒல்லைக்கெடும் - (செல்வமும்) கடிதி னிழப்பான், (எ - று).

(குடிகள்) மனம் வருந்திச் சொல்லுதலால், இன்னாமையை (துன்பத்தை)த் தருவதாயசொல்லை 'இன்னாச்சொல்' என்றார். உறையென்பது முதனிலைத் தொழிற்பெயர். அஃது இங்கு ஆகுபெயராய் உறைதலைச்செய்யும் நாளின்மேல் நின்றது. அது குறைதலாவது அச்சொல்லில்லாதவர்க்கு உள்ளவளவில் குறைதல்.

(க - து.) குடிகளால் கொடியவனென்று சொல்லப்படுமரசன் ஆயுளுங்குறைந்து செல்வத்தையும் விரைவிலிழப்பான் என்பது.

4. The life of that king who is spoken of by his subjects as cruel will be shortened, and he will lose his wealth quickly.

---

ரு. **அருஞ்செவ்வி யின்னா முகத்தான் பெருஞ்செல்வம்**
**பேஎய்கண் டன்ன துடைத்து.**

பரி :—(இ - ள்.) தன்னைக் காணவேண்டுவார்க்குக் ¶ காலம் அரியனாய்க் கண்டால் § இன்னாத முகத்தினையுடையானது பெரியசெல்வம் பேயாற் காணப்பட்டாற் போல்வதொரு குற்றம் உடைத்து, (எ - று).

---

* உறையென்னும் பகுதி (முதனிலை) உறைதல் (இருத்தல்) என்னுந் தொழிலை யுணர்த்துதலால் முதனிலைத்தொழிற்பெயராயிற்று. பகுதியளவாய் நின்று தொழிற் பெயர்ப்பொருளை யுணர்த்துவது முதனிலைத் தொழிற் பெயரெனப்படும்.

$ உறை யென்னும் முதனிலைத் தொழிற்பெயர் உறை (வசித்) தலைச்செய்யும் நாளை (ஆயுளை) யுணர்த்தினமையின், முதனிலைத் தொழிலாகுபெயராம்.

‡ அது (உறைதலைச்செய்யும் நாள்) குறைதலாவது அச்சொல்லில்லாதார்க்கு (பொல்லாதவனென்னுஞ் சொல்லில்லா அரசர்களுக்கு) உள்ளதிற் சுருங்கல் (உள்ள ஆயுள்நாளில் குறைதல்). பொல்லாதவனென்று குடிகளால் சொல்லப்படுகின்ற அரசன் விரைவிற் கெடுவானென்பது திரண்ட பொருளாம்.

¶ காலம் - காணுஞ்சமயம்.

§ இன்னாதமுகத்தினையுடையானது - வெறுப்பைக்காட்டுகின்ற முகத்தையுடைய அரசனது.

எனவே, * இவை யிரண்டும் வெருவந்த செய்தலாயின. †இவை செய்வானைச் சார்வார் இன்மையின், ‡அவனது செல்வந் தனக்கும் பிறர்க்கும் பயன்படாதென்பதுபற்றிப் 'பேஎய்கண் டன்ன துடைத்து' என்றார். காணுதல் - தன்வயமாக்குதல்.

தெளி :- (இ-ள்.) அருஞ்செவ்வி - (தன்னைக்காணவேண்டுவார்க்கு) அரிதாகிய சமயத்தை, (உடையனாய்), இன்னாமுகத்தான் - (கண்டால்) இனிமையில்லாத முகத்தினையுடையவனது, பெருஞ்செல்வம் - பெரிய செல்வமானது, பேய் - பேயால், கண்டன்னது - காணப்பட்டாற் போல்வதொரு குற்றத்தை, உடைத்து - உடையதாம், (எ - று).

எனவே, இவை இரண்டும் அஞ்சுவனவற்றைச் செய்தலாயின. இவை செய்வானைச் சார்வாரில்லாமையால், அவனதுசெல்வம் தனக்கும் பிறர்க்கும் பயன்படாதென்பது பற்றிப் 'பேஎய்கண் டன்ன துடைத்து' என்றார். காணுதல் - (பேய் பெருஞ்செல்வத்தைத்) தன்வசமாக்குதல்.

(க - து.) குடிகள் தன்னைக் காண்பதற்குச் சமயங் கொடாதவனும், கண்டால் கடுகடுத்த முகத்தையுடையவனுமுள்ள அரசனதுசெல்வம் பேய்கண்ட செல்வம்போலப் பயன்படாதொழியும் என்பது.

5. The great wealth of him who is difficult of access and stern of countenance, is like that which a devil has obtained.

---

**சு. கடுஞ்சொல்லன் கண்ணில னாயி னெடுஞ்செல்வ**
**நீடின்றி யாங்கே கெடும்.**

பரி :—(இ - ள்.) அரசன் கடியசொல்லையும் உடையனாய்க் கண்ணோட்டமும் இலனுமாயின், அவனது பெரியசெல்வம் நீடுதலின்றி அப்பொழுதே கெடும், (எ - று).

¶ "வேட்டங் கடுஞ்சொன் மிகுதண்டஞ் சூதுபொரு, ளீட்டங்கட் காமமோ டேழு" எனப்பட்ட விசனங்களுட் கடுஞ்சொல்லையும்

---

* இவையிரண்டும் - அருஞ்செவ்வியும் இன்னாமுகமும்.

† இவைசெய்வானை - அருஞ்செவ்வியும் இன்னாமுகமுமாயிருக்கின்றவனை.

‡ பொன்காக்கும் பூதம் அப்பொன்னைத் தானுமனுபவியாது பிறர்க்குங்கொடாதது போன்று அருஞ்செவ்வியும் இன்னாமுகமுமுடையவரசன் பெருஞ் செல்வத்தைத் தானும் அனுபவியாது பிறர்க்குங் கொடாது வீணே யொழிவான் என்பதாம்.

¶ இதன்பொருள், வேட்டையாடுதல், கடுஞ்சொற்களைச் சொல்லுதல், அளவுகடந்த தண்டனைசெய்தல், சூதாடுதல் (அநியாயமாகப்

மிகுதண்டத்தையும் இவர் இவ்வெருவந்த செய்தலுள் அடக்கினர். * கண் – ஆகுபெயர். † இவை செய்தபொழுதே கெடுஞ்சிறுமைத் தன்றாயினுமென்பார் 'நெடுஞ்செல்வம்' என்றார். நீடுதல்-நீட்டித்தல்.

தெளி :—(இ-ள்.) (அரசன்) கடுஞ்சொல்லன் - கடியசொல்லையும் உடையவனாய், கண்ணிலனாயின் - கண்ணோட்டமு மில்லாதவ னானால், நெடுஞ்செல்வம் - (அவனது) பெரியசெல்வமானது, நீடின்றி - நீடுதலில்லாமல், ஆங்கே - அப்பொழுதே, கெடும் - அழியும், (எ-று).

"வேட்டங் கடுஞ்சொல் மிகுதண்டஞ் சூதுபொரு ளீட்டங்கட் காமமோ டேழு" எனப்பட்ட சப்த விசனங்களுள் கடுஞ்சொல்லையும் மிகுதண்டத்தையும் இவர் இவ்வெருவந்த செய்தலுள் அடக்கிக் 'கடுஞ்சொல்லன் கண்ணிலனாயின்' என்று கூறினர். கண் - கருவியாகு பெயர். இவை செய்த பொழுதே கெடுஞ்சிறுமைய தன்றாயினு மென்பார் 'நெடுஞ்செல்வம்' என்றார். நீடுதல் - நீடித்திருத்தல்.

(க - து.) கடுஞ்சொல்லையும் இரக்கமின்மையையுமுடைய அரசனது செல்வம் விரைவிலழியும் என்பது.

6. The abundant wealth of the king whose words are harsh and whose looks are without kindness, instead of abiding with him, will instantly perish.

---

எ. கடுமொழியுங் கையிகந்த தண்டமும் வேந்த
னடுமுரண் டேய்க்கு மரம்.

பரி :—(இ - ள்.) கடியசொல்லும் குற்றத்தின்மிக்கதண்டமும் அரசனது பகை வெல்லுதற்கேற்ற மாறுபாடாகிய இரும்பினைத் தேய்க்கும் அரமாம், (எ - று).

‡ கடுமொழியால் தானையும் கையிகந்ததண்டத்தால் தேசமும் கெட்டு ¶ முரண் சுருங்கி வருதலின் ‖ அவற்றை அரமாக்கி, திண்ணி

---

பிறர்) பொருளைச் சம்பாதித்தல், கள்ளுண்டல், காமநுகருதல் என (விசனங்கள்) ஏழாம் என்பது.

* கண் என்பது கண்ணோட்டத்தை (தாட்சண்ணியத்தை) யுணர்த்துதலால் கருவியாகு பெயராம். (ஓட்டம் - கண்ணினது காரியம்).

† இவை - கடுஞ்சொல்லும் மிகுதண்டமும்.

‡ கடுமொழியால் சேனையும் கையிகந்த தண்டத்தால் குடிகளும் மனமுடைந்து அரசனிடத் தன்பில்லாதுபோவர் ; அதனால் அவனுக் காண்மை சுருங்கி வருமென்பதாம்.

¶ முரண் - வலிமை. ‖ அவற்றை - கடுமொழியையும் கையிகந்த தண்டத்தையும்.

தாயினுந் தேயுமென்றற்கு அடுமுரணை இரும்பாக்கினர். ஏகதேச-வுருவகம். * அரமென்பதனைத் தனித்தனி கூட்டுக. இவை ஐந்து பாட்டானும் செவ்வியின்மை, இன்னுமுகமுடைமை, கண்ணோட்டமின்மை, கடுஞ்சொற் சொல்லல், கையிகந்த தண்டமென்றிவைகள் குடிகளஞ்சும் வினையென்பதூஉம், இவை செய்தான் ஆயுளும் அடுமுரணுஞ் செல்வமும் இழக்கு மென்பதூஉங் கூறப்பட்டன.

தெளி :—(இ - ள்.) கடுமொழியும் - கடியசொல்லும், கையிகந்த தண்டமும் - (குற்றத்தின்) மிகுந்ததண்டமும், வேந்தன் - அரசனது, அடும் - (பகைவரை) வெல்லுதற்கு ஏற்ற, முரண் - மாறுபாடாகிய (இரும்பினை), தேய்க்கும் - தேயச்செய்யும், அரம் - அரமாம், (எ-று).

கடிய சொல்லாற் சேனையும் அளவுகடந்த தண்டத்தால் தேசமும் கெட்டு மாறுபாடு சுருங்கி வருதலால் அவ்விரண்டையும் அரமாக்கி, வலியதானுலும் தேயும் என்பதற்கு அடுமுரணை இரும்பாக்கிக் கூறினர். கடுமொழியையும் கையிகந்த தண்டத்தையும் அரமாகவுருவகஞ் செய்தவர் அதற்கேற்ப அடுமுரணை இரும்பாக வுருவகஞ் செய்யாமை-யினல் இஃது ஏகதேச வுருவகவணியாம். அரமென்பதனைக் கடுமொழி யென்பதனேடும் கையிகந்த தண்டமென்பதனேடும் தனித்தனிகூட்டிக் கடுமொழியாகிய அரமும் கையிகந்த தண்டமாகிய அரமும் என்று-ரைத்துக் கொள்க. இவை ஐந்து பாட்டாலும் சமயமில்லாமை, இன்னுமுகமுடைமை, கண்ணோட்டமில்லாமை, கடுஞ்சொற்சொல்லல், அளவு கடந்த தண்டம் என்ற இவைகள் குடிகள் அஞ்சுந் தொழில்-களௌன்பதும், இவற்றைச் செய்யுமரசன் ஆயுளும் பகைவரை வெல்லும் வல்லமையும் செல்வமும் இழப்பானென்பதும் சொல்லப்-பட்டன.

(க - து.) கடியசொல்லும் அளவுகடந்த தண்டனையும் அரசனது வலிமையை யழிக்கும் என்பது.

7. Severe words and excessive punishments will be a file to waste away a king's power for destroying his enemies.

---

அ. இனத்தாற்றி யெண்ணுத வேந்தன் சினத்தாற்றிச்
சீறிற் சிறுகுந் திரு.

---

* "ஆக்கும் பிரதி பதத்துடனே" என்னுஞ்செய்யுளின் விசேட-வுரையில் பிரயோக விவேகநூலார் 'கடுமொழியுங் கையிகந்த தண்டமும் வேந்த, னடுமுரண் டேய்க்கு மரம்' என்புழி அரமென்னும் ஒருமைப்பெயரை வாக்கிய பேதமாகத் தனித்தனிகூட்டி முடிப்பதனைத் "தேர்வட மிழுப்பார்போலப் பிரத்தியேக பந்தாந்நுவயமென்பார். இதுவுந் தூராந்நுவயத்து ளடக்கிக்கொள்க" என்று கூறுகின்றனர். "ஒருசொன் னின்றே தனித்தனி யுதவுதல்" என்னும் (இலக்கணக்

பரி:—(இ - ள்.) காரியத்தைப்பற்றி வந்த எண்ணத்தை அமைச்சர் மேல் வைத்து அவரோடு தானும் எண்ணிச் செய்யாத அரசன் அப் () பிழைப்பாற் றன்காரியந் தப்பியவழித் தன்னைச் சினமாகிய குற்றத்தின் கண்ணே செலுத்தி *அவரை வெகுளுமாயின் அவன் செல்வம் நாடோறுஞ் சுருங்கும், (எ – று).

அரசர்பாரம் பொறுத்துய்த்தலொப்புமையான் அமைச்சரை †இனம் என்றும், ‡தான் பின் பிழைப்பாதலறிந்து அமையாது அதனை அவர்மேல் ஏற்றிவெகுளின் அவர் வெரீஇ நீங்குவர்; நீங்கவே, அப்பிழைப்புத் திருமாறும் அப்பாரம் இனிதுய்க்குமாறும் இலனு-மென்பது நோக்கித் திருச்சிறுகும் என்றுங் கூறினார். இதனாற் ¶பகுதி யஞ்சும் வினையும், அதுசெய்தான் எய்துங்குற்றமுங் கூறப்பட்டன.

தெளி :—(இ – ள்.) (காரியத்தைப்பற்றி வந்தவெண்ணத்தை) இனத்தாற்றி – மந்திரிகள் மேல் வைத்து, எண்ணாத – (அவரோடு தானும்) எண்ணிச் செய்யாத, வேந்தன் – அரசன், (அப்பிழைப்பினால் தன்காரியந் தப்பியவிடத்து), சினத்தாற்றி - (தன்னைக்) கோபமாகிய குற்றத்திலே செலுத்தி, சீறின் – (அவரைக்) கோபிப்பானாயின், திரு – (அவனது) செல்வமானது, சிறுகும் – (நாடோறும்) சுருங்கும், (எ-று).

இராச்சியபாரத்தைத் தாங்கிச்செலுத்துத லொப்புமையால் மந்திரிகளை இனம் என்றும், தான் பின்பு தவறிப்போயதையறிந்து அடங்காது அத்தவறிப் போயதை அவர்மேல் ஏற்றிக் கோபித்தால் அவர் அஞ்சி நீங்குவர்; நீங்கவே, அத்தவறு தீரும்விதமும் அவ்விராச்சிய பாரத்தை இனிது செலுத்தும் விதமும் இலனுமென்பது நோக்கித் திருச்சிறுகும் என்றும் சொல்லினார். இதனால் மந்திரிகளாகிய பகுதி யஞ்சுந் தொழிலும், அது செய்தான் அடையுங் குற்றமுஞ்சொல்லப் பட்டன.

(க – து.) மந்திரிகளுடன் ஆலோசியாது தான் செய்த காரியம் தவறியபோது அவர்களைக் கோபிக்கு மரசனது செல்வம் நாளுக்கு நாள் குறைந்துபோம் என்பது.

---

கொத்து) விதியால் அரம் என்னும் ஒருமைப்பெயர் கடுமொழி யென் பதனோடும் கையிகந்த தண்டமென்பதனோடும் தனித்தனி பிரிந்து கூடுதலறிக.

() பிழைப்பு – தவறு.

* அவரை – அமைச்சரை. † இனம் – தன் சாதியாயுள்ளவர்.

‡ தான் (அரசனாகிய தான்) பின் பிழைப்பாதல் (தவறிப்போ யதை) அறிந்து அமையாது (அடங்கி யிராமல்) அதனை (அத்தவறிப் போயதை) அவர்மேல் ஏற்றி (அமைச்சர்மேல் வைத்து) வெகுளின் (கோபித்தால்) அவர் (அமைச்சர்) வெரீஇ (அஞ்சி) நீங்குவர் என்பது.

¶ பகுதி – இராஜ காரியஞ் செய்வார் கூட்டம்.

8. The prosperity of that king will waste away, who without reflecting on his affairs himself, commits them to his ministers, and when a failure occurs gives way to anger and rages against them.

---

**கூ. செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்**
**வெருவந்து வெய்து கெடும்.**

பரி :—(இ–ள்.) செரு வருதற்குமுன்னே தனக்குப் * புகலாவதோர் அரண் செய்துகொள்ளாத அரசன், அது வந்தகாலத்து ஏமமின்மை யான் வெருவிக் கடிதிற்கெடும், (எ–று).

† பகையை வெருவிச் சேர்ந்தார் நீங்குதலின் தமியனுய்த் தானும் வெருவி அப்பகை வயத்தனுமென்பதாம். இதனுல் ‡தானஞ்சும் வினையும் ¶அது செய்தானெய்தும் பயனுங் கூறப்பட்டன.

தெளி :—(இ–ள்.) சிறைசெய்யா – (போர் வருதற்கு முன்னே தனக்குக் காப்பிடமாவதோர்) அரண் செய்துகொள்ளாத, வேந்தன் – அரசன், செருவந்த போழ்தில் – அப்போர்வந்த காலத்தில், வெருவந்து – (காவல் இல்லாமையால்) அஞ்சி, வெய்து – விரைவில், கெடும்–கெடுவான், (எ–று).

(செருவந்தபோழ்திற் சிறைசெய்யா வேந்தன்) பகைவர்க் கஞ்சித் தன்னேடு சேர்ந்தவர் நீங்குதலால் தனியனுகித் தானும் அஞ்சி அப்பகைவர் வசத்தனுவனென்பதாம். இதனுல் தான் அஞ்சும் செயலும் அது செய்தான் அடையும் பயனுஞ் சொல்லப்பட்டன.

(க–து.) தனக்குக் காவலாக வோரரண் செய்துகொள்ளாத அரசன் பகைவரெதிர்த்தகாலத்தில் விரைவிற்கெடுவான் என்பது.

9. The king who has not provided a place of defence for himself, will in times of war be seized with fear and quickly perish.

---

**கo. கல்லார்ப் பிணிக்குங் கடுங்கோ லதுவல்ல**
**தில்லை நிலக்குப் பொறை.**

---

* புகலாவதோர் அரண் – பாதுகாப்பாயுள்ள தொருகோட்டை.

† பகைவர்க்குப் பயந்து தன்னேடு சேர்ந்தவர் நீங்கிப்போதலால் தனித்தவனுய்த் தானும் (அரசனும்) பயந்து அப்பகைவர் வசத்தனு வனென்பதாம்.

‡ தானஞ்சும் வினை – செருவந்தபோழ்திற் சிறைசெய்யாமை. அது செய்தானெய்தும் பயன் – வெருவந்து வெய்து கெடுதல்.

¶ அது – அஞ்சத்தக்க காரியம்.

பரி :—(இ–ள்.) கடுங்கோலனாய அரசன் நீதிநூல் * முதலிய கல்லாதாரைத் தனக்குப் † பகுதியாகக் கூட்டாநிற்கும், ‡ அக்கூட்டம் அல்லது நிலத்திற்கு ¶மிகையாய பாரம் பிறிதில்லை, (எ–று).

£ ‘ கடுங்கோல் ’ என்பது ஈண்டு மிக்கதண்டத்தின் மேற்றன்றி அதனைச் செய்வான்மேற் றாயிற்று. $ அவன் அது செய்தற் கியைவாரை யல்லது கூட்டாமையின் ‘கல்லார்ப்பிணிக்கும்’ என்றும், †† ஏனையவற்றை யெல்லாம் பொறுக்கின்றது இயல்பாகலின் நிலக்குப் பொறை அதுவல்லதில்லை என்றுங் கூறினார். நிலக்கென்பது செய்யுள் விகாரம். இதனால் வெருவந்த செய்தலின் குற்றங் கூறப்பட்டது.

தெளி :—(இ–ள்.) கடுங்கோல் – கடுங்கோலனாகிய அரசன், கல்லார் – (நீதிநூல் முதலியவற்றைக்) கல்லாதவரை, பிணிக்கும் – (தனக்குப் பகுதியாகக்) கூட்டாநிற்பான், அதுவல்லது – அக்கூட்ட மல்லாமல், நிலக்கு – நிலத்திற்கு, பொறை–அதிகமான பாரம், இல்லை–(வேறு) இல்லை, (எ–று).

‘ கடுங்கோல் ’ என்பது இங்கு அதிகத் தண்டனையின்மேல் நில்லாது அவ்வதிகத் தண்டனையைச் செய்யும் அரசன் மேல் நின்றது. அவன் அது செய்தற்குடன்படுவாரை யல்லது கூட்டாமையால் ‘ கல்லார்ப் பிணிக்கும் ’ என்றும், மற்றையவற்றை யெல்லாம் சுமக் கின்றது (நிலத்திற்கு) இயல் பாகலால் நிலக்குப்பொறை அதுவல்ல தில்லை என்றுஞ் சொல்லினர். நிலத்திற்கென்பது செய்யுள் விகாரத்தால் நிலக்கு எனவந்தது. இதனால் அஞ்சுவனவற்றைச் செய்தலின் குற்றஞ் சொல்லப்பட்டது.

---

* முதலிய என்றமையின், அறநூல் பொருள் நூல்களையுங் கொள்க.

† பகுதி - அங்கம்.

‡ அக்கூட்டம் அல்லது - கல்லாதவர்களின் கூட்ட மல்லாமல்.

¶ மிகையாய பாரம் – அதிகமான பளுவு.

£ கடுங்கோலை (அநீதியை) யுடைய வரசனைக் கடுங்கோல் என்று கூறியது குணங் குணியாய உபசாரவழக்காம்; பண்பாகுபெயருமாம்.

$ அவன் (கடுந்தண்டனை செய்யு மரசன்) அது (கடுந்தண்டனை) செய்தற் கியைவாரை யல்லது (செய்வதற்குச் சம்மதித்திருப்பவரை யல்லாமல், கூட்டாமையின் (சேர்க்காமையினால்).

†† “அறனோக்கி யாற்றுங்கொல் வையம் புறநோக்கிப், புன் சொலுரைப்பான் பொறை ” என்னும் குறளின் விசேடவுரையில் “ எல்லாவற்றையும் பொறுத்தல் இயல்பாயினும், இது பொறுத்தற் கரிதென்னுங் கருத்தால் ‘ அறனோக்கி யாற்றுங் கொல் ’ என்றார்” என்றிருத்தலு மிங்குக் கவனிக்கத்தக்கதாம். ஏனையவற்றை யென்றது மலை ஆறு கடல் முதலியவற்றை.

(க - து.) கடுங்கோலரசன் நீதி நூல் முதலியவற்றைக் கல்லாத வர்களைத் தனக்குப் பகுதியாகச் சேர்த்துக்கொண்டு குடிகளை வருத்துவான் என்பது.

10. The earth bears up no greater burden than a cruel sceptre which attaches to itself ignorant men as the ministers of its evil deeds.

---

# இருபதாம் அதிகாரம்

## 58 கண்ணோட்டம்—On a Gracious Demeanour

**பரி:—அஃதாவது தன்னொடு பயின்றாரைக் கண்டால் அவர் கூறியன மறுக்கமாட்டாமை. * இஃது அவர்மேற் கண் சென்றவழி † நிகழ்வ தாகலின், அப்பெயர்த்தாயிற்று. மேல் ‡ வெருவந்த செய்யாமையுட் கூறியவதனையே சிறப்புப்பற்றி விரித்துக் கூறுகின்றமையின், ¶இஃத தன்பின் வைக்கப்பட்டது.**

*தெளி:—அஃதாவது தன்னோடு பழகினவரைக் கண்டால் அவர் சொல்லியவற்றை மறுக்கமாட்டாமை. இஃது அவர்மேல் கண் ஓடிய விடத்து நிகழ்வதாகலால், அப்பெயரை யுடையதாயிற்று. இது தாட்சண்ணியமென்றும் முகங்கொடுத்தலென்றும் சொல்லப்படும். முன்னர் வெருவந்த செய்யாமை யென்னுமதிகாரத்தில் சொல்லிய அதனையே சிறப்புப்பற்றி விரித்துச் சொல்லுதலால், இஃது அதன்பின் வைக்கப்பட்டது.*

---

**க. கண்ணோட்ட மென்னுங் கழிபெருங் காரிகை
யுண்மையா னுண்டிவ் வுலகு.**

**பரி:—(இ - ள்.) கண்ணோட்ட மென்று சொல்லப்படுகின்ற சிறப்புடைய அழகு அரசர் மாட்டு உண்டாகலான் இவ்வுலகம் உண்டாகா நின்றது, (எ - று).**

---

** இஃது - தன்னோடு பழகினவர் கூறியவற்றை மறுக்க மாட்டாமை.*

*† நிகழ்வதாகலின், அப்பெயர்த்தாயிற்று - உண்டாவதாகலால் கண்ணோட்டமென்னும் பெயரினையுடையதாயிற்று.*

*‡ "கடுஞ்சொல்லன் கண்ணில னாயின்" என்னுங் குறளில் கண்ணோட்டமின்மையை வெருவந்தசெய்தலு ளடக்கிக் கூறியிருப்ப திங்குணர்தற்பாலதாம்.*

*¶ இஃததன்பின் வைக்கப்பட்டது - கண்ணோட்ட மென்னு மதி காரம் வெருவந்த செய்யாமை யென்னு மதிகாரத்திற்குப் பின்னே வைக்கப்பட்டது.*

'கழிபெருங்காரிகை' என்புழி * ஒரு பொருட் பன்மொழி †இவ்வுயிரழகது சிறப்புணர நின்றது. ‡இவ்வழகு அதற்குறுப்பாகலின் ¶'உண்மையான்' என நிலைபேறுங் கூறினார். இன்மை வெருவந்த செய்தலாகலின், அவர் நாட்டு வாழ்வார் புலியை யடைந்த புல்வாயினம்போன்று ஏமஞ்சாராமைபற்றி இவ்வுலகுண்டு என்றார்.

தெளி:— (இ - ள்.) கண்ணோட்ட மென்னும் - கண்ணோட்டமென்று சொல்லப்படுகிற, கழிபெருங்காரிகை - மிகவும் பெரிய (சிறப்புடைய) அழகானது, உண்மையான் – (அரசரிடத்து) உண்டாயிருத்தலால், இவ்வுலகு – இவ்வுலகமானது, உண்டு – உண்டாகாநின்றது, (எ – று).

'கழிபெருங்காரிகை' என்றவிடத்துக் கழிபெரும் என்னும் ஒரு பொருட்பன்மொழி இவ்வுயிரழகது சிறப்புணருமாறு நின்றது. இவ்வழகு அவ்வுயிர்க்கு அவயவமா யிருத்தலால் (அவ்வழகிற்கு) 'உண்மையான்' என நிலைபெறுதலுஞ் சொல்லினர். கண்ணோட்டமில்லாமை வெருவந்த (அஞ்சுவனவற்றைச்) செய்தலாகலால், அவர் நாட்டு வாழ்வார் புலியையடைந்த மானினம் போன்று காப்பிடம் பெறாமைபற்றி இவ்வுலகுண்டு என்றார்.

(க - து.) கண்ணோட்ட மென்னுஞ் சிறப்புடைய அழகினையுடைய அரசரது நாடு குறைவின்றி வாழும் என்பது.

1. The world exists through that greatest ornament of princes, a gracious demeanour.

---

உ. **கண்ணோட்டத் துள்ள துலகிய லஃதிலா**
**ருண்மை நிலக்குப் பொறை.**

---

* ஒரு பொருளைக்குறித்து வரும் பல சொற்கள் ஒரு பொருட் பன்மொழி யெனப்படும். இங்கு அழகென்னும் பொருளதாகிய காரிகை யென்பதற்கு விசேடணமாய் வந்த கழிபெரும் என்பன சிறப்பு என்னும் ஒரு பொருளைக் குறித்து நின்றமையின், ஒரு பொருட் பன்மொழியாயின வென்க. "ஒரு பொருட் பன்மொழி சிறப்பி னின்வழா" என்னும் நன்னூற் சூத்திர மீண்டுணர்தற்பாலதாம்.

† இவ்வுயிரழகது – அரசரது உயிரின் அழகான கண்ணோட்டத்தினது.

‡ இவ்வழகு அதற்குறுப்பாகலின் – கண்ணோட்டமென்னும் அழகு அரசருயிர்க்கு உறுப்பாயிருத்தலால்.

¶ கண்ணோட்டமென்னும் கழிபெருங் காரிகை யுண்டாயிருத்தலால் என்று (கண்ணோட்டமென்னும் கழிபெருங்காரிகை) நிலைத்திருத்தலுங் கூறினரென்பது.

பரி:—(இ-ள்.) உலகநடை கண்ணோட்டத்தின் கண்ணே நிகழ்வது ஆகலான், அக்கண்ணோட்டமில்லாதார் உளராதல் இந்நிலத்திற்குப் பார மாதற்கே, பிறிதொன்றற்கன்று, (எ-று).

உலக நடையாவது ஒப்புரவு செய்தல், புறந்தருதல், * பிழைத்தன பொறுத்தலென்றிவை † முதலாயின. ‡ அவை நிகழாமையால் தமக்கும் பிறர்க்கும் பயன்படாரென்பது பற்றி 'நிலக்குப் பொறை' என்றார். ¶ ஆதற்கென்பது சொல்லெச்சம். இவை யிரண்டு பாட்டானுங் கண்ணோட்டத்தது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்.) உலகியல் - உலக நடையானது, கண்ணோட்டத்து-கண்ணோட்டத்தினிடத்தே, உள்ளது-நிகழ்வதாம், (ஆதலால்), அஃதிலார் - அக்கண்ணோட்ட மில்லாதவர், உண்மை-உளராதல், நிலக்கு-இந்நிலத்திற்கு, பொறை - பாரமாதற்கே, (வேறொன்றற்கு அன்று), (எ-று)

உலகநடையாவது உபகாரஞ் செய்தல், காப்பாற்றல், பிழைத்தன பொறுத்தல் என்ற இவை, முதலானவை. அவை உண்டாகாமையினால் கண்ணோட்டமில்லாதவர் தமக்கும் பிறர்க்கும் பயன்படாரென்பது பற்றி 'நிலக்குப் பொறை' என்றார். ஆதற்கு என்னுஞ் சொல் எஞ்சி (குறைந்து) நின்றமையின், அது வருவிக்கப்பட்டது. இவை இரண்டுபாட்டாலும் கண்ணோட்டத்ினது சிறப்புச் சொல்லப் பட்டது.

(க - து.) உலக நடையானது அரசரது கண்ணோட்டத்தின் கண்ணே நிகழுகின்றதாதலின், கண்ணோட்டமில்லாத அரச ருலகத் திற்குப் பாரமாவர் என்பது.

2. The prosperity of the world springs from the kindliness of kings ; the existence of those kings who have no kindliness is a burden to the earth.

---

ந. **பண்ணென்னும் பாடற் கியைபின்றேற் கண்ணென்னுங்**
**கண்ணோட்ட மில்லாத கண்.**

---

* பிழைத்தன பொறுத்தல் - பிறர் செய்த குற்றங்களைப் பொறுத்துக் கொள்ளுதல்.

† முதலாயின என்றமையின், காட்சிக்கெளியனாதல், கடுஞ் சொல்லனல்லனாதல், எல்லை கடந்து இறைப்பொருள் (வரிப்பணம்) வாங்காமை முதலியவற்றையுங் கொள்க.

‡ அவை - ஒப்புரவு செய்தல் முதலாயின.

¶ பொறை (பாரம்) ஆதற்கு எனற்பாலது பொறை என நின்று ஆதற்கு என்னுஞ் சொல் எஞ்சி (குறைந்து) நின்றமையின், ஆதற்கு என்பது சொல்லெச்சமாயிற்றென்க.

**பரி:—(இ-ள்.) பண் என்ன பயத்ததாம் பாடற்றெழிலோடு பொருத்தம் இன்றாயின்; அதுபோலக் கண் என்ன பயத்ததாம் கண்ணோட்ட மில்லாதவிடத்து, (எ-று).**

*பண் கண் என்பன சாதி யொருமைப் பெயர். * பண்களாவன — பாலை யாழ் முதலிய நூற்று மூன்று. பாடற் றெழில்களாவன: யாழின் கண் †வார்தல் முதலிய எட்டும், ‡ பண்ணல் முதலிய எட்டும்,*

---

* (" செம்பாலை, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கோடிப்பாலை, விளரிப்பாலை, மேற்செம்பாலை யென்னும்) இவ்வேழு பெரும்பாலையினையும் முதலடுத்து நூற்றுமூன்று பண்ணும் பிறக்கும். அவற்றுள், செம்பாலையுட் பிறக்கும் பண்கள், பாலையாழ், நாகராகம், ஆகரி, தோடி, கௌடி, காந்தாரம், செந்துருத்தி, உதயகிரி யெனவிவை. பிறவும் விரிப்பின் உரைபெருகுமாதலின் அவற்றை வந்தவழிக் கண்டு கொள்க ", " நாற்பெரும் பண்ணுஞ் சாதி நான்கும் பாற்படு திறனும் பண்ணெனப்படுமே, என்றார் " என்றும், " பன்னிருபாலையின் உரு தொண்ணூற்றொன்றும் பன்னிரண்டுமாய்ப் பண்கள் நூற்றுமூன்றுதற்குக் காரணமா மெனக் கொள்க " என்றும், "பெருந்தான மெட்டினும் கிரியைகளெட்டினும் பண்ணிப்படுத்தலாற் பண் என்று பெயராயிற்று" என்றும் சிலப்பதிகார வுரையில் அடியார்க்கு நல்லார் கூறியிருக்கின்றனர்.

† " வார்தலென்பது சுட்டுவிரற் செய்தொழில்; வடித்தலென்பது சுட்டுவிரலும் பெருவிரலுங் கூட்டி நரம்பை அகமும் புறமும் ஆராய்தல்; உந்தலென்பது நரம்புகளை உந்தி வலிவிற்பட்டதும் மெலிவிற்பட்டதும் நிரல்பட்டதும் நிரலிழிபட்டதும் என்றறிதல்; உறழ்தலென்பது ஒன்றிடையிட்டும் இரண்டிடையிட்டும் ஆராய்தல்; உருட்டலென்பது இடக்கைச் சுட்டுவிரல் தானேயுருட்டலும், வலக்கைச் சுட்டுவிரல் தானேயுருட்டலும் சுட்டொடு பெருவிரல் கூட்டியுருட்டலும், இருபெருவிரலும் இயைந்துடனுருட்டலும் எனவரும். 'தெருட்டலென்பது செப்புங்காலை யுருட்டி வருவ தொன்றே மற்ற, வொன்றன் பாட்டு மடையொன்ற நோக்கின், வல்லோ ராய்ந்த நூலே யாயினும், வல்லோர் பயிற்றுங் கட்டுரை யாயினும், பாட்டொழிந் துலகினி னொழிந்த செய்கையும், வேட்டது கொண்டு விதியுற நாடி' எனவரும்; இவை இசைத்தமிழ்ப்பதினாறு படலத்துட் கரணவோத்துட் காண்க." "பட்டடையென்பது நரம்புகளில் இளிக்குப் பெயர்; என்னை? எல்லாப் பண்ணிற்கும் அடிமணை யாதலின்" என்றனர் சிலப்பதிகார அரும்பதவுரை யாசிரியர்.

‡ "பண்ணல் பரிவட் டணையா ராய்தல் தைவரல், கண்ணிய செலவு விளையாட்டுக் கையூழ், நண்ணிய குறும்போக்கு என்ற வெட்டும்'. பண்ணல் பாட நினைத்தபண்ணுக்கு இணை, கிளை, பகை, நட்பான நரம்புகள் பெயருந்தன்மை மாத்திரையறிந்து வீக்குதல். பரிவட்டணை அவ்வீக்கினநரம்பை அகவிரலாலும் புறவிரலாலும் கரணஞ்செய்து தடவிப்பார்த்தல். ஆராய்தல் ஆரோகண அவரோகண வகையால் இசையைத்தெரிதல். அது சுருதி யேற்றுதல், தைவரல். ஆளத்தியிலே நிரம்பப்பாடுதல் செலவு. பாடநினைத்த

மிடற்றின்கண் *எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடில மென்னும் ஐந்தும், †பெருவண்ணம், இடைவண்ணம், வனப்பு வண்ண முதலிய வண்ணங்கள் எழுபத்தாறுமாம். இவற்றோடியை யாதவழிப் பண்ணுற் பயனில்லாதவாறு போலக் ‡கண்ணோட்டத் தியையாதவழிக் கண்ணுற் பயனில்லையென்பதாம். கண் சென்ற வழி நிகழ்தல்பற்றி அதனை யிடமாக்கினுர். இறுதிக்கட் கண்ணென்பதனைக் §"கண்ணகன்ஞாலம்" என்புழிப்போலக் கொள்க.

தெளி :—(இ-ள்.) பண் - இசையானது, பாடற்கு - பாடற்றொழி லோடு, இயைபின்றேல் - பொருத்தமில்லையாயின், என்னும் - என்ன பயனுடையதாம், (அதுபோல), கண் - கண்ணனது, கண்ணோட்ட மில்லாத கண் – கண்ணோட்டமில்லாத விடத்து, என்னும் - என்ன பயனுடையதாம், (எ-று).

பண் கண் எங்பன ஈறுதோன்ருத சாதியொருமைப்பெயர். பண்களாவன : பாலையாழ் (வீணை) முதலிய நூற்று மூன்று. பாடல் தொழில்களாவன :—யாழினிடத்து வார்தல், வடித்தல், உந்தல், வண்ணத்திற் சந்தத்தை விடுதல் விளையாட்டு. வண்ணத்திற் செய்த பாடலெல்லாம் இன்பமாகப்பாடுதல் கையூழ். குடகச் செலவுந் துள்ளற் செலவுமாகப் பாடுதல் குறும்போக்கு" என்று நச்சினுர்க்கினியார் சீவகசிந்தாமணி–காந்தருவதத்தையாரிலம்பகம் "சிலைத்தொழில்" என்னுஞ் செய்யுளின் விசேடவுரையிற் கூறினர்.

* 'எடுத்தல்பாட்டுச்சமமாம் எண்படுத்தல் மந்தம், தடுத்து நலிதல் சமமாம் - தொடுத்தியன்ற, தள்ளாத கம்பிதந் தானடுக்கல் நற்குடிலம், உள்வாங்கிப் பாடலுணர்" என்பதிங்கறியத்தக்கதாம்.

† "சொல்வகை நான்கு வகைப்படும் ; சுண்ணம், சுரிதகம், வண்ணம், வரிதகம் என; சுண்ணம் நான் கடியான் வருவது, சுரிதகம் எட்டடியான் வருவது, வண்ணம் நாலுன்கடியான் வருவது, வரிதகம் முப்பத்திரண்டடியான் வருவது ; என்னை ? 'சுண்ண நான்கடி சுரிதக மெட்டடி, வண்ணநாலுன்கு வரிதக மெண்ணுன்கென், றெண்ணிய வடித்தொகை யெய்தவும் பெறுமே' என்ருராகலின். வண்ணம் ஒரு வகையான் மூன்று வகைப்படும் ; பெருவண்ணம், இடைவண்ணம், வனப்புவண்ணமென; அவற்றுள், பெருவண்ணம் ஆறுய்வரும்; இடை வண்ணம் இருபத்தொன்றுய்வரும்; வனப்புவண்ணம் நாற்பத்தொன் பதாய்வரும்" என்று அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார வுரையில் கூறினர்.

‡ "ஒன்று நரம்பென்கோ வொன்றுத வென்பென்கோ, இன்றசை தானென்கோ யாதென்கோ - மென்றொடையாழ், பண்ணோட்டு மின் சொற் பணைத்தோளாய் சேர்ந்தவர்பாற், கண்ணோட்ட மில்லாத கண்" என்று பாரதவெண்பா கூறுகின்றது.

§ திரிகடுகம் கடவுள்வாழ்த்து. இதன்பொருள், இடமகன்ற பூமி என்பது.

உறழ்தல், உருட்டல், தெருட்டல், அள்ளல், பட்டடை என்னும் எட்டும்; பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு, விளையாட்டு, கையூழ், குறும்போக்கு என்னும் எட்டும்; கண்டத்தி னிடத்து எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம் என்னும் ஐந்தும், பெருவண்ணம், இடைவண்ணம், வனப்பு வண்ண முதலிய வண்ணங்கள் எழுபத்தாறுமாம். இப்பாடற்றொழில்களுடன் பொருந் தாத விடத்துப் பண்ணால் (இசையினால்) பயனில்லாதவிதம் போலக் கண்ணோட்டத்துடன் பொருந்தாத விடத்துக் கண்ணால் பயனில்லை என்பதாம். (தாட்சண்ணியம் ஒருவர்மேல்) கண்சென்ற விடத்து உண்டாவதாயிருத்தலால் அக்கண்ணை (தாட்சண்ணியத்திற்கு) இட மாக்கினார். 'இல்லாத கண்' என இறுதியிலுள்ள கண்ணென்பது இடம் என்னும் பொருளதாய் நின்றது.

(க-து.) தாட்சண்ணிய மில்லாதகண் பயனுடையதாகாது.

3. Of what avail is a song, if it be not fit to be sung? What is the value of eyes in which there is no kindness?

---

**ச. உளபோன் முகத்தெவன் செய்யு மளவினாற்**
**கண்ணோட்ட மில்லாத கண்.**

பரி :—(இ-ள்.) கண்டார்க்கு முகத்தின்கண் உளபோற்றோன்றல் அல்லது வேறென்னபயனைச்செய்யும், அளவிறவாத கண்ணோடுதலை யுடைய வல்லாத கண்கள், (எ-று).

* தோன்றல் அல்லதென்னுஞ் சொற்கள் அவாய்நிலையான் வந்தன. ¶ கழிகண்ணோட்டத்தி னீக்குதற்கு, 'அளவினால்' என்றார். £ ஒரு பயனையுஞ் செய்யாவென்பது குறிப்பெச்சம்.

தெளி :—(இ-ள்.) அளவினால் - தகுமளவாக (அளவுகடவாத), கண்ணோட்டம் - கண்ணோடுதலை, இல்லாத - (உடையன) அல்லாத, கண்-கண்கள், (கண்டார்க்கு), முகத்து-முகத்தினிடத்து, உளபோல்-

---

* உளபோல் என்பது தோன்றல் அல்லது என்னுஞ் சொற்களை வேண்டி நிற்றலால் 'தோன்றல் அல்லதென்னுஞ் சொற்கள் அவாய் நிலையான் வந்தன' என்று கூறப்பட்டது. ஒருபதம் தன்னை முடிப்ப தொரு பதம் இல்லாத வழி முடிவு பெறாது நிற்றல் அவாய் நிலை யெனப்படும்

¶ கழிகண்ணோட்டம் - செய்யவேண்டிய அளவிற்கு மிஞ்சிய தாட்சண்ணியம்.

£ 'எவன் செய்யும் என்று' கூறினமையின், அளவினாற் கண் ணோட்டமில்லாத கண் ஒரு பயனையுஞ் செய்யா என்பது குறிப்பாய் எஞ்சி (குறைந்து) நின்றது. குறிப்பாயறியுமாறு குறைந்து நிற்கும் பொருள் குறிப்பெச்சமெனப்படும். எச்சம் - குறைவு.

உள்ளனபோல, (தோன்றுதல் அல்லாமல்), எவன் செய்யும் – (வேறு) என்னபயனைச் செய்யும், (எ–று).

தோன்றுதல் அல்லாமலென்னுஞ் சொற்கள் அவாய் நிலையால் வந்தன. அளவு கடந்த கண்ணோட்டத்தினின்றும் நீக்குவதற்கு 'அளவினால்' என்றார். (அளவினாற் கண்ணோட்டமில்லாத கண்கள்) ஒருபயனையுஞ் செய்யா வென்பது குறிப்பெச்சம்.

(க – து.) தகுமளவாகத் தாட்சண்ணியஞ் செய்தலில்லாத கண்களால் யாதொரு பயனுமில்லை என்பது.

4. Beyond appearing to be in the face, what good do they do, those eyes in which there is no well-regulated kindness?

—— ——

௫. * **கண்ணிற் கணிகலங் கண்ணோட்ட மஃதின்றேற்**
**புண்ணென் றுணரப் படும்.**

பரி:—(இ - ள்.) ஒருவன் கண்ணிற்கு அணியுங்கலமாவது கண்ணோட்டம்; †அக்கலமில்லையாயின், அஃதறிவுடையாராற் புண்ணென்றறியப்படும், (எ–று).

‡வேறணிகலம் இன்மையின் 'கண்ணிற் கணிகலம்' என்றும், கண்ணைத் தோன்றினும் நோய்களானும் ¶புலன்பற்றலானும் $துயர்விளைத்தல் நோக்கிப் 'புண்ணென்றுணரப்படும்' என்றுங்

---

* "கண்ணிற் கணிகலங் கண்ணோட்டம்" என்பது திரிகடுகம்.

† அக்கலமில்லையாயின் – கண்ணிற்குக் கண்ணோட்டம் (தாட்சண்ணியம்) என்னும் ஆபரணமில்லையானால்.

‡ கண்ணிற்கு கண்ணோட்டமல்லாது வேறாபரணமில்லை யென்பது "மின்னுமணி, பூணும் பிறவுறுப்புப் பொன்னே யதுபுனையாக், காணுங் கண்ணொக்குமோ காண்" என்று நன்னெறி கூறுவதாலு மறிதற் பாற்றும்.

¶ புலன்பற்றலானும் – விஷயங்களை யறிதலானும். புனல் (நீர்) பற்றலானும் என்றும் பாடமுண்டு.

[புலி முதலியவற்றைக் கண்டபோதும், தன்னை வருத்தும் பகைவரைக் கண்டபோதும், தனக்குத் துரோகம் செய்த மனைவி முதலாயினோரைக் கண்டபோதும், அநீதியாகப் பிறரிடத்துப்போன தனது பொருளைக் கண்டபோதும், அநீதிமான்களைக் கண்டபோதும் துன்பமுண்டாவதால் புலன் பற்றலும் துயர்விளைத்த லாயிற்றென்க].

[புலன் – உருவம், சையோகம், விபாகம், எண்முதலிய விஷயங்கள்; பற்றல் – உருவ முதலியவற்றை யறிதல்].

$ துயர் விளைத்தல் – துன்பத்தை யுண்டாக்குதல். [கண்ணோட்டமில்லாத கண் கண்ணைத்தோன்று மாயினும் அது நோய்களினாலும் விஷயங்களைப் பற்றுவதாலும் தன்னையுடையவனுக்குத் துன்பத்தை யுண்டாக்கு மென்பதாம்].

கூறினர். இவை மூன்று பாட்டானும் ஓடாது நின்ற கண்ணின் குற்றங் கூறப்பட்டது.

தெளி :—(இ - ள்.) கண்ணிற்கு - (ஒருவனது) கண்ணிற்கு, அணிகலம்-அணியும் ஆபரணமாவது, கண்ணோட்டம் - தாட்சண்ணிய மாம், அஃதின்றேல் - அவ்வாபரண மில்லையாயின், (அக்கண்), புண்ணென்று —, உணரப்படும் – (அறிவுடையவரால்) அறியப்படும், (எ – று).

கண்ணிற்குக் கண்ணோட்டமன்றி வேறுபரணமில்லாமையால் (கண்ணோட்டம்) 'கண்ணிற்கணிகலம்' என்றும், (கண்ணோட்ட மில்லாதகண்) கண்ணாய்த்தோன்றினும் நோய்களாலும் புலன்களைப் பற்றுதலாலும் துயர்விளைத்தலை நோக்கிப் 'புண்ணென்றுணரப்படும்' என்றும் சொல்லினர். இவை மூன்றுபாட்டாலும் கண்ணோட்டஞ் செய்யாது நின்ற கண்ணின் குற்றஞ்சொல்லப்பட்டது.

(க–து.) தாட்சண்ணிய மென்னும் ஆபரணமில்லாத கண் புண்ணாகு மன்றிக் கண்ணாகாது என்பது.

5. Kind looks are the ornaments of the eyes; without these they will be considered to be merely two sores.

---

**சு. மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ**
**டியைந்துகண் ணோடா தவர்.**

பரி :—(இ – ள்.) *ஓடுதற்குரிய கண்ணொடு பொருந்திவைத்து அஃதோடாதவர் இயங்காநின்றார் ஆயினும் மண்ணொடு பொருந்தி நிற்கின்ற மரத்தினை யொப்பர், (எ–று).

† 'ஓடாதவர்' என்புழிச் சினைவினை முதன்மேனின்றது. ‡மரமுங் கண்ணோடியைந்து கண்ணோடாமையின், இது தொழிலுவமம்.

---

* ஓடுதற்குரிய – கண்ணோட்டஞ் செய்வதற்குரிய.

† 'ஓடாதவர்' என்றவிடத்து (கண்ணாகிய) சினையி (உறுப்பி) னது ஓடாமை (தாட்சண்ணியங் கொள்ளாமை) யென்னுந் தொழில் முதன் மேல் (அக்கண்ணையுடையவர் மேல்) நின்றதென்பது, "சினை வினை சினையொடு முதலொடுஞ் செறியும்" என்னும் நன்னூற் சூத்திரம் இங்கறியத் தக்கதாம்.

‡ மரமும் கண்ணோ (கணுவோ) டியைந்து (பொருந்தி) கண்ணோ டாமையின் (தாட்சண்ணியங் கொள்ளாமையால்), இது தொழிலு வமையணியாம். தொழிலையுவமானமாகச் சொல்வது தொழிலுவமை யணியாம். இங்குக் கண்ணோடாமை தொழில். மரங் கண்ணோடு கூடியிருந்துங் கண்ணோடாதிருத்தல் போலத் தாட்சண்ய மில்லாதவர் கண்ணோடு கூடியிருந்துங் கண்ணோடாதிருக்கின்றன ரென்பது திரண்ட பொருள். எனவே கண்ணோட்டமில்லாதவர் "நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய, மாட்டா தவனன் மரம்" என்பதுபோல மரமாவ ரென்பதாயிற்று.

¶ இதனைச் * சுதைமண்ணோடு கூடிய மரப் †பாவையென் றுரைப் பாருமுளர். ‡அஃதுரை யன்மை $காணப்படுங் கண்ணனன்றி ¶ அதனுண் மறைந்து நிற்கின்ற †† ஒருசாருள்ளீட்டாற் கூறினமை யானும், ‡‡ "மரக்கண்ணோ மண்ணாள்வார் கண்ணென்-றிரக் கண்டாய்" என்பதனானுமறிக.

தெளி:—(இ-ள்) கண்ணோடு - (ஓடுதற்குரிய) கண்ணோடு, இயைந்து - பொருந்தியிருந்தும், கண்ணோடாதவர் - அக் கண்ணோடுத லில்லாதவர், (சஞ்சரிக்கின்றவராயிருந்தாலும்), மண்ணோடு—, இயைந்த - பொருந்தி நிற்கின்ற, மரத்தனையர் - மரத்தினையொப்பர், (எ-று).

'கண்ணோடாதவர்' என்றவிடத்துச் சினையாகிய கண்ணினது ஓடுதல்வினை 'ஓடாதவர்' என்னும் முதல்மேல் நின்றது. மரமும் கண்ணோடு கூடிக்கண்ணோடாமையால், இது தொழிலுவமை யணியாம்.

(க - து.) தாட்சண்யமில்லாதவர் மரத்திற் கொப்பாவர்.

6. They resemble the trees of the earth, who, although they have eyes, never look kindly on others.

---

¶ இதனை-மண்ணோ டியைந்த மரத்தனைய ரென்பதற்கு.

* சுதை மண் - சுண்ணும்பும் மண்ணுங் கலந்தரைத்த சாந்து.

† பாவை - பதுமை (பொம்மை).

‡ அஃதுரையன்மை - அவ்வாறு கூறுதல் உரையாகாமை.

$ காணப்படுங் கண்ணனன்றி அதனுண் மறைந்து நிற்கின்ற ஒரு-சாருள்ளீட்டாற் கூறினமையானும் என்பது சில பிரதிகளிலில்லை.

¶ அதனுள் - அக்கண்ணினுள்.

†† ஒருசா ருள்ளீட்டால் - ஒருவகையான தாட்சண்ணியம்பற்றி.

‡‡ முத்தொள்ளாயிரம். இதன்பொருள், மண்ணுலகத்தை யரசாட்சி செய்யும் அரசரது கண் மரத்தினது கண்ணோ என்று நினைத்து யாசித்தலை மேற் கொண்டாய் என்பது.

"வரக்கண்டு நாணாதே வல்லையா னெஞ்சே
மரக்கண்ணோ மண்ணாள்வார் கண்ணென் - றிரக்கண்டாய்
வாளுழுவை வெல்கொடியான் வண்புனனீர் நாடற்கென்
றோளுழுவந் தோன்றத் தொழுது"

என்பது முத்தொள்ளாயிரம்.

பரிமேலழகர் மறுப்பின் விபரமாவது:—காணப்படுங் கண்ணு லன்றி அக்கண்ணினுள் மறைந்து கிடக்குந் தாட்சண்ணியத்தைப் பற்றிக் கூறினமையாலும், 'மரக்கண்ணோ மண்ணாள்வார் கண்' என்று பிரயோகமிருப்பதாலும், 'மண்ணோ டியைந்த மரத்தனையர்' என்பதற்குச் சுதைமண்ணோடுகூடிய மரப்பாவை யொப்பாரென்றுரை கூறுதல் பொருந்தாதென்பது. எனவே, மண்ணோடியைந்த மரத் தனையர் என்பதற்குச் சுதைமண்ணோடுகூடிய மரப்பாவை யொப்பா ரென்று பொருள் கூறுதல் யாதொரு பொருத்தமு மில்லாது நின்ற தாயிற்றென்க.

**எ. ‡ கண்ணோட்ட மில்லவர் கண்ணிலர் கண்ணுடையார்**
**கண்ணோட்ட மின்மையு மில்.**

பரி :—(இ-ள்.) கண்ணோட்டமில்லாதவர் கண்ணுடையரும் அல்லர் ; கண்ணுடையவர் கண்ணோட்டமிலராதலும் இல்லை, (எ–று).

*கண்ணுடையராயின் † காட்சிக்கண்ணே அஃதோடும் என்பது பற்றிக் 'கண்ணோட்டமில்லவர் கண்ணிலர்' எனக்கூறிப் பின் அதனை ¶ எதிர்மறை முகத்தான் விளக்கினர். * உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. இவையிரண்டு பாட்டானுங கண்ணோடாதாரது இழிபு கூறப்பட்டது*

தெளி :—(இ-ள்.) *கண்ணோட்டமில்லவர் – கண்ணோடுதலில்லாதவர், கண்ணிலர் – கண்ணுடையவருமல்லர், கண்ணுடையார் – கண்ணுடையவர், கண்ணோட்டமின்மையும் – (கண்ணிலராதலன்றி) கண்ணோடுதலிலராதலும், இல்–இல்லை,* (எ–று).

*கண்ணுடையவராயிருந்தால் காட்சியினிடத்தே அக்கண் ஓடும் என்பது பற்றிக் 'கண்ணோட்டமில்லவர் கண்ணிலர்' என்றுகூறிப் பின்பு அக்கண்ணோட்ட மில்லாமையை யெதிர்மறை வாயிலாகக் 'கண்ணுடையார் கண்ணோட்டமின்மையுமில்' என்று விளக்கினர். இன்மையுமென்றவும்மை இறந்தது தழுவிய எச்சவும்மை. இவையிரண்டுபாட்டாலும் கண்ணோட்டமில்லாதவரது இழிபு சொல்லப் பட்டது.*

(க – து.) *தாட்சண்ணிய மில்லார் குருடரும் அஃதுடையார் கண்ணுடையவருமாவர் என்பது.*

7. Men without kind looks are men without eyes ; those who really have eyes are also not without kind looks.

---

**அ. கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்**
**குரிமை யுடைத்திவ் வுலகு.**

பரி :—(இ-ள்.) முறைசெய்தலாகிய தந்தொழிலழியாமற் கண்ணோட வல்ல வேந்தர்க்கு உரித்தாந் தன்மை யுடைத்து இவ்வுலகம், (எ – று).

---

‡ *யாண்டுத்தீயில்லை, ஆண்டுப்புகையில்லை ; யாண்டுப் புகை யுண்டு, ஆண்டுத் தீயுண்டு என்பதுபோல யாண்டுக் கண்ணோட்ட மில்லை, ஆண்டுக் கண்ணில்லை ; யாண்டுக் கண்ணுண்டு, ஆண்டுக் கண்ணோட்டமுண்டு எனக்கொள்க. இதனல் கண்ணோட்ட (தாட்சண்ய) மில்லாதவர் கண்ணில்லாதவ (குருட)ராவர் : கண் ணுடையவர் கண்ணோட்டமுடையவராவரென்பது நன்கு விளங்கும்.*

† *காட்சிக்கண்ணே அஃதோடும் – தன்னுடன் பழகினவரைக் கண்டவிடத்து அக்கண் தாட்சண்ணியமுடையதாயிருக்கும்.*

¶ *கண்ணிலர் என்பதற்கு எதிர்மறை கண்ணுடையார்.*

* *இன்மையும் என்னும் உம்மை கண்ணிலராதலன்றி யென்பதைத் தழுவிநிற்றலின், இறந்தது தழுவிய எச்சவும்மை யாயிற்று.*

தம்மொடு பயின்றார் பிறரை *யிடுக்கண்செய்துழி அவரைக் †கண்ணோடி ஒருதார்க்கு ‡முறை சிதைதல் மேல் "¶ஓர்ந்துகண் ணோடாது" என்ற முறையிலக்கணத்தானும் பெற்றாம். முறை சிதையவரும்வழிக் கண்ணோடாமையும் வாராவழிக் கண்ணோடலும் ஒருவற்கியல்பாதலருமையின் 'கண்ணோடவல்லார்க்கு' என்றும், ()அவ்வியல்புடையார்க்கு உலகமுழுதும் நெடுங்காலஞ் சேறலின் 'உரிமையுடைத்து' என்றுங் கூறினார். இதனாற் கண்ணோடுமாறு கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்.) இவ்வுலகு - இவ்வுலகம், கருமம் - (முறை செய்தலாகிய தமது) தொழில், சிதையாமல் - அழியாமல், கண்ணோட வல்லார்க்கு - கண்ணோடுதல் செய்யவல்ல அரசர்க்கு, உரிமை – உரிய தாந்தன்மையை, உடைத்து - உடையதாம், (எ - று).

தம்மோடுபழகினவர் பிறர்க்கு இடுக்கண்செய்தவிடத்து அப்பழகினவரைக் கண்ணோட்டஞ்செய்து தண்டியாதவரசர்க்கு முறைகெடுதல் முன்னே 'ஓர்ந்துகண் ணோடாது' என்னுங் குறளிற் கூறிய முறை இலக்கணத்தாலும் பெற்றாம். முறைகெட வருமிடத்துக் கண்ணோடுதல் செய்யாமையும் முறைகெட வாராத-விடத்துக் கண்ணோடுதல் செய்தலும் ஒருவனுக்குச் சுபாவமாயிருத்தல் அருமையாகலால் 'கண்ணோடவல்லார்க்கு' என்றும் அச்சுபாவ முடையவர்க்கு உலகமுழுதும் நெடுங்காலம் வசப்பட்டுவருவதால் 'உரிமையுடைத்து' என்றும் சொல்லினார். இதனால் கண்ணோட்டஞ் செய்யும் விதம் சொல்லப்பட்டது.

(க - து.) நீதி தவறுவாறு தமக்குரியாரிடத்துத் தாட்சண்ணியஞ் செய்யவல்ல அரசர்க்கு இவ்வுலகம் நெடுங்கால முரிமையுடைய தாகும்.

8. Those kings who are able to show kindness, without injury to their affairs, the world will be all their own.

---

**௯. ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணுங்கண் ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை.**

---

* இடுக்கண் செய்துழி – துன்பஞ் செய்தவிடத்து.

† கண்ணோடி - தாட்சண்ணியஞ் செய்து. ‡ முறை - நீதி.

¶ திருக்குறள் செங்கோன்மை - 1. இதன் பொருள். தன்கீழ் வாழ்வார் குற்றஞ்செய்தால் அக்குற்றத்தை யாராய்ந்து யாவரி-டத்துந் தாட்சண்ணியஞ் செய்யாது நடுவு நிலைமையைப் பொருந்தி அக்குற்றத்திற்குச் சொல்லி யுள்ளதண்டத்தை யமைச்சர் புரோகிதர் களோடு மாராய்ந்து அவ்வாராய்ச்சிக்கு ஏற்ற வண்ணம் செய்வதே நீதியாம் என்பது.

() அவ்வியல்புடையார்க்கு - நீதிகெட வருமிடத்துத் தாட்-சண்ணியங் கொள்ளாமையும் நீதிகெட வாராவிடத்துத் தாட்சண்ணியங் கொள்ளுதலுமாகிய சுபாவமுடையவர்க்கு.

பரி:—(இ - ள்.) தம்மை ஒறுக்கும் இயல்புடையா ரிடத்தும் கண்ணோட்டமுடையராய்க் குற்றத்தைப் பொறுக்குமியல்பே அரசர்க்குத் தலையாய இயல்பாவது, (எ - று).

*'பண்பினுர்' என்றதனுல் §அவர் பயிற்சிபெற்றும். †ஒறுத்-தாற்றும் பொறுத்தாற்று மென்பன ஈண்டொருசொன்னீர.*

தெளி:— (இ - ள்.) *ஒறுத்தாற்றும் - (தம்மை) வருத்தும், பண்பினுர் கண்ணும் - இயல்புடையாரிடத்தும், கண்ணோடி - கண்ணோடுதலுடையவராய், பொறுத்தாற்றும் - (குற்றத்தைப்) பொறுக்கும், பண்பே - இயல்பே, தலை - (அரசர்க்குத்) தலைமையான வியல்பு,* (எ -று).

*'பண்பினுர்' என்றமையின் அவரது பழக்கம் பெற்றும். ஒறுத்தாற்றும் பொறுத்தாற்றும் என்பன இங்கு ஒருசொற் றன்மையன.*

*(க - து.) அரசர்க்குத் தலைமையான இயல்பாவது தம்மை வருத்து மியல்புடையவ ரிடத்தும் தாட்சண்ணிய முடையவராய், அவர் செய்த குற்றத்தைப் பொறுத்திருத்தலேயாம் என்பது.*

9. Patiently to bear with, and show kindness to those who grieve us, is the most excellent of all dispositions.

---

**கo. பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க**
**நாகரிகம் வேண்டு பவர்.**

பரி:—(இ - ள்.) பயினுர் தமக்கு நஞ்சிடக்கண்டுவைத்தும் ‡கண் மறுக்கமாட்டாமையின், அதனையுண்டு பின்னும் அவரோடு மேவுவர், யாவரானும் விரும்பத்தக்க கண்ணோட்டத்தினை வேண்டுபவர், (எ – று.).

*நாகரிகமென்பது கண்ணோட்டமாதல் ¶"முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பி, னஞ்சு முண்பர் நனிநா கரிகர்" என்பதனுனு மறிக. அரசர் அவரை ஒறுது கண்ணோடற்பாலது தம்மாட்டுக் குற்றஞ் செய்துழி யென்பது இவ்விரண்டு பாட்டானுங் கூறப்பட்டது.*

---

§ *அவர் - வருத்தும் இயல்புடையவர்.*

† ஒறுத்தாற்றும் என்பது ஒறுக்கும் எனவும் பொறுத்தாற்றும் என்பது பொறுக்கும் எனவும் பொருள் தந்தமையின், அவை ஒரு சொல்லின் தன்மைய வாயின வென்க.

‡ *கண்மறுக்கமாட்டாமையின் - தாட்சண்ணியத்தால் தடுக்க முடியாமையால்.*

¶ *நற்றிணை 355. இதன் பொருள். முன்னரிருந்து சிநேகிதர்கள் கொடுத்தால் விஷத்தையுஞ் சாப்பிடுவர் மிகுந்த கண்ணோட்ட முடையவர் என்பது. தாட்சண்ணியமுடையவர் தமக்குத் தமது நேசர் விஷங்கலந்த வுணவை யிட்டாலும் அதனை மறுக்காமல் உண்பரென்பது இதன் திரண்ட பொருளாம்.*

தெளி :—(இ - ள்.) நயத்தக்க - (யாவராலும்) விரும்பத்தக்க, நாகரிகம்-கண்ணோடுதலை, வேண்டுபவர் - விரும்புவோர், நஞ்சு - நஞ்சை, பெயக்கண்டும் - (பழகினவர் தமக்கு) இடப்பார்த்தும், உண்டு - (கண் மறுக்கமாட்டாமையால் அந்நஞ்சினை) உண்டு, அமைவர் - (பின்னும் அவரோடு) பொருந்துவர், (எ-று).

அரசர் அவரைத் தண்டியாது கண்ணோட்டஞ் செய்யவேண்டுவது (அவர் பிறரிடத்துக் குற்றஞ் செய்தவிடத்தன்று) தம்மிடத்துக் குற்றஞ் செய்தவிடத்து என்பது இவ்விரண்டு பாட்டாலும் சொல்லப் பட்டது.

(க-து.) தாட்சண்ணியமுடைய வேந்தர் தம்மோடு பழகினவர் தமக்கு நஞ்சுகலந்த உணவிட்டாலும் அதனையுண்டு அவரோடு பின்னும் நேசிப்பர் என்பது.

10. Those who desire to cultivate that degree of urbanity which all shall love, even after swallowing the poison served to them by their friends, will be friendly with them.

---

## இருபத்தொன்றும் அதிகாரம்

### 59. ஒற்றுடல் :—On the employment of spies

பரி:—அஃதாவது பகை நொதுமல் நட்பென்னும் மூன்று திறத்தார் மாட்டும் *நிகழ்ந்தன அறிதற்கு †ஒற்றரை ஆளுதல். ‡மேற்சொல்லிய இலக்கணத்தனாய அரசனுக்குத் தன்னாடு செலுத்துங்காலும் பிறர் நாடு கொள்ளுங்காலும் வேண்டுவன கூறுகின்றாராகலின், ¶அவ்விருமைக்கும் இன்றியமையாதாய இது முன் வைக்கப்பட்டது.

தெளி :—அஃதாவது பகைவர் அயலார் நட்பினர் என்னு மூன்று திறத்தாரிடத்தும் நிகழ்ந்தனவற்றையறிதற்கு ஒற்றரை ஆளுதலாம். முன்னர்க்கூறிய இலக்கணமுடையவனாய அரசனுக்குத் தன்னாட்டைக் காக்கும்போதும் பிறர் நாட்டைப்பிடிக்கும்போதும் வேண்டுவன வற்றைக் கூறுகின்றாராதலால், அவ்விரண்டு காரியங்களுக்கும் அவசியம் வேண்டுவதாகிய இது (ஒற்றுடல்) முன் வைக்கப்பட்டது.

---

* நிகழ்ந்தன - நடந்த செயல்களை.

† ஒற்றர் - ஆங்காங்கு நடக்குஞ் செயல்களை மறைந்திருந்தடுத்து அறியும் வேவுகாரர். ஒற்றர், சாரணர், வேயர், சாரர், வேவுகார ரென்பன ஒரு பொருட்கிளவி. தூது என்று பின்னர்க் கூறுதலால் ஒற்றர் தூதராகாரென்க.

‡ மேற்சொல்லிய இலக்கணம் என்றது இறைமாட்சி முதல் கண்ணோட்டமிறுதியாயுள்ள அதிகாரங்களில் கூறியுள்ள இலக் கணங்களை.

¶ அவ்விருமைக்கும் - அரசன் தனது நாட்டினை யாளுதலும் பிறரது நாட்டினைப்பிடித்தலும் ஆகியவற்றிற்கும்.

க. *ஒற்று முரைசான்ற நூலு மிவையிரண்டுந்
தெற்றென்க மன்னவன் கண்.

பரி :—(இ-ள்.) ஒற்றும் புகழமைந்த நீதிநூலுமாகிய இவையிரண்டனையும் அரசன் தன்னிரண்டு கண்ணுமாகத் தெளிக, (எ-று).

ஒற்று, தன்கண் செல்லமாட்டாத பரப்பெலாஞ் சென்று கண்டு ஆண்டு நிகழ்ந்தனவெல்லாம் உணர்த்தலானும், நூல், அந்நிகழ்ந்தவற்றிற்குத் தன்னுணர்வு செல்லமாட்டாத வினைகளை யெல்லாஞ் சொல்லி யுணர்த்தலானும் இவ்விரண்டனையுமே தனக் †ஊனக் கண்ணும் ஞானக்கண்ணுமாகத் துணிந்துகொண்டு ஒழுகுக என்பதாம். ஒற்றனை ஒற்றென்றார்; வேந்தனைவேந்தென்றாற்போல. தெற்றென்க என்பது தெற்றென் என்பது ‡முதனிலையாக வந்தவியங்கோள். அது ¶தெற்றென என்னுஞ் செயவெனெச்சத்தானறிக. இதனால் ஒற்றினது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) மன்னவன் - அரசன், ஒற்றும் - ஒற்றனும், உரை சான்ற-புகழமைந்த, நூலும் - (நீதி) நூலும், (ஆகிய), இவையிரண்டும் - இவை யிரண்டனையும், கண் - (தன்னிரண்டு) கண்ணுமாக, தெற்றென்க - தெளியக்கடவன், (எ-று).

ஒற்று (ஒற்றனுனவன்), தன்கண் செல்லமுடியாத இடமெல்லாம் போய்க் கண்டு அங்கு நிகழ்ந்தவற்றை யெல்லாம் அறிவித்தலாலும், நீதிநூல், அந்நிகழ்ந்தனவற்றிற்குத் தன்னறிவு செல்லமுடியாத தொழில்களை யெல்லாஞ் சொல்லி அறிவித்தலாலும், (ஒற்றும் உரைசான்ற நூலும் என்னும்) இவ்விரண்டனையுமே (அரசன்) தனக்கு ஊனக்கண்ணும் ஞானக்கண்ணுமாக நிச்சயித்துக்கொண்டு நடக்கக் கடவனென்பதாம். வேந்தனை வேந்து என்று பண்பாகு பெயராற் கூறுவதுபோன்று ஒற்றனை ஒற்று என்று தொழிலாகு பெயரால் கூறினர். தெற்றென்க என்பது தெற்றென் என்னும் இடைச்சொல் அடியாகப் பிறந்த வியங்கோள் வினை முற்று. தெற்றென் என்பது பகுதியாதலைத் தெற்றென என்னும் செயவென்னும் வினையெச்சத்தாலறிக. இதனால் ஒற்றனது சிறப்புச்சொல்லப்பட்டது. ஒற்று - முதனிலைத் தொழிற் பெயர். ஒற்றுதல்-வேடமாறிச்சென்றாராய்ந்தறிதல்.

(க-து.) அரசனுக்கு ஒற்றன் ஊனக்கண்ணும் நீதிநூல் ஞானக் கண்ணுமாம் என்பது.

1. Let a king consider as his eyes these two things, a spy, and a book of laws universally esteemed.

---

* "உளக்க ணீதிநூ லாக வொற்றே வெளிக்கண் ணெனவிடுத்து" என்று விநாயகபுராணம் கூறுகின்றது.

† ஊனக்கண் - மாமிச வடிவான புறக்கண். ஒற்று - ஊனக் கண்ணும்; நீதிநூல் - ஞானக்கண்ணும்.

‡ முதனிலையாகவந்த - பகுதியடியாகப்பிறந்த.

¶ "தெற்றென, அல்ல புரிந்தார்க் கறந்தோன்று" என்பது நான் மணிக்கடிகை.

௫௮ உ. எல்லார்க்கு மெல்லா நிகழ்பவை யெஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் றொழில்.

**பரி:-** (இ-ள்.) எல்லார்கண்ணும் நிகழ்வன எல்லாவற்றையும் நாடோறும் ஒற்றான் விரைந்தறிதல் அரசனுக்கு உரியதொழில், (எ-று).

எல்லார்க்கும் என்றது மூன்று திறத்தாரையும். நான்காவது ஏழாவதன் பொருட்கண் வந்தது. †நிகழ்பவை யெல்லாமென்றது நல்லவுந் தீயவுமாய சொற்களேயுஞ் செயல்களேயும். ‡அவை நிகழ்ந்தபொழுதே அவற்றிற்குத் ¶தக்கவழியாகத் தேறுதலாகச் செய்யவேண்டுதலின் "வல்லறிதல்' என்றும், $அவ்விருதொழிற்கும் அறிதல் காரணமாகலின், அதனையே உபசாரவழக்கால் 'தொழில்' என்றுங் கூறினர். ஒற்றானென்பது அதிகாரத்தான்வந்தது. இதனல் ஒற்றினைய பயன் கூறப்பட்டது.

**தெளி:—**(இ-ள்.) எல்லார்க்கும் - எல்லாரிடத்தும், நிகழ்பவை யெல்லாம் - நடப்பனவெல்லாவற்றையும், எஞ்ஞான்றும் - நாள் தோறும், வல்லறிதல் (ஒற்றனல்) விரைந்தறிதல், வேந்தன் றொழில் - அரசனுக்கு உரிய தொழிலாம், (எ - று).

---

† நிகழ்வன வெல்லாமென்றது என்றும் பாடமுண்டு.

‡ அவை (நல்லவும் தீயவுமாய சொற்களும் செயல்களும்) நிகழ்ந்த பொழுதே (உண்டானகாலத்திலேயே) அவற்றிற்குத் தக்கவழியாக (தகுந்த படியாவது) தேறுதலாக (தெளிந்திருத்தலாவது) செய்ய வேண்டுதலின் (செய்யவேண்டியிருத்தலால்) 'வல்லறிதல்' என்று கூறப்பட்டது. [பகைவர் அயலார் நட்பினர் என்னும் மூன்று திறத்தாரிடத்தும் அப்போதப்போ துண்டாகும் நல்லனவும் தீயனவு-மாயசொற்களேயும் செயல்களேயும் அரசன்வேவுகாரரால் உடனுக்-குடன் விரைந்தறிந்து அவற்றிற்குத் தக்கவாறு காரியங்களேச் செய்து தெளிந்திருக்க வேண்டுமென்பது கருத்து.] இங்கு ஆக என்னும் இடைச்சொல் உறழ்ச்சிப்பொருளில் வந்தது.

¶ தக்க அளியாக என்றும் பாடமுண்டு. அளி - கருணை.

$ அவ்விருதொழிற்கும் (பகைவர் முதலாயினரிடத் துண்டாய சொற் செயல்களுக்குத் தக்கவாறு செய்தல் தெளிந்திருத்தலென்னு-மிருதொழிலேச் செய்தற்கும்) அறிதல் (ஆங்காங்கு நடப்பனவற்றை யரசன் வேவுகாரர்வாயிலாகத்தெரிந்து கொள்ளுதல்) காரண-மாகலின் (காரணமாயிருத்தலினல்) அதனை (அறிதலே)யே உபசார வழக்கால் 'தொழில்' என்றுங்கூறினர் என்று கூறப்பட்டது. காரணமாகிய அறிதலே அதன்காரியமாகிய தொழிலோடொற்றுமைப் படுத்தி அறிதல் தொழில் என்று கூறினமையின், இதுகாரணம் காரியமாய வுபசாரவழக்காம். முதல்வேற்றுமையாயுள்ள இரண்டு சொற்கள் ஒருவாக்கியமாய் நிற்குமாயின், அங்கு அவ்விருசொற்-களுக்கும் பொருள் ஒன்றேயாமென்பது இங்கறியத்தக்கது. வல்லறிதல் வேந்தன் றொழில்என்பதன்கண் அறிதல் என்பதும் தொழில் என்பதும் முதல் வேற்றுமையாயிருத்தலால் அவ்விரண்டும் அபேதமாயின வென்க.

எல்லார்க்கும் என்றது பகைவர் அயலார் நட்பினர் என்னு மூன்று திறத்தாரையும். எல்லார்க்கு மென்னும் நான்கனுருபு எல்லாரிடத்தும் என ஏழனுருபின் பொருளில் வந்தது; இவ்வாறு வருதல் வேற்றுமை மயக்கமெனப்படும். நிகழ்பவை யெல்லாமென்றது நல்லனவும் தீயனவும் ஆகிய சொற்களையும் செயல்களையும். அவை நிகழ்ந்த பொழுதே அவற்றிற்குத்தக்க வழியாகவாவது தேறுதலாகவாவது செய்யவேண்டுதலால் 'வல்லறிதல்' என்றும், அவ்விருதொழிலுக்கும் அறிதல் காரணமாகலால், அவ்வறிதலையே உபசார வழக்கால் 'தொழில்' என்றுஞ் சொல்லினர். ஒற்றனால் என்பது ஒற்றுட லென்னும் அதிகாரத்தால் வந்தது. இதனால் ஒற்றினாலாகிய பயன் சொல்லப்பட்டது.

(க – து.) அரசனது தொழில் எல்லாரிடத்தும் நிகழும் சொற்களையும் செயல்களையும் ஒற்றனால் விரைந்தறிதலாம் என்பது.

2. It is the duty of a king to know quickly what all happens at all times amongst all men.

— —

**ந. *ஒற்றினா னொற்றிப் பொருடெரியா மன்னவன்**
**கொற்றங் கொளக்கிடந்த தில்.**

**பரி:—(இ – ள்) ஒற்றினானே எல்லார்கண்ணும் நிகழ்ந்தவற்றை ஒற்றுவித்து †அவற்றான் எய்தும் பயனை ஆராயாத அரசன் வென்றி யடையக்கிடந்தது வேறொரு நெறியில்லை, (எ – று).**

அந்நிகழ்ந்தனவும் பயனும் அறியாது பகைக்கெளியனாதல் பிறிதிற்றீராமையின் 'கொற்றங்கொளக்கிடந்ததில்' என்றார். ‡இதற்குக் கொளக்கிடந்ததொரு வென்றியில்லையென் றுரைப்பினு மமையும். இதனால் ¶அத்தொழில் செய்யாதவழி வருங் குற்றங் கூறப்பட்டது.

தெளி:—(இ – ள்.) ஒற்றினால் - ஒற்றனாலே, ஒற்றி - (பகைவர் அயலார் நட்பினரென்னும் எல்லாரிடத்தும் நிகழ்ந்தனவற்றை) அறிந்துவரச் செய்து, பொருள் - (அந்நிகழ்ந்தனவற்றால் அடையும்) பயனை, தெரியா - ஆராய்ந்தறியாத, மன்னவன் - அரசன், கொற்றங் கொளக்கிடந்தது - வெற்றியடையக்கிடந்தது, இல் - (வேறொருவழி) இல்லை, (எ – று).

---

* "ஒற்றினா லொற்றிப் பொருடெரிதன் முன்னினிதே" என்பது இனியவை நாற்பது.

† அவற்றான் எய்தும் பயனை—(பகைவர் முதலாயினாரிடத்து) உண்டாயவற்றால் அடையும் பிரயோசனத்தை.

‡ இதற்கு – (கொற்றங் கொளக்கிடந்த தில் என்பதற்கு), கொள்ளக்கிடந்ததொரு வெற்றியில்லை யென்று பொருள் கூறினாலும் பொருந்தும். இங்குக் கொற்றங் கொளக்கிடந்த தில் என்பதற்குக் கொளக்கிடந்தது கொற்றம் இல் என்றன்வயமாம்.

¶ அத்தொழில் – ஒற்றினா னொற்றிப் பொருள் தெரிதல்.

அந்நிகழ்ந்தனவற்றையும் அவற்றாலடையும் பயனையும் அறியாமல் பகைவர்க்கு எளியனாதல் (ஒற்றனால் நீங்குவதன்றி) வேறொன்றனால் (அரசனுக்கு) நீங்காமையால் (ஒற்றினை ஞெற்றிப் பொருடெரியா மன்னவன்) 'கொற்றங் கொளக்கிடந்ததில்' என்றார். இதனால் அரசன் அத்தொழில் செய்யாத விடத்து வருங் குற்றம் சொல்லப் பட்டது.

(க - து.) ஒற்றனால் பகைவர் முதலாயினோரிடத்து நிகழ்ந்தன வற்றை யறியாத அரசன் வெற்றியடையான் என்பது.

3. There is no way for a king to obtain conquests, who knows not the advantage of discoveries made by a spy.

---

ச. * **வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதா ரென்றுங் கனைவரையு மாராய்வ தொற்று.**

**பரி:—(இ - ள்.) தங்காரியஞ் செய்வார் சுற்றத்தார் பகைவரென்று சொல்லப்பட்ட அனைவரையும் சொற் செயல்களான் ஆராய்வானே ஒற்றனுவான், (எ - று).**

தம்மென்றது அரசனோடுளப்படுத்தி. அவனுக்குக் காரியஞ் செய்வார் செய்வனவும், சுற்றத்தார் †தன்னிடத்தும் நாட்டிடத்துஞ் செய்வனவும், பகைவர் ‡தன் அற்றம் ஆராய்தலும் ¶மேற்றேறப் படுதலும் முன்னிட்டுத் $தன்னிடத்துச் செய்வனவுமறிந்து §அவற்றிற் கேற்றன செய்யவேண்டுதலின், ||இம் மூவகையாரையும் எஞ்சாமல் ஆராயவேண்டுமென்பார் 'அனைவரையு மாராய்வ தொற்று' என்றார்.

தெளி:—(இ - ள்.) தம் - தம்முடைய, வினைசெய்வார் - காரியஞ் செய்வார், சுற்றம் - சுற்றத்தார், வேண்டாதார் - பகைவர், என்ற - என்று சொல்லப்பட்ட, அனைவரையும் - யாவரையும், ஆராய்வது - (சொல்லாலும் செயலாலும்) ஆராய்பவனே, ஒற்று - ஒற்றனுவான், (எ - று).

ஒற்றனை அரசனோடு உளப்படுத்தித் தம் என்று கூறப்பட்டது. அவ்வரசனுக்குக் காரியஞ் செய்வார் செய்வனவற்றையும், சுற்றத்தார்

---

* வினைசெய்வார் - அரசனுக்குரிய காரியஞ் செய்யும் அமைச்சர் முதலாயினோர்.

† தன்னிடத்தும் - ஒற்றனாகிய தன்னிடத்தும்.

‡ தன் அற்றம் - தனது சோர்வாகிய சமயத்தை.

¶ மேற்றேறப்படுதலும் - பின் தெளியப்படுதலும்.

$ தன்னிடத்துச் செய்வனவுமறிந்து - ஒற்றனாகிய தன்னிடத்துச் செய்யுங் காரியங்களையுந் தெரிந்து.

§ அவற்றிற் கேற்றன - இராஜகாரியஞ் செய்வார் செய்வன, சுற்றத்தார் செய்வன, பகைவர் செய்வன என்பவற்றிற்குத் தக்க செயல்களை.

|| இம் மூவகையார் - வினைசெய்வார், சுற்றத்தார், பகைவர்.

தன்னிடத்தும் நாட்டிடத்தும் செய்வனவற்றையும், பகைவர் தன் சோர்வை ஆராய்தலும் மேல்தேறப்படுதலும் முன்னிட்டுத் தன்னிடத்துச் செய்வனவற்றையும் அறிந்து அவற்றிற்குத் தக்கன வற்றைச் செய்யவேண்டுதலால், இம் மூவகையாரையுங் குறையாமல் ஆராய வேண்டுமென்பார் 'அனைவரையு மாராய்வ தொற்று' என்றார். ஆங்கு - அசைநிலை யிடைச்சொல். என்ற என்புழி அகரம் தொக்கு நின்றது. உளப்படுத்தல் - ஒன்றுபடுத்தல்.

(க - து.) இராஜ காரியஞ் செய்பவரையும் உறவினரையும் பகைவரையும் அவர் தம் சொற்செயல்களால் ஆராய்பவனே ஒற்றனுவான் என்பது.

4. He is a spy who watches all men, to wit, those who are in the king's employment, his relatives, and his enemies.

---

585 ரு. **கடாஅ வுருவொடு கண்ணஞ்சா தியாண்டு**
**முகாஅமை வல்லதே யொற்று.**

**பரி:—(இ - ள்.) †ஒற்றப்பட்டார் கண்டால் ஐயுறுத வடிவோடு பொருந்தி அவர் ஐயுற்றறியலுறின் செயிர்த்து நோக்கிய அவர் கண்ணிற் கஞ்சாது நின்று ‡ நான்குபாயமுஞ் செய்தாலும் மனத்துக்கொண்டவற்றை ¶உமிழாமை வல்லவனே ஒற்றனுவான், (எ - று).**

கடாஅ வென்பது கடுக்குமென்னும் பெயரெச்சத் தெதிர்மறை. ஐயுறுத வடிவாவன: பார்ப்பார் வணிகர் $முதலாயினர் வடிவு.

தெளி:—(இ - ள்.) (ஆராயப்பட்டவர் கண்டால்) கடாஅ – சந்தேகியாத, உருவொடு – வடிவோடு, (பொருந்தி), (அவர் சந்தேகித்து அறியத் தொடங்கினுல்), கண்ணஞ்சாது - (கோபித்துப் பார்த்த அவர்) கண்ணிற்கு அஞ்சாமல், (நின்று), யாண்டும் – (நான்கு பாயமுஞ் செய்தாலும்) எவ்விடத்தும், உகாஅமை - (மனத்திற் கொண்டவற்றை) உமிழாதிருக்க, வல்லதே - வல்லவனே, ஒற்று – ஒற்றனுவான், (எ - று).

கடாஅ என்பது ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். இதற்கு-டம்பாட்டுப் பெயரெச்சம் கடுக்கும் என்பது சந்தேகியாத வடிவாவன: பார்ப்பார் வணிகர் முதலாயினர் வடிவு.

(க - து.) சந்தேகியாத வடிவத்துடன் பொருந்தி, ஐயுற்றார் கோபித்துப் பார்க்கும் பார்வைக்குச் சிறிதும் அஞ்சாது, மனத்திற் கொண்டவற்றை அவர்க்கு வெளிப்படுத்தாதவனே ஒற்றனுவான்.

---

† ஒற்றப்பட்டார் – ஒற்றனுல் ஆராயப்படும் பகைவர் முதலாயினர்.

‡ நான்குபாயம் – தான சாம பேத தண்டம்.

¶ உமிழாமை – வெளிப்படுத்தாமை; அஃதாவது சொல்லாமை. உமிழாமையில் (வெளிப்படுத்தாமையில்) என்றும் பாடமுண்டு.

$ முதலாயினர் என்றமையின், தீர்த்தயாத்திரை செய்வார், தவஞ்செய்வார், முற்றத்துறந்தார் முதலாயினேரையுங் கொள்க.

5. A spy is one who is able to assume an appearance which may create no alarm in the minds of others, who fears no man's face, and who never reveals his purpose.

---

சு. துறந்தார் படிவத்த ராகி யிறந்தாராய்ந்
தென்செயினுஞ் சோர்வில தொற்று.

பரி :—(இ-ள்.) முற்றத் துறந்தாராயும் விரத வொழுக்கினராயும் *உள்புகுதற் கரியவிடங்களெல்லாம் உள்புக்கு ஆராயவேண்டுவன ஆராய்ந்தறிந்து ஆண்டையார் ஐயுற்றுப் பிடித்து †எல்லாத்துன்பமுஞ் செய்து கேட்டாலும் தன்னை வெளிப்படுத்தாதவனே ஒற்றனுவான், (எ-று).

*விரத வொழுக்கம் – தீர்த்தயாத்திரை ‡முதலாயின. ¶செயினும் என்பது $அறவோரென்று செய்வாரின்மை விளக்கி நின்றது. ∫மேல் நால்வகையுபாயத்தினுஞ் சோர்வின்மை சொல்லிவைத்து §ஈண்டுத் தண்டத்தைப் பிரித்துக் கூறியது அதனது பொறுத்தற் கருமைச் சிறப்பு நோக்கி. ‖இதனுள் படிவமென்றதனை வேடமாக்கித்துறந்தார் வேடத்தராகியென் றுரைப்பாருமுளர்.*

---

* உள்புகுதற்கரிய விடங்கள் - உள்ளே பிரவேசிப்பதற்குச் சாத்தியமாகாதவிடங்கள். அவை அந்தப்புரம், ஆயுதசாலை, தனசாலை ஆலோசனை செய்யுமிட முதலியனவாம்.

† எல்லாத்துன்பமும் என்றது கைக்குக்கிட்டியிடல், அண்ணுந் தாளிடுதல், தலைகீழாகக்கட்டி மூக்கில் மிளகு நீரை வார்த்தல், கொப்பூழில் (தொப்புளில்) பிள்ளைப் பூச்சியைவைத்துக்கட்டுதல், நகங்களில் ஊசியையேற்றுதல் முதலியவற்று லுண்டாகுந் துன்பங்களை.

‡ முதலாயின என்றமையின், பஞ்சாக்கினிமத்தியில் நிற்றல், உண்டி சுருக்கல், தேவாலயவழிபாடு முதலியவற்றையுங் கொள்க.

¶ செயினும் என்ற உம்மை செய்வாரில்லாமையை விளக்கி நிற்றலால், எதிர்மறை யும்மையாம்.

$ அறவோர் - அற (தரும) நெறியிற்செல்வோர்; அவரிங்கு முற்றத்துறந்தார், விரத வொழுக்கினர். "தள்ளா விளையுளும்" என்னுங் குறளின் விசேடவுரையில் "அறவோர் - துறந்தோர், அந்தணர் முதலாயினர்" என் றிருப்பதிங் குணர்தற்பாற்றும்.

∫ மேல் என்றது இவ்வதிகாரத்தின் ஐந்தாவது குறளில் 'யாண்டு முகாஅமை' என்றதனை.

§ ஈண்டு – இக்குறளில். ஈண்டும் என்றும் பாடமுண்டு.

‖ இதனுள் - (இக்குறளில்) படிவமென்பதற்கு வேடமென்று பொருள் கொண்டு, துறந்தார் படிவத்த ராகி என்பதற்குத் துறவிகளின் வேடத்தினை யுடையவராகி யென்று பொருள் கூறுவாருமுண்டென்பது.

தெளி :—(இ - ள்.) துறந்தாராகி - முழுதுந் துறந்தாராயும், படிவத்த ராகி-விரத வொழுக்கினராயும், இறந்து-(உள்ளே போதற் கருமையான விடங்களி லெல்லாம்) போய், ஆராய்ந்து (ஆராய வேண்டுவனவற்றை) ஆராய்ந்தறிந்து என்செயினும் - (அவ்விடத் திருப்பவர் சந்தேகித்துப் பிடித்து) எல்லாத் துன்பமுஞ் செய்து கேட்டாலும், சோர்விலது - (தன்னை) வெளிப்படுத்தாதவனே, ஒற்று-ஒற்றனுவான், (எ - று).

விரதவொழுக்கம் - தீர்த்த யாத்திரை முதலாயின. செயினும் என்பது அறவோரென்று செய்வாரில்லாமையை விளக்கி நின்றது. முன்னே நால்வகை யுபாயத்தினுலும் சோர்வில்லாமையைச் சொல்லி வைத்து இங்குத் தண்டத்தைப் பிரித்துச் சொன்னது அத்தண்டத் தினது சகித்தற் கருமைச் சிறப்புநோக்கியென்க.

(க - து.) துறவிகள் முதலாயினுர் வேடத்தைக் கொண்டு பல விடங்களிலுஞ்சென்று, ஆராய வேண்டுவனவற்றை யாராய்ந் தறிந்து, அங்குள்ளார் சந்தேகித்துப் பிடித்து யாது செய்யினுந் தன்னை வெளிப்படுத்தாதவனே ஒற்றனுவான் என்பது.

6. He is a spy who, assuming the appearance of an ascetic, goes into whatever place he wishes, examines into all that is needful, and never discovers himself, whatever may be done to him.

---

எ. மறைந்தவை கேட்கவற் றாகி யறிந்தவை
ஐயப்பா டில்லதே யொற்று.

பரி : - (இ - ள்.) *ஒற்றப்பட்டார் மறையச்செய்த செயல்களை †அவர்க்குள்ளாயினுராற் கேட்க வல்லனுய்க் கேட்டறிந்த செயல்களிற் பின் ஐயப்படாது துணிய வல்லவனே ஒற்றனுவான், (எ - று).

மறைந்தவை சொல்லுவாரை அறிந்து, அவர் அயிராமற் சென் ‡றொட்டித் தாமே சொல்லும்வகை அதற்கேற்ற சொல்லாகச் செயலாக முன்னே விளைத்து, அத்தொடர்பாற் கேட்குங்காலும் உறுதார் போன்று நின்று கேட்க வேண்டுதலின் 'கேட்கவற் றாகி' என்றும், கேட்டறிந்தவற்றைத் தானே ஐயுற்றுவந்து சொல்லின் அரசனுல் அவற்றிற்கேற்ற வினை செய்யலாகாமையின் 'ஐயப் பாடில்லதே' என்றுங் கூறினுர். இவை நான்கு பாட்டானும் ஒற்றின திலக்கணங் கூறப்பட்டது.

தெளி :—(இ - ள்.) மறைந்தவை - (ஒற்றப்பட்டவர்) மறையச் செய்த செயல்களை, கேட்கவற்றாகி - (அவர்க்கு உள்ளாயினுரால்)

---

* ஒற்றப்பட்டார் - வேவுகாரரால் அடுத்தறியப்பட்டவர்.

† அவர்க்குள்ளாயினுரால் - ஒற்றப்பட்டவர்க்கு அந்தரங்கமா யிருப்பவர்களால்.

‡ ஒட்டி - அடுத்து.

கேட்க வல்லவனாய், அறிந்தவை - (கேட்டு) அறிந்தசெயல்களில், ஐயப்பாடில்லதே - (பின்) சந்தேகப்படாது நிச்சயிக்கவல்லவனே, ஒற்று - ஒற்றனாவான், (எ - று).

ஒற்றப்பட்டவர் மறையச்செய்த செயல்களைச் சொல்லுவாரை அறிந்து, அவர் சந்தேகியாதபடிபோய் ஒட்டி அவர் தாமே சொல்லும்படி அதற்கு ஏற்ற சொல்லையாவது செயலையாவது முன்னே உண்டாக்கி, அச்சமபந்தத்தினால் கேட்கும்போதும் அன்னியர்போல நின்று கேட்கவேண்டுதலால் 'கேட்கவற்றாகி' என்றும், கேட்டறிந்தவற்றைத் தானே சந்தேகித்து வந்து சொன்னால் அரசனால் அக்கேட்டறிந்தவற்றிற்கு ஏற்ற காரியம் செய்தல்கூடாமையால் 'ஐயப்பாடில்லதே' என்றும் சொல்லினார். இவை நான்கு பாட்டாலும் ஒற்றனது இலக்கணம் சொல்லப்பட்டது.

(க - து.) பகைவர் முதலாயினரது இரகசியச் செயல்களைச் சொல்ல வல்லாரிடத்துத் தக்கவாறு கேட்டறிந்து, கேட்டறிந்தவற்றிற் சந்தேகமில்லாதவனே ஒற்றனாவான் என்பது.

7. A spy is one who is able to discover what is hidden, and *who retains no doubt concerning what he has known.*

---

**அ. ஒற்றொற்றித் தந்த பொருளையு மற்றுமோ**
**ரொற்றினா லொற்றிக் கொளல்.**

**பரி:—(இ - ள்.) ஓரொற்றன் ஒற்றிவந் தறிவித்த காரியந்தன்னையும் பிறனொரொற்றனாலும் ஒற்றுவித்து* ஒப்புமை கண்டுகொள்க, (எ - று).**

ஒற்றப்பட்டாரோடொத்து நின்று ¶மாறுபடக்கூறலுங்கூடுமாகலின், ஒருவன் மாற்றந் தேறப்படாதென்பதாம்.

தெளி: — (இ - ள்.) ஒற்று - ஓரொற்றன், ஒற்றி - மறைவாயறிந்து வந்து, தந்த - அறிவித்த, பொருளையும் - காரியத்தையும், மற்றுமோ ரொற்றினால் - மற்றொரொற்றனாலும், ஒற்றி - அறிந்துவரச்செய்து, கொளல் - (ஒப்புமைகண்டு) கொள்ளக்கடவன், (எ-று).

ஒற்றப்பட்டவருடன் கலந்து நின்று மாறுபடச் சொல்லுதலுங் கூடுமாகையால், ஒருவன் சொல் தெளியப்படா தென்பதாம்.

(க - து.) அரசன் ஓரொற்ற னறிந்துவந் தறிவித்த காரியத்தை மற்றொரொற்றனாலும் அறிந்துவரச்செய்து ஒப்புமைகாணக்கடவன்.

8. Let not a king receive the information which a spy has discovered and made known to him, until he has examined it by another spy.

---

* ஒப்புமைகாணல் - ஒத்திருக்கப்பார்த்தல்.

¶ மாறுபட - வித்தியாசமுண்டாக.

**௬. * ஒற்றொற் றுணராமை யாள்க வுடன்மூவர்**
**சொற்றொக்க தேறப் படும்.**

**பரி:—(இ - ள்.) ஒற்றரை ஆளுமிடத்து ஒருவனை ஒருவனறியாமல் ஆள்க; அங்ஙனமாண்ட வொற்றர் மூவரை ¶ஒருபொருண்மேல் ‡வேறு வேறு விட்டால் $அம்மூவர் சொல்லும் பயனால் ஒத்தனவாயின், அது மெய்யென்று தெளியப்படும், (எ - று).**

§ஆயின் என்பது வருவிக்கப்பட்டது. ஒருவனை யொருவனறியின் தம்முளியைந்து ஒப்பக்கூறுவராகலின் 'உணராமை யாள்க' என்றும், மூவர்க்கு நெஞ்சொற்றுமைப் படுதலும் பட்டால் நீடு நிற்றலுங் கூடாமையின் 'தேறப்படும்' என்றுங் கூறினார். இதனானே £அஃதொத்திலதாயின், பின்னும் ஆராய்கவென்பதூஉம் பெற்றாம்.

**தெளி.—(இ - ள்.)** (ஒற்றரை ஆளுமிடத்து) ஒற்று - ஒரொற்றனை, ஒற்று - மற்றோரொற்றன், உணராமை - அறியாதிருக்கும்படி, ஆள்க - ஆளக்கடவன், (அவ்வாறாண்ட ஒற்றர்மூவரை), உடன் மூவர் - (ஒரு பொருள்மேல் வேறு வேறு விட்டால்) அம்மூவருடைய, சொல் - சொல்லும், தொக்க - (பயனால்) ஒத்திருப்பன, (ஆயின்), தேறப்படும்- (அப்பொருள் மெய்யென்று) தெளியப்படும், (எ - று).

ஆயின் என்பது வருவிக்கப்பட்டது. ஒரொற்றனை மற்றோரொற்றன் அறிந்தால் தம்முள் கலந்துகொண்டு ஒப்பச்சொல்லுவாராகையால் 'உணராமையாள்க' என்றும், மூவர்க்கு நெஞ்சு ஒற்றுமைப்படுதலும் பட்டால் நீடித்திருத்தலும் கூடாமையால் 'தேறப்படும்' என்றும் சொல்லினார். இதனாலே அம்மூவர் சொல்லும் பயனால் ஒவ்வா திருப்பனவாயின், பின்னும் ஆராய்கவென்பதும் பெறப்பட்டது. உடன்மூவ ரென்பதை மூவருடனென்றன் வயஞ்செய்து, உடனென்னும் மூன்றனுருபு ஆறனுருபின் பொருளில் வந்ததென்று கொள்க.

---

* "ஒருவரொருவர் தமையறியா தொருமை வினைக்கண் மூவர் தமை, மருவ விடுக்க மூவர்களும் வந்து மொழிவ தொத்துவிடிற், கரும மதனை மிகத்தெளிக" என்பது விநாயகபுராணம்.

¶ ஒருபொருண்மேல் - ஒருகாரியத்தின்மேல்.

‡ வேறுவேறுவிட்டால் - தனித்தனியாக அனுப்பினால்.

$ அம்மூவர் சொல்லும் - அந்த மூன்று ஒற்றர்களது வார்த்தையும்.

§ தொக்க என்னும் அன்சாரியை குறைந்தவினை ஆயின் என்பதை வேண்டி நிற்றலால், அது வருவிக்கப்பட்டது.

£ அஃது - (ஒரு காரியத்தின்மேல் ஒரு காலத்தில் தனித்தனியாக ஒருவரை மற்றொருவரறியாதபடி அனுப்பிய மூன்றொற்றரும் அறிந்து வந்து சொல்லும் சொல்) ஒத்திலதாயின் (தம்முள் ஒத்திராது விரோதப்படுமானால்). அஃதொத்திலவாயின் என்றும் பாடமுண்டு.

**(க - து.)** அரசன் ஒரு காரியத்தை மூன்று ஒற்றர்களால் தனித் தனியறிந்து தெளியக்கடவன் என்பது.

9. Let a king employ spies so that one may have no knowledge of the other; and when the information of three agrees together, let him receive it.

---

**கO. சிறப்பறிய வொற்றின்கட் செய்யற்க செய்யிற்**
**புறப்படுத்தா னாகு மறை.**

பரி.—(இ - ள்.) †மறைந்தவை அறிந்து கூறிய ஒற்றின்கட் செய்யுஞ் ‡சிறப்பினை அரசன் பிறரறியச் செய்யாதொழிக; ¶செய்தானாயின், தன்னகத்து அடக்கப்படும் மறையைத் தானே புறத்திட்டானாம், (எ - று).

மறையாவது அவனொற்றனாயதூஉம் அவன் கூறியதூஉமாம். சிறப்புப்பெற்ற இவன் யாவனென்றும் இது பெறுதற்குக் காரணம் யாதென்றும் வினவுவாரும் இறுப்பாரும் அயலாராகலின் 'புறப் படுத்தானாகும்' என்றார். இவை மூன்று பாட்டானும் ஒற்றரை யாளுமாறும், அவரான் நிகழ்ந்தன அறியுமாறும், அறிந்தாற் சிறப்புச் செய்யுமாறுங் கூறப்பட்டன.

தெளி:—(இ - ள்.) ஒற்றின்கண் - (மறைந்தவை அறிந்து சொல் லிய) ஒற்றனிடத்து, சிறப்பு - (செய்யும்) சிறப்பினை, அறிய - (அரசன் பிறர்) அறிய, செய்யற்க - செய்யாதிருக்கக்கடவன், செய்யின் - செய்தானானால், மறை - (தன்மனத் தடக்கப்படும்) மறையை, புறப்படுத்தானாகும் - (தானே) வெளிப்படுத்தினவனாவன், (எ - று).

மறையாவது அவன் ஒற்றனானதும் அவன் சொல்லியதும் ஆம். (அரசன் சிறப்பறியவொற்றின்கட்செய்தானாயின்) சிறப்புப்பெற்ற இவன் யாவனென்றும், இச்சிறப்பைப் பெறுதற்குக் காரணம் யாதென்றும் வினவுவாரும் விடைகூறுவாரும் அயலாராகலால் (மறையைப்) 'புறப்படுத்தானாகும்' என்றார். இவை மூன்று பாட்டாலும் ஒற்றரை ஆளும் விதமும், அவ்வொற்றரால் நிகழ்ந்தன வற்றை யறியும் விதமும், அறிந்தால் அவர்க்குச் சிறப்புச் செய்யும் விதமும் சொல்லப்பட்டன.

**(க - து.)** ஒற்றர்க்குச் செய்யுஞ் சிறப்பினை அரசன் பிறரறியாது செய்யக்கடவன் என்பது.

10. Let not a king publicly confer on a spy any marks of his favour; if he does, he will divulge his own secret.

---

† மறைந்தவை - ஒற்றப்பட்டார் மறையச் செய்த செயல்களை.

‡ சிறப்பினை - வெகுமதியை.

¶ செய்தானாயின் - பிறரறியச் செய்தானானால்.

# இருபத்திரண்டாம் அதிகாரம்

## ஊக்கமுடைமை—On energy

பரி:—அஃதாவது மனம் மெலிதலின்றி வினைசெய்தற்கட் ¶கிளர்ச்சி யுடைத்தாதல். ஒற்றரான் நிகழ்ந்தன அறிந்து அவற்றிற்கேற்ற வினை செய்வானுக்கு இஃது இன்றியமையாமையின், ஒற்றுடலின்பின் வைக்கப் பட்டது

தெளி:—அஃதாவது மனந் தளருதலில்லாமல் தொழில் செய் தலில் எழுச்சியுடையதாதலாம். ஒற்றரால் நிகழ்ந்தனவற்றை யறிந்து அவற்றிற்கு ஏற்ற தொழிலைச் செய்யுமரசனுக்கு இஃது (ஊக்க முடைமை) அவசியம் வேண்டுதலால், ஒற்றுடலின்பின் வைக்கப் பட்டது.

**க. உடைய ரெனப்படுவ தூக்க மஃதில்லா**
**ருடைய துடையரோ மற்று.**

பரி:—(இ - ள்.) ஒருவரை 0உடையரென்று $சொல்லச் சிறந்தது ஊக்கம்; அவ்வூக்கமில்லாதார் வேறுடையதுதானும் உடையராவரோ, ஆகார், (எ - று).

வேறுடையதென்றது முன்னெய்திநின்ற பொருளை. உம்மை விகாரத்தாற் றொக்கது. காக்கும் ஆற்றல் இலராகலின், அதுவும் இழப்பரென்பதாம்.

தெளி:—(இ - ள்.) உடையரெனப்படுவது - (ஒருவரை) உடையவ ரென்று சொல்லுதற்குச் சிறந்தது, ஊக்கம் - மனவெழுச்சியாம், அஃதில்லார்-அம்மனவெழுச்சி யில்லாதவர், மற்றுடையது - வேறுடை யதுதானும், உடையரோ - உடையவராவரோ, [ஆகார்], (எ - று).

வேறுடையதென்றது முன்னடைந்து நின்றபொருளை. உடையதும் என்னும் தெரிநிலை யும்மை செய்யுள் விகாரத்தாற்றொக்கு நின்றது. (ஊக்கமில்லாதவர் முன்னடைந்து நின்ற பொருளை) காப்பாற்றும் வல்லமையில்லாதவராதலால், அப்பொருளையும் இழப்பரென்பதாம்.

(க - து.) ஊக்கமுடையவரன்றி மற்றவர் பொருளுடையவ ராகார் என்பது.

1. Energy marks out the man of property; as for those who are destitute of energy, do they really possess what they possess ?

---

‡ "முயற்சிதா ளாண்மை யூக்க முந்துதா ளுத்தி யோகம், இயற்றலே யுளுற்றுழப்போ டாள்வினை யிவையுற் சாகம்" என்பது சூடாமணி நிகண்டு.

¶ கிளர்ச்சி – உற்சாகம். 0 உடையர் – பொருளுடையவர்.

$ சொல்லச் சிறந்தது – சொல்லுதற்குச் சிறந்த காரணமா யிருப்பது.

உ. உள்ள முடைமை யுடைமை பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும்.

பரி :—(இ - ள்.) ஊக்கமுடைமையே ஒருவனுக்கு நிலைநின்ற உடைமையாவது; மற்றைப்பொருளுடைமை நிலைநில்லாது நீங்கிப்போம்.

உள்ளம்—ஆகுபெயர். ஊக்கம் *உள்ளத்துப் பண்பாகலின் அதற்கு நிலைநிற்றலும், பொருள் உடம்பினும் வேறாய் அழிதன் மாலைத்தாகலின் அதற்கு நிலைநில்லாமையுங் கூறினார்; கூறவே, அஃதுடைமை அன்றென்பது பெறப்பட்டது.

தெளி :—(இ - ள்.) (ஒருவனுக்கு) உள்ளமுடைமை - ஊக்கமுடைமையே, உடைமை - (நிலைபெற்ற உடைமையாம், பொருளுடைமை - மற்றைப் பொருளுடைமையானது, நில்லாது - நிலைபெறுமல், நீங்கிவிடும் - நீங்கிப்போம், (எ - று).

உள்ளத்தின் பண்பாகிய ஊக்கத்தை உள்ளமென்று கூறினமையின், உள்ளமென்பது பொருளாகுபெயராம். உள்ளம் - மனம்; ஊக்கம் - அம்மனத்தின் கிளர்ச்சி. ஊக்கம் உள்ளத்தினது குணமாகலால் அவ்வூக்கத்திற்கு நிலைபெறுதலும், பொருள் உடம்பிலும் வேறு யழியுந் தன்மையதாகலால் அப்பொருளுக்கு நிலைபெறுமையுஞ் சொல்லினார்; சொல்லவே, அப்பொருள் உடைமையன்றென்பது பெறப்பட்டது.

(க-து.) ஊக்கமுடைமையே ஒருவனுக்கு நிலைபெற்ற உடைமையாம்; பொருள் நிலைபெற்ற வுடைமையன்றும் என்பது.

2. The possession of energy of mind is true property; the possession of wealth passes away and abides not.

---

ங. ஆக்க மிழந்தேமென் றல்லாவா ரூக்க
மொருவந்தங் கைத்துடை யார்.

பரி :—(இ - ள்.) †இழந்தாராயினும் யாம் கைப்பொருளை யிழந்தேமென்று அலமரார்; நிலைபெற்ற ஊக்கத்தைக் கைப்பொருளாக வுடையார், (எ - று).

ஆக்கம் — ஆகுபெயர், ஒருவந்தமாய வூக்கமென்க, கைத்து — கையகத்தாய பொருள்; ‡ " கைத்துண்டாம் போழ்தே கரவாதறஞ்செய்ம்மின் " என்றார் பிறரும். அல்லாவாமைக்கேது வருகின்ற பாட்டாற் கூறுப.

---

* உள்ளத்தின் (மனத்தின்) பண்பாகிய ஊக்கம் உடம்பிலும் வேறாய பொருள்போல அழியுந் தன்மையதின்றி ஊக்கமுடையவனுள்ளவளவும் உடையதாயிருத்தல் பற்றி அதற்கு நிலைநிற்றல் (அழியாமை) சொல்லப்பட்டது. † இழந்தாராயினும் - கைப்பொருளை யிழந்தாரானாலும்.

‡ நாலடியார் இளமை நிலையாமை - கூ இதன் பொருள். கையகத்துப் பொருளுண்டா யிருக்குங் காலத்திலேயே (அப்பொருளை) யொளித்து வையாது தருமத்தைச் செய்யுங்கள் என்பது.

தெளி :—(இ - ள்.) ஒருவந்தம் - நிலைபெற்றதாகிய, ஊக்கம் - மனவெழுச்சியை, கைத்து - கைப்பொருளாக, உடையார் - உடையவர், (இழந்தாராயினும்), ஆக்கம் - கைப்பொருளை, இழந்தேமென்று - (யாம்) இழந்துவிட்டோமென்று, அல்லாவார் - மனஞ் சுழலார், (எ - று).

ஆக்கத்திற்குக் காரணமான கைப்பொருளை ஆக்கமென்றமையின், ஆக்கமென்பது காரியவாகுபெயராம். ஆக்கம் — மேல்மேலுயர்தல். ஒருவந்தம் என்பதனை ஊக்கமென்பதனோடு கூட்டி ஒருவந்தமாய ஊக்கமென் றுரைக்கப்பட்டது. கைத்து கையினிடத் திருப்பதாய பொருள். அல்லாவாமைக்கு (மனஞ்சுழலாமைக்கு)க் காரணம் வருகின்ற பாட்டாற் கூறுவர்.

(க - து.) நிலைபெற்ற ஊக்கமுடையவர் கைப்பொருளையிழந்தாராயினும் வருத்தமுறார் என்பது.

3. They who are possessed of enduring energy will not trouble themselves, saying, " we have lost our property ".

---

**ச. ஆக்க மதர்வினாய்ச் செல்லு மசைவிலா**
**வூக்க முடையா னுழை.**

பரி :—(இ - ள்.) *அசைவில்லாத ஊக்கத்தை உடையான்மாட்டுப் பொருள் தானே வழிவினவிக்கொண்டு செல்லும், (எ - று).

அசைவின்மை — †இடுக்கண் ‡முதலியவற்றாற் றளராமை. வழிவினவிச்சென்று சார்வார்போலத் தானே சென்று சாருமென்பார் ' அதர்வினாய்ச் செல்லும் ' என்றார். எய்திநின்ற பொருளினும் அதற்குக் காரணமாய வூக்கஞ் சிறந்ததென்பது இவை நான்கு பாட்டானுங் கூறப்பட்டது.

தெளி :—(இ - ள்.) அசைவிலா - அசைவில்லாத, ஊக்கமுடையானுழை - மனவெழுச்சியை யுடையவனிடத்து, ஆக்கம் — பொருளானது, அதர்வினாய் - (தானே) வழிகேட்டுக்கொண்டு, செல்லும் - செல்லாநிற்கும்.

அசைவின்மை - இடுக்கண் முதலியவற்றால் மனந்தளராமை. வழிகேட்டுச் சென்று சேர்வார்போல (பொருள்) தானே சென்று (அசைவிலாவூக்க முடையானுழை) சேருமென்பார் (ஆக்கம்) ' அதர்வினாய்ச் செல்லும் ' என்றார். அடைந்துநின்ற பொருளிலும் அப்பொருளிற்குக் காரணமாகிய ஊக்கம் சிறந்ததென்பது இவை நான்கு பாட்டாலும் சொல்லப்பட்டது.

(க — து.) நிலைபெற்ற ஊக்கமுடையவனிடத்துப் பொருள் தானே வந்து சேரும் என்பது.

---

* அசைவில்லாத - சலித்தலில்லாத.

† " இடுக்கண் என்பது மலர்ந்த நோக்கமின்றி மையனோக்கம்பட வரும் இரக்கம் " என்றனர் நச்சினார்க்கினியர்.

‡ முதலியவற்றால் என்றமையின், பகைவர் தடுத்தல், செய் தொழிலில் சோர்வுண்டாதல் முதலியவற்றையுங் கொள்க.

4. Wealth will ask for a way to come to the man of unfailing energy.

---

## ரு. *வெள்ளத் தனைய மலர்நீட்ட மாந்தர்தம் உள்ளத் தனைய துயர்வு.

பரி :—(இ-ள்.) நின்றநீரி னளவினவாம் நீர்ப்பூக்களின் †தாளினது நீளங்கள், அதுபோல மக்கள்தம் ஊக்கத்தளவினதாம் அவருயர்ச்சி, (எ-று).

*மலர்-ஆகுபெயர். நீர்மிக்கதுணையும் மலர்த்தாள் நீளுமென்பது பட 'வெள்ளத்தனைய' என்றார். இவ்வுவமை ஆற்றலான், ஊக்கமிக்க துணையும் மக்களுயர்வரென்பது பெறப்பட்டது. உயர்தல் – பொருள் படைகளான் மிகுதல்.*

தெளி :—(இ-ள்.) *வெள்ளத்தனைய – நின்றநீரினள வினவாம், மலர் - நீர்ப்பூக்களின் தாளினது, நீட்டம் - நீளங்கள், (அதுபோல), மாந்தர்தம் - மக்களது, உள்ளத்தனையது - மனவெழுச்சி யளவினதாம், உயர்வு - (அவர்களது) உயர்ச்சி, (எ-று).*

*மலரினது தாளை மலரென்று கூறினமையின், மலரென்பது பொருளாகு பெயராம். நீர்மிகுந்தவளவும் மலரின்தாள்கள் நீளும் என்பது தோன்ற 'வெள்ளத்தனைய' என்றார். 'வெள்ளத் தனைய மலர்நீட்டம்' என்னும் உவமானத்தின் வலியினால், ஊக்கம் மிகுந்த வளவும் மக்களுயர்வர் என்பது பெறப்பட்டது உயர்தல் – பொருளாலும் படையாலும் மிகுதல்.*

(க – து) *ஒருவர்க் குண்டாகும் உயர்வு அவரது ஊக்கத்தினளவேயாம் என்பது.*

5. The length of a flower-stalk will be in proportion to the depth of the water in which it grows; the height of a man's greatness is in proportion to his mind.

---

## சு. உள்ளுவ தெல்லா முயர்வுள்ளல் மற்றது தள்ளினுந் தள்ளாமை நீர்த்து.

பரி :—(இ-ள்.) அரசராயினார் கருதுவதெல்லாம் தம்முயர்ச்சியையே கருதுக; அவ்வுயர்ச்சி ‡பால்வகையாற் கூடிற்றில்லையாயினும், அக் கருத்துத் ¶தள்ளாமை நீர்மையுடைத்து, (எ - று).

*$உம்மை தள்ளாமை பெரும்பான்மையாதல் விளக்கிற்று.*

---

* *"நீரளவே யாகுமா நீராம்பல்" என்று மூதுரை கூறுகின்றது.* † *தாள் – அடிக்காம்பு.* ‡ *பால்வகையால் - விதிவசத்தால்.* ¶ *தள்ளாமை - தவறாமை.*

$ *தள்ளினும் என்ற உம்மை தள்ளாமை பெரும்பான்மை யாதலையும் தள்ளுதல் சிறுபான்மை யாதலையும் விளக்கி நிற்றலால், முழுவதும் தழுவாத எதிர்மறைப் பொருளது.*

§தள்ளிய வழியுந் தாளாண்மையிற் றவறின்றி நல்லோராற் பழிக்கப் படாமையின், தள்ளாவியற்கைத் தென்பதாம். மேல் 'உள்ளத் தனைய துயர்வு' என்றதனையே வற்புறுத்தியவாறு.

தெளி :—(இ - ள்.) (அரசராயினார்) உள்ளுவதெல்லாம் - நினைப்ப தெல்லாம், உயர்வு - (தமது) உயர்ச்சியையே, உள்ளல்-நினைக்கக் கடவர், அது-அவ்வுயர்ச்சியானது, தள்ளினும் - (ஊழ்வகையால்) கூடியதில்லையாயினும், (அந்நினைப்பு), தள்ளாமை நீர்த்து - தள் ளாமைத் தன்மையதாம், (எ-று).

மற்று—அசை நிலை. தள்ளினுமென்ற உம்மை தள்ளாமை பெரும்பான்மையாதலை விளக்கியது. (அவ்வுயர்ச்சி ஊழ்வகையால்) தள்ளியவிடத்தும் முயற்சியிற் றவறுதல் இல்லாமல் நல்லோரால் பழிக்கப் படாமையால், (அந்நினைப்பு) தள்ளாத இயற்கையுடைய தென்பதாம். முன்னே 'உள்ளத்தனைய துயர்வு' என்றதனையே உறுதி செய்தவாறும். உள்ளல் என்பது அல்லீற்றுடம்பாட்டு வியங்கோள் வினைமுற்று.

(க-து.) அரசர் முயற்சியிற் றவறாது நின்று தமக்குயர்ச்சியையே கருதக்கடவர் என்பது.

6. In all that a king thinks of, let him think of his greatness; and if it should be thrust from him by fate, it will have the nature of not being thrust from him.

---

**எ. சிதைவிடத் தொல்கா ருரவோர் புதையம்பிற்**
**பட்டுப்பா டூன்றுங் களிறு.**

பரி :—(இ-ள்.) களிறு புதையாகிய அம்பாற் புண்பட்டவிடத்துத் தளராது தன்பெருமையை நிலைநிறுத்தும் ; அதுபோல, ஊக்கமுடையார் தாம் கருதிய உயர்ச்சிக்குச் சிதைவு வந்தவிடத்துத் தளராது தம் பெருமையை நிலை நிறுத்துவர், (எ-று).

புதை - *அம்புக்கட்டு; †பன்மை கூறியவாறு. பட்டாலென்பது ‡பட்டெனத்திரிந்து நின்றது. ¶ஒல்காமை களிற்றுடனும் பாடூன்றுதல்

---

§ தள்ளிய வழியும் - தவறிய விடத்தும்.

* அம்புக்கட்டு - அம்பின் தொகுதி. அம்பு - பாணம்.

† பன்மை - அம்பின் பன்மை.

‡ பட்டு என்ற செய்தெனும் வாய்ப்பாட்டு வினை யெச்சம் ஊன்றும் என்னும் வேறு வினைமுதலின் வினையைக் கொண்டு முடிதற்கு விதியில்லாமையால் 'பட்டால் என்பது பட்டெனத் திரிந்துநின்றது' என்று கூறப்பட்டது. இங்கு வேறு வினைமுதல்களிறு; அதன்வினை ஊன்றும் என்பது.

¶ உரவோர் என்னும் உவமேயத்திற்குக் கூறிய ஒல்காமை உவமானமான களிற்றோடும், களிறு என்னும் உவமானத்திற்குக் கூறிய பாடூன்றுதல் உவமேயமான உரவோரோடும் கூட்டிப் பொருளுரைக்கப்பட்டது. ஒல்கார் என்பதன் பகுதி ஒல்காமை எனவும், பாடூன்றும் என்பதன் பகுதி பாடூன்றுதல், எனவும் அறிக. களிறு ஒல்காமை (ஒல்காமல்) பாடூன்றும் என்றும், உரவோர் ஒல்காமை (ஒல்காமல்) பாடூன்றுவர் என்றுங் கொள்க. பாடூன்றுதல் - பெருமையை நிலைநிறுத்தல். ஒல்குதல்-தளருதல்.

உரவோருடனும் சென்றியைந்தன. தள்ளினும் தவறாது *உள்ளியது முடிப்பரென்பதாம். இவை மூன்றுபாட்டானும் ஊக்கமுடையாரது உயர்ச்சி கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) களிறு - யானை, புதையம்பின் - கட்டாகிய அம்பினால், பட்டு - (புண்) பட்டவிடத்து, பாடூன்றும் - (தளராமல் தன்) பெருமையை நிலைநிறுத்தும், (அதுபோல), உரவோர் - மனவெழுச்சியையுடையவர், சிதைவிடத்து - (தாம் நினைத்த உயர்ச்சிக்கு) அழிவுவந்தவிடத்து, ஒல்கார் - தளரார், (தளராமல் தம்பெருமையைநிலைநிறுத்துவார்), (எ-று).

புதை - அம்பின்கட்டு; அப்புதையென்பது அம்பு பல வென்பதை அறிவித்து நின்றது. பட்டவிடத்து என்னும் பொருளதான பட்டால் என்பது பட்டு எனத்திரிந்து நின்றது. ஒல்காமை களிற்றுடனும், பாடூன்றுதல் உரவோருடனும் சென்று பொருந்தின. (தாம் நினைத்த வுயர்ச்சி ஊழ்வகையால்) கூடியதில்லையாயினும் தவறாமல் நினைத்ததை முடிப்பரென்பதாம். இவை மூன்றுபாட்டாலும் ஊக்கமுடையாரது உயர்ச்சி சொல்லப்பட்டது.

(க-து.) ஊக்கமுடையவர் தாம் நினைத்த வுயர்ச்சிக்கழிவு வந்த விடத்துந் தளர்ச்சி யடையார் என்பது.

7. The strong - minded will not faint, even when all is lost; the elephant stands firm, even when wounded by a shower of arrows.

---

அ. உள்ள மிலாதவ ரெய்தா ருலகத்து
வள்ளிய மென்னுஞ் செருக்கு.

**பரி:—(இ-ள்.) ஊக்கமில்லாத அரசர் இவ்வுலகத்தாருள் யாம் †வண்மையுடையேமென்று தம்மைத்தாமதித்தலைப் பெறார், (எ-று).**

‡ஊக்கம் இல்லையாகவே முயற்சி, பொருள், கொடை, செருக்கு இவை முறையே இலவாமாகலின், செருக்கெய்தார் என்றார். ¶கொடை வென்றியினாய இன்பம் தமக்கல்லது பிறர்க்குப் புலனாகாமையின், §தன்மையாற் கூறப்பட்டது.

---

* உள்ளியது - தாமெண்ணிய உயர்ச்சியை.

† வண்மையுடையேம் - ஈகைக் குணமுடையேம்.

‡ ஊக்கத்தினால் (உற்சாகத்தினால்) முயற்சியும், முயற்சியினால் பொருளும், பொருளினால் கொடையும் (பிறர்க்குக் கொடுத்தலும்), கொடையினால் (வள்ளியமென்னும்) செருக்கும் ஒன்றன்பின் ஒன்றாய்க் கிரமமாயுண்டாகின்றன. இவற்றுள், முதலாவதான ஊக்கம் இல்லாமல் போனால் மற்றவையும் முறையே இலவாய்ப் போமென்க. 'ஊக்கம் இல்லையாகவே முயற்சி' என்றமையின், ஊக்கம் வேறு, முயற்சி வேறு என்பது நன்கு விளங்கும்.

¶ கொடைவென்றியினாய என்பதற்குக் கொடைச் செருக்கினாலுண்டாய என்றும் பொருள் கொள்ளலாம்.

§ தன்மையாற் கூறப்பட்டது - வள்ளியம் (ஈகைக் குணமுடையேம்) என்று தனித்தன்மைப் பன்மை வினைமுற்றாற் சொல்லப்பட்டது.

தெளி :—(இ - ள்.) உள்ளமிலாதவர் - ஊக்கமில்லாத அரசர், உலகத்து - இவ்வுலகத்தாருள், வள்ளியமென்னும் - (யாம்) வண்மையையுடையேமென்று (தம்மைத்தாம்) மதிக்கும், செருக்கு - மதிப்பை, எய்தார் - பெறுர், 'எ - று).

(அரசர்க்கு) ஊக்கமில்லையாகவே முயற்சி, பொருள், கொடை, செருக்கு என்னும் இவை முறையே இல்லையாமாதலால், (உள்ளமிலாதவர்) செருக்கெய்தார் என்றுர். கொடை வெற்றிகளால் ஆகிய இன்பம் தமக்கல்லது பிறர்க்கு வெளியாகாமையால், 'வள்ளியம்' என்று தன்மை யிடத்தாற் சொல்லப்பட்டது.

(க - து.) ஊக்கமில்லாதவர் உலகில் மதிப்படையார்.

8. Those who have no greatness of mind, will not acquire the joy of saying in the world, "we have exercised liberality".

———

**சா. †பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை**
**வெரூஉம் புலிதாக் குறின்.**

பரி :—(இ - ள்.) எல்லா விலங்கினும் தான் பேருடம்பினது, அது வேயுமன்றிக் கூரியகோட்டையும் உடையது, ஆயினும், யானை தன்னைப் புலியெதிர்ப்படின் அதற்கஞ்சும், (எ – று).

பேருடப்பான் வலிமிகுதி கூறப்பட்டது. புலியின்மிக்க மெய்வலியுங் ‡கருவிச் சிறப்பும் உடைத்தாயினும் யானை ஊக்கமின்மையான் ¶அஃதுடைய அதற்கு அஞ்சுமென்ற இது, பகைவரின் மிக்க மெய்வலியுங் கருவிச் சிறப்பும் உடையராயினும் அரசர் ஊக்கமிலராயின் £அஃதுடைய அரசர்க் கஞ்சுவரென்பது தோன்ற நின்றமையின், *பிறிதுமொழிதல்.

தெளி :—(இ – ள்.) யானை-, பரியது - (எல்லா விலங்குகளிலுந் தான்) பெரிய உடம்பையுடையது, (அதுவேயுமன்றி), கூர்ங்கோட்டது - கூர்மையான கொம்புகளையு முடையது, ஆயினும் - ஆனாலும், புலி - தாக்குறின் - (தன்னை) எதிர்ப்படின், வெரூஉம் - (அப்புலிக்கு) அஞ்சும், (எ – று).

பேருடம்பால் (யானைக்கு) வலிமிகுதி சொல்லப்பட்டது. புலியைக் காட்டிலும் மிகுந்த உடல்வலியையும் வெல்லுதற்குச் சிறந்த தந்தத்தையும் உடையதாயினும் யானை ஊக்கமில்லாமையால் அதனையுடைய அப்புலிக்கு அஞ்சுமென்ற இக்குறள், பகைவரைக் காட்டிலும் மிகுந்த

† 'நறமனை வேங்கையின் பூப்பயில் பாறையை நாகநண்ணி, மறமனை வேங்கை யெனநனி யஞ்சும்'' என்பது திருக்கோவையார்.

‡ கருவிச் சிறப்பு - தந்தமாகிய சிறந்த கருவியும்.

¶ அஃதுடைய - ஊக்கமுடைய. £ அஃதுடைய – ஊக்கமுடைய.

* உவமேயத்தைக் கூருமல் உவமானத்தைக் கூறி, அவ்வுவமானத்திருல் உவமேயத்தை விளங்க வைத்தல் பிறிது மொழிதலாம்.

உடல்வலியையும் வெல்லுதற்குச் சிறந்த ஆயுதத்தையும் உடையவராயினும் அரசர் ஊக்கமிலராயின், அதனையுடைய அரசர்க்கு அஞ்சுவரென்பது தோன்றநிற்றலால், பிறிதுமொழிதலென்னு மலங்காரமாம்.

(க - து.) அரசர் உடல் வலியும் படையு முடையவராயினும் ஊக்கமிலராயின், அவர் ஊக்கமுடைய அரசர்க்கஞ்சுவர் என்பது.

9. Although the elephant has a large body, and sharp tusks, yet it fears the attack of the tiger.

---

**கO. உரமொருவற் †குள்ள வெறுக்கையஃ தில்லார்
மரமக்க ளாதலே வேறு.**

பரி :— (இ – ள்.) ஒருவற்குத் ‡திண்ணிய **அறிவாவது ஊக்கமிகுதி ; அவ்வூக்கமிகுதியில்லாதார் மக்களாகார், மரங்களாவார் :** ¶சாதிமரங்களோடு இம்மரங்களிடை வேற்றுமை வடிவு மக்கள்வடிவே, பிறிதில்லை, (எ – று).

உரமென்பது அறிவாதல் *'உரனென்னுந் தோட்டியான்' என்பதனானுமறிக. மரமென்பது சாதியொருமை. மக்கட்குள்ள நல்லறிவுங் காரியமுயற்சியும் இன்மைபற்றி 'மரம்' என்றும், மரத்திற்குள்ள பயன்பாடின்மை பற்றி 'மக்களாதலே வேறு' என்றுங் கூறினர் பயன்-பழமுதலியவும், தேவர்கோட்டம், இல்லம், தேர், நாவாய்கட்கு உறுப்பாதலும் முதலிய, இவை மூன்று பாட்டானும் ஊக்கமில்லாதாரது இழிபு கூறப்பட்டது.

தெளி :—(இ-ள் ) ஒருவற்கு - ஒருவனுக்கு, உரம் – (திண்ணிய) அறிவாவது, உள்ள வெறுக்கை – ஊக்கமிகுதியாம், அஃது-அவ்வூக்கமிகுதியை, இல்லார் – இல்லாதவர், மரம் [மக்களாகார்] மரங்களாவார், வேறு -(சாதிமரங்களோடு இம்மரங்களிடத்து) வேற்றுமை வடிவு, மக்களாதலே–மக்கள் வடிவே, [வேறில்லை], (எ–று).

மரமென்பது வருமொழி நோக்காது பன்மைப்பொருளுணர்த்துதலின், சாதியொருமைப் பெயராம். (ஊக்கமில்லாதாரிடத்து) மக்களுக்குள்ள நல்லறிவும் காரியமுயற்சியும் இல்லாமைபற்றி (அவரை) 'மரம்' என்றும், மரத்திற்குள்ள பயன்படுத லில்லாமை பற்றி 'மக்களாதலே வேறு' என்றும் சொல்லினர். மரத்திற்குப் பயன் - பழமுதலியனவும், தேவாலயம், வீடு, தேர், மரக்கலமென்னுமிவற்றிற்கு உறுப்பாதலு முதலியன ஆம் இவை மூன்று பாட்டாலும் ஊக்கமில்லாதவரது இழிவு சொல்லப்பட்டது.

---

† உள்ள வெறுக்கை - உள்ளத்தி னூக்க மிகுதி. உள்ளம்-மனம் ; வெறுக்கை - ஊக்கமிகுதி.

‡ திண்ணிய – உறுதியான.

¶ சாதி மரங்களோடு இம்மரங்களிடை - இயல்பாயுள்ள மரங்களுடன் இம்மக்களாகிய மரங்களிடத்து.

* நீத்தார் பெருமை, ச

(க - து.) ஊக்கமுடையவர் மக்களாவார்; மற்றவர் மரங்களாவார் என்பது.

10. Energy is mental wealth; those men who are destitute of it are only trees in the form of men.

---

# இருபத்து மூன்றும் அதிகாரம்

## 61 · மடியின்மை—Against Idleness

பரி :— அஃதாவது கருதியன செய்யுங்கால் சோம்புதலில்லாமை. ஊக்கமுடையார்க்கு ஒரோவழிக் †குணவயத்தான் மடி வருதலனோக்கி, இஃதூக்க முடைமையின் பின் வைக்கப்பட்டது.

தெளி:—அஃதாவது எண்ணிய காரியங்களைச் செய்யுங் காலத்தில் சோம்புத லில்லாமை. ஊக்கமுடையவர்க்கு ஒரோவிடத்துத் தாமத குண வசத்தால் மடி (சோம்பல்) வருதலை நோக்கி, இஃது (மடியின்மை) ஊக்க முடைமையின் பின் வைக்கப்பட்டது.

க. **குடியென்னுங் குன்று விளக்க மடியென்னு**
**மாசூர மாய்ந்து கெடும்.**

பரி:—(இ - ள்) தான்பிறந்த ‡குடியாகிய நந்தா விளக்கு ஒருவன் மடியாகிய இருளடர நந்திப்போம், (எ - று).

¶உலகநடையுள்ள துணையும் ()இடையறுது, ㅇதன்னுட் பிறந்தாரை விளக்குதலின் குடியைக் 'குன்று விளக்கம்' என்றும், *தாமத

---

† குணவயத்தான் – தாமத குணத்தின் வசப்படுதலால். தாமத குணத்தின் வடிவம் மோகமாம். பேருண்டி, அநீதி, உறக்கம், மறதி, சோம்பல், தவறுதல், கொலை, வஞ்சனை முதலியன தாமதகுணத்தாற் றோன்றுவனவாம். "திரமறு சகமெய் யென்றுந் தேகநா னென்று முள்ளே, விரவிய மோகந் தானே விபரீத மென்பர் மேலோர்" என்று கைவல்லிய நவநீதங் கூறுகின்றது. ‡ குடி - உயர்ந்த குலம்.

¶ உலக நடை - அவன், அவள், அது, நான், நீ என்றற்றொடக்கத்தனவாக வழங்கும் உலகவியவகாரம்.

() இடையறுது - நடுவே நீங்காது.

ㅇ தன்னுட் பிறந்தாரை – தன் வமிசத்திற் பிறந்தவரை.

* கரியவடிவினதாகிய தாமதகுணத்தினல் சோம்பலுண்டாதலின், தாமதகுணத்தின் கருமையை அதன் காரியமாகிய சோம்பலின்மே லேற்றி 'மடியென்னு மாசு' என்று கூறினர். தாமதகுணம்-காரணம்; சோம்பல்-காரியம்; குணம்-கருமை. இது காரணத்தின் குணம் காரியத்திற்காய உபசாரவழக்காம். "குறியு நீல மயக்கமுங் கோதிலா, நெறிக டம்மை யிகழ்தலு நித்திரை, செறித லானது மற்றிவற் ருற்றிண்ணென், றறிவை மாய்க்கு மதுதம மாவதே" என்று பகவத்கீதை கூறுவது மிங்கறியத் தக்கதாம்.

குணத்தான் வருதலின் மடியை 'மாசு' என்றும், *அஃது ஏனையிருள் போலாது †அவ்விளக்கத்தைத்தான் அடர்ந்து மாய்க்கும் வலியுடைமையின் 'மாசூர மாய்ந்துகெடும்' என்றுங் கூறினர். கெடுதல்-பெயர் வழக்கமும் இல்லையாதல்.

தெளி:—(இ - ள்.) குடியென்னுங் குன்று விளக்கம் – (தான் பிறந்த) குடியாகிய மழுங்காத விளக்கானது, மடியென்னுமாசு - (ஒருவனது) சோம்பலாகிய இருளானது, ஊர – நெருங்க, மாய்ந்து கெடும் – மழுங்கிக்கெடும், (எ – று).

உலகநடை யுள்ளவளவும் இடையறாது தன்னுட் பிறந்தவரை விளக்குதலால் குடியைக் 'குன்று விளக்கம்' என்றும், தாமத குணத்தினல் வருதலால் சோம்பலை 'மாசு' என்றும், அது மற்றை யிருள் போலாகாமல் அவ் விளக்கத்தைத்தான் நெருங்கி மாய்க்கும் வலியுடைமையால் 'மாசூரமாய்ந்துகெடும்' என்றும் சொல்லினர். கெடுதல் – குடிப்பெயர் வழங்குதலுமில்லாமற் போதல். மற்றை யிருள் – புறவிருளாம்; மடியென்னுமாசு – அகவிருளாம்.

(க – து.) சோம்பலுடையவனது குடியானது தன் பெயர் வழங்குதலு மில்லாது கெடும் என்பது.

1- By the darkness of idleness, the indestructible lamp of family rank will go out and be extinguished.

---

உ. **மடியை மடியா வொழுகல் குடியைக்**
**குடியாக வேண்டு பவர்.**

**பரி:- (இ – ள்.) தாம் பிறந்த குடியை மேன்மேலுயரும் நற்குடியாக வேண்டுவார் மடியை மடியாகவே கருதி முயற்சியோ டொழுக, (எ – று).**

முயற்சியோடென்பது அவாய் நிலையான் வந்தது. நெருப்பிற் கொடியது பிறிதின்மைபற்றி நெருப்பை நெருப்பாகவே கருதுக வென்றாற்போல ‡மடியிற்றீயது பிறிதின்மைபற்றிப் பின்னும் ¶அப் பெயர் தன்னனே கூறினர். அங்ஙனங்கருதி அதனைக் கடிந்து முயன் றொழுகவே தாமுயர்வர்; உயரவே, குடியுயருமென்பார் 'குடியைக் குடியாக வேண்டுபவர்' என்றார். அங்ஙனம் ஒழுகாக்காற் குடியழியு மென்பது கருத்து. இனி §மடியாவென்பதனை வினையெச்சமாக்கிக் கெடுத்தொழுகுகவென் றுரைப்பாருமுளர்.

---

* அஃது – மடியென்னு மாசு.

† அவ்விளக்கத்தை – குடியென்னுங் குன்றுவிளக்கத்தை. குடியென்னுங் குன்றுவிளக்கமென்பது உருவகமாம்.

‡ மடியிற்றீயது – சோம்பலினுந் தீமையைத்தருவது.

¶ அப்பெயர் தன்னனே – மடியா என மடியென்னும் பெயரினலேயே.

§ மடியா என்பதனைச் செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சமாக்கி மடியாவொழுகல் என்பதற்கு (மடியைக்) கெடுத்து நடக்கக் கடவர் என்று பொருள் கூறுவாருமுண்டென்பது.

தெளி:—(இ - ள்.) குடியை - (தாம் பிறந்த) குடியை, குடியாக - (மேல் மேலுயரும்) நற்குடியாக, வேண்டுபவர் – விரும்புகின்றவர், மடியை - சோம்பலை, மடியா - சோம்பலாகவே, (நினைத்து), ஒழுகல் - (முயற்சியோடு) ஒழுகக் கடவர், (எ – று).

ஒழுகல் என்னும் அல்லீற்று வியங்கோள் வினைமுற்று முயற்சியோ டென்பதை வேண்டி நிற்றலால், முயற்சியோடென்பது வருவித் துரைக்கப்பட்டது. நெருப்பைக் காட்டிலுங் கொடியது வேறில் லாமைபற்றி நெருப்பை நெருப்பாகவே நினைக்கவேண்டும் என்றாற் போல மடியைக்காட்டிலுந்தீயது வேறில்லாமைபற்றி (அதனை) பின்னும் (மடியா என) அப்பெயரினாலேயே சொல்லினர். மடியை மடியாகவே நினைத்து அம்மடியை யொழித்து முயற்சி செய்து நடக்கவே தாம் உயர்வர்; தாம் உயரவே, குடியுயரும் என்பார் 'குடியைக் குடியாக வேண்டுபவர்' என்றார். மடியையொழித்து முயற்சி செய்து நடக்காவிட்டால் குடியழிந்துபோம் என்பது கருத்து.

(க - து.) சோம்பலை விட்டொழுகுவோர் தாம் பிறந்த குடியை மேல்மே லுயரச்செய்வ ரென்பது.

2. Let those who desire that their family may be illustrious, put away all idleness from their conduct.

---

ங. மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடியுந் தன்னினு முந்து.

பரி:—(இ - ள்.) விடத்தகுவதாய மடியைத் தன்னுள்ளே கொண் டொழுகும் அறிவில்லாதான் பிறந்தகுடி அவன் தன்னினும் முந்துற அழியும், (எ – று).

அழிவு தருவதனை அகத்தே கொண்டொழுகுதலின் 'பேதை' என்றும், * அவனாற் புறந்தரப்படுவதாகலின் † குடி தன்னினு முந்து மடியும் என்றுங் கூறினார். ‡ ஆக்கத்திற் பிற்படினும் அழிவின் முற்படு மென்பதாம், (எ – று).

---

* அவனால் (அறிவில்லாதவனால்) புறந்தரப்படுவதாகலின் (பாது காக்கப்படுவதாகலால்) குடி (அவனது முயற்சியால் உண்டாவதான குடிவாழ்க்கை) தன்னினும் (அவ்வறிவில்லாதவனிலும்) முந்துமடியும் (முன்னே அழிந்தொழியும்) என்பது. ஒருவனாற் பாதுகாக்கப்படும் குடிவாழ்க்கை அவனுக்குப் பிற்பட்டதாயிருத்தலால், அவனால் அக்குடி வாழ்க்கை பாதுகாக்கப்படாதொழியின், அஃது அவனழிவ தற்கு முன்னே அழிந்துபோமென்பது கருத்து.

(சோம்பலுடையவனது குடிவாழ்க்கை அவன் உள்ளபோதே கெட்டொழியும் என்பதாம்).

† குடிதன்னினு முந்துற அழியும் என்றும் பாடமுண்டு.

‡ ஆக்கத்திற் பிற்படினும் (குடிவாழ்க்கை மேன்மேலுயருதலில் பிற்பட்டாலும்) அழிவின் (அழிதலில் தன்னைப் பாதுகாவாதவனுக்கு) முற்படும் என்பதாம்.

தெளி:—(இ - ள்.) மடி - விடத்தகுவதாகிய, மடி - சோம்பலை, கொண்டு - (தன்னுள்ளே) கொண்டு, ஒழுகும் - நடக்கும், பேதை - அறிவில்லாதவன், பிறந்த குடி - பிறந்த குடியானது, தன்னினும் - அவன் தன்னினும், முந்து - முற்பட, மடியும் - அழியும், (எ - று).

அழிவுதருஞ் சோம்பலை மனத்துள்ளேகொண்டு நடத்தலால் 'பேதை' என்றும், அவனால் காப்பாற்றப்படுவதாகலால் குடி தன்னினு முந்து மடியும் என்றும், சொல்லினார். (மடிமடிக்கொண் டொழுகும் பேதை பிறந்த) குடி ஆக்கத்தில் பிற்படினும் அழிவில் முற்படு மென்பதாம்.

(க - து.) சோம்பலுடையவன் பிறந்த குடி விரைந்துகெடும்.

3. The lustre of the family of the ignorant man, who acts under the influence of destructive laziness, will perish, even before he is dead.

---

## ச. குடிமடிந்து குற்றம் பெருகு மடிமடிந்து மாண்ட வுஞற்றி லவர்க்கு.

**பரி:—(இ - ள்.) மடியின் கண்ணே *வீழ்தலாற்றிருந்திய முயற்சியில ராயினார்க்கு குடியும் மடிந்து குற்றமும் பல்கும் (எ - று).**

மடிந்தெனத் திரிந்து நின்ற வினையெச்சம் இலவரென்னும் குறிப்பு வினைப் பெயர் கொண்டது. குற்றங்கள் முன்னர்க்கூறுப· இவை நான்கு பாட்டானும் மடியின் தீமை கூறப்பட்டது.

தெளி:— (இ - ள்.) மடி - சோம்பலிலே, மடிந்து - வீழ்தலால், மாண்டவுஞற்றிலவர்க்கு - திருந்திய முயற்சியிலராயினார்க்கு, குடி - குடியும், மடிந்து - அழிந்து, குற்றம் - குற்றங்களும், பெருகும் - அதிகரிக்கும், (எ - று).

மடிந்து எனத்திரிந்து நின்ற மடிதலால் என்னும் (செயின் என்னும் வாய்பாட்டு) வினையெச்சம் இலவர் என்னும் எதிர்மறைக் குறிப்பு வினையாலணையும் பெயரைக் கொண்டு முடிந்தது. மடிதலால் இலவர் என்றும். குற்றங்களைப் பின்வருங் குறள்களிற் சொல்லுவார். இவை நான்கு பாட்டாலும் சோம்பலினது தீமை சொல்லப்பட்டது. உஞற்றிலவர்க்கு என்பது உஞற்று + இலவர் + கு என்று பிரிபடும்.

(க - து.) சோம்பலால் முயற்சியில்லாதிருப்பவர் குடியையிழப்பது மன்றிக் குற்றமு மடைவர் என்பது.

4. Family greatness will be destroyed, and faults will increase, in those men who give way to laziness, and put forth no dignified exertions.

---

## ரு. நெடுநீர் மறவி மடிதுயி லுன்குங் கெடுநீரார் காமக் கலன்.

---

* வீழ்தலால் - ஆசைப்படுதலால்.

பரி:—(இ - ள்.) மடியும், விரைந்து செய்வதனை நீட்டித்துச் செய்யும் இயல்பும், மறவியும், துயிலும் ஆகிய இந்நான்கும் இறக்கும் இயல்பினையுடையார் விரும்பி யேறும் மரக்கலம், (எ - று).

*முன்னிற்றற் பாலதாய மடி செய்யுள் நோக்கி இடைநின்றது. நெடுமையாகிய †காலப்பண்பு ‡அதன்கண் நிகழ்வதாய செயன்மேனின்றது. கால நீட்டத்தையுடைய செயன் முதன் மூன்றும் தாமத குணத்திற் றேன்றி உடன் நிகழ்வனவாகலின், மடியொடு ஒருங்கெண்ணப்பட்டன. இறக்கும் இயல்பு – நாஞலத்தல். இவை துன்புறு நீரார்க்கு இன்புறுத்துவ போன்று காட்டி அவர் விரும்பிக் கொண்ட வழித் துன்பத்திடை வீழ்த்தலின், நாஞலந்தார்க்கு ஆக்கம் பயப்பது போன்று காட்டி அவர் விரும்பி யேறியவழிக்கடலிடை வீழ்க்குங் கலத்தினையொக்கு மென்னும் ¶உவமைக் குறிப்புக் 'காமக் கலன்' என்னுஞ் சொல்லாற் பெறப்பட்டது. $இதற்கு விரும்பிப் பூணும் ஆபரணமென் றுரைப்பாரு முளர்.

தெளி:—(இ - ள்.) மடி – சோம்பலும், நெடுநீர் – (விரைந்து செய்யுங் காரியத்தை) நீட்டித்துச் செய்யுந் தன்மையும், மறவி – மறதியும், துயில் – துயிலும், (ஆகிய), நான்கும் – இந்த நான்கும், கெடுநீரார் – இறக்குமியல்பினையுடையவர், காமக்கலன் – விரும்பி யேறும் மரக்கலமாம், (எ - று).

---

* விரைந்து செய்யவேண்டியதைத் தாமதித்துச் செய்தல், மறதி, தூக்கமென்பனவற்றிற்கு மடி (சோம்பல்) தலைமையாயிருப்பது பற்றி அது முன் நிற்றற் பாலதாயிற்று.

† காலப்பண்பு – காலத்தின் குணம். இங்குக் காலத்தின் குணம் நெடுமை.

‡ இங்குக் காலத்தின் நெடுமைக் குணம் (காலதாமசம்) அதன்கண் நடைபெறுவதாய செயல்மேல் நின்றதென்பது. இஃது இடத்தின் குணம் இடத்து நிகழ் செயலின்மேலாய உபசார வழக்காம்.

¶ உவமைக் குறிப்பு-உருவகம். நச்சினார்க்கினியார் "உயர்ந்ததன் மேற்றே யுள்ளுங் காலை." என்னும் (தொல்காப்பியம் உவமவியற்) சூத்திரத்தின் விசேட வுரையில் "வாயென்ற பவளமெனவும், வாய் பவளமாகவெனவும், வாய் பவளமெனவும் வந்த பவளக் குறிப்புவமைகளை யிக்காலத்தார் உருவகமென்றே வழங்குப. இனி வாய் பவளமெனவும், கண் கருவிளையெனவும், பெயர்ப்பயனிலை வரின் அவற்றை யொற்றுமை காட்டி யுருவகம் என்றுராகலின், அதுவும் உவமை யெனவேபடு மென்பது" என்றனர்.

$ காமக்கலன் என்பதற்கு விரும்பித்தரிக்கும் ஆபரணமென்று பொருள் கூறுவாரு முண்டென்பது. (மரக்கலம் மரணம் சமீபித்தவர்க்குப் பெருக்கந் தருவதுபோலத் தோன்றி அவர் விரும்பி ஏறியவிடத்து அவரைக் கடலில் விழுத்துமாறுபோல மடி முதலிய நான்கும் துன்பஞ் சமீபித்தவர்க்கு இன்பஞ் செய்வனபோலத் தோன்றி அவர் விரும்பிக் கொண்டவிடத்து அவரைத் துன்பத்தில் விழுத்தும் என்பதாம்.)

மடி நெடுநீர் மறவி துயில் என்று முன்நிற்றற்பான்மையதான மடியென்பது செய்யுள்நோக்கி 'நெடுநீர் மறவி மடிதுயில்' என நடுவே நின்றது. நெடுமையாகிய காலப்பண்பு அக்காலத்தில் நடப்பதாய தொழிலின்மேல் நின்றது. காலதாமதத்தையுடைய செயல், மறவி, துயில் என்னும் மூன்றும் தாமதகுணத்தில் தோன்றி மடியுடன் நடைபெறுவனவாதலால், மடியுடன் ஒருமித்தெண்ணப்பட்டன. இறக்குமியல்பு-வாழ்நாள்கெடுதல். இம்மடிமுதலிய நான்கும் துன்புறுந்தன்மை யுடையவர்க்கு இன்பந்தருவனபோலக் காண்பித்து, அவர் விரும்பிக்கொண்டவிடத்து (அவரை)த் துன்பத்தில் தள்ளுதலால், வாழ்நாள் கெட்டவர்க்குப் பெருக்கத்தைத் தருவதுபோலக் காண்பித்து அவர் விரும்பியேறியவிடத்து (அவரை)க் கடலில் விழச் செய்யும் மரக்கலத்தை யொக்கும் என்னும் உவமானக் குறிப்புக் 'காமக்கலன்' என்னும் சொல்லாற் பெறப்பட்டது.

(க - து.) சோம்பல் முதலியவற்றை விரும்புவோர் விரைவாகக் கெடுவர் என்பது.

5. Procrastination, forgetfulness, idleness, and sleep, these four things, are the ornaments desired by those whose nature leads them to destruction.

---

சா. **படியுடையார் பற்றமைந்தக் கண்ணு மடியுடையார்**
**மாண்பய னெய்த லரிது.**

**பரி:— (இ - ள்) நிலமுழுதும் ஆண்டாரது செல்வம் தானே வந்தெய்தியவிடத்தும், மடியுடையார் அதனான் *மாண்ட பயனை யெய்துதலில்லை, (எ - று).**

†உம்மை எய்தாமை விளக்கி நின்றது. மாண்பயன் - பேரின்பம். ‡அச்செல்வம் அழியாமற் காக்கும் முயற்சி யின்மையின் அழியும்; அழியவே, ¶தந்துன்ப நீங்காதென்பதாம். @இதற்கு நிலமுழுதுமுடைய வேந்தர் துணையாதல் கூடியவிடத்தும் என்றுரைப்பாருமுளர்.

தெளி:—(இ - ள்) படியுடையார்-நிலமுழுதும் ஆண்ட அரசரது, பற்று - செல்வமானது, அமைந்தக்கண்ணும் - (தானே வந்து) சேர்ந்த

---

* மாண்ட - மாட்சிமையான.

† அமைந்தக்கண்ணும் என்றவும்மை எதிர்மறையும்மையாம். இவ்வெதிர்மறையும்மை மடியுடையார் படியுடையார் பற்று (நிலமுழுதும் ஆண்ட அரசரது செல்வத்தை) எய்தாமையை விளக்கி நின்றது.

‡ அச்செல்வம் - நிலமுழுதும் ஆண்டாரது செல்வம்.

¶ தந்துன்பம் - சோம்பலுடையார் தமது துன்பம்.

@ படியுடையார் பற்றமைந்தக் கண்ணும் என்பதற்குப் பூமி முழுதும் உடைய அரசர் துணையாதல் கூடியவிடத்தும் என்று பொருள் கூறுவாருமுண்டென்பது.

விடத்தும், மடியுடையார் - சோம்பலுடையவர், (அச்செல்வத்தால்); மாண்பயன் - பேரின்பத்தை, எய்தலரிது - அடைதலில்லை, (எ - று).

அமைந்தக்கண்ணும் என்ற உம்மை அடையாமையை விளக்கி நின்றது. (மடியுடையாரிடத்து) அச்செல்வமானது அழியாமற் காக்கும் முயற்சியில்லாமையினுல் அழியும்; அழியவே, தமது துன்பம் ஒழியாதென்பதாம்.

(க - து.) சோம்பலுடையார் பெருஞ் செல்வத்தைப் பெற்றுராயினும், அதனுற் பேரின்பத்தைப் பெருர் என்பது.

6 It is a rare thing for the idle, even if they receive the aid of kings, to derive any great benefit from it.

---

**எ. இடிபுரிந் தெள்ளுஞ்சொற் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட வுஞற்றி லவர்.**

பரி:—(இ - ள்.) மடியை விரும்புதலான் மாண்டமுயற்சியில்லாதார் தம் நட்டார் முன் *கழறுதலை மிகச்செய்து †அதனுற்பயன் காணுமையின் பின் இகழ்ந்து சொல்லுஞ் சொல்லைக் கேட்பர் (எ - று).

‡இடியென்னும் முதனிலைத்தொழிற் பெயரான், நட்டாரென்பது பெற்றும். ¶அவரிகழ்ச்சி சொல்லவே, பிறரிகழ்ச்சி சொல்லாமையே முடிந்தது £அவற்றிற்கெல்லாம் மாறுசொல்லும் ஆற்றலின்மையின் 'கேட்பர்' என்ருர்.

தெளி:—(இ-ள்.) மடிபுரிந்து - சோம்பலை விரும்புதலால், மாண்ட- பெருமைபொருந்திய, உஞற்றிலவர் - முயற்சியில்லாதவர், இடிபுரிந்து - (தமது நட்டார் முன்னர் மிகவும்) கண்டித்துப்புத்திசொல்லி (அதனுற் பயன்காணுமையினுல்), எள்ளுஞ்சொல் - (பின்னர்) இகழ்ந்துசொல்லும் சொல்லை, கேட்பர்—,(எ - று).

கண்டித்துப் புத்திசொல்லுதல் என்னும் பொருளதான இடியென்னும் முதனிலைத் தொழிற்பெயரினுல் அவ்வாறு சொல்லுவார் நட்டாரென்பது பெற்றும். அவரிகழ்தல் சொல்லவே, பிறரிகழ்தல் சொல்லாமலே பெறப்பட்டது. அவற்றிற்கெல்லாம் எதிர்பேசும் வலிமையில்லாமையால் 'கேட்பர்' என்ருர்.

---

* கழறுதல் - இடித்திடித்துக் கட்டுரை (உறுதிமொழிகளைக்) கூறுதல்.

† அதனுல் - கழறுதலை மிகச்செய்வதனுல்.

‡ "நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண், மேற்சென் றிடித்தற் பொருட்டு" என்னுங்குறள் இங்குக் கவனிக்கத்தக்கதாம்.

¶ அவரிகழ்ச்சி - நட்டார் இகழ்ந்துபேசுதலை.

£ அவற்றிற்கெல்லாம் - நட்டாரும் பிறரும் இகழ்ந்து பேசுவனவற்றிற்கெல்லாம்.

(க - து.) சோம்பலுடையவர் தம்மைப் பற்றி நட்டாரும் பிறரும் இகழ்ந்து சொல்லுதலைக் கேட்பர் என்பது.

7. Those who love idleness, and do not engage in dignified exertions, will hear the words of rebuke and reproach.

---

௬௦௮ அ. மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் ஞென்னூர்க்
கடிமை புகுத்தி விடும்.

பரி : (இ - ள்) மடியினது தன்மை குடிமை உடையான் கண்ணே தங்குமாயின். *அஃது †அவனைத் தன் பகைவர்க்கு அடியனுந் தன்மையை அடைவித்துவிடும், (எ-று).

மடியினது தன்மை - §காரியக் கேடு. ‡குடிமை - ¶குடிசெய்தற் றன்மை $அஃது அதனையுடைய அரசன்மேற்றுதல் 'தன்ஞென்னூர்க்கு' என்றதனுனறிக. அடியனுந்தன்மை - தாழ்ந்து நின்றேவல் கேட்டல். இவை நான்கு பாட்டானும் மடிமைக் குற்றங்கள் கூறப்பட்டன.

தெளி : (இ - ள்.) மடிமை - சோம்பலினது தன்மையானது, குடிமைக்கண் - குடிமையுடைய அரசனிடத்தே, தங்கின் - தங்குமாயின், (அஃது அவனை) தன்ஞென்னூர்க்கு - தன் பகைவர்க்கு, அடிமை - அடியனுந் தன்மையை, புகுத்திவிடும் - அடைவித்துவிடும், (எ-று).

சோம்பலினது தன்மை - காரியக் கேடு. குடிமை - குடிசெய்தற்றன்மை அஃது அதனையுடைய அரசன்மேலாதலை 'தன்ஞென்னூர்க்கு' என்றதனுல் அறிக. அடியனுந்தன்மை - (தன் பகைவர்க்கு) வணங்கி நின்றேவல் கேட்டல். இவை நான்கு பாட்டாலும் சோம்பலின் குற்றங்கள் சொல்லப்பட்டன.

(க - து.) அரசனிடத்துச் சோம்பலுண்டாயின், அஃது அவனது பகைவர்க் கவனை அடிமையாக்கு மென்பது.

8. If laziness takes up its abode in a king it will make him a slave of his enemies.

---

கூ. குடியாண்மை யுள்வந்த குற்ற மொருவன்
மடியாண்மை மாற்றக் கெடும்.

---

* அஃது - மடியினது தன்மை.

† அவனை - குடிமையுடையானை.

§ காரியக்கேடு - செய்தொழில் முற்றுப்பெருதழிதல்.

‡ " குடிமையாவது குடிப்பிறப்பிற்கேற்ற ஒழுக்கம் " என்பர் நச்சினூர்க்கினியார்.

¶ குடிசெய்தற்றன்மை - குடிவாழ்க்கையை விருத்தி செய்யுந் தன்மை.

$ அஃது - (குடிசெய்தற்றன்மை) அதனை (குடிசெய்தற்றன்மையை) யுடைய அரசன்மேற்றுதல் (அரசன்மேலாகுதல்) 'தன்ஞென்னூர்க்கு' என்றதனு (தனது பகைவர்க்கு என்றதனு) லறிக என்பது. குடிமை யென்னும் பண்புப் பெயர் குடிமை யுடையவனையுணர்த்துதலால் பண்பாகு பெயராம்.

பரி :—(இ - ள்.) ஒருவன் தன் மடியாளுந் தன்மையை ஒழிக்கவே அவன் குடியுள்ளும், ஆண்மையுள்ளும் வந்த குற்றங்கள் கெடும், (எ-று).

மடியாளுந் தன்மை - மடியுடைமைக் கேதுவாய தாமத குணம். குடியாண்மை யென்பது உம்மைத்தொகை. அவற்றின்கண் வந்த குற்றமென்றது மடியான் அன்றி முன்னே *பிற காரணங்களான் நிகழ்ந்தவற்றை. அவையும் மடியாண்மையை மாற்றி முயற்சி-யுடையனாக நீங்குமென்பதாம்.

தெளி :—(இ - ள்.) ஒருவன் —, மடியாண்மை - தனது சோம்பலை யாளுந்தன்மையை, மாற்ற - ஒழிக்கவே, குடியுள் - (அவனது) குடியுள்ளும், ஆண்மையுள் - ஆண்மையுள்ளும், வந்த —, குற்றம் - குற்றங்கள், கெடும் - அழியும், (எ - று).

சோம்பலை யாளுந்தன்மை - சோம்பலுடைமைக்குக் காரண-மாகிய தாமத குணம் குடியாண்மை என்பது உம்மைத்தொகை நிலைத்தொடர்; குடியும் ஆண்மையும் என விரியும். உள் என்னும் ஏழனுருபு குடியென்பதனோடுஞ் சென்றியைந்து நின்றது. குடியுள்ளும் ஆண்மையுள்ளும் வந்த குற்றங்களென்றது சோம்பலாலன்றி முன்னே வேறு காரணங்களாலுண்டாயவற்றை. அக்குற்றங்களும் சோம்பலை-யாளுந் தன்மையை ஒழித்து முயற்சியுடையவனாக ஒழியும் என்பதாம்.

(க - து.) ஒருவன் தனது தாமத குணத்தை ஒழிப்பானாயின். அவனது குடியினிடத்தும் ஆண்மையினிடத்தும் வந்த குற்றங்கள் ஒழியும் என்பது.

9. When a man puts away idleness, the reproach which has come upon himself and his family will disappear.

---

**கo. மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
தாஅய தெல்லா மொருங்கு.**

பரி :—(இ - ள்.) தன்னடியளவானே எல்லாவுலகையும் அளந்த †இறைவன் ‡கடந்த ¶பரப்பு முழுதையும் மடியிலாத அரசன் §முறையான் அன்றி ஒருங்கே எய்தும், (எ-று).

---

* பிறகாரணங்கள் - காலமறியாமை, இடமறியாமை, செய்-வினையின் மூலமறியாமை, முடிவறியாமை, சூழ்வன சூழாமை, துணைவலி தெரியாமை முதலியனவாம்.

† இறைவன் - திருமால்.

‡ கடந்த - தாவியளந்த.

¶ பரப்பு முழுதையும் - சுவர்க்க மத்திய பாதாள மென்னு மூன்றுலகத்தையும். பரப்பையுடைய உலகத்தைப் பரப்பென்றது பண்பாகு பெயராலாம்.

§ முறையான் அன்றி - நல்வினைக்கேற்பப் பெறுங் கிரமத்தினு-லல்லாது.

* அடியளந்தானென்றது வாளா பெயராய் நின்றது. † தாவிய தென்பது இடைக்குறைந்து நின்றது. எப்பொழுதும் வினையின் கண்ணே முயறலின், இடையீடின்றி யெய்துமென்பதாம். இவை யிரண்டு பாட்டானும் மடியிலாதான் எய்தும் பயன் கூறப்பட்டது.

தெளி :—(இ - ள்.) மடியிலா - சோம்பலில்லாத, மன்னவன் - அரசன், அடி - (தன்) அடியளவாலே, அளந்தான் - (எல்லாவுலகத்தையும்) அளந்த கடவுள், தாஅயதெல்லாம் - கடந்தபரப்பு முழுதையும், ஒருங்கு - (முறையாலல்லாமல்) ஒருசேர, எய்தும் - அடைவான், (எ - று).

அடியளந்தான் என்பது அடியால் உலகமளந்தவனென்னும் பொருளுணர்த்தாது திருமாலென்னும் பெயர் மாத்திரமாய் நின்றது. தாவியது என்பது இடைக்குறைந்து (இடைநின்ற வி என்பது குறைந்து) தாஅயது என அளபெடுத்து நின்றது. எப்பொழுதும் தொழில் செய்தலிலே முயலுதலால், (மடியிலா மன்னவன்) உலகமுழுவதையும் தடையில்லாது அடைவானென்பதாம். இவையிரண்டு பாட்டாலும் சோம்பலில்லாத அரசன் அடையும் பயன்சொல்லப்பட்டது.

(க - து.) சோம்பலில்லாத அரசன் எல்லாவுலகும் ஆளப்பெறுவான் என்பது.

10. The king who never gives way to idleness will obtain entire possession of the space passed over by Him who measured the worlds with His foot.

---

* பின்னிற்கும் தாஅயது என்பது திருமால் உலகமளந்த வரலாற்றைத் தெரிவித்து நிற்றலால், முன்னிற்கும் அடியளந்தான் என்பது அவ்வரலாற்றைத் தெரிவியாது வாளா (சும்மா-யாதொரு விசேடமுங் கற்பியாது) திருமாலென்னும் பெயர் மாத்திரமாய் நின்றதென்க. ''வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயின்'' என்னுங் குறளின் விசேடவுரையில் ''வெங்கோலனென்பது ஈண்டு வாளா பெயராய் நின்றது'' என்றிருப்பது மிங்குணர்தற் குரியதாம். மாவலி யென்னு மோரசுரன் விண்ணுலகத்தையும் மண்ணுலகத்தையும் தன் வசப்படுத்திக்கொண்டு ஒரு பெரிய யாகஞ்செய்து வருபவர்களுக்கு அளவிறந்த தானங் கொடுத்துவருகின்றபோது, திருமால் (விஷ்ணு) காசிப முனிக்கும் அதிதியென்பாளுக்கும் குறுகிய உருவமுள்ள பிள்ளை யாகப்பிறந்து, அம்மாவலியிடத்துச்சென்று, மூன்றடி மண்யாசித்துப் பெற்றுப், பிறகு திரிவிக்கிரம வடிவங்கொண்டு, மண்ணுலகத்தை யோரடியாலும் விண்ணுலகத்தை மற்றோரடியாலும் அளந்து மற்றோரடியை அம்மாவலியினது தலையின் மீது வைத்து, அவனைப் பாதாளலோகத்திலிருக்கும் படியமுத்தி விட்டாரென்பது கதை. இதன் விரிவை இராமாயணம் பால காண்டம் வேள்விப்படலத்திற் காண்க.

† தாவியது என்பது தாயது என்றாயது தொகுத்தல் விகாரமென்பர் இக்காலத்திலக்கணிகள்.

# இருபத்து நான்காம் அதிகாரம்

## ஆள்வினையுடைமை — On manly effort

பரி :—அஃதாவது இடைவிடாத மெய்ம்முயற்சி உடையனாதல். அஃது *ஆளும் வினையெனக் காரியத்தாற் கூறப்பட்டது. மடிகெடுத்தாலும் வினை முயற்சியான் அன்றி ஆளப்படாமையின், இது மடியின்மையின் பின் வைக்கப்பட்டது.

தெளி :—அஃதாவது இடைவிடாத மெய்ம்முயற்சியை யுடையவனாதல். அம்மெய்ம்முயற்சி ஆளும் வினையெனக் காரியத்தாற் சொல்லப்பட்டது. சோம்பலைக் கெடுத்தாலும் தொழில் முயற்சியாலல்லாமல் ஆளப்படாமையின், இது (ஆள்வினையுடைமை) மடியின்மையின் பின் வைக்கப்பட்டது. மெய் - உடம்பு.

**க. அருமை யுடைத்தென் †றசாவாமை ‡வேண்டும்**
**பெருமை முயற்சி தரும்**

பரி.—(இ-ள்) தஞ் ¶சிறுமை நோக்கி நாம் இவ்வினை முடித்தலருமை யுடைத்தென்று கருதித் தளராதொழிக; அது முடித்தற்கேற்ற பெருமையைத் தமக்கு முயற்சி யுண்டாக்கும், (எ-று).

சிறுமைநோக்கி யென்பது பெருமை தரும் என்றதனாலும், வினை முடித்தலென்பது ○அதிகாரத்தானும் வருவிக்கப்பட்டன. விடாது முயலத்தாம் பெரியவராவர்; ஆகவே, $அரியனவும் எளிதின் முடியுமென்பதாம்.

தெளி:—(இ-ள்.) (தமது சிறுமையை நோக்கி) அருமையுடைத்தென்று-(நாம் இத்தொழிலை முடித்தல்) அருமையை யுடையதென்று,

---

* மெய்ம்முயற்சியாகிய காரணத்தால் தொழிலை யாளுந்தன்மை யுண்டாதல்பற்றி, ஆள்வினை யுடைமை யென்னும் காரியப்பெயரால் மெய்ம் முயற்சி குறிக்கப்பட்டது. இவ்வாறு கூறுதல் காரியவாகு பெயராம். ஆள்வினை யென்பது ஆளும் வினையென விரிதலின், வினைத் தொகை நிலைத்தொடராம்.

† அசாவாமை - சோர்வடையாமை. அசா-சோர்வு (தளர்ச்சி).

‡ வேண்டும் என்பதை இலக்கணக்கொத்து நூலார் தேற்றப் பொருள்பட்டு நிற்கும் தொழிற்பெயரென்பார்; நச்சினார்க்கினியார் முதலியோர் வியங்கோட்பொருட்டு என்றும், விதிப்பொருட்டென்றும், தகுதிப்பொருட்டென்றும், வேண்டுவது என்றும் கூறுவர்.

¶ சிறுமை - பொருள், படை, துணை முதலியவற்றின் குறைவு.

○ ஆள்வினை யுடைமை யென்னு மிவ்வதிகாரத்தாலும்.

$ "தண்டுறைநீர் நின்ற தவத்தா லளிமருவும், புண்டரிகம் நின் வதனம் போன்றதால் - உண்டோ, பயின்றாருளம்பருகும் பான் மொழியாய் பார்மேல், முயன்றான் முடியாப் பொருள்" என்று தண்டியலங்காரத்தில் சங்கீர்ணாலங்காரத்திற்கு உதாரணமாகக் காட்டிய இவ்வெண்பாவும் இங்குக் கவனித்தற் குரியதாம்.

(நினைத்து), அசாவாமை வேண்டும் - தளராதிருத்தல் வேண்டும், பெருமை-(அத்தொழிலை முடித்தற்கு ஏற்ற) பெருமையை, முயற்சி- முயற்சியானது, தரும்-(தமக்கு) உண்டாக்கும், (எ-று).

சிறுமையை நோக்கியென்பது பெருமைதரும் என்றதனுலும், தொழிலை முடித்தலென்பது அதிகாரத்தாலும் வருவிக்கப்பட்டன. விடாது முயற்சிசெய்யத் தாம் பெருமையை யுடையவராவர்; ஆகவே, அரிய தொழில்களும் எளிதில் முடியுமென்பதாம்.

(கூ-து) தாம் மேற்கொண்ட தொழில் செய்தற் கருமை யதென்று தளராது முயற்சியோ டிருப்பவர்க்கு அம்முயற்சி அத்தொழிலை முடித்தற்கேற்ற பெருமையை யுண்டாக்கும்.

1. Yield not to the feebleness which says, "this is too difficult to be done;" labour will give the greatness of mind which is necessary to do it.

---

**உ. வினைக்கண் வினைகெட லோம்பல் *வினைக்குறை தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு.**

பரி:—(இ-ள்.) வினையாகிய குறையைச் செய்யாது விட்டாரை உலகம் விட்டது; ‡அதனுற் செய்யப்படும் வினைக்கண் தவிர்ந்திருத்தலை ஒழிக, (எ-று).

குறை-இன்றியமையாப் பொருள். ¶அது †"பயக்குறை யில்லைத் தாம்வாழு நாளே" என்பதனுனுமறிக. §இதற்கு வினை செய்ய வேண்டுங் குறையை நீங்கினுரின் நீங்கிற்றென் றுரைப்பாருமுளர்.

---

* வினைக்குறை - இன்றியமையாது (அவசியமாகச்) செய்ய வேண்டிய தொழில்.

‡ அதனுல்-செய்யவேண்டிய காரியத்தைச் செய்யாது விட்டவரை யுலகம் விட்டதனுல். ஆதலால் என்றும் பாடமுண்டு.

¶ அது-குறையென்பது இன்றியமையா (இல்லாது முடியா)ப் பொருளை யுணர்த்துதல்.

† புற நானூறு கஅஅ இதன் பொருள். (இன்பத்தால் மயக்கும் பிள்ளைகளை யில்லாதவர்களுக்கு) பயனுகிய முடிக்கப்படும் பொரு ளில்லை, தாம் உயிர்வாழும் நாளின்கண் என்பது. இதனது விசேட வுரையில் "குறையென்பது முடிக்கப்படுங்கால் முடிக்கப்படும் பொருள், இனிப் பயக்குறையுள்ளதென ஒரு சொல்வருவித்துத் தாம் வாழும் நாளும் இல்லையென்று கூறுவாரு முளர்" என்று கூறப்பட் டிருக்கின்றது.

§ தீர்ந்தாரின் தீர்ந்தன்று என்பதற்குத் தீர்ந்தாரின்-(தொழில் செய்ய வேண்டுங்குறையை) நீங்கியவரினின்றும், தீர்ந்தன்று-(உலகம்) நீங்கியது என்று பொருள் கூறுவாருமுண்டு. தீர்ந்தன்று என்பதில் அன்சாரியையாம்.

தெளி :—(இ-ள்.) உலகு - உலகமானது, வினைக்குறை - தொழிலாகிய குறையை, தீர்ந்தாரின்-செய்யாதுவிட்டவரை, தீர்ந்தன்று-விட்டது, (அதனால்), வினைக்கண்-(செய்யப்படுந்) தொழிலினிடத்து, வினைகெடல்-செயலற்றிருத்தலை, ஓம்பல்-ஒழியக்கடவன், (எ-று).

குறை - அவசியம் வேண்டிய பொருள். ஓம்பல்-அல்லீற்றுடம்பாட்டு வியங்கோள் வினைமுற்று.

(கு-து.) மேற்கொண்ட காரியத்தை முற்றுப்பெறச் செய்யாது விட்டவரை யுலகம் விட்டு நீங்கிப்போதலால், மேற்கொண்ட காரியத்தைத் தளர்ச்சியின்றி முடித்தல் வேண்டும் என்பது.

2. Take care not to give up exertion in the midst of a work, the world will abandon those who abandon their unfinished work.

---

**ரு. தாளாண்மை யென்னுந் தகைமைக்கட் டங்கிற்றே**
**வேளாண்மை யென்னுஞ் செருக்கு.**

பரி:-(இ-ள்.) முயற்சியென்று சொல்லப்படுகின்ற உயர்ந்த குணத்தின் கண்ணே நிலைபெற்றது எல்லார்க்கும் உபகாரஞ் செய்தலென்னும் மேம்பாடு, (எ-று).

பொருள் *கைகூடுதலான் உபகரித்தற்குரியார் முயற்சி யுடையாரென்பார் †அவ்வக்குணங்கண்மேல் வைத்தும், ‡அது ¶பிறர் மாட்டில்லையென்பார் $'தங்கிற்றே' என்றுங் கூறினார். இவை மூன்று பாட்டானும் முயற்சியது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி :— (இ-ள்.) வேளாண்மையென்னும் - (எல்லார்க்கும்) உபகாரஞ்செய்தலென்னும், செருக்கு-மேம்பாடானது, தாளாண்மை யென்னும்-முயற்சியென்று சொல்லப்படுகிற, தகைமைக்கண்-உயர்ந்த குணத்தினிடத்தே, தங்கிற்று-நிலைபெற்றது, (எ-று).

பொருள் கைகூடுதலால் (எல்லார்க்கும்) உபகாரஞ்செய்தற்குரியவர் முயற்சி யுடையவரென்பார் (தாளாண்மை யென்னுந்தகைமை,

---

* கைகூடுதலான்-கிட்டுதலால்.

† அவ்வக்குணங்கள் மேல் வைத்தலாவது தாளாண்மை (முயற்சி) யுடையாரே வேளாண்மை (எல்லார்க்கும் உபகாரஞ் செய்தலை) யுடையராவர் என்று கூறுது, தாளாண்மை யுடையாரைத் தாளாண்மை யென்னுந் தகைமை யென்றும், வேளாண்மை யுடையாரை வேளாண்மை யென்னுஞ் செருக்கு என்றும், குணிகளைக் குணங்களின் மேல்வைத்துக் கூறியவாறுமென்க. தாளாண்மை யென்னுந் தகைமை, வேளாண்மை யென்னுஞ் செருக்கு என்பன குணங்கள் ; அவற்றையுடையார் குணிகள்.

‡ அது—வேளாண்மை யென்னுஞ் செருக்கு.

¶ பிறர்மாட்டு-முயற்சி யில்லாதவரிடத்து. $ ஏகாரம்—பிரிநிலைப் பொருளது.

வேளாண்மை யென்னுஞ் செருக்கு என) அந்தந்தக் குணங்கள்மேல் வைத்தும், அது பிறரிடத்தில்லை யென்பார் (தாளாண்மை யென்னுந் தகைமைக்கண்) 'தங்கிற்றே' என்றும் சொல்லினர். இவை மூன்று பாட்டாலும் முயற்சியது சிறப்புச் சொல்லப்பட்டது.

(க - து.) எல்லார்க்கும் உபகாரஞ் செய்தலென்னும் மேம்பாடு முயற்சி யுடையாரிடத்து நிலைபெற்றுள்ளது என்பது.

3. The lustre of munificence will dwell only with the dignity of laboriousness.

---

**ச. தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை வாளாண்மை போலக் கெடும்.**

**பரி :—(இ - ள்.) முயற்சி யில்லாதவன் உபகாரியாந்தன்மை படை கண்டால் அஞ்சும் பேடி அதனிடைத் தன் கையில் வாளை ஆளுந்தற்றன்மை போல இல்லையாம், (எ - று).**

§ஆளென்பது முதனிலைத்தொழிற் பெயர். †பேடி வாளைப் பணிகோடற் கருத்துடையளாயினும் ‡அது தன் அச்சத்தான் முடியாதவாறு போல, முயற்சியில்லாதான் பலர்க்கும் உபகரித்தற் கருத்துடையனாயினும் ¶அது தன் வறுமையான் முடியாரென்பதாம். வாளாண்மை யென்பதற்கு வாளாற் செய்யும் ()ஆண்மையென் றுரைப்பாரு முளர். இதனான் அஃதில்லாதானது குற்றங் கூறப்பட்டது.

தெளி :—(இ - ள்.) தாளாண்மை யில்லாதான் - முயற்சி யில்லாதவன், வேளாண்மை-உபகாரியாந் தன்மை, பேடி-(சேனையைக் கண்டால் அஞ்சும்) பேடியானவள், கைவாளாண்மைபோல - (அச்சேனையிடத்துத்தன்) கையில் வாளையாளுதற்றன்மைபோல, கெடும் - இல்லையாம், (எ - று).

---

§ ஆள் என்பது ஆளுதல் என்று பொருள் பட்டமையான், முதனிலைத் தொழிற்பெயராயிற்று. முதனிலை (பகுதி) தொழிற் பெயர்ப் பொருளை யுணர்த்தும்போது முதனிலைத்தொழிற் பெயரெனப் படுகின்றது.

† ஆணிலக்கணமும் பெண்ணிலக்கணமும் விரவி (கலந்து) ஒரு வகையேனும் நிரம்பாது நிற்பது பேடியாமென்பர் நன்னூல் விருத்தியுரைகாரர். "ஆண்மை திரிந்த பெண்மைக் கோலத்துக், காம னாடிய பேடியாடலும்" என்பதன் விசேடவுரையில் அடியார்க்கு நல்லார் "ஆண்மைத் தன்மையிற்றிரிதலாவது விகாரமும் வீரியமும் நுகரும் பெற்றியும் பத்தியும் பிறவுமின்றாதல். ஆண்மை திரிந்த என்பதனால் தாடியும், பெண்மைக் கோலத்து என்பதனால் முலை முதலிய பெண்ணுறுப்புப்பலவுமுடையது ஆண்பேடென்று பெயர் பெறுமெனக்கொள்க" என்று கூறியிருப்பதிங்கு உணர்தற்பாலதாம். சிலப்பதிகாரம்— கடலாடுகாதை.

‡ அது - வாளைப் பணிகோடற் கருத்து.

¶ அது - பலர்க்கும் உபகரித்தற் கருத்து.

() ஆண்மை – ஒன்றற்குந் தளராது நிற்றல்.

ஆளென்பது முதனிலைத்தொழிற் பெயர். பேடியானவள் வாளை (பகைவரை வெட்ட) உபயோகித்தற்குக் கருத்துடையவளாயினும் அஃது அவள் தன் அச்சத்தால் முடியாத விதம்போல, முயற்சி யில்லாதவன் பலருக்கும் உபகாரஞ் செய்தற்குக் கருத்துடையவனாயினும் அஃது அவன் தன் வறுமையால் முடியாதென்பதாம். இதனால் அம்முயற்சி யில்லாதவனது குற்றஞ் சொல்லப்பட்டது.

(க - து.) முயற்சியில்லாதவ னிடத்துப் பிறர்க்கு உபகாரஞ் செய்யுந்தன்மை யொருவாற்றானு மின்றாம் என்பது.

4. The liberality of him, who does not labour, will fail, like the manliness of a hermaphrodite, who has a sword in its hand.

---

## ரு. இன்பம் விழையான் வினைவிழைவான் றன்கேளிர்
## துன்பந் துடைத்தூன்றுந் தூண்.

**பரி :—(இ - ள்.) தனக்கின்பத்தை விரும்பானாகி வினை முடித்தலையே விரும்புவான் தன் *கேளிராகிய பாரத்தின் றுன்பத்தினை நீக்கி †அதனைத் தாங்குந் தூணும், (எ - று).**

‡இஃது ஏகதேச வுருவகம். ஊன்று மென்றது ¶அப்பொருட்டாதல் ()"மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்கு" என்பதனானு மறிக. சுற்றத்தார் நட்டாரது வறுமையுந்தீர்த்து §அவர்க்கு £ஏமஞ் செய்யும் ஆற்றலையுடையனு மெனவே, +தன்னைக் கூறவேண்டா வாயிற்று.

---

* கேளிர் – யோக க்ஷேமங்களைக் கேட்குந் தன்மையர்.

† அதனை – கேளிராகியபாரத்தினை.

‡ இன்பத்தை விரும்பாது தொழில் முடித்தலை விரும்புவானைத் தூண் என்று உருவகப்படுத்தினவர் அதற்கேற்பக் கேளிரைப்பாரம் (பளுவு) என்று உருவகப்படுத்தாமையின், இக்குறள் ஏகதேச வுருவகவணியாயிற் றென்க.

¶ அப்பொருட்டாதல் – தாங்கும் என்னும் பொருளினை யுடையதாதல்.

() நாலடியார் தாளாண்மை எ. இதன் பொருள். (செல்லினால் தின்னப்பட்ட ஆலமரத்தை) தூணாய்நின்று அவ்வாலமரத்தின் விழுது தாங்கினாற்போல என்பது.

§ அவர்க்கு – சுற்றத்தார் நட்டாரென்னும் பந்து மித்திரர்களுக்கு.

£ ஏமம் – பாதுகாத்தல்

+ தன்னைக் கூறவேண்டாவாயிற்று – இன்பத்தை விரும்பாது தொழில் முடித்தலை விரும்புவான் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளும் வல்லமையுடையவனாவ னென்பதைச் சொல்லவேண்டுவதில்லையாயிற்று.

*காரியத்தைவிழையாது காரணத்தை விழைவான் எல்லாப்பயனு மெய்து மென்றதனால், காரணத்தை விழையாது காரியத்தை விழைவான் யாதும் எய்தானென்பது பெற்றும் இதனால் அஃதுடையானது நன்மை கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) இன்பம் விழையான் – (தனக்கு) இன்பத்தை விரும்பாதவனாகி, வினைவிழைவான் – தொழில் முடித்தலையே விரும்புவான், தன்கேளிர் – தனது (சுற்றத்தார் நட்பினரென்னும்) கேளிராகிய பாரத்தினது, துன்பம் – துன்பத்தை, துடைத்து – நீக்கி, ஊன்றும் – (அப்பாரத்தைத் தாங்கும், தூண் – தூணும், (எ–று).

இஃது ஏகதேச உருவகவணி. (இன்பம் விழையாது வினை விழைவான்) கேளிரது வறுமையையுந்தீர்த்து அவர்க்கு ஏமஞ் செய்யும் வல்லமையை யுடையவனாவனெனவே, (அவன்) தன்னைப் பாதுகாத்துக் கொள்ளுதலைச் சொல்ல வேண்டுவதில்லையாயிற்று. காரியமாகிய இன்பத்தை விரும்பாமல் காரணமாகிய முயற்சியை விரும்புவான் எல்லாப் பயனும் அடைவானென்றதனால், காரணமாகிய முயற்சியை விரும்பாமல் காரியமாகிய இன்பத்தை விரும்புவான் ஒருபயனும் அடையானென்பது பெறப்பட்டது. இதனால் அம்முயற்சியுடையவனது நன்மை சொல்லப்பட்டது.

(க – து.) இன்பத்தை விரும்பாது அதற்குக்காரணமாகிய முயற்சியை விரும்புவான் தனதுறவினர் நட்பினரது துன்பத்தை யொழிப்பான் என்பது.

5. He who desires not pleasure, but desires labour, will be a pillar to sustain his relations, wiping away their sorrows.

———

சு. முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை
யின்மை புகுத்தி விடும்.

பரி :—(இ – ள்.) அரசர் மாட்டுளதாய முயற்சி அவரது செல்வத்தினை வளர்க்கும்; அஃதில்லாமை வறுமையை அடைவித்துவிடும், (எ - று).

செல்வம் †அறுவகை யங்கங்கள். வறுமை ‡அவற்றான்வறியராதல்.

---

* முயற்சியின் காரியமாகிய இன்பத்தைவிரும்பாமல் இன்பத்திற்குக் காரணமாகிய முயற்சியை விரும்புவான் எல்லாப்பயனும் அடைவான் என்று கூறினமையின், இன்பத்திற்குக் காரணமான முயற்சியை விரும்பாமல் முயற்சியின் காரியமாகிய இன்பத்தை விரும்புவான் யாதொரு பயனும் அடையமாட்டானென்பது பெறப்பட்டதென்க.

† அறுவகையங்கங்கள் – அமைச்சு (மந்திரி), நாடு, அரண், பொருள், படை, நட்பு என்பன.

‡ அவற்றான் வறியராதல் – அமைச்சு முதலிய அங்கங்களால் குறைவு பட்டவராதல்.

* அதனை யடைவிக்கவே, பகைவரான் அழிவரென்பது கருத்து.

தெளி :—(இ-ள்.) முயற்சி - (அரசரிடத்து உண்டாகிய) முயற்சி யானது, திருவினை - (அவரது) செல்வத்தை, ஆக்கும் – வளர்க்கும், முயற்றின்மை–அம்முயற்சி யில்லாமையானது, இன்மை–வறுமையை, புகுத்தி விடும் – அடைவித்து விடும், (எ–று).

செல்வம் - அமைச்சு முதலிய அறுவகை யங்கங்கள். வறுமை-அவற்றால் தரித்திரராதல். (முயற்றின்மை) அதனை யடைவிக்கவே, (தரித்திர முடைய அரசர் தமது) பகைவரால் அழிவரென்பது கருத்து.

(கு - து.) முயற்சி செல்வத்தையும் அஃதின்மை தரித்திரத்தையு முண்டாக்கும் என்பது.

6. Labour will produce wealth; idleness will bring poverty.

---

எ மடியுளாண் †மாமுகடி யென்ப மடியிலான்
றாளுளா டாமரையி னாள்.

பரி:—(இ - ள்.) கரிய ‡சேட்டை ஒருவன் மடியின் கண்ணே யுறையும்; திருமகள் மடியிலாதானது முயற்சிக்கண்ணே யுறையுமென்று சொல்லுவர் அறிந்தோர், (எ–று).

¶பாவத்தின் கருமை §அதன் பயனாய முகடிமேலேற்றப்பட்டது.

---

* அதனை - வறுமையை (முயற்சியில்லாமையானது) அடைவிக்கவே, (வறுமையை யுடைய அரசர்) பகைவரால் அழிவரென்பது கருத்தாம், முயற்சியில்லாத அரசர் அமைச்சு முதலிய அங்கங்களால் குறைவுபட்டிருத்தலால், அவர் எளிதில் பகைவரால் அழிவரென்பது திரண்ட பொருளாம்.

† மா என்பது இங்குக் கருமை யென்னும் பொருள்மேல் நின்றது.

‡ சேட்டை என்பதற்கு மூத்தாளென்பது பொருள். திருப்பாற் கடல் கடைந்த காலத்தில் அக்கடலில் இலக்குமிக்கு முன்னர் மூதேவி யுண்டானமை பற்றி அவள் மூத்தாள் எனப்பட்டாள். இவள் சீவர்களுக்குச் சோம்பல் முதலியவற்றை யுண்டாக்குந் தெய்வமாவள்; கருமை நிறமும், சர்ப்பா பரணமும், கழுதை வாகனமு முடையவள். இவளுக்குக் கொடி - காகம்; ஆயுதம் – துடைப்பம்.

¶ பாவம் என்னும் குணம் கருமையென்னும் குணத்தை யேற்றலின்றாயினும், கவிஸமயம்பற்றிப் பாவத்திற்குக் கருமைநிறம் கூறப்பட்டது. பொருள் குணத்தையும் தொழிலையும் சாதியையும் ஏற்று நிற்குமென்றும், குணம் குணத்தையும் தொழிலையும், சாதி சாதியையும் குணத்தையும் தொழிலையும் ஏற்று நில்லாவென்றும் தருக்கநூல் கூறுகின்றது. கீர்த்தி புண்ணியம் சிரிப்பு முதலியன வெண்மை நிறமுடையன; ஆசை ஆண்மை முதலியன செம்மை நிறமுடையன; அபகீர்த்தி அஞ்ஞானம் முதலியன கருமை நிறமுடையன வென்று கூறுதலுமுண்டு.

§ அதன்பயனாய முகடிமேல் ஏற்றப்பட்டது—(பாவத்தின் கருமை யானது) அப்பாவத்தினது பயனான முகடி (மூதேவியின் மேல்

மடியும் முயற்சியும் உடையார் மாட்டு நிலையை *அவை தம்மேல் வைத்துக் கூறினார். இவை இரண்டு பாட்டானும் †அவ் விருமைக்கும் ‡ஏது கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) மாமுகடி - கரிய மூதேவியானவள், மடி - (ஒருவனது) சோம்பலிலே, உளாள் - வசிப்பாள், தாமரையினாள் - சீதேவியானவள், மடியிலான் - சோம்பலில்லாதவனது, தாள் - முயற்சியிலே, உளாள் - வசிப்பாள், என்ப - என்று சொல்லுவர் (அறிந்தோர்), (எ-று).

பாவத்தின் கருமை அதன்பயனாகிய முகடியின்மே லேற்றப் பட்டது. சோம்பலை யுடையவனிடத்து மூதேவியும் முயற்சியை யுடையவனிடத்துச் சீதேவியும் வசித்தலை அவை தம்மேல் வைத்து (சோம்பலிலே மூதேவி வசிப்பாள் என்றும் முயற்சியிலே சீதேவி வசிப்பாள் என்றும்) கூறினார். இவை இரண்டு பாட்டாலும் செல் வத்திற்குக் காரணம் முயற்சியென்றும், வறுமைக்குக் காரணம் முயற்சி யில்லாமை யென்றும் சொல்லப்பட்டன.

(க-து.) சோம்பலுடையவ னிடத்து மூதேவியும் அஃதில்லாதவ னிடத்துச் சீதேவியும் வசிப்பர் என்பது.

7. They say that the black Mùdévi (the goddess of adversity) dwells with laziness, and that Lakshmi (the goddess of prosperity) dwells with the labour of the industrious.

---

அ. **பொறியின்மை யார்க்கும் பழியன் ¶றறிவறிந்**
**$தாள்வினை யின்மை பழி.**

**பரி :—(இ-ள்.) பயனைத் தருவதாய §விதியில்லாமை £ஒருவர்க்கும் பழியாகாது ; அறியவேண்டு மவற்றை யறிந்து வினை செய்யாமையே பழியாவது, (எ-று).**

---

ஏற்றிச்சொல்லப்பட்டது. இதனால் பாவஞ்செய்தவன் தான்செய்த பாவத்தின் பயனாக அடைவது மூதேவி என்றாயிற்று ; ஆகவே, அவன் வறுமையாளன் என்பது வெள்ளிடை மலையாயிற்றென்க.

* அவை தம்மேல் - மடி (சோம்பல்) முயற்சிகளின் மேல்.

† அவ்விருமைக்கும்-செல்வம் வறுமையென்னு மவ்விரண்டற்கும்.

‡ ஏது - முயற்சியும் முயற்சியின்மையும்.

¶ அறிவு என்னும் தொழிற்பெயர் அறியவேண்டுமவற்றை யுணர்த்துதலால் தொழிலாகு பெயராம். இவ்வாறு கூறுதல் இலக்கணநூற்கொள்கை; தருக்கநூற்கொள்கையின்படி பண்பாகு பெயராம்.

$ ஆள்வினையென்பதிங்கு ஒரு சொல்லாய் நின்றது.

§ விதியென்றது இங்கு முற்பிறப்பிற் செய்த நல்வினையை.

£ எவர்க்கும் என்றும் பாடமுண்டு.

அறியவேண்டுவன – வலி $முதலாயின. ‡தெய்வம் இயையாவழி ஆள்வினை யுடைமையாற் பயனில்லை யென்பாரை நோக்கி, உலகம் §பழவினை பற்றிப் பழியாது ஈண்டைக் குற்றமுடைமை பற்றியே †பழிப்பதென்பார் 'ஆள்வினை யின்மை பழி' என்றார். *அதனால் விடாது முயல்க வென்பது குறிப்பெச்சம்.

தெளி:— (இ – ள்.) பொறியின்மை – (பயனைத் தருவதாகிய) விதியில்லாமை, யார்க்கும் – ஒருவருக்கும், பழியன்று – பழியாகாது, அறிவறிந்து–அறியவேண்டுவனவற்றை யறிந்து, ஆள்வினையின்மை– தொழில் செய்யாமையே, பழி – பழியாவதாம், (எ – று).

அறியவேண்டுவன – வலிமுதலாயின. ஊழ் பொருந்தாதவிடத்துத் தொழில் செய்தலால் பயன் இல்லை யென்பாரை நோக்கி, உலகம் பழவினை பற்றிப் பழியாது இவ்விடத்துத் தொழில் செய்யாத குற்றமுடைமை பற்றியே பழிப்பதென்பார் 'ஆள்வினை யின்மை பழி' என்றார். அதனால் விடாது முயல்க வென்பது குறிப்பெச்சம்.

(க – து.) அறியவேண்டுவனவற்றை யறிந்து தொழில் செய்யாமையே யார்க்கும் பழியாம் என்பது.

8. Adverse fate is no disgrace to any one; to be without exertion, and without knowing what should be known, this is disgrace.

---

கூ. தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்.

பரி:—(இ – ள்.) முயன்றவினை பால்வகையாற் கருதிய பயனைத் தாராதாயினும், முயற்சி தனக்கிடமாய உடம்பு வருந்திய வருத்தத்தின் கூலியளவு தரும் பாழாகாது, (எ–று).

ʃ தெய்வத்தானாயவழித் தன்னளவின்மிக்க பயனைத் தருமென்பது

---

$ முதலாயின என்றமையின், காலமும் இடமுங் கொள்க.

‡ விதி பயனைத் தருவதற்கு அனுகூலமாகாதபோது தொழில் செய்தலால் பயனில்லை யென்பது "எண்ணி யொருகருமம் யார்க்குஞ் செய்யொண்ணாது, புண்ணியம் வந்தெய்து போதல்லால்" என்று ஔவைப்பிராட்டியார் கூறுதலாலு முணரப்படும்.

§ பழவினை–பூர்வகர்மம்; இது சஞ்சிதமென்றுஞ் சொல்லப்படும்.

† பழிப்பதென்றார் என்றும் பாடமுண்டு.

* அதனால் (ஆள்வினையின்மை பழி என்றதனால்) விடாது முயல்க என்பது குறிப்பாக வுணருமாறெஞ்சி (குறைந்து) நின்றது.

ʃ முயன்று செய்ததொழில் ஊழினால் முடிவுபெற்ற விடத்துத் தன்னளவிற்கு மேற்பட்ட பயனைத் தருமென்பது தெய்வத்தா னாகா

உம்மையாற் பெற்றும். †இருவழியும் பாழாகல் இன்மையின், தெய்வ நோக்கியிராது முயல்கவென்பது கருத்து.

தெளி :—(இ-ள்.) (முயன்று செய்ததொழில்) தெய்வத்தான் – ஊழ்வகையால், ஆகாதெனினும்–(கருதிய பயனைத்) தாராதாயினும், முயற்சி - முயற்சியானது, தன்மெய் - தனக்கிடமாகிய உடம்பு, வருத்தக்கூலி - (வருந்திய) வருத்தத்தின் கூலியளவு, தரும்-கொடுக்கும் (பாழாகாது), (எ–று).

(முயன்று செய்ததொழில்) ஊழினாலாய விடத்துத் தன்னளவின் மிகுந்த பயனைத் தருமென்பது எனினும் என்ற உம்மையாற்பெற்றும். முயன்று செய்த தொழில் ஊழ்வகையால் ஆயவிடத்தும் ஆகாத விடத்தும் பாழாகலின்மையால், ஊழைநோக்கி யிராமல் முயல்க-வென்பது கருத்து.

(க-து.) கருதிய பயன் தரும் நல்வினை யில்லா விடத்தும் முயற்சி உடல்வருத்தத்திற்கேற்ற பயனைத்தரும் என்பது.

9. Although it be said that, through fate, it cannot be attained; yet labour, with bodily exertion, will yield its reward.

---

**௬௦. ஊழையு ‡முப்பக்கங் காண்ப ருலைவின்றித்**
**தாழா துஞற்று பவர்.**

**பரி :—(இ-ள்.) பயனை விலக்குவதாய ஊழினையும் புறங்காண்பர் ¶அவ்விலக்கிற் கிளையாது வினையைத்தாழ்வற முயல்வார், (எ–று).**

---

தெனினும் என்னும் எதிர்மறையும்மையாற் பெறப்பட்டது. தன்னளவின் மிக்க பயனுவது தான்கருதிய பயனிலும் அதிகமான பயனுண்டாதல்.

† இருவழியும் (முயன்று செய்த தொழில் ஊழ்வகையால் கருதிய பயனைத் தந்தவிடத்தும் தாராதவிடத்தும்) பாழாகல் (பயனில்லா தொழிதல்) இன்மையின் (இல்லாமையினுல்) விதியை யெண்ணி யிராது மேற்கொண்டதொழிலை முயன்று செய்யவேண்டும் என்பது கருத்து. பாழாகலின்மையாவது முயன்று செய்ததொழில் ஊழ்வகை-யால் முற்றுப் பெற்றவிடத்துப் பெரும்பயனையும் முற்றுப்பெறுத விடத்து உடல் வருத்தத்திற்கேற்பச் சிறிது பயனையும் தருதலாம்.

‡ இராமாநுஜக் கவிராயர் தமது நன்னூல் விருத்தியுரையில் சுட்டெழுத்துக்களைக் கூறுமிடத்து "உகரம் எதிர்முகமின்றிப் பின்னிற்கும் பொருளையும் சுட்டுமெனக்காண்க. உகரம் அவ்வாறு சுட்டிநிற்பதை 'ஊழையு முப்பக்கங்காண்பர்' என்றதற்குப் பின்பக்க மாய் முதுகுகாட்டக் காண்பர் எனப் பொருள் கூறுதலாற்காண்க" என்பர். திருக்கோவையார் "தெளிவளர் வான்சிலை" என்னும் பாட்டிலுள்ள "உங்ஙனே வந்து தோன்றுவனே" என்பது மிங்குக் கவனிக்கத் தக்கதாம்.

¶ அவ்விலக்கிற்கு – (தீவினை) பயனை விலக்குவதற்கு.

தாழ்வறுதல் – சூழ்ச்சியினும், வலி *முதலிய அறிதலினும், செயலினுங் குற்றமறுதல். †ஊழ் ஒருகாலாக இருகாலாகவல்லது விலக்கலாகாமையின், ‡பலகான் முயல்வார் பயனெய்துவரென்பார் 'உப்பக்கங் காண்பர்' என்றார். தெய்வத்தான் இடுக்கண் வரினும் முயற்சி விடற்பாலதன்றென்பது இவை மூன்று பாட்டானுங் கூறப் பட்டது.

தெளி:—(இ - ள்.) ஊழையும்-(பயனைவிலக்குவதாகிய) ஊழையும், உப்பக்கங் காண்பர் - புறங்காண்பர், உலைவின்றி - (அவ்விலக்கிற்கு) இளையாமல், (தொழிலை), தாழாது – தாழ்வற, உஞற்றுபவர் – முயல்வோர், (எ - று).

தாழ்வறுதல் – ஆலோசனையிலும், வலி முதலியவற்றை யறிதலிலும், செயலிலுங் குற்றமறுதல். ஊழானது மேற்கொண்ட தொழிலை ஒருமுறையாவது இருமுறையாவது விலக்குவதல்லாமல் பலமுறை விலக்கலாகாமையால் பலமுறை முயற்சி செய்வார் பயனை யடைவாரென்பார் 'உப்பக்கங் காண்பர்' என்றார். ஊழினால் துன்பம் வரினும் முயற்சிவிடத்தக்க தன்றென்பது இவை மூன்று பாட்டாலும் சொல்லப்பட்டது. ஊழென்றது இங்குப் போகூழை (தீவினையை). புறங்காணல் - முதுகைப் பார்த்தல்.

(க - து.) தாம் மேற்கொண்ட தொழிலைத் தளர்வில்லாத முயற்சியோடு செய்பவர் பயனை விலக்கும் ஊழையும் விலக்குவர்.

10. They who labour on, without fear and without fainting will see even fate (put) behind their back.

---

## இருபத்தைந்தாம் அதிகாரம்

### இடுக்கணழியாமை

### On Perseverance in Spite of difficulties

**பரி: அஃதாவது வினையின்கண் முயல்வான் தெய்வத்தானாக, பொருளின்மையானாக, மெய்வருத்தத்தானாகத் தனக்கிடுக்கண் வந்துழி. அதற்கு மனங்கலங்காமை § அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.**

---

* முதலிய என்றது காலத்தையும் இடத்தையும்.

† ஊழதிகாரத்தோடு இச் செய்யுள் முரணுமை "ஊழ் ஒருகாலாக இருகாலாக வல்லது விலக்கலாகாமையின், பலகான் முயல்வார் பயனெய்துவரென்பார் 'உப்பக்கங் காண்பர்' என்றார்" என்று கூறினமையால், நன்கு விளங்கும்.

‡ இங்கு மார்க்கண்டன் சுவேதன் முதலியவர்களது கதை ஞாபகத்திற்குக் கொண்டுவரற் பாலதாம்.

§ ஆள்வினை யுடைமையென்னும் அதிகாரத்தின்பின் இடுக் கணழியாமை என்னும் அதிகாரம் வைத்த முறைமையும்.

தெளி:—அஃதாவது தொழில் செய்தலில் முயல்பவன் ஊழினு லாவது பொருளில்லாமையினுலாவது மெய்வருத்தத்தாலாவது தனக்குத் துன்பம் வந்தவிடத்து, அத் துன்பத்திற்கு மனங்கலங்காமை. அதிகார முறைமையும் இதனுலே விளங்கும்.

---

க. இடுக்கண் வருங்கா னகுக வதனை
யடுத்தூர்வ தஃதொப்ப தில்.

பரி:—(இ - ள்.) ஒருவன் வினையாற் றனக்கிடுக்கண் வருமிடத்து *அதற்கழியாது உண்மகிழ்க; அவ்விடுக்கணை மேன்மேல் †லடரவல்லது அம் மகிழ்ச்சி போல்வது பிறிதில்லை ஆகலான், (எ - று).

வினை யினிது முடிந்துழி நிகழற்பாலதாய மகிழ்ச்சியை அதற் கிடையே இடுக்கண் வரும்வழிச் செய்யவே, அவன் அழிவின்றி மன வெழுச்சியான் அதனைத் தள்ளி ‡அக்குறை முடிக்கும் ஆற்றலுடையனு மாகலின் 'அதனை யடுத்தூர்வ தஃதொப்ப தில்' என்றுர்.

தெளி: – (இ - ள்.) (ஒருவன்) இடுக்கண் – துன்பமானது, வருங் கால் – (தொழிலால் தனக்கு) வருமிடத்து, நகுக – (அதற்கு அழியாமல் மன) மகிழக்கடவன், அதனை – அத்துன்பத்தை, அடுத்து – நெருங்கி (மேலுமேலும்), ஊர்வது – எதிர்க்கவல்லது, அஃதொப்பது – அம்மகிழ்ச்சி போல்வது, இல் – (வேறு) இல்லை, (ஆகலால்), (எ -று).

(ஒருவன் செய்யும்) தொழில் நன்றாக முடிந்தவிடத்து உண்டா வதாய மகிழ்ச்சியை அத்தொழில் முடிதற்கு நடுவிலே துன்பம் வருமிடத்துச் செய்யவே, அவன் அழிவின்றி மனவெழுச்சியால் அத் துன்பத்தினைத் தள்ளி அக்குறையை முடிக்கும் வல்லமையுடையவ னுவானுகலின் 'அதனை யடுத்தூர்வ தஃதொப்ப தில்' என்றுர்.

(க - து.) மேற்கொண்ட தொழிலால் துன்பம் நேர்ந்தவிடத்துத் தளர்ச்சி யடையாது மகிழ்ச்சி யடைபவனுக்கு அத்துன்பமொழியும் என்பது

1. If troubles come, laugh; there is nothing like that, to press upon and drive away sorrow.

---

உ. வெள்ளத் தனைய விடும்பை யறிவுடையா
னுள்ளத்தி னுள்ளக் கெடும்.

பரி.—(இ - ள்.) வெள்ளம்போலக் கரையிலவாய இடும்பைகளெல்லாம் அறிவுடையவன் தன்னுள்ளத்தான் $ஒன்றனை §நினைக்க, அத்துணையானே கெடும், (எ - று).

---

* அதற்கழியாது – அவ்விடுக்கணுக்குத் தளர்ச்சியடையாமல்.

† அடரவல்லது - எதிர்த்துக் கெடுக்க வல்லமையுடையது.

‡ அக்குறை – அத்தொழிற்குறையை.

$ ஒன்றனை – துன்பத்திற்கு மாறுபட்டதொன்றை.

§ நினைந்த துணையானே கெடும் என்றும் பாடமுண்டு.

இடும்பையாவது உள்ளத்து *ஓர் கோட்பாடேயன்றிப் பிறிதில்லை என்பதூஉம் அது †மாறுபடக்கொள்ள, நீங்குமென்பதூஉம் அறிதல் வேண்டுதலின் 'அறிவுடையான்' என்றும், ‡அவ் வுபாயத்தெண்மை தோன்ற 'உள்ளத்தினுள்ள' என்றுங் கூறினர். இவை யிரண்டு பாட்டானும் ஊழினானய இடுக்கணால் அழியாமைக்கு உபாயங் கூறப்பட்டது

தெளி: – (இ - ள்.) வெள்ளத்தனைய – வெள்ளம்போலக் கரையில்லாதனவாய, இடும்பை – துன்பங்களெல்லாம், அறிவுடையான் – அறிவுடையவன், உள்ளத்தின் – (தன்) உள்ளத்தினால், உள்ள – (ஒன்றை) நினைக்க, கெடும் – (அந்நினைத்த அளவாலே) அழியும், (எ-று).

துன்பமாவது உள்ளத்தினது ஒரு கோட்பாடே யல்லாமல் மற்றொன்றன்று என்பதும் அத்துன்பம் மாறுபடக் கொள்ள நீங்குமென்பதும் அறிதல் வேண்டுதலால் 'அறிவுடையான்' என்றும், அவ்வுபாயத்தினெளிமை தோன்ற 'உள்ளத்தினுள்ள' என்றும் சொல்லினர். இவை யிரண்டு பாட்டாலும் ஊழினாலாகிய துன்பத்தினால் அழியாமைக்கு உபாயம் சொல்லப்பட்டது.

(க - து.) துன்பம் வந்த விடத்து அது மனத்தின் குணங்களுள் ஒன்று; நிலைத்திருப்பதன்றென்று கருதுபவர்க்கு அது விரைந்து கெடும் என்பது.

2. A flood of troubles will be overcome by the courageous thought which the minds of the wise will entertain, even in sorrow

---

௬௨௩ ௩. இடும்பைக் கிடும்பை படுப்ப ரிடும்பைக்
இடும்பை படாஅ தவர்.

**பரி: —(இ-ள்.) வினைசெய்யுங்கால் ||அதற்கிடையே வந்த துன்பத்திற்கு வருந்தாதவர், §அத் துன்பந்தனக்குத் தாந்துன்பம் விளைப்பர், (எ - று).**

வருந்துதல் - இளைத்து $ விட நினைத்தல். மனத்திட்பமுடையராய் விடாது முயலவே வினை முற்றுப்பெற்றுப் பயன்படும்; படவே,

---

* ஓர் கோட்பாடு – ஒருவகைக் கொள்கை (அபிப்பிராயம்).

† மாறுபடக்கொள்ள – இடும்பை யியல்பா யிருப்பதன்று என்னும் அபிப்பிராயத்தைக் கொள்ள.

‡ அவ்வுபாயத்தெண்மை தோன்ற - அவ்விடும்பையை யொழிக்கும் உபாயத்தின் எளிமை விளங்க அவ்வுபாயம் – உள்ளத்தினுள்ளல்.

|| அதற்கு – அவ்வினை செய்தற்கு.

§ அத் துன்பந் தனக்கு - வினைசெய்யுங் காலத்து அதற்கிடையே வந்த துன்பத்திற்கு.

$ விட – செய்யுமாறு மேற்கொண்ட தொழிலை நடுவே விட்டுவிட.

எல்லா விடும்பையு மிலவாமாகலின் 'இடும்பைக் கிடுப்பை படுப்பர்' என்றார். *வருகின்ற பாட்டிரண்டினும், இதற்கு இவ்வாறே கொள்க. $சொற்பொருட்பின் வருநிலை.

தெளி:—(இ – ள்.) இடும்பைக்கு – (தொழில் செய்யும்போது அதற்கு நடுவே வந்த) துன்பத்திற்கு, இடும்பைபடாஅதவர் – வருந்தாதவர், இடும்பைக்கு – அத்துன்பத்திற்கு, இடும்பை – துன்பத்தை, படுப்பர் – (தாம்) உண்டாக்குவார், (எ – று).

வருந்துதல் – இளைத்துச், செய்யாமல் விடநினைத்தல். மனவுறுதியுடையவராய் விடாது முயற்சி செய்யவே தொழில் முடிவுபெற்றுப் பயனுண்டாகும்; உண்டாகவே, எல்லாத் துன்பங்களும் ஒழிவனவாமாதலால் 'இடும்பைக் கிடும்பை படுப்பர்' என்றார். வருகின்ற பாட்டிரண்டிலும் இதற்கு இப்படியே பொருள் கொள்க. இது சொற்பொருட்பின் வருநிலையணி.

(க – து.) தொழில் செய்யும்போ துண்டாகிய துன்பத்திற்கு வருந்தாதவர் அத்துன்பத்திற்குத் துன்பமுண்டாக்குவர் என்பது.

3. They give sorrow to sorrow, who in sorrow do not suffer sorrow.

---

ச. **மடுத்தவா யெல்லாம் பகடன்ன னுற்ற**
**விடுக்க ணிடர்ப்பா டுடைத்து.**

பரி:—(இ – ள்.) விலங்கிய விடங்களெல்லாவற்றினுஞ் சகடமீர்க்கும் பகடுபோல வினையை யெடுத்துக்கொண்டு உய்க்கவல்லானை வந்துற்ற இடுக்கண் தானே இடர்ப்படுதலை யுடைத்து, (எ – று).

'மடுத்தவா யெல்லாம்' என்பது பொதுப்பட நின்றமையின், சகடத்திற்கு அளற்றுநில ‡முதலியவாகவும், வினைக்கு இடையூறுகளாகவுங் கொள்க. ¶பகடு மருங்கொற்றியும் மூக்கூன்றியும் தாட

---

* கீழ்வரும் பாடலிரண்டிலும் "இடுக்க ணிடர்ப்பா டுடைத்து" என்றும், 'இடுக்க ணிடுக்கட் படும்' என்றுமுள்ள இதற்கு இவ்வாறே கொள்ளுதலாவது 'மனத்திட்பமுடையராய் விடாது முயலவே வினைமுற்றுப்பெற்றுப் பயன்படும்; படவே எல்லா விடும்பையு மிலவாமாகலின் 'இடுக்க ணிடர்ப்பாடுடைத்து' என்றார்; 'இடுக்க ணிடுக்கட்படும்' என்றார்" என்று கொள்ளுதலாம்.

$ முன்வந்த இடும்பையென்னும் சொல்லும் அதன் பொருளும் பின்னும் வந்தமையின், இக்குறள் சொற்பொருட்பின் வருநிலையணியாம். சொற்பொருட்பின் வருநிலையணியாவது :— முன்வந்த சொல்லும் பொருளும் பின்னும் பலவிடத்து வருவதாம்.

‡ முதலிய என்றமையின், மணல் நிலம், செங்குத்தான இடம், களர் நிலம் முதலியவற்றையுங் கொள்க.

¶ சீவகசிந்தாமணி முத்தியிலம்பகம் 186-வது செய்யுளின்கண் "மருங்கொற்றி மூக்கூன்றித் தாடவழ்ந்து வாங்கி" என்றுள்ள பிரயோகமிங்குணர்தற்பாலதாம்.

வழ்ந்தும் அரிதினுய்க்குமாறுபோலத் தன்மெய்வருத்த நோக்காது முயன்றுய்ப்பானென்பார் 'பகடன்னான்' என்றார்.

தெளி :—(இ - ள்.) மடுத்தவாயெல்லாம் - தடைப்பட்ட இடங்களெல்லாவற்றிலும், பகடன்னான் - பண்டியை யிழுத்துச்செல்லும் எருதுபோலத் தொழிலை மேற்கொண்டு செலுத்தவல்லவனை, உற்ற - (வந்து) அடைந்த, இடுக்கண் - துன்பமானது, இடர்ப்பாடு - (தானே) துன்பப்படுதலை, உடைத்து - உடையதாம், (எ - று).

'மடுத்தவாயெல்லாம்' என்பது பண்டியை யிழுத்துச்செல்லும் எருதிற்கும் தொழிலை மேற்கொண்டு செலுத்துகின்றவனுக்கும் பொதுவாக நின்றமையின், அம்மடுத்தவாயெல்லாமென்பதனைப் பண்டிக்குச் சேற்று நில முதலியனவாகவும், தொழிலுக்குத் தடைகளாகவும் கொள்க. தடைநேரிட்டபோது எருது பக்கங்களில் உராய்ந்தும் நிலத்தில் மூக்கையூன்றியும் கால்களை மடக்கிவைத்துத் தவழ்ந்தும் அரிதாகப்பண்டியைச் செலுத்தும்விதம் போலத் தொழிலை மேற்கொண்டவன் தடைநேரிட்டபோது தன் சரீரப் பிரயாசத்தை நோக்காமல் முயற்சிசெய்து அதனைச் செலுத்துவான் என்பார் 'பகடன்னான்' என்றார்.

(க - து.) மேற்கொண்ட தொழிலைத் தடை நேரிட்டபோது தளர்ச்சியின்றி முடிக்கவல்லவனை யடைந்த துன்பமானது தானே துன்பப்படும் என்பது.

4. Troubles will vanish before the man, who struggles against difficulties as a buffalo drawing a cart through deep mire.

---

**ரு. அடுக்கி வரினு மழிவிலா னுற்ற
விடுக்க ணிடுக்கட் படும்.**

பரி:—(இ - ள்.) இடைவிடாது மேன்மேல் வந்தன வாயினும், †தன்னுள்ளக் கோட்பாடு விடாதான் உற்ற விடுக்கண் டாம் இடுக்கணிலே பட்டுப்போம், (எ - று).

ஒன்றே பலகால் வருதலும் வேறுபட்டன விராய்வருதலு மடங்க 'அடுக்கிவரினும்' என்றார். ‡அழிவென்னுங் காரணப் பெயர் காரியத்தின் மேனின்றது இவை மூன்றுபாட்டானும் தெய்வத்தானு யதற் கழியாமை கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்.) அடுக்கி வரினும் - இடைவிடாது மேலுமேலும் வந்தனவாயினும், அழிவிலான் - (தன்னுள்ளக்கோட்பாடு)விடாதவனை,

---

† தன்னுள்ளக்கோட்பாடு - தன்மனக்கொள்கையாகிய தைரியம்.

‡ அழிவு – மனங்கலங்குதல்; அஃது இங்கு அதனாலாய உள்ளக் கோட்பாடு விடுதலை (மனவுறுதி யொழிதலை) யுணர்த்துதலால், கருவியாகுபெயராம். மனக்கலக்கத்தால் அதைரியமுண்டாம் என்பது கருத்து.

உற்ற - அடைந்த, இடுக்கண் - துன்பங்கள், இடுக்கட்படும் - (தாம்) துன்பத்திலே பட்டுப்போம், (எ - று).

ஒருதுன்பமே பலமுறை வருதலும் வெவ்வேறு வகைப்பட்ட துன்பங்கள் கலந்து வருதலும் அடங்க 'அடுக்கிவரினும்' என்றார். அழி வென்னுங் காரணப்பெயர் அதன் காரியமாய உள்ளக்கோட்பாடு விடுதலின்மேல் நின்றது. இவை மூன்று பாட்டாலும் ஊழினாலாகிய துன்பத்திற்கு அழியாமை சொல்லப்பட்டது.

(க - து.) தொழில் செய்யும்போது மனவுறுதி யுள்ளவனையடைந்த துன்பமானது தானே துன்பப்படும் என்பது.

5. The troubles of that man will be troubled and disappear, who however thickly they may come upon him, does not abandon his purpose.

---

சா. **அற்றேமென் றல்லற் படுபவோ பெற்றேமென்**
**றோம்புத றேற்றா தவர்.**

**பரி:—(இ - ள்.) வறுமைக்காலத்து யாம் வறிய மாயினோ மென்று மனத்தாற் றுயருழப்பரோ; செல்வக்காலத்து இது பெற்றேமென்று இவறுதலை யறியாதார், (எ - று).**

பெற்றவழி இவறுமை நோக்கி *அற்றவழியும் §அப்பகுதி விடா தாகலின், அல்லற்பாடில்லை யாயிற்று. இதனாற் ‡பொருளின்மை யான் ஆயதற்கு அழியாமையும் ¶அதற்குபாயமுங் கூறப்பட்டன.

தெளி:—(இ - ள்.) பெற்றேமென்று - (செல்வக்காலத்து இது) பெற்றேமென்று, ஓம்புதல் - உலோபஞ் செய்தலை, தேற்றாதவர் - அறியாதவர், அற்றேமென்று - (வறுமைக்காலத்து யாம்) வறியே மாயினோ மென்று, அல்லற்படுபவோ - (மனத்தால்) துன்பத்தை யனுபவிப்பரோ, (எ - று).

செல்வத்தைப் பெற்றவிடத்து உலோபஞ் செய்யாமையை நோக்கி அஃது அற்றவிடத்தும் அம்மந்திரி முதலாயினோர் விட்டு

---

* அற்றவழியும் - செல்வம் ஒழிந்தபோதும்.

§ அப்பகுதி யென்றது அமைச்சர், புரோகிதர், சுற்றத்தார், சிநேகிதர் முதலாயினோரை.

‡ பொருள் பெற்றபோது அரசன் உலோபஞ் செய்யாது மந்திரி முதலாயினோர்க்கு அப்பொருளைத் தக்கவாறு கொடுத்து வந்தானானால் அவனை மந்திரி முதலாயினோர் விட்டுப் பிரியார்; விட்டுப் பிரியா ராகவே, அவ்வரசன் பொருளில்லாத காலத்துண்டாய துன்பத்திற்கு மனங்கலங்குதல் வேண்டாமென்பது.

¶ அதற்கு (அழியாமைக்கு - மனங்கலங்காமைக்கு) உபாயமும் பொருள் பெற்றபோது மந்திரி முதலாயினோர்க்கு உலோபஞ் செய்யாது அப்பொருளைத் தக்கவாறு கொடுத்த லென்பதும்).

நீங்காமையால், அல்லற்படுத லில்லையாயிற்று. இதனால் பொரு 'ளில்லாமையால் வந்த துன்பத்திற்கு அழியாமையும், அவ்வழி யாமைக்கு உபாயமும் சொல்லப்பட்டன.

(க - து.) செல்வமுள்ளபோது உலோபஞ் செய்யாத அரசர் வறுமை நேர்ந்தபோது யாம் வறியமாயினேமென்று மனம் வருந்தார் என்பது.

6. Will those men ever cry out in sorrow, "we are destitute" who, in their prosperity, give not way to undue desire to keep heir wealth, saying "we are rich".

---

**எ. *இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்**
**கையாறுக் கொள்ளாதா மேல்.**

**பரி :—(இ - ள்.) †நாற்கதியினும் உள்ள உடம்புகள் இடும்பை யென்னும் வாளுக்கு இலக்கென்று தெளிந்து. தம்மேல் வந்த இடும்பையை இடும்பையாகக் கொள்ளார் அறிவுடையார், (எ - று).**

ஏகதேசவுருவகம். உடம்பு - சாதியொருமைப் பெயர். கலக்க மென்னும் காரியப்பெயர் காரணத்தின்மேனின்றது. கையாறென்பது ஒரு சொல். ‡ இதற்கு ஒழுக்கநெறியென் றுரைப்பாருமுளர். £இயல்பாகக் கொள்வரென்பது குறிப்பெச்சம்.

தெளி: — (இ - ள்.) மேல் - அறிவுடையார், உடம்பு - (நால் வகைப் பிறப்பிலுமுள்ள) உடம்புகள், இடும்பைக்கு - துன்பமென்னும் வாளுக்கு, இலக்கமென்று-இலக்காமென்று, (தெளிந்து), கலக்கத்தை- (தம்மேல் வந்த) துன்பத்தை, கையாறு - துன்பமாக, கொள்ளாதாம் கொள்ளார், (எ - று).

உடம்பை இலக்கமென்றுருவகப்படுத்தினவர் அதற்கியைய இடும்பையை வாள் என்றுருவகப்படுத்தாமையின், இக்குறள் ஏகதேச வுருவகவணியாம். உடம்பு ஈறு தோன்றாத சாதியொருமைப்பெயர். கலக்கமென்னும் காரியப்பெயர் அதற்குக் காரணமாய துனபத்தின் மேல் நின்றது. கையாறு என்பது (துன்பமென்னும் பொருள் தரும்) ஒருசொல். இயல்பாகக் கொள்வரென்பது குறிப்பெச்சம். இலக்கு - குறி.

---

* "இடும்பைக் கிடும்பை யியலுடம்பி தன்றே" என்பது நல்வழி.

† நாற்கதி - நால்வகைப்பிறப்பு அவை : மக்கள், தேவர், நரகர் விலங்கு என்னும் நால்வகைப் பிறப்பாம்.

‡ கையாறென்பதனை யொருமொழியாகக் கொள்ளாது தொடர் மொழியாகக்கொண்டு அதற்கு ஒழுக்கவழி என்று பொருள் கூறுவாரு முண்டு.

£ அறிவுடையார் இடும்பையை இயல்பாகக் கொள்வரென்பது குறிப்பாகவுணருமாறெஞ்சி நின்றது. இவ்வாறெஞ்சி (குறைந்து) நிற்பது குறிப்பெச்சமாம்.

*(க - து.) அறிவுடையவர் துன்பத்திற்குறைவிடம் உடம்பென்று தெளிந்திருத்தலால், தம்மிடத்து வரும் துன்பத்தைத் துன்பமாகக் கொள்ளார் என்பது.*

7. The great will not regard trouble as trouble, knowing that the body is the butt of trouble.

---

**அ. இன்பம் விழையா னிடும்பை யியல்பென்பான்
றுன்ப முறுத லிலன்.**

பரி :—(இ - ள்.) தன்னுடம்பிற்கு இன்பமாயவற்றை விரும்பாதே வினையால் இடும்பை எய்துதல் இயல்பென்று தெளிந்திருப்பான், தன் முயற்சியாற் றுன்பமுறான், (எ-று).

*இன்பத்தை விழையினும், இடும்பையை *யியல்பென்னாது †காக்கக்கருதினும், துன்பம ‡விளைதலின், ¶இவ்விரண்டுஞ் செய்யாதானைத் 'துன்பமுறுதலிலன்' என்றார்.*

*தெளி :— (இ - ள்.) இன்பம் - (தன்னுடம்பிற்கு) இன்பமாயவற்றை, விழையான் - விரும்பாமலே, இடும்பை - (தொழில் செய்தலால்) துன்பம் (அடைதல்), இயல்பென்பான் - இயல்பென்று தெளிந்திருப்பவன், துன்பமுறுதலின் - (தன் முயற்சியால்) துன்பமடையான், (எ - று).*

*இன்பத்தை விரும்பினும், துன்பமடைதலை இயல்பென்னாது காக்கக்கருதினும், துன்பம் விளைதலால், இவ்விரண்டும் செய்யாதவனைத் 'துன்ப முறுதலிலன்' என்றார்.*

*(க - து ) இன்பத்தை விரும்பாது துன்பமடைதல் சுபாவமென்று தெளிந்திருப்பவன் அதனை யடையான் என்பது.*

8. That man never experiences sorrow, who does not seek for pleasure, and who considers trouble to be natural to man.

---

**கூ. இன்பத்து ளின்பம் விழையாதான் றுன்பத்துட்
டுன்ப முறுத லிலன்.**

பரி :— (இ - ள்.) £வினையாற் றனக்கின்பம் வந்துழி அதனை யனுபவியா நின்றே மனத்தான் விரும்பாதான், துன்பம் வந்துழியும் அதனை யனுபவியா நின்றே மனத்தான் வருந்தான், (எ-று)

---

** இயல்பு - சுபாவம். † காக்கக்கருதினும் - தடுக்க நினைத்தாலும்.*

*‡ விளைதலின் - உண்டாதலின்.*

*¶ இவ்விரண்டும் - இன்பமாயவற்றை விரும்புதலும் துன்பமடைதல் இயல்பென்றெண்ணாது அதனைத்தடுக்க நினைத்தலும்.*

*£ வினையால் - தொழிலைச் செய்தலால்.*

துன்பம் - முயற்சியான் வரும் *இடுக்கண். †இரண்டையும் ‡ஒரு தன்மையாகக்கோடலின், ¶பயன்களு மிலவாயின.

தெளி :—(இ - ள்.) இன்பத்துள் - (வினையால் தனக்கு) இன்பம் வந்தவிடத்து, இன்பம் - அவ்வின்பத்தை, விழையாதான் - (அனுபவித்துக்கொண்டே மனத்தால்) விரும்பாதவன், துன்பத்துள் - துன்பம் வந்தவிடத்தும், துன்பம் - அத்துன்பத்தை, உறுதலிலன் - (அனுபவித்துக் கொண்டே மனத்தால்) வருந்தான், (எ - று).

துன்பம் - முயற்சியால் வரும் இடுக்கண். இரண்டையும் ஒரு தன்மையாகக் கொள்ளுதலால், பயன்களும் இலவாயின.

(க - து.) இன்பத்தை விரும்பாதவன் துன்பத்தை யடையான் என்பது.

9. He does not suffer sorrow in sorrow, who does not look for pleasure in pleasure.

---

**கo. இன்னாமை யின்ப மெனக்கொளி னாகுந்தன்**
**னொன்னார் விழையுஞ் சிறப்பு.**

பரி :—(இ - ள்.) ஒருவன் வினை செய்யுமிடத்து முயற்சியான் வருந் துன்பந் தன்னையே தனக்கின்பமாகக் கற்பித்துக்கொள்வனாயின், £அதனாற் றன் பகைவர் நன்கு மதித்தற் கேதுவாய உயர்ச்சியுண்டாம், (எ - று).

துன்பந்தானும் உயிர்க்கியல்பன்றிக் $கணிகமாய் மனத்திடை §நிகழ்வதோர் கோட்பாடாகலின், @அதனை மாறுபடக்கொள்ளவே 0அதற்கழிவின்றி மன மகிழ்ச்சியுடையனாய் ||அதனாற் றொடங்கிய வினை முடித்தேவிடுமாற்றலுடையனா மென்பது கருத்து. இவை நான்கு பாட்டானும் மெய்வருத்தத்தா னாயதற்கு அழியாமையும்,

---

* இடுக்கண்-துன்பம். † இரண்டையும்-இன்பத்தையும் துன்பத்தையும். ‡ ஒரு தன்மையாக - சமமாக.

¶ பயன்களும் - இன்பத்தை யனுபவித்தலும் துன்பத்தை யனுபவித்தலும்.

£ அதனால் - கற்பித்துக்கொள்ளுவதால்.

$ எப்பதார்த்தத்திற்குத் தனதுற்பத்திக் கணத்தின் பிற் கணத்திற் சம்பந்தம் சம்பவிப்பதன்றோ, ஆனால், உற்பத்திக் கண மாத்திரத்திலேயே சம்பந்தம் சம்பவிக்கின்றதோ அப்பதார்த்தம் கணிகமாமென்று நியாய நூல் கூறுகின்றது.

§ நிகழ்வதோர் கோட்பாடு - உண்டாவதோரபிப்பிராயம்.

@ அதனை மாறுபட - அத்துன்பத்தை யின்பமாக.

0 அதற்கு - அத்துன்பத்திற்கு || அதனால்-அம்மன மகிழ்ச்சியால்.

†† அதற் குபாயமுங் கூறப்பட்டன.

தெளி :—(இ-ள்.) (ஒருவன் தொழில் செய்யுமிடத்து) இன்னாமை-(முயற்சியால் வருந்) துன்பத்தையே, இன்பமெனக்கொளின் - (தனக்கு) இன்பமாக நினைத்துக் கொள்ளுவானாயின், (அதனால்), தன்னொன்னார் - தன் பகைவர், விழையும் - நன்கு மதித்தற்கு ஏதுவாகிய, சிறப்பு - உயர்ச்சி, ஆகும் - உண்டாகும், (எ-று).

துன்பந்தானும் உயிர்க்கு இயல்பாகவன்றிக் கணப்பொழுது நிற்பதாய் மனத்தினிடத்து உண்டாவதொரு கோட்பாடாகலின், அதனை மாறுபடக்கொள்ளவே, அதற்கு அழியாமல் மனமகிழ்ச்சி யுடையவனாய் அதனால் தொடங்கிய தொழிலை முடித்தேவிடும் வல்லமை யுடையவனாவ னென்பது கருத்து இவை நான்கு பாட்டாலும் மெய்வருத்தத்தாலாகிய துன்பத்திற்கு அழியாமையும், அதற்கு உபாயமும் சொல்லப்பட்டன.

(க - து.) தொழில்செய்யும்போதுண்டாகுந் துன்பத்தை யின்பமாகக் கொள்ளுமரசன் தன்பகைவரால் நன்கு மதிக்கப் படுவான்.

10. The elevation, which even his enemies esteem, will be gained by him, who regards trouble as pleasure.

## அரசியல் முற்றிற்று

---

†† அதற்கு - அழியாமை (மனங்கலங்காமை)க்கு.

# 2. அங்கவியல்

## On the Constituents of Royalty

பரி:—இனி *முறையானே அரசியல் நடாத்துதற்கண் †ஒன்றற் கொன்று துணையாய அங்கங்கள் ஆறனதியல்பு முப்பத்திரண்டதிகாரத்தாற் கூறுவானெடுத்துக்கொண்டு, அவையாறனுள்ளும் ‡காவற்சாகாடு-கைத்தற்கண் அவ்வரசற் கிணையாய அமைச்சன தியல்பு பத்ததிகாரத்தாற் கூறுவான் றொடங்கி, முதற்கண் அமைச்சுக் கூறுகின்றார்.

தெளி:—இனி முறையானே அரசியலை நடத்துதலில் ஒன்றற் கொன்று துணையாகிய (அமைச்சு, நாடு, அரண், பொருள், படை, நட்பு என்னும்) அங்கங்கள் ஆறனது இயல்பை முப்பத்திரண்டதி காரத்தாற் சொல்லவெடுத்துக்கொண்டு, அவ்வங்கங்கள் ஆறனுள்ளும் ஆஞ்ஞாசக்கரத்தைச் செலுத்துதலில் அவ்வரசனுக்குச் சமானமாகிய அமைச்சனது இயல்பைப் பத்ததிகாரத்தாற் சொல்லத்தொடங்கி, முதலில் அமைச்சுச் சொல்லுகின்றார்.

---

* அரசியலிற்குப்பின் அங்கவியல்வைத்த முறையாலே.

† அரசன் தன்னையும் தன் குடிகளையும் பாதுகாத் தொழுகுவதற்கு அமைச்சு முதலிய அங்கங்கள் ஒன்றற்கொன்று துணையாயிருக்கின்றன வென்பதாம். இவ்வாறனுள், யாதாவதொன்று குறையின் மற்றையன பயன்படுவனவாகாவென்பதுணர்த்துதற்கு 'ஒன்றற்கொன்று துணை யாய அங்கங்கள்' என்று கூறப்பட்டது.

‡ "கால்பார் கோத்து ஞாலத் தியக்குங், காவற் சாகாடுகைப் போன்மாணி, னூறின் றுகி யாறினிது படுமே, யுய்த்த றேற்றா னாயின் வைகலும், பகைக்கூ ழள்ளற் பட்டு, மிகப்பஃ றீநோய் தலைத்தலைத் தருமே."

(இதன் பொருள். உருளையையும் பாரையுங்கோத்து உலகின் கண்ணே செலுத்தும் காப்புடைய சகடந்தான் அதனைச் செலுத்து வோன் மாட்சிமைப் படின் ஊறுபாடில்லையாய் வழியை இனிதாகச் செல்லும், அவன் அதனை இனிதாகச் செலுத்துதலைத் தெளியமாட்டா னாயின், அது நாடோறும் பகையாகிய செறிந்த சேற்றிலே யழுந்தி மிகப்பல தீய துன்பத்தை மேன்மேலு முண்டாக்கும் என்பது) என்று புறநானூறு கூறுகின்றது.

# முதல் அதிகாரம்

## அமைச்சு :—The Minister

பரி:—அஃதாவது *அமைச்சனது தன்மை: என்றது †அவன்றன் குணங்களையுஞ் செயல்களையும்.

தெளி:—அஃதாவது அமைச்சனது தன்மை; அத் தன்மை யென்றது அவனது குணங்களையும் செயல்களையும்.

631 க. **கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யு**
**மருவினையு மாண்ட தமைச்சு.**

பரி:—(இ - ள்.) வினை செய்யுங்கால் ‡அதற்கு வேண்டுங் கருவிகளும், §அதற்கேற்ற காலமும், ‖அது செய்யுமாறும், அவ்வாற்றிற் செய்யப்படும் அவ்வரிய வினைதானும் வாய்ப்ப எண்ணவல்லவனே அமைச்சனுவான், (எ-று).

கருவிகள் - தானையும் பொருளும். காலம் - அது தொடங்குங் காலம். செய்கை எனவே, ¶அது தொடங்கு முபாயமும், $இடையூறு நீக்கி முடிவு போக்குமாறும் அடங்கின. சிறிய முயற்சியாற் பெரிய பயன் றருவதென்பார் 'அருவினை' என்றார். இவை ()யைந்தனையும் வடநூலார் ⊙மந்திரத்திற் கங்கமென்ப.

தெளி.—(இ - ள்.) (தொழில் செய்யும்போது) கருவியும் - (அதற்கு வேண்டுஞ்) சாதனங்களும், காலமும் - (அதற்கு ஏற்ற) காலமும், செய்கையும் - (அது) செய்யும் விதமும், செய்யு மருவினையும் - (அவ்விதத்தாற்) செய்யப்படும் அவ்வரிய தொழிலும், மாண்டது - பொருந்த எண்ணவல்லவனே, அமைச்சு - மந்திரியாவான், (எ - று).

சாதனங்கள் - சேனையும் பொருளும். காலம் - அத் தொழிலைத் தொடங்குங்காலம். செய்கை எனவே, அதனைத் தொடங்கு முபாயமும், இடையூறு நீக்கிமுடிக்கும் விதமும் அடங்கின. சிறிய

---

* அமைச்சனது தன்மை - மந்திரியினது இயல்பு.

† அவன்றன் – அம் மந்திரியினது.

‡ அதற்கு – வினை செய்வதற்கு.

§ அதற்கு – வினை செய்வதற்கு.

‖ அது – வினை.

¶ அது – வினை.

$ இடையூறு – தடை.

() ஐந்தனையும் என்றது கருவி, காலம், செய்கை, செய்யு மருவினைகளை, கருவி சேனையும் பொருளுமாயிருத்தலால் ஐந்தாமாறு காண்க.

⊙ மந்திரத்திற்கு கங்கமென்ப – ஆலோசனைக்கு உறுப்பு என்பர்.

அரசர்க்கங்கம் அமைச்சு முதலியவாரும்; மந்திரிக்கங்கம் தானை, பொருள், காலமுதலிய ஐந்தாம்.

*முயற்சியால் பெரிய பயன் தருவது என்பார் 'அருவினை' என்றார். இவ்வைந்தையும் வடநூலார் மந்திரத்துக்கு அங்கமென்பர்.*

(க-து.) *கருவி முதலியவற்றைப் பொருந்துமாறு எண்ண வல்லவனே மந்திரியாவன் என்பது.*

1. The minister is one who can make an excellent choice of means, time, manner of execution, and the difficult under-taking.

---

**உ. வன்கண் குடிகாத்தல் கற்றறித லாள்வினையோ
டைந்துடன் மாண்ட தமைச்சு.**

பரி:—(இ-ள்.) வினை செய்தற்கண் *அசைவின்மையும், குடிகளைக் காத்தலும், நீதி நூல்களைக்கற்றுச் †செய்வன தவிர்வன வறிதலும், முயற்சியும் மேற்சொல்லிய ‡அவ்வங்கங்க ளைந்துடனே திருந்தவுடையானே அமைச்சனாவான், (எ-று).

*¶எண்ணொடு நீண்டது. அவ்வைந்தெனச் சுட்டு வருவிக்க. இந்நான்கனையும் மேற்கூறியவற்றோடு தொகுத்துக் கூறியது, அவையு மிவற்றோடு கூடியே மாட்சிமைப்பட வேண்டுதலானும், அவற்றிற்கு ஐந்தென்னுந்தொகை பெறுதற்கும். ||இனி இதனை ஈண்டெண்ணியவற்றிற்கே தொகையாக்கிக் குடிகாத்தலென்பதனைக் குடிப்பிறப்பும் அதனை யொழுக்கத்தாற் காத்தலுமெனப் பகுப்பாரும், கற்றறிதலென்பதனைக் கற்றலும் அறிதலுமெனப் பகுப்பாருமுளர்.*

---

* அசைவின்மை-சோம்புதலில்லாமை.

† செய்வன-செய்யத்தக்கவை; தவிர்வன-செய்யத்தகாதவை.

‡ அவ்வங்கங்களைந்து – சேனை, பொருள், காலம், செய்கை, செய்யும்வினை யென்பனவாம்.

¶ ஒடு என்பதனை மற்றவற்றோடுங்கூட்டி வன்கணொடு குடிகாத்தலொடு கற்றறிதலொடு என்று கொள்க. "என்று மெனவு மொடுவுந் தோன்றி, யொன்றுவழி யுடைய வெண்ணினுட் பிரிந்தே" என்னுந் தொல்காப்பியம் சொல்லதிகாரம் இடையியற் சூத்திரம் இங்குக் கவனிக்கத்தக்கதாம்.

|| இனி ஐந்து என்றதனை இங்கு வன்கண் குடிகாத்தல் என்றெண்ணியவற்றிற்கே தொகையாக்கிக் குடிகாத்தல் என்பதனைக் குடிப்பிறப்பும் அக்குடிப்பிறப்பை யொழுக்கத்தாற் காத்தலும் என்று பிரிப்பாரும், கற்றறிதலென்பதனைக் கற்றலும் அறிதலும் என்று பிரிப்பாருமுண்டு. அவர் உடன் என்பதனை ஐந்தும் என்று முற்றும்மை பொருளாக்கியும், குடியென்பதனைக் குடிப்பிறப்பென்று இட வாகுபெயராக்கியும் வலிந்து பொருள்கொண்டு துன்பப்படுவர்.

அவர் உடனென்பதனை முற்றும்மைப் பொருட்டாக்கியும், குடியென் பதனை ஆகுபெயராக்கியும் *இடர்ப்படுப.

தெளி :—(இ-ள்.) வன்கண் - (தொழில்செய்தலில்) அசைவில்லாமையும், குடிகாத்தல்-குடிகளைக்காத்தலும், கற்றறிதல்-(நீதிநூல்களைக்) கற்று (செய்வனவற்றையும் தவிர்வனவற்றையும்) அறிதலும், ஆள்வினை - முயற்சியும், ஐந்துடன் - (முற்கூறிய) அவ்வங்கங்களைந்துடனே, மாண்டது - திருந்தவுடையவனே, அமைச்சு - மந்திரியாவான், (எ - று).

எண்ணுப்பொருளில்வந்த ஒடு என்பது ஓடு என நீண்டுநின்றது. அகரச்சுட்டை வருவித்து அவ்வைந்து எனக்கொள்க. வன்கண், குடிகாத்தல், கற்றறிதல், ஆள்வினை யென்னும் இந்நான்கனையும் மேல் 'கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யு, மருவினையும்' என்று சொல்லியவற்றுடன் தொகுத்துச்சொல்லியது, கருவி முதலிய அவையும் வன்கண் முதலிய இவற்றுடன் கூடியே பெருமைப்பட வேண்டுதலாலும், 'கருவியுங் காலமுஞ் செய்கையும் செய்யு, மருவினையும்' என்றவற்றிற்கு ஐந்து என்னும் தொகை பெறுதற்கு மாமென்க.

(க - து.) வினைசெய்தற்கண் அசைவில்லாமை, குடிகளைப் பாதுகாத்தல் முதலியவற்றைத் திருத்தமாகவுடையவனே மந்திரியாவான் என்பது.

2. The minister is one who in addition to the aforesaid five things excels in the possession of firmness, protection of subjects, discrimination by learning and perseverance.

---

ரு. **பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்**
**பொருத்தலும் வல்ல தமைச்சு.**

---

* உடனிகழ்ச்சிப் பொருளதாகிய மூன்றனுருபை முற்றும்மைப் பொருளாக்கியும் குடியென்பதனை இயற்பெயராகக் கொள்ளாது ஆகுபெயராகக் கொண்டும் வருந்திப் பொருள்கொண்டமைபற்றி 'இடர்ப்படுப' என்று கூறப்பட்டது. பரிமேலழகர் மறுத்த இரண்டுரைகாரருள் முதலுரைகாரர் குடிகாத்தலென்பதனை உம்மைத் தொகையாக்கிக் குடியை யாகுபெயராக்கியும், இரண்டாமுரைகாரர் கற்றறிதலென்பதனை யும்மைத் தொகையாக்கியும், அவ்விருவரும் உடன் என்பதை முற்றும்மைப் பொருளாக்கியும் கொண்டார் என்க. ''பிறப்பே குடிமை'' என்னும் தொல்காப்பியம் மெய்ப்பாட்டியல் சூத்திரத்தின் விசேடவுரையில் ''வன்கண குடிகாத்தல் கற்றறித லாள்வினையோ, டைந்துடன் மாண்ட தமைச்சு' என்புழிக் கற்றறிதலென்பதனை இரண்டாக்கி ஐந்தென்பவாகலின்'' என்று நச்சினார்க்கினியர் கூறியிருத்தலினால், அவர்க்குக்கற்றறிதல் என்பதனை யும்மைத் தொகையாகக் கொள்ளுதல் உடன்பாடாமென்க.

பரி:—(இ-ள்.) வினை வந்துழிப் பகைவர்க்குத் துணையாயினாரை அவரிற் பிரிக்க வேண்டிற் பிரித்தலும், ()தம்பாலாரை அவர் பிரியாமற் *கொடை யின்சொற்களாற் பேணிக்கொள்ளுதலும், முன்னே தம்மினுந் தம்பாலாரினும் பிரிந்தாரை மீண்டுப் பொருத்தவேண்டிற் பொருத்தலும் வல்லவனே அமைச்சனாவான், (எ - று).

†இவற்றுள் ‡அப்பொழுதை நிலைக்கேற்ற செயலறிதலும், அதனை ¶அவரறியாமல் ஏற்றவுபாயத்தாற் £கடைப்பிடித்தலும் அரியவாத னோக்கி 'வல்லது' என்றார். வடநூலார் இவற்றுட் பொருத்தலைச் சந்தியென்றும், பிரித்தலை விக்கிரக மென்றுங் கூறுப.

தெளி:—(இ - ள்.) (போர்த்தொழில்வந்த விடத்து) பிரித்தலும்- (பகைவர்க்குத் துணையாயிருப்பவரை அப்பகைவரினின்றும் பிரிக்க வேண்டினால்) பிரித்தலும். பேணிக்கொளலும் - (தம்மிடத்திருப்ப வரை அவர் பிரியாமற் கொடையினாலும் இன் சொல்லினாலும்) காத்துக்கொள்ளுதலும், பிரிந்தார் - (தம்மினின்றும் தம்மவரி னின்றும்) பிரிந்தவரை. பொருத்தலும் - (மறுபடியும் பொருத்த வேண்டினால்) பொருத்துதலும், வல்லது - வல்லவனே, அமைச்சு - மந்திரியாவான், (எ - று).

இவற்றுள் அப்பொழுது நிலைக்கு ஏற்ற செயலையறிதலும், அச் செயலை அவரறியாமல் அதற்கு ஏற்ற உபாயத்தால் முடிவுறப் பிடித்தலும் அருமையாதல் நோக்கி 'வல்லது' என்றார். வடநூலார் இவற்றுள் பொருத்தலைச் சந்தி யென்றும், பிரித்தலை விக்கிரக மென்றும் கூறுவர்.

(க - து.) பிரித்தல், பேணிக் கொள்ளுதல், பிரிந்தாரைப் பொருந்தச்செய்தல்களில் வல்லவனே மந்திரியாவான் என்பது.

3. The minister is one who can effect discord among enemies, maintain the good will of his friends and restore to friendship those who have seceded from him.

---

ச. தெரிதலுந் தேர்ந்து செயலு மொருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு.

---

() தம்பாலார் - தம்மிடத்துப் பழகியிருப்பவர்.

* கொடை - விரும்பிய பொருளைக் கொடுத்தல்.

† இவற்றுள் - பிரித்தல், பேணிக்கொளல், பிரிந்தார்ப்பொருத்த லென்னு மிவற்றுள்.

‡ அப்பொழுதை நிலைக்கு - அந்தச் சமயத்தின் நிலைக்கு

¶ அவர் என்றது பகைவர்க்குத் துணையாயினார், தம்பாலார் (தம்மைச் சேர்ந்தவர்), முன்னே தம்மினும் தம்பாலாரினும் பிரிந்தவர் என்னும் மூவரையும்.

£ கடைப்பிடித்தல் - உறுதியாகக் கொள்ளுதல்.

பரி:—(இ - ள்.) ஒரு காரியச் செய்கை பலவாற்ருற் ருேன்றின் அவற்றுள் *ஆவதாராய்ந்தறிதலும், †அது செய்யுங்கால் §வாய்க்குந் திறனுடிச் செய்தலும், சிலரைப் பிரித்தல் ‡பொருத்தல் செயற்கண் £அவர்க்கு இதுவே செயற்பாலதென்று ¶துணிவு பிறக்கும்வகை சொல்லுதலும் வல்லவனே அமைச்சனுவான், (எ - று).

*தெரிதல் ()செயன்மேலதாயிற்று; @வருகின்றது அதுவாகலின்.*

தெளி:—(இ - ள்.) *(ஒரு காரியத்தைச் செய்தல் பலவிதமாகத் தோன்றினுல்) தெரிதலும் - (அப்பலவற்றுள் ஆவதை) ஆராய்ந்தறிதலும், தேர்ந்து செயலும் - (அது செய்யும்போதுடலிக்கும் விதத்தை) ஆராய்ந்து செய்தலும், (சிலரைப்பிரித்தல் பொருத்தல் செய்தலில்), ஒருதலையாச் சொல்லலும் - (அவர்க்கு இதுவே செய்யத்தக்கதென்று) துணிவு பிறக்கும்வகை சொல்லுதலும், வல்லது - வல்லவனே, அமைச்சு - மந்திரியாவான்,* (எ - று).

*தெரிதல் செயலின்மேல தாயிற்று; வருகின்றது அதுவாகலின்.*

(க - து.) *செய்யவேண்டிய காரியத்தை ஆராய்ந்தறிதலிலும், ஆராய்ந்து செய்தலிலும், சந்தி விக்கிரகங்களில் துணிவுண்டாமாறு சொல்லவேண்டியவர்க்குச் சொல்லுதலிலும் வல்லவனே மந்திரியாவான் என்பது.*

4. The minister is one who is able to comprehend the whole nature of an undertaking, execute it in the best manner possible, and offer assuring advice in time of necessity.

---

ரு. °°அறனறிந் தான்றமைந்த சொல்லானெஞ் ஞான்றுந்
திறனறிந்தான் றேர்ச்சித் துணை.

பரி:— (இ - ள்) அரசனுற் செய்யப்படும் அறங்களையறிந்து தனக் கேற்ற கல்வியா னிறைந்தமைந்த சொல்லை யுடையனு யெக்காலத்தும் வினை செய்யுந் திறங்களை யறிந்தான் அவற்குச் சூழ்ச்சித் துணையாம், (எ — று).

---

* *ஆவது - செய்யத்தக்கது.*

† *அது - காரியம்.* § *வாய்க்குந்திறன் - கைகூடுந்திறத்தை.*

‡ *பொருத்தல் - கூட்டல்.*

£ *அவர்க்கு - அச்சிலர்க்கு.* ¶ *துணிவு - நம்பிக்கை.*

() *செயன்மேலதாயிற்று - காரியத்தைச் செய்தலின் மேலதாயிற்று.*

@ *வருகின்றது அதுவாகலின் - அமைச்சனுக்கு ஆராய்ந்தறிய நேர்வது காரியத்தைச் செய்வதாதலால்*

°° *"மன்னவர் மனத்தையுங் காலதேசத்தையும் வாழ்குடி படைத்திறமையும், மந்திராலோசனையு மெல்லா மறிந்தவன் வளமான மதிமந்திரி" என்பது அறப்பளீச்சுரசதகம்.*

தன்னரசன் *சுருங்கிய காலத்தும் †பெருகிய காலத்தும் ‡இடை நிகராய காலத்துமென்பார் 'எஞ்ஞான்றும்' என்றார். ¶சொல்லா னென்பதனை ஒடு உருபின் பொருட்டாய ஆனுருபாக்கி யுரைப்பாருமுளர். இவையைந்து பாட்டானும் அமைச்சரது குணத்தன்மை கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்) அறன் - (அரசனால் செய்யப்படும்) அறங்களை, அறிந்து - தெரிந்து, ஆன்றமைந்த - (தனக்கு ஏற்ற கல்வியால்) நிறைந்தமைந்த, சொல்லான் - சொல்லையுடையவனாய், எஞ்ஞான்றும் - எக்காலத்திலும், திறன் - (தொழில் செய்யுந்) திறங்களை, அறிந்தான் - அறிந்தவன், தேர்ச்சி-ஆலோசனை கூறுதற்கு, துணை - (அவ்வரசனுக்குத்) துணையாவான், (எ - று).

தன்னரசன் சுருங்கிய காலத்திலும் பெருகிய காலத்திலும் நடுத்தரமான காலத்திலும் என்பார் 'எஞ்ஞான்றும்' என்றார். இவையைந்து பாட்டாலும் மந்திரிகளது குணத்தன்மை சொல்லப் பட்டது.

(க - து.) தன்னரசன் செய்யும் அறங்களையறிந்து, கல்வியறிவால் நிறைந்த சொல்லை யுடையவனாய், எப்போதும் தொழில்செய்யும் வகையை யறிந்த மந்திரியே அரசனுக்கு ஆலோசனை கூறுதற் குரியவனாவன் என்பது.

5. That minister is the best helper of the king who understanding the duties of the latter is by his special learning, able to give the fullest advice, and at all times conversant with the best method of performing actions.

---

சா. மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம்
()யாவுள முன்னிற் பவை.

பரி:—(இ - ள்.) இயற்கையாகிய நுண்ணறிவைச் செயற்கையாகிய நூலறிவோடுடையராய அமைச்சர்க்கு மிக்க நுட்பத்தையுடைய சூழ்ச்சி களாய் முன்னிற்பன யாவையுள? (எ - று).

---

* சுருங்கியகாலத்தும் - பொருள் படை முதலியவற்றால் குறைவு பட்ட காலத்திலும்.

† பெருகியகாலத்தும் - பொருள் படை முதலியவற்றால் விருத்தி யடைந்தகாலத்திலும்.

‡ இடைநிகராய-பொருள் படை முதலியவற்றால் நடுத்தரமான.

¶ சொல்லான் என்பதனை எச்சப்பொருளில் வந்த முற்றுகக் கொள்ளாது (சொல்லான் என்னும் வினைமுற்றின் விகுதியான) ஆன் என்பதனை ஒடு உருபின்பொருளதான ஆன் உருபாக்கிச் சொல்லொடு என்று பொருள் கூறுவாருமுண்டென்பது. ஆன் உருபு ஒடு உருபின் பொருளில் வருதலை "அறத்தான் வருவதே யின்பம்" என்னுங் குறளுரையிற் காண்க.

() யா என்னும் வினா இங்கு இல்லையென்னும் பொருளில் வந்தது.

*மதி நுட்பமென்பது பின்மொழிநிலையல். அது தெய்வந்தர வேண்டுதலின் முற்கூறப்பட்டது. நூலென்பதூஉம் அதிநுட்ப மென்பதூஉம் ஆகுபெயர். ‡அதி யென்பது வடசொல்லுள் மிகுதிப் பொருளதோ ரிடைச்சொல்; ¶அது திரிந்து நுட்பமென்பதனோடு தொக்கது. முன்னிற்றல் - மாற்றார் சூழ்ச்சியாயின தஞ்சூழ்ச்சியால் அழியாது நிற்றல். †இனி அதினுட்பமென்று பாடமோதி, அதனினுட்பம் யாவென்றுரைப்பாருமுளர்; அவர் சூழ்ச்சிக்கினமாய் முன்சுட்டப்படுவதொன்றில்லாமையும், ()சுட்டுப்பெயர் ஐந்தா

---

* நுட்பமதியெனற் பாலது செய்யுள் நோக்கி மதிநுட்பமெனப் பின் முன்னாகப் புணர்ந்து நின்றது. நுட்பமதி யென்பதன்கண் மதியென்னும் பின்மொழியிற் பொருள்சிறந்திருத்தலால் மதி நுட்ப மென்பது பின்மொழி நிலையலாயிற்று பின்மொழி நிலையல் - பின் மொழிக்கண் பொருள் சிறந்து நிற்றல். "அவைதாம், முன்மொழி நிலையலும்" என்னுந் தொல்காப்பியச் சூத்திரவுரையில் நச்சினார்க்கினியர் "பெண்ணணங்கு என்பது அணங்குபோலும் பெண்ணென்பதாகலிற் பின்மொழி நிலையலாம்" என்று கூறுவதும், சேனாவரையர் "அடைகடல் என்புழி அடைஎன்னும்பின்மொழிக்கட் பொருணின்றது. இடவகையாற் பின்மொழியாயிற்று. முன் பின் என்பன கால வகையாற்றடுமாறி நிற்கும்" என்று கூறுவதும் இங்கறியத் தக்கனவாம்.

‡ பிரயோகவிவேகநூலார் "வினைப்பெயரோடவ்" என்னுஞ் செய்யுளினுரையில் "அதிநுட்பமென்பது வினைப்பெயரோடும் வினைச் சொல்லோடும் வராமையின், அவ்வியயீபாவமென்க" என்றனர். இலக்கணக் கொத்து நூலார் "பண்புத்தொகைவிதி" என்னும் சூத்திர வுரையில் அதிநுட்பமென்பதனை முற்பதம் வடமொழி என்பதற்குதாரணமாக வரைந்திருக்கின்றனர்.

¶ "வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ, யெழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே" என்று தொல்காப்பியம் கூறுதலால் "அது (அதியென்பது) திரிந்து நுட்பமென்பதனோடு தொக்கது" என்று கூறியது நன்கு விளங்கும். [ஸம்ஸ்கிருத பாஷையிலிருந்து பகுதி விசேஷ விகாரப்படாது விகுதிமுதலிய விகாரங்களைப் பெற்று வழங்கப்படும் பதம் தற்சமம்என்றும், பகுதியிலும் எழுத்துக்கள் தோன்றல் திரிதல் முதலிய விகாரங்களைப்பெற்று வழங்கப்படும் பதம் தற்பவமென்றும் அறிக].

† இனி அதி நுட்பமென்பதனை அதினுட்பமென்று பாடங்கூறி, அதற்கு அதனின் நுட்பம் எவையென்று பொருள்கூறுவாருமுண்டு; அவ்வாறு கூறுபவர் ஆலோசனைக்கு இனமாய் முன்னே சுட்டப்படுவ தொன்றில்லாமையையும், அது இது முதலிய சுட்டுப் பெயர்கள் இன் என்னும் ஐந்தாம் வேற்றுமை யுருபை ஏற்றவிடத்து அன்சாரியைபெற்று அதனின் இதனின் என்று நிற்பதன்றி அதின் இதின் என்று நில்லாமையையும் அறிந்திலரென்பதாம்.

() அது இது முதலிய சுட்டுப் பெயர்கள் உருபேற்கும்போது அன்சாரியை பெறுமென்பது "சுட்டுமுத லுகர மன்னொடு சிவணி, யொட்டிய மெய்யொழித் துகரங் கெடுமே" என்னும் தொல்காப்பியம் எழுத்ததிகாரம் உருபியற் சூத்திரத்தா லினிது விளங்குவதாம்.

முருபேற்ற வழி அவ்வாறு நில்லாமையு மறிந்திலர். பகைவர் சூழ்வனவற்றைத் தாமறிந்து அழித்து அவரறிந்தழியாதன தாஞ்சூழ்வரென்பது கருத்து. இதனால் அவரது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி :-(இ-ள்.) மதிநுட்பம் - (இயற்கையாகிய) நுண்ணறிவை, நூலோடு - (செயற்கையாகிய) நூலறிவோடு, உடையார்க்கு - உடையவராய மந்திரிகளுக்கு, அதிநுட்பம் - மிக்க நுட்பத்தையுடைய ஆலோசனைகளாய், முன்னிற்பவை-முன்னிற்பன, யாவுள - எவையுள, (இல்லை), (எ-று).

நுட்பமதி என்பது மதிநுட்பமென்று வந்து பின்மொழியிற் பொருள் சிறந்து நின்றது. அம்மதிநுட்பம் ஊழ் தரவேண்டிய-தாதலால் மதிநுட்பம் என்று முன்னே கூறப்பட்டது. நூல் என்பது நூலினுலுண்டாகும் அறிவை யுணர்த்துதலால் கருவியாகுபெயராம்; அதிநுட்பம் என்பது மிக்க நுட்பத்தையுடைய ஆலோசனைகளை யுணர்த்துதலால் பண்பாகுபெயராம். அதிநுட்பம் என்பதன் கணுள்ள அதியென்பது வடமொழியில் மிகுதிப்பொருளை யுணர்த்து-வதோரிடைச்சொல்; (அதி என்னும்) அது திரிந்து நுட்பமென்-பதனோடு தொடர்ந்து நின்றது. முன்னிற்றல் - பகைவரது ஆலோசனைகள் தமது ஆலோசனையால் அழியாது நிற்றல் பகைவர் ஆலோசிப்பனவற்றைத் தாம் அறிந்து அழித்து அப்பகைவரறிந்து அழிக்காதனவற்றைத் தாமாலோசிப்பரென்பது கருத்து. இதனால் அவ்வமைச்சரது சிறப்புச் சொல்லப்பட்டது.

(க - து.) இயற்கையறிவும் செயற்கையறிவு முடைய மந்திரி-களுக்கு முன் பகைவரது சூழ்ச்சிகள் யாதொரு பயனையுஞ் செய்ய-மாட்டா என்பது.

6. What contrivances are there so acute as to resist those who possess natural acuteness together with learning.

---

## எ. செயற்கை யறிந்தக் கடைத்து முலகத் தியற்கை யறிந்து செயல்.

பரி :—(இ-ள்.) நூனெறியான் வினைசெய்யுந் திறங்களை யறிந்த விடத்தும், அப்பொழுது நடக்கின்ற உலகவியற்கையையறிந்து அதனோடு பொருந்தச் செய்க, (எ-று).

*கடைத்துமென்புழித் து பகுதிப்பொருள் விகுதி. நூனெறியே-யாயினும் உலகநெறியோடு பொருந்தாதன செய்யற்க; செய்யின் அது பழிக்குமென இயற்கையறிவாற் பயன் கூறியவாறு.

---

* அறிந்தக்கடையென்னும் வினையெச்சத்தினீற்றினின்ற துவ்-விகுதி தனக்கெனப் பொருளில்லாது பகுதிப்பொருளையே யுணர்த்து-தலால், அது (து) பகுதிப்பொருள் விகுதியாயிற்றென்க. அறிந்தக்-கடையென்பது இறந்தகால வினையெச்சமாம். "பின்முன் கால்கடை" என்னும் தொல்காப்பியச் சூத்திரவுரையில் நச்சினார்க்கினியார் "கடை:' தொடர்கூரத் தூவாமை வந்தக்கடை' என இறப்புப்பற்றி வரும்" என்று கூறுவதிங்குணர்தற்பாலதாம்.

தெளி :—(இ-ள்.) செயற்கை - (நூல்வழியால் தொழில்) செய்யும் வகைகளை, அறிந்தக்கடைத்தும் - அறிந்தவிடத்தும், உலகத்து - உலகத்தில், இயற்கை - (அப்போது நடக்கின்ற) இயற்கையை, அறிந்து - தெரிந்து, செயல் - (அவ்வியற்கையோடு பொருந்தச்) செய்யக்கடவர், (எ-று).

அறிந்தக்கடைத்து என்றவிடத்து து என்பது பகுதிப்பொருளை யுணர்த்திய விகுதி. நூல்வழியே யாயினும் உலகவழியோடு பொருந்தாதனவற்றைச் செய்யாதிருக்கக் கடவர்; செய்தால் அவ்வுலகம் பழிக்குமென்று உலகயியற்கையினறிவாற் பயன் சொல்லியவாரும்.

(க-து.) மந்திரிகள் நூல்வழியால் தொழில் செய்யும் வகையை நன்குணர்ந்து, அதனை யுலகவியற்கையோடு பொருந்தச் செய்தல் வேண்டும் என்பது.

7. Though one may be acquainted with the theoretical modes of performing an action, one should understand the ways of the world and act accordingly.

———

அ. *அறிகொன் றறியா னெனினு முறுதி
யுழையிருந்தான் கூறல் கடன்.

பரி :—(இ-ள்.) அறிந்து சொல்லியாரது அறிவையு மழித்து, அரசன் தானு மறியானே யாயினும், அக்குற்றம் நோக்கி யொழியாது அவனுக்கு உறுதியாயின கூறுதல் அமைச்சனுக்கு முறைமை, (எ-று).

அறி என்பது முதனிலைத்தொழிற் பெயர். கோறல் - தான் கொள்ளாமை மேலும் இகழ்ந்து கூறுதல். †'உழையிருந்தான்' எனப் பெயர் கொடுத்தார; ‡அமாத்தியரென்னும் வடமொழிப் பெயர்க்கும் பொருண்மை அதுவாகலின். ¶உறுதி கூருக்கால் அவனதிறுதி யெய்தற் குற்றத்தை உலகந் தன்மே லேற்றுமென்பார் 'கூறல் கடன்' என்ருர். இவை யிரண்டு பாட்டானும் அவர் செயல் கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) அறி - (அறிந்து சொல்லினவரது) அறிவையும், கொன்று - அழித்து, அறியானெனினும் - (அரசன் தானும்) அறியானேயாயினும், (அக்குற்றத்தை நோக்கி நீங்காது), உறுதி -

* "செவிசுடச் சென்ருங் கிடித்தறிவு மூட்டி, வெகுளினும் வாய் வெரீஇப் பேரா - கவுண்மதத்த, கைம்மா வயத்ததே பாகுமற் றெத்திறத்து, மம்மாண் பினவே யமைச்சு" என்பது நீதிநெறி விளக்கம்.

† உழையிருந்தான் - பக்கத்திலிருந்தவன்.

‡ அமாத்தியர் - அருகே இருப்பவர். அமா - அருகே, தியர் - இருப்பவர். அவர் அரசனுக்கருகேயிருந் தாலோசனை கூறுவோராவர்.

¶ உறுதி - உறுதி (நன்மை)யைத் தரத்தக்க சொற்கள்.

(அவ்வரசனுக்கு) உறுதியாயினவற்றை, கூறல்-சொல்லுதல், உழையிருந்தான்-மந்திரிக்கு, கடன்-முறையாம், (எ-று).

அறி என்னும் பகுதி அறிவு என்னுந் தொழிற்பெயர்ப்பொருளில் வந்தமையின் முதனிலைத் தொழிற்பெயராம். கோறல் (அழித்தல்) - தான் (அறிந்து சொன்னவராகிய மந்திரிகளது உறுதி மொழிகளை மனத்திற்) கொள்ளாமல் மேலும் (அவரை) இழிவுபடுத்திப் பேசுதல். மந்திரிக்கு உழையிருந்தான் என்று பெயர் கொடுத்தார்; அமாத்தியர் என்னும் வடமொழிப் பெயர்க்கும் பொருள் உழையிருந்தாரென்ப தாகலினென்க. உறுதி சொல்லாதபோது அவனது முடிவடைதலாகிய குற்றத்தை உலகந்தன்மேல் ஏற்று மென்பார் 'கூறல்கடன்' என்றார். இவை இரண்டு பாட்டாலும் அம்மந்திரிகள் செயல் சொல்லப் பட்டது. உலகம் - உயர்ந்தோர்.

(க-து.) அரசன் தம்மை யவமானப்படுத்திய விடத்தும் அவனுக்கு உறுதியாயினவற்றைச் சொல்லுதல் மந்திரிகளுக்குக் கடமையாம் என்பது.

8. Although the king may discard the advice of the wise and himself be utterly ignorant, it is the duty of the minister to give him sound advice.

---

கூ. **பழுதெண்ணு மந்திரியிற் பக்கத்துட் *டெவ்வோ**
**ரெழுபது கோடி யுறும்.**

**பரி:—(இ-ள்.) பக்கத்திருந்து பிழைப்ப வெண்ணும் அமைச்ச னொருவனில் அரசனுக்கு எதிர் நிற்பார் ஒரெழுபது †கோடி பகை வருறுவர், (எ-று).**

எழுபதுகோடி யென்றது மிகப்பலவாய வெண்ணிற் கொன்று காட்டியவாறு. வெளிப்பட நிற்றலான் அவர் காக்கப்படுவர்; இவன் உட்பகையாய் நிற்றலாற் காக்கப்படானென்பதுபற்றி, $இவ்வாறு கூறினர். ‡எழுபது கோடிமடங்கு நல்லரென்றுரைப்பாரும், எழுபது கூறு தலையென்று பாடமோதுவாரு முளர்.

தெளி:—(இ-ள்.) பக்கத்துள் - பக்கத்திலிருந்து, பழு-தெண்ணும் - தீங்கு செய்யவெண்ணும், மந்திரியின்-மந்திரியொரு

---

* "தெவ்வுப் பகையாகும்" என்பது தொல்காப்பியம்.

† கோடி - நூறுலட்சம்.

$ பழுதெண்ணு மந்திரியிற் பக்கத்துட் டெவ்வோ, ரெழுபது கோடியுறும் என்றிவ்வாறு.

‡ எழுபது கோடியுறும் என்பதற்கு (வெளிப்பட நிற்கும் பகைவர்) எழுபது கோடி மடங்கு நல்லரென் றுரைகூறுவாரும், எழுபது கூறுதலையென்று மூலபாடங் கூறுவாரு முண்டு.

வனிலும், (அரசனுக்கு எதிர்நிற்பவர்), ஓரெழுபதுகோடி தெவ்- ஓரெழுபதுகோடி பகைவர், உறும் – உறுவர், (எ – று).

எழுபதுகோடி யென்றது மிகவும் பலவாகிய எண்ணினுக்கு ஒன்று காட்டியபடியாம். பகைவர் வெளிப்பட நிற்றலால் அப்பகைவர் அரசனுல் காக்கப்படுவர்; இம்மந்திரி உட்பகையாய் நிற்றலால் அரசனுல் காக்கப்படமாட்டானென்பதுபற்றி, இவ்வாறு சொல்லினர். காக்கப்படுதல் - தடுக்கப்படுதல்.

(கு – து.) பக்கத்திருந்து தன்னரசனுக்குத் தீங்கு செய்ய நினைக்கும் மந்திரி அவனுக்குப்பெரும் பகைவனுவன் என்பது.

9. Far better are seventy crores of enemies for a king than a minister at his side who designs to ruin him.

---

**௬௦. முறைப்படச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்**
**திறப்பா டிலாஅ தவர்.**

**பரி :—(இ – ள்.) செய்யப்படும் வினைகளை முன் அடைவுபட வெண்ணி வைத்தும், செய்யுங்கால் அவை முடிவிலவாகவே செய்யா நிற்பர், முடித் தற்கேற்ற கூறுபாடில்லாதார், (எ – று).**

அக்கூறுபாடாவன: †வந்த வந்த விடையூறுகட்கு ‡ஏற்ற வேற்ற ¶பரிகாரமறிந்து செய்தலும், தாந் திண்ணியராதலுமாம். பிழையாம லெண்ண வல்லராய் வைத்தும் செய்து முடிக்கமாட்டாருமுளரென் பதாம். இவையிரண்டு பாட்டானும் அமைச்சருள் விடப்படுவாரது குற்றங் கூறப்பட்டது.

**தெளி :—(இ-ள்.)** (செய்யப்படுந் தொழில்களை) திறப்பாடு (முடித்தற்கு ஏற்ற) கூறுபாடு, இலாஅதவர்-இல்லாதவர், முறைப் படச் சூழ்ந்தும் – (முன்னே) அடைவுபட ஆலோசித்திருந்தும், முடிவிலவே செய்வர் – (செய்யும்போது அவற்றை) முடிவில்லாதன வாகவே செய்யா நிற்பர், (எ–று).

அக்கூறுபாடாவன: வந்த வந்த இடையூறுகளுக்கு ஏற்ற ஏற்ற பரிகாரத்தை யறிந்துசெய்தலும், தாமுறுதியுடையவ ராதலுமாம். (செய்யப்படுந் தொழில்களை) தப்பாமல் ஆலோசிக்க வல்லவரா யிருந்தும் செய்து முடிக்க மாட்டாதவரும் உண்டென்பதாம். இவை இரண்டுபாட்டாலும் மந்திரிகளுள் விடப்படுவாரது குற்றம் சொல்லப் பட்டது.

(க-து.) மேற்கொண்ட தொழிலை முடித்தற்கேற்ற திறமில்லாத மந்திரிகள் அடைவுபெற ஆலோசித்துத் தொழிலைச் செய்தாலும் அதனை முடிக்கமாட்டார் என்பது.

---

† வந்த வந்த - நேரிட்ட நேரிட்ட.

‡ ஏற்ற வேற்ற – தகுதியான தகுதியான. ¶ பரிகாரம் – மாற்று.

10. Those ministers whe are destitute of executive ability will fail to carry out their schemes although they may have contrived aright.

---

## இரண்டாவது அதிகாரம்

### சொல்வன்மை:—The Power of Speech

பரி:—அஃதாவது தான் கருதிய வினை முடியுமாற்றால்* அமைச்சிய னடத்தற் கேதுவாய சொற்களைச்சொல்ல வல்லனாதல். †மேல் ‡'ஒரு தலையாச் சொல்லலும் வல்லது' என்றதனையே சிறப்புப்பற்றி விரித் துரைக்கின்றமையின், இஃதமைச்சின் பின் வைக்கப்பட்டது.

தெளி:—அஃதாவது தான் நினைத்த தொழில் முடியும் வழியால் மந்திரியினது தன்மை நடத்தற்குக் காரணமான சொற்களைச் சொல்ல வல்லவனாதல். முன்னதிகாரத்தில் 'ஒருதலையாச் சொல்லலும் வல்லது' என்றதையே சிறப்புப்பற்றி விரித்துச் சொல்லுதலால், இஃது (சொல்வன்மை) அமைச்சின்பின் வைக்கப்பட்டது.

---

க. நாநல மென்னு நலனுடைமை யந்நலம்
யாநலத் துள்ளதூஉ மன்று.

பரி: - (இ - ள்.) அமைச்சர்க்கு இன்றி யமையாக் குணமாவது சான்றோரான் நாநலமென்று சிறப்பித்துச் சொல்லப்படும் நலத்தினை யுடையராதல்; அந்நலம் ¶பிறர்க்கும் +பிறநல மெல்லாவற்றுள்ளும் அடங்குவதன்றி மிக்க தாகலான், (எ - று).

நாவானுளதாய நலமெனவிரியும். இந்நலம் உலகத்தைத் தம் வயத்ததாககும் அமைச்சர்க்கு வேறாக வேண்டுமென்னும் நீதிநூல்

---

* வார்த்தைசொல்ல வல்லவனாதல் என்றும் பாடமுண்டு.

† மேல் என்றது "தெரிதலுந் தேர்ந்து செயலு மொருதலையாச், சொல்லலும் வலல தமைச்சு" என்னும் (அமைச்சதிகாரத்திலுள்ள) குறளை.

‡ இதன்பொருள் சிலரைப் பிரித்தல் பொருத்தல் செய்தலில் அவர்க்கு இதுவே செய்யத்தக்கது என்று நிச்சயமுண்டாம்படி சொல்லுதலும் வலலவனே என்பது.

¶ பிறர்க்கும் - அமைச்சரல்லாதவர்க்கும்.

+ பிறநலமெல்லாமென்றது நாநலமல்லாத வேறு நலங்களை. (நலம்-நன்மை) அவை: கல்வியுடைமை, பொருளுடைமை, ஆண்மை யுடைமை, அழகுடைமை முதலாயின.

நாநலம் - நாவினாற் பேசி மேற்கொண்ட காரியத்தை முடிக்கும் வல்லமை.

வழக்குப்பற்றி 'நாநலமென்னு நலன்' என்றும், பிறர்க்கும் *இது போற் சிறந்தது பிறிதின்மையான் 'அந்நலம் யாநலத் துள்ளதூஉ மன்று' என்றுங் கூறினர். பிரித்தல் பொருத்தல் †முதலிய தொழிலில்லாதார்க்கும் ‡இஃதின்றியமையாதாயபின் அத்தொழி-லார்க்குக் கூறவேண்டுமோ வென்பது கருத்து.

தெளி:—(இ - ள்.) (மந்திரிகளுக்கு அவசியம் வேண்டிய குண மாவது) நாநலமென்னும் - (சான்றோரால்) நாநலமென்று சிறப்-பித்துச் சொல்லப்படும், நலனுடைமை - நலத்தினை யுடையராதல், அந்நலம்-அந்த நாநலமாவது, (பிறர்க்கும்), யாநலத்து - பிறநலங்க ளெல்லாவற்றினுள்ளும், உள்ளதூஉ மன்று - அடங்குவதன்று, (மிகுந்தது) (ஆகலான்), (எ - று).

நாநலம் என்பது நாவாலுளதாகிய நலமென விரியும்; இது மூன்றும் வேற்றுமையுருபும் பொருளு முடன்தொக்கதொகை. இந்நலம் உலகத்தைத் தம்வசத்ததாக்கும் மந்திரிகளுக்கு வேருயிருக்க வேண்டு மென்னும் நீதிநூல் வழக்குப்பற்றி 'நாநலமென்னு நலன்' என்றும், பிறர்க்கும் இதுபோற் சிறந்தது வேறில்லாமையால் 'அந்நலம் யாநலத் துள்ளதூஉ மன்று' என்றும் சொல்லினர். பிரித்தல்பொருத்தல் முதலாகிய தொழிலில்லாதவர்க்கும் இஃது அவசியம் வேண்டுவதாய பின் அத்தொழிலுடைய மந்திரிகளுக்குச் சொல்லவேண்டுமோ வென்பது கருத்து.

(க - து.) மந்திரிகளுக்கு நாநலம்போல வேறு நலமில்லை.

1. The possession of that goodness which is called the goodness of speech is even to others better than any other goodness.

---

உ. ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு.

பரி:—(இ - ள்.) தம் மரசர்க்கும் ¶அங்கங்கட்கும் 0ஆக்கவழிவுகள் தஞ்சொல்லான் வருமாகலான், ‖அப்பெற்றித்தாய சொல்லின்கட் ††சோர்தலை அமைச்சர் தங்கணிகழாமற் ‡‡போற்றிக் $காக்க.

---

* இது போற்சிறந்தது - இந்நாநலத்தைப் போற்சிறப்புடையது. நாநலம சிறப்புடையதென்பது "எத்துணைய வாயினுங் கலவி யிடமறிந், துய்த்துணர் வில்லெனி னில்லாகும்-உய்த்துணர்ந்தும், சொல்வன்மை யினறெனி னெனனு மஃதுண்டேற், பொன்மலர் நாற்ற முடைத்து" என்று நீதிநெறிவிளக்கம் கூறுவதாலு மறியப்-படும்.

† முதலிய என்றமையின், பேணிக்கொளல், தெரிதல், தேர்ந்து செயல் முதலியவற்றையுங் கொள்க. ‡ இஃது - நாநலம்.

¶ அங்கம் என்றது நாடு, அரண், பொருள், படை முதலியவற்றை.

0 ஆக்கம் - மேல்மேலுயர்தல். அழிவு - கீழ்கீழ்தாழ்தல்.

‖ அப்பெற்றித்தாய - ஆக்கவழிவுகளைத் தருந் தன்மையதான.

†† சோர்தலை - தளர்தலை. ‡‡ போற்றி - நன்கு சிந்தித்து.

$ காக்க - தடுக்கக் கடவர்.

ஆக்கத்திற் கேதுவாய நற்சொல்லையும் கேட்டிற் கேதுவாய தீச்சொல்லையும் சொல்லாத லொப்புமைபற்றி 'அதனால்' என்றார். *செய்யுளாகலின் சுட்டுப்பெயர் முன்வந்தது. பிறர் சோர்வு போலாது உயிர்கட்கெல்லாம் ஒருங்கு வருதலால் 'காத்தோம்பல்' என்றார். இவை இரண்டு பாட்டானும் இஃது இவர்க் கின்றியமையா தென்பது கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) (தம்மரசனுக்கும் அங்கங்களுக்கும்) ஆக்கமும் – பெருக்கமும், கேடும் – அழிவும், அதனால் – (தமது) சொல்லினால், வருதலால் – வருமாகலால், சொல்லின்கண் – (அத்தன்மையதாய) சொல்லினிடத்து, சோர்வு – சோர்தலை, காத்தோம்பல் – (மந்திரிகள் தம்மிடத்துண்டாகாமல் போற்றி) காக்கக்கடவர், (எ-று).

ஆக்கத்திற்குக் காரணமாகிய நற்சொல்லையும், கேட்டிற்குக் காரணமாகிய தீச்சொல்லையும் சொல்லென்னும் ஒப்புமைபற்றி (அவற்றைவென்று பன்மையாகக் கூறாது) 'அதனால்' என்று ஒருமை-யாகக் கூறினார். செய்யுளாதலால் அதனால் என்னும் சுட்டுப்பெயர் சொல் என்னும் இயற்பெயர்க்கு முன்னே வந்தது. மந்திரிகளது சொற்சோர்வு மற்றவர்களது சொற்சோர்வு போலாகாமல் உயிர்களுக்கெல்லாம் தீங்கு ஒருமிக்க வருவதற்கேதுவாயிருத்தலால் 'காத்தோம்பல்' என்றார். இவை இரண்டு பாட்டாலும் இச்சொல் வன்மை இம்மந்திரிகளுக்கு அவசியம் வேண்டுவதென்பது சொல்லப்-பட்டது.

(க-து.) செல்வமும் கேடும் தமது சொல்லால் வருதலால் மந்திரிகள் தம் சொல்லின்கண் சோர்வு வராம லதனைக் காக்கக் கடவர் என்பது.

2. Since prosperity and declension result from speech, ministers should carefully guard themselves against faultiness therein.

---

642 ங. **கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்**
**வேட்ப மொழிவதாஞ் சொல்.**

பரி :—(இ-ள்.) நட்பா யேற்றுக்கொண்டாரைப் பின் வேறுபடாமற் பிணிக்கும் குணங்களை †அவாவி மற்றைப் பகையாய் ¶ஏற்றுக்

---

* உலகவழக்கில் இயற்பெயர்க்குப் பின்னே சுட்டுப்பெயரைக் கூறல் வழாநிலை என்றும், இயற்பெயர்க்கு முன்னே சுட்டுப்பெயரைக் கூறல் வழுவாமென்றும், செய்யுள் வழக்கில் இயற்பெயர்க்கு முன்னே சுட்டுப்பெயரைக் கூறல் வழுவமைதியாமென்றும் இலக்கண நூல் கூறுதல் பற்றி 'செய்யுளாகலின் சுட்டுப்பெயர் முன் வந்தது' என்று கூறப்பட்டது. "(சுட்டுப்பெயரை) முற்படக் கிளத்தல் செய்யுளு ளுரித்தே" என்று தொல்காப்பியங் கூறுவது இங்கறியத்தக்கதாம்.

† அவாவி – மேலும் மேலும் கொள்ள விரும்பி.

¶ ஏற்றுக்கொள்ளாதாரும் – தமது சொல்லை யங்கீகரியாதவர்-களும்.

**கொள்ளாதாரும் பின் அப்பகைமை யொழிந்து நட்பினை விரும்பும் வண்ணஞ் சொல்லப்படுவதே அமைச்சர்க்குச் சொல்லாவது, (எ-று).**

அக்குணங்களாவன : வழுவின்மை, சுருங்குதல், விளங்குதல், இனிதாதல், விழுப்பயன்றருத லென்றிவை *முதலாயின †அவற்றை யவாவுதலாவது சொல்லுவான் ‡குறித்தனவேயன்றி வேறு நுண்ணுணர்வுடையோர் $கொள்பவற்றின் மேலும் நோக்குடைத்-தாதல். அவாவென்னுஞ் செய்தனெச்சம் £மொழிவதென்னுஞ் செயப்பாட்டுவினை கொண்டது. இனிக் §கேட்டார் கேளா-ரென்பதற்கு நூல் கேட்டார் கேளாதாரெனவும், *²வினவியார் வினவாதாரெனவு முரைப்பாருமுளர். தகையவா யென்பதற்கு †²எல்லாருந் ‡²தகுதியை யுடையவா யென்றுரைத்தார்; அவர் $²அப்பன்மை £²மொழிவதென்னும் ஒருமையோடு §²இயையாமை நோக்கிற்றிலர். இதனால் சொலலின திலக்கணங் கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) கேட்டார் - நட்பா யேற்றுக்கொண்டவரை, பிணிக்கும் - (பின் வேறுபடாமற்) கட்டும், தகை - குணங்களை,

---

* முதலாயின என்றமையின் முறையின் வைப்பு, உலகமலையாமை, உதாரணமுடையதாதல் முதலியவற்றையுங் கொள்க. 'சுருங்கச் சொல்லல், விளங்க வைத்தல், நவின்றோர்க் கினிமை நன்மொழி புணர்த்தல். ஓசை யுடைமை யாழமுடைத் தாதல், முறையின் வைப்பே யுலகமலை யாமை, விழுமியது பயத்தல் விளங்குதா ரணத்த, தாகுத னூலிற் கழகெனும் பத்தே' என்று நன்னூல் கூறுவது மிங்கறியத் தக்கதாம்.

† அவற்றை - வழுவின்மை முதலிய குணங்களை.

‡ குறித்தனவேயன்றி - உத்தேசித்த பொருள்களையே யல்லாமல்.

$ கொள்பவற்றின்மேலும் - கொள்ளும் பொருள்மேலும்,
நோக்குடைத்தாதல் - கருத்தினையுடையதாதல்.

£ மொழிவது என்பது செயப்பாட்டுவினைப் பொருளில் வந்த செய்வினை. இவ்வாறு வருவதை இலக்கணக்கொத்து நூலார் "படுசொல் லற்றே படுபொருளாயும்" என்பர்.

§ கேட்டார் என்பதற்கு நூல் கேட்டார் வினவியார் என்றும், கேளார் என்பதற்கு நூல் கேளாதார் வினவாதார் என்றும் பொருள் கூறுவாருமுளர்.

*² வினவியார், வினவாதார் - கேள்வி கேட்டவர், கேள்வி கேளாதவர்.

†² எல்லாரும் என்றது பரிமேலழகர் உரை எழுதுவதற்கு முன் உரை எழுதியுள்ள தருமர், மணக்குடையர், தாமத்தர், நச்சர் முதலாயினோரை.

‡² தகுதியுடையவாய் - குணங்களையுடையனவாய்.

$² அப்பன்மை - தகைய (குணங்களுடையன) வென்னும் பலவின்பால்.

£² மொழிவதென்னும் ஒன்றன்பாலோடு.

§² இயையாமை நோக்கிற்றிலர் - பொருந்தாமையைக் கவனித் தாரல்லர்.

அவாய் - அவாவி, கேளாரும் - மற்றைப்பகையா யேற்றுக்கொள்ளாத வரும், வேட்ப - (பின் அப்பகைமை யொழிந்து நட்பினை) விரும்பும் வண்ணம், மொழிவது - சொல்லப்படுவதே, சொல்லாம் - (மந்திரிகளுக்குச்) சொல்லாவது, (எ-று).

அக்குணங்களாவன : வழுவில்லாமை. சொற்சுருங்குதல், பொருள் விளங்குதல், இனிதாதல், சிறந்த பயனைத்தருதல் என்ற இவை முதலாயின. அக்குணங்களை அவாவுதலாவது அச்சொல் சொல்லுவான் குறித்த பொருள்களேயன்றி வேறு நுண்ணறிவுடையவர் கொள்ளும் பொருள்களின் மேலும் நோக்குடையதாதல். அவாய் என்னும் செய்தென்னும் வாய்பாட்டிறந்த கால வினையெச்சம் மொழிவது என்னும் செயப்பாட்டு வினை முற்றைக் கொண்டு முடிந்தது. இதனால் சொல்லினது இலக்கணம் சொல்லப்பட்டது. ஆம் என்பது பிரித்துச்சொல்லென்பதனோடு கூட்டப்பட்டது.

(க-து.) பகைவரும் நட்பினரும் ஏற்றுக்கொள்ளுமாறு சொல்லுவதே சொல்லாம் என்பது.

3. The minister's speech is that which seeks to express elements as to bind his friends and is so delivered as to make even his enemies desire his friendship.

---

௪. திறனறிந்து சொல்லுக சொல்லை யறனும்
பொருளு மதனினூஉங் கில்.

பரி :—(இ-ள்.) *அப்பெற்றித்தாய சொல்லை அமைச்சர் தம்முடையவுங் கேட்பாருடையவுமாய திறங்களையறிந்து சொல்லுக, அங்ஙனஞ் சொல்லுதற்கு மேற்பட்ட அறனும் பொருளுமில்லை யாகலான், (எ-று).

அத்திறங்களாவன : குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், செல்வம், உருவம், பருவ மென்பனவற்றான் வருந் தகுதி வேறுபாடுகள். அவற்றையறிந்து சொல்லுதலாவது அவற்றாற் றமக்கும் †அவர்க்கு முளவாய ஏற்றத்தாழ்வுகளையறிந்து அவ்வம் ‡மரபாற் சொல்லுதல். ¶அஃது ||உலகத்தோ டொட்ட வொழுகலையும் இனிமையையும் பயத்தலின் அறனாயிற்று; தங்காரிய முடித்தலிற் பொருளாயிற்று. அறனும் பொருளுமெனக் ()காரணத்தைக் காரியமாக்கிக் கூறினர்.

---

* அப்பெற்றித்தாய-(முந்திய குறளிற்கூறியவாறு) கேட்டாரைப் பிணிப்பதாயும் கேளாரையும் வேட்பச்செய்வதாயுமுள்ள.

† அவர்க்கும் - கேட்பார்க்கும். ‡ மரபால் - முறையால்.

¶ அஃது - அவ்வம்மரபாற் சொல்லுதல். || ஒழுக்கமுடைமை.

() திறனறிந்து சொல்லுதலாகிய காரணத்தை அறனும் பொருளும் எனக் காரியமாக்கிக் கூறினமையின், இது காரணம் காரியமாய உபசாரவழக்காம். திறனறிந்து சொல்லுதலால் அறனும் பொருளுமுண்டாகு மென்று கூறுது அதனையே அறனும் பொருளும் என்று கூறியவாறுகாண்க.

தெளி :—(இ-ள்.) (மந்திரிகள்) சொல்லை - (அத்தன்மையதாகிய) சொல்லை, திறன் - (தம்முடையனவும் கேட்பாருடையனவுமான) திறங்களை, அறிந்து – தெரிந்து. சொல்லுக – சொல்லக்கடவர், அதனினூஉங்கு - அவ்வாறு சொல்லுதற்கு மேற்பட்ட, அறனும் பொருளும்—அறமும் பொருளும், இல் – இல்லை, (ஆகலான்), (எ-று).

அத்திறங்களாவன: குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், செல்வம், உருவம், பருவம் என்பனவற்றால் வரும் தகுதி வேறுபாடுகள். அத்தகுதி வேறுபாடுகளையறிந்து சொல்லுதலாவது அத்தகுதி வேறுபாடுகளால் தமக்கும் அவர்க்கும் உண்டாகிய உயர்வுதாழ்வுகளையறிந்து (அவரவர்க்குத்தகுந்த) அவ்வம் மரபினால் சொல்லுதல். அஃது உயர்ந்தோர் நடையோடுபொருந்த நடத்தலையும் இனிமையையும் தருதலால் அறனாயிற்று; தமது காரியத்தை முடித்தலினால் பொருளாயிற்று. திறனறிந்து சொல்லுதலாகிய காரணத்தை அறனும் பொருளும் எனக் காரியமாக்கிச் சொல்லினார். பருவம் – வயது.

(க-து.) மந்திரிகள் சொற்றிறங்களை யடைவுபட அறிந்து அறமும் பொருளு முண்டாமாறு சொல்லக்கடவர் என்பது.

4. The minister should understand the nature of his hearers and then make his speech; for superior to it, there is neither virtue nor wealth.

---

645 ரு. **சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ லச்சொல்லை**
**வெல்லுஞ்சொ லின்மை யறிந்து.**

பரி :—(இ-ள்.) தாஞ்சொல்லக் கருதிய சொல்லைப் பிறிதோர் சொல்லாய் வெல்லவல்லதொரு சொல் இல்லாமையறிந்து பின் அச் சொல்லைச் சொல்லுக, (எ-று).

பிறிதோர்சொல் - மாற்றாரது *மறுதலைச்சொல். வெல்லுதல் - †குணங்களான் மிகுதல். ‡அதுவே வெல்லச் சொல்லுகவென்பதாம். இனிப் பிறிதோர்சொல் வெல்லுஞ் சொல்லெனச் ¶செவ்வெண்ணாக்கி, §ஒத்த சொல்லும் மிக்கசொல்லு முளவாகாமற் சொல்லுகவென் றுரைப்பாருமுளர். இது சொற்பொருட்பின் வருநிலை.

---

* மறுதலைச்சொல் – (தாம் சொல்லும் சொல்லை) மறுத்துச் சொல்லும் சொல்.

† குணங்களாவன: வழுவின்மை, சுருங்குதல், விளங்குதல் முதலாயின.

‡ அதுவே – தமது சொல்லே.

¶ செவ்வெண்ணாக்கி - எண்ணிடைச்சொற் றொக்குநிற்பதாக்கி. இங்கு எண்ணிடைச்சொல் உம் என்னும் இடைச்சொல்.

§ பிறிதோர்சொல் என்பதற்கு ஒத்த சொல்லும் என்றும், வெல்லுஞ்சொல் என்பதற்கு மிக்கசொல்லும் என்றும், பொருள்கூறி, இவையுண்டாகாமல் (சொல்லைச்) சொல்லுக என்று பொருள் கூறுவாரு முண்டென்பது.

தெளி:—(இ-ள்) சொல்லை - (தாம் சொல்லக்கருதிய) சொல்லை, பிறிதோர் சொல் - பிறிதொரு சொல்லால், வெல்லுஞ்சொல் - வெல்லவல்லதொரு சொல், இன்மை - இல்லாமையை, அறிந்து - தெரிந்து, (பின், அச் சொல்லை - அந்தச் சொல்லை, சொல்லுக - சொல்லக் கடவர், (எ-று).

பிறிதோர் சொல் - பகைவரது மறுதலைச் சொல். வெல்லுதல் - குணங்களால் மிகுதல். அதுவே வெல்லச் சொல்லுக வென்பதாம். சொல் என்பது பின்னர்ப் பலவிடத்தும் வந்து பொருள் வேறுபடாது நிற்றலான், இது சொற்பொருட்பின் வருநிலையணியாம்.

(க-து.) மந்திரிகள் தமது சொல் மற்றவரது சொல்லால் மறுக்கப்படாதபடி யாலோசித்து அதனைச் சொல்லக்கடவர்.

5. Deliver your speech, after assuring yourself that no counter speech can defeat your own.

---

சா. வேட்பத்தாஞ் சொல்லிப் பிறர்சொற் பயன்கோடன்
மாட்சியின் மாசற்றார் கோள்.

பரி:—(இ-ள்.) பிறர்க்குத் தாஞ்சொல்லுங்கால் அவர் பின்னுங் கேட்டலை விரும்புமாறு சொல்லி, அவர் தமக்குச் சொல்லுங்கால் அச் சொல்லின் பயனைக் கொண்டொழிதல் அமைச்சியலுட் குற்றமற்றாரது துணிபு, (எ-று).

பிறர் சொற்களுட் குற்றமுளவாயினும் அவை நோக்கி யிகழா ரென்பதாம். *வல்லாரை யிகழ்தல் †வல்லுநர்க்குத் தகுதியின் மையின், ‡இதுவுமுடன் கூறினார். இவை மூன்று பாட்டானும் §அதனைச் சொல்லுமாறு கூறப்பட்டது.

தெளி —(இ-ள்.) தாம் - (பிறர்க்குத்) தாம், (சொல்லுமிடத்து அவர் பின்னும் கேட்டலை), வேட்ப - விரும்பும்படி, சொல்லி - கூறி, பிறர் - அவர், சொற்பயன் கோடல் - (தமக்குச் சொல்லுமிடத்து அச்) சொல்லின் பயனைக்கொண்டு விடுதல், மாட்சியின் (மந்திரியின்) இலக்கணத்தில், மாசற்றார் - குற்றமற்றவரது, கோள் - துணிபாம், (எ - று).

(மாட்சியின் மாசற்றார்) பிறர் சொற்களில் குற்றமுளவாயினும் அக் குற்றங்களை நோக்கி (அச் சொற்களை) இகழாரென்பதாம். வல்லமையில்லாதவரை யிகழுதல் வல்லமையுடையவர்க்குத் தகுதி

---

* வல்லாரை - சொல்லும் வல்லமையில்லாதவரை.

† வல்லுநர்க்கு - சொல்லும் வல்லமையுடையவர்க்கு.

‡ இதுவும் - சொல்லும் வல்லமையில்லாத பிறரது சொல்லின் பயனைக் கொண்டொழிதலையும்.

§ அதனை - சொல்லை.

யல்லாமையால், இதுவும் உடன் சொல்லினர். இவை மூன்று பாட்டாலும் அதனைச் சொல்லும் விதம் சொல்லப்பட்டது.

(க-து.) பிறர் தமது சொல்லை விரும்புமாறு சொல்லி, அவர் சொல்வது விளங்காதாயினும் அதனது பயனைக் கொண்டொழிதல் மந்திரிகளது கடமையாம் என்பது.

6. *It is the opinion of those* who are free from defects in diplomacy that the minister should so speak as to make his hearers desire to hear more and grasp the meaning of what he hears from them.

---

647 எ. **சொலல்வல்லன் சோர்வில னஞ்சா னவனை**
**யிகல்வெல்லல் யார்க்கு மரிது.**

பரி:—(இ-ள்.) தானெண்ணிய காரியங்களைப் பிறர்க்கேற்பச் சொல்லுதல் வல்லனாய் *அவை மிகப் பலவாயவழி ஒன்றினுஞ் சோர் விலனாய் †அவைக் கஞ்சானுமினான் யாவன் ‡அவனை §மாறுபாட்டின்கண் வெல்லுதல் யாவர்க்கு மரிது, (எ-று).

‖ஏற்பச் சொல்லுதல் – $அவர்க்கு அவை காரியமல்லவாயினும் £ஆமெனத் துணியும் வகை சொல்லுதல். சோர்வு – சொல்லவேண்டு வதனை மறப்பானொழிதல். ¶இம் மூன்று குணமு முடையானை மாற்றாராய்ப் பிரித்தல் பொருத்தல் செய்து வெல்வாரில்லை யென்பதாம்.

---

* அவை – தானெண்ணிய காரியங்கள்.

† அவைக்கு - (அந்தணர் சான்றோர் முதலாயினோர் கூடியுள்ள) சபைக்கு.

‡ சுட்டுவருதற்கு முன்னே வினாவரல்வேண்டும் என்னும் வடமொழி நியமப்படி அவனையென்னும் சுட்டிற்குமுன்னே யாவன் என்னும் வினா வருவிக்கப்பட்டது. இதனை "எப்பொருளெத்தன்மைத் தாயினு மப்பொருண், மெய்ப்பொருள் காண்ப தறிவு" என்னும் குறளாலும், "உயர்வற வுயர் நல முடையவ னெவனவன்" என்று பெரியார் கூறுதலாலும் அறிக. (சுட்டாகிய தத்சத்தத்திற்குமுன்னே வினாவாகிய யத்சத்தம் வரல்வேண்டும் என்பது வடநூல் வழக்கு).

§ மாறுபாட்டின்கண் – சொற்போரிடத்து.

‖ ஏற்ப – அங்கீகரிக்கும்வகை.

$ அவர்க்கு அவை காரியமல்லவாயினும் – பிறர்க்குத் தான் எண்ணிய காரியங்களைக் கேட்டல் காரியமல்லவாயிருந்தாலும்

£ ஆமெனத் துணியும்வகை – தாங்கள் சொல்லுதல் ஒக்கும் என்று நிச்சயிக்கும்படி.

¶ இம்மூன்று குணமுமென்றது சொல்வன்மை, சோர்வின்மை, அஞ்சாமையென்னு மிக்குணங்களை.

தெளி:— (இ-ள்.) (தான் எண்ணியகாரியங்களை) சொலல் வல்லன் - (பிறர்க்கு ஏற்பச்) சொல்லுதல் வல்லவனாய். (அவை மிகவும் பலவான விடத்து), சோர்விலன் (ஒன்றினுஞ்) சோர்வில்லாதவனாய், அஞ்சான் - (சபைக்கு) அஞ்சாதவனுமயினான், (யாவன்), அவனை—, இகல் - மாறுபாட்டில், வெல்லல்-வெல்லுதல், யார்க்கும்-யாவர்க்கும், அரிது - முடியாது, (எ-று).

பிறர்க்கு ஏற்பச் சொல்லுதல் - அவர்க்கு அவைகாரிய மல்லவா யினும் ஆமென்று நம்புப்படி சொல்லுதல் சோர்வு - சொல்லவேண்டு வதனை மறதியாலொழிதல். இம்மூன்று குணமு முடையவனைப் பகைவராய்ப் பிரித்தல் பொருத்தல்செய்து வெல்வார் இல்லை யென்பதாம்.

(க-து.) சொல்வன்மையும் சொல்லுதலிற் சோர்வின்மையும் சபைக்கஞ்சாமையு முடையவனைச் சொற்போரிற் பிறர் வெல்லுதல் முடியாது என்பது.

7. It is impossible for any one to conquer him by intrigue who possesses power of speech, and is neither faulty nor timid.

---

அ. விரைந்து தொழில்கேட்கு ஞால நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்.

பரி:—(இ-ள்.) சொல்லப்படுங் காரியங்களை நிரல்படக்கோத்து இனிதாகச் சொல்லுதல் வல்லாரைப்பெறின், உலகம் அவற்றை விரைந் தேற்றுக் கொள்ளும், (எ-று).

* தொழில் - சாதியொருமை. நிரல்படக்கோத்தல் - முன்சொல் வனவும் பின் சொல்வனவு மறிந்து †அம்முறையே வைத்தல். இனிதாதல் - ‡கேட்டார்க்கின்பம் பயத்தல். @‘சொல்லுதல் வல்லான் நூருயிரவரு ளொருவன்’ என்ற வடமொழி பற்றிப்

---

* தொழிலென்பது வருமொழிநோக்காது பன்மைப் பொரு ளுணர்த்துதலின், சாதியொருமைப் பெயராயிற்று.

† அம்முறையே வைத்தல் - முன்னே சொல்லவேண்டியவற்றை முன்னும் பின்னே சொல்லவேண்டியவற்றைப் பின்னும் வைத்தல்.

‡ "சொல்லியக்கால் சொல்லின் பயன்காணுந் தான்பிறர், சொல்லிய சொல்லை வெலச்சொலலும் பல்லார், பழித்தசொற் றீண்டாமற் சொலலும் விழுத்தக்க, கேட்டாற் கினியவாய்ச் சொல் வானேற் பூக்குழலாய், நல்வயலூரன் துஞ்சா தணியகலம், புல்லலி னூடலரிது." என்னுஞ் செய்யுளிங் கறியத்தக்கதாம். (தகடூர் யாத்திரை).

@ "ஆர்த்தசபை நூற்றொருவ ராயிரத்தொன் றாம்புலவர், வார்த்தை பதினா யிரத்தொருவர் - பூத்தமலர்த், தண்டா மரைத் திருவே தாதாகோ டிக்கொருவர். உண்டாயி னுண்டென் றறு" என்னும் செய்யுளும், "நூற்றுவரிற் றோன்றுந் தறுகண்ண ராயிரவ, ராற்றுளித் தொக்க வவையகத்து - மாற்றந்தான், ஒன்று கொடுக்கு மகன்" என்னும் செய்யுளும் இங்கறியத் தக்கனவாம்,

*'பெறின்' என்றார். †ஈண்டுங் கேட்டல் ‡ஏற்றுக்கோடல். இவை யிரண்டுபாட்டானும் ¶அவ்வாற்றாற் சொல்லுதல் வல்லாரது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி :— (இ-ள்.) தொழில் - (சொல்லப்படும்) காரியங்களை, நிரந்து - ஒழுங்குபடக்கோத்து, இனிது - இனிதாக, § சொல்லுதல் வல்லார் - சொல்லுதலில் வல்லவரை, பெறின் - பெற்றால், ஞாலம் - உலகமானது, விரைந்து—, கேட்கும் - (அச்சொற்களை) ஏற்றுக் கொள்ளும், (எ-று).

தொழில் - ஈறுதோன்றாத சாதியொருமைப்பெயர். ஒழுங்குபடக் கோத்தல் - முன்னே சொல்லவேண்டியவற்றையும் பின்னே சொல்ல வேண்டியவற்றையும் அறிந்து அம்முறையே வைத்தல். இனிதாதல் - கேட்டார்க்கு இன்பந்தருதல். 'சொல்லுதல் வல்லவன் நூறாயிரவரு ளொருவன்' என்னும் வடமொழி வழக்குப்பற்றிப் 'பெறின்' என்றார். இங்கும்கேட்டல் - ஏற்றுக்கொள்ளுதல். இவை இரண்டுபாட்டாலும் அவ்விதங்களால் சொல்லுதலில் வல்லவரது சிறப்புச் சொல்லப் பட்டது.

(க-து.) உலகத்தார், சொல்லப்படுங் காரியங்களை யொழுங்கு படக் கோத்து இனிமையுண்டாகச் சொல்லுவாரது வார்த்தையை விரைந்தேற்றுக்கொள்ளுவர் என்பது.

8. If there be those who can speak on various subjects in proper order and in a pleasing manner, the world would readily accept them.

———

கூ. பலசொல்லக் காமுறுவர் 0மன்றமா சற்ற
சிலசொல்ல றேற்றா தவர்.

பரி :—(இ-ள்.) குற்றமற்றனவாய்ச் சிலவாய வார்த்தைகளை ‖ அவ்வாற்றாற் சொல்லுதலை யறியாதார் பலவாய வார்த்தைகளைத் தொடுத்துச் சொல்ல விரும்புவர், (எ-று).

---

* பெறின் என்னும் எதிர்கால வினையெச்சம் நிரந்தினிது சொல்லுதல் வல்லாரைப் பெறுதலின் அருமையைக் குறிப்பித்து நின்றது.

† ஈண்டும் என்னும் எச்சவும்மை "கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும், வேட்ப மொழிவதாஞ் சொல்" என்னுங் குறளைத் தழுவிநின்றது. இக்குறளில் கேட்டார் என்பதற்கு நட்பா யேற்றுக்கொண்டாரை என்று பொருள் கூறியிருத்தலு மிங்கறியத் தக்கது.

‡ ஏற்றுக்கோடல்—அங்கீகரித்தல்.

¶ அவ்வாற்றால் – சொல்வன்மை, சோர்வின்மை, அஞ்சாமை, நிரந்தினிது சொல்லுதல் என்னும் வாயிலாக.

0 "மன்றவென் கிளவி தேற்றஞ் செய்யும்" என்பது தொல் காப்பியம்.

‖ அவ்வாற்றால் – சொல்வன்மை, சோர்வின்மை, அஞ்சாமை, நிரந்தினிது சொல்லுதல் என்னும் வாயிலாக.

குற்றம்– *மேற்சொல்லிய குணங்கட்கு †மறுதலையாயின. இடைவிடாது பல சொல்லுதலையுஞ் சொல்வன்மையென்று விரும்புவாருமுளர், அவர் ‡இவ்வாறு சொல்லமாட்டாதாரே; ¶வல்லார் ०அது செய்யாரென யாப்புறுப்பார் 'மன்ற' என்றார்.

தெளி :—(இ-ள்.) மாசற்ற–குற்றமற்றனவாய், சில – சிலவாகிய வார்த்தைகளை, சொல்லல் – (அவ்வழியாற்) சொல்லுதலை, தேற்றாதவர்-அறியாதவர், பல–பலவாகிய வார்த்தைகளை, சொல்ல - (தொடுத்துக்) கூற, மன்ற–நிச்சயமாக, காமுறுவர் – விரும்புவார், (எ – று).

குற்றம் – முற்கூறிய குணங்களுக்கு மாறாயின. இடைவிடாமற் பல சொல்லுதலையும் சொல்வன்மையென்று விரும்புவாரும் உண்டு, அவர் இப்படிச் சொல்லமாட்டாதவரே, வல்லவர் அதுசெய்யாரென உறுதிப்படுத்துவார் 'மன்ற' என்றார்.

(க-து.) குற்றமற்றனவாய்ச் சிலவாய வார்த்தைகளைச் சொல்லவறியாதவர் பலவாய வார்த்தைகளைச் சொல்ல விரும்புவர்.

9. They will desire to utter many words, who do not know how to speak a few faultless ones.

---

**கO. இணரூழ்த்து நாறா மலரனையர் கற்ற**
**துணர விரித்துரையா தார்.**

பரி :—(இ-ள்.) கற்றுவைத்த நூலைப் பிறரறியும் வண்ணம் விரித்துரைக்கமாட்டாதவர் கொத்தின் கண்ணே மலர்ந்து வைத்தும் நாறாத பூவை யொப்பர், (எ–று).

§செவ்விபெற மலர்ந்துவைத்தும் நாற்றமில்லாத பூச்சூடப்படாதவாறு போல நூலைக்கற்றுவைத்துஞ் சொல்லமாட்டாதார்

---

* மேற்சொல்லிய குணங்கட்கு – இவ்வதிகாரத்தின் மூன்றாவது குறளின் விசேடவுரையில் கூறியுள்ள குணங்களுக்கு.

† மறுதலையான குணங்கள் - வழுவுடைத்தாதல், மிகைபடக் கூறுதல், விளங்கக் கூறாமை, கேட்டற்கினிதாகாமை, விழுப்பயன் தாராமை, மாறுகொளக்கூறல், வெற்றெனத்தொடுத்தல் முதலாயின.

‡ இவ்வாறு – வழுவின்மை முதலியனவில்லாமலிங்ஙனம்.

¶ வல்லார் – சொல்வன்மையுடையார்.

० அது – பலவாய வார்த்தைகளைச் சொல்லுதல்.

§ "அள்ளிக்கொள் வன்ன குறுமுகிழ வாயினுங், கள்ளிமேற் கைந்நீட்டார் சூடும்பூ வன்மையால்" என்பது நாலடியார்.

நன்கு மதிக்கப்படா ரென்றமையின், இது *தொழிலுவமையாயிற்று. இவை இரண்டுபாட்டானும் †அது மாட்டாதார திழிபு கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்). கற்றது - கற்றுவைத்தநூலை உணர - (பிறர்) அறியும் வண்ணம், விரித்துரையாதார் - விரித்துரைக்க மாட்டாதவர், இணர் - கொத்தினிடத்தே, ஊழ்த்தும் - மலர்ந்திருந்தும், நாறு - வாசனையில்லாத, மலரனையர் - பூவையொப்பர், (எ-று).

அழகுபெற மலர்ந்திருந்தும் வாசனையில்லாதமலர் சூடப்படாத விதம்போல நூலைக்கற்றிருந்தும் சொல்லமாட்டாதவர் நன்கு மதிக்கப் படா ரென்று கூறினமையின், இது தொழிலுவமையணியாம். இவை இரண்டுபாட்டாலும் அது மாட்டாதாரது இழிவு சொல்லப்பட்டது.

(க-து.) தாங்கற்றுள்ள நூற்பொருளை விரித்துரைக்கும் வலியில்லாதவர் வாசனையில்லாத மலருக்கொப்பாவர் என்பது.

10. Those who are unable to set forth their acquirements before others are like flowers blossoming in a cluster without giving fragrance.

---

## மூன்றாவது அதிகாரம்

### £வினைத்தூய்மை :—Purity of action

பரி:—அஃதாவது செய்யப்படும் வினைகள் பொருளேயன்றி அறமும் புகழும் பயந்து நல்லவாதல் சொல்லேயன்றிச் செயலும் நன்றாக வேண்டுமென்கின்றமையின், இது சொல்வன்மையின்பின் வைக்கப்பட்டது.

தெளி:—அஃதாவது செய்யப்படுந் தொழில்கள் பொருளையே யல்லாமல் அறத்தையும் புகழையும் தந்து நல்லனவாதல், சொல்லே யல்லாமல் செயலும் நன்றாகவேண்டுமென்கின்றமையால், இது (வினைத்தூய்மை) சொல்வன்மையின் பின்வைக்கப்பட்டது.

க. **துணைநல மாக்கந் தரூஉம் வினைநலம்**
**வேண்டிய வெல்லாந் தரும்.**

பரி:—(இ-ள்.) ஒருவனுக்குத் துணையது நன்மை செல்வமொன் றனையுங் கொடுக்கும், ¶அவ்வளவன்றி வினையது நன்மை அவன் வேண்டியன யாவற்றையுங் கொடுக்கும், (எ-று).

---

* சூடப்படாமை யென்னுந்தொழிலையுவமானமாகக் கொண்டமையின், இது தொழிலுவமையாயிற்று.

† அதுமாட்டாதாரது - முறைப்படச் சொல்லுந்திறமற்றவரது.

£ வினைத்தூய்மை - செய்காரியம் தூயதாதல்.

¶ அவ்வளவன்றி - துணைநலம் செல்வமொன்றனையுந் தரும் அளவாதல் போலாகாமல்.

வேண்டியவெல்லா மென்றது இம்மைக்கண் அறம்பொருளின்ப *முதலாயவற்றையும், மறுமைக்கட் டான்விரும்பிய பதங்களையும். இதனாற் காணப்படுந் †துணை நன்மையினுங் ‡கருதப்படும் வினை நன்மை சிறந்ததென வினைத்தூய்மையது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) (ஒருவனுக்கு) துணைநலம்-துணையினது நன்மையானது, ஆக்கம் - செல்வமொன்றனையும். தரூஉம் - கொடுக்கும், (அவ்வளவல்லாமல்), வினைநலம் - தொழிலினது நன்மையானது, வேண்டியவெல்லாம் - (அவன்) வேண்டியன யாவற்றையும், தரும்-கொடுக்கும், (எ-று).

வேண்டியவெல்லாமென்றது இம்மையில் அறம் பொருளின்ப முதலாயவற்றையும், மறுமையில் தான்விரும்பிய பதவிகளையும். இதனுல் காணப்படுந் துணை நன்மையினும் கருதப்படுந் தொழில் நன்மை சிறந்ததென்று வினைத்தூய்மையது சிறப்புச் சொல்லப் பட்டது.

(க-து.) துணை நலத்தினும் வினை நலஞ் சிறந்ததென்பது,

1. The efficacy of support will yield only wealth ; but the efficacy of action will yield all that is desired.

---

உ. என்று மொருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை.

பரி :—(இ-ள்.) தம்மரசனுக்கு இம்மைக்கட் புகழும் மறுமைக்கண் அறமும் பயவாத வினைகளை அமைச்சர்க்கு எக்காலத்து மொழிதல் வேண்டும், (எ-று).

¶பெருகல், சுருங்கல், இடைநிற்றலென்னும் நிலைவேறுபாடு காலத்தான் வருதலின் 'என்றும்' என்ருர். வேண்டுமென்பது ஈண்டு இன்றியமையாதென்னும் $பொருட்டு.

தெளி :—(இ-ள்) (தம்மரசனுக்கு) புகழொடு - (இம்மையில்) புகழையும், நன்றி - (மறுமையில்) அறத்தையும், பயவா - தாராத, வினை - தொழில்களை, என்றும் - எக்காலத்திலும், ஒருவுதல்வேண்டும் (மந்திரிகளுக்கு) ஒழிதல் வேண்டும், (எ-று).

---

* முதலாயவற்றையு மென்றது பேர், புகழ், சொற்செலவு, ஒளி முதலியவற்றை.

† துணை - துணையாயுள்ளவர். துணையாவார் - தொழில் செய்தற்கண் உடனிருந்து உதவிசெய்பவர். ‡ கருதப்படும் - ஆராய்ந்தெண்ணப்படும்.

¶ "அறனறிந் தான்றமைந்த' என்னும் குறளின் விசேடவுரையில் "தன்னரசன் சுருங்கிய காலத்தும் பெருகிய காலத்தும் இடைநிகராய காலத்தும் என்பார் 'எஞ்ஞான்றும்' என்ருர்" என்று கூறியிருத்தலுமிங்கறியத்தக்கதாம்.

$ பொருட்டு - பொருளது.

(அரசனுக்குப்) பெருகல், சுருங்கல், நடுநிற்றல் என்னும் நிலை வேறுபாடு காலத்தால் வருதலால் 'என்றும்' என்றார். வேண்டு மென்பது இங்கு அவசியம் என்னும் பொருளில் வந்தது.

(கு-து.) புகழையும் அறத்தையும் தராத தொழில்களை யெப்பொழுதும் மந்திரிகள் விட்டுவிடல் வேண்டும் என்பது.

2. Ministers should at all times avoid acts which, in addition to fame, yield no benefit for the future.

---

ரு. ஓஒதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை
யாஅது மென்னு மவர்.

பரி :—(இ-ள்.) மேலாகக் கடவே மென்று கருதுவார் தம்மொளி கெடுதற்குக் காரணமாய வினையைச் செய்தலைத் தவிர்க, (எ-று).

ஓஒதல் வேண்டுமென்பது ஒரு சொன்னீர்மைத்து. ‡ஓவுத லென்பது குறைந்து நின்றது. *ஒளி தாமுள காலத்து எல்லாரானும் நன்கு மதிக்கப்படுதல். செய்யென்னும் முதனிலைத் தொழிற்பெயர் மாற்றப்பட்டது. அன்றிச் ¶செய்வினையென வினைத்தொகை யாக்கியவழிப் பொருளின்மை யறிக. ஒளிகெடவருவது ஆக்கமன் றென்பதாம்.

தெளி :—(இ-ள்.) ஆஅதும்-மேலாகக்கடவோம், என்னுமவர்- என்று நினைப்பவர், ஒளி - (தம்) ஒளி, மாழ்கும்-கெடுதற்குக் காரண மாகிய, வினை - தொழிலை, செய் - செய்தலை, ஓஒதல் வேண்டும் - ஒழியக்கடவர், (எ-று).

ஓஒதல்வேண்டும் என்பது (இருசொல்லாகாமல்) ஒரு சொல்லின் தன்மையதாய் நின்றது. ஓவுதல் என்பது (வு என்பது) குறைந்து ஓஒதல் என அளபெடுத்து நின்றது. ஒளியாவது தாமுள்ள காலத்தில் யாவராலும் சிலாகிக்கப்படுதல். செய்வினையென்பது வினைசெய் என மாற்றப்பட்டது. செய் என்பது முதனிலைத் தொழிற் பெயர். இவ்வாறு மாற்றுவதல்லாமல் செய்வினையென்று வினைத் தொகை யாக்கிய விடத்துப் பொருளில்லாமையை யறிக. ஒளிகெடவரும் செல்வம் செல்வமன்றென்பதாம்.

---

‡ "மடியிலா மன்னவன்" என்னுங் குறளின் விசேட வுரையில் "தாவிய தென்பது (தாஅயதென) இடைக்குறைந்து நின்றது" என்றிருப்பது மிங்குணர்தற் பாலதாம்.

* "ஒளியொருவற் குள்ள வெறுக்கை" என்னுங் குறளின் விசேடவுரையில் "ஒளி தானுளனாயகாலத்து மிக்குத்தோன்று தலுடைமை 'ஒளிநிறுவேனுங்குபுகழ் செய்யான்' என்றார் பிறரும்" என்று கூறியிருத்தலு மிங்கறியத் தக்கது.

¶ செய்வினை யென்பது வினைசெய் யெனமாற்றாது வினைத்தொகை யாகக்கொண்டால், அது செய்யும் வினையென விரிந்துபொருள் பொருத்தமில்லாது போவதறிக.

(க-து.) மேன்மையை யடையவிரும்புவோர் மதிப்புக்கெடுதற் கேதுவாய தொழிலைச் செய்யா திருக்கக்கடவர் என்பது.

3. Those who say we will become better should avoid the performance of acts that would destroy their fame.

---

ச. இடுக்கட் படினு மிளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர்.

பரி :—(இ-ள்.) தாமிடுக்கணிலே *படவரினும் †அது தீர்தற் பொருட்டு ‡முன் செய்தார்க்கு இளிவந்த வினைகளைச் செய்யார் துளக்கமற்ற தெளிவினை யுடையார், (எ-று).

சிறிதுபோழ்திற் கழிவதாய இடுக்க ணோக்கி எஞ்ஞான்றுங் கழியாத விளிவு எய்தற் பாலதன்றென்பதூஉம், $அஃதெய்தினும் வருவதுவருமென்பதூஉம் தெளிவராகலான் 'செய்யார்' எனறூர்.

தெளி :—(இ-ள்.) நடுக்கற்ற – அசைவற்ற, காட்சியவர் – தெளிவினை யுடையவர், இடுக்கட்படினும் – (தாம்) துன்பத்திலே படவரினும், (அது தீர்தற்பொருட்டு), இளிவந்த–(முன்செய்தவர்க்கு) இழிவுவந்த தொழில்களை, செய்யார் – செய்யமாட்டார், (எ-று).

சிறிது பொழுதில் நீங்குவதாகிய துன்பத்தை நோக்கி எப்போதும் நீங்காத இழிவு அடைதற் றன்மைய தன்றென்பதும், அவ்விழிவை யடைந்தாலும் வருவதாகிய துன்பம் வருமென்பது தெளிவாராதலால் 'செய்யார்' என்றூர். இளி - இளிவு என்பதன் விகாரம்.

(க-து.) கலங்குதலில்லாத அறிவினை யுடையவர் துன்பம் நேர்ந்த விடத்தும் இழிதொழிலைச் செய்யார் என்பது.

4. Those who have an infallible judgment though threatened with peril will not do acts which have brought disgrace on former ministers.

---

ரு. எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று.

பரி :—(இ ள். யான் செய்தது எத்தன்மைத் தென்று பின் றனே ¶யிரங்கும் வினைகளை ஒரு காலுஞ் செய்யாதொழிக; அன்றி

---

* பட – அகப்பட. † அது - இடுக்கண்.

‡ முன் செய்தார்க்கு – முன்னே வினைகளைச் செய்தவர்க்கு.

$ இடுக்கண் தீர்தற்பொருட்டு இளிவந்த வினைகளைச் செய்து இளிவை யடைந்தாலும் வருவதாகிய இடுக்கண் வாரா தொழியா தென்பதும்.

¶ இரங்கும் – வருந்தும்.

ஒருகான்மயங்கி *அவற்றைச் செய்யுந் தன்மையனாயினானாயின், பின்னிருந்து அவ்விரங்கலகளைச் செய்யா தொழிதல் நன்று, (எ-று).

'இரங்குவ' என முன் வந்தமையிற் பின் †'அன்ன' எனச் $சுட்டியொழிந்தார். அவ்வினைகளது பன்மையான், இரக்கமும் பலவாயின. அச்செயற்குப் பின்னிருந்திரங்குவனாயின், ‡அது தீரும் வாயி லறிந்திலனெனவும், திட்பமிலனெனவும், பயனில்லன செய்கின்றானெனவும், தன் பழியைத் தானே ¶தூற்றுகின்றானெனவும் எல்லாரு மிகழ்தலின் £'மற்றன்ன செய்யாமை நன்று' என்றார். §இதுவும் வினைத்தூயார் செயலாகலின், உடன் கூறப்பட்டது. ()பிற்றொடர்தற்குச் செய்வானாயின் அவை போல்வனவுஞ் செய்யாமை நன்றெனப் ○பிறரெல்லாம் இயைபற வுரைத்தார்.

தெளி:— (இ-ள்.) எற்றென்று–(நான் செய்தது) எத்தன்மையதென்று, இரங்குவ-(பின் தானே) இரங்குந் தொழில்களை, செய்யற்க-(ஒருகாலும்) செய்யாதிருக்கக்கடவன், செய்வானேல் – (அல்லாமல் ஒருகால் மயங்கி அத்தொழில்களைச்) செய்யுந்தன்மையனாயினானாயின், மற்று-பின்னிருந்து, அன்ன-அவ்விரங்கல்களை, செய்யாமை-செய்யா தொழிதல், நன்று-நல்லது, (எ-று).

'இரங்குவ' என முன்னே வந்தமையால் பின்னே இரங்குவ எனக் கூறாது அதனை 'அன்ன' எனச் சுட்டி யொழிந்தார். அவ்விரங்குந் தொழில்களது பன்மையால், அத்தொழில்கள் பற்றியுண்டாகும் இரக்கமும் பலவாயின. இரங்குந் தொழில்களைச் செய்துவிட்டு அச்செயலுக்காகப் பின்னிருந்து இரங்குவானாயின், அது தீரும்வழியை அறிந்திலனென்றும், மனவுறுதியில்லாதவனென்றும், பயனில்லாதவற்றைச் செய்கின்றானென்றும், தன்பழியைத் தானே தூற்றுகின்றானென்றும் எல்லாரும் இகழுவாராதலால் 'மற்றன்ன செய்யாமை நன்று' என்றார். இவ்விரங்கல்களைச் செய்யாமையும் வினைத்தூயார் செயலாகலால், உடன்சொல்லப்பட்டது.

---

* அவற்றை – தானே யிரங்கும் வினைகளை.

† அன்ன என்பது அ என்னும் சுட்டடியாகப் பிறந்த பலவின் படர்க்கை வினையாலணையும் பெயர். அன்ன என்பதில் னகரவொற்றுச் சாரியையாம்.

$ சுட்டி யொழிதல் – ஒன்றனைப்பெயராற்றெரிவியாது சுட்டாற்றெரிவித்தல். ‡ அது-இரங்குதல்.

¶ தூற்றுதல் - பலரறியத் தெரிவித்தல்.
£ பின்னிரங்காமை நன்று என்றும் பாடமுண்டு. பின்னிரங்காமை-பச்சாதாபப்படாமை.

§ இதுவும் – எற்றென்றிரங்குவ செய்யாமையும்.

() 'செய்வானேன் மற்றன்ன செய்யாமை நன்று' என்பதற்கு (எற்றென்றிரங்கும் தொழில்களைப்) பின்னே தொடர்தற்குச் செய்வானானால் எற்றென்றிரங்கும் அத்தொழில்கள் போல்வனவும் செய்யாதிருத்தல் நல்லது எனப் பிறரெல்லாம் சம்பந்த மில்லாமற் பொருள் கூறினாரென்பது.

○ பிறரெல்லாம் என்றது தருமர் முதலிய உரைகாரர்களை.

(க-து.) பின்னிருந்து வருந்துதற்கேதுவாய தொழில்களைச் செய்யாதிருத்தல் வேண்டும் என்பது.

5. Let a minister never do acts of which he would have to grieve saying "what is this I have done;" but should he do them, it were good that he grieved not.

---

**சா. *ஈன்றாள் பசிகாண்பா ளாயினுஞ் செய்யற்க**
**சான்றோர் பழிக்கும் வினை.**

பரி:—(இ-ள்.) தன்னைப் பயந்தாளது பசியை வறுமையாற் கண்டிரங்குந் தன்மைய னாயினானெனினும் †அது சுட்டி அறிவுடையார் பழிக்கும் வினைகளை ஒருவன் செய்யாதொழிக, (எ—று).

‡இறந்த மூப்பினராய ¶இருமுதுகுரவருங் கற்புடைமனைவியுங் குழவியும் பசியான் வருந்து மெல்லைக்கண் தீயன பலவுஞ் செய்தாயினும் புறந்தருகவென்னும +அறநூற் பொதுவிதி, ||பொருணூல் வழி யொழுகுதலும் அரசர் தொழிற்குரியராதலும் நன்குமதிக்கற் பாடுமுடைய அமைச்சர்க் கெய்தாமைபற்றி (‡)இவ்வாறு கூறினார். இவை யைந்துபாட்டானும் பாவமும் பழியும் பயக்கும் வினை செய்யற்கவென்பது கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) ஈன்றாள் - (தன்னைப்) பெற்ற தாயினது, பசி - பசியை, காண்பானாயினும் - (வறுமையால்) கண்டிரங்குந் தன்மையனாயினனெனினும், (அதனைக்குறித்து), சான்றோர் - (அறிவினால்) நிறைந்தோர், பழிக்கும் வினை - பழிக்குந் தொழில்களை, செய்யற்க (ஒருவன்) செய்யாதிருக்கக் கடவன், (எ-று).

---

* யாவரினும் தன்னைப்பெற்றவளே மேம்பட்டிருத்தல்பற்றி ஈன்றாளையே விதந்து கூறினர். இஃது "அன்னையும் பிதாவு முன்னறி தெய்வம்" "ஈன்றாளி னென்ன கடவுளு மில்" என்று வரும் பிரயோகங்களாலும் நன்கு விளங்கும்.

† அதுசுட்டி - தன்னைப்பெற்றாளது பசியைக்குறித்து.

‡ இறந்த மூப்பினராய - மிக்க கிழத்தன முடையவரான.

¶ இருமுது குரவர் - இரண்டு பழையகுருமார். அவர் - தாய் தந்தையர்.

+ அறநூல் - தரும சாஸ்திரம். மனுதருமசாஸ்திரம் நான்காவதத்தியாயத்தில். "பசியால் துன்புறுகின்ற அன்னை, பிதா, குரு, வேலைக்காரரென்னு மிவர்களைக் காப்பாற்றுகிறவனாயும், தேவர் அதிதியென்னு மிவர்களைப் பூசிக்கிறவனாயு மிருப்பவன் யாரிடத்தும் தானம் வாங்கலாம்; அத்தானத்தால் தான் ஜீவித்தல் கூடாது" என்று கூறுகின்றது.

|| பொருணூல் - அருத்தசாஸ்திரம். (‡) 'ஈன்றாள் பசிகாண்பானாயினுஞ் செய்யற்க, சான்றோர் பழிக்கும் வினை' என்றிவ்வாறு.

*மிகவும் வயது முதிர்ந்தவராய தாய் தந்தையரும், கற்புடைய மனைவியும், குழந்தையும் பசியால் வருந்துமளவில் தீயகாரியங்கள் பலவும் செய்தாயினும் காப்பாற்றுகவென்று கூறும் அறநூல் பொது விதி, பொருள் நூலின் வழிநடத்தலும் அரசர் தொழிற்கு உரிய ராதலும் நன்கு மதிக்கப்படுதலுமுடைய மந்திரிகளுக்கு ஆகாமை பற்றி இப்படிச் சொல்லினர். இவை ஐந்துபாட்டாலும் பாவமும் பழியுந் தருந் தொழிலைச் செய்வ தொழிகவென்பது சொல்லப் பட்டது.*

(க-து.) *ஒருவன் தனது தாயினது பசியை வறுமையாற் கண்டானாயினும், அஃதொழிய அறிவுடையார் பழிக்குந் தொழில் களைச் செய்யாதிருத்தல் வேண்டும் என்பது.*

6. Though a minister may see his mother starve, let him do no act which the wise would treat with contempt.

---

**எ. பழிமலைந் தெய்திய வாக்கத்திற் சான்றோர்**
**கழிநல் குரவே தலை.**

**பரி:—(இ-ள்) சாலாதார் தீயவினைகளைச் செய்து அதனுற் பழியைத் தம்மேற்கொண்டு பெற்ற செல்வத்தின் அது மேற்கொள்ளாத சான்றோ ரனுபவிக்கும் மிக்க நல்குரவே உயர்ந்தது, (எ-று).**

*நிலையாத செல்வத்தின் பொருட்டு நிலையின பழியை மேற்கோடல் *சால்போடியையாமையின் 'சான்றோர் கழிநல் குரவே தலை' என்றார்.*

தெளி:— (இ-ள்.) *(சான்றோரல்லாதவர் தீய தொழில்களைச் செய்து) பழிமலைந்து - (அதனுற்) பழியைத் தம்மேற்கொண்டு, எய்திய - பெற்ற, ஆக்கத்தின் - செல்வத்தைக்காட்டிலும், சான்றோர் - (அப்பழியை மேற்கொள்ளாத) சான்றோர், (அனுபவிக்கும்), கழிநல் - குரவே - மிகுந்த வறுமையே, தலை - உயர்ந்தது, (எ-று).*

*நிலைபெறுவதில்லாத செல்வத்தின் பொருட்டு நிலைபெற்ற பழியை மேற்கொள்ளுதல் சான்றோர் தன்மையோடு பொருந் தாமையால், 'சான்றோர் கழிநல் குரவே தலை' என்றார்.*

(க-து.) *தீயவர் பழியோடுபெற் றனுபவிக்குஞ் செல்வத்திலும் சான்றோரனுபவிக்கும் வறுமையே மேலானதாம் என்பது.*

7. Far more excellent is the extreme poverty of the wise than wealth obtained by a heaping up of sinful deeds.

---

**அ. கடிந்த கடிந்தொரார் செய்தார்க் கவைதா**
**முடிந்தாலும் பீழை தரும்.**

---

**சால்பு - பலகுணங்களாலும் நிறைதல்.*

பரி :—(இ-ள்.) *நூலோர் ‡கடிந்த வினைகளைத் தாமுங் கடிந்-தொழியாது பொருளுக்கிச் செய்த அமைச்சர்க்கு †அவை தூய வன்மையின் முடியா; ஒருவாற்றான் முடியினும் பின் துன்பத்தையே கொடுக்கும். (எ-று).

முடிதல் - கருதிய பொருள் தருதல். ¶பீழை தருதலாகிய பொருளின் றொழில் அதற்குக் காரணமாய வினைகண்மேே லேற்றப் பட்டது.

தெளி :—(இ-ள்.) கடிந்த - (நூலோர்) விலக்கிய தொழில்களை கடிந்தொரார் - (தாமும்) விலக்கியொழியாது, செய்தார்க்கு (பொருளை நோக்கிச்) செய்த மந்திரிகளுக்கு, அவைதாம் அத்தொழில்கள், (தூயனவல்லாமையால் முடியாவாம்) முடிந்தாலும் - (ஒரு வழியால்) முடிவு பெற்றாலும், (பின்), பீழை துன்பத்தையே, தரும் - கொடுக்கும், (எ-று).

முடிதல் - நினைத்த பொருளைத் தருதல். பீழையைத் தருவதாகிய பொருளினது தொழிலை அப்பொருளுக்குக் காரணமான தொழில்-களின் மேலேற்றி 'அவைதா முடிந்தாலும் பீழை தரும்' என்று சொல்லப்பட்டது.

(க-து.) நூலோர் விலக்கிய தொழில்களைச் செய்து பொருள் சேர்த்த மந்திரிகளுக்கு அதனால் பின்னர்த் தீமையுண்டாம்.

8. The action of those who have not desisted from doing deeds forbidden by the great, will even if they succeed, cause them sorrow.

---

கூ. அழக்கொண்ட வெல்லா மழப்போ மிழப்பினும்
பிற்பயக்கு நற்பா லவை.

பரி .—(இ-ள்.) ஒருவன் தீய வினைகளைச் செய்து பிறரிரங்கக் கொண்ட பொருளெல்லாம் இம்மையிலேஅவன்றான் இரங்கப் போகா நிற்கும்; மற்றைத் தூய வினையான் வந்த பொருள்கள் முன்னிழந்தான் ஆயினும் அவனுக்குப் பின்னர் வந்து பயன் கொடுக்கும், (எ-று).

§'பின்' எனவே மறுமையு மடங்கிற்று. பொருள்களான் ||அவற்றிற்குக் காரணமாய வினைகள தியல்பு கூறியவாறு.

---

* நூலோர் – தரும சாஸ்திர மறிந்தவர்.

‡ கடிந்த – செய்யக் கூடாதென்று விலக்கிய

† அவை – நூலோர் கடிந்த வினைகள்

¶ துன்பத்தைத் தருவதான பொருளினது தொழிலை அப்பொருளுக்குக் காரணமான (நூலோர் கடிந்த) தொழில்களின் மேல் ஏற்றி 'அவைதா முடிந்தாலும் பீழை தரும்' என்று சொன்ன-மையால், இது காரியத்தின் தொழிலைக் காரணத்தின் மேலேற்றிக் கூறிய வுபசார வழக்காம்.

§ 'பின்' என்று கூறினமையின் நற்பாலவை (தூய வினையால் வந்த பொருள்கள்) புண்ணிய ரூபமாக வந்து இம்மையிலேயன்றி மறுமையிலும் பயன்தரு மென்பதாம்.

|| அவற்றிற்கு - பொருள்களுக்கு.

தெளி :—(இ-ள்.) (ஒருவன்) அழக்கொண்ட வெல்லாம் - (தீய தொழில்களைச் செய்து பிறர்) இரங்கக் கொண்ட பொருளெல்லாம், அழப்போம் - (இம்மையிலே அவன்றான்) இரங்கப் போகா நிற்கும், நற்பாலவை - (மற்றை) நல்ல தொழிலால் வந்த பொருள்கள், இழப்பினும் - (முன்) இழந்தானாயினும், பிற்பயக்கும் - (அவனுக்குப்) பின்வந்து பயன் கொடுக்கும், (எ-று).

'பின்' எனவே மறுமையும் அடங்கிற்று. பொருள்களால் அவற்றிற்குக் காரணமாகிய தொழில்களது இயல்பு சொல்லியபடியாம்.

(க-து.) பிறரழுமாறு தான் கொண்ட பொருள் தானழுமாறு பின்னர்ப் போவதாயிருத்தலால், ஒருவன் நல்ல வழியில் பொருளைத் தேடல் வேண்டும் என்பது.

9. All that has been obtained with tears to the victim will depart with tears to himself ; but what has been obtained by fair means, though with loss at first, will afterward yield fruit.

— —

660 கO. சலத்தாற் பொருள்செய்தே *மார்த்தல் பசுமட் கலத்துணீர் பெய்திரீஇ யற்று.

பரி :—(இ-ள்.) அமைச்சன் தீய வினைகளாற் பொருள் படைத்து $அதனால் அரசனுக்கு ஏமஞ்செய்தல் ||பசிய மட்கலத்துள்ளே நீரைப் பெய்து £அதற்கு ஏமஞ் செய்ததனோ டொக்கும், (எ-று).

முன் ஆக்கம் பயப்பனபோறறேன்றிப் பின்னழிவே பயத்தலால், †அவை ‡சலம் எனப்பட்டன. ஏமமார்த்தலென்பது ஏமார்த்தலென்றாயிற்று; ஏமத்தை யடையப்பண்ணுத லென்றவாறு. இருத்துதல் - நெடுங்காலமிருப்பச் செய்தல் ¶அரசனும் பொருளும் சேரப்போ மென்பதாம் §பிறரெல்லாம் ஏமாத்தலென்று

---

* மாக்கல் என்றும் பாடமுண்டு.

$ அதனால் - தீய தொழில்களால் சம்பாதித்த பொருளால்.

|| பசிய மட்கலம் - பச்சை மண்பாத்திரம்.

£ அதற்கு - பச்சை மண்பாத்திரத்திற்கு.

† அவை - தீயவினைகள்.

‡ புறத்தே ஒருவாறாகப் புலப்பட்டு அகத்தே ஒருவாறாக இருப்பதென்பது சலமென்பதன் பொருளாம். வஞ்சனை யென்றபடி.

¶ பசிய (சுடாத) மட்கலத்துள்ளே நீரை வார்த்து அதனைக் காவல் செய்தால் அம்மட்கலம் அந்நீரோடு விரைவி லழிவதுபோலத் தீய தொழில்களால் சம்பாதித்த பொருளால் அரசனைக் காவல் செய்தால் அவ்வரசன் அப்பொருளோடு விரைவி லழிவா னென்பதாம்.

§ மற்ற உரைகார ரெல்லாம் ஏமார்த்தலென்பதனை ஏமாத்தல் என்று பாடங்கூறி அதற்கு மகிழ்தல் என்றும், இரீஇயற்று என்பதற்கு வைத்தாற்போலுமென்றும் உரை கூறினர். அவர்கள் ஏமாத்தல் (மகிழ்தல்) என்பது தன்வினையும் இரீஇயற்று என்பது மற்றொன்றின் வினையுமாய் உவமை யிலக்கணத்தோடு மாறுபடுதலைக் கவனித்தாரில ரென்பதாம்.

பாடமோதி அதற்கு மகிழ்தலென்றும், இரீஇயற்றென்பதற்கு வைத்தாற் போலுமென்று முரைத்தார் அவர் அவை *தன்வினையும் பிறிதின் வினையுமாய் உவமை யிலக்கணத்தோடு மாறுகோடல் நோக்கிற்றிலர். இவை நான்கு பாட்டானும் †அதற்குக் காரணங் கூறப்பட்டது.

தெளி:— (இ-ள்.) (மந்திரியானவன்) சலத்தால் – தீய தொழில்களால், பொருள் செய்து - பொருளைச் சம்பாதித்து, ஏமார்த்தல் – (அதனால் அரசனுக்கு) ஏமஞ் செய்தல், பசுமட்கலத்துள் – பசிய மட்பாத்திரத்தினுள்ளே, நீர்பெய்து – நீரைவார்த்து, இரீஇயற்று – (அதற்கு) ஏமஞ் செய்ததனோ டொக்கும், (எ-று).

தீய தொழில்கள் முன்னே செல்வத்தைத் தருவன போலத் தோன்றிப் பின்னே அழிவையே தருவதால், அவை சலம் என்று கூறப்பட்டன. ஏமம் ஆர்த்தல் என்பது செய்யுள் விகாரத்தால் ஏமார்த்தலென்றாயிற்று; அதன் பொருள் காவலையடையப்பண்ணுதலென்பதாம். பசுமட்கலத்துள் நீரை இருத்துதல் – அக்கலத்தின்கண் அந்நீரை நெடுங்காலம் இருப்பச் செய்தல். 'பசுமட், கலத்துணீர் பெய்திரீஇ யற்று' என்னும் உவமானத்தால் அரசனும் பொருளும் ஒருமிக்கக் கெடும் என்பது பெறப்பட்டது. இவை நான்கு பாட்டாலும் அதற்குக் காரணம் சொல்லப்பட்டது.

(க-து.) மந்திரி தீய தொழில்களால் பொருளைத் தேடி, அதனால் அரசனைப் பாதுகாத்தல் பச்சை மண்பாத்திரத்தில் நீரை வார்த்து அதனைப் பாதுகாப்பது போலவாம் என்பது.

10. For a minister to protect his king with wealth obtained by foul means is like preserving a vessel of unbaked clay by filling it with water.

---

## நான்காம் அதிகாரம்

## ௬௭ வினைத்திட்பம்—Firmness of Action

பரி:– அஃதாவது அத்தூய வினை முடிப்பானுக்கு வேண்டுவதாய மனத்திண்மை. ‡அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

தெளி:—அஃதாவது அப் பரிசுத்தமாகிய தொழிலை முடிக்கும் மந்திரிக்கு வேண்டுவதாகிய மனவுறுதியாம் அதிகார முறைமையும் இதனாலே விளங்கும்.

---

* ஏமாத்தல் என்னும் வினை மந்திரியின் மீதும் இரீஇயற்று என்னும் வினை மற்றொருவர் மீதுமாய் நின்று, ஏமாத்தல் என்னும் உவமேயத்திற்கு இரீஇயற்று என்பது உவமானமாகாது விரோதப் படுதலின், அவ்வுரை பொருந்தாதென்று பரிமேலழகர் மறுத்தனர்.

† அதற்கு - பாவமும் பழியும் பயக்கும் வினை செய்யற்க என்பதற்கு.

‡ வினைத்தூய்மை யென்னும் அதிகாரத்தின்பின் வினைத்திட்பமென்னும் அதிகாரம் வைத்த முறைமையும்.

க. வினைத்திட்ப மென்ப தொருவன் மனத்திட்ப
மற்றைய வெல்லாம் பிற.

பரி:—(இ-ள்.) வினை செய்தற்கட் டிண்மை யென்று சொல்லப்படுவது *அதனை முடித்தற் குரியானொருவன் மனத்தினது திண்மை; †அஃ தொழிந்தன வெல்லாம் ‡அதற்குத் திண்மை யென்று சொல்லப்படா, (எ-று).

*ஒழிந்தனவாவன: படை, அரண், நட்பு முதலியவற்றின் றிண்மைகள். §அவையும் ||அதற்கு வேண்டுவனவா யினமாகலின் 'மற்றைய' என்றும், வேண்டினும் அஃதில்வழிப் பயனிலவாகலின் 'பிற' என்றுங் கூறினர். இதனால் வினைத்திட்பமாவது இன்ன தென்பது கூறப்பட்டது.*

தெளி:—(இ-ள்.) *வினைத்திட்பமென்பது - தொழில் செய்யுமிடத்து வலிமை யென்று சொல்லப்படுவது, ஒருவன் - (அதனை முடித்தற்குரியான்) ஒருவனது, மனத்திட்பம் - மனத்தினது வலிமையாம், மற்றைய வெல்லாம் - அஃதொழிந்தன வெல்லாம், பிற -* (அதற்கு) வலிமையென்று சொல்லப்படுவன வல்ல, (எ-று).

*ஒழிந்தனவாவன: படை, அரண், நட்பு முதலியவற்றின் வலிமைகள். அவையும் அதற்கு வேண்டுவனவா யினமாயிருத்தலால் 'மற்றைய' என்றும், அவை வேண்டுவனவாயிருந்தாலும் அம்மன வலியில்லாத விடத்துப் பயனிலவாகலால் 'பிற' என்றும் சொல்லினர். இதனால் வினைத்திட்பமாவது இன்னதென்பது சொல்லப்பட்டது.*

(கு-து.) *வினை செய்வானுக்கு அது முடிவுபெறுதற்காய வலிமை அவனது மனவலிமையேயாம் என்பது.*

1. Firmness in action is simply one's firmness of mind; all other abilities are not of this nature.

---

உ. ¶ஒரரா லுற்றபி னொல்காமை யிவ்விரண்டி
னாறென்ப ராய்ந்தவர் கோள்.

பரி:—(இ-ள்.) முன் நீதி நூலாராய்ந்த அமைச்சரது துணிபு $பழுதுபடும் வினைகளைச் செய்யாமையும், செய்யும் வினை தெய்வத்தாற்

---

* *அதனை – வினையை.*

† *அஃது – மனத்திண்மை.*

‡ *அதற்கு – வினை செய்தற்கு.*

§ *அவையும் - படை, அரண் முதலியனவும்.*

|| *அதற்கு – வினை செய்தற்கு.*

¶ *தழுவுதல் என்பது தழால் என்றாயினாற்போல ஒருவுதல் என்பது ஒரால் என்றாயிற்று.*

$ *பழுதுபடும் – கெடுதியுண்டாகும்.*

பழுதுபட்டவழி அதற்குத் தளராமையும் ஆகிய இவ்விரண்டன் வழியென்பர் நூலோர், (எ-று).

†தேவர்க்கும் அசுரர்க்கும் அமைச்சுப் பூண்ட வியாழ வெள்ளிகளது துணிபுதொகுத்துப் பின் நீதிநூலுடையார் கூறியவாறு கூறுகின்றமையின், ஈண்டு ‡வினைத்தூய்மையும் உடன் கூறினார். ¶உறுதலுடையதனை முன் 'ஊறு' என்றமையின் 'உற்றபின்' என்றும், ()இவ்விரண்டின்கண்ணே பட்டதென்பார் 'இரண்டினாறு' என்றுங் கூறினார். +ஊறொராரென்றுபாட மோதுவாருமுளர்; அஃது ஒல்காமையென்னு மெண்ணோடும் இரண்டென்னுந் தொகையோடும் இயையாமை அவரறிந்திலர்.

தெளி:—(இ-ள்.) ஆய்ந்தவர் - (முன்பு நீதிநூலை) ஆராய்ந்த மந்திரிகளது, கோள் - துணிபு, ஊறு - பழுதுபடுந்தொழில்களை, ஓரால் - செய்யாமையும், உற்றபின் - (செய்யுந்தொழில் ஊழினால்) பழுதுபட்டவிடத்து, ஒல்காமை - (அதற்குத்) தளராமையும், (ஆகிய), இவ்விரண்டின் - இவ்விரண்டினது, ஆறு - வழியாகும், என்பர் - என்று சொல்லுவர், (நூலோர்), (எ-று).

தேவர்க்கும் அசுரர்க்கும் மந்திரியாயிருக்குந் தன்மையை மேற்கொண்ட பிருகஸ்பதி சுக்கிரன் இவர்களது துணிவைத் தொகுத்துப் பின்னே நீதிநூலுடையார் சொல்லியபடி சொல்லுகின்றமையால், இங்குவினைத் தூய்மையையும் உடன் சொல்லினார்.

---

* அதற்கு - பழுதுபட்டதற்கு.

† தேவர்க்கு அமைச்சுப் பூண்டவர் வியாழன் (பிருகஸ்பதி); அசுரர்க்கு அமைச்சுப் பூண்டவர் வெள்ளி (சுக்கிரன்). இவர்கள் செய்த நீதிநூல்களின் துணிவை (தீர்மானத்தை)ச் சங்கரகித்து அவர்கள்பின் தோன்றிய நீதிநூலாசிரியராகிய சாணக்கியர், காமந்தகர் கூறியபடி திருவள்ளுவ நாயனார் கூறுகின்றபடியால்.

‡ வினைத்தூய்மை என்றது-ஊறொரால் (பழுதுபடும் வினைகளைச் செய்யாமை) என்பதனை.

¶ உறுதலுடையதனை - பழுதுபடும் வினைகளை.

() ஊறொராலும் உற்றபி னொல்காமையுமென்னு மிவ்விரண்டிடத்தே.

+ ஊறொரால் என்பதனை ஊறொரார் என்று பாடங்கூறுவாருமுளர்; அவ்வாறு கூறுதல் ஒல்காமை யென்னும் செவ்வெண்ணுடனும் இரண்டென்னும் தொகையுடனும் பொருந்தாமையை அவர் அறிந்திலர். ஊறொரார் என்று பாடங்கொள்ளுமிடத்து அதற்குப் பழுதுபடும் வினைகளைச் செய்யாதவர் அல்லது செய்யாதவராகி யென்று பொருள்படுதலாலும், அது [ஊறுஓராலும் ஒல்காமையும் ஆகிய இவ்விரண்டின் ஆறு என்று பெயர்ச்செவ்வெண் (உம்மையெண்) இரண்டென்னும் தொகைபெற்று இனிதாக வமைதல் போலாகாமல்] ஒல்காமையும் என்னும் எண்ணுடனும் இரண்டென்னும் தொகையுடனும் பொருந்தாதுபோதலாலும், அது பாடமாகாதென்று பரிமேலழகர் மறுத்தாரென்க.

(பழுது) உறுதலுடையதனை முன்னே 'ஊறு' என்று கூறினமையால் 'உற்ற பின்' என்றும், ஆய்ந்தவர்கோள் வினைத்தூய்மையும் வினைத்திட்பமுமாகிய இவ்விரண்டினிடத்தே பொருந்தியதென்பார் 'இரண்டினாறு' என்றும் சொல்லினார்.

(க-து.) பழுதுபடுந் தொழில்களைச் செய்யாமையும் செய்யுந் தொழில் ஊழால் பழுதுபட்டவிடத்து அதற்குத் தளராமையுமே மந்திரிகளது துணிபாம் என்பது.

2. Not to perform a ruinous act, and not to be discouraged by the ruinous termination of an act, are the two maxims which the wise say form the principles of those ministers who have previously mastered the subject.

---

ரு. **கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை யிடைக்கொட்கி னெற்றா விழுமந் தரும்.**

**பரி:—(இ-ள்.) செய்யப்படும் வினையை முடிவின்கட் புலப்படும் வகை முன்னெல்லாம் மறைத்துச் செய்வதே திட்பமாவது; அங்ஙனமன்றி இடையே புலப்படுமாயின், அப்புலப்பாடு செய்வானுக்கு நீங்காத இடும்பையைக் கொடுக்கும், (எ-று).**

மறைத்துச் செய்வதாவது *அங்க மைந்து மெண்ணியவாறு பிறரறியாமலும், †தானறிந்ததூஉம் தன் ‡னிங்கிதம், வடிவு, செயல், சொற்களான் ¶அவருய்த் துணராமலும் அடக்கிச் செய்தல். அத் ()திட்பம் ஆண்டன்மையான் வருதலின் 'ஆண்மை' எனப்பட்டது. எற்றாவிழுமமாவன: பகைவர் முன்னறிந்து அவ்வினையை விலக்குதல், செய்வானை விலக்குதல் செய்வாராகலின், அவற்றான் வருவன. விழுமம் - சாதியொருமைப் பெயர். இவையிரண்டுபாட்டானும் ‖அதனது பகுதி கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) (செய்யப்படுந்தொழிலை) கடை - முடிவில், கொட்க-வெளிப்படும்படி, செய்தக்கது - (முன்னெல்லாம்மறைத்துச்) செய்வதே, ஆண்மை - வலி யாவதாம், (அவ்வாறல்லாமல்), (அத்தொழில்), இடை - நடுவிலே, கொட்கின் - வெளிப்படுமாயின், (அவ்வெளிப்படுதல்), எற்றா - நீங்காத, விழுமம் - துன்பத்தை, தரும் - (செய்பவனுக்குக்) கொடுக்கும், (எ-று).

---

* அங்கமைந்துமெண்ணியவாறு - நாடு, அரண், பொருள், படை, நட்பென்னும் அங்கங்களைந்தையும் பற்றித்தான் யோசிக்கும் வகையை.

† தானறிந்ததூஉம் - தானறிந்ததையும்.

‡ இங்கிதம் - குறிப்பால் நிகழும் உறுப்பின்தொழில்.

¶ அவர் - பிறர்.

() ஆண்தன்மையால் வருந்திட்பத்தை யாண்மை யென்றது கருவியாகு பெயராம்.

‖ அதனது பகுதி - வினைத்திட்பத்தினது தன்மை.

செய்யப்படுந் தொழிலை மறைத்துச் செய்வதாவது நாடு முதலாகிய அங்கம் ஐந்தும் எண்ணிய விதத்தைப் பிறர் அறியாமலும் தான் அறிந்ததும் தன்னிங்கிதம், வடிவு, செயல், சொற்களால் அவர் ஆராய்ந்தறியாமலும் அடக்கிச் செய்தல். அவ்வலிமை ஆண் தன்மையால் வருதலின் 'ஆண்மை' என்று கூறப்பட்டது. எற்றுவிழுமமாவன: பகைவர் முன்னறிந்து அத்தொழிலை விலக்குதலும், செய்வானை விலக்குதலும் செய்வாராதலால், அவ்விலக்குதல்களால் வருந்துன்பங்கள். விழுமம் - ஈறுதோன்றுத சாதியொருமைப்பெயர். இவை இரண்டு பாட்டாலும் அதனது பகுதி சொல்லப்பட்டது.

(க-து.) செய்யப்படுந் தொழிலை முடிவில் வெளிப்படும்படி செய்துமுடிப்பதே ஒருவனுக்கு வலிமையாம்; அவ்வாறன்றி அஃதிடையே வெளிப்பட்டு விடுமாயின், அது செய்பவனுக்கு நீங்காத துன்பத்தைத் தரும் என்பது.

3. So to perform an act as to publish it only at its termination is true strength; for to announce it before-hand will cause irremediable sorrow.

---

ச. **சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்**
**சொல்லிய வண்ணஞ் செயல்.**

**பரி:—(இ-ள்.) யாம் இவ்வினையை இவ்வாற்றுற் செய்துமென நிரல்படச் சொல்லுதல் யாவர்க்கும் எளிய; அதனை அவ்வாற்றுனே செய்தல் யாவர்க்கும் அரியவாம், (எ-று).**

சொல்லுதல், செயலென்பன சாதியொருமைப் பெயர். அரியவற்றை யெண்ணிச் சொல்லுதல் திட்பமில்லாதார்க்கும் இயறலின் 'எளிய' என்றுர். இதனுல் *அதனதருமை கூறப்பட்டது.

தெளி: - (இ-ள்) சொல்லுதல் (யாம் இத்தொழிலை இவ்விதத்தால் செய்வோமென்று ஒழுங்குபடச்) சொல்லுதல், யார்க்கும்-யாவர்க்கும், எளிய - எளியனவாம், (அத்தொழிலை) சொல்லிய வண்ணம்-அச்சொல்லியவிதத்தாலே, செயல்-செய்தல், அரியவாம்-(யாவர்க்கும்), அரியனவாம், (எ-று).

சொல்லுதல், செயல் என்பன ஈறுதோன்றிய சாதியொருமைப் பெயர். செய்தற்கரிய செயல்களை எண்ணிச்சொல்லுதல் மனவலிமையில்லாதவர்க்குங் கூடுமாதலால் 'எளிய' என்றுர். இதனுல் அதனது அருமை சொல்லப்பட்டது.

---

* அதனது - வினைத்திட்பத்தினது.

(க-து.) இவ்விதத்தால் முடிப்போமென்று சொல்லிய தொழிலைச் சொல்லியவாறு செய்தல் மிகவும் அரியதாம் என்பது.

4. To say how an action is to be performed is indeed very easy for any one; but far difficult is it to do according to what one has said.

---

**ரு. வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்க ணூறெய்தி யுள்ளப் படும்.**

**பரி:—(இ–ள்.) எண்ணத்தாற் சிறப்பெய்திப் *பிறவிலக்கணங்க-ளானும் மாட்சிமைப்பட்ட அமைச்சரது வினைத்திட்பம், வேந்தன்கண்ணே உறுதலை யெய்தலான், எல்லாரானும் நன்கு மதிக்கப்படும், (எ-று).**

*வேந்தன் கணூறெய்தல்-எடுத்தவினை †அதனான் முற்றுப்பெற்றுச் செல்வமும் புகழும் அவன் கண்ணவாதல். ¶எய்தலானென்பது திரிந்து நின்றது. உள்ளல் – மதிப்பான் மறவாமை. இதனால் ०அதன் சிறப்புக் கூறப்பட்டது.*

தெளி :-(இ–ள்.) வீறெய்தி-(எண்ணத்தினால்) சிறப்பை யடைந்து, மாண்டார் – (மற்றை யிலக்கணங்களாலும்) மாட்சிமைப்பட்ட மந்திரிகளது, வினைத்திட்பம் – தொழில்வலிமையானது, வேந்தன்கண்-அரசனிடத்தே, ஊறெய்தி - உறுதலை யடைதலால், உள்ளப்படும் – (எல்லாராலும்) நன்கு மதிக்கப்படும், (எ–று).

*வேந்தன்க ணூறெய்தல்-எடுத்ததொழில் அதனால் முடிவுபெற்றுச் செல்வமும் புகழும் அவ்வேந்தனிடத்தனவாதல். எய்தலான் என்பது எய்தி எனத்திரிந்து நின்றது. உள்ளல்-மதிப்பினால் மறவாதிருத்தல். இதனால் அதன் சிறப்புச் சொல்லப்பட்டது. ஊறு-முதனிலை திரிந்த தொழிற்பெயர். ஊறு-உறுதல்*

(க–து.) மந்திரிகளது தொழில் வலிமையானது அரசர்க்குண்-டாகுஞ் சிறப்பினால் யாவராலும் நன்கு மதிக்கப்படும் என்பது.

---

* பிறவிலக்கணங்களை அமைச்சதிகாரத்திற் காண்க.

† அதனான் – (அமைச்சரது) மனவுறுதியால்.

¶ எய்தியென்னும் (செய்தென்னும் வாய்பாட்டு) வினையெச்சம் உள்ளப்படும் என்னும் வேறு வினைமுதலின் வினையைக் கொண்டு முடிதற்கு விதியின்மையின், 'எய்தலா னென்பது திரிந்துநின்றது' என்று கூறப்பட்டது.

० அதன் சிறப்பு – வினைத்திட்பத்தின் சிறப்பு.

5. The firmness of those ministers who have become great by the excellence of their counsel will by attaining its fulfilment in the person of the king, be esteemed by all.

---

**சா. எண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்.**

பரி :— (இ-ள்.) தாமெய்த வெண்ணிய பொருள்க ளெல்லா வற்றையும் அவ்வெண்ணியவாறே எய்துவர்; எண்ணியவர் அவற்றிற்கு †வாயிலாகிய வினைக்கட்டிண்மை யுடையராகப் பெறின், (எ-று).

எளிதினெய்துபவென்பார் ‘ எண்ணியாங் கெய்துப ’ என்றார். $அவர் அவ்வாறல்ல தெண்ணுமையிற் றிண்ணியராகவே வினை முடியும் ; அது முடிய ‡அவையாவையுங் கைகூடுமென்பது கருத்து. இதனால் §அஃதுடையா ரெய்தும் பயன் கூறப்பட்டது.

தெளி:— (இ-ள்.) எண்ணிய – (தாம் அடைய) எண்ணிய பொருள்களெல்லாவற்றைவும், எண்ணியாங்கு – அவ்வெண்ணிய படியே, எய்துப – அடைவார், எண்ணியார் – எண்ணியவர், (அவ் வெண்ணிய பொருளுக்கு வழியாகிய தொழிலினிடத்து), திண்ணிய ராகப் பெறின் - வலிமையுடையவராகப் பெறின், (எ-று).

எண்ணியவற்றை எளிதாக அடைவாரென்பார் ‘ எண்ணியாங் கெய்துப ’ என்றார். அவர் அவ்வாறல்லாம லெண்ணுமையால் திண்ணியவராகவே தொழில் முடியும் ; அத்தொழில் முடிய அவை யெல்லாம் கைகூடுமென்பது கருத்து. இதனால் அதனையுடையவர் அடையும்பயன் சொல்லப்பட்டது.

(க-து.) செய்தொழிலை யுறுதியுடையவராக விருந்து செய்து முடிப்பவர் தாமெண்ணிய பொருளை யெண்ணியபடியே யடைவர் என்பது.

6. If those who have planned an undertaking possess firmness in executing it they will obtain what they have desired even as they have desired it.

---

**எ. *உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்னா ருடைத்து.**

---

† வாயிலாகிய - காரணமான.

$ அவர்-எண்ணியவர், அவ்வாறல்லது-தொடக்கத்தில் எண்ணிய படியல்லாமல், எண்ணுமையின்-இடையில் பிறிதொன்றாக எண்ணு மையால்.

‡ அவையாவையும்-தாமடைய எண்ணிய பொருள்களெல்லாம்.

§ அஃதுடையார் – வினைத்திட்ப முடையவர்.

* "சிலகற்றார்க் கண்ணு முளவாம் பலகற்றார்க், கச்சாணி யன்னதோர் சொல்" என்று அறநெறிச்சாரங்கூறுவதும், "உடலின் சிறுமைகண் டொண்புலவர் கல்விக், கடலின் பெருமை கடவார்" என்று நன்னெறி கூறுவதும், "மடல்பெரிது தாழை மகிழினிது கந்தம், உடல்சிறிய ரென்றிருக்க வேண்டா" என்று மூதுரை கூறுவது மிங்கறியத்தக்கனவாம்.

பரி:—(இ-ள்.) உருளா நின்ற பெரிய தேர்க்கு அச்சின்கண் ஆணி போல வினைக்கண் திண்ணியாரை யுடைத்து உலகம், அதனால் *அவரை வடிவின் சிறுமை நோக்கி யிகழ்தலை யொழிக, (எ-று).

† சிறுமை 'எள்ளாமை வேண்டும்' என்பதனானும் உவமை யானும் பெற்றாம். அச்சு - ‡உருள் கோத்தமரம். ஆணி - உருள் கழலாது §அதன் கடைக்கட் செருகுமது. £அது வடிவாற் சிறிதா யிருந்தே பெரிய பாரத்தைக் கொண்டுய்க்குந் திட்பமுடைத்து; அது போல, வடிவாற் சிறியராயிருந்தே பெரிய வினைகளைக் கொண் டுய்க்குந் திட்பமுடைய அமைச்சருமுளர்; ০அவரை அத்திட்ப நோக்கி அறிந்து கொள்க வென்பதாம். இதனால் §§அவரை யறியு மாறு கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) (உலகமானது) உருள் - உருளாநின்ற, பெருந் தேர்க்கு - பெரியதேர்க்கு, அச்சாணியன்னார் - அச்சினிடத்து ஆணி போலத் தொழிலினிடத்து வலிமையுடையவரை, உடைத்து - உடையது, (அதனால்), உருவுகண்டு - (அவரை) வடிவினது சிறுமை நோக்கி, எள்ளாமை வேண்டும் - இகழ்தலையொழிக, (எ-று).

'எள்ளாமை வேண்டும்' என்பதனானும் உருள்பெருந்தேர்க்கச் சாணி' என்னும் உவமானத்தாலும் (அச்சாணியன்னாரது) சிறுமை பெறப்பட்டது; அச்சு - உருள்கோத்தமரம். ஆணி-உருள்கழலாமல் அதன்கடையில் செருகுவது. அது வடிவினால் சிறிதாயிருந்தே பெரிய பாரத்தைக் கொண்டு செலுத்தும் வலிமையையுடையது; அதுபோல, வடிவினால் சிறியராயிருந்தே பெரிய தொழில்களைக் கொண்டு செலுத்தும் வலிமையையுடைய மந்திரிகளும் உளர்; அவரை அவ் வலிமைநோக்கி அறிந்துகொள்க வென்பதாம். இதனால் அவரை அறியும்விதம் சொல்லப்பட்டது.

(க-து.) தேர்க் கச்சாணிபோலத் தொழில் வலிமை யுடையாரை உலகம் உடைத்தாயிருத்தலின், எவரையும் உருவின் சிறுமை நோக்கி யிகழலாகா தென்பது.

7. Let none be despised by simply seeing their stature for there are in the world men who resemble the linch pin of the big rolling car.

---

**அ. கலங்காது கண்ட வினைக்கட் டுளங்காது தூக்கங் கடிந்து செயல்.**

---

* அவரை-அச்சாணி யன்னாரை.

† சிறுமை - உருவத்தின் சிறுமை. ‡ உருள் - சக்கரம்.

§ அதன்கடைக்கண் - உருள்கோத்த மரத்தின் (அச்சின்) கடையில்.

£ அது - ஆணி. ০ அவரை – அவ்வமைச்சரை.

§§ அவரை - வினைத்திட்பமுடைய மந்திரிகளை.

பரி :—(இ–ள்.) மனந்தெளிந்து செய்வதாகத் துணிந்த வினையின்கண் பின்னசைதலின்றி நீட்டித்தலையொழிந்து செய்க, (எ–று).

*கலங்கியவழி ஒழிவதும் செய்வதுபோற் றோன்றுமாகலின், தெளிந்து பலகாலாராய்ந்து தாஞ்செய்வதாக ஓர்த்த வினையைக் 'கலங்காது கண்டவினை' என்றார். துளங்காமை – திட்பமுடைமை.*

தெளி :— (இ-ள்.) *கலங்காது* – (மனம்) *தெளிந்து.* *கண்ட* – *(செய்வதாகத்)* துணிந்த, *வினைக்கண்-தொழிலினிடத்து, துளங்காது* - (பின்) *அசைதலில்லாமல், தூக்கங்கடிந்து* – *தாமதித்திருத்தலை யொழிந்து, செயல் – செய்யக்கடவர், (எ–று).*

*மனங்கலங்கியவிடத்து ஒழியும் வினையும் செய்வதுபோல் தோன்று மாதலால், தெளிந்து பலமுறை யாராய்ந்து தாம் செய்வதாக நிச்சயித்தவினையைக் 'கலங்காது கண்டவினை' என்றார். துளங்காமை –* வலியுடைமை.

(க-து.) *மனந்தெளிந்து செய்யத்துணிந்த தொழிலைத் தாமத-மில்லாது செய்தல்வேண்டும் என்பது.*

8. That action which has been firmly resolved upon must be firmly carried out without delay.

---

கூ. துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி
யின்பம் பயக்கும் வினை

பரி :—(இ–ள்.) முதற்கண் *மெய்ம்முயற்சியாற் றமக்குத் துன்பம் மிக வருமாயினும் அதுநோக்கித் தளராது முடிவின்கண் இன்பம் பயக்கும் வினையைத் திட்பமுடையராய்ச் செய்க, (எ–று).

*துணிவு – கலங்காமை. அஃதுடையார்க்கல்லது †கணிகமாய ‡முயற்சித் துன்ப நோக்காது நிலையுதலுடைய ¶பரிணமவின்பத்தை நோக்கிச் செய்தல் கூடாமையின், துணிவாற்றிச் செய்க என்றார். அவை யிரண்டுபாட்டானும் $அவர் வினை செய்யுமாறு கூறப்பட்டது.*

தெளி :—(இ-ள்.) *(முதலில் மெய்ம்முயற்சியினால் தமக்கு)* துன்பம்–, *உறவரினும்* – *மிகவருமானாலும், (அத்துன்பத்தை நோக்கித்*

---

* *மெய் - உடம்பு ; முயற்சி - பிரயத்தனம்.*

† *கணிகமாய முயற்சி-கணப்பொழுதி லழியுமுயற்சி.* ‡ *முயற்சித்* துன்பம் - *பிரயத்தனத்தால் வரும் துன்பம்.*

¶ *பரிணம வின்பத்தை - கடலலைபோன்று தொடர்ச்சியாகப் பரிணமித்து (தோன்றி) வரும் இன்பத்தை. [பரிணமம் - திரிவு].*

$ *அவர் - வினைத்திட்பமுடைய மந்திரிகள்.*

தளராமல் முடிவில்), இன்பம் – சுகத்தை, பயக்கும் – தரும், வினை – தொழிலை, துணிவாற்றி – வலிமையுடையவராய், செய்க – செய்யக் கடவர், (எ–று).

துணிவு – மனங்கலங்காமை. (இன்பம்பயக்கும் வினையை) அக் கலங்காமையையுடையவர்க்கல்லது மற்றவர்க்குக் கணப்போதிருப்ப தாகிய (சிறிது பொழுதில் நீங்குவதாகிய), முயற்சித்துன்பம் நோக்காமல் நிலைபெறுதலுடைய பரிணும வின்பத்தை நோக்கிச் செய்தல் கூடாமையால், துணிவாற்றிச் செய்க என்றார். இவை இரண்டுபாட்டாலும் அவர் தொழில் செய்யும் விதம் சொல்லப் பட்டது.

(க–து.) முடிவில் இன்பந்தருந் தொழிலை முதலில் துன்பம் வரினும், சோர்வின்றி யுறுதியோடு செய்துமுடித்தல் வேண்டும்.

9. Though it should cause increasing sorrow at the outset, do with firmness that action which brings happiness in the end.

---

## ௧௦. எனைத்திட்ப மெய்தியக் கண்ணும் வினைத்திட்பம் வேண்டாரை வேண்டா துலகு.

பரி :—(இ-ள்.) வினைத்திட்பத்தை †இது நமக்குச்சிறந்ததென்று கொள்ளாத அமைச்சரை, ‡ஒழிந்ததிட்பங்களெல்லா முடையராய விடத்தும் நன்கு மதியார் உயர்ந்தோர், (எ–று).

மனத்தின்கண் திட்பமில்லாதார்க்குப் படை, அரண், நட்பு முதலியவற்றின் திட்பங்களெல்லாம் உளவாயினும் வினை முடியா தாம்; ஆகவே, அவையெல்லாங் கெடும் என்பது பற்றி, உலகு வேண்டாது என்றார். இதனால் வினைத்திட்ப மில்லாதாரது இழிபு கூறப்பட்டது.

தெளி :—(இ–ள்.) உலகு-உயர்ந்தோர், வினைத்திட்பம்-தொழில் வலிமையை, வேண்டாரை - (இது நமக்குச்சிறந்த தென்று) கொள்ளாத மந்திரிகளை, எனைத்திட்பம் – ஒழிந்த வலிமைகளெல்லாம், எய்தியக்கண்ணும் – உடையவராகிய விடத்தும், வேண்டாது – நன்கு மதியார், (எ–று).

மனத்திினிடத்து வலிமையில்லாதவர்க்குப் படை, அரண், நட்பு முதலியவற்றின் வலிமைகளெல்லாம் உளவாயினும் தொழில் முடியாதாம்; முடியாதாகவே, அவ்வலிமைகளெல்லாம் கெடுமென் பதுபற்றி, உலகு வேண்டாது என்றார். இதனால் வினைத்திட்பமில்லா தவரது இழிவு சொல்லப்பட்டது.

(க–து.) வினைத்திட்பத்தை வேண்டாத மந்திரிகள் மற்றைத் திட்பங்களெல்லா முடையவரா யிருப்பினும், அவரை உயர்ந்தோர் நன்கு மதியா ரென்பது.

---

† இது – வினைத்திட்பம்.

‡ ஒழிந்த திட்பம்-படை, அரண் முதலியவற்றின் வலிமை.

10. The wise will not esteem those ministers who esteem not firmness in action, whatever other qualities they may possess.

---

## ஐந்தாவது அதிகாரம்

## ௬௭ வினை *செயல்வகை—Method of action

பரி:—அஃதாவது †அத்திட்பமுடைய வமைச்சன் ‡அவ்வினையைச் செய்யுந்திறம். ¶அதிகார முறைமையும் இதனனே விளங்கும்.

தெளி:—அஃதாவது அவ்வலிமையுடைய மந்திரி அத்தொழிலைச் செய்யுந்திறமாம். அதிகார முறைமையும் இதனாலே விளங்கும்.

---

க. சூழ்ச்சி முடிவு துணிவெய்த லத்துணிவு
தாழ்ச்சியுட் டங்குத றீது.

பரி: (இ-ள்.) விசாரத்திற் கெல்லையாவது விசாரிக்கின்றான் இனி $இது தப்பாதென்னுந் ()துணிவினைப்பெறுதல்; அங்ஙனந் துணிவுபெற்ற வினை பின் ○நீட்டிப்பின்கட் டங்குமாயின், ††அது குற்றமுடைத்து, (எ-று).

'சூழ்ச்சி முடிவு துணிவெய்தல்' எனவே, துணிவெய்து மளவுஞ் சூழ வேண்டுமென்பது பெற்றாம். பின்னர்த் துணிவு ஆகுபெயர். நீட்டிப்பு - செய்யுங்காலத்துச் செய்யாமை. அஃதுள்வழிக் காலக் கழிவாகலானும், பகைவர் அறிந்தழித்தலானும் ‡‡முடியாமையின், $$அதனைத் 'தீது' என்றார்.

---

* செயல் என்னுந் தொழிற்பெயர் இங்குப் பெயரெச்சப் பொருளில் வந்தது. தெரிந்து செயல்வகை யென்பதன்கண் செய லென்பது பெயரெச்சப்பொருளில் வந்திருப்பது முணர்க.

† அத்திட்பம் - வினைசெய்தற்கண் மனவுறுதி.

‡ அவ்வினையை - பொருளையேயன்றித் தருமத்தையும் கீர்த்தியையுங் கொடுத்துச் சிறந்ததாகுந்தொழிலை.

¶ வினைத்திட்பம் வினை செய்வதற் கேதுவாயிருத்தலின், வினைத் திட்பத்தின்பின் வினை செயல்வகை வைக்கப்பட்டது.

$ இது தப்பாது - இக்காரியம் தவறாது. () துணிவினை - நிச்சயத்தை. துணிவு - உவ்விகுதி பெற்ற தொழிற்பெயர்.

○ நீட்டிப்பின்கண் - காலதாமதத்தில்.

†† அது - துணிவுபெற்றவினை நீட்டிப்பின்கண் தங்குதல்.

‡‡ முடியாமையின் - துணிவுபெற்றவினை முடியாமையின்.

$$ அதனை - தாழ்ச்சியுட்டங்குதலை.

தெளி :—(இ-ள்.) சூழ்ச்சி - ஆலோசனைக்கு, முடிவு - எல்லை யாவது, துணிவெய்தல் - (ஆலோசிப்பவன் இனி இது தப்பா தென்னுந்) துணிவைப்பெறுதல், அத்துணிவு - அவ்வாறு துணிவு பெற்றதொழில், தாழ்ச்சியுள் - (பின்) ஆலசியத்தில், தங்குதல் - தங்குமானால், தீது - (அது) குற்றமுடையதாம், (எ-று).

'சூழ்ச்சிமுடிவு துணிவெய்தல்' எனவே, துணிவுபெறுமளவும் ஆலோசிக்கவேண்டுமென்பது பெறப்பட்டது. பின்னுள்ள துணிவு - அத்துணிவு பெற்ற தொழிலையுணர்த்துதலால் தொழிலாகுபெயராம். ஆலசியம் - இனியிதுதப்பாதென்று நிச்சயித்த தொழிலைச் செய்ய வேண்டும் காலத்திற்செய்யாது சோர்ந்திருத்தல். அவ்வாலசிய முண்டாயவிடத்துக் காலக்கழிவாகலாலும், பகைவர் அறிந்தழித்த லாலும் முடியாமையால், அதனைத் 'தீது' என்றார்.

(க-து.) ஆலோசித்து இனியிது தப்பாதென்று நிச்சயித்த தொழிலை விரைந்து செய்யாதிருத்தல் தீமையைத்தரும் என்பது.

1. Deliberation ends in forming a resolve to act; but delay in the execution of that resolve is an evil.

---

உ. தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை.

பரி:- (இ-ள்.) நீட்டித்துச்செய்யும் *பகுதியவாய வினைகளுள் நீட்டிக்க; நீட்டியாது செய்யும் வினைகளுள் நீட்டியா தொழிக, (எ-று).

†இருவழியும் இறுதிக்கட்டொக்க ஏழாவது விரிக்கப்பட்டது. ‡இருவகை வினைகளும் வலியானுங் காலத்தானும் அறியப்படும்; ¶மாறிச்செய்யின், அவை வாயாவென்பது கருத்து. $மேல் 'தூங்காமை' என்றார்; ஈண்டதனைப் பகுத்துக் கூறினார். இவை இரண்டு பாட்டானும் பொதுவகையால் வினைசெய்யுந் திறங் கூறப்பட்டது.

---

* பகுதியவாய - பகுப்பினை யுடையனவாய.

† இருவழியும் - செயற்பால வினையென்னு மிரண்டிடத்தும்.

‡ இருவகை வினைகளும் - தாமதித்துச்செய்யும் பகுப்பினவாய தொழில்களும், தாமதமில்லாது செய்யுந்தொழில்களும்.

¶ மாறிச்செய்யின் - அவ்விருவகை வினைகளையும் மாறிச் செய்தால். அஃதாவது தாமதத்திற் செய்யுந்தொழிலை விரைந்தும் விரைந்து செய்யவேண்டிய தொழிலைத் தாமதித்துஞ் செய்தால் அத்தொழில்கள் நிறைவேறா என்பது.

$ இறைமாட்சி யதிகாரம் மூன்றாவது குறளில் "தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்று, நீங்கா நிலனாள் பவற்கு" என்று கூறப்பட்டிருக்கின்றது. தூங்காமை யென்பதற்குக் காரியங்களில் விரைவுடைமையும் என்பது பொருளாம்.

தெளி:—(இ-ள்.) தூங்கி - தாமதித்து, செயற்பால - செய்யும் பகுதியனவாய தொழில்களுள், தூங்குக - தாமதம்பண்ணக்கடவன், தூங்காது - தாமதியாது, செய்யும்வினை - செய்யுந் தொழில்களுள், தூங்கற்க - தாமதஞ் செய்யாதிருக்கக்கடவன், (எ-று).

செயற்பால, வினை என்பவற்றினீற்றில் தொக்குநின்ற உள் ளென்னும் ஏழனுருபு விரித்துரைக்கப்பட்டது. இருவகைத் தொழில் களும் வலியாலும் காலத்தாலும் அறியப்படும்; மாறிச்செய்தால், அவ்விருவகைத் தொழிலும் முடிவுபெறுவென்பது கருத்து. முன்னர்த் 'தூங்காமை' என்றார்; இங்கு அத்தூங்காமையைப் பகுத்துச் சொல்லினர். இவை இரண்டு பாட்டாலும் பொதுவகையால் தொழில்செய்யுந்திறம் சொல்லப்பட்டது.

(கூ-து.) தாமதித்துச் செய்யவேண்டிய தொழிலைத் தாமதித்தும் விரைந்து செய்யவேண்டிய தொழிலை விரைந்தும் செய்தல் வேண்டும் என்பது.

2. Sleep over such actions as may be done leisurely; but never sleep over such actions as are required to be done promptly.

---

**ங. ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே யொல்லாக்காற்**
**செல்லும்வாய் நோக்கிச் செயல்.**

பரி:—(இ-ள்.) வினைசெய்யுங்கால் இயலுமிடத்தெல்லாம் போரால் செய்தல் நன்று; *அஃதியலாவிடத்து †ஏனைமூன் றுபாயத்துள்ளும் அது முடிவதோருபாய நோக்கிச் செய்க, (எ-று).

இயலுமிடம் - பகையிற் றுன்வலியனுயகாலம். அக்காலத்துத் தண்டமே நன்று என்றார்; அஞ்சுவது அதற்கேயாகலின். இயலாவிடம் ஒத்தகாலமும் மெலியகாலமும். அவ்விரண்டுகாலத்துஞ் சாம பேத தானங்களுள் அது முடியுமுபாயத்தாற் ‡செயல் என்றார்; அவை ஒன்றற்கொன்று வேறுபாடுடைய வேனும் உடம்படுத்தற் பயத்தாற்

* அஃதியலாவிடத்து - போரால் (தண்டத்தால்) செய்தல் முடியாத காலத்தில்.

† ஏனை மூன்றுபாயம் - தண்டம் ஒழிந்த சாமபேததானம். "எண்ணித் துணிக" என்னுங் குறளின் விசேடவுரையில் "அது (உபாயம்) கொடுத்தல் (தானம்), இன்சொற் சொல்லல் (சாமம்), வேறுபடுத்தல் (பேதம், ஒறுத்தல் (தண்டம்) என நால்வகைப்படும்" என்று கூறியிருப்ப திங்கறியத்தக்கதாம்.

‡ செய்க என்றும் பாடமுண்டு.

றம்முளொக்குமாகலின், இதனுன் வலியான், ஒப்பான், மெலியானென நிலை மூவகைத் தென்பதூஉம், அவற்றுள் வலியது சிறப்பும் கூறப்பட்டன.

தெளி :—(இ-ள்.) (தொழில் செய்யும்போது) ஒல்லும்வாயெல்லாம் கூடுமிடத்தெல்லாம், வினை-போரால் (தண்டத்தாற்) செய்தல், நன்று - நல்லதாம், ஒல்லாக்கால் - (அது) கூடாதவிடத்து, (மற்றை மூன்று உபாயத்துள்ளும்), செல்லும்வாய் நோக்கி - (அத்தொழில்) முடிவதோருபாயம் நோக்கி, செயல் - செய்யக்கடவன், (எ-று).

கூடுமிடம் - பகைவரினும் தான் வலியவனுகிய காலம். பகைவரினும் தான் வலியனுகிய காலத்தில் தண்டமே நன்று என்று கூறினர்; பகைவர் அஞ்சுவது அத்தண்டத்திற்கே யாதலால். கூடாதவிடம் - பகைவர் வலிமைக்குத் தான் ஒத்த காலமும் இளைத்த காலமுமாம். அவ்வொத்த காலத்தும் இளைத்தகாலத்தும் சாம பேத தானமென்னும் உபாயங்களுள் அத்தொழில் முடியும் உபாயத்தாற் செயல் என்று கூறினர்; அச்சாம பேத தானங்கள் ஒன்றற்கொன்று வேற்றுமை யுடையனவா யிருப்பினும் சம்மதிக்கச் செய்யும் பிரயோசனத்தால் தம்முள் ஒத்திருத்தலால். இதனுல் வலியான், ஒப்பான், மெலியானென்று நிலை மூவகைப்படுமென்பதும், அம் மூவகைநிலைகளுள் வலியினது சிறப்பும் சொல்லப்பட்டன.

(க-து.) இயலுமிடத்தெல்லாம் தண்டத்தினுலும் அது முடியாவிடத்து மற்றைய வுபாயங்களுள் யாதொன்றுலாகிலும் மேற்கொண்ட காரியத்தை முடித்தல் வேண்டும் என்பது.

3. Whenever it is possible to overcome your enemy the act of fighting is certainly good; if not, employ some more successful means.

---

ச. **வினைபகை யென்றிரண்டி னெச்ச நினையுங்காற்**
**றீயெச்சம் போலத் தெறும்.**

பரி:—(இ-ள்.) செய்யத் தொடங்கிய வினையும் களையத்தொடங்கிய பகையு மென்று சொல்லப்பட்ட இரண்டனதொழிவும் ஆராயுங் காற் றீயினதொழிவுபோலப் பின் வளர்ந்து கெடுக்கும், (எ-று).

இனி *இக்குறை என்செய்வதென்று இகழ்ந்தொழியற்க; முடியச்-

---

* இக்குறை - வினையினது ஒழிவு, பகையினது ஒழிவு என்னுமிக் குறை. பகை, கடன், தீ, நோய் முதலியவற்றைப் பற்றறவொழிக்காதுவிட்டு விட்டால் அவை பின்பு இராவணன் தலைபோல் வளர்ந்து தம்மையுடையவரை யழித்தல் பற்றி "இனி இக்குறை என்செய்வதென்று இகழ்ந்தொழியற்க; முடியச் செய்கவென்பதாம்" என்று கூறப்பட்டது.

செய்க வென்பதாம். பின் வளர்த லொப்புமை பற்றிப் *பகை யெச்சமும் உடன் கூறினர். இதனன் வலியான் செய்யுந்திறங் கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்.) வினை – (செய்யத் தொடங்கிய) தொழிலும், பகை – (அழிக்கத் தொடங்கிய) பகையும், என்ற இரண்டின் – என்று சொல்லப்பட்ட இரண்டினது, எச்சம் – குறையும், நினையுங்கால் – ஆராயுமிடத்து, தீயெச்சம்போல – தீயினது குறைபோல, தெறும் – (பின்வளர்ந்து) கெடுக்கும், (எ - று).

இனி இக்குறை யாது செய்வதென்று இகழ்ந்துவிடவேண்டாம்; அதனை முடிவுபெறச் செய்கவென்பதாம். பின்வளர்தல் ஒப்புமை பற்றிப் பகை யெச்சத்தையும் வினை யெச்சத்துடன் சொல்லினர். இதனுல் வலியவன் செய்யுந்திறம் சொல்லப்பட்டது.

(க - து.) வினைக்குறையும் பகைக்குறையும் தீயினதுகுறை பின் வளர்ந்து கெடுப்பதுபோல வளர்ந்து தம்மையுடையவரைக் கெடுக்கும் என்பது.

4. When duly considered, the incomplete execution of an undertaking and hostility will grow and destroy one like the unextinguishing remnant of a fire.

---

## ரு. பொருள்கருவி காலம் வினையிடனே டைந்து மிருடீர வெண்ணிச் செயல்.

பரி:—(இ - ள்.) வினை செய்யு மிடத்துப் பொருளுங் கருவியுங் காலமும் வினையும் இடனுமாகிய இவ் வைந்தனையும் மயக்கமற வெண்ணிச் செய்க, (எ - று).

†எண்ணெடு பிறவழியுங் கூட்டப்பட்டது. பொருள் – அழியும் பொருளும் ஆகும் பொருளும். கருவி – தன்றனையும் மாற்றார்தானையும். காலம் – தனக்காங்காலமும் அவர்க்காங்காலமும். வினை – தான் வல்லவினையும் அவர் வல்லவினையும். இடம் – தான் வெல்லுமிடமும் அவர் வெல்லுமிடமும். இவற்றைத் தான் வென்றி யெய்துந்திறத்திற் பிழையாமலெண்ணிச் செய்கவென்பதாம்.

தெளி:—(இ - ள்.) (தொழில் செய்யுமிடத்து) பொருள் – பொருளும், கருவி – கருவியும், காலம் – காலமும், வினை – தொழிலும், இடனெடு – இடமும், (ஆகிய), ஐந்தும் – இவ் வைந்தனையும், இருடீர – மயக்கமற, எண்ணி – ஆலோசித்து, செயல் – செய்யக் கடவன், (எ - று).

---

* பகையெச்சமும் – பகையினது குறையும்.

† "என்று மெனவு மொடுவுந் தோன்றி, யொன்றும்வழி யுடைய வெண்ணினுட் பிரிந்தே" என்னுந் தொல்காப்பியம் சொல்லதிகாரம் இடையியற் சூத்திர மிங்கறியத்தக்கது.

எண்ணுப் பொருளில் வந்த ஒடு என்னும் இடைச்சொல்லைப் பொருள் முதலியவற்றோடுங் கூட்டிப் பொருளொடு கருவியொடு காலமொடு வினையொடு இடனொடு என்று கொள்க. பொருள் – அழியும் பொருளும் ஆகும் பொருளும். கருவி – தன் சேனையும் பகைவர் சேனையும். காலம் – தனக்கு ஆங்காலமும் பகைவர்க்கு ஆங்காலமும். வினை – தான் (வெல்லுதலில்) வல்ல தொழிலும் பகைவர் (வெல்லுதலில்) வல்ல தொழிலும். இடன் – தான் வெல்லும் இடமும் பகைவர் வெல்லும் இடமும். பொருள் முதலிய விவற்றை (அமைச்சன்) தான் வெற்றிபெறுந்திறத்தில் தப்பாமல் ஆலோசித்துச் செய்கவென்பதாம்.

(க - து.) செய்யுந் தொழிலைப் பொருள் கருவி முதலியவற்றை மயக்கமற ஆலோசித்துச் செய்தல்வேண்டும் என்பது.

5. Perform an action with due consideration as to money means, time, execution & place.

---

### சா. முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும் படுபயனும் பார்த்துச் செயல்.

பரி:—(இ - ள்.) வினை செய்யுங்கால் அது முடிதற்குளதாம் முயற்சியும் அதற்குவரு மிடையூறும் அது நீங்கி *முடிந்தாற் றனெய்தும் பெரும் பயனும் †சீர்தூக்கிச் செய்க, (எ - று).

முடிவு – ஆகுபெயர். முயற்சி யிடையூறுகளதளவிற் ‡பயனதளவு பெரிதாயிற் செய்க வென்பதாம்.

தெளி:—(இ - ள்.) (தொழில் செய்யுமிடத்து) முடிவும் – (அத் தொழில் முடிதற்கு உளதாகிய) முயற்சியையும், இடையூறும் – (அத் தொழிற்கு வரும்) இடையூற்றையும், முற்றியாங்கு – (அவ் விடையூறு நீங்கி) முடிந்தால், எய்தும் – (தான்) அடையும், படுபயனும் – பெரும்பயனையும், பார்த்து – சீர்தூக்கி, செயல் – செய்யக்கடவன், (எ - று).

முடிவு என்னுங் காரியப்பெயர் அதனது காரணமான முயற்சியை யுணர்த்துதலால் காரியவாகுபெயராம். முயற்சியளவினும் இடையூறளவினும் பயனளவு பெரிதாயிருந்தால் தொழிலைச் செய்க வென்பதாம்.

(க - து.) முயற்சி இடையூறு பயன் என்னு மூன்றனையு மாலோசித்துத் தொழிலைச் செய்தல் வேண்டும் என்பது.

---

* முடிந்தால் – வினை முடிந்தால்.

† சீர்தூக்கி – பலவழியானும் ஆராய்ந்து.

‡ பயனதளவு – வினை செய்தலா லுண்டாகும் பிரயோசனத்தின் அளவு.

6. An action is to be performed with due consideration as to the exertion required, the obstacles to be encountered and the great profit to be gained on its completion.

---

**எ. செய்வினை செய்வான் செயன்முறை யவ்வினை**
**யுள்ளறிவா னுள்ளங் கொளல்.**

பரி:—(இ-ள்) அவ்வாற்றாற் செய்யப்படும் வினையைத் தொடங்கினான் செய்யு முறைமையாவது *அதனதுளப்பாட்டினை யறிவான் கருத்தினைத் தானறிதல், (எ - று.

அவ்வாறென்றது †பொருள் முதலிய வெண்ணலையும் முடிவு முதலிய தூக்கலையும். உள்ளறிவான் - முன்செய்து. போந்தவன். அவன் கருத்து - அவன் செய்து போந்த உபாயம். அதனை யறியவே, தானும் அதனாற் செய்து பயனெய்துமென்பதாம். இவை மூன்று பாட்டானும் ஒப்பான் செய்யுந் திறங் கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்.) செய்வினை-(அவ்வாற்றால்) செய்யப்படுந் தொழிலை, செய்வான் – செய்யத்தொடங்கினவன், செயன்முறை-செய்யுமுறைமையாவது, அவ்வினை - அத்தொழிலினது, உள்-உளப்பாட்டை, அறிவான் – அறிபவனது, உள்ளம் – கருத்தினை, கொளல்-(தான்) அறிதல், (எ - று).

அவ்வாறென்றது பொருள் முதலியவற்றை எண்ணலையும் முடிவு முதலியவற்றை ஆராய்தலையும். உள்ளறிவான் - முன் செய்து கைவந்தவன். அவன்கருத்து - அவன் செய்துவந்த உபாயம். அவ்வுபாயத்தை அறியவே, தானும் அவ்வுபாயத்தினால் தொழிலைச் செய்து பயனை யடைவானென்பதாம். இவை மூன்று பாட்டாலும் ஒப்பவன் செய்யுந்திறம் சொல்லப்பட்டது.

(க-து.) தொழிலைச் செய்யுமிடத்து அதனை முன்செய்து பயனடைந்தவரது கருத்தினையொட்டிச் செய்தல்வேண்டும் என்பது.

7. The method of performance for one who has begun an action is to ascertain the gist of him who knows the secret thereof.

---

**அ. வினையான் வினையாக்கிக் கோட னனைகவுள்**
**யானையால் யானையாத் தற்று.**

பரி :—(இ ள்.) செய்கின்ற வினையாலே அன்னது பிறிது மோர்

---

* அதனது உளப்பாட்டினை—அவ்வாற்றாற் செய்யப்படும் வினையினது யதார்த்த நிலையினை.

† பொருள் முதலியவற்றை யெண்ணலை யிவ்வதிகாரத்தின் 5-வது. குறளிலும். முடிவுமுதலியவற்றையாராய்தலை 6-வது குறளிலுங்காண்க

வினையை முடித்துக்கொள்க; *அது †மதந்தானனைந்த ‡கபோலத்தினை யுடைய யானையாலே அன்னது பிறிதுமோர் யானையைப் பிணித்ததனோ டொக்கும், (எ-று).

*பிணித்தற்கருமை தோன்ற +'நனைகவுள்' என்பது பின்னுங்கூட்டப் பட்டது. தொடங்கிய வினையானே பிறிதுமோர் வினையை முடித்தற் குபாயமாமாறு எண்ணிச் செய்க; செய்யவே, ¶அம்முறையான் எல்லாவினையும் எளிதின் முடியுமென்பதாம்.*

தெளி:—(இ-ள்.) *வினையான்-(செய்கின்ற) தொழிலினாலே, வினை-(அத்தன்மையதாகிய வேறொரு) தொழிலை ஆக்கிக்கோடல் – முடித்து கொள்ளக்கடவன்*, (அது), *நனைகவுள்-(மதத்தால்) நனைந்த கபோலத் தினையுடைய, யானையால் – யானையினாலே, யானை – (அத்தன்மைய தாகிய வேறொரு) யானையை, யாத்தற்று – கட்டியதனோ டொக்கும்,* (எ-று).

*கட்டுதற் கருமைதோன்ற 'நனைகவுள்' என்பது பின்வந்த யானை யென்பதனோடுங் கூட்டப்பட்டது. தொடங்கிய தொழிலினாலே வேறு மொரு தொழிலை முடித்தற்கு உபாயமாகும் விதத்தை யாலோசித்துச் செய்க; செய்யவே, அந்தக் கிரமத்தினால் எல்லாத் தொழிலும் எளிதாக முடியுமென்பதாம்.*

(க-து.) *ஒருவன் செய்யத்தொடங்கிய தொழிலாலே அத்தன்மை யதாகிய வேறோரு தொழிலையும் முடித்துக்கொள்ளக் கடவன் என்பது.*

8. To make one undertaking the means of accomplishing another akin to it is like making one rutting elephant the means of capturing another.

---

கூ. நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
யொட்டாரை யொட்டிக் கொளல்.

பரி: – (இ-ள்.) வினைசெய்வானாற் றன் னட்டார்க்கு இனியவற்றைச் செய்தலினும் விரைந்து செய்யப்படும்; தன் பகைவரோடு ஒட்டாரைத் தனக்கு நட்பாக்கிக் கோடல், (எ-று).

*அவ்வினை வாய்த்தற் பயத்தவாய $இவ்விரண்டும் பகைவர்க்குத்*

---

* *அது – செய்கின்றதொழிலாலே அத்தன்மையதாகிய வேறொரு தொழிலை முடித்துக்கொள்ளுதல்.*

† *மதத்தால்-மதநீரால்* ‡ *கபோலம்-கன்னம்.*

+ *நனைகவுள் என்பனதைப் பின்வந்த யானையென்பதனொடுங் கூட்டி மதத்தா னனைந்த கபோலத்தினையுடைய பிறிது மோர்யானையை யென்று பொருள் கொள்ளப்பட்டது.*

¶ *அம்முறையான் – தொடங்கிய தொழிலாலே வேறுமொரு தொழிலை முடித்தற்கு உபாயம் ஆகும்வகையை யாலோசித்துச் செய்யுங் கிரமத்தால்.*

$ *இவ்விரண்டும்-நட்டார்க்கு நல்லசெயல், ஒட்டாரை யொட்டிக் கொளல் என்னும் இவ்விரண்டும்.*

தன் *மெலிவு புலனுவதன்முன்னே செய்க வென்பார் 'விரைந்தது' என்முர்; விரைந்து செய்யப்படுவதென்றவாறு. வினைசெய்யுந் திறமாகலிற் பகைவரோ டொட்டா ராயிற்று. †தன்னெட்டார் பிறருட் கூடாமல் ‡மாற்றி வைத்த லெனினு மமையும்.

தெளி:—(இ-ள்.) (தொழில்செய்பவனுல்) நட்டார்க்கு-(தனது) நட்பினர்க்கு, நல்லசெயலின் - இனிமையான வற்றைச் செய்தலினும், ஒட்டாரை-(தனதுபகைவருடன் பகைத்துப்) பொருந்தாதிருப்பவரை, ஒட்டிக்கொளல்-(தனக்கு) நட்பாக்கிக்கொள்ளுதல், விரைந்தது - விரைந்து செய்யப்படுவதாம், (எ-று).

அத்தொழில் பலித்தலைப் பயனுக வுடையனவாய இவ்விரண்டு காரியங்களும் பகைவர்க்குத் தன்னுடையசோர்வு வெளிப்படுவதன் முன்னே செய்க என்பார் 'விரைந்தது' என்று கூறினுர். விரைந்த தென்பது விரைந்துசெய்யப் படுவது என்றவாறும். இவ்வதிகாரம் பகைவருடன் போர் முதலியவற்றைச் செய்யும் வகையைக் கூறு-வதாகலால், ஒட்டாரென்பவர் தன் பகைவருடன் கூடாதாரென்ப தாயிற்று.

(க-து.) தொழில் செய்யுமமைச்சன் தனது பகைவரது பகை-வரைத் தனக்குச் சிநேகமாக்கிக்கொள்ளுதல் தனது சிநேகிதருக்கு இனிமையானவற்றைச் செய்தலினும் நன்மும் என்பது.

9. One should rather hasten to secure the alliance of the foes of one's enemies rather than do good service to one's friends.

---

**கo. உறைசிறியா ருண்ணடுங்க லஞ்சிக் குறைபெறிற்**
**கொள்வர் பெரியார்ப் பணிந்து.**

பரி:—(இ-ள்.) ஆளுமிடஞ்சிறியராய அமைச்சர் தம்மின் வலியார் எதிர்ந்தவழித் தம்பகுதி நடுங்கலையஞ்சி, ¶அந்நிலைக்கு வேண்டுவதாய சந்தி கூடுமாயின், அவரைத் தாழ்ந்து $அதனை யேற்றுக்கொள்வர், (எ - று).

இடம்-நாடும் அரணும். ||அவற்றது சிறுமை ஆள்வார்

---

* மெலிவு – பொருள் படை வலி முதலியவற்முல் தனது பகைவரினும் தான் குறைவடைந்திருத்தல்.

† 'ஒட்டாரை யொட்டிக்கொளல்' என்பதற்கு ஒட்டாரை-தனது பகைவரை, ஒட்டிக்கொள்ளல்—மற்றொருவரிடத்துக் கூடாதவாறு வேறுபடுத்தி வைத்தல் என்று பொருள் கூறினும் ஒக்கும் என்பதாம்.

‡ மாற்றிவைத்தல் – வேறுபடுத்தல் (பேதம்) என்னும் உபாயம்.

¶ அந்நிலைக்கு-தம்பகுதியஞ்சும் அந்நிலைமைக்கு.

$ அதனை - சந்தி கூடுதலை.

|| நாடு அரண்களின் சிறுமையை அவற்றை யாளுகின்றவர்மே லேற்றி 'உறை சிறியார்' என்று கூறினுர். இஃது இடத்தினது சிறுமை இடத்தையுடையவர் மேலாய வுபசார வழக்காம்.

மேலேற்றப்பட்டது. மெலியாரோடு *சந்திக்கு வலியார் †இயைதலரிதாகலின் 'பெறின்' என்றார். ‡அடியிலே மெலியராயினர் §தம் பகுதியுமஞ்சி நீங்கின் ||முதலொடுங் கெடுவராகலின், £அது வாராமற் $சிறிது கொடுத்துஞ் சந்தியை யேற்றுக்கொள்க வென்பதாம். ¶பணிதல் மான முடையார்க்குக் கருத்தன்மையின் 'கொள்வர்' என உலகியலாற் கூறினர். இவை மூன்று பாட்டானும் மெலியான் செய்யுந்திறங் கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்.) உறைசிறியார் – ஆளுமிடஞ் சிறியராகிய மந்திரிகள், (தம்மின் மிக்க வலியுடையவர் எதிர்ந்த விடத்து), உள் – (தமது) அங்கங்கள், நடுங்கல் – நடுங்குதலுக்கு, அஞ்சி – பயந்து, குறைபெறின் – (அந் நிலைக்கு வேண்டுவதாகிய) சந்திகூடுமாயின், பெரியார் – அப் பெரியவரை, பணிந்து – தாழ்ந்து, கொள்வர் – (அதனை யேற்றுக்) கொள்வர், (எ – று).

இடம் – நாடும் அரணும். அந் நாட்டரண்களின் சிறுமை அவற்றை யாளுகின்றவர்மேல் ஏற்றப்பட்டது. மெலியாரோடு சந்திக்கு வலியாரியைதல் அரிதாகலால் 'பெறின்' என்றார். அடியிலே மெலியராயினர் தம்மங்கங்களும் அஞ்சி நீங்கினால் முதலோடுங் கெடுவராகலின், அது வாராமற் சிறிது பொருள் கொடுத்தும் சந்தியை ஏற்றுக்கொள்க வென்பதாம். பணிதல் மானமுடையவர்க்குக் கருத்தல்லாமையால் 'கொள்வர்' என உலகியலாற் சொல்லினர். இவை மூன்று பாட்டாலும் மெலியவன் செய்யுந் திறம் சொல்லப்பட்டது.

(கூ - து) ஆளுமிடஞ் சிறியராகிய மந்திரிகள் தம்மினும் வலியார் தம்மை யெதிர்ந்தவிடத்து அவரைப் பணிந்து சமாதானமாக விருத்தலை மேற்கொள்வர் என்பது.

10. Ministers of small states, afraid of their people being frightened, will submit to and acknowledge their superior foes, if the latter offer them a chance of reconciliation.

---

## ஆறும் அதிகாரம்

### ௬௫ 0 தூது—The Ambassador

**பரி:—அஃதோர்வது ()சந்தி விக்கிரகங்கட்கு ○வேற்றுவேந்தரிடைச்**

---

* சந்திக்கு – சமாதானத்திற்கு. † இயைதல் – பொருந்துதல்.
‡ அடியிலே – போர் செய்ய ஆரம்பித்த காலத்திலே.
§ தம்பகுதியும் – தமது சேனை, நட்பு முதலிய அங்கங்களும்.
|| முதலொடும் – அடியோடும். £ அது – முதலொடுங் கெடுதல்,
$ சிறிது கொடுத்தல் – தான மென்னும் உபாயம்.
¶ பணிதல் - பகைவர்க்குத் தாழ்ந்தொழுகுதல்.

0 "வேத மாந்தர் வேந்தரென் றிருவர்க்குந் தூது போதற் றொழிலுரித் தாகும்." "சிறப்புப் பெயர்பெறிற் செப்பிய விரண்டு, முதற்குரி மரபின வொழிந்தோ ரிருவர்க்கும்." என்பது அகப்பொருள் விளக்கம்.

() அமைச்சு அதிகாரம் மூன்றாவது குறளின் விசேடவுரையில் "வட நூலார் இவற்றுட் பொருத்தலைச் சந்தி யென்றும் பிரித்தலை விக்கிரக மென்றும் கூறுப" என்று கூறப்பட்டிருத்தல் இங்கறியத் தக்கது. சந்தி விக்கிரகம் – அடுத்துக் கெடுத்தலாம்.

○ வேற்றுவேந்தர் – தம்மரசனோடு வேறுபட்ட அரசர்.

செல்வாரது தன்மை *அவ்விரண்டனேயும் மேல் வினே செயல்வகை என்றமையின். †இஃததன்பின் வைக்கப்பட்டது. ‡தான் வகுத்துக் கூறுவான் ¶கூறியது கூறுவானெனத் தூது இருவகைப்படும்; அவருள் $முன்னோன் ||அமைச்சரோ டொப்பானுகலானும் £பின்னோன் ()அவனிற் காற்கூறு குணம் குறைந்தோ னுகலானும் §இஃதமைச்சிய லாயிற்று.

தெளி:—அஃதாவது பொருத்தல் பிரித்தல்களுக்கு வேற்றரசரிடத்துச் செல்வாரது தன்மை. (பொருத்தல் பிரித்தலென்னும்) அவ்விரண்டனேயும் முன் வினேசெயல்வகை என்றமையால், இஃது அதன் பின் வைக்கப்பட்டது. தான் வகுத்துக்கூறுவான் கூறியது கூறுவான் எனத்தூது இருவகைப்படும்; அவருள் முன்னோன் மந்திரியோடொப்பா னுகலானும் பின்னோன் அவனிலுங் காற்பங்கு குணங் குறைந்தோனுகலானும் இஃது அமைச்சியலாயிற்று.

---

க. அன்புடைமை யான்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு.

பரி.—(இ-ள்.) தன்சுற்றத்தார்மாட்டு அன்புடையனுதலும் அமைச்சுப் பூணற்கமைந்த குடியின்கட் பிறத்தலும் அரசர்சாதி விரும்பும் பண்புடையனுதலும் தூதுவார்த்தை சொல்லுவானுக் கிலக்கணம், (எ—று).

‡‡முன்னேய விரண்டனுலும், முறையே சுற்றத்தார்க்குத் தீங்கு வாராமற்றன் பேணியொழுகலும், ¶¶தன்முன்னோர் தூதியல் கேட்ட

---

* அவ்விரண்டனேயும்—சந்திவிக்கிரகங்களேயும்.

† இஃததன்பின் வைக்கப்பட்டது-தூது என்னும் இவ்வதிகாரம் வினே செயல்வகை யென்னும் அதிகாரததின்பின் வைக்கப்பட்டது.

‡ தான் வகுத்துக் கூறுவான் ஒரு காரியத்தைத் தான் பிறரோடு சொல்லும் வகையையும், அதற்கு அவர் சொல்லும் உத்தரவையும், அவ்வுத்தரவுக்குப்பின்தான் சொல்லும் வகையையும் மேலும் மேலும் தானே கற்பித்துக்கொண்டு சந்தற்பத்திற் கேற்றவகை பேசுந்தூதன்.

¶ கூறியது கூறுவான் - கிளிப்பிள்ளேயைப் போன்று தன்னரசன் தன்னிடத்துக் கூறியதை மாத்திரம் வேற்றுவேந்தரிடத்துக் கூறுந் தூதன்.

$ முன்னோன்—தான் வகுத்துக் கூறுவான்.

|| "ஆதிநூ லமைச்சர்க் கோது மாண்பெலா மமைந்து நின்றான், தூதனுச்சொல்லிற் சொல்லாச்சூழ்பொருளில்லே" என்பது சூளாமணி.

£ பின்னோன்—கூறியது கூறுவான்.

() அவனில்—தான் வகுத்துக் கூறுவானிலும். § இஃது—தூது.

‡‡ முன்னேய விரண்டனுலும்-அன்புடைமை, ஆன்ற குடிப்பிறத்தல் என்று முன்னுள்ள இரண்டனுலும்.

¶¶ தன் முன்னோர் தூதியல் கேட்டறிதலும்—தனது தகப்பன் பாட்டன் முதலாயினோர் தூதராயொழுகிய தன்மையைக் கேட்டுள்ளத்தமைத்தலும்,

றிதலும் பெற்றும். *'வேந்தவாம் †பண்புடைமை' முன்னர் மன்னரைச் சேர்ந்தொழுகற்கட் பெறப்படும். ‡அதனால் வேற்றரசரும் 0அவன் வயத்தராதல் பெறுதும்.

தெளி :—(இ-ள்.) அன்புடைமை - (தன் சுற்றத்தாரிடத்து) அன்புடையவனாதலும், ஆன்றகுடிப்பிறத்தல் - (அமைச்சர்தொழில் செய்தற்கு) அமைந்த குடியில் பிறத்தலும், வேந்தவாம் பண்புடைமை அரசர்சாதி விரும்பும் குணமுடையவனாதலும், தூதுரைப்பான்—தூது வார்த்தையைச் சொல்லுவானுக்கு, பண்பு—இலக்கணமாம், (எ-று).

முன்னையவிரண்டனுலும், முறையே சுற்றத்தார்க்குத் தீங்கு வாராமல்தான் (அவரைப்) பாதுகாத்து நடத்தலும், தன்முன்னோரது தூதினியல்பைக் கேட்டறிதலும் பெற்றும். 'வேந்தவாம் பண் புடைமை' பின்வரும் மன்னரைச் சேர்ந்தொழுகலென்னு மதிகாரத்-திற்பெறப்படும். அதனால் வேற்றரசரும் அவன் வயத்தினராதல் பெறப்படும்.

(க-து) அன்புடைமை, நற்குடிப்பிறப்பு, அரசர் விரும்புங்குண முடைமையென்னு மிவை தூதனது இலக்கணங்களாம் என்பது.

1. The qualifications of an ambassador are affection for his relatives, a high birth, and the possession of attributes pleasing to the royalty.

---

**அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்**
**கின்றி யமையாத மூன்று.**

பரி:—(இ-ள்) தம்மரசன்மாட் டன்புடைமையும் அவனுக்கு

---

* மனு தர்மசாஸ்திரம் ஏழாவதத்தியாயத்தில் "சர்வ சாஸ்திரங் களையுமறிந்தவனும், சொற்குறி கண்சிமிட்டுதல் முதலிய சமிக்கை, சிட்டிகைபோடுதல் முதலிய செய்கை என்னுமிவற்றைக் கண்டறிப-வனும், பொருளாசை யில்லாதவனும், சமர்த்தனும் நற்குலத்திற் பிறந்தவனும் இருக்கிற ஒரு தூதனை அரசன் தன்னிடத்தில் வைத்து கொள்ளல் வேண்டும்".

"அந்தத்தூதன் யாவரிடத்தும் அன்புள்ளவனும், சமர்த்தனும் பொருளாசை யில்லாதவனும், நியாபக முள்ளவனும், தேச காலங்களை யறிந்தவனும், தேகபுஷ்டியுள்ளவனும், பயமில்லாத-வனும், சம்ஸ்கிருத முதலிய பாஷைகளைப் பேசுகிறவனும் இருந்தால் அரசனுக்குப் பெருமையை யுண்டுபண்ணுவான்" என்று கூறுவது மிங்கறியத்தக்கது.

† பண்புடைமையாவது பெருமை சான்றாண்மைகளில் தாம் வழு வாது நின்றே எல்லாரியல்புகளுமறிந்து அவற்றிற்கொத்து நடத்த-லாம். "பண்பெனப்படுவது பாடறிந் தொழுகுதல்" என்பது கலித்தொகை.

‡ அதனால்-வேந்தவாம் பண்புடைமையால். 0 அவன்-தூதன்.

†ஆவனவறியு மறிவுடைமையும் ‡அவற்றைவேற்றரசரிடைச் சொல்லுங்கால் ஆராய்ந்து சொல்லுதல் வன்மையு மெனத் தூதுரைக்க வுரியார்க்கு இன்றியமையாத குணங்கள் மூன்று, (எ–று).

*ஆராய்தல் – ¶அவற்றிற் குடம்படுஞ் சொற்களைத் தெரிதல். 'இன்றியமையாத மூன்று' எனவே, அமைச்சர்க்குச் சொல்லிய $பிற குணங்களும் வேண்டுமென்பது பெற்றும். இவை யிரண்டு பாட்டானும் £இருவகையார்க்கும் பொதுவிலக்கணங் கூறப்பட்டது.*

தெளி :—(இ–ள்.) *அன்பு – (தம்மரசனிடத்து) அன்புடைமையும், அறிவு-(அவ்வரசனுக்கு ஆவனவற்றை யறியும்) அறிவுடைமையும், (அவற்றை வேற்றரசரிடத்துச் சொல்லும்போது), ஆராய்ந்த சொல்வன்மை–ஆராய்ந்து சொல்லுதல் வலிமையும், (என), தூதுரைப்பார்க்கு – தூதுசொல்ல வுரியவர்க்கு, இன்றியமையாத – அவசியமாக வேண்டிய குணங்கள், மூன்று – மூன்றும், (எ–று).*

*ஆராய்தல் – அவ்வன்பு முதலிய வற்றிற்குச் சம்மதிக்குஞ் சொற்களைத் தெரிதல். 'இன்றி யமையாத மூன்று' எனவே, மந்திரிகளுக்குச் சொல்லிய மற்றைக் குணங்களும் வேண்டுமென்பது பெறப்பட்டது. இவை இரண்டு பாட்டாலும் இருவகைத் தூதர்க்கும் பொதுவிலக்கணம் சொல்லப்பட்டது.*

(க–து.) *தூதுரைக்க வுரியாரது முக்கிய குணங்கள் அன்பு, அறிவு, சொல்வன்மை யென்னு மிம்மூன்றுமாம் என்பது.*

2. Love to his sovereign, knowledge of his affairs, and a discriminating power of speech before other sovereigns are the three essential qualifications of an ambassador.

---

**ங. நூலாரு ணூல்வல்ல னாகுதல் வேலாருள்**
**வென்றி வினையுரைப்பான் பண்பு.**

பரி :—(இ–ள்.) வேலையுடைய வேற்றரசரிடைச் சென்று தன்னரசனுக்கு வென்றிதரும் வினையைச் சொல்லுவானுக்கு இலக்கணமாவது நீதிநூலை யுணர்ந்த அமைச்சரிடைத் தான் அந்நூலை வல்லனாதல், (எ–று).

---

† ஆவன - *நன்மை தருவன.*

‡ *அவற்றை – அன்புடைமையையும் அறிவுடைமையையும்.*

¶ *அவற்றிற்கு தம்மரசன்மாட் டன்புடைமைக்கும் அவ்வரசனுக்காவனவறியும் அறிவுடைமைக்கும்.*

$ *பிறகுணங்களும் – அமைச்சு முதல் வினைசெயல்வகை யீருகவுள்ள அதிகாரங்களில் கூறியுள்ள வேறுகுணங்களும்.*

£ *இருவகையார்க்கும் – தான்வகுத்துக் கூறுவான் கூறியது கூறுவான் என்னும் இருவகைத் தூதர்களுக்கும்.*

கோறன் மாலையரென்பது தோன்ற *'வேலார்' என்றும், †தூது வினை யிரண்டுமடங்க 'வென்றிவினை' என்றுங் கூறினர். வல்லனுதல்-உணர்வு மாத்திர முடையராய ‡அவர் முன் வகுக்குமாற்ற லுடையனுதல்.

தெளி :—(இ-ள்.) வேலாருள்–வேலினையுடைய வேற்றரசரிடத்து, (சென்று), வென்றி – (தன்னரசனுக்கு) வெற்றியைத் தருகின்ற, வினையுரைப்பான், தொழிலைச் சொல்லுவானுக்கு, பண்பு–இலக்கண மாவது, நூலாருள் – நீதிநூலை யறிந்த மந்திரிகளிடத்து, நூல்வல்ல னுகுதல் – (தான்) அந்நீதி நூலில் வல்லவனுகல், (எ–று).

வேற்றரசர் கொல்லுந்தன்மையுடையா ரென்பதுதோன்ற 'வேலார்' என்றும், தூதுபோதல் தன்னரசனுக்கு வெற்றியைத் தருகின்ற வினையைக் கூறுதலென்னு மிரண்டுமடங்க 'வென்றிவினை' என்றும், சொல்லினர். வல்லவனுதல்-அறிதல் மாத்திர முடையவ ராகிய அவர் முன் தான்வகுத்துக் கூறும் வல்லமை யுடையவனுதல்.

(கூ-து.) நீதிநூலுணர்ந்த மந்திரிகளிடத்துத் தான் நீதிநூலில் வல்லவனு யிருத்தல் தூதனுக்கு இலக்கணமாம் என்பது.

3. To be powerful in politics among those who are learned in ethics is the character of him who speaks to lance-bearing kings on matters of triumphs to his own sovereign.

---

## ச. அறிவுரு வாராய்ந்த கல்வியிம் மூன்றன் செறிவுடையான் செல்க வினைக்கு.

பரி :—(இ ள்.) இயற்கையாகிய வறிவும் கண்டார் விரும்புந் ¶தோற்றப் பொலிவும் பலரோடும் பலகாலு மாராயப்பட்ட கல்வியுமென $நன்கு மதித்தற்கேதுவாய இம்மூன்றனது கூட்டத்தை யுடையான் வேற்று வேந்தரிடைத் தூதுவினைக்குச் செல்க, (எ–று).

‖இம்மூன்றும் ஒருவன்பாற் கூடுதலரிதாகலின் 'செறிவுடையான்' என்முர். £இவற்ருன் நன்கு மதிப்புடையனுகவே, வினை யினிது முடியுமென்பது கருத்து.

---

* தலைமைபற்றி 'வேலார்' என்று கூறப்பட்டது. இது (வேல்) மற்றப் படைகளுக்கும் உபலட்சணமாம்.

† தூது வினை யிரண்டும் – தூதுபோதலும் தன்னரசனுக்கு ஆவனவற்றைச் செய்தலுமென்னு மிரண்டும். தூது-சந்தி (பொருத்தல்) ஆம்; வினை-விக்கிரகம் (பிரித்தல்) ஆம்.

‡ அவர் முன் – நீதிநூலை யுணர்ந்த மந்திரிகளுக்கு முன்.

¶ தோற்றப்பொலிவு – வடிவத்தின் விளக்கம்.

$ நன்குமதித்தற் கேதுவாய – மிகவும் கௌரவித்தற்குக் காரணமாய.

‖ இம்மூன்றும் – அறிவு, உருவு, ஆராய்ந்தகல்வி யென்னும் இந்த மூன்றும். £ இவற்ருன் – அறிவு முதலியவற்ருல்.

தெளி:—(இ ள்.) அறிவு - (இயற்கையாகிய) அறிவும், உருவு - (கண்டார் விரும்பும்) தோற்றப் பொலிவும், ஆராய்ந்தகல்வி - (பலரோடும் பலகாலும்) ஆராயப்பட்ட கல்வியும், (என), இம்மூன்றன் - (நன்கு மதித்தற்கு ஏதுவாகிய) இம்மூன்றனது, செறிவுடையான் - கூட்டத்தையுடையவன், வினைக்கு - (வேற்றரசரிடத்துத் தூதுரைக்குந்) தொழிலுக்கு, செல்க - செல்லக் கடவன், (எ-று).

இம்மூன்றும் ஒருவனிடத்துக் கூடுதல் அரிதாகலால் 'செறிவுடையான்' என்றார். இவற்றால் நன்கு மதிப்புடையவனாகவே, மேற்கொண்ட தொழில் இனிது முடியுமென்பது கருத்து.

(க-து.) இயற்கையறிவும் தோற்றப்பொலிவும் ஆராய்ந்த கல்வியுமுடையவன் தூதுபோதற் றொழிலுக் குரியவனாவன் என்பது.

4. He who has combined in him sense, an attractive bearing and well tried learning, may go on a mission to the courts of other rulers.

---

ரு. தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாந் தூது

பரி:—(இ-ள்) வேற்றரசர்க்குப் பலகாரியங்களைச் சொல்லும்வழிக் காரணவகையாற் றொகுத்துச் சொல்லியும், இன்னாத காரியங்களைச் சொல்லும் வழி *வெய்யசொற்களை நீக்கி யினிய சொற்களால் மன மகிழச்சொல்லியும், தன்னரசனுக்கு நன்மையைப் பயப்பவனே தூதனாவான், (எ-று).

பலகாரியங்கட் குடம்படாதார் †பரம்பரையான் ‡அவற்றிற்குக் காரணமாய தொன்றைச்சொல்ல அதனால் ¶அவை விளையுமாறுய்த்துணர அருமையானுஞ் $சுருக்கத்தானு முடம்படுவர்; இன்னாதவற்றிற் குடம்படாதார் தம்மனமகிழச்சொல்ல அவ்வின்னாமை காணாது உடம்படுவராதலின், §அவ்விருவாற்றானும் தன்காரியந் தவறாமல் முடிக்கவல்லா னென்பதாம். எண்ணும்மைகள் விகாரத்தாற் றொக்கன.

தெளி:—(இ-ள்.) (வேற்றரசர்க்குப் பலகாரியங்களைச் சொல்லுமிடத்து) தொகச்சொல்லி - (காரணவகையால்) தொகுத்துச்

---

* வெய்யசொற்களை - கேட்பதற்குப் பிரிய மாகாத சொற்களை.

† பரம்பரை - ஒன்றோடுபிறிதொன்று யாதாவதொன்றன் வாயிலாகத் தொடர்ந்திருப்பதாம்.

‡ அவற்றிற்கு - பலகாரியங்களுக்கு. ¶ அவை - பலகாரியங்கள்.

$ சுருக்கத்தானு முடம்படுவர் - சொல்வது சுருக்கமா யிருத்தலாலுஞ் சம்மதிப்பர்.

§ அவ்விருவாற்றானும் - தொகச்சொல்லுதலாலும் தூவாதநீக்கி நகச் சொல்லுதலாலும்.

சொல்லியும், (இனிமையல்லாத காரியங்களைச் சொல்லுமிடத்து), தூவாதநீக்கி - வெய்ய சொற்களை நீக்கி, நகச்சொல்லி - (இனிமையாய சொற்களால் மன) மகிழச் சொல்லியும், நன்றி பயப்பது - (தன்னரசனுக்கு) நன்மையைச் செய்பவனே, தூதாம் - தூதனுவான், (எ-று).

பலகாரியங்களுக்கு உடம்படாதவர் பரம்பரையால் அப்பல காரியங்களையும் முடித்தற்குக் காரணமாய தொரு காரியத்தைச் சொல்ல அதனுல் அவை பயன்படும் விதத்தை ஆலோசித்தறிய அருமையாலும் சுருக்கத்தாலும் உடன்படுவர்; இனிமையில்லாத காரியங்களுக்கு உடம்படாதவர் தமது மனமகிழச்சொல்ல அவ்-வினிமையில்லாமை தோன்ருமையால உடபடுவராதலால், அவ்விரு வழியாலும் தூதன் தன் காரியத்தைத் தவருமல் முடிக்க வல்லானென்பதாம். சொல்லி, சொல்லி யென்னும் இரண்டிடத்திலும் எண்ணுப்பொருளில்வந்த உம் என்னும் இடைச்சொற்கள் செய்யுள் விகாரத்தால் தொக்குநின்றன.

(க-து.) வேற்றரசரிடத்துத் தான் சென்ற காரியத்தைத் தொகுத்து அவர் விரும்புமாறு சொல்லுபவனே தன்னரசனுக்கு நன்மை பயக்குந் தூதனுவான் என்பது.

5. He is an ambassador who in the presence of other rulers speaks concisely, avoids harsh words, talks so as to make them smile, and thereby brings good to his own sovereign.

---

சு. **கற்றுக்கண் ணஞ்சான் செலச்சொல்லிக் காலத்தாற்**
**றக்க தறிவதாந் தூது.**

பரி:—(இ-ள்) நீதிநூல்களைக் கற்றுத் தான்சென்ற கருமத்தைப் பகைவேந்தர் மனங்கொளச்சொல்லி, அவர் செயிர்த்து நோக்கின் அந்நோக்கிற் கஞ்சாது, காலத்தோடு பொருந்த *அது முடிக்கத்தக்க வுபாயமறிவானே தூதனுவான், (எ-று).

அவ்வுபாய மறிதற்பொருட்டு நீதிநூற்கல்வியும், † அதனுனன்றிப் பிறிதொன்ருன் முடியுங்காலம் வரின் அவ்வாறு முடிக்கவேண்டுதலிற் காலத்தாற் றக்கதறிதலும் இலக்கணமாயின.

தெளி:—(இ-ள்.) கற்று - (நீதிநூல்களைக்) கற்று, (தான்சென்ற கருமத்தை), செல - (பகைவேந்தர்) மனங்கொள, சொல்லி - கூறி, கண்ணஞ்சான் - (அப்பகைவேந்தர் கோபித்துப்பார்த்தால்) அப்பார்வைக்கு அஞ்சாது, காலத்தால் - காலத்தோடு, (பொருந்த), தக்கது - (அதுமுடிக்கத்) தக்க உபாயத்தை, அறிவது - அறிபவனே, தூதாம் - தூதனுவான், (எ-று)

---

* அது - தான்வந்த கருமத்தை.

† அதனுனன்றி - நீதிநூற் கல்வியாலல்லாமல்.

அவ் வுபாயத்தை யறிதற் பொருட்டு நீதிநூற் கல்வியும், அதனு லன்றி மற்றென்றால் முடியுங்காலம் வரின் அவ்வாறு முடிக்கவேண்டு தலால் காலத்தாற் றக்கதறிதலும் தூதனுக்கு இலக்கணமாயின.

(க–து) நீதிநூலுணர்ந்து, பகையரசர் மனங்கொளத் தான் சென்ற கருமத்தைச் சொல்லி, அவர் கோபித்துப் பார்ப்பதற் கஞ்சாது, காலத்தோடு பொருந்த அது முடித்தற்கா முபாயத்தை யறிபவனே தூதனாவான் என்பது.

6. He is an ambassador who having studied politics, talks impressively, is not afraid of the angry looks of enemical rulers and knows to employ the art suited to the time.

---

## எ. கடனறிந்து காலங் கருதி யிடனறிந் தெண்ணி யுரைப்பான் றலை.

பரி :—(இ–ள்.) வேற்றரசரிடத்துத் தான் செய்யு முறைமையறிந்து' அவர் செவ்வி பார்த்துச் சென்ற கருமஞ் சொல்லுதற்கேற்ற இடமறிந்து, சொல்லுமாற்றை முன்னே விசாரித்து, அவ்வாறு சொல்லுவான் தூதரின் மிக்கான், (எ–று).

செய்யு முறைமையாவது *அவர் நிலையும், தன்னரசனிலையும், தன்னிலையும் †தூக்கி ‡அவற்றிற்கேற்பக் §காணுமுறைமையும் சொல்லுமுறைமையும் ||முதலாயின. செவ்வி - தன் சொல்லை யேற்றுக் கொள்ளும் மனநிகழ்ச்சி. £அது காலவயத்ததாகலிற் $'காலம்' என்றார். இடம் – தனக்குத் துணையாவா ¶ருடனுயவிடம். எண்ணுதல்– தான் ()அது சொல்லுமாறும், அதற்கு அவர் சொல்லு முத்தரமும், அதற்குப்பின் றான் சொல்லுவனவுமாக இவ் வாற்றான் மேன்மேற் றனே கற்பித்தல். வடநூலார் 0இவ் விருவகையாருடன் ஓலை

---

* அவர் – வேற்றரசர்.

† தூக்கி – நன்றாகவாராய்ந்து.

‡ அவற்றிற்கேற்ப – வேற்றரசர்நிலை, தன்னரசனிலை, தூதாக வந்த தன்னிலையென்பனவற்றிற்குப் பொருந்த.

§ காணுமுறைமையும் – வேற்றரசரைப் பார்க்குங் கிரமமும்.

|| முதலாயின என்றமையின், வேற்றரசரது குணம், இங்கிதம், ஆகாரம், செயல் என்பனவற்றை யறிதலுங் கொள்க.

£ அது – செவ்வி (சமயம்).

$ ஒருகாலத்திலுண்டாகும் (தன் சொல்லை யேற்றுக்கொள்ளும்) மனநிகழ்ச்சி (மனத்தின் தன்மை)யைக் காலமென்றது (கார் அறுத்தது என்பதுபோலக்) காலவாகு பெயராம்.

¶ உடனுய – கூடவிருக்கின்ற.

() அது – தான்வந்த கருமத்தை.

0 இவ் விருவகையாருடன் – தான் வகுத்துக் கூறுவான் கூறியது கூறுவான் என்னு மிருவரோடு.

கொடுத்து நிற்பாரையுங் கூட்டித் தூதரைத் *தலை, இடை, கடையென்று வகுத்துக் கூறினாராகலின், அவர் மதமுந் தோன்றத் 'தலை' என்றார். தூதென்பது †அதிகாரத்தான் வந்தது. இவை ஐந்து பாட்டானும் தான் வகுத்துக் கூறுவான திலக்கணங் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) கடன் – (வேற்றரசரிடத்துத் தான் செய்யும்) முறைமையை, அறிந்து – தெரிந்து, காலங்கருதி – (அவ்வேற்றரசரது) சமயம் பார்த்து, இடனறிந்து – (சென்றகருமஞ் சொல்லுதற்கு ஏற்ற) இடத்தைத் தெரிந்து எண்ணி – (சொல்லும் வழியை முன்னே) விசாரித்து, உரைப்பான் – (அவ்விதம்) சொல்லுவான், தலை – (தூதருள்) மிக்கானவன், (எ-று).

செய்யும் முறைமையாவது அவர் நிலையும், தன்னரசனிலையும், தன்னிலையும் சீர்தூக்கி அவற்றிற்குப் பொருந்தக்காணும் முறைமையும் சொல்லு முறைமையும் முதலாயின. சமயம் – தன் சொல்லை யேற்றுக்கொள்ளும் மனநிகழ்ச்சி. அது காலத்தின் வசத்ததாகலால் 'காலம்' என்றார். இடம் – தனக்குத் துணையாவார் உடனாகியவிடம். எண்ணுதல் – தான் அது சொல்லும் விதமும், அதற்கு அவர் சொல்லும் உத்தரமும், அதற்குப்பின் தான் சொல்லுவனவுமாக இவ்வழியால் மேலுமேலும் தானே யெண்ணுதல். வடநூலார் இவ் விருவகையாருடன் ஓலை கொடுத்து நிற்பாரையுங் கூட்டித் தூதரைத் தலை, இடை, கடை என்று வகுத்துச் சொல்லினாராதலால், அவர் மதமுந் தோன்றத் 'தலை' என்றார். தூதென்பது அதிகாரத்தால் வந்தது. இவை ஐந்து பாட்டாலும் தான் வகுத்துக் கூறுவானது இலக்கணம் சொல்லப்பட்டது.

(க-து.) வேற்றரசரிடத்துத் தான் செய்யும் முறைமை, காலம், இடமென்னு மிவற்றை யறிந்தாலோசித்துச் சொல்பவனே தூதருள் தலைமை யுடையவனாவான் என்பது.

7. He is the chief among ambassadors who understands the proper decorum before other princes, seeks the proper occasion, knows the most suitable place and delivers his message after due consideration.

---

* "தானறிந்து கூறுந் தலைமற் றிடையது, கோனறைந்த தீதென்று கூறுமாற் – றுனறியா, தோலையே காட்டுங் கடையென் றொருமூன்று, மேலையோர் தூதுரைத்தவாறு" என்று பாரதவெண்பா கூறுகின்றது. இங்குத் தூது போதற்கு உரியவர் வேதியரும், வேந்தரும், அரசனாற் சிறப்புப்பெற்ற வணிகரும் சூத்திரருமாவ ரென்று அறியத்தக்கது. பாரதத்திலுள்ள உலூகன் தூது, சஞ்சயன் தூது, கிருஷ்ணன் தூதுகளால் வேதியர் வேந்தர்களின் தூதின் விஷயம் நன்கு வெளியாகும். இவ்வாறன்றித் தேவர் முதலியோரும் தூது சென்றதுண்டு. அது சூரபதுமனிடத்து வீரவாகு தேவரும், இராவணனிடத்து அனுமாரும் அங்கதனும் தூது சென்றிருத்தலா லறிதற் பாற்றும்.

† அதிகாரத்தான் – தூது என்னும் அதிகாரத்தினால்.

அ. தூய்மை துணைமை துணிவுடைமை யிம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு.

பரி.—(இ-ள்.) தன்னரசன் வார்த்தையை அவன்சொல்லியவாறே வேற்றரசருக்குச் சென்று சொல்லுவான திலக்கணமாவன *பொருள் காமங்களாற் றூயனுதலும் தனக்கு அவரமைச்சர் துணையாந்தன்மையுந் துணிதலுடைமையும் இம்மூன்றோடு கூடிய மெய்ம்மையுமென விவை, (எ - று).

பொருள் காமங்கள்பற்றி வேறுபடக் கூறாமைப்பொருட்டுத் தூய்மையும், தன்னரசனுக்கு உயர்ச்சி கூறியவழி எம்மனோர்க் †கஃதியல் பெனக்கூறி ‡அவர் வெகுளி நீக்குதற்பொருட்டுத் ||துணைமையும், இது சொல்லின் இவரேதஞ் செய்வரெனவொழியாமைப் பொருட்டுத் துணிவுடைமையும் யாவரானுந்தேறப்படுதற்பொருட்டு மெய்ம்மையும் வேண்டப்பட்டன. இன்ஓடுவின் பொருட்கண் வந்தது

தெளி:—(இ-ள்.) வழி-(தன்னரசன் வார்த்தையை அவன் சொல்லிய) படியே, உரைப்பான் -(வேற்றரசருக்குச்சென்று) சொல்லுவானது, பண்பு இலக்கணமாவன, தூய்மை-(பொருளாலும் காமத்தாலும்) பரிசுத்தனுதலும், துணைமை-(தனக்கு அவ்வேற்றரசரது மந்திரிகள்) துணையாந்தன்மையும், துணிவுடைமை-துணிதலையுடைமையும், இம்மூன்றின்-இம்மூன்றனோடு, (கூடிய), வாய்மை-மெய்ம்மையும், (என்றிவைகளாம்), (எ-று).

பொருள் பற்றியும் காமம் பற்றியும் வேறுபடச்சொல்லாமைப் பொருட்டுத் தூய்மையும், தன்னரசனுக்கு உயர்ச்சி சொல்லிய விடத்து எம்போல்வார்க்கு அவ்வாறு சொல்லுதல் இயல்பென்று சொல்லி அவரது கோபத்தை நீக்குதற்பொருட்டுத் துணைமையும், இதுசொன்னுல் இவர் துன்பஞ்செய்வாரென்று ஒழியாமைப் பொருட்டுத் துணிவுடைமையும், யாவராலும் நம்பப்படுதற் பொருட்டு மெய்ம்மையும் வேண்டப்பட்டன மூன்றின் என்னும் ஐந்தனுருபு தனக்குரிய பொருளைவிட்டு மூன்றோடு என மூன்றும் வேற்றுமையின் உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. இவ்வாறு வருவது வேற்றுமை மயக்கமெனப்படும். மூன்றின்-மூன்றனோடு. இன்-ஐந்தனுருபு; ஒடு-மூன்றனுருபு.

(க-து.) தூதனுக் கிலக்கணமாவது அவன் தூய்மையும் துணைமையும், துணிவும், வாய்மையும் உடைத்தா யிருத்தலாம்.

---

* பொருள் காமங்களால் தூயனுதலாவது-பொருளிலும் சிற்றின்பத்திலும் பற்றில்லாதவனு யிருத்தல். "உறுபொருள் காமம் விருப்புறாத் தூய்மை" என்று விநாயக புராணங் கூறுகின்றது.

† அஃதியல்பெனக்கூறி-உயர்ச்சி கூறுதல் சுபாவமெனச் சொல்லி.

‡ அவர்-வேற்றரசர்.

|| துணைமையும்-வேற்றரசரது மந்திரிகள் தனக்குத் துணையாயிருத்தலும். அனுமானுக்கு விபீஷணனும், கண்ணனுக்கு விதுரரும் துணையாயிருந்தமை யிங்குக் கவனிக்கத்தக்கது.

8. The qualifications of the ambassador who faithfully delivers his sovereign's message, are purity, the support of foreign ministers and boldness, coupled with truthfulness in addition to the aforesaid three.

---

சுஅ. *விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன்.

பரி:—(இ-ள்.) தன்னரசன் சொல்லிவிட்ட வார்த்தையை வேற்றரசர்க்குச் சென்று சொல்லவுரியான் தனக்கு வருமேதத்திற்கஞ்சி †அவனுக்குத் தாழ்வான வார்த்தையை வாய்சோர்ந்துஞ் சொல்லாத ‡திண்மையை யுடையான், (எ-று).

||*தாழ்வு சாதி தருமமன்மையின், §'வடு' என்றார். $'வாய்சோரா எனக்காரியங் காரணத்து ளடக்கப்பட்டது.*

தெளி.—(இ-ள்.) *விடுமாற்றம்*-(தன்னரசன்சொல்லி) விட்ட-வார்த்தையை, வேந்தர்க்கு-வேற்றரசர்க்கு, (சென்று), உரைப்பான்-சொல்லுதற்கு உரியவன், (தனக்குவரும் துன்பத்திற்கு அஞ்சி), வடுமாற்றம்-(அவனுக்குத்) *தாழ்வானவார்த்தையை*, வாய்சோரா - வாய்சோர்ந்துஞ் சொல்லாத, வன்கணவன்-திண்மையை யுடையான், (எ-று).

*தாழ்வு சாதி தருமமல்லாமையால், அத்தாழ்வை* 'வடு' என்றார். தாழ்வான வார்த்தையைச் சொல்லாமையாகிய *காரியத்தை* அதன் *காரணமாகிய* வாய்சோராமையிலடக்கி 'வாய்சோரா' என்று கூறப்பட்டது.

---

* "தடுமாற்ற மின்றித் தகைசான்ற சொல்லான், வடுமாற்றம் வாய்சோராணுகி-விடுமாற்றம், எஞ்சாது கூறி யிகல்வேந்தன் சீறுங்கால், *அஞ்சா தமைவது தூது*" என்பது பாரதவெண்பா.

† அவனுக்கு-தன்னரசனுக்கு. ‡ திண்மை-மனவுறுதி.

|| *தாழ்வு சாதிதருமமன்மையின்* - பகைவர்க்குத் தாழ்வான வார்த்தை சொல்லுதல் அரசர்சாதி தருமமல்லாமையினால். கிருஷ்ணன் முதலாயினோர் தூதுசென்ற விடத்துத் தம்மரசர்க்குத் தாழ்வானவார்த்தை சொல்லா தொழுகியவாறிங் கறிதற் பாலதாம்.

§ ஆயுத முதலியவற்றால் உடம்பிலுண்டாயகுறி வடு எனப்படும். அரசர் தாழுதற்குரியராகா (அஃதாவது அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் முதலியோராகா) ரிடத்துத் தாழ்வானவார்த்தையைச் சொல்லுதல் அவர்க்கு வடுப்போன்று மாறாது பழியையுண்டாக்குதல் பற்றித் தாழ்வானவார்த்தையை 'வடுமாற்றம்' என்று கூறினர்.

$ தாழ்வான வார்த்தையைச் சொல்லுவதற்குக் காரணம் வாய் சோருதலாம்; தாழ்வானவார்த்தையைச் சொல்லாமைக்குக் காரணம் வாய்சோராமையாம். வாய்சோருதல்-அச்சத்தால் வாய்குளறுதல்.

(க-து.) தன்னரசன் சொல்லிவிட்ட வார்த்தையை அவனுக்குத் தாழ்வுவாராவாறு வேற்றரசர்க்குத் தனக்குவருந் துன்பத்திற்கஞ்சிச் சோர்வடையாது சொல்பவனே தூதருள் திண்மையுடையவனுவான் என்பது.

9. He alone is fit to communicate his sovereign's reply to other kings who possesses the firmness not to utter even inadvertently what may reflect discredit on the latter.

---

**௬௦. இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்**
**குறுதி பயப்பதாந் தூது.**

பரி:—(இ-ள்.) *அவ்வார்த்தை தன்னுயிர்க்கிறுதி தருமாயினும் †அதற்கஞ்சி யொழியாது தன்னரசன் சொல்லியவாறே ‡அவனுக்கு மிகுதியை வேற்றரசரிடைச் சொல்லுவானே தூதனுவான், (எ-று).

'இறுதிபயப்பினும்' என்றதனுல், ||ஏனையபயத்தல் சொல்ல வேண்டாவாயிற்று. இவை மூன்றுபாட்டானுங் கூறியது கூறுவான-திலக்கணங் கூறப்பட்டது.

தெளி:-(இ-ள்.) இறுதிபயப்பினும்-(அவ்வார்த்தை தன்னுயிர்க்கு) முடிவைத் தருமாயினும், எஞ்சாது-(அதற்கு) அஞ்சியொழியாது, (தன்னரசன் சொல்லிய படியே), இறைவற்கு—அவ்வரசனுக்கு, உறுதி-மிகுதியை, பயப்பது-(வேற்றரசரிடத்துச்) சொல்லுவானே, தூதாம்-தூதனுவான், (எ-று).

'இறுதிபயப்பினும்' என்று கூறினமையால், மற்றைத்துன்பங்-களைச் செய்தல் சொல்லவேண்டுவதில்லையாயிற்று. இவை மூன்று பாட்டாலும் கூறியது கூறுவானது இலக்கணம் சொல்லப்பட்டது.

(க-து.) தனக்கு முடிவைத் தருவதாயினும் வேற்றரசரிடத்துத் தன்னரசன் சொல்லிய சொல்லைச் சொல்லியவாறு அஞ்சாது சொல்பவனே தூதனுவான் என்பது.

10. He is an ambassador who fearlessly seeks his sovereign's good though it should cost him his life to deliver his message.

---

* அவ்வார்த்தை-தன்னரசன் சொல்லிவிட்டவார்த்தை.

† அதற்கு-தன்னுயிர்க்கு முடிவைத்தருதற்கு.

‡ அவனுக்கு மிகுதியை-தன்னரசனுக்கு மேன்மையை.

|| ஏனைய பயத்தல் என்றமையின், காவலில்வைத்தல், கையிற் கிட்டி போட்டடித்தல், கைகால்களைக் குறைத்தல், கண்ணைப்பிடுங்கல் முதலியவற்றையுங் கொள்க. வீரவாகுதேவரைச் சூரபதுமன் கொல்லுமாறு உத்தரவு செய்ததும், அனுமானை இராவணன் வாலிற் றுணி சுற்றிக்கொளுத்திவிட்டதும், கண்ணனைத் துரியோதனன் படுகுழியிற் கொல்லுமாறு முயற்சித்ததும் இங்கறியத்தக்கனவாம்.

# ஏழாம் அதிகாரம்

## மன்னரைச் சேர்ந்தொழுகல்
## Service under the Sovereign

பரி:—அஃதாவது அமைச்சர் அரசரைப் பொருந்தி யொழுகுமாறு. *இது 'வேந்தவாம் பண்புடைமை' என †மேலே ‡வேண்டப்பட்டமையின், தூதின்பின் வைக்கப்பட்டது.

*தெளி:—அஃதாவது மந்திரிகள் அரசரைப் பொருந்தி நடக்கும் விதமாம். இது 'வேந்தவாம் பண்புடைமை' என்று முன்னே வேண்டப்பட்டமையால், தூதின்பின் வைக்கப்பட்டது.*

---

**க. ¶அகலா தணுகாது தீக்காய்வார் போல்க**
**இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்.**

பரி:—(இ-ள்.) £மாறு படுதலையுடைய அரசரைச் சேர்ந்தொழுகும் அமைச்சர் அவரை மிக நீங்குவதும் மிகச்செறிவதுஞ் செய்யாது, தீக்காய்வார்போல இடைநிலத்திலே நிற்க, (எ-று).

*()கடிதின் வெகுளுந் தன்மையரென்பது தோன்ற 'இகல் வேந்தர்' என்றார். மிகவகலிற் பயன் கொடாது மிகவணுகின் ††அவமதி பற்றித்தெறும் வேந்தர்க்கு, மிகவகலிற் குளிர் நீக்காது மிகவணுகிற் சுடுவதாய ‡‡தீயோடுளதாய தொழிலுவமம் பெறப்பட்டது.*

*தெளி:—(இ-ள்.) இகல்-மாறுபடுதலையுடைய, வேந்தர்-அரசரை, சேர்ந்து-அடுத்து, ஒழுகுவார்-நடக்கும் மந்திரிகள், (அவ்வரசரை), அகலாது-மிகநீங்குவதும், அணுகாது-மிக நெருங்குவதும், (செய்யாது). தீக்காய்வார்போல்க-நெருப்பிற் குளிர்காய்வார்போல நடுவான விடத்திலே நிற்கக் கடவர், (எ-று).*

---

* இது-மன்னரைச் சேர்ந்தொழுகல்.

† மேலே-தூததிகாரத்தின் முதற் குறளிலே.

‡ வேண்டப்பட்டமையின் – விரும்பப்பட்டமையின்.

¶ "அக்கினி பராமுகமாய்த் தனதருகே வந்தவனை மாத்திரந் தகிக்கும்; அரசனாகிய அக்கினி கோபித்துக்கொண்டால் தனதானியம் புத்திர மித்திர களத்திராதிகளோடும் அழித்துப்போடும்" என்று மனுதரும சாஸ்திரம் ஏழாவதத்தியாயத்தில் கூறுவதும், "தீண்டினார் தமைத் தீச்சுடு மன்னர்தீ, ஈண்டு தங்கிளையோடு மெரித்திடும்" என்று சீவகசிந்தாமணி கூறுவதும் இங்கறியத் தக்கனவாம்.

£ மாறுபடுதல்-விரோதப்படுதல்.

() கடிதின்வெகுளுந் தன்மையர்-முன் கோபக்காரர்.

†† அவமதிபற்றி–தம்மை மதியாமையைக் குறித்து.

‡‡ இகல்வேந்தர் தொழிலுக்கு (மிக நீங்கினால் குளிரைப் போக்காதும் மிக நெருங்கினால் சுடுவதுமாய) நெருப்பினது தொழிலை உவமானமாகக் கூறினமையின், இக்குறள் தொழிலுவமையணியாம்.

அரசர் விரைவில் கோபிக்குந் தன்மையர் என்பது தோன்ற 'இகல்வேந்தர்' என்ருர். மிக நீங்கிஞல் பயனைக்கொடாது மிக நெருங்கிஞல் மதியாமை பற்றி வருத்தும் வேந்தர்க்கு மிக நீங்கிஞல் குளிரை நீக்காது மிக நெருங்கிஞல் சுடுவதாய நெருப்போடுளதாய தொழிலுவமானம் பெறப்பட்டது.

(க து.) மாறுபடுதலை யுடைய அரசரைச் சேர்ந்தொழுகும் மந்திரிகள் அவரை மிக நீங்குவதும் மிக நெருங்குவதுஞ் செய்யாதிருக்கக் கடவர் என்பது.

1. Ministers who serve under fickle-minded monarchs should behave like those who warm themselves by being neither too far, nor too near the fire.

---

**உ. மன்னர் விழைப விழையாமை மன்னரான்**
**மன்னிய வாக்கந் தரும்.**

பரி:—(இ-ள்.) தம்மாற் சேரப்பட்ட மன்னர் விரும்புவனவற்றைத் தாம் விரும்பா தொழிதல், அமைச்சர்க்கு அவரானே நிலைபெற்ற செல்வத்தைக் கொடுக்கும், (எ-று).

ஈண்டு 'விழைப' என்றது *அவர்க்குச் சிறப்பாகவுரியவற்றை. அவை: †நுகரப்படுவன, ஒப்பனை, ‡மேன்மையென்றிவை §முதலாயின. ||இவற்றை £ஒப்பிற்கஞ்சித் தாம் விழையாதொழியவே, அவ்வச்சநோக்கி யுவந்து $அவர்தாமே எல்லாச் செல்வமும் நல்குவரென்பது கருத்து. எனவே அவற்றை விரும்பிற் ¶கேடுதருமென்பதாம்.

தெளி:—(இ-ள்.) மன்னர் - (தம்மால் சேரப்பட்ட) அரசர், விழைப - விரும்புவனவற்றை, விழையாமை - (தாம்) விரும்பா

---

* அவர்க்கு - தாஞ்சேர்ந்த அரசர்க்கு.

† நுகரப்படுவன - செவி முதலிய ஐம்பொறிகளாலும் அனுபவிக்கப்படும் (விரோத மின்றிய) சப்தாதி விஷயங்கள். "அறியப்படுந் தன்மையிற் போக சாதனமாயுள்ளது விஷயம்." என்று தருக்க கௌமுதி கூறுகின்றது.

‡ மேன்மை - யாவர்க்கும் மேலாக விருக்குந் தன்மை.

§ முதலாயின என்றமையின், வெண்கொற்றக்குடை, வீரக்கழல், முடி, செங்கோல் முதலியவற்றையுங் கொள்க.

|| இவற்றை - அரசர்க்குச் சிறப்பாகவுரிய நுகரப்படுவன முதலியவற்றை.

£ ஒப்பிற்கஞ்சி - அரசர்க்குள்ள ஆறங்கங்களுள் ஓரங்கமாயுள்ள தாம் அவ்வரசர்க்குச் சமமாக விருத்தற்குப் பயந்து.

$ அவர்தாமே - அவ்வரசரே.

¶ "அறத்தொடு கல்யாண மாள்வினை கூரை, யிறப்பப் பெருகியக் கண்ணுந் திறப்பட்டார், மன்னரின் மேம்பட்ட செய்யற்க செய்பவேல், மன்னிய செல்வங் கெடும்" என்பது ஆசாரக் கோவை.

தொழிதல், (மந்திரிகளுக்கு), மன்னரால் - அவ்வரசராலே, மன்னிய நிலைபெற்ற, ஆக்கம் - செல்வத்தை, தரும் - கொடுக்கும், (எ-று).

இங்கு 'விழைப' என்றது அவ்வரசர்க்குச் சிறப்பாக உரியவற்றை. அவை: நுகரப்படுவன, அலங்கரித்துக் கொள்ளுதல், மேன்மையென்ற இவை முதலாயினவாம். இவற்றைச் சமமாய்த் தோன்றுவதற்கு அஞ்சித்தாம் விரும்பாதொழியவே, அவ்வச்ச நோக்கி மகிழ்ந்து அவர்தாமே எல்லாச் செல்வமும் அம் மந்திரிகளுக்குத் தருவரென்பது கருத்து. எனவே, நுகரப்படுவன முதலியவற்றை விரும்பினுல் அது மந்திரிகளுக்குக் கேடுதரும் என்பதாம்.

(க-து.) தம்மரசர் விரும்புவனவற்றை விரும்பாத மந்திரிகளுக்கு எல்லாச் செல்வமும் அவ் வரசராலுண்டாம் என்பது.

2. For ministers not to long for the things desired by their kings will through the kings themselves yield them ever-lasting wealth.

---

### ௩. போற்றி னரியவை போற்றல் கடுத்தபின்
### றேற்றுதல் யார்க்கு மரிது.

**பரி —(இ-ள்.) அமைச்சர் தம்மைக்காக்கக் கருதின் அரியபிழைகள் தங்கண் வாராமற் காக்க, *அவற்றை வந்தனவாகக் கேட்டு அவ்வரசர் ஐயுற்றுல் அவரைப் பின்றெளிவித்தல் யாவர்க்கு மரிதாகலான்.**

அரியபிழைகளாவன: அவராற் பொறுத்தற்கரிய †அறைபோதல், ‡உரிமையொடு மருவல், அரும்பொருள் வெளவல் என்றிவை முதலாயின. அவற்றைக் காத்தலாவது §ஒருவன் சொல்லியக்கால்

---

* அவற்றை – அரியபிழைகளை.

† அறைபோதல் – கீழறுத்துச் செல்லுதல். அஃதாவது எலி புலப் படாவாறு கீழே யறுத்துச்சென்று தானிருக்கு மிடத்தைக் கெடுத்தல் போல, அமைச்சன் புலப்படாவகை யொழுகித் தன்னரசன் கெடுதற் குரிய காரியங்களைப் பகை மன்னருடன் கூடிச்செய்தல்.

‡ அரசர்க்கு உரிமையாய (சொந்தமான) மகளிரைப் பண்பாகு பெயரால் உரிமையென்று கூறினர். "அறம்பொரு ளின்பம்" என்னுங் குறளின் விசேடவுரையில் "இன்பவுபதையாவது தொன்றுதொட்டு உரிமையோடு பயின்றுளொரு தவமுதுமகளைவிட்டு அவளால் உரிமையுள் இன்னுள் நின்னைக்கண்டு வருத்தமுற்றுக் கூட்டுவிக்க வேண்டுமென்று என்னை விடுத்தாள்; அவளைக் கூடுவையாயின் நினக்குப் பேரின்பமே யன்றிப் பெரும் பொருளுங் கைகூடுமெனச் சூளுறவோடு சொல்லுவித்தல்" என்று கூறியிருத்தலால் இது நன்கு விளங்கும்.

§ ஒருவன் அரசரிடத்துச் சென்று இவ்வமைச்சன் அரியபிழைகளைச் செய்கின்றுன் என்று சொல்லியவிடத்து, இப்பிழைகளை அவ்வமைச்சன்

தகுமோவென் றையுறாது தகாதென்றே *அவர் துணிய வொழுகல். †ஒருவாற்றாற் றெளிவித்தாலும் கடன் கொண்டான் றோன்றப் பொருடோன்று மாறுபோலக் கண்டுழியெல்லாம் அவை நினைக்கப் படுதலின் ‘யார்க்குமரிது’ என்றார். இவை மூன்று பாட்டானும் ‡அது பொதுவகையாற் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) (மந்திரிகள்) போற்றின் – (தம்மைக்) காத்துக் கொள்ள வெண்ணினால், அரியவை – அரியபிழைகள், போற்றல் – (தம்மிடத்து வாராமற்) காக்கக்கடவர், கடுத்தபின் - (அப்பிழைகளை வந்தனவாகக் கேட்டு அவ்வரசர்) சந்தேகித்தால், தேற்றுதல் – (அவரைப்பின்) தெளிவித்தல், யார்க்கும் – எத்தகையார்க்கும், அரிது – கூடாது, (ஆகலால்), (எ-று).

அரியபிழைகளாவன: அவ்வரசரால் பொறுத்தற்கரிய கீழறுத்தல், (அவ்வரசருக்கு) உரிமையாயுள்ள மகளிருடன் புணருதல், கிடைத்தற் கரிய பொருள்களை யபகரித்தல் என்ற இவை முதலாயின. அவ்வரிய பிழைகளைக் காத்தலாவது ஒருவன் சொல்லிய விடத்துத் தகுமோ வென்று சந்தேகமடையாது தகாதென்றே அவர் நம்புமாறு நடத்தல், (மந்திரிகள் பின்) ஒருவழியால் நம்புவித்தாலும் கடன் வாங்கினவன் தோன்றக் கடன் கொடுத்த பொருள் (நினைவில்) தோன்று விதம் போலத் தம்மைக்கண்ட விடத்தெல்லாம் அவ்வரிய பிழைகள் நினைக்கப்படுதலால் ‘யார்க்கு மரிது’ என்றார். இவை மூன்று பாட்டாலும் அது பொதுவகையாற் சொல்லப்பட்டது.

(கு-து.) அரசர் சந்தேகித்தபின் அவரைத் தெளிவிப்பது அரிதாகலின், மந்திரிகள் தம்மிடத்துக் குற்ற முண்டாகாவாறு தம்மைக் காத்துக்கொள்ளக் கடவர் என்பது.

3. Ministers who wish to save themselves (from trouble) should avoid the commission of serious errors; for if the king's suspicion be once roused, no one can remove it.

---

ச. செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு மவித்தொழுக
லான்ற பெரியா ரகத்து.

பரி:—(இ-ள்.) அமைந்தவரச ரருகிருந்தால் அவர்காண ஒருவன் செவிக்கட் சொல்லுதலையும் ஒருவன் முகநோக்கி நகுதலையுந் தவிர்ந் தொழுகுக, (எ–று).

---

செய்தல் தகுதி யுடையதாமோ வென்று சந்தேகமுறாது அவனை நோக்கி நீ கூறியது தகுதியுடைய தன்றென்று, அவ்வரசர் சொல்லுமாறு மந்திரி நடந்துகொள்ளுதலாம்.

* அவர் – அரசர்.

† ஒருவாற்றாற் றெளிவித்தாலும் – (மந்திரிகள் தாம் அரிய பிழைகளைச் செய்யவில்லை யென்று அரசரைப் பின்) ஒருவகையால் தெளியச் செய்தாலும்.

‡ அது – மன்னரைச் சேர்ந்தொழுகல்.

சேர்தல் – பிறனோடு சேர்தல். *செய்தொழுகின், தங்குற்றங் கண்டு செய்தனவாகக் கொள்வரென்பது கருத்து.

தெளி:—(இ-ள்.) ஆன்ற - அமைந்த, பெரியாரகத்து – அரசர் சமீபத்து, (இருந்தால் அவர்காண), செவிச்சொல்லும் – (ஒருவன்) காதில் சொல்லுதலையும், சேர்ந்த நகையும் – (ஒருவன்முக) நோக்கி நகைத்தலையும், அவித்து – நீக்கி, ஒழுக – நடக்கக்கடவர், (எ–று).

சேர்தல் – பிறனோடு கூடுதல். செய்து நடந்தால், அரசர் தமது குற்றத்தைக்கண்டு (அவை) செய்தனவாகக் கொள்வரென்பது கருத்து.

(கு-து.) அரசர் தமதருகே யுள்ளபோது அவர்காண மந்திரிகள் ஒருவன் காதில் சொல்லுதலையும் ஒருவன் முகநோக்கி நகைத்தலையும் ஒழிக்கக்கடவர் என்பது.

4. While in the presence of the sovereign, ministers should neither whisper to nor smile at others.

---

## ரு. †எப்பொருளு மோரார் தொடரார்மற் றப்பொருளை விட்டக்காற் கேட்க மறை.

பரி:—(இ-ள்.) அரசனுக்குப் பிறரொடு மறைநிகழ்வுழி யாதொரு பொருளையுஞ் செவிகொடுத்துக் கேளாது ‡அவனை முடுகி வினவுவதுஞ் செய்யாது அம் மறைப்பொருளை §அவன்றானே யடக்காது சொல்லியக்காற் கேட்க, (எ–று).

[ஓர்தற்கேற்கும் பொருளாயினு மென்பார் 'எப்பொருளும்' என்றார். £மற்று வினைமாற்றின்கண் வந்தது.

தெளி:—(இ-ள்.) மறை – (அரசனுக்குப் பிறரோடு) இரகசியம், (நிகழுமிடத்து), எப்பொருளும் – யாதொரு பொருளையும், ஓரார் – (செவிகொடுத்துக்) கேளாது, தொடரார்-(அவனை) முடுகி வினவுவதுஞ்

---

* செய்தொழுகின் – அமைச்சர் இரகசியமாக ஒருவன் காதி லொன்றைச் சொல்லுதலையும் மற்றொருவன் முகத்தைப் பார்த்துச் சிரித்தலையும் செய்து நடந்தால். இங்கு ஆசாரக்கோவை "பிறரொடு மந்திரங் கொள்ளாரிறைவனைச், சாரார் செவியோரார் சாரிற் பிறி தொன்று, தேர்வார்போ னிற்க திரிந்து" என்று கூறுவது மறியத் தக்கதாம்.

† ஆசாரக்கோவை "நின்றக்கால்" என்னுஞ் செய்யுளில் "பெருந்தக்கார், சொல்லிற் செவிகொடுத்துக் கேட்டிடுக மீட்டும், வினவற்க சொல்லொழிந்தக் கால்" என்று கூறுகின்றது.

‡ அவனை முடுகி வினவுவதும் – அவ்வரசனை விரைந்து கேட்பதும்.

§ அவன்றானே – அவ்வரசனே.

‖ ஓர்தற்கேற்கும் – தாம் கேட்டறிந்து ஆலோசிப்பதற்குத்தக்க.

£ மற்று என்பது தொடரா ரென்னும் எதிர்மறை வினையைத் தொடருவார் என்னும் உடம்பாட்டு வினையாக மாற்றினமையின், வினைமாற்றின்கண் வந்ததாயிற்று. தொடருவார் என்பதை 'விட்டக்காற் கேட்க" என்பதனாலறிக.

செய்யாது, அப்பொருளை - அவ்விரகசியப்பொருளை, விட்டக்கால்-(அவன்தானே) அடக்காது சொல்லினுல், கேட்க-(மந்திரிகள்) கேட்கக்கடவர், (எ-று).

ஆராய்தற்குத்தக்க பொருளாயிருந்தாலுமென்பார் 'எப்பொருளும்' என்றார். மற்று வினைமாற்றுப்பொருளில் வந்தது.

(க-து.) அரசன் பிறரோடு இரகசியம் பேசும்போது மந்திரிகள் அதனைக் கவனியாதிருந்து, அவனே சொல்லிற் கேட்கக் கடவர் என்பது.

5. When the king is engaged in secret counsel with others, ministers should neither over-hear anything whatsoever nor pry into it with inquisitive questions, but wait to listen when it is divulged by the king himself.

---

சூ. **குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில**
**வேண்டுப வேட்பச் சொலல்.**

**பரி:—(இ-ள்.) அரசனுக்குக் காரியஞ் சொல்லுங்கால் அப்பொழுது நிகழ்கின்ற †அவன் குறிப்பினையறிந்து ‡சொல்லுதற் கேற்ற காலத்தையும் நோக்கி வெறுப்பிலவுமாய் வேண்டுவனவுமாய காரியங்களை அவன் மனம் விரும்பும்வகை சொல்லுக,** (எ—று).

குறிப்புக் காரியத்தின்கணன்றிக் காமவெகுளி ||யுள்ளிட்டவற்றினிகழ்வுழியும், ¶அதற்கேலாக்காலத்துஞ் சொல்லுதல் பயனின்றாகலிற் 'குறிப்பறிந்து காலங்கருதி' என்றும், அவனுடம்படாதன முடிவு போகாமையின் 'வெறுப்பில' என்றும், பயனில்லவும் பயன் சுருங்கியவும் செய்தல் வேண்டாமையின் 'வேண்டுப' என்றும், *அவற்றை இனியவாய்ச் §சுருங்கி விளங்கியபொருளவாய சொற்களாற் சொல்லுகவென்பார் 'வேட்பச்சொலல்' என்றுங் கூறினர்.

தெளி:—(இ-ள்.) (அரசனுக்குக் காரியஞ்சொல்லும்போது) குறிப்பறிந்து-(அப்பொழுது நிகழ்கின்ற அவனது) குறிப்பினை யறிந்து, காலங் கருதி-(சொல்லுதற்கேற்ற) காலத்தையும் நோக்கி, வெறுப்பில

† அவன்-அவ்வரசன்.

‡ சொல்லுதற்கேற்ற-காரியத்தைச் சொல்லுவதற்குத்தக்க.

|| உள்ளிட்டவற்றில்-உட்கொண்டுள்ளனவற்றுள்.

¶ அதற்கேலாக்காலத்தும்-காரியஞ்செய்தற்குத் தகுதியில்லாத காலத்திலும்.

* அவற்றை-வெறுப்பில்லாதனவும் விரும்புவனவுமாய காரியங்களை.

§ "விரைந்துரையார் மேன்மே லுரையார்பொய் யாய, பரந்துரையார் பாரித் துரையார்-ஒருங்கெனைத்தும், சில்லெழுத்தி னாலே பொருளடங்கக் காலத்தாற், சொல்லுக செவ்வி யறிந்து" என்று ஆசாரக்கோவை கூறுவது மிங்கறியத்தக்கதாம்.

-வெறுப்பில்லாதனவும், (ஆய்), வேண்டுப-வேண்டுவனவும், (ஆயகாரியங்களை), வேட்ப-(அவன்மனம்) விரும்புமாறு, சொலல்-சொல்லக்கடவர், (எ-று).

அரசனது மனக்குறிப்புக் காரியத்திலன்றிக் காமம்வெகுளி யுள்ளிட்டவற்றில் நிகழுமிடத்தும், அதற்கு ஏற்காதகாலத்தும் சொல்லுதல் பயன்படுவதின்றாகலின் 'குறிப்பறிந்து காலங்கருதி' என்றும், அவனுடம்படாத காரியங்கள் முடிவுபெறுமையால் வெறுப்பில' என்றும், பயனில்லாதனவும் பயன்சுருங்கியனவும் ஆகிய காரியங்கள் செய்தலை விரும்பாமையால் 'வேண்டுப' என்றும், அக்காரியங்களை இனியனவாய்ச் சுருங்கிவிளங்கிய பொருளுடையனவாகிய சொற்களால் சொல்லுகவென்பார் 'வேட்பச்சொலல்' என்றும் சொல்லினர்.

(க-து.) அரசனது குறிப்பையும் சமயத்தையும் நோக்கி அவன் வெறுக்காதனவும் விரும்புவனவுமாகிய காரியங்களை அவன் விரும்புமாறு மந்திரிகள் சொல்லக்கடவர் என்பது.

6. Knowing the king's disposition, and seeking the right time, the minister should in a pleasing manner suggest such things as are desirable and not disagreeable.

---

எ. **வேட்பன சொல்லி வினையில வெஞ்ஞான்றுங்
கேட்பினுஞ் சொல்லா விடல்.**

பரி:—(இ-ள்.) பயன் பெரியனவுமாய் அரசன் விரும்புவனவுமாய காரியங்களை அவன் கேட்டிலனாயினுஞ் சொல்லி எஞ்ஞான்றும் பயனில வாயவற்றைத் தானே கேட்டாலுஞ் சொல்லாது விடுக, (எ - று).

* 'வினையில' எனவும் 'கேட்பினும்' எனவும் வந்த சொற்களான், அவற்றின் மறுதலைச் சொற்கள் வருவிக்கப்பட்டன. †வினையான் வருதலின் 'வினை' என்றும், ‡வறுமைக்காலமு மடங்க 'எஞ்ஞான்றும்' என்றுங் கூறினர். ()சொல்லுவனவுஞ் சொல்லாதனவும் வகுத்துக் கூறியவாறு. இவை நான்குபாட்டானும் அது சிறப்புவகையாற் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) (பயன்பெரியனவுமாய்) வேட்பன-(அரசன்) விரும்புவனவும் (ஆய காரியங்களை), சொல்லி-(அவன் கேட்டிலனாயினும்) சொல்லி, எஞ்ஞான்றும்-எந்நாளும், வினையில-பயனிலவாய

---

* வினையில என்பதற்கெதிர்மறைச்சொல் பயன் பெரியன என்பதாம்; கேட்பினும் என்பதற்கெதிர்மறைச்சொல் கேட்டிலனாயினும் என்பதாம்.

† வினையால் வரும் பயனை வினையென்று கருவியாகு பெயரால் கூறினர்.

‡ வறுமைக்காலம் - அனுபவித்தற்குரிய பொருளில்லாத காலம்.

() சொல்லுவன - பெரும்பயனுள்ள காரியமாம்; சொல்லத்தகாதன - பயனிலவாய காரியமாமென்று பிரித்துச் சொல்லப்பட்டது.

காரியங்களை, கேட்பினும் - (தானே) கேட்டாலும், சொல்லாவிடல் - சொல்லாது விடக்கடவர், (எ - று).

'வினையில' என்றும் 'கேட்பினும்' என்றும் வந்த சொற்களால், அவற்றின் எதிர்மறைச் சொற்கள் வருவிக்கப்பட்டன. பயன் வினையால் வருதலின் அதனை 'வினை' என்றும், வறுமைக்காலமு மடங்க 'எஞ்ஞான்றும்' என்றும் சொல்லினர். சொல்லத்தக்கனவும் சொல்லத்தகாதனவும் வகுத்துச் சொல்லியவாறும். இவை நான்கு பாட்டாலும் அது (மன்னரைச் சேர்ந்தொழுகல்) சிறப்பு வகையால் சொல்லப்பட்டது.

**(க-து.)** மந்திரிகள் எப்பொழுதும் பயனில்லாத காரியங்களை யொழித்துப் பயனுள்ள காரியங்களையே அரசனிடத்துச் சொல்லக் கடவர் என்பது.

7. Ministers should always give wholesome advice but on no occasion recommend useless actions, though requested to do so.

---

அ. **இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற**
**வொளியொ டொழுகப் படும்.**

பரி:—(இ - ள்.) *இவர் எம்மிளையரென்றும் எமக்கின்ன முறையினை யுடையரென்றும் அரசரை யவமதியாது அவர்மாட்டு நின்றவொளியொடு பொருந்த ஒழுகுதல் செய்யப்படும், (எ-று).

†ஒளி - உறங்கா நிற்கவுந் தாமுலகங் காக்கின்ற அவர் கடவுட் டன்மை. அதனொடு பொருந்த வொழுகலாவது ‡அவர் கடவுளருந் தாம் மக்களுமா யொழுகுதல். அவ்வொளியாற் போக்கப்பட்ட விளமையும் முறைமையும்பற்றி இகழ்வராயின், ¶தாமும் ()போக்கப் படுவரென்பது கருத்து

தெளி:—(இ - ள்.) இளையரென்று - (இவர் எம்மினும்) இளையவ ரென்றும், இனமுறையரென்று-(எமக்கு) இன்ன முறையினையுடையவ ரென்றும், இகழார்-(அரசரை) அவமதியாது, நின்ற-(அவ்வரசரிடத்து)

---

*மனுதருமசாஸ்திரம் ஏழாவதத்தியாயத்தில் "அவ்வரசன் சிறுவனாக இருந்தாலும் அவனை மனிதனென்று அவமானஞ் செய்தல் கூடாது; ஏனெனின், மேலாய தேவர்களின் கூட்டமே அவ்வரசனுருவமாக விருக்கின்றதல்லவா" என்று கூறுவது மிங்கறியத்தக்கது.

† "உறங்கு மாயினு மன்னவன் றன்னொளி, கறங்கு தெண்டிரை வையகங் காக்குமால்" என்று சீவகசிந்தாமணி கூறுவதும், அதற்கு நச்சினார்க்கினியர் 'மன்னவன் உறங்குமாயினும் அவனொளி யுலகைக் காவாநிற்கும்" என்றுரை கூறியிருத்தலும் இங்கறியத்தக்கனவாம்.

‡ அவர் - அரசர். ¶ தாமும் - அமைச்சரும். () போக்கப்படுவர் - அமைச்சுத் தொழிலினின்றும் நீக்கப்படுவர்.

*நிலைபெற்ற, ஒளியொடு - ஒளியுடன், (பொருந்த), ஒழுகப்படும் - ஒழுகுதல் செய்யப்படும், (எ-று).*

*ஒளி - நித்திரை செய்யாநிற்கவும் தாம் உலகங்காக்கின்ற அவரது தெய்வத்தன்மை அவ்வொளியுடன் பொருந்த வொழுகுதலாவது அவர் தேவரும் தாம் மக்களுமாய் நடத்தல். அவ்வொளியினுல் நீக்கப்பட்ட இளமையையும் முறைமையையும் பற்றி இகழ்வாராஞல், தாமும் நீக்கப்படுவரென்பது கருத்து என்று என்பது முன்னுங் கூட்டப்பட்டது.*

*(கூ-து.) மந்திரிகள் அரசரை இளமையையும் முறைமையையும் நோக்கி யிகழாது மதித்தொழுகக் கடவர் என்பது.*

8. Ministers should behave in accordance with the Divine light in the persons of kings and not despise them saying "they are our junior in age and connected with our family".

---

**கூ. கொளப்பட்டே மென்றெண்ணிக் கொள்ளாத செய்யார்**
**†துளக்கற்ற காட்சி யவர்.**

பரி:—(இ - ள்.) அரசனுல் யாம் நன்கு மதிக்கப்பட்டே மென்று கருதி அவன் விரும்பாதவற்றைச் செய்யார் நிலைபெற்ற வறிவினையுடையார், (எ - று).

*கொள்ளாதனசெய் தழிவெய்துவார், ‡கொளப்பாட்டிற்குப்பின் ¶றம்மை வேறொருவராகக் கருதுவராகலின், ()முன்னையராகவே கருதி யஞ்சி யொழுகுவாரைத் ' துளக்கற்ற காட்சியவர் ' என்றார்.*

**தெளி:**—(இ-ள்.) *துளக்கற்ற - நிலைபெற்ற, காட்சியவர் - அறிவினையுடையவர், கொளப்பட்டேமென்று - (அரசனுல் யாம்) நன்கு மதிக்கப்பட்டோமென்று, எண்ணி - நினைத்து, கொள்ளாத - (அவன்) விரும்பாத காரியங்களை, செய்யார்-, (எ-று)*

---

*† துளக்கற்ற - அசைவற்ற.*

*‡ கொளப்பாட்டிற்குப்பின் - அரசனுல் நன்குமதித்துக் கொள்ளப் பட்டதற்குப்பின்.*

*¶ தம்மை வேறொருவராகக் கருதுவராகலின் - தம்மை முன் னுள்ள நிலைமையராகவெண்ணுது வேறொரு சிறந்த நிலைமையுடைய ராக எண்ணுவராதலால். அஃதாவது தம்மை மனிதப் பிறப்பினராக நினையாது தெய்வப் பிறப்பினராக நினைப்பா ரென்பதாம்.*

*() முன்னையராகவே - முன்னுள்ள நிலைமையராகவே. அங்ஙனம் கருதாது முன்னையராகவே என்றும் பாடமுண்டு.*

(அரசன்) விரும்பாதகாரியங்களைச் செய்து அழிவினையடைவார் கொளப்பட்டதற்குப்பின்பு தம்மை வேறொருவராக நினைப்பவராகலால், முன்னையவராகவே யெண்ணியஞ்சி நடப்பவரைத் 'துளக்கற்ற காட்சியவர்' என்றார்.

(கூ–து.) நல்லறிவுடைய மந்திரிகள் அரசனால் யாம் நன்கு மதிக்கப்பட்டோமென்று நினைத்து அவன் விரும்பாத காரியங்களைச் செய்யார் என்பது.

9. Those whose judgment is firm will not do what is disagreeable to the sovereign saying within themselves "we are esteemed by the king".

---

**கO. *பழைய மெனக்கருதிப் பண்பல்ல செய்யுங்
கெழுதகைமை கேடு தரும்.**

**பரி:—(இ-ள்.) அரசனுக்கு யாம் பழையமெனக் கருதித் தமக்கியல் பல்லாதவற்றைச் செய்யுமுரிமை அமைச்சர்க்குக் கேட்டினைப் பயக்கும், (எ – று).**

†அவன்பொறுது செறும்பொழுதின் அப்பழைமைநோக்கிக் கண்ணோடாது உயிரை வௌவுதலான், அவன்வேண்டாதன செய்தற் கேதுவாய கெழுதகைமை 'கேடுதரும்' என்றார். இவை மூன்று பாட்டானும் பொறுப்பரென்று அரசர் வெறுப்பன செய்யற்க வென்பது கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) பழையமென (அரசனுக்கு யாம்) பழைமையோமென்று, கருதி – நினைத்து, பண்பல்ல – (தமக்கு) இயல்பல்லாத காரியங்களை, செய்யுங் கெழுதகைமை – செய்யுமுரிமையானது, கேடு தரும் – (மந்திரிகளுக்குக்) கேட்டினைத்தரும், (எ–று).

அவன் பொறுக்காது வருத்தும் பொழுதில் அப்பழைமையை நோக்கி முகங்கொடாது உயிரை வௌவுதலால், அவன் வேண்டாத காரியங்களைச் செய்தற்குக் காரணமாகிய கெழுதகைமையைக் 'கேடுதரும்' என்றார். இவை மூன்றுபாட்டாலும் மந்திரிகள் பொறுப்பரென்று அரசர் வெறுக்கத்தக்க காரியங்களைச் செய்வதொழிகவென்பது சொல்லப்பட்டது. வௌவுதல் - நீக்குதல். கெழுதகைமை-உரிமை.

---

* "மாமனு னென்னு மதத்தா லுனையிகழ்ந்து, தோமுற்றார் தக்கனார் சோமேசா - வாமே, பழைய மெனக்கருதிப் பண்பல்ல செய்யுங், கெழுதகைமை கேடு தரும்" என்று சோமேசர் முதுமொழி வெண்பா கூறுவதும், "பழைமை கடைப்பிடியார் கேண்மையும் பாரார், கிழமை பிறிதொன்றுங் கொள்ளார் - வெகுளின்மற், காதன்மை யுண்டே யிறைமாண்டார்க் கேதிலரும், ஆர்வலருமில்லை யவர்க்கு" என்று நீதிநெறி விளக்கங் கூறுவது மிங்கறியத் தக்கனவாம்.
†அவன் - அரசன்.

(க-து.) யாம் அரசனுக்குப் பழையோ மென்றெண்ணித் தமக்கியல்பல்லாத காரியங்களைச் செய்யும் மந்திரிகள் கேடடைவர்.

10. The foolish claim with which a minister does unbecoming acts because of his long familiarity with the king will ensure his ruin.

---

## எட்டாம் அதிகாரம்

## * குறிப்பறிதல்—Knowing the Sovereign's Mind

பரி:—அஃதாவது அரசர் கருதியவதனை அவர் கூறுமலறிதல். ‡இது, மன்னரைச் சேர்ந்தொழுகற்கு இன்றியமையா தாகலின், அதன்பின் வைக்கப்பட்டது.

தெளி:—அஃதாவது அரசர் நினைத்தகாரியத்தை அவர் சொல்லாமலறிதல். இது, மன்னரைச்சேர்ந்து நடப்பதற்கு அவசியமானதாகலால், அதன்பின் வைக்கப்பட்டது.

---

**க. கூறுமை நோக்கிக் குறிப்பறிவா னெஞ்ஞான்று**
**மாறுநீர் வையக் கணி.**

பரி:—(இ-ள்.) அரசனுற் குறித்த கருமத்தை அவன் கூறவேண்டாவகை அவன் முகத்தானுங் கண்ணானுநோக்கி அறியுமமைச்சன் எஞ்ஞான்றும் வற்றாத நீராற் சூழப்பட்ட வையத்துள்ளார்க்கு ஓராபரணமாம், (எ-று).

ஒட்பமுடையனும் எல்லார்க்கும் அழகுசெய்தலான் 'வையக்கணி' என்றார். ¶குறிப்பும் $வையமும் ஆகுபெயர். வையத்திற்கென்பது விகாரப்பட்டு நின்றது.

தெளி:—(இ-ள்.) குறிப்பு – (அரசனுற்) குறித்த காரியத்தை, கூறுமை - (அவன்) சொல்லவேண்டாவகை, நோக்கி – (அவன் முகத்தினுலும் கண்ணினுலும்) பார்த்து, அறிவான் – அறியு மந்திரி, எஞ்ஞான்றும் – எந்த நாளும், மாறுநீர் – வற்றாத நீரால் (சூழப்பட்ட), வையக்கு – உலகத்துள்ளார்க்கு, அணி - ஓராபரணமாம், (எ–று).

---

* "குறிப்பு மனத்தாற் குறித்துணரப்படுவது" என்பர் சேனுவரையர்.

‡ இது – குறிப்பறிதல். அதன்பின் – மன்னரைச்சேர்ந்தொழுகலின் பின்.

¶ குறிப்பு என்னும் தொழிற்பெயர் குறித்தகருமத்தை யுணர்த்துதலால் தொழிலாகு பெயராம்.

$ வையம் என்னும் இடப்பெயர் வையத்துள்ளாரையுணர்த்துதலால் இடவாகு பெயராம்.

(கூறுமை நோக்கிக் குறிப்பறிவான்) அறிவுடையவனும் எல்லார்க்கும் அழகுசெய்தலால் 'வையக்கணி' என்றார். குறிப்பு - தொழிலாகு பெயர்; வையம் - இடவாகுபெயர். வையத்திற்கென்பது (செய்யுள் விகாரத்தால்) வையக்கு எனவிகாரப்பட்டு நின்றது.

(க-து.) அரசன் குறிப்பறிந்தொழுகும் மந்திரி உலகினர்க்கோரணியாய் விளங்குவன் என்பது.

1. The minister who by looking at the king understands his mind without being told of it, will be an ornament amongst the wise men of the world which is surrounded by a never-drying sea.

---

**உ. ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்**
**தெய்வத்தொ டொப்பக் கொளல்.**

பரி:—(இ-ள்.) ஒருவன் மனத்தின்க ணிகழ்வதனை ஐயப்படாது ஒருதலையாக வுணரவல்லானை மகனேயாயினும் தெய்வத்தோ டொப்ப நன்குமதிக்க, (எ-று).

† உடம்பு முதலியவற்றான் ஒவ்வானாயினும் பிறர் நினைத்த துணருந் தெய்வத்தன்மை யுடைமையின் 'தெய்வத்தொ டொப்ப' என்றார்.

தெளி:—(இ-ள்.) அகத்து - (ஒருவனது) மனத்தின்கண் நிகழ்வதனை, ஐயப்படாஅது - சந்தேகப்படாமல், உணர்வானை-(நிச்சயமாக) அறிய வல்லவனை, (மனிதனேயாயினும்), தெய்வத்தொ டொப்ப - தெய்வத்தோடு சமானமாக, கொளல் - நன்கு மதிக்கக்கடவர், (எ-று).

(ஐயப்படாஅதகத்ததுணர்வான்) உடம்பு முதலியவற்றால் (தெய்வத்தோடு) ஒப்பாகானாயினும் பிறர் நினைத்ததை யறியுந் தெய்வத்தன்மை யுடைமையால் (அவனைத்) 'தெய்வத்தொடொப்ப (க் கொளல்)' என்றார்.

(க-து.) பிறரது எண்ணத்தைச் சந்தேகியாது துணிவாக அறிபவன் தெய்வத்திற் கொப்பாவன் என்பது.

---

† கண்ணிமைத்தல், கால்நிலந்தோய்தல், நிழலிடுதல், வியர்த்தல், கண்ணி (பூமாலை) வாடுதல், அதில் வண்டுபடிதல், கூறை (ஆடை) மாசுணல், முதலியன மக்கட்கன்றித் தேவர்க்கின்மையின், தேவரும் மக்களும் உடம்பு முதலியவற்றால் ஒவ்வாராயின ரென்க. "திருநுதல் வேரரும்புந் தேங்கோதை வாடு, மிருநிலஞ் சேவடியுந் தோயு - மரிபரந்த, போகித ழுண்கணு மிமைக்கு, மாகுமற்றிவ ளகலிடத்தணங்கே" "பாயும் விடையரன் றில்லையன் னாள் படைக்கண்ணிமைக்குந், தோயு நிலத்தடி தூமலர் வாடுந் துயரமெய்தி, யாயு மனனே யணங்கல்ல ளம்மா முலைசுமந்து, தேயு மருங்குற் பெரும்பணைத் தோளிச் சிறுநுதலே". என்றுள்ள பிரயோகங்களிங்கு நன்குணர்தற் பாலனவாம்.

2. He is to be esteemed a god who is able to ascertain without a doubt what is within one's mind.

---

## ங. *குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள் யாது கொடுத்துங் கொளல்.

பரி :—(இ-ள்.) தங்குறிப்பு நிகழுமா றறிந்து அதனாற் பிறர் குறிப் பறியுந் தன்மையாரை அரசர் தம்முறுப்புக்களுள் அவர் வேண்டுவ தொன்றனைக் கொடுத்தாயினும் தமக்குத் துணையாகக் கொள்க, (எ-று).

†உண்ணிகழு நெறி யாவர்க்கு மொத்தலின், பிறர் குறிப் பறிதற்குத் தங் குறிப்புக் கருவியாயிற்று. உறுப்புக்களாவன : பொருளும், நாடும், யானை குதிரைகளும் ¶முதலிய புறத்துறுப்புக்கள். ‡இதற்குப் பிறர் முகக்குறிப்பானே அவர் மனக்குறிப் புணர்வாரை யென்றுரைப்பாரு முளர். இவை மூன்று பாட்டானுங் குறிப்பறி வாரது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) குறிப்பின் - (தமது குறிப்புநிகழும் விதத்தை யறிந்து அக்) குறிப்பினால், குறிப்புணர்வாரை - (பிறரது) குறிப்பை யறியுந் தன்மையவரை, உறுப்பினுள் - (அரசர்தம்) உறுப்புக்களுள், யாதுகொடுத்தும் - (அவர் வேண்டுவது) யாதொன்றைக் கொடுத் தாயினும், கொளல் - (தமக்குத் துணையாகக்)கொள்ளக் கடவர், (எ-று).

குறிப்பு உள்ளே நிகழும்வழி யாவர்க்கும் ஒத்தலால், பிறர் குறிப்பை யறிதற்குத் தங்குறிப்புச் சாதனமாயிற்று. உறுப்புக் களாவன : பொருளும், நாடும், யானை குதிரைகளும் முதலிய புறத்துறுப்புக்கள். இவை மூன்று பாட்டாலும் குறிப்பறிவாரது சிறப்புச் சொல்லப்பட்டது.

(க-து.) தமது குறிப்பால் பிறரது குறிப்பை யறிய வல்லவரை அரசர் அவர் வேண்டுவனவற்றைக் கொடுத்தாயினுந் தமக்குத் துணையாகக் கொள்ளக்கடவர் என்பது.

3. The king should even give whatever is asked of his belongings and secure the friendship of him who by the indications of his own mind is able to read those of another.

---

* "அகத்திடைத் தனக்கு நிகழ்ந்திடுங் குறிப்பா லவரவ ரகக்குறிப் பறிந்து, மிகத்தெளி பவனைக் கரிமுத லுறுப்புள் விழைவன கொடுத்துங்கொள் மைந்தா" என்பது விநாயக புராணம்.

† உண்ணிகழு நெறி - குறிப்பானது மனத்தில் உண்டாம் முறைமை.

¶ முதலிய என்றமையின், ஏவலாள், காவலாள், உடை, படை முதலியவற்றையுங் கொள்க.

‡ குறிப்பிற் குறிப்புணர் வாரை என்பதற்குப் பிறர் முகக் குறிப்பாலே அவரது மனக்குறிப்பை யறிவாரை என்று பொருள் கூறுவாரு முளரென்பதாம்.

**ச. குறித்தது கூறாமைக் கொள்வாரொ டேனை**
**யுறுப்போ ரனையரால் வேறு.**

பரி:—(இ–ள்.) ஒருவன் மனத்துக் கருதிய வதனை அவன்கூற வேண்டாமல் அறியவல்லாரொடு மற்றை *மாட்டாதார் உறுப்பா லொரு தன்மையராக வொப்பாராயினும் அறிவான் வேறு, (எ–று).

*†மாட்டாதா ரென்பதூஉம், ஆயினுமென்பதூஉம் ‡அவாய் நிலையான் வந்தன. சிறந்த வறிவின்மையின், §விலங்கென்னுங் கருத்தான் 'வேறு' என்றார்.*

தெளி: —(இ–ள்) *குறித்தது – (ஒருவன் மனத்தில்) நினைத்ததை கூறாமை –(அவன்) சொல்லவேண்டாமல், கொள்வாரொடு – அறிய, வல்லவரோடு, ஏனை – மற்றை, (மாட்டாதவர்), உறுப்பால் – அவயவத்தால், ஓரனையர் – ஒரு தன்மையராக வொப்பாவர், (ஆயினும்), வேறு – (அறிவால்) வேறவர்,* (எ–று).

*மாட்டாதவரென்பதும், ஆயினு மென்பதும் அவாய் நிலையால் வந்தன. (ஏனையவர்க்குச்) சிறந்த அறிவில்லாமையால், (அவர்) மிருக மென்னுங் கருத்தால் 'வேறு' என்றார். ஆல் என்பது பிரித்துக் கூட்டப்பட்டது.*

(க–து.) *பிறர் நினைத்ததை யவர் சொல்லவேண்டாமலறிய வல்லவரோடு அவ்வா றறியும் ஆற்றலிலாதார் அறிவால் ஒப்பாகார்.*

4. Those who understand one's thoughts without being informed thereof and those who do not, though they may resemble one another bodily, still are they different mentally.

---

**ரு. குறிப்பிற் குறிப்புணரா வாயி னுறுப்பினு**
**ளென்ன பயத்தவோ கண்.**

பரி:—(இ–ள்.) குறித்தது காணவல்ல தங்காட்சியாற் பிறர்குறிப்பினை யுணரமாட்டாவாயின், ஒருவனுறுப்புக்களுட் £சிறந்த கண்கள் வேறென்ன பயனைச் செய்வன, (எ–று).

---

* *மாட்டாதார் – ஒருவன் மனத்துக்கருதியவதனை அவன் கூற வேண்டாமல் அறியும் வல்லமையில்லாதவர்.*

† *கொள்ளாதார் என்றும் பாடமுண்டு.*

‡ *மாட்டாதார் என்பதனைக் கொள்வாரொடு என்பதும் ஆயினும் என்பதனை வேறு என்பதும் அவாவி (வேண்டி) நின்றன.*

§ *"விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல், கற்றாரோ டேனை யவர்" என்னுங் குறளிங்குக் கவனிக்கத் தக்கதாம்.*

£ *"மின்னுமணிப், பூணும் பிறவுறுப்புப் பொன்னே யதுபுனையாக், காணுங்க ணொக்குமோ காண்" என்று நன்னெறி கூறுவதும்,*

முதற்கட் குறிப்பு ஆகுபெயர். †குறிப்பறிதற்கட் டுணையாதற் சிறப்புப்பற்றி உயிரதுணர்வு கண்மே லேற்றப்பட்டது. அக்கண்களாற் பயனில்லை யென்பதாம். இவை இரண்டு பாட்டானுங் குறிப் பறியாரதிழிபு கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) குறிப்பின் – (குறித்ததைக் காணவல்ல தமது) காட்சியால், குறிப்பு – (பிறர்) குறிப்பினை, உணராவாயின் – அறிய மாட்டாவாயின், (ஒருவனுக்கு), உறுப்பினுள் – அவயவங்களுள், கண் – (சிறந்த) கண்கள், என்னபயத்தவோ – (வேறு) என்னபயனைச் செய்வனவோ, (எ–று).

முதலிலுள்ள குறிப்பு என்னுந் தொழிற்பெயர் குறித்த விஷயத்தைக் காணவல்ல காட்சியறிவினை யுணர்த்துதலின் தொழிலாகுபெயராம். குறிப்பறியுமிடத்துத் துணையாகுஞ் சிறப்புப் பற்றி உயிரின் அறிவு கண்மேல் ஏற்றப்பட்டது. பிறர் குறிப்பினை யறியமாட்டாத அக் கண்களால் பயனில்லை யென்பதாம். இவை இரண்டு பாட்டாலும் குறிப்பறியாரது இழிவு சொல்லப்பட்டது.

**(க-து.)** பிறர் குறிப்பினை யறியுந் தன்மையில்லாத கண்கள் பயனற்றனவாம் என்பது.

5. Of what use are the eyes amongst one's members, if they cannot by their own indications divine those of another ?

---

சஎ. **அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்**
**கடுத்தது காட்டு முகம்.**

---

'' கண்ணிற் சிறந்த வுறுப்பில்லை '' என்று நான்மணிக்கடிகை கூறுவது மிங்கறியத் தக்கனவாம்.

† ஒருவனது மனக்குறிப்பை அவனது முகம் வாயிலாகத் தெரிந்து கொள்ளும் விஷயத்தில் கண் உயிர்க்குத் துணையாயிருக்குஞ் சிறப்புப் பற்றி உயிரினது உணர்வை (அறிவை)க் கண்ணின்மே லேற்றி (வைத்து), கண் குறிப்பிற் குறிப்புணராவாயின் என்று கூறப்பட்டது.

இஃது ஒரு பொருளின் குணத்தை (உயிரினது அறிவாகிய குணத்தை) மற்றொரு பொருளின் (கண்ணின்) மேல் ஏற்றிக் கூறிய உபசார வழக்காம்.

இதனால் கண்ணுக்கு அறிவு இன்றென்பதும் கண்ணறிந்தது என்னுமிடத்து உயிரினது அறிவு கண்ணின்மே லேற்றிச் சொல்லப் படுகிறதென்பதும் பெறப்படும். '' ஆன்மா மனத்தோடும், மனம் இந்திரியத்தோடும், இந்திரியம் பொருளோடும் கூடும்; அதனால் காட்சி யுணர்வு நிகழுமெனவுணர்க '' என்பது தர்க்கசங்கிரகவுரை.

‡ நான் மணிக்கடிகை '' தூக்கின், அகம்பொதிந்த தீமை மனமுரைக்கு முன்னம், முகம்போல முன்னுரைப்ப தில் '' என்று கூறுகின்றது.

பரி :—(இ-ள்.) தன்னையடுத்த பொருளது நிறத்தைத் தானே கொண்டு காட்டும் பளிங்குபோல ஒருவனெஞ்சத்து *மிக்கதனை அவன் முகந்தானே கொண்டு காட்டும், (எ-று).

அடுத்ததென்பது ஆகுபெயர். கடுத்ததென்பது கடியென்னு முரிச்சொலடியாய்வந்த தொழிற்பெயர். உவமை †ஒருபொருள் பிறிதொரு பொருளின் பண்பைக் கொண்டு தோற்றுதலாகிய தொழில்பற்றி வந்தது.

தெளி :—(இ-ள்.) அடுத்தது - (தன்னை) அடுத்த பொருளினது நிறத்தை, காட்டும் - (தானேகொண்டு) காட்டுகிற, பளிங்குபோல் - பளிங்குபோல, நெஞ்சம் - (ஒருவனது) நெஞ்சத்தில், கடுத்தது - மிகுந்துள்ளதை, முகமே - (அவன்) முகந்தானே, காட்டும் - (கொண்டு) காட்டும், (எ-று).

அடுத்தது என்னும் (வினையாலணையும்) பொருட் பெயர் அடுத்த பொருளின் நிறத்தை யுணர்த்துதலால் பொருளாகு பெயராம். கடுத்தது என்பது கடியென்னும் உரிச்சொலடியாகப் பிறந்த துவ் விகுதிபெற்ற இறந்தகாலத் தொழிற்பெயர். அடுத்தது காட்டும் பளிங்குபோல் என்னும் உவமானம் ஒரு பொருள் மற்றொரு பொருளின் குணத்தைத் தன்னுட்கொண்டு தோற்றுதலாகிய தொழில் பற்றிவந்தது. ஏகாரம் பிரித்துக்கூட்டப்பட்டது.

(க-து.) ஒருவனது மனத்தில் மேம்பட்டுள்ள குணத்தை அவனது முகம் நன்குகத் தெரிவிக்கும் என்பது.

6. As the mirror reflects what is near so does the face indicate what is uppermost in the mind.

---

எ. முகத்தின் முதுக்குறைந்த துண்டோ வுவப்பினுங்
காயினுந் தான்முந் துறும்.

பரி :—(இ-ள்.) உயிர் ஒருவனை யுவத்தலானுங் காய்தலானு ‡முறின், தானறிந்து அவற்றின்கண் அதனின் முற்பட்டு நிற்குமாகலான், முகம் போல அறிவுமிக்கது பிறிதுண்டோ இல்லை, (எ-று).

---

* மிக்கதனை - மிகுந்துள்ள குணத்தினை.

† பளிங்கென்னும் பொருள் தன்னை யடுத்த பொருள்களின் செம்மை முதலிய குணங்களைத் தன்னுட் கொண்டு (தன்னுட் கொள்ளல் - பிரதிபலித்தல்.) காட்டுதல் போன்று முகமும் தன்னை யடுத்த மனத்தினது குணத்தைத் தன்னுட்கொண்டு காட்டுமென் பதாம். இங்குத் தொழிலை யுவமானமாகக் கொண்டமையால், இது தொழிலுவமையணியாம். இது மனம் களிப்பாயிருந்தால் முகம் விலாசமா யிருத்தலையும், அது களிப்பின்றி யிருந்தால் விலாசமின்றி யிருத்தலையும் சற்றுக் கண்டுணர்வார்க்குத் தெள்ளிதின் விளங்கும். "அகத்தி னழகு முகத்திற் றெரியும்" என்னும் பழமொழியும் இங்கறியத்தக்கதாம்.

‡ உறின் - (உயிர் உவத்தலாவது காய்தலாவது) அடைந்தால்.

*உயிர்க்கே அறிவுள்ளது, ஐம்பூதங்களானியன்ற முகத்திற்கில்லை யென்பாரை நோக்கி, உயிரதுகருத்தறிந்து அஃதுவக்குறின் மலர்ந்தும் காய்வுறிற் *கருகியும் வரலான், உண்டென மறுப்பார் போன்று குறிப்பறிதற்குக் †கருவி கூறியவாறு.*

*தெளி :—(இ-ள்.) (உயிரானது ஒருவனை) உவப்பினும் - விரும்புதலாவது, காயினும் - வெறுத்தலாவது, (உற்ருல்), தான் - (அறிந்து), முந்துறும் - (உவத்தல், காய்தலென்னும் அவற்றில் அவ்வுயிரினும்) முற்பட்டு நிற்கும், (ஆகலால்), முகத்தின் - முகம்போல, முதுக்குறைந்தது-அறிவுமிகுந்தது, உண்டோ-(மற்றென்று) உண்டோ, (இல்லை), (எ-று).*

*உயிர்க்கே அறிவு உண்டு, ஐம்பூதங்களாலாகிய முகத்திற்கு இல்லையென்பாரை நோக்கி, உயிரினுடைய கருத்தினையறிந்து அவ்வுயிர் உவப்பினை யடைந்தால் மலர்ச்சியடைந்தும் வெறுப்பினை யடைந்தால் கருகியும் வருதலால், முகத்திற்கு அறிவு உண்டென்று கூறி மறுப்பவர் போலக்குறிப்பறிதற்குச் சாதனம் சொல்லியபடியாம்.*

*முதுக்குறைந்தது என்பது முதுக்கு உறைந்தது எனப்பிரிபடும். முதுக்கு-அறிவு, உறைந்தது-மிக்கது. இது முதுக்குறைவு, முதுக்குறைதல் என்றும் வரும். முதுக்குறைந்தது, முதுக்குறைவு. முதுக்குறைதலென்பன பேரறிவென்னும் பொருளையுணர்த்துவனவாம்.*

*(கு-து.) முகம் உயிரினது விருப்பு வெறுப்புக்களை விரைந்து காட்டவல்லதாம் என்பது.*

7. Is there anything so full of knowledge as the face which precedes the mind, whether the latter is pleased or vexed? No.

---

**அ· முகநோக்கி நிற்க வமையு மகநோக்கி
யுற்ற துணர்வார்ப் பெறின்.**

பரி :—(இ-ள்.) ‡குறையுறுவானும் தன்மனத்தைக் குறிப்பானறிந்து ¶தானுற்றவதனைத் தீர்ப்பாரைப் பெறின், அவர்தன் முகம் நோக்கும்வகை தானும் அவர்முகநோக்கி அவ்வெல்லைக்கணிற்க வமையும், (எ-று).

---

* *கருகியும்-(முகம் மலர்ச்சியடையாது) சுருங்கியும்.*

† *உயிர்கருதியதறிதற்கு முகம் கருவியா (ஏதுவா) யிருக்கின்றதென்பதாம்.*

‡ *குறையுறுவானும் - குறையுற்றவனும். அஃதாவது தனக்கு நேர்ந்துள்ள குறையினைப் பிறர்மாட்டுத் தெரிவிக்குமாறு வந்தவனும் என்பதாம்.*

¶ *தானுற்றவதனை-தானடைந்த அக்குறையை.*

*உணர்வாரெனக் காரியத்தைக் காரணமாக்கிக் கூறினர். †அவ்வெல்லையைக் கடந்து சொல்லுமாயின் ‡இருவர்க்குஞ் சிறுமையா மாகலின், அது வேண்டாவென்பதாம். குறையுறுவானியல்பு கூறுவார்போன்று கருவி கூறியவாறு. இவை மூன்றுபாட்டானுங் குறிப்பறிதற் கருவி முகமென்பது கூறப்பட்டது.

தெளி :— (இ-ள்.) (குறையுறுவானும்) அகநோக்கி – (தன்) மனத்தைக் குறிப்பால் அறிந்து, உற்றது – (தான்) உற்றவதனை, உணர்வார் – தீர்ப்பாரை, பெறின் - பெற்றால் (அவர் தன்முகத்தைப் பார்க்கும்படி தானும்) முகநோக்கி – (அவர்) முகத்தைப்பார்த்து, நிற்க - (அவ்வளவில்) நிற்க, அமையும் – போதும், (எ-று).

தீர்ப்பாரென்னுங் காரியத்தை உணர்வாரென்று காரணமாக்கிச் சொல்லினர். (குறையுறுவான் அவ்வளவில் நில்லாமல்) அவ்வளவைக் கடந்துசொல்லுவானாயின் இருவர்க்கும் சிறுமையாமாகலால், அது வேண்டாமென்பதாம். குறையுறுவானது இயல்பு சொல்லுவார் போலச் சாதனம் சொல்லியபடியாம். இவை மூன்றுபாட்டாலும் குறிப்பறிதற்குச் சாதனம் முகமென்பது சொல்லப்பட்டது.

(க-து.) ஒருவன் தன்குறையினைக் குறிப்பினாலறிந்து தீர்ப்பவரைப் பெற்றால், அவன் அவர் தன் முகத்தை நோக்கும்படி அவரது முகத்தை நோக்கி நிற்றலே போதுமானதாம் என்பது.

8. If the king gets men who by looking into his mind can understand and fulfil his requirements it is enough that he stands looking at their face.

---

**கூ. பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங் கண்ணின்**
**வகைமை யுணர்வார்ப் பெறின்.**

பரி:— (இ-ள்.) வேந்தர் தம்நோக்கு வேறுபாட்டின் றன்மையை அறியவல்ல அமைச்சரைப்பெறின், ¶அவர்க்கு §மனத்துக்கிடந்த பகைமையையும் ஏனைக்கேண்மையையும் வேற்றுவேந்தர் சொல்லிற்றிலரா யினும் £அவர்கண்களே சொல்லும், (எ-று).

---

* தீர்ப்பாரை யென்னும் காரியத்தை அதற்குக்காரணமாகிய உணர்வார் என்னும் பெயராற் கூறினமையின், இது காரணங்காரிய மாய வுபசாரவழக்காம். உணர்வாரென்பதனைக் கருவியாகு பெயரெனினு மொக்கும். பிறரது குறையுணர்தல் காரணமாம்; அதனைத் தீர்த்தல் காரியமாம்.

†அவ்வெல்லையைக் கடந்து-முகநோக்கி நிற்கும் அளவைத்தாண்டி.

‡இருவர்க்கும்-குறையுறுவானுக்கும் உணர்ந்து தீர்ப்பார்க்கும்.

¶அவர்க்கு-அவ்வரசர்க்கு.

§மனத்துக்கிடந்த-வேற்று வேந்தரது மனத்திலிருக்கின்ற.

£ அவர்-அமைச்சரது.

இறுதிக்கட் கண் ஆகுபெயர். நோக்கு வேறுபாடாவன: வெறுத்த நோக்கமும், உவந்த நோக்கமும். உணர்தல் - *அவற்றை அவ்வக் குறிகளா னறிதல்.

தெளி :— (இ-ள்.) கண்ணின்வகைமை - (அரசர் தமது) பார்வை வேறுபாட்டின் தன்மையை, உணர்வார் - அறியவல்ல மந்திரிகளை, பெறின்-பெற்றால், (அவர்க்கு), பகைமையுங் கேண்மையும் - (மனத்தி லுள்ள) பகைமையையும் மற்றைக் கேண்மையையும், (வேற்றரசர் சொல்லா திருந்தாராயினும்), கண் - (அவர்) கண்களே, உரைக்கும் - சொல்லும், (எ-று).

இறுதியிலுள்ள கண் என்னும் பொருட் பெயர் அதன் பண்பாகிய வேறுபாட்டினை யுணர்த்துதலால் பொருளாகு பெயராம். பார்வை வேறுபாடாவன: வெறுத்த பார்வையும், விரும்பிய பார்வையும், உணர்தல்–அவற்றை அந்தந்தக் குறிகளால் அறிதல். பகைமை-பகை; கேண்மை-சிநேகம்.

(க-து.) கண்ணினது வேறுபாட்டின் தன்மையை யறியவல்ல தம் மந்திரிகளது கண்களாலேயே வேற்றரசரது பகையினையும் நட்பினையும் அரசர் அறிவர் என்பது.

9. If a king gets ministers who can read the movements of the eye, the eyes of ministers will themselves reveal to him the hatred or friendship of foreign kings.

———

கo. நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங்காற்
கண்ணல்ல தில்லை பிற.

பரி :—(இ-ள்.) யாம் நுண்ணறிவுடைய மென்றிருக்கும் அமைச்சர் அரசர் கருத்தினை யளக்குங் கோலாவது ஆராயுமிடத்து †அவர் கண் ணல்லதுபிறவில்லை, (எ-று).

‡அறிவினுண்மை அஃதுடையார்மே லேற்றப்பட்டது.¶இங்கிதம், $வடிவு, தொழில் சொல்லென்பன +முதலாகப் பிறர் கருத்தளக்கு

* அவற்றை - பகைநட்புக்களை. † அவர் - அரசர்.

‡ அறிவினது நுண்மையை அவ்வறிவுடையார் மேலேற்றி 'நுண்ணியமென்பார்' என்று கூறியமையின், இஃது இடத்துநிகழ் பொருளின் பண்பு இடத்தின் மேலாய வுபசார வழக்காம். இடம்-அறிவுடையார்; இடத்து நிகழ் பொருள் - அறிவு; இடத்து நிகழ் பொருளின் பண்பு-நுண்மை.

¶ இங்கிதம் - குறிப்பால் நிகழும் உறுப்பின் தொழில்.

$ வடிவு - குறிப்பின்றி நிகழும் வேறுபாடு.

+ முதலாக என்றமையின் - குணத்தையுங் கொள்க.

£அளவைகள் பல, *அவை யெல்லாம் முன்னறிந்தவழி †அவரான் மறைக்கப்படும்; நோக்கம் மனத்தொடு கலத்தலான் ‡ஆண்டு மறைக்கப்படாதென்பதுபற்றி, ¶அதனையே பிரித்துக் கூறினர். $இனி +அலைக்குங்கோல் என்று பாடமோதி, நுண்ணியமென்றிருக்கும் அமைச்சரை அரசரலைக்குங் கோலாவது கண்ணென வுரைத்து, ()தன்வெகுளி நோக்கால் அவர் வெகுடற்குறிப்பறிகவென்பது கருத்தாக்குவாரு முளர். இவையிரண்டுபாட்டானும் நுண்கருவி நோக்கென்பது கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) நுண்ணியமென்பார் – (யாம்) நுண்ணியவறிவுடையே மென்றிருக்கு மந்திரிகள், அளக்குங்கோல் – (அரசரது கருத்தை) அளக்குங்கோலாவது, காணுங்கால் – ஆராயுமிடத்து, கண்ணல்லது – (அவரது) கண்களல்லாமல், பிற – வேறு, இல்லை–, (எ-று).

அறிவினுண்மை அவ்வறிவுடையார்மே லேற்றப்பட்டது. இங்கிதம், வடிவு, தொழில், சொல் என்பன முதலாகப் பிறர் கருத்தளக்கும் அளவைகள் பல, அவையெல்லாம் முன்னறிந்தவிடத்து அவரால்மறைக்கப்படும்; பார்வை மனத்தோடு கலத்தலால் அவ்விடத்து மறைக்கப்படாதென்பது பற்றி, அதனையே 'கண்ணல்ல தில்லைபிற' எனப் பிரித்துச் சொல்லினர். இவை யிரண்டு பாட்டாலும் நுண்ணியகருவி பார்வையென்பது சொல்லப்பட்டது.

(க-து.) மந்திரிகள் அரசரது கருத்தினையளந்தறியும் கோல் அவர்களது கண்களேயா மென்பது.

10. The measuring-rod of those ministers who say 'we are astute' will on scrutiny be found to be their own eyes and nothing else.

---

£ அளவைகள் - பிரமாணங்கள். அவை; பிரத்தியட்சம், அனுமானம், உரை, உவமானம், அருத்தாபத்தி, அனுபலத்தி யென்பனவாம்.

* அவை – இங்கிதம் முதலாயின.

† அவரான் – பிறரால். ‡ ஆண்டு – நோக்கம் மனத்தோடு கலக்குமிடத்து. ¶ அதனையே – நோக்கத்தையே.

$ இனி அளக்குங்கோல் என்பதனை அலைக்குங்கோல் என்றுபாடங் கூறி, நுண்ணியவறிவுடையே மென்றிருக்கும் மந்திரிகளை அரசர் வருத்தும் கோலாவது கண்ணென்று சொல்லி, தனது கோபப்பார்வையால் அவ்வரசரது கோபக்குறிப்பினையறிக என்று கருத்தாக்கிக் கூறுவாருமுளர்.

\+ நுண்ணியமென்பா ரலைக்கும்கோல் கண் காணுங்கால் (கண்) அல்லது பிறவில்லை என்றன்வயப்படுத்திக் கண்ணினை யெழுவாயாகக் கூறினர் பிறவுரைகாரர்.

() தன் வெகுளிநோக்கால் – கண்ணினது கோபத்தோடு கூடிய பார்வையால்,

# ஒன்பதாம் அதிகாரம்

## 72 அவையறிதல் — Knowing the Court

பரி:—அஃதாவது அரசனோடிருந்த அவையின தியல்பையறிதல். காரியஞ் சொல்லுங்கால் *அவன் குறிப்பறிதலே யன்றி †இதுவும் வேண்டுதலின், ‡இஃததன்பின் வைக்கப்பட்டது.

தெளி:—அஃதாவது அரசனோடிருந்த சபையினதியல்பை யறிதல், (அமைச்சர்) காரியஞ் சொல்லுங்கால் அவன் குறிப்பறிதலே யல்லாமல் இதுவும் வேண்டுதலால், இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

---

**க. அவையறிந் தாராய்ந்து சொல்லுக சொல்லின்**
**றொகையறிந்த தூய்மை யவர்.**

பரி:—(இ-ள்.) சொல்லின் குழுவினை யறிந்த தூய்மையினை யுடையார் தாமொன்று சொல்லுங்கால் ¶அப்பொழுதை யவையினை யறிந்து ஆராய்ந்து சொல்லுக, (எ-று).

+சொல்லின் தொகையெனவே, $செஞ்சொல், இலக்கணச் சொல், குறிப்புச் சொல்லென்னும் மூவகைச் சொல்லுமடங்கின.

---

* அவன் – அரசன். † இதுவும் – அவையறிதலும்.

‡ இஃததன்பின் – அவையறிதல் குறிப்பறிதலின் பின்னே.

¶ அப்பொழுதை – அச்சமயத்து.

+ சொல்லின்குழு எனவே என்றும் பாடமுண்டு.

$ "தொகைபடு செஞ்சொ லிலக்கணச் சொல்லே சூழ்ந்திடுங் குறிப்புச்சொன் மூன்றின், வகையறிந் துயர்ந்தோ ரொத்தவர் தாழ்ந்தோர் மருவு மூன் றவையுமா ராய்ந்து, தகையற வுயர்ந்தோ ரவையின்முந் துரையார் சமத்தினெவ் வாற்றினுங் கிளப்பார், நகைபடு தாழ்வி னொன்றையு மொழியார் நவைபடாச் சொற்பொரு ளாய்ந்தோர்" என்பது விநாயக புராணம்.

"ஆக்கும் பிரதிபதத்துடனே" என்னுஞ் செய்யுளி னுரையில் பிரயோக விவேக நூலார் "அலங்கார நூலார் அபிதை, இலக்கணை, வியஞ்சனை விருத்தியென மூன்று வகையாக்குவர். அவர் மதம்பற்றிப் பரிமேலழகரும் 'சொல்லின், தொகையறிந்த தூய்மை யவர்' என்னுந் திருவள்ளுவர் குறளுள் "செஞ்சொல், இலக்கணச்சொல், குறிப்புச்சொல் என்பர்" என்று கூறியிருக்கிறார்.

செஞ்சொல்-நேராற்றலால் பொருளைத்தருவது. நேராற்றலாவது இச்சொல்லா லிப்பொருளையறிக என்னும் சங்கேதம் (இச்சை). அதுகடம், படம் என்னும் பதங்கள் கலசம் வஸ்திரம் என்னும் பொருளை யறிவிப்பன போலவாம்.

இலக்கணச்சொல் – பெயராக வினையாக நிற்கும் சொற்கள் தத்தம் பொருளை யுணர்த்தாது, பொருளின் சம்பந்தப் பொருளையும்

தூய்மை - அவற்றுள் தமக்காகாதன வொழித்து ஆவனகோடல். அவை யென்றது ஈண்டு அதனளவை. *அது மிகுதி, ஒப்பு, தாழ்வென மூவகைத்து. அறிதல் - †தம்மொடு தூக்கியறிதல். ஆராய்தல் இவ்வவைக்கட் சொல்லுங்காரியம் இது, சொல்லுமாறிது, சொன்னால் அதன் முடிவிது வென்று இவையுள்ளிட்டன வாராய்தல்.

தெளி :—(இ-ள்.) சொல்லின்றொகை - சொல்லின்கூட்டத்தை, அறிந்த-தெரிந்த, தூய்மையவர்-தூய்மையினையுடையவர்; (தாம் ஒன்று சொல்லுமிடத்து), அவை - (அப்பொழுதுள்ள) சபையை, அறிந்தாராய்ந்து - தெரிந்தாராய்ந்து, சொல்லுக - சொல்லக்கடவர், (எ-று).

சொல்லின் தொகையெனவே, செஞ்சொல், இலக்கணைச்சொல், குறிப்புச்சொல் என்னும் மூவகைச்சொல்லும் அடங்கின. தூய்மை - அச்சொற்களுள் தமக்கு ஆகாதனவற்றை யொழித்து ஆவனவற்றைக் கொள்ளல். அவையென்றது இங்கு அவ்வவையினதளவினை. அவ்வளவு மிகுதி, ஒப்பு, தாழ்வு எனமூவகைப்படும். அறிதல் - தம்மோடு தூக்கி

---

தாற்பரியப் பொருளையும் அறிவித்தல். அது கட்டில் கரைகின்றது, கங்கையினிடைச்சேரி என்றாற் போல்வனவாம். இலக்கணைச்சொல் எனினும் ஆக்கச்சொல் எனினும் ஒக்கும். "இலக்கணையும் சத்தத்தின்கண் ணுள்ளது; ஆற்றலுடைத்தாகற் பாலதன் சம்பந்தம் இலக்கணை. அது கங்கையின்க ணிடைச்சேரி என்பது" என்பது தருக்க சங்கிரகவுரை.

குறிப்புச்சொல் - குறிப்பாற் பொருளுணர்த்துவது. (குறிப்பாவது செம்பொருளும் ஆக்கப்பொருளும் அல்லாத வேறுபொருளை யுணர்த்துந் தன்மையதாம்.) வேங்கியமெனினும் குறிப்பெனினும் ஒக்கும். இது "செல்லாமை யுண்டே லெனக்குரை மற்றுநின், வல்வரவு வாழ்வார்க் குரை" என்றாற் போல்வது. இதில் வல்வரவு என்பதும் வாழ்வார் என்பதும் தலைவியுயிரோடிராளென்பதனையும் அவளப்படியாக யானும் உயிரோடிரேன் என்பதனையும் குறிப்பித்து நின்றன.

தார்க்கிகர் குறிப்புச்சொல், செஞ்சொல் ஆக்கச்சொல் என்னுமிவற்றுளடங்கும் என்பர். "வடநூலார் சொற்பொருளை வாச்சியம், வேங்கியம், இலக்கணையென மூன்றெனவும், இலக்கணையை வேங்கியத்திலடக்கி இரண்டெனவுங் கூறுப. இவற்றுள், வாச்சியமென்பது வெளிப்படை. வேங்கிய மென்பது குறிப்பு. இலக்கணை யென்பது ஒரு பொருளினது இலக்கணத்தை மற்றொரு பொருட்குத் தந்துரைப்பது" என்பர் நன்னூல் விருத்தியுரைகாரர். இவற்றின் விரிவை விருத்திப் பிரபாகரம் மூன்றாவது பிரகாசத்திலும், நியாயப்பிரகாசம் ஆறாவது பரிச்சேதம் பிரமாண நிருபணத்திலும் காண்க.

* அது - சபையின் அளவு. † தம்மொடு தூக்கியறிதல் - சொல்லின் தொகையறிந்த தூய்மையவர் தம்மளவோடு (தம்மின் மிக்கார் அல்லது தம்மோடொத்தார் அல்லது தம்மிற்றாழ்ந்தார் கூடியுள்ள) சபையினதளவை யாராய்ந்தறிதல்.

யறிதல். ஆராய்தல் - இச்சபையில் சொல்லுங்காரியம் இது, சொல்லும் விதம் இது, சொன்னால் அதன் முடிவு இது என்று இவை யுள்ளிட்டனவற்றை ஆராய்தல்.

செஞ்சொல், இலக்கணச்சொல், குறிப்புச் சொலென்பன முறையே வாசகம், லட்சகம், வியஞ்சகமென்று சொல்லப்படும்.

(க-து.) சொல்லின் தொகையினை யறிந்தவர் சபையினதளவினை யறிந்து அதற்கேற்பச் சொல்லக்கடவர் என்பது.

1. Let the pure in mind who know the art of speech, speak with deliberation knowing the nature of the court then assembled.

---

**உ. இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லி
னடைதெரிந்த நன்மை யவர்.**

பரி:—(இ-ள்.) சொற்களி னடையினை ஆராய்ந்தறிந்த நன்மையினை யுடையார் அவைக்கண் ஒன்று சொல்லுங்கால் அதன் செவ்வியை யாராய்ந் தறிந்து வழுப்படாமல் மிகவுந் தெளிந்து சொல்லுக, (எ-று).

சொற்களினடையாவது அம்மூவகைச் சொல்லும் செம்பொருள், இலக்கணப்பொருள், குறிப்புப்பொருளென்னும் பொருள்களைப் பயக்குமாறு. செவ்வி - கேட்டற்கண் விருப்புடைமை. வழு - *சொல்வழுவும் பொருள்வழுவும். இவையிரண்டுபாட்டானும் ஒன்று சொல்லுங்கால் அவையறிந்தே சொல்லவேண்டுமென்பது கூறப் பட்டது.

தெளி:—(இ-ள்.) சொல்லினடை - சொற்களின் நடையை, தெரிந்த - ஆராய்ந்தறிந்த, நன்மையவர் - நன்மையினை யுடையவர், (சபையினிடத்து ஒன்று சொல்லுமிடத்து), இடைதெரிந்து-(அச் சபையின்) செவ்வியை ஆராய்ந்தறிந்து, நன்குணர்ந்து - (வழுப் படாமல்) மிகவுந் தெளிந்து; சொல்லுக - சொல்லக்கடவர், (எ-று).

சொற்களினடையாவது அம்மூவகைச்சொல்லும் செம்பொருள், இலக்கணப்பொருள், குறிப்புப்பொருளென்னும் பொருள்களை யுணர்த்தும் விதம். செவ்வி - கேட்பதில் ஆசையுடைமை, வழு - சொல்வழுவும் பொருள்வழுவும். இவை இரண்டுபாட்டாலும் ஒன்று சொல்லும்போது சபையினை யறிந்தே சொல்லவேண்டு மென்பது சொல்லப்பட்டது.

செம்பொருள், இலக்கணப்பொருள், குறிப்புப் பொருளென்பன முறையே வாச்சியம், லட்சியம், வியங்கியம் என்று சொல்லப்படும்.

(க-து.) சொற்களினடையினை யாராய்ந்தறிந்தவர் சபையி னிடத் தொன்று சொல்லும் போது அதன் செவ்வியை யறிந்து வழு வின்றிச் சொல்லக்கடவர் என்பது.

---

* சொல்வழுவும் பொருள்வழுவும் - சொற்குற்றமும் பொருட் குற்றமும்.

2. Let those who know the uses of words speak with a clear knowledge after ascertaining the time suited to the court.

---

**௩. அவையறியார் சொல்லன்மேற் கொள்பவர் சொல்லின்**
**வகையறியார் வல்லதூஉ மில்.**

பரி:—(இ-ள்.) அவையின தளவை யறியாது ஒன்று சொல்லு தலைத் தம்மேற் கொள்வார் அச்சொல்லுதலின் கூறுபாடும் அறியார், கற்று வல்ல *கலையும் அவர்க்கில்லை, (எ-று).

*அம்மூவகைச் சொற்களால் வருஞ் சொல்லுதல் வகைமை கேட்பாரது உணர்வு வகைமைபற்றி வருதலாற் 'சொல்லின் வகை யறியார்' என்றும், †இஃதறியார் யாதுமறியாரென்று எல்லாரானு மிகழப்படுதலின் 'வல்லதூஉ மில்' என்றுங் கூறினர். இதனால் அவையறியாக்கால் வருங்குற்றம் கூறப்பட்டது.*

தெளி:—(இ-ள்.) அவை - சபையினதளவை, அறியார் - அறி யாது, சொல்லல் - (ஒன்று) சொல்லுதலை, மேற்கொள்பவர் - (தம்) மேற்கொள்வார், சொல்லின்வகை - அச்சொல்லுதலின் கூறுபாடும், அறியார் - அறியாதவராவர், வல்லதூஉம் - (கற்று) வல்லகலையும், இல் - (அவர்க்கு) இல்லை, (எ-று).

(செஞ்சொல், இலக்கணைச்சொல், குறிப்புச் சொலென்னும்) அம் மூவகைச் சொற்களால்வரும் சொல்லுதல் வகைமை கேட்பவரது உணர்வு வகைமைபற்றி வருதலால் 'சொல்லின்வகை யறியார்' என்றும், இஃதறியார் யாது மறியாரென்று எல்லாராலும் இகழப் படுதலால் 'வல்லதூஉமில்' என்றும் சொல்லினர். இதனால் சபையை அறியாதவிடத்து வரும் குற்றம் சொல்லப்பட்டது.

(கூ-து.) சொல்லின் வகையினை யறியாதவர் சபையின் அளவறி யாது பேசத்தொடங்குவர் என்பது.

3. Those who undertake to speak without knowing the nature of the court are ignorant of the use of words as well as devoid of the power of learning.

---

**௪. ஒளியார்மு னொள்ளிய ராதல் வெளியார்முன்**
**வான்சுதை வண்ணங் கொளல்.**

---

* கலையும் - சாஸ்திரவுணர்ச்சியும்.

† இஃதறியார் - சொல்லின்வகையறியாதவர்.

பரி :—(இ-ள்.) அறிவாலொள்ளியார் அவைக்கட் டாமு மொள்ளிய ராக; *ஏனைவெள்ளைக ளவைக்கட் டாமும் †வாலிய சுதையினிறத்தைக் கொள்க, (எ-று).

ஒள்ளியாரென்றது ‡மிக்காரையும், ஒத்தாரையும். அது விகாரத் தால் ஒளியாரென நின்றது. ஒள்ளியராதல்-தந்நூலறிவுஞ் ¶ சொல் வன்மையுந் தோன்றவிரித்தல். $அவையறியாத புல்லரை 'வெளியார்' என்றது, வயிரமின் மரத்தை §வெளிறென்னும் வழக்குப்பற்றி. £அவர் மதிக்கும் வகை அவரினும் வெண்மையுடையராக வென்பார், 'வான்சுதைவண்ணங்கொளல்' என்ருர். அவையளவறிந்தார் செய்யுந்திறம் இதனுற் றொகுத்துக் கூறப்பட்டது. முன்னர் விரித்துக் கூறுப.

தெளி:— (இ-ள்.) ஒளியார்முன் - (அறிவால்) ஒள்ளியாரது சபையினிடத்து, ஒள்ளியராதல் - (தாமும்) ஒள்ளியராகக்கடவர், வெளியார்முன் - (மற்றை) வெள்ளைகளது சபையினிடத்து, வான் சுதைவண்ணம்-(தாமும்) வெண்சுண்ணச் சாந்து நிறத்தை, கொளல்— கொள்ளக்கடவர், (எ-று).

ஒள்ளியாரென்றது மிக்காரையும், ஒத்தாரையும். அவ்வொள்ளி யாரென்றது செய்யுள் விகாரத்தால் ஒளியாரென்று நின்றது. ஒள்ளியராதல் - தமது நூலறிவும் சொல்வலிமையும் தோன்ற விரித்துரைத்தல். வயிரமில்லாதமரத்தை வெளிறு என்னும் வழக்குப்பற்றிச் சபையறியாத புல்லரை 'வெளியார்' என்ருர். அவர் மதிக்கும்படி அவரினும் வெண்மையுடையவராக வென்பார் 'வான்சுதைவண்ணங்கொளல்' என்ருர். சபையளவறிந்தார் செய் யுந்திறம் இதனுல் தொகுத்துச் சொல்லப்பட்டது. மேல் அதனை விரித்துக் கூறுவார்.

---

* ஏனைவெள்ளைகள் – மற்றைப்பேதைகளது.

† வாலிய-வெண்ணிறமுள்ள.

‡ மிக்காரையும் ஒத்தாரையும் – தம்மினும் மேம்பட்டவரையும் தமக்குச் சமமானவரையும்.

¶ சொல்வன்மை – தாம்மேற்கொண்டுள்ள காரியத்தை முடித் தற்கியன்ற சொற்களைச் சொல்லுந் திறம்.

$ அவையறியாதபுல்லரை – கற்பன வூழற்ருராகிக் கல்விக் கழகத்து ஒற்கமின்றியூத்தைவா யங்காக்கும் அற்பரை.

§ ''அரியகற்றுசற்ருர்கண்ணும்'' என்னுங்குறளிலுள்ள ''இன்மை யரிதே வெளிறு'' என்பதற்கு ''வெண்மையில்லாமையரிது'' என்று கூறியிருத்தலுமிங்கறியத் தக்கதாம். இங்கு வெண்மை அறிவின் மையை யுணர்த்தி நின்றது. இது பெருந்தேவனுர் பாரதம் உத்தி யோக பர்வத்தில் பலராமனை நோக்கிச் சாத்தகி ''மேனியைக் காட்டின் வெளுத்ததே'' என்று கூறுவதனுலும் பிறவாற்ருனு மறியப்படும். வெண்மைப்பண்பு பல பொருளுணர்த்துதலை இலக்கணக்கொத்தின் ''பண்புத்தொகை விதி'' என்னுஞ் சூத்திர வுரையிற் காண்க. £ அவர் – வெளியார்.

(க-து.) சொல்லினடை தெரிந்த நன்மையவர் அறிவுடையாரது சபையில் அறிவுடையவராயிருந்து அஃதில்லாரது சபையில் அறிவில்லார்போ லிருக்கக்கடவர் என்பது.

4. Ministers should be lights in the assembly of the enlightened, but assume the pure whiteness of mortar (ignorance) in that of fools.

---

## ரு. நன்றென் றவற்றுள்ளு நன்றே முதுவருண் முந்து கிளவாச் செறிவு.

பரி :—(இ-ள்.) ஒருவர்க்கு இது நன்றென்று சிறப்பித்துச் சொல்லப் பட்ட குணங்களெல்லாவற்றுள்ளும் நன்றே, †தம்மின் மிக்காரவைக் கண் அவரின் முற்பட்டு ஒன்றனைச் சொல்லாத வடக்கம், (எ–று).

தங்குறைவும், அவர்மிகுதியும், முந்துகிளந்தாற்படுமிழுக்கும், கிளவாக்கா லெய்துநன்மையும் அறிந்தேயடங்கினமையின், அவ்வடக் கத்தினை 'நன்றென்றவற்றுள்ளு நன்று' என்றார். ‡முன்கிளத்தலையே விலக்கினமையின், உடன்கிளத்தலும் பின்கிளத்தலு மாமென்பது பெற்றாம். இதனான் மிக்காரவைக்கட் செய்யுந்திறங் கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) முதுவருள் - (தம்மினும்) மிக்காரது சபை யினிடத்து, முந்து - (அவரின்) முற்பட்டு, கிளவா – (ஒன்றனைச்) சொல்லாத, செறிவு-அடக்கம், நன்றென்றவற்றுள்ளும் – (ஒருவர்க்கு இது) நல்லதென்று சிறப்பித்துச்சொல்லப்பட்ட குணங்களெல்லா வற்றுள்ளும், நன்றே-சிறந்ததே, (எ-று).

தமது குறைவையும், அவர்மிகுதியையும், அவர்சொல்லுதற்கு முன்னே சொன்னு லுண்டாகுங் குற்றத்தையும், சொல்லாவிட்டால் வரும் நன்மையையும் அறிந்தே அடங்கினமையின், அவ்வடக்கத்தினை 'நன்றென் றவற்றுள்ளு நன்று' என்றார். முன் சொல்லுதலையே விலக்கினமையால், உடன்சொல்லுதலும் பின்சொல்லுதலும் ஆமென்பது பெறப்பட்டது. இதனால் மிக்காரது சபையினிடத்துச் செய்யும்வகை சொல்லப்பட்டது.

(க-து.) தம்மின் மிக்க அறிவுடையாரது சபையின்கண் முற்பட்டுச் சொல்லாத அடக்கமானது ஒருவர்க்கு நன்மைகளெல்லாவற்றுள்ளும் சிறந்ததாம் என்பது.

---

† தம்மின் மிக்கா ரவைக்கண் – தம்மினுங் கல்விகேள்வி முதலிய வற்றால் மேம்பட்டவரது சபையில்.

‡ முன் கிளத்தலையே விலக்கினமையின் – தம்மின் மிக்காரவைக் கண் அவரின் முற்பட்டுச் சொல்லுதலையே விலக்கினமையால்.

5. The modesty by which one does not rush forward and speak in an assembly of men of superior attainments is the best among all one's good qualities.

---

சா. *ஆற்றி னிலேதளர்ந் தற்றே வியன்புல
மேற்றுணர்வார் முன்ன ரிழுக்கு.

பரி:—(இ-ள்.) வீடெய்தற் பொருட்டு †நன்னெறிக்க ணின்ருெருவன் அந்நெறியினின்றும் நிலேதளர்ந்து வீழ்ந்தாலொக்கும், அகன்ற நூற்பொருள்களை யுட்கொண்டு ‡அவற்றின் மெய்ம்மை யுணர வல்லா ரவைக்கண் வல்லாளுெருவன் ||சொல்லிழுக்குப்படுதல், (எ-று).

*நிலேதளர்ந்து வீழ்தல் – §உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காத்தொழுகியான் பின்னிழுக்கிக் $கூடாவொழுக்கத்தனுதல். £பயனிழத்தலே யன்றி இகழவும் படுமென்பதாம். இதனுன் அதன்க ணிழுக்கிய வழிப்படுங் குற்றங் கூறப்பட்டது.*

தெளி:—(இ-ள்.) *வியன்புலம் – விரிந்த நூற்பொருள்களை, ஏற்று – உட்கொண்டு, உணர்வார் முன்னர் – (அப் பொருள்களின் மெய்ம்மையை) அறியவல்லவர் சபையில், இழுக்கு – (வல்லாளுெருவன் சொல்) இழுக்குப்படுதல், (முத்தியடைதற் பொருட்டு நல்வழியினின்ரு*

---

* *"நெடும்பகற் கற்ற வவையத் துதவா, துடைந்துளா ருட்கு வருங் கல்வி – கடும்பகல், ஏதிலான் பாற்கண்ட வில்லினும் பொல்லாதே, தீதென்று நீப்பரி தால்" என்பது நீதிநெறி விளக்கம்.*

† *நன்னெறிக்கண் - விரதஞானங்களில்.*

‡ *அவற்றின் மெய்ம்மையுணர வல்லார் – அகன்ற நூற் பொருள்களது உண்மையை யறியவல்லவர். "புராணமிதி காசமெவை யும் பொருளனைத்தின், பிராணனறி யாதுள விடத்திவை பிதற்றே" என்ருன்ருேர் கூறியிருத்தலு மிங்கறியத்தக்கதாம்.*

|| *சொல்லிழுக்குப்படுதல் – சொற்சோர்வடைதல். அஃதாவது சொல்லுஞ் சொல்லில் குற்றமுண்டாமாறு சொல்லுதல்.*

§ *நீத்தார் பெருமை 4. இதன் பொருள். அறிவென்னும் அங்குசத்தினுல் (மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும்) பொறிகளாகிய யானைகளைந்தனையுந் தத்தமது (பரிச முதலிய) விஷயங்களில் செல்லாவாறு தடுத்து நடப்பவன்.*

$ *கூடாவொழுக்கத்தனுதல் – தான் விட்ட காம வின்பத்தை யுறுதியில்லாமையால் பின்னும் விரும்புமாறு தோன்ற அவ்வாறே கொண்டு நின்று தவத்தோடு பொருந்தாததாய தீய வொழுக்கத்தை யுடையனுதல்.*

£ *பயனிழத்தலேயன்றி – கல்வியில் வல்லான் சொல்லிழுக்குப்பட்ட விடத்துத் தான் கற்ற கல்வியின் பிரயோசனத்தை யிழந்து விடுவதே யல்லாமல்.*

ஞெருவன்), ஆற்றின் – அவ்வழியினின்றும், நிலைதளர்ந்தற்றே – நிலைதளர்ந்து வீழ்ந்தாலொக்கும், (எ-று).

நிலைதளர்ந்துவீழ்தல் - அறிவால் ஐம்பொறிகளையும் வென் ஞெழுகியவன் பின்தவறிக் கூடாவொழுக்கத்தனுதல். (வல்லா ஞெருவன்) பயனிழத்தலேயன்றி இகழவும் படுவானென்பதாம். இதனுல் அச்சபையில் தவறிய விடத்துண்டாகுங் குற்றம் சொல்லப் பட்டது.

(க-து.) கற்றவர் சபையில் கற்றவனெருவன் சொல்லிழுக்குப் படுதல் முத்தியடைதற் பொருட்டு நல்வழியில் நின்றுனெருவன் அவ்வழியினின்றுந் தவறிவிழுந்தாற் போல்வதாம் என்பது.

6. For a minister to blunder in the presence of those who have aquired a vast store of learning and know the value thereof is like a good man stumbling and falling away from the path of virtue.

---

எ. கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச்
சொற்றெரிதல் வல்லா ரகத்து.

பரி:—(இ-ள்.) *வழுப்படாமற் சொற்களை யாராய்தல் வல்லாரவைக் கட்சொல்லின், பல நூல்களையுங் கற்று அவற்றினுய பயனையறிந்தாரது கல்வி யாவர்க்கும் விளங்கித் தோன்றும், (எ-று).

†சொல்லினென்பது அவாய்நிலையான் வந்தது. ‡ஆண்டே சொல்க வென்பதாம்.

தெளி:—(இ-ள்.) கசடற - வழுப்படாமல், சொற்றெரிதல் சொற்களை ஆராய்தலில், வல்லாரகத்து-வல்லவர் சபையினிடத்து, (சொல்லின்), கற்று – (பல நூல்களையுங்) கற்று, அறிந்தார் - (அந் நூல்களாலாகிய பயனை) அறிந்தவரது, கல்வி – கல்வியானது, விளங்கும் - (யாவர்க்கும்) விளங்கித் தோன்றும், (எ–று).

சொல்லின் என்பது அவாய்நிலையால் வந்தது. (கற்றறிந்தார்) அத்தன்மையதாய சபையிலேயே சொல்லக்கடவரென்பதாம்.

(க-து.) குற்றமறக் கற்றவரது சபையில் பலநூல்களையுங் கற்று அவற்ருலாய பயனை யறிந்தவரது கல்வி விளங்கித் தோன்றும்.

---

* வழுப்படாமல் – குற்றம் உண்டாகாமல்.

† வல்லாரகத்து என்பது சொல்லின் என்பதை அவாவி (வேண்டி) நின்றது.

‡ ஆண்டே – வழுப்படாமல் சொற்களை யாராய்தல் வல்ல வருள்ள சபையினிடத்தே.

7. The learning of those who have read and understood much will shine in the assembly of those who can faultlessly examine the nature of literature.

---

**அ. உணர்வ துடையார்முற் சொல்லல் வளர்வதன்
பாத்தியு ணீர்சொரிந் தற்று.**

பரி:—(இ-ள்.) பிற ருணர்த்தலின்றிப் பொருள்களைத் தாமேயுணர வல்ல அறிவினையுடையா ரவைக்கட் கற்ருர் ஒன்றனைச் சொல்லுதல், தானே வளர்வதொரு பயிர்நின்ற பாத்திக்கண் நீரினைச் சொரிந்தாற் போலும், (எ-று).

*தானேயும் வளர்தற்குரிய கல்வி மிக வளருமென்பதாம். இவையிரண்டு பாட்டானும் ஒத்தாரவைக்கண் எவ்வழியுஞ் சொல்லுக வென்பது கூறப்பட்டது.*

தெளி:—(இ-ள்.) *உணர்வது - (பிற ருணர்த்துத லில்லாமல் பொருள்களைத்தாமே) அறியவல்ல அறிவினை, உடையார்முன் - உடையவர் சபையினிடத்து, சொல்லல் - (கற்றவர் ஒன்றனைச்) சொல்லுதல், வளர்வதன் - (தானே) வளர்வதொருபயிர்நின்ற, பாத்தியுள் - பாத்தியினிடத்து, நீர் சொரிந்தற்று - நீரைச்சொரிந் தாற்போலும், (எ-று).*

*தானேயும் வளர்தற்குரிய கல்வி (உணர்வ துடையார்முற் சொல்லுதலால்) மிக வளருமென்பதாம். இவை இரண்டு பாட்டாலும் ஒத்தாரது சபையினிடத்து எவ்வழியும் சொல்லக்கடவரென்பது சொல்லப்பட்டது.*

(கரு-து.) *கற்றவர் சபையில் கற்றவர் ஒன்றனைச் சொல்லுதல் தானே வளர்வதொரு பயிர் நிறைந்த பாத்தியுள் நீர் பெய்தாற் போல்வதாம் என்பது.*

8. Lecturing to those who have the ability to understand for themselves is like watering a bed of plants growing by themselves.

---

**கூ. †புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க ‡நல்லவையு
ணன்கு செலச்சொல்லு வார்.**

---

† *"அவையின் றிறமறியா ராய்ந்தமர்ந்து சொல்லார், நவை யின்றித் தாமுரையார் நாணூர் - சுவையுணரார், ஆய கலைதெரியா ரஞ்சா ரவரன்றே, தீய வவையோர் செருக்கு" என்று வச்சணந்தி மாலை புல்லவையைப் பற்றிக் கூறுகின்றது.*

‡ *"புகழுந் தருமநெறி நின்றோர்பொய் காமம், இகழுஞ் சினஞ்செற்ற மில்லோர் - நிகழ்கலைகள், எல்லா முணர்ந்தோ ரிருந்த விடமன்றோ, நல்லாயவைக்கு நலம்" என்று ஷெ மாலை நல்லவை யைப்பற்றிக் கூறுகின்றது.*

பரி :—(இ-ள்.) நல்லாரிருந்த வவைக்கண் நல்லபொருள்களை அவர் மனங்கொள்ளச் சொல்லுதற்குரியார் *அவையறியாத புல்லரிருந்த வவைக்கண் அவற்றை மறந்துஞ் சொல்லாதொழிக, (எ-று).

சொல்லின், தம்மவையறியாமையை நோக்கி நல்லவையும், பொருளறியாமையாற் புல்லவைதானும் இகழ்தலின், இரண்டவைக்கு மாகாரென்பது கருதிப் 'பொச்சாந்துஞ் சொல்லற்க' என்றார்.

தெளி :—(இ-ள்.) நல்லவையுள் – நல்லவரிருந்த சபையினிடத்து, நன்கு – நல்லபொருள்களை, செல – (அந்நல்லவர்) மனங்கொள்ள, சொல்லுவார் – சொல்லுதற்கு உரியவர், புல்லவையுள் – (அவையறியாத) புல்லரிருந்த சபையினிடத்து, பொச்சாந்தும் – மறந்தும், சொல்லற்க – (அந்நல்ல பொருள்களைச்) சொல்லா தொழியக்கடவர், (எ-று).

(நல்லவையுள் நன்கு செலச் சொல்லுவார் புல்லவையுள்) சொல்வாராயின், (அவரைத்) தமக்குரிய சபையை அறியாமையைக் குறித்து நல்லோர் சபையும், சொன்ன பொருளறியாமையால் புல்லர் சபையும் இகழ்தலால், (அவர்) இரண்டு சபைக்கும் ஆகாரென்பது கருதிப் 'பொச்சாந்துஞ் சொல்லற்க' என்றார். புல்லர் - கல்வியறிவில்லாதவர்.

(க-து.) நல்லவர் சபையில் நல்லபொருள்களைச் சொல்லுதற்குரியவர் அவற்றை மறந்தும் புல்லர் சபையில் சொல்லாதிருக்கக் கடவர் என்பது.

9. Those who are able to speak good things impressively in an assembly of the wise should not even forgetfully speak them in that of the fools.

---

கO. அங்கணத்து ளுக்க வமிழ்தற்றுற் றங்கணத்த
ரல்லார்முற் கோட்டி கொளல்.

பரி :—(இ-ள்.) நல்லார் தம்மினத்த ரல்லாதா ரவைக்கண் ஒன்றனையுஞ் சொல்லற்க, சொல்லின் அது தூயதல்லாத †முற்றத்தின் கணுக்க அமிழ்தினை யொக்கும், (எ-று).

கொள்ளென்னும் முதனிலைத்தொழிற்பெயர் முன்னின்று பின்னெதிர்மறை அல் விகுதியோடு கூடி "மகனெனல்" என்பதுபோனின்றது. ‡சொல்லின் அது வென்பன அவாய் நிலையான் வந்தன. ¶பிறரெல்லாங்கொள லென்பதனைத் தொழிற்பெயராக்கியுரைத்தார்;

---

* அவையறியாத - சொல்லும் நல்ல பொருள்களையறியாத.

† முற்றம் - முன்றில் (தலைவாயில்).

‡ கோட்டிகொளல் என்பது சொல்லின், அது என்பனவற்றை அவாவி (வேண்டி) நின்றது.

¶ மற்ற வுரைகாரரெல்லாம் கொளல் என்பதனை அல்லீற்றெதிர் மறை வியங்கோள் வினைமுற்றாகக் கொள்ளாது (கொள்ளுதல் அஃதா

அவர் *அத்தொழில் அமிழ்தென்னும் பொருளுவமையோடு இயை யாமை நோக்கிற்றிலர். †சாவா மருந்தாதலறிந்து நுகர்வார் கையினும்படாது அவ்வங்கணத்துக்கு மியைபின்றிக் கெட்டவாறு தோன்ற 'உக்க வமிழ்து' என்றார். ‡அச்சொல் பயனில் சொல்லா மென்பதாயிற்று. இவை யிரண்டுபாட்டானும் தாழ்ந்தாரவைக்கண் ஒருவழியுஞ் சொல்லற்கவென்பது கூறப்பட்டது.

தெளி —(இ-ள்.) (நல்லோர்) தங்கணத்தரல்லார்முன் - தம்மினத் தவரல்லாதவரது, கோட்டி-சபையினிடத்து, கொளல் - (ஒன்றனையும்) சொல்லாதிருக்கக் கடவர், (சொன்னால் அது), அங்கணத்துள் - (பரிசுத்தமில்லாத) முற்றத்துள், உக்க - சிந்திய, அமிழ்தற்று - அமிர் தத்தையொக்கும், (எ—று).

கொள் என்னும் முதனிலைத்தொழிற்பெயர் முன்னே நின்று பின்னே எதிர்மறைப் பொருளதான அல் விகுதியோடு கூடி 'மக

---

வது சொல்லுதல் எனத்) தொழிற்பெயராக்கிக் கூறினார்; அவர் கொளலென்னும் அத்தொழில் அமிழ்து என்னும் பொருளுவமானத் தோடு பொருந்தாமையை நோக்கினாரில்லை.

* தொழில் தொழிலையுவமையாகக் கொள்ளுவதன்றிப் பொருளை யுவமையாகக்கொள்ளுவ தின்மையான் 'அத்தொழில் அமிழ் தென்னும் பொருளுவமையோடு இயையாமை நோக்கிற்றிலர்' என்று கூறிப் பிறரை மறுத்தார் பரிமேலழகர். வினை, பயன், மெய், உரு என்பனவற்றைப்பற்றி வரும் உவமைகள் தம்முள் மாறிவாரா என்பதாம். கொளலென்னுந் தொழிற்கு அமிழ்தென்னும் பொருள் உவமானமாகவாராதென்று மறுக்கப்பட்டதென்க.

நச்சினார்க்கினியார் "வினைபயன்" என்னும் (தொல்காப்பிய வுவமவியற்) சூத்திரவுரையில் "உவமமென்பது ஒரு பொருளோடு ஒரு பொருளினை யொப்புமை கூறுதல்." என்றும், "புலியன்னமறவ னென்பது வினையுவமம், அது பாயுமாறே பாய்வனென்னுந் தொழில் பற்றி ஒப்பித்தமையின்; அற்றன்றித் தோலும் வாலும் காலு முத லாகிய வடிவும் ஏனை வண்ணமும் பயனுமொவ்வாவென்பது; ஒழிந்த வற்றிற்கும் இஃதொக்கும். 'மாரி யன்னவண்கைத் தேர்வேளாயைக் காணிய சென்மே' என்பது பயனுவமம்; என்னை? மாரியான் விளைக் கப்படும் பொருளும் வண்கையாற் பெறும் பொருளும் ஒக்கு மென்ற வாறு. துடியிடை யென்பது மெய்யுவமம்; அல்குலும் ஆகமும் அகன்று காட்ட அஃகித்தோன்றும் மருங்குலால் துடி அதனோடு ஒத்தது. பொன்மேனி என்பது உருவுவமம்; பொன்னின் கண்ணும் மேனியின் கண்ணும் கிடந்த நிறமே ஒத்தன, பிறவொத்திலவென் பது" என்றும், வரைந்துள்ளன இங்குக் கவனித்தற் பாலனவாம்.

† சாவா மருந்து - சாவாமைக்குக் காரணமாகிய மருந்து.

‡ அச்சொல் - தாழ்ந்தவர் சபையில் சொல்லுஞ்சொல் அஃது உயிர்க்குறுதிதருஞ் சொல்லாதலையறிந்து கேட்பார்காதினும் படாது தாழ்ந்தவர்க்கும் பயனில்லாது போதலின் பயனில்சொல் லாயிற் றென்க.

னெனல் (மகனென்று சொல்லற்க) என்பதுபோல் கொளல் என நின்றது. சொன்னால் என்பதும் அது என்பதும் அவாய் நிலையால் வந்தன. சாவாமருந்தாதலறிந்து உண்பார் கையிலுமகப்படாது அம்முற்றத்திற்கும் பொருத்தமில்லாமல் கெட்டவகை தோன்ற 'உக்கவமிழ்து' என்றார். அச்சொல் பயனில்லாத சொல்லாமென்பதாயிற்று. இவை இரண்டுபாட்டாலும் தாழ்ந்தோர் சபையினிடத்து ஒரு வழியும் சொல்லற்கவென்பது சொல்லப்பட்டது.

(க-து.) அறிவுடையார் தம்மினத்த ரல்லாதார் சபையில் ஒன்றுஞ் சொல்லாதிருக்கக்கடவர்; சொன்னால் அது தூயதல்லாத முற்றத்தில் சிந்திய அமிர்த மொக்கும் என்பது.

10. To utter a good word in the assembly of those who are not of his stock is like dropping nectar on the ground.

---

## பத்தாம் அதிகாரம்

### அவையஞ்சாமை–Fearlessness before the court

பரி:—அஃதாவது சொல்லுதற்குரிய அவையினையறிந்து சொல்லுங்கால் அதற்கஞ்சாமை. *அதிகாரமுறைமையும் இதனானேவிளங்கும்.

தெளி:—அஃதாவது சொல்லுதற்குரிய சபையினையறிந்து சொல்லும் போது அச்சபைக்கு அஞ்சாமை. அதிகார முறைமையும் இதனாலே விளங்கும்.

---

**க. வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்**
**றொகையறிந்த தூய்மை யவர்.**

பரி:—(இ-ள்.) கற்றுவல்லவவை †அல்லாவவை யென்னும் அவை வகையினை யறிந்து வல்ல அவைக்கண் ஒன்று சொல்லுங்கால் அச்சத்தான் வழுப்படச் சொல்லார், சொல்லின்றொகையெல்லா மறிந்த தூய்மையினை யுடையார், (எ-று).

‡இருந்தாரது வன்மை அவைமே லேற்றப்பட்டது. ¶வல்லவை யென்பதற்குத் தாங்கற்றுவல்ல நூற்பொருள்களை யென்றுரைப்பாரு

---

* அவையறிதற்குப்பின் அவையஞ்சாமை வைத்த அதிகார முறைமையும். † அல்லாவவை - மூடர்சபை.

‡ அவையில் இருந்தவரது வன்மையை அவையின்மேல் ஏற்றி 'வல்லவை' என்று கூறினமையின், இஃது இடத்துநிகழ் பொருளின் குணம் இடத்தின்மேலாய உபசார வழக்காம்.

¶ வல்லவை யென்பதனை அகரந்தொக்குநின்ற குறிப்புப் பெயரெச்சத் தொடராகக் கொள்ளாது, அஃறிணைப்பன்மை வினையாலணையும் பெயராக்கி, அதற்குத் தாங்கற்றுவல்ல நூற்பொருள்களை யென் றுரைகூறுவாருமுண்டு.

முளர். அச்சத்தானென்பது அதிகாரத்தான் வந்தது. சொல்லின் றொகை, தூய்மை யென்பனவற்றிற்கு மேலுரைத்தாங் குரைக்க.

தெளி :—(இ-ள்.) சொல்லின்தொகை யறிந்த - சொற்களது தொகையெல்லாம் அறிந்த, தூய்மையவர் - தூய்மையினை யுடையவர், வகையறிந்து - (கற்றுவல்லார்சபை கற்றுவல்லரல்லாதார் சபை என்னும் சபையின்) வகையினையறிந்து, வல்லவை - (கற்று) வல்லாரது சபையில், (ஒன்றுசொல்லும்போது), வாய்சோரார்-(அச்சத்தால்) பிழைபடச் சொல்லார், (எ-று).

சபையிலிருந்தாரது வல்லமையைச் சபையின்மேல் ஏற்றி 'வல்லவை' என்று கூறினர். அச்சத்தால் என்பது அவை யஞ்சாமை யென்னும் அதிகாரத்தால்வந்தது. சொல்லின் தொகை, தூய்மை யென்பனவற்றிற்கு அவையறிதலின் முதற்குறளின் விசேடவுரையிற் கூறியவாறு கூறிக்கொள்க.

(க-து.) சொற்களது தொகையை யறிந்த பெரியோர் சபையிலொன்று சொல்லும்போது சபையினது வகையை யறிந்து பிழை-யில்லாது பேசுவர் என்பது.

1. The pure who know the classification of words having first ascertained the nature of the court will not, through fear falter in their speech before that powerful body.

---

உ. **கற்றருட் கற்ற ரெனப்படுவர் கற்றார்முற்**
**கற்ற செலச்சொல்லு வார்.**

**பரி :—(இ-ள்.) கற்றாரெல்லாரினும் இவர் நன்கு கற்றாரென்று உலகத்தாராற் சொல்லப்படுவார், கற்றாரவைக்கண் அஞ்சாதே தாங்கற்ற வற்றை அவர் மனங்கொள்ளும்வகை சொல்லவல்லார், (எ-று).**

உலகமறிவது + அவரையே யாகலின், அதனாற் புகழப்படுவாரும் அவரென்பதாம்.

தெளி :—(இ-ள்.) கற்றார்முன் - கற்றாரது சபையினிடத்து, (அஞ்சாமலே), கற்ற - (தாம்) கற்றவித்தைகளை, செல - (அக்கற்றவர் மனங்) கொள்ளும்வகை, சொல்லுவார்-சொல்லவல்லவர், கற்றருள்-கற்றவரெல்லாரினும், கற்றார் - (இவர்) நன்றாகக்கற்றவர், எனப் படுவர் - என்று (உலகத்தாரால்) சொல்லப்படுவார், (எ-று).

உலகமறிவது அவரையே யாகலின், அவ்வுலகத்தினால் புகழப்-படுவாரும் அவரென்பதாம். உலகமென்றது இங்கு உயர்ந்தோரை.

(க-து.) கற்றவரது சபையில் தாங்கற்ற வித்தைகளை அவர் அங்கீகரிக்கச் சொல்ல வல்லவரே மிகக் கற்றோராவர் என்பது.

---

+ அவரையே யாகலின் - கற்றவரது சபையில் அஞ்சாமலே தாங்கற்றவற்றை அக்கற்றவர் மனங்கொள்ளும்படி சொல்லவல்ல-வரையே யாதலால்.

2. Those who can agreeably set forth their acquirements before an assembly of the learned will be regarded as the most learned among the learned.

---

**ங. பகையகத்துச் சாவா ரெளிய ரரிய**
**ரவையகத் தஞ்சா தவர்.**

பரி :—(இ-ள்.) †பகையிடை யஞ்சாது புக்குச் சாவவல்லார் உலகத்துப் பலர் ; அவையிடை யஞ்சாதுபுக்குச் சொல்லவல்லார் சிலர், (எ-று).

‡அஞ்சாமை சாவாரென்பதனோடுங் கூட்டி, ||அதனாற் சொல்ல வல்லாரென்பது வருவித் துரைக்கப்பட்டது. இவை மூன்று பாட்டானும் அவையஞ்சாரது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்) பகையகத்து - பகையினிடத்து, சாவார் - (அஞ்சாமற்சென்று) இறக்கவல்லவர், எளியர் – (உலகத்துப்) பலர், அவையகத்து – சபையினிடத்து, அஞ்சாதவர் – அஞ்சாமற் (சென்று) சொல்ல வல்லவர், அரியர் - சிலர், (எ-று).

அஞ்சாமை யென்பதைச் சாவாரென்பதனோடுங்கூட்டி, அதனால் சொல்லவல்லவரென்பது வருவித்துச் சொல்லப்பட்டது. இவை மூன்று பாட்டாலும் சபைக்கு அஞ்சாதவரது சிறப்புச் சொல்லப் பட்டது. இங்கு எளியரென்பது பலரென்னும் பொருளையும், அரியரென்பது சிலரென்னும் பொருளையும் உணர்த்தி நின்றன.

(க-து.) கற்றூர் சபையிற்சென்று அஞ்சாது பேசவல்லவர் சிலரேயாவர் என்பது.

3. Many indeed may fearlessly plunge in the midst of foes and die in warfare ; but few there are who can fearlessly enter in the assembly of the learned.

---

**ச. கற்றூர்முற் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற**
**மிக்காருண் மிக்க கொளல்.**

பரி :—(இ-ள்.) பலநூல்களையுங் கற்றூரவைக்கட் டாங்கற்றவற்றை அவர் மனங்கொள்ளு மாற்றுற் சொல்லி ¶அவற்றின் மிக்கபொருள்களை அம்மிகக் கற்றூரிடத் தறிந்துகொள்க, (எ-று).

எல்லாம் ஒருவர்க்குக் கற்றல் கூடாமையின் வேறுவேறுய கல்வி யுடையார் பலரிருந்த அவைக்கட் டாங்கற்றவற்றை அவர்க்கேற்பச்

† பகையிடை - தம்பகைவரது போர்க்களத்தில்.

‡ அஞ்சாதவரது தொழிலாய அஞ்சாமை சாவார் என்பதனோடுங் கூட்டப்பட்டது. அஞ்சாமை (அஞ்சாமல்) சாவாரென்று கொள்க.

|| அதனல்-அஞ்சாமை யென்பதனல். ¶ அவற்றின் - தாங்கற்ற வற்றின்.

சொல்லுக ; சொல்லவே, *அவரும் †அவையெல்லாஞ் சொல்லு வராகலான், ஏனைக்கற்கப்பெறுதன கேட்டறியலாமென்பதாயிற்று. இதனல் ‡அதன தொருசார் பயன் கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்) கற்றூர்முன் – (பலநூல்களையுங்) கற்றூரது சபையினிடத்து, கற்ற-(தாம்) கற்றவித்தைகளை, செல-(அக்கற்றவர்) மனங்கொள்ளும் வழியால், சொல்லி – கூறி, தாங்கற்ற – தாம் கற்ற வித்தைகளினும், மிக்க – அதிகமான பொருள்களை, மிக்காருள் – அவ்வதிகமாகக் கற்றவரிடத்து, கொளல்–(அறிந்து) கொள்ளக்கடவர், (எ–று).

(கற்கவேண்டியவற்றை) எல்லாமொருவர்க்குக் கற்றல் கூடாமை யால் வேறு வேருகிய கல்வியுடையவர் பலரிருந்த சபையில் தாங்கற்ற வித்தைகளை அக்கற்றவர்க்கு மனங்கொள்ளுமாறு சொல்லக்கடவர் ; சொல்லவே, அவரும் அவ்வித்தைகளை யெல்லாம் சொல்லுவாராத லால், மற்றைக் கற்கப்பெறுத வித்தைகளைக் கேட்டறியலா மென்பதாயிற்று. இதனல் அவையஞ்சாமையினது ஒருசார் பயன் சொல்லப்பட்டது.

(க-து.) கற்றவர் கற்றவரது சபையில் தாங்கற்றவற்றைப் பொருந்தச் சொல்லித் தாங்கல்லாதவற்றை யவரிடத்தறிந்து கொள்ளக்கடவர் என்பது.

4. Ministers should agreeably set forth their acquirements before the assembly of the learned and acquire more knowledge from experts in learning.

---

## ரு. ஆற்றி னளவறிந்து கற்க வவையஞ்சா மாற்றங் கொடுத்தற் பொருட்டு.

பரி :—(இ-ள்.) சொல்லிலக்கண நெறியானே அளவைநூலை அமைச்சர் உட்பட்டுக் கற்க, வேற்று வேந்த ரவையிடை யஞ்சாது அவர் சொல்லிய சொற்கு உத்தரஞ் சொல்லுதற்பொருட்டு, (எ–று).

¶அளவைநூல் ‖சொன்னூல் கற்றே கற்க வேண்டுதலின், ʃஅதற்

---

* அவரும் – வேறு வேருய கல்வியுடையாரும்.

† அவையெல்லாம் – வேறுவேருய கல்விகளையெல்லாம்.

‡ அதனதொருசார்பயன் – அவையஞ்சாமையின் ஒருவகைப் பிரயோசனம். ¶ அளவைநூல் – தருக்கநூல்.

‖ சொன்னூல் கற்ற பிறகு அளவைநூல் கற்கவேண்டுமென்ப தாம் ; இதனல் இலக்கணநூற் பயிற்சியில்லார்க்குத் தருக்கநூற் பயிற்சி சித்தியாதென்பதாயிற்று.

ʃ அதற்கு – தருக்கநூலுக்கு ; அஃதாறெனப்பட்டது – சொல் லிலக்கணநூல் வழியென்று கூறப்பட்டது.

கஃதாறெனப்பட்டது. *அளக்குங் கருவியை 'அளவு' என்றார்; ஆகுபெயரான். †அவர் சொல்லை வெல்வதொருசொற் சொல்லலாவது நியாயத்து ‡வாதசற்ப விதண்டைகளும் சகலசாதிகளும் ¶முதலியகற்றார்க்கே யாகலின், $அவற்றைப் பிழையாமற் கற்க வென்பதாம். இதனால் ||அதன் காரணங் கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) அவை – (வேற்று வேந்தரது) சபையில், அஞ்சா - அஞ்சாமல், (அவ்வேற்று வேந்தர் சொல்லிய சொற்கு), மாற்றங்கொடுத்தற் பொருட்டு – உத்தரஞ் சொல்லுதற் பொருட்டு, ஆற்றின் – (சொல்லிலக்கண) வழியாலே, அளவு – அளவை நூலை, அறிந்து – உட்பட்டு, கற்க – (மந்திரிகள்) கற்கக்கடவர், (எ–று).

---

* அளத்தற் குரிய கருவி (பிரமாணம்) காரியவாகு பெயரால் 'அளவு' என்று கூறப்பட்டது. அளத்தல் – காரியம்; கருவி–காரணம்.

அளவை – பிரத்தியட்ச முதலிய பிரமாணங்கள். அளத்தல்– பிரத்தியட்ச முதலிய பிரமாணங்களால் கட முதலிய விடயங்களை யுள்ளவா றறிதல். அளத்தல் வழக்கிற்குச்சிறந்த கருவியா யிருப்பது அளவை யெனப்படும். அளப்பவன் – பிரமாதா; பிரமாணம் = அளவை; அளத்தல் — பிரமிதி அல்லது பிரமை; அளக்கப்படுவது பிரமேயம் என்று கூறப்படும். அளவையின் வகையைப்பற்றி அருளுடைமை இரண்டாவது குறளின் விசேடவுரையிலும் குறிப்புரையிலும் விரிவாக வரைந் திருத்தலறிக.

† அவர் – வேற்று வேந்தர்.

‡ வாதம் – தத்துவ (உண்மை)ப் பொருளையறியும் வேட்கையு (விருப்பமு) டைய புருடரிருவருள் ஒருவருக்கொருவர் உண்டாகும் வினாவிடையாகிய கதை. இது தத்துவ நிர்ணயத்தைப் பயனாக வுடைமையின் பெரும்பான்மையுங் குருசீட சம்வாதமாம்.

ஜல்பம் – (சற்பம்) ஒருவரையொருவர் வெல்லவேண்டு மென்னும் விருப்புடைய புருஷர்கள் தமது பட்சங்களை ஸ்தாபித்தலாகிய கதை.

விதண்டை – வெல்லும் வேட்கையுடைய புருஷர்கள் தமது பட்சத்தை ஸ்தாபித்தலில்லாக் கதை.

சலம் – ஒரு பொருள் கருதிச் சொல்லியதற்கு வேறு பொருள் கற்பித்துக்கொண்டு பழித்தல்.

சாதி – அசத் (போலி) உத்தரம்.

¶ முதலிய என்றமையின், வாதம் பேசுவார் தோல்வியுறுதற் கேதுவாய தோல்வித்தானம், ஏதுப்போலி, வியாகாதம் ஆன்மாசிரியம், அந்நியோன்யாசிரயம், சக்கிரிகை, அநவஸ்தை பிரதிபந்தி, கல்பநாலாகவம், கல்பநாகௌரவம், உத்சர்க்கம் அபவாதம், வையாத்தியயம், வினிகமநவிரகம், பிராக்லோப மென்பனவற்றையுங் கொள்க.

$ அவற்றை - வாதசற்ப முதலாயவற்றை.

|| அதன் காரணம் – அவையஞ்சாமையின் காரணம் (சொல்-லிலக்கண நெறியானே அளவை நூலைக் கற்றல்).

அளவை நூல் சொல்லிலக்கண நூல் கற்றே கற்கவேண்டு-தலால், அதற்கு அஃது ஆறு எனப்பட்டது. அளக்குங் கருவியை ஆகுபெயரால் 'அளவு' என்று கூறினர். அவர் சொல்லை வெல்வ-தாகிய வொருசொல் சொல்லலாவது நியாய நூலில் வாதசெற்ப விதண்டைகளும் சலசாதிகளு முதலியவற்றைக் கற்றவர்க்கே-யாதலால், அவற்றைப் பிழைபடாமல் மந்திரிகள் கற்கக் கடவ-ரென்பதாம். இதனுல் அதன் காரணம் சொல்லப்பட்டது.

(கூ-து.) மந்திரிகள் வேற்றரசர் சபையி லஞ்சாமலுத்தரஞ் சொல்லுதற் பொருட்டுத் தருக்க நூலைக் கற்கக் கடவர்.

5. Ministers should learn logic according to the rules of grammar to enable them to reply fearlessly before a foreign court.

---

**சு. வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலொடெ**
**னுண்ணவை யஞ்சு பவர்க்கு.**

பரி :—(இ–ள்.) வன்கண்மை யுடையரல்லாதார்க்கு வாளோ-டென்ன வியைபுண்டு, அதுபோல நுண்ணியாரதவையை யஞ்சுவார்க்கு நூலோடென்ன வியைபுண்டு, (எ-று).

*இருந்தாரது நுண்மை அவைமேலேற்றப்பட்டது. †நூற்குரிய-ரல்லரென்பதாம்.

தெளி :—(இ–ள்.) வன்கண்ண ரல்லார்க்கு – சௌரியமுடைய-ரல்லாதவர்க்கு, வாளொடு - வாளாயுதத்துடன், என் – என்ன (சம்பந்தமுண்டு), (அதுபோல), நுண்ணவை - நுண்ணறிவுடைய-வரது சபைக்கு, அஞ்சுபவர்க்கு – அஞ்சுவார்க்கு, நூலொடு – நூலுடன், என் - என்ன (சம்பந்தமுண்டு), (எ-று).

அவையிலிருந்தாரது நுண்மையை அவையின்மேல் ஏற்றி "நுண்ணவை" என்று கூறினர். (நுண்ணவை யஞ்சுபவர்) நூலுக்கு உரியவரல்ல ரென்பதாம். என்னென்னும் வினு விரண்டும் சம்பந்த-மில்லை யென்னும் பொருளுணர்த்தி நின்றன.

(கூ–து ) நுண்ணறிவுடையாரது சபையைக்கண் டஞ்சுவோர் கற்ற கல்வி பயன் தருவதாகாது என்பது.

---

* இஃது இடத்துநிகழ் பொருளின் குணம் இடத்தின்மேலாய உபசார வழக்காம். இடத்துநிகழ் பொருள் – சபையிலுள்ள நுண்ணறிவுடையார்; இடத்துநிகழ் பொருளின் குணம் - அவரது நுண்ணறிவு; இடம் – சபை.

† நுண்ணறிவுடையாரது சபையைக் கண்டு அஞ்சுவோர் நூல்களை வாசித்தற் குரிமையுடையரல்ல ரென்பதாம்.

6. What have they to do with a sword who are not valiant, or they with learning who are afraid of an intelligent assembly of the learned.

---

**எ. பகையகத்துப் பேடிகை யொள்வா *ளவையகத்
தஞ்சு மவன்கற்ற நூல்.**

பரி.—(இ-ள்.) எறியப்படும் பகைநடுவண் †அதனையஞ்சும் பேடி பிடித்த கூர்வாளையொக்கும். சொல்லப்படும் அவைநடுவண் ‡அதனை யஞ்சுமவன் கற்ற நூல், (எ-று).

¶பேடி - பெண்ணியல்புமிக்கு ஆணியல்பு முடையவள். ○களமும் வாய்த்துத் ()தானும் நன்றாயிருந்ததே யாயினும் பிடித்தவள் குற்றத்தால் வாள் சிறப்பின்றாயினாற்போல, அவையும் வாய்த்துத் ||தானும் நன்றாயிருந்ததே யாயினும் கற்றவன் குற்றத்தால் நூல் சிறப்பின்றாயிற்று.

தெளி:—(இ-ள்.) அவையகத்து - (சொல்லப்படுஞ்) சபைநடுவில், அஞ்சுமவன் - (அதற்கு) அஞ்சுகின்றவன், கற்றநூல் - கற்ற நூலானது, பகையகத்து - (எறியப்படும்) பகைநடுவில், பேடி - (அதற்கஞ்சும்) பேடி, கை - கையில், (பிடித்த), ஒள்வாள் - கூரியவாளை (ஒக்கும்) (எ-று).

பேடி - பெண்ணியல்புமிகுந்து ஆணியல்பு முடையவள். போர்க்களமும் வாய்த்துத் தானும் நன்றாயிருந்ததே யானாலும் பிடித்தவளது குற்றத்தால் வாள் சிறப்பில்லாதாயினாற் போன்று, சபையும் வாய்த்துத் தானும் நன்றாயிருந்ததேயானாலும் கற்றவனது குற்றத்தால் நூல் சிறப்பில்லாதாயிற்று.

(க-து.) சபைக்கஞ்சுவோன் கற்றகல்வி பயன்படுவதின்றாம்.

---

* "அவையஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியுங் கல்லார், அவையஞ்சா வாகுலச் சொல்லு - நவையஞ்சி ஈத்துண்ணார் செல்வமு நல்கூர்ந்தாரின்னலமும், பூத்தலிற் பூவாமை நன்று" என்று நீதிநெறிவிளக்கங் கூறுவது இங்குணர்தற்பாலதாம்.

† அதனை – பகையை. ‡ அதனை – சபையை.

¶ பெண்ணவாவியாணிழந்தது பேடியாம்; ஆணவாவிப் பெண்ணிழந்தது அலியாம். "வேயோ திரண்மென்றோள் வில்லே கொடும்புருவம், வாயே வளர்பவள மாந்தளிரே மாமேனி, நோயோ முலைசுமப்ப தென்றார்க் கருகிருந்தார், ஏயே யிவளொருத்தி பேடியோ வென்றார், எரிமணிப்பூண் மேகலையாள் பேடியோ வென்றார்" என்று சீவக சிந்தாமணி கூறுவதால் பேடியின் தன்மை நன்கு விளங்கும்.

○ களமும்வாய்த்து – போர்செய்யுமிடமுங் கிடைக்கப்பெற்று.

() தானும் – வாளும். || தானும் – நூலும்.

7. The learning of him who is diffident before a learned assembly is like the sharp sword of an hermaphrodite in the presence of his foes.

———

அ. பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையு
ணன்கு செலச்சொல்லா தார்.

பரி :—(இ-ள்.) நல்லாரிருந்த வவைக்கண் நல்ல சொற்பொருள் களைத் தம்மச்சத்தான் அவர்க்கேற்கச் சொல்லமாட்டாதார் பலநூல்களைக் கற்றாராயினும் உலகிற்குப் பயன்படுத லிலர், (எ-று).

*அறிவார்முற் சொல்லாமையிற் கல்வியி னுண்மை யறிவாரில்லை யென்பதாம். †இனிப் பயமிலரென்பதற்குக் கல்விப்பயனுடைய ரல்ல ரென் றுரைப்பாருமுளர்.*

தெளி :-(இ-ள்.) *நல்லவையுள் - நல்லவரிருந்தசபையுள், நன்கு - நல்லசொற்பொருள்களை, (தமது அச்சத்தால்), செல - (அந்நல்ல வர்க்கு) ஏற்க, சொல்லாதார் - சொல்லமாட்டாதவர், பல்லவை கற்றும் - பலநூல்களைக் கற்றாராயினும், பயமிலர் - (உலகத்திற்குப்) பிரயோசனப்படுதலிலர், ( எ-று).*

*(பலநூல்களைக் கற்ற அவர்) அறிவார்முன் நல்ல சொற்பொருள்களைச் சொல்லாமையால் அவரது கல்வியினுண்மையை அறிவார் இல்லை யென்பதாம்.*

*(க-து.) நல்லவர் சபையில்நல்லசொற்பொருள்களை அவர்க் கேற்பச் சொல்லாதவர் பலநூல்களைப் படித்திருந்தாலும் அவற்றா-லுலகிற்குப் பயன்படுதலிலராவர் என்பது.*

8. Those who cannot speak good things agreeable to an assembly of the learned, are indeed unprofitable persons inspite of their varied acquirements.

———

கூ. கல்லா தவரிற் கடையென்ப கற்றறிந்து
நல்லா ரவையஞ்சு வார்.

பரி :—(இ-ள்.) நூல்களைக் கற்றுவைத்தும் அவற்றாற் பயனறிந்து வைத்தும் நல்லாரிருந்த அவையினையஞ்சி ஆண்டுச் சொல்லாதாரை உலகத்தார் கல்லாதவரினுங் கடையரென்று சொல்லுவர், ( எ-று).

---

*† இனிப்பயமிலர் என்பதற்கு (நல்லவையுள் நன்கு செலச் சொல்லாதார்) கல்வியின் பிரயோஜனமுடையரல்ல ரென்று பொருள் கூறுவாருமுண்டு.*

அக்கல்வியறிவுகளாற் பயன் றாமுமெய்தாது பிறரையெய்து-விப்பதுஞ் செய்யாது *கல்வித்துன்பமே யெய்திநிற்றலின் 'கல்லாதவரிற் கடை' என உலகம் பழிக்கு மென்பதாம்.

தெளி :— (இ-ள்.) கற்றும் - [நூல்களைக்] கற்றிருந்தும், அறிந்தும் - [அந்நூல்களாற்பயனை] அறிந்திருந்தும், நல்லார் - நல்லவர் [இருந்த]. அவை - சபைக்கு, அஞ்சுவார் - அஞ்சி [அச்சபையினிடத்துச்] சொல்லாதவரை, கல்லாதவரின் - கல்லாதவரிலும் [மூடரிலும்], கடை - கடையர், என்ப - என்று [உலகத்தார்] சொல்லுவர், (எ-று).

[கற்றறிந்து நல்லாரவையஞ்சுவார்] அக்கல்வியறிவுகளால் பயனைத் தாமும் அடையாமல் பிறரை அடைவிப்பதுஞ் செய்யாமல் கல்வித்துன்பமே அடைந்து நிற்றலால் [அவரை] 'கல்லாதவரிற் கடை' என உலகம் பழிக்குமென்பதாம். கடையர் - கீழ்ப்பட்டவர். கற்றுமென்னுமும்மை தொக்கு நின்றது.

(க-து.) நூல்களைக் கற்றறிந்தும் நல்லவரிருந்த சபையைக் கண்டஞ்சுவோர் கல்லாதவரிலுங் கடையராவர் என்பது.

9. They who though they have learned and understood, are afraid of the assembly of the learned, are said to be inferior even to the illiterate.

---

**க0. உளரெனினு மில்லாரோ டொப்பர் களனஞ்சிக்**
**கற்ற செலச்சொல்லா தார்.**

பரி :—(இ-ள்.) ‡அவைக்களத்தை யஞ்சித் தாங்கற்றவற்றைஅதற்-கேற்கச் சொல்லமாட்டாதார் உயிர்வாழ்கின்றாராயினும், உலகத்தாரா லெண்ணப்படாமையின் இறந்தாரோ டொப்பர், (எ-று.)

ஈண்டுக் களனென்றது §ஆண்டிருந்தாரை. இவையைந்து பாட்டானும் அவையஞ்சுவாரதிழிபு கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) களன் - சபைக்கு, அஞ்சி - பயந்து, கற்ற - [தாம்] கற்றவற்றை, செல - [அச்சபைக்கு] ஏற்க, சொல்லாதார் - சொல்லமாட்டாதவர், உளரெனினும் - உயிர்வாழ்கின்றாரானாலும், [உலகத்தாரால் எண்ணப்படாமையால்], இல்லாரோடொப்பர் - இறந்தவரோடொப்பாவார், (எ-று).

இங்குக் களன் [சபை] என்றது அங்கிருந்தவரை. இவை ஐந்து பாட்டாலும் சபைக்கஞ்சுவோரது இழிவு சொல்லப்பட்டது.

(க-து.) சபைக்குப் பயந்து தாங்கற்றவற்றை அதற்கேற்பச் சொல்லமாட்டாதவர் உயிரோடிருப்பினும் இறந்தவரோடொப்பாவர் என்பது.

---

* கல்வித்துன்பம் - கல்வியைக் கற்றதாலாய துன்பம்.

‡ அவைக்களம் - சபை.

§ ஆண்டு - சபையில்.

10. Those who through fear are unable to set forth their learning acceptable to the learned assembly, though alive, are yet classed among the dead.

---

## பதினொன்றும் அதிகாரம்

## 74 நாடு—The Country

பரி:—(இ-ள்.) இனி அவ்வரசனாலும் அமைச்சனாலுங் கொண்டுய்க்கப் படுவதாய் ஏனை அரண் *முதலிய அங்கங்கட்கு இன்றியமையாச் சிறப்பிற்றாய நாடு ஓரதிகாரத்தாற் கூறுகின்றார். அஃதாவது இன்னதென்பதூஉம் அதிகார முறைமையும் இதனுள் விளங்கும்.

தெளி :— இனி அவ்வரசனாலும் மந்திரியாலும் கொண்டு செலுத்தப்படுவதாய் மற்றை அரண் முதலிய அங்கங்களுக்கு அவசியமாக வேண்டும் சிறப்பினையுடையதாகிய நாட்டினை ஓரதிகாரத்தால் சொல்லுகின்றார். அஃதாவது இத்தன்மையதென்பதும் அதிகார முறைமையும் இதனுள் விளங்கும்.

---

**க. தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்**
**செல்வருஞ் சேர்வது நாடு.**

பரி :—(இ-ள்.) குன்றாத விளையுளைச் செய்வோரும் அறவோரும் கேடில்லாத செல்வமுடையோரும் ஒருங்கு வாழ்வதே நாடாவது, (எ-று).

†மற்றை யுயர்திணைப் பொருள்களோடுஞ் சேர்தற்றொழிலோடும் இயையாமையின், விளையுளென்பது உழவர்மேனின்றது. குன்றாமை – எல்லாவுணவுகளும் நிறைய வுளவாதல். ‡இதனான் வாழ்வார்க்கு வறுமையின்மை பெறப்பட்டது. அறவோர் – துறந்தோர் அந்தணர் ¶முதலாயினோர். $''நற்றவஞ் செய்வார்க்கிடந் தவஞ்செய்வார்க்கு

---

* முதலிய அங்கங்கள் என்றது பொருள், படை, நட்புக்களை.

† விளையுள் என்னுந் தொழில் மற்றை யுயர்திணைப் பொருள்களாகிய தக்காரும் தாழ்விலாச் செல்வரும் என்பவற்றினோடும் சேர்வது என்னுஞ் சேர்தற்றொழிலோடும் கூடிப் பொருந்தாமையினால், இங்கு அஃது அத்தொழில் செய்யும் உழவர்மேனின்றது. விளையுள் என்னுந் தொழில் அதனைச் செய்பவரையுணர்த்துதலால் காரியவாகு பெயராம்.

‡ இதனான் – விளையுள் குன்றாமையினால்.

¶ முதலாயினோர் என்றமையின் சான்றோரையும் கொள்க.

$ சீவக சிந்தாமணி நாமகளிலம்பகம் 48. இதன் பொருள்- அவ்வேமாங்கதநாடு [வீடடையுமாறு] சிறந்த தவத்தைச் செய்பவர்க்கு இடம்; [மறுமையின்பங்கருதி] இல்லறம் நடத்துவோர்க்கும் இடம் என்பது.

மலைதிடம்'' என்றார் பிறரும். ¶இதனால் அழிவின்மை பெறப்பட்டது. கேடில்லாமை – வழங்கத் தொலையாமை. †செல்வர் – கலத்தினுங் காலினும் அரும்பொரு டரும் வணிகர். ‡இதனால் அரசனுக்கும் வாழ்வார்க்கும் பொருள் வாய்த்தல் பெறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) நாடு - நாடாவது, தள்ளா விளையுளும் – குன்றாத விளையுளைச் செய்வோரும், தக்காரும் – அறவோரும், தாழ்விலாச் செல்வரும் – கேடில்லாத செல்வமுடையோரும், சேர்வது – கூடிவாழ்வதே, (எ-று).

விளையுளென்பது மற்றைத் தக்காருந் தாழ்விலாச் செல்வரு-மென்னு முயர்திணைப் பொருள்களோடும் சேர்வது என்னும் சேர்தற்-றொழிலோடும் பொருந்தாமையால், உழவரை உணர்த்தி நின்றது. குன்றாமை – எல்லா வுணவுகளும் நிறையவுண்டாதல். இதனால் வாழ்வார்க்கு வறுமையில்லாமை பெறப்பட்டது. அறவோர் – துறந்தோர் அந்தணர் முதலாயினோர். இதனால் அழிவில்லாமை பெறப்பட்டது. செல்வத்திற்குக் கேடில்லாமை – அது கொடுக்கக் குறையாமை. செல்வர் – கப்பலிலும் வண்டியிலும் அருமையாகிய பொருளைக் கொண்டுவந்து தரும் வணிகர். இதனால் அரசனுக்கும் வாழ்வார்க்கும் பொருள் கிடைத்தல் பெறப்பட்டது. விளையுள் – விளைவு.

(கு-து.) உழவரும் அறவோரும் செல்வரும் கூடி வாழ்வதே நாடாம் என்பது.

1. A kingdom is that in which those who carry on complete cultivation, virtuous men and merchants with inexhaustible wealth live together.

---

**உ. பெரும்பொருளாற் *பெட்டக்க தாகி யருங்கேட்டா லாற்ற விளைவது நாடு.**

---

¶ இதனால் அழிவின்மை பெறப்பட்டது – தக்காரிருத்தலினால் நாட்டிற் கழிவில்லாமை பெறப்பட்டது.

† சிலப்பதிகாரம் மனையறம் படுத்த காதையில் ''உரைசால் சிறப்பி னரசுவிழை திருவிற், பரதர் மலிந்த பயங்கெழு மாநகர், முழங்குகடன் ஞால முழுவதும் வரினும், வழங்கத் தவாஅ வளத்த தாகி. யரும்பொரு டரூஉம் விருந்திற் றேஎ, மொருங்குதொக் கன்ன வுடைப்பெரும் பண்டம், கலத்தினுங் காலினுந் தருவன ரீட்டக், குலத்திற் குன்றாக் கொழுங்குடிச் செல்வர், அத்தகு திருவி னருந்தவ முடித்தோர், உத்தர குருவி னொப்பத் தேன்றிய'' என்று கூறி-யிருத்தலு மிங்கறியத் தக்கதாம்.

‡ இதனால் – தாழ்விலாச் செல்வ ரிருத்தலினால்.

* பெட்டக்கது என்பது பெள்தக்கது எனப்பிரிபடும். பெள் என்பது விருப்பம் என்னும் பொருள்தரும் முதனிலைத்தொழிற்பெயர். பெட்டல் – விரும்புதல்.

பரி:— (இ-ள்.) அளவிறந்த பொருளுடைமையாற் பிற தேயத்தாரானும் விரும்பத் தக்கதாய்க் கேடின்மையோடு கூடி மிக விளைவதே நாடாவது, (எ-று).

அளவிறப்பு — *பொருள்களது †பன்மைமேலும் தனித்தனி அவற்றின் மிகுதிமேலும் நின்றது. ‡கேடாவது மிக்கபெயல், பெயலின்மை, எலி, ¶விட்டில், கிளி, §அரசண்மை யென்றிவற்றான் வருவது. "மிக்கபெய லோடுபெய லின்மையெலி விட்டில்கிளி, £யக்கணர சண்மையோ $டாறு". @இவற்றை வடநூலார் ||ஈதிக ளென்ப. ¶¶இவற்றுண் முன்னையவற்ற தின்மை அரசனறத்தானும், பின்னையதின்மை அவன் மறத்தானும் வரும். ‡‡இவ்வின்மைகளான் மிகவிளைவதாயிற்று.

தெளி :— (இ-ள்.) நாடு - நாடாவது, பெரும்பொருளால் - அளவிறந்த பொருளுடைமையால், பெட்டக்கதாகி - [பிற தேயத்தாராலும்] விரும்பத்தக்கதாய், அருங்கேட்டால் - அழிவில்லாமையோடு கூடி, ஆற்றவிளைவது - மிகவிளைவதே, (எ-று).

(பொருள்) அளவிறந்திருத்தலாவது பொருள்களது பன்மையின் மேலும் தனித்தனியாக அப்பொருள்களது மிகுதியின்மேலும் நின்றது. கேடாவது அதிக மழை பெய்தல், மழை பெய்யாமை, எலி, விட்டில்,

---

* பொருள்கள் - மணி, பொன், நெல் முதலாயின

† பன்மை – பல.

‡ பிங்கலந்தை ஐயர்வகையில் "விட்டில் கிளியே நால்வாய் ஏனம், தொட்டியர் கள்வர் சோனைப் பெரும்புயல், நட்ட நாட்டேழ் குற்றமாகும்" என்று கூறுகின்றது. 'கிளிவளர்பூ' என்னும் சீவக சிந்தாமணிச் செய்யுளினுரையில் நச்சினார்க்கினியரால் "விட்டில் கிளிநால்வாய் வேற்றரசு தன்னரசு, நட்டம் பெரும்பெயல்கா லெட்டு' என்னும் சூத்திரம் காட்டப்பட்டிருக்கின்றது.

¶ விட்டில் என்பது ஒருவகைப் பறவை.

§ அரசண்மை - வேற்றரசர் நெருங்குதல். அஃதாவது பகை மன்னர் நெருங்கி வந்து வருத்துதல். அரசண்மை - அரசு அண்மை எனப்பிரிபடும். அண்மை - நெருங்குதல்.

£ அக்கண் - அவ்விடத்து.

$ ஆறு - ஆறு குற்றங்களாம்.

@ இவற்றை - நாட்டின் குற்றமாறனையும்.

|| ஈதிவாதைகள் என்றும் பாடமுண்டு. ஈதிவாதைகள் - ஈதியால் வரும் உபத்திரவங்கள். ஈதி - மிக்கபெயல் முதலிய ஆறும்; வாதைகள் - உபத்திரவங்கள். இவை நாட்டுக் குற்றங்களாம்.

¶¶ இந்நாட்டுக்குற்றமாறனுள் முன்னுள்ள மிக்கபெயல் முதலிய வைந்துமில்லாமை அரசனது அறத்தினுலும் பின்னுள்ள அரசண்மையில்லாமை அவனது மறத் [வீரத்] தாலும் வரும் என்பதாம்.

‡‡ இவ்வின்மைகளான் - நாட்டின் குற்றம் ஆறுமில்லாமையினுல்,

*கிளி, அரசண்மை என்ற இவற்றால் வருவது. இவற்றை வடநூலார் ஈதிக ளென்று சொல்வர். இவற்றுள் முன்னையவற்றி னில்லாமை அரசனறத்தாலும், பின்னையதில்லாமை அவன் மறத்தாலும் வருவ-தாம். இவையில்லாமைகளால் நாடு மிக விளையு மென்பதாயிற்று.*

*(க-து.) பெரும்பொருளையும் கேடில்லாமையையும் மிக்க விளைவையு முடையதே நாடா மென்பது.*

2. A kingdom is that which is sought after (even by foreigners) on account of its immense wealth, and which grows greatly in prosperity being free from destructive causes.

---

**ந. பொறையொருங்கு மேல்வருங்காற் றுங்கி யிறைவற் கிறையொருங்கு நேர்வது நாடு.**

**பரி: —(இ–ள்.) பிறநாடுகள் பொறுத்த பாரமெல்லாம் ஒருங்கே தன்கண் வருங்கால் அவற்றைத் தாங்கி அதன்மேற் றன்னரசனுக்கு இறைப்பொருள் முழுவதையும் உடம்பட்டுக் கொடுப்பதே நாடாவது. (எ–று)**

*பாரங்கள் – மக்கட்டொகுதியும், ஆனெருமை முதலிய விலங்குத் தொகுதியும். தாங்குதல் – †அவை தத்தந்தேயத்துப் பகை வந்திறுத்ததாக, அரசு கோல் கோடியதாக, உணவின்மையானுகத் தன்கண் வந்தால் அவ்வத் தேயங்களைப்போல இனிதிருப்பச் செய்தல். $அச்செயலால் இறையைக் குறைபடுத்தாது தானே கொடுப்ப-தென்பார், 'இறையொருங்கு நேர்வது' என்றார்.*

தெளி :—(இ–ள்.) நாடு - நாடாவது, பொறை - (பிறநாடுகள் சுமந்த) பாரமெல்லாம், ஒருங்கு-ஒருசேர, மேல் வருங்கால் - (தன்) மேல்வரும்போது, தாங்கி – (அப்பாரங்களைத்) தாங்கி, (அதன்மேல்), இறைவற்கு - (தன்) அரசனுக்கு, இறையொருங்கு – இறைப்பொருள் முழுவதையும், நேர்வது – உடன்பட்டுக் கொடுப்பதே, (எ-று).

*பாரங்கள்–மக்கள் கூட்டமும், பசு எருமை முதலிய விலங்கின் கூட்டமுமாம். நாடு தாங்குதலாவது அவை தத்தந்தேயங்களில் பகைவர் வந்து தங்கியதனுலாவது அரசன் நீதிதவறுதலாலாவது உணவில்லாமையாலாவது தன்னிடத்து வந்தால் அவ்வத்தேயங்-களைப்போல (நாடு தன்னிடத்து) இனிதிருப்பச்செய்தல். அச்செய-லால் (நாடு தன்னரசனுக்கு) இறைப்பொருளைக் குறைபடுத்தாமல் தானே கொடுப்பதென்பார் 'இறையொருங்கு நேர்வது' என்றார். இறைப்பொருள்-வரிப்பணம்.*

---

*† அவை – மக்கட்டொகுதியும், ஆனெருமை முதலிய விலங்குத்-தொகுதியும். $ அச்செயலால்-இனிதிருப்பச் செய்தலால்.*

(க-து.) பிறநாட்டுப் பாரங்கள் தன்மேல் வரும்போது அவற்றைத் தாங்கிக்கொண்டு தன் அரசனுக்கு இறைப்பொருள் முழுவதையுந் தருவதே நாடாம் என்பது.

3. A kingdom is that which can bear any burden that may be pressed on it from adjoining kingdoms and yet pay full tribute to its sovereign.

---

**ச. உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ்**
**சேரா தியல்வது நாடு.**

பரி.—(இ-ள்.) மிக்க பசியும் நீங்காத நோயும் புறத்துநின்றுவந்தழிவு செய்யும் பகையுமின்றி இனிது நடப்பதே நாடாவது, (எ-று).

உறுபசி-†உழவருடைமையானும் ஆற்றவிளைதலானும் சேராதாயிற்று. ஓவாப்பிணி-தீக்காற்று மிக்க குளிர் வெப்பங்களும் நுகரப்படுமவற்றது தீமையுமின்மையிற் சேராதாயிற்று. செறுபகை-அரசனாற்றலும் ‡நிலைப்படையும் ¶அடவியும் §அரணு முடைமையிற் சேராதாயிற்று.

தெளி:—(இ-ள்.) நாடு - நாடாவது, உறுபசியும் - அதிகபசியும், ஓவாப் பிணியும் - நீங்காத நோயும், செறுபகையும் - (புறத்திலிருந்து வந்து) அழிவு செய்யும்பகையும், சேராது - அடையப் பெறாமல், இயல்வது-இனிது நடப்பதே, (எ-று).

உறுபசி - உழவருடைமையாலும் விளைநிலம் மிகவிளைதலாலும் சேராதாயிற்று. ஓவாப்பிணி - தீக்காற்று மிக்க குளிர்வெப்பங்களும் உண்ணப்படு முணவுகளின் தீமையும் இல்லாமையால் சேராதாயிற்று. செறுபகை - அரசன் வலிமையும் நிலைப்படையும் அடவியும் அரணும் உடைமையால் சேராதாயிற்று. பகை - பகைவர்.

(க-து.) பசியும் நோயும் பகையுமின்றி இனிது நடப்பதே நாடாம் என்பது.

4. A kingdom is that which continues to be free from excessive starvation, irremediable epidemics and destructive foes.

---

**ரு. பல்குழுவும் பாழ்செய்யு முட்பகையும் வேந்தலைக்குங்**
**கொல்குறும்பு மில்லது நாடு.**

பரி.—(இ-ள்.) சங்கேத வயத்தான் மாறுபட்டுக் கூடும் பல கூட்டமும், உடனுறையா நின்றே பாழாகச் செய்யு முட்பகையும், அளவு

---

† உழவர் - உழுது பயிர் செய்வோர்.

‡ நிலைப்படை - எப்போதும் மாறுபடாது நிலைத்திருக்குஞ் சேனை.

¶ அடவி - காடு.

§ நால்வகை யரணுள் முன்னர் அடவியைக் (காட்டரணைக்)கூறின மையின், இங்கரணென்றது நீரரண் நிலவரண் மலையரண்களை.

**வந்தால் வேந்தனை *யலைக்குங் கொல்வினைக் ‡குறும்பரும் இல்லாததே நாடாவது, (எ-று).**

† சங்கேதம் – சாதி பற்றியுங் கடவுள்பற்றியும் பலர்க்குளதா ¶மொருமை. உட்பகை – @ஆறலைப்பார் கள்வர் குறளை கூறுவார் $முதலிய மக்களும், பன்றி புலி கரடி முதலிய விலங்குகளும். உட்பகை +குறும்பென்பன ‖ஆகுபெயர். §இம்மூன்றும் அரசனாலும் வாழ்வாராலுங் ()கடியப்பட்டு நடப்பதே நாடென்பதாம்.

தெளி:—(இ–ள்.) நாடு-நாடாவது, பல்குழுவும் – (சங்கேதவசத்தால் மாறுபட்டுக் கூடும்) பல கூட்டமும், பாழ்செய்யும் – (உடனிருந்து கொண்டே) பாழாகச் செய்யும், உட்பகையும் –, வேந்தலைக்கும் – (சமயம் வந்தால்) அரசனை அலைக்கின்ற, கொல் குறும்பும் – கொலைத்தொழிற் குறும்பரும், இல்லது – இல்லாததே, (எ–று).

சங்கேதம் – சாதிபற்றியுஞ் சமயம் பற்றியும் பலர்க்கு உளதா மொருமை. உட்பகை – வழியலைத்துப் பறிப்போர் கள்வர் கோட் சொல்வார் முதலிய மக்களும், பன்றி புலி கரடி முதலிய மிருகங்களும். உட்பகை, குறும்பு என்பன பண்பாகு பெயர்கள். இம்மூன்றும் அரசனாலும் வாழ்வாராலும் கடியப்பட்டு நடப்பதே நாடென்பதாம்.

---

* அலைக்கும் – வருத்தும்.

‡ குறும்பர் – குறுநிலமன்னர்; அல்லது துர்ச்சனர் (ராஜத் துரோகிகள்).

† சங்கேதம் – கட்டுப்பாடு (குழூஉச்குறி). வாமமார்க்கத்தார் மத்தியத்திற்(கள்ளுக்)குத் தீர்த்தமென்றும், மாமிசத்திற்குச் சுத்த மென்றும், மத்தியபான (கள்குடிக்கும்) பாத்திரத்திற்குப் பதுமை என்றும், வெங்காயத்திற்கு வியாஸ ரென்றும், வெள்ளைப் பூண்டுக்குச் சுகதேவரென்றும், மத்திய மிறக்குவோர்க்குத் தீட்சிதரென்றும் பெயர் கொடுத்திருப்பதும், பிறவும் இங்குணர்தற்பாலனவாம்.

¶ ஒருமை – ஒற்றுமைப்பட்ட அபிப்பிராயம்.

@ ஆறலைப்பார் – பிரயாணிகளை வழியில் மறித்து நின்று அவர் களிடத்துள்ள பொருள்களைப் பறிப்பவர்.

$ முதலிய என்றமையின், இச்சகம் பேசிப் பொருள் பறிப்பார், முன்னேயொன்று கூறிப் பின்னே யொன்று கூறுவார், பொய்க்கரி (பொய்ச்சாட்சி) புகல்வார், மித்திரபேதஞ் செய்வார் முதலியவர் களையுங் கொள்க.

+ குறும்பு-சிறுமைக் குணம்

‖ உட்பகை, குறும்பு என்னும் பண்புப் பெயர்கள் அவற்றை யுடைய மக்களையும் விலங்குகளையு முணர்த்துதலால் பண்பாகு பெயர்களாம்.

§ இம்மூன்றும் – பல்குழுவும், பாழ்செய்யு முட்பகையும், வேந்தலைக்குங் கொல்குறும்பும்.

() கடியப்பட்டு – ஒழிக்கப்பட்டு.

(க-து.) மாறுபட்டுக்கூடும் பல கூட்டமும் உட்பகையும் கொலைத் தொழிற் குறும்பருமில்லாததே நாடாம் என்பது.

5. A kingdom is that which is without various associations, destructive internal enemies and murderous savages who sometimes harass the sovereign.

---

சா. **கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்று**
**நாடென்ப நாட்டிற் றலை.**

**பரி:—(இ-ள்.) பகைவராற் கெடுத லறியாததாய் அரிதிற் கெட்ட தாயினும் அப்பொழுதுந் தன் வளங்குன்றுத நாட்டினை எல்லாநாட்டினுந் தலையென்று சொல்லுவர் நூலோர், (எ-று).**

*அறியாத குன்றுத வென்னும் பெயரெச்சங்களி *னிறுதி நிலைகள் விகாரத்தாற் ஹெக்கன. கேடறியாமை – அரசனுற்றலானுங் கடவுட் பூசையறங்களென்றிவற்றது செயலானும் வரும. வளம – †ஆகரங் களிற் படுவனவும் வயலினுந் தண்டலையினும் விளைவனவுமாம். குன்றுமை – ‡அவை செய்யவேண்டாமல் இயல்பாகவே யுளவாயும் முன்னீட்டப்பட்டுங் குறைவறுதல். இவை ஆறுபாட்டானும் நாட்ட திலக்கணங் கூறப்பட்டது.*

*தெளி:-(இ-ள்.) கேடறியா – (பகைவரால்) கெடுதலறியாததாய், கெட்டவிடத்தும் – (அரிதிற்) கெட்டதாஞலும், வளங்குன்று – (அப் பொழுதுந் தன்) வளங்குறையாத, நாடு – நாட்டினை, நாட்டின் – (எல்லா) நாடுகளிலும், தலை-முதன்மையானது, என்ப – என்று சொல்லுவார், (நூலோர்), (எ-று).*

*அறியாத, குன்றுத என்னும் எதிர்மறைப் பெயரெச்சங்கள் விகாரத்தால் ஈறு கெட்டு அறியா, குன்று என வந்தன. நாடு கேடறி யாமை – அரசன் ஆற்றலாலும் கடவுட் பூசை அறங்கள் என்ற இவற்றைச் செய்தலாலும் வரும். வளம்—சுரங்கங்களிற் படுவனவும் வயலிலும் தண்டலையிலும் விளைவனவுமாம். வளங்குன்றுமை – அவை சம்பாதிக்கவேண்டாமல் இயல்பாகவே உளவாயும் முன் சம்பாதிக்கப் பட்டுங் குறைவற்றிருத்தல், இவை ஆறுபாட்டாலும் நாட்டது இலக்கணம் சொல்லப்பட்டது.*

---

**இறுதி நிலைகள் விகாரத்தாற் றெக்கன – தகர எழுத்துப்பேற் ரோடு கூடிய அகரவிகுதிகள் செய்யுள் விகாரத்தால் தொக்குநின்றன. அறியா, குன்று என்பன ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சங்கள்.*

*†சுரங்கங்களில் உண்டாகும் பொன் வெள்ளி முதலிய பொருள் களும், வயலிலும் தண்டலை (சோலை)யிலும் விளையும் நெல் கனி காய் முதலிய பொருள்களுமாம். ''கதிர்படு வயலினுள்ள கடிகமழ் பொழிலி னுள்ள, முதிர்பல மரத்தினுள்ள முதிரைகள் புறவி னுள்ள, பதிபடு கொடியினுள்ள படிவளர் குழியினுள்ள, மதுவன மலரிற் கொள்ளும் வண்டென மள்ளர் கொள்வார்'' என்று கம்பராமாயணங் கூறுவது மிங்கறியத்தக்கதாம்.*

*‡ அவை–ஆகரங்களிற் படுவன முதலியன.*

(க-து) பகைவரால் கெடுதலறியாததாய், கெட்டவிடத்துந் தன் வளங்குறையாததாயுள்ள நாடு எல்லா நாட்டிலும் முதன்மை யானதாம் என்பது.

6. The learned say that the best kingdom is that which knows no evil from enemies, and if at all injured, suffers no diminution in its fruitfulness.

———

## எ. இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும் வல்லரணு நாட்டிற் குறுப்பு.

பரி: (இ-ள்.) *கீழ்நீர் †மேனீ ரெனப்பட்ட தன்கணீரும் வாய்ப் புடைத்தாய மலையும் அதனி னின்றும் வருவதாய நீரும் அழியாத ‡நகரியும் நாட்டிற் கவயவமாம். (எ-று).

ஈண்டு புனலென்றது துரவு கேணிகளும் ஏரிகளும் ஆறுகளுமாகிய ஆதாரங்களை; ¶அவயவமாதற்குரியன $அவையே யாகலின். +அவற்றான் oவானம் வறப்பினும் வளனுடைமை பெறப்பட்டது. ()இடையதன்றி யொருபுடையதாகலும் ||தன் வளந்தருதலும் ¶¶மாரிக்கணுண்ட நீர் கோடைக்க ணுமிழ்தலு முடைமைபற்றி

---

* துரவு (கிணறு)ம் கேணியும் (சிறுகுளமும்) கீழ்நீரையுடையன.

† ஏரியும் ஆறும் மேல்நீரையுடையன.

‡ அநேக பெருவீடுகளும் அநேகஜனங்களு முள்ளதாயும், கிராமத் தினும் பெரியதாயும், நகரியினுஞ் சிறியதாயுமிருப்பது பட்டணமாம்;

அநேக பெருவீடுகளும் அநேக ஜனங்களும் அமைந்ததாயும், அரணமைந்த கோட்டையுள்ளதாயும், நீளத்தில் ஒரு கோல் தூரத் திற்குக் குறையாததாயு மிருப்பது புரமாம்;

அநேக பெருவீடுக ளுள்ளதாயும், பட்டணம் புரமென்னு மிவற்றினும் பெரியதாயும், இராஜதானியாயு மிருப்பது நகரியாம்.

¶ அவயவமாதற்கு - நாட்டிற் குறுப்பாதற்கு.

$ அவையே - துரவுகேணி முதலியனவே.

+ அவற்றான் - துரவு முதலியன விருத்தலால்,

o வானம் வறப்பினும் - மழைபெய்யா தொழிந்தாலும்.

() (மலை) நகரியின் நடுவே யிராது, அதற்கொரு பக்கத்திலிருப்ப தாகலும்.

|| தன்வளந்தருதலும் - மலை தன்னுடைய வளத்தைக் கொடுத்த லும். பிங்கலந்தை ஐயர்வகையில் "அகில்கறி கோட்ட மொடுதக் கோலம், குங்குமமைந்து மலைபடு திரவியம்" என்று கூறுகின்றது. கறி - மிளகு.

¶¶ மழைக்காலத்திலுட்கொண்டநீரை வெயிற்காலத்தில் வெளிப் படுத்தலும்.

'வாய்ந்த மலை' என்றார். *அரண் - ஆகுபெயர். இதனுன் †அதன வயவங் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) இருபுனலும் - கீழ்நீர் மேல்நீர் எனப்பட்ட தன்னிடத்து நீரும், வாய்ந்த மலையும் - வாய்ப்புடைத்தாகிய மலையும், வருபுனலும் - (அம்மலையிலிருந்து) வருவதாகிய நீரும், வல்லரணும் - அழியாத நகரியும், நாட்டிற்கு—, உறுப்பு - அவயவமாம், (எ-று).

இங்குப் புனலென்றது துரவு கேணிகளும் ஏரிகளும் ஆறுகளும் ஆகிய ஜலாதாரங்களை; அவயவமாதற்கு உரியன அவையே யாகலால். அவற்றால் மழைவறப்பினும் வளமுடைமை பெறப்பட்டது. நடுவ தல்லாமல் ஒரு பக்கத்ததாகலும் தன் வளந்தருதலும் மாரியிலுண்ட நீரைக் கோடையிலுமிழ்தலு முடைமைபற்றி 'வாய்ந்த மலை' என்றார். அரண் – சினையாகுபெயர். இதனால் அதனது அவயவம் சொல்லப்பட்டது. நகரி – நகரம்.

(க-து.) கீழ்நீர் மேல்நீரும் மலையும் அம்மலையினின்றும் வரும் நீரும் அழியாத நகரியும் நாட்டிற்கு அவயவமாம் என்பது.

7. The constituents of a kingdom are the waters from above and below, well suited hills and an indestructible fort.

---

அ. **பிணியின்மை செல்வம் விளைவின்ப மேம**
**மணியென்ப நாட்டிற்கிவ் வைந்து.**

**பரி:—(இ-ள்.) நோயின்மையுஞ் செல்வம் ‡விளைதல் இன்பம் காவலென்றிவையுடைமையுமாகிய இவ்வைந்தினையும் நாட்டிற் கழகென்று சொல்லுவர் நூலோர், (எ-று).**

பிணியின்மை – நிலநலத்தான் வருவது. செல்வம் – ¶மேற்

---

* (நகரியின் உறுப்பான) அரண் என்னுஞ் சினைப்பெயர் அதனது முதலாகிய நகரியையுணர்த்துதலால் சினையாகுபெயராம்.

† அதனது – நாட்டினது.

‡ விளைதல் – நெல் முதலியன விளைதல்.

"செல்வம் விளையுள் பல்வளஞ் செங்கோல், கொல்குறும் பின்மை கொடும்பிணி யின்மையென், றிவ்வகை யாறு நன்னாட் டமைதி" என்று பிங்கலந்தை கூறுவதிங் கறியத்தக்கதாம்.

¶ மேற்சொல்லியன – கப்பலிலும் வண்டியிலும் வணிகர்தரும் பொருள்களும், குடிகள் குறைவின்றித் தரும் வரிப்பணமும், சுரங்கத் திற்கிடைக்கும் பொருள்களும், வயல் முதலியவற்றிற் கிடைக்குந் தானிய முதலியனவும், மலைதரும் பொருள்களும் பிறவுமாம்.

சொல்லியன. இன்பம் - *விழவும் †வேள்வியுஞ் சான்றேருமுடைமை யானும், நுகர்வனவுடைமையானும், நிலநீர்களது நன்மையானும், வாழ்வார்க்கு ‡உண்ணிகழ்வது. காவலெனவே அரசன் காவலும் வாழ்வோர் காவலும் அரண்காவலு மடங்கின. $பிறதேயங்களி னுள்ளாரும் விழைந்து பின் அவையுள்ளாமைக் கேதுவாய அதனழகு இதனுற் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) பிணியின்மை - நோயில்லாமையும், செல்வம்-பொருள், விளைவு - நெல் முதலியவற்றின் விளைவு, இன்பம் - சுகம், ஏமம் - காவல், (என்ற இவை யுடைமையுமாகிய), இவ்வைந்து - இவ்வைந்தினையும், நாட்டிற்கு - நாட்டினுக்கு, அணி - அழகாகும், என்ப - என்று சொல்லுவர், (நூலோர்), (எ-று).

பிணியின்மை - நிலநலத்தால் வருவது. செல்வம் - முன் சொல்லியன. இன்பம் - விழவும் வேள்வியும் சான்றேரு முடைமையாலும், அனுபவிப்பனவுடைமையாலும், நில நீர்களது நன்மையாலும், வாழ்வார்க்கு உள்ளத்தில் நிகழ்வது. காவலெனவே அரசன் காவலும், வாழ்வோர் காவலும், அரண் காவலும் அடங்கின. பிறதேயங்களி-லுள்ளாரும் விரும்பிப் பின்னே அவற்றை நினையாமைக்குக் காரண மாகிய அதனழகு இதனுல் சொல்லப்பட்டது.

(க-து.) நாட்டிற் கழகாவது நோயில்லாமையும் செல்வமும் விளைவும் இன்பமும் காவலுமாம் என்பது.

8. Freedom from epidemic diseases, wealth, agricultural produce, happiness, and protection of subjects these five, the learned say are the ornaments of a kingdom.

---

கூ. **நாடென்ப நாடா வளத்தன நாடல்ல**
**நாட வளந்தரு நாடு.**

---

* விழவு - திருவிழா. "அவை மதுரை ஆவணியவிட்டமே, உறையூர்ப் பங்குனி யுத்திரமே, கருவூர் உள்ளி விழாவே யென இவை போல்வனவாம்." (இஃது இறையனாரகப்பொருள் - நக்கீரருரை).

† வேள்வி - பிரமயாகம், தேவயாகம், மானுடயாகம் முதலியன.

‡ உண்ணிகழ்வது - மனத்திலுண்டாவது.

$ மற்றத்தேசங்களிலுள்ளவரும் எல்லா வளப்பங்களுமுடைமை பற்றி விரும்பிப் பின்பு அத்தேசங்களை நினையாமைக்குக் காரண மாகிய அந்நாட்டினது பிணியின்மை முதலியவழகு இக்குறளால் சொல்லப்பட்டது. நோயில்லாமை, செல்வம், விளைவு, இன்பம், காவலென்னு மிவ்வைந்தினையு முடையநாடு பிறரா லெஞ்ஞான்றும் விரும்பப்படு மென்பது இதனுல் பெறப்பட்ட தென்க.

பரி:—(இ-ள்.) தங்கண்வாழ்வார் தேடி வருந்தாமல் *அவர்பாற் ருனேயடையுஞ் செல்வத்தை யுடையவற்றை நூலோர் நாடென்று சொல்லுவர், ஆதலாற் றேடிவருந்தச் செல்வமடைவிக்கும் நாடுகள் நாடாகா, (எ-று).

†நாடுதல் இருவழியும் வருத்தத்தின்மே னின்றது. ‡"பொருள் செய்வார்க்கு மஃதிடம்" என்றார் பிறரும். நூலோர் விதிபற்றி எதிர்மறை முகத்தாற் குற்றங் கூறியவாறு. இவ்வாறன்றி என்ப வென்பதனைப் பின்னுங் கூட்டி ¶இருபொருள்பட வுரைப்பின், $அனுவாதமாம்.

தெளி:—(இ-ள்.) நாடா-(தம்மிடத்து வாழ்வார்) தேடிவருந்தாமல், வளத்தன-(அவரிடத்துத் தானேயடையும்) செல்வத்தை யுடையவற்றை, நாடென்ப-(நூலோர்) நாடென்று சொல்லுவர், (ஆதலால்), நாட-தேடிவருந்த, வளந்தரும்-செல்வத்தை யடைவிக்கும், நாடு-நாடுகள், நாடல்ல-நாடுகளாகா, (எ-று).

நாடுதல் இரண்டிடத்தும் வருத்தத்தின்மே னின்றது. நூலோர் விதிபற்றி (நாடவளந்தரு நாடு நாடல்ல என) எதிர்மறை வாயிலாகக் குற்றங் கூறியவாறும். இங்ஙனமல்லாமல் என்ப என்பதனை நாடல்ல என்பதனோடுங்கூட்டி இருபொருள் தோன்றக் கூறின், அனுவாதமாம்.

(க-து.) குடிகள் தேடிவருந்தாமல் அவர்களுக்குச் சகல வளங்களையுங் கொடுக்கவல்லதே நாடாகும்; ஏனையநாடுகள் நாடாகா என்பது.

9. The learned say that those are kingdoms, whose wealth is not acquired through hard labour; and those not, whose wealth is only obtained through hard labour.

---

* அவர்பால்-தங்கண்வாழ்வாரிடத்து.

† நாடா, நாட என்னுமிரண்டிடத்துமுள்ள நாடுதற்றொழில் வருத்தமென்னும் பொருள்மேல் நின்றது. நாடா என்பதற்குத் தேடிவருந்தாமலென்றும் நாட என்பதற்குத் தேடிவருந்த என்றும் பொருள் கூறப்பட்டிருக்கின்றமை காண்க.

‡ சீவக சிந்தாமணி நாமகளிலம்பகம்-48. இதன்பொருள் (நிலையாத) பொருளைத் தேடுபவர்க்கும் அவ்வேமாங்கத நாடு இடமாம் என்பது.

¶ இருபொருள்பட வுரைத்தலாவது நாடா வளத்தன நாடென்ப; நாட வளந்தரு நாடு நாடல்ல என்ப என இரண்டுபொருள் தோன்றக் கூறுதல்.

$ நாடா வளத்தன நாடு என்று கூறிய நூலோர் அந்நாட்டினையே மீண்டுமொரு நிமித்தம் பற்றி நாட வளந்தரு நாடு நாடல்ல என்று கூறினமையின், அஃது அனுவாதமாயிற்று. இங்கு நிமித்தம் நாட வளந்தருதல். அனுவாதமாவது முன்னர்க் கூறியதொன்றினைப் பின்னரு மொருநிமித்தம் பற்றிக் கூறுதல்.

**௧௦. ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே**
**வேந்தமை வில்லாத நாடு.**

பரி:—(இ-ள்.) வேந்தனொடு மேவுதலில்லாத நாடு *மேற்சொல்லிய குணங்க ளெல்லாவற்றானும் நிறைந்திருந்ததாயினும் †அவற்றாற் பயனுடைத்தன்று, (எ-று).

*'வேந்தமைவு' எனவே குடிகள் அவன்மாட்டன்புடைய ராதலும், அவன்றான் இவர்மாட் டருளுடையனாதலும் அடங்கின. ‡அவையில்வழி வாழ்வோரின்மையின், ¶அவற்றாற் பயனின்றா யிற்று. இவை யிரண்டுபாட்டானும் $அதன் குற்றங் கூறப்பட்டது.*

தெளி:—(இ-ள்.) *வேந்து - அரசனோடு, அமைவில்லாத - பொருந் துதலில்லாத, நாடு - நாடானது, ஆங்கு - மேற்சொல்லிய குணங்க ளெல்லாவற்றாலும், அமைவெய்தியக் கண்ணும் - நிறைந்திருந்த தாயினும், பயமின்று - (அவற்றால்) பயனுடையதன்று,* (எ-று).

*'வேந்தமைவு' எனவே, குடிகள் அவனிடத்து அன்புடைய ராதலும், அவன்றான் இக்குடிகளிடத்து அருளுடையனாதலும் அடங்கின அவையில்லா விடத்து நாட்டில் வாழ்வோரில்லாமையால், அவற்றால் அந்நாடு பயனுடையதன்றாயிற்று. இவை இரண்டு பாட்டாலும் அதனது குற்றம் சொல்லப்பட்டது.*

(க-து.) *அரசனோடு பொருந்துத லில்லாத நாடு வளங்களெல்லா வற்றாலும் நிறைந்திருந்ததாயினும். அவற்றாற் பயனுடையதன்றாம் என்பது.*

10. Although all the above mentioned excellences are in possession, they are indeed of no use to a country in the absence of harmony between the sovereign and the subjects.

அங்கவியலில் நாடு முற்றிற்று.

---

* *மேற்சொல்லிய குணங்கள் - இவ்வதிகாரத்தின்கண் 'தள்ளா விளையுளும்' என்பது முதல் 'நாடென்ப நாடா வளத்தன' என்பது வரை கூறியுள்ள நாட்டின் குணங்கள்.*

† *அவற்றால் - மேற்சொல்லிய குணங்களால்.*

‡ *அவையில்வழி - குடிகள் அரசனிடத்து அன்புடையராதலும் அரசன் குடிகளிடத்து அருளுடையனாதலும் இல்லாதவிடத்து.*

¶ *அவற்றால் - மேற்சொல்லிய குணங்களால்.*

$ *அதன் குற்றம் - நாட்டினது குற்றம்.*

# பன்னிரண்டாவது அதிகாரம்

## அரண்—The Fort

பரி.—இனி †அந்நாட்டிற் குறுப்பா யடங்குமாயினும் பகைவராற் *றொலைவுவந்துழி, ∫அதுதனக்கும் அரசன்றனக்கும் ஏமமாதற் சிறப்புப் பற்றிப் பிறிதோரங்கமாக வோதப்பட்ட அரண் இவ்வதிகாரத்தாற் கூறுகின்றார். அஃதாவது இன்னதென்பதூஉம், அதிகாரமுறைமையும் இதனுள் விளங்கும்.

தெளி:—இனி அந்நாட்டிற்கு உறுப்பாய் அடங்கு மாயினும் பகைவரால் தொலைவு வந்தவிடத்து, அதற்கும் அரசனுக்கும் காப்பாதற் சிறப்புப்பற்றி வேறோரங்கமாகச் சொல்லப்பட்ட அரணை இவ்வதிகாரத்தால் சொல்லுகின்றார். அஃதாவது இத்தன்மைய தென்பதும், அதிகார முறைமையும் இதனுள் விளங்கும்.

---

க. ஆற்று பவர்க்கு மரண்பொரு ளஞ்சித்தற்
போற்று பவர்க்கும் பொருள்.

பரி:—(இ-ள்.) ‡மூவகையாற்றலு முடையராய்ப் ¶பிறர்மேல் செல்வார்க்கும் அரண்சிறந்தது. $அவையின்றித் தம்மேல் §வருவார்க் கஞ்சித் தன்னையே யடைவார்க்கும் அரண்சிறந்தது, (எ-று).

பிறர்மேல் செல்லுங்கால் ||உரிமை பொருண் முதலியவற்றைப் பிறனொருவன் =வௌவாமல் வைத்துச் செல்லவேண்டுமாகலானும், ○அப்பெருமை தொலைந் திறுதிவந்துழிக் கடனடுவ ணுடைகலத்தார் போன்று ஏமங்காணு திறுவராகலானும், ()ஆற்றுபவர்க்கும் []போற்றுபவர்க்கும் அரண்பொருளாயிற்று. ஆற்றலுடைய

---

† 'வல்லரணு நாட்டிற் குறுப்பு' என நாடதிகாரத்திற் கூறி யிருப்பதுணர்க.

* தொலைவு – அழிவு. ∫ அது தனக்கும் – நாட்டிற்கும்.

‡ அறிவு, ஆண்மை, பெருமை என்பன மூவகையாற்றல்களாம். இவற்றுள், பெருமை பொருள், படை (சேனை) என இருவகைத்தாம்.

¶ பிறர்மேற் செல்வார்க்கும் – பகைவர்மீது போர்க்குச் செல் பவர்க்கும்.

$ அவையின்றி – மூவகை யாற்றலு மில்லாமல்.

§ வருவார்க்கஞ்சி – போர்க்குவரும் பகைவர்க்குப் பயந்து.

|| உரிமை யென்றது – உரிமையு (சுதந்தரமு)டைய மகளிரை.

= வௌவாமல் – அபகரித்துக் கொள்ளாமல்.

○ அப்பெருமை தொலைந்து – பொருள்படை யென்பன அழிந்து.

() ஆற்றுபவர் – மூவகையாற்றலு முடையராய்ப் பகைவர்மேற் செல்பவர்.

[] போற்றுபவர் – மூவகை யாற்றலுமில்லாது தம்மீது போர்க்கு வரும் பகைவர்க்குப் பயந்து வந்து அடைபவர்.

ராயினும் அரணில்வழி அழியும் பாலராகலின், *அவரை முற்கூறினர். இதனல் அரணினது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) அரண் - அரணனது, ஆற்றுபவர்க்கும் - (மூவகையாற்றலு முடையவராய்ப்) பிறர்மீதுபோர்க்குச் செல்வார்க்கும், பொருள் - சிறந்ததாகும், அஞ்சி - (அவையில்லாமல் தம்மீது போர்க்கு வருவார்க்குப்) பயந்து, தற்போற்றுபவர்க்கும் - தன்னையே யடைவார்க்கும், பொருள் - (அரண்) சிறந்ததாகும், (எ-று).

பிறர்மீது போர்க்குச் செல்லும்போது உரிமை பொருள் முதலியவற்றைப் பிறனெருவன் வௌவாமல் வைத்துச் செல்லவேண்டுமாகலாலும், அப்பெருமை தொலைந்து முடிவுவந்தவிடத்துக் கடலினடுவே யுடைந்த கப்பற்காரர்போன்று காப்புக்காணது முடிவராகலாலும், ஆற்றுபவர் போற்றுபவர் என்னுமிவ்விரு வகையார்க்கும் அரண்பொருளாயிற்று. அரசர் ஆற்றலுடையவராயினும் அரணில்லாதவிடத்து அழியுந்தன்மையராகலால், அவரை முன்னே சொல்லினர். இதனல் அரணினது சிறப்புச் சொல்லப்பட்டது.

(கு-து.) பகைவர்மீது போர்க்குச் செல்வார்க்கும் பகைவர்க்கஞ்சித் தன்னையே யடைவார்க்கும் அரண் சிறந்த பொருளாம்.

I. A fort is an object of importance to those who march against their enemies, as well as to those who through fear of invaders would seek it for shelter.

---

உ. **மணிநீரு மண்ணு மலையு மணிநிழற்**
**காடு முடைய தரண்.**

பரி:—(இ-ள்.) †மணிபோலு நிறத்தினையுடைய நீரும் வெள்ளிடை நிலமும் மலையுங் குளிர்ந்த நிழலையுடைய காடுமுடையதே அரணவது.

எஞ்ஞான்றும் வற்றுத நீரென்பார் 'மணிநீர்' என்றும், நீரு நிழலுமில்லா ‡மருநிலமென்பார் 'மண்' என்றும், செறிந்த காடென்பார் 'அணிநிழற்காடு' என்றுங் கூறினர். மதிற்புறத்து மருநிலம் பகைவர் ¶அரண்பற்றுமைப் பொருட்டு. நீரரண், நிலவரண், மலையரண், காட்டரணென §இயற்கையுஞ் ⊕செயற்கையுமாய

---

* அவரை - ஆற்றுபவரை. † மணி - நீலமணி.

‡ மருநிலம் - பாலைநிலம்; அஃதாவது நீரின்றி மணல் பரந்தவிடம்.

¶ அரண்பற்றுமைப்பொருட்டு - கோட்டையைக் கைப்பற்றுமை நிமித்தம்.

§ இயற்கையரண் - நீரும், நிலமும், மலையும், காடும் படைப்பிலேயே ஒன்றற்கு அரணுக (காவலாக) அமைந்திருப்பதாம்.

⊕ செயற்கையரண் - அகழியும், வெளிநிலமும், செய்குன்றும், காடு வளர்த்தலுமாகிய விவற்றை அவ்வத்தேசத்தரசர் ஒன்றற்கு அரணுகச் செய்துகொள்ளுவதாம்.

இந்நான்கரணுஞ் சூழப்படுவது அரணென்பதாம்.

தெளி :—(இ-ள்.) அரண் - அரணுவது, மணிநீரும் - மணிபோலும் நிறத்தினையுடைய நீரும், மண்ணும் - வெளிநிலமும், மலையும்-, அணி நிழற்காடும் - குளிர்ந்தநிழலையுடைய காடும், உடையது - உடையதே, (எ—று).

எந்நாளும் வற்றாத நீரென்பார் 'மணிநீர்' என்றும், நீரும் நிழலு மில்லாத மருநிலமென்பார் 'மண்' என்றும், நெருங்கிய காடென்பார் 'அணிநிழற்காடு' என்றும் சொல்லினர். மதிற்புறத்து மருநிலம் பகைவர் அரண் பற்றாமைப் பொருட்டு. நீரரண், நிலவரண், மலையரண், காட்டரண் என்று இயற்கையும் செயற்கையுமான இந்நான்கரணும் சூழப்படுவது அரணென்பதாம்.

(க-து.) நீர், வெளிநிலம், மலை, காடு என்னும் இவற்றையுடை-யதே அரணும் என்பது.

2. A fort is that which has undrying water, plains, mountains and cool shade forests.

---

ங. **உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கி**
**னமைவர ணென்றுரைக்கு நூல்.**

**பரி: –(இ-ள்.) உயர்ச்சியும் அகலமும் திண்மையும் அருமையுமென்று சொல்லப்பட்ட இந்நான்கின் மிகுதியையுடைய மதிலை அரணென்று சொல்லுவர் நூலோர், (எ—று).**

†அமைவு ‡நூல் என்பன ஆகுபெயர். உயர்வு-ஏணியெய்தாதது. அகலம்-புறத்தோர்க்கு அகழலாகாஅடியகலமும், அகத்தோர்க்குநின்று ¶வினை செய்யலாந் $தலையகலமும். திண்மை - கல்லிட்டிகைகளாற் செய்தலிற் குத்தப்படாமை. அருமை - பொறிகளான் அணுகற்கருமை, பொறிகளாவன. §''வளைவிற் பொறியு மயிற்செறி நிலையுங், கருவிர

---

† அமைவு என்னும் பண்புப்பெயர் அதனையுடைய மதிலை-யுணர்த்துதலால் பண்பாகு பெயராம்.

‡ நூல் என்னும் காரியப்பெயர் அதனைச் செய்தவரை யுணர்த்து-தலால் காரியவாகு பெயராம்.

¶ வினைசெய்யல்-போர்புரிதல். $ தலை - மதிலின் மேற்புறம்.

§ சிலப்பதிகாரம் அடைக்கலக்காதை உ0எ-வது வரிமுதல் உகக-வது வரிவரை. (இதன்பொருள்) வளைவிற்பொறியும்-வளைந்து தானே

லூரகமுங் கல்லுமிழ் கவணும், பரிவுறு வெந்நெயும் பாகடு குழிசியுங், காய்பொன் னுலையுங் கல்லிடு கூடையும், தூண்டிலுந் தொடக்கு மாண்டலை யடுப்புங், கவையுங் கழுவும் புதையும் புழையு, மையவித் துலாமுங் கைபெய ரூசியுஞ், சென்றெறி சிரலும் பன்றியும் பணையு, மெழுவுஞ் சீப்பு முழுவிறற் கணையமுங், கோலுங் குந்தமும் வேலுஞ் சூலமும்'' என்றிவை முதலாயின.

தெளி.—(இ-ள்.) உயர்வு-உயர்ச்சியும், அகலம்-அகலமும், திண்மை-வலிமையும், அருமை-அருமையும், (என்று சொல்லப்பட்ட), இந்நான்கின்-இந்நான்கினது, அமைவு-மிகுதியை யுடைய மதிலே, அரணென்று—, நூல்-நூலோர், உரைக்கும்-சொல்வர், (எ-று).

அமைவு நூல் என்பன ஆகுபெயர்கள். உயர்வு-ஏணிக்கெட்டாதது. அகலம்-புறத்தோர்க்குத் தோண்டுதல் முடியாத அடியகலமும், அகத்தோர்க்கு நின்று தொழில் செய்தற்காந் தலையகலமும். திண்மை-கருங்கல் செங்கல்களால் செய்தலால் குத்தப்படாமை. அருமை-பொறிகளால் சேர்தற்கருமை. பொறிகள்-எந்திரப்பாவை முதலியன. புறம்-வெளி, அகம் உள்.

---

யெய்யும் எந்திரவில்லும், கருவிர லூரகமும்—கரிய விரலையுடைய குரங்கு போலிருந்து சேர்ந்தாரைக் கடிக்கும் பொறியும், கல்லுமிழ் கவணும்-கல்லை யுமிழுங் கவணும், பரிவுறு வெந்நெயும்-காய்ந்திறைத்தலால் சேர்ந்தாரை வருந்துவதாயநெய்யும், பாகடு குழிசியும்-செம்புருக்கும், அன்றி அங்ஙனமிறைத்தற்குப் பாகுகாயுங் குழிசிகளுமாம். காய் பொன்னுலையும்-உருகக்காய்ச்சி யெறிதற்கு எஃகுபட்டிருக்கும் உலைகளும், கல்லிடு கூடையும்-இடங்கணிப் பொறிக்குக் கல்லிட்டுவைக்குங் கூடையும், தூண்டிலும்-தூண்டில் வடிவாகப்பண்ணிப் போகட்டு வைத்துக் கிடங்குநீங்கி மதில் பற்றுவாரைக் கோத்து வலிக்கும் கருவியும், தொடக்கும்-கழிகோல் போலக் கழுத்திற்பூட்டி முறுக்குஞ் சங்கிலியும், கயிற்றுத்தொடக்குமாம். ஆண்டலையடுப்பும் - ஆண்டலைப்புள் (கோழி) வடிவாகப் பண்ணிப் பறக்க விட உச்சியைக் கொத்தி மூளையைக் கடிக்கும் பொறிநிரைகளும், கவையும்-கிடங்கிலேறின் மறியத்தள்ளும் இருப்புக்கவையும், கழுவும்- கழுக்கோலும், கழுகும் பாடம். புதையும் – அம்புக்கட்டும், ''அம்புப் புதையு மணிவரிச் சிலையும்'' என்றார் உதயணன்) கதையினும். புழையும்-ஏவறைகளும், ஐயவித்துலாமும் - பற்றுக்கை தூக்கிப் போகட்ட விட்டமும், அன்றிக்கதவை யணுகாதபடி கற்கவிதொடங்கி நாற்றும் துலாமுமாம். சாணம்புக் கூடென்பாரும், சிற்றம்புகள் வைத் தெய்யும் இயந்திர மென்பாரு முளர். கைபெயரூசியும் – மதிற்றலையைப் பற்றுவாரைக் கையைப்பொதிர்க்கும் ஊசிப்பொறிகளும், இனிக்கதவொடு சேராதபடி வைத்த நிரைக்கழு வெனினுமமையும். சென்றெறிசிரலும் - மாற்றார்மேற் சென்று கண்ணைக்கொத்தும் சிச்சிலிப் பொறியும், பன்றியும் – மதிற்றலையினேறினுருடலைக் கோட்டாற் கிழிக்க இரும்பாற் செய்துவைத்த பன்றிப்பொறியும், பணையும்-வேய்வடிவாகப் பண்ணி அடித்தற்கமைத்த பொறியும், எழுவுஞ் சீப்பும் கதவுக்கு வலியாக உள்வாயிற்படியிலே நிலத்திலே வீழ விடு மரங்களும், திறக்குங்காலத்து மேலே யெழுப்புகையால் எழுவுஞ் சீப்பு மென்றார்; ''சீப்புப் படியுறின்'' என்றார் (உதயணன்) கதையினும். இனிச்சீப்பு அகப்படக் குறுக்கே போடக்கடவமரமு

(க-து.) உயர்வு, அகலம், திண்மை, அருமை யென்னும் இந் நான்கினையும் மிகுதியாக வுடையமதிலே அரணும் என்பது.

3. The learned say that a fortress is an enclosure having the four qualities, height, breadth, strength and inaccessibility.

---

ச. **சிறுகாப்பிற் பேரிடத்த தாகி யுறுபகை
யூக்க மழிப்ப தரண்.**

**பரி.—(இ-ள்.) காக்கவேண்டுமிடஞ் சிறிதாய் அகன்ற விடத்தை யுடைத்தாய்த் தன்னைவந்து முற்றிய பகைவரது மனவெழுச்சியைக் கெடுப்பதே அரணுவது, (எ-று).**

*வாயிலும் †வழியும் ஒழிந்த விடங்கள் மலை, காடு, நீர்நிலை யென்றிவற்றுள் ஏற்பன வுடைத்தாதல் பற்றிச் 'சிறுகாப்பின்' என்றும், அகத்தோர் நலிவின்றி யிருத்தல்பற்றிப் 'பேரிடத்ததாகி' என்றும், தம்வலி நோக்கி இதுபொழுதே யழித்துமென்று வரும் பகைவர் வந்து கண்டால் அவ்வூக்கமொழிதல் பற்றி 'ஊக்கமழிப்பது' என்றுங் கூறினர்.

தெளி.—(இ-ள்.) அரண்-அரணுவது, சிறுகாப்பின்-காக்கவேண்டு மிடஞ் சிறிதாய், பேரிடத்ததாகி - பரந்தவிடத்தை யுடையதாய், உறுபகை - தன்னைவந்து, சூழ்ந்த பகைவரது, ஊக்கம்-மன வெழுச்சியை, அழிப்பது - கெடுப்பதே, (எ-று).

வாயிலும் வழியும் ஒழிந்த இடங்கள் மலை, காடு, நீர்நிலை என்ற இவற்றுள் தகுதியானவற்றை யுடையதாயிருத்தல் பற்றிச் 'சிறு

---

மாம். முழுவிறற் கணையமும் - கணையமரமும், கோலும்-விட்டேறும், குந்தமும்—சிறுசவளமும், வேலும் வல்லையமும், ஈட்டி முதலியனவு மாம். பிறவும்-சதக்கினி தள்ளிவெட்டி, களிற்றுப்பொறி, விழுங்கும் பாம்பு, கழுகுப்பொறி, புலிப்பொறி, குடப்பாம்பு, சகடப்பொறி, தகர்ப்பொறி, அரிநூற்பொறி என்பனவும் என்பது. [இஃது அடியார்க்கு நல்லார் உரை]. வளைவிற் பொறியு மயிற்செறி நிலையும் என்பதற்குப் பிரதியாக இளையுங் கிடங்கும் வளைவிற் பொறியும் என்றும், கோலுங் குந்தமும் வேலுஞ் சூலமும் என்ப-தற்குப் பிரதியாகக் கோலுங் குந்தமும் வேலும் பிறவும் என்றும் பாடமுண்டு.

மயிற்செறி நிலையும் என்பதற்குப் பகைவரைப் பறந்து சென்று கடித்துக் கொல்லும்பொருட்டு மயில்போலச் செய்துள்ள பொறி களமைந்த விடமும் என்று பொருள் கொள்க.

* வாயிலும் என்றது-கோட்டைமதிலின்கண் கதவினை யுடைய நான்கு வாயில்களையும்

† வழி-கோட்டைக்குள்ளே செல்லும்வழி.

காப்பின்' என்றும், அகத்தோர் வருத்தமில்லா திருத்தல் பற்றிப் 'பேரிடத்ததாகி' என்றும், தமது வலிமையை நோக்கி இப்பொழுதே இதனை அழித்து விடுவோமென்றெண்ணி வரும் பகைவர் வந்து பார்த்தால் அம்மனவெழுச்சி யொழிதல்பற்றி 'ஊக்கமழிப்பது' என்றும் சொல்லினர்.

(கூ-து.) காக்கவேண்டுமிடஞ் சிறியதாய்ப் பரந்தவிடத்தை யுடையதாய்த் தன்னை வந்து சூழ்ந்த பகைவரது ஊக்கத்தை யொழிப்பதாயுள்ளதே அரணும் என்பது.

4. A fort is that which has an extensive space within, but only small spaces to be guarded and can destroy the courage of besieging foes.

---

**ரு. கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி யகத்தார்
நிலைக்கெளிதா நீர தரண்.**

பரி:—(இ-ள்.) *புறத்தாராற் கோடற்கரிதாய் உட்கொண்ட பலவகை யுணவிற்றாய் அகத்தாரது †போர்நிலைக்கெளிதாய நீர்மையை யுடையதே அரணுவது, (எ-று).

கோடற்கருமை - ‡இளை ¶கிடங்குகளானும் §பொறிகளானும் இடங்கொள்ளுதற் கருமை. உணவு தலைமைபற்றிக் கூறினமையின், மற்றுள்ள நுகரப்படுவனவு மடங்கின. நிலைக்கெளிதா நீர்மையாவது அகத்தார் விட்ட ஆயுத முதலிய புறத்தார்மே லெளிதிற் சேறலும், அவர் விட்டன அகத்தார் மேற் செல்லாமையும், பதணப்பரப்பும் +முதலாயின.

தெளி:—(இ-ள்.) அரண் - அரணுவது. கொளற்கரிதாய் - (புறத்தாரால், கொள்ளுதற்கரியதாய், கொண்ட - உட்கொண்ட, கூழ்த்தாகி - (பலவகை) உணவை யுடையதாய், அகத்தார் - அகத்தாரது, நிலைக்கு - (போர்) நிலைக்கு, எளிதாம் - எளிதாய, நீரது - குணத்தையுடையதே, (எ-று).

கொள்ளுதற்கருமை - காவற்காடு கிடங்குகளாலும் பொறிகளாலும் இடங்கொள்ளுதற்கருமை. 'கூழ்த்தாகி' என உணவைத் தலைமைபற்றிச் சொன்னமையால், மற்றுள்ள அனுபவிக்கப்படுவனவும் அடங்கின. நிலைக்கெளிதா நீர்மையாவது அகத்தார் விட்ட ஆயுதமுதலாயின புறத்தார்மேல் எளிதிற் செல்லுதலும், அவர் விட்ட

---

* புறத்தாரால் - மதிலுக்கு வெளியிலுள்ள பகைவரால்.

† போர் நிலைக்கு - நிலைத்துப் பகைவரோடு போர் புரிவதற்கு.

‡ இளை - பிரதானமான காவல்.

¶ கிடங்கு - மதிற்புறத்துள்ள அகழி.

§ பொறிகள் - மதிலின்கணுள்ள வேல், வாள், வில், மழு, தண்டு, தடி, சக்கர முதலியனவாம்

+ முதலாயின என்றமையின், மதிலைக் குத்த முடியாமை, அம்மதில் தோண்டுதல் முடியாத அடியகல முடைமை முதலிய வற்றையுங் கொள்க.

ஆயுத முதலாயின அகத்தார்மேல் செல்லாமையும், பதணப்பரப்பும் முதலாயின. பதணம் – மதிலுண்மேடை.

(க–து.) பகைவர் பற்றிக்கொள்ளுதற்கரியதாய்ப் பலவகை யுணவுகளை யுட்கொண்டுள்ளதாய்த் தன்னுளிருப்பவர் போர் செய்வதற் கெளிதாயிருப்பது அரணும் என்பது.

5. A fort is that which cannot be captured, which abounds in various kinds of provisions and affords a position of easy defence to its inmates.

———

**சு. எல்லாப் பொருளு முடைத்தா யிடத்துதவு
நல்லா ளுடைய தரண்.**

பரி:—(இ-ள்.) அகத்தோர்க்கு வேண்டும் பொருள்க ளெல்லா வற்றையும் உள்ளேயுடைத்தாய்ப் புறத்தோரால் அழிவெய்து மெல்லைக் கண் *அஃதெய்தாவகை யுதவிக் காக்கும் நல்ல வீரரையுமுடையதே அரணாவது, (எ–று).

அரசன்மாட் டன்பும் மானமும் †மறமும் ‡சோர்வின்மையும் ¶முதலிய நற்குணங்க ளுடைமைபற்றி ‘ நல்லாள் ’ என்றார்.

தெளி:—(இ-ள்.) அரண் - அரணாவது, எல்லாப் பொருளும் – (அகத்தோர்க்குவேண்டும்) பொருள்களெல்லாவற்றையும், உடைத்தாய் - (உள்ளே) உடையதாய், இடத்து (புறத்தோரால்) அழிவடையுமளவில், உதவும் - (அது வராதபடி) உதவிக்காக்கவல்ல, நல்லாள் - நல்ல வீரரையும், உடையது - உடையதே, (எ–று).

அரசனிடத்து அன்பும் மானமும் மறமும் சோர்வில்லாமையும் முதலிய நற்குணங்களுடைமைபற்றி ‘ நல்லாள் ’ என்றார்.

(க-து.) தன்னுளிருப்போர்க்கு வேண்டும் பொருள்களெல்லா வற்றையு முடையதாய்ப் பகைவராலழிவு வராதபடி காக்கும் நல்ல வீரரையுமுடையதாயிருப்பது அரணும் என்பது.

6. A fort is that which has all requisite things and warlike heroes who can help it against destruction by enemies.

———

* அஃதெய்தாவகை - அழிவு அடையாதபடி.

† மறம் - வீரம். ‡ சோர்வின்மை - தளர்ச்சியில்லாமை.

¶ முதலிய என்றமையின், நல்லா ரிணக்கமுடைமை, தெய்வ சிந்தையுடைமை, கல்வி கேள்வி யறிவொழுக்கமுடைமை முதலிய வற்றையுங் கொள்க.

எ. **முற்றியு முற்று மெறிந்து மறைப்படுத்தும்**
**பற்றற் கரிய தரண்.**

பரி:—(இ-ள்.) †புகலொடு போக்கொழியும்வகை நெருங்கிச் சூழ்ந்தும் அங்ஙனஞ் சூழாது *நெகிழ்ந்தவிடனோக்கி ஒருமுகமாகப் பொருதும் அகத்தோரை ‡அவர் தெளிந்தோரைவிட்டுக் ¶கீழறுத்துத் திறப்பித்தும் புறத்தோராற் கொள்ளுதற்கரியதே அரணாவது, (எ-று).

$இம்மூன்றுபாயத்துள்ளும் முதலது எல்லாப் பொருளுமுடைமையானும், ஏனைய நல்லாளுடைமையானும் வாயாவாயின.

தெளி: —(இ-ள்) அரண் - அரணாவது முற்றியும் - (புகுதலோடு போக்கு ஒழியும்வகை) நெருங்கிச் சூழ்ந்தும், முற்றாது - அவ்வாறு சூழாமல், எறிந்தும்-(நெகிழ்ந்தவிடநோக்கி ஒருமுகமாகப்) போர் செய்தும், அறைப்படுத்தும் - (அகத்தோரை அவர் தெளிந்தவரை விட்டுக் கீழறுத்துத் திறப்பித்தும், பற்றற்கரியது - (புறத்தோரால் பிடித்துக்) கொள்ளுதற்கரியதே, (எ-று).

இம்மூன்று உபாயத்துள்ளும் முதலாவது எல்லாப்பொருளு முடைமையாலும், மற்றையவை நல்லாளுடைமையாலும் பலிப்பனவல்ல வாயின.

(கூ-து.) எவ்வகை யுபாயத்தாலும் பகைவர் பற்றுவதற் கரிதா யுள்ளதே அரணும் என்பது.

7. A fort is that which cannot be captured by blockading, assaulting or under-mining it.

———

அ· **முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப்**
**பற்றியார் வெல்வ தரண்.**

---

† புறத்தோர் (பகைவர்) அகத்தோர் வருதலோடு போதலொழியும் வகை நெருங்கிச் சூழ்ந்தும்.

* நெகிழ்ந்த விடனோக்கி - அகத்தோர் சோர்ந்துள்ள சமயம் பார்த்து.

‡ அவர் தெளிந்தோரை - அகத்தோர் (இவருண்மையாயவரென்று) ஆராய்ந்தறிந்தவரை.

¶ கீழறுத்துத் திறப்பித்தும் - வஞ்சித்து மாறுபடுத்தியும். (வஞ்சித்தல்-அரசனிடத்து அன்பொழியுமாறு போதித்தல்)

$ புறத்தோர் (பகைவர்) செய்யும் முற்றியும், முற்றுதெறிந்தும், அறைப்படுத்தும் என்னு மூன்று உபாயத்துள்ளும் முதலாவதான முற்றியும் என்பது உள்ளே யிருப்போர்க்கு வேண்டும் பொருள்களெல்லாமுடைமையாலும், மற்றைய முற்றுதெறிந்தும் அறைப்படுத்தும் என்பன நல்ல வீரரை யுடைமையாலும் பலிக்காதொழிந்தன என்பது.

பரி:—(இ-ள்.) தானைப்பெருமையாற் சூழ்தல்வல்லராய் வந்து சூழ்ந்த புறத்தோரையும் தன்னைப்பற்றிய வகத்தோர் தாம் பற்றியவிடம் விடாதே நின்று பொருது வெல்வதே அரணாவது, (எ-று.)

உம்மை-சிறப்பும்மை. †பற்றின்கண்ணே யாற்றி யென விரியும். பற்று ஆகுபெயர். ‡வெல்வதென உடையார்தொழில் அரண்மே னின்றது. பெரும்படையானைச் சிறுபடையான் ¶பொறுத்து நிற்குந் துணையயன்றி வெல்லுமியல்பினதென்பதாம். *இதற்குப் பிறிதுரைப் பாருமுளர். இவை யேழுபாட்டானும் £அதன திலக்கணங் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) அரண்-அரணாவது, முற்றுற்றி – (சேனைப் பெருமையால்) சூழ்தல் வல்லவராய், முற்றியவரையும் – (வந்து) சூழ்ந்த புறத்தோரையும், பற்றியார்-(தன்னைப்) பற்றிய அகத்தோர் பற்றுற்றி - (தாம்) பற்றிய விடத்தைவிடாதே நின்று, வெல்வது—' (போர்செய்து) வெல்வதே, (எ—று).

முற்றியவரையும் என்னும் உம்மை-உயர்வு சிறப்பும்மை. பற்றுற்றியென்பது பற்றின்கண்ணே யாற்றி யென விரியும். பற்று என்னும் முதனிலைத் தொழிற்பெயர் பற்றிய இடத்தையுணர்த்துத லால் முதனிலைத்தொழிலாகுபெயராம். வெல்வதென அரணுடையார் தொழில் அரண்மேல் நின்றது அரண் பெரும்படையானைச் சிறுபடை யான் பொறுத்து நிற்கும் துணையயன்றி வெல்லுமியல்பினதென்ப தாம். இவை ஏழுபாட்டாலும் அதனது இலக்கணம் சொல்லப் பட்டது. புறத்தோர் – பகைவர்.

(க-து.) சேனைப்பெருமையாற் றன்னைச் சூழ்ந்து வளைத்த பகை வரையுந் தன்னிடத்துள்ள வீரரால் வெல்லச்செய்வதே அரணும் என்பது.

8. That is a fort whose inmates are able to overcome without losing their ground, even abler men who have besieged it.

---

கூ. முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து
வீறெய்தி மாண்ட தரண்.

---

† பற்றின்கண்ணே யாற்றி – பற்றியவிடத்திலே விடாது நின்று.

‡ அரணிலிருந்து பகைவரை வெல்லும் வீரரது வெல்லுதற் றொழிலை அரணின்மீதேற்றி வெல்வது அரண் என்று கூறினமையின். இஃது இடத்துநிகழ் பொருளின்தொழில் இடத்தின்மேலாய உபசார வழக்காம்.

¶ பொறுத்து நிற்குந் துணையயன்றி – தரித்து (சமாளித்து) நிற்கும் அளவேயல்லாமல்.

* இக்குறளுக்கு வேறு பொருள் கூறுவாரு முண்டு.

£ அதனதிலக்கணம் – அரணது இயல்பு.

**பரி.—(இ-ள்.) போர் தொடங்கின வளவிலே பகைவர் கெடும் வண்ணம் அகத்தோர் செய்யும் வினைவேறுபாடுகளான் *வீறுபெற்று மற்றும் வேண்டுமாட்சியை யுடையதே அரணாவது, (எ–று).**

†தொடக்கத்திற் கெட்டார் பின்னுங் கூடிப் பொருதல் கூடாமையின், முனைமுகத்துச் சாய என்றார். வினைவேறுபாடுகளாவன: பகைவர் தொடங்கிய போரினையறிந்து ¶எய்தல், எறிதல், குத்துதல், வெட்டுத லென்றிவை முதலாயின வினைகளுள் அதனைச் சாய்ப்பன செய்தல். மற்றும் வேண்டு மாட்சி யென்றது புறத்தோரறியாமற் புகுதல் போதல் செய்தற்குக் கண்ட $சுருங்கை வழி ‡முதலாயின வுடைமை.

**தெளி:—(இ-ள்.)** அரண் - அரணாவது, முனைமுகத்து – போர் தொடங்கின வளவிலே, மாற்றலர் – பகைவர், சாய – கெடும்படி, வினைமுகத்து – (அகத்தோர் செய்யுந்) தொழில் வேறுபாடுகளால், வீறெய்தி – வீறுபெற்று, மாண்டது – (மற்றும் வேண்டும்) பெருமையை யுடையதே, (எ–று).

ஆரம்பத்திற் கெட்டவர் பின்னுங்கூடிப் போர்செய்தல் கூடாமையால் முனைமுகத்துச் சாய என்றார். தொழில் வேறுபாடுகளாவன; பகைவர் தொடங்கிய போரினை அறிந்து எய்தல், எறிதல், குத்துதல், வெட்டுதல் என்ற இவை முதலாகிய தொழில்களுள் அப்போரினை அழிப்பனவற்றைச் செய்தல். மற்றும் வேண்டும் பெருமை யென்றது புறத்தோர் அறியாமல் புகுதல் போதல் செய்தற்கு உண்டாக்கியுள்ள சுருங்கைவழி முதலாயின உடைமையை. சுருங்கைவழி–நுழைவாயில்.

(க–து.) பகைவர் போர்செய்யத் தொடங்கியபோதே கெடும்படி தன்னிடத்துள்ள வீரர் போர் செய்ய வல்ல பெருமையைப் பெற்றுச் சுருங்கைவழி முதலியவற்றையு முடையதே அரணும்.

9. A fort is that which derives excellence from the stratagems made by its inmates to defeat their enemies in the battlefield.

---

**௧௦. எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி**
**யில்லார்க ணில்ல தரண்.**

---

* வீறு–மற்றொன்றற் கில்லாத சிறப்பு.

† தொடக்கத்திற் கெட்டார்–போர்புரிய வந்து ஆரம்பத்திற் றோற்றவர்.

¶ எய்தல்–அம்பினையெய்தல், எறிதல்–சக்கரம் வேல் முதலியவற்றை வீசியெறிதல், குத்துதல்–ஈட்டியாற் குத்துதல், வெட்டுதல்–கத்தியால் வெட்டுதல்.

$ சுருங்கைவழி-கோட்டையினுள்ளே ஏற்படுத்தியுள்ள கள்ளவழி.

‡ முதலாயின வுடைமையை என்றும் பாடமுண்டு. முதலாயின என்றமையின், சுரங்கவழி, கீழறைவழி முதலியவற்றையுங் கொள்க.

பரி.—(இ-ள்.) அரண் மேற் சொல்லப்பட்ட மாட்சியெல்லா முடைத்தாய விடத்தும் வினைசெய்தற்கண் மாட்சியில்லாதார்மாட்டு *அவையிலதாம், (எ-று).

வாளாவிருத்தலும், அளவறியாது செய்தலும், ஏலாதது செய்தலு மெல்லாம் அடங்க 'வினைமாட்சி யில்லார்' என்றும், ஏற்ற வினையை யளவறிந்து செய்து காவாக்கால் அம்மாட்சிகளாற் பயனின்றி யழியுமென்பார் † 'இல்லதரண்' என்றுங் கூறினார். இவை யிரண்டு பாட்டானுங் காப்பாரை யின்றியமையாதென்பது கூறப்பட்டது.

தெளி.— (இ-ள்.) அரண்-அரணாவது, எனைமாட்சித்தாகியக் கண்ணும்-மேற் சொல்லப்பட்ட பெருமை யெல்லா முடையதாகிய விடத்தும், வினை-தொழில்செய்யுமிடத்து, மாட்சி-பெருமையை, இல்லார்கண்-இல்லாதவரிடத்து, இல்லது - (அவை) இலதாம், (எ-று).

சும்மாவிருத்தலும், அளவறியாது செய்தலும், ஏற்காதது செய்தலும் எல்லாம் அடங்க 'வினைமாட்சியில்லார்' என்றும், ஏற்றதொழிலை அளவறிந்து செய்து காப்பாற்றுமற்போனல் அவ்வரணது அப்பெருமைகளால் பயனில்லாமல் அழியுமென்பார் 'இல்லதரண்' என்றும் சொல்லினர். இவை இரண்டுபாட்டாலும் அரணுக்குக் காப்பவர் அவசியம் வேண்டுமென்பது சொல்லப்பட்டது.

(க-து.) தகுதியாகப் போர்செய்யும் வீரரை யில்லாதவிடத்து அரண் எவ்வளவு பெருமையை யுடையதாயிருந்தாலும், அதனாற் பயனுடையதன்றாம் என்பது.

10. Although a fort may possess all the aforesaid excellences it is as it were without these, if its inmates possess not the excellency of action.

**அங்கவியலில் அரண் முற்றிற்று**

---

## பதின்மூன்றாவது அதிகாரம்

## பொருள் செயல்வகை – The way to accumulate wealth

பரி.—இனிப்பெரும்பான்மையும் நாட்டானும் அரணானும் 1ஆக்கவுங் காக்கவும் படுவதாய பொருளைச் செய்தலின் ‡ திறம் இவ்வதிகாரத்தாற் கூறுகின்றார். அஃதாவது இன்னதென்பதூஉம் அதிகார முறைமையும் இதனுள் விளங்கும்.

தெளி.—இனிப் பெரும்பான்மையும் நாட்டாலும் அரணாலும் வளர்க்கவும் காக்கவும் படுவதாகிய பொருளைச் சம்பாதித்தலின்

---

* அவை—மேற் சொல்லப்பட்ட (அரணிற்கு இருக்கவேண்டிய) மாட்சி யெல்லாம்.

† அவையிலதாம் என்றும், அவையுடைத்தன்று என்றும் பாடமுண்டு. 1ஆக்கவும்—மேன்மேற்பெருகச்செய்யவும். ‡திறம்-வகை.

திறத்தை இவ்வதிகாரத்தாற் சொல்லுகிருர். அஃதாவது இத் தன்மையதென்பதும் அதிகார முறைமையும் இதனுள் விளங்கும்.

---

## க. †பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும் பொருளல்ல தில்லை பொருள்.

பரி :—(இ-ள்.) ஒரு பொருளாக மதிக்கப்படாதாரையும் படுவாராகச் செய்யவல்ல பொருளையொழிய ஒருவனுக்குப் பொருளாவதில்லை, (எ-று).

*மதிக்கப்படாதார் - அறிவிலாதார், இழிகுலத்தார். இழிவு சிறப் பும்மை விகாரத்தாற் ருெக்கது. மதிக்கப்படுவாராகச் செய்தல் - ‡அறிவுடையாரும் உயர் குலத்தாரும் *அவர்பாற்சென்று நிற்கப் பண்ணுதல். ¶அதனல் ஈட்டப்படுவது $அதுவே பிறிதில்லையென் பதாம்.*

தெளி :—(இ-ள்.) பொருளல்லவரை – ஒரு பொருளாக மதிக்கப் படாதவரையும், பொருளாகச் செய்யும்–மதிக்கப்படுவாராகச் செய்ய வல்ல, பொருளல்லது – பொருளையொழிய, பொருள் (ஒருவனுக்குப்) பொருளாவது, இல்லை-, (எ–று).

*மதிக்கப்படாதவர் - அறிவில்லாதவர், இழிகுலத்தார். பொரு ளல்லவரையும் என்னும் இழிவு சிறப்பும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது. (பொருளல்லவரையும்) மதிக்கப்படுவாராகச் செய்தல் – அறிவுடையவரும் உயர்குலத்தவரும் அவரிடத்திற் சென்று நிற்கப்பண்ணுதல். அதனல் சம்பாதிக்கப்படுவது அதுவே மற்ருென் றன்று என்பதாம்*

(கு-து.) பொருள் ஒரு பொருளாக மதிக்கப்படாதவரையும் மதிக்கப்படுவாராகச் செய்தலால் அதனையே தேடவேண்டும் என்பது.

1. Besides wealth there is nothing that can change people of no importance into those of some importance.

---

## உ. +இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை யெல்லாருஞ் செய்வர் சிறப்பு.

---

† " பூரியர் தமைவேந்தனைக்கும் புவிபுரப்பிக்கும் துய்க்குஞ், சீரிய வுண்டி சேர்க்குந் தேவர்த முலகம் போக்குங், காரிய மனைத்துங் கூட்டுங் கருதலர் தம்மை வாட்டுங், கூரிய திதன்மே லில்லை கொழும்பொனீர் கொண்மினென்ருர் " என்று இராமாயணம் கூறு கின்றது.

‡ " என்சொலினும், கைத்துடையான் (பொருளுடையவன்) காற்கீழொதுங்குங் கடன்ஞாலம் " என்று நீதிநெறி விளக்கம் கூறுகின்றது.

* அவர்பால் – அறிவிலாதார் இழிகுலத்தா ரென்பவரிடத்து.

¶ அதனல் – அறிவுடையாரும் உயர்குலத்தாரும் அவரிடத்துச் சென்று நிற்கப் பண்ணுதலால்.

$ அதுவே – பொருளே.

+ " கல்லானே யானுலுங் கைப்பொருளொன் றுண்டாயின், எல்லாருஞ் சென்றங் கெதிர்கொள்வ ரில்லானை, இல்லாளும் வேண்டாண்மற் றீன்றெடுத்த தாய்வேண்டாள், செல்லா தவன் வாயிற் சொல் " என்று நல்வழி கூறுவது மிங்குணர்தற்பாலதாம்.

பரி :—(இ-ள்.) எல்லா நன்மையு முடையராயினும் பொருளில் லாரை யாவரு மிகழ்வர், எல்லாத்தீமையு முடையராயினும் அஃதுடை யாரை யாவரு முயரச்செய்வர், (எ-று).

*உயரச்செய்தல் - தாந்தாழ்ந்து நிற்றல்.* *இகழ்தற்கண்ணுந் தாழ்தற்கண்ணும் பகைவர், நட்டார், நொதுமல ரென்னும் மூவகை யாரு மொத்தலின், 'எல்லாரும்' என்றார். †பின்னுங் கூறியது அதனை வலியுறுத்தற் பொருட்டு.*

தெளி :—(இ-ள்.) (எல்லா நன்மையு முடையவராயிருந்தாலும்) இல்லாரை - (பொருள்) இல்லாதவரை, எல்லாரும் - யாவரும், எள்ளுவர்-இகழ்வர், (எல்லாத் தீமையு முடையவராயிருந்தாலும்), செல்வரை-அப்பொருளுடையவரை, எல்லாரும்-யாவரும், சிறப்புச் செய்வர்-உயரச்செய்வர், (எ-று).

உயரச்செய்தல் - தாம் தாழ்ந்து நிற்றல். இல்லாரை இகழ் தலிலும் செல்வரைத் தாழ்தலிலும் பகைவர், நட்பினர், அயலார் என்னு மூவகையாரும் ஒத்தலால் 'எல்லாரும்' என்றார். பின்னுஞ் சொல்லியது அதனை உறுதிசெய்தற் பொருட்டாம்.

(க-து.) பொருளுடையார், மதிப்பைப் பெறுவர் ; அஃதில்லா தார் அவமதிப்பைப் பெறுவர் என்பது.

2. All despise the poor ; but all praise the rich.

---

## ௩. பொருளென்னும் பொய்யா விளக்க மிருளறுக்கு மெண்ணிய தேயத்துச் சென்று.

பரி :—(இ-ள்.) பொருளென்று எல்லோரானுஞ் சிறப்பிக்கப்படும் ‡நந்தாவிளக்குத் ¶தன்னைச் செய்தவர்க்கு அவர் நினைத்த தேயத்துச் சென்று பகையென்னு மிருளைக் கெடுக்கும், (எ-று).

---

* பொருளில்லாதவரைப் பகைவர் நட்பினர் அயலாரென்னும் மூவகையாரும் இகழ்ந்து (பழித்துப்) பேசுவாரென்றும், பொரு ளுடையவரை யுயரச் செய்வாரென்றும் கொள்க.

† 'பொருளல்லவரைப் பொருளாகச் செய்யும், பொருள்' என்று கூறியதனோடமையாது பின்னும் "செல்வரை, யெல்லாருஞ் செய்வர் சிறப்பு" என்று கூறியது பொருளின் தன்மை யித்தன்மையதென்று அதனை உறுதிப்படுத்திக் காட்டற் கென்க. இவ்வாறு கூறுவது அனு வாதமாம்.

‡ நந்தா-கெடாத.

¶ தன்னை-பொருளாகியதன்னை.

எல்லார்க்கும் எஞ்ஞான்றும் இன்றியமையாததாய் வருதல் பற்றிப் 'பொய்யா விளக்கம்' என்றும், ஏனைவிளக்கோடு †இதனிடை $வேற்றுமை தோன்ற 'எண்ணியதேயத்துச் சென்று' என்றுங் கூறினர். ‡ஏகதேசவுருவகம். இவை மூன்றுபாட்டானும் பொருளது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி:—(இ–ள்.) பொருளென்னும்-பொருளென்று (எல்லாராலுஞ்) சிறப்பித்துச் சொல்லப்படும், பொய்யாவிளக்கம் - நந்தா விளக்கானது, (தன்னைச் சம்பாதித்தவர்க்கு), எண்ணிய-(அவர்) நினைத்த, தேயத்துச் சென்று-தேசத்திற்குப்போய், இருள்-(பகை யென்னும்) இருளை, அறுக்கும் - கெடுக்கும், (எ–று).

பொருள் எல்லார்க்கும் எந்நாளும் அவசியமாக வேண்டுவதாய் வருதல் பற்றி அதனைப் 'பொய்யா விளக்கம்' என்றும், மற்றை விளக்கோடு இதனிடத்து வேற்றுமைதோன்ற 'எண்ணியதேயத்துச் சென்று' என்றும், சொல்லினர். இஃது ஏகதேசவுருவகம். இவை மூன்று பாட்டாலும் பொருளது சிறப்புச் சொல்லப்பட்டது. வேற்றுமை-வேறுபாடு.

(க–து.) தன்னைச் சம்பாதித்தவரது பகைவரெவ்விடத்திருப்பினும் அவரைக் கெடுக்கவல்லது பொருளேயாம் என்பது.

3. The imperishable light of wealth goes into regions desired by its owner and dispels the darkness of enmity therein.

---

ச. *அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்.

பரி:—(இ—ள்.) செய்யுந் திறத்தினையறிந்து அரசன் கொடுங்கோன்மையிலனாக உளதாயபொருள் அவனுக்கு அறத்தையுங் கொடுக்கும், இன்பத்தையுங் கொடுக்கும், (எ–று).

செய்யுந்திறம் – தான் பொருள் செய்தற்குரிய நெறி. இலனாக வென்பது இன்றியெனத் திரிந்து நின்றது. செங்கோலனென்று

---

† இதனிடை – பொருளென்னும் பொய்யா விளக்கத்தினிடத்து.

$ எண்ணிய தேயத்துச்சென்று (பகை) இருளையறுத்தல் பொருளென்னும் விளக்கிற்கன்றி ஏனைய விளக்கிற்கின்மையே இங்கு வேற்றுமையாம்.

‡ பொருளென்னும் பொய்யா விளக்கம் என்றுருவகஞ் செய்தவர் அதற்கேற்பப் பகையென்னும் இருள் என்றுருவகஞ் செய்யாமையின், இக்குறள் ஏகதேசவுருகமாயிற்று.

* "வடுவிலா வையத்து மன்னிய மூன்றில் (அறம்பொருளின் பங்களில்), நடுவண (பொருள்) தெய்த விருதலையும் (அறமும் இன்பமும்) எய்தும்" என்று நாலடியார் கூறுகின்றது.

புகழப்படுதலானும் கடவுட் பூசைதானங்களாற் *பயனெய்தலானும் 'அறனீனும்' என்றும், நெடுங்காலநின்று துய்க்கப்படுதலான் 'இன்பமுமீனும்' என்றுங் கூறினார். †அதனான் ||அத்திறத்தானீட்டுகவென்பதாம்.

தெளி:—(இ-ள்.) திறனறிந்து (செய்யும்) வகையினையறிந்து, தீது-(அரசன்) கொடுங்கோன்மை, இன்றி-இலனாக, வந்தபொருள்-உண்டாகிய பொருள், (அவனுக்கு), அறன் – அறத்தையும், ஈனும் – கொடுக்கும், இன்பமும் – இன்பத்தையும், ஈனும் - கொடுக்கும், (எ—று).

செய்யும்வகை - தான் பொருளைச் சம்பாதித்தற்குரியவழி. இலனாக வென்பது செய்யுள் விகாரத்தால் இன்றி எனத் திரிந்து நின்றது. (தீதின்றி வந்த பொருள்) செங்கோலனென்று புகழப்படுதலாலும் கடவுட் பூசை தானங்களால் பயனையடைதலாலும் 'அறனீனும்' என்றும், நெடுங்காலமிருந்து அனுபவிக்கப்படுதலால் 'இன்பமுமீனும்' என்றும் சொல்லினர். அதனால் (அரசன்) அவ்வகையாற் பொருளைச் சம்பாதிக்கக் கடவனென்பதாம்.

(க-து.) நன்மார்க்கத்திற் சென்று சம்பாதித்த பொருள் அறத்தையும் இன்பத்தையும் தரும் என்பது.

4. The wealth acquired through a knowledge of the proper means and without injustice will yield virtue and happiness.

---

## ரு. அருளொடு மன்பொடும் வாராப் பொருளாக்கம் புல்லார் புரள விடல்.

பரி:—(இ-ள்.) தாங்குடிகண்மாட்டுச் செய்யு ¶மருளோடும் அவர் தம்மாட்டுச்செய்யு §மன்போடுங் கூடிவாராத பொருளீட்டத்தை அரசர் பொருந்தாது கழியவிடுக, (எ-று).

+ அவற்றோடு கூடிவருதலாவது || ஆறிலொன்றாய் வருதல். 0 அவ்

---

* பயன் - அறத்தின் பயன்.

† அதனான் - அறத்தையு மின்பத்தையுந் தருதலால்.

|| அத்திறத்தான் - பொருளைச் சம்பாதித்தற்குரியவழியால்.

¶ அருள் - சம்பந்தங்கருதாமல் சுபாவமாக யாவரிடத்தும் செய்வதாகிய கருணை. இஃது உயர்ந்தோர் செய்யும் நேயமாம்.

§ அன்பு - சம்பந்த முடையவரிடத்துக் காரணம்பற்றிப் பிரியங் கொள்ளுதல். இது தாழ்ந்தோர் செய்யும் நேயமாம்.

+ அவற்றோடு - அருளோடும் அன்போடும்.

|| ஆறிலொன்றாய்வருதல் - குடிகள் சம்பாதிக்கும் பொருள்களுள் ஆறில் ஒரு பாகமாய்ப் பெறுதல், ஆறில் ஒரு பாகமென்னும் விஷயத்தைத் "தென்புலத்தார் தெய்வம்" என்னும் குறளின் விசேடவுரையிற் காண்க.

0 அவ்வாறு - அருளோடும் அன்போடுங் கூடி ஆறிலொன்றாய்.

வாறு வாராத பொருளீட்டம் †பசுமட்கலத்துணீர்போலச் செய் தானையுங் கொண்டிறத்தலின், *அதனைப்'புல்லார்' என்றொழியாது 'புரளவிடல்' என்றுங்கூறினர்.

தெளி:—(இ - ள்.) அருளொடும் - (தாம் குடிகளிடத்துச் செய்யும்) கருணையோடும், அன்பொடும் - (அவர் தம்மிடத்துச் செய்யும்) அன் போடும், வாரா - (கூடி) வாராத, பொருளாக்கம் - பொருட்சம்பாத் தியத்தை, புல்லார்-(அரசர்) பொருந்தாராகி, புரளவிடல் - நீங்க விடக்கடவர் (எ - று).

அவற்றோடு கூடிவருதலாவது ஆறிலொன்றாய் வருதல். அப்படி வாராதபொருட் சம்பாத்தியம் பச்சைமண் பாத்திரத்தில் வார்த்து வைத்த நீர்போலச் சம்பாதித்தவனையுங்கொண்டு இறத்தலால், அதனைப் 'புல்லார்' என்றவளவில் நிறுத்தாமல் 'புரளவிடல்' என்றும் சொல்லினர்.

(க - து.) அரசர் அருளோடும் அன்போடும் கூடி வாராத பொருளை விட்டொழியக்கடவர் என்பது.

5. Kings should avoid the accumulation of wealth which does not flow in with mercy and love.

---

சூ. உறுபொருளு முல்கு பொருளுந்தன் னொன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்.

பரி:—(இ - ள்.) உடையாரின்மையிற் றனேவந்துற்ற பொருளும் ¶சுங்கமாகிய பொருளும் தன்பகைவரைத் ||திறையாகக் கொள்ளும் பொருளும் அரசனுக்குரிய பொருள்கள், (எ - று).

உறுபொருள் - வைத்தாரிறந்துபோக நெடுங்காலம் நிலத்தின்கட் கிடந்து பின்கண்டெடுத்ததூஉம், தாயத்தார் பெறுததூஉமாம். சுங்கம் - கலத்தினுங் காலினும் வரும் பண்டங்கட்கிறை யாயது. ‡தெறுபொருள் - ०தெறுதலான் வரும் பொருளென

† வினைத்தூய்மை - 10. பச்சைமண் பாத்திரத்தில் வார்த்து வைத்த நீர் அப்பாத்திரத்தோடு விரைந்து கெடுதல் போன்று அருளோடும் அன்போடுங்கூடி வாராத பொருளும் தன்னைச் சம்பாதித்த அரசரோடு விரைந்து கெடுமென்பதாம்.

* அதனை - அருளோடும் அன்போடுங் கூடிவாராத பொருளை.

¶ சுங்கமாகிய பொருள் - ஆயச்சாவடியில் வெளியிலிருந்து வரும் பொருள்களுக்குத் தீர்வை விதித்து வாங்குவதாகிய பொருள்.

|| திறையாக - (வென்று) கப்பமாக.

‡ தெறுபொருள் என்பது மூன்றாம் வேற்றுமை யுருபும் பொருளு முடன்றொக்க தொகையாம். தெறு என்பது முதனிலைத் தொழிற் பெயர்.

० தெறுதலான் - போர்செய்து வெல்லுதலால்.

விரியும். * ஆறிலொன்றொழியவும் உரியன கூறியவாறு. இவை மூன்று பாட்டானும் அஃதீட்டுநெறி கூறப்பட்டது.

தெளி :—(இ - ள்.) உறுபொருளும் - (உடையவர் இல்லாமையால் தானேவந்து) கிடைத்தபொருளும், உல்கு பொருளும் - சுங்கமாகிய பொருளும், தன்னொன்னார் - தன் பகைவரை, தெறுபொருளும் - வெல்லுதலால் (திறையாகக் கொள்ளும்) பொருளும், வேந்தன்பொருள் - அரசனுக்குரிய பொருள்கள், (எ - று).

உறுபொருள் - புதைத்து வைத்தவரிறந்துபோக நெடுங்காலம் நிலத்தின்கீழ்க் கிடந்து பின் கண்டெடுத்ததும், பங்காளிகள் அடையாததுமாம். சுங்கம் - மரக்கலத்திலும் வண்டியிலும் வரும் பண்டங்களுக்கு வாங்கும் வரிப்பொருளாம். தெறுபொருள் - தெறுதலால் வரும் பொருளென விரியும். ஆறிலொன்றல்லாமலும் உரியபொருள்களைச் சொல்லியபடியாம். இவை மூன்று பாட்டாலும் அப்பொருளைச் சம்பாதிக்கும் வழி சொல்லப்பட்டது.

(கு - து.) உடையவரில்லாமையாற் றானே வந்துகிடைத்த பொருளும், சுங்கப்பொருளும், பகைவரைவென்று திறையாகக் கொள்ளும் பொருளும், அரசனுக்குரிய பொருளாமென்பது.

6. Unclaimed property, wealth acquired by taxes and conquest of foes are all the wealth of the king.

---

எ. அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னுஞ்
செல்வச் செவிலியா லுண்டு.

பரி :—(இ - ள்.) §அன்பினுலீனப்பட்ட அருளென்னுங்குழவி பொருளென் றுயர்த்துச் சொல்லப்படுஞ் செல்வத்தை யுடைய †செவிலியான் வளரும், (எ-று).

தொடர்புபற்றுதே வருத்தமுற்றூர்மேற் செல்வதாய அருள் தொடர்பு பற்றிச் செல்லு மன்பு முதிர்ந்துழி, உளதாவதாகலின் ¶அதனை 'அன்பீன் குழவி' என்றும், *அது வறியார்மேற்செல்வது அவ்வறுமை களையலல்லார்க்காதலிற் பொருளை ‡அதற்குச் 'செவிலி' என்றும், §அஃதுலகிற் செவிலியர்போலாது தானே யெல்லாப் பொருளு முதவி வளர்த்தலிற் 'செல்வச்செவிலி' என்றுங் கூறினர்.

தெளி:—(இ—ள்.) அன்பீன் – அன்பினுல் பெறப்பட்ட, அருளென்னும் - அருளென்று சொல்லப்படும், குழவி - குழந்தையானது,

---

* குடிகள் சம்பாதிக்கும் பொருள்களுள் ஆறில் ஒருபாகம் தவிரவும் உரியனவாயுள்ள பொருள்களைச் சொல்லிய விதமாம்.

§ "அன்பென்பது அருட்கு முதலாகி மனத்தில் நிகழும் நேயம்" என்பர் நச்சினார்க்கினியர்.

† செவிலி - வளர்க்குந்தாய். ¶ அதனை - அருளை. * அது-அருள்.

‡ அதற்கு - அருளுக்கு. § அஃது - அச்செவிலி.

பொருளென்னும் – பொருளென்று உயர்த்திச் சொல்லப்படும், செல்வம் – செல்வத்தையுடைய, செவிலியால் – செவிலித்தாயால், உண்டு – வளரும், (எ–று).

சம்பந்தம் பற்றுமலே வருத்தமடைந்தவர்மீது செல்வதாகிய அருள் சம்பந்தம்பற்றிச் செல்லும் அன்பு முதிர்ந்தவிடத்து உண்டாவதாகலால், அதனை 'அன்பீன் குழவி' என்றும், அது வறியர் மேற் செல்வது அவ்வறுமையை நீக்கவல்ல பொருளுடையவர்க்கு ஆதலால் பொருளை அதற்குச் 'செவிலி' என்றும், அஃது உலகிலுள்ள செவிலித் தாயர்போலாகாமல் தானே எல்லாப் பொருளும் உதவி வளர்த்தலால் 'செல்வச் செவிலி' என்றும் சொல்லினர்.

(க-து.) அன்பு காரணமாகவுண்டாகும் அருள் பொருளால் விருத்தியடையும் என்பது.

7. The child mercy which is born of love grows under the fostering care of the rich nurse of wealth.

---

**அ. குன்றேறி யானைப்போர் கண்டற்றாற் றன்கைத்தொன்
றுண்டாகச் செய்வான் வினை.**

பரி :—(இ-ள்.) தன் கையதாகிய பொருளுண்டாக ஒரு வினையை யெடுத்துக்கொண்டான் அதனைச் செய்தல் ஒருவன் மலைமேலேறி நின்று யானைப்போரைக் கண்டாலொக்கும், (எ–று).

கைத்துண்டாக ஒன்று செய்வானெனக் கூட்டுக. ஒன்றென்பது வினையாதல் செய்வானென்றதனுற் பெற்றும். குன்றேறியான் அச்சமும் வருத்தமுமின்றி நிலத்திடை யானையும் யானையும் பொருபோரைத் தானினிதிருந்து காணுமதுபோலக் கைத்துண்டாக வினையை மேற்கொண்டானும் அச்சமும் வருத்தமுமின்றி வல்லாரையேவித் தானினிதிருந்து முடிக்குமென்பதாம்.

தெளி :—(இ-ள்.) தன் கைத்து – தன் கையதாகிய பொருள், உண்டாக – உளதாக, ஒன்று – ஒரு தொழிலை, செய்வான் – எடுத்துக் கொண்டவன், வினை – அத்தொழிலைச் செய்தல், குன்றேறி-(ஒருவன்) மலையின்மேல் ஏறி, (நின்று), யானைப்போர் – யானைகளது போரை, கண்டற்று – கண்டாற்போல்வதாம், (எ–று).

கைத்துண்டாக ஒன்று செய்வானென் றந்வயித்துக்கொள்க. ஒன்று என்பது ஒரு தொழிலாதல் செய்வான் என்றதனுல் பெறப்பட்டது. மலையின்மேலேறினவன் அச்சமும் வருத்தமும் இல்லாமல் பூமியில் யானையும் யானையும் செய்கின்ற சண்டையைத் தான் இனிதிருந்து காண்பதுபோலக் கைப்பொருளுளதாக ஒரு தொழிலை மேற் கொண்டவனும் அச்சமும் வருத்தமும் இல்லாமல் வல்லவரை யேவித் தான் இனிதிருந்து முடிப்பானென்பதாம். தன் கையதாகிய பொருள் – தன்வசத்திருப்பதாகிய பொருள்.

(க–து) பொருளுள்ளவன் தான் மேற்கொண்ட தொழிலை அச்சமும் வருத்தமுமின்றி யினிதாக முடிப்பான் என்பது.

8. The undertaking of him who has wealth in his hands is like viewing an elephant fight from a hill top.

———

கூ *செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கு
மெஃகதனிற் கூரிய தில்.

பரி :—(இ–ள்.) தமக்கொன்றுண்டாகக் கருதுவார் பொருளை யுண்டாக்குக : தம்பகைவர் †தருக்கினையறுக்கும் படைக்கலம் ‡அதுவாம்; ¶அதற் கதுபோலக் கூரிய படைக்கலம் பிறிதில்லை, (எ–று).

$அதுவாம் அதற்கென்பன அவாய்நிலையான் வந்தன. பொருளைச் செய்யவே பெரும்படையும் நட்புமுடையராவர் ; ஆகவே, பகைவர் தருக்கொழிந்து தாமே யடங்குவரென்பார் ‘ செறுநர் செருக்கறுக்கு மெஃகு ’ என்றும், ஏனையெஃகுகள் §அதுபோல ||அருவப் பொருளை யறுக்கமாட்டாமையின் ‘ அதனிற் கூரியதில் ’ என்றுங் கூறினர்.

தெளி :—(இ – ள்.) (தமக்கு ஒன்று உண்டாக நினைப்பவர்) பொருளை – பொருளினை, செய்க – சம்பாதிக்கக்கடவர், செறுநர் – (தம்) பகைவரது, செருக்கு – தருக்கினை, அறுக்கும் – கெடுக்கும், எஃகு – ஆயுதம், (அதுவாம்), (அதற்கு), அதனின் – அதுபோல, கூரியது - கூரிய ஆயுதம், இல் – (வேறு) இல்லை, (எ - று).

அதுவாம் என்பதும் அதற்கு என்பதும் அவாய்நிலையால் வந்தன. (தமக்கொன்றுண்டாக நினைப்பவர்) பொருளைச் சம்பாதிக்கவே பெரியபடையும் நட்புமுடையவராவர்; ஆகவே, (அவர்தம்) பகைவர் செருக்கு நீங்கித் தாமே அடங்குவரென்பார் (பொருள்) ‘ செறுநர் செருக்கறுக்கு மெஃகு ’ என்றும் மற்றையாயுதங்கள் அதுபோல அருவப்பொருளை அறுக்கமாட்டாமையால் ‘ அதனிற் கூரியதில் ’ என்றும் சொல்லினர்.

---

* “ செய்கபொருள் யாருஞ் செறுவாரைச் செறுகிற்கு, மெஃகு பிறிதில்லையிருந் தேயுயிரையுண்ணு, மையமிலை யின்பமற னோடவையு மாக்கும், பொய்யில் பொருளே பொருண்மற் றல்லபிற பொருளே” என்பது சீவகசிந்தாமணி.

† தருக்கினை – செருக்கினை (கர்வத்தை).

‡ அதுவாம் – பொருளாம்.

¶ அதற்கு அதுபோல – பகைவர் தருக்கிற்கு அப்பொருள்போல.

$ எஃகு என்பது அதுவாம் என்பதனையும், அதனின் என்பது அதற்கு என்பதனையும் அவாவி (வேண்டி) நின்றன.

§ அதுபோல – பொருள்போல.

|| அருவப்பொருளை – பகைவரது தருக்காகிய அருவப்பொருளை. அருவம் – உருவமில்லாதது. வைசேடிகரது மதம் பற்றித்

(க - து.) தம்பகைவரது செருக்கினையழிக்கும் படை பொருளா யிருத்தலால், தமக்கு மேன்மையுண்டாக வெண்ணுபவர் பொருளைச் சம்பாதிக்கக் கடவர் என்பது.

9. Acquire wealth; it will destroy the arrogance of your enemies; there is no weapon sharper than it.

---

கo. ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொரு
ளேனை யிரண்டு மொருங்கு.

பரி:—(இ—ள்.) நெறியான் வரும் பொருளை இறப்ப மிகப்படைத் தார்க்கு மற்றை யறனு மின்பமும் ஒருங்கே யெளிய பொருள் களாம், (எ—று).

காழ்த்தல்–முதிர்தல். ‡பயன் கொடுத்தல்லது போகாமையின் +'ஒண்பொருள்' என்றும், ஏனையிரண்டும் ¶அதன் விளைவாகலிற் றுமே யொரு காலத்திலே யுளவா மென்பார் 'எண்பொருள்' என்றுங் கூறினார். இவை நான்கு பாட்டானும் ||அதனான்வரும் பயன் கூறப்பட்டது.

தெளி:—(இ–ள்.) ஒண்பொருள் - நல்வழியால் வரும் பொருளை, காழ்ப்ப–பெருக, இயற்றியார்க்கு - (மிகச்) சம்பாதித்தவர்க்கு, ஏனையிரண்டும் - மற்றை அறமும் இன்பமும், ஒருங்கு - ஒருசேர, எண்பொருள் – எளிய பொருள்களாம், (எ—று).

காழ்த்தல் - முதிர்தல். பயன்கொடுத்தல்லது போகாமையால் 'ஒண்பொருள்' என்றும், மற்றையறமும் பொருளுமாகிய விரண்டும் அதன் விளைவாகலால் தாமே ஒருகாலத்திலே உண்டாகு மென்பார் 'எண்பொருள்' என்றும் சொல்லினார். இவை நான்கு பாட்டாலும் அதனால் வரும் பயன் சொல்லப்பட்டது.

(க–து.) நல்வழியிற் சென்று பொருளை மிகுதியாகச் சம்பாதித்த வர்க்கு அறமும் இன்பமும் எளிதிற் சித்திக்கும் என்பது.

10. To those who have honestly acquired an abundance of wealth, the other two, virtue and pleasure, are things easy of acquisition.

---

அங்கவியலில் பொருள் செயல்வகை முற்றிற்று.

---

தருக்காகியகுணம் பொருளாகக் கூறப்பட்டது. தார்க்கிகர் உருவம் இரதம் கந்த முதலிய இருபத்து நான்கு குணங்களுள் உருவம் (வெண்மை கருமை முதலியன) தவிர மற்றைய வெல்லாம் அருவமாமென்பர்.

‡ நெறியால் வரும் பொருள் தன் பயனைக்கொடா தொழி யாமையால்.

+ நெறியால் வருதலும் பயன் கொடுத்தல்லது போகாமையுமே பொருளுக்கு ஒண்மையாம்.

¶ அதன் விளைவாகலின் – பொருளினது விளைவாயிருத்தலால்.

|| அதனான் – பொருளால்.

# பதினான்காவது அதிகாரம்

## படைமாட்சி :—The excellence of the Army

பரி:—இனி அப்பொருளின் ஆவதாய் வெல்வதாய படை இரண்டதிகாரத்தாற் கூறுவான் றொடங்கி, முதற்கட் படைமாட்சி கூறுகின்றார். அஃதாவது படையினது நன்மை. அதிகாரமுறைமை இதனான் விளங்கும்.

தெளி :—இனி அப்பொருளினால் ஆவதாய்ப் பகைவரை வெல்வதாகிய படையை இரண்டதிகாரத்தால் சொல்லத்தொடங்கி, முதலில் படைமாட்சியைச் சொல்லுகிறார். அஃதாவது சேனையினது நன்மையாம். அதிகாரமுறைமை இதனால் விளங்கும்.

---

க. உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையு ளெல்லாந் தலை.

பரி:—(இ-ள்.) *யானை முதலிய நான்குறுப்பானும் நிறைந்து போரின்கண் ணூறுபடுதற் கஞ்சாது நின்று பகையை வெல்வதாய படை அரசன் செல்வங்க ளெல்லாவற்றுள்ளும் தலையாய செல்வம், (எ-று).

ஈண்டுப் படையென்றது †அந்நான்கன் றொகுதியை. ‡ஊறஞ்சியவழி வேறல் கூடாமையின் 'ஊறஞ்சா' என்றும், ¶ஒழிந்தவங்கங்கட்கும் அரசன்றனக்குங் காவலாகலின் 'வெறுக்கையு ளெல்லாந் தலை' என்றுங் கூறினார்.

தெளி:—(இ-ள்.) உறுப்பு – (யானை முதலிய நான்கு) உறுப்புக்களாலும், அமைந்து - நிறைந்து, ஊறு – (போரில்) காயம் படுதற்கு, அஞ்சா – அஞ்சாது, (நின்று), வெல் – பகையை வெல்வதாகிய, படை – சேனையானது, வேந்தன் – அரசனது. வெறுக்கையுளெல்லாம் – செல்வங்களெல்லாவற்றுள்ளும், தலை – முதன்மையாகிய செல்வமாம், (எ-று).

இங்குப் படையென்றது அந்நான்கன் கூட்டத்தை. சேனை ஊறஞ்சிய விடத்து (பகைவரை) வெல்லுதல் கூடாமையால்

---

* சதுரங்கமென்பது ரத (தேர்) கஜ (யானை) துரக (குதிரை) பதாதி (காலாள்) என்று கூறப்படுமாயினும், தலைமைபற்றி 'யானை முதலிய நான் குறுப்பானும் (சதுரங்கத்தாலும்)' என்று கூறப்பட்டது. இது ''யானையுடைய படைகாண்டல் மிகவினிதே'' ''படைதனக்கு யானை வனப்பாகும்'' என்று வரும் பிரயோகத்தாலு மறியப்படும்.

† அந்நான்கன் – யானை, தேர், குதிரை, காலா ளென்னும் நான்கனது.

‡ ஊறஞ்சியவழி–ஊறுபடுத (காயமடைத)ற் கஞ்சிய விடத்து.

¶ ஒழிந்த அங்கங்கள்—அமைச்சு, நாடு, அரண், பொருள், நட்பு என்னும் உறுப்புக்கள்.

'ஊறஞ்சா' என்றும், அச்சேனை ஒழிந்த அங்கங்களுக்கும் அரசனுக்குங் காவலாகலால் 'வெறுக் கையுளெல்லாந் தலை' என்றும் சொல்லினர்.

(க–து.) அரசனது செல்வங்க ளெல்லாவற்றுள்ளும் சிறந்த செல்வமாவது அங்கம் நான்காலும் நிறைந்து போர்முகத்தஞ்சாது நின்று பகைவரை வெல்லும் படையாமென்பது.

1. The army which is complete in its four parts and conquers without fear of wounds is the chief wealth of the king.

---

உ. உலைவிடத் தூறஞ்சா வன்கண் டொலைவிடத்துத்
தொல்படைக் கல்லா லரிது.

பரி:—(இ–ள்.) தான் சிறிதாய வழியும் அரசற்குப் போரின்கணுலைவு வந்தால் தன்மே லுறுவதற் கஞ்சாது நின்று தாங்கும் வன்கண்மை அவன் முன்னோரைத் தொடங்கிவரும் படைக்கல்லது உளதாகாது.

இழிவு சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. †மூலப்படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப் படை யென்னும் அறுவகைப்படையுள்ளுஞ் சிறப்புடையது மூலப் படையாகலான், அதனை அரசன் *"வெல்பொறியு நாடும் விழுப் பொருளுந் தண்ணடையுங், கொல்களிறு மாவுங் கொடுத்தளிக்க" என்பது ¶குறிப்பெச்சம். இப்படையை வடநூலார் மௌலமென்ப.

---

† "உறவின் மிக்கவர் பகையி னெய்த்தவ ருதவு மப்படை குடை நிழற், செறித லத்தினில் வளர்ந கர்ப்படை திரள்வ னப்படை பொருள்விலைத், தறுகண் மெய்ப்படை யுறுதி யிற்பொரு தமத கப்படை யெனவிராய், அறுவகைப்படை களும்வ குத்தன வணிக ளுட்கின பணிகளே" என்று பாரதம் உத்தியோகபருவம் அணி வகுப்புச்சருக்கத்திற் கூறுவது மிங்கறியத்தக்கதாம்.

மூலப்படை அரசனது முன்னோரைத் தொடங்கிவரும் சேனை. இது மூலபலம் எனப்படும். இராமாயணம் இராவணன் இந்திரசித்து மாண்டபிறகு இராமர் முதலாயினோரை யழித்தொழிக்குமாறு மூல பலச்சேனையை யனுப்பினனென்று கூறுவதாலு மிஃதறியப்படும். அம்மூலப் படைக்குச் சிறப்பாவது அரசனிடத்து அவன் முன்னோரைத் தொடங்கிவரும் அன்பும் தான்சிறி தாகிய விடத்தும் பயந்துநீங்காத சௌரிய முடைமையுமாம்.

* புறப்பொருள் வெண்பாமாலை – தும்பைப்படலம். 2. இதன் பொருள். போர்வெல்லும் அடையாளமும் (விருதும்), பலவூர்களை யுடைய சிறுநாடும், சிறந்த பொருளும், மருதநிலமும் (நெல்விளை தற்குரிய நிலமும்), பகைவரைக்கொல்லும் யானையும், குதிரையும் கொடுத்துக் காப்பாற்றுக என்பது.

¶ அருத்தம் குறிப்பாக அறியுமாறு குறைந்து நிற்குஞ்சொல் குறிப்பெச்சமாம்.

தெளி:—(இ-ள்.) தொலைவிடத்தும் – (தான்) சிறிதாகிய விடத்தும், உலைவிடத்து – (அரசனுக்குப் போரினிடத்து) அழிவு வந்தால், ஊறு – (தன்மேல்) காயம் படுதற்கு, அஞ்சா – அஞ்சாது, (நின்று தாங்கும்), வன்கண் – சௌரியமானது, தொல்படைக்கல்லால் – (அவன்) முன்னோரைத் தொடங்கி வருஞ் சேனைக்கல்லாமல், அரிது – உண்டாகாது, (எ-று).

தொலைவிடத்தும் என்னும் இழிவுசிறப்பும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது. மூலப்படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படை என்னும் அறுவகைப் படையுள்ளும் சிறப்புடையது மூலப்படையாதலால், அம்மூலப் படையை அரசன் வெல்பொறி முதலியவற்றைக் கொடுத்துக் காப்பாற்றுகவென்பது குறிப்பெச்சம். வடநூலார் இம்மூலப் படையை மௌலம் என்பர்.

(க-து.) தான் சுருங்கியவிடத்தும் போர்முகத்துப் பகைவர்க் கஞ்சாது நின்று தன்னரசனைக் காக்கும் வீரம் மூலப்படைக்கல்லது வேறு படைக்கில்லை என்பது.

2. Old army can alone have the valour to stand by its king at the time of his defeat, fearless of wounds and unmindful of its reduced strength.

---

ங. ஒலித்தக்கா லென்னு முவரி யெலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும்.

பரி:—(இ-ள்.) எலியாயபகை திரண்டு கடல்போல வொலித்தால் நாகத்திற்கு என்ன ஏதம் வரும்; அந்நாக முயிர்த்த துணையானே *அது தானே கெடும், (எ—று).

உவமைச்சொற் றொக்கு நின்றது. †இத்தொழிலுவமத்தாற் றிரட்சி பெற்றாம். வீரரல்லாதார் பலர் திரண் ‡டார்த்தால் ¶அதற்கு வீரனஞ்சான்; அவன் கிளர்ந்ததுணையானே £அவர்தாங் கெடுவரென்பது தோன்ற நின்றமையின், ||இது பிறிது மொழித லென்னு மலங்காரம். வீரரல்லாதார்பலரினும் வீரனொருவனை யாடல் நன்றென்பதாம். இவை மூன்று பாட்டானும் முறையே அரசனுக்குப் படை ஏனையங்கங்களுட் சிறந்த தென்பதூஉம்,

---

* அது–எலியாகிய பகை. † ஒலித்தக்கால் என்னும் தொழிலுவமானத்தால்.

‡ ஆர்த்தால்–ஆரவாரஞ் செய்தால். ¶ அதற்கு – அவ்வாரவாரத்திற்கு.

£ அவர்–வீரரல்லாதார் பலர்.

|| இக்குறள் ஒட்டென்னும் அலங்காரம். ஒட்டு, பிறிதுமொழிதலென்பன ஒரு பொருட்கிளவி "கருதிய பொருள்தொகுத் ததுபுலப் படுத்தற், கொத்ததொன் றுரைப்பினஃ தொட்டென மொழிப" என்பது தண்டியலங்காரம்.

அது தன்னுள்ளும் மூலப்படை சிறந்ததென்பதூஉம், அது தன்னுள்ளும் வீரன் சிறந்தானென்பதூஉம் கூறப்பட்டன.

தெளி:— (இ - ள்.) எலிப்பகை - எலியாகிய பகை, (திரண்டு), உவரி - கடல்போல, ஒலித்தக்கால் - இரைந்தால், என்னும் - (நாகத்திற்கு) என்ன துன்பம் வரும், நாகம் - அந்நாகமானது, உயிர்ப்ப - மூச்செறிந்த வளவிலோ, கெடும் - (அதுதானே) கெடும், (எ-று).

போல என்னும் உவம வுருபிடைச் சொல் தொக்கு நின்றது. இத் தொழிலுவமத்தால் (எலிப்பகையின்) திரட்சிபெற்றும். வீரரல்லாதார் பலர் திரண்டு ஆர்த்தால் அதற்கு வீரன் அஞ்சான்; அவன் எழும்பிய வளவிலே அவர் தாம் கெடுவரென்பது தோன்ற நின்றமையால், இது பிறிது மொழிதலென்னு மலங்காரமாம். (அரசன்) வீரரல்லாதார் பலரினும் வீரனொருவனை ஆளுதல் நல்லதென்பதாம். இவை மூன்று பாட்டாலும் முறையே அரசனுக்குப் படையானது மற்றையங்கங்களுள் சிறந்ததென்பதும், அப்படையுள்ளும் மூலப்படை சிறந்ததென்பதும், அம்மூலப் படையிலும் வீரன் சிறந்தவனென்பதும் சொல்லப்பட்டன. நாகம் - பாம்பு.

(க - து.) வீரரல்லாதார் பலர் கூடியெதிர்த்தாலும். அவர் வீரனொருவனை வெல்லும் ஆற்றலுடையவராகாது, அவனெழும்பியவளவிலேயே கெடுவரென்பதாம்.

3. What can the sea-like roar of hostile rats avail? It will perish at the mere breath of the cobra.

---

ச. அழிவின் றறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை.

பரி:— (இ-ள்.) போரின்கட் கெடுதலின்றிப் பகைவராற் கீழறுக்கப்படாததாய்த் தொன்றுதொட்டு வந்த தறுகண்மையை யுடையதே அரசனுக்குப் படையாவது, (எ-று).

அழிவின்மையான் *மற †மானங்களுடைமையும், ‡அறைபோகாமையான் அரசன்மாட் டன்புடைமையும் பெறப்பட்டன. வழிவந்த வன் கண்மை - ||"கன்னின்ற னெந்தை கணவன் களப்பட்டான், முன்னின்று மொய்யவிந்தா ரென்னையர்—

* மறம் - வீரம். † மானம் - எப்பொழுதும் தமது நிலையிற்றுழாமையும் ஊழினால் குறைவு வந்தவிடத்து உயிர்வாழாமையுமாம்.

‡ அறைபோகாமை - கீழறுக்கப்படாமை: அஃதாவது பகைவரால் வஞ்சிக்கப்படாமை.

|| புறப்பொருள் வெண்பாமாலை—வாகைப்படலம் 22. இதன் பொருள். கல்லிலே பொருந்தி நின்றான் எனது தகப்பன், எனது கணவன் போர்க்களத்திலே யிறந்தான், பகைவர் முன்னே நின்று எதிர்த்துப் போரிலே விழுந்திறந்தார் எனது தமையன்மார், தனது

பின்னின்று, கைபோய்க் கணையுதைப்பக் காவலன் மேலோடி, யெய்போற் கிடந்தானென் னேறு'' என்பதனுனறிக. *குற்றிய லுகரத்தின் முன்னர் உடம்படுமெய் விகாரத்தான் வந்தது. இது வருகின்றபாட்டுள்ளுமொக்கும்.

தெளி :—(இ-ள்.) படை - (அரசனுக்குப்) படையாவது, அழி வின்று - (போர்முகத்துக்) கெடுதலில்லாமல், அறைபோகாதாகி - (பகைவரால்) கீழறுக்கப்படாததாய், வழிவந்த - பழைமையாக வந்த, வன்கணதுவே – சௌரியத்தை யுடையதே, (எ-று).

அழிவில்லாமையால் மறமானங்களுடைமையும், அறைபோகா-மையால் அரசனிடத்து அன்புடைமையும் பெறப்பட்டன. வழிவந்த வன்கண்மை - போர்முகத்தில் பின்னிடாது போர்செய்து தளர்ச்சி வந்தவிடத்து இறந்துபடுதல். வன்கணது என்னும் உயிர்த்தொடர்க் குற்றிய லுகரத்திற்கு முன் உடம்படுமெய்யாகிய வகரம் *'வன்கணதுவே' எனச் செய்யுள் விகாரத்தால் வந்தது. இது வருகின்ற பாட்டிலும் ஒக்கும். அஃது 'ஆற்றலதுவே' என்பது.

(க-து.) போர்முகத்துத்தோற்றலும் பகைவரால் வஞ்சிக்கப்-படுதலும் இன்றித் தொன்றுதொட்டு வந்த வீரமுடையதே அரசனுக்குப்படையா மென்பது.

4. That indeed is an army which has stood firm of old without suffering destruction or desertion.

---

## ரு. கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கு மாற்ற லதுவே படை.

பரி :—(இ-ள்.) கூற்றுவன் முனே வெகுண்டு †மேல் வந்தாலும் நெஞ்சொத்து எதிர் நின்று தாங்குமாற்றலை யுடையதே படையாவது, (எ—று).

---

சேனை கெடவும் கெடாதே பின்னே நின்று தனது கையானதுபோய் அம்பைச் செலுத்தப் பகை அரசன் மேலேசென்று முள்ளம்பன்றி போலப் பகைவர்விட்ட அம்பு தைக்கப்பெற்று இறந்துகிடந்தான் என்னுடைய புத்திரன் என்பது.

* "உயிர்வரி னுக்குறள் மெய்விட்டோடும்" என்னும் நன்னூற்சூத்திர விருத்தி யுரையில் "கெடும் என்னுது ஓடுமென்ற-மையாற் குற்றியலுகரமொரோ வழி 'இ ஈ ஐ வழி' என்னும் பொது விதி பெறுதலுங்கொள்க. (வ - று.) 'தன்முக மாகத் தானழைப்-பதுவே' 'ஆறனொருமைக் கதுவு மாதுவும்' எனவரும்'' என்று கூறப்பட்டிருக்கிறது.

† மேல் வந்தாலும் - தன்மேல் எதிர்த்துப் போரிட வந்தாலும்.

* மருந்தில் கூற்றுகலின், உம்மை சிறப்பும்மை. மிகப்பலர் நெஞ் சொத்தற்குக் காரணம் அரசன்மேலன்பு. ஆற்றல்-மனவலி.

தெளி:—(இ-ள்.) படை-படையாவது, கூற்று-கூற்றுவனே, உடன்று-கோபித்து, மேல்வரினும்-(தன்) மேல்வந்தாலும், கூடி-மனமொத்து, எதிர் நிற்கும்-எதிர்நின்று தாங்கும், ஆற்றலதுவே-வலிமையை யுடையதே, (எ-று).

மருந்தில்லாத கூற்றுவனுதலால், வரினும் என்ற வும்மை உயர்வு சிறப்பும்மை. மிகப்பலர் மனமொத்தற்குக் காரணம் அரசன் மேலன்பு. ஆற்றல்-மனவுறுதி. கூற்றுவன்-யமன்.

(க-து.) கூற்றுவனுக்கு மஞ்சா தெதிர்த்துப் போர்செய்யும் வலிமையையுடையதே படையா மென்பது.

5. That indeed is an army which is capable of offering a united front even if Yama advances against it with ferocity.

---

**சு. மறமான மாண்ட வழிச்செலவு தேற்ற**
**மெனநான்கே யேமம் படைக்கு.**

பரி:—(இ-ள்.) தறுகண்மையும் மானமும் முன்வீரராயினுர் சென்ற நன்னெறிக்கட் சேறலும் அரசனுற் றேறப்படுதலு மென இந்நான்கு குணமுமே படைக்கு அரணுவது, (எ-று).

†இவற்ருன் முறையே பகைவரைக் கடிதிற்கொன்று நிற்றலும், அரசனுக்குத் தாழ்வுவாராமற்காத்தலும், ‡அழியுநர் புறக்கொடை யயில்வா ளோச்சாமை ¶முதலியவும், அறைபோகாமையுமாகிய

---

* மருந்தில் கூற்று-எவ்வகையாலும் தடுத்தல் முடியாத யமன். மருந்து-தடை; அஃதாவது பரிகாரம். "மருந்தில் கூற்றத் தருந் தொழில் சாயா" என்பது புறநானூறு (3).

† மறம், மானம், மாண்டவழிச் செலவு, தேற்றமென்னு மிவற்ருல்.

‡ புறப்பொருள் வெண்பாமாலை—வஞ்சிப்படலம் 20 தழிஞ்சித் துறையின்கொளு (கருத்து). இதன்பொருள். தோற்ருேடுவார் முதுகின்கண் கூரியவாளை வீசாமை என்பது.

¶ முதலிய என்றமையின், தேரைவிட்டுப் பூமியிலிறங்கினவன், பேடி, அஞ்சலிசெய்தவன், தலைமயிரை யவிழ்த்துக்கொண்டிருப்பவன், குந்திக்கொண்டிருப்பவன், அடைக்கலமென்று சொன்னவன், வஸ்திர மில்லாதவன், களிப்பில்லாதவன், ஆயுதமில்லாதவன், போரிலெதிர்க் காதவன், சண்டையைப்பார்ப்பவன், தூங்குகிறவன், மற்ருெருவனு டன் போர்புரிபவன், ஆயுதமொடிந்தவன், பிள்ளை முதலானவரிறந்த மைபற்றி வியசனப்படுகிறவன், நன்ருக அடிபட்டவன், பயந்தவன் முதலியவர்களைக் கொல்லாமையுங்கொள்க.

செய்கைகள் பெறப்பட்டன. இச்செய்கையார்க்குப் பகைவர் நணு வாராகலின், வேறரண் வேண்டாவென்பதாம்.

தெளி:—(இ-ள்.) மறம்-சௌரியமும், மானம்-மானமும், மாண்ட வழிச்செலவு-(முன்வீரராயினோர் சென்ற) நல்வழியில் செல்லுதலும், தேற்றம்-(அரசனால்) நம்பப்படுதலும், என நான்கே-என இந்நான்கு குணமுமே, படைக்கு-சேனைக்கு, ஏமம்-அரணாவதாம், (எ-று).

இவற்றால் முறையே (மறத்தினால்) பகைவரை விரைவிற் கொன்று நிற்றலும், (மானத்தினால்) அரசனுக்குத் தாழ்வுவாராமற் காத்தலும், (மாண்டவழிச் செல்லுதலால்) தோற்றோடுவார் மீது படையெடாமை முதலியனவும், (தேற்றத்தினால்) அறைபோகாமையும் ஆகிய செய்கைகள் பெறப்பட்டன. இச்செய்கையார்க்குப் பகைவர் நெருங்கமாட்டாராகலின், (படைக்கு மறமான முதலிய அரணன்றி) வேறரண் வேண்டாமென்பதாம்.

(க–து.) படைக்கு அரண் வீரமும் மானமும் நன்மார்க்கத்திற் செல்லுதலும் அரசனால் நம்பப்படுதலுமாம் என்பது.

6. Valour, honour, following in the excellent traditions of its predecessors and trustworthiness are the four requisites that constitute the safe guard of an army.

---

### எ. தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த போர்தாங்குந் தன்மை யறிந்து.

பரி:—(இ-ள்.) மாற்றாரால் வகுக்கப்பட்டுத் தன்மேல்வந்த படையின் போரை விலக்கும் வகுப்பறிந்து வகுத்துக்கொண்டு, அவர் *தூசியைத் தன்மேல் வாராமற் றடுத்துத், தான் †அதன்மேற் செல்வதே படையாவது, (எ-று).

படைவகுப்பாவது வியூகம்; அஃது எழுவகை யுறுப்பிற்றாய், வகை யானான்காய், விரியான் முப்பதாம். ‡உறுப்பேழாவன: உரமுதற் கோடியீறாயின. வகைநான்காவன: ¶தண்டம், £மண்டலம், §அசங்கதம், $போகம்மென விவை. விரிமுப்பதாவன:

---

* தூசி-கொடிப்படை. (முன்னணிச்சேனை).

† அதன்மேல்-(முன்வந்துபோரிடும்) தூசிப்படையின்மேல்.

‡ உறுப்பேழாவன: உரம், இறக்கையிரண்டு, மத்தியம், பிரதிக்கிரகம், பிரிஷ்டம், கோடி என்னும் ஏழாம்.

¶ தண்டம்-சேனையைக் குறுக்காக நிறுத்துதல்.

£ மண்டலம்-சேனையைப் பாம்புமண்டல மிடுவதுபோல நிறுத்துதல்.

§ அசங்கதம்-சேனையை வேறுவேறாக நிறுத்துதல்.

$ போகம்-சதுரங்க (யானை தேர் குதிரை காலாள் என்னும்) சேனையை ஒன்றற்குப்பின் ஒன்றாக நிறுத்துதல்.

*தண்டவிரி பதினேழும், †மண்டல விரி இரண்டும், ‡அசங்கத விரியாறும், ¶போகவிரி யைந்துமென விவை. இவற்றின் பெயர்களும் இலக்கணமும் ஈண்டுரைப்பிற் பெருகும்; அவை யெல்லாம் ||வட நூல்களுட் கண்டுகொள்க. இவை நான்குபாட்டானும் படையின திலக்கணங் கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) தானை - சேனையாவது, தலைவந்த – (பகை வரால் வகுக்கப்பட்டுத்) தன்மேல்வந்த, போர்-(சேனையின்) போரை, தாங்குந்தன்மை - விலக்கும் வகுப்பை, அறிந்து - தெரிந்து, (வகுத்துக் கொண்டு), தார் - (அவரது) தூசிப்படையை, தாங்கி - (தன்மேல் வாராமல்) தடுத்து, செல்வது - (தான் அதன்மேல்) செல்வதே, (எ–று).

படை வகுப்பாவது வியூகம்; அஃது எழுவகை உறுப்பினை யுடையதாய், வகையால் நான்காய், விரியால் முப்பதாம். உறுப்பேழாவன: உரமுதல் கோடியீறுயுள்ளவை. வகை நான்காவன: தண்டம், மண்டலம், அசங்கதம், போகமென்பன. விரிமுப்பதாவன: தண்டவிரி பதினேழும், மண்டலவிரி யிரண்டும், அசங்கதவிரியாறும், போகவிரி யைந்தும் என்பன. இவற்றின் பெயர்களும் இலக்கணங்களும் இங்குச் சொன்னால் விரியும்; அவற்றை யெல்லாம் வட நூல்களுட் கண்டு கொள்க. இவை நான்கு பாட்டாலும் படையினது இலக்கணம் சொல்லப்பட்டது.

(கு-து.) பகைவரது படை வகுப்பிற் கேற்றாற்போன் றணி வகுத்துக்கொண்டு, அவரது தூசிப்படையைத் தன்மேல் வாராத வண்ணம் தடுத்துத் தானதன்மேல் செல்வதே படையாம்.

7. That is an army which knowing the art of warding off an impending struggle, can bear against the vanguard of an hostile force.

---

அ. அடற்றகையு மாற்றலு மில்லெனினுந் தானை
படைத்தகையாற் பாடு பெறும்.

---

* தண்டவிரி பதினேழாவன: பிரதரம், திருடகம், சியாவஸ்தம், குட்சி, பிரதிட்டம், சுப்பிரதிட்டம், சியேநம், விஜயம், சஞ்சயம், விசாலம், நிஜயம், சூசி, ஸ்தூணு, கர்ணம், சமூமுகம், ரதாசியம், வலயம் என்பனவாம்.

† மண்டலவிரி இரண்டாவன: சர்வதோபத்திரம், துர்ஜயம் என்பனவாம்.

‡ அசங்கதவிரியாறுவன: அர்த்தசந்திரம், உத்தானம், சிருங்காடம், கர்க்கடக சிருங்காரி, காகபாரி, கோதிகா என்பனவாம்.

¶ போகவிரி ஐந்தாவன: கோமூத்திரிகை, கிம்சகம், சஞ்சாரி, சகடம், பந்தம் என்பனவாம்.

|| வடநூல்களுள் – காமந்தக முதலிய வடநூல்களில்.

பரி:—(இ-ள்.) தானை பகைமேற் றன்சென்றடுந் தறுகண்மையும் *அது தன்மேல் வந்தாற் பொறுக்குமாற்றலும் இல்லையாயினும், தன் றோற்றப் பொலிவானே பெருமை யெய்தும், (எ-று).

†'இல்லெனினும்' எனவே, அவற்ற தின்றியமையாமை பெறப் பட்டது. படைத்தகையென்பது ஒரு பெயர் மாத்திரமாய் நின்றது. தோற்றப்பொலிவாவது அலங்கரிக்கப்பட்ட தேர் யானை குதிரைக-ளுடனும், ‡பதாகை கொடி குடை பல்லியம் ¶காகள §முதலிய வற்றுடனும் அணிந்து தோன்றுமழகு. பாடு – கண்டவளவிலே பகைவரஞ்சும் பெருமை.

தெளி:—(இ-ள்.) தானை - சேனை, அடற்றகையும் - (பகைமேல் தான் சென்று) போர் செய்யுஞ் சௌரியமும், ஆற்றலும் - (அது தன்மேல் வந்தால்) பொறுக்கும் வலிமையும், இல்லெனினும் - இல்லை யாயினும், படைத்தகையால் - (தனது) தோற்றப் பொலிவாலே, பாடு - பெருமையை, பெறும் - அடையும், (எ-று).

'இல்லெனினும்' எனவே, அவற்றினது அவசியம் பெறப் பட்டது. படைத்தகை யென்பது (தோற்றப்பொலிவு என்னும்) ஒரு பெயரளவாய் நின்றது. தோற்றப்பொலிவாவது அலங்கரிக்கப்பட்ட தேர் யானை குதிரைகளுடனும், பதாகை கொடி குடை பலவகைச் சங்கீத வாத்தியம் காகள முதலியவற்றுடனும் அணிந்து தோன்றும் அழகு. பாடு - கண்டவளவிலே பகைவரஞ்சும் பெருமை. அடல் - போர் செய்தல்.

(க-து.) படையானது போர்செய்யுஞ் சௌரியமும் பகைவர் போர் செய்வதைப் பொறுக்கும் வலிமையுமில்லாவிட்டாலும், தனது தோற்றப்பொலிவினாலே பெருமையடையும் என்பது.

8. Though destitute of courage to fight and strength to endure, an army may yet gain renown by the splendour of its constitutional appearance.

---

### கூ. சிறுமையுஞ் செல்லாத் துனியும் வறுமையு மில்லாயின் வெல்லும் படை.

பரி:—(இ-ள்.) தான் றேய்ந்து சிறிதாகலும் மனத்தினின்று நீங்காத வெறுப்பும் நல்குரவும் தனக்கில்லையாயின், படை பகையை வெல்லும், (எ-று).

---

* அது - அந்தப்பகை.

† அடற்றகையும் ஆற்றலும் இல்லெனினும் என்று கூறவே, (அடற்றகை ஆற்றல் என்னும்) அவற்றினது அவசியம் பெறப்பட்டதென்பதாம்.

‡ பதாகை - பெருங்கொடி.

¶ காகளம் - எக்காளமென்னும் ஊதுகுழல்.

§ முதலிய என்றமையின், பம்பை, தம்பட்ட முதலியவற்றையுங் கொள்க.

*விட்டுப்போதலும் †நின்றது நல்கூர்தலும் அரசன் பொருள் கொடாமையான் வருவன. செல்லாத் துனியாவது மகளிரை வௌவல், ‡இளி வரவாயின செய்தன் ¶முதலியவற்றான் வருவது. $இவையுள்வழி +அவன்மாட்டன்பின்றி உற்றுப்பொராமையின் 'இல்லாயின் வெல்லும்' என்றார்.

தெளி :— (இ–ள்.) சிறுமையும் – (தான்தேய்ந்து) சிறிதாகலும், செல்லாத்துனியும்–(மனத்தினின்று) நீங்காதவெறுப்பும், வறுமையும்– தரித்திரமும், இல்லாயின் – (தனக்கு) இல்லையாயின், படை – சேனை யானது, வெல்லும் – (பகையை) வெல்லும், (எ–று).

விட்டுப்போதலும் நின்றது வறுமையடைதலும் அரசன் பொருள் கொடாமையால் வருவன. செல்லாத்துனியாவது மகளிரைவௌவல் இழிவாயினவற்றைச் செய்தல் முதலியவற்றால் வருவது. இவையுள்ள விடத்து அவனிடத்து அன்பில்லாமல் உற்றுப்போர் செய்யாமையின் (படை) 'இல்லாயின் வெல்லும்' என்றார். வௌவல் – அபகரித்தல். உற்று – மனம் பொருந்தி.

(கூ–து.) படையானது தான் சுருங்குதலும், வெறுப்பும், தரித்திரமு மில்லாதிருந்தால் பகைவரை வெல்லும் என்பது.

9. If an army be free from diminution, incurable repugnance and poverty, it can conquer its enemy.

---

**கO. நிலைமக்கள் சால வுடைத்தெனினுந் தானை**
**தலைமக்க ளில்வழி யில்.**

பரி :— (இ–ள்.) போரின்க ணிலையுடைய வீரரை மிகவுடைத்தே யாயினும், தனக்குத் தலைவராகிய வீரரில்லாதவழித் தானை நில்லாது, (எ–று).

படைத்தலைவர் நிலையுடையரன்றிப் போவாராயிற் காண்போ ரில்லெனப் பொராது oதானும் போமென்பார் 'தலைமக்க ளில்வழி யில்' என்றார்.

---

* விட்டுப்போதல் – நாள்தோறும் சேனை சம்பளங் கொடாமை யால் நீங்கிப்போதல். † நின்றது – நீங்கிப்போகாது நின்றசேனை.

‡ இளிவரவாயின செய்தல் – சூதாடல், கள்ளுண்டல், பொய் பேசுதல், ஈதல், மறுத்தல் என்பனவாம்.

¶ முதலிய என்றமையின், ஆறிலொன்றுக்குமேல் கப்பம் வாங்கு தல், சுங்கத்தீர்வையை யதிக மாக்குதல், தண்டிக்கவேண்டியவர் களைத் தண்டியாமை, சம்பள ஏற்பாட்டைக் குறைத்தல் முதலிய வற்றையுங் கொள்க.

$ இவையுள்வழி – சிறுமையும் (விட்டுப்போதலும்) செல்லாத் துனியும் வறுமையு முள்ளவிடத்து. +அவன் மாட்டு – அரசனிடத்து.

o தானும் – சேனையும்.

இவை மூன்றுபாட்டானும் முறையே படைத்தகையின்மையானும், அரசன் ‡கொடைத் தாழ்வுகளானும், தலைவரின்மையானும் தாழ்வு கூறப்பட்டது.

தெளி:— (இ-ள்.) நிலைமக்கள் - (போரினிடத்து) நிலைத்திருத்தலுடைய வீரரை, சாலவுடைத்தெனினும் - மிகவுடையதேயாயினும், தலைமக்கள் - (தனக்குத்) தலைவராகிய வீரர், இல்வழி - இல்லாவிடத்து, தானை - சேனை, இல் - நில்லாது, (எ-று).

சேனைத்தலைவர் நிலையுடையவரல்லாமல் போவாராயின் காண்-போரில்லையென்று போர்செய்யாமல் தானும்போமென்பார் 'தலைமக்க ளில்வழியில்' என்றார். இவை மூன்று பாட்டாலும் முறையே படைக்குப் படைத்தகை (தோற்றப்பொலிவு) இல்லாமையாலும், அரசன் கொடைத்தாழ்வுகளாலும், தலைவரில்லாமையாலும் வரும் தாழ்வு சொல்லப்பட்டது.

(க-து.) தனக்குத்தலைவ ரில்லாத படை எவ்வளவுமிகுதியாயிருப்பினும் அதனாற் பயனில்லை என்பதாம்.

10. Though an army may be composed of a large number of permanent soldiers, it cannot stand if it be destitute of generals.

---

## பதினைந்தாவது அதிகாரம்

### 7௮. படைச்செருக்கு

### Excessive valour of the Army

பரி:— அஃதாவது அப்படையது மறமிகுதி. †அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

தெளி:— அஃதாவது அச்சேனையினது வீரமிகுதியாம். அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும்.

---

**க. என்னைமுன் னில்லன்மின் றெவ்விர் பலரென்னை**
**முன்னின்று கன்னின் றவர்.**

பரி:— (இ-ள்.) பகைவீர் இன்றிங் கென்றலைவனெதிர் போரேற்று நின்று அவன் வேல்வாய் வீழ்ந்து பின்கல்லின் கண்ணே நின்ற வீரர் பலர், நீவிர் அதன்கணின்றி ¶நும்முடற்க ணிற்றல் வேண்டின் என்றலைவனெதிர் போரேற்று நிற்றலை யொழிமின், (எ-று).

---

‡ கொடைத்தாழ்வுகளானும் - பொருள் கொடுப்பதன் குறைவுகளாலும்.

† படை மாட்சியின்பின் படைச்செருக்கு வைத்த அதிகார முறைமையும்.

¶ நும்முடற்கணிற்றல் - உமதுயிர் உமதுடம்பில் நிற்றலை (ஜீவித்தலை).

'என்னை' எனத் தன்னொடு தொடர்புபடுத்துக் கூறினமையின், அவன் வேல்வாய் வீழ்தல் பெற்றும். *கல் - நடுகல். †''நம்பன் சிலைவாய் நடக்குங்கணை மிச்சி லல்லா, லம்பொன் முடிப்பூ ணரசும்மிலை'' எனப் ‡பதுமுகன் கூறினாற்போல ஒரு வீரன் தன்மறம் அரசன்மேல்வைத்துக் கூறியவாறு. இப்பாட்டு ¶நெடுமொழி வஞ்சி.

தெளி :—(இ-ள்.) தெவ்விர் - பகைவரே, (இன்று இங்கு), என் - என்னுடைய, ஐமுன் - தலைவனெதிர், நின்று - (போரேற்று) நின்று, கன்னின்றவர் - (அவன் வேல்பட்டு வீழ்ந்துபின்) கல்லினிடத்தே நின்ற வீரர், பலர் - பலராவர், (நீர் அக்கல்லினிடத்து நில்லாமல் உம்முடலில் நிற்றலை வேண்டினால்), என் - என்னுடைய, ஐமுன் - தலைவனெதிர், நில்லன்மின் - (போரேற்று) நிற்றலை யொழியுங்கள், (எ-று).

போர்செய்யுமொரு வீரன் 'என்னை' எனத் தலைவனைத் தன்னுடன் சம்பந்தப்படுத்திக் கூறினமையின், அவ்வீரனது வேல்பட்டுப் பகைவர் வீழ்ந்திறத்தல் பெறப்பட்டது. கல் - போரில் வீரர் இறந்த- விடத்து அவருருவம் போற் செய்து நடப்படுங் கல். ஒருவீரன் தன் வீரத்தை அரசன்மேல் வைத்துச் சொல்லியபடியாம். இப்பாட்டு நெடுமொழிவஞ்சி.

(கு-து.) பகைவரே! என்னெதிர் வந்து போரேற்றுநின்று வெல்லாது இறந்து, கல்லுருவமாகச் செய்து நாட்டப்பட்ட வீரர் பலராவர்; ஆதலால், நீங்கள் பிழைக்கவேண்டினால் போர் செய்தலை யொழியுங்கள் என்றொரு வீரன் கூறினான் என்பது.

---

* ''நடுகல்-கல்லினைநடுதலும். அக்கல்லின் கண் மறவனை (வீரனை) நடுதலுமென இருவகையாம்''. (தொல்காப்பியம்-புறத்திணையியல் 5.) என்பர் நச்சினார்க்கினியர். புறப்பொருள்வெண்பாமாலை பொதுவியற்- படலம் 8-வது வெண்பா முதல் 14-வது வெண்பாவரையிங்குக் கவனித்தற்பாலதாம்.

† சீவகசிந்தாமணி-காந்தருவதத்தையா ரிலம்பகம்- 317. இதன் பொருள். நம்பனது (சீவகனது) வில்லினின்றும் வெளிப்பட்ட பாணங்- களின் மிச்சிலல்லாமல் சிறந்த பொன்னாற் செய்த கிரீடத்தைத், தரித்த அரசனும் இல்லையென்பது. (மிச்சில் - எச்சில்).

‡ பதுமுகன் - சீவகனது நேசன்.

¶ நெடுமொழி வஞ்சியாவது ஒரு வீரன் தனது பகைவர்க்கு முன்னே சென்று தனது சௌரியத்தைச் சிறப்பித்துச் சொல்லுதல். இது தன்மேம்பாட்டுரையாம். ''இன்ன ரெனவேண்டா வென்னோ டெதிர்சீறி, முன்னர் வருக முரணகலு - மன்னர், பருந்தார் படைய மருட் பல்லார் புகழ, விருந்தாயடைகுறுவார் விண்'' என்று புறப்- பொருள் வெண்பாமாலையிலுள்ளது மிங்கறியத்தக்கதாம்.

1. Oh enemies! stand not before my leader (in warfare) for many there are who did so and thereafter stood as statues hit by his arrows.

---

உ. **கான முயலெய்த வம்பினின் யானை**
**பிழைத்தவே லேந்த லினிது.**

பரி :— (இ-ள்.) கானத்தின்கண்ணோடும்முயலைப் பிழையாம லெய்த அம்பை யேந்தலினும் வெள்ளிடைநின்ற யானையை யெறிந்து பிழைத்த வேலை யேந்துதல் நன்று, *(எ-று).*

*'கான முயல்' என்றதனால் வெள்ளிடை நின்ற என்பதும் 'பிழைத்த' என்றதனாற் பிழையாமல் என்பதும், முயற்குத்தக 'எய்த' என்றதனான் யானைக்குத்தக எறிதலும் வருவிக்கப்பட்டன. இது மாற்றரசன் படையொடு பொருதானோர் வீரன் *அது புறங்கொடுத்ததாக நாணிப் பின்னவன்றன் மேற்செல்லலுற்றானது கூற்று.*

தெளி:—(இ-ள்.) *கானம் - காட்டில், (ஓடுகிற), முயல் - முயலை, எய்த - (பிழையாமல்) எய்த, அம்பினில் - அம்பை ஏந்துதலைப் பார்க்கிலும், யானை - (வெளிநிலத்தில் நின்ற) யானையை, (எறிந்து), பிழைத்தவேல் - தப்பிய வேலை, ஏந்தல் - ஏந்துதல், இனிது - நன்று, (எ-று).*

*'கானமுயல்' என்றதனால் வெளிநிலத்தில் நின்ற என்பதும், 'பிழைத்த' என்றதனால் பிழையாமலென்பதும், முயற்குத்தக 'எய்த' என்றதனால் யானைக்குத்தக எறிதலும் வருவிக்கப்பட்டன. இது பகையரசனது சேனையோடு போர் செய்தானோர் வீரன் அது தோற்றுப் பின்னிட்டோடக்கண்டு நாணிப் பின் அப்பகையரசன்மேற் செல்லலுற்றானது வார்த்தை. பிழையாமல் - தப்பாமல். தக - தகுதியாக.*

*(க-து.) போர்முகத்தில் வேற்றரசர் சேனை தோற்றோடியது கண்டு, முயலைத் தப்பாமலெய்த அம்பை யேந்துதலினும் யானையை யெய்து தப்பிய அம்பை யேந்துதல் சிறந்ததென்றொரு வீரன் கூறினான் என்பது.*

2. It is better to hold the dart that missed an elephant (in the open) than that which hit a hare in the forest.

---

ங. **பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கா**
**லூராண்மை மற்றத னெஃகு.**

பரி:— (இ-ள்.) பகைவர்மேற் †கண்ணோடாது செய்யும் மறத்தை நூலோர் மிக்கவாண்டன்மை யென்று சொல்லுவர், ‡அவர்க்கு

---

** அது புறங்கொடுத்ததாக நாணி - அம்மாற்றரசனது சேனை முதுகு கொடுத்தோடியதாக (அதுகண்டு) வெட்கமுற்று. † கண்ணோடாது - தாட்சண்ணியங் கொள்ளாமல். ‡ அவர்க்கு - பகைவர்க்கு.*

ஒரு தாழ்வுவந்ததாயிற் கண்ணேடி *அது தீர்த்துக்கோடற்பொருட்டு ஊராண்மை செய்தலை †அதற்குக் கூர்மையென்று சொல்லுவர், (எ-று).

என்ப வென்பது பின்னு மியைந்தது. ஊராண்மை - உபகாரியாந்தன்மை; அஃதாவது இலங்கையர் வேந்தன் போரிடைத் தன்ருனை முழுதும் படத் தமியனு யகப்பட்டானது ‡நிலைமை நோக்கி, ¶அயோத்தியரிறை மேற்செல்லாது இன்றுபோய் நாளை நின் ருனையோடு வாவென விட்டாற்போல்வது. இவை யிரண்டுபாட்டுந் £ தழிஞ்சி.

தெளி :—(இ-ள்.) தறுகண் - (பகைவர்மேல் முகங்கொடாது செய்யும்) வீரத்தை, (நூலோர்), பேராண்மை - மிகுந்தவாண் தன்மையாகும், என்ப - என்று சொல்லுவர், ஒன்றுற்றக்கால் - (அவர்க்கு) ஒரு தாழ்வு வந்ததாயின், (முகங்கொடுத்து அதனைத் தீர்த்துக்கொள்ளுதற்பொருட்டு), ஊராண்மை - உபகாரஞ்செய்தலை, அதன் - அதற்கு, எஃகு-கூர்மையாகும், என்ப - என்று சொல்லுவர், (எ-று).

என்ப என்பது எஃகு என்பதனேடும் பொருந்திநின்றது. ஊராண்மை-உபகாரஞ் செய்யுந் தன்மை; அஃதாவது இலங்கையர்க்கரசனுன இராவணன் போர்முகத்தில் தனது சேனைமுழுதும் இறக்கத்தனிமையனுயகப்பட்டானது நிலைமையைப் பார்த்து, அயோத்தி நகரத்தார்க்கரசனுய இராமபிரான் போர்செய்யாது இன்று போய் நாளை யுனது சேனையோடு போருக்கு வரக்கடவாயென்றுவிட்டால் போல்வது. இவை இரண்டு பாட்டும் தழிஞ்சி. மற்று-அசை.

(க-து.) பகைவர்க்குப் போரில் தாழ்வு வந்தவிடத்து உதவுதல் பேராண்மை யென்னும் படைக்குக் கூர்மையாகும் என்பது.

---

* அது தீர்த்துக்கோடற் பொருட்டு - (பகைவர்) அத்தாழ்வைத் தீர்த்துக்கொள்ளும் நிமித்தம்.

† அதற்கு - பேராண்மைக்கு (வீரமென்னும் ஆயுதத்திற்கு).

‡ தன்னேடு வந்த படையெல்லா மடியப் படைக்கலம் ஒழிய மணிமுடி யழியநின்ற இராவணனது நிலைமையைப்பற்றி "அறங்கடந்தவர் செயலிதென் றுலகெலா மார்ப்ப, நிறங்க ரிந்துகாணிலம்விரல் கிளைத்திட நின்ருன், இறங்கு கண்ணின னெல்லழி முகத்தினன் றலையன், வெறுங்கை நாற்றினன் விழுதுடை யாலன்ன மெய்யன்" என்று இராமாயணம் கூறுகின்றது.

¶ "ஆளை யாவுனக் கமைந்தன மாருத மறைந்த, பூளை யாயின கண்டனை யின்றுபோய்ப் பொரற்கு, நாளை வாவென நல்கின னுகிளங் கமுகின், வாளை தாவுறு கோசலை நாடுடை வள்ளல்" என்றிராமாயணங் கூறுகின்றது.

£ தழிஞ்சி (தழுவல்) - தோற்றவர்மேல் போர்க்குச் செல்லாமை. புறப்பொருள் வெண்பாமாலை "அழியுநர் புறக்கொடை யயில்வாளோச்சாக், கழிதறு கண்மை காதலித் துரைத்தன்று" என்று கூறுகின்றது. நச்சினர்க்கினியர் "தழிச்சுதல் தழிஞ்சியாயிற்று" என்பர்.

3. The learned say that fierceness in warfare with an enemy is indeed great valour; but to become a benefactor to him in case of an accident is the extreme test of that valour.

---

**சு. கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்.**

பரி :- (இ-ள்.) தன்கைப்படையாய வேலைத் தன்மேல்வந்த களிற்றொடு போக்கி வருகின்ற களிற்றுக்கு வேலுடித் திரிவான் தன் மார்பின் கணின்ற வேலைக்கண்டு பறித்து மகிழும், (எ-று).

*களிற்றொடு போக்கல் - களிற்றினதுயிரைக் கொடுபோமாறு விடுதல். மகிழ்ச்சி - தேடியதெய்தலான். இதனுட் களிற்றையல்ல தெறியானென்பதூஉம், சினமிகுதியான் வேலிடைபோழ்ந்த தறிந்திலனென்பதூஉம், பின்னும் போர்மேல் விருப்பின னென்பதூஉம் பெறப்பட்டன. ||நூழிலாட்டு.*

தெளி :- (இ-ள்.) *கைவேல் - (தன்) கைப்படையாகிய வேலை, களிற்றொடு - (தன்மேல்வந்த) யானையோடு, போக்கி - எறிந்துவிட்டு, வருபவன்-(வருகின்ற யானைக்கு வேல்தேடித்) திரிபவன், மெய்வேல்-(தன்) மார்பில் நுழைந்திருந்த வேலை, (கண்டு), பறியா - பிடுங்கி, நகும் - மகிழ்வான், (எ-று).*

*களிற்றொடுபோக்கல் - களிற்றின துயிரைக் கொண்டுபோம்படி (வேலை) எறிதல். மகிழ்ச்சி - தேடிய வேலையடைதலால் (வந்த சந்தோஷம்). இதனுள் களிற்றையல்லது எறியானென்பதும், கோபமிகுதியால் வேல் மார்பில் பிளந்து புதைந்ததை அறிந்திலனென்பதும், பின்னும் போர்மேல் விருப்பினனென்பதும் பெறப் பட்டன. இது நூழிலாட்டு.*

*(க-து.) தனது கையிலுள்ளவேலைத் தன்னை யெதிர்த்த யானையின் மேலெறிந்து விட்டு, வருகின்ற யானைக்கு வேல் தேடித் திரிபவன் தனது மார்பில் தைத்துள்ள வேலைக்கண்டு மகிழுவான்.*

4. The hero who casting the lance in his hand on an elephant comes in search of another will pluck the one that sticks to his body and laugh exultingly.

---

**ரு. விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பி
*னோட்டன்றோ வன்க ணவர்க்கு.**

---

*|| நூழிலாட்டாவது உடம்பிற் புதைந்துள்ள படையைப் பறித்துப் பகைவர்மேலெறிதல். "களங்கெழுமிய படையிரிய, வுளங்கழிந்த வேல்பறித் தோச்சின்று" என்று புறப்பொருள் வெண்பாமாலை கூறுகின்றது.*

* *ஓட்டு - ஓடுதல். (புறங்கொடுத்தல்; அஃதாவது தோற்று முதுகு காட்டியோடுதல்). அன்று, ஓ, என்னுமிரண்டெதிர்மறைச்*

பரி:—(இ-ள்.) பகைவரை வெகுண்டு நோக்கிய கண் *அவர் வேலைக் கொண்டெறிய †அஃதாற்றாது ‡அந்நோக்கை யழித்து இமைக்குமாயின், அது வீரர்க்குப் புறங்கொடுத்தலாம், (எ-று).

அவ் வெகுளி நோக்க ¶மீட்டலும் போரின்கண் மீட்சியெனக் கருதி ||அதுவுஞ் செய்யாரென்பதாம்.

தெளி:—(இ-ள்.) விழித்தகண் - (பகைவரைக்) கோபித்துப் பார்த்த கண், வேல்கொண்டு - (அவர்) வேலைக்கொண்டு, எறிய - வீச, அழித்து - (அதற்குப் பொறுமல் அப்பார்வையை) அழித்து, இமைப்பின் - இமைக்குமாயின், (அவ்விமைத்தல்), வன்கணவர்க்கு - வீரர்க்கு, ஓட்டன்றோ - தோற்றோடுதலாம், (எ-று).

(வன்கணவர்)அக்கோபப்பார்வையை மீட்டலும் போரினிடத்துப் புறங்கொடுத்த லென்று நினைத்து அதுவுஞ் செய்யாரென்பதாம்.

(கூ-து.) போரில் பகைவர் படைக்காற்றாது கண்ணிமைத்தலும் வீரர்க்குத் தோல்வி யாகும் என்பது.

5. Is it not a discomfiture to the warriors to destroy the ferocious look by winking when a lance is cast at them by their enemy.

---

சா. விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் னாளை யெடுத்து.

பரி:—(இ-ள்.) தனக்குச் சென்ற நாள்களை யெடுத்தெண்ணி, அவற்றுள் விழுப்புண் படாத நாள்களை யெல்லாம் பயன்படாது கழிந்த நாளுள்ளே வைக்கும் வீரன், (எ-று).

விழுப்புண் - முகத்தினும் மார்பினும் பட்ட புண். போர் பெற்றிருக்கவும் ○அது பெறாத நாள்களோடும் கூட்டுமென்பதாம். இவை மூன்று பாட்டானும் £ஊறஞ்சாமை கூறப்பட்டது.

---

சொற்களும் ஆம் என்னுமோருடம்பாட்டுப் பொருளையுணர்த்தி நின்றன. அன்று - எதிர்மறைக்குறிப்புவினைமுற்றுச்சொல்; ஓ - எதிர்மறையோகார இடைச்சொல்; இரண்டெதிர்மறைச்சொற்களியைந்துவரின், ஒருடம்பாட்டுப்பொருளையுணர்த்து மென்பதிங்குணர்தற்பாலதாம். ஓட்டு - முதனிலைதிரிந்ததொழிற்பெயர். ஓடு - முதனிலை (பகுதி).

* அவர் - பகைவர்.

† அஃது - வேல்கொண்டெறிதலுக்கு.

‡ அந்நோக்கையழித்து - கோபித்துப் பார்த்த பார்வையை யொழித்து.

¶ மீட்டலும் - மாற்றலும்.

|| அதுவும் - இமைத்தலும்.

○ அது - விழுப்புண்.

£ ஊறு - உடம்பில் வாள் முதலிய படைகளாலுண்டாகுங் காயம்.

தெளி:—(இ-ள்.) (வீரனானவன்) தன்னாளை - தனக்குக் கழிந்த நாள்களை, எடுத்து - எடுத்தெண்ணி, (அந்நாள்களுள்), விழுப்புண் - சிறந்த புண்கள், படாத நாளெல்லாம் - படாத நாள்களையெல்லாம், வழுக்கினுள் - பயன்படாது கழிந்த நாளுள்ளே, வைக்கும் - வைப்பான், (எ-று).

விழுப்புண் - முகத்திலும் மார்பிலும் பட்ட புண். (வீரன்) போர் பெற்றிருக்கவும் (விழுப்புண் படாத நாள்களையெல்லாம்) அது பெறாத நாள்களோடுங் கூட்டுமென்பதாம். இவை மூன்று பாட்டாலும் ஊறஞ்சாமை சொல்லப்பட்டது.

(க-து.) வீரன் போரில் காயம் வாங்காத நாள்களை யெல்லாம் பயன்படாது கழிந்த நாளாக எண்ணுவான் என்பது.

6. The hero will reckon among wasted days all those on which he had not received severe wounds.

---

எ. சுழலு மிசைவேண்டி வேண்டா வுயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து.

பரி:—(இ-ள்.) துறக்கத்துத் தம்மொடு செல்லாது வையத்தைச் சூழ்ந்து நிற்கும் புகழை வேண்டி உயிர்வாழ்தலை வேண்டாத வீரர் *கழல் கட்டுதல் அலங்கார நீர்மையையுடைத்து, (எ-று).

†'சுழலுமிசை' எனவே, ‡அதன் பெருமை பெற்றும். செயப்படு-பொருள் வருவிக்கப்பட்டது. சூழ்தல் - அகத்திடல். துறக்கமும் புகழும் எளிதினெய்துவராகலின், ஆபரணமாவது அதுவே யென்பதாம்.

தெளி —(இ-ள்.) சுழலும் – (துறக்கத்திற்குத் தம்முடன் வாராது வையத்தைச்) சூழ்ந்துநிற்கும், இசை – புகழை, வேண்டி-விரும்பி, வேண்டாவுயிரார் – உயிர்வாழ்தலை வேண்டாத வீரர், கழல் – வீரக் கழலை, யாப்பு – (காலில்) கட்டுதல், காரிகை நீர்த்து – அலங்கார குணத்தையுடையதாம், (எ-று).

'சுழலுமிசை' எனவே, அதன் பெருமை பெறப்பட்டது. வையத்தை என்னுஞ் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. சூழ்தல்-பூமியினுள் இருக்கச்செய்தல். (சுழலு மிசைவேண்டி வேண்டா வுயிரார்) துறக்கத்தையும் புகழையும் எளிதி லடைவராகலால், அவர்க்கு ஆபரணமாவது அக்கழலே யென்பதாம். துறக்கம் – வீரசுவர்க்கம்.

(க-து.) கீர்த்தியை விரும்பிய வீரர் உயிரை விரும்பார்.

---

* "ஆடவர் கொடையால் வீரத் தாலணி, பாதத் தணியே கழலணி யென்ப" என்பது பிங்கலந்தை.

† வையத்தை (பூமியை)ச் சூழுமெனவே என்றும் பாடமுண்டு.

‡ அதன் – இசையின் (புகழின்).

7. The fastening of ankle ring by those desirous of world-wide fame and not the safety of their lives is like adorning themselves.

---

அ. உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன்
செறினுஞ்சீர் குன்ற லிலர்.

பரி :—(இ-ள்) போர்பெறிற் றம்முயிர்ப்பொருட் டஞ்சாது அதன் மேற்செல்லும் வீரர் தம்மிறைவன் *அது வேண்டாவென்று முனியினும் அவ்வீரமிகுதி குன்றுர், (எ-று).

போர்பெற் றறியாமையின், †அது பெற்றால் அரசன் றடுப்பினும் நில்லாரென்பதாம். ‡''போரெனிற் புகலும் புனைகழன் மறவர்'' என்றும், ¶''புட்பகத், தேவ ஞகலிற் சாவேம் யாமென, நீங்கா மறவர் வீங்குதோள் புடைப்ப'' என்றுங் கூறினர்.

தெளி :—(இ-ள்.) உறின் - (போரைப்) பெற்றால், உயிர் - (தம்) உயிர்ப்பொருட்டு, அஞ்சா-அஞ்சாமல், (அப்போரின்மேற் செல்லும்), மறவர் - வீரர், இறைவன் - (தம்) அரசன், செறினும் - (அது வேண்டாமென்று) கோபிக்கினும், சீர்குன்றல் - அவ்வீரமிகுதி குறைதல், இலர் - இலராவர், (எ-று).

வீரர் போர்பெற்று அறியாமையால், அது பெற்றால் அரசன் தடுப்பினும் நில்லா ரென்பதாம்.

(க-து.) தம்முயிர்ப்பொருட் டஞ்சாது போர் புரியும் வீரர் தம் மரசன் அது வேண்டாமென்று தடுப்பினும் நில்லார் என்பது.

---

* அது - போர். † அது - போர்.

‡ புறநானூறு 31. இதன்பொருள். போரென்று கேட்டால் விரும்பும் (காலில்) அணிந்த வீரக்கழலை யுடைய வீரர் என்பது.

¶ புறநானூறு 68. இதன்பொருள். புட்பக விமானத்திற் செல்லும் தேவனாக வாதலால் யாம் (போரிற்சென்று பகைவரோ டெதிர்த்து) மடிவோமென்று (தம்முன்) நீங்குதலில்லாத வீரர் (தம்முடைய) பூரித்த தோள்களை (கைகளால்) தட்ட என்பது. ''புட்பகைக் கேவா ஞகலிற் சாவேம் யாமென, நீங்கா மறவர் வீங்குதோள் புடைப்ப'' என்றும் பாடமுண்டு. இதற்கு ''(எம்மை) புட்செய்யும் பகையிடத்து ஏவானாகலான், யாம் எம்மிற் பொருது மடியக் கடவேமென்று நீங்காத மறத்தை யுடையோர் தம்முடைய பூரித்த தோள்களைத் தட்ட'' என்றுரை கூறப்பட்டிருப்பதுடன், விசேட வுரையில் ''புட்பகையேவானாகலின் என்றோதி உள்ளபகை, தம்மிற்கூடிற்றாக, புள் நிமித்தத்திற்குப் பகைவன் ஏவானாகலிற் சாவேம் யாமென மறவர் தோள்புடைப்பவென் றுரைப்பாருமுளர். புட்பகை யென்று இவனுக்கு ஓர் பெயர்'' என்றும் கூறப் பட்டிருக்கிறது.

8. The heroes who are not afraid of losing their lives in battle will not cool their ardour even if the king prohibits them from fighting.

---

கூ. இழைத்த திகவாமைச் சாவாரை யாரே
பிழைத்த தொறுக்கிற் பவர்.

பரி:—(இ-ள்.) தாங்கூறின வஞ்சினந் தப்பாமற் பொருட்டுச் சென்று சாவவல்ல வீரரை *அது தப்பியவாறு சொல்லி யெள்ளுதற்குரியார் யாவர், (எ-று).

*இழைத்தல் - ¶இன்னது செய்யேனுயின் இன்னனுகுகவெனத் தான் வகுத்தல், சொல்லியென்பது †அவாய் நிலையான் வந்தது. வஞ்சின முடிப்பான்புக்கு ‡முன்னே சாவினும் £தொலைவன்மையின், @அது முடித்தாராவரெனச் சாதற்சிறப்புக் கூறியவாறு.*

தெளி:—(இ-ள்.) *இழைத்தது - (தாம்) சொல்லியசபதம், இகவாமை - தப்பாமற்பொருட்டு, சாவாரை - (போய்ச்) சாவவல்ல வீரரை, பிழைத்தது - (அது) தப்பியவிதத்தை, (சொல்லி), ஒறுக்கிற்பவர், - இகழ்தற்குரியவர், யார் - யாவர், (எ-று).*

*இழைத்தல்-இன்னது செய்யேனுனல் இன்னனுகுவனெனத்தான் வகுத்துக்கூறுதல். சொல்லியென்பது அவாய் நிலையால்வந்தது. வீரர் தாங்கூறிய சபதத்தை முடிக்கச் சென்று முன்னே இறந்தாலும் தொலைவல்லாமையால், அது முடித்தாராவாரெனச் சாதற்சிறப்புச் சொல்லியவாறும்.*

*(க-து.) தாங்கூறிய சபதம் தப்பாதபடி சென்று போரில் மடியும் வீரரை யிகழ்ந்து கூறுவாரில்லை என்பது.*

9. Who would despise with failure those who seal their oath with their death?

---

*அது - சபதம். ¶ "வினையிலென் மகன்றனுடல் வேறுசெய்வித் தோனைக், குனிசிலையி ளுளையுயிர் கோறல்புரி யேனேல், மனைவியுயிர் வீயநன் மகன்மனைவி கையால், தினையளவு மோர்பொழுது சீவித்த வனுவேன்" என்று பதின்மூன்றுநாள் யுத்தத்தில் அருச்சுனன் சபதஞ் செய்தாற்போல்வது இங்குக் கவனித்தற்பாலதாம் "இன்று பகலோ னிறவாமு னென்னுரை, வென்று களங்கொள்ளா வேலுயர்ப்பி - னென்று, மரணவியப்பாயுமடையார்மு னிற்பேன், முரணவிய முன் முன் மொழிந்து" என்பது புறப்பொருள் வெண்பாமாலை.

† ஒறுக்கிற்பவர் என்பது சொல்லி யென்பதை அவாவி (வேண்டி) நின்றது.

‡ முன்னே - தாம் கூறிய சபதம் முடிப்பதற்கு முன்னரே.

£ தொலைவு - தோல்வி. @அது - வஞ்சினம் (சபதம்).

**௧0. புரந்தார்கண் ணீர்மல்கச் சாகிற்பிற் சாக்கா**
**டிரந்துகோட் டக்க துடைத்து.**

பரி:—(இ-ள்.) தமக்குச்செய்த நன்றிகளை நினைந்து ஆண்டவரசர் கண்கள் நீர் மல்கும்வகை போரிடைச் சாவப்பெறின், அச்சாக்காடு இரந்தாயினுங் கொள்ளுந் தகுதியையுடைத்து, (எ-று).

*மல்குதலாகிய இடத்துநிகழ் பொருளின்தொழில் இடத்தின் மேனின்றது, கிளையழ இல்லிடைநோயால் விளிவார் †பழவினைப் பயனேயெய்தலின், ‡அடுத்த வினையாற் றுறக்கமெய்துஞ் சாதலை 'இரந்துகோட்டக்க துடைத்து' என்றார். இவைநான்குபாட்டானும் ¶உயிரோம்பாமை கூறப்பட்டது.

தெளி : — (இ-ள்.) (தமக்குச்செய்த நன்மைகளை நினைந்து) புரந்தார் – ஆண்டவரசரது, கண் – கண்கள், நீர்மல்க – நீர்பெருகும்படி, சாகிற்பின் – (போரிடத்துச்) சாவப்பெற்றால், சாக்காடு – அச்சாவு, இரந்து – இரந்தாயினும், கோட்டக்கது - கொள்ளுந்தகுதியை, உடைத்து – உடையது, (எ–று).

மல்குதலாகிய இடத்து (கண்களில்) நிகழ்பொருளின் (நீரின்) தொழில் இடத்தின் (கண்களின்) மேல் நின்றது. சுற்றத்தார் அழ இல்லி (வீட்டி)ன் கண் நோயினால் சாவார் பழவினைப்பயனையே யடைதலால் அடுத்த வினையால் வீரசுவர்க்கத்தை யடையும் சாவை 'இரந்து கோட் டக்க துடைத்து' என்றார். இவை நான்குபாட்டாலும் உயிரைக்காவாமை சொல்லப்பட்டது.

(க–து.) தம் மரசன் தாம்செய்த நன்மைகளை யெண்ணி உருகியழுமாறு போரில் இறத்தல் வீரர்க்குச் சிறப்புடையதாம்,

10. If heroes can so die as to fill with tears the eyes of their rulers, such a death deserves to be sought even by begging.

அங்கவியலில் படை முற்றிற்று

---

## பதினொருவது அதிகாரம்

### நட்பு :—Friendship

பரி :—இனி அப்படைபோல அரசனுக்கு வினையிடத்துதவுவதாய நட்பினை ஐந்ததிகாரம் @விதிமுகத்தானும் பன்னிரண்டதிகாரம் எதிர்

---

* கண்ணீர்மல்க என்பது "இந்தப் பானை நாழுழி யரிசி பொங்கும்" என்றாற்போல் வந்த (இடத்துநிகழ் பொருளின்தொழில் இடத்தின்மேலாய) வுபசார வழக்காம்.

† பழவினை – முன்வினை (சன்மாந்தரங்களில் செய்தகருமம்).

‡ அடுத்தவினை – உடம்புநீங்கிப்போங்காலத்து அடுத்துள்ள கருமம்.

¶ உயிரோம்பாமை – வீரர்தம்முயிரை விரும்பிக்காக்க எண்ணாமை.

@ விதிமுகத்தானும் – உடன்பாட்டு வாயிலாகவும்.

**மறை முகத்தானுங் கூறுவான்றொடங்கி, விதிமுகவதிகாரமைந்தனுள்ளும் முதற்கண் நட்புக் கூறுகின்றார். *அஃதாவது இன்னதென்பதூஉம் அதிகார முறைமையும் இதனுள் விளங்கும்.**

*தெளி :—இனி அப்படைபோல அரசனுக்குத் தொழிலினிடத்து உதவுவதாகிய நட்பினை ஐந்ததிகாரம் விதிமுகத்தாலும் பன்னிரண்டதிகாரம் எதிர்மறை முகத்தாலும் சொல்லத்தொடங்கி, விதிமுகவதிகார மைந்தினுள்ளும் முதலில் நட்பினைச்சொல்லுகின்றார். அஃதாவது இத்தன்மையதென்பதும் அதிகார முறைமையும் இதனுள் விளங்கும்.*

---

**க. செயற்கரிய யாவுள நட்பி னதுபோல்**
**வினைக்கரிய யாவுள காப்பு.**

**பரி :—(இ-ள்.) †நட்புப்போலச் செய்து கோடற்கரிய பொருள்கள் யாவையுள; செய்துகொண்டால் அதுபோலப் பகைவர் செய்யும் வினைக்குப் புகற்கரிய காவலாவன யாவையுள, (எ-று).**

*நட்புச் செய்தற்காவாரைப் பெறுதலும் பெற்றாற் செய்யுமுபாயமும் செய்தாற்றிரிபின்றி நிற்றலு முதலிய அரியவாகலின், ‡நட்பிற் செயற்கரிய யாவுள என்றும், செய்தாற் பகைவரஞ்சி வினை தொடங்காராகலின் ¶அதுபோல் வினைக்கரிய காப்பு யாவுள என்றுங் கூறினார். நட்புத்தான் இயற்கை செயற்கை யென இருவகைப்படும். அவற்றுள் இயற்கை பிறப்புமுறை யானுயதூஉம் தேய முறையானுய தூஉமென விருவகைப்படும். அவற்றுண் @முன்னையது சுற்றமாகலின், அது ††சுற்றந்தழாலினடங்கிற்று; ‡‡ஏனையது*

---

* அஃதாவது – நட்பாவது (சிநேகமாவது).

† "பிரதியுபகாரத்தை யபேட்சியாமலும் பூர்வசிநேகத்தாலில்லாமலும் பூர்வசம்பந்தத்தாலில்லாமலும் உபகாரஞ் செய்பவன் சுகிருத்து; பூர்வசிநேகத்தை யபேட்சித்தே யுபகாரஞ் செய்பவன் மித்திரன்; தான்செய்த அபகாரத்தை நாடாமல் கேவலம் தனது குரூரசுபாவத்தாலேயே அபகாரஞ்செய்பவன் சத்துரு; பரஸ்பரம் விவாதஞ்செய்யா நிற்குமிருவர்க்கும் இதத்தையிச்சிப்பவன் மத்தியஸ்தன்; அற்பசம்பந்தத்தால் உபகாரஞ்செய்பவன் பந்து; தன்னாற்செய்யப்பட்ட அபகாரத்தை நாடியே அபகாரஞ்செய்பவன் துவேஷி;" என்று பகவற்கீதை கூடார்த்ததீபிகையில் எழுதப் பட்டிருக்கின்றது. (பகவற்கீதை 6-வது அத்தியாயம் 9-வது செய்யுள்.)

‡ நட்பிற் செயற்கரியனவில்லை யென்றும் பாடமுண்டு.

¶ அதுபோல வினைவாராமைக்கு அரியகாவலில்லை என்றும் பாடமுண்டு.

@ முன்னையது – பிறப்பு முறையாலாகிய இயற்கை நட்பு.

†† சுற்றந்தழாலின் – சுற்றந்தழால் என்னும் அதிகாரத்தில். (தழால் - தழுவுதல்.) அஃதாவது தனது உறவினரைத் தன்னினின்றும் நீங்காமல் அணைத்தல்.

‡‡ ஏனையது – தேயமுறையாலாகிய இயற்கை நட்பு.

*பகையிடையிட்ட தேயத்ததாகலின், அது †துணைவலியென ‡வலியறிதலு ளடங்கிற்று. இனி ஈண்டுச் சொல்லப்படுவது முன்செய்த வுதவி பற்றிவருஞ் செயற்கையே யாகலின், அதன் சிறப்பு இதனாற் கூறப்பட்டது.

தெளி:— (இ-ள்.) நட்பின் - நட்புப்போல, செயற்கரிய - சம்பாதித்துக் கொள்ளுதற்கு அரிய பொருள்கள், யா-எவை, உள-இருக்கின்றன, (சம்பாதித்துக் கொண்டால்), அதுபோல்-அதுபோல, வினைக்கு-(பகைவர் செய்யுந்) தொழிலுக்கு, அரிய-(புகுதற்கு) அரிய, காப்பு-காவலாவன, யா-எவை, உள-இருக்கின்றன, (எ-று).

நட்புச் செய்தற்கு ஆவாரைப் பெறுதலும் பெற்றால் செய்யும் உபாயமும் செய்தால் வேறுபடாமல் நிற்றலும் முதலாயின அரியனவாகலின், நட்பிற் செயற்கரிய யாவுள என்றும், நட்புச்செய்-தால் பகைவர் அஞ்சிப் போர் தொடங்காராகலால் அதுபோல் வினைக்கரிய காப்பு யாவுள என்றும் சொல்லினர். நட்புத்தான் இயற்கை செயற்கை யென இருவகைப்படும். அவ்விரண்டனுள் இயற்கைநட்புப் பிறப்பு முறையாலாயதும் தேய முறையாலாயதும் என இருவகைப்படும். அவற்றுள் முன்னையது சுற்றமாகலால், அது சுற்றந்தழாலில் அடங்கிற்று; மற்றது பகையிடையிட்ட தேயத்த-தாகலால், அது துணை வலியென வலியறிதலுள் அடங்கிற்று. இனியிங்குச் சொல்லப்படுவது முன் செய்த உதவி பற்றி வரும் செயற்கைநட்பே யாகலால், அதன் சிறப்பு இதனால் சொல்லப்பட்டது. பிறப்புமுறை-தேகசம்பந்தம்; தேய முறை-தேசசம்பந்தம்.

(க-து.) பகைவர் செய்யும் வினையைக் கெடுக்கும் நட்புப்போலச் சம்பாதித்துக் கொள்ளுதற் கரியபொருள் ஒன்றுமில்லை.

1. What things are there so difficult of acquisition as friendship? What guards are there so difficult to break through by the efforts of ones foes?

---

உ. ¶நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு.

பரி:—(இ-ள்.) அறிவுடையார் நட்புக்கள் @பிறை நிறையுந்தன்மை போல நாடோறு நிறையுந் தன்மையவாம்; மற்றைப் பேதைமை யுடையார்

* பகையிடையிட்ட - பகைவருடு சம்பவித்த.

† துணைவலி - துணையா (சகாயமா) யுள்ளவரது வலிமை.

‡ வலியறிதலுள் - வலியறிதலென்னும் அதிகாரத்தில்.

¶ "பெரியவர் கேண்மை பிறைபோல நாளும், வரிசை வரிசையா நந்தும் - வரிசையால், வானூர் மதியம்போல் வைகலுந் தேயுமே, தானே சிறியார் தொடர்பு" என்று நாலடியார் கூறுவதிங்கறி யத்தக்கதாம்.

@பிறை - இளஞ்சந்திரன்.

**நட்புக்கள் நிறைந்த *மதி பின் குறையுந் தன்மைபோல நாடோறுங் குறையுந் தன்மையவாம். (எ-று).**

*'நீரவர்' என்றார்; இனிமைபற்றி. கேண்மை நட்பென்பன ஒரு பொருட்கிளவி. செய்தாரது பன்மையான் நட்பும் பலவாயின. அறிவுடையாரும் அறிவுடையாருஞ் செய்தன முன்சுருங்கிப் பின் பெருகற்கும், பேதையாரும் பேதையாருஞ் செய்தன முன் பெருகிப் பின் சுருங்கற்குங் காரணம் தம்முண் †முன்னறியாமையும் பின்னறிதலுமாம்.*

தெளி:—(இ-ள்.) *நீரவர்-அறிவுடையவரது, கேண்மை-நட்புக்கள், பிறை-பிறைச்சந்திரன், (நிறையுந் தன்மைபோல), நிறைநீர-(நாடோறும்) நிறையுந் தன்மையனவாம், பேதையார்-(மற்றை) அறிவில்லாதவரது, நட்பு-நட்புக்கள், மதி-நிறைந்த சந்திரன்-பின்னே குறையுந் தன்மைபோல நாடோறும் குறையுந் தன்மையனவாம், (எ-று).*

*இனிமைக்குணமுடையவரா யிருத்தல்பற்றி அறிவுடையவரை 'நீரவர்' என்றார். கேண்மை நட்பு என்பன ஒருபொருட் சொற்கள். நட்புச்செய்தார் பலராயிருத்தலால அவரது நட்பும் பலவாயின. அறிவுடையாரும் அறிவுடையாரும் செய்த நட்புக்கள் முன்னே சுருங்கிப் பின்னே விருத்தியாதற்கும், அறிவில்லாதவரும் அறிவில்லாதவரும் செய்த நட்புக்கள் முன்னே விருத்தியடைந்து பின்னே சுருங்குதற்குங் காரணம் தம்முள்ளே முன்னே அறியாமையும் பின்னே அறிதலுமாம். நீரவர்-இனிமையர்; நீர்மை-இனிமை.*

(க-து.) *அறிவுடையாரது நட்பு நாடோறும் பெருகியும், மூடரது நட்பு நாடோறும் சுருங்கியும் வரும் என்பது.*

2. The friendship of the wise waxes like the new moon; but that of the fools wanes like the full moon.

---

**ங. நவிறொறு நூனயம் போலும் பயிறொறும்
பண்புடை யாளர் தொடர்பு.**

**பரி:—(இ-ள்.) நற்குணமுடைய மக்கள் தம்முட்செய்த நட்புப் பயிலுந் தோறும் அவர்க்கின்பஞ் செய்தல் நூற்பொருள் கற்குந்தோறுங் கற்றார்க் கின்பஞ் செய்தலை யொக்கும், (எ-று).**

*நயத்தினைச் செய்தலான்'நயம்' எனப்பட்டது ‡இருமையினும் ஒரு*

---

* *மதி - பூர்ண சந்திரன்.*

† *முன்னறியாமையை அறிவுடையாரிடத்தும், பின்னறிதலை அறிவில்லாரிடத்துங் கொள்க.*

‡ *இருமையினும் (உவமானமாகிய நூற்பொருளிலும், உவமேயமாகிய நற்குணமுடைய மக்கள் தம்முட் செய்த நட்பிலும்) ஒருகாலைக் கொருகால் (நாளேறநாளேற) (இன்பம்) மிகுமென்பதாம்.*

காலைக் கொருகால் மிகுமென்பதாம். இவை யிரண்டுபாட்டானும் *அச்சிறப்பிற்கேது கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) பண்புடையாளர் - நற்குணமுடைய மக்கள், தொடர்பு - (தம்முள்செய்த) நட்பு, பயிலுந்தோறும் - பழகுந்தோறும், (அவர்க்கு இன்பஞ் செய்தல்), நூல் - நூற்பொருள், நவிலுந்தோறும் - கற்குந்தோறும், நயம்போலும் - (கற்றார்க்கு) இன்பஞ்செய்தலை யொக்கும், (எ-று).

நூற்பொருள் கற்குந்தோறும் நய (இன்ப)த்தினைச் செய்தலால் 'நயம்' என்று கூறப்பட்டது. உவமானம் உவமேயமென்னு மிரண்டன் கண்ணும் இன்பம் ஒருபோதுக்கு ஒருபோது மிகுமென்பதாம். இவை இரண்டு பாட்டாலும் அச்சிறப்புக்குக் காரணம் சொல்லப்பட்டது.

(க-து.) நற்குணமுடையாரது நட்புப் பழகப் பழக இன்பத்தை மிகுதியாகச் செய்யும் என்பது.

3. Like learning, the friendship of the noble, the more it is cultivated, the more delightful does it become.

---

## ச. நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண் மேற்சென் றிடித்தற் பொருட்டு.

பரி:— (இ-ள்.) ஒருவரோடொருவர் நட்புச்செய்தல் தம்மு ணகுதற் கியைந்தன சொல்லி நகையாடற் பொருட்டன்று; அவர்க்கு வேண்டாத செய்கை யுளதாயவழி முற்பட்டுக் கழறுதற்பொருட்டு, (எ-று).

† பழியும் பாவமுந் தருஞ்செய்கை துன்பமே பயத்தலான் வேண்டப்படுவதன்மையின், அதனை 'மிகுதி' என்றும், ¶அது செய்தற்கு முன்னே மீட்டல் வேண்டுதலின் 'மேற்சென்று' என்றும், இன்சொற்கு மீளாமையின் 'இடித்தற் பொருட்டு' என்றுங் கூறினார். இதனான் நட்பின் பயன் கூறப்பட்டது.

தெளி:— (இ-ள்.) நட்டல் - (ஒருவரோடு ஒருவர்) நட்புச்செய்தல், (தம்முள் நகைசெய்தற்குப் பொருந்தியவற்றைச் சொல்லி), நகுதற்பொருட்டன்று - நகைசெய்தற்பொருட்டன்று, மிகுதிக்கண் - (அவர்க்கு) வேண்டாத செய்கை உண்டாயவிடத்து, மேற்சென்று - முற்பட்டு, இடித்தற்பொருட்டு - கண்டித்துப் புத்திசொல்லுதற் பொருட்டாம், (எ-று).

பழியும்பாவமும் தருஞ்செய்கை துன்பமே தருதல்பற்றிவேண்டப் படுவதல்லாமையால், அச்செய்கையை 'மிகுதி' என்றும், அதுசெய் தற்குமுன்னே மீட்டல் வேண்டுதலால் 'மேற்சென்று' என்றும்,

---

* அச்சிறப்பிற்கேது - நட்பின் சிறப்பிற்குக் காரணம்.

† பழியும் பாவமும்-இம்மைக்குரிய பழியையும், மறுமைக்குரிய பாவத்தையும். ''இம்மைப் பழியுமறுமைக்குப் பாவமும்'' என்பது பழமொழி.

¶ அது-பழியும் பாவமுந் தருஞ் செய்கை.

இனிய சொல்லுக்கு மீளாமையால் 'இடித்தற்பொருட்டு' என்றும் சொல்லினர். இதனுல் நட்பின் பயன் சொல்லப்பட்டது. மீட்டல்-திருப்புதல் ; மீளாமை-திரும்பாமை.

(க-து.) சிநேகஞ் செய்வது தவறுகண்டபோது கண்டித்துப் புத்திசொல்லுவதற்கேயன்றிச் சிரித்து விளையாடுதற்பொருட்டன்று என்பது.

4. Friendship is to be practised not for the purpose of laughing but for that of being beforehand in giving one another sharp rebukes in case of transgression.

---

## ரு. புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதா னட்பாங் கிழமை தரும்.

பரி:—(இ-ள்.) ஒருவனோடொருவன் நட்பாதற்குப் புணர்ச்சியும் பழகுதலுமாகிய காரணங்கள் வேண்டுவதில்லை; இருவர்க்கு மொத்த வுணர்ச்சிதானே நட்பா முரிமையைக் கொடுக்கும், (எ-று).

புணர்ச்சி-ஒருதேயத்தாராதல்; *"இன்றே போல்கநும் புணர்ச்சி தானே," என்றதும் †அதனை. பழகுதல்-பலகாற் கண்டுஞ் சொல்லாடியும் மருவுதல். இவ்விரண்டு மின்றிக் ‡கோப்பெருஞ் சோழனுக்கும் பிசிராந்தையார்க்கும்போல உணர்ச்சியொப்பின், அதுவே உடனுயிர் நீங்கு முரிமைத்தாய நட்பினைப் பயக்கு மென்பதாம். நட்பிற்குப் புணர்ச்சி, பழகுதல், உணர்ச்சி யொத்தலென்னுங் காரண மூன்றனுள்ளும் பின்னது சிறப்புடைத் தென்பது இதனுற் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) (ஒருவனோடு ஒருவன் நட்பாதற்கு) புணர்ச்சி-புணர்ச்சியும், பழகுதல்-பழகுதலும், (ஆகியகாரணங்கள்), வேண்டா-வேண்டுவதில்லை, உணர்ச்சிதான்-(இருவர்க்கும் ஒத்த) அறிவுதானே, நட்பாங்கிழமை - சிநேகமாகுமுரிமையை, தரும்-கொடுக்கும், (எ-று).

புணர்ச்சி-ஒருதேயத்தாராயிருத்தல். பழகுதல்—பலகால் கண்டும் பேசியுங் கூடுதல். புணர்ச்சி பழகுதலென்னும் இவ்விரண்டு மில்லாது கோப்பெருஞ் சோழனுக்கும் பிசிராந்தையார்க்கும் போல அறிவு ஒத்திருக்குமானல், அவ்வறிவொத்திருத்தலே யுடனே உயிர் நீங்கும் உரிமையினையுடையதாய நட்பினை யுண்டாக்கு மென்பதாம். நட்பினுக்குப் புணர்ச்சி, பழகுதல், அறிவொத்தல் என்னும் காரண மூன்றனுள்ளும் பின்னதாகிய அறிவொத்தல் சிறப்புடையதென்பது இதனல் சொல்லப்பட்டது.

---

* புறநானூறு 58. இதன்பொருள். இன்று போல்க நுமதுகூட்டம் என்பது. இன்றே போல்கநும் புணர்ச்சி என்று என்றும் பாடமுண்டு.

† அதனை - புணர்ச்சியை.

‡ பாண்டி நாட்டிலுள்ள பிசிரென்னும் ஊரில் இருந்த பிசிராந்தையார் என்னும் புலவர் தமது நேசனை (உறையூரை இராஜதானியாகக் கொண்டிருந்த) கோப்பெருஞ்சோழன் எல்லாவற்றையுந் துறந்திறந்ததைக் கேட்டுத் தாமும் உடனே இறந்தாரென்பது கதை.

(க-து.) புணர்ச்சி, பழகுதல், அறிவொத்திருத்த லென்னுங் காரண மூன்றனுள், அறிவொத் திருத்தலே நட்பிற்குச் சிறந்த காரணமாம்.

5. Living together and holding frequent intercourse are not necessary for friendship; mutual understanding can alone create a claim for it.

---

சு. **முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்**
**தகநக நட்பது நட்பு.**

பரி :—(இ-ள்.) கண்டவழி அகமொழிய முகமாத்திரமே மலரும் வகை நட்குமது நட்பாகாது ; அன்பால் அகமுமலர நட்குமதே நட்பாவது, (எ-று).

நெஞ்சின்க ணிகழ்வதனை நெஞ்சு என்றார். †இறந்தது தழீஇய வெச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. ‡இதனால் இரண்டும் ஒருங்கே மலர வேண்டுமென்பது பெற்றாம்.

தெளி:— (இ-ள்.) முகநக - (கண்ட விடத்து அகமொழிய) முகமாத்திரமே மலரும்வகை, நட்பது - சிநேகிப்பது, நட்பன்று - சிநேகமாகாது, நெஞ்சத்து - அன்பால், அகநக - அகமும் மலர, நட்பது - சிநேகிப்பதே, நட்பு - சிநேகமாவதாம், (எ-று).

நெஞ்சினிடத்து நிகழ்வதாகிய அன்பினை நெஞ்சென்று இடவாகு பெயராற் கூறினார். அகமும் என்னும் இறந்தது தழுவிய எச்சவும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது. இதனால் முகமும் அகமு மாகிய இரண்டும் ஒருமித்து மலரவேண்டுமென்பது பெற்றாம். அகம் - மனம். மலருதல் - கிளர்ச்சியுடையதாதல். நிகழ்வது - பொருந்துவது.

(க-து.) அகமும் முகமும் மலரச் சிநேகிப்பதே சிநேகமாகும் என்பது.

6. The love that merely dwells in the smiles of the face is not friendship ; but the love that dwells deep in the smiles of the heart is true friendship.

---

எ. **அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்க**
**ணல்ல லுழப்பதா நட்பு.**

---

† அகமும் என்ற உம்மை முகம் (முகமும்) என்பதைத் தழுவி நின்றது.

‡ இதனால் - முகநக நட்பது நட்பன்று என்றதனால்.

**பரி:— (இ-ள்.) கேட்டினைத்தரும் தீநெறிகளைச் செல்லுங்கால் விலக்கி ஏனை நன்னெறிகளைச் செல்லாக்காற் செலுத்தித் தெய்வத்தாற் கேடுவந்துழி அது விலக்கப்படாமையின் அத்துன்பத்தை உடனனுப விப்பதே ஒருவனுக்கு நட்பாவது. (எ-று).**

*†'ஆறு' என வருகின்றமையின், ‡'அழிவினவை' என்றொழிந்-தார். ¶"தெருண்டவறிவினவர்" என்புழிப்போல இன்சாரியை $ நிற்க () இரண்டனுருபு தொக்கது. *இனிநவையென்று பாட மோதி, அதற்குப் போரழிவினுஞ் செல்வ வழிவினும் வந்த துன்பங்க ளென்றும், அழிவின்கண் என்பதற்கு யாக்கை யழிவின்க ணென்றும் உரைப்பாரு முளர்.*

*தெளி:—(இ-ள்.) நட்பு - (ஒருவனுக்கு) நட்பாவது, அழிவின் - கேட்டினை, (தருகின்ற), அவை - தீயவழிகளை, நீக்கி - (அவற்றில் செல்லுமிடத்து) விலக்கி, ஆறு - (மற்ற நல்) வழிகளை, உய்த்து - (அவற்றில் செல்லாவிடத்து) செலுத்தி, அழிவின்கண் - (ஊழினால்) கேடுவந்தவிடத்து, (அக்கேடு விலக்கப்படாமையால்), அல்லல் - அத்துன்பத்தை, உழப்பதாம் - (உடனிருந்து) அனுபவிப்பதே, (எ-று).*

*'ஆறு' எனப்பின் வருகின்றமையின், தீயவழிகளை 'அழிவினவை' என்று சுட்டியொழிந்தார். அழிவின் என்பது அறிவினவர் என்ற விடத்துப் போல இன்சாரியை நிற்க (ஐ யென்னும்) இரண்டனுருபு தொக்கு நின்றது.*

*(கு-து.) தீயவழியிற் செல்லாவாறு பாதுகாத்து, நல்லவழியிற் செலுத்தி, ஊழினால்வந்த துன்பத்தை யுடனிருந்தனுபவிப்பவரே நட்பினராவர் என்பது.*

---

*† 'ஆறு' எனப்பின் வருகின்றமையின், அழிவினவை யென்பதன்க ணுள்ள அவை என்னும் சுட்டுப்பெயர்க்குத் தீநெறிகள் என்று பொருள் கூறப்பட்டது.*

*‡ அழிவினைத்தருமவை என்றும் பாடமுண்டு.*

*¶ நாலடியார் இரவச்சம் 1. இதன்பொருள். தெளிந்த அறி-வினையுடையவர் என்பது. $ நிற்க - இருக்க.*

*() அறிவினவர் என்பதும் அழிவின் என்பதும் முறையே அறிவு + இன் + அ + வ் + அர் என்றும், அழிவு + இன் என்றும் பிரிபடும்; இவற்றுள், இன் என்பன சாரியையாம். இவ்விரண்டும் (ஐ என்னும்) இரண்டனுருபு தொகாதபோது அறிவினையுடையவரென்றும், அழி-வினையென்றும் வரும்.*

** இனி அழிவினவை யென்பதை அழிவின் அவை யென்று பிரிக் காது, அழிவின் நவை யென்று பிரித்துப் பாடங்கூறி, அழிவின் நவை யென்பதற்குப் போரழிவிலும் செல்வ அழிவிலும் வந்த துன்பங்கள் என்றும், அழிவின்கண் என்பதற்கு உடம்பு அழிதலில் என்றும், பொருள் கூறுவாருமுண்டு.*

7. True friendship is that which turns one from evil ways, directs him in the path of rectitude, and in case of mishap shares his sorrow.

---

**அ. உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே**
**யிடுக்கண் களைவதா நட்பு.**

பரி:—(இ-ள்.) அவையின் ஆடைகுலைந்தவனுக்கு அப்பொழுதே கைசென்றுதவி அவ்விளிவரல் களையுமாறுபோல, நட்டவனுக்கு இடுக்கண் வந்துழி அப்பொழுதே சென்றுதவி அதனைக் களைவதே நட்பாவது, (எ-று).

†அற்றங்காத்தற்கட் கை தன்மனத்தினு முற்படுதலின், ‡அவ் விரைவு இடுக்கண் களைவழியும் அதற்கொத்த தொழிலுவமையினும் வருவிக்க. $உடையவன் றொழில் நட்பின்மேலேற்றப்பட்டது.

தெளி:— (இ-ள்.) நட்பு - நட்பாவது, உடுக்கையிழந்தவன் - (சபையினிடத்து) ஆடை குலைந்தவனுக்கு, கைபோல - (அப்பொழுதே) கைசென்றுதவி அவ்வவமானத்தை நீக்கும்விதம் போல, (சிநேகித்தவனுக்குத் துன்பம் வந்தவிடத்து), ஆங்கே - அப்பொழுதே, (சென்றுதவி), இடுக்கண் - அத் துன்பத்தை, களைவதாம் - ஒழிப்பதே, (எ-று).

அவமானத்தைக் காத்தலில் கையானது தன் மனத்திலும் முற்பட்டுச் செல்லுதலால், அவ்விரைவைத் துன்பத்தை நீக்குமிடத்தும் அதற்கு ஒத்த தொழிலுவமானத்திலும் வருவித்துக் கொள்க. நட்பினையுடையவனது தொழிலாய இடுக்கண் களைவதை நட்பின்மேலேற்றி 'இடுக்கண் களைவதா நட்பு' என்று கூறினர்.

(க-து.) சிநேகிதனுக்கு வந்த துன்பத்தை விரைந்துசென்று நீக்குபவரே சிநேகிதராவர் என்பது.

---

† அற்றம்-சோர்வு; அஃதாவது மெலிவு. அற்றங்காத்தலாவது சோர்வு வந்தவிடத்து, அது வராமல் காத்தலாம்.

‡ மனத்தினு முற்படுதலாகிய விரைவை நட்டவனுக்கு இடுக்கண்களையுமிடத்தும் அவ்விடுக்கணைக் களைதற்கொத்த உடுக்கையிழந்தவனுக்குக் கைசென்றுதவுதலாகிய தொழிலுவமானத்திலும் வருவித்துக்கொள்க. சபையினிடத்து ஆடை குலைந்தவனுக்கு ஆடை குலைந்த அப்பொழுதே கையானது மனத்திலும் முற்பட்டு விரைந்து சென்று குலைந்த ஆடையைக் கட்டுவது போன்று சிநேகிதனுக்குத் துன்பம்நேரிட்ட விடத்து நேரிட்டவப்பொழுதே விரைந்து சென்று உதவி அத்துன்பத்தை யொழிக்கவேண்டு மென்பதாம்.

$ பொருளின் (உடையவன்) தொழிலை அப்பொருளின் குணத்தின் மேல் ஏற்றிக்கூறினமையால், இது குணிவினை குண வினையாயவுபசார வழக்காம்.

8. *True friendship hastens to the rescue of the afflicted, as readily as the hand of one whose garment is loosened before an assembly.*

---

**கூ. நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி யொல்லும்வா யூன்று நிலை.**

பரி:— (இ-ள்.) நட்பினுக்கு அரசிருக்கை யாதெனின், †அஃது எஞ்ஞான்றுந் திரிபின்றி இயலுமெல்லையெல்லாம் அறம் பொருள்களிற் றளராமைத் தாங்குந் ‡திண்மை, (எ-று).

ஒருஞான்றும் வேறுபடாது ¶மறுமை யிம்மைகட்கு உறுதியாய அறம் பொருள்களிற் றளர்ந்துழி அத்தளர்ச்சி நீக்கி $அவற்றின் கணிறுத்துதற்கு மேல் ஒரு செயலுமின்மையின், ()அதனை o'நட்பிற்கு வீற்றிருக்கை' என்றார்.

தெளி:— (இ-ள்.) நட்பிற்கு - நட்பினுக்கு, வீற்றிருக்கை - அரசிருக்கை, யாதெனின் - யாதென்று வினவினால், (அது), கொட்பின்றி - (எந்நாளும்) வேறுபடாமல், ஒல்லும்வாய் - கூடுமிடத்தெல்லாம், ஊன்றுநிலை - (அறம் பொருள்களில் தளராமல்) தாங்குந் திண்மையாம். (எ-று).

ஒருநாளும் வேறுபடாமல் (கூடுமிடத்தெல்லாம்) மறுமை யிம்மைகளுக்கு உறுதியாகிய அறம்பொருள்களில் தளர்ந்தவிடத்து அத்தளர்ச்சியை நீக்கி அவற்றின்கண் நிறுத்துதற்குமேல் ஒரு செயலுமில்லாமையின், அதனை 'நட்பிற்கு வீற்றிருக்கை' என்றார்.

(க-து.) தமது சிநேகிதர் அறம் பொருள்களையடையுமாறு அவற்றின்கண் அவரைக்கூடுமிடத்தெல்லாம் தவறாமற் செலுத்துபவரே சிறந்த சிநேகிதராவர்.

9. It is the highest friendship which possesses the power of directing one in the practice of virtue and wealth at all times and under all circumstances without deviating.

---

**க0. இனைய ரிவரெமக் கின்னம்யா மென்று புனையினும் புல்லென்னு நட்பு.**

---

† அஃது - அரசிருக்கையானது ‡ திண்மை - உறுதி.

¶ மறுமைக்குறுதியாயது அறம்; இம்மைக்குறுதியாயது பொருள் என்று கொள்க.

$ அவற்றின்கண் - மறுமைக்கும் இம்மைக்கும் நன்மையைத் தருவதாய அறம் பொருள்களில்.

() அதனை - அச்செயலை.

o நட்பிற்கு முடிந்தவெல்லை என்றார் என்றும் பாடமுண்டு.

பரி:—(இ-ள்.) இவர் நமக்கித்துணை யன்பினர் யாமிவர்க் கித்தன்மையமென்று ஒருவரை யொருவர் புனைந்து சொல்லினும், நட்புப் புல்லிதாய்த் தோன்றும், (எ-று).

இவர்க்கென்பது வருவிக்கப்பட்டது. தாம் அவரென்னும் வேற்றுமையின்றி ‡வைத்தும் புனைந்துரைப்பின் வேற்றுமையுண்டாமாகலின், நட்புப் புல்லென்னும் என்றார். இவை ஐந்துபாட்டானும் நட்பினதிலக்கணங் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) இவர் எமக்கு - இவர் நமக்கு. இனையர் - இவ்வளவன்பினர், யாம் - , இன்னம் - (இவர்க்கு) இவ்வளவன்பினேம், என்று - , புனையினும் - (ஒருவரை ஒருவர்) சிறப்பித்துச் சொல்லினும், நட்பு - , புல்லென்னும் - புல்லிதாய்த் தோன்றும், (எ-று).

இவர்க்கு என்பது வருவித்துரைக்கப்பட்டது. தாம் அவர் என்னும் வேற்றுமையில்லாதிருந்தும் சிறப்பித்துச் சொல்லினல் வேற்றுமை யுண்டாமாகலால், நட்புப்புல்லென்னும் என்றார். இவை ஐந்துபாட்டானும் நட்பினது இலக்கணம் சொல்லப்பட்டது. புல்லிதாய்த் தோன்றுதல் – அற்பமாக விளங்குதல்.

(க-து.) சிநேகிதர் தம்முள் ஒருவரையொருவர் சிறப்பித்துச் சொல்லுவாராயின், அவரது சிநேகம் சிறந்த சிநேகமாகாது.

10. Though friends may boast by saying he is so intimate with us & we so intimate with him, yet such friendship will appear mean.

---

## பதினேழாவது அதிகாரம்

## 

தெளி:—அஃதாவது முற்கூறிய இலக்கண முடையவரை ஆராய்ந்தறிந்தே சிநேகிக்கவேண்டுதலால், அவரை ஆராயுந்திறம். அதிகார முறைமையும் இதனலே விளங்கும்.

---

க. நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு.

---

‡ வைத்துப் புனைந்துரைப்பினும் என்றும் பாடமுண்டு.

¶ மேற்சொல்லிய – நட்பதிகாரத்திற் கூறிய.

* அவரை – நட்பினரை.

† நட்பதிகாரத்தின்பின் நட்பாராய்த லதிகாரம் வைத்த முறைமையும்.

பரி:—(இ-ள்.) நட்பினை விரும்பி அதன்கண்ணே நிற்பார்க்கு ஒருவனோடு நட்புச்செய்தபின் அவனை விடுதலுண்டாகாது; ஆகலான் ஆராயாது நட்புச் செய்தல்போலக் கேடுதருவது பிறிதில்லை, (எ-று).

*ஆராய்தல்-†குணஞ்செய்கைகளது நன்மையை யாராய்தல். ‡கேடு-ஆகுபெயர். நட்கிற்றாமவரென்னும் வேற்றுமையின்மையின் 'வீடில்லை' என்றும், அவ்வேற்றுமை யின்மையான் ||அவன்கட்பழி பாவங்கள் தமவா மாகலின், ¶இருமையுங் கெடுவரென்பது நோக்கி 'நாடாது நட்டலிற் கேடில்லை' என்றுங் கூறினார்.*

*தெளி:—(இ-ள்.) நட்பாள்பவர்க்கு - நட்பினைவிரும்பி அந்நட்பினிடத்தே நிற்பவர்க்கு, நட்டபின் - (ஒருவனோடு) நட்புச்செய்தபின், வீடு - (அவனை) விடுதல், இல்லை - உண்டாகாது, (ஆகலால்), நாடாது - ஆராயாமல், நட்டலின்-சிநேகஞ்செய்தல்போல, கேடு-கேடு (தருவது), இல்லை-(வேறு) இல்லை, (எ-று).*

*ஆராய்தல் - நற்குணநற்செய்கைகளை ஆராய்தல். கேடு-காரிய வாகு பெயர். சிநேகித்தால் தாம் அவரென்னும் வேற்றுமை யில்லாமையால் 'வீடில்லை' என்றும், அவ்வேற்றுமையில்லாமையால் அவனிடத்துப் பழி பாவங்கள் தம்முடையனவாமாகலால் இருமையுங் கெடுவரென்பது நோக்கி 'நாடாது நட்டலிற் கேடில்லை' என்றும் சொல்லினார்.*

*நட்புச் செய்தபின் நட்டாரை விடுதல் முடியாமையின், அதனை யாராய்ந்து செய்தல் வேண்டும்; ஆராயாது செய்தால் அது பெருங்கேடு தருவதாம்.*

1. As those who are friendly disposed will not forsake a friend after once loving him, there is no evil so great as befriending one without enquiry.

---

**உ. ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை**
**தான்சாந் துயரந் தரும்.**

பரி:—(இ-ள்.) $குணமுஞ் செய்கையு நல்லனென்பதும் அல்ல னென்பதும் பலகா லாராய்ந்தும் பலவாற்றா னாராய்ந்தும் ஒருவனோடு

---

*† குணத்தினது நன்மையையும் செய்கையினது நன்மையையும் விசாரித்துணர்தல்.*

*‡ கேடு தருவதைக் கேடென்றமையின், இதுகாரிய வாகு பெயராம். தருவது – காரணம்; கேடு காரியம். (கேடுதருவது - (1) உவமானத்தில் நாடாது நட்டல், (2) உவமேயத்தில் பிறிது).*

*|| அவன்கட் பழிபாவங்கள் - சிநேகித்தவனிடத் துண்டாகும் இம்மைக்குரிய பழியும் மறுமைக்குரிய பாவமும்.*

*¶ இருமையும் – இம்மை மறுமையென்னுமிரண்டிலும்.*

*$ நற்குண நற்செய்கைகளால் மேம்பட்டவனென்பதும், அவற்றால் மேம்பட்டவனல்லனென்பதும்.*

நட்புக் கொள்ளாதவன் முடிவிற் றுன் சாதற் கேதுவாய துன்பத்தினைத் தன் மாற்றுர் விளைக்க வேண்டாமற் றுனே *விளைக்கும், (எ-று).

†கடைமுறைக் கண்ணென இறுதிக்கட்டொக்க ஏழாவது விரிக்க. குணமுஞ் செயலுந் தீயானொடு கொள்ளின், ‡அவற்கு வரும் பகைமை யெல்லாந் தன் மேலவாய்ப் பின் §அவற்று னிறந்துவிடு மென்பதாம். இவை யிரண்டு பாட்டானும் ஆராயாவழிப் படுமிழுக்குக் கூறப் பட்டது.

தெளி:—(இ-ள்.) (குணமுஞ் செய்கையும் நல்லனென்பதும் அல்ல னென்பதும்) ஆய்ந்து - (பலகால்) ஆராய்ந்தும், ஆய்ந்து – (பல வழியால்) ஆராய்ந்தும், கேண்மை - (ஒருவனோடு) நட்பை, கொள்ளா தான் – கொள்ளாதவன், கடைமுறை – முடிவில், தான் சாம் – தான் சாதற்கு ஏதுவாகிய, துயரம் – துன்பத்தை, தரும் – (தனது பகைவர் விளைக்கவேண்டாமல் தானே) விளைத்துக்கொள்ளுவான், (எ—று).

கடைமுறை யென்பதனீற்றில் தொக்குநின்ற ஏழனுருபை விரித்துக் கடைமுறையில் என்று கொள்க. தீய குணமுந் தீயசெயலு முடையவனோடு நட்புக்கொள்ளின், அவனுக்கு வரும் பகைமை யெல்லாம் தன்மேல் வருவனவாகிப் பின் அவற்றுல் இறந்துவிடுவ னென்பதாம். இவையிரண்டு பாட்டாலும் நட்பினை ஆராயாதவிடத் துண்டாகும் குற்றம் சொல்லப்பட்டது.

(க-து.) பலகாலாராய்ந்தும் பலவற்றுனாராய்ந்தும் பிறரோடு சிநேகங் கொள்ளாதவன் முடிவில் தான் சாவதற்கேதுவாய துன்பத்தைத் தன் பகைவர் விளைக்கவேண்டாமல் தானே விளைத்துக் கொள்ளுவான் என்பது.

2. The friendship of one indiscriminately acquired will in the end grieve one to death.

---

ந. குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்று
வினனு மறிந்தியாக்க நட்பு.

பரி:—(இ-ள்.) ஒருவன் குணத்தினையும் குடிப் பிறப்பினையும் குற்றத் தினையும் குறைவற்ற சுற்றத்தினையு மாராய்ந்தறிந்து, அவனோடு நட்புச் செய்க, (எ—று).

குற்றமில்லாதார் உலகத்தின்மையின் உள்ளது பொறுக்கப்படுவ தாயின், அவர்நட்பு விடற்பாற் றன்றென்பார் 'குற்றமும்' என்றும், ¶சுற்றப் பிணிப்புடையார் நட்டாரோடும் பிணிப்புண்டு வருதலிற்

---

* விளைக்கும் – உண்டாக்கிக்கொள்ளுவான்.

† கடைமுறை என்பதனிறுதியில் தொக்குநின்ற கண் என்னும் ஏழனுருபை விரித்துக் கடைமுறைக்கண் என்று கொள்க.

‡ அவற்கு – தீயவனுக்கு.

§ அவற்றுன் – அப் பகைகளால்.

¶ சுற்றப் பிணிப்புடையார் – சுற்றத்தாருடன் கருத்தொத் திருப்பவர்.

'குன்றுவினனும்' என்றும், விடப்படிற் றங்குறையாமென்பார் 'அறிந்தியாக்க' என்றுங் கூறினர்.

தெளி:—(இ-ள்.) குணனும் - (ஒருவனது) குணத்தினையும், குடிமையும் - குடிப் பிறப்பினையும், குற்றமும் - குற்றத்தினையும், குன்றுவினனும் - குறைவற்ற சுற்றத்தினையும், அறிந்து - ஆராய்ந்தறிந்து, நட்பு - நட்பினை, யாக்க - (அவனோடு) செய்யக்கடவன், (எ-று).

குற்றமில்லாதவர் உலகத்திலில்லாமையால் உள்ள குற்றம் பொறுக்கப்படுவதானல், அவர்நட்பு விடுதற்பான்மையதன்றென்பார் 'குற்றமும்' என்றும, சுற்றத்தாரோடு கட்டுண்டிருப்பவர் நட்பினரோடும் கட்டுண்டு வருதலால் 'குன்றுவினனும்' என்றும், அவர் நட்பு விடப்பட்டால் தமது குறையாமென்பார் 'அறிந்தியாக்க' என்றும் சொல்லினர்.

(க-து.) குணத்தையும் குடிப் பிறப்பையும் குற்றத்தையும் சுற்றத்தையும் ஆராய்ந்தறிந்து பிறரோடு சிநேகித்தல் வேண்டும்.

3. Friendship should be cultivated after ascertaining one's character, birth, defects and the extent of his relations.

---

ச. குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்துங் கொளல்வேண்டு நட்பு.

பரி: (இ-ள்.) உயர்ந்த குடியின்கட் பிறந்து தன்மாட்டு உலகர் சொல்லும் பழிக்கு அஞ்சுவானைச் *சில கொடுத்தாயினும் நட்புக்கோடல் சிறந்தது, (எ-று).

குடிப் பிறப்பாற் றன் †பிழை செய்யாமையும், பழிக்கஞ்சலாற் ‡பிழைத்தன பொறுத்தலும் பெற்றும். §இவையிரண்டு முடையானைப் பெறுதலருமையின், அவன் நட்பை விலை கொடுத்துங் கொள்க வென்பதாம்.

தெளி:—(இ-ள்.) குடிப்பிறந்து - உயர்ந்த குடியிற் பிறந்து, தன்கண் - தன்னிடத்து, பழி - (உலகர் சொல்லும்) பழிக்கு, நாணுவானை - அஞ்சுவானை, கொடுத்தும் - (சில) கொடுத்தாயினும், நட்புக் கொளல் வேண்டும் - சிநேகங் கொள்ளுதல் சிறந்தது, (எ-று).

குடிப்பிறப்பால் தான் பிழை செய்யாமையும், பழிக்கு அஞ்சலால் பிழைத்தன பொறுத்தலும் பெற்றும். இவை யிரண்டுமுடையவனைப் பெறுதல் அருமையாகலால், அவன் நட்பை விலைகொடுத்துங் கொள்க வென்பதாம்.

---

* சில - அவன் விரும்பும் பொருள்களுள் சிலவற்றை.

† பிழை குற்றமுள்ள காரியங்களை.

‡ பிழைத்தன - பிறர்செய்த குற்றங்களை.

§ இவை யிரண்டுமுடையானை - பிழை செய்யாமையும் பிழைத்தன பொறுத்தலுமுடையவனை.

(க-து.) உயர்குடியிற் பிறந்து பழிக்கஞ்சுகின்றவனைப் பொருள் கொடுத்தாயினுஞ் சிநேகஞ் செய்தல் வேண்டும் என்பது.

4. The friendship of one of good birth who is afraid of being charged with vicious actions is worth acquiring even by purchasing.

---

ரு. அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல்.

பரி:— (இ-ள்.) தாம் உலக வழக்கல்லது செய்யக்கருதிற் *சோகம் பிறக்கும் வகை சொல்லி விலக்கியும் செய்தக்காற் பின்னுஞ் செய்யாவகை †நெருக்கியும் ‡அவ்வழக்குச் செய்யாவழிச் செய்விக்கவும் வல்லாரை ஆராய்ந்து நட்புக்கொள்க, (எ-று).

அழச்சொல்லி இடித்தெனவந்த ¶பரிகார வினைகளான் அவற்றிற் கேற்ற §குற்றவினைகள் வருவிக்கப்பட்டன. வழக்கு-உலகத்தார் அடிப் படச்செய்து போந்த செயல். தம்மோடு நட்டாரும் அறியும்வகை அறிவித்த லரிதாகலின் 'அறியவல்லார்' என்றார். இரண்டாவது இறுதிக்கட்டொக்கது.

தெளி:—(இ-ள்.)அல்லது-(தாம்) உலகநடையல்லாததை, (செய்ய நினைத்தால்), அழச்சொல்லி - சோகம் பிறக்கும் வகைசொல்லி, (விலக்கியும்), (செய்தக்கால்), இடித்து-(பின்னும் செய்யாவகை) நெருக்கியும், வழக்கு-அவ்வுலகநடையை, (செய்யாவிடத்து), அறிய வல்லார் - செய்விக்கவும்வல்லவரை, ஆய்ந்து - ஆராய்ந்து, நட்பு - நட்பினை, கொளல் - கொள்ளக்கடவர், (எ-று).

அழச்சொல்லி இடித்து என வந்த பரிகாரத்தொழில்களால் அத்தொழில்களுக்கு ஏற்ற குற்றத்தொழில்கள் வருவிக்கப்பட்டன. வழக்கு - உலகத்தார் தொன்றுதொட்டுச் செய்துவந்த செயல். உலகவழக்கைத்தம்மோடு சிநேகித்தவரும் அறியும்வகை யறிவித்தல் அரிதாகலால் 'அறிய வல்லார்' என்றார். வல்லார் என்பதனிறுதியில் ஐயென்னும் இரண்டனுருபு தொக்கு நின்றது; அது விரிந்தால் வல்லாரை யென்றும்.

---

* சோகம்-பெருந்துன்பம்; அஃதாவது பிரியமாயதொன்று பிரிந்த காலத் துண்டாந்துன்பம். † நெருக்கியும்-கண்டித்துப் புத்தி சொல்லியும்.

‡ அவ்வழக்கு - உலகவழக்கு.

¶ பரிகாரவினை-பரிகரித்தல்; அஃதாவது நீக்குதல்.

§ குற்றவினைகள் - செய்யக்கருதின், செய்தக்கால் என்பன. செய் யக்கருதின் அழச்சொல்லி, செய்தக்கால் இடித்து என்று கொள்க.

| தாமறிதலேயன்றித் தம்மொடு நட்டாரும் என்றும் பாடமுண்டு.

(க-து.) தீநெறியிற் செல்ல நினைத்தால் அதில் செல்லாவாறு அழச்சொல்லிவிலக்கி நன்னெறியிற் செலுத்தவல்லவரது நட்பை ஆராய்ந்துகொள்ளல் வேண்டும் என்பது.

5. You should considerately secure the friendship of those who can so speak as to make you weep by deterring you from committing unrighteous actions or rebuke you severely after you have done it, and are able to direct you to walk in the path of virtue.

———

சு. **கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை
நீட்டி யளப்பதோர் கோல்.**

பரி:— (இ-ள்.) ஒருவனுக்குக் கேடென்பது தன்னட்டாராகிய புலங்களை எஞ்சாம லளப்பதோர் கோல்; ஆகலின், அதன் கண்ணும் அவராற் பெறப்படுவதோர் நல்லறி வுண்டு, (எ-று).

தத்த நட்பெல்லைகள் சுருங்கியிருக்கவும் செல்வக்காலத்துப் *புறத்துத் தோன்றுமற் போந்தார் பின் கேடுவந்துழிச் செயல் வேறுபடுதலின் அக் கேட்டால் அவை வரையறுக்கப்படுமென்பது பற்றிக் †கேட்டினைக்கோல் ஆக்கியும், ‡அதனல் ¶அவரை யளந் தறிந்தால் ஆவாரையே கோடலின் அவ்வறிவை 'உறுதி' என்றுங் கூறினர். $கிளைஞர் - ஆகுபெயர் ‖இஃதேகதேசவுருவகம். இவை நான்கு பாட்டானும் ஆராயுமாறும் ஆராய்ந்தால் நட்கப்படுவார் இவரென்பதூஉங் கூறப்பட்டன.

தெளி:—(இ-ள்.) (ஒருவனுக்குக் கேடென்பது) கிளைஞரை-(தனது) சிநேகிதராகிய நிலங்களை, நீட்டியளப்பது - குறையாமல் அளப்பதாகிய, ஓர் கோல் - ஒருகோலாம், (ஆகலால்) கேட்டினும் - அக்கேட்டினிடத்தும், ஒருறுதி – ( அவரால் பெறப்படுவதாகிய ) ஒரு நல்லறிவு, உண்டு—, (எ—று).

தத்தமது சிநேகத்தி னெல்லைகள் சுருங்கியிருக்கவும் செல்வமுள்ள காலத்தில் புறத்துத்தோன்றுமல் வந்தவர் பின் கேடுவந்தவிடத்துச் செயல் வேறுபடுதலின் அக்கேட்டால் அச்சிநேகத்தினெல்லைகள் அளவுசெய்தறியப் படுமென்பதுபற்றிக் கேட்டினைக் கோல் ஆக்கியும்,

---

* புறத்துத்தோன்றுமற் போந்தார் – தத்தமது சிநேகத்தின் எல்லைகள் சுருங்கியிருத்தல் வெளிக்குத்தோன்றுவாறு உடனிருந்து வந்தவர்.

† '(கேடு) நீட்டியளப்பதோர்கோல்' எனக்கேட்டினைக் கோல் ஆக்கியும்.

‡ அதனல் - கேடாகிய கோலினல். ¶ அவரை - நட்டாரை.

$ கிளைஞர் என்னு முதற்பொருளின் பெயர் (நட்டாரென) அதன் பண்பாகிய நட்பினையுணர்த்துதலால் பொருளாகுபெயராம்.

‖ கேட்டினைக்கோல் என்றுருவகஞ் செய்தவர் அதற்கியையக்கிளை ஞரைப் புல (நில) மென்றுருவகஞ் செய்யாமையின், இக்குறள் ஏக தேசவுருவகவணியாயிற்று.

அதனல் அவரை அளந்தறிந்தால் ஆவாரையே கொள்ளுதலால் அவ்வறிவை 'உறுதி' என்றும் சொன்னர். கிளைஞர் – பொருளாகு பெயர். இஃது ஏகதேச வுருவகவணி, இவை நான்கு பாட்டாலும் சிநேகத்தினை ஆராயும் விதமும், ஆராய்ந்தால் சிநேகிக்கப்படுவார் இவரென்பதும் சொல்லப்பட்டன. கோல் – அளவுகோல்.

(கு–து.) ஒருவனுக் குண்டாகும் கேடு, அவன் தனது சிநேகிதரது தன்மையினை யளவு செய்தறிந்து கொள்ளுமொரு கோலாம்.

6. There is some good even in ruin; for it serves as a rod to measure fully the affections of one's relations.

---

## எ. ஊதிய மென்ப தொருவற்குப் பேதையார் கேண்மை யொரீஇ விடல்.

**பரி:—(இ–ள்.) ஒருவனுக்குப் *பேறென்று சொல்லப்படுவது அறிவிலாரோடு நட்புக் கொண்டானுயின் அதனை யொழிந்து †அவரி னீங்குதல், (எ–று).**

நட்பொழிந்தாலும் நீங்காக்கால் ‡வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமாறு போலத் §தீங்கு வருதலின் 'விடல்' என்றும், நீங்கியவழித் தீங்கொழிதலேயன்றி இருமை யின்பத்திற் குரிமை யெய்தலு முடைமையின் ¶அதனை 'ஊதியம்' என்றுங் கூறினர்.

தெளி:—(இ–ள்.) ஒருவற்கு – ஒருவனுக்கு, ஊதியமென்பது – பேறென்று சொல்லப்படுவது, பேதையார் – அறிவிலாதவருடன், (நட்புக் கொண்டானுயின்), கேண்மை – அந்நட்பினை, ஒரீஇ – ஒழிந்து, விடல் - (அவரினின்றும்) நீங்குதலாம், (எ–று).

(பேதையாரது) நட்பொழிந்தாலும் அவர் நீங்காதவிடத்து வாசனை வீசுகின்ற சந்தன மரமும் வேங்கை மரமும் வேகும் விதம் போன்று தீங்கு வருதலால் 'விடல்' என்றும், (பேதையாரினின்றும்) நீங்கியவிடத்துத் தீங்கொழிதலே யல்லாமல் இருமை யின்பத்திற்கு உரிமையடைதலு முடைமையால் அதனை 'ஊதியம்' என்றும் சொல்லினர்.

(கு–து.) அறிவில்லாரது சிநேகத்தை விட்டு அவரினின்றும் நீங்குதலே ஒருவனுக்குப் பேறும் என்பது.

---

* பேறு – இலாபம். † அவரின் – அறிவிலாரிடத்தினின்றும்.

‡ "மனத்தான் மறுவில ரேனுந்தாஞ் சேர்ந்த, இனத்தா லிகழப் படுவர் – புனத்து, வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே, எறிபுனந் தீப்பட்டக் கால்" என்று நாலடியார் கூறுவதிங்கறியத் தக்கதாம். நீதி வெண்பா "சந்தனத்தைச் சேர்தருவுந் தக்க மணங் கமழும், சந்தனத்தைச் சார்வேய் தழல்பற்ற அந்தவனம், தானுமச் சந்தனமுந் தன்னினமு மாள்வதன்றித், தானுங் கெடச் சுடுமே தான்" என்று கூறுகின்றது.

§ தீங்குவருதலின் – (அறிவிலார் நீங்காமையால்) தீமையுண் டாகுதலால்.

¶ அதனை – பேதையாரினின்றும் நீங்குதலை.

7. It is indeed a gain for one to renounce the friendship of fools.

---

அ. உள்ளற்க வுள்ளஞ் சிறுகுவ கொள்ளற்க
வல்லற்க ணாற்றறுப்பார் நட்பு.

பரி:—(இ–ள்.) தம்மூக்கஞ் சுருங்குதற்குக் காரணமாய வினைகளைச் செய்ய நினையாதொழிக ; அதுபோலத் தமக்கொரு துன்பம் வந்துழிக் கைவிடுவார் நட்பினைக் கொள்ளாதொழிக, (எ–று).

உள்ளஞ் சிறுகுவவாவன : தம்மின் வலியாரோடு *தொடங்கியனவும் †பயனில்லனவுமாம். ‡ஆற்றென்பது முதனிலைத் தொழிற்பெயர். ¶முன்னெல்லாம் வலியராவார் போன்று ஒழிதலின் $'ஆற்றறுப்பார்' என்றார். £எடுத்துக் காட்டு உவமை. ∮கொள்ளின் அழிந்தே விடுமென்பதாம்.

தெளி:—(இ–ள்.) உள்ளம் – (தம்) மனவெழுச்சி, சிறுகுவ – சுருங்குதற்குக் காரணமாகிய தொழில்களை, உள்ளற்க – (செய்ய) நினையாதிருக்கக் கடவர், (அதுபோல), அல்லற்கண் – (தமக்கொரு) துன்பம் வந்தவிடத்து, ஆற்றறுப்பார் – கைவிடுவாரது, நட்பு – சிநேகத்தை, கொள்ளற்க – கொள்ளாதிருக்கக் கடவர், (எ–று).

தம் மனவெழுச்சி சுருங்குதற்குக் காரணமாகிய தொழில்களாவன : தம்மிலும் வலியவரோடு தொடங்கியனவும் பயனில்லாதனவும் ஆம். ஆற்று என்பது முதனிலைத் தொழிற்பெயர். முன்னெல்லாம் வலியாவார் போன்றிருந்து ஒழிதலால் 'ஆற்றறுப்பார்' என்றார். ஆற்றறுத்தல் – வலியறுத்தல் ; அஃதாவது கைவிடுதல் இஃது எடுத்துக்காட்டுவமையணி. (அல்லற்கண் ஆற்றறுப்பாரது நட்பினைக்) கொண்டால் அழிந்தே விடுவனென்பதாம்.

---

* தொடங்கியனவும் – ஆரம்பித்த போர்த் தொழில்களும்.

† பயனில்லனவும் - பயனில்லாத தொழில்களும்.

‡ ஆற்று என்னும் பகுதி வலியாதல் (தாங்குதல்) என்னுந் தொழிற் பெயர்ப் பொருளதாய் நின்றது. ஆற்றுதல் விகுதிபெற்ற தொழிற் பெயர்.

¶ தமக்கு ஒரு துன்பம் வருவதன் முன்னெல்லாம் உறுதியாவார் (தாங்குவார்) போன்றிருந்து துன்பம் வந்தவிடத்து நீங்கிப்போதலால் 'ஆற்றறுப்பார்' என்று கூறப்பட்டது. (ஆற்றறுப்பார் – வலியறுப்பார் ; அஃதாவது கைவிடுவார்.)

$ வலியறுப்பார் என்றும் பாடமுண்டு.

£ உள்ளஞ் சிறுகுவ உள்ளற்க என்னும் வாக்கியத்திற்கும் அல்லற்க ணாற்றறுப்பார் நட்புக்கொள்ளற்க என்னும் வாக்கியத்திற்கும் இடையே அதுபோல என்னுஞ் சொல் தொக்கு நின்றமையின், இச்செய்யுள் எடுத்துக் காட்டுவமை யணியாயிற்று.

∮ கொள்ளின் – ஒருவன் தனக்கொரு துன்பம் வந்தவிடத்துக் கைவிடுவாரது சிநேகத்தைக் கொண்டால்.

(க-து.) துன்பம் வந்தவிடத்துக் கைவிடுவாரது சிநேகத்தைக் கொள்பவர் தவருது கெடுவர் என்பது.

8. Do not think of doing things that would bring cheerlessness to the mind nor contract friendship with those who would forsake you in adversity.

---

**௯. கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை யடுங்காலை**
**யுள்ளினு முள்ளஞ் சுடும்.**

பரி :—(இ-ள்.) ஒருவன் கெடுங்காலத்து அவனைவிட்டு நீங்குவார் முன்னவனோடு செய்த நட்பு, தன்னைக் கூற்றடுங்காலத்து *ஒருவன் நினைப்பினும், அந்நினைத்த வுள்ளத்தைச் சுடும், (எ-று).

*நினைத்த துணையானே இயைபில்லாத பிறனுக்குங் கூற்றினுங் கொடி தாமெனக் †கைவீடெண்ணிச்செய்த நட்பின் கொடுமை கூறியவாறு. ‡இனி அவன்றானே ஆக்கியகேடு தன்னை யடுங்காலை யுள்ளினும் அக்கேட்டினுஞ் சுடுமென்றுரைப்பாரு முளர்.* இவை மூன்றுபாட்டானும் ஆராய்ந்தால் நட்கப்படாதார் இவரென்பது கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) கெடுங்காலை – (ஒருவன்) கெடுங்காலத்து, கை விடுவார் – (அவனைவிட்டு) நீங்குவார், கேண்மை – (முன் அவனோடுசெய்த) நட்பானது, அடுங்காலை – (தன்னை யமன்) கொல்லுங் காலத்து, உள்ளினும் – (ஒருவன்) நினைத்தாலும், உள்ளம்– (அந்நினைத்த) உள்ளத்தை, சுடும் – வருத்தும், (எ-று).

நினைத்த வளவாலே சிநேக சம்பந்தமில்லாத பிறனுக்கும் யமனிலும் கொடிதாமென்று (கெடுங்காலைக்) கைவிடுதலெண்ணிச் செய்த நட்பின் கொடுமையைச் சொல்லியவாரும். இவை மூன்று பாட்டாலும் ஆராய்ந்தால் சிநேகிக்கப்படாதவர் இவரென்பது சொல்லப்பட்டது.

(க-து.) ஒருவன் கெடுங்காலத்து அவனைவிட்டு நீங்குவாரது சிநேகிதத்தைப் பிறன் மரணகாலத்தில் நினைத்தாலும், அஃ தவனது மனத்தை வருத்தும் என்பது.

9. The very thought of the friendship of those who deserted one at the time of adversity will burn one's mind even at death time.

---

* ஒருவன் – அயலா னொருவன். † கைவீடு – நீங்குதல்.

‡ இனி இக்குறளுக்கு (கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை – ஒருவன் கெடுங்காலத்து அவனைவிட்டு நீங்குவார் முன்னவனோடு செய்த நட்பு) (அந்நட்பினையுடைய) அவன்தானே (கெடுங்காலைக் கைவிடுவார்) செய்த கேட்டினை, (பதவுரை:-) அடுங்காலை – தன்னை (யமன்) வருத்துங்காலத்து, உள்ளினும் – நினைத்தாலும், (உள்ளம்– அந்நினைத்தவுள்ளத்தை), சுடும் – அக்கேட்டினும் வருத்தும் என்று பொருள் கூறுவாருமுண்டு கேண்மை சுடும் என்று கொள்க.

௧0. மருவுக மாசற்றார் கேண்மையொன் றீத்து
மொருவுக வொப்பிலார் நட்பு.

பரி:—(இ-ள்.) * உலகோடொத்துக் குற்றமற்றார் நட்பினையே பயில்க, உலகோடொத்தலில்லார் நட்பினை அறியாது கொண்டாராயின், அவர் வேண்டியதொன்றனைக் கொடுத்தாயினும் விடுக, (எ-று).

உலகோடொத்தார் நட்பு இருமை யின்பமும் பயத்தலின் 'மருவுக' என்றும், † அதனோடு மாறாயினார் நட்புத் துன்பமே பயத்தலின், ‡ 'ஒன்றீத்து மொருவுக' என்றுங் கூறினார். இதனால் ¶ அவ்விருமையுந் தொகுத்துக் கூறப்பட்டன.

தெளி:—(இ-ள்.) மாசற்றார் - (உலகத்தோடொத்துக்) குற்றமற்ற வரது, கேண்மை - நட்பினையே, மருவுக - பழகக்கடவர், ஒப்பிலார் - (உலகத்தோடு) ஒத்தலில்லாதவரது, நட்பு - நட்பினை, (அறியாது கொண்டாராயின்), ஒன்று (அவர் வேண்டியதாகிய) ஒன்றனை, ஈத்தும் - கொடுத்தாயினும், ஒருவுக - விடக்கடவர், (எ-று).

உலகத்தோடொத்துக் குற்றமற்றவரது நட்பு (இம்மை மறுமை யென்னும்) இருமை யின்பமும் தருதலால், அதனை 'மருவுக' என்றும், அதனோடு மாறாயினவர் நட்புத் துன்பமே தருதலால் அதனை 'ஒன்றீத்து மொருவுக' என்றும் சொல்லினார். இதனால் அவ்விருமை யும் தொகுத்துச் சொல்லப்பட்டன.

(க-து.) குற்றமற்றவரது சிநேகத்தைக் கொள்ளல் வேண்டும்; மற்றவரது சிநேகத்தைப் பொருள் கொடுத்தாயினும் விடல் வேண்டும் என்பது.

10. Continue to enjoy the friendship of the pure; but renounce even with a gift the friendship of those who do not act agreeably to the ways of the world.

---

* உலகோடொத்து - உயர்ந்தாரது ஒழுக்கத்திற்கு மாறுபடாது.

† அதனோடு - உலகோடு (உயர்ந்தாரது ஒழுக்கத்தோடு).

‡ அதனொழிவை விலைகொடுத்துங் கொள்க என்றும் பாடமுண்டு. அதனொழிவை - உலகத்தோடு விரோதப்பட்டிருப்பவரது சிநேகத்தின் ஒழிவை.

¶ அவ்விருமையும் - சிநேகிக்கப்படுவார் மாசற்றார் என்பதும் சிநேகிக்கப்படாதார் ஒப்பிலார் என்பதும். இவ்வதிகாரத்தின் நான்காவது குறளில் நல்லவர்களது நட்பைக் 'கொடுத்துங் கொளல் வேண்டும்' என்று கூறினவர் இங்குக் கெட்டவர்களது நட்பை 'ஒன்றீத்துமொருவுக' என்றார்.

# பதினெட்டாவது அதிகாரம்

## பழைமை – Long standing friendship

**பரி :— அஃதாவது நட்டாரது பழையராந்தன்மைபற்றி அவர் பிழைத்தன பொறுத்தல். *காரணப்பெயர் காரியத்திற்காயிற்று. ஆராய்ந்து நட்கப்பட்டாரேனும் பொறுக்கப்படுங் குற்றமுடைய ராகலானும் †ஊழ்வகையானும் நட்டார்மாட்டுப் பிழையுளதாமென்பது அறிவித்தற்கு, இது நட்பாராய்தலின் பின் வைக்கப்பட்டது.**

*தெளி: — அஃதாவது நட்பினரது பழையராந்தன்மைபற்றி அவர் பிழைத்தன பொறுத்தல். பழைமை யென்னுங் காரணப்பெயர் அப்பழைமைபற்றிச் செய்யும் பிழைத்தனவற்றைப் பொறுத்தலாகிய காரியத்திற்காயிற்று. ஆராய்ந்து சிநேகிக்கப்பட்டாராயினும் பொறுக்கப்படுங் குற்றமுடையராகலாலும் ஊழ்வகையாலும் சிநேகிதரிடத்துப் பிழையுளதா மென்பது அறிவித்தற்கு, இது (பழைமை) நட்பாராய்தலின் பின் வைக்கப்பட்டது.*

---

**க. பழைமை யெனப்படுவ தியாதெனின் யாதுங்**
**கிழமையைக் ‡கீழ்ந்திடா நட்பு.**

**பரி : – (இ–ள்.) பழைமையென்று சொல்லப்படுவ தியாதென்று வினவின், ¶அது பழைமையோர் உரிமையாற் செய்வனவற்றைச் சிறிதுஞ் | சிதையாது ||அவற்றிற் குடம்படும் நட்பு, (எ-று).**

*§கிழமை-ஆகுபெயர்; கெழுதகைமையெனவருவனவுமது. உரிமையாற் செய்வனவாவன: கருமமாயின செய்யுங்காற் கேளாது செய்தல், கெடும் வகை செய்தல், தமக்கு வேண்டியன தாமே கோடல், ()பணி-*

---

* *பழைமையென்னும் காரணப்பெயர் அதன் காரியமாகிய பிழைத்தன பொறுத்தலையுணர்த்துதலால் காரணவாகு பெயராம்.*

† *ஊழ்வகையானும் – விதிவசத்தாலும்.*

‡ *கீழ்ந்திடுதல் - சிதைத்தல்; கீழ்ந்திடாமை - சிதையாமை.*

¶ *அது - பழைமை.* | *சிதையாது - விலக்காமல்.*

|| *அவற்றிற் குடம்படும் - பழைமையோர் உரிமையால் செய்யுங் காரியங்களுக்குச் சம்மதிக்கும்.*

§ *கிழமை யென்னும் காரணப்பெயர் அதனாற் செய்யும் காரியங்களையுணர்த்துதலால் காரணவாகு பெயராம்; பின்னுள்ள குறள்களில் கெழுதகைமை (உரிமை) யென்று வருவனவும் இவ்வாறே காரணவாகு பெயர்களென்று கொள்க. கிழமை - உரிமை.*

() *பணிவு - வணக்கம். அச்சம் - பயம்.*

வச்சங்களின்மை யென்றிவை *முதலாயின. சிதைத்தல்-விலக்கல். இதனாற் பழைமையாவது காலஞ்சென்றதன்று; இப்பெற்றித்தாய நட்பென்பது கூறப்பட்டது.

தெளி:— (இ-ள்.) பழைமை யெனப்படுவது - பழைமை யென்று சொல்லப்படுவது, யாதெனின் - யாதென்று வினவின், (அது), கிழமையை - (பழைமையோர்) உரிமையாற் செய்யுங் காரியங்களை, யாதும் - சிறிதாயினும், கீழ்ந்திடா நட்பு - சிதையாது (அக்காரியங்களுக்கு உடன்படுவதாகிய) நட்பு, (எ-று).

கிழமை - கருவியாகு பெயர்; பின் கெழுதகைமையென வருவனவுமது. உரிமையாற்செய்வனவாவன: கருமங்களைச் செய்யும்போது கேளாது செய்தல், கெடும்வகை செய்தல், தமக்கு வேண்டியவற்றைத் தாமே கொள்ளுதல், பணிவச்சங்க ளில்லாமை யென்றிவை முதலாயின. சிதைத்தல் - விலக்குதல். இதனால் பழைமையாவது காலஞ்சென்றதன்று; இத்தன்மையதாய நட்பென்பது சொல்லப்பட்டது.

(க-து.) பழைமையோர் உரிமையாற் செய்வனவற்றைச் சிறிதும் விலக்காம லவற்றிற் குடன்படும் நட்பே பழைமையாம்.

1. Intimate friendship is that which cannot be injured in the least by actions done through the right of long standing intimacy.

———

## உ. நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற் குப்பாதல் சான்றோர் கடன்.

பரி:— (இ-ள்.) நட்பிற்கு அவயவமாவன நட்டார் உரிமையாற் செய்வன; அதனால் அவ்வுரிமைக்கு இனியராதல் அமைந்தார்க்கு முறைமை, (எ-று).

†வேறன்மை தோன்ற 'உறுப்பு' என்றார். ‡உறுப்பென்பது

---

* முதலாயின என்றமையின், அரசனுக்குச் சமமாகத் தம்மை நினைத்து அதற்கேற்ற கோலத்தோடு வருதல், முறை பாராட்டி யிழித்துக் கூறல் முதலியவற்றையுங் கொள்க.

† நட்பிற்கு நட்டார் உரிமையாற் செய்வன வேறன்மை (வேறு-பட்டிராமை) தோன்ற (நட்பென்னும் முதலுக்குச் சிநேகிதர் உரிமையாற் செய்வனவற்றை) 'உறுப்பு' என்று கூறினார். முதலு (பொருளு)க்குச்சினை (அவயவம்) வேறுபட்டிராமை போன்று நட்பிற்குச் சிநேகிதர் உரிமையாற் செய்வன வேறுபடாதிருக்கின்றன வென்பதாம்.

‡ பொருளினிடத்து உறுப்பும், குணமும், தொழிலும், ஜாதியும் இருப்பதன்றிக் குணத்தினிடத்து உறுப்பிருத்தல் கூடாமையால், நட்பென்னுங் குணத்திற்கு 'உறுப்பென்பது ஈண்டிலக்கணை யடியாக வந்த குறிப்புச்சொல்' என்று கூறப்பட்டது. இங்கு உறுப்பில்லாத குணம் உறுப்புடையதாகக் கூறப்பட்டவாறறிக.

* ஈண்டிலக்கணையடியாக வந்த †குறிப்புச்சொல். ‡அவயவமாத லறிந்தே இனியவராவரென்பது தோன்றச் சான்றோர்மேல் வைத்தார்.

தெளி :— (இ-ள்.) நட்பிற்கு—, உறுப்பு-அவயவமாவன, கெழு தகைமை - (நட்பினர்) உரிமையாற் செய்வனவாம், (அதனால்), அதற்கு - அவ்வுரிமைக்கு, உப்பாதல் - இனிமையராதல், சான்றோர் - நிறைந்தோர்க்கு, கடன் - முறைமை, (எ-று).

மற்று - அசை. (நட்பிற்குக் கெழுதகைமை) வேறுகாமைதோன்ற 'உறுப்பு' என்றார். உறுப்பென்பது இங்கு இலக்கணையடியாக வந்த குறிப்புச்சொல். (நட்பிற்குக் கெழுதகைமை) அவயவமாதலறிந்தே இனியவராவரென்பது தோன்றச் சான்றோர்மேல் வைத்துச் 'சான்றோர் கடன்' என்றார். சான்றோர் - பலகுணங்களாலும் நிறைந்தவர்.

(க-து.) சிநேகிதருரிமையாற் செய்வன நட்பிற்கு அவயவ மாதலின், அவற்றையினிமையாகக்கொள்வதே சான்றோர் கடனும்.

2. The essentials of friendship are acts done by the right of intimacy; to appreciate such a right is the duty of the wise.

---

ந. பழகிய நட்பெவன் செய்யுங் கெழுதகைமை
செய்தாங் கமையாக் கடை.

பரி :— (இ-ள்.) தாமுடம்படாதனவேனும் நட்டார் உரிமையாற் செய்தனவற்றிற்குத் தாஞ்செய்தாற்போல உடம்படாராயின், அவரோடு பழையதாய் வந்த நட்பு என்ன பயனைச் செய்யும், (எ-று).

செய்தாற்போல வுடம்படுதலாவது தாமும்அவரிடத்துரிமையா னுடம்படுதல். இவை யிரண்டுபாட்டானும் பழைமையான் வரும் உரிமையது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி :— (இ-ள்.) கெழுதகைமை - (தாம் உடன்படாதன வாயினும் நட்பினர்) உரிமையாற் செய்த காரியங்களுக்கு, செய் தாங்கு – (தாம்) செய்தாற்போல, அமையாக்கடை – உடன்படா ராயின், பழகிய – (அவரோடு) பழையதாய் வந்த, நட்பு - சிநேகம், எவன் செய்யும் - என்ன பயனைச் செய்யும், (எ-று).

(நட்பினர் தாமுடன்படாத காரியங்களை யுரிமையாற் செய்த விடத்துத் தாம்) செய்தாற் போன்று உடன்படுதலாவது தாமும்

---

* இலக்கணையாவது ஒருபொருளினிலக்கணத்தை மற்றொரு பொருட்குத் தந்துரைப்பது. [இங்கு முதலுக்குள்ள உறுப்பைக் குணத்திற்குத் தந்துரைத்தவாறறிக.]

† குறிப்புச்சொல் - செம்பொருளும் ஆகுபெயர்ப்பொருளு மல்லாத பொருளையுணர்த்துஞ்சொல்.

‡ சிநேகிதர் உரிமையாற் செய்வன நட்பிற்கு அவயவமாத லறிந்தே சான்றோர் அவ்வுரிமைக்கு இனியவராவரென்பதாம்.

அவரிடத்து உரிமையால் உடன்படுதல். இவை இரண்டுபாட்டாலும் பழைமையால்வரும் உரிமையது சிறப்புச் சொல்லப்பட்டது.

*(க-து.) சிநேகிதருரிமையாற் செய்த காரியங்களுக்கு உடன் படாதவரது நட்புப் பயனற்றதாம் என்பது.*

3. Of what avail is longstanding friendship, if friends do not admit as their own, the actions done by the right of intimacy.

---

**ச. விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகையாற் கேளாது நட்டார் செயின்.**

**பரி :— (இ-ள்.) தங்கருமத்தை நட்டார் உரிமையாற் கேளாது செய்தாராயின், அச்செயலது விழையப்படுந் தன்மைபற்றி அதனை விரும்புவர் அறிவுடையார், (எ-று).**

ஒருவர்க்குத் தங்கருமந் தாமறியாமன் முடிந்திருத்தலினூஉங்கு நன்மையின்மையின், அச்செயல் விழையத்தக்கதாயிற்று. அதனை †அவ்வாறறிந்து விரும்புதல் அறிவுடையார்க்கல்ல தின்மையின், அவர்மேல் வைத்துக்கூறினர். ‡ வேண்டியிருப்ப ரென்பது எழுந் திருப்பரென்பது போல ஒரு சொன்னீர்மைத்து. இதனாற்கேளாது செய்துழி அதனை விரும்புகவென்பது கூறப்பட்டது.

தெளி :— (இ-ள்.) நட்டார் - நட்பினர், கெழுதகையால் - உரிமையால், கேளாது - கேளாமல், செயின் - (தமதுகருமத்தைச்) செய்தாராயின், விழைதகையான் - (அச்செயலது) விரும்பப்படுந் தன்மைபற்றி, (அறிவுடையார்), வேண்டியிருப்பர் - (அச்செயலை) விரும்புவர், (எ-று).

ஒருவர்க்குத் தங்கருமம் தாம் அறியாமல் முடிந்திருத்தலைக் காட்டிலும் நன்மையில்லாமையால், அச்செயல் விரும்பத்தக்க தாயிற்று. அச்செயலை அவ்வாறறிந்து விரும்புதல் அறிவுடையார்க் கல்லது (மற்றவர்க்கு) இல்லாமையால், அவ்வறிவுடையார் மேல் வைத்து 'வேண்டியிருப்பர்' என்று சொல்லினர். வேண்டியிருப்பர் என்பது எழுந்திருப்பர் என்பதுபோல ஒரு சொற்றன்மையது. இதனால் (நட்பினர் தங்கருமத்தைக்) கேளாது செய்தவிடத்து அதனை விரும்புகவென்பது சொல்லப்பட்டது.

*(க-து.) சிநேகிதருரிமையாற் றம்மைக்கேளாது செய்த காரியத்தை அறிவுடையார் விரும்பி யேற்றுக்கொள்ளுவர் என்பது.*

---

† அவ்வாறறிந்து - விழையத்தக்கதாகவறிந்து.

‡ எழுந்திருப்பர் என்பது எழுவார் என்று பொருள்பட்டு ஒரு சொல்லின் தன்மையதாய் நின்றாற்போன்று வேண்டியிருப்பர் என்பது வேண்டுவார் என்று பொருள்பட்டு ஒருசொல்லின் தன்மைய தாய் நின்றதென்க.

4. If by the right of friendship friends do anything without being asked the wise will be pleased with them on account of its desirability.

---

௫. பேதைமை யொன்ரூ பெருங்கிழமை யென்றுணர்க
நோதக்க நட்டார் செயின்.

பரி:—(இ-ள்.) தாம் வெறுக்கத்தக்கனவற்றை நட்டார் செய்தாராயின், அதற்குக் காரணம் *ஒன்றிற் பேதைமை யென்ருதல் †ஒன்றின் மிக்க வுரிமை யென்ருதல் கொள்க, (எ–று).

‡ஒன்ரூ என்பது எண்ணிடைச்சொல். ∂'செயின்' எனவே, §தம்மியல்பாற் செய்யாமை பெற்ரும். ||இது வருகின்றவற்றுள்ளு மொக்கும். ০இழவூழான் வரும் பேதைமை யாவர்க்கு முண்மையிற் றமக் ¶கேதங்கொண்டாரென்ருதல் ϕஊழ்வகையான் எம்மின் வரற் பாலது ஒற்றுமை மிகுதிபற்றி £அவரின் வந்ததென்ருதல் கொள்வதல்லது $அன்பின்மையென்று கொள்ளப்படாதென்பதாம். கெடும் வகை செய்யின் ()அதற்குக் காரணம் இதனுற் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) நோதக்க – (தாம்) வெறுக்கத்தக்க செயல்களை, நட்டார் – சிநேகிதர், செயின் – செய்தாராளுல், (அதற்குக் காரணம்), பேதைமையொன்ரூ – (ஒன்றில்) அறியாமை யென்ருவது, பெருங் கிழமை (ஒன்ரூ) - (ஒன்றில்) மிக்க உரிமையென்ருவது, என்றுணர்க – என்று கொள்ளக்கடவர், (எ-று).

ஒன்ரூ என்பது எண்ணுப் பொருளில் வந்த இடைச்சொல். 'செயின்' எனவே, தம்மியல்பினுல் செய்யாமை பெற்ரும். இது

---

* ஒன்றில் – ஒருபட்சத்தில்.

† ஒன்றில் – மற்ருெருபட்சத்தில்.

‡ இவ்விடைச் சொல் பெருங்கிழமை யென்பதோடு மியைந்து நின்றது.

∂ 'செயின்' எனவே – தாம் வெறுக்கத்தக்கனவற்றைச் சிநேகிதர் செய்தாராயின் என்று சொல்லவே.

§ தம்மியல்பால் – சிநேகிதர் தமது சுபாவத்தினுல்.

|| இது – தம்மியல்பாற் செய்யாமை.

০ இழவூழ் – கைப்பொருளிழத்தற்குக் காரணமாகிய ஊழ் (விதி).

¶ ஏதங்கொண்டார் – தீங்கு செய்தார்.

ϕ ஊழ்வகையான் – விதிவசத்தால். உரிமைவகையான் என்றும் பாடமுண்டு.

£ அவரின் – சிநேகிதரால்.

$ அன்பின்மையான் வந்ததென்று என்றும் பாடமுண்டு.

() அதற்குக் காரணம் – கெடும்வகை செய்தற்குக் காரணம். அது பேதைமை அல்லது பெருங்கிழமையாம்.

*வருகின்ற குறள்களுள்ளும் ஒக்கும். இழவூழால்வரும் பேதைமை யாவர்க்குமிருத்தலால் தமக்கு ஏதங்கொண்டாரென்றுவது ஊழ் வகையால் எம்மால் வரக்கடவது ஒற்றுமை மிகுதிபற்றி அவரால் வந்ததென்றுவது கொள்வதல்லாமல் அன்பில்லாமை யென்று கொள்ளப்படாதென்பதாம். நட்டார் கெடும்வகை செய்தால், அதற்குக் காரணம் இதனுல் சொல்லப்பட்டது.*

(க-து.) *சிநேகிதர் வெறுக்கத்தக்க செயல்களைச் செய்தாராயின், அவை அவரது அறிவின்மையால் அல்லது உரிமையால் நேர்ந்தனவா மென்று அறிவுடையார் கொள்வர் என்பது.*

5. If friends should perform undesirable actions, understand that they are not only due to ignorance but also to the strong claims of intimacy.

---

**சு. எல்லைக்க ணின்றர் துறவார் தொலைவிடத்துந்**
**தொல்லைக்க ணின்றர் தொடர்பு.**

பரி :—(இ-ள்.) நட்பு வரம்பிகவாது அதன் கண்ணே நின்றவர் தம்மொடு பழைமையிற் றிரியாது நின்றரது நட்பினை †அவராற்றொலைவு வந்தவிடத்தும் விடார், (எ-று).

*பழைமையிற் றிரியாமை - உரிமை யொழியாமை. தொலைவு - ‡பொருட்கேடும் போர்க்கேடும்.*

தெளி:—(இ-ள்.) *எல்லைக்கணின்றர்* - (நட்பின் வரம்பு கடவாது) *அந் நட்பின் வரம்பிலே நின்றவர், தொல்லைக்கணின்றர்* - (தம்மோடு) *பழைமையில் வேறுபடாது நின்றவரது, தொடர்பு - நட்பினை, தொலை விடத்தும்* - (அவரால்) *தொலைவு வந்தவிடத்தும், துறவார் - விடார்,* (எ-று).

*பழைமையில் வேறுபடாமை - உரிமை யொழியாமை. தொலைவு - பொருட்கேடும் போர்க்கேடும்.*

(க-து.) *நட்பின் வரம்பிலே நின்றவர் தமது நட்பினரால் கேடு நேர்ந்தவிடத்தும் அவரது நட்பினை விடார் என்பது.*

6. Those who are within the bounds of friendship will not even when their friends cause them ruin give up their long standing intimacy.

---

**எ. அழிவந்த செய்யினு மன்பறு ரன்பின்**
**வழிவந்த கேண்மை யவர்.**

பரி :—(இ-ள்.) நட்டார் தமக் *கழிவுவந்தவற்றைச் செய்தாராயினும் அவர்மாட் டன்பொழியார் ; அன்புடனே பழையதாய் வந்த நட்பினை யுடையார், (எ-று).

---

† *அவரால் - தொல்லைக்க ணின்றரால்.*

‡ *பொருட்கேடு - உள்ளபொருள் தொலைதல் ; போர்க்கேடு - போரில் தோல்வியடைதல்.*

* *அழிவுவந்தவற்றை - அழிவு தரத்தக்க செயல்களை.*

*அழியென்பது முதனிலைத் தொழிற்பெயர், அழிவு - மேற்சொல்லியகேடுகள். இவை யிரண்டு பாட்டானுங் கேடுசெய்தக்கண்ணும் நட்பு விடற்பாற்றன்றென்பது கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) அன்பின் - அன்புடனே, வழிவந்த - பழையதாய் வந்த, கேண்மையவர் - நட்பினையுடையவர், (நட்பினர்), அழிவந்த - (தமக்கு) அழிவுவந்த செயல்களை, செய்யினும் - செய்தாராஞலும், அன்பறார் - (அந்நட்பினரிடத்து) அன்புநீங்கார், (எ-று).

அழியென்பது முதனிலைத் தொழிற்பெயர். அழிவு - முற்கூறிய பொருட்கேடும் போர்க்கேடும். இவை இரண்டுபாட்டாலும் நட்பினர் கேடுசெய்தவிடத்தும் அவரது நட்பு விடுதற்பான்மையதன்றென்பது சொல்லப்பட்டது.

(க-து.) பழைமையாய் வந்த நட்பினையுடையவர் தமது நட்பினர் தமக்குக் கெடுதி செய்தாலும் அவரிடத்து அன்பு நீங்கார்.

7. Those who have long been affectionate will not give up their affection even should their friends cause them their ruin.

---

அ. கேளிழுக்கங் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு
நாளிழுக்க நட்டார் செயின்.

பரி :—(இ-ள்.) நட்டார்செய்த பிழையைத் தாமாகவே யன்றிப் பிறர் சொன்னாலுங் †கொள்ளாத உரிமையறிய வல்லார்க்கு அவர் பிழை செய்வாராயின், ‡அது பயன்பட்ட நாளாம், (எ–று).

பிழையாவன: சொல்லாது ¶நற்பொருள் வௌவல், பணியாமை, அஞ்சாமை §முதலாயின. கேட்டல் – £உட்கோடல், கெழுதகைமை வல்லாரென்பது ஒரு பெயராய்க் கேளாதவென்னு மெச்சத்திற்கு $முடிபாயிற்று. செய்து போந்துழியல்லது ɸஅவ்வுரிமை வெளிப்படாமையின், @செய்யாதன நாளல்லவாயின. இதனாற் பிழை பொறுத்தற் சிறப்புக் கூறப்பட்டது.

---

* அழி என்னும் பகுதி அழிவு என்னுந் தொழிற்பெயர்ப் பொருளை யுணர்த்தி நின்றமையின், முதனிலை (பகுதி)த் தொழிற்பெயராயிற்று.

† கொள்ளாத - அங்கீகரியாத. ‡ அது - பிழை (தவறு) செய்தநாள்.

¶ நற்பொருள் வௌவல் - சிறந்தபொருள்களைத் தமக்குரியதாகக் கொள்ளுதல்.

§ முதலாயின என்றமையின், மேற்கொண்ட காரியத்தைக் கெடும் வகைசெய்தல், கேளாமலே யாதேனுமொரு காரியத்தைத் தொடங்கிச் செய்தல் முதலியவற்றையுங் கொள்க.

£ உட்கோடல் - மனத்திற்கொள்ளுதல்.

$ முடிபாயிற்று - முடிக்குஞ் சொல்லாயிற்று.

ɸ அவ்வன்மை யென்றும் பாடமுண்டு. அது கெழுதகைமை (உரிமை)யின் வல்லமை. @ செய்யாதன - சிநேகிதர் தவறுசெய்யாத நாள்கள்.

தெளி :—(இ-ள்.) கேள் - நட்பினர், (செய்த), இழுக்கம் - பிழையை, கேளா - (தாமாகவேயல்லாமல் பிறர்சொன்னாலும்) கொள்ளாத, கெழுதகைமைவல்லார்க்கு - உரிமையையறிய வல்லவர்க்கு, நட்டார் - அந்நட்பினர், இழுக்கம் - பிழையை, செயின் - செய்வாரானால், (அது), நாள் - (பயன்பட்ட) நாளாம், (எ-று).

பிழையாவன : சொல்லாமல் நற்பொருள் வெளவல், பணியாமை, அஞ்சாமை முதலாயின. கேட்டல் - உட்கொள்ளுதல். கேளா என்னும் ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் கெழுதகைமை வல்லார் என்னும் பெயரைக்கொண்டு முடிந்தது. கெழுதகைமைவல்லார் என்பது தொடர்மொழியாய் நில்லாது இங்கு ஒருமொழியாய் நின்றது. நட்பினர் பிழை செய்தவிடத்தல்லாமல் அவ்வுரிமை வெளிப்படாமையால், செய்யாத நாள்கள் நாளல்லவாயின. இதனால் பிழைபொறுத்தற் சிறப்புச் சொல்லப்பட்டது.

(க-து.) நட்பினர்செய்த பிழையைக் கவனியாதவர்க்கு அவர் பிழைசெய்தநாள் பயன்பட்ட நாளாம் என்பது.

8. To those who can understand that they should not listen to tales about the faults of their friends, that is a profitable day on which the latter may commit a fault.

---

**கூ. கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை**
**விடாஅர் விழையு முலகு.**

பரி :—(இ-ள்) உரிமையறாது பழையதாய்வந்த நட்பினையுடையாரது நட்பினை ¶அவர் பிழைநோக்கி விடுதல் செய்யாதாரை உலகம் நட்புக்குறித்து விரும்பும், (எ-று).

*கெடாஅதென்பத னிறுதிநிலை விகாரத்தாற் றொக்கது. †'விடாஅர்' எனவே, ‡விழைதற்காரணங் கூறப்பட்டது. நம்மாட்டும் இவரித்தன்மையராவரென்று யாவருந் தாமேவந்து நட்பாவரென்பதாம். $கெடாரென்று பாடமோதி, நட்புத்தன்மையிற் கெடாராகி யென்றுரைப்பாருமுளர்.

தெளி :—(இ-ள்.) கெடாஅ - (உரிமை) கெடாது, வழிவந்த - பழையதாய் வந்த, கேண்மையார் - நட்பினையுடையவரது, கேண்மை - நட்பினை, விடாஅர் - (அவர் பிழைநோக்கி) விடுதல் செய்யாதவரை, உலகு - உலகமானது, விழையும் - (நட்புக்குறித்து) விரும்பும், (எ-று).

---

¶ அவர் பிழைநோக்கி - நட்பினையுடையார் செய்த பிழையைக் கருதி.

* கெடாஅது என்பது எதிர்மறை வினையெச்சம்.

† விடாதாரை என்றும் பாடமுண்டு.

‡ விடுதற்காரணம் என்றும் பாடமுண்டு. அது சிநேகிதர் செய்யும் பிழையை நோக்குதல்.

$ கெடாஅ என்பதைக் கெடார் என்று பாடங்கூறி, அதற்குச் சிநேகத் தன்மையிற் கெடாதவராகி யென்று பொருள் கூறுவாருமுண்டென்பது.

*கெடாஅது என்பதன் துவ்விகுதி செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது. 'விடாஅர்' எனவே, (உலகம் அவரை) விரும்புதற்குக் காரணம் சொல்லப்பட்டது. நம்மிடத்தும் இவர் இத்தன்மைய ராவாரென்று யாவரும் தாமே வந்து நட்பாவரென்பதாம்.*

*(க-து.) உரிமை கெடாது தொன்று தொட்டு வந்த நட்பினரது நட்பினை விடாதவரை உலகத்தார் நட்புக்குறித்து விரும்புவர்.*

9. They will be befriended by the world who have not forsaken the friendship of those with whom they have kept up an unbroken long standing intimacy.

---

**கo. விழையார் விழையப் படுப பழையார்கட்**
**பண்பிற் றலைப்பிரியா தார்.**

**பரி: (இ-ள்.) பழைய நட்டார் பிழை செய்தாராயினும் † அவர் மாட்டுத் தம் பண்பினீங்காதார் பகைவரானும் விரும்பப்படுவர், (எ-று).**

*தம் பண்பாவது செய்யாத முன்போல அன்புடையராதல். ‡மூன்றனுருபுஞ் சிறப்பும்மையும் விகாரத்தாற் றொக்கன. ¶அத்திரி பின்மை நோக்கிப் பகைவரும் நட்டாராவரென்பதாம். இவை யிரண்டுபாட்டானும் பழைமையறிவார் எய்தும் பயன் கூறப்பட்டது.*

*தெளி :—(இ-ள்.) பழையார்கண் - (பழையநட்பினர் பிழை செய்தாராயினும்) அந்நட்பினரிடத்து, பண்பிற்றலைப்பிரியாதார் - (தம்) பண்பினின்றும் நீங்காதவர், விழையார் - பகைவராலும், விழையப்படுப - விரும்பப்படுவர், (எ-று).*

*தம்பண்பாவது பிழைசெய்யாத முன்போல (பழையார்கண்) அன்புடையவராதல் (விழையாராலும் என்னும்) மூன்றனுருபும் இழிவு சிறப்பும்மையும் விகாரத்தாற்றொக்குநின்றன. அத்திரிபில் லாமை நோக்கிப் பகைவரும் நட்பினராவரென்பதாம். இவை யிரண்டு பாட்டாலும் பழைமையையறிவார் அடையும் பயன் சொல்லப்பட்டது. பண்பு - நற்குணம்.*

*(க-து.) தொன்று தொட்டு வந்த நட்பினர் செய்த பிழையைப் பொறுப்பவரை அவரது பகைவரும் விரும்புவர் என்பது.*

10. Even enemies will love those who have never changed their affection for their long standing friends.

---

*† அவர்மாட்டு - பழைய சிநேகிதரிடத்து.*

*‡ விழையார் என்பதனிறுதியில் ஆன் என்னும் மூன்றனுருபும், உம் என்னும் இழிவு சிறப்பும்மையும் செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றன.*

*¶ அத்திரிபின்மை - பிழைசெய்தபோதுங் குணம் வேறுபடாமை.*

# பத்தொன்பதாவது அதிகாரம்

## 82. தீ நட்பு : Evil Friendship

பரி:—இனிப் பொறுக்கப்படாத குற்றமுடைமையின் விடற்பாலதாய நட்பு நட்பாராய்தற்கட் சுருங்கச் சொல்லிய துணையான் அடங்காமையின், *அதனை †யிருவகைப்படுத்து இரண்டதிகாரத்தாற் கூறுவான்றொடங்கி, முதற்கட் டீநட்புக் கூறுகின்றார். ‡அஃதாவது தீக்குணத்தாரோடு உளதாய நட்பு. ¶குணத்தின்றீமை ஒற்றுமைபற்றியுடையார் மேற்றாய், அது பின் அவரோடு செய்த நட்பின் மேற்றாயிற்று. ०அதிகார முறைமை கூறாமையே விளங்கும்.

தெளி :—இனிப் பொறுக்கப்படாத குற்றமுடைமையால் விடத்தக்கதாகிய நட்பு நட்பாராய்த லதிகாரத்தில் சுருங்கச் சொல்லிய வளவால் அடங்காமையால், அந்நட்பினை இருவகைப்படுத்தி இரண்டதிகாரத்தால் சொல்லத் தொடங்கி, முன்னர்த் தீநட்புச் சொல்லுகிறார். அஃதாவது தீக்குணத்தாரோடு உண்டாகிய நட்பாம். குணத்தினது தீமை ஒற்றுமைபற்றி அக்குணமுடையவர் மேலதாய், அது பின் அக்குண முடையாரோடு செய்த நட்பின் மேலதாயிற்று. அதிகாரமுறைமை சொல்லாமலே விளங்கும்.

---

க. பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்ற லினிது.

பரி:—(இ-ள்.) காதன் மிகுதியாற் பருகுவார் போன்றாராயினுந் தீக்குணமுடையார் நட்பு வளர்தலிற் றேய்தல் நன்று, (எ-று).

**"பருகுவன்ன வருகா நோக்கமொடு" என்றாற் பிறரும். §§'பண்

---

* அதனை - விடத்தக்க நட்பினை.

† இருவகைப்படுத்து - தீநட்பு கூடாநட்பு என்றிருவகையாக்கி.

‡ அஃதாவது - தீநட்பாவது.

¶ குணத்தின் தீமை குணமுடையார்க்காவது குணத்தின் தருமம் குணிக்காய வுபசாரவழக்காம்; பின் அஃது அவரது நட்புக்காவது குணியின் தருமம் குணத்திற்காய வுபசார வழக்காம். குணத்தின் தீமை அதனையுடையவரையுணர்த்துதலால் பண்பாகுபெயர்; பின் அத்தீக்குண முடையவருடன் செய்த நட்பினையுணர்த்துதலால் பொருளாகுபெயர்; ஆகவே, இஃதிருமடியாகு பெயராமெனினு மொக்கும்.

० பழைமை யென்னும் அதிகாரத்தின்பின் தீநட்பு என்னும் அதிகாரம் வைத்த முறைமை.

** பத்துப்பாட்டு - பொருநராற்றுப்படை - 77-வது வரி. இதன் பொருள் (தன்னைக்கண்ணுற்) பருகுந் தன்மையை யொத்த கெடாத பார்வையாலே என்பது. பருகுதல் - குடித்தல்.

§§ நற்குணமில்லாரெனவே என்றும் பாடமுண்டு.

பிலார்' எனவே, தீக்குண முடையாரென்பது *அருத்தாபத்தியான் வந்தது. பெருகினல் வருங்கேடு குன்றினல் வாராமையின் 'குன்றலி னிது' என்றார். இதனாற்றீநட்பினது ஆகாமை பொதுவகையாற் கூறப்பட்டது; இனிச் சிறப்பு வகையாற் கூறுப.

தெளி :—(இ-ள்.) பருகுவார் போலினும்- (ஆசை மிகுதியால்) பருகுவார் போன்றாராயினும், பண்பிலார்-நற்குணமில்லாதவரது (தீக்குணமுடையாரது), கேண்மை - நட்பானது, பெருகலின்-வளர்தலினும், குன்றல் - குறைதல், இனிது - நல்லது, (எ-று).

'பண்பிலார்' எனவே, தீக்குணமுடையாரென்பது அருத்தாபத்தியாற் பெறப்பட்டது. பண்பிலார்கேண்மை பெருகினல் வருங்கேடு குன்றினல் வாராமையால் 'குன்றலினிது' என்றார். இதனல் தீநட்பினது ஆகாமை பொதுவகையாற் சொல்லப்பட்டது; இனிச்சிறப்புவகையாற் கூறுவர்.

(க-து,) நற்குண மில்லாதவரது சிநேகம் வளர்தலினுங் குறைதல் நல்லது என்பது.

1. The decrease of friendship with those who are really destitute of goodness, but look as if they would eat you up through excess of love, is far better than its increase.

---

உ. உறினட் டறினொரூஉ மொப்பிலார் கேண்மை
பெறினு மிழப்பினு மென்.

பரி: - (இ-ள்.) தமக்குப் பயனுள்வழி நட்புச்செய்து அஃதில் வழி யொழியும் †ஒப்பிலாரது நட்பினைப் பெற்றால் ‡ஆக்கமியாது ? இழந்தாற் ¶கேடியாது? (எ-று).

0தமக்குற்றன பார்ப்பார் பிறரொடு பொருத்தமிலராகலின், அவரை 'ஒப்பிலார்' என்றார். $அவர்மாட்டு நொதுமறறன்மையே அமையுமென்பதாம்.

தெளி: (இ-ள்.) உறின் - (தமக்குப் பயன்) உள்ளவிடத்து, நட்டு - சிநேகஞ் செய்து அறின் - (அப்பயன்) இல்லாவிடத்து, ஒரூஉம்-ஒழியும், ஒப்பிலார் - ஒப்பிலாரது, கேண்மை - சிநேகத்தை, பெறினும் (என்)-பெற்றால் (ஆக்கம்) யாது, இழப்பினும் என் இழந்தால் (கேடு) யாது ? (எ-று).

---

* அருத்தாபத்தியாவது இங்ஙனமன்றாயின் இது கூடாதென்றுணர்வது. அது, தீக்குண முடையாரலராயின், பண்பிலாராதல் கூடாது; பண்பிலாரா யிருத்தலால் தீக்குண முடையாரென்பது பெறப்பட்டது என்பதாம்.

† ஒப்பிலாரது - மனமொத்திராதவரது. ‡ ஆக்கம் - இலாபம்.

¶ கேடு - நஷ்டம். 0 தமக்குற்றன - தமக்கு வரும் பயன்களை.

$ அவர்மாட்டு - தமக்குற்றன பார்ப்பாரிடத்து.

*தமக்கு உற்றன பார்ப்பார் பிறரோடு பொருத்தமிலராகலால், அவரை 'ஒப்பிலார்' என்றார். அவரிடத்து அயலாந்தன்மையே பொருந்து மென்பதாம். உம் இரண்டும் அசைநிலை. என் என்னும் வினா இங்கு இன்மைப் பொருளில் வந்தது; அது பெறினும் என்பதனோடுங் கூட்டப்பட்டது.*

(க-து.) *பயனோக்கிச் சிநேகிப்பாரது சிநேகம் இருந்தாலும் பயனில்லை; ஒழிந்தாலும் பயனில்லை என்பது.*

2. Of what avail is it to acquire or lose the friendship of those who befriend when there is gain and forsake when there is no gain?

---

## ங. உறுவது சீர்தூக்கு நட்பும் பெறுவது
## கொள்வாருங் கள்வரு நேர்.

**பரி:—(இ-ள்) நட்பளவு பாராது அதனால் வரும் பயனளவு பார்க்கும் நட்டாரும், *கொடுப்பாரைக் கொள்ளாது விலையைக் கொள்ளும் †பொதுமகளிரும், பிறர் கேடுநோக்காது அவர் சோர்வு நோக்குங் கள்வரும் தம்முளொப்பர், (எ-று).**

*‡நட்பு-ஆகுபெயர். பொருளையே குறித்து வஞ்சித்தொழுகலின். ¶கணிகையர் கள்வ ரென்றிவரோ டொப்பரென்பதாயிற்று. இவை இரண்டு பாட்டானுந் தமக்குறுவது பார்ப்பார் நட்பின்றீமை கூறப்பட்டது.*

தெளி:—(இ-ள்.) *உறுவது (நட்பளவு பாராமல் அந்நட்பால்) வரும் பயனளவை, சீர்தூக்கு நட்பும் - பார்க்கும் நட்பினரும், பெறுவது கொள்வாரும் - (கொடுப்பாரைக் கொள்ளாமல்) விலையைக் கொள்ளும் வேசையரும், கள்வரும் - பிறர் கேடுநோக்காது அவர் சோர்வு பார்க்கும்) கள்வரும், நேர் - (தம்முள்) ஒப்பர்,* (எ-று).

*நட்பு-பண்பாகுபெயர். பொருளையே குறித்து வஞ்சித்து நடத்தலால், உறுவது சீர்தூக்கும் நட்பினர் வேசையர் கள்வரென்ற இவரோடு ஒப்பாவரென்பதாயிற்று. இவை இரண்டு பாட்டாலும் தமக்குவரும் பயனளவைப் பார்ப்பவரது நட்பின் தீமை சொல்லப் பட்டது. நேர்வர் என்னும் வினைமுற்று வகர விடைநிலையும் அர் விகுதியும் கெட்டு நேர் என வந்தது.*

(க-து.) *பிறரோடு பயனோக்கிச் சிநேகிப்பர் வேசையரையும் கள்வரையும் ஒப்பர் என்பது.*

---

* *கொடுப்பாரை - விலையாகப் பொருளைக் கொடுப்பவரை.*

† *பொது மகளிர் - போகமனுபவிப்பதற்காகப் பொருளை விலையாகக் கொடுக்கும் பலர்க்கும் பொதுவாயிருக்கும் பெண்கள்.*

‡ *நட்பு என்னும் பண்புப்பெயர் அதனையுடையவரையுணர்த்துதலால் பண்பாகுபெயராம்.* ¶ *கணிகையர்-பொதுமகளிர்.*

3. Friends who calculate the profits of friendship, prostitutes who are intent on obtaining their gains and thieves are all of the same stock.

---

## ச. அமரகத் தாற்றறுக்குங் கல்லாமா வன்னார் தமரிற் றனிமை தலை.

பரி:—(இ-ள்.) அமர்வாராத முன்னெல்லாந் தாங்குவது போன்று வந்துழிக் களத்திடை வீழ்த்துப்போங் கல்வியில்லாத புரவிபோல்வாரது *தமர்மையில் தனிமை சிறப்புடைத்து, (எ-று).

கல்லாமை - †கதியைந்தும் ‡சாரிபதினெட்டும் ||பொருமுரணாற்றலும் அறியாமை. துன்பம் வாராத முன்னெல்லாந் துணையாவார் போன்று வந்துழி விட்டு நீங்குவரென்பது உவமையாற் பெற்றாம். §அவர் தமரானால் வருமிறுதி தனியானால் வாராமையின், தனிமையைத் 'தலை' என்றார். எனவே, ¶அதுவுந் தீதாதல் பெறுதும்.

தெளி.—(இ-ள்.) (போர்வராத முன்னெல்லாம் தாங்குவது போன்றிருந்து) அமரகத்து - போர்வந்த விடத்து, ஆற்றறுக்கும் - போர்க்களத்தில் தள்ளிவிட்டுப் போகின்ற, கல்லா - கல்வியில்லாத, மாவன்னார் - குதிரைபோல்பவரது, தமரின் - தமராந்தன்மையிலும், தனிமை - தனித்திருத்தல், தலை - சிறப்புடையது, (எ-று).

கல்லாமை - கதியைந்தும், சாரி பதினெட்டும், போர் செய்யுந் திறமும் அறியாமை. (தீநட்பினர்) துன்பம் வாராத முன்னெல்லாந் துணையாவார் போன்றிருந்து அது வந்தவிடத்து விட்டு நீங்குவா ரென்பது 'அமரகத்தாற்றறுக்குங் கல்லாமா' என்னும் உவமானத்தாற் பெற்றாம். அவர் தமரானால் வரும் அழிவு தனியானால்

---

* தமர்மையில் - சிநேகிதராந் தன்மையிலும்.

† ஐந்துகதியாவன : மல்ல (மல்லர்) கதி, மயூர (மயில்) கதி, வாநர (குரங்கு) கதி, வல்லிய (புலி) கதி, விடை (ரிஷப) கதி என்பனவாம். கதி - நடை. "மல்லொடு மயூர மற்றை வானரம் வல்லி யங்கள், சொல்லுமால் விடைக ளென்ப துரகத கதிகளைந்தாம்" என்பது நிகண்டு.

‡ "ஐந்து கதியும் பதினெட்டுச் சாரியையுங், கந்து மறமுங் கறங்குளைமா - முந்துற, மேல்கொண் டவைசெலீஇ வென்வேலான் மேம்பட்டான், வேல்கொண்ட கண்ணாளை மீட்டு" என்பது புறப்பொருள் வெண்பாமாலை.

சாரிபதினெட்டு - பதினெட்டு வகைப்பட்ட சுற்றுவரவு. சாரி - சுற்றுவரவு ; அஃதாவது வட்டமாகவோடல்.

|| பொருதல் - போர் செய்தல் ; முரண் - மாறுபாடு ; ஆற்றல் - வல்லமை. பொருமுரணாற்றலென்பதன் திரண்ட பொருள் பகைவரோடு மாறுபட்டுப் போர் செய்யுந் திறமென்பதாம்.

§ அவர் - கல்லாமா அன்னார்.

¶ அதுவும் - தனிமையும்.

வாராமையால், தனிமையைத் 'தலை' என்றார். எனவே, அதுவும் தீதாதல் பெறப்பட்டது. தமர் – நட்பினர்.

(க-து.) துன்பம் வந்தபோது விட்டு நீங்குவாரது சிநேகத்தைக் கொள்வதிலும் தனித்திருத்தல் நல்லது என்பது.

4. Solitude is far better than the society of those who are like the untrained horses which throw down their rider in the battle – field.

---

ரு. செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை
யெய்தலி னெய்தாமை நன்று.

பரி:—(இ-ள்.) செய்து வைத்தாலும் அரணாகாத கீழ்மக்களது தீநட்பு ஒருவற் குண்டாகலின், இல்லையாதல் நன்று, (எ-று).

சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. அரணாகாமை – தொலைவின் கண்விட்டு நீங்குதல். *'எய்தலி னெய்தாமை நன்று' என்பதற்கு †மேலுரைத் தாங்குரைக்க. சாராத வென்னும் பெயரெச்சம் கேண்மை யென்னும் பெயர் கொண்டது; சிறியவரென்பதனைக் கொள்ளின், செய்தென்பது ‡நின்றுவற்றும். இவை இரண்டு பாட்டானுந் ||தொலைவிற் றுணையாகாத நட்பின்றீமை கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) செய்து – செய்துவைத்தாலும், ஏமஞ்சாரா – காவலாகாத, சிறியவர் – கீழ்மக்களது, புன்கேண்மை – தீநட்பு, எய்தலின் – (ஒருவனுக்கு) உண்டாதலைக் காட்டிலும், எய்தாமை – இல்லாதிருத்தல், நன்று – நல்லது, (எ-று).

செய்தும் என்னும் உயர்வு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கு நின்றது. காவலாகாமை – தொலைவினிடத்து விட்டு நீங்குதல். 'எய்தலி னெய்தாமை நன்று' என்பதற்கு முன் உரைத்தவாறு உரைத்துக்கொள்க. சாரா என்னும் ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் கேண்மை யென்னும் பண்புப் பெயர் கொண்டு முடிந்தது. சாரா என்பது சிறியவரென்னும் பெயர் கொண்டு முடிந்ததென்று

---

* செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை ஒருவற்குண்டாதலினால் வரும் அழிவு அவரைச் சிநேகங் கொள்ளாது தனியாயிருத்தலினால் வாராமையினால், அச் சிறியவரது சிநேகமில்லாதிருத்தலை 'நன்று' என்றார் என்பதாம்.

† மேலுரைத்தாங்கு – 'அமரகத்து' என்று மேலுள்ள குறளில் 'தமரிற் றனிமை தலை' என்பதற்கு விசேடங் கூறினாற்போல.

‡ நின்று வற்றும் – இருந்தும் பயனில்லாது போம்; இது செய்யுட் குற்றங்களுள் ஒன்றாம்.

|| தொலைவில் – அழிவு வந்தவிடத்து.

கொள்ளின், செய்து என்னும் வினையெச்சம் நின்று பயனின்மை யென்னுங் குற்றமுடையதாம்; அஃதாவது சொல்லிருந்தும் பயனில்லாது போதலாம். செய்து சாராக் கேண்மை என்று கொள்க. இவையிரண்டு பாட்டாலும் தொலைவில் துணையாகாத நட்பினது தீமை சொல்லப்பட்டது.

(க-து.) கீழ்மக்களது சிநேகம் உண்டாதலைப் பார்க்கிலும் உண்டாகா திருத்தல் நல்லது என்பது.

5. It is far better to avoid than to acquire the friendship of the base who cannot protect their friends even when appointed to do so.

---

சுா. **பேதை பெருங்கெழீஇ நட்பி னறிவுடையா**
**ரேதின்மை கோடி யுறும்.**

**பரி :— (இ-ள்.) அறிவிலானது மிகச்செறிந்த நட்பின் அறிவுடை யானது பகைமை கோடிமடங்கு நன்று, (எ-று).**

†கெழீஇய என்பத னிறுதிநிலை விகாரத்தாற் றொக்கது. ‡பன்மை உயர்த்தற்கண் வந்தது. அறிவுடையான்பகைமை ஒரு தீங்கும் பயவாமை யானும் பேதைநட்பு எல்லாத்தீங்கும் பயத்தலானும் ¶'கோடியுறும்' என்றார். 0பெருங்கழி நட்பென்று பாடமோதுவாரு முளர்.

தெளி :— (இ-ள்.) பேதை-அறிவில்லாதவனது, பெருங்கெழீஇ நட்பின் - மிகநெருங்கிய நட்பைப்பார்க்கிலும், அறிவுடையார் - அறிவுடையவனது, ஏதின்மை - பகைமை, கோடியுறும்-கோடிப்பங்கு நல்லது, (எ-று).

கெழீஇய என்பதன்விகுதி செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது. அறிவுடையான் என்னும் ஒருமை உயர்த்துதற்பொருட்டு அறிவுடையார் எனப் பன்மையாகக் கூறப்பட்டது. அறிவுடை யவனது பகைமை ஒரு தீங்குந் தாராமையாலும் பேதையினது நட்பு

---

† கெழீஇய என்பது இறந்தகாலப் பெயரெச்சம்; அதனது இறுதி நிலை (அகரவிகுதி) செய்யுள் விகாரத்தாற் றொக்கு நின்றது.

‡ பேதையென்பதற்கேற்ப ஒருமையால் அறிவுடையான் என்று கூறுது உயர்த்தற்பொருட்டு அறிவுடையார் எனப்பன்மையால் கூறினமையின், 'பன்மை உயர்த்தற்கண் வந்தது' என்று கூறப் பட்டது. இதற்குவிதி 'ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்' என்னுந் தொல்காப்பிய சூத்திரமாம்.

¶ கோடி - நூறுலட்சம். 'பழுதெண்ணுமந்திரியின்' என்னுங் குறளின் விசேடவுரையில் ''எழுபதுகோடி யென்றது மிகப்பலவாய எண்ணிற்கொன்று காட்டியவாறு'' என்று கூறியிருத்தலுமிங்குக் கவனிக்கத்தக்கதாம்.

0 பெருங் கெழீஇ நட்பு என்பதனைப் பெருங்கழி நட்பு என்று பாடங்கூறுவாருமுண்டு. பெருங்கழிநட்பு - மிகவதிகமாய சிநேகம்.

எல்லாத்தீங்குந் தருதலாலும் (பேதை பெருங்கெழீஇ நட்பி னறிவுடையா, ரேதின்மை) 'கோடியுறும்' என்றார். ஏதின்மை - இயைபில்லாமை.

(க-து.) அறிவில்லாதவனது சிநேகத்தைக் கொள்ளுவதிலும் அறிவுடையவனது பகைமையைக் கொள்ளுதல் நல்லது என்பது.

6. The enmity of the wise is ten-million times more profitable than the close intimacy of the fool.

---

### எ. நகைவகைய ராகிய நட்பிற் பகைவராற் பத்தடுத்த கோடி யுறும்.

பரி :— (இ-ள்.) ‡தாமறிதல் வகையராகாது நகுதல் வகையராதற் கேதுவாகிய நட்பான் வருவனவற்றின் பகைவரான் வருவன பத்துக் கோடி மடங்கு நல்ல, (எ-று).

$நட்பு - ஆகுபெயர். அந்நட்பாவது *விடமருந் 0தூர்த்தரும் வேழம்பரும் போன்று பலவகையா ¶னகுவித்துத் தாம் பயன்கொண் டொழிவாரோடு உளதாயது. ‡‡பகைவரான் என்பது அவாய் நிற்றலின், வருவனவென்பது வருவிக்கப்பட்டது. பத்தடுத்தகோடி- †பத்தாகத்தொகுத்தகோடி. அந்நட்பான்வரு மின்பங்களின் பகைவரான்வருந் துன்பங்கள் இறப்பநல்லவென்பதாம். ‡இதற்குப் பிறரெல்லாஞ் சொல்விலக்கணத்தோடு மாறுகொளவுரைத்தார்.

தெளி :— (இ-ள்.) நகைவகையராகிய - (தாம் அறிதல் வகைய ராகாமல்) நகுதல் வகையராதற்குக் காரணமாகிய, நட்பின் - நட்பால் வருவனவற்றின், பகைவரால் - பகைவரால், (வருவன), பத்தடுத்தகோடியுறும் - பத்துக்கோடி மடங்கு நல்லனவாம், (எ-று).

நட்பு - கருவியாகு பெயர். அந்நட்பாவது விடமரும் தூர்த்தரும் கழைக்கூத்தரும்போன்று பலவகையால் நகுவித்துத்தாம்பயன்கொண் டொழிவாரோடுஉண்டாயது. பகைவரான்என்பதுஅவாய் (வேண்டி)

---

‡ தாமறிதல் வகையராகாது-தாம் அறிதல் வகையராதற்குக் காரணமாகாமல். அறிதல் வகையராதல்-அறிவுடையவராதல்.

$ நட்பால்வருவனவற்றை நட்பு என்றமையின், நட்பு கருவியாகு பெயராம்.

* விடமர் - காமுகர். 0தூர்த்தர் - வஞ்சகர். ¶நகுவித்து - சிரிக் கச்செய்து.

‡‡ பகைவரானென்பது வருவனவென்பதை அவாய் (வேண்டி) நிற்றலின், அது வருவிக்கப்பட்டது என்றும் பாடமுண்டு.

† பத்தாகத்தொகுத்தகோடி - பத்துக்கோடி. ‡இக்குறளுக்குப் பிறரெல்லாம் சொல்லிலக்கணத்தோடு விரோதமுண்டாகப் பொருள் கூறினர்.

நிற்றலால், வருவனவென்பது வருவிக்கப்பட்டது. பத்தடுத்த கோடி - பத்தாகத் தொகுத்தகோடி. அந்நட்பினுல் வரு மின்பங்களிலும் பகைவரால் வருந் துன்பங்கள் மிக நல்லனவென்பதாம். நகுதல் - சிரித்தல்.

(க-து.) நகுதல் காரணமாகச் சிநேகஞ் செய்பவரால் வருங் கெடுதியிலும் பகைவரால் வருங் கெடுதி மிக நல்லதாம் என்பது.

7. What comes from foes is a hundred-million times better than what comes from the friendship of those who cause only laughter.

---

அ. * ஒல்லுங் கரும முடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல்.

பரி:—(இ-ள்.) தம்மான் முடியுங் கருமத்தை §முடியாதாகச் செய்தாரோடு கொண்ட நட்பினை ||அது கண்டால் அவரறியச் சொல்லாதே சோர விடுக, (எ-று).

முடியாதாக்குதல் - $முடியாதாக நடித்தல். சோரவிடல் – விடுகின்றவாறு தோன்றுமல் ஒருகாலைக்கொருகா †லோயவிடுதல். அறியச்சொல்லினும் விடுகின்றவாறு தோன்றினும் அதுபொழுது ††பரிகரித்துப்பின்னு நட்பாயொழுகக் கருதுவராகலின் ‘சொல்லாடார்’ என்றும், ‘சோரவிடல்’ என்றுங் கூறினுர். இவை மூன்றுபாட்டானும் முறையே பேதையார், நகுவிப்பார், இயல்வது செய்யாதாரென்றிவர்க ணட்பின் தீமை கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) ஒல்லுங்கருமம் - (தம்மால்) முடியுங்காரியத்தை, உடற்றுபவர் - முடியாதாகச் செய்தாரோடு, (கொண்ட), கேண்மை - நட்பினை, (அதுகண்டால்), சொல்லாடார் – (அவரறியச்) சொல்லாமலே, சோரவிடல் - தளரவிடக்கடவர், (எ-று).

முடியாதாக்குதல்-முடியாதாக நடித்தல். சோரவிடல்-(நட்பினை) விடுகின்றவிதம் தோன்றுமல் ஒருகாலைக்கொருகால் ஓயவிடுதல். (நட்பினை விடுதலை) (ஒல்லுங்கருமமுடற்றுபவர்) அறியச்சொன்னுலும் விடுகின்ற விதம் (அவர்க்குத்) தெரிந்தாலும் (அவர்) அப்போது

---

* “வேற்றுமையின்றிக் கலந்திருவர் நட்டக்கால், தேற்ருவொழுக்க மொருவன்க ணுண்டாயின், ஆற்றுந் துணையும் பொறுக்க பொருணயின், தூற்ருதே தூர விடல்” என்பது நாலடியார்.

§ முடியாதாக்கிச் செய்யாதாரோடு என்றும் பாடமுண்டு.

|| அது என்றது தம்மால் முடியுங்காரியத்தை முடியாதாக நடித்துச் செய்யாதிருத்தலை.

$ முடியாதாக நடித்தல் - தம்மால் முடியுங் காரியத்தை முடியாதாக வெளிக்குக் காட்டுதல். முடியாதாகக்கடத்தல் என்றும் பாடமுண்டு.

† ஓயவிடுதல் – தளர விடுதல். †† பரிகரித்து – விலக்கி,

பரிகரித்துப் பின்னும் நட்பாய் நடக்க நினைப்பாராகலால் 'சொல்லாடார்' என்றும், 'சோரவிடல்' என்றும் சொல்லினர். இவை மூன்றுபாட்டாலும் முறையே பேதையர், நகுவிப்பவர், இயல்வது செய்யாதவர் என்ற இவர்களது நட்பின் தீமை சொல்லப்பட்டது.

(க-து.) தம்மால் முடியுங் காரியத்தை முடியாதாக நடிப்பவரது சிநேகத்தை அவரறியச் சொல்லாமலே தளரவிடல் வேண்டும்.

8. Forsake without intimation the friendship of those who pretend inability to carry out things which they really could do.

———

## கூ. கனவினு மின்னாது மன்னோ வினைவேறு சொல்வேறு பட்டார் தொடர்பு.

**பரி :— (இ-ள்.) வினையுஞ்சொல்லு மொவ்வாது வேறுவேரு யிருப்பார் நட்பு நனவின் கண்ணேயன்றிக் கனவின்கண்ணு மின்னாது.**

*வினை சொற்களதொவ்வாமை முதன்மே லேற்றப்பட்டது. †அஃதாவது வினையிற் பகைவராய்ச் சொல்லின் நட்டாராயிருத்தல். ‡நிகழ்வின்கண் உளதாயிருத்தலால் 'கனவினு மின்னாது' என்றார். $உம்மை - எச்சவும்மை; இழிவு சிறப்பும்மையுமாம். மன்னும் ஓவும் அசைநிலை.

தெளி:—(இ-ள்.) வினை சொல் வேறு வேறு பட்டார் - வினையும் சொல்லும் (ஒவ்வாமல்) வேறு வேருயிருப்பவரது, தொடர்பு - நட்பு, கனவினும் - (நனவினிடத்தேயல்லாமல்) கனவினிடத்தும், இன்னாது - துன்பஞ்செய்வதாம், (எ-று).

வினை சொற்களது ஒவ்வாமை 'வினைவேறு சொல்வேறுபட்டார்' என அதனையுடையவர்மே லேற்றப்பட்டது. அஃதாவது தொழிலில் பகைவராய்ச் சொல்லில் நட்பினராயிருத்தல். (வினைவேறு சொல்

---

* வினையும் சொல்லும் தம்முள் ஒவ்வாதிருத்தலைத் தீநட்பினராகிய முதலின்மேலேற்றி 'வினைவேறு சொல்வேறு பட்டார்' என்று கூறப்பட்டது

† அஃதாவது – வினைசொற்களினது ஒவ்வாமையாவது.

‡ வினைவேறு சொல்வேறு பட்டார் தொடர்பு நனவின் கண்ணேயன்றிக்கனவின் கண்ணும் தீமையைத்தருவதாமென்பார் 'கனவினு மின்னாது' என்றார். வினைவேறு சொல்வேறு பட்டார் தொடர்பு நனவின்கண்ணேயன்றிக் கனவின்தண்ணும் ஆகாதென்பதாம். நனவு – ஜாக்கிராவஸ்தை ; கனவு - சொப்பனாவஸ்தை.

$ கனவினும் என்ற உம்மை நனவின் கண்ணேயன்றி என்னும் பொருளை யுணர்த்தினமையின், இறந்தது தழீஇய வெச்சவும்மையாம்; கனவி னிழிவைச் சிறப்பித்தலால் இழிவு சிறப்பும்மையுமாம்.

வேறு பட்டார் தொடர்பு இன்னுதாதல்) நிகழ்வின்கண் (நனவினிடத்து), உண்டாயிருத்தலால் அத்தொடர்பு 'கனவினுமின்னுது' என்றார். கனவினும் என்றவும்மை இறந்தது தழுவிய எச்சவும்மை; இழிவு சிறப்பும்மையுமாம். மன், ஓ என்பன அசைநிலை.

(க-து.) செயலும் சொல்லும் வேறுபட்டிருப்பவரது சிநேகம் கனவிலுந் துன்பந்தருவதாம் என்பது.

9. The friendship of those whose actions are not in conformity with their words will distress one even in one's dreams.

---

## கo. எனைத்துங் குறுகுத லோம்பன் மனைக்கெழீஇ மன்றிற் பழிப்பார் தொடர்பு.

பரி:—(இ-ள்.) தனியே மனைக்கணிருந்துழி நட்பாடிப் பலரோடு மன்றின்கணிருந்துழிப் பழிகூறுவார்நட்புச் சிறிதாயினுந் தம்மை நணுகுதலைப் †பரிகரிக்க, (எ-று).

மனைக்கட் கெழுமலும் மன்றின்கட் பழித்தலுந் தீதாகலின், அவரொருகாலுந் தம்மை நணுகாவகை ‡குறிக்கொண்டு காக்க வென்பார், ¶அவர் நட்பின்மேல் வைத்துக் கூறினர். இவையிரண்டு பாட்டானும் வஞ்சகர்நட்பின்றீமை கூறப்பட்டது.

தெளி: —(இ-ள்.) மனை-(தனியே) வீட்டில் (இருந்தபோது), கெழீஇ - நட்புச்செய்து, மன்றில் – (பலரோடு) சபையில் (இருந்த போது), பழிப்பார் – பழிகூறுவாரது, தொடர்பு-நட்பு, எனைத்தும் – எவ்வளவு சிறிதாயினும், குறுகுதல் – (தம்மைச்) சேர்தலை, ஓம்பல்-பரிகரிக்கக்கடவர், (எ–று).

வீட்டில் நட்புச் செய்தலும் சபையில் பழித்தலுமாகிய செயல் தீதாகலின், அவர் ஒருபோதும் தம்மைச் சேராதவிதம் குறிக்கொண்டு காக்கவேண்டுமென்பார், அவர் நட்பின்மேல் குறுகுதலை வைத்துச் சொல்லினர். இவை இரண்டு பாட்டாலும் வஞ்சகர் நட்பின் தீமைசொல்லப்பட்டது.

(க–து.) வீட்டிற் சிநேகித்துச் சபையிற் பழிப்பாரது சிநேகத்தைச் சிறிது மில்லாதொழித்தல் வேண்டும் என்பது.

10. Avoid even the least approach to a contraction of friendship with those who would love you privately but ridicule you publicly.

---

† பரிகரிக்க–ஒழிக்கக்கடவர். ‡ குறிக்கொண்டு-கவனம் வைத்து.

¶ அவர் நட்பின்மேல் வைத்துக் கூறினர்-வஞ்சகரது சிநேகத்தின் மேல் குறுகுதலை (சேர்தலை) வைத்து, தொடர்பு குறுகுதல் ஓம்பல் என்று கூறினர்.

# இருபதாவது அதிகாரம்

## ◦ கூடா நட்பு :—False Friendship

**பரி :-இனி ஏனைக் கூடாநட்புக் கூறுகின்றார். அஃதாவது பகைமையான் $அகத்தாற் கூடாதிருந்தே தமக்கு †வாய்க்குமிடம் பெறுந்துணையும் புறத்தாற் கூடி யொழுகுவார் நட்பு.**

*தெளி :—இனி மற்றைக் கூடா நட்புச் சொல்லுகின்றார். அஃதாவது பகைமையால் அகத்தாற் கூடாதிருந்தே தமக்கு வாய்க்குமிடங்கிடைக்கு மளவும் புறத்தாற்கூடி யொழுகுவாரது நட்பு. புறத்தால்-வெளியில்.*

---

**க. சீரிடங் காணி னெறிதற்குப் பட்டடை**
**நேரா நிரந்தவர் நட்பு.**

**பரி :—(இ-ள்.) கூடாதிருந்தே தமக்கு வாய்க்குமிடம் பெறுந்துணையுங் கூடி யொழுகுவார் நட்பு ‡அது பெற்றால், *அற வெறிதற்குத் துணையாய ०பட்டடையாம், (எ—று).**

*எறியு மெல்லை வாராமுனெல்லாந் தாங்குவதுபோன்றிருந்து ¶வந்துழி அறவெறிவிப்பதாயபட்டடைக்கும் ‖அத்தன்மைத்தாய நட்பிற்குந் 00தொழிலொப்புமை யுண்மையான், ()அதுபற்றி )(அந்நட்பினைப் பட்டடையாக £வுபசரித்தார். :தீர்விடமென்று பாடமோதி முடிவிடமென் றுரைப்பாருமுளர்.*

---

$ அகத்தாற் கூடாதிருந்தே - மனத்தில் நட்பில்லா திருந்து கொண்டே.

† வாய்க்குமிடம் – சமயம்.

‡ அது - வாய்க்குமிடம். * அறவெறிதற்கு - (பொன் முதலியவற்றை வேறுகருவிகள் சிறிதும் மிச்சமில்லாது) முழுதும் வெட்டுதற்கு.

० பட்டடை - தட்டார் முதலியோர் பொன் முதலியவற்றை வைத்துச் சுத்தி முதலியவற்றால் அடிப்பதற்கும் உளிமுதலியவற்றால் வெட்டுவதற்கும் ஆதாரமாயிருப்பதொருகருவி. இது பணையென்றும், கூடம் என்றும் சொல்லப்படும.

¶ வந்துழி – எறியுமெல்லை வந்த விடத்து.

‖ அத்தன்மைத்தாய – பட்டடை போன்றதாய

00 தொழிலொப்புமை யுண்மையான் – தாங்குவதுபோன்றிருத்தலும் அறவெறி விப்பதுமாகிய தொழில் சமமாயிருத்தலால்.

() அதுபற்றி – தொழில் ஒப்புமை யுண்மைபற்றி

)( அந்நட்பினை – அகத்தாற் கூடாதிருந்தே தமக்கு வாய்க்குமிடம் பெறுந்துணையுங் கூடி யொழுகுவாரது நட்பினை.

£ தொழிலொப்புமை பற்றி, நட்பினைப்பட்டடைஎன்றபேதமாக்கி நட்புப் பட்டடையென உபசாரவழக்காற் கூறினாரென்க.

:சீரிட மென்பதனைத் தீர்விடமென்று பாடங்கூறி, அதற்குப் பொருள் முடிவிடமென்று கூறுவாரு முளர்.

தெளி:—(இ-ள் ) நேரா-(அகத்தாற்) கூடாதிருந்தே, நிரந்தவர், (தமக்கு வாய்க்குமிடம் பெறுமளவும்) (புறத்தாற்) கூடி நடப்பவரது-நட்பு-சிநேகம், சீரிடம் - வாய்க்கு மிடத்தை, காணின்-பெற்றால், எறிதற்கு-(அற) எறிதற்கு, (துணையாகிய), பட்டடை-பட்டடையாம், (எ-று).

எறியுங்காலம் வாராத முன்னெல்லாந் தாங்குவதுபோன்றிருந்து அது வந்த விடத்து அற எறிவிப்பதாகிய பட்டடைக்கும் அத்தன்மை-யதாகிய நட்பிற்கும் தொழிலொப்புமை யிருத்தலால், அதுபற்றி அந்நட்பினைப் பட்டடையாக உபசரித்தார். அகம்-உள்; புறம்-வெளி.

(கூ-து.) உள்ளே பகைகொண்டு வெளியே சிநேகித் தொழு குவாரது நட்பானது சமயம் நேர்ந்தவிடத்துத் தீமையைத் தருவ தாம் என்பது.

1. The friendship of those who outwardly behave like friends without inward affection is a weapon that may be thrown out when a favourable opportunity presents itself.

—

உ. இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும்.

பரி: — (இ-ள்.) தமக் †குற்றார்போன்று உறுதாரோடு உளதாய நட்பு இடம் பெற்றுற் பெண்பாலார் மனம்போல வேறுபடும், (எ-று).

‡அவர்மனம் வேறுபடுதல் ¶"பெண்மனம் பேதின் றொருப்படுப் பேனென்னு, மெண்ணி லொருவன்" என்பதனானுமறிக. நட்பு வேறுபடுதலாவது பழைய பகையேயாதல். இவை இரண்டு பாட்டானுங் கூடாநட்பினது குற்றங் கூறப்பட்டது.

---

† உற்றார் போன்று - சிநேகிதர் போன்றிருந்து.

‡ அவர்மனம் - பெண்பாலாரின்மனம்.

¶ வளையாபதி. இதன்பொருள். பெண்களினுடைய மனத்தை வேறுபடுதலில்லாமல் ஒருதன்மையதாகச் செய்வேன் என்று கூறு கின்ற ஆராய்ச்சி யில்லாத ஒருவன் என்பது.

" மடந்தையர் வதன நல்ல மதியென மாற்றம் வானோர்
கடைந்தவா னமுத மென்னக் கவினுமென் றூலு முள்ளம்
விடங்கொடு புரிந்த வாள்போல் வெங்கொலே விரும்பு மந்த
அடங்கலார் மனஞ்செல் வண்ணை மாரறிந் தறைய கிற்பார்"

என்று பாகவதம் கூறுவதும்,

" பெண்ணெனப் படுவ கேண்மோ பீடில பிறப்பு நோக்கா
வுண்ணிறை யுடைய வல்ல வொராயிர மனத்த வாகும் "

என்று சீவக சிந்தாமணி கூறுவதும் இங்கறியத்தக்கனவாம்.

தெளி:—(இ-ள்.) இனம்போன்று - (தமக்கு) உற்றவர்போன்று, இன மல்லார்-உறுதவருடன், (உண்டாகிய), கேண்மை-சிநேகமானது, (இடம் பெற்ருல்), மகளிர்-பெண்பாலாரது, மனம்போல-மனத்தைப் போன்று, வேறுபடும்-வேற்றுமையடையும், (எ-று).

இனம்போன் றின மல்லாரது சிநேகம் வேறுபடுதலாவது இடம் பெற்ருல் பழைய பகையே யாதல். இவை இரண்டுபாட்டாலும் கூடா நட்பினது குற்றம் சொல்லப்பட்டது.

(க-து.) உறவினர்போல் நடித்து உறவாகாதிருப்பவரது நட்பானது சமயம் வாய்த்தால் வேற்றுமை யடையும் என்பது.

2. The friendship of those who seem to be friends while they are not, will change like the (fickle) mind of woman.

---

ந. பலநல்ல கற்றக் கடைத்து மனநல்ல
ராகுதன் மாணுர்க் கரிது.

பரி:—(இ-ள்.) நல்லன பலநூல்களைக் கற்றவிடத்தும் †அதனுன் மனந்திருந்தி நட்பாதல் பகைவர்க் கில்லை, (எ-று).

நல்லன- ‡மனக்குற்றங் கெடுப்பன. *மனநல்லரெனச் சினைவினை முதன்மேனின்றது. நல்லராகுதல் - ¶செற்றம் விடுதல். உள்ளே செற்ற முடையாரைக் கல்வி யுடைமைபற்றி நட்பென்று கருதற்க வென்பதாம்.

தெளி:—(இ-ள்.) நல்ல-நல்லனவாகிய, பல-பலநூல்களை, கற்றக் கடைத்தும் – கற்றவிடத்தும், (அதனுல்), மனநல்லராகுதல்–மனந் திருந்தி நட்பினராகுதல், மாணுர்க்கு–பகைவர்க்கு, அரிது-இல்லை, (எ-று).

நல்லன–மனக்குற்றங்கெடுப்பன. மனநல்லர் என மனமென்னுஞ் சினையின் தொழில் முதல்மேல் நின்றது. நல்லராகுதல் - கோபம் விடுதல். உள்ளே கோபமுடையாரைக் கல்வியுடைமைபற்றி நட்பென்று கருதுதல் கூடாதென்பதாம்.

(க-து.) பகைவர் மனக்குற்றங் கெடுக்கும் நூல்களைக்கற்ரு ராயினும், அவர் அதனுல்மனந்திருந்தி நட்பினராதலில்லை என்பது.

---

† அதனுன்–கற்றதனுல். ‡ மனக்குற்றம்-காமம், வெகுளி, கடும் பற்றுள்ளம் (உலோபம்), மானம், உவகை முதலியனவாம்.

* மனமாகிய சினையினது நன்ருகுதலாகிய வினை அச்சினையை யுடைய முதன்மேல் நின்றது. அஃதாவது சினைவினையை முதலின் மேலேற்றி (மனநன்மையாகுதல் என்று கூருது) மனநல்லராகுதல் என்று கூறப்பட்ட தென்பது.

¶ செற்றம் விடுதல் – (மனத்தின்கண் நெடுநாளாயிருந்த) தீராக் கோபத்தை யொழித்தல்.

3. Though one's enemies may have learnt many good books it will be impossible for them to become friends truly loving at heart.

---

௪. முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா
வஞ்சரை யஞ்சப் படும்.

பரி:—(இ-ள்) கண்டபொழுது முகத்தால் இனியவாகச் சிரித்து எப்பொழுதும் மனத்தா †லின்னாராய வஞ்சரை அஞ்சல் வேண்டும்.

நகையது வகைபற்றி 'இனிய' என்றும், அகத்துச்செற்றம் நிகழவும் அதற்கு மறுதலையாய நகையைப்புறத்து விளைத்தலின் 'வஞ்சர்' என்றும், அச்செற்றங் ‡குறிப்பறிதற் கருவியாய $முகத்தானுந் தோன்றுமையின் *'அஞ்சப்படும்' என்றுங் கூறினார். இவை யிரண்டு பாட்டானுங் குற்றத்திற் கேதுவாய ¶அவர் கொடுமை கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) (கண்டபொழுது) முகத்தின் - முகத்தால், இனிய-இனியவாக, நகாஅ-சிரித்து, அகத்து-மனத்தால், இன்னா-(எப்பொழுதும்) இனியராகாத, வஞ்சரை-,அஞ்சப்படும்-அஞ்சுதல் வேண்டும், (எ-று).

நகையதுவகைபற்றி 'இனிய' என்றும், அகத்தில் கோபம் தோன்று நிற்கவும் அக்கோபத்திற்கு விரோதமாகிய நகையைப் புறத்தில் காட்டலால் 'வஞ்சர்' என்றும், அக்கோபம் குறிப்பறிதற்குச் சாதனமாகிய முகத்தாலும் தோன்றுமையால் 'அஞ்சப்படும்' என்றும் சொல்லினார். இவை இரண்டு பாட்டாலும் குற்றத்திற்குக் காரணமாகிய அவர் கொடுமை சொல்லப்பட்டது.

(க-து.) கண்டபொழுது முகமலர்ந்து நகைத்துப் பேசி, எப்போதும் உள்ளே பகைபாராட்டும் வஞ்சகர்க்கு அஞ்சுதல் வேண்டும் என்பது.

4. One should fear the deceitful who outwardly bear a sweet smile with their face but never love with their heart.

---

௮௨௫ ரு. மனத்தி னமையா தவரை யெனைத்தொன்றுஞ்
சொல்லினாற் றேறற்பாற் றன்று.

---

† இன்னாராய - பகைவராய.

‡ குறிப்பறிதலாவது பிறர் நினைந்திருப்பதை அவர் சொல்லாமலே தெரிந்து கொள்ளுதலாம்.

$ "முகத்தின் முதுக்குறைந்த துண்டோ வுவப்பினுங், காயினுந் தான் முந்துறும்" என்னுங் குறளிங் குணர்தற்பாலதாம். *அஞ்சுதல் செய்யப்படும் என்றும் பாடமுண்டு. ¶அவர் - கூடா நட்பினர்.

பரி.—(இ-ள்.) மனத்தாற் றம்மொடு மேவாதாரை யாதொரு கருமத்தினுஞ் சொல்லாற் றெளிதன் முறைமைத் தன்றென்று சொல்லும் நீதிநூல், (எ-று)

‡நீதிநூ லென்பது அவாய் நிலையான் வந்தது. பகைமை மறைத்தற் பொருட்டுச் சொல்லுகின்ற வஞ்சனைச் சொல்லைச் ()செவ்விய சொல்லெனக்கருதி †அவரைக் *கருமங்களிற்றெளிதல் நீதிநூன்முறைமை யன்றென்பதாம்.

தெளி.—(இ-ள்.) மனத்தின் - மனத்தால், அமையாதவரை—(தம்மோடு) பொருந்தாதவரை, எனைத்தொன்றும் - யாதொரு கருமத்திலும், சொல்லினால்-சொல்லால், தேறற்பாற்றன்று-தெளிதல் முறைமையதன்று, (என்று சொல்லும் நீதிநூல்), (எ-று).

நீதிநூல் என்பது அவாய் நிலையால் வந்தது. (மனத்தினமையாதவர்) பகைமையை மறைத்தற்பொருட்டுச் சொல்லுகின்ற வஞ்சனைச்சொல்லை நல்ல சொல்லென நினைத்து அவரைக் கருமங்களில் தெளிதல் நீதிநூலின் முறைமை யன்றென்பதாம்.

(க-து.) மனம் வேறுபட்டவரது சொற்களை நம்பி, அவரை எக்காரியத்திலும் விடலாகாது என்பது.

5. In nothing whatever is it expedient to rely on the words of those who do not love with their heart.

---

சூ. நட்டார்போ னல்லவை சொல்லினு மொட்டார்சொ
லொல்லை யுணரப் படும்.

பரி.—(இ-ள்.) நட்டார்போன்று நன்மை பயக்குஞ் சொற்களைச் சொன்னாராயினும் பகைவர் சொற்கள் ¶அது பயவாமை அச்சொல்லிய பொழுதே யறியப்படும், (எ-று.)

£'சொல்லினும்' எனவே, ||சொல்லாமையே பெற்றாம். ஒட்டாராதலாற் றீமை பயத்தல் ஒருதலை யென்பார் 'ஒல்லை யுணரப் படும்' என்றார்.

---

‡ நீதிநூல் "மனத்தி னமையா தவரை யெனைத்தொன்றுஞ், சொல்லினாற் றேறற்பாற்றன்று" என்று சொல்லும் என்றமையின், சொல்லும் என்னும் சொல்லெச்சம் நீதிநூல் என்பதை அவாவி நின்றது. அதுபற்றி, 'நீதிநூலென்பது அவாய்நிலையான் வந்தது' என்று கூறப்பட்டது.

() செவ்வியசொல் - வஞ்சனையில்லாத சொல்.

† அவரை - கூடா நட்பினரை.

* கருமங்களிற்றெளிதல் - அரசர் தாமேற்கொண்டு செய்யுங் காரியங்களுக்குரியவராக்குதல்.

¶ அது பயவாமை - நன்மையைத் தாராமை.

£ சொல்லினும் என்றவும்மை எதிர்மறையும்மை.

|| சொல்லாமையே - நன்மை பயக்குஞ் சொற்களைச் சொல்லாமையே.

தெளி:—(இ-ள்.) நட்டார்போல்-நட்பினர்போன்று, நல்லவை-நன்மைதருஞ் சொற்களை, சொல்லினும்-சொன்னாராலும், ஒட்டார் சொல்-பகைவர் சொற்கள், (அதுதராமை), ஒல்லை-விரைவிலே (அச் சொல்லியபொழுதே), உணரப்படும்-அறியப்படும், (எ–று).

'சொல்லினும்' எனவே, அவர் அவற்றைச் சொல்லாமையே பெற்றும். பகைவராதலால் தீமை தருதல் நிச்சயமென்பார் 'ஒல்லை-யுணரப்படும்' என்றார்.

(க-து.) பகைவர் சிநேகிதர்போன்று நன்மைதருஞ் சொற்களைச் சொன்னாராயினும், அச்சொற்கள் நன்மைபயவாமை விரைவி-லறியப்படும் என்பது.

6. Though one's enemies may utter good things as though they were friends, one will immediately understand their evil intent.

---

## எ. சொல்வணக்க மொன்னார்கட் கொள்ளற்க வில்வணக்கந் தீங்கு குறித்தமை யான்.

பரி:— (இ-ள்.) வில்லினது வணக்கம் *ஏற்றவர்க்குத்தீமை செய்தலைக் குறித்தமையால் பகைவர் மாட்டுப் பிறக்குஞ் சொல்லினது வணக்கத்தையும் தமக்கு நன்மை செய்தலைக் குறித்ததென்று கருதற்க, (எ–று).

‡தம்வணக்க மன்றென்பது தோன்றச் 'சொல்வணக்கம்' என்றும், வில்வணக்கம் வேறாயினும் வணங்குத லொப்புமைபற்றி †அதன் குறிப்பை ஏதுவாக்கியுங் கூறினார். §வில்லியது குறிப்பு அவனுடைய வில்வணக்கத்தின்மே னிற்றலான், ஒன்னாரது குறிப்பும் அவருடைய சொல்வணக்கத்தின் மேலதாயிற்று. ¶இதுவுந் தீங்கு குறித்த வணக்கமென்றே கொண்டஞ்சிக் காக்கவென்பதாம். இவை மூன்று பாட்டானும் ()அவரைச் சொல்லாற் றெளியற்க வென்பது கூறப்பட்டது.

தெளி:— (இ-ள்.) வில்வணக்கம் - வில்லினது வணக்கம், தீங்கு-(ஏற்றவர்க்குத்) தீமை செய்தலை, குறித்தமையான்-குறித்தமையால், ஒன்னார்கண்-பகைவரிடத்து, (பிறக்கும்), சொல் வணக்கம்-சொல்லினது வணக்கத்தையும், கொள்ளற்க-(தமக்கு நன்மை செய்தலைக் குறித்ததென்று) நினையா திருக்கக்கடவர், (எ-று).

---

* ஏற்றவர்க்கு - எதிர்த்தவர்க்கு.

‡ தம்வணக்கம் – தம்முடைய வணக்கம்; அஃதாவது ஒன்னாரது வணக்கம்.

† அதன் குறிப்பை (வில்லினது வணக்கம் ஏற்றவர்க்குத் தீமை செய்தலைக் குறித்தமையை) ஒன்னாரது சொல் வணக்கத்திற்குக் காரணமாக்கியுங் கூறினர்.

§ வில்லியது குறிப்பு – வில்லை யுடையவனது கருத்து.

¶ இதுவும் – சொல்வணக்கமும். () அவரை – கூடா நட்பினரை.

தம்வணக்கம் அன்றென்பது தோன்றச் ‘சொல்வணக்கம் என்றும், வில்வணக்கம் வேருயினும் வணங்குத லொப்புமைபற்றி அவ்வில்லின் குறிப்பைக் காரணமாக்கியும் சொல்லினர். வில்லியது குறிப்பு அவனுலாகிய வில்வணக்கத்தின்மேல் நிற்றலால் பகைவரது குறிப்பும் அவராலாகிய சொல்வணக்கத்தின் மேலதாயிற்று. இதுவும் தீங்கு குறித்த வணக்கமென்றே கொண்டு அஞ்சிக் காக்கவேண்டு மென்பதாம். இவை மூன்றுபாட்டாலும் அவரைச் சொல்லால் தெளிதல் கூடாதென்பது சொல்லப்பட்டது.

(க-து.) பகைவரது சொல்வணக்கம் வில்வணக்கம் போன்று தீமையைத் தருதலால், அதனை யேற்றுக்கொள்ளா திருத்தல் வேண்டும் என்பது.

7. Since the bending of the bow betokens evil, one should not regard as good the humiliating speech of one's enemies.

---

**அ. *தொழுதகை யுள்ளும் படையொடுங்கு மொன்னு**
**ரழுதகண் ணீரு மனைத்து.**

பரி:—(இ-ள்.) ஒன்னர் குறிப்பை யுணர வல்லார்க்கு அவர் ¶தொழுத கையகத்தும் படைக்கலம் மறைந்திருக்கும்; அவரழுத கண்ணீரும் அவ்வாறே ‡அது மறைந்திருத்தற் கிடனும், (எ-று).

தாம் நட்பென்பதனைத் தங் கையானுங் கண்ணானுந் †தேற்றிப் பின் கோறற்கு வாங்க விருக்கின்ற படைக்கலம் உய்த்துணர்வுழித் தேற்றுகின்ற பொழுதே §அவற்றுள்ளே தோன்று மென்பார் ‘ஒடுங்கும்’ என்றார். பகைவர் தம் மென்மை காட்டித் தொழினு-மழினும், அவர் குறிப்பையே நோக்கிக் காக்கவென்பதாம். இதனுல் அவரைச் செயலாற் றெளியற்க வென்பது கூறப்பட்டது.

---

* “தொழுததங் கையி னுள்ளுந் துறுமுடி யகத்துஞ் சோர,வழுத கண்ணீரி னுள்ளு மணிகலத் தகத்து மாய்ந்து, பழுதுகண் ணரிந்து கொல்லும் படையுட னொடுங்கும் பற்ற, தொழிகயார் கண்ணுந் தேற்றந் தெளி குற்றார் விளிகுற் றாரே”

என்று சீவகசிந்தாமணி கூறுவதும், அதன் விசேடவுரையில் “அரசர்க்கு ஓர் துன்பம் வந்தவிடத்து அவர் நட்புடையோர்போல அழுத கண்ணீருங் கொலை சூழ்தலின், கண்ணிலும் படையொடுங் கிற்றும். ‘ஒன்னு, ரழுதகண் ணீரு மனைத்து’ என்றார் தேவரும்.” என்று நச்சினர்க்கினியர் கூறுவதும், இங்கு அறியத்தக்கனவாம்.

¶ தொழுதகை – அஞ்சலி செய்தகை; அஃதாவது கும்பிட்டகை.

‡ அது – படைக்கலம். † தேற்றி – தெளியச்செய்து.

§ அவற்றுள்ளே – தொழுதகையகத்தும் அழுதகண்ணீரகத்தும்.

தெளி: —(இ-ள்.) (பகைவர் குறிப்பை அறிய வல்லவர்க்கு) ஒன்னார்-அப்பகைவர், தொழுதகையுள்ளும்-தொழுதகையினிடத்தும், படை-ஆயுதமானது, ஒடுங்கும்-மறைந்திருக்கும், அழுத கண்ணீரும்-(அவர்) அழுத கண்ணீரும், அனைத்து - அவ்வாறே அது மறைந்-திருத்தற்கு இடமாம், (எ-று).

தாம் நட்பென்பதனைத் தமதுகையாலும் கண்ணாலும் நம்பு-வித்துப் பின் கொல்லுதற்கு எடுக்க விருக்கின்ற ஆயுதம் ஆலோசித்-தறியும்போது நம்புவிக்கின்றபொழுதே அவற்றுள்ளே தோன்று மென்பார் 'ஒடுங்கும்' என்றார். பகைவர் தமது தளர்ச்சியைக் காட்டித் தொழுதாலும், அழுதாலும், அவர் குறிப்பையே நோக்கிக் காத்துக் கொள்ளவேண்டு மென்பதாம். இதனால் அவரைச் செயலால் தெளிதல்கூடா தென்பது சொல்லப்பட்டது.

(க-து.) பகைவரது தொழுகையும் அழுகையும் அவரது ஆயுத மறைந்திருப்பதற் கிடமா மாதலால், அவரைச் செயலால் தெளிதல் கூடாதென்பது.

8. A weapon may lie hidden in the very hands with which one's enemies revere him; and the tears they shed are of a like nature.

———

கூ. மிகச்செய்து தம்மெள்ளு வாரை நகச்செய்து
நட்பினுட் சாப்புல்லற் பாற்று.

பரி :—(இ-ள்.) பகைமை தோன்றுமற் புறத்தின்கண் நட்பினை மிகச்-செய்து அகத்தின்கட் டம்மை யிகழும் பகைவரைத் தாமும் அந்நட்பின்-கண்ணே நின்று புறத்தின்கண் †அவர் மகிழும் வண்ணஞ் செய்து ‡அகத்தின்கண் அது சாம்வண்ணம் பொருந்தற்பான்மை புடைத்து அரசநீதி, (எ-று.)

*நின்று என்பதூஉம் அரசநீதி யென்பதூஉம் அவாய் நிலையான் வந்தன. £அகனென்று புறனென்றுதல் ஒருவற்குத் தகாதெனினும் பகைவர் மாட்டாயிற்றகுமென்பது நீதிநூற்றுணிபென்பார், $அதன் மேல் வைத்துக் கூறினார்.

---

† அவர் - பகைவர்.

‡ அகத்தின்கண் அது சாம்வண்ணம் - மனத்தில் அப்பகைவரது மகிழ்ச்சி கெடும்படி.

* நட்பினுள் என்பது நின்று என்பதையும், புல்லற்பாற்று என்பது அரசநீதி யென்பதையும் அவாய் (வேண்டி) நிற்றலின், அவை வருவிக்கப்பட்டன.

£ உள்ளேபகையும் உதட்டிலுறவுமாதல் அகனென்று புறனென்-றுதலாம். "மாதர்க் கிதங்கவி வாணர்க்குச் சால வணக்கங்குரு, நாதர்க்கு நீதியோடாசார நண்பினயந்தவர்க்குக், கோதற்ற வாசகம் பொய்க்குப்பொய் கோளுக்குக் கோளறிவி, லாதார்க் கிரட்டிப் பறிவுடை யார்செய்யு மாண்மைகளே" என்னுஞ் செய்யுள் இங்குக் கவனிக்கத்தக்கதாம். $ அதன்மேல்-அரசநீதிமேல்.

* சாவவென்பதனிறுதிநிலை விகாரத்தாற் றொக்கது; †"கோட்டின் வாய்ச் சாக்குத்தி" என்புழிப்போல, எள்ளுவாரைப் புல்லலெனக் கூட்டுக.

**தெளி:— (இ-ள்.)** (அரசநீதியானது) மிகச்செய்து - (பகைமை தோன்றாதவாறு புறத்தில் நட்பினை) மிகச்செய்து, தம்மெள்ளுவாரை- (அகத்தில்) தம்மை இகழும் பகைவரை, நட்பினுள் - (தாமும்) அந்நட்பினிடத்தே, (நின்று), நகச்செய்து - (புறத்தில் அவர்) மகிழுமாறு செய்து, சாப்புல்லற்பாற்று - (அகத்தில் அது) சாகும்வண்ணம் பொருந்துதற் றன்மையுடையது, (எ-று).

நின்று என்பதும் அரசநீதி யென்பதும் அவாய் நிலையால் வந்தன. அகத்தொன்று புறத்தொன்றுதல் ஒருவனுக்குத் தகாதாயினும் பகைவரிடத்தாறல் தகுமென்பது நீதிநூலின் துணிவென்பார், அதன்மேல் வைத்துச் சொல்லினார். சாவ என்பதன் விகுதி விகாரத்தாற் றொக்குநின்றது. எள்ளுவாரைப் புல்லற்பாற்று எனக் கூட்டுக.

(க-து.) அரசர் புறத்தே சிநேகம் பாராட்டி யகத்தே தம்மை யிகழ்ந்தொழுகும் பகைவரிடத்து, தாமுமவ்வாறு சிநேகித் தொழுகுதல் வேண்டும் என்பது.

9. It is royalty to affect great love outwardly but make it die inwardly in the case of such enemies as show them (kings) great friendship outwardly but despise them inwardly.

---

**க0. பகைநட்பாங் காலம் வருங்கான் முகநட்
டகநட் பொரீஇ விடல்.**

பரி.— (இ-ள்.) தம்பகைவர் தமக்கு நட்டாரா யொழுகுங்காலம் வந்தால் தாமும் அவரோடு முகத்தால் நட்புச்செய்து அகத்தால் அதனை விட்டுப் பின் ‡னதுவுந் தவிர்க, (எ-று).

¶அக்காலமாவது தம்மானும் பகையென்று வெளிப்பட நீக்கலாகாத வளவு. இதனானே ஆமளவெல்லாம் நீக்குகவென்பது பெற்றாம் இவை யிரண்டு பாட்டானும் §அந்நட்பிடை யொழுகுமாறு கூறப்பட்டது.

---

* சாவப் புல்லற் பாற்று என்பது சாப்புல்லற்பாற்று என்று வந்தமையின், 'சாவவென்பத னிறுதிநிலை (விகுதியாகிய வகரவுயிர்மெய்) விகாரத்தாற் றொக்கது' என்று கூறப்பட்டது. "சாவ வென்னுஞ் செயவெ னெச்சத், திறுதி வகரங் கெடுதலு முரித்தே" என்பது தொல்காப்பியம். 'சாவ' என்பது செய என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

† கலித்தொகை - முல்லைக்கலி, 5. இதன் பொருள் (தம்மைத் தழுவ வருவாரை எருதுகள்) கொம்பினிடத்தே சாம்படி குத்தி என்பது.

‡ அதுவும் - முகத்தால் பகைவருடன் சிநேகஞ் செய்தலையும்.

¶ அக்காலமாவது - பகைநட்பாங் காலமாவது.

§ அந்நட்பிடை - கூடா நட்பினிடத்து.

தெளி:—(இ-ள்.) பகை – (தமது) பகைவர், நட்பாங்காலம்– (தமக்கு) நட்பினராய் நடக்குங்காலம், வருங்கால்-வந்தால், முகம்– (தாமும்) முகத்தால், நட்டு – (அவரோடு) நட்புச்செய்து, அகம்– மனத்தால், நட்பு-அந்நட்பினை, ஒரீஇ - விட்டு, விடல்–(பின் அதுவும்) ஒழியக்கடவர், (எ-று).

அக்காலமாவது தம்மாலும் பகையென்று வெளிப்பட நீக்குதல் முடியாதவளவு. இதனாலே கூடுமளவெல்லாம் (பகைவர் நட்பை) நீக்குகவென்பது பெற்றும். இவை யிரண்டு பாட்டாலும் அந்நட்பினிடத்து நடக்கும்விதம் சொல்லப்பட்டது.

(கு-து.) பகைவர் நட்பினராயொழுகினாலும், அவர் நட்பினை யாமளவெல்லாம் நீக்குதல் வேண்டும் என்பது.

10. When one's enemies begin to affect friendship, one should love them with one's looks and cherishing no love in the heart give up even the former.

---

# இருபத்தொன்றுவது அதிகாரம்

## பேதைமை— Ignorance

பரி:—இனி §அந்நட்பினை யெதிர்மறுத்துப் பகை முகத்தாற்கூறிய தொடங்கினர். அப்பகைதான், முற்றக்கடியுங் குற்றமன்மையி னுளவாய †வெகுளியானுங் காமத்தானும் வருவதாம். ‡அவற்றுள் *வெகுளியான் வருவன ஐந்ததிகாரத்தானும் §காமத்தான் வருவன ஐந்ததிகாரத்

---

§ அந்நட்பினை - பொறுக்கப்படாத குற்றமுடைமையால் விடற்பாலனவாகிய தீநட்பு, கூடாநட்புக்களை.

† வெகுளியும் (கோபமும்) காமமும் (இச்சையும்) பகைவர் முதலியோரிடத்தும் மனைவி முதலியோரிடத்தும் முறையே சந்தர்ப்ப நோக்கிச் செலுத்தவேண்டுவனவா யிருத்தலால், அவை முற்றக் கடியுங் குற்றமல்லவா யினவென்க. "காதல காதல்" என்னுங் குறளின் விசேடவுரையில் "காமம், வெகுளி, உவகை யென்பன முற்றக் கடியுங் குற்றமன்மையின்" என்று கூறப்பட்டிருப்பது முணர்க.

‡ அவற்றுள் - வெகுளி காமமென்னு மிரண்டனுள்.

* மனுதரும சாஸ்திரம் ஏழாவதத்தியாயத்தில் "கோபத்தாலுண்டாகும் எட்டுத் துக்கங்களாவன:— கோள், துணிவு, துரோகம், பொறாமை, பிறன் குணத்தைச்சகியாமை, பிறன் பொருளை யபகரித்தல், காரணமின்றி யடித்தல், திட்டுதல் ஆக எட்டு" என்று கூறுகின்றது.

§ ஷை ஷை அத்தியாயத்தில் "காமத்தாலுண்டாகும் பத்துத் துக்கங்களாவன: வேட்டையாடுதல், சூதாடுதல், பகலிற்றூங்குதல், பயனில கூறல், ஸ்திரீ லோலனாயிருத்தல், குடித்தல், பாட்டு, கூத்து, வாத்தியமிவற்றுள் விருப்பமுள்ளவனாயிருத்தல், வீணேதிரிதல் ஆகப் பத்து" என்று கூறுகின்றது.

தானுங் கூறுவார், *அவ்விரண்டற்கும் அடியாய மயக்கத்தை †இரு வகைப்படுத்து, இரண்டதிகாரத்தாற் கூறுவான்றொடங்கி, முதற்கட் பேதைமை கூறுகின்றார். ‡அஃதாவது யாதுமறியாமை.

தெளி:— இனி அந்நட்பினை எதிர்மறுத்துப் பகைமுகத்தால் சொல்லத் தொடங்கினார். அப்பகைதான் முழுவதும் ஒழிக்குங் குற்றமல்லாமையா லிருப்பனவாய கோபத்தாலும் காமத்தாலும் வருவதாம். அவற்றுள் கோபத்தால் வருவனவற்றை ஐந்ததிகாரத்தாலும் காமத்தால் வருவனவற்றை ஐந்ததிகாரத்தாலும் சொல்லுவார், அவ்விரண்டற்கும் காரணமாகிய மயக்கத்தை இருவகைப்படுத்தி, இரண்டதிகாரத்தால் சொல்லத் தொடங்கி, முதலில் பேதைமையைச் சொல்லுகின்றார். அஃதாவது யாதும் அறியாமை.

---

## க. பேதைமை யென்பதொன் றியாதெனி னேதங்கொண் டூதியம் போக விடல்.

பரி;—(இ-ள்.) பேதைமையென்று சொல்லப்படுவது ஒருவனுக்கு ஏனைக்குற்றங்களெல்லாவற்றினும் மிக்கதொன்று; அதுதான் யாதென்று வினவின், தனக்குக் கேடுபயப்பனவற்றைக் கைக்கொண்டு ஆக்கம் பயப்பனவற்றைக் கைவிடுதல், (எ-று).

கேடு - வறுமை, பழி, பாவங்கள். ஆக்கம் - செல்வம், புகழ், அறங்கள். தானே தன் ¶னிருமையுங் கெடுத்துக் கோடலென்பதாம்.

தெளி:—(இ-ள்.) பேதைமையென்பது - பேதைமை யென்று சொல்லப்படுவது, ஒன்று - (ஒருவனுக்கு மற்றைக் குற்றங்களெல்லாவற்றினும் மிக்கதாகிய) ஒன்று, யாதெனின் - (அதுதான்) யாதென்று கேட்டால், ஏதங்கொண்டு - (தனக்குக்) கேடுதருவனவற்றைக் கைக்கொண்டு, ஊதியம் - ஆக்கந்தருவனவற்றை, போகவிடல் - கைவிடுதல். (எ-று).

கேடு - வறுமை, பழி, பாவங்கள். ஆக்கம் - செல்வம், புகழ், அறங்கள். (பேதைமையுடையான்) தானே தன்னிருமைப் பயனையும் கெடுத்துக்கொள்ளுதலென்பதாம்.

(க-து.) பேதைமையாவது தீமை தருவனவற்றைக் கைக்கொண்டு நன்மை தருவனவற்றைக் கைவிடுதலாம் என்பது.

1. Ignorance is one of the chief defects; it is that which makes one to undertake ruinous actions and forego such as would be beneficial.

---

* அவ்விரண்டற்கும் - வெகுளிக்கும், காமத்திற்கும்.

† இருவகைப்படுத்து - பேதைமை, புல்லறிவாண்மை யென இரண்டுவகைப்படுத்தி.

‡ அஃதாவது - பேதைமையாவது; யாதுமறியாமை - செய்வன தவிர்வனவற்றுள் ஒன்றுமறியாமை.

¶ இருமை - இம்மை, மறுமை.

**உ. பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை**
**கையல்ல தன்கட் செயல்.**

பரி:— (இ-ள்.) ஒருவனுக்குப் பேதைமை யெல்லாவற்றுள்ளும் மிக்க பேதைமையாவது தனக்காகாத ஒழுக்கத்தின்கட் காதன்மை செய்தல், (எ-று).

*இருமைக்கும் ஆகாவென்று நூலோர் †கடிந்த செயல்களை விரும்பிச் செய்தலென்பதாம். இவை யிரண்டு பாட்டானும் பேதைமைய திலக்கணங் கூறப்பட்டது.

தெளி:— (இ-ள்.) பேதைமையுளெல்லாம் - (ஒருவனுக்குப்) பேதைமையெல்லாவற்றிலும், பேதைமை - (மிகுந்த) பேதைமை யாவது, கையல்ல தன்கண் - (தனக்கு) ஆகாத ஒழுக்கத்தில், காதன்மை செயல்—விருப்பங்கொள்ளுதலாம், (எ-று).

(பேதைமையுளெல்லாம் பேதைமையாவது) இருமைக்கும் ஆகா-வென்று நூலோர் கடிந்த செயல்களை விரும்பிச் செய்தலென்பதாம், இவை இரண்டு பாட்டாலும் பேதைமையது இலக்கணம் சொல்லப்-பட்டது.

(க-து.) பேதைமையுளெல்லாம் பேதைமையாவது தனக்காகாத ஒழுக்கத்தில் விருப்பங்கொள்ளுதலாம் என்பது.

2. The greatest ignorance is that which makes one to take delight in doing what is forbidden.

———

**ங. நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்**
**பேணாமை பேதை தொழில்.**

பரி:— (இ-ள்.) நாணவேண்டு மவற்றுக்கு நாணாமையும், நாட வேண்டுமவற்றை நாடாமையும், யாவர்மாட்டும் முறிந்தசொற் செயலுடை-மையும், பேண வேண்டுமவற்றுள் யாதொன்றனையும் பேணாமையும் பேதையது தொழில், (எ-று).

‡நாணவேண்டுமவை - பழி பாவங்கள். ¶நாடவேண்டுமவை - கருமங்களிற் §செய்வன தவிர்வன. முறிதல்- ○கண்ணறுதல். ||பேண

* இருமைக்கும் - இம்மைக்கும் மறுமைக்கும். † கடிந்த விலக்கிய.

‡ நாணமாவது - தமக்கொவ்வாத கருமங்களில் நாணுதல்.

¶ நாடவேண்டுமவை – ஆராயத்தக்கவை.

§ செய்வன - செய்யத்தக்கன; தவிர்வன - செய்யத்தகாதன. இவை விதிவிலக்கெனப்படும்.

○ கண்ணறுதல் - தாட்சண்ணியமில்லாமை.

|| பேணவேண்டுமவை - விரும்பத்தக்கவை.

வேண்டுமவை - ()குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்க முதலியன. †இவை பேதைக்கு எஞ்ஞான்று மியல்பாய் வருதலின் 'தொழில்' என்றார்.

தெளி :— (இ-ள்.) நாணுமை - (நாணவேண்டுவனவற்றிற்கு) நாணுமையும், நாடாமை - (நாடவேண்டுவனவற்றை) நாடாமையும், நாரின்மை - (யாவரிடத்தும்) முறிந்த சொற்செயலுடைமையும், யாதொன்றும் - (பேணவேண்டுவனவற்றுள்) யாதொன்றையும், பேணுமை - பேணுமையும், பேதை தொழில் - பேதையினது தொழிலாம், (எ-று).

நாணவேண்டுவன - பழி பாவங்கள். நாடவேண்டுவன - கருமங்களில் செய்வன தவிர்வன. முறிதல் - கண்ணறுதல். பேணவேண்டுவன - குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்க முதலாயின. இவை பேதைக்கு எந்நாளும் இயல்பாய் வருதலால் (பேதை) 'தொழில்' என்றார்.

(க-து.) பேதையினது தொழில் நாணுமை முதலியனவாம்.

3. Shamelessness, indifference, severity and aversion for everything are the characteristics of fools.

---

ச. ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில்.

பரி.— (இ-ள்.) மன மொழி மெய்களடங்குதற் கேதுவாய நூல்களை யோதியும், ‡அவ்வடக்கத்தான் வரும் பயனை யுணர்ந்தும், ¶அதனையறிய லுறப் பிறர்க்குரைத்தும், தான் $அவையடங்கி யொழுகாத பேதைபோலப் பேதையார் உலகத்தில்லை, (எ-று).

||உம்மை முன்னுங் கூட்டப்பட்டது. இப்பேதைமை தனக்கு oமருந்தாய *இவற்றாற் றீராமையானும் $வேற்று மருந்தின்மை-

---

() "பிறப்பு நெடுவாழ்க்கை செல்வம் வனப்பு, நிலக்கிழமை மீக்கூற்றங் கல்விநோ யின்மை, யிலக்கணத்தா லிவ்வெட்டு மெய்துப வென்றும், ஒழுக்கம் பிழையாதவர்" என்று ஆசாரக் கோவை கூறுவதிங் குணர்தற் பாற்றும். † இவை-நாணுமை முதலியன.

‡ அவ்வடக்கத்தான் - மன மொழி மெய்களது அடக்கத்தினுல்.

¶ அதனை - மன மொழி மெய்யென்னும் திரிகரணமும் அடங்குதலால் வரும் பயனை. $ அவை - மன மொழி மெய்கள்.

|| உணர்ந்தும் என்னும் உம்மையை ஓதி யென்பதனோடுங்கூட்டி, ஓதியும் என் றுரைக்கப்பட்டது.

o மருந்தாய - பரிகாரமான.

* இவற்றால் - ஓதுதல், உணர்தல், பிறர்க்குரைத்தல் என்னு மிவற்றால்.

$ வேற்றுமருந் தின்மையானும் - பேதைமையை யொழிப்பதற்கு ஓதுதல் முதலியனவன்றி வேறு மருந்தில்லாமையாலும்.

யானும் 'பேதையிற் பேதையா ரில்' என்றார். இவை இரண்டு-பாட்டானும் பேதையது தொழில் பொதுவகையாற் கூறப்பட்டது; இனிச் சிறப்புவகையாற் கூறுப.

தெளி:— (இ-ள்.) ஓதி - (மனமொழிமெய்கள் அடங்குவதற்குக் காரணமாகிய நூல்களை) ஓதியும், உணர்ந்தும் - (அவ்வடக்கத்தால் வரும் பயனை) அறிந்தும், பிறர்க்குரைத்தும் - (அதனை யறியும்படி பிறர்க்குச்) சொல்லியும், தான் அடங்கா - தான் (அவை) அடங்கி யொழுகாத, பேதையின் - மூடன்போல, பேதையார் - மூடர், இல்- (உலகத்தில்) இல்லை, (எ-று).

உம்மை ஓதி என்பதனோடும் கூட்டப்பட்டது. இப்பேதைமை தனக்கு மருந்தாகிய இவற்றால் தீராமையாலும் வேற்று மருந்தில் லாமையாலும் 'பேதையிற் பேதையா ரில்' என்றார். இவை யிரண்டு பாட்டாலும் பேதையது தொழில் பொது வகையாற் சொல்லப் பட்டது; இனிச் சிறப்புவகையாற் சொல்லுவார்.

(க-து.) மனமொழி மெய்களடங்குவதற்கேதுவாகிய அறிவு நூல்களை ஓதுதலும் உணர்தலும் பிறர்க்குரைத்தலு முடையவனாகித் தானடங்காமலிருப்பவன் மூடரிற் சிறந்தவனாவான்.

4. There is no greater fool than he who has read and understood a great deal of good books and even taught them to others but does not act according to his own teaching.

---

## ரு. ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையுந் தான்புக் கழுந்து மளறு.

பரி:— (இ-ள்.) பேதையாயினான் வரும் பிறவிகளெல்லாந் தான் புக்கழுந்தும் நிரயத்தினை இவ்வொரு பிறப்புள்ளே செய்துகொள்ள வல்லனும், (எ-று).

† எல்லாப் பிறப்பும் ஏழாயடங்குதல் அறியப்பட்டமையின், முற்றும்மை கொடுத்தார். அழுந்தும் நிரயம் - அழுந்துதற் கிடனாய நிரயம். ஈண்டைப் பிறப்புகளினுங் *கொடுவினை வயத்தால் அந்நிரயத் துன்பமே யுழந்து வருதலின் 'எழுமையுந் தான்புக் கழுந்து மளறு' என்றார். முடிவில் காலமெல்லாம் தான் நிரயத்துன்ப முழத்தற் கேதுவாங் கொடுவினைகளையே யறிந்து சில காலத்துள்ளே செய்துகோடல் பிறர்க் கரிதாகலின் 'ஆற்றும்' என்றார். இதனால் ¶அவன் மறுமைச்செயல் கூறப்பட்டது.

தெளி:— (இ-ள்.) பேதை-மூடனானவன், எழுமையும்-வரும்பிறவி களி லெல்லாம், தான் புக்கு-தான்புகுந்து, அழுந்துமளறு - அழுந்தும்

---

† ஏழுவகைப் பிறப்பு-தேவர், மக்கள், விலங்கு (மிருகம்), பறவை, ஊர்வன (தவழ்வன), நீர் வாழ்வன, தாவரம் (மரமுதலியன) என்பனவாம். *கொடுவினை-தீவினை. ¶அவன்-பேதையாயினானது.

நரகத்தை, ஒருமை - இவ்வொரு பிறப்புள்ளே, செயலாற்றும்-செய்து கொள்ள வல்லவனுவான், (எ-று).

எல்லாப்பிறப்பும் ஏழாய் அடங்குதல் அறியப்பட்டமையின், 'எழுமையும்' என்று முற்றும்மை கொடுத்தார். அழுந்தும் நரகம்—அழுந்துதற்கிடமாகிய நரகம். இவ்வுலகத்துப் பிறப்புக்களிலும் கொடுவினைவசத்தால் அந்நரகத் துன்பமே அனுபவித்து வருதலால் 'எழுமையுந் தான்புக் கழுந்து மளறு' என்ருர். முடிவில்லாத காலமெல்லாம் (நெடுங்காலம்) தான் நரகத்துன்பத்தையனுபவித்தற்குக் காரணமாகிய கொடுவினைகளையே அறிந்து சிலகாலத்துள்ளே செய்துகொள்ளுதல் பிறர்க்கு அரிதாகலால் 'ஆற்றும்' என்ருர். இதனுல் அவன் மறுமைச் செயல் சொல்லப்பட்டது.

(க-து) பேதையாயினுன் இப்பிறப்பிலேயே இனிவரும் பல பிறப்புக்களில் தான் நரகத் துன்பங்களை யடைதற் கேதுவாய செயல்களைச் செய்து கொள்ளுவான் என்பது.

5. A fool by his actions can procure in a single birth a hell into which he may enter and suffer through all the seven births.

---

சுா. பொய்படு மொன்ருே புனைபூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்.

பரி:—(இ-ள்.) செய்யுமுறைமை யறியாத பேதை ஒரு கருமத்தை மேற்கொள்வனுயின், †அதுவும் புரைபடும்; தானுந் தளைபூணும், (எ-று).

புரைபடுதல் - பின் *ஆகாவகை உள்ளழிதல். ஒன்ருேவென்பது எண்ணிடைச்சொல். $அதனையுங்கெடுத்துத் தானுங் கெடுமென்பதாம். இதனுல் 0அவன் செல்வம் படைக்குமாறு கூறப்பட்டது.

தெளி : (இ-ள்.) கையறியா - செய்யுமுறைமையையறியாத, பேதை-மூடனுனவன், வினை-(ஒரு)கருமத்தை. மேற்கொளின் - மேற்கொள்ளுவானுயின், பொய்படும்-(அதுவும்) புரைபடும், ஒன்ருே - அது ஒன்றுதாஞே, புனைபூணும்-(தானும்) தளைபூணுவான், (எ-று)

புரைபடுதல்-பின் ஆகாதபடி உள்ளழிதல். ஒன்ருே என்பது எண்ணுப்பொருளில் வந்த இடைச்சொல். (கையறியாப் பேதை) அதனையும் கெடுத்துத் தானும் கெடுமென்பதாம். இதனுல் அவன் செல்வம் படைக்கும் விதம் சொல்லப்பட்டது. தளை-விலங்கு; பூணுவான்-தரிப்பான்.

---

† அதுவும் - அக்கருமமும்.

* ஆகாவகை உள்ளழிதல் - (மேற்கொண்ட கருமம்) முடிவு பெருமையால் மனஞ்சோருதல்.

$ அதனையும் - மேற்கொண்ட கருமத்தையும். 0 அவன் - பேதை.

(க-து.) மூடன் தான் மேற்கொண்ட காரியத்தைக் கெடுப்பதோடு தன்னையுங் கெடுத்துக்கொள்ளுவான் என்பது.

6. If the fool, who knows not how to act, undertakes a work, he will not only fail in his undertaking but will adorn himself with fetters.

---

எ. ஏதிலா ரார்த் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வ முற்றக் கடை.

பரி :-(இ-ள்.) பேதையாயினான் பெரிய செல்வத்தைத் ()தெய்வத்தானெய்தியவழி, தன்னோடோரியையுமில்லாதார் *நிறைய, எல்லாவியையுமுடைய †தமராயினார் பசியாநிற்பர், (எ-று).

*எல்லா நன்மையுஞ் செய்துகோடற் கருவியென்பது தோன்றப் 'பெருஞ்செல்வம்' என்றும், ‡அதனைப்படைக்கு மாற்றலில்லாமை தோன்ற 'உற்றக்கடை' என்றும், எல்லாம் பெறுதறேன்ற 'ஆர' என்றும், உணவும் பெறுமை தோன்றப் 'பசிப்பர்' என்றுங் கூறினார்.*

தெளி.—(இ-ள்.) *பேதை-மூடனானவன், பெருஞ்செல்வம்-பெரிய செல்வத்தை, உற்றக்கடை-(ஊழால்) அடைந்தவிடத்து, ஏதிலார்-(தன்னோடு) ஒரு சம்பந்தமுமில்லாதவர், ஆர-நிறைய, தமர்-(எல்லாச் சம்பந்தமுமுடைய) தமராயினார், பசிப்பர்-பசியாநிற்பர், (எ-று).*

*எல்லாநன்மையும் செய்துகொள்ளுவதற்குச் சாதனமென்பது தோன்றப் 'பெருஞ்செல்வம்' என்றும், அதனைப் படைக்கும் வலிமையில்லாமை தோன்ற 'உற்றக்கடை' என்றும், (ஏதிலார்) எல்லாம் பெறுதல்தோன்ற 'ஆர' என்றும், (தமர்) உணவும் பெறுமைதோன்றப் 'பசிப்ப' என்றும் சொல்லினார்.*

*(க-து.) பேதையாயினான் செல்வமடைந்தவிடத்து, அதனால் அயலார் சுகமடைவர்; அவனது சுற்றத்தார் அச்செல்வத்துள் ஒன்றும்பெறாது துன்புறுவர் என்பது.*

7. If a fool perchance gets an immense fortune, strangers will enjoy it while his relations starve.

---

அ. மைய லொருவன் களித்தற்றாற் பேதைதன்
கையொன் றுடைமை பெறின்.

பரி :—(இ-ள்.) பேதையாயினான் தன்கைக்கண்ணே ஒன்றனையுடைமையாகப் பெற்றானாயின், ¶அவன் மயங்குதல் முன்னே பித்தினை

---

*() தெய்வத்தான்-ஆகூழால் (நல்வினையால்).*

** நிறைய-திருப்தியாயனுபவிக்க.* *† தமர்-சுற்றத்தார்.*

*‡ அதனை-பெருஞ்செல்வத்தை.* *¶ அவன்-பேதை.*

யுடையானொருவன் அம்மயக்கத்தின்மேலே மதுவுண்டு மயங்கினாற் போலும், (எ-று).

'பெறின்' எனவே, தெய்வத்தானன்றித் தன்னாற்பெறாமை பெற்றும். பேதைமையுஞ் செல்வக்களிப்பும் ஒருங்குடைமையால், அவன் செய்வன மையலும் *மதுக்களிப்பும் ஒருங்குடையான் செய்வனபோற் ‡றலைதடுமாறு மென்பதாம். இவையிரண்டு பாட்டானும் †அவன் செல்வமெய்திய வழிப் பயன்கொள்ளுமாறு கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) பேதை-மூடனானவன், தன்கை-தனதுகையிலே, ஒன்று-ஒரு பொருளை, உடைமை-உடைமையாக, பெறின்-பெற்றானா யின், மையலொருவன்-(அவன் மயங்குதல் முன்னே) பித்தினையுடையா னொருவன், களித்தற்று - (அம்மயக்கத்தின்மேலே) மதுவுண்டு மயங்கினாற்போலும், (எ-று)

ஆல் - அசை. (பேதைதன் கையொன்றுடைமை) 'பெறின்' எனவே, அவன் ஊழாலல்லாமல் தன்னால் (ஒரு பொருளை யுடைமை யாகப்) பெறுமைபெற்றும். பேதைமையும் செல்வக்களிப்பும் ஒரு சேர வுடைமையால், அவன் செய்யுங்காரியங்கள் மையலும் மதுக் களிப்பும் ஒருசேரவுடையவன் செய்யுங்காரியங்கள் போலத் தலை தடுமாறுமென்பதாம். இவையிரண்டுபாட்டாலும் அவன் செல்வ மடைந்தவிடத்துப் பயன்கொள்ளும்விதம் சொல்லப்பட்டது. பித்து-பித்தமயக்கம்.

(க-து.) பேதை யாதாவதொரு பொருளைப் பெற்றுச் செய்யுங் காரியம் முடிவு பெறுதொழியும் என்பது.

8. A fool happening to possess something is like the giddy man becoming intoxicated with liquor.

---

கூ. பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட்
பீழை தருவதொன் றில்.

பரி:—(இ-ள்.) பின் பிரிவுவந்துழி அஃதிருவர்க்குந் தருவதொரு துன்பமில்லை; ஆகலாற் பேதையாயினார் தம்முட்கொண்ட நட்பு மிக வினிது, (எ-று )

¶நாடோறுந்தேய்ந்து வருதலின், துன்பந்தாராதாயிற்று. 0புகழ்

---

* மதுக்களிப்பு-மது(கள்) உண்டலாலாய மயக்கம்.

‡ தலைதடுமாறும்-முறைபிறழும். † அவன்-பேதை.

¶ ''நுனிநீக்கித், தூரிற்றின் றன்ன தகைத்தரோ பண்பிலா வீரமிலாளர் தொடர்பு'' என்று நாலடியார் கூறுவதிங்கறியத்தக்கது.

0 'பெரிதினிது பேதையார் கேண்மை' என்று புகழ்வார்போல (அறிவுடையவரது நட்புப்போலப் பிரிவின்கண் துன்பந்தாராமை பற்றி) 'பிரிவின் கட்பீழை தருவதொன்றில்' என்று பேதையார் நட்பைப் பழித்தவாறுமென்க.

வார் போன்று பழித்தவாறு. இதனால் †அவரது நட்பின் குற்றங் கூறப்பட்டது.

தெளி :— (இ-ள்.) பிரிவின்கண் - (பின்) பிரிவுவந்தவிடத்து, (அப் பிரிவு), தருவது - (இருவர்க்கும்) தருவதாகிய, பீழையொன்று - ஒரு துன்பம், இல் - இல்லை, (ஆகலால்), பேதையார் - மூடராயினர், கேண்மை - (தம்முட்கொண்ட) நட்பு, பெரிதினிது - மிகவினியது, (எ-று).

(பேதையார் கேண்மை) தினந்தோறும் தேய்ந்துவருதலால், (பிரிவின்கண்) துன்பந்தாராதாயிற்று. (பேதையார் கேண்மையைப்) புகழ்வார்போன்று பழித்தவாறும். இதனால் அவரது நட்பின் குற்றம் சொல்லப்பட்டது.

(க-து.) பேதையாரது நட்பு, ஒழிந்த விடத்து இன்பந்தருவ தன்றித் துன்பந் தருவதில்லை என்பது.

9. The friendship between fools is exceedingly delightful as there will be nothing to cause them pain at parting.

---

**௰. கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றாற் சான்றோர்**
**குழாஅத்துப் பேதை புகல்.**

பரி:— (இ-ள்.) சான்றோ ரவையின்கட் பேதையாயினான் புகுதல் ‡தூயவல்ல மிதித்தகாலை இன்பந்தரும் அமளிக்கண்ணே வைத்தாற் போலும், (எ—று).

*'கழாஅக்கால்' என்பது இடக்கரடக்கு. $அதனால் அவ்வமளியும் இழிக்கப்படுமாறுபோல இவனால் அவ்வவையும் இழிக்கப்படுமென்பதாம். இதனால் ()அவன் அவையிடை யிருக்குமாறு கூறப்பட்டது.

---

அறிவுடையார் தம்முட் கொண்ட நட்புப் பிரிவின்கண் துன்பந் தருவதுபோலப் பேதையார் தம்முட்கொண்ட நட்புப் பிரிவின்கண் துன்பந் தருவதில்லை யெனப் பேதையார் நட்பைப் புகழ்வதுபோலப் பழித்தலின், இது வஞ்சப்புகழ்ச்சி யணியாம். † அவரது - பேதையாரது.

‡ தூயவல்ல - தூய்மை யல்லாதன ; அவை - மலமுதலியன.

* மலமுதலியவற்றை மிதித்தகால் என்று கூறாது 'கழாஅக்கால்' என்று கூறினமையின், இஃது இடக்கரடக்காயிற்று. இடக்கரடக்காவது நன்மக்களிடத்துச் சொலத்தகாத சொல்லை அவ்வாய்பாடு மறைத்து வேறு வாய்பாட்டாற் சொல்வது. இதுபற்றித் தொல்காப்பியம் "அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்" என்று கூறுவதும், பிங்கலந்தை "இடக்கர் மறைமொழி யெக்கருமாகும்" என்று கூறுவது மிங்கறியத்தக்கனவாம்.

$ அதனால் - கழாஅக்காலால் (கழுவாதகாலால்).

() அவன் - பேதை. "கல்லாது நீண்ட வொருவ னுலகத்து, நல்லறிவாள ரிடைப்புக்கு - மெல்ல, விருப்பினு நாயிருந் தற்றே யிராஅ, துரைப்பினு நாய்குரைத் தற்று" என்று நாலடியார் கூறுவது மிங்கறியத்தக்கதாம்.

தெளி :— (இ-ள்.) சான்றோர் - பெரியோரது, குழாஅத்து - சபையினிடத்து, பேதை - மூடனானவன், புகல் - புகுதல், கழாஅக்கால்-(அசுத்தமாயவற்றை மிதித்துக்) கழுவாதகாலே. பள்ளியுள் - (இன்பந்தருஞ்) சயனத்தின்கண்ணே, வைத்தற்று - வைத்தாற் போலும், (எ-று).

ஆல் - அசை. ‘ கழாஅக்கால் ’ என்பது இடக்கரடக்குச் சொல். அதனால் அச்சயனமும் இழிக்கப்படும் விதம்போல இவனால் அச்சபையும் இழிக்கப்படுமென்பதாம். இதனால் அவன் சபையிடத்து இருக்கும்விதம் சொல்லப்பட்டது. இழிக்கப்படுதல் - அவமதித்துப் பேசப்படுதல்.

(க-து.) சான்றோர் சபையிற் பிரவேசிக்கும் பேதை அவமானமடைவான் என்பது.

10. The advent of a fool into the assembly of the learned is like placing one's unwashed feet on a (pleasurable) bed.

---

## இருபத்திரண்டாவது அதிகாரம்

### புல்லறிவாண்மை—The fool's self-conceit

பரி:—(இ-ள்.) இனி ஏனைப்புல்லறிவாண்மை கூறுகின்றார். *அது புல்லிய வறிவினையாடற் றன்மையென விரியும். †அஃதாவது தான் சிற்றறிவினனா யிருந்தே தன்னைப் பேரறிவினனாக மதித்து உயர்ந்தோர் கூறும் ‡உறுதிச்சொற் கொள்ளாமை.

தெளி:—இனி மற்றைப் புல்லறிவாண்மையைச் சொல்லுகின்றார். அது புல்லிய அறிவினை ஆளுதற்றன்மையென விரியும். அஃதாவது தான் சிற்றறிவினனாயிருந்தே தன்னைப் பேரறிவினனாக மதித்து உயர்ந்தோர் சொல்லும் உறுதிச்சொல்லைக் கொள்ளாமை.

---

**க. அறிவின்மை யின்மையு ளின்மை பிறிதின்மை**
**யின்மையா வையா துலகு.**

பரி :—(இ-ள்.) ஒருவனுக்கு இல்லாமை பலவற்றுள்ளும் மிக்கவில்லாமையாவது அறிவில்லாமை ; மற்றைப்பொரு ளில்லாமையோ வெனின், ()அதனை §அப்பெற்றித்தாய இல்லாமையாகக் கொள்ளார் உலகத்தார், (எ-று).

---

* அது - புல்லறிவாண்மை. புல்லறிவு - வினைத்தொகை ; அறிவாண்மை - இரண்டாம் வேற்றுமைத்தொகை.

† அஃதாவது - புல்லறிவாண்மையாவது.

‡ உறுதிச்சொல் - நன்மையைத்தரும் சொல்.

() அதனை - மற்றைப் பொருளில்லாமையை.

§ அப்பெற்றித்தாய - அவ்வறிவில்லாமையதாய.

‘‘ நுண்ணுணர் வின்மை வறுமை யஃதுடைமை, பண்ணப் பணைத்த பெருஞ்செல்வம் ’’ என்று நாலடியார் கூறுவது மிங்கறியத் தக்கதாம்.

*அறிவென்பது ஈண்டுத் தலைமைபற்றி நல்லறிவின் மேனின்றது. புல்லறிவாளர் செல்வமெய்திய வழியும் இம்மை மறுமைப்பயனைய் தாமையின் அதனை 'இன்மையுளின்மை' என்றும், நல்லறிவாளர் வறுமையெய்திய வழியும் †அஃதிழவாமையின் அதனை 'இன்மையா வையாது' என்றுங் கூறினார். இதனாற் புல்லறிவினது குற்றங் கூறப் பட்டது.

தெளி :— (இ-ள்.) இன்மையுள் - (ஒருவனுக்கு) இல்லாமை பலவற்றுள்ளும், இன்மை-(மிகுந்த) இல்லாமையாவது, அறிவின்மை- அறிவில்லாமை, பிறிதின்மை - மற்றைப் பொருளில்லாமையோ வெனின், (அதனை), உலகு – உலகத்தார், இன்மையா – (அத்தன்மை யதாய) இல்லாமையாக, வையாது – கொள்ளார், (எ-று).

அறிவென்பது இங்குத் தலைமைபற்றி நல்லறிவின்மேல் நின்றது. புல்லறிவாளர் செல்வமடைந்தவிடத்தும் இம்மை மறுமைப் பயன் அடையாமையால் அச்செல்வத்தை 'இன்மையுளின்மை' என்றும், நல்லறிவாளர் வறுமையடைந்த விடத்தும் அப்பயனை இழவாமை யால் அவ்வறுமையை 'இன்மையாவையாது' என்றும் சொல்லினர். இதனாற் புல்லறிவின் குற்றம் சொல்லப்பட்டது.

(க-து.) ஒருவனுக்கு அறிவில்லாமையே வறுமையாம்; அஃதுடை மையே செல்வமாம் என்பது.

1. The want of wisdom is the greatest of all wants; but that of wealth the world will not regard as such.



உ. அறிவிலா னெஞ்சுவந் தீதல் பிறிதியாது
மில்லை பெறுவான் றவம்.

பரி :— (இ-ள்.) ‡புல்லறிவுடையான் ஒருவனுக்கு மனமுவந்து ஒன்று கொடுத்தல் கூடிற்றாயின், ¶அதற்குக் காரணம் பெறுகின்றவ னல்வினையே ; வேறொன்றுமில்லை, (எ-று).

ஒரோவழி நெஞ்சுவந்தீதல் கூடலிற் புல்லறிவாளரும் நல்வினை செய்ப என்பார்க்குப் $பெறுவான் 0வீழ்பொருளெய்தியான் போல

---

* அறிவு என்பது நல்லறிவிற்கும் புல்லறிவிற்கும் பொதுவாயிருத் தலால், அப்பொதுமையை விலக்கத் தலைமைபற்றிய வழக்கால் 'அறிவென்பது ஈண்டுத் தலைமைபற்றி நல்லறிவின் மேனின்றது' என்று கூறப்பட்டது.

† அஃது – இம்மைப்பயன், மறுமைப்பயன்.

‡ புல்லறிவுடையான் – புல்லிய (தாழ்ந்த) அறிவினையாளுந் தன்மையுடையவன். ¶அதற்கு – புல்லறிவுடையான் மனமுவந்து ஒன்று கொடுத்தற்கு.

$ பெறுவான் – புல்லறிவாளர் மனமுவந்து கொடுப்பதொன் றனைப் பெறுகின்றவன். 0 வீழ்பொருள் – விழுந்து கிடப்பதொரு பொருளை.

வதல்லது இம்மை நோக்கியாக மறுமை நோக்கியாக ஈகின்றாரல்ல ரெனக் கூறியவாறு. *கூடிற்றாயின் அதற்குக் காரணம் என்னும் சொற்கள் அவாய் நிலையான் வந்தன. இதனால் †அஃதுடையார் தம்மாட்டு நல்லன செய்தலறியாமை கூறப்பட்டது.

தெளி :— (இ-ள்.) அறிவிலான் - புல்லறிவுடையவன், நெஞ்சு வந்து - மனமகிழ்ந்து, ஈதல் - (ஒருவனுக்கு ஒன்று) கொடுத்தல், (கூடியதாயின் அதற்குக் காரணம்), பெறுவான் - பெறுகின்றவனது, தவம் - நல்வினையே, பிறிதியாதும் - வேறொன்றும், இல்லை - (காரண மாவது) இல்லையாம், (எ-று).

(புல்லறிவாளர் யாதாவதொன்றனைப் பிறர்க்கு) ஒரோவிடத்து மனமகிழ்ந்து கொடுத்தல் கூடுதலால் புல்லறிவாளரும் நல்வினை செய்வாரென்பார்க்குப் பெறுவான் வீழ்பொருள் அடைந்தவன் போல்வதல்லாமல் புல்லறிவாளர் இம்மை நோக்கியாவது மறுமை நோக்கியாவது அவனுக்குக் கொடுக்கின்றாரல்லரெனக் கூறியவாறும். கூடியதாயின் அதற்குக் காரணம் என்னுஞ் சொற்கள் அவாய் நிலையால் வந்தன. இதனால் அஃதுடையார் தம்மிடத்து நல்லன வற்றைச் செய்தலறியாமை சொல்லப்பட்டது.

(க-து.) அறிவிலான் ஒருவனுக்கு மனமுவந்து ஒன்றைக் கொடுத்தற்குக் காரணம் பெறுகின்றவனது தவமன்றிப் பிறிதில்லை என்பது.

2. The cause of a fool cheerfully giving alms is nothing else but the receiver's merit.

---

ங. அறிவிலார் தாந்தம்மை பீழிக்கும் பீழை
செறுவார்க்குஞ் செய்த லரிது.

பரி :—(இ-ள்) புல்லறிவுடையார் தாமே தம்மைவருத்தும் வருத்தம் அது செய்தற்குரியராய தம் பகைவர்க்குஞ் செய்தலரிது, (எ-று).

பகைவர் தாம் அறிந்ததொன்றனைக் காலம் பார்த்திருந்து செய் வதல்லது வறுமை, பழி, பாவ ‡முதலிய பலவற்றையும் எக்காலத்துஞ் செய்ய மாட்டாமையின் ¶'செறுவார்க்குஞ் செய்தலரிது' என்றார். இதனால் $அவர்தம்மாட்டுந் தீயன செய்தலறிவரென்பது கூறப் பட்டது.

---

* கூடிற்றாயின், அதற்குக் காரணம் என்னுஞ் சொற்களைப் பெறுவான் தவம் என்னுஞ்சொற்கள் அவாய் (வேண்டி) நிற்றலின் அவை வருவிக்கப் பட்டன.

† அஃதுடையார் - புல்லறிவுடையார்.

‡ முதலிய என்றமையின் அவமான மடைதல், காவலிலிருத்தல், அடிபடல், அபராதந்தருதல், பிறர்க்கடிமையாதல் முதலியவற்றை யுங் கொள்க.

¶ அவர்க்குஞ் செய்தலரிது என்றும் பாடமுண்டு. $ அவர் - புல் லறிவுடையார்.

தெளி:—(இ-ள்) அறிவிலார்-புல்லறிவுடையவர், தாம் - தாமே, தம்மைப் பீழிக்கும் - தம்மை வருத்தும், பீழை - வருத்தத்தை, செறுவார்க்கும் -(அவ்வருத்தத்தைச் செய்தற்கு உரியவராய தமது) பகைவர்க்கும், செய்தல் அரிது - செய்தல் முடியாது, (எ-று).

பகைவர் தாம் அறிந்ததொரு தீமையைக் காலம் பார்த்திருந்து செய்வதல்லாமல் வறுமை, பழி, பாவ முதலிய பலவற்றையும் எக்காலத்தும் செய்யமாட்டாமையால் 'செறுவார்க்குஞ் செய்தலரிது' என்றார். இதனால் அவர் தம்மிடத்துந் தீயனவற்றைச் செய்தலறிவரென்பது சொல்லப்பட்டது.

(க-து.) புல்லறிவாளர் பகைவர் செய்தற்கரிய துன்பங்களைத் தாமே தமக்குச்செய்து கொள்வர் என்பது.

3. The suffering that fools inflict upon themselves is hardly possible even by enemies.

---

## ச. வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை யுடையம்யா மென்னுஞ் செருக்கு.

பரி:—(இ-ள்.) புல்லறிவுடைமை யென்று சொல்லப்படுவது யாதென்று வினவின், *அது தம்மைத்தாமே யாம் நல்லறிவுடையமென்று நன்கு மதிக்கும் மயக்கம், (எ-று).

†வெண்மையாவது அறிவுமுதிராமை. ‡'ஒண்மை' எனக் காரியப் பெயர் காரணத்திற்காயிற்று. உலகத்தாரிகழ்தல் அறிந்துவைத்தும் ¶அவ்வாறு மதித்தலான் 0'செருக்கு' என்றார்.

தெளி :—(இ-ள்.) வெண்மை யெனப்படுவது-புல்லறிவுடைமை யென்று சொல்லப்படுவது, யாதெனின்-யாதென்று கேட்டால், (அது), யாம் ஒண்மையுடையம்-(தம்மைத்தாமே) யாம் நல்லறிவுடையேம், என்னும்-என்று நன்குமதிக்கும், செருக்கு-மயக்கமாம், (எ-று).

வெண்மை-இளமை; அஃதாவது அறிவுமுதிராமை. 'ஒண்மை' என்று காரியப்பெயர் அதன் காரணமான அறிவிற்காயிற்று (புல்லறி

---

* அது-புல்லறிவுடைமை.

† வெண்மையென்பது இங்கு இவனுக்கு வெள்ளைப் புத்தி யென்பதுபோல மந்தம் பற்றி வந்தது.

‡ நன்மை யென்னும் பொருளதான ஒண்மை யென்னுங் காரியப்பெயர் அவ்வொண்மைக்குக் காரணமாய அறிவிற்காயிற்று; ஆகவே, இது காரியம் காரணமாய வுபசாரவழக்காம்; காரியவாகு பெயரெனினும் ஒக்கும்.

¶ அவ்வாறு மதித்தலான்-தம்மைத்தாமே யாம் நல்லறிவுடைய மென்று பாராட்டுதலால்.

0 மயக்கம் என்றும் பாடமுண்டு.

வாளர் தம்மை) உலகத்தார் இகழ்தலை அறிந்திருந்தும் அங்ஙனமதித்தலால் 'செருக்கு' என்றார்.

(க-து.) புல்லறிவாளர் தம்மைத் தாமே யாம் நல்லறிவுடையேமென்று உயர்த்திப் பேசிக்கொள்வர் என்பது.

4. What is called want of wisdom is the vanity which says "we are wise".

---

ரு. கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற
வல்லதூஉ மையந் தரும்.

பரி :—(இ-ள்.) புல்லறிவாளர் தாங்கல்லாத நூல்களையுங் கற்றாராகத் தாம் மேலிட்டுக்கொண்டு ஒழுகுதல், †கசடறக் கற்றதொருநூலுண்டாயின், ‡அதன்கண்ணும் பிறர்க்கு ஐயத்தைவிளைக்கும், (எ-று).

§வல்லதென ஏழாவது இறுதிக்கட்டொக்கது. உண்டாயினென்பது அவாய் நிலையான் வந்தது. ஐயம் அதுவல்லரென்பதூஉம் இவ்வாறு கொல்லோ வென்பது.

தெளி :—(இ-ள்.) (புல்லறிவாளர்) கல்லாத-(தாம்) கல்லாத நூல்களையும், மேற்கொண்டு (கற்றவராகத்தாம்) மேலிட்டுக்கொண்டு, ஒழுகல்-நடத்தல், கசடற-குற்றமற, வல்லதூஉம்-கற்றதொருநூல் (உண்டாயின்) அதனிடத்தும், (பிறர்க்கு), ஐயம்-ஐயத்தை, தரும்-உண்டாக்கும், (எ-று).

வல்லது என்பத னிறுதியில் ஏழனுருபு தொக்குநின்றது. 'ஐயந்தரும்' என்னுஞ் சொற்கள் உண்டாயின் என்பதனை அவாய் நிற்றலின், அது வருவிக்கப்பட்டது. ஐயம் இவர் அந்த நூலில் வல்லவரென்பதும் இவ்வாறுதானிருக்குமோ வென்பது.

(க-து.) புல்லறிவாளர் தாம் கல்லாத நூல்களையும் யாம் கற்றேமெனப்பேசி, தாம் கற்ற நூல்களிலும் பிறர்க்கு ஐயத்தையுண்டாக்குவரென்பது

5. Fools pretending to know what has not been read by them will create suspicion even as to what they have thoroughly learnt.

---

† கசடற-ஐயந்திரிபொழிய.

‡ அதன்கண்ணும்-கசடறக்கற்ற நூலினிடத்தும்.

§ வல்லதூஉம் என்னும் வினையாலணையும் பெயரினிறுதியில் கண் என்னும் ஏழனுருபு தொக்குநின்றது; தொகாதாயின், அது வல்லதன் கண் என நிற்கும்.

சா. அற்ற மறைத்தலோ புல்லறிவு தம்வயிற்
குற்ற மறையா வழி.

பரி:—(இ-ள்) புல்லறிவாளர் தங்கணிகழுங் குற்றங்களை யறிந்து கடியாராயின், ஆடையால் அற்றமறைத்தாராகத் தம்மைக் கருதுதலும் புல்லறிவாம், (எ-று).

குற்றமறைத்தலாவது ‡அவற்றை இலவாக்குதல். †மறைக்கப் படுவன பலவற்றுள்ளும் உயர்ந்தவற்றை யெல்லாம் மறையாது தாழ்ந்ததொன்றனையே மறைத்து *அவ்வளவாற் றம்மையு முலக வொழுக்கினராக மதித்தலும் புல்லறிவென்பதாம். இவை மூன்று பாட்டானும் அவர் தம்மை ¶வியத்தற் குற்றங் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) (புல்லறிவாளர்) தம்வயின் - தம்மிடத்து, (உண்டாகும்), குற்றம் - குற்றங்களை, மறையாவழி - (அறிந்து) நீக்காராஞல், அற்றம்-மறைக்கத்தக்க அவயவத்தை, மறைத்தலோ- (ஆடையால்) மறைத்தவராகத் தம்மை நினைத்தலும், புல்லறிவு - புல்லறிவாம், (எ-று).

குற்றமறைத்தலாவது அவற்றை இல்லாமற் செய்தல். மறைக் கப்படுவனவாய அங்கங்கள் பலவற்றிலும் உயர்ந்த அங்கங்களை யெல்லாம் மறையாமல் தாழ்ந்த தொன்றனையே மறைத்து அவ் வளவால் (புல்லறிவாளர்) தம்மையும் உலகநடையுள்ளவராக மதித் தலும் புல்லறிவென்பதாம். இவை மூன்றுபாட்டாலும் அவர் தம்மை வியத்தற் குற்றம் சொல்லப்பட்டது. ‘மறைத்தலோ’ என்னும் ஓகாரம் மறைத்தலும் என எச்ச வும்மைப் பொருளில் வந்தது.

(க-து.) புல்லறிவாளர் தம்மிடத்துண்டாகுங் குற்றங்களை யொழிக்காமல் தம்மை யுலகநடை யுடையவராகக் கருதுவர்.

6. It would be folly even to cover one's nakedness, if one's faults were not discarded.

---

எ. அருமறை சோரு மறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு.

பரி:—(இ-ள்.) பெறுதற்கரிய உபதேசப் பொருளைப் பெற்றாலும் உட்கொள்ளாது போக்கும் புல்லறிவாளன் ()அவ்வுறுதி யறியாமை யாற்றனே தனக்கு மிக்க வருத்தத்தைச் செய்து கொள்ளும், (எ-று).

---

‡ அவற்றை - தம்மிடத்துண்டாகுங் குற்றங்களை.

† மறைக்கப்படுவனவாய அங்கங்கள் தலை, இடை, தொடை முதலியனவாம்; அவற்றுள் உயர்ந்தன தலை, கழுத்து, இடை முதலி யனவாம்; தாழ்ந்தது கோவணங்கட்டுவதற்குரிய அங்கமாம்.

* அவ்வளவால் - தாழ்ந்ததொன்றனை ஆடையால் மறைத்த வளவினுல்.

¶ வியத்தல் - உயர்த்திப் பேசுதல்.

() அவ்வுறுதி - பெறுதற்கரிய வுபதேசப் பொருளாலடையும் நன்மை.

*'சோரும்' என இடத்துநிகழ் பொருளின்றொழில் இடத்தின் மேனின்றது. மிக்கவருத்தம் - பொறுத்தற்கரிய துன்பங்கள். †இனி அருமறைசோரும் என்பதற்குப் பிறரெல்லாம் உள்ளத்தடக்கப்படும் எண்ணத்தை வாய்சோர்ந்து பிறர்க் குரைக்குமென் றுரைத்தார். ‡அது ¶பேணுமை யென்னும் பேதைமை யாவதன்றிப் புல்லறிவாண்மை யன்மை யறிக.

தெளி:—(இ - ள்.) அருமறை - பெறுதற்கரிய உபதேசப்பொருளை, சோரும் - (பெற்றாலும்) உட்கொள்ளாதுபோக்கும், அறிவிலான் - புல்லறிவாளன், (அவ்வுறுதியை யறியாமையால்), தானே தனக்கு-, பெருமிறை - மிகுந்த வருத்தத்தை, செய்யும் - செய்துகொள்ளுவான், (எ-று).

'சோரும்' என இடத்துநிகழ் பொருளின் தொழில் இடத்தின் மேல் நின்றது. மிகுந்தவருத்தம்-பொறுத்தற்கரிய துன்பங்கள்.

(க—து ) புல்லறிவாளன் பெறுதற்கரிய உபதேசப் பொருளைப் பெற்றாலும், அதனை யுட்கொள்ளாது தனக்குத்தானே மிக்க வருத்தத்தைச் செய்துகொள்ளுவான் என்பது.

7. The fool who neglects sacred teachings does, of his own accord, a great injury to himself.

---

அ. 0ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய்.

---

*அறிவிலான் என்னும் இடத்துநிகழ் (இருக்கும்) (அருமறை யென்னும்) பொருளின் சோருதலாகியதொழில் (அறிவிலான் என்னும்) இடத்தின்மேல் (அறிவிலான் அருமறை சோரும் என) நின்றது. அருமறையின் சோருதற் றொழிலை அஃதுடையான்மே லேற்றிக் கூறினமையின், இஃது இடத்துநிகழ் பொருளின்தொழில் இடத்தின்மேலாய வுபசாரவழக்காம்.

† இனி அருமறை சோரும் என்பதற்கு மற்றவுரைகாரரெல்லாம் அருமறை-மனத்தி லடக்கப்படும் எண்ணத்தை, சோரும்- (அறிவிலான்) வாய்தவறிப் பிறர்க்குச் சொல்லுவான் என்று பொருள்கூறினர். அது பேணுமையென்னும் பேதைமை யாவதல்லாமல் புல்லறிவாண்மையாகாமையை யறிந்துகொள்க. ''நாணுமை நாடாமை நாரின்மை யாதொன்றும், பேணுமை பேதை தொழில்'' என்னுங் குறளிங்குணர்தற் பாற்றும்.

‡ அது-அவ்வாறுரைத்தல். ¶ பேணுமை (விரும்பத்தக்கன-வற்றுள் யாதொன்றையும்) விரும்பாமை.

0 நன்னூல் விருத்தியுரைகாரர் ''உவப்பினுமுயர்வினும்'' என்னுஞ் சூத்திரத்தினுரையில் இக்குறளை யுதாரணமாகக்காட்டி ''செறலின் (கோபத்தினல்) உயர்திணை யஃறிணையாயிற்று'' என்றனர். புல்லறிவாளன் என்பது உயர்திணை; அவ்வுயிர் என்பது அஃறிணை.

பரி:—(இ-ள்.) புல்லறிவாளன் தனக்குறுதியாயவற்றை அறிவுடையார் சொல்லாநிற்கவுஞ் செய்யான்; அதுவன்றித் தானுகவும் இவை செய்வனவென்றறியான்; அவ்வுயிர் யாக்கையி னீங்குமளவும் நிலத்திற்குப் பொறுத்தற்கரிய தொருநோயாம், (எ-று).

¶உயிர் தான் உணர்தற்றன்மைத்தா யிருந்தும் நின்றயாக்கை வயத்தான் மருடற்றன்மைத்தாய்வேறுபடுதலின் 'அவ்வுயிர்' என்றும், ‡அதனினீங்கியபொழுதே அதற்கு §இரண்டனுள் ஒன்று கூடுதலிற் 'போஒமளவும்' என்றும், *குலமலை 0முதலிய பொறுக்கின்ற நிலத்திற்குப் பாவயாக்கை பெரும்பொறையாய்த் துன்பஞ்செய்தலின் 'ஓர் நோய்' என்றும் கூறினர்.

தெளி:—(இ-ள்.) (புல்லறிவாளன்) ஏவவும் - (தனக்கு உறுதியாயவற்றை அறிவுடையார்) சொல்லா நிற்கவும், செய்கலான் - செய்யான், (அதுவல்லாமல்), தான் - தானுகவும், தேருன் - (இவை செய்வனவென்று) அறியான், அவ்வுயிர் - அந்தவுயிரானது, போஒமளவும் - (உடம்பினின்றும்) நீங்குமளவும், ஓர்நோய் — (பூமிக்குப் பொறுத்தற்கரியதாகிய) ஒருநோயாம், (எ-று).

உயிர் தான் உணருதல் தன்மையதா யிருந்தும் நின்ற உடம்பின் வசத்தால் மயங்குதல் தன்மையதாய் வேறுபடுதலால் 'அவ்வுயிர்' என்றும், அவ்வுடம்பினின்றும் நீங்கியபொழுதே அவ்வுயிர்க்கு இரண்டனுள் ஒன்று கூடுதலால் 'போஒமளவும்' என்றும், குலமலை முதலியவற்றைச் சுமக்கின்ற பூமிக்குப் பாவவுடம்பு பெருஞ் சுமையாய்த்

---

¶ உயிர்க்கிலக்கணம் உணர்தற் றன்மையதென்பது இங்குணர்தற் பாற்றும்.

‡ அதனினீங்கிய பொழுதே - அவ்வுடம்பினின்றும் நீங்கிவேறுடம்பை யடைந்தபோதே.

§ இரண்டனுள் ஒன்று கூடுதலின்- ஏவச்செய்தல், தான் தேறுதல் என்னுமிரண்டனுள் ஒன்று சம்பவித்தலால். புல்லறிவாளனுயிர் உணர்தற்றன்மையதாயிருந்துந் தானின்ற யாக்கையின் (உடம்பின்) வசத்தால் (ஏவச்செய்தல் தான் தேறுதல் என்னு மிரண்டனுள் ஒன்று கூடாது) மயங்குதற் றன்மையதாய் வேறு படுதலின், அவ் வாக்கையினின்றும் நீங்கியபொழுதே அவ்வுயிர்க்கு ஏவச்செய்தல் தான் தேறுதலென்னு மிரண்டனுள் ஒன்று கூடுமென்பது 'இரண்டனுள் ஒன்றுகூடுதலின்' என்பதன் கருத்தாம். ஏவச்செய்வானிடத்துத் தான்தேறுதலும், தான் தேறுவானிடத்து ஏவச்செய்தலு மின்மையின் 'இரண்டனுள் ஒன்று கூடுதலின்' என்று கூறப்பட்டது. ஏவச் செய்வான் தான் தேருன்; தான் தேறுவான் ஏவச்செய்யாது தானே செய்வானென்று கொள்க. இதனுல் ஏவச்செய்தல் தான் தேறுதலென்னுமிரண்டனுள் ஒன்றில்லாத வுயிர் தன்னுடம்பி னின்றும் நீங்குமளவும் பூமிக்குப் பெருஞ்சுமையாமென்பது பெறப்பட்டதென்க.

* குலமலை - பெருமலை; அது மேருமலை முதலியனவாம்.

0 முதலிய என்றமையின், குன்று, யாறு, காடு, நாடு முதலியவற்றையுங் கொள்க.

துன்பஞ்செய்தலால் 'ஓர் நோய்' என்றும் சொல்லினர்.

(க-து.) புல்லறிவாளன் பெரியார்கூறிய காரியங்களைச் செய்தலும் நற் காரியங்களைத் தானே தெரிந்து செய்தலுமின்மையின், அவன் சாமளவும் நிலத்திற்குப் பாரமாயிருக்கின்றான் என்பது.

8. The fool will not perform his duties even when advised nor ascertain and do them himself ; such a man is a burden to the earth till his Atman departs from his body.

---

கூ. ||காணாதாற் காட்டுவான் றன்காணான் காணாதான்
கண்டானாந் தான்கண்ட வாறு

பரி.—(இ-ள்.) தன்னை எல்லாமறிந்தானாக மதித்தலாற் பிறரால் ஒன்றறியுந்தன்மை யிலாதானை அறிவிக்கப்புகுவான் †அவனால் பழிக்கப் பட்டுத் தான் அறியானாய் முடியும்; இனி அவ்வறியுந்தன்மை யில்லா தான் ¶கொண்டது விடாமையாற் றானறிந்தவாற்றால் 0அதனை அறிந் தானாய் முடியும், (எ-று).

புல்லறிவாளர்க்கு நல்லறிவு கொளுவுதல் ஒருவாற்றானும் இயை வதன்றென்பதாம்.

தெளி:—(இ-ள்.) (தன்னை எல்லாமறிந்தவனாக மதித்தலால்) காணாதான் - (பிறரால் ஒன்றை) அறியுந்தன்மையில்லாதவனை, காட்டுவான் - அறிவிக்கப்புகுவான், தான்காணான் - (அவனால் பழிக் கப்பட்டுத்) தான் அறியாதவனாய் முடிவன், காணாதான் - (இனி) அவ்வறியுந்தன்மை யில்லாதவன், (கொண்டது விடாமையால்), தான்கண்டவாறு - தான் அறிந்த விதத்தால், கண்டானாம் - (அதனை) அறிந்தவனாய் முடிவன், (எ-று).

புல்லறிவாளர்க்கு நல்லறிவை வருவித்தல் ஒருவழியாலும் பொருந்துவதன்றென்பதாம்.

(க-து.) புல்லறிவாளனுக்கு உறுதி தருவனவற்றைக் கூறு கின்றவன் அவனால் பழிக்கப்பட்டவமான மடையான் என்பது.

9. One who would teach a fool will simply be declared a fool; and the fool would still think himself " wise in his own conceit."

---

|| " கற்றனை கல்லார் செவிமாட்டிக் கையுறூஉங், குற்றந் தமதே பிறிதன்று - முற்றுணர்ந்தும், தாமவர் தன்மை யுணராதார் தம் முணரா, ஏதிலரை நோவதெவன்" என்பது நீதிநெறி விளக்கம்.

† அவனால் - புல்லறிவாளனால்.

¶ மூர்க்கனும் முதலையுங் கொண்டது விடா என்பதிங் கறியத் தக்கது.

0 அதனை - கொண்டதை.

**௧0. உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்**
**தலகையா வைக்கப் படும்.**

பரி :— (இ-ள்.) உயர்ந்தோர் பலரும் உண்டென்ப தோர்பொருளைத் தன் புல்லறிவா னில்லையென்று சொல்லுவான் மகனென்று கருதப் படான்; வையத்துக் காணப்படுவதோர் பேயென்று கருதப்படும், (எ–று).

*கடவுளும், மறுபிறப்பும், இருவினைப்பயனும் *முதலாக †அவர் உளவென்பன பலவேனுஞ் ¶சாதியொருமைபற்றி 'உண்டென்பது' என்றும், ‡தானே வேண்டிய கூறலால் ஒப்பும், வடிவால் ஒவ்வாமையு முடைமையிற் றன்யாக்கை கரந்து மக்கள் யாக்கையுட்டோன்றுதல் வல்ல 'அலகை' என்றுங் கூறினர். இவை நான்கு பாட்டானும் உறுதிச்சொற் கொள்ளாமையது குற்றங் கூறப்பட்டது.*

தெளி :— (இ-ள்.) உலகத்தார் – உயர்ந்தோர், (பலரும்), உண்டென்பது – உண்டென்பதோர் பொருளை, இல்லென்பான் – (தன் புல்லறிவால்) இல்லையென்று சொல்லுவான், (மனிதனென்று நினைக் கப்படான்), வையத்து – பூமியில், அலகையா – (காணப்படுவதொரு) பேயென்று, வைக்கப்படும் – நினைக்கப்படுவான், (எ–று).

*கடவுளும், மறுபிறப்பும், இருவினைப் பயனும் முதலாக அவர் உளவென்பன பலவாயினும் சாதியொருமைபற்றி 'உண்டென்பது' என்றும், (புல்லறிவாளன்) தானே வேண்டியவற்றைச் சொல்லு தலால் (பேயோடு) ஒப்பும் வடிவால் ஒவ்வாமையும் உடைமையால் தன்னுடம்பை மறைத்து மக்களுடம்பில் தோன்றுதல் வல்ல 'அலகை' என்றும் சொல்லினர். இவை நான்குபாட்டாலும் புல்லறிவாளர் உறுதிச் சொல்லைக் கொள்ளாமையினது குற்றம் சொல்லப்பட்டது.*

(க–து.) பெரியோர் பலருமுண்டென்பதை இல்லையென்று சொல்லுவான் உலகத்தாராற் பேய்என்று நினைக்கப்படுவான்.

10. He who denies the existence of what the wise believe in, will be regarded as a demon on earth.

---

* முதலாக என்றமையின், ஆகாயம், அனுமான முதலிய பிரமாணம், யோகம், ஞானம் முதலியவற்றையுங் கொள்க.
† அவர் உயர்ந்தோர்.

¶ சாதிபற்றியென்றும் பாடமுண்டு. உண்டென்பது ஈறு தோன்றிய சாதியொருமைப் பெயர்.

‡ புல்லறிவாளன் பேய்போலத் தானே வேண்டியவற்றைச் சொல்லுதலால் (பிதற்றுதலால்), அவன் அப்பேயோடு அச்செயலா லொத்து, (மக்கள்) வடிவாலொவ்வாதிருக்கின்றான்; ஆதலால், அவன் தன் (பேய்) உடம்பை மறைத்து மக்களுடம்பில் தோன்றுதல்வல்ல அலகை யாவனென்பதாம்.

# இருபத்து மூன்ருவது அதிகாரம்

## இகல் — Enmity

பரி :— இனி *அவற்ருன் வரும் வெகுளி காமங்களுள் அரசர்க்கு ‡வெகுளி பெரும்பான்மைத் தாகலின், †அதனுன் வருவன கூறுவான் ருெடங்கி, முதற்கண் இகல் கூறுகின்ருர். ¶அஃதாவது இருவர் தம்முட் பொருது வலி தொலைதற் கேதுவாய மாறுபாடு.

தெளி :— இனி அவற்ருல்வரும் கோபம் காமங்களுள் அரசர்க் குக் கோபம் பெரும்பான்மையதாக இருப்பதாகலின், அதனுல் வருங்குற்றங்களைச் சொல்லத் தொடங்கி, முதலில் இகல் சொல்லு கின்ருர். அஃதாவது இருவர் தம்முள் போர்செய்து வலி தொலைதற் குக் காரணமாய மாறுபாடு.

---

**க. இகலென்ப வெல்லா வுயிர்க்கும் பகலென்னும்**
**பண்பின்மை பாரிக்கு நோய்.**

பரி :—(இ-ள்.) எல்லாவுயிர்கட்கும் பிறவுயிர்களோடு கூடாமை யென்னுந் தீக்குணத்தை வளர்க்குங் குற்றம் இகலென்று சொல்லுவர் நூலோர், (எ—று).

0 மக்களையும் விலங்குகளோ டொப்பிப்ப தென்பது தோன்ற 'எல்லாவுயிர்க்கும்' என்றும், 1 பகுதிக் குணத்தை இடைநின்று விளைத்தலிற் 'பகலென்னும் பண்பின்மை' என்றுங் கூறினுர். ||பண் பின்மை அருத்தாபத்தியாற் றீக்குணமாயிற்று. இதனுல் இகலது குற்றங் கூறப்பட்டது.

தெளி :— (இ-ள்.) எல்லாவுயிர்க்கும் - எல்லா வுயிர்களுக்கும், பகலென்னும்-(பிறவுயிர்களோடு) கூடாமையென்னும், பண்பின்மை, தீக்குணத்தை, பாரிக்கும் - வளர்க்கும், நோய் — குற்றம், இகல் — மாறுபாடாம், என்ப - என்று சொல்லுவார், (நூலோர்), (எ—று).

---

* அவற்ருன் - பேதைமை புல்லறிவாண்மைகளால்.

‡ வெகுளி பெரும்பான்மைத்தாகலின் — கோபம் பகைவர்முதலா யினுரிடத்து மிகுதியாக வரக்கூடியதாகலின்.

† அதனுன் — வெகுளியால். ¶ அஃதாவது - இகலாவது.

0 இகல் (மாறுபாடு) நல்லறிவுடையாரையும் (பகுத்தறிவில்லாத) விலங்கு (மிருகம்) போலாக்கிவிடுதலால், மக்களுயிர்க்கென்று கூருது பொதுப்பட 'எல்லாவுயிர்க்கும்' என்று கூறினுர். இதனுல் மாறுபாடு உடையார் விலங்கோ டொப்பாவ ரென்பதாயிற்று.

1 பகுதிக்குணம் — பிறவுயிர்களோடு கூடாமையென்னும் தீக் குணம். பகுதி — (பிறவுயிர்களோடு) கூடாமை.

|| நற்குணமின்மையென்றும் பாடமுண்டு. பண்பின்மை — நற் குணமின்மை. அஃதிங்கு அருத்தாபத்தியால் தீக்குணமாயிற்று. தீக் குணமின்ருயின் நற்குணமின்மை கூடாது; நற்குணமின்மையால் தீக் குணமுடைமை பெறப்பட்டதென்பது இங்கருத்தாபத்தியாம்.

(இகல்) மக்களையும் விலங்குகளோடு ஒப்பாக்குவ தென்பது தோன்ற 'எல்லாவுயிர்க்கும்' என்றும், பகுதிக் குணத்தை நடுநின்று விளைத்தலால் 'பகலென்னும் பண்பின்மை' என்றும் சொல்லினர் பண்பின்மையென்பது அருத்தாபத்தியினல் தீக்குணமாயிற்று. இதனல் இகலினது குற்றம் சொல்லப்பட்டது.

(க-து.) எல்லாவுயிர்கட்கும் பிறவுயிர்களோடு கூடாமையென்னுந் தீக்குணத்தை வளர்க்குங் குற்றம் இகலாகும் என்பது.

1. The disease which fosters the evil of disunion among all creatures is termed enmity by the wise.

---

உ. பகல்கருதிப் பற்று செயினு மிகல்கருதி
யின்னுசெய் யாமை தலை.

பரி:—(இ-ள்.) ‡தம்மோடு கூடாமையைக் கருதி ஒருவன் வெறுப்பன செய்தானுயினும், அவனோடு மாறுபடுதலைக் குறித்துத் தாமவனுக்கு இன்னாத வற்றைச் செய்யாமை உயர்ந்தது, (எ-று).

செய்யிற் பகைமை வளரத் தாந் தாழ்ந்துவரலானும், †ஒழியின் அப்பற்றுதன தாமே யோய்ந்துபோகத் தாம் ஓங்கிவரலானும் 'செய்யாமை தலை' என்றார். ¶பற்றுதனவென்பது விகாரமாயிற்று.

தெளி:—(இ-ள்.) பகல்-(தம்மோடு) கூடாமையை, (ஒருவன்), கருதி-நினைத்து, பற்று-வெறுப்பனவற்றை, செயினும்-செய்தானு-யினும், இகல்கருதி-(அவனோடு) மாறுபடுதலைக் குறித்து, (தாம் அவனுக்கு), இன்னு-துன்பந்தருவனவற்றை, செய்யாமை-செய்யா தொழிதல், தலை-உயர்ந்தது, (எ-று).

(அரசர் இன்னு) செய்தால் பகைமைவளரத் தாம் தாழ்ந்து வருதலாலும், (இன்னுசெய்வது) ஒழிந்தால் அப்பற்றுதன தாமே ஓய்ந்துபோகத் தாம் ஓங்கிவருதலாலும் 'செய்யாமை தலை' என்றார், பற்றுதனவென்பது செய்யுள் விகாரத்தால் பற்று என்றுயிற்று.

(க-து.) மாறுபட்டுத் தமக்குக் கெடுதி செய்பவனுக்குத் தாம் மாறுபட்டுக் கெடுதி செய்யாதிருப்பவ ருயர்ந்தோராவர்.

---

‡ தம்மோடு-அரசர் தம்முடன்.

† ஒழியின்-துன்பந் தருவனவற்றைச் செய்வதொழிந்தால்.

¶ பற்றுதன என்னும் எதிர்மறை வினையாலணையும் பெயர் தகரவெழுத்துப்பேறும் அன்சாரியையும் அகர விகுதியும் தொக்கு நிற்கப் பற்று என நின்றது. தகரவெழுத்துப்பே றென்னுது துச்சாரியை யெனினும் பொருந்தும்.

2. Though one may do disagreeable things from a feeling of disunion, it would be best if nothing painful be done from that of enmity.

---

௩. இகலென்னு மெவ்வநோய் நீக்கிற் றவலில்லாத்
தாவில் விளக்கந் தரும்.

பரி:— (இ-ள்.) மாறுபாடென்று சொல்லப்படுகின்ற துன்பத்தைச் செய்யு நோயை ஒருவன் தன் மனத்தினின்று நீக்குமாயின், அவனுக்கு அந்நீக்குதல் *எஞ்ஞான்றும் உளனாதற் கேதுவாய புகழைக் கொடுக்கும் (எ-று).

†தவலில்லாமை அருத்தாபத்தியான் அப்பொருட்டாயிற்று. ‡தாவில் விளக்கம் ¶வெளிப்படை. யாவரு நண்பராவர்; ஆகவே, எல்லாச் செல்வமுமெய்திக்கொடை 0முதலிய காரணங்களாற் புகழ் பெறு மென்பதாம்.

தெளி :—(இ-ள்.) இகலென்னும்-மாறுபாடென்று சொல்லப் படுகின்ற, எவ்வம்-துன்பத்தை, (செய்யும்), நோய்-நோயை, நீக்கின், (ஒருவன் தன்மனத்திலிருந்து) நீக்குவானாயின், (அவனுக்கு அந்நீக்குதல்), தவலில்லா-எந்நாளும் உளனாதற்குக் காரணமாகிய, தாவில் விளக்கம்-புகழை, தரும்-கொடுக்கும், (எ-று).

---

* எஞ்ஞான்றும் உளனாதல் - உலக முள்ளளவும் புகழுடம்பினனா யிருத்தல்.

†தவலில்லாமை (அழிவின்மை) அருத்தாபத்தியான் (இனமாகிய பொருள்களுள் ஒன்றை எடுத்துக்கூறிய சொல் தன்பொருட்கினமாகிய பிறபொருளைக் குறிப்பா லறிவித்ததால்) அப்பொருட்டாயிற்று (எஞ்ஞான்று முளனாதல் என்னும் பொருளதாயிற்று).

எஞ்ஞான்று முளனாகானுக்குத் தவலில்லாமை கூடாது ; தவலில்லாமையிருத்தலின், எஞ்ஞான்று முளனாதல் கூடுமென்பதிங் கருத்தாபத்தியாம்.

எஞ்ஞான்று முளனாகான் - ஒருகாலத் திருப்பவன்.

‡ தாவில் விளக்கம் - கெடுதலில்லாத புகழ். புகழாகிய விளக்கிற் கன்றி ஏனைய விளக்கிற்குக் கெடுதலில்லாமை யின்மையால், அவ்விளக்கோடு இதனிடை வேற்றுமை தோன்ற விளக்கெனவாளா கூறாது அடைகொடுத்துத் 'தாவில் விளக்கம்' என்று கூறினார். புகழாகிய விளக்கு எந்நாளும் உளது என்பது ''ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லால், பொன்றாது நிற்பதொன்றில்'' என்னுங் குறளினால் நன்கு விளங்கும்.

ஏனையவிளக்கு-சூரியன், சந்திரன், அக்கினி யென்பனவாம்.

¶ வெளிப்படை-இயல்பாகவே பொருள் விளங்கி நிற்குஞ்சொல் அஃதாவது இயற்சொல். [தாவில் விளக்கம் என்னுஞ் சொல் இயல்பாகவே புகழ் என்னும் அருத்தத்தைக் காட்டிநின்றதென்பது].

0 முதலிய என்றமையின், கல்வி, ஆண்மை முதலியவற்றையுங் கொள்க.

தவலில்லாமை யென்பது அருத்தாபத்தியால் எந்நாளும் உளனுதல் என்னும் பொருளதாயிற்று. புகழைத் தாவில் விளக்கம் என்பது வெளிப்படையாம். (இகலென்னு மெவ்வநோய் நீங்கின வனுக்கு) யாவரும் நண்பராவர்; ஆகவே, (அவன்) எல்லாச் செல்வமும் பெற்று ஈதல் முதலிய காரணங்களால் புகழ்பெறுவா னென்பதாம். தவலில்லா என்பது ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். அதன் பொருள் அழிதலில்லாத என்பது.

(கூ-து.) மாறுபாட்டை நீக்கி யிருப்பவன் எப்பொழுதும் புகழு டையவனு யிருப்பன் என்பது.

3. To rid oneself of the distressing disease of enmity will bestow on one an undiminishing imperishable fame.

---

சு. **இன்பத்து ளின்பம் பயக்கு மிகலென்னுந்**
**துன்பத்துட் டுன்பங் கெடின்.**

பரி :— (இ-ள்.) மாறுபாடென்று சொல்லப்படுகின்ற துன்பங்க ளெல்லாவற்றினும் மிக்க துன்பம் ஒருவனுக்கில்லையாயின், அவ்வின்மை அவனுக்கு இன்பங்களெல்லாவற்றினும் மிக்க வின்பத்தினைக் கொடுக்கும் (எ-று).

துன்பத்துட் டுன்பம்–பலரோடு பொருது வலிதொலைதலான் யாவர்க்கு மெளியனு யுறுவது. †அதனை இடையின்றியே பயத்தலின் ‡'இகலென்னுந் துன்பத்துட் டுன்பம்' என்றார். இன்பத்துளின்பம் – யாவரும் நட்பாகலின் எல்லாப்பயனு மெய்தியுறுவது.

தெளி:— (இ-ள்.) இகலென்னும் – மாறுபாடென்று சொல்லப் படுகின்ற, துன்பத்துள் - துன்பங்களெல்லாவற்றினும், துன்பம் - (மிகுந்த) துன்பம், கெடின் – (ஒருவனுக்கு) இல்லையாயின், (அத்துன்ப மில்லாமை அவனுக்கு), இன்பத்துள் - இன்பங்களெல்லாவற்றினும், இன்பம் - (மிகுந்த) இன்பத்தை, பயக்கும் - கொடுக்கும், (எ-று).

துன்பத்துட் டுன்பம் - மாறுபாடுடையான் பலரோடு போர் செய்து வலிமை தொலைதலால் யாவர்க்கும் எளியவனுயிருப்பது. அதனைத் தடையில்லாமலே தருதலால் 'இகலென்னுந் துன்பத்துட் டுன்பம்' என்றார். இன்பத்துளின்பம் – மாறுபாடில்லாதவன் யாவர்க் கும் நட்பாகலால் எல்லாப்பயனும் பெற்றிருப்பது.

---

† அதனை – எளியனுயுறுவதை.

‡ இகலால் வரும் துன்பத்துட்டுன்பத்தை 'இகலென்னுந் துன்பத் துட்டுன்பம்' என்று ஒற்றுமைப்படுத்திக் கூறினமையின், இது காரணங் காரியமாய உபசார வழக்காம். இகலென்னு மென்றார் என்றும் பாடமுண்டு.

(க-து.) மாறுபாடென்னுங் குற்றத்தை யொழித்தவனுக்கு யாவரும் நட்பினராயிருத்தலின், அவன் எல்லா இன்பப் பயனையு மடைவன் என்பது.

4. If enmity which is the greatest of all miseries is destroyed, it will be productive of the greatest happiness.

---

**ரு. இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே**
**மிகலூக்குந் தன்மை யவர்.**

பரி:—(இ-ள்.) தம்முள்ளத்து மாறுபாடு தோன்றிய வழி அதனை யேற்றுக்கொள்ளாது †சாய்ந்தொழுக வல்லாரை வெல்லக்கருதுந்தன்மை யுடையார் யாவர், (எ-று).

இகலையொழிந் தொழுகல் வேந்தர்க்கு எவ்வாற்றானும் அரிதாக லின் 'வல்லாரை' என்றும், 0அவர் யாவர்க்கும் நண்பாகலின் அவரை வெல்லக் கருதுவார் ‡யாவருமில்லை யென்பார் மிகலூக்குந் தன்மை யவர் யாரே என்றுங் கூறினர். இவை நான்கு பாட்டானும் இகலா தார்க்கு வரும் நன்மை கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) இகல்-மாறுபாடு, (தம்மனத்திற் றோன்றிய விடத்து), எதிர்சாய்ந் தொழுகவல்லாரை- (அம்மாறுபாட்டினை ஏற்றுக் கொள்ளாமற்) சாய்ந்து நடக்கவல்லவரை, மிகலூக்கும் - வெல்ல நினைக்கும், தன்மையவர் - தன்மையை யுடையவர், யார் - யாவர், (எ-று).

மாறுபாட்டை நீக்கி நடத்தல் அரசர்க்கு எவ்விதத்தாலும் அரி தாகலால் 'வல்லாரை' என்றும், அவர் யாவர்க்கும் நண்பாகலால் அவரை வெல்ல நினைப்பவர் யாவரும் இல்லை யென்பார் மிகலூக்குந் தன்மையவர் யாரே என்றும், சொல்லினர். இவை நான்குபாட்டா லும் மாறுபடாதவர்க்கு வரும் நன்மை சொல்லப்பட்டது.

(க-து.) மாறுபாடு நீங்கி யொழுகுகின்றவர்க்கு யாவரும் நட்பா யிருத்தலால், அவரை வெல்ல நினைப்பவர் ஒருவருமில்லை.

5. Who would think of conquering those who shrink back from cherishing enmity ?

---

**சா. இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை**
**தவலுங் கெடலு நணித்து.**

---

† சாய்ந்து-தாழ்ந்து. 0அவர்-அவ்வல்லார்.

‡ யாவரு மில்லையென் றுங் கூறினர் என்றும் பாடமுண்டு.

பரி :— (இ-ள்.) பிறரொடு மாறுபடுதற்கண் மிகுதல் எனக்கு இனிதென்று அதனைச் செய்வானது உயிர்வாழ்க்கை பிழைத்தலும் முற்றக் கெடுதலுஞ் †சிறிது பொழுதுள் உளவாம், (எ-று).

*மிகுதல் – மேன்மே லூக்குதல். இனிதென்பது தான் வேறல் குறித்தல். ‡பிழைத்தல் – வறுமையா னின்னுதாதல். முற்றக் கெடுதல் – இறத்தல். 0இவற்றோடு நணித்தென்பதனைத் தனித்தனி கூட்டி உம்மைகளை எதிரதும் இறந்ததுந் தழீஇய வெச்சவும்மைகளாக வுரைக்க. பொருட்கேடும் உயிர்க்கேடும் ¶அப்பொழுதே யுளவா மென்பதாம்.*

தெளி —(இ-ள்.) இகலின் - (பிறரோடு) மாறுபடுதலில், மிகல் - மிகுதல், இனிதென்பவன் – (எனக்கு) இனிதென்று (அம்மாறுபடுதலைச்) செய்பவனது, வாழ்க்கை – உயிர் வாழ்க்கை, தவலும் - பிழைத்தலும், கெடலும் – முற்றக் கெடுதலும், நணித்து - சிறிது பொழுதிலுளவாம், (எ–று).

*மிகுதல் - மேலுமேலும் உற்சாகங்கொள்ளுதல். இனிதென்பது தான் வெல்லுதலைக் குறித்தல். பிழைத்தல் - வறுமையால் தீதுண்டாதல். முற்றக் கெடுதல் – சாதல். தவலும் கெடலும் என்னும் இவற்றோடு நணித்து என்பதனைத் தனித்தனி கூட்டி, தவலும் கெடலும் என்னும் உம்மைகளை முறையே எதிரதும் இறந்ததும் தழுவிய எச்சவும்மைகளாக வுரைத்துக் கொள்க. (இகலின்மிக லினிதென்பவனுக்கு) பொருட்கேடும் உயிர்க்கேடும் அப்பொழுதே உண்டாகுமென்பதாம். நணித்து – உடனேயுண்டாவது.*

(க-து.) *பிறரோடு மாறுபடுதலைத் தனக்கினிதென்று கருதி அதனைச் செய்து வருபவன் விரைவிலழிவான் என்பது.*

6. Failure and ruin of one's living are not far from him who says it is pleasurable to excel in enmity.

---

**எ. மிகன்மேவன் மெய்ப்பொருள் காணா ரிகன்மேவ லின்னா வறிவி னவர்.**

---

*† சிறிதுபொழுதுள்–விரைவில்.*

*‡ பிழைத்தல்-பொருட்கேடு; முற்றக்கெடுதல்-உயிர்க்கேடு.*

*0 நணித்து என்பதனைத் தவலும் கெடலும் என்னுமிவற்றோடு (தவலும் நணித்து, கெடலும் நணித்தும் எனத்) தனித்தனி கூட்டி, தவலும் என்றவும்மையை யெதிரது தழுவிய வெச்ச வும்மையாகவும், கெடலுமென்ற வும்மையை யிறந்தது தழுவிய வெச்சவும்மையாகவுஞ் சொல்லிக் கொள்கவென்பதாம். தவலும் என்ற வும்மை கெடலும் நணித்து என்னும் பொருளைத் தருதலின், எதிரது தழுவிய வெச்ச வும்மை யாயிற்று; கெடலுமென்றவும்மை தவலுதல் நணித்தாதலே யன்றி யென்னும்பொருளைத் தருதலின், இறந்தது தழுவிய வெச்ச வும்மை யாயிற்று.*

¶ *அப்பொழுதே – பிறரோடு மாறுபடுதல் மிகுந்தபொழுதே.*

பரி :—(இ-ள்.) இகலோடு மேவுதலையுடைய 0இன்னாத வறிவினை யுடையார் வெற்றி பொருந்துதலையுடைய நீதிநூற்பொருளை யறிய-மாட்டார், (எ-று).

*இன்னாவறிவு - தமக்கும் பிறர்க்குந் தீங்குபயக்குமறிவு. வெற்றி-‡வழி நின்றார்க்கு உளதாவது. †காணப்படும் பயத்ததாகலின், ¶மெய்ந்நூல் எனப்பட்டது. இகலால் அறிவு கலங்குதலின் 'காணார்' என்றார். இவை யிரண்டு பாட்டானும் இகலினார்க்கு வருந் தீங்கு கூறப்பட்டது.*

தெளி :—(இ-ள்.) இகன் மேவல் - *மாறுபாட்டோடு பொருந்து தலையுடைய, இன்னா - இன்னாத, அறிவினவர் - அறிவினையுடையவர், மிகன் மேவல் - வெற்றிபொருந்துதலையுடைய, மெய்ப்பொருள் - நீதி நூற்பொருளை, காணார் - அறியமாட்டார்,* (எ-று).

*இன்னாவறிவு - தமக்கும் பிறர்க்கும் தீங்கினைத் தரும் அறிவு. வெற்றி - வழி நின்றார்க்கு உண்டாவது. நீதிநூல் பிரத்தியட்சமாக அறியப்படும் பயனை யுடையதாகலால், மெய்ந்நூல் என்று கூறப் பட்டது. மாறுபாட்டினால் அறிவுகலங்குதலால் (மெய்ப் பொருள்) 'காணார்' என்றார். இவை இரண்டு பாட்டாலும் மாறுபட்டவர்க்கு வரும் தீங்கு சொல்லப்பட்டது.*

(க-து.) *மாறுபட்ட வறிவினையுடையவர் நீதிநூற்பொருளை யறியமாட்டார் என்பது.*

7. Those whose judgement brings misery through enmity cannot understand the triumphant nature of truth.

---

**அ. இகலிற் கெதிர்சாய்த லாக்க மதனை**
**மிகலூக்கி னூக்குமாங் கேடு.**

---

*0 இன்னாத - தீமையைத் தருகின்ற.*

*‡ வழி நின்றார்க்கு-நீதிநூல் கூறிய வழியிலொழுகுகின்றவர்க்கு.*

*† மருத்துவ (வைத்திய) நூல், தண்ட நூல், நீதிநூல் முதலிய லௌகிக நூல்கள் இம்மைப் பயனைப் பிரத்தியட்சமாகத் தெரிவிப்பன வாம். அவ்வியைபு பற்றி நீதிநூல் 'காணப்படும் பயத்ததாகலின் மெய்ந்நூல் எனப்பட்டது' என்று கூறப்பட்டது. காணப்படும் பயத் ததென்பதற்குப் பிரத்தியட்சமாக வறியப்படும் பயனைத் தெரிவிப் பதென்று கொள்க.*

*¶ மெய்யை யுணர்த்தும் நீதிநூல் காரியவாகு பெயரால் மெய் என்று கூறப்பட்டது. மெய்ந்நூல் - மெய்யையுணர்த்தும் நூல்.*

பரி:— (இ-ள்.) தன்னுள்ளத்து மாறுபாடு தோன்றிய வழி ()அதனை யெதிர்தலை யொழிதல் ஒருவனுக்கு ஆக்கமாம்; †அது செய்யாது அதன்கண் மிகுதலை மேற்கொள்வானாயிற் கேடுந் தன்கண் வருதலை மேற் கொள்ளும், (எ-று).

எதிர்தல் - ஏற்றுக்கோடல். சாய்ந்த பொழுதே வருதலின் ‡'சாய்தலாக்கம்' என்றார். ¶இகலிற்கெனவும் அதனையெனவும் வந்தன வேற்றுமை மயக்கம்.

தெளி :— (இ-ள்.) இகலிற்கு – (தன்னுள்ளத்து மாறுபாடு தோன்றிய விடத்து) அம்மாறுபாட்டினை, எதிர் சாய்தல் - எதிர்தலை யொழிதல், ஆக்கம் - (ஒருவனுக்கு) ஆக்கமாம், (அது செய்யாமல்), அதனை - அம்மாறுபாட்டின்கண், மிகல் - மிகுதலை, ஊக்கின் - மேற்கொள்ளுவானாயின், கேடு - கேடும், ஊக்குமாம் - (தன்னிடத்து வருதலை) மேற்கொள்ளுமாம், (எ-று).

எதிர்தல் - மாறுபாட்டை ஏற்றுக் கொள்ளுதல். (மாறுபாடு) சாய்ந்தபொழுதே (ஆக்கம்) வருதலால் 'சாய்தலாக்கம்' என்றார். இகலை என்பது இகலிற்கு எனவும், அதன்கண் என்பது அதனை எனவும் வந்தமையின் வேற்றுமை மயக்கமாயின.

(க-து.) மாறுபாட்டை யொழித்தலால் செல்வமும் அதனை மேற்கொள்ளுதலால் கேடுமுண்டாம் என்பது.

8. Shrinking back from enmity will bring prosperity; but indulging in it some will hasten ruin.

---

௯. இகல்காணா னாக்கம் வருங்கா லதனை
மிகல்காணுங் கேடு தரற்கு.

பரி : - (இ-ள்.) ஒருவன் றன்க 0ணாக்கம் வரும்வழிக் காரணமுண் டாயினும் இகலைநினையான், தனக்குக் கேடு செய்து கோடற்கட் காரண மின்றியும் §அதன்கண் மிகுதலை நினைக்கும், (எ-று).

---

() அதனை யெதிர்தலை - அம்மாறுபாட்டையேற்றுக்கொள்ளுதலை.

† அது செய்யாது - மாறுபாட்டை யேற்றுக்கொள்ளுதலை யொழிதல் செய்யாமல்.

‡ சாய்ந்தபோதுண்டாகும் ஆக்கத்தைச் 'சாய்தலாக்கம்' என்று கூறினமையின், இது காரணம் காரியமாய உபசார வழக்காம். சாய்தல் - காரணம்; ஆக்கம் - காரியம்.

¶ இகலிற்கு என்னும் (கு என்னும்) நான்கனுருபு தனக்குரிய பொருளை விட்டு இகலை என இரண்டனுருபின் பொருளிலும், அதனை என்னும் (ஐ என்னும்) இரண்டனுருபு தனக்குரிய பொருளை விட்டு அதன்கண் என ஏழனுருபின் பொருளிலும் வந்தமையின், வேற்றுமை மயக்கமா மென்க.

0 ஆக்கம் - செல்வம். § அதன்கண் - மாறுபாட்டில்.

இகலான் வருங்கேடு பிறரானன் றென்பது தோன்றத் ‡'தரற்கு' என்றார். †நான்காவதும் இரண்டாவதும் ஏழாவதன்கண் வந்தன. ¶ஆக்கக் கேடுகட்கு முன்னடப்பன இகலினது இன்மை உண்மைக ளென்பதாம்.

தெளி —(இ-ள்.) ஆக்கம் வருங்கால் - (ஒருவன் தன்னிடத்து) ஆக்கம் வரும்போது, (காரணம் உண்டாயினும்), இகல்-மாறு பாட்டை, காணான் - நினையான், கேடுதரற்கு - (தனக்குக்) கேடு செய்துகொள்ளுமிடத்து, (காரணம் இல்லாதிருந்தும்), அதனை - அதனிடத்து, மிகல் - மிகுதலை, காணும் - நினைப்பான், (எ-று).

மாறுபாட்டால் வருங்கேடு (தன்னாலன்றிப்) பிறரால் அன்றென் பது தோன்றத் 'தரற்கு' எனத் தன்மைக்குரிய சொல்லாற் கூறினார். தரற்கு என்னும் நான்கனுருபும், அதனை என்னு மிரண்டனுருபும் ஏழனுருபின் பொருளில் வந்தன. ஆக்கக்கேடுகட்குமுன் நடப்பன மாறுபாட்டினது இன்மை உண்மைக ளென்பதாம்.

(க-து.) ஒருவன் தன்னிடத்துச் செல்வம் வரும்போது காரண மிருப்பினும் மாறுபாட்டை நினையான்; தனக்குக்கேடு செய்து கொள்ளுமிடத்துக் காரணமின்றியும் அதனை நினைப்பான் என்பது.

9. At the approach of prosperity one will not think of enmity; but to court one's ruin one will look to its rise.

---

## க0. இகலானா மின்னாத வெல்லா நகலானா நன்னய மென்னுஞ் செருக்கு.

பரி:—(இ-ள்.) ஒருவனுக்கு மாறுபா டொன்றுனே இன்னாதன வெல்லாம் உளவாம்; நட்பொன்றுனே நல்ல நீதியென்னும் பெருஞ் செல்வம் உளதாம், (எ-று).

---

‡ தரல் என்பது இங்குத் தன்மையிடத்திற் குரிய சொல்லாம். "அவற்றுள், தருசொல் வருசொல் லாயிரு கிளவியும், தன்மை முன்னிலை யாயீ ரிடத்த" என்பது தொல்காப்பியம்.

† தரற்கு என்னும் நான்கனுருபும், அதனை என்னும் இரண்ட னுருபும் தமக்குரிய பொருளைவிட்டுத் தருதற்கண் அதன்கண் என ஏழனுருபின் பொருளில் வந்தன. இவ்வாறு வருவது உருபுமயக்க மெனப்படும், வேற்றுமை மயக்கமுமாம்.

¶ ஆக்கத்திற்கு முன் நடப்பது மாறுபாட்டினது இல்லாமையும், கேட்டிற்கு முன்னடப்பது மாறுபாட்டினது உண்மையுமாமென்க. எனவே, மாறுபாடில்லையாயின் செல்வமும், அஃதுண்டாயின் கேடும் உண்டாமென்பது பெறப்பட்டது.

இன்னாதன–வறுமை, பழி, பாவ †முதலாயின. நகல்–மகிழ்தல். ‡நகலென்பதூஉஞ் செருக்கென்பதூஉம் தத்தங் காரணங்கட்காயின. ¶நயமென்னுஞ் செருக்கெனக் காரணத்தைக் காரியமாக உபசரித்தார். இவை மூன்று பாட்டானும் 0அவ்விருமையுங் கூறப்பட்டன.

தெளி :—(இ-ள்.) இகலான்–(ஒருவனுக்கு) மாறுபாடொன்றுலே, இன்னாதவெல்லாம் – துன்பந்தருவனவெல்லாம், ஆம் – உண்டாகும், நகலான்–நட்பொன்றுலே, நன்னயமென்னும் – நல்ல நீதியென்னும், செருக்கு–பெருஞ்செல்வம், ஆம்–உண்டாகும், (எ-று).

துன்பந்தருவன-வறுமை, பழி, பாவம் முதலாயின. நகல்–மகிழ்தல். நகலென்பதும் செருக்கென்பதும் தத்தங் காரணங்களுக்காயின. நயமென்னுஞ் செருக்கெனக் காரணத்தைக் காரியமாக உபசரித்துக் கூறினர். இவை மூன்று பாட்டாலும் அவ்விருமையும் சொல்லப்பட்டன.

(க-து.) ஒருவனுக்கு மாறுபாட்டினுலே துன்பமும், நட்பினுலே செல்வமுமுண்டா மென்பது.

10. All miseries are caused by enmity; but by friendship good virtuous prosperity will result.

---

# இருபத்து நான்காவது அதிகாரம்

## பகைமாட்சி – The Greatness of Enmity

**பரி:—(இ-ள்) அஃதாவது அறிவின்மை *முதலிய குற்றங்களுடைமையாற்**

---

† முதலாயின என்றமையின், பகை, தண்டனை முதலியனவுங் கொள்க.

‡ மகிழ்தல் என்னும் பொருளதான நகல் என்பது அதற்குக் காரணமாய நட்பினையும், தருக்குதலென்னும் பொருளதானசெருக்கு என்பது அதற்குக் காரணமாய பெருஞ்செல்வத்தினையு முணர்த்துதலால், இவை காரியவாகு பெயர்களாம்.

¶ நயத்தால் (நீதியால்) உண்டாகும் செருக்கை (பெருஞ்செல்வத்தை) நயமென்னுஞ் செருக்கு என்றொற்றுமைப்படுத்திக் கூறினமையின், இது காரணங்காரியமாய உபசாரவழக்காம். காரியத்தைக் காரணமாக வுபசரித்தாரென்றும் பாடமுண்டு. இதற்குக் காரியமாகிய செல்வத்தை அதற்குக் காரணமாகிய நீதியென் றுபசரித்தாரென்று பொருளாம்.

0 அவ்விருமையும்-மாறுபடாதவர்க்கு வரும் நன்மையும் மாறுபட்டவர்க்கு வரும் தீமையும்.

* முதலிய என்றமையின், பெரியோரைத் துணைக்கொள்ளாமை, சிற்றினஞ் சேர்தல், வலி காலம் இடங்களை யறியாமை, சோம்பலுடைமை முதலியவற்றையுங் கொள்க.

†பகையை மாட்சிப் படுத்தல். அரசர்க்கு எவ்வாற்றானும் ‡பகையின்மை கூடாமையின், 0மேற்பொதுவகையான் விலக்கப்பட்ட இகலை ஈண்டுச் சிறப்புவகையான் ¶விதிக்கின்றாராகலின், $இஃததன்பின் வைக்கப் பட்டது.

தெளி :—அஃதாவது அறிவில்லாமை முதலிய குற்றங்களுடைமையால் பகையை மாட்சிமைப்படுத்தல். அரசர்க்கு எவ்வழியாலும் பகையில்லாமை கூடாமையால், முன்பொதுவகையால் விலக்கப்பட்ட இகலை இங்குச் சிறப்புவகையால் விதிக்கின்றாராகலால், இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

---

க. வலியார்க்கு மாறேற்ற லோம்புக வோம்பா
மெலியார்மேன் மேக பகை.

பரி :— இ-ள்.) தம்மின் வலியார்க்குப் பகையாயெதிர்தலை ஒழிக; ஏனை மெலியார்க்குப் பகையாதலை ஒழியாது விரும்புக, (எ-று).

வலியார் என்புழித் துணைவலியுமடங்கலின், மெலியார் என்புழித் *துணைவலி யின்மையுங் கொள்ளப்படும். அத்துணைதான் படை பொருண் ()முதலிய வேற்றுமைத்துணையும், நல்லறிவுடைமை நீதி நூல்வழி யொழுகன் :முதலிய ஒற்றுமைத்துணையுமென விரண்டாம். ¶¶அவ்விரண்டு மில்லாரை வெல்லுவார்க்கு வலிதொலையாமையின், அவரோடு பகைத்தல் விதிக்கப்பட்டது. †‡சிங்க நோக்காகிய இதனுட் பகைமாட்சி பொதுவகையாற் கூறப்பட்டது.

---

† பகையை மாட்சிப்படுத்தல்-(அறிவில்லாமை முதலியவற்றையுடைய வரசர் தமது) பகைவரைமேம்படுத்துதல்.

‡ பகையின்மை கூடாமையின்-பகைவரில்லாதிருத்தல் முடியாமையால்.

0 மேல்-முன்னுள்ள இகலதிகாரத்தில்.

¶ விதிக்கின்றாராகலின்-நியமிக்கின்றாராதலால்.

$ இஃததன்பின்-பகைமாட்சி யதிகாரம் இகலதிகாரத்தின் பின்னர்.

* துணைவலி-துணையாவாரது (உதவிசெய்வாரது) வலிமை.

() முதலிய என்றமையின், துணையாயிருப்பவர், சுற்றத்தார், சிநேகிதர் முதலாயினோரையுங் கொள்க.

: முதலிய என்றமையின், அமைச்சர் புரோகிதர்களின் ஆலோசனைக் கிணங்கி நடத்தல், செய்காரியங்களில் மறதியில்லாமை, ஊக்கமுடைமை முதலியவற்றையுங் கொள்க.

¶¶ அவ்விரண்டும்-வேற்றுமைத்துணையும் ஒற்றுமைத்துணையும். வேற்றுமை—பேதம்; ஒற்றுமை—அபேதம்.

†‡ சிங்கத்தினது நோக்கம் (பார்வை) முன்னும் பின்னும் செல்லுதல் போன்று இக்குறளிற் கூறிய பகைமாட்சி முன்னதிகாரத்திலும் இவ்வதிகாரத்திற் பின்வருங் குறள்களிலும் பின்னதிகாரத்திலும் செல்லுதலால் 'சிங்கநோக்காகிய இதனுள்' என்று கூறப்பட்டது. ''சிங்கம் மிருகத்தை யடித்துவிட்டுத் தூரத்திற் சென்று, ஒருகால் ஆண்டு வேறொருமிருகம் வரின் அதனையுங் கொல்வாமென மீண்டும் அம்மிருகத்தின் பக்கத்தே திரும்பி நோக்குதல் சிங்காவலோகந நியாயமாம்'' என்று ஆத்மபுராணம் கூறுகின்றது.

தெளி:—(இ-ள்.) வலியார்க்கு - (தம்மின்) வலியவர்க்கு, மாறேற்றல் - பகையா யெதிர்தலை, ஓம்புக – ஒழியக்கடவர், மெலியார்மேல் – (மற்றை) மெலியவர்க்கு, பகை - பகையாதலை, ஓம்பா – ஒழியாமல், மேக – விரும்பக்கடவர், (எ-று).

வலியார் என்ற விடத்துத் துணைவலியும் அடங்கலால், மெலியார் என்ற விடத்துத் துணைவலியில்லாமையும் கொள்ளப்படும். அத்துணை தான் படை பொருள் முதலிய வேற்றுமைத் துணையும், நல்லறிவுடைமை நீதிநூல் வழியில் ஒழுகுதல் முதலிய ஒற்றுமைத் துணையும், என விரண்டாம். அவ்விரண்டு மில்லாரை வெல்வார்க்கு வலிமை தொலையாமையால் அவரோடு பகைத்தல் விதிக்கப்பட்டது. சிங்கநோக்காகிய இக்குறளுள் பகைமாட்சி பொதுவகையால் சொல்லப்பட்டது. படை-சேனை.

(க-து.) அரசர் வலியாரோடு பகைத்தலை யொழிந்து மெலியாரோடு பகைத்தலை விரும்பக் கடவர் என்பது.

1. Avoid offering resistance to the strong; but never fail to cherish enmity towards the weak.

---

௨. அன்பில னான்ற துணையிலன் றான்றுவ்வா
னென்பரியு மேதிலான் றுப்பு.

பரி:—(இ-ள்.) ஒருவன் றன்சுற்றத்தின்மே லன்பிலன், அதுவே யன்றி வலிய துணையிலன், அதன்மேற் றான்வலியிலன், அப்பெற்றியான் ‡மேல் வந்த பகைவன் வலியினை யாங்ஙனந் தொலைக்கும், (எ-று).

சுற்றமும் *இருவகைத் துணையும் தன்வலியுமிலனாகலின், அவன் மேற் செல்வார்க்கு வலி வளர்வதன்றித் தொலையா தென்பதாம். துவ்வான்-†துவ்வினைச் செய்யான்.

தெளி:—(இ-ள்.) (ஒருவன்) அன்பிலன்-(தன் சுற்றத்தார் மேல்) அன்பிலன், ஆன்றதுணையிலன்-(அதுவே யன்றி) வலியதுணையிலன், தான்றுவ்வான்-(அதன் மேல்) தான்வலியிலன், (அத்தன்மை யுடையவன் மேல்வந்த), ஏதிலான்-பகைவனது, துப்பு-வலிமையை, என்பரியும்-எப்படித் தொலைப்பான், (எ-று).

சுற்றமும் இருவகைத்துணையும் தன்வலியும் இலனாகலால், அவன் மீது போர்க்குச் செல்வார்க்கு வலி வளர்வ தல்லாமல் தொலையா தென்பதாம். துவ்வான்-துவ்வினை (வலியினை)ச் செய்யாதவன்.

---

‡ மேல்வந்த-தன்மீது போர்க்குவந்த.

* இருவகைத்துணை-படைபொருள் முதலிய வேற்றுமைத் துணையும், நல்லறிவுடைமை நீதிநூல் வழியி லொழுகுதல் முதலிய ஒற்றுமைத் துணையுமாம்.

† துவ்வினைச் செய்யான் – வலிமையினைச் செய்யாதவன்; அஃதாவது பகைவருடன்போர்புரியும் வலிமையில்லாதவன்.

(க-து.) சுற்றத்தார் மீது அன்பும் துணையும் வலியுமில்லா தவன்மேல் போர்க்கு வரும் பகைவனது வலிமை யொருகாலுந் தொலையா தென்பது.

2. How can he who is unloving (his relations), destitute of powerful aids, and himself without strength overcome the might of his enemy?

———

**௩. அஞ்சு மறியா னமைவில னீகலான்**
**றஞ்ச மெளியன் பகைக்கு.**

**பரி:—(இ-ள்.) ஒருவன் ¶அஞ்சவேண்டாதவற்றிற்கு அஞ்சா நிற்கும்; அறியவேண்டுமவற்றை யறியான்; பிறரோடு பொருத்தமிலன்; 0இவற்றின்மேலும் யாவர்மாட்டும் இவறன்மாலையன்; இப்பெற்றியான் பகைவர்க்கு மிக வெளியன், (எ-று).**

†'தஞ்சமெளியன்' என்பன *ஒரு பொருட்பன்மொழி. ‡இந்நான்கு குற்றமு முடையான் பகையின்றியு மழியுமாகலின் 'தஞ்சமெளியன்' என்றார்.

தெளி:—(இ-ள்.) (ஒருவன்) அஞ்சும்-(அஞ்சவேண்டாதன வற்றிற்கு) அஞ்சாநிற்பன், அறியான்-அறிய வேண்டுவனவற்றை யறியான், அமைவிலன்-(பிறரோடு) பொருத்தமிலன், ஈகலான்-(இவற்றின் மேலும் யாவரிடத்தும்) உலோபகுணமுடையன், (இத்தன்மை யுடையான்), பகைக்கு-பகைவர்க்கு, தஞ்சமெளியன்-மிகவெளியனுவான், (எ-று).

'தஞ்சமெளியன்' என்பன ஒரு பொருள்குறித்த பலசொல். இந்நான்கு குற்றமு முடையான் பகையில்லாமலும் அழிவானுகலின் பகைக்குத் 'தஞ்சமெளியன்' என்றார். அஞ்சுதல்-மனவுறுதியின்மை.

(க-து.) அச்சமும், அறியாமையும், நட்பில்லாமையும், உலோப குணமுமுடையவன் பகைவர்க்கு மிகவுமெளியனுவன்.

3. He who is timid, ignorant, unsociable and niggardly will in the estimation of his enemies be miserably weak.

———

**௪. நீங்கான் வெகுளி நிறையில னெஞ்ஞான்றும்**
**யாங்கணும் யார்க்கு மெளிது.**

---

¶ அஞ்சவேண்டுவன-பாவமும் பழியுங் கேடுமுதலாயினவாம்.

0 இவற்றின் மேலும்-அஞ்சுதல், அறியாமை, அமைவின்மை யென்னுமிவற்றின்மேலும்.

† "தஞ்சக் கிளவி யெண்மைப் பொருட்டே" என்பது தொல்காப்பியம்.

* "ஒருபொருட் பன்மொழி சிறப்பி னின்வழா" என்று நன்னூல் கூறுகின்றது.

‡ இந்நான்கு குற்றமும் என்றது அஞ்சுதல், அறியாமை, அமைவின்மை, ஈயாமை என்பனவற்றை.

பரி:—(இ-ள்.) ஒருவன் வெகுளியினீங்கான், அதுவே யன்றித்தான் நிறையுடையனல்லன், அவன்மேற் சேறல் எக்காலத்தும் எவ்விடத்தும் யார்க்கு மெளிது, (எ-று).

*நிறை-மறைபிறரறியாமை. வெகுடன் மாலையனுகலானும், மறைவெளிப்படுத்தலானும், மேற்செல்வார்க்குக் காலமும் இடனும் வலியுமறிந்து சேறல் வேண்டாதாயிற்று. இனி ¶இனிதென்று பாடமோதி அவன் பகைமை இனிதென்றுரைப்பாருமுளர்.

தெளி:— (இ-ள்.) (ஒருவன்) வெகுளி-கோபத்தினின்றும், நீங்கான்-, நிறையிலன்-(அதுவேயன்றித்தான்) நிறையுடையனல்லன், (அவன்மேல் போர்க்குச் செல்லுதல்), எஞ்ஞான்றும்-எக்காலத்தும், யாங்கணும்-எவ்விடத்தும், யார்க்கும்-எவர்க்கும், எளிது-இலேசாம், (எ-று).

நிறை-மறைபிறரறியாமை. கோபிக்குந்தன்மை யுடையவனுகலாலும், மறையை வெளிப்படுத்தலாலும், இவன்மேல் போர்க்குச் செல்வார்க்குக் காலமும் இடமும் வலியும் அறிந்து செல்லுதல் வேண்டுவதில்லையாயிற்று. மறை - இரகசியம்.

(க-து.) கோபமும் நிறையில்லாமையு முடையவன் எக்காலத்தும் எவ்விடத்தும் யாவர்க்கும் எளியவனுவன் என்பது.

4. He who neither refrains from anger nor keeps his secrets will at all times and in all places be easily conquered by all.

---

ரு. வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்பிலன் பற்றூர்க் கினிது.

பரி:—(இ-ள்.) ஒருவன் நீதிநூலை யோதான், அது விதித்த தொழில்களைச் செய்யான், தனக்கு வரும் பழியைப்பாரான், தான் பண்புடையனல்லன், அவன் பகைவர்க்கு †அப்பகைமை யினிது, (எ-று).

---

*கலித்தொகை (நெய்தற்கலி 16-வது செய்யுள்) "நிறையெனப்படுவது மறைபிறரறியாமை" என்று கூறுகின்றது. இதற்குப் பொருள் நச்சினார்க்கினியர் "நிறையென்று சொல்லப்படுவது மறைந்ததொரு காரியம் பிறரறியாமலொழுகுதலை" என்றனர்.

¶யார்க்கு மெளிது என்பதனை யார்க்குமினிது என்று பாடமோதி, அதற்கு அவனது பகைமை யார்க்கு மினிதென்று பொருள் கூறுவாருமுண்டென்பது.

† அப்பகைமை - அவனோடுகொண்ட பகை.

* தொல்லோ ரடிப்பட்டு வழங்கிவந்த தாகலான் 'வழி' என்றும், தப்பாது பயன்படுதலின் ' வாய்ப்பன ' என்றும், ¶ இக்குற்றங்க ளுடையான்றானே யழிதலிற் ' பற்றார்க் கினிது' என்றுங் கூறினார்.

தெளி:— (இ-ள்.) (ஒருவன்) வழிநோக்கான் – நீதி நூலைக் கல்லான், வாய்ப்பன செய்யான்-(அந்நீதிநூல்) விதித்த தொழில் களைச் செய்யான், பழி நோக்கான்-(தனக்குவரும்) பழியைப்பாரான், பண்பிலன்-(தான்) குணமுடையனல்லன், பற்றார்க்கு-(அவன்) பகைவர்க்கு, இனிது-(அப்பகை) இனியதாம், (எ-று).

(நீதிநூல்) தொல்லோர்வழியில் ஓதப்பட்டு வழங்கிவந்த தாகலால் ' வழி ' என்றும், (அந்நீதிநூல் விதித்த தொழில்கள்) தப்பாது பயன்படுதலால் ' வாய்ப்பன ' என்றும், இக்குற்றங்களுடை யவன் தானே அழிதலால் ' பற்றார்க்கினிது ' என்றும் சொல்லினார்.

(க-து.) நீதிநூலை யோதாமலும், அது விதித்த தொழில்களைச் செய்யாமலும், தனக்குவரும் பழியைக் கருதாமலும், பண்புடைய னாகாமலு மிருப்பவனது பகைமை அவன் பகைவர்க்கு மிகவுமினிதாம் என்பது.

5. He who reads not moral codes, does nothing that is enjoined by them, cares not for reproach and is destitute of good qualities, is a pleasing object to his enemies.

---

௬. **காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்**
**பேணாமை பேணப் படும்.**

பரி:—(இ-ள்.) தன்னையும் பிறரையுந் தானறியாமைக் கேதுவாய வெகுளியை யுடையான் யாவன், மேன்மேல் வளரா நின்ற மிக்க காமத்தை யுடையான் யாவன், அவரது பகைமை விரும்பிக் கொள்ளப்படும், (எ-று).

§காணாத சினமென்பது விகாரமாயிற்று. †முன்னோனுக்கு யாவரும் பகையாகலானும், ‡ஏனோனுக்குக் காரியந் தோன்றாமை யானும், தாமேயழிவ ரென்பதுபற்றி இவர் 'பேணாமை பேணப்படும்' என்றார்.

---

* தொல்லோர்–நீதிநூலியற்றிய முன்னோர்.

¶ இக்குற்றங்க ளென்றது வழிநோக்காமை, வாய்ப்பன செய் யாமை, பழிநோக்காமை, பண்பில்லாமைகளை.

§ காணாத என்னும் எதிர்மறைப் பெயரெச்சம் தகரவெழுத்துப் பேற்றோடு கூடிய அகரவிகுதி கெட்டுக் காணா என நின்றது.

† முன்னோனுக்கு–காணாச்சினத்தானுக்கு.

‡ ஏனோனுக்கு–கழிபெருங்காமத்தானுக்கு.

தெளி:—(இ-ள்.) காணுச்சினத்தான்-(தன்னையும் பிறரையும் தான்) அறியாமைக்குக் காரணமாகிய கோபத்தை யுடையவன் (யாவன்), கழிபெருங்காமத்தான்-மேலுமேலும் வளரா நின்ற மிகுந்த காமத்தையுடையவன் (யாவன்), பேணுமை-(அவரது) பகைமை, பேணப்படும்-விரும்பிக்கொள்ளப்படும், (எ-று).

காணுத சினம் என்பது காணுச்சினமென விகாரமாயிற்று. முன்னவனுக்கு யாவரும் பகையாகலாலும், மற்றையவனுக்குக் காரியம் தோன்ருமையாலும், அவர்தாமே அழிவரென்பதுபற்றி இவர் 'பேணுமை பேணப்படும்' என்ருர்.

(க-து.) கோபத்தையும் காமத்தையுமுடையவர் பகைவர்க்கு மிக வெளியராவர் என்பது.

6. Highly desirable is the enmity of him whose anger is blind and whose lust increases beyond measure.

———

எ. கொடுத்துங் கொளல்வேண்டு †மன்ற வடுத்திருந்து
மாணுத செய்வான் பகை.

பரி:—(இ-ள்.) வினையைத் தொடங்கியிருந்து அதற் கேலாதன செய்வான் பகைமையைச் சிலபொரு ளழியக் கொடுத்தாயினுங் கோடல் ஒருதலையாகவேண்டும், (எ-று).

ஏலாதன - ‡மெலியனுய் வைத்துத் துணிதலும் §வலியனுய் வைத்துத் தணிதலும் *முதலாயின. ○அப்பொழுது £அதனுற் சில பொருளழியினும் பின் பல பொருளெய்தற்கு ஐயமின்மையின் 'கொளல் வேண்டுமன்ற' என்ருர். இவையாறுபாட்டானும் ‖அது சிறப்பு வகையாற் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) அடுத்திருந்து-(தொழிலைத்) தொடங்கியிருந்து, மாணுத-(அத்தொழிற்குப்) பொருந்தாதனவற்றை, செய்வான்-செய்பவனது, பகை-பகைமையை, கொடுத்தும்-(சிலபொருள் அழியக்) கொடுத்தாயினும், கொளல்-கொள்ளுதல், மன்ற-நிச்சயமாக, வேண்டும் - (எ-று).

---

† "மன்றவென் கிளவி தேற்றஞ் செய்யும்" என்பது தொல்காப்பியம்.

‡ மெலியனுய்வைத்துத் துணிதல்-தன்வலி, துணைவலி, வினைவலி களுள் குறையுள்ளவனு யிருந்தும் பகைவருடன் போர்செய்ய நிச்சயித்தல்.

§ வலியனுய் வைத்துத்தணிதல்-தன்வலிமுதலியவற்றுள் மேம் பட்டவனுயிருந்தும் பகைவருடன் போர்செய்யா தடங்கிக் கிடத்தல்.

* முதலாயின என்றமையின், போர்க்குச் சென்றுள்ள சுத்த வீரரிடத்துச் சந்தேகமுறுதல், தக்கவாறு பொருள்தாராமை முதலிய வற்றையுங்கொள்க.

○ அப்பொழுது-பகையைக்கொள்ளுங் காலத்தில்.

£ அதனுல்-அப்பகையைக்கொள்ளுதலால். ‖ அது-பகைமாட்சி.

பொருந்தாதன-மெலியவனுயிருந்தும் துணிதலும் வலியவனு யிருந்தும் தணிதலும் முதலாயின. அப்பொழுது அதனுல் சில பொருள் அழியினும் பின்னே பலபொருள்களைப் பெறுதற்குச் சந்தேகம் இல்லாமையால் (அடுத்திருந்து மாறுதசெய்வான் பகையைக் கொடுத்துங்) 'கொளல் வேண்டுமன்ற' என்றுர். இவை ஆறுபாட்டாலும் அது சிறப்பு வகையால் சொல்லப்பட்டது.

(கூ-து.) தகுதியில்லாத காரியங்களைச் செய்பவனது பகையினைப் பொருள் கொடுத்தாயினுங் கொளல் வேண்டும் என்பது.

7. It is indeed necessary to acquire even by purchase the enmity of him who having begun a work does what is not conducive to its fulfilment.

---

அ. குணனிலனுய்க் குற்றம் பலவாயின் மாற்றுர்க்
கினனிலனு மேமாப் புடைத்து.

பரி:—(இ-ள்.) ஒருவன் குண னென்று மிலனுய் உடைய குற்றம் பலவாயவழி அவன் துணையிலனும்; *அவ்விலனுதருனே அவன் பகைவர்க்குத் துணையாதலை யுடைத்து, (எ-று).

குணம்-£இறைமாட்சியுட் சொல்லியன, குற்றம்- ‡இவ்வதிகாரத்துச் சொல்லியனவும் மற்றும் $அத்தன்மையனவும், துணை-சுற்றம், நட்பு, பொருள், படை †முதலாயின. பகைவர்க்கு ||இவற்று னுளதாம் பயன் ()ருனே யுளதாமாகலின் 'ஏமாப்புடைத்து' என்றுர். ○இலனுயென்னுஞ் செய்தெனெச்சம் உடையவென வந்த பெயரெச்சக் குறிப்புக்கொண்டது.

---

* அவ்விலனுதருனே-துணையில்லாதவனு யிருத்தல்தானே.

£ இறைமாட்சியுள் சொல்லியன – அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம், தூங்காமை, கல்வி, துணிவுடைமை முதலியனவாம்.

‡ இவ்வதிகாரத்துச் சொல்லியன – அன்பின்மை, துணையின்மை, வலியின்மை முதலியனவாம்.

$ அத்தன்மையனவும் என்றது பிறரது மகளிரை வெளவுதல், பிறர்பொருளை யநியாயமாக அபகரித்தல், துணையாகாதவரைத் துணையாகக்கொள்ளுதல் முதலியவற்றை.

† முதலாயின என்றமையின், அமைச்சர், புரோகிதர் முதலாயி னோரையும் அரண் முதலியவற்றையுங் கொள்க.

|| இவற்றுன்-சுற்றம் நட்பு முதலியவற்றுல்.

() தானே-சுற்றம் நட்பு முதலியனவில்லாமல் தானே.

○ இலனுய் என்னும் செய்து என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம் இயைபுநோக்கி வருவித்துக்கூறிய உடைய என்னும் உடன்பாட்டுக் குறிப்புப் பெயரெச்சத்தைக்கொண்டு முடிந்தது.

தெளி:—(இ-ள்.) குணனிலனாய்-(ஒருவன்) குணமொன்றுமிலனாய், குற்றம்பலவாயின்-(உடைய)குற்றம் பலவாகியவிடத்து,இனனிலனாம்-(அவன்) துணையில்லாதவனாவன், (அவ்விலனாதல்தானே), மாற்றார்க்கு-(அவன்) பகைவர்க்கு, ஏமாப்புடைத்து - துணையாதலை யுடைத்து, (எ - று).

குணம் - இறைமாட்சி யதிகாரத்துள் சொல்லியிருப்பன. குற்றம்-இவ்வதிகாரத்துள் சொல்லியிருப்பனவும் மற்றும் அத்தன்மையனவுமாம். துணை-சுற்றம், நட்பு, பொருள், படை முதலானவை. பகைவர்க்கு இவற்றால் உண்டாகும்பயன் தானே உண்டாமாகலால் 'ஏமாப்புடைத்து' என்றார். இலனாய் என்னும் செய்து என்னும் வினையெச்சம் உடைய என்று வந்த குறிப்புப் பெயரெச்சத்தைக் கொண்டு முடிந்தது.

(க-து.) குணமின்மையும் பல குற்றமுமுடைய அரசன் துணையில்லாதொழிதலால், அவன் தன் பகைவர்க்கு மிகவு மெளியவனாவான் என்பது.

8. He will become friendless who is destitute of good qualities and whose faults are many; such a character is a help to his enemies.

---

கூ. செறுவார்க்குச் சேணிகவா வின்ப மறிவிலா
வஞ்சும் பகைவர்ப் பெறின்.

பரி:—(இ-ள்.) நீதியை யறிதலில்லாத அஞ்சும் பகைவரைப் பெற்றால், அவரைச் செறுவார்க்கு உயர்ந்த வின்பங்கள் நீங்கா, (எ-று).

†உபாயமறிதலும் ‡அறிந்தாற்செய்து முடிக்குந் திண்மையுமில்லாதாரே பகைவராதல் கூடாமையிற் 'பெறின்' என்றும், ¶அவரை யறிந்து *மேற்சென்ற பொழுதே பகையின்மையுஞ் செல்வமும் ஒருங்கே யெய்தலிற் $சேணின்பமிகவா என்றும், கூறினார்.

தெளி:— (இ-ள்.) அறிவிலா-(நீதியை) அறிதலில்லாத, அஞ்சும்-, பகைவர்-பகைவரை, பெறின் - பெற்றால், செறுவார்க்கு - (அப்பகைவரைப்) பகைப்பவர்க்கு, சேண் - உயர்வுள்ள, இன்பம் - இன்பங்கள், இகவா – நீங்கா, (எ-று).

உபாயமறிதலும் அறிந்தால் செய்து முடிக்கும் உறுதியும் இல்லாதவரே பகைவராதல் கூடாமையால் 'பெறின்' என்றும், அவரை அறிந்து மேற்சென்றபொழுதே பகையில்லாமையும் செல்வமும் ஒருசேர அடைதலால் சேணின்பமிகவா என்றும், சொல்லினார்.

---

† உபாயம்-சாம தான பேத தண்டமென்னும் நால்வகை யுபாயம்.

‡ அறிந்தால்-அவ்வுபாயத்தை யறிந்தால்.

¶ அவரை - அப்பகைவரை.

* மேற்சென்ற பொழுதே-அப்பகைவருடன் போர்புரியச் சென்ற காலத்திலே.

$ சேணுடையின்பங்களிகவா என்றும் பாடமுண்டு.

(க-து.) நீதியையறியாமையும் அஞ்சுதலு முடையவரைப் பகைத்தவர்க்கு உயர்வுள்ள இன்பங்கள் நீங்கமாட்டா என்பது.

9. If there be ignorant and timid enemies there will be no end of lofty delights to the victorious.

---

**கo. கல்லான் வெகுளுஞ் சிறுபொரு ளெஞ்ஞான்று**
**மொல்லானை யொல்லா தொளி.**

**பரி:— (இ-ள்.) நீதிநூலைக் கல்லாதானோடு பகைத்தலான்வரும் எளிய பொருளை மேவாதானை எஞ்ஞான்றும் புகழ் மேவாது, (எ-று).**

*சிறு பொருள் - *முயற்சி சிறிதாய பொருள். நீதியறியாதானை வேறல் எளிதாயிருக்கவும் ¶அது மாட்டாதானை வெற்றியான் வரும் புகழ் கூடாதென்பதாம்; ஆகவே, இச்சிறிய முயற்சியாற் பெரிய பயனெய்துக வென்றவாறாயிற்று. ‡இதற்குப் பிறரெல்லாம் அதிகாரத்தோடு ||மாறுதன்மேலும் ஓர் §பொருட்டொடர்புபடாமலுரைத்தார். இவை மூன்று பாட்டானும் ০அதனினாய பயன் கூறப்பட்டது.*

தெளி:—(இ-ள்.) *கல்லான் - (நீதிநூலைக்) கல்லாதவனோடு, வெகுளும்-பகைத்தலால் வரும், சிறுபொருள் - எளிய பொருளை, ஒல்லானை-அடையாதவனை, எஞ்ஞான்றும் - எந்நாளும், ஒளி - புகழ், ஒல்லாது - அடையாது.*

*சிறுபொருள்-முயற்சி சிறிதாகிய பொருள். நீதியறியாதவனை வெல்லுதல் எளிதாயிருக்கவும் அதுமாட்டாதவனை வெற்றியால் வரும் புகழ் கூடாதென்பதாம்; ஆகவே, இச்சிறிய முயற்சியால் பெரிய பயனடைக வென்றவாறாயிற்று. இவை மூன்று பாட்டாலும் அதனாலாகிய பயன் சொல்லப்பட்டது.*

*(க-து.) நீதிநூலைக் கல்லாதவனுடன் பகைத்தலால் வரும் பொருளை யடையாத அரசனைப் புகழ் ஒருபோது மடையாது.*

10. The light of fame will never be gained by him who gains not the trifling reputation of having fought an unlearned enemy.

---

** முயற்சி சிறிதாயபொருள் - சிறு முயற்சியால் வந்த பெரும் பொருள்.*

*¶ அதுமாட்டாதானை - (நீதியறியாதவனை) வெல்லுதல் மாட்டாதவனை.*

*‡ இதற்கு - இக்குறளுக்கு. || மாறுதன் மேலும் - மாறுபடுதல் மேலும்.*

*§ பொருட்டொடர்பு - அர்த்தத்தின் சம்பந்தம்.*

*০ அதனினாயபயன் - பகைமாட்சியாலாய பயன்.*

# இருபத்தைந்தாவது அதிகாரம்

## பகைத்திறந் தெரிதல்

## Examining the nature of Enmity

பரி:—அஃதாவது †மாணாத பகையை ஆக்குதற் குற்றமும், முன் ஆகி நின்ற பகையுள் நட்பாக்கற்பாலதும், நொதும லாக்கற்பாலதும், ‡அவற்றின்கட் செய்வதும், ஏனைக் களைதற்பாலதன்கட் செய்வனவும், ¶களையும் பருவமும், களையாக்காற்படு மிழுக்கும் என்று இத்திறங்களை ஆராய்தல். $இரட்டுற மொழித லென்பதனாற் பகையது திறமும் பகையிடத் தாக்குந் திறமுமென விரிக்கப்பட்டது. §இவையெல்லாம் மாணாப் பகையவாகலின், ||இது பகைமாட்சியின்பின் வைக்கப்பட்டது.

தெளி:—அஃதாவது மாட்சிமையில்லாத பகையை ஆக்குதற் குற்றமும், முன்புண்டாகி நின்ற பகையுள் நட்பாக்குந்தன்மையதும், அயலாக்குந் தன்மையதும், அவற்றின்கண் செய்வதும், மற்றைக் களையுந் தன்மையுடையதன் கண் செய்வனவும், களையும் பருவமும், களையாமற்போனா லுண்டாகுங் குற்றமும் என்று இவ்விதங்களை ஆராய்தல். இரட்டுற மொழிதலென்னு முத்தியால் (அப்பகைத்திறந் தெரிதல்) பகையது திறமும் பகையினிடத்துச் செய்யும் திறமுமென்று விரிக்கப்பட்டது. இவை யெல்லாம் மாட்சிமையில்லாத பகையி னிடத்தன வாகலால், இது பகைமாட்சியின் பின் வைக்கப்பட்டது.

---

க. **பகையென்னும் பண்பி லதனை யொருவ**
**னகையேயும் வேண்டற்பாற் றன்று.**

பரி: -(இ-ள்.) பகையென்று சொல்லப்படுந் தீமை பயப்பதனை ஒருவன் விளையாட்டின் கண்ணே யாயினும் விரும்புத லியற்கைத் தன் றென்று கூறும் நீதிநூல், (எ-று).

மாணாத பகையை யாக்கிக் கோடல் எவ்வாற்றானுந் தீமையே பயத்தலிற் oபண்பிலது என்றும், *அதனை விளையாட்டின்கண்

---

† மாணாதபகை - நன்மைபயவாத பகை.

‡ அவற்றின்கண் - நட்பாக்குந் தன்மையதும் அயலாக்குந் தன்மையது மாய இரண்டன்கண். ¶ களையும் பருவம் - அழிக்குங் காலம்.

$ இரட்டுற மொழிதல் - ஒரு வாக்கியத்தை இரண்டு பொருள் படச் சொல்லுதல். இங்குப் பகைத்திறந்தெரிதல் என்னும் வாக்கி யத்தில் பகைத்திற மென்பதனை ஆறும் வேற்றுமைத் தொகையாகவும் ஏழாம் வேற்றுமை யுருபும் பொருளுமுடன் றொக்கதொகையாகவும் கொண்டு, முறையே அது ' பகையது திறமும் ' என்றும், ' பகையிடத் தாக்குந் திறமும் ' என்றும், விரிக்கப்பட்டவா றறிக.

§ இவையெல்லாம் - இத்திறங்கள்யாவும்.

|| இது - பகைத்திறந்தெரிதல்.

o பண்பிலதனை என்றும் பாடமுண்டு.

* அதனை - மாணாத பகையை.

வேண்டினுஞ் செற்றமே விளைந்து மெய்யாமாகலின் 'நகையேயும்' என்றும், வேண்டாமை தொல்லையோரது துணிவென்பார் நீதிநூன் மேல் வைத்துங் கூறினார். *அப்பெயர் அவாய் நிலையான் வந்தது.

தெளி:—(இ-ள்.) ஒருவன்—, பகையென்னும்-பகையென்று சொல்லப்படும், பண்பிலதனை-தீமை யுண்டாக்குவதனை, நகையேயும்-விளையாட்டின் கண்ணே யாயினும், வேண்டற்பாற்றன்று-விரும்புதற் றன்மை யுடையதன்று, (என்று சொல்லும் நீதி நூல்), (எ-று).

மாட்சிமையில்லாத பகையை யாக்கிக்கொள்ளுதல் எவ்விதத்தாலும் தீமையே தருதலால் பண்பிலது என்றும், அதனை விளையாட்டின்கண் வேண்டினும் பகையே விளைந்து மெய்யாமாகலால் 'நகையேயும்' என்றும், (பகை யென்னும் பண்பிலதனை) வேண்டாமை பழைமையோரது துணிவென்பார் நீதி நூல்மேல் வைத்தும் சொல்லினார். நீதிநூல் என்னும் பெயர் அவாய்நிலையால் வந்தது.

(க-து.) பிறரோடு பகைத்தலை விளையாட்டின்கண்ணும் விரும்புதல் கூடாது என்பது.

1. The evil of enmity is not of a nature to be desired by one even for fun.

---

உ. †வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
‡சொல்லே ருழவர் பகை.

பரி:—(இ-ள்.) ஒருவன் வில்லை ¶ஏராகவுடைய உழவரோடு பகை கொண்டானாயினும், சொல்லை ஏராகவுடைய உழவரோடு பகைகொள்ளா தொழிக, (எ-று).

$சொல் ஆகுபெயரான் நீதிநூன்மே னின்றது. வீரம் சூழ்ச்சி யென்னும் ஆற்றல்களுள் வீரமே யுடையாரோடு பகைகொண்டாற் கேடுவருதல் ஒருதலையன்று; வந்ததாயினுந் தனக்கேயாம்; ०ஏனைச்

---

* அப்பெயர்-நீதிநூல் என்னும் பெயர். வருவித்துரைத்த கூறும் என்னும்வினை நீதிநூல் என்பதனை அவாய் (வேண்டி) நிற்றலின், அது வருவித் துரைக்கப்பட்டது.

† வில்லே ருழவர்-வீரர். வில் என்று கூறினமையின், மற்றைய வாள் வேல் முதலிய படைகளும் இனங்களாய் எஞ்சி (குறைந்து) நின்றன.

‡ சொல்லே ருழவர்-அமைச்சர். ¶ ஏர்-கலப்பை.

$ சொல் என்பது சொல்லாலாகிய நீதிநூலை யுணர்த்துதலால், கருவியாகு பெயராம். சொல்-காரணம்; நீதிநூல்-காரியம்.

० ஏனைச் சூழ்ச்சியுடையாரோ டாயின்-மற்றைச் சூழ்ச்சி யுடையவரோடு பகைகொண்டால்.

சூழ்ச்சி யுடையாரோ டாயிற் றன்வழியினுள்ளார்க்குந் தப்பாது வருதலின், *அது கொள்ளினும் இது கொள்ளற்க வென்றார். உம்மையான் அதுவு மாகாமை பெறுதும் †இரண்டு முடையாரோடு கொள்ளலாகாமை சொல்ல வேண்டாதாயிற்று. ‡உருவக விசேடம்.

தெளி :-(இ–ள்.) (ஒருவன்) வில்-வில்லை, ஏர்-ஏராக, (உடைய), உழவர்-உழவரோடு, பகைகொளினும்-பகை கொண்டானாயினும், சொல்-சொல்லை, ஏர்-ஏராக, (உடைய), உழவர் – உழவரோடு, பகை-, கொள்ளற்க-கொள்ளா தொழியக் கடவன், (எ-று).

சொல் ஆகுபெயரால் நீதிநூலின்மேல் நின்றது. (ஒருவன்) வீரம் ஆலோசனை என்னும் வலிமைகளுள் வீரமே யுடையவரோடு பகை கொண்டால் (அவனுக்குக்) கேடு வருவது நிச்சயமன்று; வந்தாலும் தனக்கே யாம்; மற்றையாலோசனை யுடையவரோடானால் (கேடு தனக்கேயன்றித்) தன் வமிசத்தோர்க்கும் தப்பாது வருதலால், (அவன்) அது கொள்ளினும் இது கொள்ளற்க வென்றார். கொளினும் என்ற எதிர்மறை உம்மையால் வில்லேருழவர் பகையும் ஆகாமை பெறப்படும். இரண்டு முடையவரோடு பகைகொள்ளலாகாமை சொல்லவேண்டாதாயிற்று. இது சிறப்புருவகவணி.

(க-து.) அரசனுக்கு வில்லேருழவரது பகையிலும் சொல்லேருழவரதுபகை கொடியதா மென்பது.

2. Though the king may incur the enmity of warriors whose ploughs are bows, he should not incur the enmity of ministers whose ploughs are words.

---

* வில்லேருழவர் பகைகொளினும் சொல்லேருழவர்பகை கொள்ளற்க என்பதாம். அது-வில்லேருழவர் பகை; இது-சொல்லேருழவர் பகை.

† இரண்டு முடையாரோடு–வீரமும் சூழ்ச்சியும் உடையவருடன்.

‡ உருவக விசேடமெனினும் சிறப்புருவகமெனினும் ஒக்கும். சிறப்புருவகமாவது ஒருபொருளின் அடையை யுருவகஞ்செய்து அதனால் அப்பொருளையும் உருவகஞ் செய்வதாம்.

இங்கு வீரர்க்கு அடையாயுள்ள வில்லையும் அமைச்சர்க்கு அடையாயுள்ள சொல்லையும் ஏராக உருவகஞ்செய்து அது காரணமாக அவர்களை யுழவராக உருவகஞ் செய்தமைகாண்க.

[வீரராகிய உழவர் பகைவராகிய வயலில் வில்லாகிய ஏரைச் செலுத்திப் பாணமாகிய விதையை விதைத்து வெற்றியாகிய விளைவைக் கொள்ளுவாரென்றும், அமைச்சராகிய உழவர் சபையாகிய வயலில் சொல்(நீதிநூ)லாகிய ஏரைச்செலுத்தி நியாயமாகிய விதையை விதைத்து யாவரையும் ஒப்பச் செய்தலாகிய விளைவைக் கொள்ளுவாரென்றும் விரித்துரைத்துக் கொள்க. புறப்பொருள் வெண்பா மாலை "அஞ்சுவரு தானை யமரென்னு நீள்வயலுள், வெஞ்சினம் வித்திப் புகழ்விளைக்கும்–செஞ்சுடர்வேல், பைங்கட் பணைத்தாட் பகட்டுழவன்" என்று கூறுவதிங் குணர்தற் பாலதாம்].

௩. ஏமுற் றவரினு மேழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன்

பரி :—(இ–ள்.) தான் தனியனாய் வைத்துப் பலரோடு பகைகொள்வான் பித்துற்றாரினும் அறிவிலன், (எ–று).

தனிமை–சுற்றம் நட்புப் படை *முதலிய வின்மை. †மயக்கத்தால் ஒப்பாராயினும் ஏமுற்றவர் அதனாற் றீங்கெய்தாமையின், தீங்கெய்துதலுமுடைய ‡இவனை ¶அவரினும் ஏழை என்றார். தீங்காவது துணையுள் வழியும் வேறல் ஐயமாயிருக்க அஃதின்றியும் பலரோடு பகைகொண்டு அவரால் ()வேறு வேறு பொருதற் கண்ணும் ஒருங்கு பொருதற் கண்ணும் அழிந்தே விடுதல். இவை மூன்று பாட்டானும் பகைகோடற் குற்றம் ०பொதுவினுஞ் சிறப்பினுங் கூறப்பட்டது.

தெளி :—(இ–ள்.) தமியனாய் – (தான்) தனியனாயிருந்தும், பல்லார்-பலரோடு, பகைகொள்பவன்–பகைகொள்வான், ஏமுற்றவரினும்-பித்துக்கொண்டவரினும், ஏழை-அறிவிலனாவன், (எ-று).

தனிமை-சுற்றம் நட்புப் படை முதலியன இல்லாமை. மயக்கத்தால் அவ்விருவரும் ஒப்பாராயினும் பித்துக்கொண்டவர் அப்பித்தத்தினால் தீங்கடையாமையால், தீங்கடைதலு முடைய இவனை அவரினும் ஏழை என்றார். தீங்காவது துணையுள்ளவிடத்தும் (பகைவரை) வெல்லுதல் சந்தேகமாயிருக்க அத்துணையில்லாமலும் பலரோடு பகைகொண்டு அவரால் வேறு வேறு போர் செய்தலிலும் ஒருமுகமாகப் போர் செய்தலிலும் அழிந்தே விடுதல். இவை மூன்று பாட்டாலும் பகைகொள்ளுதற் குற்றம் பொதுவகையாலும் சிறப்பு வகையாலும் சொல்லப்பட்டது.

(க-து.) தான் தனியனாயிருந்தும் பலரோடு பகைப்பவன் மிகவும் அறிவீனனாவன் என்பது.

3. He who being alone, incurs the enmity of many is more foolish than even madmen.

---

* முதலிய என்றமையின், தன்வலி, துணைவலி, உறுதியாய அரண், அமைச்சர் புரோகிதர்களின் ஆலோசனையைக்கேட்டல் முதலியவற்றையும் கொள்க.

† மயக்கத்தால் ஒப்பாராயினும்-தமியனாய்ப் பல்லார் பகை கொள்பவனும் பித்துக்கொண்டவரும் மயக்கத்தால் ஒப்பாயிருப்பாரானாலும்.

‡ இவனை–தமியனாய்ப் பல்லார் பகை கொள்பவனை.

¶ அவரினும்-பித்துக்கொண்டவரினும்.

() வேறு வேறு-தனித்தனியாக.

० பொதுவகையாகக்கூறியது க-வது குறளாம்; சிறப்புவகையாகக் கூறியது உ-வது, ௩-வது குறளாம்.

**ச. பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்**
**றகைமைக்கட் டங்கிற் றுலகு.**

பரி:—(இ-ள்.) வேண்டியவழிப் பகையை வேறுபடுத்துத் தனக்கு நட்பாகச் செய்துகொண்டொழுகும் இயல்பினையுடைய அரசனது பெருமையுள்ளே *அடங்கிற்று இவ்வுலகு, (எ-று).

*வேண்டியவழி யென்பது †ஆக்கத்தான் வந்தது. வேறுபடுத்தல்-பகை நிலைமையி னீக்குதல். ஒழுகல் - நீதிவழியொழுகல். பெருமை-பொருள் படை என இருவகைத்தாய ஆற்றல். ‡அதன் வழித்தாதற்கு எஞ்ஞான்றுந் திரிபின்மையின், அத் துணிவுபற்றித் 'தங்கிற்று' என்றார்.*

தெளி :—(இ-ள்.) *பகை - பகையை, நட்பாக் கொண்டொழுகும்-(வேண்டியவிடத்து வேறுபடுத்தித் தனக்கு) நட்பாகச் செய்து கொண்டொழுகும், பண்புடையாளன்-இயல்பினையுடைய அரசனது, தகைமைக்கண்-பெருமையுள்ளே, உலகு-இவ்வுலகம், தங்கிற்று-அடங்கியது, (எ-று).*

*வேண்டிய விடத்து என்பது நட்பாக என்னும் ஆக்கச்சொல்லால் வந்தது. வேறுபடுத்தல்-பகைநிலைமையினின்றும் நீக்குதல். ஒழுகல்-நீதிநூல்வழி யொழுகுதல். பெருமை-பொருள் படை என்றிருவகைய தாகிய ஆற்றல். அவ்வாற்றலின் வழியதாதற்கு என்றும் வேறுபாடில்லாமையால், அத்துணிவுபற்றி (உலகு) 'தங்கிற்று' என்றார்.*

(க-து.) *வேண்டியவிடத்துப் பகைவரை நட்பினராகக் கொண்டொழுகும் அரசனது பெருமையுள்ளே உலகம் நிலைபெற்றது.*

4. The world abides in the greatness of that king whose nature is such as to turn hatred into friendship.

---

**ரு. தன்றுணை யின்றாற் பகையிரண்டாற் றானொருவ**
**னின்றுணையாக் கொள்கவற்றி னொன்று.**

பரி:—(இ-ள்.) தனக்குதவுந் துணையோவெனின் இல்லை; ¶நலிவுசெய்யும் பகையோவெனின் இரண்டு; அங்ஙனமாய் நின்றவழி ஒருவனாகிய தான் அப்பகையி ரண்டனுட் பொருந்தியதொன்றை அப்பொழுதைக்கு இனிய துணையாகச் செய்துகொள்க, (எ-று).

---

* *அடங்கிற்று-சுவாதீனப்பட்டது.*

† *பொருள்களை வருவித்துரைக்கும் ஏதுக்களுள் ஆக்கச்சொல்லும் ஒன்றுமென்பது இங்கறிதற் பாலதாம். இங்கு ஆக்கமென்றது நட்பா(க) என்பதன்கணுள்ள ஆக என்பதனை.*

‡ *அதன் வழித்தாதற்கு-பொருள்படையென் றிருவகைய தாகிய ஆற்றலின் வழியதாகவுள்ள வுலகத்திற்கு.*

¶ *நலிவுசெய்யும்-வருத்தும்.*

*பொருந்தியது - ஏனையதனை வேறற்கு ஏற்றது. அப்பொழுது - †அவ்வெல்லும்பொழுது. திரிபின்றாகச் செய்துகொள்க வென்பார் 'இன்றுணையா' என்றார். ‡ஆல்கள்-அசை. இவையிரண்டுபாட்டானும் நட்பாக்கற்பாலது கூறப்பட்டது.*

தெளி:—(இ-ள்.) *தன்றுணை-தனக்கு உதவுந்துணையோவெனின், இன்று-இல்லை, பகை-(நலிவுசெய்யும்) பகையோவெனின், இரண்டு - இரண்டாம், (அவ்விதமாய் நின்றவிடத்து), தானொருவன்-ஒருவனாகிய தான், அவற்றின்-அப்பகையிரண்டனுள், ஒன்று-(பொருந்தியதாகிய) ஒன்றை, இன்றுணையா-(அப்பொழுதிற்கு) இனியதுணையாக, கொள்க-(செய்து) கொள்ளக்கடவன், (எ-று).*

*பொருந்தியது மற்றொருபகையை வெல்லுதற்கு ஏற்றது. அப்-பொழுது-அவ்வெல்லும்பொழுது. (அப்பகையிரண்டனுள் ஒன்றை) வேறுபாடில்லாமல் செய்துகொள்கவென்பார் 'இன்றுணையா' என்றார். ஆலிரண்டும் அசை. இவை இரண்டுபாட்டாலும் நட்பாக்கற்றன்மையது சொல்லப்பட்டது. கொள்க என்னுமுற்றின் ஈற்றகரம் தொக்கு நின்றது.*

*(க-து.) தனக்குதவி செய்யுந் துணையின்றிப் பகையிரண்டாயிருக்கு மரசன் அச்சமயத்திற் கேற்றவாறு அவ்விரண்டனுளொன்றைத் துணையாகக் கொள்ளக்கடவன் என்பது.*

5. He who is alone and helpless, while his enemies are two-fold, should secure the help of one of the agreeable.

---

கூ. **தேறினுந் தேறா விடினு மழிவின்கட்**
**டேறான் பகாஅன் விடல்.**

பரி:—(இ-ள்.) பகைவனை முன் ¶தெளிந்தானாயினுந் தெளிந்திலனாயினும் தனக்குப் ||புறத்தொருவினையாற் றாழ்வு வந்துழிக் கூடாது நீக்காது ()இடையேவிட்டு வைக்க, (எ-று).

*முன் தெளிந்தானாயினும் 0அப்பொழுது கூடாதொழிகவென்றது, ††உள்ளாய்நின்று கெடுத்தல் நோக்கி. தெளிந்திலனாயினும்*

---

*† அவ்வெல்லும்பொழுது-பகையிரண்டனுள் ஒன்றைப் போர் செய்து வெல்லுங்காலத்தில்.*

*‡ ஆல்கள்-இன்றால் இரண்டால் என்பவற்றிலுள்ள ஆல்கள்.*

*¶ தெளிந்தானாயினும் - இப்போதிவன் பகைவனல்லனென்று தெளிந்திருந்தானானாலும்.*

*|| புறத்தொரு வினையாற் றாழ்வு வந்துழி-மற்றப் பகைவரோடு செய்தவொரு போரால் தாழ்வுவந்த விடத்து.*

*() இடையே விட்டுவைத்தல்-பகைவனை நொதுமலாக்குதல்.*

*0 அப்பொழுது-புறத்தொருதொழிலால் தாழ்வு (தோல்வி) உண்டாயகாலத்தில். †† உள்ளாய்-உட்பகையாய்.*

அப்பொழுது நீக்கா தொழிக வென்றது, *அவ்வழிவிற்குத் துணை யாதல் நோக்கி. இதனான் நொதுமலாக்கற் பாலது கூறப்பட்டது.

தெளி:— (இ-ள்.) தேறினும்-(பகைவனை முன்) தெளிந்தானாயினும், தேறுவிடினும்-தெளிந்திலனாயினும், அழிவின்கண்-(தனக்குப் புறத்தொருதொழிலால்) தாழ்வுவந்தவிடத்து, தேறான்-கூடாது, பகாஅன்-நீக்காது, விடல்-(நடுவே) விட்டுவைக்கக் கடவன், (எ-று).

(பகைவனை) முன்தெளிந்தானானாலும் அப்போது கூடாதொழிக வென்றது, (அப்பகைவன்) உள்ளாய் நின்று கெடுத்தல்நோக்கி. தெளிந்திலனாயினும் (அப்பகைவனை) அப்போது நீக்காதொழிக வென்றது, (அவன்) அவ்வழிவிற்குத் துணையாதல் நோக்கி. இதனால் (பகைவனை) அயலாக்குந் தன்மையது சொல்லப்பட்டது.

(கு-து.) அரசன் புறத்தொரு தொழிலால் தனக்குத் தாழ்வு வந்தவிடத்துப் பகைவருடன் கூடாமலும் அவரை நீக்காமலு மிருக்கக்கடவன் என்பது.

6. Though one's enemy is aware of one's misfortune or not, one should act so as neither to join nor separate from him.

———

எ. நோவற்க நொந்த தறியார்க்கு மேவற்க
மென்மை பகைவ ரகத்து.

பரி:—(இ-ள்.) †நொந்ததனைத் தாமாக வறியாத நட்டார்க்குத் தன்னோவு சொல்லற்க; வலியின்மை பார்த்திருக்கும் பகைவர்மாட்டு அவ்வலியின்மையை ‡மேலிட்டுக் கொள்ளற்க, (எ-று).

¶நோவென்னும் முதனிலைத்தொழிற் பெயர் ஈண்டு அது சொல்லுதற்கணாயிற்று. பகைவர்கட் டவிர்வது கூறுவார், நட்டார்கட் டவிர்வதும் உடன் கூறினார். இதனால் ||அவ்விரு பகுதிக்கண்ணுஞ் செய்வது கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) நொந்தது-நொந்ததனை, அறியார்க்கு-(தாமாக) அறியாத நட்பினர்க்கு, நோவற்க-(தன்) நோவு சொல்லாதிருக்கக் கடவன், மென்மை-வலியில்லாமையை, (பார்த்திருக்கும்), பகைவ

* அவ்வழிவிற்கு-புறத்தொரு தொழிலால்வந்த தாழ்விற்கு.

† "தோழ னோடு மேழைமை பேசேல்" என்பதிங் குணர்தற் பாலதாம்.

‡ மேலிட்டுக்கொள்ளல்-வலியின்மை தன்னிடத் திருப்பதாகக் காட்டுதல்.

¶ வருந்துதல் என்னும் பொருளதாய நோ (நோதல்) என்னும் முதனிலைத் தொழிற்பெயர் இங்கு அந்நோவைச் சொல்லுதற்கணாயிற்று.

|| அவ்விருபகுதிக்கண்ணும்-நட்பினரிடத்தும் பகைவரிடத்தும்.

ரகத்து-பகைவரிடத்து, மேவற்க-(அவ்வலியில்லாமையை) மேலிட்டுக் கொள்ளாதிருக்கக் கடவன், (எ-று).

நோ என்னும் முதனிலைத் தொழிற்பெயர் இங்கு அந்நோவைச் சொல்லுதலி லாயிற்று. (ஒன்றினமுடித்தல் தன்னினமுடித்த லென்னு முத்தியால்) பகைவரிடத்துச் செய்யாதொழிவது சொல்லவந்தவர், நட்பினரிடத்துச் செய்யாதொழிவதும் உடன் சொல்லினார். இதனால் அவ்விருதிறத்தாரிடத்தும் செய்வது சொல்லப்பட்டது.

(க-து.) அரசன் தன் நட்பினர்க்குத் தான் நொந்ததனைச் சொல்லுதலும் பகைவர்க்குத் தனது வலியின்மையைக் காட்டுதலும் ஒழியக்கடவன் என்பது.

7. Reveal not your suffering to friends who are ignorant of it, nor refer to your weakness in the presence of your enemies.

———

அ. **வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்**
**பகைவர்கட் பட்ட செருக்கு.**

**பரி:—(இ-ள்.) தான் வினைசெய்யும் வகையை யறிந்து அது முடித்தற் கேற்பத் தன்னைப் பெருக்கி மறவிபுகாமற்றன்னைக் காக்கவே, தன் பகைவர் மாட் டுளதாய களிப்புக்கெடும், (எ-று).**

வகை-வலியனாய்த் தானெதிரே பொருமாறும், மெலியனாய வளவிற் போர்விலக்குமாறும் *முதலாயின. பெருக்கல்-பொருள் படைகளாற் பெருகச்செய்தல். களிப்பு-†இவற்றான் வேறுமென் றெண்ணி மகிழ்ந்திருத்தல். ‡இவ்விறுகுதலறிந்து தாமே அடங்குவ ரென்பதாம். இதனாற் கீழ்த்தற்பாலதன்கட் செய்வன கூறப்பட்டன.

தெளி:—(இ-ள்.) வகையறிந்து-(தான் தொழில் செய்யும்) வகையை யறிந்து, தற்செய்து-(அத்தொழில் முடித்தற்கு ஏற்பத்) தன்னைப் பெருக்கி, தற்காப்ப-(மறதி யடையாமல்) தன்னைக்காக்கவே, பகைவர்கண்-(தன்) பகைவரிடத்து, பட்ட-உண்டாகிய, செருக்கு-களிப்பு, மாயும்-கெடும், (எ-று).

தொழில் செய்யும் வகையாவது வலியவனாய்த் தான் நேரே போர் செய்விதமும், மெலியவனாயவளவில் போர் விலக்கும் விதமும் முதலாயின. பெருக்கல்-பொருள் படைகளால் (தன்னைப்)

---

* முதலாயின என்றமையின், பகைவரிருவருள் ஒருவரைத் தனக்குத் துணையாகக் கொள்ளுதல், பகைவரிடத்துத் தனது வலியில் லாமையைக் காட்டாமை முதலியவற்றையும் கொள்க.

† இவற்றான்-தம்மிடத்துள்ள பொருள் படைகளால்.

‡ இவ்விறுகுதலறிந்து-(வகையறிந்து தற்செய்து தற்காக்கும்) அழுத்தத்தை (பந்தோபஸ்தை)த் தெரிந்து.

பெருகச்செய்தல். களிப்பு - (பகைவர்) இவற்ருல் வெல்வோ மென்றெண்ணி மகிழ்ந்திருத்தல். (பகைவர்) இவ்விறுகுதல் அறிந்து தாமே அடங்குவரென்பதாம். இதனுற் பகையைக் களையுந்தன்மை யதனிடத்துச் செய்வன சொல்லப்பட்டன.

(க-து.) தான் தொழில் செய்யும் வகையை யறிந்து, பொருளையும் சேனையையும் பெருகச்செய்து மறதியின்றித் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளு மரசனிடத்து அவனது பகைவர் செருக்குச் செல்லாது என்பது.

8. The joy of the king's foes will be frustrated if he guards himself by knowing the way of action & securing assistance.

---

௯. **இளைதாக முண்மரங் கொல்க களையுநர்**
**கைகொல்லுங் காழ்த்த விடத்து.**

பரி:-(இ-ள்.) களையவேண்டுவதாய முண்மரத்தை இளைதாய நிலைமைக்கட் †களைக; அன்றியே ‡முதிர்ந்த நிலைமைக்கட் களையலுறிற் களைவார் கையினை ¶அதுதான் களையும், (எ-று).

()களையப்படுவதாய தம்பகையை அது மெலிதாய காலத்தே களைக, அன்றியே வலிதாயகாலத்துக் களையலுறிற் றம்மை அதுதான் களையுமென்பது தோன்ற நின்றமையின், இது §பிறிது மொழிதல். இதனுற்களையும் பருவங் கூறப்பட்டது.

தெளி:–(இ-ள்.) முண்மரம்-(களையவேண்டுவதாகிய) முள் மரத்தை, இளைதாக-இளையதாகிய நிலைமையில், கொல்க-களையக் கடவர், (அல்லாமல்), காழ்த்த் விடத்து-முதிர்ந்த நிலைமையில், (களையத் தொடங்கினுல்), களையுநர்-களைபவரது, கை-கையினை, கொல்லும்-(அதுதான்) களையும்,(எ-று).

களையப்படுவதாகிய தம்பகையைஅப்பகை மெலிதாகிய காலத்தே களைக, அவ்வாறன்றி வலிதாகிய காலத்துக் களையத் தொடங்கினுல் தம்மை அப்பகைதான் களையுமென்பது தோன்ற நின்றமையால், இக் குறள் பிறிது மொழிதலணியாம். இதனுற் பகையைக்களையும் பருவம் சொல்லப்பட்டது.

(க-து.) அரசர் தம் பகைவர் பொருள் படைகளால் மெலியவராயுள்ள காலத்திலேயே அவரை யழிக்கக்கடவர்; அழிக்காவிட்டால் அவரை அப்பகைவர் அழித்துவிடுவார் என்பது.

---

† களைக-பிடுங்கி யெறிக.

‡ முதிர்ந்த-வயிரம் பற்றிய. ¶ அதுதான்-அம்முள் மரமே.

() களையப்படுவதாகிய-அழிக்கப்படுவதாகிய.

§ ஒருபொருளை விளங்கச் செய்வதற்கு அப்பொருளோடொத்த பிறிதொரு பொருளைக் கூறுதல் பிறிதுமொழிதலணியாம்.

9. A thorny tree should be cut down while tender, for when it is grown it will destroy the hand of the feller.

---

**ய. உயிர்ப்ப வுளரல்லர் மன்ற செயிர்ப்பவர்**
**செம்மல் சிதைக்கலா தார்.**

பரி:—(இ-ள்.) தம்மோடு பகைப்பாரது *தருக்கினைக் கெடுக்கலாயிருக்க ‡ இகழ்ச்சியான் †அது செய்யாத வரசர் பின் உயிர்க்கு மாத்திரத்திற்கும் உளரல்லர் ஒருதலையாக, (எ-று).

*¶அவர் வலியராய்த் தம்மைக் $களைதல் ஒரு தலையாகலின், இறந்தாரே யாவரென்பதாம். ()அவருயிர்த்த துணையானே தாமிறப்பரெனினுமமையும். இதனாற் களையாவழிப்படு மிழுக்குக் கூறப்பட்டது.*

*தெளி:—(இ-ள்.) செயிர்ப்பவர்-(தம்மோடு) பகைப்பவரது, செம்மல்-தருக்கினை, (கெடுக்கலாயிருக்க இகழ்ச்சியால்), சிதைக்கலாதார்-(அது) செய்யாத அரசர், உயிர்ப்ப-(பின்) மூச்சுவிடுமாத்திரத்திற்கும், மன்ற-நிச்சயமாக, உளரல்லர்-இருக்கின்றவரல்லர், (எ-று).*

*அவர் வலியவராய்த் தம்மைக் களைதல் நிச்சயமாகலால், இறந்தாரே யாவரென்பதாம். உயிர்ப்ப வுளரல்ல ரென்பதற்கு அப்பகைவர் மூச்சுவிட்டவளவாலே தாமிறப்பரென்று பொருள் கூறினும் பொருந்தும். இதனால் பகையைக் களையாதவிடத் துண்டாகும் குற்றம் சொல்லப்பட்டது.*

*(க-து.) தம் பகைவரது செருக்கை யிகழ்ச்சியால் கெடுக்காத வரசர் அவரால் நிச்சயமாக விரைவிலழிவர் என்பது.*

10. Those (kings) who do not through sheer indifference, destroy the pride of those who hate them will certainly not exist even to breathe.

---

## இருபத்தாறுவது அதிகாரம்

### உட்பகை—Internal Enmity

பரி:— அஃதாவது ||புறப்பகைக்கு இடனாக்கிக் கொடுத்து + அது

---

* *தருக்கினை-கர்வத்தை. ‡ இகழ்ச்சியான்-அலட்சியபுத்தியால்.*

† *அது-தம்மோடு பகைப்பவரது தருக்கினைக் கெடுத்தல்.*

¶ *அவர்-பகைவர்.* $ *களைதல்-அழித்தல்.*

() *உயிர்ப்ப வுளரல்லர் என்பதற்கு உயிர்ப்ப-(அப்பகைவர்) மூச்சுவிட்ட வளவாலே, உளரல்லர் (தாம்) சாவரென்று பொருள் கூறினும் பொருந்தும். (மிக எளிதில் பகைவரா லழிவரென்பது இதன் திரண்டபொருளாம்).*

|| *புறப்பகைக்கு-வெளிப்படையாயுள்ளபகைக்கு.* + *அது-புறப்பகை.*

வெல்லுந் துணையும் *உள்ளாய் நிற்கும் பகை. †இதுவும் களையப்படு வதன் பாலதாகலின், பகைத்திறந் தெரிதலின்பின் வைக்கப்பட்டது.

தெளி:—அஃதாவது புறப்பகைக்கு இடமாக்கிக்கொடுத்து அது வெல்லுமளவும் உள்ளாய் நிற்கும் பகை. இதுவும் களையப்படும் பகையில் சேர்ந்ததாகலால், பகைத்திறந்தெரிதலின்பின் வைக்கப் பட்டது.

---

**க. நிழனீரு மின்னாத வின்னா தமர்நீரு**
**மின்னாவா மின்னா செயின்.**

பரி:—(இ-ள்.) ஒருவனுக்கு அனுபவிக்க வேண்டுவனவாய நிழலும் நீரும் முன் இனியவேனும் பின் நோய் செய்வன இன்னாவாம்; அதுபோலத் தழுவ வேண்டுவனவாய ‡தம ரியல்புகளும் முன் இனியவேனும் பின் இன்னாசெய்வன இன்னாவாம், (எ-று).

நோய் - ¶பெருங்கால் பெருவயிறு $முதலாயின. தமர் என்றத னால் உட்பகையாதற் குரியராய §ஞாதிய ரென்பதறிக. இன்னா செயல் - முன் வெளிப்படாமை நின்று துணைபெற்றவழிக் கெடுத்தல்.

தெளி:— (இ-ள்.) (ஒருவனுக்கு) நிழனீரும் - (அனுபவிக்கவேண்டு வன வாகிய) நிழலும் நீரும், இன்னாத - (முன்பு இன்பஞ் செய்வன வாயினும் பின்பு) நோய் செய்வன, இன்னா - இனியனவல்லவாம், (அதுபோல), தமர் நீரும் - (தழுவ வேண்டுவனவாகிய) சுற்றத்தா ரியல்புகளும், இன்னாசெயின் - (முன்பு இன்பஞ் செய்வனவாயினும் பின்பு) துன்பஞ் செய்வன, இன்னாவாம் - இனியனவல்லவாம், (எ-று).

நோய்-பெருங்கால் பெருவயிறு முதலாயின. தமர் என்றதனால் உட்பகையாதற் குரியவராய ஞாதிய ரென்பதறிக. இன்னாசெயல் - (ஞாதியர்) முன்வெளிப்படாதிருந்து துணைபெற்ற விடத்துக் கெடுத் தல். செயின் என்னும் வினையெச்சம் செய்வன என்று வினையாலணை யும் பெயர்ப்பொருளில் வந்தது.

(க-து.) உட்பகையாயுள்ள சுற்றத்தார் முன்பு இன்பஞ்செய்து பின்பு துன்பஞ் செய்யும் நீரும் நிழலும்போ லாவர் என்பது.

1. Shade and water, (though wholesome at first) are not pleasant if they cause disease; so are the characteristics of one's relations not agreeable if they cause pain.

---

**உ. வாள்போற் பகைவரை யஞ்சற்க வஞ்சுக**
**கேள்போற் பகைவர் தொடர்பு.**

---

* உள்ளாய் - நட்பாய். † இதுவும் - உட்பகையும்.

‡ தமரியல்புகளும் - சுற்றத்தாரது குணங்களும்.

¶ பெருங்கால் - யானைக்கால்; பெருவயிறு - மகோதரம்.

$ முதலாயின என்றமையின், குளிர்சுரம், குஷ்டம், குன்மம், கட்டி முதலியவற்றையுங் கொள்க. § ஞாதியர் - தாயத்தார் (பங்காளிகள்).

பரி:— (இ-ள்.) வாள்போல எறிது மென்று வெளிப்பட்டு நிற்கும் பகைவரை அஞ்சாதொழிக; அங்ஙனம் நில்லாது கேள்போல மறைந்து நிற்கும் பகைவர் நட்பினை அஞ்சுக, (எ-று).

முன்னே யறிந்து காக்கப்படுதலான் 'அஞ்சற்க' என்றும், அங்ஙனம் அறியவும் காக்கவும் படாமையிற் கெடுதல் ஒருதலை யென்பது பற்றி 'அஞ்சுக' என்றுங் கூறினர். பின்செய்யும் பகையினுங் கொடிதாகலானும் †காக்கலாகாதது ஆகலானும் அஞ்சப்படுவது முன்செய்த ¶அவர் தொடர்பாயிற்று. இவை யிரண்டு பாட்டானும் உட்பகை ஆகாதென்பது கூறப்பட்டது.

தெளி:— (இ-ள்.) வாள்போல் - வாளைப்போல, (வெட்டுவோமென்று வெளிப்பட்டு நிற்கும்), பகைவரை - பகைவர்க்கு, அஞ்சற்க - அஞ்சாதிருக்கக் கடவர், (அவ்வாறு நில்லாமல்), கேள்போல் - உறவினரைப்போல, (மறைந்து நிற்கும்), பகைவர்-பகைவரது, தொடர்பு-நட்பிற்கு, அஞ்சுக - அஞ்சக்கடவர், (எ-று).

(புறப்பகைவர்) முன்னே யறிந்து காக்கப்படுதலால் 'அஞ்சற்க' என்றும், அவ்வாறு (உட்பகைவரை) அறியவும் காக்கவுங் கூடாமையால் கெடுதல் நிச்சயமென்பதுபற்றி 'அஞ்சுக' என்றும் சொல்லினர். (உட்பகைவர் முன் செய்யும் நட்பு) பின் செய்யும் பகையினும் கொடிதாகலானும் காத்தல் முடியாதது ஆகலானும் அஞ்சப்படுவது முன் செய்த அவர் நட்பாயிற்று. இவை இரண்டு பாட்டாலும் உட்பகையாகாதென்பது சொல்லப்பட்டது.

(கூ-து.) உறவினர்போலுள்ள பகைவர்க்கு மிகவுமஞ்சுதல் வேண்டும் என்பது.

2. Fear not enemies (who come forward & say they would cut) like a sword; but fear the friendship of enemies who seemingly act like relations.

———

**ங. உட்பகை யஞ்சித்தற் காக்க வுலைவிடத்து**
**மட்பகையின் மாணத் தெறும்.**

பரி;— (இ-ள்.) உட்பகையாயினரை யஞ்சித் தன்னைக் காத்துக் கொண்டொழுகுக; அங்ஙன மொழுகாதவழித் தனக்கோர் தளர்ச்சிவந்த விடத்துக் குயவன் மட்கலத்தை யறுக்குங் கருவிபோல $அவர் தப்பாமற் கெடுப்பர், (எ-று).

காத்தல் - *அவரணையாமலும் அவர்க் குடம்படாமலும் பரி

† காக்குங்கால மதுவாகலானும் என்றும் பாடமுண்டு.

¶ அவர் - கேள்போல மறைந்து நிற்கும் பகைவர்.

$ அவர் - உட்பகையாயினர்.

* உட்பகையாயினர் தன்னிடத்துச் சேராமலும் அப்பகைவரது செயல்களுக்கு உடன்படாமலும் (அவரை) விலக்குதல்.

கரித்தல். †மண்ணைப் பகுக்குங் கருவி மட்பகையெனப்பட்டது. பகைமை தோன்றாமல் ‡உள்ளாயிருந்தே ¶கீழறுத்தலின் கெடுதல்-தப்பாதென்பதாம்.

தெளி:—(இ-ள்.) உட்பகை-உட்பகையாயினார்க்கு, அஞ்சி-பயந்து, தற்காக்க-தன்னைக்காத்துக்கொண்டு நடக்கக்கடவன், (அவ்வாறு நடவாதவிடத்து), உலைவிடத்து-(தனக்கு ஒரு) தளர்ச்சிவந்தவிடத்து, மட்பகையின்-(குயவன்)மட்கலத்தை அறுக்கும் ஆயுதம்போல, மாண-தப்பாமல், தெறும்-(அவர்) கெடுப்பர், (எ-று).

காத்தல்-அவரணையாமலும் அவர்க்கு உடன்படாமலும் பரிகரித்தல். மண்ணைப் பிரிக்குங் கருவி மட்பகை எனப்பட்டது. (உட்பகையாயினார்) பகைமை தோன்றாமல் உள்ளாயிருந்தே கீழறுத்தலால், கெடுதல் தப்பாதென்பதாம்.

(க-து.) உட்பகையாயினார் சமயமறிந்து கெடுத்தலால், அரசன் அவர்க்கஞ்சித் தன்னைப் பாதுகாத்துக்கொண் டொழுகுதல்வேண்டும் என்பது.

3. Fear internal enmity and guard yourself; if not, it will destroy you in an evil hour as surely as the tool which cuts the potter's clay.

---

ச. மனமாணா வுட்பகை தோன்றி னினமாணா
வேதம் பலவுந் தரும்.

பரி:—(இ-ள்.) $புறந்திருந்தியது போன்று அகந்திருந்தாத உட்பகை அரசனுக்கு உண்டாவதாயின், *அஃது ()அவனுக்குச் சுற்றம் வயமாகாமைக் கேதுவாகிய குற்றம் பலவற்றையும் கொடுக்கும், (எ-று).

††அவை - சுற்றத்தாரை உள்ளாய் நின்று வேறுபடுத்தலும், §§அதனால் $$அவர் வேறுபட்டவழித் **தான் தேறாமையும், பின் 0அவற்றான் விளைவனவுமாம்,

---

† மண்ணைப்பகுக்குங்கருவியைக் குலாலர் ஊசி யென்பர். இது குலாலர் மண்ணி னின்றுங் கடமுதலியவற்றை யுண்டுபண்ணுமிடத்துத்தான் உடனிருந்துதவி முடிவில் அவற்றைப் பிரித்துவிடுவதற் கேதுவாயிருப்பதொருகருவியாம். ‡ உள்ளாயிருந்தே-நட்பாயிருந்தே.

¶ கீழறுத்தலின்-புறப்பகைக்கு இடமாக்கிக் கொடுத்துவருதலால்,

$ புறந்திருந்தியது போன்று அகந்திருந்தாத - வெளியில் நட்பிருப்பது போற்காட்டி மனத்தில் நட்புக்கொள்ளாத. * அஃது-உட்பகை.

() அவனுக்கு - அரசனுக்கு. †† அவை - பலகுற்றங்கள்.

§§ அதனால் - வேறுபடுத்தலால் (ஒற்றுமையைக் கெடுத்தலால்).

$$ அவர் - சுற்றத்தார்.

** தான் தேறாமையும்-அரசனாகிய தான் சுற்றத்தாரை நம்பாமையும்.

0 அவற்றான் விளைவனவுமாம் - வேறுபடுத்தலாலும் தான் தேறாமையாலும் உண்டாகுந் தீமைகளுமாம்.

தெளி:—(இ-ள்.) மனமாணு - (புறந்திருந்தியது போன்று) அகந் திருந்தாத, உட்பகை, - தோன்றின்-(அரசனுக்கு) உண்டாவதானால், (அஃது அவனுக்கு), இனமாணு-சுற்றம் வசமாகாமைக்குக் காரணமாகிய, ஏதம்பலவும்-குற்றம்பலவற்றையும், தரும்-கொடுக்கும், (எ-று)

அவை-சுற்றத்தாரை உள்ளாய்நின்று வேறுபடுத்தலும், அதனால் அவர் வேறுபட்டவிடத்துத்தான் தேருமையும் பின் அவற்றால் விளைவனவுமாம்.

(க-து.) உட்பகையுள்ள வரசன் பலகுற்றங்களுக் காளாவன் என்பது.

4. The secret enmity of a person of unreformed mind will lead to many evils causing disaffection in the king's household.

---

## ரு. உறன்முறையா னுட்பகை தோன்றி னிறன்முறையா னேதம் பலவுந் தரும்.

**பரி:— (இ-ள்.) புறத்து *உறவுமுறைத் தன்மையோடு கூடிய உட்பகை அரசனுக்கு உண்டாவதாயின் £அஃது அவனுக்கு இறத்தன் முறையோடு கூடிய குற்றம் பலவற்றையுங் கொடுக்கும், (எ-று).**

‡அவை - புறப்பகைத் துணையாய் நின்றே ¶அது தோன்றுமற் கோறன் §முதலிய வஞ்சனை செய்தலும், அமைச்சர் 0முதலிய உறுப்புக்களைத் ||தேய்த்தலும் ()முதலாயின.

தெளி:— (இ-ள்.) உறன்முறையான்-(புறத்தில்) உறவுமுறைத் தன்மையோடு, (கூடிய), உட்பகை - தோன்றின் - (அரசனுக்கு) உண்டாவதானால், (அஃது அவனுக்கு), இறன் முறையான் - இறத்தல் முறையோடு, (கூடிய), ஏதம்பலவும் - குற்றம் பலவற்றையும், தரும் - கொடுக்கும், (எ-று).

---

* உறவுமுறைத் தன்மை - பந்துத்துவம்.

£ அஃது - உட்பகை ; அவனுக்கு - அரசனுக்கு. ‡ அவை - பல குற்றங்கள்.

¶ அது - புறப்பகைக்குத் துணையா யிருத்தல்.

§ முதலிய என்றமையின், பகைவர்க்கு அடிமையாகச் செய்தல், தனியனுக்கி ஓடச்செய்தல் முதலியவற்றையுங் கொள்க.

0 முதலிய என்றமையின், நாடு, அரண், பொருள், படை, நட்புக்களையுங் கொள்க.

|| தேய்த்தல் - நாளுக்கு நாள் தம்மளவிற் குறைதற்குரிய காரியங்களைச் செய்தல்.

() முதலாயின என்றமையின், அரசனது சோர்வையும், அவனை வெல்லுங்காலத்தையும், அதற்குரிய இடத்தையும் பகைவர்க்குத் தெரிவித்தல் முதலியவற்றையுங் கொள்க.

அவை—புறப்பகைக்குத் துணையாய்நின்றே அது தோன்றுமல் கொல்லுதல் முதலிய வஞ்சனை செய்தலும், மந்திரிகள் முதலிய அங்கங்களைத் தேய்த்தலும் முதலாயின.

(கூ-து.) உறவுமுறைத் தன்மையோடு கூடிய உட்பகையினை யுடைய அரசன் பல குற்றங்களையு மடைந்தழிவான் என்பது.

5. The appearance of internal hatred in a king's family will lead to many a fatal crime.

---

சு. ஒன்றுமை யொன்றியார் கட்படி னெஞ்ஞான்றும்
பொன்றுமை யொன்ற லரிது.

பரி:—(இ-ள்.) பகைமை தனக்குள்ளாயினுர் மாட்டே பிறக்குமாயின், அரசனுக்கு இறவாமை கூடுதல் எஞ்ஞான்று மரிது, (எ-று).

பொருள் படை *முதலிய உறுப்புக்களாற் பெரியனுய காலத்து மென்பார் 'எஞ்ஞான்றும்' என்றுர். இவை நான்கு பாட்டானும் †அதனுற் றனக்கு வருந்தீங்கு கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) ஒன்றுமை-பகைமை, ஒன்றியார்கண்-(தனக்கு) உள்ளாயினுரிடத்தே, படின்-உண்டாகுமாயின், பொன்றுமை-(அரச னுக்கு) இறவாமை, ஒன்றல்-கூடுதல், எஞ்ஞான்றும்-எந்நாளும், அரிது-முடியாது, (எ-று).

பொருள் படை முதலிய உறுப்புக்களால் பெரியனுகிய காலத்து மென்பார் 'எஞ்ஞான்றும்' என்றுர். இவை நான்குபாட்டாலும் அதனுல் தனக்கு வருந் தீங்கு சொல்லப்பட்டது. இறவாமை-சாவாமை.

(கூ-து.) அரசனுக்குத் தனக்குள்ளாயினுரிடத்து உட்பகை யுண்டாமாயின், அவன் பிழைத்திருப்பதரிதாம் என்பது.

6. If enmity arises among the king's relations, it will be impossible for him to escape death.

---

எ. செப்பின் புணர்ச்சிபோற் கூடினுங் கூடாதே
யுட்பகை யுற்ற குடி.

பரி:—(இ-ள்.) செபபினது புணர்ச்சிபோலப் புறத்து வேற்றுமை தெரியாமற் கூடினுராயினும், உட்பகை உண்டாய குடியிலுள்ளார் அகத்துத் தம்முட் கூடார், (எ-று).

செப்பின் புணர்ச்சி-‡செப்பு மூடியோடு புணர்ந்த ¶புணர்ச்சி. உட்பகையான் மனம் வேறுபட்டமையிற் புறப்பகை பெற்றுழி வீற்று

* முதலிய என்றமையின், அரண், நட்பு முதலியவற்றையுங் கொள்க.

† அதனுல்-உட்பகையால்.

‡ செப்பு-சிமிழ். ¶ புணர்ச்சி—சேர்க்கை.

வீற்றுவரென்பதாம். *குடி கூடாதென்பதனை நாடு வந்ததென்பது போலக் கொள்க. †உட்பகை-, தானுற்ற குடியோடு கூடாதென்றும், உட்பகையுண்டாயகுடி, அப்பகையோடு கூடாதென்றும் உரைப்பாருமுளர்.

தெளி:—(இ-ள்.) செப்பின்-செப்பினது, புணர்ச்சிபோல்-புணர்ச்சியைப்போல, கூடினும்-(புறத்துவேற்றுமை தெரியாமற்) கூடினராயினும், உட்பகை-, உற்ற உண்டாகிய, குடி-குடியிலுள்ளார், கூடாது-(அகத்துத் தம்முள்) கூடார், (எ-று).

செப்பின் புணர்ச்சி-செப்பு மேல்மூடியோடு புணர்ந்த புணர்ச்சி. அவர் உட்பகையால் மனம் வேறுபட்டமையால் புறப்பகை பெற்றவிடத்து வேறுவே றுவரென்பதாம். ஏ-அசை.

(கூ-து.) உட்பகையுண்டாகிய குடியிலுள்ளவர் புறத்து வேற்றுமை தெரியாமற் கூடினவராயிருந்தாலும், அகத்துத் தம்முள் கூடார் என்பது.

7. A family subject to internal hatred will never really unite though it may present an apparent union like that of a casket and its lid.

---

அ. அரம்‡பொருத ¶பொன்போலத் தேயு முரம்பொரு
துட்பகை யுற்ற குடி.

பரி:—(இ-ள்.) முன் வளர்ந்து வந்ததாயினும் உட்பகையுண்டாய குடி அரத்தாற் பொரப்பட்ட இரும்புபோல §அதனாற் பொரப்பட்டு வலி தேயும், (எ-று).

---

* நாடு வந்தது என்றவிடத்து நாடு என்பது இடவாகு பெயராய் நாட்டிலுள்ளார்க் காயதுபோல, குடி கூடாது என்றவிடத்துக் குடியென்பது இடவாகுபெயராய்க் குடியிலுள்ளார்க் காயதென்க.

† உட்பகையுற்ற குடி கூடாது என்பதற்கு உட்பகை யுடையான் தானிருக்கிற குடியிலுள்ளாரோடு கூடான் என்றும், உட்பகை யுண்டாகிய குடியிலுள்ளார் அவ்வுட்பகை யுள்ளாரோடு கூடாரென்றும் பொருளுரைப்பாரு முண்டென்பது.

‡ பொருத பொருது என்பன செயப்பாட்டு வினைப்பொருளில் வந்த செய்வினைகள். பொருத-உடன்பாட்டிறந்தகாலப் பெயரெச்சம்; பொருது-உடன்பாட்டிறந்தகால வினையெச்சம்.

¶ இரும்பிற்கும் பொன் என்னும் பெயரிருத்தலால், அதனைப் பொன் என்று கூறினர். "பொன்னென்ப வனப்பிரும்பு பூமகள் வியாழ நாற்பேர்" என்பது நிகண்டு.

§ அதனாற் பொரப்பட்டு-உட்பகையால் கெடுக்கப்பட்டு.

பொருதென்னுஞ் செயப்பாட்டுவினையெச்சம் தேயுமென்னும் வினைகொண்டது. *அஃது உரத்தின் றொழிலாயினுங் குடிமே லேற்றுதலின், வினைமுதல் வினையாயிற்று. காரியஞ் செய்வதுபோன்று பொருந்தி மெல்லமெல்லப் பிரிவித்தலான், வலி தேய்ந்துவிடு மென்பதாம். இவை யிரண்டு பாட்டானும் †அவன் குடிக்கு வருந் தீங்கு கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) (முன்னேவளர்ந்து வந்ததாயினும்) உட்பகையுற்ற குடி-உட்பகையுண்டாகியகுடி, அரம்பொருத-அரத்தினால் பொரப்பட்ட, பொன்போல-இரும்புபோல, பொருது- (அதனால்) பொரப்பட்டு, உரம்-வலி, தேயும்-குறையும், (எ-று).

செயப்பாட்டுவினைப்பொருளில் வந்த பொருது என்னும் வினையெச்சம் தேயும் என்னும் வினைகொண்டு முடிந்தது. அஃது (தேய்தல்) உரத்ினது தொழிலாயினும் (குடிதேயும் எனக்)குடிமேலேற்றிக் கூறுதலால், குடியென்னும் வினைமுதலின் வினையாயிற்று. உட்பகையாயுள்ளவர் காரியஞ் செய்வதுபோன்று பொருந்தி மெல்லமெல்லக் குடியிலுள்ளாரைப் பிரியச்செய்தலால், குடிவலி தேய்ந்து விடுமென்பதாம். இவை இரண்டுபாட்டாலும் அவன் குடிக்குவரும் தீங்கு சொல்லப்பட்டது. அரம்-வாள் வகையில் ஒன்று; பொரப்பட்ட-அராவப்பட்ட; பொரப்பட்டு-கீழறுக்கப்பட்டு.

(க-து.) உட்பகையுள்ளகுடி அரத்தினால் தேய்க்கப்பட்ட இரும்புபோல வலிகுறைந்தொழியும் என்பது.

8. A family with internal dissensions will disintegrate and lose its strength like iron that has been filed away.

—0—

**௯. எட்பக வன்ன சிறுமைத்தே யாயினு
முட்பகை யுள்ளதாங் கேடு.**

**பரி :—(இ-ள்.) அரசனது உட்பகை ‡அவன் பெண்மையை நோக்க எள்ளின்பிளவை யொத்த சிறுமையுடைத்தே யாயினும், ¶பெருமையெல்லாம் அழியவருங்கேடு $அதனகத்ததாம், (எ-று).**

---

* அஃது (தேயும் என்னும் வினை) உரத்தின் (வலியின்) தொழிலாயிருந்தாலும் (குடிதேயும் என்று தேய்தற்றொழிலை) குடியின் மேலேற்றிக் கூறுதலால், (அது) குடியென்னும் வினைமுதலின் (எழுவாயின்) வினையாயிற்றென்க. குடி உரம் தேயும் என்பது மாடு கோடு கூரிது ; கிணறு நீரூறிற்று என்பனபோல வந்ததென்க.

† அவன் - உட்பகையுடையான்.

‡ அவன் - உட்பகையையுடைய வவ்வரசனது.

¶ பெருமையெல்லாம் - அவ்வரசனது பெருமையெல்லாம்.

$ அதனகத்ததாம் - அவ்வுட்பகையினிடத்ததாம்.

எத்துணையும் பெரிதாயகேடு தனக் கெல்லைவருந்துணையும் எத்துணையுஞ் சிறிதாய உட்பகையுள்ளே யடங்கியிருந்து, வந்தால் வெளிப்பட்டு நிற்குமென்பதாம். இதனால் *அது சிறிதென்று இகழப் படாதென்பது கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) உட்பகை-(அரசனது) உட்பகை, (அவன் பெருமையை நோக்க), எட்பகவன்ன-எள்ளின் பிளவையொத்த,சிறுமைத் தேயாயினும்-சிறுமையுடையதே யாயினும். கேடு-(பெருமையெல்லாம் அழியவரும்) கேடு, உள்ளதாம்-(அதன்) அகத்ததாம், (எ-று).

மிகவும் பெரிதாயகேடு தனக்கு எல்லைவருமளவும் மிகவுஞ் சிறிதாய உட்பகை யுள்ளே அடங்கியிருந்து, (தனக்கெல்லை) வந்தால் வெளிப்பட்டு நிற்குமென்பதாம். இதனால் அதுசிறிதென்று இகழப் படாதென்பது சொல்லப்பட்டது. எல்லை-காலம்.

(க-து.) உட்பகை சிறிதாயிருந்தாலும், அதனாலுண்டாகுங்கேடு பெரிதாமென்பது.

9. Though internal enmity be as small as the part of the sesamum seed, still does destruction dwell in it.

—0—

கO. உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருட்
பாம்போ டுடனுறைந் தற்று.

பரி :—(இ-ள்.) மனப்பொருத்த மில்லாதாரோடுகூட ஒருவன் வாழும் வாழ்க்கை ஒருகுடிலுள்ளே பாம்போடுகூட உறைந்தாற்போலும், (எ-று).

குடங்கமென்னும் வடசொற்றிரிந்து நின்றது. இடச்சிறுமையானும் பயிற்சியானும் பாம்பாற் கோட்படல் ஒருதலையாம்; ஆகவே †அவ்வுவமையால் ‡அவனுயிர்க்கு இறுதி வருதல் ஒரு தலையென்பது பெற்றும். இதனாற் ¶கண்ணோடாது அவரைக் கடிகவென்பது கூறப் பட்டது.

தெளி:-(இ-ள்.) உடம்பாடிலாதவர் - மனப்பொருத்த மில்லாதாரோடுகூட, வாழ்க்கை-(ஒருவன் வாழும்) வாழ்வு, குடங்கருள்-ஒரு குடிசையினுள்ளே, பாம்போடுடன்-பாம்போடுகூட, உறைந்தற்று - வாழ்ந்தாற் போலும், (எ-று).

குடங்கம்என்னும் வடசொல் குடங்கர்எனத்திரிந்து நின்றது. இடச் சிறுமையாலும் பழக்கத்தாலும் பாம்பால்கடிக்கப்படுதல் நிச்சயமாம்;

---

*அது - உட்பகை. † அவ்வுவமையால் - குடங்கருட் பாம்போ டுடனுறைந் தற்று என்னும் உவமானத்தினால்.

‡அவனுயிர்க்கு-மனப்பொருத்தமில்லாதாரோடுகூட வாழுகின்றவனுயிர்க்கு.

¶கண்ணோடாது அவரைக் கடிக-தாட்சண்யஞ் செய்யாது மனப் பொருத்தமில்லாதவரை விலக்கவேண்டும்.

ஆகவே, அவ்வுவமானத்தால் அவனுயிர்க்கு முடிவுவருதல் நிச்சயமென்பது பெற்றும். இதனுல் கண்ணேட்டஞ்செய்யாது அவரைக் கடியக்கடவனென்பது சொல்லப்பட்டது.

(க-து.) மனப்பொருத்தமில்லாதவரோடுகூடி வாழ்பவன் தவருது கெடுவான் என்பது.

10. Living with those who are not agreeable with one is like dwelling with a cobra in the same hut.

---

## இருபத்தேழாவது அதிகாரம்

### பெரியாரைப் பிழையாமை

### Against disregard for the great

பரி:—அஃதாவது பெரியராயினுரை அவமதித்து ஒழுகாமை. *இரட்டுற மொழிதலென்பதனுற் பெரியாரென்பது ஆற்றலாற் பெரியராய வேந்தர் மேலும், தவத்தாற் பெரியராய முனிவர் மேலும் நின்றது. மேற்சொல்லாது எஞ்சிநின்றதாகலின், †இது ‡வெகுளியான் வருவன வற்ற திறுதிக்கண் வைக்கப்பட்டது.

தெளி:—அஃதாவது பெரியராயினுரை அவமதித்து நடவாமை. இரட்டுற மொழிதலென்னும் உத்தியால் பெரியரென்பது வலிமையால் பெரியராகிய வேந்தர்மேலும், தவத்தால் பெரியராகிய முனிவர் மேலும் நின்றது. மேற்சொல்லாமல் குறைந்து நின்றதாகலால், இது வெகுளியால் வருவனவற்றின் முடிவில் வைக்கப்பட்டது.

---

க. ஆற்றுவா ராற்ற லிகழாமை போற் றுவார்
போற்றலு ளெல்லாந் தலை.

பரி :—(இ-ள்.) எடுத்துக்கொண்டன யாவும் முடிக்க வல்லாருடைய ஆற்றல்களை அவமதியாமை, தங்கட் டீங்குவாராமற் காப்பார் செய்யுங் காவல்க ளெல்லாவற்றினும் மிக்கது, (எ-று).

ஆற்றலென்பது பெருமை, அறிவு, முயற்சியென்னும் மூன்றன்மேலும் நிற்றலிற் ¶சாதியொருமை. இகழ்ந்தவழிக் $களைய வல்லா

---

* இரட்டுறமொழிதல்-ஒருவாக்கியத்தை யிரண்டு பொருள்படச் சொல்லுதல். இங்குப் பெரியார் என்பது ஆற்றலாற் பெரியராய அரசரையும் தவத்தாற் பெரியராய முனிவரையும் உணர்த்தி நின்ற வாறறிக.

† இது-பெரியாரைப் பிழையாமை. ‡ வெகுளியான்–கோபத்தால்.

¶ சாதியொருமைப்பெயர் என்றும் பாடமுண்டு.

$ களையவல்லார்-(இகழ்ந்தவரை) அழிக்கவல்லவர்.

ரென்பது தோன்ற 'ஆற்றுவார்' என்றும், அரண், படை, பொருள், நட்பு 0முதலிய பிறகாவல்கள் *அவரா னழியுமாகலின் அவ்விகழா மையைத் †'தலை' என்றுங் கூறினர். பொதுவகையால் ‡அவ்விரு-திறத்தாரையும் ¶பிழையாமையது சிறப்பு இதனாற் கூறப்பட்டது.

தெளி :- (இ-ள்.) ஆற்றுவார்-'எடுத்துக்கொண்ட காரியங்கள் யாவும்) முடிக்க வல்லாருடைய, ஆற்றல்-வல்லமைகளை, இகழாமை-அவமதியாமை, போற்றுவார்-(தம்மிடத்துத் தீங்குவாராமற்) காப்பவர், (செய்யும்), போற்றலுளெல்லாம்-காவல்களெல்லாவற்றினும், தலை-மிகுந்தது, (எ-று).

ஆற்றலென்பது பெருமை, அறிவு, முயற்சி என்னும் மூன்றன் மேலும் நிற்றலால் சாதி யொருமைப்பெயர். இகழ்ந்தவிடத்துக் களைய வல்லாரென்பதுதோன்ற 'ஆற்றுவார்' என்றும், அரண், படை, பொருள், நட்பு முதலிய மற்றைக்காவல்கள் அவரால் அழியுமாகலால் அவ்விகழாமையைத் 'தலை' என்றும் சொல்லினர். பொது வகையால் அவ்விருதிறத்துப் பெரியார்க்கும் பிழைசெய்யாமையது சிறப்பு இதனாற் சொல்லப்பட்டது.

(க-து.) தம்மைக்காக்குமாறு விரும்புவோர் எடுத்துக் கொண்ட காரியங்களெல்லாவற்றையும் தவறின்றி முடிக்கவல்ல ஆற்றலுள்ள வரை இகழாதிருத்தல் வேண்டும் என்பது.

1. Not to disregard the power of those who can carry out their intentions is more important than all the watchfulness of those who guard themselves against evil.

---

உ. **பெரியாரைப் பேணு தொழுகிற் பெரியாராற்**
**பேரா விடும்பை தரும்.**

பரி :—(இ-ள் ) ஆற்றல்களாற் பெரியராயினரை வேந்தர் நன்கு மதியாது அவமதித்து ஒழுகுவாராயின், அவ்வொழுக்கம் அப்பெரியாரால் அவர்க்கு எஞ்ஞான்றும் நீங்காத துன்பங்களைக் கொடுக்கும், (எ-று).

அத்துன்பங்களாவன: $இருமையினும் ||இடையறுது வரும் ()மூவகைத்' துன்பங்களுமாம். அவை யெல்லாந் தாமே செய்து

0 முதலிய என்றமையின், அமைச்சர், புரோகிதர் முதலா யினேரையுங் கொள்க.

* அவரான்-பெருமை, அறிவு, முயற்சி யென்னும் ஆற்றலுடைய வரால். † தலையாயகாவல் என்றும் பாடமுண்டு.

‡ அவ்விருதிறத்தார்-ஆற்றலாற் பெரியராய வேந்தர், தவத்தாற் பெரியராய முனிவர். ¶ பிழையாமையது-தவறு செய்யாமையின்.

$ இருமையினும்-இப்பிறப்பிலும் வருபிறப்பிலும்.

|| இடையறுது-நடுவே நீங்காது.

() மூவகைத் துன்பங்கள்-தன்னைப்பற்றி வருவனவும், பிறவுயிர்களைப் பற்றி வருவனவும், தெய்வத்தைப்பற்றி வருவனவு மாகிய மூவகைப் பிறவித்துன்பங்கள்.

கொள்கின்றனரென்பது தோன்ற, *ஒழுக்கத்தை வினைமுதலாக்கியும் பெரியாரைக் கருவியாக்கியுங் கூறினார். பொதுவகையால் †அவரைப் பிழைத்தற்குற்றம் இதனாற் கூறப்பட்டது; இனிச் சிறப்பு வகையாற் கூறுப.

தெளி:—(இ-ள்.) (வேந்தர்) பெரியாரை - (பெருமை, அறிவு முயற்சி என்னும்) ஆற்றல்களாற் பெரியராயினாரை, பேணாது - நன்கு மதியாமல், (அவமதித்து), ஒழுகின்-ஒழுகுவாராயின், (அவ்வொழுக்கமானது), பெரியாரால்-அப்பெரியவரால், பேரா விடும்பை, (எந்நாளும்) நீங்காத துன்பங்களை, தரும்-(அவ்வேந்தர்க்குக்) கொடுக்கும், (எ-று).

அத்துன்பங்களாவன: இருமையிலும் இடையறாது வரும் மூவகைத் துன்பங்களுமாம். (வேந்தர்) அத்துன்பங்களை யெல்லாம் தாமே செய்துகொள்ளுகின்றன ரென்பது தோன்ற, (அவ்வொழுக்கமானது என) ஒழுக்கத்தை வினைமுதலாக்கியும் (அப்பெரியவரால் என) பெரியாரைக் கருவியாக்கியும் சொல்லினார். பொதுவகையால் அவர்க்குப் பிழை செய்தற்குற்றம் இதனாற் சொல்லப்பட்டது - இனிச் சிறப்பு வகையாற் சொல்லுவர்.

(க-து.) அரசர் ஆற்றல்களாற் பெரியராயினாரை அவமதித்து நடப்பாராயின், அஃது அவர்க்கு அப்பெரியாரால் எப்பொழுதும் நீங்காத துன்பத்தைக் கொடுக்கும் என்பது.

2. If the king behaves without respect for the great, irremediable evils will befall him.

---

ங. **கெடல்வேண்டிற் கேளாது செய்க வடல்வேண்டி**
**னாற்று பவர்க ணிழுக்கு.**

பரி.—(இ-ள்.) வேற்று வேந்தரைக் **கோறல் வேண்டியவழி** ‡அதனை அப்பொழுதே செய்யவல்ல வேந்தர்மாட்டுப் பிழையினைத் தான் கெடுதல் வேண்டினானாயின், ஒருவன் நீதிநூலைக் கடந்து செய்க, (எ-று).

அப்பெரியாரைக் §''காலனுங் காலம் பார்க்கும் பாராது,

---

* ஒழுகின் என்னும் வினையெச்சத்தி னின்றும் பிரிந்த அவ்-வொழுக்கம் என்பதை எழுவாயாக்கியும், பெரியாரைப் பெரியாரால் என்று துணைக்கருவியாக்கியும், (அவ்வொழுக்கம்) 'பெரியாராற் பேரா விடும்பை தரும்' என்று கூறினார். † அவரை-பெரியாரை.

‡ அதனை - வேற்று வேந்தரை (பகையரசரை)க் கொல்லுதலை.

§ புறநானூறு-41. இதன் பொருள். யமனும் தன்னால் உயிர் கொள்ளலாங்காலம் வருமளவும் பார்ப்பான்; அவ்வாறு காலம் பாராமல் வேற்படை நெருங்கிய சேனையினையுடைய சிறந்த அரசர்கள் சாகும்படி வேண்டிய விடத்துக் கொல்லும் வெல்லும் போரையுடைய அரசனே என்பது.

வேலீண்டு தானை விழுமியோர் தொலைய, வேண்டிடத் தடூஉம் வெல்போர் வேந்தே'' என்றார் பிறரும். நீதிநூல் செயலாகா-தென்று கூறலின் 'கேளாது' என்றார்.

தெளி —(இ-ள்.) அடல்வேண்டின்-(வேற்று வேந்தரைக்) கொல்லுதல் வேண்டிய விடத்து, ஆற்றுபவர்கண்-(அதனை அப்பொழுதே) செய்யவல்ல வேந்தரிடத்து, இழுக்கு-பிழையினை, கெடல் வேண்டின்-(தான்) கெடுதல் வேண்டினானாயின், கேளாது, (நீதிநூல் கூறுவதைக்) கடந்து, செய்க-(ஒருவன்) செய்யக்கடவன் (எ-று).

நீதிநூல் (அடல்வேண்டின் ஆற்றுபவர்கணிழுக்கு) செயலாகா தென்று சொல்லுதலால் 'கேளாது' என்றார்.

(க-து.) தான் கெடவிரும்புகின்றவன் பகைவரை நினைத்த பொழுதே அழிக்கும் வல்லமையுள்ள வேந்தரிடத்துப் பிழைசெய்யக் கடவன் என்பது.

3. If a king desires ruin, let him not listen to the righteous dictates of law, but commit crimes against those who are able to kill.

---

## ச. கூற்றத்தைக் கையால் விளித்தற்றா லாற்றுவார்க் காற்றுதா ரின்னா செயல்.

பரி:-(இ-ள்.) மூவகையாற்றலு முடையார்க்கு அவை யில்லாதார் தாம் முற்பட்டு *இன்னாதவற்றைச் செய்தல் தானேயும் வரற்பாலனாய †கூற்றுவனை அதற்குமுன்னே கைகாட்டி அழைத்தாலொக்கும், (எ-று).

‡கையால் விளித்தல் இகழ்ச்சிக் குறிப்பிற்று தாமேயும் உயிர் ¶முதலிய கோடற் குரியாரை அதற்குமுன்னே விரைந்து தம்மேல் வருவித்துக் கொள்வார் இறப்பினது $உண்மையும் அண்மையுங் கூறியவாறு. இவை இரண்டு பாட்டானும் வேந்தரைப் பிழைத்-தலின் குற்றங் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) ஆற்றுவார்க்கு - (பெருமை, அறிவு, முயற்சி யென்னும்) மூவகையாற்றலு முடையார்க்கு, ஆற்றுதார் - அவ்வாற்-றல்களில்லாதவர், (தாம்முற்பட்டு), இன்னா - இன்னாத செயல்களை,

---

* இன்னாதவற்றை-துன்பந்தருஞ்செயல்களை.

† கூற்றுவனை-யமனை.

‡ ஒருவன் யமனை (அவன் வருவதற்குமுன்னே) கைகாட்டி வா வென்றழைத்தல் அவனிடத்துத் தனக்குள்ள இகழ்ச்சி (இழிவு) பற்றி யாகலின், 'கையால் விளித்தல் இகழ்ச்சிக் குறிப்பிற்று' என்று கூறப்பட்டது.

¶ முதலிய என்றமையின், இடம், பொருள், ஏவல் முதலிய-வற்றையுங் கொள்க.

$ உண்மையும் அண்மையும்-தவறாமையும், நெருக்கமும்.

செயல்-செய்தல், கூற்றத்தை- (தானேயும் வருந் தன்மையனுகிய) கூற்றுவனை, கையால்- (அதற்குமுன்னே) கைகாட்டி, விளித்தற்று- அழைத்தாலொக்கும், (எ-று).

ஆல்-அசை. கையாலழைத்தல் இகழ்ச்சிக்குறிப்பினது. தாமேயும் உயிர் முதலியவற்றைக் கொள்ளுதற் குரியவரை அதற்கு முன்னே விரைந்து தம்மேல் வருவித்துக் கொள்வாரது மரணத்தினது உண்மையும் சமீபமும் சொல்லியவாறும். இவையிரண்டு பாட்டாலும் வேந்தர்க்குப் பிழை செய்தலின் குற்றம் சொல்லப்பட்டது.

(க·து.) ஆற்றலுள்ள அரசர்க்கு அஃதில்லாத வரசர் முற்பட்டுப் பிழை செய்தல் யமனைக் கைகாட்டி அழைப்பது போலவாம்.

4. The weak doing evil to the strong is like beckoning Yama to come and destroy them.

---

**ரு. யாண்டுச்சென் றியாண்டு முளராகார் வெந்துப்பின் வேந்து செறப்பட் டவர்.**

பரி: —(இ-ள்.)பகைவர்க்கு *வெய்தாய வலியினையுடைய வேந்தனுற் செறப்பட்ட அரசர் அவனைத் தப்பி எங்கேபோ யுளராவர்; ஒரிடத்தும் உளராகார், (எ-று).

†இடைவந்த சொற்கள் அவாய்நிலையான் வந்தன. வெந்துப்பின் வேந்தாகலாற் றந்நிலம் விட்டுப்போயவர்க்கு இடங்கொடுப்பாரில்லை; ‡உளராயின் ¶இவர் இனி யாகாரென்பது நோக்கி $அவனோடு நட்புக்கோடற் பொருட்டும் தாமே வந்தெய்திய ||அவருடைமையை வெளவுதற்பொருட்டுங் கொல்வர்; £அன்றெனின் உடனே §யழிவ-

---

* வெய்தாயவலி–மிகு வுக்கிரமாய சாமர்த்தியம்.

† யாண்டுச் சென்று என்பது அவனைத் தப்பி என்பதையும் உளராவர் என்பதையும் அவாவி (வேண்டி) நின்றது.

‡ உளராயின்–இடங் கொடுப்பவ ருண்டாஞல்.

¶ இவர்–வெந்துப்பின் வேந்தால் செறப்பட்ட இவர்.

$ அவனோடு-வெந்துப்பின் வேந்தனோடு.

|| அவருடைமையை – வெந்துப்பின் வேந்தால் செறப்பட்டவருடைய பொருளை.

£ அன்றெனின்-வெந்துப்பின் வேந்தாற்செறப்பட்ட அரசரை அவர்க்கிடங்கொடுத்தவர் கொல்லாது விடுவராயின்.

§ அழிவர்-(வெந்துப்பின் வேந்தனல் கோபிக்கப்பட்டவர்) சாவர்.

ரென்பன நோக்கி 'யாண்டுச் சென் றியாண்டு முளராகார்' என்றார். இதனால் *அக்குற்றமுடையார் †அருமையுடைய அரண் சேர்ந்தும் உய்யா ரென்பது கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) வெந்துப்பின் - (பகைவர்க்கு) வெய்தாகிய வலியினை யுடைய, வேந்து-வேந்தனால், செறப்பட்டவர்-கோபிக்கப் பட்ட அரசர், யாண்டுச்சென்று-(அவனைத் தப்பி) எங்கேபோய், (உளராவர்), யாண்டும்-ஓரிடத்தும், உளராகார்-, (எ-று).

(அவனைத்தப்பி, உளராவர் என) இடையில் வந்த சொற்கள் அவாய் நிலையால் வந்தன. வெய்தாகிய வலியினையுடைய அரசனுக- லால் தமது நிலம்விட்டுப் போனவரசர்க்கு இடங் கொடுப்பாரில்லை; உளரானால் இவர் இனி ஆகாரென்பது நோக்கி அவனோடு நட்புக் கொள்ளுதற் பொருட்டும் தாமே வந்து அடைந்த அவருடைமையை அபகரித்தற் பொருட்டும் (அவரைக்) கொல்லுவர்; அன்றெனின் உடனே அவர் அழிவரென்பன நோக்கி 'யாண்டுச்சென் றியாண்டு முளராகார்' என்றார். இதனால் அக்குற்ற முடையவர் அருமை யுடைய அரண் சேர்ந்தும் உய்யா ரென்பது சொல்லப்பட்டது.

(க-து.) பேராற்றலுடைய அரசனாற் கோபிக்கப்பட்ட அரசர் எவ்விடத்துச் சென்றாலும் பிழைத்தல் முடியாது என்பது.

5. Those who have incurred the wrath of a cruel and mighty potentate will not prosper wherever they may go.

---

சு. எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார்.

பரி:—(இ-ள்). காட்டிடைச் சென்ற ஒருவன் ‡ஆண்டைத் தீயாற் சுடப்பட்டானாயினும் ஒருவாற்றான் உயிருய்தல் கூடும்; ¶தவத்தாற் பெரியாரைப் பிழைத்து ஒழுகுவார் எவ்வாற்றானும் உயிருய்யார், (எ-று).

தீ முன் உடம்பினைக் கதுவி $அதுவழியாக உயிர்மேற் சேறலின்

---

* அக்குற்றமுடையார் - பெரியாரைப்பிழைத்தற்குற்ற முடையவர்.

† அருமையுடைய அரண் - பிறர் புகுதற் கரிதாய கோட்டை. "அருமை யுடைய அரண்சேர்ந்து முய்யார், பெருமை யுடையார் செறின்" என்று நாலடியார் கூறுகின்றது. உய்யார்-பிழையார்.

‡ ஆண்டைத்தீயால் - அக்காட்டுத் தீயால்.

¶ "குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி, கணமேயுங் காத்தலரிது" என்னுங் குறள் இங்குக் கவனித்தற் பாலது.

$ அது வழியாக - அவ்வுடம்பின்வாயிலாக.

இடையே உய்யவுங் கூடும்; *அருந்தவர் வெகுளி அன்னதன்றித் தானிற்பது கணமாய் அதற்குள்ளே யாவர்க்குங் காத்தலரிதாகலின், †அது கூடாதாகலான் ‡அதற்கேதுவாய பிழை செய்யற்கவென்பதாம்.

தெளி:—(இ-ள்.) காட்டினிடத்துச் சென்றுஒருவன்) எரியால்-(அவ்விடத்துத்) தீயால், சுடப்படினும்-சுடப்பட்டாயினும், உய்வு-(ஒரு வழியால்) உயிர்பிழைத்தல், உண்டாம்-கூடும், பெரியார்-(தவத்தாற்) பெரியார்க்கு, பிழைத்தொழுகுவார்-பிழை செய்து நடப்பவர், உய்யார்-(எவ்வழியாலும்) உயிர் பிழையார், (எ று).

தீயானது முன்பு உடம்பினைப்பற்றி அது வழியாக உயிர்மேல் செல்லுதலால் நடுவே உய்யவுங் கூடும்; அருந்தவர் கோபம் அத்தன்மைய தல்லாமல் தான் நிற்பது கணமாய் அதற்குள்ளே யாவர்க்கும் காத்தல் அரிதாகலின், அது கூடாதாகலால், அதற்குக் காரணமாகிய பிழை செய்ய வேண்டாமென்பதாம். பிழை-தவறு ; கணம்-கணப்போது; காத்தல்-தடுத்தல்.

(க-து.) தவத்தாற் பெரியவர்க்குப் பிழைசெய்து நடப்பவர் எவ்வாற்றாலும் பிழைத்தல் முடியாதென்பது.

6, One may perhaps live, though burnt by a forest fire; but never will he live who has shown disrespect to the great ascetics.

---

**எ. வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளு மென்னுந்**
**தகைமாண்ட தக்கார் செறின்.**

பரி :—(இ-ள்.) ¶சாப வருள்கட் கேதுவாய பெருமை மாட்சிமைப்பட்ட அருந்தவர் அரசனை வெகுள்வராயின், உறுப்பமைகு பெற்ற அவனரசாட்சியும் ஈட்டிவைத்த பெரும் பொருளும் $என்பட்டுவிடும், (எ-று).

உறுப்பு-அமைச்சு, நாடு, அரண், படை யெனவிவை. செறினென்பது 0அவர் செருக்கை தோன்ற நின்றது. இவ்வெச்சத்தான் ‖முன்

* அருந்தவர்-செய்தற்கரிய தவத்தையுடையவர்.

"பொறுப்பாரென் றெண்ணிப் புரைதீர்ந்தார் மாட்டும், வெறுப்பன செய்யாமை வேண்டும்-வெறுத்தபின், ஆர்க்கு மருவி யணிமலை நன்னாட, பேர்க்குதல் யார்க்கு மரிது" என்று நாலடியார் கூறுவதிங்குணர்தற்பாலதாம்.

†அது-உயிர்பிழைத்தல். ‡அதற்கு-உயிர்பிழையாமைக்கு.

¶சாபம்-சபித்தல்; அருள்-கருணை செய்தல்.

$என்பட்டுவிடும் - அடியோடழிந்துபோம்.

0 அவர்-தகைமாண்ட தக்கார்.

‖முன்வருவன-இவ்வதிகாரத்தின் 8-வது குறளில் 'மதிப்பின்' என்றும், 9-வது குறளில் 'சீறின்' என்றும், 10-வது குறளில் 'செறின்' என்றும் வருவன. (முன் என்றது இங்கு இடமுன்).

வருவனவற்றிற்கும் ¶இஃதொக்கும். அரசர் தஞ்செல்வக் களிப்பான் அருந்தவர் மாட்டுப் பிழைசெய்வராயின்,, அச்செல்வம் அவர் வெகுளித்தீயான் ஒரு கணத்துள்ளே வெந்துவிடுமென்பதாம்.

தெளி :— (இ-ள்.) தகை- (சாபானுக்கிரகங்களுக்குக் காரண மாகிய) பெருமையால், மாண்ட-மாட்சிமைப்பட்ட, தக்கார்-அருந் தவர், செறின்-(அரசனைக்) கோபிப்பாராஞல், வகை-அங்கத்தினுல், மாண்ட-அழகுபெற்ற, வாழ்க்கையும்-(அவ்வரசன்) அரசாட்சியும், வான்பொருளும்-(சம்பாதித்துவைத்த) பெரும்பொருளும், என்னும்- என்பட்டுவிடும், (எ-று).

அங்கம்-அமைச்சு, நாடு, அரண், படை எனவிவை. செறினென் பது அவர் செருமை (கோபியாமை) தோன்ற நின்றது. செறின் என் னும் இவ்வினையெச்சத்தால் முன்வருவனவற்றிற்கும் இஃது ஒக்கும். அரசர் தமது செல்வக்களிப்பால் அருந்தவரிடத்துப் பிழைசெய்வா ராயின், அச்செல்வம் அவர் கோபத்தீயால் ஒருகணத்துள்ளே வெந்து விடுமென்பதாம். வெந்து விடுதல்-அழிந்துபோதல்.

(கருத்து.) தவப்பெருமையுடைய முனிவரால் கோபிக்கப்பட்ட அரசனது வாழ்வும் பொருளும் விரைந்துகெடும் என்பது.

7. What will become of the king's government with its regalities and all its wealth, if he incurs the wrath of the righteous ascetics ?

---

**அ. குன்றன்னார் குன்ற மதிப்பிற் குடியொடு**
**நின்றன்னார் மாய்வர் நிலத்து.**

பரி:—(இ-ள்.) குன்றத்தையொக்கும அருந்தவர் கெட நினைப்பா ராயின், அப்பொழுதே இந்நிலத்து நிலைபெற்றாற்போலுஞ் செல்வர் தங் குடியொடும் மாய்வர், (எ-று).

வெயில் மழை †முதலிய பொறுத்தலுஞ் சலியாமையும் உள்ளிட்ட குணங்க ளுடைமையின் *'குன்றன்னார்' என்றார். $''மல்லன் மலை யனையமாதவர்''என்றார் பிறரும்.நிலைபெற்றாற்போறலாவது இறப்பப்

¶இ·',து-அவர் (அருந்தவர்) செருமை (கோபியாமை).

†முதலிய என்றமையின், உண்டிசுருக்கல், தம்முயிர்க்கு வருந் துன்பங்களைப்பொறுத்தல் முதலியவற்றையுங் கொள்க.

*'' குணமென்னுங் குன்றேறி'' என்னுங் குறளின் விசேடவுரை யில் ''சலியாமையும் பெருமையும் பற்றிக் குணங்களைக் குன்றாக வுருவ கஞ் செய்தார்'' என்று வரைந்திருப்பது மிங்குணர்தற் பாற்றும்.

$சீவக சிந்தாமணி-முத்தியிலம்பகம்-191, இதன்பொருள். வளப் பம் பொருந்திய மலையை யொத்த பெரிய தபோதனர் என்பது.

பெரியராகலின் †இவர்க்கு எஞ்ஞான்றும் அழிவில்லையென்று கண்டா ராற் கருதப்படுதல்.

தெளி :—(இ-ள்.) குன்றன்னார்-மலையை யொக்கும் அருந்தவர், குன்ற-கெட, மதிப்பின்-நினைப்பாராஞல், (அப்பொழுதே), நிலத்து-இந்நிலவுலகத்தில், நின்றன்னார்-நிலைபெற்றாற் போலுள்ள செல்வர், குடியொடு-தமது குடியோடும், மாய்வர்-அழிவர், (எ-று).

வெயில் மழை முதலியவற்றைப் பொறுத்தலும் அசையாமையும் உட்கொண்டுள்ள குணங்களுடைமையால் 'குன்றன்னார்' என்றார். (செல்வர்) நிலைபெற்றாற்போன் றிருத்தலாவது (செல்வத்தால்) மிகப் பெரியவராகலால் இவர்க்கு எந்நாளும் அழிவில்லையென்று கண்ட வரால் நினைக்கப்படுதல்.

(க-து.) தவத்தாற் பெரியவர் கெடும்படி நினைப்பாராயின், அப் பொழுதே பெருஞ் செல்வமுடையவர் தங்குடியொடுங் கெடுவ ரென்பது.

8. If the ascetics who have mountain-like patience resolve on destruction, those who seem to regard their existence and riches as everlasting will be destroyed root and branch from the earth.

---

**கூ. ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து**
**வேந்தனும் வெந்து கெடும்.**

பரி:— (இ-ள்.) காத்தற் கருமையான் உயர்ந்த ‡விரதங்களை உடை யார் வெகுள்வராயின், அவராற்றலான் இந்திரனும் இடையே தன் பதம் இழந்து கெடும், (எ-று).

¶" வேந்தன் மேய தீம்புனலுலகமும் " என்றார் பிறரும். §நகுட னென்பான் இந்திரன் பதம்பெற்றுச் செல்கின்ற காலத்துப் பெற்ற களிப்பு மிகுதியான் அகத்தியன் வெகுள்வதோர் பிழைசெய அதனாற் சாபமெய்தி அப்பதம் இடையே இழந்தானென்பதனை யுட்கொண்டு, இவ்வாறு கூறினார். இவை நான்கு பாட்டானும் முனிவரைப் பிழைத் தலின் குற்றங்கூறப்பட்டது.

---

†இவர்க்கு-இப்பெருஞ்செல்வ முடையவர்க்கு.

‡விரதங்களாவன : இன்னவறஞ் செய்வ லெனவும், இன்னபாவ மொழிவ லெனவும் தம்மாற்றலுக் கேற்ப வரைந்து கொள்வன.

¶தொல்காப்பியம்-பொருளதிகாரம்-அகத்திணையியல், 5. இதன் பொருள். இந்திரன் விரும்பிய இனியபுனல் (நீர்) சூழ்ந்தமருதநிலமும் என்பது.

§நகுஷனென்னும் சந்திரவமிசத் தரசன் நூறு அசுவமேதயாகஞ் செய்து இந்திரனது பதவியைப்பெற்றுச் சப்தரிஷிகள் சுமக்கப் பல்லக் கின் மீதேறி இந்திராணியின் வீட்டிற்குப் போகும்போது, அவ்விந்தி ராணியின் மீதுள்ள ஆசைமிகுதியினால் சர்ப்ப சர்ப்ப (ஓடுஓடு) என்று கூறினன்; அதனைக் கேட்டுச் சப்தரிஷிகளுள் ஒருவராய அகத்திய முனிவர் கோபித்து அந்நகுஷனைச் சர்ப்பமாக (பாம்பாக)ச் சபித்தா ரென்பது கதை. இக்கதையின் விரிவைத் திருவிளையாடற் புராணம் இந்திரன் பழிதீர்த்த படலத்திற் காண்க.

தெளி:—(இ-ள்.) ஏந்திய கொள்கையார்-(காத்தற் கருமையால்) உயர்ந்த விரதங்களையுடையவர், சீறின்-கோபிப்பாரானல், (அவர் வலிமையால்), வேந்தனும்-இந்திரனும், இடைமுரிந்து-நடுவே (தன் பதத்தை) இழந்து, வெந்து கெடும்-கெடுவான், (எ-று).

வேந்தன் என்பது இங்கு இந்திரன்மேல் நின்றது. இந்திரனுக்கு வேந்தன் என்னும் பெயரிருத்தல் "வேந்தன்மேய தீம்புனலுலகமும்" என்று தொல்காப்பியங் கூறுதலாலறிக. நகுஷனென்னும் அரசன் இந்திரனது பதவியைப் பெற்றுப்போகின்ற காலத்தி லடைந்த சந்தோஷத்தின் மிகுதியினல் அகத்திய முனிவர் கோபிப்பதொரு தப்பிதத்தைச் செய்ய அத்தப்பிதத்தால் அவ்வரசன் அம்முனிவரது சாபத்தையடைந்து அவ்விந்திரபதவியை நடுவே இழந்தா னென் பதனை மனத்துட்கொண்டு (ஏந்திய கொள்கையார் சீறினிடைமுரிந்து வேந்தனும் வெந்துகெடும் என்று) இவ்வாறு சொன்னர். இவை நான்கு பாட்டாலும் முனிவர்க்குப் பிழைசெய்தலின் குற்றம் சொல் லப்பட்டது.

(கு-து.) தவத்தாற் பெரியவர் கோபித்தால் இந்திரனுங் கெடு வான் என்பது.

9. If ascetics of exalted vows burst in a rage, even the king (Indra) will lose his status and be ruined.

———

**௯0. இறந்தமைந்த சார்புடைய ராயினு முய்யார்**
**சிறந்தமைந்த சீரார் செறின்.**

**பரி:— (இ-ள்.) கழியமிக்க தவத்தினையுடையார் வெகுள்வராயின், அவரான் வெகுளப்பட்டார் கழிய பெரிய சார்பு உடையராயினும் * அது பற்றி உய்யமாட்டார், (எ-று).**

சார்பு-அரண், படை, பொருள், நட்பெனவிவை. §அவையெல் லாம வெகுண்டவரது ஆற்றலாற் ‡திரிபுரம்போல அழிந்துவிடு

---

* அது-சார்பு. §அவை-அரண், படை, பொருள், நட்பென்பன.

‡திரிபுரம்-இரும்பு, பொன், வெள்ளியாலாகிய மதில்களையுடைய மூன்று பட்டணங்கள். வித்துவமாலி, தாருகாக்கன், கமலாக்கன் என்னு மூன்றசுரர்கள் பிரமனைநோக்கி யரியதவஞ்செய்து, அப்பிரமன் தந்த வரத்தினல் திரிபுரத்தைப் பெற்றுப் பலவசுரர்களுடன் அத்திரி புரத்துடன் நினைத்த விடத்திற்குச் சென்று பிராணிகளுக்குக் கேடுண் டாக்கிவந்தனர்; தேவர்கள் அதனைப் பொறுக்கமாட்டாது சிவ-பெருமானிடத்துச் சென்று முறையிட்டனர்; அப்பெருமான் அம்-முறைக்கிரங்கி அத்தேவர்கள் சமைத்துத்தந்த தேரின் மீதேறிச் சென்று அத்திரிபுரத்தைச் சிரித்தெரித் தழித்தனர் என்பது

மாகலின் 'உய்யார்' என்றார். *சீருடையது சீரெனப்பட்டது. இதனான் †அக்குற்றமுடையார் சார்புபற்றியும் உய்யாரென்பது கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்) சிறந்தமைந்த-மிகவும் அதிகமான, சீரார்-தவத்தினையுடையவர், செறின் - கோபிப்பாராணுல், (அவரால் கோபிக்கப் பட்டவர்), இறந்தமைந்த-மிகவும் பெரிய, சார்புடையராயினும்-பற்றுக்கோடுடையவராஞனும், உய்யார்- (அதுபற்றி) உய்யமாட்டார், (எ-று).

சார்பு-அரண், படை, பொருள், நட்பு என இவை. அவை யெல்லாம் கோபித்த தவத்தினரது வலிமையால் திரிபுரம்போல அழிந்து விடுமாகலால் 'உய்யார்' என்றார். சீருடைய தவம் (சீரெனப்பட்டது.) இதனால் அக்குற்றமுடையவர் சார்புபற்றியும் உய்யாரென்பது சொல்லப்பட்டது.

(க-து.) மிகப்பெரிய தவமுடையவரால் கோபிக்கப்பட்டவர் அரண் முதலிய சார்புடையவராயிருப்பினும் பிழையார் என்பது.

10. Though kings may be in possession of numerous auxiliaries, they will perish if they are exposed to the wrath of the noble ascetics.

---

## இருபத்தெட்டாவது அதிகாரம்

### பெண்வழிச் சேறல்—Inclining towards the wife

பரி:—இனிக் காமத்தான் வருவன நேரே பகையல்ல வாயினும், ‡ஆக்கஞ்சிதைத்தல் அழிவுதலைத் தருதலென்னுந் தொழில்களாற் பகையோடொத்தலிற் பகைப்பாற் படுவனவாம்; ஆகலான் ¶அவற்றைப் பகைப்பகுதிய திறுதிக்கட் கூறுவான் றொடங்கி, முதற்கட் பெண்வழிச் சேறல் கூறுகின்றார். $அஃதாவது ||தன்வழி யொழுகற் பாலளாய இல்லாள் வழியே தான் ஒழுகுதல்.

---

கதை. [''வளைத்த வெஞ்சிலை தாங்கினோன் மால்கணை செலுத்தி, யிளைத்த நுண்ணிடை பங்கர்பார்த் திளநகை விளைப்பத், திளைத்த மூவெயிற் றீமலிந்தொருகணஞ் செலாமுன், தொளைத்த தீமையோர் மாய்ந்தனர் சாம்பரா யொழிந்தே'' என்று பாரதங் கூறுகின்றது ] இதன் விரிவைப் பாரதம் பதினேழாவது போர்ச்சருக்கத்திற்காண்க.

* சீர் (சிறப்பு) என்னுங் காரியப்பெயர் அதற்குக் காரணமாய தவத்தினையுணர்த்துதலால் காரியவாகுபெயராம்.

† அக்குற்றம்-பெரியாரைப் பிழைத்தற் குற்றம்.

‡ ஆக்கம்-மேன்மேலுயர்தற்குக் காரணமாய செல்வம்.

¶ அவற்றை-காமத்தினால் வருந்தீமைகளை.

$ அஃதாவது-பெண்வழிச் சேறலாவது.

|| ''தன்னு லாளப் படுமனைவி தன்னு லாளப் படுவானேல், அன்னாற் கறனும் பொருளுமுள வாகா தொல்லைப் பொருளானும், மன்னு பயன்கள் வினைமுடியா மறுமை யணுகா தெப்பிழையும்,

தெளி :—இனிக் காமத்தால் வருந் தீமைகள் நேரே பகையல்ல-வாயினும், ஆக்கத்தைச் சிதைத்தல் அழிவினைத்தருதல் என்னுந் தொழில்களால் பகையோடு ஒத்தலால் பகையினிடத்துப் பொருந்து-வனவாம்; ஆகலால் அவற்றைப் பகைப்பகுதியின் முடிவில் சொல்லத் தொடங்கி, முதலில் பெண் வழிச்சேறல் சொல்லுகிறார். அஃதாவது தன்வழியி லொழுகுதற்கு உரியவளாகிய மனையாள் வழியே தான் ஒழுகுதல். ஒழுகுதல்-நடத்தல்.

---

**க. மனைவிழைவார் மாண்பய னெய்தார் வினைவிழைவார் வேண்டாப் பொருளு மது.**

பரி :—(இ-ள்.) இன்பங் காரணமாகத் தம் மனையாளை விழைந்து *அவடன்மையராய் ஒழுகுவார் தமக்கு இன்றுணையாய அறத்தினை யெய்தார்; இனிப்பொருள் செய்தலை முயல்வார் அதற் கிடையீடென்று இகழும் பொருளும் அவ் வின்பம் (எ-று).

†மனையும் விழைவும் பயனும் ஆகுபெயர். அவ்வின்பம்-அவடன் மைய ராதற்கு ஏதுவாய வின்பம். அஃது ‡அவளாற் பயனுய வறத்தினும் அவ்வறத்திற்குந் தனக்கும் ஏதுவாய பொருளினுஞ் செல்லவிடாமையின், விடற்பாற்றென்பதாம்.

தெளி :—(இ-ள்.) மனைவிழைவார்-(இன்பங் காரணமாகத்) தம் மனையாளை விரும்பி அவள் தன்மையரா யொழுகுவார், மாண்பயன்-(தமக்கு) இனியதுணையாகிய அறத்தை, எய்தார்-அடையார், வினை விழைவார்-(இனிப் பொருள்) சம்பாதித்தலை முயல்பவர், வேண்டாப் பொருளும்-(அப்பொருளுக்குத் தடையென்று) இகழும் பொருளும், அது-அவ்வின்பம், (எ-று).

மனை-இடவாகு பெயர்; விழைவு-கருவியாகு பெயர்; பயன்-காரியவாகு பெயர். அவ்வின்பம்-அவளது தன்மையராதற்குக் காரணமாயவின்பம். அவ்வின்பம் அவளால் பயனுகிய அறத்திலும் அவ்வறத்திற்கும் தன்னதிகாரத்திற்கும் காரணமாகிய பொருளிலும் செல்லவிடாமையால், விடப்படுந் தன்மையதென்பதாம்.

---

முன்னும் பின்னும் பெரு நாணு மூவாப் பழியு மறிமைந்தா" என்பது விநாயகபுராணம். *அவடன் மையராயொழுகுவார்-மனையாள் கூறியவாறு நடப்பவர்.

† மனை (வீடு) என்னும் இடப்பெயர் அங்குள்ள பெண்ணினை (மனைவியை) உணர்த்துதலால் இடவாகுபெயராம்.

விழைவு என்னும் கருவிப்பெயர் அதன் காரியமாய மனையாளின் றன்மையராய் ஒழுகுதலை யுணர்த்துதலால் கருவியாகுபெயராம்.

பயன் என்னும் காரியப்பெயர் அதற்குக் காரணமாய அறத்தினை-யுணர்த்துதலால் காரியவாகு பெயராம்.

‡ அவளால்-மனையாளால் (இல்லறத்தானுக்குப் பயனுய அறத்திற்கு மனையாள் துணையாயிருத்தலால் 'அவளாற் பயனுய வறத்தினும்' என்று கூறப்பட்டது).

(கு-து.) இன்பங் காரணமாகத் தமது மனையாள் கூறிய வழியில் நடப்பவர் அறத்தின் பயனையடையார்; பொருள் தேடுதலில் முயற்சி யுடையவர் அவ்வின்பத்தை விரும்பார் என்பது.

1. Those who lust after their wives (and do their biddings) will not attain the excellence of virtue; and it is just this that is not desired by those who are bent on acquiring wealth.

---

உ. பேணது பெண்விழைவா னாக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும்.

பரி:— (இ-ள்.) *தன் ஆண்மையைவிட்டு மனையாளது பெண்மையை விழைவான் எய்திநின்ற செல்வம், இவ்வுலகத்து ஆண்பாலார்க்கெல்லாம் பெரியதோர் நாணுண்டாகத் தனக்கும் †நாணுதலைக்கொடுக்கும், (எ-று).

‡எய்திநின்றதாயிற்று; படைக்கும் ஆற்றலிலனாதலின். ¶அச் செல்வத்தால் ஈதலுந் துய்த்தலும் §முதலிய பயன்கொள்வாள் ||அவளாகலின், அவ்வாண்மைச்செய்கை அவள் கண்ணதாயிற்றென்று ஆண்பாலார் யாவரும் நாண அதனாற் றன் ஆண்மையின்மை அறிந்து பின் தானும் நாணுமென்பது நோக்கிப் 'பெரியதோர் நாணாக நாணுத் தரும்' என்றார். இவை இரண்டு பாட்டானும் மனைவிழைதற் குற்றங் கூறப்பட்டது.

தெளி:— (இ-ள்.) பேணது - (தன்னாண்மையை) விரும்பாமல், (விட்டு), பெண்விழைவான் - (மனையாளது) பெண்மையை விரும்பு வான், ஆக்கம் - (அடைந்துநின்ற) செல்வம், (இவ்வுலகத்து ஆண்பா லார்க்கெல்லாம்), பெரியதோர்நாண் - பெரியதொரு வெட்கம், ஆக - உண்டாக, நாணு - (தனக்கும்) நாணுதலை, தரும் - கொடுக் கும், (எ-று).

(பேணது பெண்விழைவான் செல்வத்தைச்) சம்பாதிக்கும் வலிமையில னாகலின், (அவனிடத்துச் செல்வம் முன்னரே) அடைந்து நின்றதாயிற்று. அச்செல்வத்தால் கொடுத்தலும் அனுபவித்தலும் முதலிய பயன் கொள்வாள் அவளாகலால், அவ்வாண்மைச் செய்கை அவளிடத்ததாயிற்றென்று ஆண்பாலார் யாவரும் நாண அதனால்

---

* தன் ஆண்மையை விழையாது விட்டு என்றும் பாடமுண்டு.

† நாணுதலாவது சால்பு பண்பு முதலிய குணங்களாலுயர்ந்தோர் தமக்கொவ்வாத கருமங்களில் நாணுதல்.

‡ பேணது பெண்விழைவான் பொருளைச் சம்பாதிக்கும் வல்லமை யில்லாதவனா யிருத்தலால், அவனிடத்துச் செல்வம் எய்தி(அடைந்து) நிற்பதாகாது எய்தி நின்றதாயிற்றென்க.

¶ அச்செல்வத்தால்-தனது முயற்சியாலன்றி முன்னரே யடைந்து நின்ற செல்வத்தினால்.

§ முதலிய என்றமையின் புகழ்பெறுதல் முதலியவற்றையுங் கொள்க. முதலிய பயன்கள் அவளனவாகலின் என்றும் பாடமுண்டு.

|| அவளாகலின் - மனையாளாகலால்.

தன்னுண்மை யில்லாமையையறிந்து பின்னர்த் தானும் நாணுவ னென்பது நோக்கிப் 'பெரியதோர் நாணுக நாணுத் தரும்' என்றார். இவை இரண்டு பாட்டாலும் மனையாளை விரும்புதற் குற்றம் சொல்லப்பட்டது.

(க-து.) தன தாண்மையை விரும்புவ தொழிந்து தன் மனையாளது பெண்மையை விரும்புவானது செல்வம் அவனுக்கு வெட்கத்தைத் தரும் என்பது.

2. The wealth of him who, regardless of his manliness devotes himself to his wife's feminine nature will cause a great shame to all men and to himself.

— —

**௩. இல்லாள்கட் டாழ்ந்த வியல்பின்மை யெஞ்ஞான்று**
**நல்லாரு ளுணுத் தரும்.**

பரி — (இ-ள்.) ஒருவன் இல்லாண்மாட்டுத் தாழ்தற்கு ஏதுவாய அச்சம் அஃதிலராய நல்லாரிடைச் செல்லுங்கால் நாணுதலை அவனுக்கு எக்காலத்துங் கொடுக்கும், (எ-று).

†அவடான் அஞ்சி ஒழுகுதல் இயல்பாகலின், அவளை யஞ்சுதல் இயல்பின்மையாயிற்று. அங்ஙனமஞ்சி யொழுகுதலின், அவளை நியமிப்பாரில்லையாம்; ஆகவே, எல்லாக்குற்றமும் விளையுமென்பது நோக்கி, எஞ்ஞான்றும் நாணுத்தரும் என்றார்.

தெளி:— (இ-ள்.) (ஒருவன்) இல்லாள்கண் - மனையாளிடத்து தாழ்ந்த வியல்பின்மை - தாழ்தற்குக் காரணமாகிய அச்சம் நல்லாருள் - (அவ்வச்சமிலராய) நல்லாரிடத்து (செல்லுங்கால்), நாணு - நாணுதலை, (அவனுக்கு), எஞ்ஞான்றும் - எந்நாளும், தரும் - கொடுக்கும், (எ-று).

அவள்தான் தனக்கு அஞ்சி யொழுகுதல் இயல்பாகலால், அவளுக்குத்தான் அஞ்சுதல் இயல்பில்லாமையாயிற்று. அவ்வாறு அஞ்சி யொழுகுதலால், அவளை நியமிப்பார் இல்லையாம்; ஆகவே, எல்லாக் குற்றமும் விளையுமென்பது நோக்கி, எஞ்ஞான்றும் நாணுத்தரும் என்றார்.

(க-து.) மனையாளிடத்து அச்சமுடையவனாயிருப்பவன் அவ்வச்சமில்லாரிடத்துச் செல்லும்போது வெட்கமடைவான் என்பது.

3. The frailty that stoops to a wife will always make her husband feel ashamed among the good.

— —

**௪. மனையாளை யஞ்சு மறுமையி லாளன்**
**வினையாண்மை ‡வீறெய்த லின்று.**

---

† அவடான் - மனையாள்.

‡ வீறெய்தலின்று - பெருமையடைதலில்லை.

பரி:—(இ-ள்.) தன் மனையாளை யஞ்சி ஒழுகுகின்ற மறுமைப்பய னில்லாதானுக்கு வினையை ஆளுந்தன்மை உண்டாயவழியும் நல்லோ ராற் கொண்டாடப்படாது, (எ-று).

*உண்டாயவழியு மென்பது அவாய்நிலையான் வந்தது. †இல்லறஞ் செய்தற்குரிய நன்மை யின்மையின் 'மறுமையிலாளன்' என்றும், வினையை யாளுந்தன்மை ‡தன்றன்மை யில்லாத ¶அவனான் முடிவு போகாமையின் 'வீறெய்தலின்று' என்றுங் கூறினர்.

தெளி:—(இ-ள்.) மனையாளை-(தன்) மனையாளுக்கு, அஞ்சும்-அஞ்சி யொழுகுகின்ற, மறுமையிலாளன்-மறுமைப் பயனில்லாதவனுக்கு, வினையாண்மை - தொழிலையாளுந்தன்மை, (உண்டாய வழியும்), வீறெய்தலின்று-(நல்லோரால்) கொண்டாடப்படுதலில்லை, (எ-று).

உண்டாய வழியும் என்பது அவாய் நிலையால் வந்தது. இல்லறஞ் செய்தற்குரிய நன்மை இல்லாமையால் 'மறுமையிலாளன்' என்றும் தொழிலை யாளுந்தன்மை தன்தன்மை யில்லாத அவனால் முடிவு போகாமையால் 'வீறெய்தலின்று' என்றுஞ் சொல்லினர்.

(கு-து) மனையாளுக்கஞ்சி யொழுகுகின்றவன் செய்யுந் தொழில் செவ்வையாக முடிவுபெறாது என்பது.

4. Though one may have the power of accomplishing any undertaking it will not be applauded by the wise, if one fears one's wife and thereby loses the fruits of after-life.

---

ரு. இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்று
நல்லார்க்கு நல்ல செயல்.

பரி:—(இ-ள்.) தன்மனையாளை யஞ்சுவான் தான் தேடிய பொருளே யாயினும் அதனால் நல்லார்க்கு நல்லன செய்தலை எஞ்ஞான்றும் அஞ்சாநிற்கும், (எ-று).

நல்லார்-தேவர், அருந்தவர், சான்றோர், இரு முதுகுரவர் 0முதலாயினரும் ()நல்விருந்தினரும். நல்லன செய்தல்-அவர்

---

* வீறெய்தலின்றென்பது உண்டாயவழியும் என்பதை அவாவி (வேண்டி) நின்றது.

† தன் மனையாளுக்கஞ்சுவானிடத்து இல்லறஞ் செய்தற்குரிய நற்செயலில்லாமையின், அவனுக்கு இல்லறத்தின் பயனாகிய மறுமையின்பமில்லையா மென்பது. ‡தன்றன்மை-ஆண்மை.

¶ அவனான்-தன் மனையாளுக்குப் பயந்து நடப்பவனால்.

0 முதலாயினர் என்றது நட்பினர், வமிசகுரு, ஞானகுரு முதலியவர்களை.

() நல்விருந்து-வாராவிருந்தினர். அவராவார்-விதுரன் இல்லத்-திற்குக் கண்ணபிரானும் அப்பூதியடிகள் இல்லத்திற்கு அப்பர் சுவாமிகளும் வந்தாற்போன்ற விருந்தினர்.

விரும்புவன கொடுத்தல். *அது செய்யவேண்டும் †நாள்களினு மென்பார் 'எஞ்ஞான்றும்' என்றார். ‡"இல்லாளை யஞ்சி விருந்தின் முகங் கொன்ற நெஞ்சிற், புல்லாளனாக" என்றார் பிறரும்.

தெளி:—(இ-ள்.) இல்லாளையஞ்சுவான்–(தன்) மனையாளுக்கு அஞ்சுகின்றவன், (தான் தேடியபொருளேயாயினும் அப்பொருளால்), நல்லார்க்கு-, நல்லசெயல்-நல்லனவற்றைச் செய்தற்கு, எஞ்ஞான்றும்-எந்நாளும், அஞ்சும்-அஞ்சாநிற்பன், (எ-று).

மற்று-அசைநிலை. நல்லார்-தேவர், அருந்தவர், சான்றோர், தாய்தந்தையர் முதலாயினோரும் நல்விருந்தினரும். நல்லனவற்றைச் செய்தல்-அந்நல்லவர் விரும்பியவற்றைக் கொடுத்தல். அது செய்ய வேண்டும் நாட்களிலுமென்பார் 'எஞ்ஞான்றும்' என்றார்.

(க-து.) தன் மனையாளுக்கஞ்சுகின்றவன் நல்லவர்க்கு நல்லன வற்றைச் செய்தல் முடியாது என்பது.

5. He who fears his wife will always be afraid of doing good deeds even to the great souls.



சு. இமையாரின் வாழினும் பாடிலரே யில்லா
ளமையார்தோ ளஞ்சு பவர்.

பரி:—(இ-ள்.) தம் மில்லாளுடைய ¶வேய்போலுந் தோளினை அஞ்சுவார் £வீரத்தாற் றுறக்கமெய்திய அமரர்போல இவ்வுலகத்து வாழ்ந்தாராயினும் ஆண்மை யிலர், (எ-று).

---

* அது-விரும்புவன கொடுத்தல். † நாள்கள் சிரார்த்தம், தேவ பூசை, முதலியவற்றைச் செய்தற்குரிய தினங்கள்.

‡ சீவகசிந்தாமணி-மண்மகளிலம்பகம்-218, இதன் பொருள். மனையாளுக்குப் பயந்து விருந்தினரது முகத்தை மகிழ்ச்சி செய்யாது விட்ட மனத்தினையுடைய புல்லாளனாகக்கடவேன் என்பது. [புல்லாளனாதல்-அற்ப புத்தியை யுடையவனாதல்] விருந்தினரது முகம் மகிழ்ச்சியடையாது போதற்கேது "மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து, நோக்கக் குழையும் விருந்து" என்னுங் குறளாலறியப் படுவதாம்.

¶ வேய்-இளமூங்கில். தோள் அளவு, வடிவு. பசுமை நிறம் என்பவற்றால் வேய்போன்றிருப்பதாம். இது "அளவே வடிவொப்ப தன்றியே பச்சை, யிளவேய் நிறத்தானு மொக்கும்–தோள்" என்றுள்ள பிரயோகம் இங்குணர்தற் பாலதாம்.

£ போர்க்களத்தில் பகைவர்க்குப் பின்வாங்காது போரிட்டு மடிந்தவர் தேவராகி வீரசுவர்க்கத்தை யடைதல் பற்றி 'வீரத்தாற் றுறக்கமெய்திய அமரர்போல, என்று கூறப்பட்டது. பாரதம் 18-ம் போர்ச்சருக்கத்தில் (235-ம் பாடல்) "குருகுல மகிபதி திறல்வெஞ்

அமரர்போல வாழ்தலாவது பகைத்த வீரர் தோள்களையெல்லாம் வேறலான் நன்கு மதிக்கப்பட்டு வாழ்தல். *அது கூடாமையின் †'வாழினும்' என்றார். 'அமையார்தோள்' எனவே அஞ்சுதற் காரணத் தது எண்மை கூறியவாறு வீரர்தோள்களை வென்றாராயினும் இல்லா டோள்களை அஞ்சுவார் ஆண்மையில ரென்பதாம். இவை நான்கு பாட்டானும் அவளை யஞ்சுதற்குற்றங் கூறப்பட்டது.

தெளி: — (இ-ள்.) இல்லாள் - (தம்) இல்லாளுடைய, அமையார் தோள் - வேய்போலுந்தோளுக்கு, அஞ்சுபவர் - அஞ்சுகின்றவர், இமையாரின் – (வீரத்தால் சுவர்க்கமடைந்த) தேவர்போல, வாழினும் - (இவ்வுலகத்தில்) வாழ்ந்தாராயினும், பாடிலர் - ஆண்மையிலர், (எ-று).

தேவர்போல வாழ்தலாவது பகைத்தவீரர் தோள்களையெல்லாம் வெல்லுதலால் நன்குமதிக்கப்பட்டு வாழ்தல். அது கூடாமையால் 'வாழினும்' என்றார். 'அமையார்தோள்' எனவே, அஞ்சுதற் காரணத் தது எளிமை சொல்லியபடியாம். வீரரது தோள்களை வென்றாராயி னும் இல்லாளதுதோள்களுக்கு அஞ்சுவார் ஆண்மையிலரென்பதாம். இவை நான்கு பாட்டாலும் அவளுக்கு அஞ்சுதற்குற்றம் சொல்லப் பட்டது.

(க-து.) தமது மனையாளுக் கஞ்சுவோர் தேவர்போலச் சிறப்புற்று வாழ்ந்தாலும் பெருமையடையார் என்பது.

6. They who are afraid of their wives will be destitute of manliness though they may flourish (on earth) like the gods.

---

எ. **பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையி னாணுடைப்**
**பெண்ணே பெருமை யுடைத்து.**

பரி:— (இ-ள்.) நாணின்றித் தன்னில்லாளது ஏவற்றொழிலைச்செய்து திரிகின்றவனது ‡ஆண்டன்மையின் நாணினையுடைய அவள் ¶பெண் டன்மையே மேம்பாடுடைத்து, (எ-று).

‖நாணுடைப் பெண்ணென வேண்டாது கூறியது அவளேவல்

செருமுனை யதனின் மேதகு, மயிர் நுண்குழலர மடநல் லார்பல ரளிகொண் டெதிர்கொள வமரனுனைபின், உயிர்கொண் டதுசுர ருறையும் வானுல குடல்கொண் டதுதன துடைய பூமியே'' என்று கூறுவது மிங்கறிதற்பாலதாம்.

* அது - நன்கு மதிக்கப்பட்டு வாழ்தல்.

† வாழினும் என்ற உம்மை எதிர்மறைப்பொருளது.

‡ ஆண்மை - ஆளுந்தன்மை; அஃதாவது ஒன்றற்குந் தளராது நிற்றல்.

¶ பெண்மை - கட்புலனுயதோர் அமைதித்தன்மை. (கட்புல னுதல் - நேத்திரேந்திரியத்திற்கு விஷயமாதல்).

‖ வேண்டாது கூறல் வேண்டியதொன்றை முடித்தற்காதலால், பெண்ணே என்று கூறாது நாணுடைப் பெண்ணே என வேண்டாது கூறி, அதனால் நாணின்மை யென்னும் வேண்டியதொன்றை முடித்தார்,

செய்வானது நாணின்மை முடித்தற் காதலின், *அம் மறுதலைத் தொழில் வருவிக்கப்பட்டது. ஏவல் - ஆகுபெயர். இறுதிக்கட் பெண்ணென்பதூஉம் அது. ஏவல் செய்வித்துக் கோடற்சிறப்புத் தோன்றப் பெண்ணே எனப் பிரித்தார்.

தெளி:— (இ-ள்.) (நாணமின்றி) பெண் - (தனது) இல்லாளது, ஏவல் - ஏவற்றொழிலை, செய்தொழுகும் - செய்துதிரிகின்றவனது, ஆண்மையின் - ஆண்தன்மையைக்காட்டினும், நாணுடை - நாணத்தையுடைய, பெண்ணே - (அவள்) பெண்தன்மையே, பெருமை - மேம்பாட்டை, உடைத்து - உடையது (எ-று).

பெண்ணே என வாளாகூறுது அடைகொடுத்து நாணுடைப் பெண்ணென வேண்டாமற் சொல்லியது அவ்வேவல் செய்வானது நாணில்லாமையை முடித்தற்காதலால், அந்நாணில்லாமை என்னும் மறுதலைத்தொழில் (நாணமின்றி யென) வருவிக்கப்பட்டது. ஏவல் என்பது ஏவுதலாற் செய்யுந் தொழிலை யுணர்த்துதலால் கருவியாகு பெயராம். இறுதியில் பெண் என்பதும் ஆகுபெயர். பெண் என்னும் பொருட்பெயர் அவள் தன்மையையுணர்த்துதலால் பொருளாகு பெயராம். ஏவல் செய்வித்துக்கொள்ளுதற் சிறப்புத் தோன்ற பெண்ணே எனப் பிரித்தார். ஏகாரம் பிரிநிலைப் பொருளது.

(க-து.) பெண்ணேவல் செய்தொழுகுவானது ஆண்தன்மையிலும் அப்பெண்ணினது பெண்தன்மையே மேம்பாடுடையதாம் என்பது.

7. Even shame - faced womanhood is more to be esteemed than the shameless manhood that performs the behests of a wife.

---

அ. நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்
பெட்டாங் கொழுகு பவர்.

பரி:— (இ-ள்.) தாம் வேண்டியவா றன்றித் தம்மனையாள் வேண்டிய வாறு ஒழுகுவார் தம்மோடு நட்புச்செய்தார் உற்ற குறை முடிக்கமாட்டார்; அதுவேயன்றி மறுமைக்குத் துணையாய அறஞ் செய்யவுமாட்டார், (எ-று).

†'நன்னுதலாள்' என்பதனை "அமையார்தோள்" என்புழிப் போலக் கொள்க. அவடானே அறிந்து ஏவலும் பொருள் கொடுத்தலுங் கூடாமையின், ‡இருமைக்கும் வேண்டுவன செய்யமாட்டாரென்பதாம்.

---

* நாணுடைமைக்கு மறுதலைத்தொழில் நாணின்மை.

† 'அமையார்தோள் எனவே அஞ்சுதற் காரணத்தது எண்மை கூறியவாறு' என்று கூறினாற்போன்று நன்னுதலாள் எனவே அஞ்சுதற் காரணத்தது எண்மை கூறியவாறு என்று கூறிக்கொள்க. (நன்னுதலார் - அழகிய நெற்றியையுடைய பெண்கள்.)

‡ இருமைக்கும் - இப்பிறப்பிற்கும் வருபிறப்பிற்கும்.

தெளி:—(இ-ள்.) (தாம்வேண்டியவா றல்லாமல்) நன்னுதலாள்-(தம்)மனையாள், பெட்டாங்கு-வேண்டியவாறு, ஒழுகுபவர்-நடப்பவர், நட்டார்-(தம்மோடு) நட்புச்செய்தவர், (உற்ற), குறை-குறையை, முடியார்-முடிக்கமாட்டார்,(அதுவேயல்லாமல்), நன்று-(மறுமைக்குத் துணையாகிய) அறத்தை ஆற்றார்-செய்யவுமாட்டார், (எ-று).

'நன்னுதலாள்' என்பதனை "அமையார்தோள்"என்ற விடத்துப் போலக்கொள்க. அவள்தானே (நட்டார்குறை முடித்தல் வேண்டும்; நன்றாற்றல் வேண்டுமென்று) அறிந்து ஏவுதலும் பொருள் கொடுத்தலும் கூடாமையால், (நன்னுதலாள் பெட்டாங்கொழுகு பவர்) இருமைக்கும் வேண்டுவனவற்றைச் செய்யமாட்டாரென்ப தாம்.

(க-து.) தம் மனையாள் விரும்பியவாறு நடப்பவர் தமது நட்பினருக்கு முதவார்; தருமமுஞ் செய்யார் என்பது.

8. Those who act according to the wishes of their wives will neither relieve the wants of their friends nor perform virtuous deeds.

---

கூ. அறவினையு மான்ற பொருளும் பிறவினையும்
பெண்ணேவல் செய்வார்க ணில்.

பரி:—(இ-ள்.) அறச் செயலும் †அது முடித்தற்கு ஏதுவாயபொருட் செயலும் ‡அவ்விரண்டின் வேறாய *இன்பச் செயல்களும் தம் மனையாள் ஏவல் செய்வார்மாட்டு உளவாகா, (எ-று).

¶புலன்களைந்தாகலின் பிறவினையெனப் பன்மையாயிற்று. அவை நோக்கி அறச்செயல் பொருட்செயல்கள் முன்னே யொழிந்தார்க்குத் 0தலைமை அவள் கண்ணதாகலின், பின் ¶அவைதாமும் இலவாயின வென்பது தோன்ற, ()அவற்றைப் பிரித்துக் கூறினர். இவை மூன்று பாட்டானும் ††அவளேவல் செய்தற் குற்றங் கூறப்பட்டது.

†அது-அவ்வறச் செயலை.

‡அவ்விரண்டின்-அறச்செயல் பொருட்செயல் என்னும் இரண்டிற்கும்.

*கண்டுகேட்டுண்டுயிர்த் துற்றறிதலாகிய இன்பச் செயல்கள்.

¶அறவினையும் ஆன்ற பொருளும் என்று ஒருமையாற் கூறியதற் கேற்ப இன்பச் செயலை யொருமையாற் கூறாது பிறவினை (இன்பச் செயல்கள்) என்று பன்மையாற்கூறியது இன்பச் செயல் மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் ஐம்புலன்களுக்கும் விஷயமாயிருத் தலினென்க. (பிற என்பது இங்குப் பன்மை; இதற்கொருமை பிறிது என்பது) இதனைக் 'கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியுமைம்புலனும், ஒண்டொடி கண்ணே யுள' என்று பின்வரும் குறளாலும் அறிக.

0தலைமை - முதன்மை (அதிகாரம்).

¶அவை தாமும்-இன்பச்செயல்களும்.

() அவற்றை-இன்பச்செயல்களை. ††அவள்-மனையாள்.

தெளி:—(இ-ள்.) அறவினையும்-அறச்செயலும், ஆன்றபொருளும்-அது முடித்தற்குக் காரணமாகிய பொருட்செயலும், பிறவினையும்-அவ்விரண்டின் வேறாகிய இன்பச்செயல்களும், பெண்ணேவல்-(தம்) மனையாளேவலை, செய்வார்கண்-செய்பவரிடத்து, இல்-உண்டாகா, (எ-று).

காமவின்பம் செவி முதலிய ஐம்புலன்களாலும் அனுபவித்தற் குரியதாயிருத்தலின் அதனை ஒருமையாற் கூறாது பிறவினை என்று பன்மையாற் கூறினார். அவ்வின்பச் செயல்களை நோக்கி அறச்செயல் பொருட்செயல்களை முன்னே ஒழிந்தார்க்குத் தலைமை அவளிடத் திருத்தலால், பின் அச்செயல்களும் இல்லையாயின வென்பது தோன்ற, அவற்றைப் பிறவினை யெனப் பிரித்துச் சொல்லினார். இவ்வ மூன்று பாட்டாலும் அவளேவற் செய்தற்குற்றம் சொல்லப்பட்டது.

(கூ-து.) மனையா ளேவலில் நிற்போரிடத்து அறம்பொருள் இன்பங்களுக்குரிய செயல்களில்லையாம் என்பது.

9. From those who obey the commands of their wives are to be expected neither virtuous deeds, nor good ways of acquiring wealth, nor even acts conducive to happiness.

---

கo. **எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை யில்.**

பரி:—(இ-ள்.) கருமச் சூழ்ச்சிக்கட் சென்ற நெஞ்சத்தினையும் அதனிறுய செல்வத்தினையும் உடையராய வேந்தர்க்கு மனையாளைச் சேர்த லான் வினையும் பேதைமை எக்காலத்தும் உண்டாகாது, (எ-று).

*"இடனில் பருவத்தும்" எனவும் †"இடனின்றி யிரந்தோர்க்கு" எனவும் வந்தமையான், இடனென்பது ‡அப்பொருட்டாதலறிக. இளமைக் காலத்து மென்பார் 'எஞ்ஞான்றும்' என்றார். அப் ¶பேதை மையாவது $மேற் சொல்லிய விழைதல், அஞ்சல், ஏவல்செய்த லென்னும் மூன்றற்குங் காரணமாயது. 0எதிர்மறை முகத்தான் அம் மூன்றும் இதனாற்றொகுத்துக் கூறப்பட்டன.

---

*திருக்குறள்-ஒப்புரவறிதல்-8, இதன்பொருள். செல்வஞ் சுருங்கிய காலத்தும் என்பது.

†கலித்தொகை-பாலைக்கலி-1, இதன்பொருள். (தம்முடைய இல் வாழ்க்கைக்கு வேண்டும்) பொருளில்லாது யாசித்தவர்க்கு என்பது.

‡அப்பொருட்டாதல்-செல்வம் என்னும் அருத்தத்தினையுடைய தாதல். ¶பேதைமை-யாதுமறியாமை.

$இவ்வதிகாரத்தின் 1-வது 2-வது குறள்களில் விழைதலும், 3-வது முதல் 6-வது குறள் வரையில் அஞ்சுதலும், 7-வது முதல் 9-வது குறள் வரையில் ஏவல் செய்தலும் சொல்லப்பட்டிருக்கின்றன.

0'பெண்சேர்ந்தாம் பேதைமையில்' என்று எதிர்மறை வாயிலாக விழைதல் அஞ்சுதல்ஏவல்செய்தலென்னும் மூன்றும் இக்குறளால் சங்கிரகித்துச் சொல்லப்பட்டன.

தெளி:—(இ-ள்.) எண்சேர்ந்த-(மேற்கொண்ட கருமத்தை) ஆலோசித்தலிற் சென்ற, நெஞ்சத்து-மனத்தினையும், இடன்- அவ்வாலோசனையினுலாகிய) செல்வத்தினையும், உடையார்க்கு-உடையராகிய அரசர்க்கு, பெண்சேர்ந்து மனையாளைச் சேர்தலால், ஆம்-உண்டாகும், பேதைமை-அறியாமை, எஞ்ஞான்றும்-எக்காலத்திலும், இல்-உண்டாகாது, (எ-று).

இடன் என்பது இங்குச் செல்வமென்னும் பொருளில் வந்தது. இளமைப் பருவத்தும் பெண்சேர்ந்தாம் பேதைமையில் என்பார்'எஞ்ஞான்றும்' என்ருர். அப்பேதைமையாவது மேற்குறள்களில் சொல்லிய விரும்புதல், அஞ்சுதல், ஏவல் செய்தல் என்னும் மூன்றற்கும் காரணமாயிருப்பது. எதிர்மறைவாயிலாக அம்மூன்றும் இதனுல் தொகுத்துச் சொல்லப்பட்டன.

(க-து.) நல்ல மனமும் நல்ல செல்வமும் உடையவரிடத்துப்பெண் வழிச் சேறல் என்னும் பேதைமை யில்லை என்பது.

10. The foolishness arising from devotion to a wife will never be found in those who possess a reflecting mind and a resultant prosperity.

---

## இருபத்தொன்பதாவது அதிகாரம்

### ௯௨ வரைவின் மகளிர் — Prostitutes

பரி :—அஃதாவது *தந்நலம் விலை கொடுப்பார் யாவர்க்கும் விற்பதல்லது ‡அதற்கு †ஆவார் ஆகாதார் என்னும் வரைவிலாத மகளிரது இயல்பு; ஆதலால் ¶தமக்குரிய மகளிரான் வருங் குற்றத்தின் பின் வைக்கப்பட்டது.

தெளி : —அஃதாவது தமது நலத்தை விலைகொடுப்பவர் யாவர்க்கும் விற்பதல்லாமல் அந்நலத்திற்கு ஆவார் ஆகாதார்என்னும் வரைவில்லாத மகளிரது இயல்பு; ஆதலால் தமக்குரிய மகளிரால் வருங் குற்றத்தின்பின் வைக்கப்பட்டது.

---

*தந்நலம்—தமதுபோகத்தை.

‡''இழிபவ ருயர்ந்தோர் மூத்தோ ரிளையவர் கழியா நோயாற், கழிபவர் யாவரேனுங் கண்வலைப் பட்டு நெஞ்சம், அழிபவர் பொருள் கொண்டெள்ளுக் கெண்ணெய்போ லளந்து காட்டிப், பழிபடுபோகம் விற்பார்'' ஆதலால், 'அதற்கு (தமது நலத்திற்கு) ஆவார் ஆகாதார் என்னும் வரைவில்லாத (நியமமில்லாத)மகளிர்' என்றுகூறப்பட்டது.

†ஆவாரிவர், ஆகாதாரிவரென்னும் நியமமில்லாத வேசியரது தன்மை.

¶கற்புடைய மாதர் இளமைப் பருவத்தில் பிதாவினுலும், யௌவன பருவத்தில் கணவனுலும், வயோதிக பருவத்தில் புத்திரனுலும், காக்கத்தக்கவராயிருக்கின்றனர்; பொதுமகளிர் அவ்வாறு காக்கத் தக்கவரல்லராகலின், அவரைத் 'தமக்குரிய மகளிர்'என்ருர். எனவே, பொதுமகளிர் தாம் விரும்பியவாறு நடப்பா ரென்பதாயிற்று.

**க. அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொடியா**
**ரின்சொ லிழுக்குத் தரும்.**

பரி: (இ-ள்.) ஒருவனை அன்புபற்றி விழையாது பொருள்பற்றி விழையும் மகளிர் அது கையுறுந் துணையும் தாம் அன்புபற்றி விழைந்தாராகச் சொல்லும் இனியசொல் அவனுக்குப் பின் *இன்னாமையைப் பயக்கும், (எ-று).

பொருளென்புழி இன் விகாரத்தாற் றொக்கது. ‡ஆய் தொடியார் என்றதனானும், 'இன்சொல்' என்றதனானும், அவர் †கருவி கூறப் பட்டது. அச்சொல் அப்பொழுதைக்கு இனிதுபோன்று பின்வறுமை பயத்தலின், அது கொள்ளற்க வென்பதாம்.

தெளி: (இ-ள்.) அன்பின்விழையார் – (ஒருவனை) அன்புபற்றி விரும்பாது, பொருள்விழையும்-பொருள்பற்றி விரும்பும், ஆய்தொடியார்-மகளிர், இன்சொல்–(அப்பொருள் கைக்கு வருமளவும் தாம் அன்புபற்றி விரும்பினவராகச் சொல்லும்) இனியசொல், (அவனுக்கு), இழுக்கு-(பின்பு) இன்னாமையை, தரும்-உண்டாக்கும், (எ-று).

பொருள் என்றவிடத்து இன்சாரியை செய்யுள் விகாரத்தாற் றொக்கு நின்றது. இச்சாரியை தொகாது நின்றால் அது பொருளின் (பொருள்பற்றி) எனவரும். இன் என்பது இங்குப் பற்றி என்னும் பொருளில் வந்தது. 'ஆய்தொடியார்' ஆராய்ந் தணிந்த வளையலை யுடைய பெண்கள். 'ஆய்தொடியார்' என்றதனாலும், 'இன்சொல்' என்றதனாலும், அவ்வாய்தொடியாரது (மயக்கும்) சாதனம் சொல்லப்பட்டது. அவ்வினியசொல் அக்காலத்திற்கு இனிமை தருவது போன்றிருந்துபின்பு தரித்திரத்தை யுண்டாக்குதலால், அவ்வினிய சொல்லைக் கொள்ளலாகா தென்பதாம்.

(க-து.) அன்புபற்றி விரும்பாது பொருள்பற்றி விரும்பும் பரத்தையரது இன்சொல் துன்பத்தையே தரும் என்பது.

1. The sweet words of prostitues who love a man not from affection but from a desire to ring wealth, will cause sorrow.

---

**உ. பயன்றூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்**
**நயன்றூக்கி நள்ளா விடல்.**

---

*இன்னாமையை-துன்பத்தை.

‡ஆய்ந்ததொடியினையுடையாரென்றதனாலும், இனியசொல்என்றதனாலும் என்றும் பாடமுண்டு.

†கருவி-ஆய்தொடியும் இன்சொல்லும்.

பரி :— (இ-ள்.) ஒருவனுக்கு உள்ளபொருளை அளந்தறிந்து அஃ தெய்துந்துணையும் தம் பண்புடைமை சொல்லும் *பண்பில்லாத மகளிரது ஒழுகலாற்றினை ஆராய்ந்தறிந்து †அவரைப் பொருந்தாது விடுக, (எ-று.)

பண்பு சொல்லின்கணல்லது தங்கட் கிடவாமை தோன்றப் 'பண்பின் மகளிர்' என்றும், ‡அவர்க்கு ¶அது சாதிதருமமாதல் நூலானேயன்றி $அவர் செயலானு மறிந்தென்பார் 'நயன்றூக்கி' என்றும், 0 அவ்வறிவு அவரை விடுதற்கு உபாயமென்பது தோன்றப் பின் 'நள்ளாவிடல்' என்றுங் கூறினார்.

தெளி :— (இ-ள்.) பயன் றூக்கி-(ஒருவனுக்கு உள்ள)பொருளை அளந்தறிந்து, பண்புரைக்கும்-(அப்பொருள் கிடைக்கு மளவும் தமது) குணமுடைமையைச் சொல்லும், பண்பின் மகளிர்-குணமில்லாத மகளிரது, நயன்றூக்கி-நடக்கையின் வழியை ஆராய்ந்தறிந்து, நள்ளா-(அவரைப்) பொருந்தாமல், விடல்-விடக்கடவர்,(எ-று).

பண்புசொல்லிலல்லது அவர் தம்மிடத் தில்லாமை தோன்றப் 'பண்பின் மகளிர்' என்றும், அவர்க்கு அது சாதிதருமமாதலை நூலாலே யல்லாமல் அவர் செயலாலும் அறிந்தென்பார் 'நயன்றூக்கி' என்றும், அவ்வறிவு அவரை விடுதற்கு உபாயமென்பது தோன்றப் பின்பு 'நள்ளாவிடல்' என்றும் சொல்லினார்.

(க-து.) பயனைக்கருதி யினியவார்த்தையைப் பேசும் பரத்தையரின் ஒழுக்கத்தை யறிந்து அவரைச் சேராதிருத்தல் வேண்டும்.

2. One must discriminate the character of the illnatured women, who after ascertaining the wealth of a man speak as if they were of good-nature till acquiring that wealth and avoid their friendship.

---

ரு. பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையி
லேதில் பிணந்தழீஇ யற்று.

பரி :— (இ-ள்.) கொடுப்பாரை விரும்பாது பொருளையே விரும்பும் பொதுமகளிரது பொய்ம்மையை யுடைய முயக்கம் பிண மெடுப்பார் இருட்டறைக்கண்ணே முன்னறியாத பிணத்தைத் தழுவினாற் போலும், (எ-று).

---

* பொதுமகளிர்க்குப் பண்பில்லை யென்பது நாலடியார் பொது மகளிரில் "பொத்தநூற் கல்லும் புணர்பிரியா வன்றிலும்போல், நித்தலு நம்மைப் பிரியல மென்றுரைத்த, பொற்றொடியும் போர்த்த கர்க்கோ டாயினாள் நன்னெஞ்சே நிற்றியோ போதியோ நீ" என்று கூறுவதனாலு மறிதற் பாற்றும். †அவரை-பண்பில்லாத மகளிரை.

‡அவர்க்கு-பொதுமகளிர்க்கு.

¶அது-பண்பில்லாமை. $அவர்-பொதுமகளிர்.

0 அவ்வறிவு-பொதுமகளிர்க்குப் பண்பில்லாமை சாதிதருமமா யிருத்தலைச் சாஸ்திரவாயிலாகவன்றி அவரது ஒழுக்கத்தினாலு மறிந்த அறிவு.

பொருட்கு முயங்கும் மகளிர், கருத்துஞ் செயலும் ஆராயாது சாதியும் பருவமும் ஒவ்வாதானை முயங்குங்கால் *அவர் குறிப்புக் கூலிக்குப் பிணமெடுப்பார் காணப்படாததோ ரிடத்தின்கண் இயைபில்லாததோர் பிணத்தை எடுக்குங்கால் †அவர் குறிப்போடொக்கு மெனவே, ‡அகத்தால் அருவரா நின்றும் பொருணோக்கிப் புறத்தாற் றழுவுவர்; ¶அதனையொழிகவென்பதாம். இவை மூன்று பாட்டானும் ||அவர் சொல்லும் செயலும் பொய்யென்பது கூறப்பட்டது.

தெளி:— (இ-ள்.) பொருட்பெண்டிர்-(கொடுப்பாரை விரும்பாது) பொருளையே விரும்பும் பொதுமகளிரது, பொய்ம்மை-பொய்ம்மையையுடைய, முயக்கம்-தழுவுதலானது, (பிணமெடுப்பவர்) இருட்டறையில்-இருட்டுவீட்டிலே, ஏதில் பிணம்-முன்னறியாத பிணத்தை, தழீஇயற்று-தழுவினாற்போலும், (எ-று).

பொருளுக்குத்தழுவும்பரத்தையர்கருத்தும்செயலும்ஆராயாமல் சாதியும் பருவமும் ஒவ்வாதானைக் கூடும் போது அவர் குறிப்புக் கூலிக்குப் பிணமெடுப்பவர் காணப்படாததோரிடத்தில் சம்பந்தமில்லாததொரு பிணத்தை எடுக்கும்போது அவர் குறிப்போடொக்கும் எனவே, அகத்தால் அருவரா நின்றும் பொருளைநோக்கிப் புறத்தால் தழுவுவர்; அதனை ஒழியக்கடவரென்பதாம். இவை மூன்று பாட்டாலும் அவர் சொல்லும் செயலும் பொய்யென்பது சொல்லப்பட்டது.

(கூ-து.) பரத்தையர் பிறரைப் புணருதல் கூலிக்குப் பிணமெடுப்பவர் இருட்டு வீட்டில் பிணத்தைத் தழுவுதலோடொக்கும்.

3. The false embraces of wealth-loving women are like bearers embracing a strange corpse in a dark room.

---

## ச. பொருட்பொருளார் புன்னலந் தோயா ரருட்பொரு ளாயு மறிவி னவர்.

பரி:— (இ-ள்.) இன்பமாகிய பொருளை இகழ்ந்து பொருளாகிய பொருளையே விரும்பும் மகளிரது புல்லிய நலத்தை அருளோடுகூடிய ††பொருளை ஆராய்ந்து செய்யும் அறிவினையுடையார் தீண்டார், (எ-று).

0 அறமுதலிய நான்கும் பொருளெனப்படுதலின், பொருட்

---

* அவர் குறிப்பு-பொதுமகளிரது எண்ணம்.

† அவர்-கூலிக்குப் பிணமெடுப்பவர்.

‡ அகத்தால் அருவராநின்றும்-மனத்தால் வெறுத்தும்.

¶ அதனை-தழுவுதலை. || அவர்-பொதுமகளிர்.

†† பொருளை-அறமாகிய பொருளை.

0 அறமுதலியவற்றைப் பொருளாகக்கூறுதல் தார்க்கீகருள் ஒரு சாராராய வைசேடிகரது மதம்.

*பொருள் அருட்பொருளென *விசேடித்தார். புன்மை-†இழிந்தார்க்கே உரித்தாதல். தாம் விரும்புகின்ற அறத்திற்கு ‡அவர் மெய்ந்நலம் மறுதலை யாகலின், தோயார் என்பதாம்.*

தெளி :—(இ-ள்.) பொருட்பொருளார்-(இன்பமாகிய பொருளை இகழ்ந்து) பொருளாகிய பொருளையே விரும்பும் மகளிரது, புன்னலம்-புல்லிய நலத்தை, அருட்பொருள்-அருளோடுகூடிய பொருளை, ஆயும்-ஆராய்ந்து சம்பாதிக்கும், அறிவினவர்-அறிவினையுடையவர், தோயார்-தீண்டார், (எ-று).

*அறமுதலிய நான்கும் பொருளெனப்படுதலால், பொருட்பொருள் அருட்பொருள் என விசேடித்துக் கூறினர். புன்மை-இழிந்தார்க்கே உரியதாதல், (அருட்பொருளாயு மறிவினவர்) தாம் விரும்புகின்ற அறத்திற்கு அவரது மெய்ந்நலம் விரோதமாகலால், தோயார் என்பதாம்.*

(க-து) *அருளை நாடும் அறிஞர் பொருளைநாடும் பரத்தையரைப் புணரார் என்பது.*

4. The wise who seek the wealth of grace will not desire the base favours of women who desire wealth and not pleasure as their riches.

---

## ரு. பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின் மாண்ட வறிவி னவர்.

பரி :—(இ-ள்.) இயற்கையாகிய மதிநன்மையான் மாட்சிமைப்பட்ட ¶செயற்கை யறிவினை யுடையார் பொருள் கொடுப்பார்க் கெல்லாம் பொதுவாய ஆசையினையுடைய மகளிரது புல்லிய நலத்தைத் தீண்டார், (எ-று).

*மதிநன்மை-முற்பிறப்புகளிற் செய்த நல்வினைகளான் மனந் தெளி வுடைத்தாதல். அதனோ னன்றிக் கல்வியறிவு மாட்சிமைப்*

---

* *விசேடித்தல்-விசேடணத்துடன் (அடையோடு) கூடி வருதல் இங்குப் பொருட் பொருள், அருட் பொருள் என்னு மிரண்டனுள் முன்னுள்ள பொருள் என்பது பொருள் என்னும் விசேடணத்தையும், பின்னுள்ள பொருளென்பது அருள் என்னும் விசேடணத்தையும் பெற்றுவந்தன.*

† *இழிந்தார்-சாதியாலிழிந்தார், ஒழுக்கத்தா லிழிந்தாரென் றிருதிறத்தாராவர். "சாதிசண் டாளன் கதிபெறுந் தருமம் வழுவலிற் கன்மசண் டாளன், ஓதிய வழிக ளொன்றினுங் கதிதா னுற்றிடா னென்பதுண்மையதே" என்று ஞானசித்தி கூறுவதிங் கறிதற்பாலதாம்.*

‡ *அவர் மெய்ந்நலம்-பொதுமகளிரது உடம்பைத்தழுவிப் போகித்தல்.*

¶ *செயற்கையறிவு-கல்விகேள்விகளாலாயவறிவு.*

படாமையின் 'மதிநலத்தின் மாண்டவறிவினவர்' என்றும், *அவ்வறிவுடையார்க்கு †அவராசையது பொய்ம்மையும் மெய்ந்நலத்தது புன்மையும் விளங்கித் தோன்றலின் தோயார்' என்றுங்கூறினார்.

தெளி :—(இ-ள்.) மதிநலத்தின்-(இயற்கையாகிய) மதிநன்மையால், மாண்ட-மாட்சிமைப்பட்ட, அறிவினவர்-(செயற்கை) அறிவினையுடையார், பொதுநலத்தார்-(பொருள் கொடுப்பவர்க்கெல்லாம்) பொதுவாகிய ஆசையினையுடைய மகளிரது, புன்னலம்-புல்லிய நலத்தை, தோயார்-தீண்டார், (எ-று).

மதிநன்மை-முற்பிறப்புகளிற்செய்த நல்வினைகளால் மனந் தெளிவுடையதாதல். அத்தெளிவினு லல்லாமல் கல்வியறிவுமாட்சிமைப் படாமையால் 'மதிநலத்தின் மாண்ட வறிவினவர்' என்றும், அவ்வறிவுடையார்க்கு அவராசையது பொய்ம்மையும மெய்ந்நலத்தது இழிவும் விளங்கித் தோன்றலால் 'தோயார்' என்றும் சொல்லினார்.

(க-து.) இயற்கையறிவினால் மேம்பட்ட செயற்கையறிவினையுடையார் பரத்தையரது புணர்ச்சியை விரும்பார் என்பது.

5. Those whose knowledge is heightened by their natural sense will not covet the trifling delights of women whose favour are common (to all who give wealth).

---

சு. தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள்.

பரி: ..(இ-ள்.) ‡ஆடல்பாடல் அழகென்பனவற்றுற் களித்துத் தம் புல்லிய நலத்தை விலைகொடுப்பார் யாவர்மாட்டும் பரப்பும் மகளிர் தோளினை அறிவொழுக்கங்களானாய தம்புகழை உலகத்துப் பரப்புதற்குரிய உயர்ந்தோர் தீண்டார், (எ-று).

ஆடன் முதலிய மூன்று முடைமை அவர்க்கு மேம்பாடாகலின் 'தகை', என்றும், தோயின் அறிவொழுக்கங்கள் அழியுமாகலின் அவற்றுற் புகழ்பரப்புவார் 'தோயார்' என்றுங் கூறினார். தந்நல மென்புழி ¶நலம் ஆகுபெயர். இவைமூன்று பாட்டானும் ()அவரை உயர்ந்தோர் தீண்டா ரென்பது கூறப்பட்டது.

---

*அவ்வறிவுடையார்க்கு-இயற்கையறிவும் செயற்கையறிவுமுடையார்க்கு. †அவர்-பொதுமகளிர்.

‡ "எழிலாற் பாடலாடலினு லிச்சை பெருக்கி யுளமொவ்வா, மொழியாற் செயலால் வயமாக்கி முற்றும் பொருளைப் பறித்துவிடும், பழிநாணுத பரத்தையரைப் பற்று ராய்ந்த பண்புடையார்" என்பது விநாயக புராணம்.

¶நலம் என்பது நலத்தினலாய புகழை யுணர்த்துதலால் கருவியாகுபெயராம். ()அவரை-பரத்தையரை.

தெளி: — (இ-ள்.) தகை - ஆடல் பாடல் அழகென்பன வற்றால், செருக்கி - களித்து, புன்னலம் - (தமது) புல்லிய நலத்தை, பாரிப்பார்- (விலைகொடுப்பார் யாவரிடத்தும்)பரப்பும் மகளிரது, தோள்-தோளை, தந்நலம் - (அறிவொழுக்கங்களா லாகிய) தமது புகழை, பாரிப்பார் - (உலகத்தில்) பரப்புதற்குரிய உயர்ந்தோர், தோயார் - தீண்டார், (எ-று).

ஆடல் பாடல் அழகென்னு மூன்று முடைமை அப்பரத்தையர்க்கு மேம்பாடாகலால் 'தகை' என்றும், தோய்ந்தால் அறிவொழுக்கங்கள் அழியுமாகலால் அவ்வறிவொழுக்கங்களால் புகழைப் பரப்புவார் 'தோயார்' என்றும் சொல்லினார். தந்நலம் என்றவிடத்து நலமென்பது கருவியாகுபெயராம் இவை மூன்று பாட்டாலும் அவரை உயர்ந்தோர் திண்டாரென்பது சொல்லப்பட்டது.

(க-து) தமது புகழைப் பரப்பும் பெரியார் பொது மகளிரை விரும்பார் என்பது.

6. Those who would spread the fame of their greatness, will not desire the shoulders of women who rejoice in their accomplishments and bestow their despicable favours on all who pay.

———

எ. நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்
பேணிப் புணர்பவர் தோள்.

பரி:— (இ-ள்.) நெஞ்சினாற் பிறவற்றை ஆசைப்பட்டு அவை காரணமாகக் கொடுப்பாரை மெய்யாற் புணரும் மகளிர் தோள்களை †நிறையாற் றிருந்திய நெஞ்சமில்லாதார் தோய்வர், (எ-று).

பொருளும் அதனாற் படைக்கப்படுவனவும் விரும்பும் நெஞ்சு *அவற்றின் மேலதாகலின் புணர்வதுஉடம்புமாத்திர மென்பதறிந்து ‡அதுவழி ஓடாது நிற்கும் நெஞ்சினையுடையார் தோயாமையின், ¶அஃதிலார் 'தோய்வர்' என்றார்.

தெளி:— (இ-ள்.) நெஞ்சின் - நெஞ்சினால், பிற - வேறு பொருள்களை, பேணி - ஆசைப்பட்டு, (அப்பொருள் காரணமாகக் கொடுப்பவரை), புணர்பவர் - (மெய்யினால்) புணரும் மகளிரது, தோள் - தோள்களை, நிறைநெஞ்சமில்லவர் - நிறையினால் திருந்திய நெஞ்சமில்லாதவர், தோய்வர் - புணர்வர், (எ-று).

---

† ஆடவர்க்குரிய நிறை, மகளிர்க்குரிய நிறை யென நிறை யிருதிறத்ததாம். ஆடவர்க்குரிய நிறை-காப்பன காத்துக் கடிவன கடிந்து ஒழுகுமொழுக்கமாம்; மகளிர்க்குரிய நிறை - நெஞ்சைக் கற்பு நெறியில் நிறுத்துதலாம். இங்குக் கூறிய நிறை ஆடவர்க்குரிய நிறையாம்.

*அவற்றின்மேலதாகலின்-பொருளும் அப்பொருளால் உண்டாக்கிக் கொள்ளும் போகப்பொருள்களும் என்னும் இரண்டன்கணிருப்பதாகலின்.

‡அதுவழி-அப்புணர்ச்சியின் வழி. ¶அஃதிலார்-நிறைநெஞ்சமில்லவர்.

பொருளையும் அப்பொருளால் சம்பாதிப்பனவற்றையும் விரும்பு கிற நெஞ்சு அவற்றின் மேலதாகலின் புணர்வது அவருடம்பு மாத்திர மென்பதறிந்து அதன் வழி ஓடாது நிற்கும் நெஞ்சினையுடையார் தோயாரமையால், அஃதிலரார் 'தோய்வர்' என்றார்.

(க-து.) நிறையால் திருந்திய மனமில்லாதவர் பரத்தையரைச் சேர்வர் என்பது.

7. Those who are devoid of a controlled mind will covet the shoulders of women who embrace them, while their mind covets other things.

———

**அ. ஆயு மறிவின ரல்லார்க் கணங்கென்ப**
**மாய மகளிர் முயக்கு.**

பரி:—(இ-ள்.) உருவு சொற் செயல்களான் வஞ்சித்தலை வல்ல மகளிரது முயக்கத்தை அவ்வஞ்சனை ஆராய்ந்தறியு மறிவுடைய ரல்லார்க்கு *அணங்குதாக்கென்று சொல்லுவர் நூலோர், (எ-று).

அணங்கு-காமநெறியான் உயிர்கொள்ளும் தெய்வமகள். தாக்கு-தீண்டல். ‡இவ்வுருவகத்தான் ¶அம்முயக்கம் முன் இனிது போன்று பின்னுயிர்கோடல் பெற்றும். $இது நூலோர் துணிவென்பது தோன்ற அவர்மேல் வைத்துக்கூறினார். †அப்பெயர் அவாய்நிலை யான் வந்தது.

---

*அணங்குதாக்கு-மோகினிபிடித்தல். காமசிந்தனையுடைய வாலி பர்களை மோகினி யென்னுந் தெய்வம் பிடித்துக் கனவில் பிரிய முள்ள மங்கையர்போல வந்து புணர்ந்து, வீரியத்தை வெளிப்படுத்தி நாளடைவில் இளைக்கச் செய்து கொல்லும் என்பது சம்பிரதாயம். காமத்துப்பால்—தகையணங்குறுத்தலென்னும் அதிகாரம் 2-வது குற ளில் ''தாக்கணங்கு'' என்று வந்திருத்தலும், அதற்குப் பொருள் ''தானே தாக்கி வருத்துவதோ ரணங்கு'' என்று பொருள் கூறியிருத் தலு மிங்குணர்தற் பாலனவாம்.

‡இவ்வுருகத்தான்—மாயமகளிர் முயக்கத்தை அணங்கு (தாக்கு) என்று உருவகஞ் செய்திருத்தலால்.

¶''ஆமாபோனக்கி யவர்கைப் பொருள் கொண்டு, சேமாப்போற் குப்புறூஉஞ் சில்லைக்கணன்பினை, ஏமாந்தெமதென்றிருந்தார் பெறுப வே, தாமாம் பலரா னகை'' என்றுநாலடியார் கூறுவ திங்கறியத்தக்க தாம். (ஆமா-காட்டுப்பசு. காட்டுப்பசு முன்னே ஒருவரை யினிமை யுண்டாமாறு நக்கிப்பின்னே கொல்வது போன்று பொதுமகளிரது புணர்ச்சியும் முன்னே இனிமையுண்டாமாறு செய்து பின்னே தன்னைப் பெற்றாரை முதலற அழிக்குமென்பதாம்).

$இது-பொதுமகளிரது புணர்ச்சி முன்னே இனிதுபோன்றிருந்து பின்னே உயிரைக் கொள்ளுதல்.

†என்ப என்பது நூலோர் என்பதை யவாவி (விரும்பி) நின்றமை யின், அது வருவிக்கப்பட்டது.

தெளி :—(இ-ள்.) மாயமகளிர்-(உருவு சொல் செயல்களால்) வஞ்சித்தலில் வல்லமகளிரது, முயக்கு-புணர்ச்சியை, ஆயும்-(அவ்வஞ்சனையை) ஆராய்ந்தறியும், அறிவினரல்லார்க்கு-அறிவுடையவ ரல்லாதவர்க்கு, அணங்கு-அணங்குதாக்கு, என்ப-என்று சொல்லுவர், (நூலோர்), (எ-று).

அணங்கு-காமவழியால் உயிரைக்கொள்ளுந் தெய்வமகள். தாக்கு-தீண்டுதல். இவ்வுருவகத்தால் அப்புணர்ச்சி முன்னே இனிதுபோலத் தோன்றிப் பின்பு உயிரைக்கொள்ளுதல் பெற்றும். இது நூலோர் துணிவென்பதுதோன்ற 'என்ப' என்று அந்நூலோர்மேல் வைத்துச்சொல்லினுர். நூலோரென்னும் அப்பெயர் அவாய்நிலையால் வந்தது.

(க-து.) நூலோர் பரத்தையர் புணர்ச்சியை அறிவில்லார்க்கு அணங்கு தாக்காமென்று சொல்லுவர் என்பது.

8. The wise say that to those who are devoid of discriminating sense, the embrace of the faithless women are as ruinous as those of the celestial females.

---

௯. *வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்க ளாழு மளறு.

பரி :—(இ-ள்.) உயர்ந்தோர் இழிந்தோ ரென்னுது விலைகொடுப்பார் யாவரையும் முயங்கும் மகளிரது மெல்லிய தோள்கள் †அக்குற்றத்தை யறியும் அறிவில்லாத கீழ்மக்கள் புக்கழுந்து நிரயம், (எ-று).

உயர்தற் கேதுவாகலின் 'புரை' எனப்பட்டது. சாதியானிழிந்தாரி னீக்குதற்குப் 'புரையிலாப் பூரியர்கள்' என்றும், ‡அவர் ஆழ்தற்கேது உருவமுதலிய மூன்றுமென்பதுதோன்ற 'மாணிழையார் மென்றோள்' எனறும், ¶அவர்க்கு அளற்றினை யிடையின்றிப் பயக்குமென்பது தோன்ற $உருவகமாக்கியுங் கூறினுர்.

தெளி :—(இ-ள்.) வரைவிலா-உயர்ந்தோர் இழிந்தோரென்னுது விலைகொடுப்பவர் யாவரையும் கூடும், மாணிழையார்-மகளிரது, மென்றோள்-மெல்லியதோள்கள், புரையிலா-(அக்குற்றத்தை அறியும்) அறிவில்லாத, பூரியர்கள்-கீழ்மக்கள், ஆழும்-(புகுந்து) அழுந்தும், அளறு-நரகமாம், (எ-று).

பொதுமகளிர் யாவரையுங் கூடுங் குற்றத்தை யொருவரறிதல் அவருயர்தற்குக் காரணமாயிருத்தலால் அவ்வறிதல் 'புரை' என்று

---

* வரைவிலாத-ஒரெல்லைக்குள் நிற்றலில்லாத.

† அக்குற்றத்தை-பொதுமகளிர் யாவரையும்புணருங் குற்றத்தை.

‡ அவர்-புரையிலாப் பூரியர்கள். ¶ அவர்க்கு-புரையிலாப் பூரியர்க்கு.

$ உருவகமாக்கியும்-வரைவிலாமாணிழையார் மென்தோளை அளறு (நரகம்) என்று உருவகஞ்செய்தும்.

கூறப்பட்டது. சாதியா லிழிந்தாரினின்றும் நீக்குதற்குப் 'புரையி-லாப்பூரியர்கள்' என்றும், அவராழ்தற்கேது உருவு சொல் செயல் என்னும் மூன்றுமென்பது தோன்ற 'மாணிழையார் மென்றோள்' என்றும், அவர்க்கு நரகத்தைத் தடையில்லாமல் தருமென்பது தோன்ற (தோள் அளறு என்று) உருவகமாக்கியுஞ் சொல்லினர். மாணிழையார்-மாட்சிமைப்பட்ட ஆபரணத்தை யணிந்தமகளிர்.

(க-து.) பரத்தையரது தோள்கள் கீழ்மக்கள் சென்றழுந்தும் நரகமாம் என்பது.

9. The delicate shoulders of prostitutes with priceless jewels are a hell into which are plunged the ignorant base.

---

## கO. இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந் திருநீக்கப் பட்டார் தொடர்பு.

பரி:—(இ-ள்.) *கவர்த்த மனத்தினையுடைய மகளிரும் கள்ளும் சூதுமென இம்மூன்றும் திருமகளாற் றுறக்கப்பட்டார்க்கு நட்பு, (எ-று).

இருமனம்—ஒருவனோடு புணர்தலும் புணராமையும் ஒருகாலத்தே யுடையமனம். †கவறு—ஆகுபெயர். ஒத்த குற்றத்த வாகலின், கள்ளும் சூதும் உடன் கூறப்பட்டன. வடநூலாரும் ‡இக்கருத்தான் விதனமென உடன்கூறினர். வருகின்ற அதிகார முறைமையும் இதனானறிக. ¶திணைவிரா யெண்ணியவழிப் பன்மைபற்றி முடிபு கோடலின், ஈண்டு அஃறிணையாற் கொண்டது. திரு நீக்கப்பட்டமை $இக்குறிகளான் அறியப்படுமென்பதாம். இவை நான்குபாட்-டானும் 0சேர்வார் இழிந்தோ ரென்பது கூறப்பட்டது.

---

* கவர்த்த—இரண்டுபட்ட.

† பாய்ச்சிகை (சூதாடுகருவி) என்னும் பொருளதான கவறு என்னும் சினைப்பெயர் அதன் முதலாகிய சூதினையுணர்த்துதலால் சினையாகுபெயராம்.

‡ இவ்வபிப்பிராயத்தினால் காமங்கள் சூது என்னும் மூன்றனையும் விசனமென்று உடன்வைத்து "வேட்டங் கடுஞ்சொன் மிகுதண்டஞ் சூதுபொரு, ளீட்டக்கட் காமமோ டேழு" என்று கூறினாரென்க.

¶ 'பலவயி னானு மெண்ணுத்திணை விரவுப்பெயர், அஃறிணை முடிபின செய்யு ளுள்ளே" என்னும் (தொல்காப்பிய சூத்திர) விதியினால், அஃறிணையோடு உயர்திணை விரவி மிகுதியினால் தொடர்பு என்று அஃறிணை முடிபுகொண்டதென்க.

$ இக்குறிகளால்—இருமனப்பெண்டிர் நட்பு, கள்ளுண்டல், கவறாடல் என்னு மிவ்வடையாளங்களால்.

0 சேர்வார்—பொதுமகளிரைப் புணர்வார்.

தெளி :— (இ-ள்.) இருமனப்பெண்டிரும் - கவர்த்தமனத்தை யுடைய மகளிரும், கள்ளும்–, கவறும் - சூதும், (என இம்மூன்றும்), திரு - திருமகளால், நீக்கப்பட்டார் - நீக்கப்பட்டவர்க்கு, தொடர்பு - நட்பாம், (எ-று).

இருமனம் - ஒருவனோடு கூடுதலும் கூடாமையும் ஒருகாலத்திலே யுடையமனம். கவறு - சினையாகுபெயர். கள்ளும் சூதும் இருமனப் பெண்டிரோடொத்த குற்ற முடையனவாகலால், அக்கள்ளும் சூதும் இருமனப் பெண்டிருடன் சொல்லப்பட்டன. வடநூலாரும் இவ்வபிப் பிராயத்தினுல் காமம் கள் சூது என்பனவற்றை வேட்டை கடுஞ் சொல் முதலியவற்றோடு விசனமென்றுடன் சொல்லினுர். (கள்ளுண் ணுமையென்று பின்வருகின்ற) அதிகாரமுறைமையையும் (இருமனப் பெண்டிருங் கள்ளும் என்னும்) இதனுல் அறிக. இருமனப் பெண்டிர் என்னும் உயர்திணையும் கள்ளுங் கவறும் என்னும் அஃறிணையும் கலந் தெண்ணியவிடத்து (கள்ளுங் கவறும் என்னும் அஃறிணைப்) பன்மை பற்றி (அஃறிணை) முடிபு கொள்ளவேண்டி யிருத்தலால், இங்குத் தொடர்பு என்னும் அஃறிணையால் (உயர்திணை) முடிபுகொண்டது. திருநீக்கப்பட்டமை இவ்வடையாளங்களால் அறியப்படுமென்பதாம். இவை நான்கு பாட்டாலும் சேர்பவர் இழிந்தோரென்பது சொல்லப் பட்டது.

(க-து.) இருமனப்பெண்டிர் நட்பும், கள் குடித்தலும், சூதாடுதலு முடையவர் தவருது தரித்திர ராவார் என்பது.

10. Treacherous women, liquor and gambling are the associates of such as have been forsaken by the Goddess of fortune.

---

## முப்பதாவது அதிகாரம்

### கள்ளுண்ணுமை — Against drunkenness

பரி:— இனி ஒழுக்கமும் உணர்வும் அழித்தற்கண் அவ்வரைவின் மக ளிரோ டொப்பதாய கள்ளினை யுண்ணுமையது சிறப்பு †எதிர்மறை முகத் தாற் கூறுகின்றுர்.

தெளி :— இனி ஒழுக்கமும் உணர்வும் அழித்தலில் அப்பரத்தைய ரோடு ஒப்பதாகிய கள்ளினை உண்ணுமையது சிறப்பினை எதிர்மறை முகத்தால் சொல்லுகிறுர்.

---

க. உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றுங்
கட்காதல் கொண்டொழுகு வார்.

† எதிர்மறைமுகத்தால் – (கள்ளுண்டல் என்று உடன்பாட்டு வாயிலாகக் கள்ளுண்ணுமையின் சிறப்பினைக் கூருது கள்ளுண்ணுமை யென்று) எதிர்மறைவாயிலாக.

பரி: — (இ-ள்.) கள்ளின்மேற் காதல்செய்தொழுகு மரசர் எஞ்ஞான்றும் பகைவரா னஞ்சப்படார்; அதுவேயன்றி முன்னெய்தி நின்ற ஒளியினையு மிழப்பர், (எ-று).

*அறிவின்மையால், பொருள்படை †முதலியவற்றாற் பெரியராய காலத்தும் பகைவர் அஞ்சார்; தம்முன்னோரா னெய்திநின்ற ‡ஒளியினையும் இகழற்பாட்டான் இழப்பரென்பதாம். ¶இவை யிரண்டானும் அரசு இனிது செல்லாதென்பது இதனாற் கூறப்பட்டது.*

தெளி: — (இ-ள்.) *கட்காதல் கொண்டு - கள்ளின்மேல் ஆசை கொண்டு, ஒழுகுவார்-நடக்குமரசர், எஞ்ஞான்றும்-எந்நாளும், உட்கப்படாஅர் - (பகைவரால்) அஞ்சப்படார், (அதுவேயல்லாமல்), ஒளி - (முன்பெற்று நின்ற) ஒளியினையும், இழப்பர் - இழந்துவிடுவர், (எ-று).*

*அறிவில்லாமையால், பொருள் படை முதலியவற்றால் பெரியராகிய காலத்தும் (கட்காதல் கொண்டொழுகுவார்க்குப்) பகைவர் அஞ்சார்; (அவர்) தம்முன்னோரால் அடைந்துநின்ற ஒளியினையும் (பிறரால்) இகழப்படுதலால் இழப்பரென்பதாம். இவை இரண்டாலும் அரசு இனிது செல்லாதென்பது இதனால் சொல்லப்பட்டது.*

(கு-து.) *கள்ளுண்ணுதலை விரும்பும் அரசர் தம் பகைவரால் அஞ்சப்படார்; அதுவேயுமன்றி மதிப்பினையும் இழப்பர் என்பது.*

1. Those kings who thirst after drink will never inspire fear in their enemies nor retain their fame.

---

**௨. உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரா**
**னெண்ணப் படவேண்டா தார்.**

பரி: — (இ-ள்.) அறிவுடையராயினார் அஃதிலராதற்கு ஏதுவாய கள்ளினை உண்ணாதொழிக; *அன்றியே உண்ணல்வேண்டுவார் உளராயின், நல்லோரால் எண்ணப்படுதலை வேண்டாதார் உண்க, (எ-று).

*பெறுதற்கரிய அறிவைப் பெற்றுவைத்தும் கள்ளா னழித்துக் கொள்வாரை இயல்பாகவே அஃதில்லாத விலங்குகளுடனும் எண்ணுராகலின், சான்றோரா னெண்ணப்பட வேண்டாதார் உண்க என்றார்.*

தெளி: — (இ-ள்.) *(அறிவுடையராயினார்) கள்ளை - (அவ்வறிவிலராதற்குக் காரணமாகிய) கள்ளினை, உண்ணற்க - உண்ணுதிருக்கக்*

---

*† முதலிய என்றமையின், ஆண்மையுங் கொள்க.*

*‡ ஒளி - தானுளனாயகாலத்து மிக்குத் தோன்றுதலுடைமை (மதிப்பு).*

*¶ இவையிரண்டானும்-பகைவரஞ்சாமை, ஒளியினை (மதிப்பை) யிழத்தலென்னு மிவ்விரண்டாலும்.*

** அன்றியே - கள்ளினை யுண்ணுத லொழியாமல்.*

கடவர், (அல்லாமலே), உணில்-உண்ணல் வேண்டுவாரிருப்பாராயின், சான்றோரான் – நல்லோரால், எண்ணப்பட வேண்டாதார் – எண்ணப்படுதலை விரும்பாதவர், உண்க-உண்ணக்கடவர், (எ-று).

பெறுதற்கரிய அறிவைப் பெற்றிருந்தும் கள்ளால் அழித்துக் கொள்ளுவாரை இயல்பாகவே அவ்வறிவில்லாத மிருகங்களுடனும் எண்ணுராகலால், சான்றோரா லெண்ணப்படவேண்டாதார் உண்க என்றார்.

(க-து.) கள்ளினை யுண்போர் பெரியோரால் மதிக்கப்படார்.

2. Let no liquor be drunk (by the wise); if it is desired, let it be drunk by those who care not for the esteem of the great.

---

௩. ஈன்றாள் முகத்தேயு மின்னாதா லென்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி.

பரி:—(இ-ள்.) யாது செய்யினும் உவக்குந் தாய்முன்பாயினும் கள்ளுண்டு களித்தல் இன்னாதாம்; ஆனபின் குற்றம் யாதும் பொறாத சான்றோர்முன்பு களித்தல் †அவர்க்கியாதாம், (எ-று).

மனமொழிமெய்கள் தம்வயத்த வன்மையான் நாணழியும்; அழியவே ஈன்றாட்கும் இன்னாதாயிற்று; ஆனபின், கள் ‡இருமையுங் கெடுத்த லறிந்து சேய்மைக்கண்ணே கடியுஞ் சான்றோர்க்கு இன்னாதாதல் சொல்ல வேண்டுமோ வென்பதாம்.

தெளி: —(இ-ள்.) ஈன்றாள் முகத்தேயும்-(யாதுசெய்தாலும் மகிழும்) தாய் முன்பாயினும், களி-(கள்ளுண்டு) களித்தல், இன்னாது-துன்பஞ் செய்வதாம், மற்றுச் சான்றோர் முகத்து-ஆனபின் (குற்றம் யாதும் பொறாத) பெரியோர் முன்பு, (களித்தல்), என்-(அவர்க்கு) யாதாகும், (எ-று).

ஆல்-அசை. (கள்ளுண்ணுதலால்) மனமொழி மெய்கள் தம் வசத்திருப்பனவாகாமையால் நாணம் அழியும்; அழியவே, (அது) தாய்க்கும் துன்பஞ் செய்வதாயிற்று; ஆனபிறகு, கள் இருமையும் கெடுத்தலறிந்து தூரத்தே விலக்கும் பெரியோர்க்குத் துன்பஞ் செய்வதாதல் சொல்லவேண்டுமோ வென்பதாம்.

(க-து.) ஒருவன் கள்ளுண்டு களித்தல் அவனையீன்றதாய்க்குந் துன்பந் தருமாயின், அது பெரியார்க்குத் துன்பந்தருவது பற்றிச் சொல்லவேண்டுமோ? என்பது.

3. Intoxication is painful even in the presence of one's mother; what will it not then be in that of the wise?

---

†அவர்க்கு-சான்றோர்க்கு.

‡இருமையும்-இப்பிறப்பின் பயனையும், வருபிறப்பின் பயனையும்.

**௪. நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்னும்
*பேணுப் பெருங்குற்றத் தார்க்கு.**

பரி:—(இ-ள்.) கள்ளென்று சொல்லப்படுகின்ற யாவரு மிகழும் மிக்க குற்றத்தினை யுடையாரை நாணென்று சொல்லப்படுகின்ற உயர்ந்தவள் நோக்குதற்கஞ்சி †அவர்க் கெதிர்முக மாகாள், (எ—று).

*காணுதற்கு மஞ்சி உலகத்தார் சேய்மைக்கண்ணே நீங்குவராக லிற் 'பேணு' என்றும், பின் ஒருவாற்றானுங் ‡கழுவப்படாமையின் 'பெருங்குற்றம்' என்றும், இழிந்தோர்பா னில்லாமையின் 'நல்லாள்' என்றும் கூறினார். $நாணென்னு நன்மை யெனற்பாலதனை நல்லா ளெனப் பெண்பாலாகக் கூறியது வடமொழி முறைமைபற்றி. இவை மூன்று பாட்டானும் ()ஒளியிழத்தற் காரணங் கூறப்பட்டது.*

தெளி:—(இ-ள்.) *கள்ளென்னும்—கள் என்று சொல்லப்படுகிற, பேணு—(யாவரும்) இகழும், பெருங்குற்றத்தார்க்கு—மிகுந்த குற்றத் தினையுடையவரை, நாணென்னு நல்லாள்—நாணமென்று சொல்லப் படுகிற உயர்ந்தவள், (பார்த்தற்கு அஞ்சி), புறங்கொடுக்கும்— (அவர்க்கு) எதிர்முகமாகாள், (எ—று).*

*(கள்ளுண்டு களிப்பவரைக்) காணுதற்கும் அஞ்சி உலகத்தார் தூரத்தே நீங்குவராதலால் 'பேணு' என்றும், (கள்ளுண்ணுங் குற்றம்) பின்னொருவழியானும் நீக்கப்படாமையால் பெருங்குற்றம்' என்றும், (நாண்) இழிந்தோரிடத்து நில்லாமையால் 'நல்லாள்' என்றும் சொல்லினார். நாணென்னு நன்மையெனற் பாலதனை நாணென்னு நல்லாளென்று நாணினைப் பெண்பாலாகக் கூறியது வடமொழி முறைமை பற்றியாம். இவை மூன்று பாட்டாலும் கள்ளுண்பார் ஒளியினையிழத்தற்குக் காரணம் சொல்லப்பட்டது.*

(க—து.) *கள்ளுண்பாரிடத்து நாணமின் றென்பது.*

4. The fair maid of modesty will turn her back on those who are guilty of the despicable great crime of drunkenness.

---

**௫. கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து
மெய்யறி யாமை கொளல்.**

---

* பேணு - விரும்பாத. † *அவர்க்கெதிர்முகமாகாள் — கள் ளென்னும் பேணுப் பெருங்குற்றத்தார்க்குப் பிரசன்னமாகாள்.*

‡ *கழுவப்படாமையின்—பிராயச்சித்தத்தாற் போக்கப்படாமை யால்.*

$ *பிரயோகவிவேகம் திங்குப்படலம் 15-வது பாடலினுரையில் '' 'நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்னும், பேணுப் பெருங்குற்றத் தார்க்கு' என்னுந்திருவள்ளுவரில் பரிமேலழகர் '' 'நாணென்னு நன்மை யெனற் பாலதனை நல்லாள் எனப் பெண் பாலாகக் கூறியது வடமொழி முறைமைபற்றி என்முராதலின், வடமொழியுள் லச்சை(வெட்கம்)என்பது பெண்பாற் சொல்லென்க' " என்றிருப்பதிங்குக் கவனித்தற்பாலதாம். பெண்பாலாக்கியது வட மொழிமுறைமைபற்றி என்றும் பாடமுண்டு.*

*()ஒளி-பிறரால் மதிக்கப்படுதல்.*

பரி:—(இ-ள்.) ஒருவன் விலைப்பொருளைக் கொடுத்துக் கள்ளாய தனக்கு மெய்ம்மறப்பினைக் கொள்ளுதல் அவன் பழவினைப் பயனுற் செய்வதறியாமையைத் தனக்குக் காரணமாக வுடைத்து, (எ-று).

தன்னை யறியாமை சொல்லவே, ஒழிந்தன யாவு மறியாமை சொல்ல வேண்டாவாயிற்று, கை †அப்பொருட்டாதல் ‡''பய னுடைப் பெருமரம் ○வீழ்ந்தெனக் கையற்று'' என்பதனானு மறிக. அறிவார் விலைகொடுத்து ஒன்றனைக் கொள்ளுங்காற் றீயது கொள் ளாமையின், மெய்யறியாமை கொளல் *முன்னை யறியாமையான் வந்த தென்பதாம்.

தெளி:—(இ-ள்.) (ஒருவன்) பொருள் கொடுத்து– விலைப்பொரு ளைக் கொடுத்து, மெய்யறியாமை–(கள்ளால் தனக்கு) மெய்ம் மறப்பினை, கொளல்-கொள்ளுதல், கையறியாமை-(அவன் பழவினைப் பயனாகிய) செய்வதறியாமை, உடைத்து– (தனக்குக் காரணமாக) உடையதாம், (எ-று).

கள்ளுண்டு களிப்பவன் தன்னை யறியாமை சொல்லவே, ஒழிந்தன வெல்லா வற்றையும் அறியாமை சொல்லவேண்டாவாயிற்று. இங்குக் கை யென்பது செய்வது என்னும் பொருளில் வந்தது. அறிவார் விலை கொடுத்து ஒன்றைக் கொள்ளுங்கால் தீயதைக் கொள்ளாமையால், மெய்யறியாமை கொளல் முன்னை யறியாமையால் வந்ததென்பதாம். (மெய்-உடம்பு).

(கு-து.) ஒருவன் பொருளைக் கொடுத்துக் கள்ளுண்டு மெய்ம் மறந்துவிடுதல் அவன் செய்வ தறியாமையின் பயனும் என்பது.

5. To give money and purchase unconsciousness is the result of one's ignorance (one's own actions).

———

சா. துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.

பரி:— (இ-ள்.) உறங்கினார் செத்தாரின் வேறுத லுடையரேனும் அக்காலத் தறிவின்மையான் வேறெனப்படார், அவ்வாறே கள்ளுண்பார் ○நஞ்சுண்பாரின் வேறுத லுடையரேனும் எக்காலத்துமறிவின்மையான் வேறெனப்படார், $அவர் தாமே யாவர், (எ-று).

உறங்கினார்க்கும் கள்ளுண்பார்க்கும் செத்தார் நஞ்சுண்பவரோடு வேற்றுமை உயிர்ப்பு நிற்றல். வேறுதலும் வேறன்மையு முடைமை காட்டற்கு உவமை புணர்க்கப்பட்டது.

---

† அப்பொருட்டாதல் – செய்வதென்னும் பொருளினையுடைய தாதல்.

‡ புறநானூறு-209 – இதன் பொருள். (பறவைகள்) பழங்களை யுடைய பெரிய மரம் பழுத்துமாறியதென்று செய்வதொழிந்து என்பது.

○ தீர்ந்தெனக் கையற்று என்றும் பாடமுண்டு.

* முன்னை யறியாமை – சன்மாந்தரத்திற்செய்த தீவினையின் பய னை அறியாமை. ○ நஞ்சு-எட்டி விதை, பாம்பின்விஷ முதலியன வாம்.

$ அவர்தாமே–நஞ்சுண்பாரே.

† இதனை நிரனிறையாக்கித் திரிக்கப்படுதலால் உறங்கினூரும் நஞ்சுண்பாரு மொப்பர்; கைவிடப்படுதலாற் செத்தாருங் கள்ளுண்பாரு மொப்பரென்றுரைப்பாரு முளர். ‡ அதிகாரப் பொருள் பின்னதாயிருக்க யாதுமியைபில்லாத நஞ்சுண்பார்க்கு உவமை புணர்த்து ஈண்டுக்கூறல் பயனின்றாகலானும், சொற்கிடக்கை நிரனிறைக் கேலாமையானும் அஃதுரையன்மை யறிக. இவை யிரண்டு பாட்டானும் அவர தறிவிழத்தற் குற்றங் கூறப்பட்டது.

தெளி:— (இ-ள்.) துஞ்சினூர் உறங்கினவர், செத்தாரின்-மரணமடைந்தவரிலும், வேறல்லர்-(வேறுதலுடையரேனும் அக்காலத்தில் அறிவில்லாமையால்) வேறெனப்படார், (அவ்வாறே), கள்ளுண்பவர்-கள்ளுண்பார், (நஞ்சுண்பவரிலும் வேறுதலுடையரேனும்), எஞ்ஞான்றும்-எக்காலத்தும், (அறிவில்லாமையால் வேறெனப்படார்), நஞ்சுண்பார்-அவர்தாமே யாவர், (எ-று).

உறங்கினவர்க்கும் கள்ளுண்பவர்க்கும் செத்தார் நஞ்சுண்பார் என்பவருடன் வேறுபாடு மூச்சு நிற்றல். வேறுதலும் வேறல்லாமையுமுடைமையைக் காட்டுதற்கு ('துஞ்சினூர் செத்தாரின் வேறல்லர்' என்னும்) உவமானம் சேர்த்துச் சொல்லப்பட்டது. இவை இரண்டு பாட்டாலும் அவரது (கள்ளுண்பாரது) அறிவிழத்தலின் குற்றம் சொல்லப்பட்டது.

(க-து.) கள்ளுண்பாரும் நஞ்சுண்பாரும் அறிவில்லாமையால் தம்முளொப்பர் என்பது.

6 They that sleep are likened to the dead; likewise they that drink are no better than poison-eaters.

---

**எ. உள்ளொற்றி யுள்ளூர் நகப்படுவ ரெஞ்ஞான்றுங்
கள்ளொற்றிக் கண்சாய் பவர்.**

பரி.— (இ-ள்.) கள்ளை மறைந்துண்டு அக்களிப்பாற் றம்மறிவு தளர்வார் உள்ளூர் வாழ்பவரான் உண்ணிகழ்கின்ற குய்த்துணர்ந்து எஞ்ஞான்றும் நகுதல் செய்யப்படுவர், (எ-று).

---

† இக்குறளை (துஞ்சினூர் நஞ்சுண்பார், செத்தார் கள்ளுண்பவர் என்று) முறை நிரனிறைப் பொருள்கோளாக்கி (பதங்கள்) மாற்றப்படுதலால், துஞ்சினூர்- உறங்கினூரும், நஞ்சுண்பார்-நஞ்சுண்பாரும், வேறல்லர்-ஒப்பர்; (கைவிடப்படுதலால்), செத்தார்-செத்தாரும், கள்ளுண்பவர் கள்ளுண்பாரும், வேறல்லர்-ஒப்பர் என்று பொருள் கூறுவாருமுண்டு. இவர் செத்தாரின் என்பதன்கணுள்ள இன் என்பதனைச் சாரியையாகக் கொள்வர்.

‡ கள்ளுண்ணுமையென்னும் அதிகாரத்தின் பொருள் (நஞ்சுண்பார் கள்ளுண்பவர் என்று) பின்னதாயிருக்க எச்சம்பந்தமுமில்லாத நஞ்சுண்பார்க்கு (துஞ்சினூரென்பவரை) உவமானமாக்கி யிங்குச் சொல்லுதல் பயனின்றுதலாலும், சொற்களினிருப்பு நிரனிறையாகக் கொள்ளுதற்குப் பொருந்தாதிருத்தலாலும், அவ்வுரை உரையாகாதென்பதாம்.

†உள்ளூர்-ஆகுபெயர். ‡உண்டென்பது அவாய் நிலையான் வந்தது. உய்த்துணர்தல்-தளர்ச்சியாற் களிப்பினை யுணர்ந்து அதனாற் கள்ளுண்டதுணர்தல்.

தெளி:—(இ-ள்.) கள்ளொற்றி-கள்ளைமறைந்து (உண்டு), கண் சாய்பவர்-(அக்களிப்பால் தமது) அறிவுசோர்பவர், உள்ளூர்-உள்ளூர் வாழ்பவரால், உள்ளொற்றி-உள்ளே (நிகழுகின்ற காரியத்தை) ஆராய்ந்தறிந்து, எஞ்ஞான்றும்-எந்நாளும், நகப்படுவர்-சிரிக்கப்படுவார், (எ-று).

உள்ளூர் என்பது உள்ளூரில் வாழ்பவரை யுணர்த்துதலால், இடவாகு பெயராம். உண்டு என்பது அவாய்நிலையால் வந்தது. ஆராய்ந்தறிதல் - சோர்வினால் களிப்பினை அறிந்து அதனால் கள்ளுண்டதை யறிதல்.

(க-து.) கள்ளைக்குடித்து, அதனால் சோர்வடைபவர் தமதூரிலுள்ளவரால் சிரித்தவமதிக்கப்படுவர் என்பது.

7. Those who stealthily drink and intoxicate themselves will have their secrets detected and always laughed at by their fellow-townsmen.

---

அ. களித்தறியே னென்பது கைவிடுக நெஞ்சத்
தொளித்ததூஉ மாங்கே மிகும்.

பரி:—(இ-ள்.) மறைந்துண்டுவைத்து யான் கள்ளுண்டறியேனென்று உண்ணாதபொழுது தம்மொழுக்கங் கூறுதலை யொழிக; அவ்வுண்டபொழுதே பிறரறியின்இழுக்காமென்று முன்னெஞ்சத்தொளித்த குற்றமும் முன்னையளவின்மிக்கு வெளிப்படுதலான், (எ-று).

¶'களித்தறியேன்' எனக் காரணத்தைக் காரியத்தாற் கூறினார். இவையிரண்டு பாட்டானும் $அது மறைக்கப்படாதென்பது கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) களித்தறியே னென்பது-(மறைந்துண்டுவைத்து யான்) கள்ளுண்டறியேனென்று (உண்ணாதபொழுது தமதொழுக்கத்தைச்) சொல்லுதலை, கைவிடுக-விடக்கடவர், (அவ்வுண்டபொழுதே பிறரறிந்தால் தவறுமென்று முன்னர்), நெஞ்சத்தொளித்ததூஉம்-மனதில் ஒளித்த குற்றமும், ஆங்கேமிகும்-முன்னையளவிலும் மிகுந்து வெளிப்படும், (ஆதலால்), (எ-று).

கள்ளுண்டறியேனென்று கூறுது 'களித்தறியேன்' என்று கள்ளுண்டலாகிய காரணத்தைக் காரியத்தாற் சொல்லினார். இவை இரண்டு பாட்டாலும் அது மறைக்கப்படாதென்பது சொல்லப்பட்டது.

---

† ஊருள் என்பது உள்ளூரென்றாயது இலக்கணப் போலியாம்.

‡ உண்டு என்பதைக் கண்சாய்பவரென்பது அவாவி (வேண்டி) நிற்றலால், அது வருவிக்கப்பட்டது

¶ கள்ளுண்டலால் களித்தலுண்டாதலின், கள்ளுண்டல் காரணமாம்; களித்தல்-அதன் காரியமாம். $ அது-கள்ளுண்டல்.

(க-து) கள்ளுண்டபோது மனத்தின்கண் நிகழ்வனவெல்லாம் வெளிப்பட்டுவிடுதலால், கள்ளுண்பார் கள்ளுண்ணாதபோது தம தொழுக்கத்தைப் பற்றிப் பேசுதலை யொழிக்கவேண்டும்.

8. Let the drunkard give up saying "I have never drunk"; for when he drinks he will only betray his former attempt to conceal.

---

௯. களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று.

பரி:— (இ-ள்.) கள்ளுண்டு களித்தானொருவனை †இஃதாகாதென்று பிறனொருவன் காரணங்காட்டித் தெளிவித்தல் நீருண்மூழ்கினானொருவனைப் பிறனொருவன் விளக்கினால் நாடுதலை யொக்கும், (எ-று).

களித்தானை யென்னு மிரண்டாவது ‡"அறிவுடை யந்தணனவளைக் காட்டென்றானே" என்புழிப்போல நின்றது. நீருள் விளக்குச்செல்லா தாற்போல் *அவன் மனத்துக் காரணஞ்செல்லா தென்பதாம். இதனான் £அவனைத் தெளிவித்தல் முடியாதென்பது கூறப்பட்டது.

தெளி:— (இ-ள்.) களித்தானை-(கள்ளுண்டு) களித்தானொருவனை, காரணங்காட்டுதல்-(இஃது ஆகாதென்று மற்றொருவன்) காரணங்காட்டித்தெளிவித்தல், கீழ்நீர்க்குளித்தானை — நீருள் மூழ்கினானொருவனை, (மற்றொருவன்), தீ — விளக்கினால், துரீஇயற்று — தேடுதலையொக்கும், (எ-று).

களித்தானை என்னுமிரண்டனுருபு களித்தானுக்கு என்னும் நான்கனுருபின் பொருளிலும் வந்தது. இவ்வாறு வருவது பொருள் மயக்கமெனப்படும். நீருள் விளக்குச் செல்லாமைபோல அவன் மனத்துள் பிறன் கூறும்காரணஞ்செல்லாதென்பதாம். இதனாலவனைத் தெளிவித்தல் முடியாதென்பது சொல்லப்பட்டது

(க-து.) கள்ளுண்டு களிப்பவனைப் பிறன் கள்ளுண்டலாலுண்டாகுந் தீமையைக் கூறித் தெளிவித்தல் முடியாது என்பது.

9. Reasoning with a drunkard is like searching a drowned man with a light.

---

† இஃது-கள்ளுண்டுகளித்தல்.

‡ கலித்தொகை-மருதக்கலி-எ. இதன் பொருள். அறிவில்லாத அந்தணன் (பிராமணன்) அவளை (அவட்கு)க் காணப்பண்ணென்று சொன்னானே என்பது. (அறிவுடைதல்-அறிவுகெடுதல்).

* அவன்-கள்ளுண்டுகளித்தவன்.

£ அவனை-கள்ளுண்டுகளித்தவனை.

**௯௦. கள்ளுண்ணாப் போதிற் களித்தானைக் காணுங்கா
லுள்ளான்கொ லுண்டதன் சோர்வு.**

பரி:—(இ-ள்.) கள்ளுண்பானொருவன் தான் அ துண்ணாது தெளிந்திருந்த பொழுதின்கண் உண்டு களித்த பிறனைக் காணுமன்றே: காணுங்கால் தானுண்டபொழுது உள தாஞ் சோர்வினை அவன் சோர்வால் *அதுவுமிற்றென்று கருதான்போலும், (எ-று).

*சோர்வு-மன மொழி மெய்கள் தன் வயத்தவல்லவாதல். †கருதலளவையான் ‡அதனிழுக்கினை யுய்த்துணரின், ஒழியுமென இதனால் ¶அஃதொழிதற் காரணங் கூறப்பட்டது.*

தெளி:—(இ-ள்.) *(கள்ளுண்பானொருவன்தான்) கள்ளுண்ணாப் போழ்தில்-அக்கள்ளையுண்ணாமல் தெளிந்திருந்த பொழுதில், களித்தானை-(கள்ளுண்டு) களித்தபிறனை, (காண்பானல்லவா), காணுங்கால்-காணுமிடத்து, உண்டதன் சோர்வு-(தான்) உண்டபொழுது உண்டாகுஞ் சோர்வினை, உள்ளான்கொல்-(அவன் சோர்வால் அதுவும் இத்தன்மையதென்று) நினையான்போலும், (எ-று)*

*சோர்வு-மன மொழி மெய்கள் தன்வயத்தனவல்லவாதல். அனுமானப் பிரமாணத்தால் அக்கள்ளுண்டலி னிழிவை ஆராய்ந்தறிந்தால், ஒழியுமென இதனால் அஃது ஒழிதற்குக் காரணம் சொல்லப்பட்டது.*

*(க-து.) கள்ளுண்பவன் தான் குடியாது தெளிந்திருந்தபோது கள்ளுண்டுகளிக்கும் பிறனது சோர்வை ஆராய்ந்தறிவானாயின், கள்ளுண்பதொழிவான் என்பது.*

10. When a drunkard who is sober sees one who is not, it looks as if he remembered not the evil effects of his own drink.

---

## முப்பத்தொன்றாவது அதிகாரம்

## 94 சூது—Gambling

பரி:—இனி அக்கள்ளுண்டல்போல அறம் பொருள் இன்பங்கட்கு இடையீடாகிய சூதாடலும் பிணியுழத்தலுங் கூறுவான் றொடங்கி, முதற்கட் சூதினதியல்பு கூறுகின்றார்.

---

** அதுவு மிற்றென்று-தானுண்டபோது தனக்குண்டாகும் சோர்வும் (தளர்ச்சியும்) இத்தன்மையதாமென்று.*

*† கருதலளவை-அனுமானப் பிரமாணம். அது வருமாறு:- யானும் சோர்வுடையவனாவேன் என்பதுபிரதிஞ்ஞை; கள்ளுண்டலால் என்பது ஏது; யாண்டு யாண்டுக் கள்ளுண்டலுண்டு, ஆண்டு ஆண்டுச் சோருதலுண்டு. கள்ளுண்டுசோரும் பிறனைப்போல என்பது உதாரணம்.*

*‡ அவனிழுக்கினை என்றும் பாடமுண்டு. ¶ அஃது-கள்ளுண்டல்.*

தெளி:-இனி அக்கள்ளுண்டல்போல அறம் பொருளின்பங்களுக்குத் தடையாகிய சூதாடலும்நோயாற்றுன்புறுதலும் சொல்லத் தொடங்கி, முதலில் சூதினது இயல்பினைச் சொல்லுகின்றார்.

---

**க. வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉந் தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று.**

பரி:-(இ-ள்.) தான் வெல்லுமாற்றலுடைய னாயினும் சூதாடலை விரும்பாதொழிக; வென்று பொருளெய்துவார் உளராலெனின், அவ் வென்ற பொருடானும் இரையான் மறைந்த தூண்டி லிரும்பினை இரை யெனக்கருதி மீன்விழுங்கினாற் போலும், (எ-று).

வேறல் ஒருதலை யன்மையின் 'வென்றிடினும்' என்றும், *கருமங்கள் பலவுங்கெடுதலின் 'வேண்டற்க' எனறுங் கூறினார். †எய்தியபொருள் சூதாடுவார் நீங்காமைக்கு இட்டதோர் ‡தளை யென்பதூஉம், ¶அதனாற் பின்றுயருழத்தலும் 0உவமையாற் பெற்றாம்.

தெளி:-(இ-ள்.) வென்றிடினும்-(தான்)வெல்லும் ஆற்றலுடையவனாயினும், சூதினை-சூதாடலை, வேண்டற்க-விரும்பாதிருக்கக் கடவன், (வென்று பொருள் பெறுவார் இருக்கின்றனரெனின்), வென்றதூஉம்-அவ்வென்றபொருளும், தூண்டிற்பொன்-(இரையால்மறைந்த) தூண்டிலிரும்பினை, மீன்விழுங்கியற்று-(இரையெனக்கருதி) மீன் விழுங்கினாற் போலும், (எ-று).

(சூதாட்டத்தில்) வெல்லுதல் நிச்சயமல்லாமையால் 'வென்றிடினும்' என்றும், (அதனால்) கருமங்கள் பலவுங்கெடுதலால் 'வேண்டற்க' என்றும், சொல்லினார். பெற்றபொருள் சூதாடுவார் நீங்காமைக்கு இட்டதோர் தளையென்பதும், அதனால் பின் துயருழத்தலும் 'தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று' என்னும் உவமானத்தால் பெற்றாம்.

(க-து) ஒருவன் சூதாடுவதில் திறமையுள்ளவனா யிருப்பினும், அச்சூதினால் வரும்பொருள் பல கேட்டிற்குக் காரணமாயிருத்தலால், அதனை விடக்கடவன் என்பது.

1. Though able to win, let not one desire gambling; for even what is won is like a fish swallowing the iron in a fish-hook.

---

* கருமங்கள் பலவும்-மேற்கொண்டு செய்யுங் காரியங்கள் பலவும்.

† எய்தியபொருள்-சூதாடிவென்றடைந்த பொருள்.

‡ தளை-காலிலிடும் விலங்கு. ¶ அதனால்-அத்தளையால்.

0 இரையால் மறைந்துள்ள தூண்டில் விழுங்கியமீன் நீங்கிப் போகாமைக்குத் தளை(தடை)யாக, அத்தளையால் பின்பு அம்மீன் துன்பமடைதல் போன்று சூதாடுதலால் கிடைத்தபொருள் சூதாடுவார் நீங்கிப்போகாமைக்குப் போட்டதோர் விலங்காக, அதனால் பின்பு அவர் துன்பமடைவார் என்பதாம். இதனால் சூதாடலால் வரும்பொருள் பின்னரும் சூதாடற்குக் காரணமாயிருந்து துன்பத்தை யுண்டாக்கு மென்பது பெறப்பட்டது.

உ. ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு முண்டாங்கொ
னன்றெய்தி வாழ்வதோ ராறு.

பரி:-(இ-ள்.) அத்தூண்டிற் பொன் போன்ற ஒன்றனை முன் பெற்று இன்னும் பெறுதுமென்னுங் கருத்தால் நூற்றினை யிழந்து வறியராஞ் சூதர்க்கும் பொருளால் அறனுமின்பமுமெய்தி வாழ்வதொரு நெறி யுண்டாமோ; ஆகாது, (எ-று).

*அவ்வாற்றாற் பொருளிழந்தே வருதலான், †அதனாலெய்தும் பயனும் அவர்க்கில்லை யென்பதாம்.

தெளி:—(இ-ள்.) ஒன்றெய்தி-(அத்தூண்டிலிரும்பு போன்ற) ஒன்றனை முன்பு பெற்று, (இன்னும் பெறுவோமென்னுங் கருத்தால்), நூறிழக்கும்-நூற்றினை இழந்துவறியராகும், சூதர்க்கும்-சூதாடிகளுக்கும், நன்றெய்தி-(பொருளால்)அறமு மின்பமும் பெற்று, வாழ்வதோ ராறு-வாழ்வதொரு வழி, உண்டாங்கொல்-உண்டாமோ, (உண்டாகாது), (எ-று).

(சூதாடிகள்) அவ்வழியால் பொருளையிழந்தே வருதலால், அதனால் பெறும் பயனும் அவர்க்கு இல்லையென்பதாம்.

(க-து.) ஒருபொருளைப் பெற்றுப் பலபொருள்களை யிழக்குஞ் சூதாடிகளுக்குப் பொருளால் அறமும் இன்பமுமெய்தி வாழும்நெறி யுண்டாவதில்லை என்பது.

2. Is there indeed a means of livelihood that can bestow virtue and happiness on gamblers who gain one and lose a hundred.

---

ந. உருளாய மோவாது கூறிற் பொருளாயம்
போஒய்ப் புறமே படும்.

பரி:— (இ-ள்.) உருளுங் ‡கவற்றின்கட் பட்ட 0ஆயத்தை இடைவிடாது கூறிச் சூதாடுமாயின், அரசனீட்டியபொருளும் அவன் பொருள் வருவாயும் அவனை விட்டுப் போய்ப் பகைவர்கண்ணே தங்கும், (எ-று).

* அவ்வாற்றால்- சூதாடும் வழியால்.

† அதனாலெய்தும் பயனும் அவர்க்கில்லையென்பதாம்-அப்பொருளாலடையும் அறமுமின்பமும் சூதாடிகளுக்கில்லை யென்பதாம்.

‡ கவறு-பாய்ச்சிகை. 0 ஆயத்தை-கெலிப்புப் பொருளை.

*கவற்றினதுருட்சியை அதனிஞய ஆயத்தின்மே லேற்றியும், †சூதாடலே அது கூறலாகிய காரணத்தின்மே லிட்டுங்கூறிஞர். பொருளாய மென்பது ‡உம்மைத் தொகை. ¶ஆயம்—வடமொழித்திரிசொல். காத்தற் கண்ணும் இயற்றற்கண்ணும் கருத்திலஞகலின், $அவையிரண்டும் பகைவர்பாற் செல்லுமென்பதாம்.

தெளி:— (இ-ள்.) உருளாயம்-உருளும் (கவற்றில் அகப்பட்ட) ஆதாயத்தை, ஓவாது-இடைவிடாமல், கூறின்-கூறிச் சூதாடுவாஞயின், பொருள் - (அரசன் சம்பாதித்த) பொருளும், ஆயம்-(அவன்) பொருள் வருவாயும், போஒய்-(அவனைவிட்டுப்) போய், புறமேபடும்—பகைவரிடத்தே தங்கும், (எ-று).

கவற்றினது உருட்சியை அதஞலாகிய ஆயத்தின்மேல் ஏற்றியும், சூதாடலே அதனைச் சொல்வதாகிய காரணத்தின்மேல் வைத்தும் சொல்லிஞர். பொருளாயமென்பது பொருளும் ஆயமுமென விரிதலால் உம்மைத்தொகையாம். ஆயம் என்பது வடமொழித்திரிசொல். பொருளேயும் ஆயத்தையும் காத்தலிலும் சம்பாதித்தலிலும் கருத்திலஞகலால், அவை இரண்டும் பகைவரிடத்துச் செல்லுமென்பதாம்.

(க-து.) ஓயாது சூதாடுவார்க்குப் பொருளும் பொருள் வருவாயும் விரைவில் ஒழியும் என்பது.

3. If the king be incessantly addicted to rolling dice in the hope of gain, his wealth and the resources thereof will leave him and fall into the hands of his enemies.

———

*கவற்றினது (பாய்ச்சிகையினது) உருட்சியை(உருளுதலே) அக்கவற்றினது உருட்சியிஞலாய ஆயத்தின்மேலேற்றி 'உருளாயம்' என்று கூறப்பட்டது. இது காரணத்தின் தொழில காரியத்தின் மேலாய உபசார வழக்கு.

†சூதாடுதலே அது (அச்சூதாடுதலேக்) கூறலாகிய காரணத்தின் மேல் வைத்துக் 'கூறின்' என்று கூறப்பட்டது. கூறுதல் என்னும் கருவியின் பெயர் அதன் காரியமாகிய சூதாடுதலேயுணர்த்துதலால் கருவியாகு பெயராம்.

‡உம்என்னும் இடைச்சொல் தொக்கு நிற்பது உம்மைத் தொகையாம்.

¶ஆயம் என்பது பலபொருள் குறித்த ஒரு பெயர்த்திரிசொல். இங்கு ஆயம் என்பது ஆதாயத்தையும் பொருள்வருவாயையும் உணர்த்தி நின்றது. "ஆயமே கவற்றிற்குய மாதாய மாதர் கூட்டம்" என்று நிகண்டு கூறுகின்றது. வடசொல் இன்னதென்பது "வடசொற் கிளவி வடவெழுத்தொரீஇ, யெழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே" என்று தொல்காப்பியங் கூறுவதா லினிது விளங்கும். திரிசொல்-இயற் சொல்லின் வேறுபட்ட சொல்.

ஆயமென்பது "ஆய:" என்னும் வடசொற்றிரிபாம்.

$அவையிரண்டும்-சம்பாதித்தபொருளும் பொருள்வரும் வழியும்.

**சு. சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்**
**வறுமை தருவதொன் றில்.**

பரி: — (இ-ள்.) தன்னை விழைந்தார்க்கு முன்னில்லாத துன்பங்கள் பலவற்றையும் விளைத்து உள்ளபுகழையுங் கெடுக்குஞ் சூதுபோல் நல்குரவினைக் கொடுக்கவல்லது பிறிதொன்றில்லை, (எ-று).

*அத்துன்பங்கள் முன்னர்க்கூறுப. நல்வினைகளையும் நல்லினத்தையும் நீக்கித் தீவினைகளையுந் தீயினத்தையுங் கூட்டுதலால் 'சீரழிக்கும்' என்றார். வறுமைக்கு எல்லையாவ தென்பதாம்.*

தெளி:— (இ-ள்.) சிறுமைபல - (முன்னில்லாத) துன்பங்கள் பலவற்றையும், செய்து - (தன்னை விரும்பினவர்க்கு) உண்டாக்கி, சீர் - (உள்ள) புகழையும், அழிக்கும் - கெடுக்கும், சூதின் - சூதுபோல, வறுமை-வறுமையை, தருவது-கொடுக்கவல்லது, ஒன்று-வேறொன்று, இல்-இல்லை, (எ-று).

*அத்துன்பங்களைப் பின்வருங்குறள்களிற் சொல்லுவார். நல்வினைகளையும் நல்லினத்தினையும் நீக்கித் தீவினைகளையும் தீயினத்தினையும் கூட்டுதலால் (சூது) 'சீரழிக்கும்' என்றார். சூதாடுவார் வறுமைக்கு எல்லையாவரென்பதாம்.*

(க-து.) துன்பங்கள் பலவற்றையுமுண்டாக்கிப் புகழையுங் கெடுக்குஞ் சூதுபோல வறுமையைத் தருவது பிறிதொன்றில்லை.

4. There is nothing else that brings one poverty like gambling which causes many a misery and destroys one's reputation

---

**ரு. கவறுங் கழகமுங் கையுந் தருக்கி**
**யிவறியா ரில்லாகி யார்.**

பரி : —(இ-ள்.) *முற்காலத்துத் தாமுளராகியே இலராகியொழுகினர் கவற்றினையும் §அஃதாடுங் களத்தினையும் அவ்வாடற்கு வேண்டுங் கைத்-தொழிலினையும் மேற்கொண்டு கைவிடாத வேந்தர், (எ-று).

கைத்தொழில்–‡வெல்லுமாயம்படப் பிடித்தெறிதல். ¶அவ்வி-வறுதலாற் பாண்டவர் தம்மரசுவிட்டு வனத்திடைப்போய் ஆண்டு

---

* முற்காலத்தில் (துவாபரயுகத்தில்) தாமுயிருடையவராயிருந்-தேபொருளில்லாதவராகிக் காட்டில் திரிந்தவேந்தர் பாண்டவரென்பது.

§ அஃது சூதாடுங்கருவியான கவறு (பாய்ச்சிகை).

‡ வெல்லுமாயம்படப்பிடித்தெறிதல்-கெலிக்கும் ஆதாயமுண்-டாமாறு பாய்ச்சிகையினை யுளவாகப் பிடித்தெறிதல்.

¶ அவ்விவறுதலால்–சூதாடுங்கருவியையும், அஃதாடுமிடத்-தினையும், அதனையாடுதற்கு வேண்டும் கைத்தொழிலினையும் கைவிடா-திருத்தலால்.

அவ்வாயந் தவறுதலால் என்றும் பாடமுண்டு.

மறைந்தொழுகினரென அனுபவங் காட்டியவாறு. இவை யைந்து பாட்டானும் *அதனது வறுமை பயத்தற் குற்றங் கூறப்பட்டது.

தெளி :-(இ-ள்.) இல்லாகியார் – (முற்காலத்தில் தாமிருப்பவ-ராயிருந்தே) இல்லாதவராயொழுகினவர், கவறும்-கவற்றினையும், கழகமும்-அஃதாடுமிடத்தினையும், கையும்-(அவ்வாடற்கு வேண்டுங்) கைத்தொழிலினையும், தருக்கியிவறியார்–மேற்கொண்டு கைவிடாத வேந்தர், (எ-று).

கைத்தொழில்-வெல்லும் ஆதாயமுண்டாமாறு பாய்ச்சிகையைப் பிடித்தெறிதல். அவற்றை மேற்கொண்டு கைவிடாமையினால் பாண்டவர் தம்மரசிழந்து காட்டிற்சென்று அங்கு மறைந்தொழுகி-னாரென்று அனுபவங்காட்டியவாறும். நளனது சரித்திரமுமிங்கறியத் தக்கதாம். இவை ஐந்துபாட்டாலும் அதனது வறுமையுண்டாக்கு தற்குற்றம் சொல்லப்பட்டது.

(௯-து.) சூதையும் சூதாடுமிடத்தையும் சூதாடுந் தொழிலையும் கைவிடாத வரசர் யாது மிலராவர் என்பது.

5. Penniless are those kings who by their attachment would never forsake gambling, the gambling-place and the handling of dice.

---

௬. அகடாரா ரல்ல லுழப்பர்சூ தென்னு
முகடியான் மூடப்பட் டார்.

பரி :-(இ-ள்.) †தன் பெயர் சொல்லல் மங்கலமன்மையிற் சூதென்று சொல்லப்படும் முகடியான் விழுங்கப்பட்டார் இம்மைக்கண் வயிறாரப்பெறார், மறுமைக்கண் நிரயத்துன்ப முழப்பர், (எ-று).

செல்வங்கெடுத்து நல்குரவு கொடுத்தற்றொழில் வேறுபடா-மையிற் ‘சூதென்னு முகடி.’ என்றும், வெற்றி தோல்விக ளொக்கி ஒருபொழுதும் விடாராகலின் ‡ஈண்டு ‘அகடாரார்’ என்றும், பொய்யுங் களவும் 0முதலிய பாவங்க ளீட்டலின் ¶ஆண்டு ‘அல்லலுழப்பர்’ என்றுங் கூறினார். $வயிறாராமை சொல்லவே, ஏனைப்புலன்க ளுகரப்பெறாமை சொல்லவேண்டாவாயிற்று. ()உழப்பரென்பது எதிர்கால வினைச்சொல்.

---

* அதனது-சூதினது.

† தன் பெயர் சொல்லல்-மூதேவியென்று தனது பெயரைச் சொல்லுதல். ‡ ஈண்டு-இம்மையில்.

0 முதலிய என்றமையின், கொலை முதலியவற்றையுங்கொள்க.

¶ ஆண்டு-மறுமையில். $ வயிறாராமை-வயிறு நிரம்பவுண்ணாமை.

() பகர விடைநிலை நிகழ்காலத்தையு முணர்த்துதலின், ‘உழப்பர் என்பது எதிர்கால வினைச்சொல்’ என்று கூறப்பட்டது. (சூதென்னும் முகடியால் மூடப்படுதல் காரணமாயும் அல்லலுழத்தல் காரியமாயும் இருத்தலால்) மூடப்பட்டார் என்று இறந்த காலமாகவும் உழப்பர் என்று எதிர்காலமாகவும் கூறினார்.

தெளி:— (இ-ள்.) சூதென்னும்-(தன் பெயர்சொல்லல் மங்கலமல்லாமையால்) சூதென்று (வேறுபெயரால்) சொல்லப்படும், முகடியால்-மூதேவியால், மூடப்பட்டார்-விழுங்கப்பட்டவர், அகடாரார்-(இம்மையில்) வயிறு நிறையப்பெருர், அல்லலுழப்பர்- (மறுமையில்) நரகத்துன்பமனுபவிப்பர், (எ-று).

சூதிற்கும் முகடிக்கும் செல்வத்தைக் கெடுத்து வறுமையைக் கொடுத்தற்றெழில் வேறுபடாமையால் 'சூதென்னு முகடி' என்றும், சூதாடுதலே வெற்றி தோல்விகள் நோக்கி ஒருபொழுதும் விடாராகலால் இங்கு 'அகடாரார்' என்றும், பொய்யும் களவும் முதலிய பாவங்களைச் சம்பாதித்தலால் அங்கு 'அல்லலுழப்பர்' என்றும் சொல்லினர். வயிறு நிறையாமை சொல்லவே, மற்றை ஆடை யணிமுதலிய விஷயங்களை யனுபவிக்கப்பெருமை சொல்ல வேண்டாவாயிற்று. உழப்பரென்பது எதிர்காலத்தெரிநிலை வினைமுற்று.

(க-து.) சூதென்னும் மூதேவியால் விழுங்கப்பட்டவர் இம்மையில் வறுமையையும் மறுமையில் நரகத்தையும் அநுபவிப்பர்.

6. Those who are swallowed by the goddess of gambling will never have their desire satiated, but will suffer the pangs of hell in the next world.

---

எ. பழகிய செல்வமும் பண்புங் கெடுக்குங்
கழகத்துக் காலை புகின்.

பரி:— (இ-ள்.) *அறம் பொரு ளின்பங்கட் கடைத்தகாலம் அரசனுக்குச் சூதாடு களத்தின்கட் கழியுமாயின், அக்கழிவு தொன்று தொட்டு வந்த அவன் செல்வத்தினையும், நற்குணங்களையும் போக்கும், (எ-று).

†பழகிய என்பது பண்புடனுமியையும். தான் செய்துகொள்ளும் அற முதலியவேயன்றி முன்னோரைத்தொடங்கி வருகின்ற செல்வமும் முன்செய்த நல்வினையின் பயனாய பண்பும் இலவாமென்பதாம்.

தெளி:— (இ-ள்.) காலை- (அறம்பொருளின்பங்களுக்கு விதித்த) காலம், (அரசனுக்கு), கழகத்து-சூதாடுமிடத்து, புகின்-கழியுமாயின், (அக்கழிவு), பழகிய-தொன்றுதொட்டுவந்த, செல்வமும் - (அவன்) செல்வத்தையும், பண்பும்-நற்குணங்களையும், கெடுக்கும்-போக்கும், (எ-று).

பழகிய என்பது பண்பென்பதனுடனும் இயைந்து நின்றது. சூதாடுதலில் தன் காலத்தைக் கழிக்குமரசனுக்குத் தான் செய்து கொள்ளும் அறமுதலியனவேயல்லாமல் தன் முன்னோரைத் தொடங்கி வருகின்ற செல்வமும் முன்செய்த நல்வினையின்பயனாகிய நற்குணங்களும் இல்லாமற் போமென்பதாம்.

---

* அறத்தைச் செய்தற்கும், பொருளைத்தேடுதற்கும், இன்பத்தை யனுபவித்தற்கு முரிய காலம்.

† பழகிய என்பதனைப் பண்பு என்பதனோடுங் கூட்டித் தொன்று தொட்டுவந்த நற்குணங்களையும் என்று பொருள் கொள்க.

(க-து.) அரசன் இடைவிடாது சூதாடுவானாயின், அஃது அவனது செல்வத்தையும் நற்குணங்களையும் கெடுக்கும் என்பது.

7. To waste time at the place of gambling will destroy the king's inherited wealth and good character.

---

அ. **பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ யருள்கெடுத் தல்ல லுழப்பிக்குஞ் சூது.**

பரி:— (இ-ள்.) **சூது தன்னைப் பயின்றவன்பொருளைக் கெடுத்துப் பொய்ம்மையை மேற்கொள்ளப்பண்ணி மனத்தெழும் அருளைக்கெடுத்து இவ்வாற்றான் *அவனை இருமையினும் துன்பமுழுறுவிக்கும், (எ-று).**

†இத்தொழில்கண் மூன்றற்கும் சூது வினைமுதலாகவும், தோல்வி வெற்றி, செற்றமென்பன முறையே கருவிகளாகவுங் கொள்க. ‡முன்னதனான் இம்மையினும், ¶ஏனையவற்றான் மறுமையினும் $ஆம். 0பொருள் கொடுத்தென்பது பாடமாயின், அவ்வெச்சத்திற்கு முடிவு மேற்கொளீஇ யென்புழி மேற்கோடலாகிய வினைமுதல்வினை.

தெளி:— (இ-ள்.) சூது-சூதானது, பொருள்கெடுத்து-(தன்னைப் பழகினவனது) பொருளைக்கெடுத்து, பொய்-பொய்யை, மேற் கொளீஇ-மேற்கொள்ளப்பண்ணி, அருள்கெடுத்து-(மனதில் எழுகிற)

---

* அவனை-சூது தன்னைப் பயின்றவனை.

† பொருளைக்கெடுத்தல், பொய்யை மேற்கொள்ளப்பண்ணல், அருளைக்கெடுத்தல் என்னுமித்தொழில்கள் மூன்றற்கும் சூதினைக்-கர்த்தாவாகவும், பொருளைக்கெடுத்தற்குத் தோல்வியைக் கருவியாகவும், பொய்யை மேற்கொள்ளுதற்கு வெற்றியைக் கருவியாகவும், அருளைக்கெடுத்தற்குச் செற்றத்தை (கோபத்தை)க் கருவியாகவும் கொள்ளுக வென்பதாம். கருவி-துணைக்காரணம். சூதானது தோல்வியால் பொருளைக்கெடுத்து, வெற்றியால் பொய்யைமேற்கொள்ளப்-பண்ணி, செற்றத்தால் அருளைக்கெடுக்குமென்று கொள்க.

‡ முன்னதனான்-பொருளைக்கெடுத்தலால்.

¶ ஏனையவற்றான்-பொய்யைமேற்கொள்ளுதல் அருளைக்கெடுத்-தல் என்பனவற்றால். $ ஆம்-துன்பமாகும்.

0 பொருள்கெடுத்து என்பதற்குப்பிரதியாகப்பொருள்கொடுத்து என்பது பாடமானால், அக்கொடுத்து என்னும் (செய்தென்னும் வாய்பாட்டிறந்த காலவினை) எச்சத்திற்கு முடிக்குஞ்சொல் மேற்-கொளீஇ என்றவிடத்து (அதனது பகுதியதான) மேற்கோடலாகிய வினைமுதல் (கருத்தாவாகிய சூதாடுவானது) வினையாமென்க. கொடுத்து மேற்கோடல் என்றியையும்.

அருளைக்கெடுத்து, (இவ்வழியால்), அல்லலுழப்பிக்கும் - (அவனை இம்மை மறுமையென்னும் இருமையிலும்) துன்பமுறுவிக்கும், (எ-று).

பொருள்கெடுத்தல் முதலிய இத்தொழில்கள் மூன்றற்கும் சூதினை எழுவாயாகவும், தோல்வி, வெற்றி, கோபம் என்பனவற்றை முறையே கருவிகளாகவுங் கொள்க. அல்லல் முன்னதனால் இம்மையிலும், மற்றவற்றால் மறுமையிலுமாம்.

(க-து) சூதானது தன்னைப் பழகினவனது பொருளைக் கெடுத்து, பொய்யை மேற்கொள்ளச் செய்து, அருளைக்கெடுத்து, அவனையிருமையிலுந் துன்ப முறச்செய்யும் என்பது.

8. Gambling destroys wealth, leads to falsehood, stifles benevolence and brings in misery in the two worlds.

———

௯. †உடைசெல்வ மூனொளி கல்வியென் றைந்து
மடையாவா மாயங் கொளின்.

பரி:—(இ-ள்.) அரசன் சூதினைத் தனக்கு விநோதத்தொழிலாக விரும்புமாயின், அவனை *ஒளியும் கல்வியும் செல்வமும் ஊணும் ‡உடையுமென்றிவ்வைந்துஞ் சாராவாம், (எ-று).

¶ஆயம்—ஆகுபெயர். §இச்சிறப்புமுறை செய்யுணோக்கிப் பிறழ

† "அடியு மாண்மையும் வலிமையுஞ் சேனையு மழகும்வென் றியுந் தத்தங், குடியு மானமுஞ் செல்வமும் பெருமையுங் குலமுமின் பமுந்தேசும், படியு மாமறை யொழுக்கமும் புகழுமுன் பயின்றகல வியுஞ்சேர, மடியுமான்மதி யுணர்ந்தவர் சூதின்மேல் வைப்பரோ மனம்வையார்." என்று பாரதங்கூறுவது இங்குணர்தற்பாலதாம்.

* ஒளி-மதிப்பு. ‡ உடை - ஆடை.

¶ ஆயம் என்பது ஆதாயத்தைத் தரும் சூதினையுணர்த்துதலால் காரியவாகு பெயராம். ஆயம்-சூதால்வரும் ஆதாயமென்பதை "உருளாயம்" என்பதனா லறிக.

§ ஒளி, கல்வி, செல்வம், ஊண், உடை யென்னும் இச்சிறப்புமுறை செய்யுள் நோக்கி 'உடைசெல்வ மூனொளி கல்வி' என்று பிறழ (மாறுபட) நின்றது.

சிறப்பு முறையாவது மதிப்பினால் கல்வியின் சிறப்பும், கல்வியினால் பொருளின் சிறப்பும், பொருளினால் உண்டலின் சிறப்பும், உண்டலினால் தேகபுஷ்டி யுண்டாவதுவாயிலாக உடையுடுத்தலின் சிறப்பும் அமைந்திருப்பதாம். (உடையில்லாதானுக்கு உண்டியும், உண்டியில்லாதானுக்குச் செல்வமும், செல்வமில்லாதானுக்குக் கல்வியும், கல்வியில்லாதானுக்கு மதிப்பும் இல்லையாம் என்பது கருத்து). இறைமாட்சி அதிகாரத்தின் முதற் குறளின் விசேடவுரையில்

நின்றது. செல்வம்- *அறுவகை'யுறுப்புக்கள். ‡ஊணுடை யென்பன வற்றால் துய்ப்புரவுக ளெல்லாங்கொள்ளப்படும். §காலமும் கருத்தும் பெருமையின், †இவை யுளவாகா வென்பதாம். இவை நான்குபாட் டானும் சிறுமை பல செய்து அவற்றானிருமையுங் கெடுத்தல் கூறப் பட்டது.

தெளி :—(இ-ள்.) (அரசன்) ஆயம்-சூதினை, கொளின் - (தனக்கு விநோதத் தொழிலாக)விரும்புவானாயின், ஒளி-ஒளியும், கல்வி-கல்வி யும், செல்வம்-செல்வமும், ஊண்-உணவும், உடை-உடையும், என் றைந்தும்-என்ற இவ்வைந்தும், அடையாவாம் - (அவனைச்) சேரா வாம், (எ-று).

ஆயம்-காரியவாகு பெயர். ஒளி கல்வி என்றற்றொடக்கத்து இச் சிறப்புமுறை செய்யுள் நோக்கிப் பிறழ நின்றது. செல்வம்-அறுவகை யுறுப்புக்கள். ஊணுடை யென்பனவற்றால் அனுபவிக்கும்பொருள் களெல்லாங்கொள்ளப்படும். (சூதாடு மரசன்) காலமும் கருத்தும் பெருமையால், இவை உண்டாகா வென்பதாம். இவை நான்கு பாட்டாலும் சூது சிறுமை பல செய்து அவற்றால் இம்மைப்பயன் மறுமைப்பய னென்னு மிரண்டையுங் கெடுத்தல் சொல்லப்பட்டது.

(க-து.) சூதாடுவானுக்கு மதிப்பு மில்லை, கல்வியு மில்லை, செல்வமு மில்லை, உணவுமில்லை, உடையுமில்லை என்பது.

9. If the king betakes to gambling as a pastime it will prevent the attainment of these five: clothing, wealth, food, fame and learning.

———

**க0. இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோற் றுன்ப முழத்தொறூஉங் காதற் றுயிர்.**

பரி:—(இ-ள்.) சூதாடலான் ¶இருமைப்பயன்களையு மிழக்குந்தோறும்

---

" ஈண்டுச் செய்யுணோக்கிப்பிறழவைத்தார்" என்றிருப்பது மிங்கறி யத்தக்கதாம்.

* அறுவகை யுறுப்பு - அமைச்சு, நாடு, அரண், பொருள், படை, நட்பு.

‡ ஊணுடை அடையாவாம் என்றமையின், அனுபவிக்கும் பொருள்களெல்லாம் அடையாவாமென்பது கொள்ளப்படும். உண்ண உணவும் உடுக்க வுடையுமில்லாதவன் அனுபவிக்கும் பொருள்களுள் யாதுமிலனாவனென்பது கருத்து.

§ காலமும் கருத்தும் பெருமையின் - சூதாடுமரசன் ஒளி முதலிய வற்றைப் பெறுதற்கேற்ற காலத்தையும், அவற்றைப்பெறவேண்டு மென்னுமெண்ணத்தையும் பெருதிருத்தலால்.

† இவை - ஒளி, கல்வி, செல்வம், ஊண், உடை என்பன.

¶ இருமைப்பயன் - இப்பிறப்பிலும் வருபிறப்பிலும் உண்டாகும் (நல்வினையின் பயனாய) சுகபோகம்.

*அதன்மேற் காதல் செய்யுஞ் சூதன்போல உடம்பான் †மூவகைத் துன்பங்களையும் அனுபவிக்குந்தோறும் ‡அதன்மேற் காதலையுடைத்து உயிர், (எ-று).

¶சூது-ஆகுபெயர். $உயிரின தறியாமை கூறுவார் போன்று சூதன தறியாமை கூறுதல் கருத்தாகலின், 0அதனை யாப்புறுத்தற் பொருட்டு உவமமாக்கிக் கூறினர். ||இத §னெதிர்மறை முகத்தாற் ()சூதினைவெறுத்தொழிவானை யொக்கும் உடம்பினை வெறுத்தொழியு முயிரெனவுங் கொள்க. இதனுன் ০அஃதொழிதற் கருமையும் ஒழிந் தாரது பெருமையுங் கூறப்பட்டன.

தெளி:— (இ-ள்.) இழத்தொறூஉம் - (சூதாடலால் இருமைப் பயன்களையும்) இழக்குந்தோறும், காதலிக்கும் - (அதன்மேல்) காதல் செய்யும், சூதே போல் - சூதன் போல, உயிர் - உயிரானது, துன்ப முழத்தொறூஉம் - (உடம்பால்) மூவகைத் துன்பங்களையும் அனுப விக்குந்தோறும், காதற்று, (அதன்மேல்) காதலை யுடையது, (எ-று).

சூது-பண்பாகுபெயர். உயிரினது அறியாமையைச் சொல்வார் போன்று சூதனது அறியாமையைச் சொல்லுதல் கருத்தாகலால், அதனை உறுதி செய்தற் பொருட்டு 'இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோல்' என்று உவமான மாக்கிக் கூறினர். இதனெதிர்மறை முகத்தால் சூதினை வெறுத்தொழிகின்றவனை யொக்கும் உடம்பினை வெறுத்து ஒழியும் உயிரெனவுங் கொள்க. இதனுல் அதனை விடுதற் கருமையும் விட்டவரது பெருமையும் சொல்லப்பட்டன. காதல் – விருப்பம்.

---

* அதன்மேல் - சூதாடலின்மேல்

† மூவகைத் துன்பங்கள் - (1) தன்னைப்பற்றியும், (2) பிறவுயிர் களைப்பற்றியும், (3) தெய்வத்தைப் பற்றியும் வரும் பிறவித் துன் பங்கள்.

‡ அதன்மேல் - உடம்பின்மேல்.

¶ சூது என்னும் பண்புப்பெயர் அதனையுடையவனை யுணர்த்துத லால் பண்பாகு பெயராம்.

$ உயிரின தறியாமை கூறுவார்போன்று–'துன்பமுழத்தொறூஉங் காதற்றுயிர்' என்று உயிரினது அறியாமையைக் கூறுவார்போல.

0 அதனை - சூதனது அறியாமையை.

|| இதன் - 'இழத்தொறூஉம்' என்னும் இக்குறளின்.

§ காதலிக்கும் என்பதற்கு (சூதினை) வெறுத்தொழியும் என்பதும், காதற்று என்பதற்கு (உடம்பினை) வெறுத்தொழியும் என்பதும் எதிர்மறையாகும்.

() உடம்பினை வெறுத்தொழியுமுயிர் சூதினை வெறுத்தொழிவானை யொக்கும் என்று கொள்க.

০ அஃது - சூது, அஃது ஒழித்தற் கருமையும் ஒழித்தாரது பெருமை யும் என்றும் பாடமுண்டு.

(க-து.) சூதாடுவான் தான் சூதாடலால் இருமைப் பயன்களையு மிழத்தலை யறியாது அதனையே விரும்புவான் என்பது.

10. As the gambler loves his vice the more he loses by it, so does the jeeva love the body the more it suffers through it.

---

## முப்பத்திரண்டாவது அதிகாரம்

## ௯௫ மருந்து—Medicine

பரி:— *பழவினையானும் காரணங்களானும் மக்கட்கு வாத முதலிய பிணிகள்வரும்; அவற்றுட் பழவினையான் வருவன ‡அதன் கழிவின்கணல்லது தீராமையின், †அவை யொழித்து ||ஏனைக் காரணங்களான் வருவனவற்றைத் தீர்க்கும் மருந்தின் றிறங் கூறுகின்றார். காரணங்களாவன உணவு செயல்களதொவ்வாமையாகலின், பிணிகளுங் காரணத்தான் வருவனவாயின.

தெளி:— பழவினையாலும் காரணங்களாலும் மக்களுக்கு வாத முதலிய பிணிகள்வரும்; அப்பிணிகளுள் பழவினையால் வருவன அப் பழவினை கழியுமிடத் தல்லாமல் தீராமையால், அவற்றை யொழித்து, மற்றைக் காரணங்களால் வரும் பிணிகளைத் தீர்க்கும் மருந்தின் திறத்தைச் சொல்லுகின்றார். காரணங்களாவன உணவு செயல் களினது பொருந்தாமையாகலால், பிணிகளும் காரணத்தால் வருவனவாயின. பிணி-நோய்.

---

க. மிகினுங் குறையினு நோய்செய்யு நூலோர்
வளிமுதலா வெண்ணிய மூன்று.

பரி:—(இ-ள்.) உணவுஞ் செயல்களும் ஒருவன் பகுதிக்கொத்த

* பழவினை - முற்பிறப்பிற் செய்த கருமம்.

‡ அதன்கழிவின்கணல்லது—அப்பழவினையின் ஒழிவின்கணல்லாமல்.

† அவையொழித்து - பழவினையால் வரும் நோய்களை யொழித்து.

|| ''கல்லினுன் மயிரினுன் மீதூண் விரும்பலாற் கருதிய விசாரத்தினுற், கடுவழி நடக்கையான் மலசல மடக்கையாற் கனிபழங் கறியுண்ணலால்; நெல்லினு லுமியினு லுண்டபின் மூழ்கலா னித்திரைகளில்லாமையால், நீர்ப்பகையினுற்பனிக் காற்றிலுடனேதலா-னீடுசரு கிலையூறலால்; மெல்விநல் லார்கலவி யதிகமுள் விரும்பலால் வீழ்மலஞ் சீக்குகையினுன், மிகுசுமை யெடுத்தலா லிளவெயிற் காய்தலான் மெய்வாட வேலை செயலால்; வல்லிரவி லேதயிர்கள் சருகாதி யுண்ணலால் வன்பிணிக் கிடமென்பர்காண்'' என்று குமரேசசதகங் கூறுவதால் ஏனைக் காரணங்கள் இவையென விளங்குவனவாம்.

வளவினவன்றி *அதனின் மிகுமாயினும் குறையுமாயினும் †ஆயுள்வேத முடையாரால் ‡வாதமுதலாக வெண்ணப்பட்ட மூன்று நோயும் அவ னுக்குத் துன்பஞ்செய்யும், (எ-று).

நூலோர் எண்ணிய எனவே, அவர் ¶அவ்வாற்றுன் வகுத்த வாதப்பகுதி பித்தப்பகுதி ஐப்பகுதியென்னும் பகுதிப்பாடும்பெற்றும். $அவற்றிற் குணவொத்தலாவது 0சுவை ()வீரியங்களானும் அளவா னும் பொருந்துதல். செயல்களொத்தலாவது மன மொழி மெய் களாற் செய்யுந் தொழில்களை £அவை வருந்துவதற்கு முன்னே யொழிதல். §இவையிரண்டும் இங்ஙனமின்றி மிகுதல் குறைதல் செய்யின், **அவை தத்தநிலையி னில்லாவாய் வருத்துமென்பதாம். ††காரண மிரண்டும் அவாய்நிலையான் வந்தன. ‡‡முற்றும்மை விகாரத்தாற் றெக்கது. இதனுல், யாக்கைகட் கியல்பாகிய நோய் ¶¶மூவகைத் தென்பதூஉம், அவை துன்பஞ் செய்தற் காரணம் 00இருவகைத் தென்பதூஉம் கூறப்பட்டன. இன்பஞ்செய்தற் காரணம் முன்னர்க் கூறுப.

தெளி :—(இ-ள்.) (உணவும் செயல்களும் ஒருவன் சரீர சுபாவத் திற்கு ஒத்த வளவினவன்றி) மிகினும் - (அதனின்) மிகுமாயினும்,

---

* அதனின்-சரீரசுபாவத்தினும். † ஆயுள்வேதம்-வைத்திய சாஸ்திரம்.
‡ வாதமுதலாக-வாயு முதலியனவாக.

¶ அவ்வாற்றுன் - அவ்வாத முதலியவற்றின் வாயிலாக. "நீதி கருணை நிலைமை யளிமானம், போத மவையின்மை போரிற் புறங் கொடுத்தல், மேதக் கவர்ப்பழித்தல் வேண்டா தவைபிதற்றல், வாத (வாயு)க் குணஞ மதி." "அறிவுடைமை யைந்தடக்க லாகத்தழகு, நெறியுடைமை சொல்வன்மை நீர்மை பெறவரிய, வத்துவித ஞானத் தாதரவா மாண்மையிவை, பித்த(பித்தம்) குண ஞவதெனப் பேசு". "பொறிபிற ழாமை புகழ்கருணை யூக்கம், குறிமதுகை கோப மிலாமை - பொறையோர், நிபமின் றியவீகை நெஞ்சத்துவகை, கப (சிலேத்தும)மொன் றியகுணஞக் காண்" என்று அமிர்தசாரங் கூறுகின்றது.

$ அவற்றிற்கு-வாதப்பகுதி (பிரிவு) முதலிய பகுதிப்பாட்டிற்கு.
0சுவை-உருசி. () வீரியம்-பலம். £ அவை-மனமொழிமெய்கள்.
§ இவையிரண்டும் - உணவு ஒத்தல் செயல்கள் ஒத்தல் என்னு மிவ்விரண்டும். **அவை-மனமொழி மெய்கள்.

†† மிகினும் குறையினும் என்பன அவாவி (வேண்டி) நிற்றலால், (நோய்க்குக் காரணமான) உணவும் செயல்களும் வருவித் துரைக்கப் பட்டன.

‡‡ மூன்றும் என்னும் (இனைத்தென் றறிபொருளில்வந்த) முற் றும்மை செய்யுள் விகாரத்தாற் றெக்கு நின்றது.

¶¶ மூவகைத்து-வாதப்பகுதி, பித்தப்பகுதி, சிலேத்துமப்பகுதி என்று மூன்றுவகையது.

00 இருவகைத்து-உணவு செயல்களென்று இரண்டுவகையது.

குறையினும்-குறையுமாயினும், நூலோர்-ஆயுள்வேத முடையாரால், வளிமுதலா-வாதமுதலாக, எண்ணிய-எண்ணப்பட்ட, மூன்று-மூன்று நோயும், (அவனுக்கு), நோய்-துன்பத்தை, செய்யும்-உண்டாக்கும், (எ-று).

நூலோர் எண்ணிய எனவே, அவர் அவ்வாற்றால் வகுத்த வாதப் பகுதி பித்தப்பகுதி சிலேத்துமப்பகுதி என்னும் பகுதிப்பாடும் பெற்றும். அவற்றிற்கு உணவு ஒத்தலாவது சுவை வீரியங்களாலும் அளவாலும் பொருந்துதல். செயல்கள் ஒத்தலாவது மனமொழி மெய்களால் செய்யுந்தொழில்களை அவை வருந்துவதற்கு முன்னே யொழிதல். இவையிரண்டும் இவ்வாறல்லாமல் மிகுதல் குறைதல் செய்தால், அவை தத்தம் நிலையினில்லாமல் வருத்துமென்பதாம். உணவும் செயல்களும் என்னுங் காரணமிரண்டும் அவாய் நிலையால் வந்தன. மூன்றும் என்னும் முற்றும்மை விகாரத்தாற்றொக்குநின்றது. இதனால் உடம்புகளுக்கு இயல்பாகிய நோய் மூவகைத்தென்பதும், அவை துன்பம் செய்தற்குக் காரணம் இருவகைத் தென்பதும் சொல்லப்பட்டன. இன்பஞ்செய்தற்குக் காரணத்தைப் பின்னே சொல்லுவர்.

(க-து.) ஒருவனுக்கு உணவும் செயல்களும் ஒத்த வளவின்றி மிகுமாயினும் குறையுமாயினும் அவனுக்கு வாத முதலிய மூன்று நோயும் துன்பஞ் செய்யும் என்பது.

1. If food and work are either excessive or deficient, the three things enumerated by medical experts, flatulence, biliousness and phlegm, will cause one disease.

---

**௨. மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய**
**தற்றது போற்றி யுணின்.**

பரி:—(இ-ள்.) ஒருவன் முன்னுண்டது அற்றபடியைக் குறிகளாற் றெளியவறிந்து பின்னுண்ணுமாயின், அவன் யாக்கைக்கு மருந்தென்று வேறுவேண்டாவாம், (எ-று).

குறிகளாவன: யாக்கைநொய்ம்மை, நோக்கின்றூய்மை, கரணங்கடொழிற் குரியவாதல், பசிமிகுதலென விவை முதலாயின. பிணிகள் யாக்கையவாகலின் 'யாக்கைக்கு' என்றார். உணினென்பது §அதனருமை தோன்ற நின்றது.

தெளி:—(இ-ள்.) (ஒருவன்) அருந்தியது - (முன்) உண்டவுணவு, அற்றது - சீரணித்தபடியை, போற்றி - (குறிகளால்) தெளியவறிந்து, உணின் - (பின்னே) உண்பானாயின், யாக்கைக்கு - (அவன்) உடம்பிற்கு, மருந்தென - மருந்தென்று, வேண்டாவாம் - (வேறு) வேண்டுவதில்லையாம், (எ-று).

குறிகளாவன: உடம்பு சிறுகியிருத்தல், நோக்கம் பரிசுத்தமாயிருத்தல், கரசரணாதி கரணங்கள் தொழிற்குரியவாதல், பசிமிகுதல் என விவை முதலாயின. பிணிகள் உடம்பின்க ணிருப்பனவாகலால்

---

§அதனருமை-(அருந்தியதற்றதுபோற்றி) உண்ணுதலினருமை.

'யாக்கைக்கு' என்றார். உணினென்பது அதனருமைதோன்ற நின்றது.

(க-து.) ஒருவன் உண்டவுணவு சீரணித்தபடியை நன்குயறிந்து உண்பானாயின், அவனுடம்பிற்கு வேறு மருந்து வேண்டாவாம்.

2. No medicine is necessary for him who eats after assuring himself that what he has already eaten has been digested.

---

ந. அற்று லளவறிந் துண்க வஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க்கு மாறு.

பரி:—(இ-ள்.) முன்னுண்டது *அற்றாற்பின்னுண்பதனை †அறுமளவறிந்து ‡அவ்வளவிற்றாக உண்க. ¶இறப்பவும் பலவாயபிறயாக்கைகளிற் பிழைத்துப் பெறற்கரிய இம்மானுடயாக்கையைப் பெற்றான் $அதனை நெடுங்காலங்கொண்டு செலுத்து நெறி 0அதுவாகலான், (எ-று).

இம்மை மறுமை வீடு பேறுக ளெய்தற்பாலது ஈதொன்றுமே யாகலின் 'உடம்பு பெற்றான்' என்றும், £அது நெடிது நின்றுழி ¶¶அவை பெருகச்செய்து கொள்ளலாமாகலின் 'நெடிதுய்க்குமாறு' என்றுங் கூறினர் oபெற்றாலென்று பாடமோதுவாருமுளர்.

தெளி:—(இ-ள்.) அற்றால்-(முன்னுண்டவுணவு) அற்றால், பின்னுண்ணு முணவை), அளவறிந்து-அறுமளவறிந்து, உண்க - (அவ்வளவினதாக) உண்ணக்கடவன், உடம்பு-(மிகவும் பலவாய வேறு சரீரங்களினின்றுந் தப்பிப்பெறுதற்கரிய விம்மானுட) உடம்பை, பெற்றான்-பெற்றவன், நெடிது-(அதனை) நெடுங்காலம், உய்க்குமாறு-கொண்டு செலுத்தும்வழி, அஃது-அதுவாம், (ஆகலால்), (எ-று).

இம்மை மறுமை வீடுபேறுகளை அடைதற்குரியது இம்மானுடவுடம்பொன்றுமே யாகலால் 'உடம்பு பெற்றான்' என்றும், அது நெடுங்காலம் நின்ற விடத்து அவற்றைப் பெருகச் செய்து கொள்ளலாமாகலால் 'நெடிதுய்க்குமாறு' என்றும் சொல்லினர்.

---

* அற்றால்-சீரணித்தால். † அறுமளவு-சீரணிக்குமளவு

‡ அவ்வளவிற்றாக-சீரணிக்கும் அளவினையுடையதாக.

¶ "புன்மர நெளிபுழுப் புள்வி லங்கெனும், பன்மைய துயர்செயும் பலங்கள் தப்பியே, வன்மைகொ ணிலமிசை மக்க ளாகுதல், நன்மை கொளுயிர்க்கலா லரிது நந்தியே" என்பது பிரபுலிங்கலீலை.

$ அதனை-மானுடயாக்கையை.

0 அதுவாகலான்-அளவறிந்துண்ணுதலாகலின்.

£ அது-மானுடயாக்கை.

¶¶ அவை-இம்மை மறுமை வீடுபேறுகள். (பேறு-பெறப்படுவது).

o பெற்றான் என்பதனைப் பெற்றால் என்று பாடங்கூறுவாருமுண்டு.

(க-து.) மானுடயாக்கையின் பயனை யடைய விரும்புவான் உணவினை அளவறிந்துண்ணக்கடவன் என்பது.

3. If one's food has been digested let one eat with moderation; for that is the way to prolong one's embodied life.

---

ச. அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து.

பரி:—(இ-ள்.) முன்னுண்டது அற்றபடியையறிந்து பின் மிகப் பசித்து உண்ணுங்கால் மாறுகொள்ளாத உணவுகளைக் *குறித்துக் கொண்டுண்க, (எ-று).

†'அற்றதறிந்து' என்னும் பெயர்த்துரை அதனையாப்புறுத்தற் பொருட்டு உண்டது அற்றாலும் அதன் பயனாகிய ‡இரத மறுதாகலான் ¶அதுவுமறல் வேண்டுமென்பார் $'துவரப்பசித்து'என்றார். §பசித்தல் வினை ஈண்டு உடையான்மே னின்றது. மாறுகொள்ளாமையாவது உண்பான் பகுதியோடு மாறுகொள்ளாமையும், காலவியல்போடு மாறுகொள்ளாமையும், சுவை வீரியங்களாற் றம்முண் மாறுகொள்ளாமையுமாம். ()அவையாவன: ㅇமுறையே வாதபித்த ஐக்களாய பகுதிக் கடாதவற்றைச் செய்வனவாதலும், |பெரும்

---

* ஆராய்ந்துகொண்டுண்க. † 'அற்றாலளவறிந் துண்க' என்று கூறினவர் அவ்வளவோடமையாது பின்னும் 'அற்றதறிந்து' என்று கூறியது அதனை (அற்றாலளவறிந்துண்ணுதலை) உறுதி செய்தற்கென்க. 'அற்ற தறிந்து' என்னும் பெயர்த்துரை-அற்றதறிந்து என்னும் அனுவாதம். முன்னர்க் கூறியதொன்றனைப் பின்னர் ஒரு நிமித்தம்பற்றிக் கூறுதல் அனுவாதமாம்.

‡ இரதம்-சாரம். ¶ அதுவும்-இரதமும்.

$ மிகப்பசித்து என்றும் பாடமுண்டு.

§ பசித்து என்னும் சினை (வயிற்றின்) வினை இங்கு அப்பசியையுடையான்மேல் (முதலின்மேல்) நின்றது.

() அவையாவன-மாறுகொள்ளுதல்களாவன.

ㅇ (1) உண்பான் பகுதியோடு மாறுகொள்ளுதல்-வாதபித்த சிலேத்துமங்களாலாகிய உடம்பிற்குப் பொருந்தாதனவற்றைச் செய்தல்; (2) காலவியல்போடு மாறுகொள்ளுதல்-பெரும்பொழுது சிறுபொழுது என்னும் காலவேறுபாடுகளுள் ஒரு காலத்திற்காவன மற்றொரு காலத்திற்கு ஆகாமற் போதல்; (3) சுவை வீரியங்களால் தம்முள் மாறுகொள்ளுதல்-தேனும் நெய்யும் தம்முள் ஒத்து நஞ்சாதல் போல்வனவாம் என்பது முறையே என்பதன் அடைவாம்.

| பெரும்பொழுது-கார் (ஆவணி, புரட்டாசி), கூதிர் (ஐப்பசி, கார்த்திகை), முன்பனி (மார்கழி, தை), பின்பனி (மாசி, பங்குனி), இளவேனில் (சித்திரை, வைகாசி), முதுவேனில் (ஆனி, ஆடி) என்று ஆறு பகுதியினையுடையதாம்.

பொழுது †சிறுபொழுதென்னுங் கால வேறுபாடுகளுள் ஒன்றற்காவன பிறிதொன்றற் காகாமையும், தேனு நெய்யுந் $தம்முளொத்து நஞ்சாதல் போல்வனவுமாம். ‡அவற்றைக் குறித்துக் கொள்ளாது மனம்பட்ட வாற்றாற்றுய்ப்பின் ¶அதனானே நோயும் மரணமும் வருதலின் ‘ கடைப்பிடித்து ’ என்றார்.

தெளி:—(இ-ள்.) அற்றதறிந்து (முன்னுண்டவுணவு) அற்றபடியை அறிந்து, துவரப் பசித்து - (பின்னே) மிகப்பசித்து, (உண்ணும்போது), மாறல்ல - மாறு கொள்ளாத உணவுகளை, கடைப்பிடித்து - குறித்துக் கொண்டு, துய்க்க - உண்ணக் கடவன், (எ-று).

‘ அற்ற தறிந்து ’ என்று பின்னுஞ் சொல்லியது அதனை உறுதி செய்தற்பொருட்டாம். உண்டது அற்றாலும் அதன் பயனாகிய இரதம் அறாதாகலால் அதுவும் அறல் வேண்டுமென்பார் ‘ துவரப் பசித்து ’ என்றார். பசித்தல் என்னும் வினை இங்கு அதனை யுடையவன்மேல் நின்றது. மாறுகொள்ளாமையாவது உண்பவன் சரீர சுபாவத் தோடு மாறுகொள்ளாமையும், காலவியல்போடு மாறுகொள்ளா மையும், சுவை வீரியங்களால் தம்முள் மாறுகொள்ளா மையுமாம். அவையாவன முறையே வாத பித்த சிலேத்துமங்களா லாகிய சரீர சுபாவத்திற்குப் பொருந்தாதனவற்றைச் செய்வன வாதலும், பெரும்பொழுது சிறுபொழுது என்னும் கால வேறுபாடு களுள் ஒன்றற்கு ஆவன மற்றொன்றற்கு ஆகாமையும், தேனும் நெய்யும் தம்முள் ஒத்து நஞ்சாதல் போல்வனவுமாம். அவற்றைக் குறித்துக்கொள்ளாது மனம் விரும்பிய வழியால் உண்டால் அதனாலே நோயும் மரணமும் வருதலால் ‘ கடைப்பிடித்து ’ என்றார்.

(க.-து.) ஒருவன் முன்னுண்டவுணவு சீரணித்ததையறிந்து நன்றாய்ப் பசித்தபின் மாறுபா டில்லாத வுணவுகளை யாராய்ந் துண்ணக்கடவன் என்பது.

4. After assuring that food has been digested one should eat, when hungry, whatever is not disagreeable.

---

ரு. மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணி
னூறுபா டில்லை யுயிர்க்கு.

---

† சிறுபொழுது - மாலை (1-10 நாழிகை இரா), யாமம் (11-20 நாழிகை இரா), வைகுறு (21-30 நாழிகை இரா), காலை (1-10 நாழிகை பகல்), நண்பகல் (11-20 நாழிகை பகல்), எற்பாடு (21-30 நாழிகை பகல்) என்று ஆறு பகுதியினையுடையதாம்.

$ தம்முளளவொத்து என்றும் பாடமுண்டு.

‡ அவற்றை - உணவுகளை. ¶ அதனானே - உண்டலாலே.

பரி :—(இ-ள்.) *அம்மூவகை மாறுகோளு மில்லாத உணவைத் †தன்னுள்ளம் வேண்டிய வளவினனன்றிப் பிணிவாரா வளவினல் ஒருவனுண்ணுமாயின், அவனுயிர்க்குப் பிணிகளாற் றுன்பம் விளைத லுண்டாகாது, (எ-று).

¶உறுவதனை ஊறு என்றார்; அஃது இன்பத்திற் செல்லாதாயிற்று, இல்லையென்பது தொடர்பாகலின். துன்பமுறுவது உயிரே யாதலின் ||அதன்மேல் வைத்துக் கூறினர். மாறுபாடில் வழியுங் குறைதல் நன்றென்பதாம். இவை நான்கு பாட்டானும் உண்ணப்படுவனவும், அவற்றதளவும், காலமும், பயனுங் கூறப்பட்டன.

தெளி:—(இ-ள்.) மாறுபாடில்லாத-(அம்மூவகை)மாறு கோளும் இல்லாத, உண்டி-உணவை, மறுத்து-(தன்மனம் வேண்டிய வளவை) மறுத்து, (பிணி வாராதவளவினல்), உண்ணின் (ஒருவன்) உண்ணுவானுயின், உயிர்க்கு – (அவன்) உயிர்க்கு, ஊறுபாடு – (பிணிகளால்) துன்பம் விளைதல், இல்லை – உண்டாகாது, (எ-று).

உறுவதாகிய துன்பத்தினை ஊறு என்றார் ; அவ்வூறு இன்பத்திற் செல்லாதாயிற்று, இல்லையென்பது தொடர்பாயிருத்தலாலெனக. துன்பமுறுவது உயிரே யாதலால் 'ஊறுபா டில்லையுயிர்க்கு' என்று அதன்மேல் வைத்துச் சொல்லினர். உணவு மாறுபாடில்லாத விடத்தும் குறைதல் நன்றென்பதாம். இவை நான்கு பாட்டாலும் உண்ணப்படுவனவும், அவற்றினளவும், காலமும், பயனும் சொல்லப் பட்டன.

(கு-து.) மாறுபாடில்லாத வுணவை யளவறிந் துண்போனுக்கு வியாதிகளால் துன்பமுண்டாதல் இல்லை என்பது.

---

* அம்மூவகை மாறுகோளாவது உணவுகள் உண்பவன் சரீரசுபா வத்தோடு மாறுகொள்ளுதல், காலவியல்போடு மாறுகொள்ளுதல், சுவை வீரியங்களால் தம்முள் மாறுகொள்ளுதல் என்பனவாம்.

† தன்னுள்ளம் வேண்டிய வளவினனன்றி – தனது மனம் விரும்பிய அளவாகவுண்ணுது.

¶ உறுவதாகிய துன்பத்தை ஊறு என்று ஆகுபெயரால் கூறினர்; [ஊறு என்பது முதனிலை திரிந்த தொழிற் பெயர்.] அஃது (ஊறு என்பது இங்கு) இன்பத்தில் (இன்பமென்னும் பொருளில்) செல்லா தாயிற்று, (ஊறுபாடு) இல்லையென்பது தொடர்பாகலின் (தொடர்பா யிருத்தலால்) என்க. மாறுபாடில்லாத உண்டியை மறுத்துண்ப வர்க்கு இன்பமுண்டாதலன்றித் துன்பமுண்டாதலில்லை யாதலால், இல்லையென்பதனேடு தொடர்ந்து நிற்கும் ஊறு என்பது (உறுவ தாகிய இன்பம் எனப் பொருள்படாது) உறுவதாகிய துன்பம் எனப் பொருள்பட்டு நின்றதென்க. ஊறு என்பது இன்பமென்னும் பொருளில் இங்கு வந்தால், மாறுபாடில்லாத வுண்டியை மறுத்துண்ப வர்க்கு இன்ப முண்டாதலில்லை (அஃதாவது துன்பமுண்டாதலுண்டு) என்று பொருள்பட்டு முரணுய்ப்போமெனக.

|| அதன்மேல் - உயிரின்மேல்.

5. There will be no misery (through disease) to one's life, if one eats with moderation, food which is not disagreeable.

---

**கூ. இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்குங்
கழிபே ரிரையான்க ணோய்.**

பரி :—(இ–ள்.) *அக்குறைதலை நன்றென்றறிந்து †அவ்வாறே-யுண்பவன்மாட்டு இன்பம் நீங்காது நிற்கு மாறுபோல மிகப் பெரிய விரையை விழுங்குவான்மாட்டு நோய் நீங்காது நிற்கும், (எ–று).

*அவ்வாறேயுண்டல் – உண்ணலா மளவிற் சிறிது குறையவுண்டல், இன்பமாவது வாத முதலிய மூன்றும் தத்தநிலையிற் றிரியாமையின் மன மொழி மெய்கள் அவன் வயத்த வாதலும் ‡அதனுன் அற முதலிய நான்கு மெய்தலுமாம். இரையை யளவின்றி யெடுத்து அதனுன் வருந்தும் விலங்கோடொத்தலின் ' இரையான் ' என்ருர். $விதி யெதிர்மறைகளை உவமமும் பொருளுமாக்கியது £இரண்டானும் பெறுதற்கு.*

தெளி :—(இ–ள்.) *இழிவறிந்து – அக்குறைதலை (நல்லதென்று) அறிந்து, உண்பான்கண் – (அவ்வாறே) உண்பவனிடத்து, இன்பம் போல் – இன்பம் நீங்காது நிற்கும் விதம்போல, கழிபேரிரையான்-கண் – மிகப்பெரிய இரையை விழுங்குவா னிடத்து, நோய் – பிணி, நிற்கும் – நீங்காது நிற்கும், (எ-று).*

*அவ்வாறேயுண்டல் – உண்ணலாமளவிற் சிறிது குறையவுண்டல். இன்பமாவது வாத முதலிய மூன்றும் தமது தமது நிலையில் வேறு-*

---

* அக்குறைதலை – மாறுபாடில்லாத விடத்தும் உணவு குறை-வாதலை.

† அவ்வாறே – மாறுபாடில்லாத வுணவு குறைதலை நன்றென் றறிந்த விதமே.

‡ அதனுன் – மன மொழி மெய்கள் இழிவறிந் துண்பானது வயத்தவாதலினுல்.

$ இழிவறிந் துண்பான்க ணின்பம் நிற்கும் என்பது விதி (உடம்-பாடு) ; கழிபே ரிரையான்க ணோய் நிற்கும் என்பது எதிர்மறை. (இழிவறிந்துண்பானுக்குக் கழிபேரிரையான் எதிர்மறையாம் ; இன்பத்திற்கு நோய் எதிர்மறையாம்.) இழிவறிந் துண்பான்க ணின்பம் போல் என்பது உவமம். (உவமானம்) ; கழிபே ரிரையான்கணோய் நிற்கும் என்பது பொருள் (உவமேயம்).

£ இரண்டானும் பெறுதற்கு – உடம்பாட்டாலும் எதிர்மறை-யாலும் முறையே மாறுபாடில்லாத வுணவை யுண்ணலாமளவிற் சிறிது குறைய உண்டால் இன்பமுண்டாதலும், மிருகம்போ லளவு-கடந்து மிகப் பெரிய இரையை விழுங்கினுல் நோயுண்டாதலும் பெறுதற் கென்க.

படாமையால் மன மொழி மெய்கள் அவன் வசத்திருப்பன வாதலும் அதனுல் அற முதலிய நான்கும் அடைதலுமாம். (அளவுகடந் துண்பவன்) இரையை அருந்து மளவின்றி எடுத்து அதனுல் வருந்தும் மிருகத்தோடொத்தலால் (அவனை) 'இரையான்' என்முர். உடம்பா டெதிர்மறைகளை உவமானமும் உவமேயமு மாக்கியது இரண்டாலும் பெறுதற் கென்க.

(க-து.) மாறுபாடில்லாத வுணவை அளவறிந்து குறைவாக உண்பவனிடத்து இன்பமும், அஃதறியாது உணவை மிகுதியாக உண்பவனிடத்து நோயும் நீங்காது நிற்கும் என்பது.

6. As pleasure dwells with one who eats moderately so disease dwells with the glutton who eats voraciously.

---

எ. தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணி
னோயள வின்றிப் படும்.

பரி:—(இ-ள்.) தன் பகுதியும் அதற்கேற்ற வுணவும் காலமுமாரா-யாது வேண்டியதோருணவை வேண்டியதோர் காலத்து வயிற்றுத் தீயளவன்றி ஒருவன் மிகவுண்ணுமாயின், அவன்மாட்டு நோய்கள் எல்லையற வளரும், (எ-று).

*தெரியாமை வினைக்குச் செயப்படு பொருள்கள் அதிகாரத்தான் வந்தன, நோய் - சாதியொருமை. இவை இரண்டு பாட்டானும் †அவ்வகை யுண்ணுவழிப்படு மிழுக்குக் கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) தெரியான் - (தன் சரீர சுபாவமும் அதற்-கேற்ற வுணவும் காலமும்) ஆராயாது, (வேண்டியதோருணவை வேண்டியதோர் காலத்து), தீயளவன்றி - (வயிற்றுத்) தீயள-வல்லாமல், பெரிதுண்ணின் - (ஒருவன்) மிகவுண்ணுவானுயின், (அவனிடத்து), நோய் - பிணிகள், அளவின்றி - அளவில்லாமல், படும் - வளரும், (எ-று).

தெரியான் என்பதன் தெரியாமை வினைக்குச் செயப்படு பொருள்கள் அதிகாரத்தால் வந்தன. நோய் என்பது ஈறு தோன்முத சாதி யொருமைப் பெயர். இவை இரண்டு பாட்டாலும் அவ்வாறு உண்ணுதவிடத் துண்டாகும் தவறு சொல்லப்பட்டது.

(க-து.) உணவினைச் சீரணிக்கும் அளவறியாது மிகுதியாக உண்பவனிடத்து நோய்கள் அளவில்லாம லுண்டாகும் என்பது.

---

* (தெரியான் என்பதன்) தெரியாமை வினைக்குத் தன் பகுதியும் அதற் கேற்றனவும் காலமும் என்னும் செயப்படு பொருள்கள் (மருந்து என்னுமிந்த) அதிகாரத்தால் வந்தன.

† அவ்வகை யுண்ணுவழி - மாறுபாடில்லாத வுண்டியை மறுத் துண்ணுதவிடத்து.

7. He will be afflicted with numerous diseases, who eats immoderately without discrimination, ignorant of the rules of health.

---

அ. *நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.

பரி:—(இ-ள்.) மருத்துவனாயினான் ஆதுரன்மாட்டு நிகழ்கின்ற நோயை அதன் குறிகளான் இன்னதென்று துணிந்து, பின் அது வருதற்காரணத்தை ஆராய்ந்து தெளிந்து, பின் அது தீர்க்கு முபாயத்தினை யறிந்து, அதனைச் செய்யும்வழிப் பிழையாமற் செய்க. (எ-று).

*காரணம்-உணவு செயலென †முற்கூறிய விரண்டும். ‡அவற்றை ஆயுள்வேத முடையார் நிதானமென்ப. ¶அவை நாடுதற் பயன்- நோயினையும் வாயினையும் ஐயமறத் துணிதல். மருந்து செய்தல், உதிரங் களைதல், அறுத்தல், சுடுதன் $முதலிய செயல்களெல்லாம் அடங்குதற்கு 'அது தணிக்கும் வாய்' என்றார். 0"கழுவாயுமுள" என்றார் பிறரும். பிழையாமை — பழைய மருத்துவர் செய்து வருகின்ற முறைமையிற் றப்பாமை.*

தெளி:—(இ-ள்.) (மருத்துவனாயினான்) நோய்-(நோயாளியினிடத்து நிகழ்கின்ற) நோயை, நாடி-(அதன் குறிகளால் இன்னதென்று) துணிந்து, நோய் முதல்-(பின்பு) அந்நோய்வருதற்குக் காரணத்தை, நாடி-ஆராய்ந்து தெளிந்து, அது தணிக்கும் வாய்-(பின்பு) அந்நோயைத் தீர்க்கும் உபாயத்தினை, நாடி-அறிந்து-வாய்ப்பச் செயல்-(அவ்வுபாயத்தினைச் செய்யும்வழிப்) பிழையாமற் செய்யக்கடவன், (எ-று).

*காரணம்-உணவுசெயலென்று முற்கூறிய விரண்டும். அவற்றினை மருத்துவ நூலார் நிதானமென்பர். அவற்றை நாடுதற்குப் பயன்-*

---

*"இங்ஙனம் இந்த யோகசாஸ்திரம் வைத்திய சாஸ்திரம் போன்று நான்கு பிரிவினை யுடைத்தா யிருக்கின்றது. எங்ஙனம் வைத்திய சாஸ்திரம் ரோகம், ரோக ஏது, ஆரோக்கியம், ஔஷதம் என்னு மிவற்றைப்பற்றிக் கூறுகின்றதோ, அங்ஙனமே யோக சாஸ்திரமும் சம்சாரம், சம்சார ஏது, மோட்சம், மோட்சவுபாயம் என்னு மிவற்றைப்பற்றிக் கூறுகின்றது" என்று சர்வதரிசன சங்கிரகம் பதஞ்சலி தரிசனத்திற் கூறுவது இங்குணர்தற்பாலதாம்.

† முற்கூறிய-'மிகினுங் குறையினும்' என்னுங் குறளிற் கூறிய.

‡ அவற்றை-உணவுசெயல்களை. ¶ அவை-உணவு செயல்களை.

$ முதலிய என்றமையின், பற்றிடல், கலிக்கமிடுதல், நசியம் வார்த்தல் முதலியவற்றையுங் கொள்க.

0 புறநானூறு, 34. இதன் பொருள். (பாதகங்களைப்) போக்கும் வழியும் (பிராயச்சித்தமும்) உள என்பது.

நோயினையும் (அதனைத் தீர்க்கும்) உபாயத்தினையும் ஐயமறத் துணிதல். மருந்துசெய்தல், உதிரங் களைதல், அறுத்தல், சுடுதல் முதலிய செயல்களெல்லாம் அடங்குதற்கு 'அது தணிக்கும் வாய்' என்றார். பிழையாமை-பழையமருத்துவர் செய்து வருகின்ற முறைமையிற் றவறாமை. மருத்துவன்-வைத்தியன்.

(க-து.) மருத்துவனாயினான் வியாதியாள னிடத்து நிகழ்கின்ற நோய் முதலியவற்றை நன்காராய்ந்து மருத்துவஞ் செய்யக் கடவன் என்பது.

8. Let the physician ascertain the nature of the disease, its cause and the means for its cure and treat it according to medical rules.

---

## கூ. உற்றா னளவும் பிணியளவுங் காலமுங் கற்றான் கருதிச் செயல்.

பரி:—(இ-ள்.) ஆயுள்வேதத்தினைக் கற்றமருத்துவன், *அவ்வுபாயத்தினைச் செய்யுங்கால் ஆதுரனளவினையும், அவன்க ணிகழ்கின்ற நோயினளவினையும், தன் செயற்கேற்ற காலத்தினையும், ‡அந்நூல்நெறியால் நோக்கி ¶அவற்றோடு பொருந்தச் செய்க, (எ-று).

ஆதுரனளவு பகுதி †பருவம் வேதனை வலிகளினளவு. பிணியளவு-£சாத்தியம் அசாத்தியம் யாப்பிய மென்னுஞ் சாதி வேறுபாடும், தொடக்க நடுவீறென்னும் ()அதன் பருவ வேறுபாடும், வன்மை மென்மைகளு முதலாயின. காலம்- +மேற்சொல்லியன. §இம்மூன்றும் பிழையாமல் நூனெறியானும் உணர்வு மிகுதியானும் ஆராய்ந்து செய்க வென்பார் 'கற்றான் கருதிச் செயல்' என்றார். இவையிரண்டு பாட்டானும் |அவ்விழுக்குப்பட்டுழி மருத்துவன் றீர்க்குமாறு கூறப்பட்டது.

---

* அவ்வுபாயத்தினை-நோய் தீர்க்கும் உபாயத்தினை.

‡ அந்நூனெறியால்-ஆயுள் வேதத்தின் வழியால்.

¶ அவற்றோடு-உற்றானளவு, பிணியளவு, காலம் என்பவற்றோடு.

† பருவம்-நோயாளியின் வயது.

£ சாத்தியம்-தீர்க்கத் தக்கது; அசாத்தியம்-தீர்க்கத் தகாதது; யாப்பியம்-பெரும்பான்மை தீர்க்கத் தக்கதும் சிறுபான்மை தீர்க்கத் தகாதது மெனக்கொள்ளத் தக்கது.

() அதன்பருவவேறுபாடும்-பிணியின் காலவேறுபாடும்.

+ மேற் சொல்லியன-"அற்றதறிந்து" என்னும் குறளின் விசேடவுரையிற் சொல்லிய பெரும்பொழுது, சிறுபொழுது.

§ இம்மூன்றும்-உற்றானளவும், பிணியளவும், காலமும்.

| அவ்விழுக்குப் பட்டுழி-அளவறியாதுண்டு நோயால் வருந்தும் போது.

தெளி :—(இ-ள்.) கற்றான்-(ஆயுள் வேதத்தினைக்) கற்ற மருத்துவன், (அவ்வுபாயத்தினைச் செய்யுங்கால்), உற்றானளவும்-நோயாளியினளவினையும், பிணியளவும் – (அவனிடத்து நிகழ்கின்ற) நோயினளவினையும், காலமும் (தன் செயற்கேற்ற) காலத்தினையும், கருதி – (அந்நூல் வழியால்) நோக்கி, செயல் – (அவற்றோடு பொருந்தச்) செய்யக் கடவன், (எ–று).

நோயாளியினளவு-சரீர சுபாவம் பருவம் வேதனை வலிகளினளவு. பிணியளவு - சாத்தியம் அசாத்தியம் யாப்பியம் என்னும் சாதி வேறுபாடும், தொடக்கம் நடு ஈறு என்னும் அதன் பருவ வேறுபாடும், வன்மை மென்மைகளும் முதலாயின. காலம்-முன் சொல்லியன. இம் மூன்றும் தப்பாமல் நூல் வழியாலும் அறிவு மிகுதியாலும் ஆராய்ந்து செய்கவென்பார் ‘கற்றான் கருதிச்செயல்’ என்றார். இவை இரண்டு பாட்டாலும் அவ்விழுக்குண்டானவிடத்து மருத்துவன் தீர்க்கும்வழி சொல்லப்பட்டது.

(க-து.) மருத்துவனாயினான் பிணியாளியினளவையும் பிணியினளவையும் காலத்தையும் மருத்துவ நூல்வழியா லாராய்ந்தறிந்து அவற்றோடு பொருந்த மருத்துவஞ் செய்யக்கடவன் என்பது.

9. Let the expert physician ascertain the condition of his patient, the nature of his disease, and the season of medication and then treat accordingly.

---

கo. உற்றவன் றீர்ப்பான் மருந்துழைச் செல்வானென் றப்பானாற் கூற்றே மருந்து.

பரி :—(இ-ள்.) பிணிக்கு மருந்தாவது அதனையுற்றவன் அதனைத் தீர்க்கு மருத்துவன் அவனுக்குக் கருவியாகிய மருந்து அதனைப் பிழையாமல் இயற்றுவா னென்று சொல்லப்பட்ட நான்கு பகுதியையுடைய நான்கு திறத்தது, (எ-று).

*நான்கென்னு மெண் வருகின்றமையின், அது நோக்கி அப்பால் என்றொழிந்தார். †நான்கு கூற்றதென்பது விகாரமாயிற்று. அவற்றுள், உற்றவன்வகை நான்காவன :— பொருளுடைமை, மருத்துவன் வழிநிற்றல், நோய் நிலையுணர்த்தல் வன்மை, மருத்துத் துன்பம் பொறுத்தலென விவை. தீர்ப்பான்வகை நான்காவன :—¶நோய் கண்டஞ்சாமை, ஆசிரியனை வழிபட்டோதியெய்திய கல்வியு நுண்ணறிவுமுடைமை, பலகாலுந் தீர்த்துவருதல், மனமொழி மெய்க டூயவாதலென விவை. மருந்தின்வகை நான்காவன :– பல பிணிகட்கு மேற்றல், சுவை வீரியம் விளைவாற்றல்களான் மேம்படுதல், எளிதினெய்தப்படுதல், பகுதியோடு பொருந்துதலென விவை. இயற்றுவான்வகை நான்காவன:—ஆதுரன்மாட்டன்புடைமை, மனமொழி

---

* நான்கு என்னும் எண் (நாற் கூற்றே எனப் பின்) வருகின்றமையின், அது (அந்நான்கை) நோக்கி (நான்கு என்று கூறவேண்டுவதை) அப்பால் என்று (சுட்டிக்கூறி) யொழிந்தார் (நீங்கினார்) என்பது.

† நான்கு கூற்றதென்பது செய்யுள் விகாரத்தால் நாற்கூற்று என்றாயிற்று.

¶ பல பிணிநோய் காண்டற்கஞ்சாமை யென்றும் பாடமுண்டு.

மெய்கடுயவாதல், சொல்லியன அவ்வாறே செய்தல் வன்மை, அறிவுடைமையெனவிவை. இவையெல்லாங் கூடியவழியல்லது பிணி தீராமையின், இத்தொகுதியையும் ' மருந்து ' என்றார். ஆயுள்வேதமுடையாரும் †இவை ‡கால்களாக நடக்குமென்பது பற்றிப் பாதமென்றும், இவை மாறுபட்டவழிச் சாத்தியமு முதிர்ந்து அசாத்தியமாமென்றுங்கூறினார். இதனால் ¶அதனைத் தீர்த்தற்கு வேண்டுவனவெல்லாந் தொகுத்துக் கூறப்பட்டன.

தெளி :—(இ-ள்.) மருந்து-(பிணிக்கு) மருந்தாவது, உற்றவன்-(அப்பிணியை) உற்றவன், தீர்ப்பான்-(அப்பிணியைத்) தீர்க்கு மருத்துவன், மருந்து - (அம்மருத்துவனுக்குச் சாதனமாகிய) மருந்து, உழைச்செல்வான்-(அம்மருந்தினைத் தப்பாமல்) செய்பவன், என்று-என்று சொல்லப்பட்ட, அப்பால் - நான்கு பகுதியையுடைய, நாற்கூற்று - நான்கு திறத்தது, (எ-று).

நான்கு என்னும் எண் வருகின்றமையின், அது நோக்கி அப்பால் என்று சுட்டி யொழிந்தார். நான்கு கூற்றது என்பது நாற்கூற்று என்று விகாரமாயிற்று. அந்நான்கனுள், உற்றவன் வகை நான்காவன :—பொருளுடைமை, மருத்துவன் வழி நிற்றல், நோய்நிலையை யறிவித்தல் வன்மை, மருந்தின் துன்பம்பொறுத்தல் எனவிவை. தீர்ப்பான் வகை நான்காவன:—நோய் கண்டஞ்சாமை, ஆசிரியனை வழிபட்டோதியடைந்த கல்வியும் நுண்ணறிவு முடைமை, பலகாலுந் தீர்த்து வருதல், மனமொழி மெய்கள் பரிசுத்தமாதல் எனவிவை. மருந்தின்வகை நான்காவன:—பல பிணிகளுக்கும் ஏற்றல், சுவை வீரியம் விளைவு ஆற்றல்களால் மேம்படுதல், எளிதிற் பெறப்படுதல், சரீரசுபாவத்தோடு பொருந்துதல் எனவிவை. இயற்றுவான் வகை நான்காவன :— நோயாளியினிடத்து அன்புடைமை, மனமொழி மெய்கள் பரிசுத்தமாதல், சொல்லியவற்றைச் சொல்லியபடியே செய்தல் வல்லமை, அறிவுடைமை எனவிவை. இவை யெல்லாங் கூடிய விடத்தல்லது பிணி தீராமையால், இக் கூட்டத்தையும் 'மருந்து' என்றார். மருத்துவ நூலாரும் இவை கால்களாக நடக்குமென்பது பற்றிப் பாதமென்றும், இவை விரோதப் பட்ட விடத்துச் சாத்தியமு முதிர்ந்து அசாத்தியமாகு மென்றும் சொல்லினர். இதனால் அதனைத் தீர்த்தற்கு வேண்டுவன வெல்லாம் தொகுத்துச் சொல்லப்பட்டன. என்ற என்னும் பெயரெச்சத் தகரம் செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது.

(க-து.) மருந்து பிணியாளி, அப்பிணியைத் தீர்க்கும் மருத்துவன், அம்மருத்துவனுக்குச் சாதனமான மருந்து, அம்மருந்தைத் தவறுமற் செய்பவன் என்னும் நான்கு வகையை யுடைய நான்கு திறத்ததாம் என்பது.

10. Medical science is four-fold, viz., patient, physician, medicine and compounder; and each of these again consists of four subdivisions.

## அங்கவியல் முற்றிற்று

---

† இவை - உற்றவன்வகை, தீர்ப்பான்வகை, மருந்தின்வகை, இயற்றுவான் வகை. ‡ கால்களாக - மருந்திற்குக் கால்களாக.

¶ அதனை - அவ்விழுக்கினை (நோயை).

# 3. ஒழிபியல்

—o—

பரி :– இனி அவ்வரசியலினும் அங்கவியலினும் அடங்கா தொழிந்த-வற்ற தியல்பு பதின்மூன் றதிகாரத்தாற் கூறுவான் றொடங்கி, முதற்கட் குடிமை கூறுகின்றார்.

தெளி :—இனி அவ்வரசியலிலும் அங்கவியலிலும் அடங்கா தொழிந்தவற்றி னியல்பைப் பதின்மூன் றதிகாரத்தால் சொல்லத் தொடங்கி, முதலில். குடிமை சொல்லுகின்றார்.

---

## முதலாவது அதிகாரம்

### ௯௬ .குடிமை — Noble birth

பரி :—அஃதாவது உயர்ந்த குடியின்கட் பிறந்தாரது தன்மை. உயர்ந்த குடிப்பிறப்பு *நால்வகை வருணத்தார்க்கும் இன்றியமையா–தாகலின், அச்சிறப்புப்பற்றி †இது முன்வைக்கப்பட்டது.

தெளி :—அஃதாவது உயர்ந்த குடியினிடத்துப் பிறந்தவரது தன்மை. உயர்ந்த குடிப்பிறப்பு நால்வகை வருணத்தார்க்கும் அவசியமாக வேண்டுவதாகலால், அச்சிறப்புப்பற்றி இது முன் வைக்கப்பட்டது.

---

க. இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை யியல்பாகச்
செப்பமு நாணு மொருங்கு.

பரி :—(இ-ள்.) செம்மையும் நாணும் சேரக் குடிப்பிறந்தார் மாட் டல்லது பிறர்மாட் டியற்கையாக உளவாகா, (எ–று).

‡இல்லுக்குடி யென்பன ஈண்டுயர்ந்தவற்றின் மேல, செம்மை – £கருத்துஞ் சொல்லுஞ் செயலுந் தம்முண் மாறுகாமை. நாண் – $பழி பாவங்களின் மடங்குதல். ||இவை இற்பிறந்தார்க்காயின்

---

* நால்வகை வருணத்தார் (சாதியார்) – பிரஹ்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர். † இது – குடிமை.

‡ இல்லுக் குடி குல மென்பன ஈண்டுயர்ந்தவற்றின்மேல என்றும் பாடமுண்டு. இல், குடி, குல மென்பன இங்கு உயர்வுடைய-தென்னும் ஒரு பொருட் சொற்களாம்,

£ மனம் வாக்குக் காயமென்னுந் திரிகரணங்களின் செயல்கள் தம்முள் ஒத்து நிகழுதல். அஃதாவது அவை நினைப்பதொன்று ; சொல்வதொன்று ; செய்வதொன்றுமாயிராமை.

$ பழி பாவங்களுக் கேதுவாய செயல்களைச் செய்வதற்கஞ்சுதல்.

|| இவை – செம்மையும் நாணும்.

ஒருவர் கற்பிக்க வேண்டாமற் றுமேயுளவாம்; *பிறர்க்காயிற் கற்பித்த வழியும் நெடிது நில்லா வென்பதாம்.

தெளி :—(இ-ள்.) செப்பமும் – செம்மையும், நாணும் – நாணமும், ஒருங்கு – ஒருசேர, இற்பிறந்தார்க்கண்ணல்லது – உயர்ந்த குடியிற் பிறந்தவரிடத்தல்லாமல், (பிறரிடத்து), இயல்பாக – சுபாவமாக, இல்லை – உண்டாவதில்லை, (எ–று).

இல் என்பதும் குடி யென்பதும் இங்கு உயர்ந்தவற்றின் மேல் நின்றன. செம்மை – கருத்தும் சொல்லும் செயலும் தம்முள் மாறுகாதிருத்தல். நாண் – பழி பாவங்களின் மடங்குதல். இவை உயர்ந்த குடியிற் பிறந்தவர்க்காயின் ஒருவர் கற்பிக்க வேண்டாமல் தாமே யுண்டாகும்; மற்றவர்க்காயின் பிறர் கற்பித்தவிடத்தும் நெடுங்காலம் நில்லா வென்பதாம்.

(க–து.) செம்மையும் நாணமும் உயர்ந்த குடியிற் பிறந்தவரிடத்தல்லது மற்றவரிடத்து இயல்பாக விருத்தலில்லை என்பது.

1. Consistency of thought, word and deed and fear of sin are conjointly natural only to men of noble birth.

---

**உ. ஒழுக்கமும் வாய்மையு நாணுமிம் மூன்று
மிழுக்கார் குடிப்பிறந் தார்.**

பரி :—(இ–ன்.) உயர்ந்த குடியின்கட் பிறந்தார் தமக்குரிய †ஒழுக்கம் மெய்ம்மை நாணெனப்பட்ட இம்மூன்றன்கண்ணும் ‡கல்வியானன்றித் $தாமாகவே வழுவார், (எ–று).

¶ஒழுக்க முதலியன மெய்ம்மொழி மனங்களின வாகலின், ||அம்முறையவாயின. இழுக்குதல் அறியாது வருகின்றமையின் 'இழுக்கார்' என்றார்.

தெளி:—(இ–ள்.) குடிப்பிறந்தார் – உயர்ந்த குடியிற் பிறந்தவர், (தமக்குரிய), ஒழுக்கமும் – ஒழுக்கம், வாய்மையும் – மெய்ம்மை,

---

* பிறர்க்காயின் – தாழ்ந்த குடியிற் பிறந்தவர்க்காயின்.

† ஒழுக்கமாவது அந்தணர் முதலிய வருணத்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரிய முதலிய நிலைகளினின்று அவ்வவற்றிற் கோதிய அறங்களின் வழுவாதொழுகுதல்.

‡ கல்வியானன்றி – கல்வியறிவால் வழுவாதிருத்த லல்லாமல்.

$ தாமாகவே வழுவார் – தாமியல்பாகவே தவறாது நடப்பர்.

¶ ஒழுக்கம் மெய்(உடம்பிற்)கு உரியதென்றும், வாய்மை(மெய் பேசுதல்) மொழிக் (வாக்கிற்)கு உரியதென்றும், நாண் (பழி பாவங்களின் மடங்குதல்) மனத்திற்கு உரியதென்றும் அறிக.

|| அம்முறையவாயின–ஒழுக்கமும் வாய்மையு நாணும் என்று அம்முறையினவாயின.

நாணும் - நாணம், (எனப்பட்ட), இம்மூன்றும் - இம்மூன்ற-னிடத்தும், இழுக்கார்-(கல்வியாலல்லாமல் தாமாகவே) வழுவார், (எ-று).

ஒழுக்கமுதலியன மெய்ம்மொழி மனங்களுக்குரியனவாகலால், அம்முறையவாயின. இழுக்குதல் (தவறிப்போதல்) தாமறியாது வருகின்றமையால் (குடிப்பிறந்தார்) 'இழுக்கார்' என்றார்.

(க-து.) உயர்ந்த குடியிற்பிறந்தவர் தமக்குரிய ஒழுக்கம், வாய்மை, நாணம் என்னும் இம்மூன்றனிடத்தும் வழுவாதொழுகுவர் என்பது.

2. Men of noble birth will never deviate from good manners, truthfulness and modesty.

---

ங. நகையீகை யின்சொ லிகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு.

பரி:— (இ-ள்.) எக்காலத்துந் திரிபில்லாத குடியின்கட் பிறந்தார்க்கு வறியார் சென்றவழி முகமலர்ச்சியும், உள்ளன கொடுத்தலும், இன்சொற் சொல்லுதலும், இகழாமையுமாகிய இந்நான்கும் உரிய கூறென்று சொல்லுவர் நூலோர், (எ-று).

பொய்ம்மை திரிபுடைமையிற் றிரிபின்மையை 'வாய்மை' என்றும், *"இல்லாரை யெல்லாரு மெள்ளுவர்" ஆகலின் இகழா-மையை †அவர் கூறுக்கியுங் கூறினர். ‡குடி-ஆகுபெயர். ¶நான்கின் வகையென்பது பாடமாயின், வாய்மைக் குடிப்பிறந்தார்க்குப் பிறரின் வேறுபாடு இந்நான்கானுளதாமென்றுரைக்க. இவை மூன்று பாட்டானுங் குடிப்பிறந்தார தியல்பு கூறப்பட்டது.

தெளி —(இ-ள்.) வாய்மை-(எக்காலத்தும்) வேறுபடாத, குடிக்கு-குடியிற் பிறந்தவர்க்கு, (வறியவர் சென்றவிடத்து), நகை-முகமலர்ச்சியும், ஈகை (உள்ளவற்றைக்) கொடுத்தலும், இன்சொல்-இன்சொற் சொல்லுதலும், இகழாமை-இகழாமையும், (ஆகிய), நான்கும்-இந்நான்கும், வகை-(உரிய) வகையாகும், என்ப-என்று சொல்லுவர், (நூலோர்), (எ-று).

---

* திருக்குறள்-பொருள்செயல்வகை -2. இதன் பொருள். (எல்லா நன்மையுமுடையவராயினும்) பொருளில்லாதவரை யாவரும் இகழ்-வர் என்பது.

† அவர் கூறுக்கியும்-குடியின்கட்பிறந்தாரது பகுதியாக்கியும்

‡ குடியென்னும் இடப்பெயர் குடியிற் பிறந்தவரை யுணர்த்து-தலால், இடவாகு பெயராம்.

¶ நான்கும் வகை என்பதற்குப் பிரதியாக நான்கின் வகை என்பது பாடமானால், அதற்கு வாய்மையுடைய குடியிற்பிறந்தவர்க்கு மற்றவரிலும் வேறுபாடு 'நகையீகை யின்சொல் இகழாமை' என்னு மிந்நான்கா லுண்டாகும் என்று பொருளுரைத்துக்கொள்க.

*பொய்ம்மை வேறுபடுதலுடைமையால் வேறுபடாமையை 'வாய்மை' என்றும், பொருளில்லாதவரை எல்லாரும் இகழ்வராகலால் இகழாமையை அவர் கூறுக்கியும் சொல்லினர். குடி-இடவாகு பெயர். இவை மூன்றுபாட்டாலும் குடிப்பிறந்தாரது இயல்பு சொல்லப்பட்டது.*

***(க-து.) உயர்ந்த குடியிற் பிறந்தார்க்கு நகை, ஈகை, இன்சொல், இகழாமை என்னும் இந்நான்கும் உரிமையாயிருக்கும்.***

3. A cheerful countenance, liberality, pleasant words, and an unreviling disposition (at the approach of the poor), are said to be the proper qualities of men of truly noble birth.

———

**ச. அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார்**
**குன்றுவ செய்த லிலர்.**

**பரி:— (இ-ள்.) பலவாக வடுக்கிய கோடி யளவிற்றாய பொருளைப் பெற்றாராயினும், உயர்ந்த குடியின்கட் பிறந்தார் தம் மொழுக்கங் குன்றுந் தொழில்களைச் செய்யார், (எ-று).**

*அடுக்கிய †கோடியென்பது ஈண் டெண்ணப்படும் பொருண்மேனின்றது. குன்றுந் தொழில்கள்-குன்றுதற் கேதுவாய தொழில்கள்.*

*தெளி:— (இ-ள்.) அடுக்கிய-(பலவாக) அடுக்கிய, கோடி-கோடி யளவின தாகிய பொருளை, பெறினும்-பெற்றாராலும், குடிப் பிறந்தார்-உயர்ந்த குடியில் பிறந்தவர், குன்றுவ-(தம்மொழுக்கங்) குன்றுந் தொழில்களை, செய்தலிலர்-செய்யார், (எ-று).*

*அடுக்கிய கோடியென்பது இங்கு எண்ணப்படும் பொருளின்மேல் நின்றது. குன்றுந் தொழில்கள் – குன்றுவதற்குக் காரணமாகிய தொழில்கள்.*

*(க-து.) உயர்ந்த குடியிற் பிறந்தவர் அளவிறந்த பொருள்களைப் பெற்றாராயினும், தம்மொழுக்கங் குன்றுவதற்குக் காரணமாகிய தொழில்களைச் செய்யார் என்பது.*

4. Though possessing immense wealth, men of noble birth will never do anything unbecoming.

———

**ரு. ‡வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி**
**பண்பிற் றலைப்பிரித லின்று.**

---

*† கோடி யென்னும் எண்ணலளவைப் பெயர் அவ்வளவினதாகிய பொருளை யுணர்த்துதலால், எண்ணலளவையாகு பெயராம்.*

*‡ "உடுக்கை யுலறி யுடம்பழிந்தக் கண்ணும், குடிப்பிறப் பாளர்தங் கொள்கையிற் குன்றார்" என்பது நாலடியார்.*

பரி:— (இ-ள்.) தொன்று தொட்டு வருகின்ற குடியின்கட் பிறந்தார் தாங்கொடுக்கும் பொருள் பண்டையிற் சுருங்கிய விடத்தும் தம் பண்புடைமையின் நீங்கார், (எ-று).

தொன்று தொட்டு வருதல் - சேர சோழ பாண்டிய ரென்றாற் போலப் *படைப்புக் காலந் தொடங்கி மேம்பட்டு வருதல். †அவர்க்கு நல்குரவாவது வழங்குவது உள் வீழ்வதாகலின், ‡அதனையே கூறினார்.

தெளி:—(இ-ள்.) பழங்குடி - தொன்றுதொட்டு வருகின்ற குடியில் பிறந்தவர், வழங்குவது - (தாம்) கொடுக்கும் பொருள், உள் வீழ்ந்தக் கண்ணும் - முன்னையளவில் சுருங்கிய விடத்தும், பண்பின் - (தமது) குணமுடைமையி னின்றும், தலைப்பிரிதலின்று - நீங்கார், (எ-று).

தொன்று தொட்டு வருதல் - சேர சோழ பாண்டிய ரென்றாற் போலப் படைப்புக் காலந் தொடங்கி மேம்பட்டு வருதல். அவர்க்கு வறுமையாவது தாம் கொடுக்கும் பொருள் முன்னையளவில் சுருங்குவ தாகலால், அதனையே சொல்லினார்.

(க-து.) பழங்குடியிற் பிறந்தவர் தாம் பிறர்க்குக் கொடுக்கும் பொருள் முன்னையளவிற் சுருங்கியவிடத்தும், தமது குணமுடைமையி னின்றும் நீங்கார் என்பது.

5. Men born in ancient families will not lose their character for liberality, though their resources fall off.

---

சா. சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற
குலம்பற்றி வாழ்துமென் பார்.

பரி:— (இ-ள்.) வசையற்று வருகின்ற ¶நங்குடிமரபினோ டொத்து வாழக்கடவே மென்று கருதி $அவ்வாறு வாழ்வார், வறுமையுற்றவழியும், வஞ்சனையைப் பொருந்தி, அமைவிலவாய தொழில்களைச் செய்யார், (எ-று).

அமைவின்மை – அம்மரபிற் கேலாமை. இவை மூன்று பாட்டானும் £அவர் வறுமையுற்ற வழியும் ||அவ்வியல்பின் வேறுபடாரென்பது கூறப்பட்டது.

தெளி:— (இ-ள்.) மாசற்ற - வசையற்று வருகின்ற, குலம்பற்றி - (நமது) குடிமரபினோடொத்து, வாழ்து மென்பார் - வாழக்கடவோ மென்று நினைத்து அவ்வாறு வாழ்பவர், (வறுமை யுற்றவிடத்தும்),

---

* படைப்புக் காலம் - பரமேசுவர னுலகைப் படைத்த காலம்.

† அவர்க்கு - பழங்குடியிற் பிறந்தவர்க்கு.

‡ அதனையே - வழங்குவது உள்வீழ்வதையே.

¶ தங்குடிமரபினோ டொத்து என்றும் பாடமுண்டு.

$ அவ்வாறு – அக்கருதிய வண்ணம்.

£ அவர் - குடிப்பிறந்தார்.

|| அவ்வியல்பின் - தம்குடிமரபினின்றும்.

*சலம்பற்றி - வஞ்சனையைப் பொருந்தி, சால்பில - அமைவில்லாதன வாகிய தொழில்களை, செய்யார் - செய்யமாட்டார்,* (எ-று).

*அமைவில்லாமை - தங்குடி மரபினுக்குப் பொருந்தாமை. இவை மூன்று பாட்டாலும் அவர் வறுமையுற்றவிடத்தும் அவ்வியல்பின் வேறுபடாரென்பது சொல்லப்பட்டது. வசை - பழி.*

(க-து.) *மாசற்ற குடியிற்பிறந்து, தாம் பிறந்த குடிமரபிற் கேற்றவாறொழுகுபவர் வறுமையுற்றவிடத்தும், வஞ்சனையுடைய வராய் அமைவில்லாதனவாகிய தொழில்களைச் செய்யார் என்பது.*

6. Men who seek to preserve the irreproachable honor of their families will not viciously do what is detrimental thereto.

———

**எ. *குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போ லுயர்ந்து.**

**பரி:— (இ-ள்.) உயர்ந்த குடியின்கட் பிறந்தார்மாட் டுளதாங் குற்றம், தான் சிறிதேயாயினும் விசும்பின்கண் மதியிடத்து மறுப்போல ஓங்கித் தோன்றும், (எ-று).**

*† உயர்குடி முதலிய பொருள்வகை மூன்றற்கும் விசும்பு முதலிய உவமைவகை யொத்துப் பான் மாறுபட்டது. குடிய துயர்ச்சியானும், மதிபோன்ற அவர் நற்குணங்களோடு மாறுதலானும், உலகெங்கும் பரந்து வெளிப்படு மென்பதாம்.*

தெளி:— (**இ-ள்.**) *குடிப்பிறந்தார்கண் - உயர்ந்த குடியிற் பிறந் தவரிடத்து, (உண்டாகும்), குற்றம் - குற்றமானது, (தான் சிறிதே யாயினும்), விசும்பில் - ஆகாயத்தில், மதிக்கண் - சந்திரனிடத்து, மறுப்போல் - களங்கம்போல, உயர்ந்து - ஓங்கி, விளங்கும் - தோன் றும், (எ-று).*

*உயர்ந்தகுடி, அதிற்பிறந்தார், அவரிடத்துள்ள குற்றமென்னு முவமேய வகை மூன்றற்கும் விசும்பு, அதன்கணுள்ள மதி, அம்மதியி*

---

* "*அங்கண் விசும்பி னகனிலாப் பாரிக்குந், திங்களுஞ் சான்றோரு மொப்பர்மற்-றிங்கள், மறுவாற்றுஞ் சான்றோ ரஃதாற்றார் தெரு மந்து, தேய்வ ரொருமா சுறின்*" என்பது *நாலடியார்.*

*† உயர்குடி, அதிற் பிறந்தார், அவரிடத்துள்ள குற்றம் என்னும் பொருள் (உவமேய) வகை மூன்றற்கும் (முறையே) விசும்பு, அதிலுள்ளமதி, அதனிடத்துள்ள மறு என்னும் உவமை (உவமான) வகையொத்து, மதி யென்னும் ஒருமைப்பா லுவமானத்திற்குக் குடிப்பிறந்தார் என்னும் பன்மைப்பா லுவமேயம் மாறுபட்டு நின்றது. "மிகுதலுங் குறைதலுந் தாழ்தலு முயர்தலும், பான்மாறு படுதலும் பாகுபா டுடைய" என்று தண்டியலங்காரங் கூறுவதிங் குணர்தற்பாலதாம்.*

னிடத்துள்ள மறு என்னும் உவமானவகை யொத்துப் பால் மாறுபட்டது. குடியினது உயர்ச்சியினுலும் சந்திரன் போன்ற அவர் நற்குணங்களோடு மாறுதலாலும் அக்குற்றமானது உலகெங்கும் பரந்து வெளிப்படுமென்பதாம்.

மதியினது நற்குணங்கள் இருளை யொழித்தல் உவகையை விளைத்தல் முதலியனவாம்; குடிப்பிறந்தாரது நற்குணங்கள் அறியாமையை நீக்குதல், உவகையை விளைத்தல் முதலியனவாம்.

(க-து.) குடிப்பிறந்தாரிடத் துண்டாகும் குற்றம் தான் சிறிதேயாயினும், சந்திரனிடத்துள்ள களங்கம் போன்று ஓங்கி விளங்கும் என்பது.

7. The defects of men of noble birth will be observed as clearly as the dark spots in the moon.

———

அ. நலத்தின்க ணாரின்மை தோன்றி னவனைக்
குலத்தின்க ணையப் படும்.

பரி:—(இ-ள்.) குலநல முடையனும் வருகின்றவன்கண்ணே ஈர மின்மை யுளதாமாயின், அவனை அக்குலப்பிறப்பின்கண்ணே ஐயப்படும் உலகம், (எ-று).

*நலமும் குலமும் ஆகுபெயர். †நாரின்மையாற் கொடாமையுங் கடுஞ்சொல்லு முதலிய பெற்றும். தோன்றினென்பது தோன்றுமை விளக்கிநின்றது. நலனுடையனும் வருதலினிடையே ‡இவை தோன்றலின், ¶உள்ளது ஐயமாயிற்று. $உலகமென்பது அவாய் நிலையான் வந்தது. ஐயப்படலென்பது பாடமாயின், §ஐயப்படு-கவென விதியாக்கியுரைக்க. இவை யிரண்டுபாட்டானும் £வேறு பட்டவழிப் படு மிழுக்குக் கூறப்பட்டது.

தெளி: -(இ-ள்.) நலத்தின்கண் – (குல)நலமுடையவனும் வருகின்றவனிடத்தே, நாரின்மை-அன்பில்லாமை, தோன்றின்—உளதாமாயின், (உலகம்), அவனை-, குலத்தின்கண்-அக்குலப் பிறப்பிடத்தே, ஐயப்படும்-சந்தேகப்படும், (எ-று).

---

* நலம் என்னும் பண்புப்பெயர் நலமுடையவனை யுணர்த்து-தலால், பண்பாகுபெயராம்; குலம் என்னும் இடப்பெயர் குலத்திற்-றோன்றிய பிறப்பினை யுணர்த்துதலால், இடவாகுபெயராம்.

† அன்பில்லாதவனிடத்து இன்முகமும் ஈகையும் இன்சொல்லும் இகழாமையும் இராவென்பதாம்.

‡ இவை-கொடாமை, கடுஞ்சொல் முதலியன.

¶ உள்ளது-குலப்பிறப்பிருத்தல்.

$ ஐயப்படும் என்பது உலகம் என்பதை யவாவி (வேண்டி) நின்றது.

§ ஐயப்படும் என்பதற்குப் பிரதியாக ஐயப்படல் என்பது பாடமானல், அதற்கு ஐயப்படுக என்று உடன்பாட்டு வியங்கோள் வினைமுற்றாக்கிச் சொல்லிக்கொள்க. ஐயப்படல் என்பது அல்லீற்று வியங்கோள் வினைமுற்று.

£ வேறுபட்டவழி-உயர்குடிப்பிறப்பினின்றும் வேறுபட்டவிடத்து.

நலம்-பண்பாகுபெயர்; குலம்-இடவாகுபெயர். நாரின்மையால் கொடாமையும் கடுஞ்சொல்லும் முதலியன பெறப்பட்டன. தோன்றினென்பது நாரின்மை தோன்றுமையை விளக்கி நின்றது. நலமுடையவனுய் வருதலினடுவே இவை தோன்றலால், உள்ளது ஐயமாயிற்று. உலகமென்பது அவாய்நிலையால் வந்தது இவை இரண்டுபாட்டாலும் வேறுபட்ட விடத்துண்டாகும் இழுக்குச் சொல்லப்பட்டது.

(க-து.) குலநலமுடையவனிடத்து அன்பில்லாமை யுண்டாமாயின், அவனது குலப்பிறப்பிலே உயர்ந்தோர்க்கு ஐயமுண்டாகும் என்பது.

8. If a man of good family betrays want of affection, his descent will be questionable.

---

கூ. நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டும்
*குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்.

பரி:—(இ-ள்.) நிலத்தி னியல்பை அதன்கண் முளைத்த முளைகாட்டும்; அதுபோலக் குலத்தினியல்பை அதன்கட் பிறந்தார் வாயிற்சொற் காட்டும், (எ-று).

கிடந்தமை-உள்ளபடி. ‡முளைத்தமாத்திரத்தானே நன்மையுந் தீமையுந் தெரிதலின். †இலைமுதலிய கூறுராயினுர்; ஆகவே, ¶பொருளினுஞ் செயன் £முதலியன வேண்டாவாயின. குலத்தியல் பறிதற் ‖கருவி கூறுவார்போன்று, இன்சொல் வேண்டுமென்றவாருயிற்று.

தெளி:—(இ-ள்.) நிலத்திற்கிடந்தமை-நிலத்தினியல்பை, கால்-(அந்நிலத்தினிடத்து முளைத்த) முளையானது, காட்டும்-காட்டாநிற்கும், (அதுபோலக் குலத்தினியல்பை), குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்-அக்குலத்திற்பிறந்தாரது வாயிலுண்டாகுஞ் சொல், காட்டும்-காட்டாநிற்கும், (எ-று).

---

* "வடுப்பட வைதிறந்தக் கண்ணுங் குடிப்பிறந்தார், கூறுர்தம் வாயிற் சிதைந்து" என்று நாலடியார் மேன்மக்களிற்கூறுவது மிங்குணர்தற்பாலதாம்.

‡ முளையைப்பார்த்து அது முளைத்த நிலத்தினியல்பை யறிவது போல ஒருவரது சொல்லைக்கேட்டு அவர் பிறந்த குலத்தினியல்பை யறியலாமென்பதாம்.

† இலைமுதலியன காட்டுமென அவற்றைக் கூறுதுவிட்டார்.

¶ உவமேயமான குலத்திற் பிறந்தாரிடத்தும் அவர் கூறும் சொல்மாத்திரத்தாலே அவர் குலத்தினது நன்மையும் தீமையும் தெரிதலால், (குலத்தியல்பை யறிதற்கு அவரது) செயல் முதலியன வேண்டாவாயின என்பது.

£ முதலியன என்றமையின், குணம், இனம் முதலியவற்றையுங் கொள்க.

‖ கருவி-சாதனமாகிய சொல்.

கிடந்தமை-உள்ளகுணம். முளை முளைத்த மாத்திரத்தாலே நிலத்தின் நன்மையும் தீமையும் தெரிதலால், இலை முதலியவற்றைச் சொல்லா ராயினுர்; ஆகவே, உவமேயமான குலத்திற் பிறந்தாரிடத்தும் செயல் முதலியன வேண்டாவாயின. குலத்தியல் பறிதற்குச் சாதனம் சொல்லுவார் போன்று, இன்சொல்வேண்டு மென்றபடியாயிற்று.

(க-து.) ஒருகுலத்தி னியல்பை அக்குலத்திற் பிறந்தாரது வாய்ச்சொல் தெரிவிக்கும் என்பது.

9. As the sprout indicates the nature of the soil, so the speech of men of noble birth indicates that of their birth.

---

**கO. நலம்வேண்டி னாணுடைமை வேண்டுங் குலம்வேண்டின்**
**வேண்டுக யார்க்கும் பணிவு.**

பரி: —(இ-ள்.) ஒருவன் தனக்கு நலனுடைமையை வேண்டுவனாயின், தானாணுடையனாதலை வேண்டுக; குலனுடைமையை வேண்டுவனாயின், **பணியப்படுவார் யாவர்மாட்டும் பணிதலை வேண்டுக, (எ-று).**

நலம்-புகழ், புண்ணியங்கள். †வேண்டுமென்பது விதிப் பொருட்டாய் நின்றது; ‡"வினைப்படு தொகுதியி னும்மைவேண்டும்" என்புழிப்போல ¶அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் தம் முன்னோர் தந்தைதா யென்றிவரெல்லாரு மடங்க 'யார்க்கும்' என்றார். பணிவு-$இருக்கை யெழலும் எதிர்செலவும் முதலாயின.

---

† நன்னூல் விருத்தி யுரைகாரர் "வேறில்லை யுண்டைம் பான்மூ விடத்தன" என்னுஞ் சூத்திரத்தின் விசேடவுரையில் (வேண்டும், தகும், படும் என்னும்) "இம்மூன்றும் ஒருபொருட் கிளவியாய்த் தொழிற் பெயராய்த் தேற்றப் பொருள் பட்டே நிற்குமென்க. இங்ஙனம் வருஞ் செய்யுட்கெல்லாம், நச்சினார்க்கினியர் சேனாவரையர் பரிமேலழகர் உரையாசிரியர் முதலாயினோர் முற்றும் எச்சமாயும் பொருளுரைக்கின் வழுவாமென்று கருதி வியங்கோட் பொருட்டென்றும், விதிப்பொருட்டென்றும், தகுதிப் பொருட்டென்றும், வேண்டுபவென்றும் தமக்கு வேண்டியவாறே பொருளெழுதிச் சொற்குணம் வாளா போயினர்" என்று குறை கூறுகின்றனர்.

‡ தொல்காப்பியம்-கிளவியாக்கம்-33. இதன் பொருள் முடிக்குஞ் சொல்லோடுபடுந் தொகுதிக்கண் உம்மை கொடுத்துச் சொல்லுக என்பது.

¶ "அந்தணர் சான்றோ ரருந்தவத்தோர் தம்முன்னோர், தந்தைதா யென்றிவர்க்குத் தார்வேந்தே-முந்தை, வழிநின்று பின்னை வயங்குநீர் வேலி, மொழிநின்று கேட்டன் முறை" என்பது புறப்பொருள் வெண்பாமாலை.

$ 'இருக்கை யெழலு மெதிர் செலவுமேனை, விடுப்ப வொழிதலோ டின்ன குடிப்பிறந்தார், குன்ற வொழுக்கமாக் கொண்டார் கயவரோ, டொன்ற வுணரற்பாற் றன்று' என்பது நாலடியார்.

இவை யிரண்டு பாட்டானும் குடிமைக்கு வேண்டுவன கூறப்பட்டன.

தெளி:—(இ-ள்.) (ஒருவன் தனக்கு) நலம் வேண்டின்-நலமுடைமையை வேண்டுவானாயின், நாணுடைமை-(தான்) நாணமுடையவனாதலை, வேண்டும்-வேண்டக்கடவன், குலம் வேண்டின்-குலமுடைமையை வேண்டுவானாயின், யார்க்கும்-(வணங்கப்படுவார்) யாவரிடத்தும், பணிவு-வணங்குதலை, வேண்டுக-வேண்டக்கடவன், (எ-று).

நலம்-புகழ், புண்ணியங்கள். வேண்டும் என்பது விதிப்பொருளில் வந்த உம் ஈற்று வியங்கோள் வினைமுற்று. அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் தம் முன்னோர் தந்தை தாய் என்ற இவரெல்லாரும் அடங்க 'யார்க்கும்' என்றார். பணிவு-இருக்கை யெழுதலும் எதிர் செல்லுதலும் முதலாயின. இவை இரண்டு பாட்டாலும் குடிப்பிறந்தார்க்கு வேண்டுவன சொல்லப்பட்டன.

(க-து.) ஒருவன் தனக்கு நலமுடைமையை விரும்புவானாயின் நாணத்தையும், குலமுடைமையை விரும்புவானாயின் வணங்கத்தக்கவரை வணங்குதலையும், விரும்பக்கடவன் என்பது.

10. He who desires a good name must desire modesty, and he who desires the continuity of family greatness must be submissive to all.

---

# இரண்டாவது அதிகாரம்

## மானம்—Honor

பரி:—இனிக் குடிப்பிறந்தார்க் குரியவாய குணங்கள் கூறுவான் றொடங்கி, முதற்கண் மானங் கூறுகின்றார். அஃதாவது எஞ்ஞான்றுந் தந்நிலையிற் றாழாமையும், தெய்வத்தாற் றாழ்வுவந்துழி உயிர்வாழாமையுமாம். †இஃது அக்குடிப்பிறப்பினை நிறுத்துதலுடைமையின், அச் சிறப்புப்பற்றி முன் வைக்கப்பட்டது.

தெளி:—இனிக் குடிப்பிறந்தவர்க்கு உரியனவாகிய குணங்களைச் சொல்லத் தொடங்கி, முதலில் மானம் சொல்லுகின்றார். அஃதாவது அவர் எந்நாளும் தமது நிலையினின்றுந் தாழாமையும், ஊழால் தாழ்வு வந்த விடத்து உயிர் வாழாமையுமாம். இஃது அக்குடிப் பிறப்பினை (அழியாது) நிலைபெறச் செய்தலுடைமையால், அச் சிறப்புப்பற்றி முன் வைக்கப்பட்டது.

† இஃது-மானம்.

**க. ‡இன்றி யமையாச் சிறப்பின வாயினுங்**
**குன்ற வருப விடல்.**

**பரி :—(இ-ள்.) செய்யாதவழித் †தாம் அமையாத சிறப்பினை யுடையவே யெனினும், தங்குடிப் பிறப்புத் தாழவருஞ் செயல்களை யொழிக, (எ-று).**

*அமையாமை–இறத்தல். ¶குடிப்பிறப்பென்பது அதிகார முறைமையான்வந்தது. §இறப்பவரும்வழி இளிவந்தன செய்தாயி னும்உய்கவென்னும் வடநூன்முறைமையை மறுத்து, உடம்பினது நிலையின்மையையும் மானத்தினது நிலையுடைமையையுந் தூக்கி *அவை செய்யற்க வென்பதாம்.*

தெளி :—(இ-ள்.) இன்றியமையா - செய்யாத விடத்துத் தாம் அமையாத, சிறப்பினவாயினும் - சிறப்பினை யுடையனவே யெனினும், குன்ற-(தங்குடிப் பிறப்பானது) தாழ, வருப - வருஞ்செயல்களை, விடல் - விடக்கடவர், (எ-று).

அமையாமை - இறத்தல். குடிப்பிறப்பென்பது அதிகாரமுறை மையால் வந்தது. தாம் இறக்கவருமிடத்து இழிவுதருஞ்செயல்களைச் செய்தாயினும் பிழைக்கக்கடவரென்னும் வடநூலின் முறைமையை மறுத்து, உடம்பினது நிலையில்லாமையையும் மானத்தினது நிலையுடை மையையும் ஆராய்ந்து அவற்றைச் செய்யவேண்டாமென்பதாம்.

(க-து.) தங்குடிப்பிறப்புத் தாழவருஞ் செயல்களால் இன்றி-யமையாதசிறப்பு வருவதாயிருப்பினும், அவற்றைவிடல்வேண்டும்.

---

‡ "கடமா தொலைச்சிய கானுறை வேங்கை, இடம்வீழ்ந்த துண்ணுதிறக்கும்—இடமுடைய, வானகங் கையுறினும் வேண்டார் விழுமியோர், மான மழுங்க வரின்" என்பது நாலடியார்.

† தாம் அமையாத - தாமுயிரோடிருத்தற் கியலாத.

¶ குடிமைக்குப் பின்னர் மானமுள்ளமையின், அவ்வதிகார முறைமைபற்றிக் குடிப்பிறப்பென்பது வருவிக்கப்பட்டது. இவ் வதிகாரத்தின் அவதாரிகையில் " இனிக் குடிப்பிறந்தார்க் குரியவாய குணங்கள் கூறுவான் றொடங்கி, முதற்கண் மானங் கூறுகின்றார் " என்று கூறியிருத்தலு மிங்குணர்தற்பாலதாம்.

§ மனுதருமசாஸ்திரம் - பத்தாவது அத்தியாயம் - 81-வது சுலோக முதல் 130-வது சுலோகம்வரை "இறப்பவரும்வழி இளிவந் தன செய்தாயினும் உய்க" என்பதுபற்றி விரிவாய்க் கூறுகின்றது. விருப்ப முடையோர் ஆண்டுக்காண்க.

* அவை - தங்குடிப்பிறப்புத்தாழவருஞ் செயல்களை.

1. Actions that would degrade the dignity of one's family should not be done, though they may be so important that not doing them would end in destruction.

---

**உ. சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு**
**பேராண்மை வேண்டு பவர்.**

**பரி :—(இ-ள்.) புகழ் செய்யுமிடத்துந் தங்குடிமைக் கொவ்வாத இளிவரவுகளைச் செய்யார், புகழுடனே மானத்தை நிறுத்துதலை விரும்புவார், (எ-று).**

*எவ்விடத்தும் நிலைகுலையாத திண்மையான் உளதாதல்பற்றிப் 'பேராண்மை' எனப்பட்டது. நிலையுடைய புகழின்பொருட்டாகவுஞ் செய்யாரென்பதாம்.*

தெளி:—(இ-ள்) *சீரொடு*-புகழுடனே, பேராண்மை-*மானத்தை*, (*நிறுத்துதலை*), வேண்டுபவர்-*விரும்புவார்*, *சீரினும்*-*புகழைச் சம்பாதிக்குமிடத்தும்*, சீரல்ல-(*தங்குடிப்பிறப்பிற்கு ஒவ்வாத*) *இழிதொழில்களை*, *செய்யார்*-*செய்யமாட்டார்*, (எ-று).

*எவ்விடத்தும் நிலைகுலையாத வலிமையால் உளதாதல்பற்றி மானம் 'பேராண்மை' என்று கூறப்பட்டது. (குடிப்பிறந்தார்) நிலையுடைய புகழின் பொருட்டாகவும் சீரல்லவற்றைச் செய்யாரென்பதாம்.*

(க-து.) *புகழுடனே மானத்தை நிறுத்துதலை விரும்புவார், தங்குடிப்பிறப்பிற் கொவ்வாத இழிதொழில்களைச் செய்யார்.*

2. Those who desire to maintain their honor with credit will surely do nothing ignoble even for the sake of fame.

---

**ங. பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய**
**சுருக்கத்து வேண்டு முயர்வு.**

**பரி: —(இ-ள்.) குடிப்பிறந்தார்க்கு நிறைந்த செல்வமுளதாயவழி யாவர்மாட்டும் பணிவு வேண்டும்; குறைந்த நல்குரவுளதாயவழிப் பணியாமை வேண்டும், (எ-று).**

*பணியாமை-தாழ்வுவாராமற் பழையவுயர்ச்சிக்கண்ணே நிற்றல். செல்வக்காலை †அஃதுயர்ச்சி செய்யத் தாந் தாழ்தலும், அல்லற்காலை ‡அது தாழ்வு செய்யத் தாமுயர்தலும் வேண்டுமென்பதாம். இவை மூன்று பாட்டானும் தாந் தாழ்தற்கேதுவாயின செய்யாமைச் சிறப்புக் கூறப்பட்டது.*

† அஃது-செல்வம். ‡ அது-அல்லல் (வறுமை).

தெளி :—(இ-ள்.) (குடிப்பிறந்தவர்க்கு) பெருக்கத்து - நிறைந்த செல்வம் உளதாயவிடத்து, பணிதல் - (யாவரிடத்தும்) வணங்குதல், வேண்டும்—, சிறிய - குறைந்த, சுருக்கத்து - வறுமையுளதாயவிடத்து, உயர்வு - வணங்காமை, வேண்டும்—, (எ-று).

வணங்காமை - தாழ்வு வாராமல் பழையவுயர்ச்சியிலே நிற்றல். செல்வமுடையபோது அஃது உயர்ச்சிசெய்தலினால் தாம் தாழ்தலும், வறுமையுடையபோது அது தாழ்வு செய்தலினால் தாம் உயர்தலும் வேண்டுமென்பதாம். இவை மூன்று பாட்டாலும் குடிப்பிறந்தார் தாம் தாழ்தற்குக் காரணமாயவற்றைச் செய்யாமையின் சிறப்புச் சொல்லப்பட்டது.

(க-து.) குடிப்பிறந்தார்க்குச் செல்வமுண்டாகிய காலத்து யாவரிடத்தும் பணிதலும் வறுமையுண்டாகிய காலத்துப் பணியாமையும் வேண்டும் என்பது.

3. (To men of noble birth) humility is becoming in great prosperity; dignity, in great adversity.

---

ச. *தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை.

பரி : (இ-ள்.) குடிப்பிறந்த மாந்தர், தம்முயர்ந்த நிலையைவிட்டு அதனினின்றுந் தாழ்ந்தவழித் தலையைவிட்டு அதனினின்றும் வீழ்ந்த மயிரினை யொப்பர், (எ-று).

‡ அந்நிலையை விடாது நின்றவழிப் பேணப்படுதலும், விட்டுத் தாழ்ந்தவழி இழிக்கப்படுதலும், உவமையாற் பெற்றும்.

தெளி:—(இ-ள்.) மாந்தர்-(குடியிற்பிறந்த) மனிதர், நிலையின்—(தம்முயர்ந்த நிலையை விட்டு அந்)நிலையினின்றும், இழிந்தக்கடை—தாழ்ந்தவிடத்து, தலையினிழிந்த-(தலையை விட்டு அத்)தலையினின்றும் வீழ்ந்த, மயிரனையர்-மயிரினை யொப்பர், (எ-று).

(குடிப்பிறந்தார்) அந்நிலையை விடாமல் நின்றவிடத்துப் பிறரால் மதிக்கப்படுதலும், அதனை விட்டுத் தாழ்ந்தவிடத்து அவமதிக்கப் படுதலும் 'தலையினிழிந்த மயிரனையர்' என்னும் உவமானத்தாற் பெற்றும்.

(க-து.) தமது நிலையினின்றுந் தவறிய குடிப்பிறந்தவர் ஒரு பொருளாக மதிக்கப்படாதவ ராவர் என்பது.

---

* ''தலைமயிருங் கூருகிரும் வெண்பல்லுந் தத்த, நிலையுடைமை யானவிட நிற்கு - நிலைதவறுத், தானத்திற் பூச்சியமே சாரு நிலை தவறுந், தானத்திற் பூச்சியமே தான்'' என்பது நீதிவெண்பா.

‡ அந்நிலையை - தமது உயர்ந்த நிலையை.

4. Those (of noble birth) who have fallen from their exalted position are likened to the hair which has fallen from the head.

---

**ரு. குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ**
**குன்றி யனைய செயின்.**

பரி :—(இ-ள்.) குடிப்பிறப்பான் மலைபோல வுயர்ந்தோருந் தாழ்தற் கேதுவாகிய செயல்களை ஒருகுன்றி யளவாயினுஞ் செய்வராயிற் றாழ்வர், (எ-று).

*குன்றியனையவுமென்னும் இழிவு சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. தாழ்தற்கேதுவாய செயல்களாவன :— இளிவந்தன. †சொற்பின் வருநிலை.*

தெளி:— (இ-ள்.) *குன்றினனையாரும்-(குடிப்பிறப்பால்; மலை போல வுயர்ந்தவரும், குன்றுவ-தாழ்தற்குக் காரணமாகிய செயல் களை, குன்றியனைய-ஒரு குன்றிமணியளவாயினும், செயின்-செய்வா ரானால், குன்றுவர்-தாழ்வார்,* (எ-று).

*குன்றியனையவும் என்னும் இழிவு சிறப்பும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது. தாழ்தற்குக் காரணமாகிய செயல் களாவன :—(பழிப்பதற்கேதுவாய) இழிவுதருஞ் செயல்கள். இது சொற்பின் வருநிலையணி.*

(க-து.) *உயர்ந்த குடியிற் பிறந்தவர் தாம் தாழ்தற்கேதுவாகிய செயல்களிற் சிறிது செய்வாராயினும், அதனாற் றாழ்வடைவர்.*

5. Even those who (are noble by birth) like a hill will be deemed low, if they commit deeds that are debasing.

---

**சூ. புகழின்றாற் புத்தேணுட் டுய்யாதா லென்மற்**
**றிகழ்வார்பின் சென்று நிலை.**

பரி:—(இ-ள்.) ‡மானத்தைவிட்டுத் தன்னையவமதிப்பார் பின்னே ஒருவன் சென்று நிற்கின்றநிலை இவ்வுலகத்துப் புகழ்பயவாது; ஏனைப் புத்தே ளுலகத்துச் செலுத்தாது; இனி அவனுக்கு அது செய்வதியாது ? (எ-று).

---

*† முன்வந்த சொல் பின்னும் வந்து பொருள் வேறுபட்டிருப்பது சொற்பின் வருநிலையணியாம். இக்குறளில் முன்வந்த சொல் பின்னும் வந்து பொருள்வேறுபட் டிருப்பதறிக. முன்வந்தசொல் குன்றின் என்பதாம்; அது பின்னர்க் குன்றுவர், குன்றுவ, குன்றி எனவந் திருப்பதுணர்க.*

*‡ "என்பா யுகினு மியல்பிலார் பின்சென்று, தம்பா டுரைப்பரோ தம்முடையார்" என்பது நாலடியார்.*

*புகழ் பயப்பதனைப் புகழ்என்றார். †பயனுய இவ்விரண்டு மின்றிக் கொன்னே மானங் கெடுகின்றது என்னை யென்பதாம். இவை மூன்று பாட்டானும் ‡அவை செய்தற் குற்றங் கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) இகழ்வார்பின் - (மானத்தைவிட்டுத் தன்னை) அவமதிப்பவர் பின்னே, சென்றுநிலை – (ஒருவன்) சென்று (நிற்கின்ற) நிலை, புகழின்று – (இவ்வுலகத்தில்) புகழுண்டாக்காது, புத்தேள் நாட்டு – (மற்றைத்) தேவருலகத்தில், உய்யாது – செலுத்தாது, மற்று – இனி, என் – (அவனுக்கு அது செய்வது) யாது, (எ–று).

ஆவிரண்டும் அசைநிலைகள். புகழுண்டாக்குவதனைப் புகழ் என்றார். இம்மை மறுமைப் பயனாகிய இவ்விரண்டும் இல்லாமல் வீணே மானங் கெடுகின்றது யாதுபற்றி என்பதாம். இவை மூன்று பாட்டாலும் அவற்றைச் செய்தலின் குற்றம் சொல்லப்பட்டது.

(க–து.) மானத்தைவிட்டுத் தன்னை அவமதிப்பார் பின்னே சென்று நிற்பானுக்குப் புகழுமில்லை; புண்ணியலோகத்தை யடைதலுமில்லை என்பது.

6. Of what good is it to men of noble birth to go and stand in vain before those who revile them. It only brings them dishonor in this world and exclusion from the other world.

———

எ. ¶ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலி னந்நிலையே
கெட்டா னெனப்படுத னன்று.

பரி :—(இ-ள்.) தன்னை யிகழ்வார் பின்னே சென்று பொருள் பெற்று $அதனாலொருவன் உயிர்வாழ்தலின் §அது செய்யாது இறந்தானென்று சொல்லப்படுதல் அவனுக்கு நன்று, (எ-று).

---

* புகழையுண்டாக்கும் செயலைப் புகழ் என்று காரிய வாகுபெயராற் கூறினர்.

அச்செயல் – மானத்தைவிட்டுத் தன்னை யவமதிப்பார் பின் செல்லாமை. அது புகழையுண்டாக்குவதாம்.

† பயனுய இவ்விரண்டுமின்றி–புகழ் பயத்தல் புத்தேளுலகத்திற் செலுத்துதலென்னும் மானம் விடாமையின்) பயனுய இவ்விரண்டுமில்லாமல் புகழைப் பெறுதல் இம்மைப்பயனும்; புத்தேளுலகத்தையடைதல் மறுமைப் பயனும்.

‡ அவை – தாம் தாழ்தற்குக் காரணமாகிய செயல்களை.

¶ ஒட்டார் - தன்னுடன் பொருந்துதலில்லாதவர் (பகைவர்).

$ அதனால் - பொருளைப் பெறுதலால்,

§ அது செய்யாது – தன்னையிகழ்வார் பின்னேசென்று பொருளைப் பெற்று அதனால் உயிர் வாழுதல் செய்யாமல்.

ஒட்டுதல் – பொருந்துதல். அந்நிலையேயென்றது செல்லாத முன்னை நிலைக்கண்ணே நின்றென்றவாறு; அப்பொழுதே யென்று-மாம். புகழும் புத்தேளுடும் பயவாதேனும் பொருள்பெற்று உயிர் வாழ்வாமென்பாரை நோக்கிக் கூறியது.

தெளி :—(இ-ள்.) ஒட்டார்பின் – (தன்னை) இகழ்பவர்பின்னே, சென்று–போய், (பொருளைப்பெற்று), ஒருவன் வாழ்தலின்–(அதனால்) ஒருவன் உயிர் வாழ்தலைக்காட்டிலும், (அது செய்யாமல்), அந்நிலையே–முன்னை நிலையிலே, (நின்று), கெட்டானெனப்படுதல் – இறந்தா-னென்று சொல்லப்படுதல், நன்று – (அவனுக்கு) நல்லது, (எ–று).

ஒட்டுதல் – தன்னுடன் பொருந்தியிருத்தல். அந்நிலையே என்றது தன்னையிகழ்வார் பின்னே செல்லாத முன்னை நிலையிலே நின்று என்ற-வாறும்; அதற்கு அப்பொழுதே என்று பொருள் கூறினும் ஒக்கும். மானத்தை விடுதல் புகழையும் வானுலகத்தையும் தாராதாயினும் அதனால் பொருளைப்பெற்று உயிர் வாழ்வாமென்பாரை நோக்கிச் சொல்லியதாம்.

(க–து.) ஒருவன் தன்னை யிகழ்பவர் பின்னேசென்று பொருளைப் பெற்று அதனால் வாழ்தலைக்காட்டிலும், அது செய்யாது இறத்தலே அவனுக்கு நல்லதாம் என்பது.

7. It is better for a man to be said of him that he died in his usual state than that he eked out his life seeking the help of those who reviled him.

---

அ. மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த விடத்து.

பரி :—(இ-ள்.) உயர்குடிப்பிறப்புத் தன்வலியாகிய மானம் அழிய வந்துழி, இறத்தலொழிந்து பயனில்லாத வுடம்பினைக்காக்கும் வாழ்க்கை பின்னு மிறவாமைக்கு மருந்தாமோ ? (எ–று).

*மற்றென்பது மேற்சொல்லிய இறப்பினை மாற்றி நின்றது. நற் குணங்கட்கெல்லாம் இடனாதற் சிறப்புப்பற்றிப் 'பெருந்தகைமை' என்றும், அவையெல்லாவற்றுள்ளும் அதற்கு வலியாதற் சிறப்புப் பற்றிப் 'பீடு' என்றும், அஃதழிந்தால் நின்ற வெற்றுடம்பு இழிக்கப்-படுதலின் அதனை 'ஊன்' என்றும், பின்னுமிறத்தல் ஒருதலையென்பார்

* மற்று என்னுமிடைச்சொல் 'ஒட்டார்பின்' என்னுங் குறளிற் கூறிய 'கெட்டானெனப்படுதல் (இறந்தானென்று சொல்லப்படுதல்)' என்னும் (இறத்தலென்னும்) வினையை மாற்றி இறவாமையென்னும் வினையைத் தந்து நின்றது. இவ்வாறு வருவது வினைமாற்றெனப்படும்.

'மருந்தோ' என்றுங் கூறினர். *மானத்தின்றொழில் அதற்கிடனாகிய குடிப்பிறப்பின்மே னின்றது.

தெளி :—(இ-ள்.) பெருந்தகைமை-உயர்குடிப்பிறப்பானது, பீடு-(தன்) வலியாகிய மானம், அழியவந்தவிடத்து—, ஊனோம்பும்-(இறத்தலொழிந்து பயனில்லாத) உடம்பைக் காப்பாற்றும், வாழ்க்கை-வாழ்வானது, மற்றுமருந்தோ-(பின்னும்) இறவாமைக்கு மருந்தாமோ? (எ-று).

மற்றென்னு மிடைச்சொல் முன்னர்க் கூறிய இறப்பினை மாற்றி நின்றது. உயர்குடிப்பிறப்பு நற்குணங்களுக்கெல்லாம் இடமாதற் சிறப்புப்பற்றி அதனைப் 'பெருந்தகைமை' என்றும், அக்குணங்க ளெல்லாவற்றிலும் மானமானது அவ்வுயர் குடிப்பிறப்பிற்கு வலியாதற் சிறப்புப்பற்றி அதனைப் 'பீடு' என்றும், அம்மானம் அழிந்தால் நின்ற வெற்றுடம்பு இழிக்கப்படுதலால் அதனை 'ஊன்' என்றும், பின்னுமிறத்தல் நிச்சயமென்பார் ஊனோம்பும் வாழ்க்கையை 'மருந்தோ' என்றும் சொல்லினர். மானத்தினது (இறத்தல்) தொழில் அதற்கிடமாகிய குடிப்பிறப்பின்மேல் நின்றது.

(க-து.) மானங்கெட்ட விடத்து இறவாதிருந்தால் அதுபின்னும் இறவாமைக்கு மருந்தாகுமோ என்பது.

8. For men of noble birth to preserve their body when their honor is at stake will certainly not prove a remedy against death.

———

கூ. £மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னா
ருயிர்நீப்பர் மானம் வரின்.

பரி:—(இ-ள்.) தன் மயிர்த்திரளின் ஒருமயிர் நீங்கினும் உயிர் வாழாத கவரிமாவை யொப்பார், உயிர் நீக்கத்தான் மானமெய்து மெல்லைவரின், அதனைத் தாங்கா திறப்பர், (எ-று).

இழிவுசிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. உயிரும் மானமும் உடனில்லாமைக்கண், பின்னும் போவதாய உயிரைநீத்து

---

* உயர் குடிப்பிறப்பில் நிகழும் மானத்தினது அழிதற்றொழிலை அவ்வுயர்குடிப்பிறப்பின்மீ தேற்றி 'பெருந்தகைமை பீடழியவந்த விடத்து' என்று கூறினமையின், 'மானத்தின்றொழில் அதற் (மானத்திற்)கிடனாகிய குடிப்பிறப்பின்மே னின்றது' என்று கூறப் பட்டது. இஃது இடத்துநிகழ் பொருளின் தொழில் இடத்தின்மே லாய உபசாரவழக்காம்.

£ "அச்சுவத்தா மாப்பட்டா னென்ன வமர்துறந்தான், துச்சில் துரோண னென்பான் சோமேசா-நச்சு, மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னார், உயிர்நீப்பர் மானம் வரின்" என்னும் வெண்பா இங்குணர்தற்பாலதாம்.

எஞ்ஞான்றும் நிற்பதாயமானத்தை யெய்துவரென்பதாம். *உவமை †அவர்க்கு ‡அஃதியல் பென்பது விளக்கி நின்றது.

தெளி :—(இ-ள்.) மயிர்நீப்பின்-(தன் மயிர்த்திரளில் ஒரு) மயிர் நீங்கினுலும், வாழா-(உயிர்) வாழாத, கவரிமாவன்னர்-கவரிமானை யொப்பவர், மானம்வரின்-(உயிரைவிடுதலால்) மானத்தை(ப் பெறுமளவு)வந்தால், உயிர்-அவ்வுயிரை, நீப்பர்-(தாங்காது)விடுவர், (எ-று).

நீப்பினுமென்னுமிழிவு சிறப்பும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது. குடிப்பிறந்தார், உயிரும் மானமும் உடனில்லாத விடத்து, பின்னும் போவதாகிய வுயிரைவிட்டு எந்நாளுநிற்பதாகிய மானத்தை யடைவரென்பதாம். உவமானம் அவர்க்கு அஃது இயல் பென்பதை விளக்கி நின்றது.

(கு-து.) மானமுடையார் அவமானம் நேர்ந்தவிடத்து உயிர் வாழார் என்பது.

*9.* They who give up their life when their honor is at stake are like the yak which dies at the loss of even one of its hairs.

---

**க0. இளிவரின் வாழாத மான முடையா**
**ரொளிதொழு தேத்து முலகு.**

பரி :—(இ-ள்.) தமக்கோ ரிழிவு வந்தவழிப் பொறுத்து உயிர் வாழாது அதனை நீத்த மானமுடையாரது புகழ்வடிவினை எஞ்ஞான்றுந் தொழுது துதியா நிற்பர் உலகத்தார், (எ-று).

¶"புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின், வலவ னேவா வான வூர்தி, யெய்து" வராகலின், $துறக்கச்செலவு சொல்ல வேண்டா வாயிற்று. இவை நான்கு பாட்டானும் மானப் பொருட்டாய இறப்பினது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) இளிவரின்-(தமக்கோர்) இழிவு வந்த விடத்து, வாழாத-(பொறுத்து உயிர் வாழாது) அவ்வுயிரைவிட்ட,

---

* உவமை-'மயிர்நீப்பின் வாழாக் கவரிமா' என்னுமுவமானம்.

† அவர்க்கு-கவரிமானை யொத்த மானமுடையவர்க்கு.

‡ அஃதியல் பென்பது-மானத்தைப் பெறுமளவு வந்தால் உயிர் விடுதல் சுபாவமென்பது.

¶ புறநானூறு-27. இதன் பொருள், புலவரால் பாடப்படும் புகழையுடையோர் ஆகாயத்தின்கண் பாகனுற் செலுத்தப்படாத விமானத்தைப் பொருந்துவார் என்பது.

$ துறக்கச் செலவு-இளிவரின் வாழாத மானமுடையார் சுவர்க்கத்தையடைதல்.

மானமுடையார்-மானமுடையவரது, ஒளி-புகழ்வடிவினை, உலகு-உலகத்தார், தொழுதேத்தும்-(எந்நாளுந்) தொழுது துதியா நிற்பர், (எ-று).

புலவர்பாடும் புகழுடையோர் விசும்பில் பாகனுல் செலுத்தப் படாத வானவூர்தியை யெய்துவராகலால், அவர் சுவர்க்க மடைதல் சொல்லவேண்டாவாயிற்று. இவை நான்கு பாட்டாலும் மானத்தின் பொருட்டுயிரைவிடுவதாகிய இறப்பினது சிறப்புச் சொல்லப்பட்டது.

(க-து.) தமக்கோர் இழிவு வந்த விடத்துப் பொறுத்து வாழாது இறந்தமானமுடையவரது புகழ்வடிவை யுலகத்தார் எப்பொழுதும் துதியாநிற்பர் என்பது.

10. The wise will always praise and adore the fame of the honorable who would rather die than suffer ignominy.

---

## மூன்றுவது அதிகாரம்

## ௱௩ பெருமை : — Greatness

பரி:—அஃதாவது செயற்கரியசெய்தல், தருக்கின்மை, பிறர்குற்றங் கூறுமை யென்றிவை முதலிய நற்குணங்களாற் பெரியாரதுதன்மை *நிலையினு மேன்மேலுயர்த்தற் பயத்தவாய விவை உளவாவது நிலையிற் ருழாமை யுள்வழியாகலின், †இது மானத்தின்பின் வைக்கப் பட்டது.

தெளி:—அஃதாவது செய்தற் கரியவற்றைச் செய்தல், செருக்கில் லாமை, பிறர் குற்றஞ் சொல்லாமை என்ற இவை முதலியநற்குணங் களால் பெரியராயினுரது தன்மையாம். நன்னிலையி னின்றும், மேலுமேலும் உயர்த்துதற்றன்மையனவாகிய இக்குணங்கள் உண் டாவது நிலையினின்றுந் தாழாமை உள்ளவிடத்தாகலால், இது மானத்தின்பின் வைக்கப்பட்டது.

---

**க. ஒளியொருவற் குள்ள வெறுக்கை யிளியொருவற்**
**கஃதிறந்து வாழ்து மெனல்.**

பரி:—(இ-ள்.) ஒருவனுக் கொளியாவது பிறராற் செயற்கரிய செய்வேமென்று கருதும் ‡ஊக்கமிகுதி; ஒருவனுக்கு மாசாவது அச் செயலை யொழிந்து உயிர்வாழக்கடவே மென்று கருதுதல், (எ-று).

---

* "நன்னிலைக்கட் டன்னை நிறுப்பானுந் தன்னை, நிலைகலக்கிக் கீழிடுவானு நிலையினு, மேன்மே லுயர்த்து நிறுப்பானுந் தன்னைத், தலையாகச் செய்வானுந் தான்" என்பது நாலடியார். †இது-பெருமை.

‡ ஊக்கமாவது மனம் மெலிதலின்றி வினைசெய்தற்கண் கிளர்ச்சி எழுச்சி) யுடையதாதலாம். அஃதாவது மன முயற்சியாம்.

ஒளி-தானுளனாயகாலத்து மிக்குத் தோன்றுத லுடைமை. *''ஒளிநிற் றேஎங்குபுகழ் செய்யான்'' என்றார் பிறரும். மேலும் ‡''செயற்கரிய செய்வார் பெரியர்'' என்றாராயினும், ஈண்டு ¶அவை அளவிறந்த வொப்புரவு ஈகை முதலியவாம். §அவற்றினாய பெரு மையை †அதன் காரணத்தின் மேலிட்டு 'உள்ள வெறுக்கை' என்றும், ||அது தன்னையே அதன் காரியமாகிய ஒளியாக்கியுங் கூறினார். §இவ்வாறு இத னெதிர்மறைக்கண்ணு மொக்கும். இதனாற் பெருமையின் சிறப்புக் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) ஒருவற்கு-ஒருவனுக்கு, ஒளி-ஒளியாவது, உள்ள வெறுக்கை - (பிறரால் செய்தற்கரிய செயல்களைச் செய்வோ மென்று நினைக்கும்) ஊக்க மிகுதி, ஒருவற்கு – ஒருவனுக்கு, இளி - மாசாவது, அஃதிறந்து - அச்செயலை யொழிந்து, வாழ்துமெனல - (உயிர்) வாழக் கடவோ மென்று நினைத்தல், (எ-று).

ஒளி - (ஒருவன்) தான் உளனாயகாலத்து மேம்பட்டுத் தோன்றுத லுடைமை. முன்னும் ''செயற்கரிய செய்வார் பெரியர்'' என்றாரா யினும் இங்கு அவை அளவிறந்த உபகாரம் ஈகைமுதலியனவாம். அவ்வுபகாரமுதலியவற்றாலாகிய பெருமையை அதன்காரணத்தின் மேல் வைத்து 'உள்ள வெறுக்கை' என்றும், அதனையே அதன் காரியமாகிய ஒளியாக்கியும் சொல்லினார். இவ்வாறு இதனது எதிர்மறையிலு மொக்கும். இதனாற் பெருமையின் சிறப்புச் சொல்லப்பட்டது.

---

* நாலடியார்-செல்வ நிலையாமை. 9. இதன்பொருள், மதிப்பை நிலைபெறச் செய்யான், பெருகுகின்ற (உரையும் பாட்டுமாகிய) புகழைச்செய்து கொள்ளான் என்பது.

‡ திருக்குறள்-நீத்தார்பெருமை. 6 இதன் பொருள், (ஒத்தபிறப் பினராகிய மக்களுள் செய்தற்கெளிய வற்றைச் செய்யாமல்) செய்தற் கருமையாய இயம நியம முதலியவற்றைச் செய்பவர் பெரியோராவர் என்பது.

¶ அவை - செய்தற் கரிய செயல்கள்.

§ அவற்றினாய - அளவுகடந்த உபகாரம், கொடை, கல்வி, ஆண்மை முதலியவற்றாலாகிய.

† செய்தற்கரியவற்றைச் செய்தலின் காரணமாகிய ஊக்க மிகுதியின்மேல் வைத்து 'உள்ளவெறுக்கை' என்று கூறினார். உள்ளம்–ஊக்கம்; வெறுக்கை - மிகுதி. உள்ளவெறுக்கை என்பது முன் அதன் காரியமாய செய்தற் கரியவற்றை யுணர்த்தி, பின் அதன் காரியமாய பெருமையை யுணர்த்துதலின், இருமடியாகு பெயராம்.

|| ஆகுபெயரால் பெறப்பட்ட பெருமையையே அதன் காரிய மாகிய ஒளி என்றுருவகமாக்கி, ஒருவற்குள்ள வெறுக்கை ஒளி என்று கூறினார். ஊக்கமிகுதி செய்தற் கரியவற்றைச் செய்தற்குக் காரண மாம்; அது பெருமைக்குக் காரணமாம்; அஃது ஒளிக்குக் காரணமா மென்ப துணர்க.

§ ஊக்கமிகுதி யில்லாதவர்க்குச் செய்தற் கரியவற்றைச் செய்தலும், அவை செய்யாதவர்க்குப் பெருமையும், பெருமை யில்லாதவர்க்கு ஒளியும் சம்பவியாமைபற்றி 'இவ்வாறு இதனெதிர் மறைக் கண்ணுமொக்கும்' என்று கூறப்பட்டது.

(க-து.) ஒருவனது பெருமைக்குக் காரணம் செய்தற்கரிய-வற்றைச் செய்வதில் ஊக்கமிகுதியாம்; இழிவிற்குக் காரணம் அவற்றைச் செய்யாதிருத்தலாம் என்பது.

1. One's greatness is the unbounded energy in accomplishing deeds which others cannot do; one's decadance is the desire to live destitute of such a state of mind.

---

**உ. பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.**

பரி:–(இ-ள்.) எல்லா மக்களுயிர்க்கும் பொதுவாகிய பிறப்பியல்பு ஒக்குமேயெனினும், பெருமை சிறுமை யெனப்பட்ட சிறப்பியல்பு களொவ்வா; அவை செய்யுந் தொழில்களது வேறுபாட்டான், (எ–று).

வேறுபாடு — *நல்லனவும், தீயனவும், இரண்டுமாயினவும், இரண்டுமல் லவாயினவுமாய அளவிறந்த பாகுபாடுகள். வினைவயத்-தாற் பஞ்சபூத †பரிணமமாகிய யாக்கையைப் பொருந்தி நின்று அதன் பயனனுபவித்தல் எல்லா வருணத்தார்க்கு மொத்தலிற் ‘பிறப்பொக்கும்’ என்றும், ‡பெருமை சிறுமைகட்குக் கட்டளைக் கல்லாகிய தொழிற் பாகுபாடுகள் வருணந்தோறும் யாக்கைதோறும் வேறுபடுதலிற் ‘சிறப்பொவ்வா’ என்றுங் கூறினார்.

தெளி:—(இ-ள்.) எல்லாவுயிர்க்கும் - எல்லா மக்களுயிர்க்கும், பிறப்பு - (பொதுவாகிய) பிறப்பியல்பு, ஒக்கும் - ஒக்குமே, (எனினும்), சிறப்பு - (பெருமை சிறுமை எனப்பட்ட) சிறப்பியல்புகள், ஒவ்வா - ஒவ்வாவாம், செய் தொழில் - (அவ்வுயிர்கள்) செய்யுந் தொழில்-களது, வேற்றுமையான் - வேறுபாட்டால், (எ–று).

வேறுபாடு–நல்லனவும், தீயனவும், இரண்டுமாயினவும், இரண்டு-மல்லவாயினவுமாய அளவுகடந்த பிரிவுகள். வினைவசத்தால் பஞ்ச-பூத காரியமாகிய உடம்பைப் பொருந்திநின்று அவ்வுடம்பின் பயனை யனுபவித்தல் எல்லாச் சாதியார்க்கும் ஒத்திருத்தலால் ‘பிறப்-பொக்கும்’ என்றும், பெருமை சிறுமைகளுக்குக் கட்டளைக் கல்லாகிய தொழிற் பிரிவுகள் சாதிதோறும் உடம்புதோறும் வேறுபடுதலால் ‘சிறப்பொவ்வா’ என்றும் சொல்லினர்.

---

* நல்வினைகள், தீவினைகள், இவ்விரண்டுங் கலந்த வினைகள், இவ்விரண்டுமல்லாத வினைகளென அளவிறந்த பாகுபாடுகள். இவ்-விரண்டுமல்லாத வினைகள் - துரும்புக்கிள்ளல், நீரடித்தல் முதலி-யனவாம்.

† ஒரு பொருள் தன்னிலையை விட்டு வேறு நிலையையடைவது பரிணமமெனப்படும். பரிணமமெனினும் திரிபு எனினும் ஒக்கும். அது பால் தயிராதல் ஆடைவீடாதல் போல்வதாம்.

‡ “பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங், கருமமே கட்டளைக் கல்” என்னுங் குறளிங்குணர்தற்பாலதாம். கட்டளைக் கல்–உரைகல்.

(க-து.) மக்களுக்குப் பொதுவாகிய பிறப்பியல்பு ஒக்குமேயாயினும், அவர் செய்யுந் தொழில்களது வேறுபாட்டால் சிறப்பியல்புகள் ஒவ்வா என்பது.

2 All (human) beings are alike as regards their birth, but differ in respect of their characteristics, on account of the different grades of their actions.

---

௩. மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங்
கீழல்லார் கீழல் லவர்.

பரி :—(இ-ள்.) செயற்கரிய செய்கலாது சிறியராயினூர், உயர்ந்த அமளி முதலியவற்றின்மிசை யிருந்தாராயினும் பெரியராகார் ; *அவை செய்து பெரியராயினூர், தாழ்ந்த வறுநிலத் திருந்தாராயினும் சிறியராகார், (எ-று).

†மேலிருத்தல் கீழிருத்தல்களாற் செல்வ நல்குரவுகளும், மேல் கீழ்களாற் பெருமை சிறுமைகளும் கருதப்பட்டன. இவையிரண்டு பாட்டானும முறையே குடிமை மாத்திரத்தானுஞ் செல்வ மாத்திரத்தானும் அஃதுளதாகாமை கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்) மேலல்லார் - (செய்தற்கரிய செயல்களைச் செய்வதின்றிச்) சிறியராயினூர், மேலிருந்தும் - உயர்ந்த ஆசன முதலியவற்றின்மீதிருந்தாராயினும், மேலல்லர் - பெரியராகார், கீழல்லவர் - (அவற்றைச் செய்து) பெரியராயினூர், கீழிருந்தும் - தாழ்ந்த வறு நிலத்தில் இருந்தாராயினும், கீழல்லார் - சிறியராகார், (எ-று).

மேலிருத்தல் கீழிருத்தல்களால் செல்வ வறுமைகளும், மேல் கீழ்களால் பெருமை சிறுமைகளும் கருதப்பட்டன. இவை இரண்டு பாட்டாலும் முறையே குடிப்பிறப்பு மாத்திரத்தாலும், செல்வ மாத்திரத்தாலும் அஃதுண்டாகாமை சொல்லப்பட்டது. அஃது-பெருமை.

(க-து.) மேன்மைக் குணமுடையார் கீழிருந்தாலும் சிறியராகார் ; அக்குணமில்லாதார் மேலிருந்தாலும் பெரியராகார்.

3. Though raised above, those who cannot accomplish great things cannot become great ; though brought low, those who can accomplish great things cannot become base.

---

* அவை - செய்தற்கரிய செயல்களை.

† மேலல்லார் மேலிருத்தலால் அவர்க்குச் செல்வமுடைமையும், கீழல்லவர் கீழிருத்தலால் அவர்க்குத் தரித்திரமுடைமையும், மேல் என்றதனுல் பெருமையும், கீழ் என்றதனுல் சிறுமையும் கருதப்பட்டன வென்பதாம் மேலல்லார் பெருமையிலராவர் ; கீழல்லவர் சிறுமையிலராவரென்று கொள்க.

ச. †ஒருமை மகளிரே போலப் பெருமையுந்
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு.

பரி:—(இ-ள்.) கவராத மனத்தினை யுடைய மகளிர் ‡நிறையின் வழுவாமற் றம்மைத் தாங் காத்துககொண் டொழுகுமாறுபோல, பெருமைக்குணனும், ஒருவன் ¶நிறையின் வழுவாமற் றன்னைத் தான் காத்துக்கொண்டொழுகுவனுயின், அவன்கணுண்டாம், (எ-று).

$பொருளின்றொழில் உவமையினும் வந்தது. கற்புண்டாதல் தோன்ற நின்றமையின், உம்மை எச்சவும்மை. ஒழுகுதல் £மன மொழி மெய்களை யொடுக்கி ஒப்புரவு முதலிய செய்து போதல். இதனுல் அஃதுளதாமாறு கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) ஒருமை - பிளவுபடாத மனத்தினையுடைய, மகளிரேபோல - பெண்கள் (நிறையினின்றும் தவருது தம்மைத்தாம் பாதுகாத்துக் கொண்டொழுகும் விதம்) போல, பெருமையும் - பெருமைக் குணமும், தன்னைத்தான் கொண்டொழுகின் - (ஒருவன் நிறையினின்றும் தவருமல்) தன்னைத்தான் பாதுகாத்துக்கொண் டொழுகுவானுயின், உண்டு - (அவனிடத்து) உண்டாம், (எ-று).

உவமேயத்தின் தொழிலாய 'தன்னைத்தான் கொண்டொழுகின்' என்பது 'ஒருமை மகளிர்' என்னும் உவமானத்திலும் வந்தது. ஒருமை மகளிர்க்குக் கற்புண்டாதல் தோன்ற நின்றமையின், பெருமையும் என்ற வும்மை இறந்தது தழுவிய எச்சவும்மையாம். ஒழுகுதல்-மன மொழி மெய்களை யடக்கி உபகார முதலியவற்றைச் செய்து வருதல். இதனுல் அஃதுண்டாமாறு சொல்லப்பட்டது. அஃது-பெருமை.

(க-து.) தன்னைத்தான் பாதுகாத்துக் கொண்டொழுகுவானிடத்-துப் பெருமைக்குணம் உண்டாகும் என்பது.

4. Even greatness, like a woman's chastity, belongs only to him who guards himself against evil ways.

---

† ஒருமை - ஏகாக்கிரசித்தம்; அஃதாவது மனம் பலதலைப்பட்டு விரிவ தொழிந்து, ஒருமுகப்பட் டிருத்தல்.

‡ நிறை - கற்பு; அஃதாவது மகளிர் தமதுகணவரைத் தெய்வ மென்றுணர்ந்து நெஞ்சைக் கற்பு வழியில் நிறுத்துதல்.

¶ நிறை-காப்பனகாத்துக் கடிவனகடிந்து ஒழுகும் ஒழுக்கும். "நிறையெனப் படுவது மறைபிற ரறியாமை" என்பது கலித்தொகை.

$ பொருள் - உவமேயம். அஃதிங்கு ஒருவனும்; அவனது தொழில் - தன்னைத்தான் கொண்டொழுகுதலாம்,

£ மன மொழி மெய்களை யொடுக்குதலின்பயன் "வாயி னடங்குதல் துப்புரவா மாசற்ற, செய்கை யடங்குதல் திப்பியமாம் பொய்யின்றி, நெஞ்சமடங்குதல் வீடாகு மிம்மூன்றும், வஞ்சத்திற் றீர்ந்த பொருள்" என்று திரிகடுகங் கூறுவதாலினிது விளங்கும்.

## ௫. பெருமை யுடையவ ராற்றுவா ராற்றி னருமை யுடைய செயல்.

பரி :—(இ-ள்.) *அவ்வாற்றுற் பெருமை யுடையராயினுர் தாம் வறிய ராயவழியும் பிறராற் செய்தற்கரியவாய தஞ்செயல்களை விடாது †அவை செய்யு நெறியாற் கடைபோகச் செய்தலைவல்லராவர், (எ-று).

*வறியராய வழியுமென்பது முன் செய்து போந்தமை தோன்றப் 'பெருமை யுடையவர்' என்றதனுலும் 'ஆற்றுவார்' என்றதனுனும் பெற்றும். இதனுல் ‡அதனை யுடையார் செய்தி கூறப்பட்டது.*

தெளி :—(இ-ள்.) *பெருமையுடையவர் –(அவ்வழியால்) பெருமை யுடையவராயினுர், (தாம் வறியராகிய விடத்தும்), அருமையுடைய-(பிறரால் செய்தற்கு) அரியனவாகிய, செயல்-(தமது) செயல்களை, ஆற்றின்-(விடாது அவற்றைச் செய்யும்) வழியால், ஆற்றுவார் - (முடிவுபெறச்) செய்தலில் வல்லவராவர், (எ-று).*

*வறியராகியவிடத்தும் என்பது பிறரால் செய்தற் கரியனவாகிய தமது செயல்களை முன்செய்து வந்தமை தோன்றப் 'பெருமை யுடையவர்' என்றதனுலும், 'ஆற்றுவார்' என்றதனுலும் பெற்றும். இதனுல் அதனையுடையவர் செய்தி சொல்லப்பட்டது. செய்தி – ஒழுக்கம்.*

(க-து.) *பெருமையுடையவர் தமக்கு வறுமை நேர்ந்த விடத்தும் பிறரால் செய்தற்கு அருமையாகிய செயல்களை முடிவுபெறச் செய்ய வல்லவராவர் என்பது.*

5. Though poverty-stricken, the great will be able to accomplish, in the proper way, deeds difficult for others to do.

———

## ௬. சிறியா ருணர்ச்சியு ளில்லைப் பெரியாரைப் பேணிக்கொள் வேமென்னும் நோக்கு.

பரி :—(இ-ள்.) ¶அப்பெற்றியராய பெரியாரை வழிபட்டு அவரி யல்பினை யாங்கோடு மென்னுங் கருத்து மற்றைச் சிறியராயினுர் மனத்தின்கண் உளதாகாது, (எ-று).

*குடிமை, செல்வம், கல்வி யென்றிவற்றது உண்மை மாத்திரத் தால் தம்மை வியந்திருப்பார்க்கு ()அவை நமக்கியல்பென்று அமைந்திருப்பாரை வழிபட்டு அஃதுடையராதல் கூடாதென்பதாம்.*

---

* *அவ்வாற்றுல் – செய்தற்கரியவற்றைச் செய்தலால்.*

† *அவை – செய்தற்கரியசெயல்களை.* ‡ *அதனை – பெருமையை.*

¶ *அப்பெற்றியராய – செய்தற்கரியசெயல்களைச் செய்யும் வழியால் முடிவுபெறச்செய்யுந் தன்மையுடையவராய.*

() *அவை - குடிமை, செல்வம், கல்வி. குடிமை-உயர்குடிப்பிறப்பு,*

தெளி:—(இ-ள்.) பெரியாரை–(அத் தன்மையராய) பெரியாரை, பேணி–வழிபட்டு, கொள்வே மென்னும் – (அவரியல்பினை யாம்) கொள்ளுவோமென்னும், நோக்கு–கருத்து, சிறியார்–(மற்றைச்) சிறியராயினரது, உணர்ச்சியுள் - மனத்தினிடத்து, இல்லை - உளதாகாது, (எ-று).

குடிப்பிறப்பு, செல்வம், கல்வியென்ற இவற்றின் இருப்பு மாத்திரத்தால் தம்மை வியந்திருப்பார்க்கு அவை நமக்கியல்பென்று அடங்கி யிருப்பாரை வழிபட்டு அவ்வியல்புடையராதல் கூடாதென்பதாம்.

*(க-து.) சிறியாரது மனத்தின்கண் யாம் பெரியாரை வணங்கி அவர் தன்மையைக் கொள்வோமென்னுங் கருத்துண் டாவதில்லை.*

6. It is never in the nature of the mean to seek the society of the great and acquire their nature.

---

**எ. இறப்பே புரிந்த தொழிற்றுஞ் சிறப்புந்தான்**
**சீரல் லவர்கட் படின்.**

பரி:—(இ-ள்.) தனக்கொக்கும் பெரியாரிடத்து ‡அமைந்திருத்தலைச் செய்வதாய சிறப்புத்தானும், தனக்கொவ்வாத சிறியாரிடத்துப்படுமாயின், அதனை யொழிந்து தருக்கின்கண்ணே மிக்கசெயலை யுடைத்தாம், (எ-று)

*தருக்கினை மிகச்செய்யு மென்பதாயிற்று. சிறப்பு-குடிமை, செல்வம், கல்விகளினுய மிகுதி. இவை யிரண்டு பாட்டானும் அஃதிலார் செய்தி கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) சிறப்புந்தான் - (தனக்கொத்துள்ள பெரியாரிடத்து அமைந்திருத்தலைச் செய்வதாகிய) சிறப்புத் தானும், சீரல்லவர்கட்படின் – (தனக்கொவ்வாதுள்ள) சிறியாரிடத்து உண்டாமாயின், இறப்பே புரிந்த - (அவ்வமைந்திருத்தலைச்செய்வ தொழிந்து) செருக்கினிடத்திலே மிகுந்த, தொழிற்றும்-செயலை யுடையதாம், (எ-று).

சிறப்புச் செருக்கினை மிகச் செய்யுமென்பதாயிற்று. சிறப்பு-குடிப்பிறப்பு, செல்வம், கல்விகளினுலாகிய மிகுதி. இவை இரண்டு பாட்டாலும் அஃதில்லாதவர் செய்தி சொல்லப்பட்டது. அஃது–பெருமை.

*(க-து.) சிறியாரிடத்துச் சிறப்புண்டாயின், அவர் மிகவுங் கர்வங் கொண்டு தகாதவற்றைச் செய்வர் என்பது.*

---

‡ அமைந்திருத்தல்-அடங்கி யொழுகுதல்.

* சிறியாரிடத்துண்டாய சிறப்பானது தருக்கினை (கர்வத்தை) மிகச் செய்யுமென்று கொள்க.

7. Even noble birth, wealth and learning if in possession of the mean, will only produce increasing pride.

---

அ. பணியுமா மென்றும் பெருமை சிறுமை
யணியுமாந் தன்னை வியந்து.

பரி:—(இ-ள்.) பெருமையுடையார் *அச்சிறப்புண்டாய ஞான்றுந் தருக்கின்றி அமைந்தொழுகுவர்; மற்றைச் சிறுமையுடையார் அஃதில்லாத ஞான்றுந் தம்மை வியந்து புனையாநிற்பர், (எ-று).

†பொருளின் றொழில்கள் பண்பின்மே லேற்றப்பட்டன. இஃது ‡'அற்ற மறைக்கும் பெருமை' என்புழியு மொக்கும். ¶என்று மென்பது பின்னும் வந்தியைந்தது. ஆமென்பன விரண்டும் $அசை. புனைதல்-பிறரிற் றமககோர் மிகுதியை யேற்றிக் கோடல். §இதற்கு உயர்ந்தார் தாழ்வார் தாழ்ந்தார் உயர்வார்; இஃதொரு விரோத மிருந்தவாறென்னென உலகியலை வியந்து கூறிற்றாக்குவாருமுளர்.

தெளி:—(இ-ள்.) பெருமை-பெருமையுடையவர், என்றும்-அச் சிறப்புண்டாகிய காலத்தும், பணியும்—(செருக்கில்லாமல்) அமைந் தொழுகுவர், சிறுமை-(மற்றைச்) சிறுமையுடையவர், என்றும்-அச் சிறப்பில்லாத காலத்தும், தன்னை வியந்து-தம்மை மெச்சி, அணியும்-சிறப்பியா நிற்பர், (எ-று).

பெருமையுடையவர் சிறுமையுடையவர் என்னும் பொருள்களின் (முதலின்) தொழிலாய பணிதலையும் அணிதலையும் அவர்களது

---

* அச்சிறப்பு – குடிமை, செல்வம், கல்விகளினுய மிகுதி.

† இது ''சிற்றினமஞ்சும் பெருமை'' என்றாற்போன்று குணவினை குணிவினையாய உபசாரவழக்காம்.

‡ 'அற்ற மறைக்கும் பெருமை' என்பது இவ்வதிகாரத்தின் பத்தாவது குறள். பெருமையுடையாரென்னும் பொருளின் தொழிலாய மறைக்கும் என்பதைப் பெருமையென்னும் பண்பின்மேலேற்றி, 'அற்றமறைக்கும் பெருமை' என்று கூறப்பட்டதென்க.

¶ என்றும் என்பது சிறுமை யென்பதனோடும் வந்தியைந்து நின்றது.

$ பொருளுணர்த்தாது சொற்களையசைத்து நிற்பது அசைநிலை யெனப்படும்.

§ இக் குறளிற்குப் பெருமை – உயர்ந்தார், பணியும் - (என்றும்) தாழ்வார், சிறுமை—தாழ்ந்தார், (என்றும் தம்மைவியந்து), அணியும்-உயர்வார்; இஃதொரு விரோதம் இருந்தவாறு என்னை என்று உலகியலை வியந்து (இக்குறள்) கூறிற்று என்று பொருள் கூறுவாரு முண்டென்பது. இங்குப் பிரபுலிங்கலீலை ''தாழ்ந்தோ ருயர்வ ரென்று மிக வுயர்ந்தோர் தாழ்வ ரென்றுமறஞ், சூழ்ந்தோ ருரைக்கு முறை கண்டாம்'' என்று கூறுவதும் உணர்தற்பாலதாம்.

குணமாய பெருமை மேலும் சிறுமைமேலும் ஏற்றிப் பெருமை பணியும் என்றும், சிறுமை அணியும் என்றும் கூறப்பட்டன. இது பின்வரும் 'அற்றமறைக்கும் பெருமை' என்றவிடத்தும் ஒக்கும். என்றும் என்பது பின்னும்வந்தியைந்து நின்றது. ஆமிரண்டும் அசைநிலை. சிறப்பித்தல்-சிறுமையுடையவர் மற்றவரிலுந்தமக்கு ஒருமிகுதியை ஏற்றிக்கொள்ளுதல். மிகுதி-மேன்மை.

(க-து.) பெருமையுடையவர் கர்வமின்றி யமைந்து நடத்தலையும், சிறுமையுடையவர் தம்மை வியந்து சிறப்பித்தலையும் உடையவராவர் என்பது.

8. The great will always be humble; but the base will exalt themselves in self-praise.

---

## கூ. பெருமை பெருமித மின்மை சிறுமை பெருமித மூர்ந்து விடல்.

பரி:—(இ-ள்.) பெருமைக்குணமாவது காரணமுண்டாய வழியும் *அஃதியல் பாதனேக்கித் தருக்கின்றி யிருத்தல்; சிறுமைக்குணமாவது அஃதில் வழியும் †அதனை யேற்றிக்கொண்டு தருக்கின் முடிவின் கண்ணே நின்றுவிடுதல், (எ-று).

‡அளவறத்தருக்குதலென்பதாயிற்று. ¶விடுமென்று பாட மோதுவாருமுளர். $முற்றுத் தொடரும் எழுவாய்த் தொடரும் தம்முளியையாமையின், அது பாட மன்மை யுணர்க.

---

* அஃது—பெருமை. † அதனை-பெருமையை.

‡ தருக்கின் முடிவின் கண்ணே நின்றுவிடுதல் என்பது அளவு கடந்து கர்வங் கொள்ளுதலென்பதாயிற்று.

¶ விடல் என்னும் தொழிற்பெயரை விடும் என்று (செய்யு மென்னு முற்ருகப்) பாடங் கூறுவாருமுண்டு.

$ சிறுமை பெருமித மூர்ந்துவிடும் என்பது வினைமுற்றுத் தொடர்; பெருமை பெருமிதமின்மை என்பது எழுவாய்த்தொடர். வினை முற்றுத் தொடரும் எழுவாய்த்தொடரும் தம்முள் பொருந்தி வருதற்கு விதியில்லாமையின், விடல் என்பதை விடும் என்று செய்யு மென்னு முற்ருகக்கூறல் வழுவாமென்று மறுத்தார். செய்யு மென்னுமுற்று யாண்டும் பெயர்க்கு(எழுவாய்க்குப்பின்) பயனிலை யாகவே வரும்; ஏனையமுற்றுக்கள் போன்று பெயர்க்கு முன்னர் வந்தால் எச்சமா யொழியும். அதுபற்றியே சிறுமை விடும் என்பது முற்றுத்தொடராகக் கருதப்பட்டது. "எச்சப் பெயர்வினை யெய்து மீற்றினும்" என்னுஞ் சூத்திரத்தின் விசேட வுரையில் நன்னூல் விருத்தி யுரைகாரர் "எழுவாயுருபு வினைமுற்றுப் பயனிலையை யிறுதிக் கட்கொண்டதூஉம், வினைமுற்றுப் பெயர்ப்பயனிலையை முதற்கட் கொண்டதூஉம் சாத்தான் வந்தான் எனவரும். தம்முள் வேற்றுமை

தெளி :—(இ-ள்.) பெருமை-பெருமைக்குணமாவது, பெருமித மின்மை-(காரணம் உண்டாகிய விடத்தும் அஃது இயல்பாதல் நோக்கிச்) செருக்கில்லாதிருத்தல், சிறுமை-சிறுமைக் குணமாவது, பெருமித மூர்ந்துவிடல்-(அக்காரணம் இல்லாதவிடத்தும் அதனை ஏற்றிக்கொண்டு) செருக்கின் முடிவிலே நின்றுவிடுதல், (எ-று).

அளவறச் செருக்குதலென்பதாயிற்று.

(கு-து.) பெருமைக் குணமுடையார் செருக்கில்லாதிருப்பர்; சிறுமைக் குணமுடையார் அஃதுடையரா யிருப்பர் என்பது.

9. Freedom from vanity is the nature of true greatness; while self-conceitedness is that of baseness.

---

க0 அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும்.

பரி :—(இ-ள்.) பெருமையுடையார் பிறர் மானத்தையே கூறி அவமானத்தை மறையா நிற்பர்; மற்றைச் சிறுமையுடையார் பிறர் குணத்தை மறைத்துக் குற்றத்தையே கூறிவிடுவர், (எ-று).

* மறைத்தலுங் கூறலும் ஏனையிடத்து மியைந்தன. ¶ அற்றம்–

---

யாதோவெனின், கேட்போர்க்குச் சாத்தனிது செய்தான் என வினையையுணர்த்துவதூஉம், இது செய்தான் சாத்தன் என வினை முதலை யுணர்த்துவ தூஉமாமென்க. வந்தான் சாத்தன் என வருவன வுமன்ன" என்று கூறுவதிங்குக் கவனித்தற்பாலதாம். பெருமை என்னும் எழுவாய்க்கு இன்மையென்னும் (குறிப்புத்) தொழிற் பெயர் பயனிலையாகவந்தாற்போன்று சிறுமையென்னும் எழுவாய்க் கும் விடல் என்னும் தொழிற்பெயர் பயனிலையாக வருதல்வேண்டும். அவ்வாறுவருதலே சிறப்புடைத்தாம். மேற்படி தொடராகிய வாக்கியங்கள் அவ்வாறு வாராது (தம்முளொவ்வாது) முற்றுத் தொடராகவும் எழுவாய்த் தொடராகவும் வருதல் வழுவாமென்று கருதப்பட்டது. பரிமேலழகர் எழுவாய்த்தொடரும் முற்றுத் தொடரும் தம்மு ளியையாமையினென்று கூறுது 'முற்றுத் தொடரும் எழுவாய்த்தொடரும் தம்முளியையாமையின்' என்று கூறியது பொருள் நோக்கைக் கருதியாமென்க. எதிர்மறை யுணர்ச்சி, பெற்றாலன்றி யுடம்பாட்டுணர்ச்சி வாராது என்னும நியமப்படி சிறுமையினுணர்ச்சி பெற்றாலன்றிப்பெருமையினுணர்ச்சி வாராதிருக் கின்றமையே பொருள் நோக்காமென்க.

* மறைத்தல் என்பது சிறுமையென்பதனோடும் கூறல் என்பது பெருமையென்பதனோடும் (சென்று) பொருந்திநின்றன. சிறுமை மறைத்துக் கூறிவிடும்; பெருமைகூறி மறைக்கும் என்றுகொள்க.

¶ அற்றத்தா (சோர்வா) லுண்டாகும் அவமானத்தை அற்ற மென்று கூறினமையின், இது கருவியாகுபெயராம்.

ஆகுபெயர். தானென்பது அசை. இவை மூன்று பாட்டானும் *இருவர் செயலும் ஒருங்கு கூறப்பட்டன.

தெளி:—(இ-ள்.) பெருமை - பெருமையுடையவர், அற்றமறைக்கும்-(பிறர் மானத்தையே சொல்லி) அவமானத்தை மறையாநிற்பர், சிறுமை-மற்றைச் சிறுமையுடையவர், குற்றமே கூறிவிடும் - (பிறர் குணத்தை மறைத்துக்) குற்றத்தையே சொல்லிவிடுவர், (எ-று).

மறைத்தலும் சொல்லலும் மற்றையிடத்திலும் பொருந்தி நின்றன. அற்றம்-கருவியாகுபெயர். தான்-அசை. இவைமூன்று பாட்டாலும் இருவர் செயலும் சேர்த்துச் சொல்லப்பட்டன.

(க-து.) பெருமையுடையவர் பிறரது மானத்தைக் கூறி யவமானத்தை மறையாநிற்பர்; சிறுமையுடையவர் பிறரது குணத்தை மறைத்துக் குற்றத்தையே கூறுநிற்பர் என்பது.

10. The great screen the defects of others; while the mean only divulge them.

---

## நான்காவது அதிகாரம்

## சான்றுண்மை—Perfection of good qualities

பரி:—அஃதாவது பலகுணங்களானு நிறைந்து அவற்றை யாடற்றன்மை. ‡பலகுணங்களானு மென்பது சாலுதற் றொழிலாற் பெறப்படுதலின், அவற்றையென்பது வருவிக்கப்பட்டது. பெருமையு ளடங்காத குணங்கள் பலவற்றையுந் தொகுத்துக்கொண்டு நிற்றலின், †இஃததன் பின் வைக்கப்பட்டது.

தெளி:—அஃதாவது பலகுணங்களாலும் நிறைந்து அவற்றை ஆளுதற்றன்மை. பலகுணங்களாலும் என்பது சாலுதல் (என்னும்) தொழிலால் பெறப்படுதலால், அவற்றை என்னும் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. பெருமையுள் அடங்காத குணங்கள் பலவற்றையும் தொகுத்துக் கொண்டு நிற்றலால், இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

---

* இருவர்-பெருமையுடையார், சிறுமையுடையார்.

‡ சான்றுண்மை யென்பதற்கு நிறைந்து ஆளுந்தன்மை யென்பது பொருளாம். சான்று (நிறைந்து) என்னும் (செய்தென்னும்) வினையெச்சத்தின் பகுதியாய சால் (சாலுதல்—நிறைதல்) என்னும் தொழிலால் பலகுணங்களாலும் என்பது பெறப்படுதலால், (ஆண்மை யென்னும் தொழிற்கியைய) அவற்றை (அப்பலகுணங்களை) யென்னும் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டதென்பது.

† இஃததன்பின்—சான்றுண்மை யென்னு மதிகாரம் பெருமை யென்னு மதிகாரத்தின்பின்.

க. கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு.

பரி:—(இ-ள்.) நமக்குத் தகுவது இதுவென் றறிந்து சான்றாண்மையை மேற்கொண் டொழுகுவார்க்கு நல்லனவாய குணங்களெல்லாம் இயல்பா யிருக்குமென்று சொல்லுவர் நூலோர், (எ-று).

*சிலகுணங்க ளிலவாயவழியும், உள்ளன செய்துகொண்டனவாயவழியும், சான்றாண்மையென்னுஞ் சொற்பொருள் கூடாமையின் நூலோர் இவ்வேதுப்பெயர்பற்றி அவரிலக்கணம் இவ்வாறு கூறுவரென்பதாம்.

தெளி:—(இ-ள்.) கடனறிந்து – (நமக்கு இது) தகுவதென்று அறிந்து, சான்று-(பலகுணங்களாலும்) நிறைந்து, ஆண்மை-(அவற்றை) ஆளுதற்றன்மையை, மேற்கொள்பவர்க்கு - மேற்கொண்டு நடப்பவர்க்கு, நல்லவையெல்லாம்-நல்லனவாய குணங்களெல்லாம், கடன்- இயல்பாயிருக்கும், என்ப - என்று சொல்லுவர், (நூலோர்), (எ-று).

சிலகுணங்க ளில்லாதவிடத்தும், உள்ள குணங்கள் இயல்பாகவிராது செய்துகொண்டனவாய விடத்தும், சான்றாண்மையென்னுஞ் சொற்பொருள் கூடாமையால், நூலோர் இவ்வேதுப்பெயர்பற்றி அவரிலக்கணத்தை இவ்வாறு சொல்லுவ ரென்பதாம்.

(க-து.) சான்றோர்க்கு நல்லனவாகிய குணங்களெல்லாம் இயல்பாயிருக்குமென்பது.

1. Those who are conscious of their duty and behave with perfect goodness are said to possess naturally all that is good.

---

உ. குணநலஞ் சான்றோர் நலனே பிறநல
மெந்நலத் துள்ளதூஉ மன்று.

பரி:—(இ-ள்.) சான்றோர் நலமாவது குணங்களானாய நலமே; அஃதொழிந்த ‡வுறுப்புக்களானாய நலம் ஒரு நலத்தினு முள்ளதன்று.

---

* நல்லனவாய குணங்களுள் சிலகுணங்களில்லாத விடத்தும், உள்ளன (உள்ள நல்லனவாய குணங்கள் இயல்பாக விராது பிறரது சம்பந்தத்தால்) சம்பாதித்துக் கொண்டவிடத்தும், சான்றாண்மை யென்னும் சொல்லுக்குப் பல குணங்களாலும் நிறைந்து அவற்றை யாளுதற்றன்மை என்னும் பொருள் சம்பவியாமையால், நூலோர் சான்றாண்மை யென்னு மிக்காரணப்பெயர் பற்றி அவர் (சான்றோரது) இலக்கணத்தை (‘நல்லவையெல்லாங் கடன்’ என்று) இவ்வாறு கூறுவரென்பதாம்.

‡ உறுப்புக்கள்-குடிப்பிறப்பு, கல்வி, கேள்வி, செல்வ முதலியன.

‘‘பிறப்பு நெடுவாழ்க்கை செல்வம் வனப்பு, நிலக்கிழமை மீக்கூற்றங் கல்விநோ யின்மை, யிலக்கணத்தா லிவ்வெட்டு மெய்துப வென்றும், ஒழுக்கம் பிழையா தவர்’’ என்று ஆசாரக்கோவை கூறுவதிங்குணர்தற்பாலதாம்.

அகநலத்தை முன்னே *பிரித்தமையின் ஏனைய புறநலத்தைப் 'பிற நலம்' என்றும், †அது குடிப்பிறப்புங் கல்வியு முதலாக நூலோ ரெடுத்த நலங்களுட் புகுதாமையின் 'எந்நலத்துள்ளதூஉ மன்று' என்றுங் கூறினர். இவை யிரண்டுபாட்டானும் ‡சால்பிற்கேற்ற குணங்கள் பொதுவகையாற் கூறப்பட்டன.

தெளி:—(இ-ள்.) சான்றோர் நலன்-சான்றோர் நலமாவது, குண நலமே-குணங்களாலாகிய நலமே, பிறநலம்-அஃதொழிந்த உறுப்புக்க ளாலாகிய நலம், எந்நலத்துள்ளதூஉம்-ஒரு நலத்திலுமுள்ளது, அன்று-அல்ல, (எ-று).

அகநலத்தை குணநலமேயென்று முன்னே பிரித்தமையால் மற்றைப் புறநலத்தைப் 'பிறநலம்' என்றும், அது குடிப்பிறப்புங் கல்வியுமுதலாக நூலோரெடுத்த நலங்களுள் செல்லாமையால் 'எந்நலத்துள்ளதூஉ மன்று' என்றும் சொல்லினர். இவை இரண்டு பாட்டாலும் சால்பிற்கு ஏற்றகுணங்கள் பொதுவகையாற் சொல்லப் பட்டன.

(க-து.) குணங்களாலாய நலமே சான்றோர்க்கு நலமாம்; அஃதொழிந்த நலம் எந்த நலத்திலும் சேருவதாகாது என்பது.

2. The only delight of the great is perfection of goodness; all other sensual delights are not regarded as true delights.

———

**ரு. அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையொ டைந்துசால் பூன்றிய தூண்.**

**பரி.—(இ-ள்.) சுற்றத்தார்மேலே யன்றிப் பிறர்மேலு முளதாய அன்பும், பழிபாவங்களி னாணலும், யாவர்மாட்டு மொப்புரவு செய்தலும், பழையார்மேற் கண்ணோடலும், எவ்விடத்தும் மெய்ம்மைகூறலும் எனச் சால்பென்னும் பாரத்தைத் தாங்கிய தூண்களைந்து, (எ-று).**

¶எண்ணொடு முன்னவற்றோடுங் கூடிற்று. $இக்குணங்களில்வழிச்

---

* பிரித்தமையின்-குணநலமே என்று பிரித்துக் கூறினமையின். (நலனே என்பதன் ஏகாரம் குணநலம் என்பதனோடு பிரித்துக்கூட்டப் பட்டது இவ்வேகாரம் பிரிநிலைப் பொருளில் வந்தது.)

† அது-குணநலமாகிய அக (உள்) நலம்.

‡ சால்பிற்கு-நிறைவிற்கு.

¶ வாய்மையொடு என்பதன்கணுள்ள எண்ணுப்பொருளில் வந்த ஒடு என்னும் இடைச்சொல் அன்பொடு, நாணொடு, ஒப்புரவொடு, கண்ணோட்டமொடு என்று முன்னுள்ளவற்றோடுங் கூடிநின்றது. "என்று மெனவுமொடுவுந் தோன்றி, ஒன்றும் வழி யுடைய யெண்ணி னுட் பிரிந்தே" என்பது தொல்காப்பியம்.

$ இக்குணங்கள் - அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என்னும் குணங்கள். கண்ணோட்டம்-தாட்சணியம்.

சால்புநிலை பெருமையின் *இவற்றைத் 'தூண்' என்றார். †ஏகதேச வுருவகம்.

தெளி :—(இ-ள்.) அன்பு - (சுற்றத்தார்மேலேயல்லாமற் பிறர் மேலும் உண்டாகிய) அன்பும், நாண் - (பழிபாவங்களில்) நாணலும், ஒப்புரவு - (யாவரிடத்தும்) உபகாரஞ்செய்தலும், கண்ணோட்டம் - (பழையவர்மேல்) கண்ணோடலும், வாய்மை - (எவ்விடத்தும்) உண்மை கூறுதலும், (என), சால்பு - சால்பென்னும் பாரத்தை, ஊன்றிய - தாங்கிய, தூண் - தூண்கள், ஐந்து - ஐந்தாம, (எ-று).

எண்ணுப் பொருளில் வந்த ஒடு என்னும் இடைச்சொல் முன்னுள்ள வற்றோடுங் கூடி நின்றது இக்குணங்கள் இல்லாவிடத்துச் சால்பு நிலைபெருமையால், இவற்றைத் 'தூண்' என்றார். இஃது ஏகதேச வுருவகவணி.

(க-து.) சான்றோர் அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை யென்னுங்குணங்களை யுடையவராயிருப்பர் என்பது.

3. Affection, fear of sin, benevolence, favour, and truthfulness are the five-fold pillars on which perfect goodness rests.

———

**௪. கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை**
**சொல்லா நலத்தது சால்பு.**

பரி: —(இ-ள்.) ‡பிறவறங்களும் வேண்டுமாயினுந் தவம் ஒருயிரையுங் கொல்லாத அறத்தின் கண்ணதாம்; அதுபோலப் ¶பிறகுணங்களும் வேண்டுமாயினுஞ் சால்பு பிறர் குற்றத்தைச் சொல்லாத குணத்தின் கண்ணதாம், (எ-று).

⁝ நலமென்னும் ஆகுபெயர்ப்பொரு |ளிரண்டனையுந் தலைமை

---

* இவற்றை - அன்புமுதலிய குணங்களை.

† அன்புமுதலிய குணங்களைத் தூணாக வுருவகஞ்செய்தவர் அதற்கியையச் சால்பினைப்பாரமென்றுருவகஞ் செய்யாமையின் இக்குறள் ஏகதேச வுருவகமாயிற்று.

‡ பிறவறங்களைத்தவமென்னும் அதிகாரத்தின் அவதாரிகையிற் காண்க.

¶ பிறகுணங் ளென்றது அன்பு, நாண், ஒப்புரவு முதலியவற்றை.

⁝ முன்னுள்ள நலத்தது என்பதன் பகுதியதான நலமென்னும் பண்புப் பெயரும் பின்னுள்ள நலத்தது என்பதன் பகுதியதான நலம் என்னும் பண்புப் பெயரும் முறையே அறத்தினையும் குணத்தினையு முணர்த்தி நின்றமையின், ஆகு பெயர்களாம். (நலத்திற்கேதுவாய அறத்தையும் குணத்தையும் நலம் நலமெனக்கூறினமையின், இவை காரியவாகுபெயராம்).

| இரண்டனையும் - அறத்தினையும் குணத்தினையும்.

தோன்ற †இவ்விரண்டற்குமதிகாரமாக்கிக் கூறினர். தவத்திற்குக் கொல்லாவறஞ் சிறந்தாற்போலச் சால்பிற்குப் பிறர் குற்றஞ் சொல்லாக்குணஞ் சிறந்ததென்பதாம்.

தெளி :—(இ-ள்.) நோன்மை - தவமாவது, கொல்லா நலத்தது—(பிற அறங்களும் வேண்டுமாயினும்) ஒருயிரையுங் கொல்லாத அறத்தினிடத்ததாம், (அதுபோல), சால்பு - சால்பாவது, பிறர்தீமை சொல்லா நலத்தது - (பிற குணங்களும் வேண்டுமாயினும்) பிறர் குற்றத்தைச் சொல்லாத குணத்தினிடத்ததாம், (எ-று).

நலம் என்னும் ஆகுபெயர்ப் பொருளிரண்டினையும் தலைமை தோன்றுமாறு நோன்மை சால்பு என்னு மிவ்விரண்டனுக்கும் அதிகாரமாக்கிச் சொல்லினர். தவத்திற்குக் கொல்லாத அறம் சிறந்தாற்போன்று சால்பிற்குப் பிறர் குற்றம் சொல்லாதகுணம் சிறந்ததென்பதாம்.

(க-து.) சான்றோர் பிறர் குற்றத்தைச் சொல்லார் என்பது.

4. Penance consists in the virtue of not killing (any living being), and perfection in the goodness that reveals not others' faults.

———

## ரு. ஆற்றுவா ராற்றல் பணித லதுசான்றோர் மாற்றாரை மாற்றும் படை.

பரி :—(இ-ள்.) ஒரு கருமத்தைச் செய்து முடிப்பார தாற்றலாவது ‡அதற்குத் துணையாவாரைத் தாழ்ந்து கூட்டிக்கொள்ளுதல்; இனிச் சால்புடையார் தம் பகைவரைப் பகைமை யொழிக்குங் கருவியும் ¶அது, (எ-று).

ஆற்றல்—() அது வல்லராந் தன்மை. *இறந்தததுதழீஇய வெச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. சால்பிற்கேற்ற பணிதற் குணத்தது சிறப்புக் கூறுவார் $ஏனையது முடன் கூறினர்.

தெளி :—(இ-ள்.) ஆற்றுவார் - (ஒரு கருமத்தைச்) செய்து முடிப்பவரது, ஆற்றல் - வலிமையாவது, பணிதல் - (அதற்குத் துணையாவாரைத்) தாழ்ந்து கூட்டிக்கொள்ளுதல், சான்றோர் - (இனிச்) சால்புடையவர், மாற்றாரை - (தமது) பகைவரை, மாற்றும்படை - (பகைமை) யொழிக்குஞ் சாதனமும், அது - அதுவாம், (எ-று).

---

† இவ்விரண்டற்கும் - தவத்திற்கும் சால்பிற்கும்

‡ அதற்கு - அக்கருமத்தைச்செய்து முடிப்பதற்கு.

¶ அது - பணிதல். () அது - பணிதல்.

* ஒரு கருமத்தைச் செய்து முடித்தலேயன்றி யென்பனதத் தழுவி நிற்றலின், தொக்குநின்றவும்மை இறந்ததுதழீஇயதாயிற்று.

$ ஏனையதும் - ஆற்றுவா ராற்றல் பணிதல் என்பதும்.

ஆற்றல் - அதனைச் செய்யவல்லராந்தன்மை. படையும் என்ற இறந்தது தழுவிய எச்சவும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது. சால்பிற்கு ஏற்ற பணிதற் குணத்தது சிறப்பினைச் சொல்லுவார் ஒன்றினமுடித்தல் தன்னின முடித்தலென்னு முத்தி யால் மற்றதையு முடன் சொல்லினார்.

(க-து.) சான்றோர் எப்பொழுதும் பணிவுடையவராயிருத்தலால், அவர்க்குப் பகைவரிலர் என்பது.

5. Submitting (to inferiors and rallying them to their side) is the strength of those who can accomplish an undertaking; and that is the weapon with which the wise avert the enmity of their foes.

---

**சஅ. சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி**
*** துலையல்லார் கண்ணுங் கொளல்.**

பரி:—(இ-ள்.) சால்பாகிய பொன்னி னளவறிதற்கு உரைகல்லாகிய செயல் யாதெனின், †அது தம்மி னுயர்ந்தார் மாட்டுக் கொள்ளுந் தோல்வியை இழிந்தார்மாட்டுங் கோடல், (எ-று).

துலை—ஒப்பு. ‡எச்சவும்மையான் இருதிறத்தார் கண்ணும் வேண்டுதல் பெற்றும். கொள்ளுதல்—வெல்லுமாற்றலுடையரா யிருந்தே §ஏற்றுக்கொள்ளுதல். இழிந்தாரை வெல்லுதல் கருதித் தம்மோ டொப்பித்துக்கொள்ளாது தோல்வியான் ¶அவரி னுயர்வ ராயின், ‖அதனாற் சால்பளவறியப்படு மென்பதாம்.

தெளி:—(இ-ள்.) சால்பிற்கு - சால்பாகிய பொன்னினளவறி தற்கு, கட்டளை - உரைகல்லாகிய செயல், யாதெனின் - யாதென்றால், (அது), தோல்வி - (தம்மினுமுயர்ந்தவரிடத்துக் கொள்ளுந்) தோல்வியை, துலையல்லார்கண்ணும் - இழிந்தவரிடத்தும், கொளல் - கொள்ளுதலாம், (எ-று).

துலை - சமானம். துலையல்லார்கண்ணும் என்ற எச்சவும்மையால் தோல்வியை இருதிறத்தாரிடத்தும் விரும்புதல்பெற்றும். கொள்ளு தல் - (சான்றோர் இழிந்தாரை) வெல்லும் வலிமையுடையராயிருந்தே (அவரிடத்துத் தோல்வியை) ஏற்றுக்கொள்ளுதல் சான்றோர் இழிந்

---

* துலையல்லார் - ஒப்பாகாதவர். † அது - அச்செயல்.

‡ துலையல்லார் கண்ணும் என்ற எதிரது தழுவிய எச்சவும்மை யினால் உயர்ந்தார் இழிந்தாரென்னும் இருதிறத்தாரிடத்தும் (தோல்வி) வேண்டுதல் பெற்றும். உயர்ந்தார்கண் கொள்ளுந் தோல்வியைத் துலையல்லார் கண்ணும் கொளல் என்று கொள்க.

§ ஏற்றுக்கொள்ளுதல - அங்கீகரித்துக் கொள்ளுதல்.

¶ அவரின் - இழிந்தாரைக்காட்டிலும்.

‖ அதனால் - தோல்வியாலுயருதலால்.

தாரை வெல்ல நினைத்துத் தம்மோடு சமானமாக்கிக்கொள்ளாமல் தோல்வியால் அவரிலும் உயர்வராயின், அதனுல் அவரது சால்பினளவு அறியப்படு மென்பதாம்.

(கு-து.) சான்ருேர் தம்மினும் உயர்ந்தாரிடத்துக் கொள்ளுந் தோல்வியை இழிந்தாரிடத்துங் கொள்ளுவர் என்பது.

6 The touch-stone of perfection is to acknowledge defeat even at the hands of one's inferiors.

---

எ. இன்னுசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு.

பரி :—(இ-ள்.) தமக்கின்னுதவற்றைச் செய்தார்க்குஞ் சால்புடையார் இனியவற்றைச் செய்யாராயின், அச்சால்பு வேறென்ன பயனையுடைத்து, (எ-று).

சிறப்பும்மை அவர் இன்னுசெய்தற் கிடனுதல் விளக்கி நின்றது. ஓகாரம் – அசை. *வினு – எதிர்மறைப் பொருட்டு. †தாமு மின்னு செய்வராயின், சால்பா லொருபயனுமில்லை யென்பதாம். இவை யைந்து பாட்டானுஞ் சிறப்புவகையாற் கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) (சால்புடையார்) இன்னு – (தமக்குத்) துன்பந் தருவனற்றை. செய்தார்க்கும் – செய்தவர்க்கும், இனியவே-இன்பந் தருவனவற்றை, செய்யாக்கால்-செய்யாராயின், சால்பு-அச்சால்பு, என்ன பயத்தது-(வேறு) என்ன பயனை யுடையது, (எ-று).

இன்னுசெய்தார்க்கும் என்ற இழிவுசிறப்பும்மை அவர் (சால்புடையார்) இன்னுதவற்றைச் செய்தற்கு இடமாதலை விளக்கி நின்றது. ஓ-அசை. என்ன என்னும் வினு எதிர்மறைப் பொருளது. தாமும் இன்னுசெய்தவர்க்கு இன்னு செய்வாராயின், தம்முடைய சால்பால் ஒருபயனும் இல்லை யென்பதாம். இவை ஐந்து பாட்டாலும் சால்பு சிறப்புவகையாற் சொல்லப்பட்டது.

(கு-து.) சால்புடையார் தீமை செய்தவர்க்கும் நன்மைசெய்யா ராயின், அவர் சால்பா லொருபயனுமில்லை என்பது.

7. Of what avail is perfect goodness if one cannot do delightful actions even to those who do evil (for good).

---

அ. இன்மை யொருவற் கிளிவன்று சால்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்.

---

* என்ன என்னும்வினு இங்கு எதிர்மறைப் பொருளில் வந்தது- [என்ன என்பது யாதொருபயனையு முடையதன்ருமென்னும் பொருளில் வந்ததென்பதாம்.] † தாமும் – சால்புடையாரும்.

பரி:—(இ-ள்.) சால்பென்று சொல்லப்படும் வலியுண்டாகப்பெறின், ஒருவனுக்கு நல்குரவு இளிவாகாது, (எ-று).

† தளராமை நாட்டுதலின், வலியாயிற்று. * இன்மையான் வருவதனை இன்மைதானாக வுபசரித்துக் கூறினார். சால்புடையார் நல்கூர்ந்தவழியும் மேம்படுதலுடைய ரென்பதாம்.

தெளி:—(இ-ள்.) சால்பென்னும் – சால்பென்று சொல்லப்படும், திண்மை – வலிமை, உண்டாகப்பெறின் – உண்டாகப்பெற்றால், ஒருவற்கு–ஒருவனுக்கு, இன்மை-வறுமை, இளிவன்று-இழிவாகாது, (எ-று).

தளராமல் நாட்டுதலால், சால்பு வலியாயிற்று. இன்மையால் வரும் வறுமையை இன்மையாகவே உபசரித்துக் கூறினார். சால் புடையவர் வறுமை நேரிட்டவிடத்தும் மேம்படுதலுடையராவ ரென்பதாம்.

(க-து) சால்புடையார் வறுமை யடைந்தவிடத்தும் அதனால் இழிவடைவதில்லை என்பது.

8. Poverty is no dishonor to one who abounds in good qualities.

---

கூ. ‡ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழி யெனப்படு வார்.

பரி:—(இ-ள்.) சால்புடைமையாகிய கடற்குக் கரையென்று சொல்லப் படுவார் ஏனைக்கடலுங் கரையுணில்லாமற் காலந்திரிந்தாலும், தாந்திரியார், (எ-று).

சான்றாண்மையது பெருமைதோன்ற ¶அதனைக் கடலாக்கியும், ||அதனைத்தாங்கிக்கொண்டு நிற்றலின் §அஃதுடையாரைக் கரை

---

† தளராமை நாட்டுதலின் – சால்பு வறுமையால் மனந்தளரா வாறு நிலைபெறச் செய்தலால்.

* இன்மை (பொருளில்லாமை)யால் வரும் வறுமையை இன்மை யாகவே உபசரித்துச் சொல்லினார். இது காரணம் காரியமாய வுபசாரவழக்காம்; கருவியாகுபெயரெனினு மொக்கும்.

‡ "தலைப்படு சால்பினுக் குந்தள ரேன்சித்தம் பித்தனென்று, மலைத்தறிவாரில்லை யாரையுந் தேற்றுவன்" என்று திருக்கோவையார் கூறுவதிங் குணர்தற்பாலதாம்.

¶ அதனை–சான்றாண்மையை. || அதனை–சான்றாண்மையாகிய கடலை. § அஃதுடையாரை–சான்றாண்மையுடையவரை.

யாக்கியுங் கூறினர். *"பெருங்கடற் காழி யனையன் மாதோ" என்றார் பிறரும். ()ஏகதேச. வுருவகம்.

தெளி —(இ-ள்.) சான்றாண்மைக்கு - சால்புடைமையாகிய கடலுக்கு, ஆழியெனப்படுவார் - கரையென்று சொல்லப்படுவார், ஊழிபெயரினும் - (மற்றைக்கடலும் கரையுள் நில்லாமற்) காலம் வேறுபட்டாலும், தாம் பெயரார் - தாம் வேறுபடார், (எ-று).

சான்றாண்மையின் பெருமை தோன்ற அதனைக் கடலாக்கியும், அதனைத் தாங்கிக்கொண்டு நிற்றலால் அதனையுடையாரைக் கரை யாக்கியும் சொல்லினர். இஃது ஏகதேசவுருவகவணி.

(க-து.) சால்புடையார் தமக்குப் பெருந்துன்ப முண்டாய விடத்தும் தமது நிலையினின்றும் மாறுபடார் என்பது

9. Those who are said to be the shore of the sea of perfection will never change, though ages may change.

---

கo. சான்றவர் சான்றாண்மை குன்றி னிருநிலந்தான்
றாங்காது †மன்னோ பொறை.

பரி: —(இ-ள்.) ‡பல குணங்களானு நிறைந்தவர் தந்தன்மை குன்று வராயின், மற்றையிரு நிலந்தானுந் தன் பொறையைத் தாங்காதாய் முடியும், (எ-று).

¶தானுமென்னு மெச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. $அவர்க்கது

---

* புறநானூறு, - 330 இதன்பொருள் (பகைவரது சேனை தன்னளவு கடந்துவாராதபடி விலக்குதலினாலே) பெரிய கடலுக்கு (அதனீரை யளவுகடந்து வாராதபடி விலக்குகின்ற) கரையை யொத்தவன் என்பது.

() சான்றாண்மையுடையாரை ஆழியாக (கரையாக) வுருவகஞ் செய்தவர் அதற்கியையச் சான்றாண்மையைக் கடலாக வுருவகஞ் செய்யாமையின், இஃது ஏகதேச வுருவகமாயிற்று.

† மன்னோ என்பதன்கண் மன் என்னு மிடைச்சொல் ஒழியிசைப் பொருளினும், ஓ என்னு மிடைச்சொல் அசைநிலைப்பொருளினும் வந்தன. ஒழியிசையாவது எச்சமாய் ஒழிந்து நின்ற சொற்பொருளை யுணர்த்துவதாம்.

‡ சான்றவர் சான்றாண்மை குன்றுவதால் இருநிலம் பொறை தாங்காது போதலால், சான்றாண்மை குன்றுதல் காரணமாம்; பொறை தாங்காமை காரியமாம். ¶இருநிலந்தானும் என்பது சான்றவர் சான்றாண்மை குன்றுதலைத் தழுவி நிற்றலின், தொக்கு நின்ற தானு மென்றவும்மை எதிரதுதழீஇய வெச்சவும்மையாயிற்று.

$ அவர்க்கது - சான்றவர்க்குச் சான்றாண்மை.

குன்றுமையும் *அதற்கது தாங்கலும் இயல்பாகலான், †அவை யெஞ்ஞான்று முளவாகா நின்றனவென்பது தோன்ற நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. ஒகாரம் - அசை. ¶இதற்கு இருநிலம் பொறை தாங்குவது சான்றவர் துணையாக வருதலான், அதுவும் அது தாங்கலாற்று தென்றுரைப்பாருமுளர். இவை மூன்று பாட்டானும் அவற்று னிறைந்தவரது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) சான்றவர் - (பல குணங்களாலும்) நிறைந் தவர், சான்றாண்மை - (தமது) தன்மை, குன்றின் - குன்றுவராயின், இருநிலந்தான் - மற்றைப் பெரிய பூமிதானும், பொறை - (தன்) பாரத்தை, தாங்காது - தாங்காதாய் முடியும், (எ-று).

தானுமென்ற எதிரது தழுவிய எச்சவும்மை செய்யுள் விகாரத் தால் தொக்குநின்றது. அவர்க்கு அது குன்றுமையும் அதற்கு அது தாங்கலும் இயல்பாகலால், அவை எந்நாளும் உளவாகா நின்றன வென்பது தோன்ற நின்றமையால், மன்னென்னு மிடைச்சொல் ஒழியிசைப் பொருளில் வந்தது. ஒகாரம் - அசை. இவை மூன்று பாட்டாலும் அப் பலகுணங்களாலும் நிறைந்தவரது சிறப்புச் சொல்லப்பட்டது.

(க-து.) சால்புடையார் தமது நிலையினின்றும் மாறுபடுவ ராயின், உலகம் நிலைபெறாது போம் என்பது.

10 If there be a descent in the character of the perfect, even the great world cannot bear its burden.

---

## ஐந்தாவது அதிகாரம்

## பண்புடைமை—Proper Behaviour

பரி:—அஃதாவது பெருமை சான்றாண்மைகளிற் றும் வழுவாது நின்றே எல்லாரியல்புகளு மறிந்தொத்தொழுகுதல்; §" பண்பெனப்

---

* அதற்கது – பூமிக்குப் பாரம்.

† அவை - சான்றவர்க்குச் சான்றாண்மை குன்றுமையும், பூமிக்குப் பாரந்தாங்கலும்.

¶ இதற்கு (இக்குறளுக்கு) இருநிலம் – பெரிய பூமி, பொறை – பாரத்தைத் தாங்குவது, சான்றவர் – (பல குணங்களாலும்) நிறைந் தவர், (துணையாக வருதலான்), (அவர் சான்றாண்மை குன்றின்), தாங்காது – (அப்பூமியும் அப்பாரத்தைத்) தாங்குதல் செய்யாது என்று பொருள் கூறுவாருமுண்டு.

§ கலித்தொகை – நெய்தற்கலி. 16. இதன் பொருள். மக்கட் பண்பு என்று சொல்லப்படுவது உலக வொழுக்க மறிந்தொழுகுதல் என்பது.

படுவது பாடறிந் தொழுகுதல்'' என்றார் பிறரும். †அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

தெளி :—அஃதாவது பெருமை சான்றாண்மைகளில் தாம் வழுவாது நின்றே எல்லாரியல்புகளும் அறிந்து அவற்றிற்கொத் தொழுகுதல். அதிகார முறைமையும் இதனாலே விளங்கும்.

---

க. எண்பதத்தா லெய்த லெளிதென்ப யார்மாட்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு.

பரி :—(இ-ள்.) யாவர்மாட்டு ‡மெளியசெவ்வியராதலால் அரிதாய பண்புடைமை யென்னும் நன்னெறியினை யெய்துதல் எளிதென்று சொல்லுவர் நூலோர், (எ-று).

குணங்களா னிறைந்து செவ்வியெளியரு மாயக்காற் பண்புடைமை தானே உளதா மாகலின் 'எண்பதத்தா லெய்த லெளிது' என்றும், ¶அஃதுலகத்தை யெல்லாம் வசிகரித்தற் பயத்த தாகலின் ||அதனைத் தொல்லோர் சென்ற $நன்னெறி யாக்கியும், * அதனை யெளிதி னெய்துதற்கு §இது நூலோரோதிய வுபாய மென்பார் ʃஅவர்மேல் வைத்துங் கூறினார்.

தெளி :—(இ-ள்) யார்மாட்டும்-யாவரிடத்தும், எண்பதத்தால்-எளிய சமயத்தராதலால், பண்புடைமை யென்னும் - (அரிதாகிய) பண்புடைமையென்று சொல்லப்படுகின்ற, வழக்கு- நல்வழியினை, எய்தல் - அடைதல், எளிது-இலேசு, என்ப-என்று சொல்லுவர், (நூலோர்), (எ-று).

குணங்களால் நிறைந்து எளிய சமயத்தருமாகியவிடத்துப் பண்புடைமை தானே உளதாமாகலால் 'எண்பதத்தா லெய்த லெளிது' என்றும், அஃது உலகத்தையெல்லாம் தன்வயப்படுத்தற் றன்மையதாக விருத்தலால் அதனை ''வழக்கு'' என்று பழையோர் சென்ற நல்வழியாக்கியும், அதனை எளிதிலடைவதற்கு இது நூலோரோதிய உபாயமென்பார் 'என்ப' என்று அவர்மேல் வைத்தும சொல்லினார்.

(க-து.) குணங்களால் நிறைந்து யாவரிடத்தும் எளிய சமயத்தை யுடையவராயிருப்பவர் பண்புடைமையை யெளிதிற் பெறுவர் என்பது.

1. By being easily accessible to all, it will be easy for one to acquire the virtue of goodness.

---

† பெருமை, சான்றாண்மை யென்னு மதிகாரங்களின்பின் பண்புடைமை யென்னும் அதிகாரம் வைத்த முறைமையும்.

‡ எளிய செவ்வியராதல்-காண்பதற் கெளிதாய சமயத்தரா யிருத்தல். ¶ அஃது-பண்புடைமை. || அதனை-பண்புடைமையை.

$ நன்னெறி-சன்மார்க்கம். * அதனை-பண்புடைமையை.

§ இது-யாவரிடத்தும் எளிய சமயத்தராயிருத்தல்.

ʃ அவர்-நூலோர்.

௨. அன்புடைமை யான்ற குடிப்பிறத்த லிவ்விரண்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு.

பரி:—(இ ள்) பிறர்மே லன்புடைய னாதலும் உலகத்தோடமைந்த குடியின்கட் பிறத்தலுமாகிய இவ்விரண்டும் ஒருவனுக்குப் பண்புடைமை யென்று உலகத்தார் சொல்லும் நன்னெறி, (எ-று).

அமைதல் – † ஒத்துவருதல். $ குடிப்பிறத்த லென்றது பிறந்தார் செயலை. ‡ தனித்த வழி ஆகாது இரண்டுங் கூடிய வழியே ஆவதென்பது தோன்ற, முற்றும்மை கொடுத்தார். * காரணங்கள் காரியமாக வுபசரிக்கப்பட்டன. இவையிரண்டு பாட்டானும் பண்புடையராதற் காரணங் கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்,) அன்புடைமை – (பிறர்மேல்) அன்புடைய னாதலும், ஆன்றகுடிப் பிறத்தல்–(உலகத்தோடு) அமைந்த குடியிற் பிறத்தலும், (ஆகிய), இவ்விரண்டும் – , பண்புடைமை யென்னும்- (ஒருவனுக்குப்) பண்புடைமை யென்று (உலகத்தார்) சொல்லும், வழக்கு – நல்வழியாம், (எ–று).

அமைதல் ஒத்துவருதல். குடிப்பிறத்தலென்றது குடியிற் பிறந்தவரது செயலை. தனித்தவிடத்து ஆகாது இரண்டுங் கூடிய வழியே பண்புடைமையாவதென்பது தோன்ற, இவ்விரண்டும் என முற்றும்மை கொடுத்தார். ‘அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல்’ என்னும் காரணங்கள் ‘பண்புடைமை யென்னும் வழக்கு’ என்று காரியமாக உபசரிக்கப்பட்டன. இவை இரண்டு பாட்டாலும் பண்புடையராதற்குக் காரணம் சொல்லப்பட்டது.

---

† ஒத்துவருதல் - உலகத்தோடொத்தொழுகுதல்.

$ குடிப்பிறத்தல் என்பது குடிப்பிறந்தாரது செயலை யுணர்த்துதலின், இருமடியாகுபெயராம். குடிப்பிறத்தலென்பது குடிப்பிறந்தாரை யுணர்த்துதலால் தொழிலாகு பெயராம்; குடிப்பிறந்தாரென்பது அவரது செயலை யுணர்த்துதலால் பொருளாகுபெயராம்.

‡ அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் என்னு மிரண்டனுள் ஒன்று தனித்துள்ள விடத்துப் பண்புடைமை யுண்டாகாது இவ்விரண்டுங் கூடிய விடத்தே (பண்புடைமை) யுண்டாவ தென்பது தோன்ற ‘இவ்விரண்டும’ என முற்றும்மை கொடுத்தார்.

* அன்புடைமையாலும் ஆன்ற குடிப்பிறத்தலாலும் உண்டாகும் பண்புடைமையை ‘அன்புடைமை யான்ற குடிப்பிறத்த லிவ்விரண்டும், பண்புடைமை யென்னும் வழக்கு’ என்றொற்றுமை செய்து கூறினமையின் ‘காரணங்கள் (அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் என்னுங் காரணங்கள்) காரியமாக (பண்புடைமை யென்னும் வழக்கு என்று காரியமாக) வுபசரிக்கப்பட்டன’ என்று கூறப்பட்டது. இவ்வாறு வருவது காரணம் காரியமாய வுபசார வழக்காம்.

(க-து.) பண்புடைமை அன்புடைமையாலும் உயர்ந்த குடியிற் பிறத்தலாலு முண்டாவதாம் என்பது.

2. Affectionateness and high born dignity, these two are beaten paths of courtesy.

---

**ங. உறுப்பொத்தன் மக்களொப் பன்றால் ‡ வெறுத்தக்க பண்பொத்த லொப்பதா மொப்பு.**

**பரி:—(இ-ள்.) செறியத்தகாத வுடம்பாலொத்தல் ஒருவனுக்கு நன்மக்களோ டொப்பாகாமையின், ¶அது பொருந்துவதன்று; இனிப் பொருந்துவதாய வொப்பாவது செறியத்தக்க பண்பா லொத்தல் (எ-று).**

$ வடநூலார் அங்கமென்றமையின் 'உறுப்பு' என்றார். ஒருவனுக்கு நன்மக்களோடு பெறப்படு மொப்பாவது *உயிரின் வேறாய் நிலையுதலில்லா வுடம்பொத்தலன்று; வேறன்றி நிலையுதலுடைய பண்பொத்தலாகலான், அப்பெற்றித்தாய §அவர் பண்பினை யுடையனாக வென்பதாம்

தெளி:—(இ-ள்.) உறுப்பொத்தல் - (நெருங்கத்தகாத) உடம்பா லொத்தல், மக்களொப்பன்று - (ஒருவனுக்கு) நன்மக்களோடு ஒப்பாகாது, (ஒப்பாகாமையால் அது பொருந்துவதன்று), ஒப்பதாம் - (இனிப்)பொருந்துவதாகிய, ஒப்பு - ஒப்பாவது, வெறுத்தக்க - நெருங்கத்தக்க, பண்பொத்தல் - பண்பாலொத்தல், (எ-று).

வடநூலார் உடம்பை அங்கமென்று கூறுகின்றமைபற்றி 'உறுப்பு' என்றார். ஒருவனுக்கு நன்மக்களோடு பெறப்படும் ஒப்பாவது உயிரின் வேறாய் நிலைபெறுவதில்லாத உடம்பா லொத்தலன்று: வேறாகாது நிலைபெறுதலுடைய பண்பா லொத்தலாகலால், அத்தன்மையதாகிய அவர் பண்பினை யுடையவனாக வென்பதாம்

(க-து.) நன்மக்களோடு உடம்பா லொத்திராது குணத்தா லொத்திருப்பவரே பண்புடையாராவர் என்பது.

---

‡ வெறுத்தக்க என்பது வெறுக்கத்தக்க என்பதன் விகாரம். வெறுத்தல்-செறிதல் அல்லது நெருங்கல். ¶அது-உடம்பா லொத்தல்.

$ நீதிநெறி விளக்கம் 'அங்கங் (உடல்) குலைவதறிவு' என்று கூறுவது மிங்குணர்தற் பாலதாம்.

* ஒருவன் உடம்பு உயிரின் வேறாய் நிலைபெறுவதில்லாதிருத்தலின், அதனால் நன்மக்களோடு ஒப்பாதல் கூடாது; பண்பு (நற்குணம்) உயிரின் (நீரில் நெகிழ்ச்சிபோல) வேறாகாது நிலைபெறுவதாக விருத்தலின், அதனால் ஒப்பாதல் வேண்டும் என்றுணர்ந்து நன்மக்களது பாடறிந்தொழுகும் பண்பினனாகக் கடவனென்பதாம்.

§ அவர் - நன்மக்கள்.

3. Men are not one because their members seem alike; similitude of kindred qualities makes true likeness.

---

ச நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டு முலகு.

பரி'—(இ·ள்.) நீதியையும் அறத்தையும் விரும்புதலாற் பிறர்க்குந் தமக்கும் பயனபடுத லுடையாரது பண்பினை உலகத்தார் கொண்டாடா நிற்பர், (எ-று)

* புரிந்த வென்னும் பெயரெச்சம் ஈண்டுக் காரணப் பொருட்டு. † நயனொடு நன்றிபுரிதலும் பயனுடைமையும் பண்புகாரணமாக வந்தமையின், $அதனைப் ' பாராட்டும ' என்றார்.

தெளி:—(இ-ள்.) நயனொடு - நீதியையும், நன்றி - அறத்தையும், புரிந்த - விரும்புதலால, பயனுடையார் - (பிறர்க்குந் தமக்கும்) பயன்படுத லுடையவரது, பண்பு - பண்பினை, உலகு - உலகத்தார், பாராட்டும் - கொண்டாடா நிறபர், (எ-று).

புரிந்த என்னும் பெயரெச்சம் இங்குக் காரணப் பொருளில் வந்தது. நயனொடு நன்றிபுரிதலும பயனுடைமையும் பண்பு காரண மாக வந்தமையால், (உலகு) அதனைப் 'பாராட்டும்' என்றார்.

(க-து) பண்புடையார் நீதியையும் தருமத்தையும் விரும்புத லால் பிறர்க்கும் தமக்கும் பயன்படுதலுடையவராக விருத்தலின், அவரது குணத்தை உலகத்தார் கொண்டாடா நிற்பர்.

4. The great applaud the character of those whose fruitfulness results from their equity and charity.

---

ரு. நகையுள்ளு மின்னா திகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு.

பரி· (இ-ள்) †தன்னை யிகழ்தல் ஒருவற்கு விளையாட்டின்கண்ணும் இன்னாது; ஆகலாற் பிறர்பாடறிந் தொழுகுவார் மாட்டுப் பகைமையுள் வழியும் அஃதுளதாகாது இனியவாய பண்புகளே உளவாவன, (எ·று).

---

* புரிந்த என்னும் பெயரெச்சம் பயனென்னும் பெயர் கொண்டு முடிந்தது. (நயனொடுநன்றி) புரிதலால் பயனுண்டாவதால் புரிதல் காரணமாம்; பயன் காரியமாம்.

† பண்பில்லாரிடத்து நயனொடுநன்றி புரிதலும் அது காரண மாகப் பிறர்க்குந் தமக்கும் பயன்படுதலு மிலவாமென்க.

$ அதனை - பண்பினை.

† பிறர் தன்னை யிகழ்ந்து பேசுதல்.

'பாடறிவார்' எனவே †அவ்வின்னாமை யறிதலும் பெற்றாம். ‡அதனையறிந்தவர் பின் ¶அது செய்யார்; இனியவே செய்வாரென்பது கருத்து *இதற்குப் பிறரெல்லாம் §இரண்டு தொடருந் தம்மு ‖ளியையாம லுரைப்பாரும், இன்னாதென்னுஞ் சொற்குப் பிறவாதென் றுரைப்பாரு மாயினர்.

தெளி:—(இ-ள்.) இகழ்ச்சி - (தன்னை) இகழ்தல், நகையுள்ளும் - (ஒருவனுக்கு) விளையாட்டினிடத்தும், இன்னாது - துன்பந்தருவதாம், (ஆகலால்), பாடறிவார் மாட்டு - (பிறர்) இயல்பினையறிந்து நடப்பவரிடத்து, பகையுள்ளும் - பகையுள்ளவிடத்தும், பண்பு - (அப்பகையுண்டாகாமல் இனிமையனவாகிய) பண்புகளே, உள - உண்டாவனவாம், (எ-று).

'பாடறிவார்' எனவே அவ்வின்னாமையை யறிதலும் பெற்றாம். அதனை அறிந்தவர் பின் அது செய்யார்; இனியனவே செய்வாரென்பது கருத்து.

(க-து.) பண்புடையார் பகையுண்டாய விடத்தும் இனிமைக்குணமுடையவராகவே இருப்பார் என்பது.

5. Contempt is painful even in sport; they who know man's nature therefore exhibit courteous qualities even when they are hated.

---

சு. பண்புடையார்ப் பட்டுண் டுலக மதுவின்றேன்
மண்புக்கு மாய்வது மன்.

பரி:—(இ-ள்.) பண்புடையார்கண்ணே படுதலால் உல |கியல் எஞ்ஞான்று முண்டாய் வாராநின்றது; ()ஆண்டுப்படுத லில்லையாயின், அது மண்ணின்கட் புக்கு மாய்ந்து போவதாம், (எ-று).

⁝படவென்பது திரிந்து நின்றது. ο உலகு-ஆகுபெயர். மற்றைப் பண்பில்லார் சார்பன்மையின் ஓர் []சார்புமின்றி மண்ணின்கட்புக்கு $மாயுமது வேண்டாவாயிற் றென்பது பட நின்றமையின், மன் ஒழி

† நகையுள்ளும் இகழ்ச்சி யின்னாதென்பதை.

‡ அதனை - நகையுள்ளும் இகழ்ச்சியின்னா தென்பதை.

¶ அது - இன்னாமை. * இதற்கு - இக்குறளிற்கு.

§ இரண்டு தொடரும் - இகழ்ச்சி நகையுள்ளுமின்னாது; பாடறிவார் மாட்டுப் பகையுள்ளும் பண்புள என்னும் இரண்டு தொடரும்.

‖ இயையாமல் - பொருந்தாமல். | இயல் - ஒழுக்கம்.

() ஆண்டுப்படுதல் (உலகியல்) பண்புடையவரிடத்தே பொருந்துதல்.

⁝காரணப்பொருளில் வந்த படவென்னும் செயவெனெச்சம் பட்டு எனத் திரிந்து நின்றது. ο உலகு என்னுமிடப்பெயர் உலகில் நிகழும் இயலை (ஒழுக்கத்தை) யுணர்த்துதலால், இடவாகு பெயராம்.

[] சார்புமின்றி - ஆதாரமில்லாமல்.

$ மாயுமது (நாசமுறும் உலகியல்) வேண்டாவாயிற்று; (தானிருத்தற் காதாரமாகப் பண்புடையவ ரிருத்தலால் நாசமுறுதலை விரும்பாதாயிற்று).

யிசைக்கண்வந்தது. இவை நான்கு பாட்டானும் † அதனை யுடையா ரதுயர்ச்சி கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) பண்புடையார் -பண்புடையவரிடத்தே, பட்டு-படுதலால், உலகம் - உலகியல், உண்டு - (எந்நாளும்) உளதாய்வரா நின்றது. இன்றேல் - (அங்குப்படுதல்) இல்லையாயின், அது - அவ்வுல கியல், மண்புக்கு - மண்ணிற்புகுந்து, மாய்வது - மாய்ந்துபோவதாம், (எ-று).

படவென்னும் எச்சம் பட்டெனத் திரிந்து நின்றது. உலகு-இட வாகு பெயர். மற்றைப்பண்பில்லார் சார்பல்லாமையால் ஒருசார்பு மில்லாமல் மண்ணிற் புகுந்து மாயுமது வேண்டாவாயிற்றென்பது தோன்ற நின்றமையால், மன்னென்னுமிடைச்சொல் ஒழியிசைப் பொருளில் வந்தது. இவை நான்கு பாட்டாலும் அதனை யுடையவரது உயர்ச்சி சொல்லப்பட்டது.

(க-து) உலகியல் பண்புடையவரிடத்தன்றி மற்றவரிடத்தில்லை யாம் என்பது.

6. The world abides by contact with the good; if not, it would fall to dust and perish.

---

எ. அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்.

பரி.—(இ-ள்) நன்மக்கட்கேயுரிய பண்பில்லாதவர் அரத்தின் கூர்மைபோலுங் கூர்மையையுடையவரே யாயினும் ()ஓரறிவிற்றுய மரத்தினை யொப்பர், (எ-று).

‡அரம் - ஆகுபெயர். ஓரறிவு - ஊற்றினையறிதல். ¶உவமை யிரண்டனுள், *முன்னதுதான் $மடிவின்றித் தன்னையுற்ற பொருள் களை §மடிவித்தலாகிய தொழில்பற்றி வந்தது; | ஏனையது ⁝விசேட

---

† அதனை - பண்பினை.

() "புன்மர முதலவுற் றறியுமோ ரறிவுயிர்" என்பது நன்னூல்.

‡ அரம் என்னும் பொருட்பெயர் அரத்தின் பண்பாகிய கூர்மையை யுணர்த்துதலால், பொருளாகுபெயராம.

¶ உவமை யிரண்டனுள் - அரத்தின்கூர்மை, மரம் என்னுமுவ மான மிரண்டனுள்.

* முன்னது – அரத்தின் கூர்மை யென்பது.

$ மடிவு – மடங்குதல். § மடிவித்தல் – கெடச் செய்தல்.

| ஏனையது – மரம் என்பது

⁝ விசேடவறிவு - மனவுணர்வு (பகுத்தறிவு). "மக்க டாமே யாறறி வுயிரே" என்பது தொல்காப்பியம். ஆறுவதறிவு – மன வுணர்வு.

வறிவின்மையாகிய பண்புபற்றி வந்தது. அவ்விசேட வறிவிற்குப் பயனுய மக்கட் பண்பின்மையின், † அதுதானுமில்லை யென்ப தாயிற்று.

தெளி :—(இ-ள்.) மக்கள் - நன்மக்களுக்கே, (உரிய), பண்பில்லாதவர் – குணமில்லாதவர், அரம்போலும் – அரத்தின் கூர்மை போலும், கூர்மையரேனும் – கூர்மையை யுடையவரேயாயினும், மரம்போல்வர் – (ஓரறிவினதாகிய) மரத்தினை யொப்பர், (எ–று).

அரம் - பொருளாகு பெயர். ஓரறிவு - பரிசத்தை யறிதல். உவமான மிரண்டனுள், முன்னது தான மடிதலில்லாமல் தன்னையுற்ற பொருள்களை மடிவித்தலாகிய தொழில் பற்றி வந்தது; மற்றது விசேட அறிவில்லாமையாகிய குணம்பற்றி வந்தது. அவ்விசேட வறிவிற்குப் பயனுகிய மக்கட் பண்பில்லாமையால், அவ்வறிவுதானு மில்லை யென்பதாயிற்று.

(க-து.) பண்பில்லாதவர் அரத்தின் கூர்மை போலுங் கூரிய புத்தியையுடையவராயிருப்பினும் மரத்தோடொப்பாவர் என்பது.

7. He who is devoid of humane courtesy only resembles a tree, though sharp his wit may be as a file.

---

**அ. நண்பாற்று ராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்று ராதல் கடை.**

பரி :—(இ-ள்.) தம்மொடு நட்பினைச் செய்யாது பகைமையைச் செய் தொழுகுவார்மாட்டும் தாம் பண்புடையரா யொழுகாமை அறிவுடையார்க் கிழுக்காம், (எ–று).

நயம் – ‡ ஈரம். சிறப்பும்மை ¶ அவர் பண்பாற்றுமைக் கிடனுதல் தோன்ற நின்றது. § அதனைச் செய்யிற் *றூமும் ‖ அவர் தன்மையராவரென்பார் 'கடை' என்றார்.

தெளி :—(இ-ள்.) நண்பு – நட்பினை, ஆற்றுராகி – (தம்மொடு) செய்யாதவராகி, நயமில – பகைமையை, செய்வார்க்கும் – செய்து நடப்பவரிடத்தும், பண்பாற்றுராதல் – (தாம்) பண்புடையவராய் நடவாமை, கடை – (அறிவுடையவர்க்கு) இழுக்காம், (எ–று).

நயம் – ஈரம். செய்வார்க்கும் என்ற இழிவு சிறப்பும்மை அவர் பண்புடையார் பண்புடையவராய் நடவாமைக்கு இடமாதல்தோன்ற நின்றது. அதனைச் செய்யின் தாமும் அவர் தன்மையராவரென்பார் 'கடை' என்றார்.

(க-து.) பண்புடையார் பகைவரிடத்தும் அன்புடையவராக விருப்பர் என்பது.

---

† அதுதானும்–விசேட வறிவும், ‡ ஈரம்–அன்பு.

¶ அவர்-நயமிலசெய்வார். § அதனை–பண்புடையவராய் நடவாமையை. * தாமும்–பண்புடையாரும். ‖ அவர்–நயமிலசெய்வார்.

8. It is uttermost disgrace to fail in courtesy even towards those who bearing no friendship for them do only what is harmful.

---

௯. நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன் றிருள்.

பரி:—(இ-ள்.) பண்பின்மையான் ஒருவரோடுங்கலந்து உண்மகிழ் தன்மாட்டாதார்க்கு மிகவும் பெரிய ஞாலம் இருளில்லாத பகற்பொழுதினும் இருளின்கட் கிடந்ததாம், (எ-று).

*எல்லாரோடுங் கலந்தறியப் பெருமையிற் பண்பில்லார்க்கு உலகியல் தெரியா தென்பார், †மாயிரு ஞாலம் பகலும் இருள்பாற் பட்டன்று என்றார். ‡பாழ்பட்டன்றிரு ளென்று பாடமோதி, இருணீங்கிற்றன்றென்றுரைப்பாரு முளர்.*

தெளி:—(இ-ள்.) *நகல்வல்ல ரல்லார்க்கு-(பண்பில்லாமையால் ஒருவரோடுங் கலந்து) உள் மகிழ்தல் மாட்டாதவர்க்கு, மாயிரு ஞாலம் - மிகவும் பெரிய பூமியானது, பகலும் - (இருளில்லாத) பகற்பொழுதிலும், இருள்பால்-இருளினிடத்து, பட்டன்று-கிடந்ததாம், (எ-று).*

எல்லாரோடும் கலந்து அறியப் பெருமையால் பண்பில்லாதவர்க்கு உலகியல் தெரியாதென்பார், மாயிருஞாலம் பகலும் இருள்பாற் பட்டன்று என்றார்.

(க-து.) பிறரோடு நட்புச் செய்தொழுகும் பண்பில்லாதவர்க்கு உலகியல் தெரியாது என்பது.

9. To those who cannot rejoice in kindness, darkness broods over the vast & mighty world even in day time.

---

௧௦. பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வ நன்பால்
கலந்தீமை யாற்றிரிந் தற்று.

பரி:—(இ-ள்.) பண்பில்லாதவன் முன்னை நல்வினையானெய்திய பெரிய செல்வம் ¶அக்குற்றத்தால் ஒருவர்க்கும் பயன்படாது கெடு

---

† *உலக மிருளின்கட் பட்டது என்றும் பாடமுண்டு.*

‡ *பாற்பட்டன் றிருள் என்பதற்குப் பிரதியாகப் பாழ்பட்டன் றிருள் என்று பாடஞ் சொல்லி, (மாயிரு ஞாலம் பகலிலும்) இருள் நீங்கியதன் றென்று பொருள் கூறுவாருமுண்டு, இருள் பாழ் பட்டன்று (இருள் பாழ் பட்டதில்லை) என்று கொள்க.*

¶ *அக்குற்றத்தால்-பண்பில்லாதிருக்குங் குற்றத்தால்.*

தல் நல்ல வான்பால் ஏற்ற *கலத்தின் குற்றத்தால் இன்சுவைத் தாகாது கெட்டாற்போலும், (எ-று).

†கலத்தீமை யென்பது மெலிந்து நின்றது. ‡தொழிலுவமமா கலின், ¶பொருளின்கண் $ஒத்ததொழில் வருவிக்கப்பட்டது. £படைக்குமாற்றலிலனுத ரேன்றப் 'பெற்ற' என்றும், எல்லாப் பயனுங் கோடற்கேற்ற இடனுடைமை தோன்றப் 'பெருஞ் செல்வம்' என்றுங் கூறினர். அச்செல்வமும் பயன்படா தென்ற இதனுன் வருகின்ற ()அதிகாரப் பொருண்மையுந் ∅தோற்றுவாய் செய்யப்பட்டது. இவை நான்கு பாட்டானும் ||அஃதில்லாரதிழிவு கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்.) பண்பிலான்-பண்பில்லாதவன், பெற்ற-(முன்னை நல்வினையால்) அடைந்த, பெருஞ் செல்வம்-பெரிய செல்வம், (அக்குற்றத்தால் ஒருவர்க்கும் பயன்படாது கெடுதல்), நன்பால் - நல்ல (பசுவின்) பால், கலம் - (ஏற்ற) கலத்தினது, தீமையால் - குற்றத்தால், (இனியசுவையுடையதாகாது), திரிந்தற்று - கெட்டாற்போலும், (எ-று).

கலத்தீமை யென்பது கலந்தீமை யென மெலித்தல் விகாரமடைந்து நின்றது. தொழிலுவம மாகலால், உவமேயத்தில் ஒத்த தொழில் வருவிக்கப்பட்டது. படைக்கும் வலிமையிலனுதல் தோன்றப் 'பெற்ற' என்றும், எல்லாப் பயனுங் கொள்ளுதற்கு ஏற்ற இடமுடைமை தோன்றப் 'பெருஞ் செல்வம்' என்றும் சொல்லினர். அச்செல்வமும் பயன்படாதென்ற இதனல் வருகின்ற அதிகாரப் பொருண்மையும் தோற்றுவாய் செய்யப்பட்டது. இவை நான்கு பாட்டாலும் அஃதில்லாதவரது இழிவு சொல்லப்பட்டது.

(க–து.) பண்பில்லாதவனது செல்வம் ஒருவர்க்கும் பயன்படுதலில்லை என்பது.

---

* கலத்தின் - பாத்திரத்தின்.

† செல்வத்தகைத்து என்பது செல்வந் தகைத்து என மெலிந்து நின்முற்போன்று கலத்தீமை யென்பது கலந்தீமையென மெலிந்து நின்றது.

‡ தொழிலுவம மாகலின் - 'நன்பால் கலந்தீமையால்' திரிதற்ருெழில் உவமானமாயிருத்தலால்.

¶ பொருளின்கண் - 'பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம்' என்னும் உவமேயத்தில்.

$ ஒத்ததொழில் - அக்குற்றத்தால் ஒருவர்க்கும் பயன்படாது கெடுதல் என்ருெத்த தொழில்.

£ படைக்கும் - பொருளைச் சம்பாதிக்கும்.

() அதிகாரப் பொருண்மையும் - அதிகாரத்தினது பொருளும்.

∅ தோற்றுவாய் – தொடக்கம்.

|| அஃதில்லாரது - பண்பில்லாதவரது

10. The great wealth possessed by an unkind man will perish like sweet cow's milk spoilt by the impurity of the vessel.

---

## ஆறுவது அதிகாரம்

### நன்றியில் செல்வம்—Unprofitable Wealth

**பரி:—அஃதாவது ஈட்டியாற்கும் பிறர்க்கும் பயன்படுத லில்லாத செல்வத்தின தியல்பு. *உடையானது குற்றஞ் செல்வத்தின்மே லேற்றப் பட்டது. () அதிகார முறைமை † மேற்றோற்றுவாய் செய்தவதனாற் பெற்றாம்.**

*தெளி:—அஃதாவது (தன்னைச்) சம்பாதித்தவனுக்கும் பிறர்க்கும் பயன்படுதலில்லாத செல்வத்தினியல்பு. செல்வமுடையானது குற்றம் செல்வத்தின்மேல் ஏற்றப்பட்டது. அதிகார முறைமை முன் தோற்று வாய் செய்தவதனாற் பெற்றாம்.*

---

**க. வைத்தான்வாய் சான்ற ¶பெரும்பொரு ளஃதுண்ணான்
செத்தான் செயக்கிடந்த தில்.**

**பரி: —(இ-ள்.) தன் மனையகல மெல்லாம் நிறைதற் கேதுவாய பெரும் பொருளை ‡யீட்டிவைத்து உலோபத்தால் அதனை யுண்ணாதவன் உளனா யினுஞ் செத்தானாம்; அதன்கண் அவனாற் செயக்கிடந்ததோருரிமை யின்மையான், (எ-று).**

---

** செல்வத்தைத் தேடினனது நன்றியின்மையாகிய குற்றத்தை அவனது செல்வத்தின்மே லேற்றி 'நன்றியில் செல்வம்' என்று கூறின மையின், இஃது உடையவன் குற்றம் உடைமைமே லாய உபசார வழக்காம்.*

*() பண்புடைமையென்னும் அதிகாரத்தின்பின் நன்றியில் செல்வ மென்னும் அதிகாரத்தைவைத்த கிரமம்.*

*† மேல் அதிகாரத்தி னிறுதியில் "பண்பிலான் பெற்ற பெருஞ் செல்வ நன்பால், கலந்தீமை யாற்றிரிந் தற்று" என்று தொடக்கஞ் செய்தவதனால் பெறப்பட்டது.*

*¶ "வைத்துப் பொருளைத் தானுகரான் வழங்கானிருந்துஞ் செத் தானே, செத்த பின்ன ரென்செய்வான்" என்பது விநாயகபுராணம்.*

*‡ தீயாலோ நீராலோ தேர்வேந்தர் தம்மாலோ, மாயாத தெய் வர் வலியாலோ - யாதாலோ, இப்பொருள்போய் மாய்கின்றதென்று பொருள் வைத்தார்கள், எப்பொழுது நீங்கா ரிடர்" என்று பெருந் தேவனார் பாரதங் கூறுவதிங் கறிதற்பாலதாம்.*

*வைத்தானென்பது முற்றெச்சம். உண்ணுதல் - அதனு †னைம் புலன்களையும் நுகர்தல். ‡வாய்சான்ற பெரும்பொருளை வைத்தானொருவன் அதனை யுண்ணுது செத்தவழி அதன்கண் அவனுற் செயக்கிடந்ததோ ருரிமையில்லையாகலான், வையாது பெற்றபொழுதே நுகர்கவென் றுரைப்பினுமமையும். ¶இதற்குச் செத்தானென்பது எச்சம். இதனுல் ஈட்டியானுக்குப் பயன்பட லின்மை கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) வாய்சான்ற - (தன்) மனையகமெல்லாம் நிறைதற்குக் காரணமாகிய, பெரும்பொருள் - பெரிய பொருளை, வைத்தான் - (சம்பாதித்து) வைத்து, அஃது - அப்பொருளை, உண்ணுன் - (உலோபத்தால்) அனுபவியாதவன், (உளனுயினும்), செத்தான் - செத்தானும், செயக்கிடந்தது - (அப்பொருளினிடத்து அவனுல்) செயக்கிடந்ததோ ருரிமையானது, இல்-இல்லை, (ஆகலால்), (எ-று).

வைத்தான் என்பது எச்சப்பொருளில் வந்த முற்று. உண்ணுதல்-அப்பொருளால் ஐம்புலன்களையுமனுபவித்தல். இதனுல் செல்வத்தைச் சம்பாதித்தவனுக்கு அச்செல்வம் பயன்படுதலில்லாமை சொல்லப்பட்டது.

(க-து.) பெரும்பொருளைத் தேடிவைத்து உலோப குணத்தால் அதனை யனுபவியாதவன் உயிரோடிருக்குங் காலத்துஞ் செத்தவனுக்கொப்பாவன் என்பது.

1. He who (earns and) fills his house with immense riches, enjoying none, is to be considered as dead, as naught (with the useless heap) is achieved by him.

———

* வைத்தான் என்னும் தெரிநிலை வினைமுற்று வைத்து என வினையெச்சப் பொருளில் வந்தது. வினைமுற்று, பெயர்கொண்டு முடியாது வினைகொண்டு முடியுமிடத்து எச்சமாம். இங்கு வைத்தான் என்பது உண்ணுன் என்பதைக்கொண்டு முடிந்தது.

† ஐம்புலன்கள் - (சுகத்தைத் தருவதாய் அனுபவித்தற்கு விரோதமின்றிய) சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றமென்னும் விஷயங்கள்.

‡ இக்குறளிற்கு மற்றோருரை கூறுகின்றுர். அது வருமாறு:- வாய்சான்ற - தன் மனையகமெல்லாம் நிறைதற்குக் காரணமாகிய, பெரும்பொருள் - பெருப்பொருளை, வைத்தான் - (சம்பாதித்து) வைத்தானொருவன், அஃதுண்ணுன் - அப்பொருளை யனுபவியாது, செத்தான் - செத்தவிடத்து, செயக்கிடந்தது-(அப்பொருளினிடத்து அவனுல்) செய்யக் கிடந்ததோருரிமை (சுதந்தரம்), இல் - இல்லை, [ஆகலால்], (பொருளைச் சேர்த்து) வையாது பெற்ற காலத்திலேயே அனுபவிக்கக் கடவன் என்பதாம்.

¶ இதற்கு·[இந்த அருத்தத்திற்குச்] செத்தான் என்னும் தெரிநிலை வினைமுற்று, செத்தவிடத்து என வினையெச்சப் பொருளில் வந்தது.

உ. பொருளானு மெல்லாமென் றீயா திவறு
† மருளானு மாணாப் பிறப்பு.

பரி :—(இ-ள்.) பொருளொன்று முண்டாக அதனு லெல்லா முண்டாமென்றறிந்து ‡அதனை ஈட்டிப்பின் பிறர்க்கீயாது பற்றுள்ளஞ் செய்யு மயக்கத்தாலே ஒருவனுக்கு ¶நிறைதலில்லாத பேய்ப் பிறப்புண்டாம், (எ-று).

*இருமையினு மெய்து மின்பங்கள் பலவுமடங்க 'எல்லாம்' என்றும், ஈட்டுதற்கு முன்னுண்டாய வறிவு பின்மயங்குதலின் 'மருள்' என்றும், பொருளுண்டாயிருக்கப் பிறர்பசி கண்டிருந்த தீவினை பற்றி உணவுகளுளவாயிருக்கப் பசித்து வருந்தும் பிறப்புளதா மென்பார் மாணாப்பிறப்பாம் என்றுங் கூறினர்.*

தெளி:—(இ-ள்.) *பொருளான்-(பொருளொன்றுமுண்டாக அப்) பொருளால், எல்லாம் ஆம் - எல்லாமுண்டாகும், என்று - என்று (அறிந்து அதனைச் சம்பாதித்து), ஈயாது-(பின் பிறர்க்குக்) கொடாது, இவறும் - பற்றுள்ளஞ்செய்யும், மருளான்-மயக்கத்ினுலே, மாணா - நிறைதலில்லாத, பிறப்பு - (பேய்ப்) பிறப்பு, ஆம் - (ஒருவனுக்கு) உண்டாம், (எ-று).*

*(இம்மை மறுமையென்னும்) இருமையிலும் அடையும் இன்பங்கள் பலவும் அடங்க 'எல்லாம்' என்றும், பொருளைச் சம்பாதிப்பதற்குமுன் உண்டாகிய அறிவானது சம்பாதித்தபின் மயங்குதலால் 'மருள்' என்றும், பொருளுண்டாயிருக்கப் பிறருடைய பசி கண்டிருந்த தீவினைபற்றி உணவுகள் உண்டாயிருக்கப் பசித்து வருந்தும் பிறப்புண்டாமென்பார் மாணாப் பிறப்பாம் என்றும் சொல்லினர். பற்றுள்ளம் - உலோபகுணம்.*

(கு-து.) *பொருளின் பயனையறிந்து அதனைச் சம்பாதித்துப் பிறர்க்கீயாது பற்றுள்ளஞ் செய்பவனுக்கு மறுமையில் பேய்ப் பிறப்புண்டாம் என்பது.*

2. He who knows that from wealth all blessings spring and yet is blind as to lead a miserly life (by giving naught to others) takes a degraded demon birth.

———

ந. *ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்
தோற்ற நிலக்குப் பொறை.

---

† *"பொருளல்லவற்றைப் பொருளென் றுணரு, மருளானு மாணாப் பிறப்பு" என்னும் பிரயோகமுமிங் குணர்தற் பாலதாம்.*

‡ *அதனை - பொருளை.* ¶ *நிறைதல் - திருப்தியடைதல்.*

* *ஈட்டம் என்பது அம் ஈற்றுத்தன்மைப்பன்மை வினைமுற்று.*

பரி:—(இ-ள்.) யாம் பிறரின்மிக வீட்டுது மென்று பொருளின திட்டன் மாத்திரத்தையே விரும்பி அதன்பயனாய புகழை விரும்பாத மக்களது பிறப்பு நிலத்திற்குப் பாரமா மத்துணையே, (எ-று).

*† இசை இருமைக்கு முறுதியாய அறமாகலின், ‡ ஈகையான் அதனையே வேண்டல் செய்யாது ஈட்டற்றுன்பத்தையும் காத்தற் றுன்பத்தையும் வேண்டிய வறிவின்மைபற்றி 'நிலக்குப்பொறை' என்றார். பிறப்பென்றது அதற்குரிய வுடம்பினை.*

தெளி:—(இ-ள்.) *ஈட்டம் - (யாம்பிறரைக் காட்டிலும் மிகுதி யாகச்) சம்பாதிப்போம், (என்று), இவறி-(பொருள் சம்பாதித்தல் மாத்திரத்தையே) விரும்பி, இசை-(அப்பொருளின் பயனாகிய) புகழை, வேண்டாவாடவர்-விரும்பாத மக்களது, தோற்றம்-பிறப்பு, நிலக்கு-பூமிக்கு, பொறை-பாரமாம், (அவ்வளவே), (எ-று).*

*புகழ் இருமைக்கும் உறுதியாகிய அறமாகலால், ஈகையால் அப் புகழினையே விரும்புதல் செய்யாமல் பொருளைச் சம்பாதித்தற் றுன்பத்தையும், காப்பாற்றற் றுன்பத்தையும் விரும்பிய அறிவில் லாமைபற்றி (ஈட்டமிவறி யிசைவேண்டாவாடவர் தோற்றத்தை) 'நிலக்குப்பொறை' என்றார். பிறப்பென்றது அப்பிறப்பிற் குரிய உடம்பினை.*

(க-து.) *பொருளைச் சம்பாதித்து அதன் பயனாகிய புகழை விரும்பாத மக்கள் உலகிற்குப் பாரமாக விருப்பாரன்றிப் பயனுடை யவராக விரார் என்பது.*

3. Who lust to heap up wealth but not glory, are a burden to the earth.

———

**ச. எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோ வொருவரா னச்சப் படாஅ தவன்.**

பரி:—(இ-ள்.) ஒரு பொருளு மீந்தறியாமையின் ஒருவராலும் நச் சப் படுதலில்லாதவன் தானிறந்தவழி ஈண்டொழிந்து நிற்பதாக யாதனைக் கருதுமோ ? (எ-று).

---

*† ஈகையாலுண்டாகும் அறம் இசை (புகழ்) வடிவமாக விளங் குதலின், 'இசை இருமைக்கு முறுதியாய அறமாகலின்' என்றுகூறப் பட்டது. இசையுடையார் இம்மைக்குரிய உறுதியும் மறுமைக்குரிய வுறுதியு மடைவரென்பதாம்.*

*‡ "ஈத லிசைபட வாழ்த லதுவல்ல, தூதிய மில்லை யுயிர்க்கு" என்னுங் குறளிங் குணர்தற்பாலதாம்.*

ஈண்டொழிந்து *நிற்கும்புகழ் ஈவான்மேலன்றி நில்லாமையின், †அவனுக்கதனோ டியாது மியைபில்லையென்பார் ' என்னெண்ணுங் கொல்லோ ' என்றார். ஓகாரம் - அசை. இவை மூன்றுபாட்டானும் பிறர்க்குப் பயன்படலின்மை கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) ஒருவரான் - (ஒருபொருளுங் கொடுத்து அறியாமையால்) ஒருவராலும், நச்சப் படாஅதவன் - விரும்பப்படுத லில்லாதவன், (தான் இறந்தவிடத்து), எச்சமென்று - (இங்கு) ஒழிந்து நிற்பதாக, என் - எதனை, எண்ணுங்கொல் - நினைப்பானோ, (எ-று).

இங்கு ஒழிந்து நிற்கும் புகழ் ஈவான்மே லல்லாமல் (பிறன் மேல்) நில்லாமையால், அவனுக்கு அப்புகழோடு எவ்வளவும் சம்பந்தம் இல்லையென்பார் ' என்னெண்ணுங்கொல்லோ ' என்றார். ஓ - அசை. இவை மூன்றுபாட்டாலும் அச்செல்வம் பிறர்க்குப் பயன்படலில்லாமை சொல்லப்பட்டது.

(க-து.) உலோபகுணமுடையவனா யிருத்தலால் ஒருவராலும் விரும்பப்படுதலில்லாதவன் தான் இறந்தபின் இங்கொழிந்து நிற்பதாக எதனை நினைப்பானோ ? என்பது.

4. What will the miser whom none loves (when he shall pass away) think of to leave behind?

---

ரு. கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க் கடுக்கிய
கோடியுண் டாயினு மில்.

பரி:—(இ-ள்.) பிறர்க் கீவதும் தாநுகர்வதுமாய இரண்டு செய்கையுமுடையரல்லாதார்க்குப் பலவாக வடுக்கிய கோடிபொருளுண்டாயினும் ஒன்றுமில்லை, (எ-று).

‡இன்பத்தினும் அறஞ் சிறந்தமையின், கொடுத்தற்றொழில் முற்கூறப்பட்டது. ¶அடுக்கியகோடியென்றது ஈண்டெண்ணப்படும்

---

* " உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன், றீவார் மேனிற்கும் புகழ் " என்னுங் குறளிங் குணர்தற்பாலதாம்.

† அவனுக்கு - ஒருவராலும் நச்சப்படுத லில்லாதவனாகிய வுலோபிக்கு.

‡ துய்ப்பதாலுண்டாகும் இன்பத்திலும் ஈதலாலுண்டாகும் அறஞ் சிறந்திருத்தலால் 'கொடுப்பதூஉம்' என்று கொடுத்தற்றொழில் முன்னர்க் கூறப்பட்டது. "ஈதலறம்" என்று ஔவைப்பிராட்டியார் கூறியிருப்பது இங்குணர்தற் பாலதாம்.

¶ கோடி என்னும் எண்ணுப் பெயர் கோடியளவினதாகிய பொருளை யுணர்த்துதலின், எண்ணலளவை யாகுபெயராம். குடிமையதிகாரத்தில் "அடுக்கிய கோடி" என்று வந்திருத்தலு மிங்குணர்தற் பாலதாம்.

பொருண்மேனின்றது. ஒன்றுமில்லார் போலப் *பயனிரண்டு மிழத் தலின் 'இல்' என்றார்.

தெளி:—(இ-ள்.) கொடுப்பதூஉம் - (பிறர்க்கு) ஈவதும், துய்ப்ப தூஉம் - (தாம்) அனுபவிப்பதும், (ஆகிய இரண்டு செய்கையும்), இல்லார்க்கு - உடைய ரல்லாதார்க்கு, அடுக்கிய - (பலவாக) அடுக்கிய, கோடியுண்டாயினும்-கோடி பொருளுண்டாயினும், இல் - (ஒன்றும்) இல்லை, (எ-று).

இன்பத்தினும் அறம் சிறந்தமையால், கொடுத்தற்றொழில் (கொடுப்பதூஉம் என்று) முன் சொல்லப்பட்டது. அடுக்கியகோடி யென்றது இங்கு எண்ணப்படும் பொருளின்மேல் நின்றது. (கொடுப்ப தூஉந் துய்ப்பதூஉ மில்லார்) ஒருபொருளு மில்லார்போலப் பயனிரண்டும் இழத்தலால் 'இல்' என்றார்.

(க-து.) அறத்தின் பொருட்டுப் பிறர்க்குக் கொடுத்தலும் இன் பத்தின் பொருட்டுத் தாம் அனுபவித்தலும் ஆகிய இரண்டு செய்கையும் இல்லாதார்க்கு எவ்வளவு பொருளிருந்தாலும் அதனால் யாதொரு பயனுமில்லை என்பது.

5. They who neither give to others nor enjoy their property themselves are truly poor, though possessing accumulated millions.



சா. † ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவ்வான் றக்கார்க்
கொன்றீத லியல்பிலா தான்.

பரி:—(இ-ள்.) தானுகரானும் அதன்மேலுந் தகுதியுடையார்க்கு அவர் வேண்டிய தொன்றனை யீதலியற்கை யிலனுமினுன் ‡இரண்டுஞ் செய்தற்கிடனுடைத்தாய செல்வத்திற்கு ஒரு நோய், (எ-று).

---

* பயனிரண்டும்-கொடுத்தலா லுண்டாகும் அறப்பயனையும் துய்ப்பதா லுண்டாகும் இன்பப்பயனையும்.

†ஈதலியல்பிலாதான் ஏதம் (நோய்) என்பது "ஏவவுஞ் செய் கலான்றான்றேரா னவ்வுயிர், போஓ மளவுமோர் நோய்" என்பது போலச் செறலினுல் (கோபத்தினுல்) உயர்திணை அஃறிணையாய வழுவமைதியாம். ஈதலியல் பிலாதான் உயர்திணை; ஏதம் - அஃறிணை. இவ்வாறு வருவதனை நச்சினார்க்கினியர் இழிபினுல் உயர்திணை அஃறிணையாயவழுமைதியாமென்பர்.

‡ இரண்டும் - தானுகர்தலும், தகுதியுடையார்க்கு அவர் வேண்டிய தொன்றனை யீதலும்.

தகுதி - *தானங் †கோடற் கேற்புடைமை. ‡ஏதம் - ஆகு பெயர். நுகரப்படுதலும் ஈயப்படுதலுமாகிய தொழிற் குரியதனை ¶அன்றாக்கின மையின் (†)'ஏதம்' என்றார். $ஈதலியல்பிலாதானது பெருஞ்செல்வம் அவனுக்கு +ஈட்டல் காத்தல் முதலியவற்றால் துன்பமே யாமென் றுரைப்பாரு முளர். இவை யிரண்டு பாட்டானும் ||அவ்விருமையும் உடன் கூறப்பட்டன.

தெளி:—(இ-ள்.) தான் றுவ்வான் - தான் அனுபவியாதவனாகி, (அதன் மேலும்), தக்கார்க்கு - தகுதியுடையவர்க்கு, ஒன்று - (அவர் வேண்டியது) ஒருபொருளை, ஈதலியல்பிலாதான் - கொடுத்தற் றன்மை யில்லாதவனாயினான், பெருஞ்செல்வம் - (இரண்டுஞ் செய் தற்கு இடமுடையதாகிய) பெரிய செல்வத்திற்கு, ஏதம் - ஒருநோய், (எ-று).

தக்கார் - தானம் வாங்குதற்கு ஏற்றவர். ஏதம் - காரியவாகு பெயர். அனுபவிக்கப்படுதலும் ஈயப்படுதலுமாகிய தொழிற்குரிய பொருளினை அன்றாகச் செய்தமையால் (ஈதலியல்பிலாதானை) 'ஏதம்' என்றார். இவை இரண்டு பாட்டாலும் அவ்விருமையும் உடன் சொல்லப்பட்டன.

(கு-து.) செல்வத்தைத் தான் அனுபவித்தலும் தகுதியுடையார்க் கீதலும் இல்லாதவன் அதற்கொரு நோயாவன் என்பது.

6. He who enjoys not his riches nor relieves the wants of the worthy is a disease to his wealth.

---

* தானமாவது தருமவழியால் கிடைத்த பொருள்களைத் தக்க வர்க்கு மகிழ்ச்சியுடன் கொடுத்தலாம்.

† கோடற்கேற்புடைமை - கொள்ளுவதற்குத் தகுதியுடைமை.

‡ ஏதம் (துன்பம்) என்னுங் காரியப்பெயர் அதனைத்தருவதற்குக் கருவியாகிய நோயை யுணர்த்துதலால், காரியவாகு பெயராம்.

¶ அன்றாக்கினமையின் - அத்தொழிற்குரிய தல்லதாகச் செய் தமையால்.

(†) நோய் என்றும் பாடமுண்டு.

$ (தானனுபவியாதவனாகி அதன்மேலும் தக்கார்க்கு அவர் வேண்டிய தொன்றனை) ஈதலியல்பிலாதான் - கொடுத்தற்றன்மை யில்லாதவனது. பெருஞ்செல்வம் - பெருஞ்செல்வமானது, ஏதம் - (அவனுக்கு ஈட்டல் காத்தல் முதலியவற்றால்) துன்பமேயாம் என்று இக்குறளிற்குப் பொருள் கூறுவாருமுண்டு.

+ ஈட்டல் - சம்பாதித்தல். "ஈட்டலுந் துன்பமற் றீட்டிய வொண்பொருளைக், காத்தலு மாங்கே கடுந்துன்பங் காத்தல், குறைபடிற்றுன்பங் கெடிற்றுன்பந் துன்பக், குறைபதி மற்றைப் பொருள்" என்று நாலடியார் கூறுவதிங் கறியத்தக்கதாம்.

|| அவ்விருமையும் - (நன்றியில் செல்வம்) சம்பாதித்தவனுக்குப் பயன்படலில்லாமையும், பிறர்க்குப் பயன்பட லில்லாமையும்.

எ. அற்ருர்க்கொன் ருற்ருதான் செல்வ மிகநலம்
பெற்ரு டமியண்மூத் தற்று.

பரி:—(இ-ள்.) ஒரு பொருளு மிலராயிஞர்க்கு அவர் வேண்டிய தொன்றனைக் கொடாதானது செல்வங் கொன்னே கழிதல் †பெண்டிரின் மிக்க நலத்தினைப் பெற்ருளொருத்தி கொடுப்பாரின்மையிற் கொழுந னின்றித் § தமியளாய் மூத்த தன்மைத்து, (எ-று).

நலம் - வடிவினன்மையும் குணத்தினன்மையும் ()இரண்டு மொருங்கு பெறுத லரிதாகலின், 'பெற்ருள்' என்ருர். கொடுப் பாருங்கொழுநனுமே யன்றித் தானும் பயனிழந்து கழிந்த ‡குமரியோ *டுவமை கூறினமையின், £தானு மேற்பானுமே யன்றிச் செல் வமும் பயனிழந்து கழியு மென்பதாயிற்று.

தெளி:—(இ-ள்) அற்ருர்க்கு - (ஒரு பொருளும்) இலராயி ஞர்க்கு, ஒன்று - (அவர்வேண்டியது) ஒரு பொருளினை, ஆற்ருதான் - கொடாதவனது, செல்வம் - செல்வமானது, (வீணுகக் கழிதல்), மிகநலம் - (பெண்டிரின்) மிக்க நலத்தினை, பெற்ருள் - பெற்ற வொருத்தி, (கொடுப்பா ரில்லாமையினல்), தமியள் - (கணவனில் லாமல்) தமியளாய், மூத்தற்று - மூத்த தன்மைத்து, (எ-று).

நலம்—வடிவினன்மையும் குணத்தி னன்மையும். இரண்டும் ஒருசேரப் பெறுதல் அரிதாகலால் 'பெற்ருள்' என்ருர். கொடுப் பாரும் கணவனுமே யல்லாமல் தானும் பயனிழந்து கழிந்த குமரி யோடு (அற்ருர்க்கொன்ருற்ருதானது செல்வத்தை) உவமை கூறின மையால் தானும் ஏற்பானுமே யல்லாமல் செல்வமும் பயனிழந்து கழியுமென்பதாயிற்று.

(க-து.) வறியார்க்கு அவர் வேண்டியதொரு பொருளைக் கொடாதவனது செல்வம் பயனின்றிக் கெடும் என்பது.

7. The wealth of him who bestows naught on needy men is like a woman of beauty growing aged without a husband.

———

அ ¶ நச்சப் படாதவன் செல்வ நடுவூரு
ணச்சு மரம்பழுத் தற்று.

---

† பெண்டிரின் - பெண்களுள்ளே. § தமியளாய் - தனித்தவளாய்.

() இரண்டும் - வடிவத்தின் (உருவத்தின்) அழகும் குணத்தி னழகும் (நற்குணமும்). ‡ (திக்கற்ற) குமரி தன்னைக்கொடுப்பாரும் கொள்வானுமில்லாது வீணேயொழிவது போல உலோபியின் செல் வமும் தன்னைக் கொடுப்பாரும் கொள்வாருமில்லாது வீணேயொழியு மென்பதாம். * உவமை - ஒப்பு. £தானும் - (பொருளைத் தரித் திரர்க்குக் கொடாதவனுகிய) தானும்.

¶ "அருகல தாகிப் பலபழுத்தக் கண்ணும், பொரிதாள் விளவினை வாவல் குறுகா, பெரிதணிய ராயினும் பீடிலார் செல்வம், கருதுங் கடப்பாட்ட தன்று" என்று நாலடியார் கூறுவது இங்குணர்தற் பாலதாம்.

பரி:—(இ-ள்.) வறியார்க்கணியனு யிருந்தும் ஒன்றுங் கொடாமையின் †அவரா னச்சபபடாதவன் செல்வமெய்துதல் ஊரிடை நிற்பதோர் நச்சுமரம் பழுத்தாற்போலும், (எ-று).

*நடுவூரென்பது பின்முன்னுகத்தொக்க வாறும் வேற்றுமைத் தொகை. அண்மை யுடைமைகளாற் பயனில்லை யென்பதாம்.

தெளி:—(இ-ள்.) (வறியார்க்குச் சமீபத்திலிருப்பவனு யிருந்தும் ஒன்றுங் கொடாமையால்) நச்சப்படாதவன் - (அவரால்) விரும்பப் படாதவன், செல்வம் - செல்வத்தை, (பெறுதல்), நடுவூருள் - ஊர் நடுவில், (நிற்பதோர்), நச்சுமரம் - எட்டிமரம், பழுத்தற்று - பழுத் தாற்போலும், (எ-று).

ஊர்நடு என்பது நடுவூர் என்றுயிற்று. இவ்வாறு வருதல் இலக் கணப் போலியாம். நச்சுமரம் ஊர் நடுவேயிருப்பதாலும் பழுத் திருப்பதாலும் பிறர்க்குப் பயனிலலாமைபோல, உலோபி சமீபத் திருத்தலாலும் பொருளுடைமையாலும் வறியவர்க்குப் பயனில்லை யென்பதாம்.

(க-து.) வறியவரால் விரும்பப்படாதவன் செல்வமடைதல் நடுவூருள் எட்டிமரம் பழுத்தாற் போலுமாம் என்பது.

8. The wealth of him who is disliked by all is like the fruit-bearing of the etty tree in the midst of a town.

———

கூ. § அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய
வொண்பொருள் கொள்வார் பிறர்.

பரி:—(இ-ள்.) ஒருவன் கொடாமைப் பொருட்டுச் சுற்றத்தார் நட்டார்கண் அன்பு செய்தலை யொழிந்து வேண்டுவன நுகராது தன்னைச் செறுத்து வறியார்க்கு ஈதல் முதலிய வறத்தை நினைப்பதுஞ் செய்யாது ஈட்டிய வொள்ளிய பொருளைக் கொண்டுபோய்ப் ()பயன்பெறுவார் பிறர், (எ-று).

பயனுய அறனும் இன்பமுஞ் செய்துகொள்ளாதானுக்குப் பொருளாலுள்ளது ஈட்டற்றுன்பமே யென்பது தோன்ற 'ஈட்டிய' என்றும், அவன் வழியினுள்ளார்க்கும் உதவாதென்பது தோன்றப் 'பிறர்' என்றுங் கூறினுர்.

---

† அவரால் - வறியவரால்.

* ஊர்நடு என்னும் ஆறும் வேற்றுமைத் தொகை நிலைத்தொடர் நடுவூர் எனப் பின்முன்னுகமாறி நின்றது. அஃது ஊரினது நடு என விரியும்.

§ "பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு, பிறர்க் குதவி யாக்குபவர் பேறும்" என்று நன்னெறி கூறுவ திங்குணர்தற் பாலதாம்.

() பயன் கொள்வார் என்றும் பாடமுண்டு.

தெளி:—(இ-ள்.) (ஒருவன்) அன்பொரீஇ - (கொடாதிருத்தற் பொருட்டுச் சுற்றத்தாரிடத்தும் நட்பினரிடத்தும்) அன்பு செய்தலை ஒழிந்து, தற்செற்று - (வேண்டுவனவற்றை யனுபவியாமல்) தன்னை வருத்தி, அறம் - (வறியவர்க்குக் கொடுத்தல் முதலிய) அறத்தை, நோக்காது - நினைப்பதுஞ் செய்யாமல், ஈட்டிய - சம்பாதித்த, ஒண் பொருள்-ஒள்ளிய பொருளை, கொள்வார்-(கொண்டுபோய்ப் பயன்) பெறுவார், பிறர் - அன்னியராவர், (எ-று).

(பொருளின்) பயனாகிய அறமும் இன்பமும் செய்துகொள்ளாத வனுக்குப் பொருளால் உள்ளது சம்பாதித்தற் றுன்பமே யென்பது தோன்ற 'ஈட்டிய' என்றும், அவன் சந்ததியி லுள்ளவர்க்கும் அப் பொருள் உதவாதென்பது தோன்றப் 'பிறர்' என்றும் சொல்லினர்.

(கரு து.) உறவினர் முதலாயினோர்க்குங் கொடாது தானும் அனுபவியாது சம்பாதித்துச் சேர்த்து வைத்தவனது பொருளைப் பிறர்கொண்டுபோய் அனுபவிப்பர் என்பது.

9. Strangers will take (and enjoy) the wealth (of those who) hoarded (it) by abandoning love, self-affliction and forsaking virtuous ways.

———

கo. சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
* வறங்கூர்ந் தனைய துடைத்து.

பரி:—(இ-ள்.) புகழுடைத்தாய செல்வத்தினை யுடையவரது நிற்குங் காலஞ் சிறியதாய வறுமை உலகத்தை யெல்லாம் நிலை நிறுத்து மேகம் வறுமை மிக்காற்போல்வதோ ரியல்பினை யுடைத்து, (எ-று).

†துனி-வெறுப்பு; அதனைச் செய்தலாற் றுனியெனப்பட்டது. யாவர்க்கும் பயன்பட்டார் ‡அதனான் வறியராய வழியும் அவ்வறுமை கடிதினீங்குதலிற் பின்புஞ் செல்வராய்ப் பயன் படுவரென்பது §உவமையாற் பெறப்பட்டது; படவே, நன்றி-யில்லாத செல்வம் எஞ்ஞான்றும் பயன்படாதென்பதாயிற்று.

---

* வறங்கூர்தல் - வறுமைமிகுதல்.

† துனியை (வெறுப்பை)ச் செய்யும் வறுமையைத் துனியென் றமையின், அது காரியவாகு பெயராம். வறுமை - காரணம்; துனி-காரியம்.

‡ அதனான் - யாவர்க்கும் பயன்படுதலால்.

§ உவமையால்-மாரிவறங்கூர்ந்தனையது என்னுமுவமானத்தால், மேகம் மழை பொழிதலால் நீரில்லாது வறுமையடைந்த விடத்தும் அந்நீரில்லா வறுமை விரைவில் நீங்கப்பெற்றுப் பின்பும் நீருடைய தாய் மழை பொழிவதுபோலச் சீருடைச் செல்வர் யாவர்க்கும் பயன் படுதலால் தரித்திரராய விடத்தும் அத்தரித்திரம் விரைவில் நீங்கப் பெற்றுப் பின்பும் செல்வமுடையவராய்ப் பயன் படுவரென்பதாம்,

இதற்குச் சீருடைச் செல்வர் இரவலரோடு வெறுக்கும் நிலையில் வெறுப்பு மாரி வறங்கூர்ந்தனைய தன்மையை யுடைத்தென அதிகாரத்தோடு பொருந்தாமைமேலும் ஓர்பொருட்டொடர்பு படாமலுரைப்பாருமுளர். இவை நான்கு பாட்டாலும் அச் செல்வத்தது குற்றங் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) சீருடை - புகழுடையதாகிய, செல்வர் - செல்வத்தினையுடையவரது, சிறு துனி-(நிற்குங்காலம்) சிறியதாய வறுமை, மாரி- (உலகத்தை யெல்லாம் நிலைநிறுத்தும்) மேகம், வறங்கூர்ந்தனையது-வறுமை மிக்காற் போல்வதோ ரியல்பினை, உடைத்து-உடையதாம், (எ-று).

துனி - வெறுப்பு; அவ்வெறுப்பைச் செய்தலால் வறுமை துனி எனப்பட்டது. யாவர்க்கும் பயன்பட்டவர் அதனால் வறியவராகிய விடத்தும் அவ்வறுமை விரைவில் நீங்குதலால் பின்புஞ் செல்வராய்ப் பயன்படுவ ரென்பது உவமானத்தாற் பெறப்பட்டது; படவே, நன்றியில்லாத செல்வம் எந்நாளும் பயன்படா தென்பதாயிற்று. இவை நான்கு பாட்டாலும் அந்நன்றியில் செல்வத்தினது குற்றம் சொல்லப்பட்டது.

(கூ-து) ஈகையாளர் ஈகையால் வறுமை யடைந்த விடத்தும், விரைவில் அது நீங்கப்பெற்று யாவர்க்கும் பயன்படுத லுடையவ ராவர் என்பது.

10. The short-lived poverty of those who are noble and wealthy is like the rain-cloud becoming dry for a while.

---

## ஏழாவது அதிகாரம்

### நாணுடைமை—Modesty

**பரி.—அஃதாவது மேற்சொல்லிய †சால்பு ‡பண்பு ¶முதலிய குணங்களா னுயர்ந்தோர் தமக்கொவ்வாத கருமங்களில் நாணுதலுடை**

---

* இக்குறளுக்குச் சீருடைச் செல்வர் - சீரினை (புகழினை) யுடையதாகிய செல்வத்தை யுடையவர், சிறுதுனி-(யாசகரோடு வெறுக்கும்) நிலையில்லாத வெறுப்பு, மாரிவறங் கூர்ந்தனையது - மேகம் வறுமை மிகுந்த தொத்த தன்மையை, உடைத்து - உடையதாம் என்று நன்றியில் செல்வம் என்னு மிவ்வதிகாரத்தோடு பொருந்தாமை மேலும் ஓர் பொருட் சம்பந்தம் படாமற் பொருள் கூறுவாரு முண்டு. சீருடைச் செல்வர் இரவலரோடு வெறுத்தல் யாண்டு மின்மையின், அஃதுரையாகாதாயிற் றென்க.

† சால்பு - பல குணங்களாலும் நிறைதல்.

‡ பண்பு - எல்லாரியல்புகளு மறிந்தொத்தொழுகுதல்.

¶ முதலிய என்றமையின், நன்றியில்செல்வ மின்மை முதலியனவுங் கொள்க.

யராந்தன்மை. § அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

தெளி:—அஃதாவது முற்கூறிய சால்பு பண்பு முதலிய குணங்களால் உயர்ந்தோர் தமக்குப் பொருந்தாத கருமங்களில் நாணுதலுடையராந் தன்மை. அதிகார முறைமையும் இதனாலே விளங்கும்.

———

## க. † கருமத்தா னாணுத னாணுத் திருநுத னல்லவர் நாணுப் பிற

பரி:—(இ-ள்.) நன்மக்கணாணுவது இழிந்த கருமங் காரணமாக நாணுதல்; ‡அஃதன்றி மன மொழி மெய்கள் தொடுக்கத்தான் வருவனவோ வெனின், அவை ¶அவரளவல்ல; அழகிய நுதலினையுடைய குலமகளிர் $நாண்கள், (எ-று).

பிற ०திருநுதனல்லவர் நாணென்றதனான் ()ஏனையது நன்மக்கணாணென்பதும், நாணுதலென்றதனாற் கருமத்ததிழிவும் பெற்றாம். திருநுதனல்லவ ரென்பது ×புகழ்ச்சிக் குறிப்பு. ||ஏதுப் பன்மை பற்றிப் 'பிற' என்றார். :இனி அற்றமறைத்தன் முதலியன பொது மகளிர் நாணோ டொக்குமென் றுரைப்பாருமுளர். அவர்க்கு நாண்

---

§ சான்றாண்மை, பண்புடைமை, நன்றியில் செல்வங்களின் பின் நாணுடைமையை வைத்த அதிகாரக்கிரமமும்.

† "இழிந்த தொழிலி னாணுவதே யெய்தற் கரிய நாணென்பர், ஒழிந்த மனவாக் குடலொடுக்க மொளிவா ணுதலார் நாணேயாம்" என்பது விநாயக புராணம்.

‡ அஃதன்றி - இழிந்த கருமங் காரணமாக நாணுதலல்லாமல்.

¶ அவரளவல்ல - நன்மக்க ளளவி லிருப்பன வல்ல.

$ "நாணென்பது பெண்டிர்க்கு இயல்பாக வுளதொரு தன்மை" என்றனர் நக்கீரனார்; "நாணுவது செயத் தகாதனவற்றின்கண் உள்ள மொடுங்குதல்" என்றனர் நச்சினார்க் கினியர்.

० குலமகளிர் என்றும் பாடமுண்டு.

() ஏனையது - கருமத்தால் நாணுதல்.

× புகழ்ச்சிக் குறிப்பு - புகழ்ச்சிப்பொருளில் வந்த குறிப்புச்சொல்.

|| மனவொடுக்கத்தான் மொழியொடுக்கத்தான் மெய்யொடுக்கத்தான் என ஏதுப்பன்மை பற்றி (சாதனம்பலவாயிருத்தலால்) 'பிற' என்று பன்மையாற் கூறப்பட்டது. பிற வென்பது அஃறிணைப் பலவின்பால் படர்க்கைப பெயர்ச்சொல். பிற - கருமத்தால் நாணுதலொழிந்த நாண்கள்.

: இனித் 'திருநுத, னல்லவர் நாணுப் பிற' என்பதற்குப் பிற - அற்ற (அவமானத்தை) மறைத்தல் முதலியன, திருநுதல் நல்லவர் நாணு - பொதுமகளிர் நாணோடொக்கும், என்று பொருள் கூறுவாருமுண்டு. அவர்க்கு (பொதுமகளிர்க்கு) நாண் கேடுண்டாக்கும் என்று

கேடு பயக்குமென விலக்கப்பட்டமையானும், அவர் பெயராற் கூறப்படாமையானும், அஃதுரையன்மையறிக. இதனுன் நாணின திலக்கணங் கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) நாணு-(நன்மக்களது) நாணுவது, கருமத்தால்-(இழிந்த) கருமங் காரணமாக, நாணுதலாம், பிற-அஃதல்லாமல் மன மொழி மெய்களது ஒடுக்கத்தால் வரும் நாணுக்களோ என்ருல் அவை, (அவரளவல்ல), திருநுதல்-அழகிய நெற்றியை யுடைய, நல்லவர்-குலமகளிரது, நாணு-நாணங்கள், (எ-று).

பிற திருநுதனல்லவரது நாணென்றதனுல் மற்றது நன்மக்களது நாணென்பதும், நாணுத லென்றதனுல் கருமத்தினதிழிவும் பெற்ரும். திருநுத னல்லவரென்பது புகழ்ச்சிக் குறிப்புச்சொல். காரணத்தினது பன்மை பற்றிப் 'பிற' என்ருர். இதனுல் நாணினது இலக்கணம் சொல்லப்பட்டது.

(க-து) நன்மக்களுக்கு நாணுவது இழிந்தகருமங் காரணமாக நாணுதலாம்; மன மொழி மெய்களது அடக்கத்தால் வரும் நாணன்ரும் என்பது.

1. True modesty is the fear of evil deeds; all other modesty is simply the bashfulness of the bright browed virtuous maids.

———

உ. ஊணுடை யெச்ச முயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு.

பரி :—(இ-ள்.) ஊணும் உடையும் அவை யொழிந்தனவும் மக்களுயிர்க்கெல்லாம் பொது ; நன்மக்கட்குச் சிறப்பாவது நாணுடைமையே ; †அவையல்ல, (எ-று).

ஒழிந்தன-உறக்கமும் அச்சமுங் காமமும். *சிறப்பு-அவ்வுயிர்

---

விலக்கப்பட்டிருத்தலாலும், (திருநுதனல்லவர் என்பதன்றி) அவர் (பொதுமகளிர்க் குரிய) பெயரால் கூறப்படாமையாலும், அவ்வுரை யுரையன்றென்பதாம். பொது மகளிர் நாணமுடையவரா யிருந்தால் அஃதவர்க்குக் கேடுண்டாக்கு மென்பது "பெற்றமையு மென்னுப் பெரியோரும் பெற்றபொருள், மற்றமையுமென்றே மகிழ்வேந்து-முற்றியநன், மானமில்லா வில்லாளு மானமுறும் வேசியரும், ஈன முறுவா ரிவர்" என்று நீதிவெண்பா கூறுவதனுல் நன்கு விளங்கும்.

† அவை - ஊண் உடை முதலியன.

* ஊணும், உறக்கமும், அச்சமும், காமமும் கரண (மன) வியாபாரத்தைச் செவ்வையாகவுடைய பிராணிகளுக்கெல்லாம் பொதுவாயிருப்பனவாம்; அவற்றுள், மக்களுக்கோ உடை சிறப்பா யிருப்பதாம் ; அவருள் நன்மக்களுக்கோ நாணுடைமை சிறப்பா யிருப்பதாம். மக்களினும் நன்மக்கள் வேறுபட்டவரென்றறிதற்குச்

களின் வேறுபாடு. *அச்சமென்று பாடமோதுவாரு முளர்.

தெளி:—(இ-ள்.) ஊண் - உணவும், உடை - ஆடையும், எச்சம் - (அவை) ஒழிந்தனவும், உயிர்க்கெல்லாம் - (மக்கள்) உயிர்க்கெல்லாம், வேறல்ல-வேறுபட்டனவன்றும் (பொதுவாம்), மாந்தர் சிறப்பு-நன் மக்களுக்குச் சிறப்பாவது, நாணுடைமை - நாணமுடைமையே, (அவையல்ல), (எ-று).

ஒழிந்தன - உறக்கமும் அச்சமும் காமமும். சிறப்பு - அவ்வுயிர் களின் வேறுபாடு.

(க-து.) மக்களுக்கு ஊணும், உடையும், உறக்கமும், அச்சமும், காமமும் பொதுவாயிருப்பனவாம்; நன்மக்களுக்கு நாண் சிறப்பாயி ருப்பதாம் என்பது.

2. Food, clothes and other things are alike to all men; but modesty is peculiar to the good.

———

ங. ஊனைக் குறித்த வுயிரெல்லா நாணென்னு
நன்மை குறித்தது சால்பு.

பரி:—(இ-ள்.) எல்லாவுயிர்களும் உடம்பினைத் தமக்கு நிலைக்கள னாகக் கொண்டு அதனை விடா; அதுபோலச் சால்பு நாணென்னு நன்மைக் குணத்தைத் தனக்கு நிலைக்களனாகக் கொண்டு அதனை விடாது, (எ-று).

உடம்பென்பது சாதி யொருமை †நன்மை - ஆகுபெயர். உயிர் உடம்போடு கூடியல்லது பயனெய்தாதவாறு போலச் சால்பு நாணோடு கூடியல்லது பயனெய்தா தென்பதாம். ‡ஊணைக் குறித்த வென்று பாட மோதுவாரு முளர்.

தெளி:—(இ-ள்.) உயிரெல்லாம் - எல்லா வுயிர்களும், ஊனை - உடம்பினை, குறித்த தமக்கு - இருப்பிடமாகக் கொண்டு அதனை

---

சிறந்தகுறி அவரிடத்து நிகழும் (கருமத்தால் நாணுதலாகிய) நாணும்.

கரணவியாபாரங் குறைந்துள்ள பிராணிகளிடத்து, ஊணும் உறக்கமும் தவருதிருப்பனவாம்; அச்சமும் காமமோ அவ்வப் பிராணிகளின் தன்மைக்கேற்பக் குறைந்தும் மிக்கு மிருப்பனவாம்.

* எச்சம் என்பதனை அச்சமென்று பாடஞ் சொல்லுவாரு முண்டு. அச்சம் - பயம். அது விலங்கு முதலியவற்றுனும் கள்வர் முதலாயினோ ராலும் வருவதாம்.

† நன்மையென்பது நன்மைக்கேதுவாய குணத்தை யுணர்த்து தலின், காரியவாகு பெயராம்.

‡ ஊனைக் குறித்த என்பதனை ஊணைக் குறித்த என்று பாடங் கூறுவாருமுண்டு. ஊண் - உணவு.

விடாவாம், (அதுபோல), சால்பு - (நற்குணங்களின்) நிறைவானது, நாணென்னு நன்மை-நாணென்னும் நன்மைக் குணத்தை, குறித்தது-தனக்கு இருப்பிடமாகக்கொண்டு அதனை விடாது, (எ-று).

உடம்பென்பது ஈறுதோன்ருத சாதியொருமைப்பெயர். நன்மை-காரியவாகுபெயர். உயிர் உடம்போடு கூடியல்லது பயனடையாத விதம்போன்று சால்பு நாணோடு கூடியல்லது பயனடையாதென்பதாம்.

(க-து ) சால்பு நிலைக்குமிடம் நாணென்னும் நன்மைக்குணமாம் என்பது.

3. As the body is the abode of the jivas, so perfect virtue has modesty as its abode.

---

ச. **அணியன்றே நாணுடைமை சான்ரேர்க் கஃதின்றேற்**
**பிணியன்றே பீடு நடை.**

பரி:—(இ-ள்.) **சான்றோர்க்கு நாணுடைமை யாபரணமாம்; அவ்வாபரண மில்லையாயின், அவர் *பெருமிதத்தையுடைய நடை கண்டார்க்குப் பிணியாம்,** (எ-று).

அழகு செய்தலின் 'அணி' என்றும், பொறுத்தற் கருமையிற் 'பிணி' என்றுங் கூறினர். †ஓகாரவிடைச் சொற்கள் எதிர்மறைக் கண் வந்தன. இவை மூன்றுபாட்டானும் அதன் சிறப்புக் கூறப்பட்டது

தெளி:—(இ-ள்.) சான்ரேர்க்கு - நற்குணங்களால் நிறைந்தவர்க்கு, நாணுடைமை-நாணமுடைமை, அணியன்ரே-ஆபரணமாம், அஃதின்றேல-அவ்வாபரணம் இல்லையாயின், பீடுநடை-(அவர்) பெருமிதத்தையுடைய நடை, பிணியன்ரே - (கண்டவர்க்கு) நோயாம், (எ-று).

நாணுடைமை அழகு செய்தலால் அதனை 'அணி' என்றும், நாணில்லாதவர் பீடுநடை பொறுத்தற் கருமையால் அதனைப் 'பிணி' என்றும், சொல்லினர். ஓகாரவிடைச் சொற்கள் எதிர்மறைப் பொருளில் வந்தன. இவை மூன்று பாட்டாலும் அந்நாணினது சிறப்புச் சொல்லப்பட்டது.

(க-து.) நாணுடைமை என்னும் ஆபரணமில்லார்க்குப் பெருமித நடையில்லை என்பது.

---

* பெருமிதம் - மேம்பாடு; அஃதாவது கம்பீரம்.

† அன்று அன்று என்னும் எதிர்மறைக் குறிப்புவினைமுற்றுக்களிரண்டும் எதிர்மறைப்பொருளில் வந்த ஓகாரவிடைச் சொற்களுடன் புணர்ந்து ஆம், ஆம் என்னும் பொருளை யுணர்த்தி நின்றன. இரண்டெதிர்மறைச் சொற்கள் தம்முட் புணருமிடத்து ஒருடம்பாட்டுப் பொருளை யுணர்த்து மென்பது நியமமாம்.

4. Is not modesty an ornament to the noble? Without it, their haughtiness would be painful to others.

---

## ரு. பிறர்பழியுந் தம்பழியு நாணுவார் நாணுக் குறைபதி யென்னு முலகு.

பரி:—(இ-ள்) பிறர்க்கு வரும் பழியையுந் தமக்கு வரும் பழியையும் ஒப்பமதித்து நாணுவாரை உலகத்தார் நாணுக் குறைவிடமென்று சொல்லுவர், (எ-று).

*ஒப்பமதித்தல் - அதுவுந் தமக்கு வந்ததாகவே கருதுதல். அக் கருத்துடையார் பெரியராகலின், அவரை உயர்ந்தோர் யாவரும் புகழ்வரென்பதாம். இதனால் அதனையுடையவரது சிறப்புக் கூறப் பட்டது.*

தெளி:—(இ-ள்.) *பிறர் பழியும்*-பிறர்க்கு வரும் பழியையும், *தம் பழியும்*-தமக்குவரும் பழியையும், *நாணுவார்*-(சமமாக மதித்து) நாணுவாரை, *உலகு* உலகத்தார், *நாணுகு*-நாணத்திற்கு, *உறைபதி யென்னும்*-இருப்பிடமென்று சொல்லுவர், (எ-று).

*சமமாகமதித்தல்-அதனையும் (பிறர்க்கு வரும் பழியையும்) தமக்கு வந்ததாகவே கருதுதல். அக்கருத்துடையவர் பெரியராகலால், அவரை உயர்ந்தோர் யாவரும் புகழ்வரென்பதாம். இதனால் அந்நாணினை யுடையவரது சிறப்புச் சொல்லப்பட்டது.*

(கு-து.) *பிறர்க்குவரும் பழியையுந் தமக்குவரும் பழியாகக் கருதி நாணுவாரே நாணத்திற் கிருப்பிடமாவர் என்பது.*

5. The world regards as the abode of modesty him who feels ashamed for others' guilt as for his own.

---

## சு. நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம் பேணலர் மேலா யவர்.

பரி:— (இ-ள்.) உயர்ந்தவர், தமக்கேமமாக நாணினைக் கொள் வதன்றி, அகன்றஞாலத்தைக் கொள்ள விரும்பார், (எ-று).

*பழிபாவங்கள் புகுதாமற் காத்தலின் 'வேலி' என்றார். ‡நாணும் ஞாலமுந் தம்முண்மாறுயவழி அந்நாணினைக் கொள்வதல்லது அவை புகுது நெறியாய ஞாலத்தினைக்கொள்ள விரும்பா ரென்பதாம்.*

---

*‡நாணும் ஞாலமும் தம்முண் மாறுயவழி-நாணம் ஞாலம் என்னு மிரண்டனுள் யாதாவதொன்றனைக்கொள்ள நேர்ந்தவிடத்து.*

மன்னும் ஓவும்-அசை. †நாணாகிய வேலியைப் பெற்றல்லது ஞாலம் பெற விரும்பாரென் றுரைப்பாருமுளர்.

தெளி :— (இ-ள்.) மேலாயவர்-உயர்ந்தவர், வேலி-(தமக்குக்) காப்பாக, நாண்-நாணத்தை, கொள்ளாது-கொள்வதல்லாமல், வியன்ஞாலம்-பரந்த பூமியை, பேணலர்-கொள்ளவிரும்பார், (எ-று).

பழிபாவங்கள் அடையாவாறு காத்தலால் நாணினை 'வேலி' என்றார். (உயர்ந்தவர்) நாணமும் பூமியும் தம்முள் மாறுபடுமிடத்து அந்நாணத்தைக் கொள்வதல்லது அப்பழிபாவங்கள் புகும் வழியாகிய பூமியைக் கொள்ள விரும்பாரென்பதாம். மன்னும் ஓவும்-அசை நிலைகள்.

(கு-து.) உயர்ந்தவர் நாணத்தை விடுதலால் உலகத்தைப்பெறுவதாயிருப்பினும், அது செய்யார் என்பது.

6. The great make modesty their barrier of defence and not the wideworld.

---

எ. நாணா லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டா
ணாண்டுறவார் நாணாள் பவர்.

பரி :— (இ-ள்.) நாணினது சிறப்பறிந்து அதனை விடாதொழுகுவார் ¶அந்நாணு முயிருந் தம்முண் மாறுபடுவழி நாண் சிதையாமற்பொருட்டு உயிரை நீப்பர், உயிர் சிதையாமற்பொருட்டு நாணினை நீக்கார், (எ-று).

*உயிரினும் நாண் சிறந்ததென்பதாம். இவை யிரண்டு பாட்டானும ‡அவர் செயல் கூறப்பட்டது.

தெளி .—(இ-ள்.) நாணாள்பவர் - (நாணினது சிறப்பையறிந்து) அந்நாணத்தினை விடாது ஒழுகுகின்றவர், (அந்நாணும் உயிருந் தம்முள்மாறுபடுமிடத்து), நாணால்-நாண் சிதையாமற்பொருட்டு, உயிரை—, துறப்பர்-நீக்குவர், உயிர்ப்பொருட்டு-உயிர்சிதையாமற் பொருட்டு, நாண்-நாணினை, துறவார்-நீக்கார், (எ-று)

நாண் உயிரினுஞ் சிறந்ததென்பதாம். இவை இரண்டு பாட்டாலும் அவர் செயல் சொல்லப்பட்டது. பின்னுள்ள ஆல் அசைநிலை.

---

†மேலாயவர் , நாண்வேலி-நாணாகிய வேலியை, கொள்ளாது-பெற்றாலல்லாமல், வியன்ஞாலம் பேணலர்-பெரிய உலகத்தைப் பெற விரும்பார் என்றுரை கூறுவாரு முண்டு.

¶நாணும் உயிரும் தம்முண் மாறுபடுவழி-நாண் உயிரென்னுமிரண்டனுள் யாதாவதொன்றனை நீக்க நேர்ந்தவிடத்து.

*"உயிரினுஞ் சிறந்தன்று நாணே" என்பது தொல்காப்பியம்.

‡அவர்-நாணமுடையார்.

(க-து.) நாணின் சிறப்பை யறிந்தவர் அது கெடும்படிவரின், உயிரைவிட்டேனும் அந்நாணத்தைக் காப்பர் என்பது.

7. The modest would rather sacrifice their life for the sake of modesty than abandon it to preserve their life.

---

அ. பிறர்நாணத் தக்கது தானாணா னாயி
னறநாணத் தக்க துடைத்து.

பரி:—(இ-ள்.) கேட்டாருங்கண்டாரு நாணத்தக்க பழியை ஒருவன் தானாணாது செய்யுமாயின், அந்நாணாமை அவனை அறம் விட்டு நீங்கத்தக்க குற்றத்தினை யுடைத்து, (எ-று).

*தானெனச் செய்வானைப் பிரிக்கின்றாராகலின் ' பிறர் ' என்றார். நாணோடியைபில்லாதானை அறஞ்சாரா தென்பதாம்.*

தெளி:—(இ-ள்.) *பிறர் - கேட்டவரும் கண்டவரும், நாணத் தக்கது - நாணத்தக்கபழியை, தானாணானாயின் - (ஒருவன்) தான் நாணாது செய்வானாயின், (அந்நாணாமை), அறம்-அறமானது, நாணத் தக்கது - (அவனை) விட்டு நீங்கத்தக்க குற்றத்தினை, உடைத்து - உடையதாம், (எ-று)*

*தான் என்று பழியைச் செய்வானைப்பிரிக்கின்றாராகலால் (கேட்டவரையும் கண்டவரையும்) ' பிறர் ' என்றார். நாணோடு சம்பந்தமில்லாதவனை அறம் சாராதென்பதாம்.*

(க-து.) *பிறர் நாணத்தக்க பழியைச் செய்கின்றவனிடத்து அறம் சாராது என்பதாம்.*

8. Virtue will forsake him who shamelessly does what others are ashamed of doing.

---

கூ. குலஞ்சுடுங் கொள்கை பிழைப்பி னலஞ்சுடு
நாணின்மை நின்றக் கடை.

பரி:—(இ-ள்.) ஒருவனுக் கொழுக்கம் பிழைக்குமாயின், அப் பிழைப்பு அவன் குடிப்பிறப் பொன்றனையுங் கெடுக்கும்; ஒருவன்மாட்டு நாணின்மை நின்றவழி அந்நிலை அவனலம் யாவற்றையுங் கெடுக்கும், (எ-று).

*நிற்றல் - ஒருபொழுதும் நீங்காமை. நலம் சாதியொருமை யாகலின், பிறப்பு, கல்வி, குணம், செயல், இனமென் றிவற்றான் வந்தனவெல்லாங் கொள்ளப்படும். ஒழுக்க அழிவினும் நாணழிவு இறப்பத் தீதென்பதாம்.*

தெளி:—(இ-ள்.) *கொள்கை - ஒழுக்கம், பிழைப்பின் - (ஒருவனுக்குத்) தவறுமாயின், (அத்தவறு), குலம் - (அவன்) குடிப்பிறப் பொன்றனையும், சுடும் - கெடுக்கும், நாணின்மை - நாணில்லாமை,*

நின்றக்கடை - (ஒருவனிடத்து) நின்றவிடத்து, (அந்நிலை), நலம் - (அவனது) நன்மை யெல்லாவற்றையும், சுடும் - கெடுக்கும், (எ-று).

நிற்றல் - (நாணின்மை) ஒருகாலத்தும் நீங்காமை. நலம் சாதி யொருமைப் பெயராகலால், பிறப்பு, கல்வி, குணம், செயல், இனம் என்ற இவற்றால் வந்த நன்மைகளெல்லாங் கொள்ளப்படும். ஒழுக்க அழிவினும் நாணழிவு மிகத் தீதென்பதாம்.

(க-து) ஒருவனிடத்து நாணில்லாமை யிருக்குமாயின், அஃது அவனது நன்மைகள் எல்லாவற்றையும் கெடுக்கும.

9. Failing of good manners consumes one's family; but want of modesty consumes every kind of goodness.

— —

கo. நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை
நாணா லுயிர்மருட்டி யற்று.

பரி:—(இ-ள்.) தம்மனத்தின்கண் நாணில்லாத மக்கள் உயிருடையார் போன்றியங்குகின்ற வியக்கம் மரத்தாற் செய்த *பாவை †இயந்திரக் கயிற்றினானாய தன்னியக்கத்தால் உயிருடைத்தாக மயக்கினாற் போலும், (எ-று).

‡கருவியே கருத்தாவாயிற்று. நாணில்லாத மக்களியக்கம் ¶நாணுடைய பாவை யியக்கம் போல்வ தல்லது உயிரியக்க மன்றென்பதாம். இவை மூன்றுபாட்டானும் நாணில்லார திழிவு கூறப்பட்டது.

* பாவை - பிரதிமை (பொம்மை). † இயந்திரக்கயிறு - சூத்திரக் கயிறு.

‡ நாணால் என்னும் துணைக்கருவியே கருத்த (செய்பவ)னாக நின்றது. சேனாவரையர் தொல்காப்பியம் மூன்றாம் வேற்றுமைச் சூத்திரத்தினுரையில் "வினைமுதலாவது (கருத்தாவாவது) கருவிமுதலாயின காரணங்களைத் தொழிற்படுத்துவது. கருவியாவது வினைமுதற்றொழிற் பயனைச் செயப்படுபொருட்கணுய்ப்பது" என்றனர். "செயப்படு பொருளைச்செய்தது போல" என்னும் தொல்காப்பிய சூத்திரத்தின் விசேடவுரையில் நச்சினார்க்கினியார் "இனி ஒன்றென முடித்தலால் இவ்வாளெறியும் எனக் கருவியைத் தானே செய்வதாகக் கூறுங் கருவிக்கருத்தாவும்......கொள்க" என்றனர். நக்கீரனார் இறையனாரகப்பொருள் "குறியெனப்படுவது" என்னுஞ் சூத்திர வுரையில் "கருத்தன், ஏதுக்கருத்தன், கருவிக்கருத்தன், கருமக் கருத்தன் என இவை. அவற்றுள், (1) கருத்தனென்பது தச்சன் எடுத்தமாடம், கொல்லன்செய்த வாள்; (2) ஏதுக்கருத்தனென்பது ஏவினானைக் கருத்தாவாகச் செய்வது. அரசர்தொட்ட குளம், அரசர் எடுத்த தேவகுலம் என இத்தொடக்கத்தன; (3) இனிக்கருவிக் கருத்தனென்பது வாள் எறியும், சுரிகை குற்றும், இம்மிடா நாநாழி யரிசிச்சோறு அடும் என இத்தொடக்கத்தன; (4) இனிக் கருமக்கருத்தனென்பது திண்ணைமெழுகிற்று, கலங்கழுவிற்று, மரங் குறைத்தது என்று சொல்வது" என்றனர். இவை யிங்குணர்தற் பாலனவாம். ¶ நாணுடைய - சூத்திரக்கயிறுடைய.

தெளி :—(இ-ள்.) அகத்து-(தம்) மனத்தில், நாண்-நாணம், இல்லார் - இல்லாதமக்கள். இயக்கம் - (உயிருடையார்போன்று இயங்குகின்ற) இயக்கமானது, மரப்பாவை-மரத்தாற் செய்த பாவை, நாணுல்-எந்திரக்கயிற்றினுல், (ஆகிய தனது இயக்கத்தால்), உயிர்-உயிருடையதாக, மருட்டியற்று-மயக்கினுற்போலும், (எ-று).

நாணுல் என்னும் கருவியே கருத்தாவாக நின்றது. நாணில்லாத மக்களியக்கம் நாணுடைய பாவையியக்கம் போல்வதல்லது உயிரியக்கமன்றென்பதாம். இவை மூன்று பாட்டாலும் நாணில்லாதவரது இழிவு சொல்லப்பட்டது. இயக்கம்-அசைதல்.

(க-து.) நாணமில்லாதார் நடைப்பிணமாவர் என்பது.

10. The actions of those who are void of modesty at heart are like those of a wooden puppet moved by a string.

---

## அ-வது அதிகாரம்

## 103 குடிசெயல்வகை

## Method of maintaining the Family

பரி: —அஃதாவது ஒருவன் முன்பிறந்த குடியை உயரச்செய்தலின் றிறம் †இது தாழ்வின்கணுணுதலுடையார்க் குளதாவதாகலின், நாணுடைமையின்பின் வைக்கப்பட்டது.

தெளி :—அஃதாவது ஒருவன் தான்பிறந்த குடியை உயரச் செய்தலின் திறம். இது தாழ்வினிடத்து நாணுதலுடையவர்க்கு உண்டாவதாகலால், நாணுடைமையின்பின் வைக்கப்பட்டது.

---

**க கருமஞ் செயவொருவன் கைதூவே னென்னும்**
**பெருமையிற் பீடுடைய தில்.**

பரி: (இ-ள்.) தன்குடி செய்தற்பொருட்டுத் தொடங்கிய ‡கரும முடியாமையின் எண்ணிய கருமஞ் செய்தற்கி யான் ¶கையொழியே, னென்னும் ஆள்வினைப் பெருமைபோல ஒருவனுக்கு மேம்பாடுடைய பெருமை பிறிதில்லை, (எ-று).

குடிசெய்தற்பொருட்டென்பது $அதிகாரத்தான் வந்தது. பல வகைத்தாய கருமச்செயலாற் செல்வமும் புகழுமெய்திக் குடியுயருமாகலின் 'பீடுடையதில்' என்முர். ||குடிசெய்தற் கருமமே நடத்த

† இது-குடிசெயல்வகை

‡ கருமம்-காரியம். ¶ கையொழியேன்-விடேன்.

$ அதிகாரத்தான்-குடிசெயல்வகை யென்னுமிவ்வதிகாரத்தால்.

|| கருமஞ்செய என்பதற்குக் குடிசெய்தற்கருமமே நடத்தலால் தன்கருமஞ் செய்ய என்றும், பிறர் கருமஞ்செய்ய என்றும், (இரு

லால், தன்கருமஞ் செய்யவென்றும் பிறர் கருமஞ் செய்யவென்று முரைப்பாரு முளர்; தன் கருமமும் அதுவேயாகலானும், பிறரேவல் செய்தல் தலைமையன்மையானும், அவையுரையன்மை யறிக.

தெளி:—(இ ள்.) (தன்குடியை யுயரச்செய்தற்பொருட்டுத் தொடங்கிய கருமமுடியாமையால்), கருமஞ்செய-(எண்ணிய) கருமத்தைச் செய்தற்கு, கைதூவேனென்னும்-(யான்) கையொழியே னென்கிற, பெருமையின்-ஆள்வினைப் பெருமைபோல, ஒருவன்-ஒருவனுக்கு, பீடுடையது - மேம்பாடுடைய பெருமை, இல் - (மற்றொன்று) இல்லை, (எ-று).

குடியை யுயரச்செய்தற்பொருட்டென்பது அதிகாரத்தால் வந்தது. பலவகைத்தாகிய கருமத்தைச் செய்தலால் செல்வமும் புகழுமடைந்து குடியுயருமாகலால் 'பீடுடையதில்' என்றார். ஆள்வினை-முயற்சி.

(கு-து.) தன்குடியை யுயரச்செய்தற்பொருட்டுத் தான் மேற் கொண்ட கருமத்தைச் செய்து முடிப்பவனுக்கு மேம்பாடுடைய பெருமையுண்டாகும் என்பது.

1. There is no higher dignity than that of one saying that I will not slack in my effort to raise my family.

---

உ. **ஆள்வினையு மான்ற வறிவு மெனவிரண்டி**
**னீள்வினையா னீளுங் குடி.**

பரி:—(இ-ள்.) முயற்சியும் நிறைந்த வறிவுமென்று சொல்லப் பட்ட இரண்டினையுமுடைய *இடையறாத கருமச்செயலால் ஒருவன் குடியுயரும், (எ-று).

நிறைதல்- †இயற்கையறிவு செயற்கையறிவோடுகூடி நிரம்புதல்

---

வகையாகப் பொருள்) கூறுவாருமுண்டு; தன்கருமமும் அதுவே (குடிசெய்தற் கருமமே) யாகலானும், (இது குடிசெய்தற் கருமமே நடத்தலால், தன்கருமஞ்செய்ய என்று கூறிய முதலுரையின் மறுப்பு. தன்கருமமும் குடிசெய்தற் கருமமாயே யிருத்தலறியாது குடிசெய்தற்கருமம் வேறு; தன்கருமம் வேறு என்று பிரித்தது வழுவா மென்பது கருத்து.) பிறரது ஏவலைச் செய்தல் தலைமையல்ல வாதலாலும், [இது பிறர் கருமஞ்செய்ய என்று கூறிய இரண்டா முரையின் மறுப்பு. சுதந்தரமாக விருத்தலைக் கருதாது பிறரது ஏவலைச்செய்திருத்தல் உத்தமமான தன்றென்பது கருத்து.] அவை யுரையாகா வென்றறிக.

* இடையறாத-நடுவே நீங்காத.

† இயற்கையறிவு-முற்பிறப்பிற் செய்த நல்வினையா லிப்பிறப்பில் கல்வி கேள்விகளி னுதவியின்றி யுண்டாய நல்லறிவு.

$ஆள்வினை - மடிபுகுதாமற்பொருட்டு; ஆன்றவறிவு - உயர்தற்கேற்ற செயல்களும் அவை முடிக்குந் திறமும் பிழையாம லெண்ணுதற் பொருட்டு. இவை யிரண்டு பாட்டானும் †அச்செயற்குக் ||காரணங் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) ஆள்வினையும் - முயற்சியும், ஆன்றவறிவும் - நிறைந்தவறிவும், என விரண்டின் - என்று சொல்லப்பட்ட இரண்டினையுமுடைய, நீள் - இடையறாத, வினையால் - கருமச்செயலால், குடி -(ஒருவனது) குடியானது, நீளும் - உயரும், (எ—று).

நிறைதல் - இயற்கையறிவு செயற்கையறிவோடுகூடி நிரம்புதல். ஆள்வினை-சோம்பல் அடையாமற்பொருட்டாம்; ஆன்றவறிவு-(குடி) உயர்தற்கு ஏற்ற செயல்களையும் அவற்றை முடிக்கும் விதத்தையும் தவறாமல் எண்ணுதற்பொருட்டாம். இவை யிரண்டுபாட்டாலும் அச்செயற்குக் காரணம் சொல்லப்பட்டது.

(க-து.) ஒருவனது குடியானது அவனது முயற்சியும் நிறைந்த அறிவுமென்று சொல்லப்பட்ட இரண்டினையுமுடைய இடையறாத தொழிலால் உயரும் என்பது.

2. The status of one's family is raised by untiring perseverance in both effort and wise contrivances.

---

ங. குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வ
மடிதற்றுத் தான்முந் துறும்.

பரி:— (இ-ள்.) என் குடியினை யுயரச்செய்யக்கடவே னென்று

---

செயற்கையறிவு - கல்விகேள்விகளினாலாய நல்லறிவு.

இப்பிறப்பில் காரணமின்றி யுண்டாய நல்லறிவு இயற்கை யறிவாம்; காரணத்தாலுண்டாய நல்லறிவு செயற்கை யறிவா மென்று கொள்க.

$ ஒருவன் தான் பிறந்தகுடியை யுயரச்செய்தற் பொருட்டு அதற்கு வேண்டிய செயல்களைச் செய்யும்போது, அவனுக்கு அவற்றைச் செய்தற்கண் சோம்பலுண்டாகாமைப் பொருட்டு ஆள்வினை (முயற்சி)யும், அச்செயல்களையும் அவற்றை முடிக்கும் வகையையும் தவறாம லாலோசித்தற்பொருட்டு ஆன்றவறிவும் வேண்டுவன வாயின ஆள்வினை - மெய்ம்முயற்சி; ஆன்றவறிவு - செயற்கை யறிவோடு கூடி நிரம்பிய இயற்கையறிவு.

† அச்செயற்கு - தான் பிறந்த குடியை யுயரச்செய்தற்கு

|| காரணம்—கைதூவே னென்னும் பெருமை, ஆள்வினை, ஆன்ற அறிவு என்பனவாம்.

**கொண்டு அதற்கேற்ற கருமங்களின் முயலும் ஒருவனுக்குத் * தெய்வம் ஆடையைத் தற்றுக்கொண்டு தான் முந்துற்று நிற்கும், (எ-று).**

*முயற்சியை †அதன் காரணத்தாற்கூறினர். தற்றுதல் — இறுக வுடுத்தல். ‡ முன்னடப்பார் செயல் நியதிமே லேற்றப்பட்டது.*

*தெளி:—(இ-ள்) குடிசெய்வலென்னும்—(என்) குடியினை உயரச் செய்யக்கடவே னென்று கொண்டு (அதற்கு ஏற்றகருமங்களில்) முயலும், ஒருவற்கு - ஒருவனுக்கு, தெய்வம் - தெய்வமானது, மடி - ஆடையை, தற்று - தற்றுக்கொண்டு, தான் முந்துறும் - தான் முன்னே வந்து நிற்கும், (எ-று).*

*முயற்சியை அதனது காரணத்தால் 'தெய்வம்' என்று சொல் லினர். தற்றுதல் — இறுக வுடுத்தல்; அஃதாவது ஆடையை நன்றாக அரையில் இழுத்துக்கட்டுதலாம். முன்னடப்பாரது செயல் ஊழ்மேல் ஏற்றப்பட்டது.*

*(க-து.) தன் குடியை யுயரச்செய்தற் பொருட்டு அதற்கேற்ற கருமங்களில் முயலுபவனுக்கு அவனது நல்வினையே முன்னின்று அக்கருமங்களை முடிவுபெறச்செய்யும் என்பது.*

3. The Deity will gird its loins and come forward to help him who resolves himself to make his family renowned.

---

ச. **சூழாமற் றானே முடிவெய்துந் தங்குடியைத்**
**தாழா துஞற்று பவர்க்கு.**

**பரி:— (இ-ள்.) தங்குடிக்காம் வினையை ¶விரைந்து முயல்வார்க்கு அவ்வினை முடிக்குந்திறம் அவர் சூழவேண்டாமற் றானே முடிவெய்தும்.**

*குடி—ஆகுபெயர். § தெய்வ முந்துறுதலால் பயன்கூறியவாறு.*

---

* தெய்வம் — ஊழ். † அதன்காரணம் — முயற்சியின் காரணம் (தெய்வம்). முயற்சியென்று கூறுது தெய்வம் என்று கூறினமையின், 'முயற்சியை அதன் காரணத்தாற் கூறினர்' என்று கூறப்பட்டது. தெய்வத்தின் காரியமாய முயற்சியைத் தெய்வமென்று கூறி னமையின், இது கருவியாகு பெயராம்.

‡ எமது குடியினை உயரச்செய்யக் கடவேமென்று கொண்டு அதற் கேற்ற காரியங்களைச்செய்ய முன்னடப்பவரது செயல் (அவரது செய லுக்குக் காரணமான) நியதி (தெய்வத்தின்) மேலேற்றிக் கூறப் பட்டது. இஃது ஒன்றன்செயல் மற்றொன்றன் மேலாய வுபசார வழக்காம்.

¶ விரைந்து — தாமதியாது.

§ தங்குடிக்காந் தொழிலை விரைந்துசெய்ய முயல்வார்க்குத் தெய்வம் (ஆகூழ் - நல்வினை) தன்பயனைத்தர முற்பட்டு நிற்றலால்,

இவையிரண்டு பாட்டானும் *அதற்குத் தெய்வந் துணையாதல் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்) தங்குடியை-தமது குடிக்காந்தொழிலை, தாழாது-விரைந்து, உஞற்றுபவர்க்கு-முயல்பவர்க்கு, (அத்தொழிலை முடிக்கும்விதம்), சூழாமல்-(அவர்) ஆலோசிக்க வேண்டாமல், தானே முடிவெய்தும்-தானே முடிவுபெறும், (எ-று).

குடியென்பது அது விருத்தியாதற்குக் கருவியாய தொழிலை யுணர்த்துதலால், காரிய ஆகுபெயராம். ஊழ்முன்வந்து நிற்றலாற் பயன்சொல்லிய படியாம். இவை இரண்டு பாட்டாலும் அதற்கு ஊழ்துணையாதல் சொல்லப்பட்டது.

(க-து.) தமதுகுடி யுயர்தற்காந் தொழிலை விரைந்து செய்பவர்க்கு அத்தொழில் யாதொரு தடையுமின்றி முடிவுபெறும்.

4. Those who labour unremittingly for the betterment of their family, need no deliberation; such efforts spontaneously fructify.

---

**ரு. குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்**
**சுற்றமாச் சுற்று முலகு.**

பரி:—(இ-ள்.) குற்றமாயின செய்யாது தன்குடியை யுயரச்செய் தொழுகுவானை அவனுக்குச் சுற்றமாக வேண்டித் தாமே சென்று சூழ்வர் உலகத்தார், (எ-று).

குற்றமாயின-அறநீதிகட்கு மறுதலையாய செயல்கள். தாமும் பயனெய்தனோக்கி யாவருஞ்சென்று சார்வ ரென்பதாம்.

தெளி:—(இ-ள்.) குற்றமிலனாய்-குற்றமாயினவற்றைச் செய்யாமல், குடி செய்து-(தன்) குடியை யுயரச்செய்து, வாழ்வானை-ஒழுகுகின்றவனை, சுற்றமா-(அவனுக்குச்) சுற்றமாக, (வேண்டி), உலகு-உலகத்தார், சுற்றும்-(தாமேசென்று) சூழ்வர், (எ-று).

குற்றமாயின-அறத்திற்கும் நீதிக்கும் விரோதமாய செயல்கள். தாமும்பயனடைதல் நோக்கி யாவரும்சென்று (குற்றமிலனாய்க் குடி செய்து வாழ்வானைச்) சார்வரென்பதாம்.

(க-து.) அறத்திற்கும் நீதிக்கும் மாறுபா செயல்களைச் செய்யாமல், தன்குடியை யுயரச்செய்தொழுகுகின்றவனை உலகத்தார் அவனுக்குச் சுற்றமாக வேண்டித் தாமே சென்று சூழாநிற்பர்.

---

அவர் அது பற்றி யாலோசிக்க வேண்டாமல் அத்தொழில் இனிது முடிவுபெறுமென்பதாம். "ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித், தாழா துஞற்று பவர்" என்னுங்குற ளிங்குக் கவனித்தற்குரியதாம்.

* அதற்கு குடியை யுயரச்செய்தற்கு.

5. The world will circle and seek the friendship of the blameless man who raised his family by fair means.

———

சு. நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை யாக்கிக் கொளல்.

பரி:—(இ-ள்.) ஒருவனுக்கு நல்ல ஆண்மையென்று உயர்த்துச் சொல்லப்படுவது தான் பிறந்த குடியினை யாளுந்தன்மையைத் தனக் குளதாக்கிக்கோடல், (எ-று.)

*போர்த்தொழிலி னீக்குதற்கு 'நல்லாண்மை' என விசேடித் தார். குடியினையாளுந்தன்மை-குடியிலுள்ளாரை யுயரச்செய்து தன் வழிப்படுத்தல். †அதனைச் செய்துகோடல் நல்லாண்மையாமாறு வருகின்ற பாட்டாற் பெறப்படும்.

தெளி:—(இ-ள்.) ஒருவற்கு-ஒருவனுக்கு, நல்லாண்மையென் பது-நல்ல ஆண்மை யென்று உயர்த்திச் சொல்லப்படுவது, தான் பிறந்த இல்-தான் பிறந்த குடியினை, ஆண்மை-ஆளுந்தன்மையை, ஆக்கிக்கொளல்-(தனக்கு) உளதாக்கிக் கொள்ளுதல், (எ-று).

போர்த்தொழிலி னீக்குதற்கு 'நல்லாண்மை' என விசேடித்தார். குடியினை யாளுந் தன்மை-தன் குடியிலுள்ளவரை உயரச் செய்து தன் வழிப்படுத்தல். அதனைச் செய்துகொள்ளுதல் நல்லாண்மையாம் விதம் வருகின்ற பாட்டாற் பெறப்படும்.

(க-து.) தான்பிறந்த குடியையுயரச்செய்து, அதனையாளுதலைத் தனக்குரியதாகக் கொள்ளுதல் ஒருவனுக்குச் சிறந்த ஆண்மையாம் என்பது.

6. A man's true manliness consists in making himself the head and benefactor of his family.

———

எ. அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்து
மாற்றுவார் மேற்றே பொறை.

பரி:—(இ-ள்.) ‡களத்தின்கட் (சென்றார் பலராயினும் போர்தாங்கு தல்) வன்கண்ணர்மேலதானாற்போல, குடியின்கட் பிறந்தார் பலராயினும்

* ஆண்மை யென்று மாளா கூறுது நல் எனும் விசேடந்தந்து, 'நல்லாண்மை' என்று கூறியது போர்தொழிலிற் காட்டும் ஆண் மையை நீக்குதற்காம். [விசேடித்தல் – பிரித்துக் காட்டல்.]

† அதனை – தன்வழிப்படுதலை.

‡ களத்தின்கண் – போர்செய்யு மிடத்தில்.

*** அதன்பாரம் பொறுத்தல் † அதுவல்லார் மேலதாம், (எ-று)**

‡பொருட்கொக்க வேண்டுஞ்சொற்கள் உவமைக்கண் வருவிக்கப் பட்டன. நன்குமதிக்கப்படுவார் ¶அவரே யென்பதாம். இவை மூன்று பாட்டானும் 0அது செய்வா ரெய்துஞ் சிறப்புக் கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) அமரகத்து – போர்க் களத்தினிடத்து, (சென்றவர் பலராயினும் போரைத் தாங்குதல்), வன்கண்ணர்போல- சூரர் (மேலதானற்) போல, தமரகத்தும்- குடியினிடத்தும்(பிறந்தவர் பலராயினும்), பொறை– (அதனது பாரத்தை) பொறுத்தல், ஆற்றுவார் மேற்றே-(அது) வல்லவர் மேலதே யாம், (எ-று).

உவமேயத்திற் கொக்க வேண்டுஞ் சொற்கள் உவமானத்தில் வருவிக்கப்பட்டன. நன்கு மதிக்கப்படுவார் அவரேயென்பதாம். இவை மூன்று பாட்டாலும் அது செய்வாரடையும் சிறப்புச் சொல்லப்பட்டது.

**(க-து.)** குடியின் பாரத்தை (உரிமையை)ப் பொறுத்தல் அக்குடியிற்பிறந்தார் பலருள் ஒருவரிடத்ததேயாம் என்பது.

7. Like heroes bearing the brunt of the fight in the battle-field the burden of protection of the family rests upon those who are efficient in it.

---

அ· **குடிசெய்வார்க் கில்லை பருவ மடிசெய்து
மானங் கருதக் கெடும்.**

பரி :—(இ-ள்.) தங்குடியினை யுயரச்செய்வார் அச்செயலையே நோக்காது காலத்தை நோக்கி மடியினைச் செய்து கொண்டு மானத்தையுங் கருதுவராயிற் குடிகெடும்; ஆகலான் அவர்க்குக் காலநியதியில்லை, (எ-று).

---

* அதன் – குடியினது. † அது – பாரத்தைப் பொறுத்தல்.

‡ தமரகத்து மாற்றுவார் மேற்றே பொறை என்னும் பொருட்கு (உவமேயத்திற்கு) ஒக்க (ஒத்திருக்கும்படி) சென்றார் பலராயினும் போர் தாங்குதல் மேலதானல் என்னும் வேண்டுஞ் சொற்கள், அமரகத்து வன்கண்ணர் போல என்னும் உவமைக்கண் (உவமானத்தில்) வருவிக்கப்பட்டன. உவமேயத்தில் பிறந்தார் பலராயினும் என்றும் அதன் பாரம் (பொறுத்தல்) என்றும் வருவித்- தற்கேற்ப, உவமானத்தில் சென்றார் பலராயினும் என்றும் போர் தாங்குதல் மேலதானல் என்றும் வருவிக்கப்பட்டன. பொருட்கேற்க என்றும் பாடமுண்டு.

¶ அவரே - குடியின் பாரத்தைப் பொறுப்பாரே.

0 அதுசெய்வார் – தாம் பிறந்த குடியை யுயரச்செய்வார்.

காலத்தை நோக்கி மடிசெய்தல்—வெயின் மழை பனியென்பன வுடைமை நோக்கிப் பின்னர்ச் செய்துமென் றொழிந்திருத்தல். மானங் கருதுதல் - இக்குடியிலுள்ளார் யாவரும் இன்பமுற இக்காலத்துத் துன்பமுறுவேன்யானோ வென்று உட்கோடல். மேல் *'இகல்வெல்லும், வேந்தர்க்கு வேண்டும் பொழுது' என்றதுட்கொண்டு †இவர்க்கும் வேண்டுமோ வென்று கருதினும் ‡அது கருதற்கவென்று மறுத்தவாறு.

தெளி :—(இ-ள்.) மடிசெய்து - (தமது குடியினை யுயரச் செய்வார் அச்செயலையே நோக்காது காலத்தை நோக்கிச்) சோம்பலைச் செய்துகொண்டு, மானம் - மானத்தையும், கருத - நினைப்பாராயின், கெடும் - (குடி) கெடும், (ஆதலால்), குடி செய்-வார்க்கு - அக்குடியினை உயரச்செய்வார்க்கு, பருவம் - காலநியதி, இல்லை—, (எ-று).

காலத்தை நோக்கிச் சோம்பலைச் செய்தல் - வெயில் மழை பனியென்பனவுடைமை நோக்கிப் பின்னே செய்வோமென்று ஒழிந்திருத்தல். மானங்கருதுதல் - இக்குடியிலுள்ளார் யாவரும் இன்பத்தையடைய இக்காலத்தில் துன்பத்தை யடைகின்றவன் யானோ வென்று உட்கொள்ளுதல். முன் ‘இகல்வெல்லும், வேந்தர்க்கு வேண்டும் பொழுது’ என்றதனையுட்கொண்டு இவர்க்கும் வேண்டுமோவென்று நினைக்கினும் அது நினைக்கலாகாதென மறுத்தவாறும்.

(க-து.) தமது குடியினை யுயரச்செய்வார் சோம்பலையும் மானத்தையும் மேற்கொள்ளாது, மேற்கொண்ட கருமத்தை விரைந்து செய்து முடிப்பர் என்பது.

8. One who strives to uprear one's family should wait for no season; it would perish through one's indolence and false dignity.

---

௯. **இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக்
குற்ற மறைப்பா னுடம்பு.**

பரி :—(இ-ள்.) ¶மூவகைத் துன்பமு முறற்பாலதாய தன்குடியை அவை யுறுமற்காக்க முயல்வானது உடம்பு அம்முயற்சித் துன்பத்திற்கே

---

* திருக்குறள் - காலமறிதல் - க. இதன் பொருள். பகைவரது வலிமையை வெல்ல நினைக்கும் அரசர்க்கு அதற்கேற்ற காலம் வேண்டும் என்பது.

† இவர்க்கும் வேண்டுமோ - குடி செய்வார்க்கும் காலத்தை நோக்கி மடி செய்தல் (சோம்பிக் கிடத்தல்) வேண்டுமோ என்-றெண்ணினும் அது (மானத்தைக்) கருதுதல் கூடாதென்று மறுத்துக் கூறியவாறுமென்க.

‡ குடி செய்வார் காலத்தை நோக்கி மடி செய்தாலும் மானங் கருதலாகாதென்பதாம்.

¶ தன்னை (உடம்பை)ப் பற்றி வருவனவும், பிறவுயிர்களைப்பற்றி வருவனவும், தெய்வத்தைப் பற்றி வருவனவுமென மூவகையால் வரும் பிறவித்துன்பங்கள்.

**கொள்கலமா மத்துணையோ, *அஃதொழிந்து இன்பத்திற் காதலில்லையோ, (எ-று).**

†"உறைப்பெய லோலை போல, மறைக்குவன் பெருமநிற் குறித்து வருவேலே" என்புழியும் மறைத்தல் ‡இப்பொருட்டாயிற்று என்குடி முழுதுமின்புற்றுயரவே §நானிருமையுமெய்துதலான் இம்மெய் வருத்த மாத்திரம் எனக்கு நன்றென்று முயலுமறிவுடையான் அஃ தொருஞான்று மொழியாமை நோக்கி 'இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ' என்றார் ¶இது குறிப்புமொழி. இவை யிரண்டுபாட் டானும் $அவர் 0அது செய்யுமியல்பு கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) குடும்பத்தை – (மூவகைத்துன்பமும் அடைதற் பாலதாகிய தன்) குடியை, குற்றமறைப்பான் – அம்மூவகைத் துன் பமும் (அடையாமற்) காக்க முயல்பவனது, உடம்பு – தேகம், இடும் பைக்கோ – (அம்முயற்சித்) துன்பத்திற்கே, கொள்கலங்கொல்லோ– கொள்கலமா மவ்வளவோ, [அத்துன்ப மொழிந்து இன்பத்திற் காத லில்லையோ], (எ–று).

மறைத்தல் என்பது இங்குக் காத்தல் என்னும் பொருளில் வந்தது. என்குடியிலுள்ளார் யாவரும் இன்பமுற்று உயரவே நான் இருமையும் அடைதலால் இம்மெய்வருத்த மாத்திரம் எனக்கு நல்ல தென்று முயலும் அறிவுடையவன் அம்மெய்வருத்தத்தை ஒருநாளும் விடாமையை நோக்கிக் குடும்பத்தைக் குற்றமறைப்பானுடம்பு 'இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ' என்றார். இது குறிப்பு மொழி. ஓ – அசை. இவை இரண்டு பாட்டானும் அவர் அது செய்யுமியல்பு சொல்லப்பட்டது. மெய் – உடம்பு.

---

* அஃதொழிந்து – [அம்முயற்சித் துன்பத்திற்குக் கொள்கல (பாத்திர) மாதலொழிந்து] இன்பத்திற்காத லில்லையோ [இன்பத் திற்குக் கொள்கலமாத லில்லையோ].

† புறநானூறு-290. இதன் பொருள். மழை பெய்தலை (மேல் விழவொட்டாது) ஓலைக் குடையானது காப்பதுபோன்று காப்பாற்று வன் (என்று) பெருமானே உன்னைக் கருதி வருவேன் என்பது.

‡ இப்பொருட்டாயிற்று – காத்தல் என்னும் பொருளின தாயிற்று.

§ நானிருமையு மெய்துதலான் – நான் இம்மைப்பயன் மறுமைப் பயனென்னு மிரணடையு மடைதலால்.

¶ இது (உடம்பு இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ என்பது) குறிப்புமொழி. குறிப்பாற் பொருளுணர்த்து மொழி குறிப்பு மொழி யாம். குடும்பத்தைக் குற்றமறைப்பானுடம்பு இடும்பைக்கே கொள் கலமாயினும், அவன் இருமையின்பமு மடைதற்குக் காரணமாயிருத் தலால், அஃது அவனுக்கு இன்பத்திற்கே கொள்கலமா மென்பது குறிப்பாற் பெறப்படுவதாமென்க. "இடும்பைக் கிடும்பை யியலு டம்பி தன்றோ" என்று நல்வழி கூறுகின்றது.

$ அவர் – குடிசெய்வார்.

0 அது செய்யுமியல்பு – குடியை யுயரச்செய்தலின் திறம்.

(க து.) தனது குடியைக் காக்க முயலுகின்றவனது உடம்பு அம் முயற்சித் துன்பத்திற்கே யிருப்பிடமாம் என்பது.

9. Is it only to suffering that his body is exposed who wishes to preserve his family from evil ?

---

கO. இடுக்கண்கால் கொன்றிட வீழு மடுத்தூன்று
நல்லா ளிலாத குடி.

**பரி : – (இ-ள்.) துன்பமாகிய நவியம் புகுந்து தன்முதலை வெட்டிச் சாய்க்க ஒரு *பற்றின்றி வீழாநிற்கும், †அக்காலத்துப் ‡பற்றுவன கொடுத்துத் தாங்கவல்ல நல்லவாண்மகன் பிறவாத குடியாகிய மரம்.**

*முதல்-§அதன் வழிக்குரியார். வளர்ப்பாரைப் பெற்றுழி வளர்ந்து பயன்படுதலும் அல்லாவழிக் கெடுதலு முடைமையின், மரமாக்கினர்; $'' தூங்குசிறை வாவலுறை தொன்மரங்க ளென்ன ஓங்குகுல நையவத னுட்பிறந்த வீரர், தாங்கல்கட னாகுந்தலை சாய்ப்பவரு தீச்சொ, னீங்கன்மட வார்கள்கட னென்றெழுந்து போந்தான்'' என்றார் பிறரும். ¶இது குறிப்புருவகம். இதனான் 0அவரில்லாத குடிக்குளதாங் குற்றங் கூறப்பட்டது.*

---

* *பற்றின்றி – ஆதாரமில்லாமல்.*

† *அக்காலத்து – தான் விழும்பொழுது.*

‡ *பற்றுவன – வீழாது தாங்கவல்ல முட்டுக்கள்* (உதவிகள்)

§ *அதன் வழிக்குரியார் – அக்குடியிற்றோன்றியவர் (சந்ததியார்).*

*$ சீவகசிந்தாமணி – காந்தருவதத்தையாரிலம்பகம் 6. இதன் பொருள். தொங்கிய சிறகுகளையுடைய வாவல் (வவ்வால்) வசிக்கின்ற ஆலமரங்கள் (தாம் கெட அவை கெடாதபடி அவற்றுட் டோன்றிய விழுது தாங்கினாற்) போல, ஓங்கிய தமது குலமானது (உதவியின்றித்) தளர்ச்சியடைகின்ற அளவிலே அக்குடியினுட்பிறந்த வீரர் தலைசாய்க்குமா றுண்டாகா நின்ற (இவன் பிறந்து இக்குலங் கெட்டதென்னும்) தீச்சொல் (பிறவாதபடி தமது குலத்தைத்) தாங்குதல் (உயரச்செய்தல்) கடமையாகும்; (தமது குலத்தைத் தாங்காது) போதல் பேதைய (மூடரது கடமையாகும்; (ஆதலால் யானு முயன்று பொருள் தேடி என்குலத்தைத் தாங்குவேன்) என்று கூறி யெழுந்து வந்தான் சீதத்தன் என்பது. '' சிதலை தினப்பட்ட வால மரத்தை, மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்குக், குதலைமை தந்தைகட் டோன்றிற்றான் பெற்ற, புதல்வன் மறைப்பக் கெடும்'' என்று நாலடியார் கூறுவது மிங்கறியத்தக்கதாம்.*

*¶ இடுக்கணை நவியமாகவும் குடியை மரமாகவும் அடுத்தூன்றும் என்னும் ஏதுவால் குறிப்பாக வுணருமாறு உருவகஞ் செய்தமையின் இக்குறள் குறிப்புருவகமாயிற்று.*

*0 அவர் – தாங்குவார்.*

தெளி:— (இ-ள்.) அடுத்து - (தான் விழும்போது பற்றுவன) கொடுத்து, ஊன்றும் - தாங்கவல்ல, நல்லாள் – நல்லவாண்மகன், இலாத - பிறவாத, குடி - குடியாகிய மரம், இடுக்கண் - துன்பமாகிய கோடரியானது (புகுந்து), கால் – (தன்) முதலே, கொன்றிட – வெட்டிச்சாய்க்க, வீழும் - (ஒரு பற்றில்லாமல்) வீழாநிற்கும், (எ-று).

முதல் – அக்குடியின் வழிக்கு உரியவர். (மரம்) வளர்ப்பாரைப் பெற்றவிடத்து வளர்ந்து பயன்படுதலும் அல்லாவிடத்துக் கெடுதலும் உடைமையால், குடியை மரமாக்கினர். இது குறிப்புருவகவணி. இதனல் அவரில்லாத குடிக்கு உளதாம் குற்றம் சொல்லப்பட்டது.

(கருத்து.) தன்னைத் தாங்கவல்ல நல்ல ஆண்மக னில்லாத குடி யானது ஆதரவற்றுக்கெடும் என்பது.

10. If there be no strong man nigh to prop up and maintain a tottering family in distress, it would fall at the stroke of the axe of misfortune.

---

## ௬௰௪-வது அதிகாரம்

## உழவு—Agriculture

பரி:— அஃதாவது சிறுபான்மை † வாணிகர்க்கும் பெரும்பான்மை வேளாளர்க்கு முரித்தாய உழுதற்றொழில்; செய்விக்குங்கால் ‡ ஏனை யோர்க்கு முரித்து. ¶ இது, மேற் குடியுயர்தற் கேதுவென்ற ஆள்வினை வகை யாகலின், குடிசெயல்வகையின் பின் வைக்கப்பட்டது.

தெளி:- அஃதாவது சிறுபான்மை வாணிகர்க்கும் பெரும்பான்மை வேளாளர்க்கும் உரியதாகிய உழுதற்றொழிலாம். இது செய்விக்கும் போது மற்றவர்க்கும் உரியதாம் இது, முன்னே குடி உயர்வதற்கு ஏதுவென்ற முயற்சி வகையாகலால், குடி செயல்வகையின் பின் வைக்கப்பட்டது.

---

† "வேளாண் மாந்தர்க் குழுதூ ணல்ல, தில்லென மொழிப பிற வகை நிகழ்ச்சி" என்னும் (தொல்காப்பியம் மரபியற்) சூத்திரத்தின் விசேடவுரையில் நச்சினார்க்கினியார் "அவருள் வணிகர்க்கும் ஒழிந்த வேளாளர்க்கும் ஒத்தசெய்தியனவாகிய உழவுத்தொழிலும் நிரை காத்தலும் வாணிகமுமென்பன அவற்றின் ஒத்தசிறப்பினவன்றி அவற் றுள்ளும் ஒரோவொன்று ஒரோவருணத்தார்க்கு உரியவாமாகலானும் ஈண்டு அவை விதந்து கூறினனென்பது. நிரைகாவலும் உழவுத் தொழிலும் வணிகர்க்கும் வேளாளர்க்குந் தடுமாறுதல் போலாது வாணிகவாழ்க்கை வேளாண்மாந்தர்க்குச் சிறுவரவிற்றெனவும் உழு துண்டல் வாணிகர்க்குச் சிறுவரவிற்றெனவும் எண்வகைக் கூலத் தோடுபட்டதே பெருவரவிற்றெனவுங் கூறினன் இச்சூத்திரங்களா னென்பது" என்று கூறிய திங்கறியத்தக்கதாம்.

‡ ஏனையோர்க்கும் – பிராமணர் முதலாயினவர்க்கும்.

¶ இது – உழவு.

க. * சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனு
லுழந்து முழவே தலை.

பரி:— (இ-ள்.) உழுதலான்வரும் மெய்வருத்த நோக்கிப் பிறதொழில்களைச் செய்துதிரிந்தும், முடிவில் ஏருடையார் வழியதாயிற்று உலகம்; ஆதலான், எல்லாவருத்த முற்றும் தலையாயதொழில் உழவே, (எ-று).

ஏர் - ‡ஆகுபெயர். பிறதொழில்களாற் பொருளெய்தியவழியும் உணவின்பொருட்டு உழுவார்கட் செல்லவேண்டுதலிற் 'சுழன்றுமேர்ப்பின்னதுலகம்' என்றும், வருத்த மிலவேனும் பிறதொழில்கள் கடையென்பது போதர 'உழந்து முழவே தலை' என்றுங் கூறினார். இதனுல் உழவினது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) உலகம்—, சுழன்றும் - (உழுதலால் வரும் உடல் வருத்த நோக்கிப் பிறதொழில்களைச் செய்து) திரிந்தும், ஏர்ப்பின்னது - (முடிவில்) ஏருடையார் வழியதாயிற்று, அதனுல் - ஆதலால், உழந்தும் - எல்லா வருத்தமுற்றும், தலை - தலைமையாகிய தொழில், உழவே - உழுதற்றொழிலே, (எ-று).

ஏர் என்பது ஏருடையாரை யுணர்த்துதலால் ஆகுபெயராம். பிறதொழில்களால் பொருளைப் பெற்றவிடத்தும் உணவி னிமித்தம் உழுவாரிடத்துச் செல்லவேண்டுதலால் 'சுழன்றுமேர்ப்பின்னதுலகம்' என்றும், வருத்தம் இல்லையாயினும் பிறதொழில்கள் கடையென்பது தோன்ற 'உழந்து முழவே தலை' என்றும் சொல்லினர். இதனுல் உழவினது சிறப்புச் சொல்லப்பட்டது.

(க-து.) எத்தொழிலுள்ளும் உழவுத்தொழிலே தலைமையாய தொழிலாம் என்பது.

1. Agriculture, though laborious, is the most excellent form of labour; for though people go about in quest of less laborious avocations, they have at last to resort to the farmer.

---

உ. §உழுவார் உலகத்தார்க் காணி யஃதாற்
றெழுவாரை யெல்லாம் பொறுத்து.

---

* "தொழுதூண் சுவையின் உழுதூ ணினிது" என்பது கொன்றை வேந்தன்.

‡ ஏர்(கலப்பை) என்னும் உடைமைப்பெயர் அதனை யுடையவரை யுணர்த்துதலால், உடைமையாகுபெயராம். இது "பொருண்முதலாறோடு" என்னும் நன்னூல் ஆகுபெயர்ச் சூத்திரத்தின் 'ஆதி' என்பதனுளடங்கும்.

§ "அலகிலா மறைவிளங்கு மந்தணரா குதிவிளங்கும், பலகலையாந் தொகைவிளங்கும் பாவலர்தம் பாவிளங்கும், மலர்குலாந் திருவிளங்கு மழைவிளங்கு மனுவிளங்கும், உலகெலா மொளிவிளங்கு முழவருழு முழவாலே" என்பது ஏரெழுபது.

பரி: —(இ-ள்.) அவ்வுழுதலைச் செய்யமாட்டாது பிறதொழிற்கண் மேற் செல்வார் யாவரையுந் தாங்குதலால், *அதுவல்லார் உலகத்தாராகிய தேர்க்கு அச்சாணியாவர், (எ-று).

†"காடு கொன்று நாடாக்கிக் குளந்தொட்டு" என்றாற்போல ‡உழுவாரென்றது உழுவிப்பார் மேலுஞ் செல்லும். உலகத்தா ரென்றது ஈண்டிவரை யொழிந்தாரை. கலங்காம னிறுத்தற்கண் ஆணிபோறலின் 'ஆணி' என்றார். பொறுத்தலான் என்பது திரிந்து நின்றது. ¶ஏகதேச வுருவகம். 0அஃதாற்றார் தொழுவாரே யெல்லாம் பொறுத்தென்று பாடமோதி, அது மாட்டாதார் புரப்பார் செய்யும் பரிபவமெல்லாம் பொறுத்து அவரைத் தொழு வாரே யாவரென் றுரைப்பாரு முளர்.

தெளி: —(இ-ள்.) உழுவார் - உழுதலில் வல்லவர், அஃதாற்றாது- அவ்வுழுதலைச் செய்யமாட்டாமல், எழுவாரை யெல்லாம் - (பிற தொழில்கள் மேல்) செல்வார் யாவரையும், பொறுத்து - தாங்கு தலால், உலகத்தார்க்கு-உலகத்தாராகிய தேர்க்கு, ஆணி - அச்சாணி யாவர், (எ-று).

உழுவாரென்பது உழுவிப்பார்க்குமாம். உலகத்தாரென்றது இங்கு இவ்வுழவரை யொழிந்தவரை. உலகத்தாரைக் கலங்காமல் நிறுத்தலில் உழுவார் அவர்க்கு ஆணிபோன்றிருத்தலால், (உழுவா ருலகத்தார்க்கு) 'ஆணி' என்றார். இஃதேகதேச வுருவகவணி. பொறுத்தலான் என்னும் (செயினென்னும் வாய்பாட்டு) வினை-யெச்சம் பொறுத்து என்னும் (செய்து என்னும் வாய்பாட்டு) வினை-யெச்சமாகத் திரிந்து நின்றது.

---

* அது – உழுதல்.

† பத்துப்பாட்டு, பட்டினப்பாலை, 283, 284-வது வரி. இதன் பொருள், (சோழ மண்டலத்தில்) காடாகிய இடங்களை வெட்டிப் போட்டு (முன்பு போலக்) குடியிருந்து விளையப்பண்ணி, (தூர்ந்து போன) குளங்களைத் தோண்டி என்பது.

‡ கொன்று, ஆக்கி, தொட்டு என்னுந் தன்வினை கொன்றுவித்து, ஆக்குவித்து, தொடுவித்து எனப் பிறவினையும் ஆனாற்போல, உழுவார் என்னுந் தன்வினை உழுவிப்பார் எனப் பிறவினையுமாயிற் றென்பதாம்.

¶ உழுவாரை (அச்சு) ஆணியாக உருவகஞ் செய்தவர் அதற் கியைய உலகத்தாரைத் தேராக உருவகஞ் செய்யாமையின், இக் குறள் ஏகதேச வுருவகவணியாயிற்று.

0 'அஃதாற்று, தெழுவாரை யெல்லாம் பொறுத்து' என்பதற்குப் பிரதியாக அஃதாற்றார் தொழுவாரே யெல்லாம் பொறுத்து என்று பாடங் கூறி, அதற்கு அஃதாற்றார் – அது (உழுதல்) செய்யமாட்டா-தவர், எல்லாம் பொறுத்து – (காப்பவர் செய்யும் துன்பம்) எல்லா வற்றையும் பொறுத்து, தொழுவாரே – (அவரைத்) தொழுவாரே யாவர் என்று பொருள் கூறுவாருமுண்டென்பது.

*(க-து.) உலகத்தை நிலைபெறச் செய்வோர் உழுவாரே யாவர் என்பது.*

2. Agriculturists are as it were the linch-pin of the world, as they support all other workers who cannot till the soil.

---

**ங. உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்**
**தொழுதுண்டு பின்செல் பவர்.**

பரி:—(இ-ள்.) யாவரு முண்ணும் வகை உழுதலைச்செய்து †அதனாற் றாமுமுண்டு வாழ்கின்றாரே தமக்குரியராய் வாழ்கின்றவர் ; மற்றையா ரெல்லாம் பிறரைத் தொழுது ‡அதனாற்றாமுண்டு அவரைப் பின் செல்கின்றவர், (எ-று)

*0மற்றென்பது வழக்குப்பற்றி வந்தது. தாமு மக்கட்பிறப்பினராய் வைத்துப் பிறரைத்தொழுது அவர் சிலகொடுப்பத் தம்முயிரோம்பி அவர்பின் செல்வார் தமக்குரியரல்லரென்பது கருத்து.*

தெளி:—(இ-ள்.) *உழுது - (யாவரும் உண்ணும்படி) உழுதலைச் செய்து, உண்டு - (அதனால் தாமும்) உண்டு, வாழ்வாரே - வாழுகின்றவரே, வாழ்வார் - (தமக்குரியராய்) வாழ்கின்றவர், மற்றெல்லாம் - மற்றையாரெல்லாம், தொழுது - (பிறரைத்) தொழுது, உண்டு - (அதனால், தாம்) உண்டு, பின் செல்பவர் - (அவரைப்) பின் செல்லுகின்றவர், (எ-று).*

*மற்றென்பது உலக வழக்குப்பற்றிப் பிறிது என்னும் பொருளில் வந்தது. தாமும் மக்கட்பிறப்பினராய்ப் பிறந்திருந்தும் பிறரைத் தொழுது அவர் சிலபொருள் கொடுப்பத் தம்முயிரைக்காத்து அவர் பின் செல்லுகின்றவர் தமக்குரியரல்லரென்பது கருத்து.*

*(க-து.) உழுதுண்டு வாழ்வார் வாழ்வே வாழ்வா மென்பது.*

3. They alone are said to be living who live by agriculture ; all others lead a cringing, dependant life.

---

**ச. பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்ப**
**ரலகுடை நீழ லவர்.**

---

*† அதனால் - உழுதலால். ‡ அதனால் - பிறரைத் தொழுதலால். 0 மற்றெல்லாம் என்பதன்கணுள்ள மற்றென்னு மிடைச்சொல் வினைமாற்றிலும் அசைநிலையிலும் வாராது உலக வழக்குப்பற்றி (மற்றையாரெனப்) பிறிது என்னும் பொருளில் வந்தது. பிறிது என்பது வினைமாற்றி லடங்கும் என்பாருமுண்டு.*

*" மற்றென் கிளவி வினைமாற் றசைநிலை, யப்பா லிரண்டென மொழிமனார் புலவர் " என்பது தொல்காப்பியம். " வினைமாற் றசைநிலை பிறிதெனு மற்றே " என்பது நன்னூல்.*

பரி :— (இ-ள்.) உழுதற்றொழிலான் நெல்லினை யுடையராய தண்ணளியுடையார் பல வேந்தர் குடைநிழலதாய மண் முழுதினையுந் தம் வேந்தர் குடைக்கீழே காண்பர், (எ-று).

அலகு-கதிர்; *அஃதீண்டாகு பெயராய் நென்மேலதாயிற்று. †உடையவென்பது குறைந்துநின்றது. ‡நீழல்போறலின் நீழலெனப் பட்டது. நீழலவரென்றது இரப்போர்க்கெல்லாம் ஈதனோக்கி. ¶ஒற்றுமைபற்றித் 'தங்குடை' என்றார். 0குடைநீழலென்பதூஉம் ஆகுபெயர். |"ஊன்றுசான் மருங்கி னீன்றதன் பயனே" என்ற தனால் தம்மரசனுக்குக் கொற்றம் பெருக்கி மண்முழுதும் அவனதாகக் கண்டிருப்பரென்பதாம். :"இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமு, முழவிடை விளைப்போர்" என்றார் பிறரும்.

தெளி :—(இ-ள்.) அலகுடை-(உழுதற்றொழிலால்) நெல்லினை யுடையராகிய, நீழலவர்-தண்ணளியுடையோர், பலகுடை நீழலும்-பல வேந்தர் குடை நிழலதாய பூமி முழுவதையும், தங்குடைக்கீழ்-தமது (வேந்தர்) குடைக்கீழே, காண்பர்-காணுவர், (எ-று).

---

* அலகு என்னும் முதற்பெயர் அதன் சினையாகிய நெல்லினை யுணர்த்துதலால், முதலாகு பெயராம்.

† உடைய என்னும் குறிப்புப்பெயரெச்சம் ஈறுகுறைந்து உடை என நின்றது.

‡ உழுவா ரிடத்துள்ள தண்ணளி (கிருபை) யாசிப்பவர்க்கு நீழல் போன்றிருத்தலால், நீழல் (நிழல்) என்று கூறப்பட்டது. (வெயிலால் வருந்தினவர்க்கு மரத்தினது நீழல் ஆதரவாயிருப்பது போன்று வறுமையால் வருந்தினவர்க்கு உழுவாரது தண்ணளி ஆதரவாயி ருக்கின்ற தென்பதாம்). நீழல்போன்ற தண்ணளியை நீழலென்றது உவமையாகு பெயராம்.

¶ அரசர்க்கும் உழுவார்க்கு முள்ள ஒற்றுமைபற்றி அரசரது குடையை உழுவாரின்மே லேற்றித் 'தங்குடை' என்று கூறினார். இவ்வொற்றுமையை "வார்சான்ற கூந்தல் வரம்புயர வைகலும், நீர்சான் றுயரவே நெல்லுயரும்-சீர்சான்ற, தாவாக் குடியுயரத் தாங்கருஞ்சீர்க் கோவுயரும், ஓவாதுரைக்கு முலகு" என்று சிறு பஞ்சமூலங் கூறுதலானுமறிக.

0 குடைநீழல் என்னும் தானியின் பெயர் அதற்குத் தான மாகிய பூமியையுணர்த்துதலால், தானியாகு பெயராம்.

| புறநானூறு-35. இதன்பொருள். (உழுகின்ற கலப்பை நிலத்தினிடத்தே) ஊன்றியசாலினிடத்து விளைந்த நெல்லினது பயனே என்பது.

: சிலப்பதிகாரம்-நாடுகாண்காதை. 149-150-வது வரி. இதன் பொருள், யாசிப்பவருடைய சுற்றத்தாரையும் தம்மைக்காக்கும் அரசருடைய வெற்றியையும் தமதுஉழவினிடத்தே யுண்டாக்குவோர் என்பது.

அலகு-நெற்கதிர்; அஃது இங்கு ஆகுபெயராய் நெல்லின்மேலதாயிற்று. உடைய என்பது உடையெனக் குறைந்துநின்றது. தண்ணளி நீழல் போன்றிருத்தலால் நீழலெனப்பட்டது. உழவரை நீழலவரென்றது அவர் இரப்போர்க்கெல்லாம் ஈதலைநோக்கியாம். அவ்வுழவரது அரசரதுகுடையை ஒற்றுமைபற்றித் 'தங்குடை' என்றார். குடை நீழலென்பதும் ஆகுபெயர். உழவர் விளைவினை மிகுதியாகச் செய்து தம்மரசனுக்கு வெற்றியைப்பெருகச்செய்து மண்முழுதும் அவனதாகக் கண்டிருப்ப ரென்பதாம். தண்ணளி-பெருங்கருணை; நீழல்-நிழல். தங்குடை-தம்மரசன் குடை.

(க-து.) உழுதற் றொழிலாலுண்டாகிய செல்வத்தினை யுடையவர் பலவரசரது நாட்டையும் தம்மரசரது ஆட்சிக்குள் காணுந் தன்மையராவர் என்பது.

4. Patriotic farmers desire their monarch to bring all other lands under the sway of their own king.

———

ரு. **இரவா ரிரப்பார்க்கொன் றீவர் கரவாது**
**கைசெய்தூண் மாலை யவர்.**

**பரி:—(இ-ள்.) தங்கையா லுழுதுண்டலை யியல்பாகவுடையார் பிறரைத் தாமிரவார்; தம்மையிரப்பார்க்கு அவர் வேண்டியதொன்றனைக் கரவாது கொடுப்பர், (எ-று).**

*செய்தென்பதற்கு உழுதலையெனவருவிக்க. ‡கைசெய்தூண்மாலையவரென்பது ¶ஒரு ஞான்றும் அழிவில்லாத செல்வமுடையரென்னும் ஏதுவையுட்கொண்டு நின்றது.

---

* செய்து என்னும் (செயப்படுபொருள் குன்றாத) வினைக்கியைய உழுதலை என்னும் செயப்படுபொருளை வருவித்துரைத்துக் கொள்க.

‡ கைசெய்தூண் மாலையவர் என்பது ஏதுகர்ப்ப விசேஷண முடையதாம். விசேஷணத்தையுடையது விசிட்டமெனப்படும். இங்குக் கைசெய்தூண் என்பது ஏதுகர்ப்ப விசேஷணமாம்; மாலையவர் என்பது விசேஷியமாம். ஏதுகர்ப்ப விசேஷணமாவது ஏதுவை யுட்கொண்டுள்ள விசேஷணமாம். கைசெய்தூண் மாலையவர் என்னும் விசிட்டம் ஒரு ஞான்றும் அழிவில்லாத செல்வமுடையரென்னும் ஏதுவை யுட்கொண்டு நின்றமையின், கைசெய்தூண் என்னும் விசேஷணம் (அடை), ஒரு ஞான்றும் அழிவில்லாத செல்வமுடைமையென்னு மேதுவை யுட்கொண்டு நின்றதென்க.

கைசெய்தூண் மாலையவர் ஒருஞான்றும் அழிவில்லாத செல்வமுடையவராக விருத்தலால், பிறரைத் தாம் இரவாது தம்மை இரப்பவர்க்கு அவர் வேண்டிய தொன்றனைக் கரவாது கொடுக்கின்றாரென்பதாம்.

¶ "ஆற்றங் கரையின் மரமு மரசறிய, வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே-யேற்றம், உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை கண்டீர், பழுதுண்டு வேறோர் பணிக்கு" என்று நல்வழி கூறுவதும் "மேழிச் செல்வங் கோழைபடாது" என்று கொன்றைவேந்தன் கூறுவதும் இங்கறியத்தக்கனவாம்.

தெளி :—(இ-ள்.) கை - (தமது) கையால், செய்து - (உழுதலைச்) செய்து, ஊண்மாலையவர் - உண்ணுதலை இயல்பாகவுடையவர், இரவார் - (பிறரைத்தாம்) இரவார், இரப்பார்க்கு - (தம்மை) இரப்பவர்க்கு, ஒன்று - (அவர் வேண்டியது) ஒருபொருளை, கரவாது- ஒளிக்காமல், ஈவர் - கொடுப்பார், (எ-று).

செய்து என்னும் வினைக்கியைய உழுதலை யென்பது வருவிக்கப் பட்டது. கைசெய்தூண்மாலையவரென்பது ஒருநாளும் அழிவில்லாத செல்வமுடையாரென்னுங் காரணத்தை உள்ளே கொண்டு நின்றது.

(க-து.) தங்கையாலுழுதுண்பவர் தாம் பிறரையாசியாமல் தம்மை யாசிப்பவர்க்கு அவர் வேண்டிய தொன்றனை யில்லை யென்னாது கொடுப்பர் என்பது.

5. They who by nature live on the food raised by their own hands, will never ask anything from others, but give something to those who beg.



சு. உழவினார் கைம்மடங்கி னில்லை விழைவதூஉம்
விட்டேமென் பார்க்கு நிலை.

பரி :—(இ-ள்.) உழுதலையுடையார்கை அதனைச் செய்யாது மடங்கு மாயின், யாவரும் விழையுமுணவும் யாந்துறந்தே மென்பார்க்கு *அவ்வறத்தின் கணிற்றலு முளவாகா, (எ-று).

†உம்மை இறுதிக்கண்ணும் வந்தியைந்தது. உணவின்மையால், தாமுண்டலும் இல்லறஞ் செய்தலும் யாவர்க்கு மில்லையாயின. ‡அவருறுப்பு மாத்திரமாய கை வாளாவிருப்பின் உலகத்து இம்மை மறுமை வீடென்னும் பயன்கள் நிகழா வென்பதாம். ¶ஒன்றனை மனத்தால் விழைதலுமொழிந்தே மென்பார்க்கென வுரைப்பாரு முளர். இவையைந்து பாட்டானும் $அதனைச் செய்வாரது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) உழவினார் - உழுதலையுடையவர், கைம் மடங்கின் - கை (அவ்வுழுதலைச் செய்யாது) மடங்குமாயின், விழை வதூஉம் - (யாவரும்) விரும்புமுணவையும், விட்டேமென்பார்க்கு - (யாம்) துறந்தோ மென்பார்க்கு, நிலை - (அவ்வறத்தின்கண்) நிற்றலும், இல்லை - உளவாகா, (எ-று).

* அவ்வறத்தின்கண் - துறவறத்தில்.

† விழைவதூஉம் என்னும் உம்மை நிலையென்பதன்கண்ணும் வந்து பொருந்தியது. ‡ அவர் - உழவினார்.

¶ விழைவதூஉம் விட்டே மென்பார்க்கு என்பதற்கு ஒரு பொருளை மனத்தால் விரும்புதலும் ஒழிந்தே மென்பார்க்கு என்று பொருள் கூறுவாரு முண்டென்பது. $ அதனை - உழுதலை,

உம்மை இறுதியிலும் வந்தியைந்தது. (உழவினர் கைம்மடங்கின்) உணவில்லாமையால், தாமுண்டலும் இல்லறம் செய்தலும் யாவர்க்கு மில்லையாயின. அவருறுப்பு மாத்திரமாகிய கை சும்மாவிருக்கின் உலகத்தில் இம்மை மறுமை வீடென்னும்பயன்கள் நிகழாவென் பதாம். இவ்வையந்து பாட்டாலும் அதனைச் செய்வாரது சிறப்புச் சொல்லப்பட்டது.

(க-து.) உழுதற்றொழில் நின்றவிடத்துத் துறவிகள் தம் மறத்தின் கணிற்றலுமில்லை என்பது.

6. If the farmers' hands remain folded, the state of the ascetics who have left all what other men love, will fail.

---

## எ. தொடிப்புழுதி கஃசா வுணக்கிற் பிடித்தெருவும் வேண்டாது சாலப் படும்.

பரி :—(இ-ள்.) ஒரு நிலத்தினை யுழுதவன் ஒரு பலப்புழுதி கஃசாம் வண்ணம் †அதனைக் காய விடுவனாயின், ‡அதன்கட் செய்தபயிர் ஒரு பிடியின்க ணடங்கிய எருவுமிட வேண்டாமற் பணைத்து விளையும், (எ-று).

பிடித்து—பிடியின்கண்ணது ; *பிடித்தவென்பதன் விகாரமென் பாருமுளர். வேண்டாமல் சான்று என்பன திரிந்து நின்றன.

தெளி:—(இ-ள்.) (ஒரு நிலத்தினை யுழுதவன்) தொடிப்புழுதி - ஒரு பலப்புழுதி, கஃசா - காற்பலமாம்படி, உணக்கின் - (அதனைக்) காயவிடுவனாயின், (அதனிடத்துச் செய்த பயிர்), பிடித்தெருவும் - ஒரு பிடியில் அடங்கிய எருவும், வேண்டாது - (இட) வேண்டாமல், சாலப்படும் - பருத்து விளையும், (எ-று).

பிடித்து - பிடியிலுள்ளது. வேண்டாமல் என்பது வேண்டாது என்றும், சான்று (பருத்து) என்பது சால என்றும் திரிந்து நின்றன.

(க-து.) உழுதலாலுண்டாகிய புழுதி நன்றாய் உலருமாறு செய்து பயிரிடும் நிலத்திற்கு எருவிடுதல் அநாவசியமாம் என்பது.

7. If the land is dried so as to reduce one pollum of earth to a quarter, it will secure abundant crops even without a handful of manure.

---

† அதனை - புழுதியை

‡ அதன்கண் - அந்நிலத்தில்.

* பிடித்தெரு என்பதைப் பிடித்து எரு எனப்பிரிக்காது, பிடித்த எரு எனப்பிரித்து, பிடித்த என்னும் பெயரெச்சத்து அகர விகுதி (அ) செய்யுள் விகாரத்தால் தொக்குநின்றது என்று கூறுவாருமுளர்.

அ. ஏரினு நன்று லெருவிடுதல் கட்டபி
னீரினு நன்றதன் காப்பு.

பரி:—(இ-ள்.) அப்பயிர்க்கு அவ்வுழுதலினும் எருப்பெய்தல் நன்று; *இவ்விரண்டுஞ் செய்து களைகட்டால் †அதனைக் காத்தல் ‡அதற்கு நீர்கால் யாத்தலினு நன்று, (எ-று).

*ஏர் – ||ஆகுபெயர். காத்தல் – பட்டி §முதலியவற்றுன் அழிவெய்தாமற் காத்தல். உழுதல், எருப்பெய்தல், களைகட்டல், £நீர் கால் யாத்தல், காத்த லென்றிம்முறையவாய இவ்வைந்தும் வேண்டு மென்பதாம்.*

தெளி:—(இ-ள்.) (அப்பயிர்க்கு) ஏரினும் - அவ்வுழுதலினும், எருவிடுதல்-எருப்பெய்தல், நன்று-நல்லது, கட்டபின்-(இவ்விரண்டுஞ் செய்து) களைபிடுங்கினால், அதன் காப்பு-அதனைக் காத்தல், (அதற்கு) நீரினும்-நீர் பாய்ச்சலினும், நன்று - நல்லது, (எ-று).

*ஏர் என்பது (ஏரினால்) உழுதலையுணர்த்துதலால் கருவியாகு பெயராம். ஆல்-அசை. காத்தல்-பட்டிமாடு முதலியவற்றால் அழிவடையாமற் (பயிரைக்) காத்தல். உழுதல், எருப்பெய்தல், களை பிடுங்கல், நீர் பாய்ச்சல், காத்தல் என்று இம்முறையினவாகிய இவ்வைந்தும் (பயிர்க்கு) வேண்டுமென்பதாம்.*

(க-து.) *உழுது பயிர் செய்வோர் அதற்கு உழுதல் முதலிய ஐந்தும் செய்யவேண்டும் என்பது.*

8. Manuring is better than ploughing; after weeding well, watching is better than watering.

———

க. செல்லான் கிழவ னிருப்பி னிலம்புலந்
தில்லாளி னூடி விடும்.

பரி:—(இ-ள்.) அந்நிலத்திற் குரியவன் அதன்கணுடோறுஞ் சென்று பார்த்து அடுத்தனசெய்யாது மடிந்திருக்குமாயின், அஃது அவனில்லாள் போலத் தன்னுள்ளே வெறுத்துப் பின்னவனோ டூடிவிடும், (எ-று).

*$செல்லுதல் - ஆகுபெயர். பிறரை யேவியிராது தானே சேறல்*

---

* *இவ்விரண்டும் - உழுதலும், எருவிடுதலும்.*

† *அதனை - அப்பயிரை.* ‡ *அதற்கு - அப்பயிர்க்கு.*

|| *ஏர் என்னும் கருவியின் பெயர் அதன் காரியமாகிய உழுதலை யுணர்த்துதலால், கருவியாகு பெயராம்.*

§ *முதலிய என்றமையின், பறவை, பூச்சி முதலியவற்றையுங் கொள்க.*

£ *நீர்கால்யாத்தல் - நீரைக் கால்வாயினின்றும் பாயச் செய்தல்.*

$ *செல்லுதல் என்னும் கருவியின் பெயர் அதன் காரியமாகிய பார்த்து அடுத்தன செய்தலை யுணர்த்துதலால், கருவியாகுபெயராம். பார்த்து அடுத்தன செய்தற்குச் செல்லுதல் காரணமா மென்க. செல்லுதல் என்பது செல்லானென்னும் முற்றெச்சத்தின் பகுதியாய செல் என்பதாம்.*

வேண்டுமென்பது போதரக் 'கிழவன்' என்றார். †அதன்கட்சென்று வேண்டுவன செய்யாது வேறிடத் திருந்தவழி £மனையாளூடுமாறு போல வென்றது ‡அவன் போகமிழத்தலை நோக்கி. இவை மூன்று பாட்டானும் *அது செய்யுமாறு கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.)கிழவன்-(அந்நிலத்திற்கு) உரியவன், செல்லான்-(அந்நிலத்தினிடத்து நாள்தோறும்) சென்றுபார்த்து வேண்டியவற்றைச் செய்யாமல், இருப்பின்-(சோம்பி) இருப்பானாயின், நிலம்-அந்நிலம், இல்லாளின்-(அவன்) மனைவிபோல, புலந்து-(தன்னுள்ளே) வெறுத்து, (பின்), ஊடிவிடும்-(அவனோடு) பிணங்கிவிடும், (எ-று).

செல்லுதல்-ஆகுபெயர் (பயிர் செய்யும் நிலத்தின்கண்) பிறரை ஏவியிராமல் தானே செல்லுதல் வேண்டுமென்பது தோன்றக் 'கிழவன்' என்றார். அந்நிலத்தினிடத்துச் சென்று வேண்டுவனவற்றைச் செய்யாது வேறிடத்திருந்தவிடத்து இல்லாளூடுமாறுபோல வென்றது அவன் போக மிழத்தலைக் கருதியாம். இவை மூன்று பாட்டாலும் அது செய்யும்விதம் சொல்லப்பட்டது. ஊடுதல்-பிணங்குதல்.

(க-து.) விளைநிலத்திற்கு வேண்டுவனவற்றைச் செய்யாது சோம்பியிருப்பவன் அதன் பயனையடையான் என்பது.

9. If the owner stands aloof without personally attending to his cultivation, his land will sulk like an angry wife and yield him no pleasure.

———

கO. இலமென் றசைஇ யிருப்பாரைக் காணி
னிலமென்னு நல்லா ணகும்.

பரி:—(இ-ள்.) யாம் வறியமென்று சொல்லி மடிந்திருப்பாரைக் கண்டால், நிலமகளென்று உயர்த்துச் சொல்லப்படுகின்ற நல்லாள் தன்னுள்ளே நகாநிற்கும், (எ-று).

---

† ஒருவன் தன் மனைவியினிடத்து நாடோறும் சென்று வேண்டுவனவற்றைச் செய்யாது வேறிடத்திருந்தவிடத்து அவள் தன்னுள்ளே வெறுத்துப்பின் அவனோடு பிணங்குவதுபோல விளைநிலத்திற்குரியவனும், அதனிடத்து நாடோறும் சென்று வேண்டுவனவற்றைச் செய்யாது வேறிடத்திருந்தவிடத்து அது (அவ்விளைநிலம்) தன்னுள்ளே வெறுத்துப் பின் அவனோடு பிணங்குமென்பதாம். தன்கட்சென்று-(மனைவியாகிய தன்னிடத்து வந்து) என்றும் பாடமுண்டு.

£ இல்லாளூடுமாறுபோல என்றும் பாடமுண்டு.

‡ அவன் போகமிழத்தலை நோக்கி என்றது அந்நிலத்திற்குரியவன் அந்நிலத்தின் போகத்தை (விளைவாகிய பயனை) யிழத்தலைக் கருதியாம்.

* அது - உழவு.

உழுதன் முதலிய செய்வார்யாவர்க்குஞ் செல்வங் கொடுத்து வருகின்றவாறுபற்றி 'நல்லாள்' என்றும், 0அது கண்டுவைத்தும், ×அவை செய்யாது வறுமை யுறுகின்ற பேதைமைபற்றி 'நகும்' என்றுங் கூறினர். ||இரப்பாரை யென்று பாட மோதுவாரு முளர். இதனுல் §அது செய்யாதவழிப் படுமிழுக்குக் கூறப்பட்டது. $வருகின்ற வதிகார முறைமைக்குக் காரணமுமிது.

தெளி:—(இ-ள்.) இலமென்று – (யாம்)வறியேமென்று சொல்லி, அசைஇ யிருப்பாரை – சோம்பியிருப்பவரை, காணின் – கண்டால், நிலமென்னுநல்லாள் – நிலமக ளென்று உயர்த்திச் சொல்லப்படுகின்ற நல்லாள், நகும் – (தன்னுள்ளே) சிரியாநிற்பள், (எ–று.)

உழுதல்முதலியவற்றைச் செய்வார் யாவர்க்கும் செல்வங் கொடுத்துவருகின்ற விதம்பற்றி 'நல்லாள்' என்றும், அதுகண்டிருந்தும் அவற்றைச் செய்யாது வறுமையுறுகின்ற அறிவில்லாமைபற்றி 'நகும்' என்றும் சொல்லினர். இதனல் அது செய்யாதவிடத்து உண்டாகும் இழுக்குச் சொல்லப்பட்டது. வருகின்ற அதிகார முறைமைக்குக் காரணமுமிது.

(க-து) யாம் வறியேமென்று கூறி, உழுதல் முதலியவற்றைச் செய்யாது சோம்பியிருப்பவர் அவமதிப்படைவர்.

10. The maiden earth will laugh to see men seated idle, pleading poverty.

---

## கo - அதிகாரம்

## ١٥٥ நல்குரவு—Poverty

பரி :—அஃதாவது நுகரப்படுவன யாவு மில்லாமை.

தெளி:—அஃதாவது அனுபவிக்கப்படுவனயாவும் இல்லாமை.

---

க. *இன்மையி னின்னுத தியாதெனி னின்மையி
னின்மையே யின்னு தது.

---

0 அது கண்டுவைத்தும் – உழுதல், எருவிடுதல், களைபிடுங்கல், நீர் பாய்ச்சல், பட்டி (திருட்டு) மாடு முதலியவற்றுலழிவடையாமற் காத்தல் செய்வார் யாவர்க்கும் செல்வங்கொடுத்து வருகின்ற விதத்தைப் பார்த்தும்.

× அவை – உழுதல் முதலியவற்றை.

|| இருப்பாரை என்பதற்குப் பிரதியாக இரப்பாரை (யாசிப்பாரை) என்று பாடங் கூறுவாருமுண்டு. § அது – உழவு.

$ வருகின்ற அதிகாரம் – நல்குரவாம்; நல்குரவிற்குக் காரணம் இலமென்றசைஇ யிருத்தலாம் (யாம் வறியேமென்றுகூறிச் சோம்பியிருத்தலாம்). அதுபற்றி உழவின்பின் நல்குரவு வைக்கப்பட்டது.

* "வறுமை போல வின்னுது வறுமை யன்றி வேறில்லை" என்று விநாயகபுராணங் கூறுகின்றது.

பரி:—(இ-ள்.) ஒருவனுக்கு வறுமைபோல வின்னாதது யாதென்று வினவின், வறுமைபோல வின்னாதது வறுமையே, பிறிதில்லை, (எ-று).

இன்னாதது - துன்பஞ்செய்வது. †ஒப்பதில்லையெனவே, மிக்க தின்மை சொல்லவேண்டாவாயிற்று.

தெளி :—(இ-ள்.) இன்மையின் - (ஒருவனுக்கு) வறுமைபோல, இன்னாதது - துன்பஞ்செய்வது, யாதெனின் - யாதென்று கேட்டால், இன்மையின் - வறுமைபோல, இன்னாதது - துன்பஞ்செய்வது, இன்மையே - வறுமையே, (வேறில்லை), (எ-று).

வறுமைக்கு ஒப்பதில்லை யெனவே, அதற்கு மிக்கதில்லாமை சொல்ல வேண்டாவாயிற்று.

(க-து.) வறுமைபோலத் துன்பஞ் செய்வது பிறிதொன்றில்லை என்பது.

1. If you ask what sharper pain than poverty is, you will find there is nothing that afflicts one more than poverty, than poverty alone.

---

உ. இன்மை யெனவொரு பாவி மறுமையு
மிம்மையு மின்றி வரும்.

பரி:—(இ-ள்.) வறுமையென்று சொல்லப்படுவ தொருபாவி ஒருவனுழை வருங்கால் அவனுக்கு மறுமையின்பமு மிம்மையின்பமு மில்லையாக வரும், (எ-று).

'இன்மை யெனவொரு பாவி' என்பதற்கு மேல் 0'அழுக்கா-றென வொருபாவி' என்புழி யுரைத்தாங் குரைக்க. ()மறுமை

---

† இன்மையின் இன்னாதது இன்மையே என்றுரைப்பதில்லை யெனவே.

0 அழுக்காறுமை - அ. (இலக்கண நூலார் கொள்கைப்படி) இன்மை யென்னும் பண்பிற்கு (குணத்திற்கு)ப் பண்பி (பண்பியாந் தன்மை அஃதாவது இன்மையென்னுங் குணமே மற்றொரு குணத்தை யேற்றுக் குணியாகுந்தன்மை) யில்லையேனும், தன்னை (இன்மையாகிய தன்னை) யாகிஞனை (சோமபலா லுண்டுபண்ணினவனை) இருமையும் (இம்மைப் பயனும் மறுமைப் பயனும்) கெடுத்தற் கொடுமைபற்றி இன்மையைப் பாவி என்றார்; கொடியானைப் பாவி யென்னும் வழக்குண்மையின் என்பது. இஃது உரைத்தாங்குரைக்க என்பதன் விரிவு.

() மறுமை, இம்மை என்னு மிடப்பெயர்கள் மறுமையினும் இம்மையிலும் நிகழும் இன்பங்களை யுணர்த்துதலால், இடவாகு-பெயர்களாம் மறுமை - தேவருலகம்; இம்மை - இவ்வுலகம்.

*இம்மையென்பன ஆகுபெயர். *ஈயாமையானுந் துவ்வாமையானும் அவை யிலவாயின. †இன்றிவிடுமென்று பாடமோதிப் பாவியாலென விரித்துரைப்பாருமுளர்.*

தெளி :—(இ-ள்.) இன்மை யெனவொரு பாவி - வறுமையென்று சொல்லப்படுவதொரு பாவி, (ஒருவனிடத்து வரும்போது அவனுக்கு), மறுமையும் - மறுமையின்பமும், இம்மையும் - இம்மையின்பமும், இன்றி - இல்லையாக, வரும் - வாராநிற்கும், (எ-று).

'இன்மையெனவொரு பாவி' என்பதற்கு மேல் 'அழுக்காறெனவொரு பாவி' என்றவிடத்துச் சொல்லியவாறு சொல்லிக்கொள்க. மறுமை இம்மையென்பன இடவாகுபெயர். கொடாமையாலும் அனுபவியாமையாலும் அவையிலவாயின.

(க-து.) வறுமையுடையவனுக்கு இம்மையின்பமும் மறுமையின் பமும் இல்லை என்பது,

2. When poverty comes, it destroys this world's and the next world's joys.

---

௩. தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக
நல்குர வென்னு நசை.

பரி:—(இ-ள்.) நல்குரவென்று சொல்லப்படு மாசை தன்னுற் ‡பற்றப் பட்டாருடைய பழைய குடிவரவினையும் §அதற்கேற்ற சொல்லினையும் ஒருங்கே கெடுக்கும், (எ-று).

*$நசையில்வழி நல்குரவு மில்லையாகலின், நல்குரவையே நசை யாக்கி, ¶அஃதுஅக்குடியிற்றெல்லோர்க்கில்லாதஇழிதொழில்களையும்*

---

* ஈயாமையால் மறுமையின்பமும் துவ்வாமையால் இம்மையின் பமும் இலவாயினவென்பதாம்.

† இன்றிவரும் என்பதற்குப் பிரதியாக இன்றிவிடும் என்று பாடங்கூறி, பாவியென்பதனைப் பாவியால் என (மூன்றனுருபு) விரித்து, (வறுமையென்று சொல்லப்படுவதொரு பாவியால் மறுமை யின்பமும் இம்மையின்பமும் இல்லா தொழியும் என்று) சொல்லு வாருமுண்டு.

‡ பற்றப்பட்டார் - பிடிக்கப்பட்டவர்.

§ அதற்கேற்ற - பழைய குடிவரவிற்குத் தகுந்த.

$ "நசையிற் பெரியதோர் நல்குரவில்லை" என்பது முதுமொழிக் காஞ்சி.

¶ அஃது - நசை (ஆசை).

இளிவந்த சொற்களையு முளவாக்கலான் *அவ்விரண்டினையுந் †தொகையாகக் கெடுக்கும் என்றார். ‡"குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும்" என்றார் பிறரும். தோலாவது §"இழுமென் மொழியால் விழுமியது நுவறல்" என்றார் தொல்காப்பியனாரும். $இதற்கு உடம்பென்றுரைப்பாருமுளர்; ¶அஃததற்குப் பெயராயினும் உடம்பு கெடுக்கு மென்றற்கோர் பொருட் சிறப்பில்லாமையறிக.

தெளி :—(இ-ள்.) நல்குரவென்னும் – வறுமையென்று சொல்லப் படும், நசை – ஆசை, தொல்வரவும்-(தன்னால் பற்றப்பட்டவருடைய) பழைய குடிவரவினையும், தோலும் – (அதற்கேற்ற) சொல்லினையும், தொகையாக – ஒருமிக்க, கெடுக்கும் – , (எ-று).

நசையில்லாதவிடத்து நல்குரவும் இல்லையாதலால், நல் குரவையே நசையாக்கி, அஃது அக்குடியிற் பிறந்த முன்னோர்க் கில்லாத இழிதொழில்களையும் இளிவந்த சொற்களையும் உண்டாக் கலால் அவ்விரண்டனையும் தொகையாக (ஒருமிக்க)க் கெடுக்கும் என்றார்.

(க-து.) வறுமையானது உயர்குடிப் பிறப்பினையும் அதற்கேற்ற சொல்லினையு மொருங்கே கெடுக்கும் என்பது.

3. Hankering poverty destroys both the ancient descent and the dignity of its fame.

---

ச. இற்பிறந்தார் கண்ணேயு மின்மை யிளிவந்த
சொற்பிறக்குஞ் சோர்வு தரும்.

பரி :—(இ-ள்.) இளிவந்த சொற்பிறவாத குடிப்பிறந்தார் மாட்டேயும் அது பிறத்தற்கேதுவாகிய சோர்வினை நல்குரவு உண்டாக்கும், (எ-று).

£சிறப்பும்மை ∅அவர்மாட்டு 0அது பிறவாமை தோன்றநின்றது.

---

* அவ்விரண்டினையுந் – தொல்வரவையும் தோலையும்.

† ஒருங்கு கெடுக்கும் என்றும் பாடமுண்டு.

‡ மணிமேகலை-பாத்திரம் பெற்ற காதை, 76-வது வரி: இதன் பொருள், (பசிப்பிணியானது தன்னாற் பற்றப்பட்டாருடைய) உயர் குடிப் பிறப்பையும் கெடுக்கும்; (அக்குடிக்கிருந்த) சிறப்பையும் அழிக்கும் என்பது.

§ தொல்காப்பியம்-செய்யுளியல், 239. இதன் பொருள். மெல் லென்ற சொல்லால் (அறம் பொருள் இன்பம் வீடு என்னும்) சிறந்த பொருள் (உண்டாகச்) சொல்லுதல் என்பது.

$ இதற்கு - தோல் என்பதற்கு.

¶ அஃததற்கு - தோல் உடம்பிற்கு.

£ சிறப்பும்மை - இற்பிறந்தார் கண்ணேயுமென்ற வுயர்வு சிறப்பும்மை

∅ அவர் - இற்பிறந்தார். 0 அது - இளிவந்த சொல்.

இளிவந்தசொல்- *இளிவருதற்கேதுவாகியசொல்; அஃதாவது எமக்கியவேண்டு மென்றல். சோர்வு-தாமுறுகின்ற துன்பமிகுதிபற்றி ஓரோ வழித் தம்பிறப்பினை மறந்து †அது சொல்லுவதாக நினைத்தல்.

தெளி :–(இ-ள்.) இன்மை-வறுமையானது, இற்பிறந்தார்கண்ணேயும்-(இளிவந்த சொல்பிறவாத) குடியிற் பிறந்தவரிடத்தேயும், இளிவந்தசொல்-அவ்விளிவந்தசொல், பிறக்கும்-பிறத்தற்குக் காரணமாகிய, சோர்வு-சோர்வினை, தரும்-உண்டாக்கும், (எ–று).

சிறப்பும்மை அவரிடத்து அது பிறவாமை தோன்ற நின்றது. இளிவந்த சொல்லாவது இளிவருவதற்குக் காரணமாகிய சொல்; அஃதாவது எமக்கு ஈயவேண்டு மென்றல். சோர்வு-இற்பிறந்தார் தாம் அடைகின்ற துன்பமிகுதிபற்றி ஓரோவிடத்துத் தங்குடிப்பிறப்பினை மறந்து அதனைச் சொல்லுவதாக நினைத்தல். இளி-இழிவு.

(கூ-து.) வறுமையானது உயர்ந்த குடியிற் பிறந்தாரிடத்தும் அவமானச் சொல்லை உண்டாக்கும் என்பது.

4. Even in those of noble birth, poverty will give rise to words that bring disgrace.

---

ரு. நல்குர வென்னு மிடும்பையுட் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும்.

**பரி :–(இ-ள்) நல்குரவென்று சொல்லப்படுந் துன்பமொன்றனுள்ளே பல துன்பங்களும் வந்து விளையும், (எ-று).**

குரை- ‡இசைநிறை. ¶செலவு-வரவின்கண் வந்தது. 0 துன்பமும்

---

* இளிவருதற்கேதுவாகியசொல்-இழிவுவருதற்குக் காரணமாகிய சொல்; அஃதாவது இல்லார் உள்ளாரை நோக்கி யாதாவது எமக்கீய வேண்டுமென்று கூறுதலாம். "ஈயென் கிளவி யிழிந்தோன் கூற்றே" என்பது தொல்காப்பியம். † அது-இளிவந்தசொல்.

‡ செய்யுளில் இசை (ஓசையை) நிறைத்துவருவது இசைநிறை யெனப்படும் தொல்காப்பியம்-இடைச்சொல்லியல் "ஏயுங் குரையு மிசைநிறை யசைநிலை, யாயிரண் டாகு மியற்கைத் தென்ப" என்று கூறுகின்றது.

¶ சென்று என்பதன் பகுதியான செலவு என்பது வரவென்னும் பொருளில் வந்தது செலவு-விரைவின் கண்வந்தது என்றும் பாட முண்டு.

0 நல்குரவு (வறுமை) நிகழ்ந்தபோதே துன்பமும் நிகழ்தலின், விரைவு பற்றி நல்குரவைத் துன்பமாக்கி 'நல்குர வென்னு மிடும பையுள்' என்று கூறினர். இது காரணம் காரியமாய வுபசார வழக்காம். நல்குரவு-காரணம; இடும்பை-காரியம்.

‡தானுமுடனே நிகழ்தலின் நல்குரவைத் துன்பமாக்கியும், அத்துன்ப மடியாகச் செல்வர் கடைநோக்கிச் சேறற்றுன்பமும், அவரைக் காண்டற்றுன்பமும், கண்டான் மறுத்துழி நிகழுந்துன்பமும், மறு வழியும் அவர் கொடுத்தது வாங்கற் றுன்பமும், அது கொடுவந்து நுகர்வன கூட்டற்றுன்பமு முதலாயின நாடொறும் வேறுவேருக வருதலின் †'பல்குரைத் துன்பங்கள் சென்று படும்' என்றுங் கூறினர். இவை யைந்துபாட்டானும் நல்குரவின் கொடுமை கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) நல்குரவென்னும்-வறுமையென்று சொல்லப் படும், இடும்பையுள்-துன்பமொன்றனுள்ளே, பல்-பலவாகிய, துன்பங்கள்-துன்பங்களும், சென்று-வந்து, படும்-விளையும், (எ-று).

குரை-இசைநிறை. செலவு-வருதலென்னும் பொருளில் வந்தது. துன்பமும் தானும் உடனே தோன்றுதலால் 'நல்குரவென்னு மிடும் பையுள்' என்று வறுமையைத் துன்பமாக்கியும், அத்துன்பங் காரணமாகச் செல்வர் மனைவாயிலைநோக்கிச் செல்லுதற்றுன்பமும், அவரைக்காணுதற்றுன்பமும், கண்டால் அவர் இல்லையென்று மறுத்த விடத்து உண்டாகுந்துன்பமும், மறுக்காதவிடத்தும் அவர் கொடுத்த பொருளை வாங்குதற்றுன்பமும், அப்பொருளைக்கொண்டுவந்து அனுப விப்பனவற்றைக் கூட்டுதற்றுன்பமும் முதலானவை நாள்தோறும் வேறுவேருகவருதலால் 'பல்குரைத் துன்பங்கள் சென்றுபடும்' என்றும் சொல்லினர். இவை ஐந்துபாட்டாலும் வறுமையின் கொடுமை சொல்லப்பட்டது.

(க-து.) வறுமையுடையான் துன்பம் பலவற்றிற் குறைவிட மாவன் என்பது.

5. From the misery of poverty, attendant sorrows grow plentiously.

---

சு. * நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும்.

பரி :—(இ-ள்) மெய்ந்நூற்பொருளைத் தெளியவறிந்து சொன்னு ராயினும், நல்கூர்ந்தார் சொல்லியசொல் பொருளின்மையைத் தலைப் படும், (எ-று).

பொருளின்மையைத் தலைப்படுதலாவது யாமிவர் சொல்லியன

---

‡ தானும்-நல்குரவும் (வறுமையும்).

† பல துன்பங்களும் வந்து விளையும் என்றும், எல்லாத் துன்பங் களுமுளவாமென்றும் பாடமுண்டு.

* ''எனைத்துணைய வேனு மிலம்பாட்டார் கல்வி, தினைத்துணை யுஞ்சேர்ப்பா டிலவாம்'' என்று நீதிநெறி விளக்கங் கூறுகின்றது.

விரும்பிக் ()கேட்குமாயிற் கண்ணோடி இவருறுகின்ற குறை முடிக்க் வேண்டும் மென்றஞ்சி யாவருங் கேளாமையிற் பயனில்சொல்லாய் முடிதல். கல்வியும் பயன்படா தென்பதாம்.

தெளி :— (இ-ள்.) நற்பொருள்-மெய்ந்நூற்பொருளை, நன் குணர்ந்து-தெளியவறிந்து, சொல்லினும்-சொன்னாராலும், நல் கூர்ந்தார்-வறுமையுடையவர், சொல்-சொல்லிய சொல்லானது, பொருள் சோர்வு-பொருளில்லாமையை, படும்-தலைப்படும், (எ-று).

பொருளில்லாமையைத் தலைப்படுதலாவது யாம் இவர் சொல்லி யவற்றை விரும்பிக் கேட்போமாயின் முகங்கொடுத்து இவரடை கின்ற குறையை முடிக்கவேண்டுமென்று அஞ்சி யாவரும் கேளாமை யால், பயனில் சொல்லாய் முடிதல். (வறுமையுடையவர்) கல்வியும் பயன்படா தென்பதாம்.

(கூ-து.) வறியவர் மெய்ந்நூற்பொருளைத் தெளியவறிந்து சொன் னாலும், அது பயன்படாதுபோம் என்பது.

6. The words of the poverty-stricken, will be valueless, though they may be deep in sense and clear in expression.

---

எ. *அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும்.

பரி:—(இ-ள்.) அறத்தோ டியைபில்லாத நல்குரவுடையான் தன்னை யீன்ற தாயானும் பிறனைக் கருதுமாறுபோலக் கருதி நோக்கப்படும், (எ-று).

†அறத்தோடுகூடாமை-‡காரணகாரியங்களு ளொன்றுனுமியை

()கேட்டுமாயின் (கேட்டோமானல்) என்றும் பாடமுண்டு.

*"தாயும் பகைகொண்ட பெண்டிர் பெரும்பகை தன்னுடைய, சேயும் பகையுறவோரும் பகையிச் செகமும்பகை, ஆயும் பொழுதி லருஞ்செல்வ நீங்கில்" என்று பட்டினத்தடிகள் கூறுவதிங்குணர்தற் பாலதாம்.

†அறத்தோ டியைபில்லாமை என்றும் பாடமுண்டு.

‡அறத்தின் காரியம் செல்வமாயும் பாவத்தின் காரியம் தரித்திர மாயுமிருத்தலின், 'காரணகாரியங்களு ளொன்றுனு மியையாமை' என்று கூறப்பட்டது. நல்குரவு அறத்தின் காரியமாகாமையின் 'அறஞ்சாரா நல்குரவு' என்று கூறினர். காரணகாரியங்களுள் ஒன்றுனுமியையாமையாவது அறத்தோடு நல்குரவும், பாவத்தோடு செல்வமும் பொருந்தாமையாம், எனவே, அறத்தோடு செல்வமும் பாவத்தோடு நல்குரவும் பொருந்துமென்பதாயிற்று. இங்குப் பொருந்துதலாவது செல்வம் அறத்தின் காரியமும் நல்குரவு பாவத் தின் காரியமு மாதலாம்.

யாமை. *நல்குரவு-ஆகுபெயர். சிறப்பும்மை †அவளதியற்கை யன்புடைமை விளக்கிநின்றது. கொள்வதின்றுதலே யன்றிக் கொடுப்பதுண்டாதலு முடைமையின், ¶அது நோக்கிச் சுற்றத்தார் யாவருந் துறப்பரென்பதாம்.

தெளி:—(இ-ள்.) அறஞ்சாரா-அறத்தோடு பொருந்துதலில்லாத, நல்குரவு-வறுமையையுடையவன், ஈன்றதாயானும்-(தன்னைப்) பெற்ற தாயாலும், பிறன்போல-அன்னியனைக் (கருதும் விதம்) போல, நோக்கப்படும்-(கருதி) பார்க்கப்படுவான், (எ-று).

அறத்தோடு பொருந்துதலில்லாமை - காரண காரியங்களுள் ஒன்றுனும் அமையாமை. நல்குரவு-பண்பாகு பெயர். ஈன்றதாயானும் என்ற உயர்வு சிறப்பும்மை அவளது இயற்கையன்புடைமையை விளக்கிநின்றது. வறுமையுடையவ னிடத்துக் கொள்வதில்லாமையே யன்றிக் கொடுப்பதுண்டாதலு முடைமையால், அது நோக்கிச் சுற்றத்தார் யாவரும் அவனைக் கைவிடுவரென்பதாம்.

(க-து.) வறுமையுடையவன் தன்னைப் பெற்றதாயாலு மிகழப்படுவான் என்பது.

7. The poor man devoid of virtue's grace will be regarded as a stranger even by his mother.

---

அ. இன்றும் வருவது கொல்லோ நெருநலுங்
கொன்றது போலு நிரப்பு.

பரி:— (இ-ள்.) நெருநற்றுங் கொன்றது போன்று எனக்கின்னாதவற்றைச் செய்த நல்குரவு இன்றும் என்பால் வரக்கடவதோ, வந்தால் இனி யாது செய்வேன், (எ—று).

அவ்வின்னாதனவாவன:— §மேற்சொல்லிய துன்பங்கள். நெருநன் மிகவருந்தித் தன்வயிறு நிறைத்தானொருவான் கூற்று.

தெளி:— (இ-ள்.) நெருநலும்-நேற்றும், கொன்றதுபோலும்-கொன்றதுபோன்று (எனக்குத் துன்பங்களைச்) செய்த, நிரப்பு-வறுமையானது, இன்றும்-இன்றைக்கும், வருவதுகொல்லோ-(என்னிடத்து) வரக்கடவதோ, (வந்தால் இனி யாது செய்வேன்), (எ—று).

---

*நல்குரவு என்னும் பண்புப்பெயர் அதனை யுடையவனை யுணர்த்துதலால், பண்பாகுபெயராம்.

†அவளது (தாயினது) இயற்கையன்புடைமை விளக்கிநின்றது எனவே, அவளுக்கு மைந்தனிடத்துச் செல்வங் காரணமாகவன்றி இயற்கையாக அன்பில்லையென்பது பெறப்பட்டவாறறிக.

¶அது-கொடுப்பது.

§மேற்சொல்லிய – இவ்வதிகாரத்தின் ஐந்தாவது குறளிற் சொல்லிய.

அத்துன்பங்களாவன :- முன்னே சொல்லிய துன்பங்கள். இது நேற்று மிகவும் வருந்தித் தன் வயிற்றை நிறைத்தானொருவன் சொல்லிய சொல்லாம்.

(க-து.) வறுமைத் துன்பத்தைச் சகித்தல் முடியாதென்பது.

8. Will the grief of want that killed me yesterday come to me today too?

---

கூ நெருப்பினுட் டுஞ்சலு மாகு நிரப்பினுள்
யாதொன்றுங் கண்பா டரிது.

பரி.—(இ-ள்.) மந்திர மருந்துகளான் ஒருவனுக்கு நெருப்பிடையே கிடந்துறங்கலுமாம்; நிரப்பு வந்துழி யாதொன்றுனு முறக்கமில்லை, (எ-று).

நெருப்பினும் நிரப்புக் கொடிதென்றவா றாயிற்று. *இதுவுமவன் கூற்று. இவை நான்கு பாட்டானும் நல்கூர்ந்தார்க்குளதாங் குற்றங் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) நெருப்பினுள் - தீயின் நடுவே, துஞ்சலும் - (கிடந்து) தூங்கலும், ஆகும் - (மந்திரமருந்துகளால் ஒருவனுக்குக்) கூடும், நிரப்பினுள் - வறுமை வந்தவிடத்து, யாதொன்றும் - யாதொன்றுலும், கண்பாடு - தூங்குதல், அரிது - இல்லை, (எ-று).

('நெருப்பினுட் டுஞ்சலு மாகும்' என்றதனுல்) நெருப்பினும் வறுமை கொடிதென்றபடி யாயிற்று இதுவும் அவன் சொல்லிய சொல்லாம். இவை நான்கு பாட்டாலும் வறுமையுடையார்க்கு உண்டாகுங் குற்றம் சொல்லப்பட்டது.

(க-து.) வறுமையுடையவனுக்குத் தூக்கமும் இல்லை என்பது.

9. One may sleep in the midst of fire; but in poverty the eye knows no repose.

---

கO. துப்புர வில்லார் துவரத் துறவாமை
யுப்பிற்குங் காடிக்குங் கூற்று.

பரி:—(இ-ள்.) நுகரப்படும் பொருள்க ளில்லாதார் தம்மாற் செயற் பாலது முற்றத்துறத்தலேயாகவும், ‡அது செய்யா தொழிதல் பிறரில்லி னுளவாய உப்பிற்குங் காடிக்குங் கூற்றும், (எ-று).

மான மழியாமையிற் செயற்பாலது †அதுவே யாயிற்று. முற்றத்

* இதுவும் அவன் கூற்று - இக்குறளும் நேற்று மிகவும் வருந்தித் தன் வயிற்றை நிறைத்தானொருவன் சொல்லிய சொல்லாம்.

‡ அது - முற்றத் துறத்தல்.

† அதுவே - முழுதுந்துறத்தலே (இறத்தலே).

துறத்தல் – ||சுற்றந் தானே விட்டமையின் ஒருவாற்றாற் றுறந்தாரா யினார் நின்ற தம்முடம்பினையுந் துறத்தல். *அது செய்யாது கொண்டி ருத்தல் ‡இரண்டனையு மாளப்பண்ணுதலின், †அதனை ¶அவற்றிற்குக் 'கூற்று' என்றார். இனி முற்றத்துறத்தலாவது §துப்புர வில்லாமை யின் ஒருவாற்றாற் றுறந்தாராயினார் பின்னவற்றை மனத்தாற் றுறவாமை யென்றுரைப்பாரு முளர். இதனான் £அஃதுளதாயவழிச் செய்வது கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) துப்புரவில்லார் – அனுபவிக்கப்படும் பொருள் களில்லாதவர், (தம்மாற் செயற்பாலது முழுதுந் துறத்தலே யாகவும்), துவரத்துறவாமை – அம்முழுதுந் துறவாதொழிதல், (பிறர்வீட்டி லுள்ள), உப்பிற்குங் காடிக்கும்—, கூற்று – யமனும், (எ-று).

மானமழியாமையால் (துப்புரவில்லார்) செயற்பாலது அதுவேயா யிற்று. முழுதுந் துறத்தல்-சுற்றந்தானே விட்டமையால் ஒருவழியால் துறந்தாராயினார் நின்ற தம்முடம்பினையுந் துறத்தலாம். அது செய் யாது கொண்டிருத்தல் இரண்டனையும் மாளப்பண்ணுதலால், அதனை அவற்றிற்குக் 'கூற்று' என்றார். இதனால் அஃது உண்டானவிடத்துச் செய்வது இறத்தலே யெனச் சொல்லப்பட்டது. சுற்றம் – உறவினர்.

(க-து.) அனுபவிக்கப்படும் பொருள்களுள் யாதொன்று மில்லா தவர் முழுதுந்துறத்தலை மேற்கொள்ளுதலே தகுதியாம் என்பது.

10. The destitute poor who do not utterly deny themselves are a burden to their neighbours' salt and vinegar.

---

## கக-வது அதிகாரம்

## இரவு – Mendicancy

பரி:—இனி மானந் தீரா விரவு இரவாமையோ டொத்தலின், அதனாலும் வீடெய்தற்பயத்ததாய உடம் போம்பப்படு மென்னும் அற

---

|| சுற்றந் தானே விட்டமையின்-நல்கூர்ந்தாரைச் சுற்றம் (கொள் வதின்மை பற்றியும் கொடுப்பது பற்றியும்) தானே (நெகிழ) விட்ட மையால்.

* அது – உடம்பினைத் துறத்தல் (இறத்தல்).

‡ இரண்டனையும் – உப்பையும் காடியையும் (புளித்தநீரையும்).

† அதனை – துவரத்துறவாமையை.

¶ அவற்றிற்கு – உப்பிற்கும் காடிக்கும்.

§ அனுபவிக்கப்படும் பொருள்களில்லாமையால் ஒருவழியினால் துறந்தவராயினார் பின்பு அவ்வனுபவிக்கப்படும் பொருள்களை மனத் தால் துறவாமை (விடாமை அஃதாவது நினைத்துக்கொண்டேயிருத் தல்) என்று கூறுவாருமுண்டு. £ அஃது – வறுமை.

நூல் வழக்குப்பற்றி ¶மேலெய்திய £துவரத்துறத்தல் விலக்குதற் பொருட்டு இரவு கூறுகின்றார். †அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

தெளி:—இனி மானங்கெடாத விரத்தல் இரவாமையோடு ஒத்தலால், அவ்விரவினாலும் வீடுபெறுதற்கு உதவிசெய்வதாகிய உடம்பு பாதுகாக்கப்படுமென்னும் அறநூல் வழக்குப்பற்றி முன்னர்க் கூறிய துவரத்துறத்தலென்னும் இறத்தலை விலக்குதற்பொருட்டு இரவுசொல்லுகின்றார். அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும். இரவு-யாசித்தல்; இரவாமை-யாசியாமை; வீடு-மோட்சம்.

---

**க. இரக்க விரத்தக்கார்க் காணிற் கரப்பி**
**னவர்பழி தம்பழி யன்று**

பரி:—(இ-ள்.) நல்கூர்ந்தார் இரத்தற் *கேற்புடையாரைக் காணின் அவர்மாட் டிரக்க, இரந்தால் அவர் கரந்தாராயின், அவர்க்குப் பழியாவ தல்லது தமக்குப் பழியாகாமையான், (எ-று).

‡இரவென்னு முதனிலைத் தொழிற்பெயர திறுதிக்கண் நான் கனுருபு விகாரத்தாற் றொக்கது. இரத்தற் கேற்புடைய ராவார் - உரையாமைமுன் னுணருமொண்மை யுடையராய் மாற்றா தீவார். அவர் உலகத்தரியராகலிற் 'காணின்' என்றும், அவர்மாட் டிரந்தார்க்கு இரவான்வரு மிழிவின்மையின் 'இரக்க' என்றும், அவரீ தலிற் குறைகாட்டாமையிற் 'கரப்பின்' என்றும், 0காட்டுவராயின் அப்பழி தூவெள்ளறுவைக்கண் மாசுபோல அவர்கட் கடிதுசேறலின் 'அவர் பழி' என்றும், ஏற்பிலார்மாட் டிரவன்மையின் 'தம்பழியன்று' என்றுங் கூறினார்.

தெளி:—(இ-ள்.) (வறுமையுடையார்) இரத்தக்கார் - இரத்தற்கு ஏற்புடையவரை, காணின் - கண்டவிடத்து, இரக்க-(அவரிடத்து) இரக்கக்கடவர், (இரந்தால்), கரப்பின் - (அவர்) ஒளித்தாராயின், அவர்பழி-அவர்க்குப்பழி, (ஆவதல்லாமல்), தம்பழியன்று-தமக்குப் பழியாகாது, (ஆதலால்), (எ-று).

இர என்னும் முதனிலைத்தொழிற்பெயரது இறுதியில் நான் கனுருபு விகாரத்தால் தொக்கு நின்றது. இரத்தற் கேற்புடை யராவார்-சொல்லாமைக்கு முன்னே அறியுஞ்சிறப்புடையவராய்

---

¶ மேலெய்திய-நல்குரவதிகாரத்தின் பத்தாவது குறளிற்கூறிய.

£ துவரத் துறத்தல்-முழுதுந் துறத்தல்.

† நல்குரவு என்னும் அதிகாரத்தின்பின் இரவு என்னும் அதிகாரம் வைத்த முறைமையும்.

* ஏற்புடையார்-தகுதியுடையார்.

‡ இரத்தக்கார் என்பதன் பகுதியான இரவு என்பதனிறுதியில் (கு என்னும்) நான்கனுருபு செய்யுள் விகாரத்தாற்றொக்கு நின்றது.

0 காட்டுவராயின் - (உரையாமைமுன் னுணரு மொண்மை யுடையராய் மாற்றாதீவார்) குறைகாட்டுவாரானால்.

இல்லையென்னது கொடுப்பவர். அவர் உலகத்தில் அரியராகலால் 'காணின்' என்றும், அவரிடத்து இரந்தவர்க்கு இரவால்வரும் இழிவு (அவமானம்) இல்லாமையால் 'இரக்க' என்றும், அவர் கொடுத்தலில் குறைகாட்டாமையால் 'கரப்பின்' என்றும், காட்டுவராஞல் அப்பழி பரிசுத்தமான வெள்ளைத்துணியில் அழுக்குச்சேருதல் போல அவரிடத்துக் கடிதுசெல்லுதலால் 'அவர் பழி' என்றும், ஏற்பில்லாத வரிடத்து இரவல்லாமையால் 'தம்பழியன்று' என்றும் சொல்லினர்.

(க-து.) யாசிப்பவர் யாசித்தற்குரியாரிடத்தே யாசிக்கக்கடவர்; அஃதவர்க்குப் பழியாகாது என்பது.

1. When you find those from whom it is meet to ask for help, you may beg; but theirs is the sin and not yours if they with-hold their gift.

———

உ. இன்ப மொருவற் கிரத்த லிரந்தவை
துன்ப முறுஅ வரின்.

பரி:—(இ-ள்.) ஒருவற்கு இரத்தருனும் இன்பத்திற் கேதுவாம், இரந்த பொருள்கள் ஈவார துணர் வுடைமையாற் றுன் றுன்புறுமல் வருமாயின், (எ-று).

இன்பம்-ஆகுபெயர். உறுமலென்பது கடைக்குறைந்து நின்றது. துன்பம் — சாதியொருமைப்பெயர். அவையாவன: — ஈவார்கட் காலமுமிடனு மறிந்து சேறலும், அவர் குறிப்பறிதலும், அவரைத் தம்வயத்தராக்கலும், அவர் மனநெகிழ்வன நாடிச் சொல்லலு முதலியவற்ருன் வருவனவும், மறுத்துழி வருவனவுமாம். *அவை யுறுமல் வருதலாவது அவர் முன்னுணர்ந்தீயக் கோடல். †இரந்தவர் துன்ப முறுஅ வரி னென்று பாடமோதி, இரக்கப்பட்டவர் பொருளின்மை முதலியவற்ருற் றுன்புறுது எதிர்வந் தீவராயி னென்றுரைப்பாரு முளர். இவை யிரண்டுபாட்டானும் நல்குரவா னுயிர்நீங்கு மெல்லைக்கண் இளிவில்லாவிரவு விலக்கப்படா தென்பது கூறப்பட்டது.

தெளி: —(இ-ள்.) ஒருவற்கு-ஒருவனுக்கு, இரத்தல்-இரத்தல் தானும், இன்பம்-இன்பத்திற்கு ஏதுவாம், இரந்தவை-இரந்த பொருள்கள், (ஈவாரது அறிவுடைமையால்), துன்பமுறுஅ-(தான்) துன்பமுறுமல், வரின்-வருமாஞல், (எ-று).

இன்பம் என்பது இன்பத்திற்கேதுவை யுணர்த்துதலால், காரிய வாகு பெயராம். உறுமலென்பது உறுஅ எனக் கடைக்குறைந்து

* அவை - துன்பங்கள்.

† இரந்தவை துன்ப முறுஅ வரின் என்பதற்குப்பிரதியாக இரந்தவர் துன்ப முறுஅ வரின் என்று பாடங்கூறி, அதற்கு யாசிக்கப் பட்டவர் பொருளில்லாமை முதலியவற்ருல் துன்பமடையாது எதிர்வந்து கொடுப்பாராஞல் என்று பொருள் கூறுவாரு முண்டென்பது.

நின்றது. துன்பம் - ஈறுதோன்றாத சாதியொருமைப் பெயர், அத்துன்பங்களாவன :- ஈவாரிடத்துக் காலமும் இடமும் அறிந்து செல்லுதலும், அவரது குறிப்பறிதலும், அவரைத் தம்வயத்தராக்கலும், அவர் மனமிரங்கத்தக்கனவற்றை யாராய்ந்து சொல்லலும் முதலியவற்றால் வருவனவும், அவரில்லையென்று மறுத்தவிடத்து வருவனவுமாம். அவையுறாமல் வருதலாவது அவர் முன்னறிந்து கொடுக்கக் கொள்ளுதல். இவை இரண்டு பாட்டாலும் வறுமையால் உயிர் நீங்குமளவில் அவமானமில்லா விரவு விலக்கப்படாதென்பது சொல்லப்பட்டது.

(க-து.) யாசிப்பவனுக்கு யாசிக்கும் பொருள் துன்பமின்றி வருமாயின், யாசித்தல் அவனுக்கு இன்பத்திற்கேதுவாம்.

2. Even begging may give pleasure, if what is asked for is obtained without annoyance.

---

௩. **கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின்**
**றிரப்புமோ ரேஎ ருடைத்து.**

பரி :—(இ-ள்.) கரத்த லில்லாத நெஞ்சினையுடைய மானமறிவார் முன்னர் நின்று அவர்மாட்டொன் றிரத்தலும் நல்கூர்ந்தார்க்கு ஓரழகுடைத்து, (எ-று).

*'சிறிய சுருக்கத்து வேண்டு முயர்வு' என்றதனால், †அவர்க்கு ‡அது கடனெனப்பட்டது. §அதனையறிதல்—சொல்லுதலுற் றுரைக்கலாகாமைக் கேதுவாய $அதனியல்பினை யறிதல். ¶அவ்வறிவுடையார்க்கு முன்னிற்றன் மாத்திரமே யமைதலின் 'முன்னின்று' என்றும், சொல்லுதலான் வருஞ் சிறுமை யெய்தாமையின் 'ஓரேஎருடைத்து' என்றுங் கூறினார். உம்மை அதனிழிபு விளக்கி நின்றது.

தெளி :—(இ-ள்.) கரப்பிலா - ஒளித்தலில்லாத, நெஞ்சின்-நெஞ்சினையுடைய, கடனறிவார் முன்னின்று - மானமறிவார் முன்னர் நின்று, இரப்பும் - (அவரிடத்து ஒருபொருளை) இரத்தலும், (வறுமையுடையார்க்கு), ஓரேஎர் - ஓரழகை, உடைத்து - உடையதாம், (எ-று).

'சிறிய சுருக்கத்து வேண்டு முயர்வு' என்றதனால் அவர்க்கு அது கடனெனப்பட்டது. அதனையறிதல் - சொல்லத்தொடங்கிச் சொல்லமாட்டாமைக்குக் காரணமாகிய அதனியல்பினை அறிதல். அவ்வறிவுடையார்க்கு முன்னே நிற்றல்மாத்திரமே போதுமாகையால் 'முன்னின்று' என்றும், சொல்லுதலால் வருஞ் சிறுமையை யடையாமையால் 'ஓரேஎருடைத்து' என்றும் சொல்லினார். இரப்பும் என்ற

---

* மானம் - 3. இதன் பொருள், குறைந்த வறுமையுண்டாயவிடத்து வணங்காமை வேண்டும் என்பது.

† அவர்க்கு - கரப்பிலா நெஞ்சத்தார்க்கு. ‡ அது - மானமறிதல்.

§ அதனை-மானத்தை. $ அதனியல்பினை-மானத்தின் தன்மையை.

¶ அவ்வறிவுடையார்க்கு-மானத்தியல்பினை யறிதலுடையார்க்கு.

உம்மை அவ்விரத்தலினிழிவை விளக்கி நின்றது.

(க-து.) கொடுக்கக்கூடியதை இல்லையென்று ஒளிக்காது மான மறிந்திவாரிடத்து யாசித்தல் யாசகர்க்கோரழகாகும் என்பது.

3. There is grace even in standing as suppliants before those who deny nothing and understand their duty.

———

ச. இரத்தலு மீதலே போலுங் கரத்தல்
கனவிலுந் தேற்ருதார் மாட்டு.

பரி :—(இ-ள்.) தமக்குள்ளது கரத்தலைக் கனவின்கண்ணு மறியா தார் மாட்டுச்சென் ருென்றனை யிரத்தலும் வறியார்க் கீதலே போலும், (எ-று).

உம்மை ஈண்டு †மவ்வாறு நின்றது ‡தான் புகழ் பயவாதாயினும் முன்னுளதாய புகழ்கெட வாராமையின் 'ஈதலேபோலும்' என்ருர். ஏகாரம் – ஈற்றசை.

தெளி :—(இ-ள்.) கரத்தல் - (தமக்கு உள்ளது) மறைத்தலை, கனவிலும் – சொப்பனத்திலும், தேற்ருதார்மாட்டு – அறியாதவ ரிடத்து, இரத்தலும் – (சென்ருெரு பொருளை) யாசித்தலும், ஈதலே போலும் - (வறியவர்க்குக்) கொடுத்தலேபோலும், (எ-று).

இரத்தலும் என்ற வும்மை இவ்விடத்தும் அவ்வாறு நின்றது. தான் புகழுண்டாக்காதாயினும் முன்னுண்டாகிய புகழ் கெடும்படி வாராமையால் 'ஈதலே போலும்' என்ருர். (ஈதலே என்பதன்) ஏகாரம் – ஈற்றசை.

(க-து.) தமக்குள்ள தொளித்தலைச் சொப்பனத்திலும் நினையாத வரிடத்துச் சென்ருென்றனை யாசித்தல் யாசகருக்குத்தாமொன்றனைப் பிறர்க்குக் கொடுத்தல் போல்வதாம் என்பது.

4. To seek alms from those who never think of denial even in their dreams is tantamount to giving (it oneself).

———

ரு. கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணின்
றிரப்பவர் மேற்கொள் வது.

பரி :—(இ-ள்.) சொல்லுதன் மாட்டாது முன்னிற்றன் மாத்திரத் தான் இரப்பார் §உயிரோம்பற்பொருட்டு அதனை மேற்கொண்டு போது கின்றது ¶அவர்க்கு உள்ளது கரவாது கொடுப்பார் சிலர் உலகத்துளராய தன்மையானே, பிறிதொன்ருு னன்று, (எ-று).

† அவ்வாறு – இரத்தலினிழிவை விளக்கி. ‡ தான்-இரத்தல்.
§ உயிரோம்பற்பொருட்டு-தமது உயிரைக் காப்பாற்றுதற் பொருட்டு.
¶ அவர்க்கு – யாசகர்க்கு.

*அவரில்லையாயின், மான நீக்கமாட்டாமையின் உயிர் நீப்பரென்பதாம்.

தெளி :—(இ-ள்.) கண்ணின்று - (சொல்லுதல் மாட்டாமல்) முன்னிற்றல் மாத்திரத்தால், இரப்பவர் - யாசிப்பவர், (உயிர் காத்தற்பொருட்டு), மேற்கொள்வது - (அவ்யாசித்தலை) மேற்கொண்டு செல்லுகின்றது, கரப்பிலார் - (அவர்க்கு உள்ளதை) ஒளிக்காமற்கொடுப்பவர், (சிலர்), வையகத்து - உலகத்தில், உண்மையான்-இருக்கின்றபடியினலே, (பிறிதொன்றுலன்று),(எ-று).

அவரில்லையானல், (இரப்பவர்) மானம்விட மாட்டாமையால் உயிர்விடுவரென்பதாம்.

(கு-து.) குறிப்பறிந்து உள்ளதொளிக்காது கொடுக்கவல்லார் சிலர் இருப்பதனூற்றான், மானமுடையார் உயிர்விடாது யாசகத் தொழிலை மேற்கொண்டிருக்கின்றனர் என்பது.

5. As there are men in this world who give without saying nay, there are also those who prefer to beg by simply standing before them.

---

சு. கரப்பிடும்பை யில்லாரைக் காணி னிரப்பிடும்பை
யெல்லா மொருங்கு கெடும்.

பரி :—(இ-ள்.) உள்ளது கரத்தலாகிய நோயில்லாரைக் கண்டால், மானம் விடாதிரப்பார்க்கு நிரப்பான்வருந் துன்பங்களெல்லாஞ் சேரக் கெடும், (எ-று).

கரத்தல் ஒருவற்கு வேண்டுவ தொன்றன்மையின், $அதனை †நோய் என்றும், ‡அஃதில்லாத இரக்கத்தக்காரைக் கண்டபொழுதே ¶அவர் கழியுவகைய ராவராகலின் 'எல்லா மொருங்கு கெடும்' என்றுங் கூறினர். ‖இடும்பை - ஆகுபெயர். 0முழுதுங் கெடுமென்று பாடமோதி எஞ்சாமற்கெடுமென் றுரைப்பாருமுளர்.

தெளி :—(இ-ள்.) கரப்பிடும்பை - (உள்ளதை) ஒளித்தலாகிய நோய், இல்லாரை - இல்லாதவரை, காணின் - கண்டால், (மானம்

---

* அவர் - கரப்பிலார்.

$ அதனை - கரத்தலை. † இடும்பை என்றும் பாடமுண்டு.

‡ அஃதில்லாத - உள்ளது கரத்தலாகிய நோயில்லாத.

¶ அவர் - யாசிப்பவர்.

‖ துன்பம் என்னும் பொருளதான இடும்பையென்னுங் காரியப் பெயர் அதனைத் தருவதற்குக் கருவியாகிய நோயினை யுணர்த்துதலால், காரியவாகுபெயராம்.

0 ஒருங்குகெடும் என்பதற்குப் பிரதியாக முழுதுங்கெடும் என்று பாடங்கூறி, அதற்குக் குறையாமற்கெடும்என்று பொருளுரைப்பாருமுண்டு.

விடாமலிரப்பவர்க்கு), நிரப்பிடும்பையெல்லாம் - வறுமையால்வருந் துன்பங்களெல்லாம், ஒருங்குகெடும் - ஒரு சேரக்கெடும், (எ-று).

கரத்தல் ஒருவனுக்கு வேண்டுவ தொன்றல்லாமையால், அதனை (ஆகுபெயரால்) நோய் என்றும், அந்நோயில்லாத யாசிக்கத்தக்கவரைக்கண்டபொழுதே அவ்விரப்பவர் பெருமகிழ்ச்சியினராவராகலால் 'எல்லாமொருங்கு கெடும்' என்றும் சொல்லினர். இடும்பை - காரியவாகுபெயர்.

(கூ-து.) மானம்விடாது யாசிப்பவர் உள்ளதொளித்தலென்னும் நோயில்லாரைக் காண்பராயின், அவரது வறுமைத் துன்பங்களெல்லாம் ஒருங்கேகெடும் என்பது.

6. All plague of poverty will flee at the sight of those who are free from the evil of denial.

---

## எ. இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்துள்ள முள்ளு ளுவப்ப துடைத்து.

பரி :– (இ-ள்.) தம்மை யவமதித் திழிவு சொல்லாது பொருள் கொடுப்பாரைக் கண்டால், அவ்விரப்பாரது உள்ள மகிழ்ந்து *உள்ளுள்ளே யுவக்குந்தன்மை யுடைத்து, (எ-று).

'இகழ்ந்தெள்ளாது' எனவே, ¶நன்கு மதித்தலும் இனியவை கூறலும் †பெறுதும். நிரப்பிடும்பை கெடுதலளவேயன்றி $ஐம்புலன்களாலும் பேரின்பமெய்தினராகக் கருதலான், 'உள்ளுளுவப்பதுடைத்து' என்றார். இவையைந்துபாட்டானும் அவ்விரத்தக்காரதியல்பு கூறப்பட்டது.

தெளி :—(இ-ள்.) இகழ்ந்து - (தம்மை) அவமதித்து, எள்ளாது - இழிவுசொல்லாமல், ஈவாரை - (பொருள்) கொடுப்பவரை, காணின் - கண்டால், உள்ளம் - (அவ்விரப்பவரது) மனம், மகிழ்ந்து - மகிழ்ச்சியடைந்து, உள்ளுள் - உள்ளுள்ளே, உவப்பது - உவக்குந்தன்மையை, உடைத்து - உடையதாம், (எ-று).

'இகழ்ந்தெள்ளாது' எனவே (இகழ்ந்தெள்ளாதீவார் இரப்பாரை) நன்கு மதித்தலும், அவர்க்கு இனியவை கூறலும் பெறப்படும். (அவ்விரப்பவர்) வறுமைத்துன்பம் கெடுவதுமாத்திரமே யன்றி ஐம்புலன்களாலும் பேரின்பத்தை யடைந்தவராக (தம்மை) நினைத்தலால் (அவர் மனம்) 'உள்ளுளுவப்பதுடைத்து' என்றார். இவையைந்து பாட்டாலும் அவ்விரக்கத் தக்கவரினியல்பு சொல்லப்பட்டது.

---

* உள்ளுள்ளே யுவக்கும் - உள்ளுக்குள்ளே களிக்கும்.

¶ நன்கு மதித்தல் - கௌரவித்தல் † பெறுதும் - பெறுவோம்.

$ ஐம்புலன்களாலும் - செவி முதலிய ஐந்து இந்திரியங்களாலும்.

*(க-து.) தம்மை யவமதித்திழிவு சொல்லாது பொருள் கொடுப்ப வரைக் கண்டால், யாசிப்பவர்க்கு அளவிறந்த மகிழ்ச்சியுண்டாகும் என்பது.*

7. The minds of beggars will thrill with joy through and through at the sight of those who give alms with kindness and courtesy.

---

அ. *இரப்பாரை யில்லாயி னீர்ங்கண்மா ஞால
மரப்பாவை சென்றுவந் தற்று.

பரி:—(இ-ள்.) வறுமையுற் றிரப்பா ரில்லையாயின், குளிர்ந்தவிடத்தை யுடைய பெரியஞாலத்துள்ளார் செலவு வரவுகள் உயிரில்லாத மரப்பாவை †இயந்திரக் கயிற்றால் சென்றுவந்தாற் போலும், (எ-று).

()ஐகாரம்-அசைநிலை. ‡ஞாலமென்னும் ¶ஆகுபெயர்ப்பொருட்கு உவமையோடொத்ததொழில் வருவிக்கப்பட்டது. ஞாலத்துள்ளா ரென்றது அவரையொழிந்தாரை. ††அவர்க்கீ தலைச்செய்து புகழும் புண்ணியமுமெய்தாமையின், உயிருடையரல்லரென்பதாம். £"ஈவாருங் கொள்வாரு மில்லாத வானத்து, வாழ்வாரே வன்க ணவர்" என்றார் பிறரும். 0இத்தொடையின்ப நோக்காது, இரப்ப வரில்லாயி னென்று பாடமோதுவாரு முளர்.

---

* நச்சினார்க்கினியர் தொல்காப்பியம் – சொல்லதிகாரம் – 'ஈதா கொடு' என்னுஞ்சூத்திரவுரையில் (1) இரப்பார் (பொருளிருந்தும்) இல்லெனா இரப்பார், (2) இடனின்று (பொருளில்லாது) இரப்பார், (3) (உள்ளபொருள்) தொலைவாகி யிரப்பாரென முத்திறப்படுவ ரென்று கூறுகின்றனர்.

† இயந்திரக்கயிறு–சூத்திரக்கயிறு.

() இரப்பாரை என்னும் ஐகாரம் "நேரை நோக்க நாரரி பருகி" என்பது போல அசைநிலையாம்.

‡ ஞாலமென்னும் இடப்பெயர் ஞாலத்திலுள்ளவரை யுணர்த்து தலால், இடவாகு பெயராம். ஞாலம்-பூமி.

¶ ஆகுபெயராற் பெற்ற ஞாலத்துள்ளார் என்னும் பொருட்கு (உவமேயத்திற்கு) மரப்பாவை சென்றுவந்தற்று என்னும் உவமானத் தோடொத்த (செலவு வரவுகள் என்னும்) தொழில் வருவிக்கப் பட்டது.

†† அவர்க்கு-வறுமையுற் றிரப்பார்க்கு.

£ இதன்பொருள் கொடுக்கின்றவருங்கொள்ளுகின்றவருமில்லாத சுவர்க்கலோகத்தில் வாழுகின்றவரே கொடுமையுடையோராவர் என்பது.

0 இரப்பாரை மரப்பாவை என்னுமித் தொடையின்பத்தை நோக்காது, இரப்பாரை யில்லாயின் என்பதனை இரப்பவ ரில்லாயின் என்று பாடங்கூறுவாரு முண்டென்பது.

தெளி:—(இ-ள்.) இரப்பார் - (வறுமையடைந்து) இரப்பவர், இல்லாயின்-இல்லையாயின், ஈர்ங்கண்மாஞாலம்-குளிர்ந்த இடத்தை யுடைய பெரிய பூமியிலுள்ளவரது, (செலவு வரவுகள்), மரப்பாவை-(உயிரில்லாத) மரப்பாவை, சென்றுவந்தற்று-(இயந்திரக்கயிற்றால்) சென்றுவந்தாற்போலும், (எ-று).

(இரப்பாரை யென்பதன்) ஐகாரம் அசைநிலை. ஞாலம்-இடவாகு பெயர்; அவ்வாகு பெயர்ப் பொருளாகிய உவமேயத்திற்கு உவமானத்தோடு ஒத்ததொழில் வருவிக்கப்பட்டது. பூமியிலுள்ளா ரென்றது இரப்பவரொழிந்தவரை. அவர்க்குக் கொடுத்தலைச்செய்து புகழும் புண்ணியமும் அடையாமையால், (இரப்பாரில்லாத ஞாலத்தார்) உயிருடையரல்ல ரென்பதாம். மரப்பாவை - மரப் பொம்மை.

(க-து) யாசகரில்லாதவிடத்து உலகத்துள்ளாரது இயக்கம் மரப் பாவையின் இயக்கம் போல்வதாம் என்பது.

8. If there be no beggars, the actions done in this mighty world would resemble a stage where wooden puppets come and go.

---

கூ. ஈவார்க ணென்னுண்டாந் தோற்ற மிரந்துகோண்
மேவா ரிலாஅக் கடை.

பரி:—(இ-ள்) *அவர்பாற் சென்று ஒன்றனை யிரந்துகோடலை விரும்பு வாரில்வழிக் கொடுப்பார்மாட் டென்ன புகழுண்டாம்? யாதுமில்லை, (எ-று).

† தோற்றம்-ஆகுபெயர். மேவுவா ரென்பது விகாரமாயிற்று. கொடுத்தல் வன்மை வெளிப்படாமையின், ‡அதனாற் புகழெய்தா ரென்பதாம். இவை யிரண்டுபாட்டானும் உலகிற் கிரப்பார் வேண்டுமென்பது கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) இரந்துகோள் - (அவரிடத்துச் சென்று ஒரு பொருளை) இரந்துகொள்ளுதலை, மேவா ரிலாஅக் கடை-விரும்புவா ரில்லாதவிடத்து, ஈவார்கண் - கொடுப்பவரிடத்து, என் - என்ன, தோற்றம்-புகழ், உண்டாம்-உண்டாகும், (யாதுமில்லை), (எ-று).

தோற்றம்-கருவியாகு பெயர். மேவுவாரென்பது மேவார் என இடைக்குறை விகாரமாயிற்று. (இரப்பாரில்லாதவிடத்து) கொடுத்தல்வல்லமை வெளிப்படாமையால், அதனால் (கொடுப்பார்) புகழுடையாரென்பதாம். இவையிரண்டு பாட்டாலும் உலகிற்கு இரப்பவர் வேண்டுமென்பது சொல்லப்பட்டது.

---

* அவர்பால்-கொடுப்பாரிடத்து.

† தோற்றம் என்னும் கருவிப்பெயர் அதனாலாகிய புகழினை யுணர்த்துதலால், கருவியாகு பெயராம். தோற்றம் - சிறந்து விளங்குதல்.

‡ அதனால்-கொடுத்தல் வன்மை வெளிப்படாமையால்.

(க-து.) இரப்பாரில்லாதவிடத்து ஈவார்க்குப் புகழுண்டாவதில்லை என்பது.

9. What glory would there be to givers of alms if there were no beggars to seek for alms?

---

**௯0. ()இரப்பான் வெகுளாமை வேண்டு நிரப்பிடும்பை**
**தானேயுஞ் சாலுங் கரி.**

பரி:—(இ-ள்.) ஈவானுக்குப் பொருளுதவாவழி, இவனெனக்கீகின்றிலனென்று *அவனை யிரப்பான் வெகுளா தொழிதல் வேண்டும்; †அது வேண்டியபொழுது உதவாதென்பதற்கு வேறுசான்று வேண்டா; நிரப்பாகிய தன்னிடும்பைதானேயுஞ் சான்றுத லமையும், (எ-று).

யாவர்க்கும் தேட வேண்டுதலும் நிலையின்மை முதலிய பிற சான்று முண்டென்பதுபட நின்றமையின், ‡உம்மை எச்சவும்மை. ¶தனக்கேயன்றி மற்றையிரந்தார்க்கும் அற்றைக்கன்று பொருள் கடைக்கூட்டற்கு §அவனுறுந் துன்பத்தைத் தனக்கேயாகவைத்துத் தானுறுந்துன்பந் தானறிந்து வெகுளற்க வென்பதாம். இதனால் ||அவர்க்கின்றியமையாததோ £ரியல்பு கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) (ஈவானுக்குப் பொருள் உதவாதவிடத்து) இரப்பான்-இரப்பவன், வெகுளாமைவேண்டும்-(இவன் எனக்குக் கொடுக்கின்றிலனென்று அவனைக்) கோபியாதொழிதல்வேண்டும், (அது வேண்டியபொழுது உதவாதென்பதற்கு வேறுசான்று வேண்டாம்), நிரப்பிடும்பைதானேயும்-வறுமையாகிய தன்நோய் தானேயும், கரி சான்றுதல், சாலும்-அமையும், (எ-று).

யாவர்க்குந் தேடவேண்டுதலும் நிலையில்லாமை முதலிய பிற சான்றும் (பொருளுக்கு) உண்டென்பது தோன்றநின்றமையால், உம்மை எச்சவும்மையாம். (இரப்பவன்), தனக்கேயல்லாமல் மற்றை இரந்தவர்க்கும் அன்றைக்கன்று பொருள் சம்பாதித்தற்கு அவனடையுந் துன்பத்தைத் தனக்கேயாகவைத்துத் தானடைகின்ற

---

() "பிச்சைபுக் குண்பான் பிளிறாமை முன்னினிதே" என்று இனியவை நாற்பது கூறுகின்றது.

* அவனை-ஈவானை. † அது-அப்பொருள்.

‡ உம்மை-தானேயும் என்றவும்மை; இஃது எதிரதுதழுவிய எச்சவும்மையாம்.

¶ தனக்கேயன்றி-யாசிப்பவனாகிய தனக்கேயல்லாமல்.

§ அவன்-ஈவான். || அவர்க்கு-யாசிப்பவர்க்கு.

£ இயல்பு-ஈவானைக் கோபியாதிருத்தல்.

துன்பத்தைத் தானறிந்து கோபியாதிருக்கக்கடவனென்பதாம். இதனால் அவர்க்கு அவசியமானதோரியல்பு சொல்லப்பட்டது. சான்று சாட்சி.

(க-து.) பொருள் வேண்டியபோ துதவா தென்பதற்குத் தனது வறுமையே சாட்சியாக விருத்தலின், இரப்பவன் ஈவான் பொருளில்லையென்ற விடத்து அவனைக் கோபியாதிருக்கக் கடவன் என்பது.

10. He who begs ought not to be angry at a refusal; as the misery of his own poverty should serve as a sufficient testimony for so doing.

---

## கஉ-வது அதிகாரம்

## 107. இரவச்சம்—Fear of begging

பரி:—அஃதாவது மானந்தீர வருமிரவிற் கஞ்சுதல். †அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

தெளி:—அஃதாவது மானங்கெடவரும் இரத்தலுக்கு அஞ்சுதல். அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும்.

---

க. ‡கரவா துவந்தீயுங் கண்ணன்னார் கண்ணு
மிரவாமை கோடி யுறும்.

பரி:—(இ-ள்.) தமக்குள்ளது கரவாது இவர் வரப்பெற்றேமென்று உண்மகிழ்ந்து கொடுக்குங் கண்போலச் சிறந்தார் மாட்டும் இரவாதே ஒருவன் வறுமை கூர்தல் இரந்து செல்வமெய்தலிற் கோடிமடங்கு நன்று, (எ-று).

நல்குரவு மறைக்கப்படாத நட்டார்மாட்டும் ஆகாதென்பதுபட நின்றமையின், ¶உம்மை உயர்வு சிறப்பின் கண்வந்தது. அவ்விரவான் மானந்தீரா தென்னுந் துணையல்லது ||அதற்கு §மிகுதி கூடாமையின் வல்லதோர் முயற்சியா னுயிரோம்பலே நல்லதென்பது கருத்து.

தெளி:—(இ-ள்.) (ஒருவன்) கரவாது-(தமக்குள்ளதை) ஒளிக்காமல், உவந்து-(இவர் வரப்பெற்றேமென்றுமன)மகிழ்ந்து, ஈயும்—

---

† இரவிற்குப்பின் இரவச்சம் வைத்த அதிகாரமுறைமையும்.

‡ "கரவாத திண்ணன்பிற் கண்ணன்னார் கண்ணும்
இரவாது வாழ்வதாம் வாழ்க்கை—யிரவினை
உள்ளுங்கா லுள்ள முருகுமா லென்கொலோ
கொள்ளுங்காற் கொள்வார் குறிப்பு"
என்று நாலடியார் கூறுவதிங் குணர்தற் பாலதாம்.

¶ கண்ணன்னார் கண்ணும் என்றவும்மை.

|| அதற்கு-அவ்விரத்தலுக்கு. § மிகுதிகூடாமையின்—மேம்பாடு பொருந்தாமையால்.

கொடுக்கும், கண்ணன்னார் கண்ணும் - கண்போலச்சிறந்தவரிடத்தும், இரவாமை - இரவாமலே, (வறுமையை யடைந்திருத்தல்), கோடி யுறும் - (இரந்து செல்வமடைதலினும்) கோடிமடங்கு நல்லது, (எ-று).

வறுமை மறைக்கப்படாத நட்பினரிடத்தும் இரத்தலாகா தென்பது தோன்ற நின்றமையால், உம்மை உயர்வு சிறப்பில் வந்தது. (கரவா துவந்தீயுங் கண்ணன்னார் கண்ணும் இரக்கும்) அவ்விரவால் மானங்கெடாதென்னும் அளவல்லாமல் அதற்கு மிகுதி கூடாமையால், செய்யவல்லதோர் முயற்சியால் சீவனஞ் செய்தலே நல்லதென்பது கருத்து.

(கு-து.) ஒருவன் தமக்குள்ளதை மறைக்காது கொடுக்குஞ் சிறந்தவரிடத்தும் யாசியாது வறுமை யடைந்திருத்தல் மிக நல்லதாம் என்பது.

1. Not to beg at all is far greater than seeking alms even from those who cheerfully give without refusing.

---

உ. *இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான்.

பரி:—(இ-ள்.) இவ்வுலகத்தைப் †படைத்தவன் இதன்கண் வாழ் வார்க்கு முயன்றுயிர்வாழ்தலே யன்றி இரந்து முயிர்வாழ்தலே வேண்டி விதித்தானாயின், ‡அக்கொடியோன்றானும் ¶அவரைப்போன்று எங்கு மலமந்து கெடுவானாக, (எ-று).

மக்களுயிர்க்கெல்லாம் வாழ்நாளும், ()அதற்கு வேண்டுவதாய வுண்டியும், £அதற்கேதுவாய செய்தொழிலும் பழவினை வயத்தாற் கருவொடு கலந்தவன்றே ‖அவன் கற்பிக்குமன்றே; ⁝அவற்றுட் சிலவுயிர்க்கு இரத்தலையும் ஒரு செய்தொழிலாகக் கற்பித்தானாயின், அத்தீவினையாற்றானும் அத்துன்ப முறல்வேண்டுமென்பதாம். இவை யிரண்டுபாட்டானும் அவ்விரவின் கொடுமை கூறப்பட்டது.

* "நாறுத் தகடேபோ னன்மலர்மேற் பொற்பாவாய்
நீறாய் நிலத்து விளியரோ—வேறாய
புன்மக்கள் பக்கம் புகுவாய்நீ பொன்போலும்
நன்மக்கள் பக்கந் துறந்து"

என்று நாலடியார் கூறுவதிங் குணர்தற்பாலதாம்.

† படைத்தவன் - பிரமன்.

‡ அக்கொடியோன்றானும் - பிரமனும்.

¶ அவரை - இரந்து (யாசித்து) சீவனஞ் செய்பவரை.

() அதற்கு - அவ்வாழ்நாளிற்கு. £ அதற்கு - அவ்வுண்டிக்கு.

‖ அவன் கற்பிக்குமன்றே - அப்பிரமனேற்படுத்துவானல்லவா.

⁝ அவற்றுள் - வாழ்நாள், உண்டி, செய்தொழிலென்பனவற்றுள்,

தெளி:—(இ-ள்.) உலகியற்றியான் - இவ்வுலகத்தைப் படைத்தவன், (இவ்வுலகினிடத்து வாழ்வார்க்கு முயற்சிசெய்து சீவனஞ் செய்தலை யல்லாமல்), இரந்தும் - யாசித்தும், உயிர்வாழ்தல் வேண்டின் - சீவனஞ்செய்தலை வேண்டி யேற்படுத்தினனாயின், (அக்கொடியோன்றானும்), பரந்து - (அவரைப்போன்று எங்கும்), சுழன்று, கெடுக - கெடக்கடவனாக, (எ-று).

மக்களுயிர்க்கெல்லாம் வாழ்நாளும், அதற்கு வேண்டுவதாகிய உண்டியும், அதற்குக் காரணமாகிய செய்தொழிலும், பழவினை வசத்தாற் கருவோடு (கருப்பத்துடன்) கலந்தவப்போதே அவன் கற்பிப்பானன்றே, அவற்றுள் சிலவுயிர்க்கு யாசித்தலையும் ஒரு செய்தொழிலாக வேற்படுத்தினனாயின், அத் தீவினையால் அவன்றானும் அத்துன்பமடைதல் வேண்டுமென்பதாம். இவையிரண்டு பாட்டாலும் அவ்யாசித்தலின் கொடுமை சொல்லப்பட்டது.

(க-து.) பிரமன் சிலரை யாசித்துப் பிழைக்குமாறு படைத்தானாயின், அவனும் அவர்போல எங்குஞ் சுழன்று வருந்தக்கடவன் என்பது.

2. If the creator of the universe has ordained even seeking alms as a means of livelihood, may He too go a begging and perish.

---

## ந. இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும் வன்மையின் வன்பாட்ட தில்.

பரி:—(இ-ள்.) வறுமையான் வருந்துன்பத்தை முயன்று நீக்கக் கடவேமென்று கருதாது இரந்து நீக்கக்கடவேமென்று கருதும் வன்மை போல வலிமைப்பாடுடையது பிறிதில்லை, (எ-று).

நெறியாய முயற்சி நிற்க நெறியல்லாத இரவாற்றீர்க்கக் கருதுதலின், வன்மையாயிற்று. வன்பாடு - முருட்டுத்தன்மை ; *அஃதாவது ஓராது செய்துநிற்றல். இதனான் வறுமை தீர்தற்குநெறி இரவன்றென்பது கூறப்பட்டது.

தெளி: -(இ-ள்.) இன்மை - வறுமையால், (வரும்), இடும்பை - துன்பத்தை, (முயற்சி செய்து நீக்கக்கடவோமென்று நினையாமல்), இரந்து தீர்வாமென்னும்-யாசித்து நீக்கக்கடவோமென்று நினைக்கும், வன்மையின் - வல்லமைபோல, வன்பாட்டது - வலிமைப்பாடுடையது, இல் - (வேறு) இல்லை, (எ-று).

வறுமைத் துன்பத்தை நீக்கிக்கொள்ளுதற்கு வழியாகிய முயற்சி இருக்க வழியல்லாத யாசித்தலால், அதனை நீக்க நினைத்தலால், (இரந்துதீர்வாமென்பது) வன்மையாயிற்று. வன்பாடு - முருட்டுத்

* அஃதாவது - முருட்டுத்தன்மையாவது.

தன்மை; அஃதாவது மேற்கொள்ளுங் காரியத்தை யாலோசியாது செய்துநிற்றல். இதனால் வறுமை தீர்தற்கு வழி யாசித்தலன்றென்பது சொல்லப்பட்டது.

(க-து.) வறுமையுடையவன் தனது வறுமையை முயற்சி செய்து நீக்கக் கருதாது, யாசகத்தால் நீக்கக் கருதுதல் அறிவீனமாம் என்பது.

3. There is nothing so powerful as the determination with which one seeks to surmount the misery of poverty by begging, rather than by working.

———

ச. இடமெல்லாங் கொள்ளாத் தகைத்தே யிடமில்லாக்
காலு மிரவொல்லாச் சால்பு.

பரி :—(இ-ள்.) நுகரவேண்டுவனவின்றி நல்கூர்ந்த வழியும் பிறர் பாற்சென்றிரத்தலை யுடம்படாத அமைதி எல்லாவுலகும் ஒருங்கியைந்தாலும் கொள்ளாத பெருமையுடைத்து (எ-று).

அவ்விரத்தலைச் *சால்பு விலக்குமாகலின், †இரவொல்லாமை அதன்மேலேற்றப்பட்டது. இதனான் ¶அந்நெறியல்லதனைச் சால்புடையார் செய்யாரென்பது கருத்து.

தெளி :—(இ-ள்.) இடமில்லாக்காலும் – (அனுபவிக்கவேண்டும்) பொருளில்லாமல் வறுமையடைந்த விடத்தும், இரவு – (பிறரிடத்துச் சென்று) யாசித்தலை, ஒல்லா – உடம்படாத, சால்பு – அமைதி, இடமெல்லாம் – எல்லாவுலகமும், (ஒருசேரப் பொருந்தினாலும்), கொள்ளாத்தகைத்தே – கொள்ளாத பெருமையை யுடையது, (எ-று).

அவ்விரத்தலைச் சால்பு விலக்குமாகலால், இரவொல்லாமையை அச்சால்பின்மேல் ஏற்றி, 'இரவொல்லாச் சால்பு' என்று கூறப்பட்டது. இதனால் அவ்வழியல்லாததனைச் சால்புடையார் செய்யாரென்பது கருத்து.

(க-து.) சால்புடையார் அனுபவித்தற்குரிய பொருள்களின்றி வறுமையுற்ற விடத்தும், பிறரிடத்துச் சென்று யாசியார்.

4. The universe cannot adequately praise the dignity that would not stoop to beg even in dire destitution.

———

* சால்பு – பலகுணங்களாலும் நிறைதல்.

† சால்பினாலுண்டாகும் இரவொல்லாமையை (யாசித்தலுக்கு உடன்படாதிருத்தலை) அச்சால்போடொற்றுமைசெய்து 'இரவொல்லாச் சால்பு' என்று கூறினமையின், இது காரியங் காரணமாய வுபசார வழக்காம். " பிறப்பென்னும் பேதைமை " என்பதற்குப் பிறப்பிற்குக் காரணமாகிய பேதைமையென்று பொருள்கொண்டாற் போன்று, இரவொல்லாச் சால்பு என்பதற்கும் இரவொல்லாமைக்குக் காரணமாகிய சால்பு என்று பொருள் கொள்க.

¶ அந்நெறியல்லதனை – பிறர்பாற்சென்றிரத்தலை.

ரு. தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாடந்த
துண்ணலி னூங்கினிய தில்.

பரி:—(இ-ள்.) நெறியாய முயற்சி கொடுவந்து தந்தது தெளிந்த நீர்போலும் அடுபுற்கையேயாயினும், *அதனை யுண்டற்குமே லினியதில்லை, (எ-று).

*தாடந்த கூழ் செறிவின்றித் தெண்ணீர் போன்றதாயினும் இளிவாய இரவான் வந்ததன்றித் தம்முடைமை யாகலின், அமிழ்தத்தோடொக்கு மென்பதாம். இதனால் நெறியினானாயது சிறிதேனும் †அது செய்யுமின்பம் பெரிதென்பது கூறப்பட்டது.*

தெளி:—(இ-ள்.) *தாள்*-(வழியாகிய) முயற்சி, *தந்தது*-(கொண்டு வந்து) *தந்தது*, *தெண்ணீர்*-தெளிந்த *நீர்போலும்*, *அடுபுற்கை யாயினும்*-சமைத்த *கூழேயாயினும்*, *உண்ணலினூங்கு*-(அதனை) *உண்ணுதற்குமேல்*, *இனியது*-*இன்பந்தருவது*, *இல்*-*இல்லை*, (எ-று).

*முயற்சி தந்த கூழ் அழுத்தமில்லாமல் தெளிந்த நீர்போன்ற தாயினும் இழிவாய யாசித்தலால் வந்ததல்லாமல் தம்முடையதாக விருப்பதாகலால், அமிழ்தத்தோடு ஒக்குமென்பதாம். இதனால் முயற்சிவழியா லாகியது சிறிதெனினும் அது செய்யுமின்பம் பெரிதென்பது சொல்லப்பட்டது.*

(க-து.) *யாசித்தலாலன்றி முயற்சியாற் கிடைத்த பொருள் சிறிதாயிருப்பினும், அஃது அனுபவிக்கும்போது அமிழ்தம் போன்று பேரின்பத்தைத் தரும் என்பது.*

5. Even thin gruel would be delicious to him who has obtained it by labour.

———

சா. ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்
கிரவி னிளிவந்த தில்.

பரி:—(இ-ள்.) தண்ணீர் பெறாது இறக்குநிலைமைத் தாயதோராவினைக் கண்டு அறனோக்கி இதற்குத் தண்ணீர் தரல்வேண்டுமென் றிரந்து சொல்லுங்காலும், அவ்விரவுபோல ஒருவனாவிற் கிளிவந்தது பிறிதில்லை, (எ-று).

*ஆ காத்தோம்பல் பேரறமாகலின் 'ஆவிற்கு' என்றும், பொருள் கொடுத்துக் கொள்ளவேண்டாத எண்மைத்தாகலின் 'நீர்' என்றும், இரக்கின்றானுக்கு இளிவு $அச்சொல்லளவேயாகலின் 'நாவிற்கு'*

---

* *அதனை – கூழை.* † *அது – வழியாலாயது.*

$ *அச்சொல்லளவே – இப்பசுவிற்குத் தண்ணீர்தரல்வேண்டும் என்னுஞ் சொல்மாத்திரமே.*

என்றும் *அதுதான் எல்லா விளிவினும் மேற்படுதலின் 'இளிவந்ததில்' என்றுங் கூறினுர். இதனுன் அறனும் †முயன்று செய்வதல்லது இரந்து செய்யற்கவென்பது கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) ஆவிற்கு - (தண்ணீர்பெறுமலிறக்கும் நிலைமை யதாகியதோர்) பசுவினை (க்கண்டு), நீரென்று-(அறநோக்கி இதற்குத்) தண்ணீர்தரல் வேண்டுமென்று, இரப்பினும் – இரந்து சொல்லும் போதும், இரவின் – அவ்விரவுபோல, நாவிற்கு - (ஒருவன்) நாவிற்கு, இளிவந்தது–அவமானம் வந்தது, இல்–(மற்றென்று) இல்லை, (எ-று).

ஆவைக்காத்திரட்சித்தல் பெரியவறமாகலால் 'ஆவிற்கு' என்றும், பொருள் கொடுத்துக் கொள்ளவேண்டாத எளிமையதாக லால் 'நீர்' என்றும், யாசிப்பவனுக்கு அவமானம் அச்சொல்லளவே யாகலால் 'நாவிற்கு' என்றும், அதுதான் எல்லா அவமானங்களிலும் மேற்படுதலால் 'இளிவந்ததில்' என்றுஞ் சொல்லினுர். இதனுல் அற மும் முயற்சிசெய்து செய்வதல்லது யாசித்துச் செய்தலாகாதென்பது சொல்லப்பட்டது.

(க-து.) அறஞ்செய்தற் பொருட்டும் யாசித்தல் கூடாது.

6. There is nothing more disgraceful to one's tongue than to use it in begging water even for a thirsting cow.

---

எ. இரப்ப னிரப்பாரை யெல்லா மிரப்பிற்
கரப்பா ரிரவன்மி னென்று.

பரி.—(இ-ள்.) இரப்பாரையெல்லாம் யானிரவாநின்றேன், யாது சொல்லியெனின், நுமக்கிரக்கவேண்டுமாயிற் றமக்குள்ளது கரப்பாரை யிரவா தொழிமினென்று சொல்லி, (எ-று).

‡இரண்டாவது விகாரத்தாற்றெக்கது. இவ்விளிவந்த ¶செய லான் §ஊட்டிய வழியும் உடம்பு நில்லாதாகலின், $இதுவேண்டா வென்பது தோன்ற 'இரப்பன்' என்ருர். இதனுன் மானந்தீரவருமிரவு விலக்கப்பட்டது.

---

* அதுதான் – அச்சொல்லே.

† முயன்று செய்வதல்லது – முயற்சிசெய்து பொருளைச் சம்பா தித்துச் செய்வதல்லாமல்.

‡ கரப்பாரை என்னும் (ஐயென்னும்) இரண்டனுருபு செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது.

¶ செயலான் – இரத்தற்றெழிலால்.

§ ''மான வருங்கல நீக்கி யிரவென்னு, மீன விளிவினுல் வாழ்வேன் மன் – ஈனத்தால், ஊட்டியக் கண்ணு முறுதிசேர்ந் திவ்வுடம்பு, நீட் டித்து நிற்கு மெனின்'' என்று நாலடியார் கூறுவதிங்குணர்தற்பால தாம்.

$ இது – இளிவந்த செயல்.

தெளி:—(இ-ள்.) இரப்பாரையெல்லாம் - யாசிப்பவர் யாவரையும், இரப்பன்-(யான்) யாசியா நின்றேன், (யாது சொல்லியெனின்), இரப்பின் - (உமக்கு) யாசிக்கவேண்டுமாயின், கரப்பார் - (தமக்கு உள்ளதை) ஒளிப்பவரை, இரவன்மினென்று - யாசியாதொழியுங்களென்று, (சொல்லி), (எ-று).

கரப்பாரை என்னும் இரண்டனுருபு விகாரத்தால் தொக்கு நின்றது. இவ்வவமானச் செயலால் ஊட்டிவளர்த்தவிடத்தும் உடம்புநில்லாதாகலால், இது வேண்டாமென்பது தோன்ற 'இரப்பன்' என்றார். இதனால் மானங்கெடவரும் இரவு விலக்கப்பட்டது.

(க-து.) யாசிப்பவர் தமக்குள்ளதை யில்லையென்று கூறி யொளிப்பவரிடத்துச் சென்று யாசித்தல் கூடாது என்பது.

7. I beg all beggars and say "if you need to beg, never beg of who unwillingly give".

---

## அ. இரவென்னு மேமாப்பி றேணி கரவென்னும் பார்தாக்கப் பக்கு விடும்.

பரி:—(இ-ள்.) இவ்வறுமையென்னுங்கடலை *இதனாற் கடத்துமென்று கருதி ஒருவனேறிய இரவென்னுஞ் சேமமற்ற தோணி, †அதன் கண்ணேடுங்காற் கரத்தலென்னும் ‡வன்னிலத்தோடு தாக்குமாயிற் பிளந்துபோம், (எ-று).

முயற்சியாற் ¶கடப்பதனை இரவாற் கடக்கலுற்றான் ||அதன் கரை காணாமையின் 'ஏமாப்பிறேணி' என்றார். $ஏமாப்பின்மை தோணி மேலேற்றப்பட்டது §அது கடத்தற்கேற்ற தன்மையானும், நிலமறி

---

* இதனால் - யாசித்தலென்னுங் காவலற்ற தோணியால்.

† அதன்கண் - வறுமையென்னுங் கடலில்.

‡ வன்னிலம் - கற்பாறை.

¶ கடப்பதனை - கடப்பதாகிய வறுமைக்கடலை.

|| அதன் - வறுமைக்கடலினது.

$ ஏமாப்பின்மை (பாதுகாப்பவரில்லாமை) யாலுண்டாகும் இரவென்னுந்தோணியை அவ்வேமாப்பின்மையோடொற்றுமை செய்து 'ஏமாப்பிறேணி' என்று கூறினமையின், இது காரணம் காரியமாய உபசார வழக்காம். ஏமாப்பின்மை-காரணம்; இரத்தல்-காரியம்.

§ அது (இரவென்னுமேமாப்பிறேணி) கடத்தற்கேற்ற தன்மையானும் (தரித்திரமென்னுங் கடலைக்கடந்து செல்லுவதற்குத் தகுதியுடையதல்லாமையாலும்), நிலமறியாது (இடமறியாது) செலுத்திய வழி (போனவிடத்து) உடைதலானும் (மாறுபட்டுப் போதலாலும்), அதன்கண் (இரவென்னுந் தோணியில்) ஏறற்க வென்பதாம். [யாசித்தல் வறுமையை யொழித்தற்குரிய தல்லாமையாலும், தகுதியில்லாதவரிடத்துப் போனபோது அதனால் அவமானம் நேரிடுதலாலும், அது செய்யலாகாதென்பது இதன் திரண்ட பொருளாம்.]

யாது செலுத்தியவழி யுடைதலானும், அதன்கணேறற்க வென்ப தாம். இஃ *தவயவவுருவகம்.

தெளி :—(இ-ள்.) (இவ்வறுமை யென்னுங்கடலை இதனாற் கடப்போமென்று நினைத்து ஒருவனேறிய) இரவென்னும் – யாசக மென்னும், ஏமாப்பில்-காவலற்ற, தோணி–மரக்கலம் (அதனிடத்து ஒடுங்கால்), கரவென்னும் - ஒளித்தலென்னும், பார் - வன்னிலத் தோடு, தாக்க - தாக்குமாயின், பக்குவிடும் – பிளந்துபோம், (எ-று).

முயற்சியாற் கடப்பதனை யாசகத்தால் கடக்கலுற்றவன் அதன் கரையைக் காணுமையால் 'ஏமாப்பிறேணி' என்றார். ஏமாப்பின் மையைத் தோணியின்மேல் ஏற்றி 'ஏமாப்பிறேணி' என்று கூறப் பட்டது. அது கடத்தற்கு ஏற்றதல்லாமையாலும், நிலமறியாது செலுத்தியவிடத்து உடைதலாலும், அதனிடத்து ஏறலாகாதென் பதாம். இஃதவயவ வுருவகவணி.

(க-து.) வறுமையை யிரத்தலாலொழிக்கப் புகுந்தவன் ஈவா ரில்லை யென்றவிடத்துச் செயலற்று வருந்துவான் என்பது.

8. The unsafe ship of begging will split when it striketh on the rock of refusal.

———

௯. இரவுள்ள வுள்ள முருகுங் கரவுள்ள
வுள்ளதூஉ மின்றிக் கெடும்.

பரி :—(இ-ள்.) உடையார் முன் இல்லார் சென்றிரந்து நிற்றலின் கொடுமையை நினைந்தால், எம்முள்ளங் கரைந் துருகாநிற்கும் ; இனி அந்நிலையைக் கண்டு வைத்தவர் இல்லையென்றலின் கொடுமையை நினைந் தால், அவ்வுருகுமளவுதானு மின்றிப் பொன்றிவிடும், (எ–று.)

†" இரவினை, யுள்ளுங்கா லுள்ள முருகுமா லென்கொலோ, கொள்ளுங்காற் கொள்வார் குறிப்பு " என்றார் பிறரும். இரவினுங்

---

* அவயவியை (உறுப்பியை) நீக்கி அவயவங்களை (உறுப்புகளை) மாத்திரம் உருவகஞ்செய்வது அவயவ வுருவகமாம். இங்கு வறுமை யென்னும் அவயவியை நீக்கி, இரவு கரவு என்னும் அவயவங்களை மாத்திரம் தோணியென்றும் பாரென்றும் உருவகஞ் செய்தமையின், இக்குறள் அவயவ வுருவக வணியாம். (வறுமை யென்னும் முதலுக்கு இரவும் கரவும் அவயவமாம்). இரவென்னு மேமாப்பிறேணி என் பதும், கரவென்னும் பார் என்பதும் உருவகமாம்.

† நாலடியார் இரவச்சம், 5. இதன் பொருள். (பொருளுடை யார் முன்னர் அஃதில்லாதார் சென்று) இரந்து நிற்றலின் கொடுமையை நினைந்தால் எமதுள்ளங் கரைந்துருகா நிற்கும் ; ஏற்ப வருடைய கருத்து ஏற்குங் காலத்து யாதாகுமோ என்பது. இரவினை யுள்ளுங்கா லுள்ள முருகும் ; கொள்வார்குறிப்பு, கொள்ளுங்கால் என்கொலோ என்றந் வயித்துக்கொள்க.

கரவு கொடிதென்பதாம். *இதற்குப் பிறரெல்லாம் இரக்கின்றவருள்ள முருகுமென்றுரைத்தார்.

தெளி :—(இ-ள்.) இரவு - (பொருளுடையார்முன் அஃதில்லார் சென்று) யாசித்து நிற்றலின் கொடுமையை, உள்ள - நினைந்தால், உள்ளம் - எமது உள்ளமானது, உருகும் - கரைந்துருகா நிற்கும், கரவு - (இனி அந்நிலையைக் கண்டிருந்தவர்) இல்லையென்றலின் கொடுமையை, உள்ள - நினைந்தால், உள்ளதூஉம் - அவ்வுருகுமளவு தானும், இன்றி - இல்லாமல், கெடும் - அழிந்துபோம், (எ-று).

யாசித்தலிலும் இல்லையென்றுள்ளதை யொளித்தல் மிகக்கொடிதென்பதாம்.

(க-து.) யாசிப்பாரது கொடுமையிலும் உள்ளதை யொளித்தில்லை யென்பாரது கொடுமை மிகத்தீயது என்பது.

9. Even the thought of the lot of begging is enough to melt one's heart ; but the thought of rebuff makes it die away.

———

கO. கரப்பவர்க் கியாங்கொளிக்குங் கொல்லோ விரப்பவர்
சொல்லாடப் போஒ முயிர்.

பரி :—(இ-ள்.) கரப்பார் இல்லையென்று சொல்லாடிய துணையானே இரப்பார்க்கு உயிர்போகா நின்றது ; இனிச் சொல்லாடுகின்ற அவர்தமக்கு உயிர் பின்னுநிற்றலான் †அப்பொழுது ‡எப்புரையுட் புக்கொளித்து நிற்கும், (எ-று).

¶உயிர்போகலாவது இனி யாமென்செய்துமென் றேங்கிச் செயலற்று நிற்றல்; ||"அந்நிலையே, மாயானோ மாற்றிவிடின்" என்றார் பிறரும். கேட்டாரைக் கொல்லவற்றாயசொல் சொல்வாரைக் கோறல் சொல்லவேண்டாவாயினும், §அது காண்கின்றிலம்; இஃதென்னோ

* இதற்கு (உள்ளமுருகும் என்பதற்கு) ஏனைய வுரைகாரர் யாவரும் யாசிக்கின்றவரது உள்ளம் உருகும் என்று பொருள் கூறினர்.

† அப்பொழுது - இரப்பார்க்குக் கரப்பார் பொருளில்லையென்னு மக்காலத்தில். ‡ எப்புரையுள் - எவ்வுட்டுளையில்.

¶ உயிர்போகலாவது - இரப்பவர்க்கு உயிர்போதலாவது.

|| நாலடியார் இரவச்சம், 8. இதன்பொருள். (மானந்தீராத யாசகனொருவன் பொருளுடைய ஒருவனிடத்துச் சென்று எனக்குப் பொருள் ஈவாயென்று சொல்லியாசிக்க வுடன்படுவானானால்) மாற்றிவிடின் - (அப்பொருளுடையான் பொருளில்லையென்று சொல்லி) மறுத்துவிட்டால், அந்நிலையே - அப்பொழுதே, மாயானோ - (அவன்) உயிர்நீங்காம லிருப்பானோ, (இரான்) என்பது.

§ அது - சொல்வாரைக் கொல்லுதல்.

வென்பதாம். *வறுமையுற்றுழி மறையாது இரக்கப்படுவாராய கேளிர்கட்கும் அதனைச் சொல்லாட உயிர்போம்; ஆனபின், மறைக்கப் படுவாராய பிறர்க்குச்சொல்லாடியக்காற் போகாதெங்கே யொளித் துநிற்கும்; இரண்டானும் போமேயன்றேவென இரவஞ்சினு ளொருவன் கூற்றாக்கி யுரைப்பாருமுளர். இவை மூன்று பாட்டானும் அவ்விரவின் குற்றமும் கரவின் குற்றமும் ஒருங்கு கூறப்பட்டன.

தெளி:—(இ–ள்.) சொல்லாட – (ஒளிப்பவர் இல்லையென்று) சொல்லிய வளவாலே, இரப்பவர்–இரப்பவர்க்கு, உயிர்போஒம்– உயிர் போகா நின்றது, கரப்பவர்க்கு - (இனிச்சொல்லுகின்ற) அவ்வொளிப்பவர்க்கு, (உயிர்பின்னும் இருத்தலால் அப்பொழுது), யாங்கு-எப்புரையுள், ஒளிக்குங்கொல் – புகுந்தொளித்து நிற்குமோ, (எ-று).

உயிர் போகலாவது (ஒளிப்பவரில்லையென்று சொல்லிய வளவாலே இரப்பவர்) இனியாமென்ன செய்வோமென்று ஏங்கிச் செயலற்று நிற்றல். (இல்லையென்பதைக்) கேட்டாரைக் கொல்ல வல்லதாகிய சொல் (அதனைச்) சொல்வாரைக் கொல்லுதல் சொல்ல வேண்டாவாயினும், அது காண்கின்றிலம்; இஃது என்னோ வென் பதாம். இவை மூன்றுபாட்டாலும் அவ்விரவின் குற்றமும் கரவின் குற்றமும் சேர்த்துச் சொல்லப்பட்டன.

(க-து.) தமக்குள்ளதை யொளிப்பார் இல்லையென்று கூறிய அளவாலே இரப்பார்க்கு உயிர் போகா நின்றது; அவ்வாறாக, அவ்வொளிப்பார்க்கு உயிர் போகாதிருத்தல் வியப்பே என்பது.

10. Where doth the life of the refuser hide itself when he says nay to the beggar? On hearing the sound of rebuff, the beggar's life ebbeth away.

— - —

## கரு-வது அதிகாரம்

## 108 கயமை—Baseness

பரி:—அஃதாவது மேல் அரசியலுள்ளும் அங்கவியலுள்ளுஞ் சிறப்பு வகையாற் கூறப்பட்ட குணங்களுள் ஏற்புடையன குறிப்பினால் யாவர்க்கு மெய்த வைத்தமையின், ‡ஆண்டுக் குறிப்பாற் கூறியனவும்

* (வறுமையுற்றவிடத்து மறையாமல் யாசிக்கப்படுவாராகிய சுற்றத்தார்க்கும் அவ்வறுமையை) இரப்பவர்–யாசிப்பவர், சொல் லாட–சொல்ல, போஒமுயிர்-உயிர்போம், (ஆனபின்), கரப் பவர்க்கு–மறைக்கப்படுவாராய பிறர்க்கு, யாங்கொளிக்குங்கொல்– (சொல்லாடியக்கால் போகாது) எங்கே ஒளித்து நிற்கும், (சொல்லுத லிரண்டாலும் உயிர் போமேயன்றோ) என்று இரத்தலுக்கஞ்சினு ளொருவன் சொல்லாக்கி (இக்குறளுக்குப்பொருள்) உரைப்பாரு முண்டென்பது

‡ ஆண்டு - அரசியலுள்ளும், அங்கவியலுள்ளும்.

ஈண்டொழிபியலுள் வெளிப்படக் கூறியனவுமாய குணங்கள் யாவுமிலராய கீழோரது தன்மை. அதனால் *இஃதெல்லாவற்றிற்கும் பின் வைக்கப் பட்டது.

தெளி:—அஃதாவது முன்னே அரசியலுள்ளும் அங்கவியலுள்ளும் சிறப்புவகையாற் சொல்லப்பட்ட குணங்களுள் ஏற்புடையவற்றைக் குறிப்பினால் யாவர்க்கும் பொருந்தவைத்தமையால், அங்குக் குறிப்பாற் சொல்லியனவும் இங்கு ஒழிபியலுள் வெளிப்படச் சொல்லி யனவும் ஆகிய குணங்கள் யாவுமிலராகிய கீழோரதுதன்மை. அதனால் இஃது எல்லாவற்றிற்கும் பின் வைக்கப்பட்டது.

---

க. †மக்களே போல்வர் கயவ ரவரன்ன
வொப்பாரி யாங்கண்ட தில்.

பரி:—(இ-ள்.) வடிவான் முழுதும் மக்களையொப்பர் கயவர்; அவர் மக்களை யொத்தாற்போன்ற வொப்பு ¶வேறிரண்டு சாதிக்கண் யாங்கண்ட தில்லை, (எ-று).

£முழுதுமொத்தல் ||தேற்றேகாரத்தாற்பெற்றும். $அவரென்றது அவர்மாட்டுளதாய ()வொப்புமையை. மக்கட்சாதிக்குங் கயச் சாதிக்கும் வடிவொத்தலிற் ‡குணங்களது உண்மையின்மைகளா னல்லது வேற்றுமை யறியப் படாதென்பதாம். இதனாற் கயவரது குற்றமிகுதி கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) கயவர்-கீழோர், மக்களேபோல்வர்-(வடிவால் முழுதும்) மக்களை யொத்திருப்பர், அவரன்ன வொப்பாரி-அவர் மக்களை யொத்தாற் போன்ற வொப்பு, யாம் கண்டதில்-(வேறிரண்டு சாதிகளிடத்து) யாம் கண்டதில்லை, (எ-று).

---

* இஃதெல்லாவற்றிற்கும் பின்-இக்கயமை பொருட்பாலின் எல்லா வதிகாரங்கட்கும் பின்னே.

† "மக்க டாமே யாறறி வுயிரே" என்று தொல்காப்பியங் கூறு தலால், வடிவால் முழுதும் மக்கள் போல்பவராகிய கயவர்க்கு ஆறுவ தறிவின்றென்பது பெறப்படுவதாம். ஆறுவதறிவு-மனவுணர்வு; அஃதாவது தக்கதின்னது; தகாததின்னதென் றுணர்தல்.

¶ வேறிரண்டுசாதிக்கண்-மக்கட்சாதி கயச்சாதி யென்னுமிரண்டு சாதியு மொழிந்த வேறிரண்டு சாதியினிடத்து.

£ முழுதுமொத்தல்-மக்களும் கயவரும் வடிவால் முழுதுமொத் திருத்தல். || தேற்றம்-துணிவு $அவரென்றது-கயவரென்று கூறியது.

() ஒப்புமையை-(வடிவால் முழுதும் மக்களை) ஒத்திருத்தலை.

‡ குணமுடையவர் மக்கள்; அஃதில்லாதவர் கயவரென்றறிய வேண்டுமென்பதாம்.

மக்களும் கயவரும் வடிவால் முழுதுமொத்தல் மக்களே என்னும் தேற்றேகாரத்தாற்பெற்றும். அவரென்றது அக்கயவரிடத்துளதாய வொப்புமையை. மக்கட்சாதிக்கும் கயச்சாதிக்கும் வடிவு ஒத்திருத்தலால் குணங்களினிருப்பாலும், இல்லாமையாலும் அல்லது அவ்விரு திறத்தார்க்கும் வேற்றுமை அறியப்படாதென்பதாம். இதனுற் கயவரது குற்றமிகுதிசொல்லப்பட்டது. ஒப்பாரி – ஒப்பு.

(கு-து.) மக்களுங் கயவரும் வடிவால் முழுதுமொத்துக் குணங்களா லொவ்வாதிருப்பர் என்பது.

1 The base resemble men perfectly in form; and we have never seen likeness so exact among other species.

---

உ. நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்.

பரி :—(இ–ள்) தமக்குறுதியாவன வறிவாரின் *அவை யறியாத கீழ் மக்கள் நன்மையுடையர், ‡அவர்போல $அவை காரணமாகத் தந் நெஞ்சத்தின்கட் கவலையில ராகலான், (எ-று).

நன்றென்பது சாதியொருமை. உறுதிகளாவன : †இம்மை மறுமை வீடுகட்குரியவாய புகழறஞானங்கள். | இவற்றையறிவார் ()இவை செய்யா நின்றே மிகச் செயப் பெறுகின்றிலே மென்றும், செய்கின்ற வினைதமக்கு இடையூறு வருங்கொ லென்றும், []இவற்றின் +மறுதலையாய பழிபாவ மறியாமை யென்பனவற்றுள் யாது விளையுமோ வென்றும் இவ்வாற்றுற் கவலையெய்துவர்; கயவர் அப் புகழ் முதலிய வொழித்துப் பழி முதலிய செய்யா நின்றும் யாதுங் கவலையுடையரல்லராகலான் 'திருவுடையர்' எனக் குறிப்பா விகழ்ந் தவாறு. இதனுற் கயவர் பழிமுதலியவற்றிற் கஞ்சாரென்பது கூறப்பட்டது.

தெளி :—(இ–ள்.) நன்று–(தமக்கு) உறுதியாவனவற்றை, அறிவாரின்–அறிவாரைக் காட்டிலும், கயவர்–(அவற்றை யறியாத) கீழ்

---

*அவை–தமக்கு உறுதியானவற்றை. ‡அவர்–நன்றறிவார்.
$அவை–தமக்குறுதியாவன.

†இம்மைக்குரியது புகழ் என்றும், மறுமைக்குரியது அறமென்றும், வீட்டிற் குரியது ஞானமென்றும் கொள்க.

| இவற்றை–புகழறஞானங்களை. ()இவை–புகழறஞானங்கள்.
[]இவற்றின்–புகழறஞானங்களின்.

+புகழ்க்கு மறுதலையாயது பழி; அறத்திற்கு மறுதலையாயது பாவம்; ஞானத்திற்கு மறுதலையாயது அறியாமை (அஞ்ஞானம்) என்று கொள்க. மறுதலை–விரோதம்.

மக்கள், திருவுடையர்-நன்மையுடையவராவர், (அவர்போல அவை காரணமாக), நெஞ்சத்து (தமது) நெஞ்சினிடத்து, அவலமிலர்-கவலையிலர், (ஆகலால்), (எ-று)

நன்றென்பது ஈறுதோன்றாத சாதியொருமைப் பெயர். உறுதிகளாவன: இம்மை மறுமை வீடுகளுக்கு உரியனவாகியபுகழ் புண்ணிய ஞானங்கள். இவற்றையறிவார் இவை செய்யாநின்றே மிகுதியாகச் செய்யப்பெறுகின்றிலே மென்றும், செய்கின்ற இவற்றிற்கு இடையூறுவருமோ வென்றும், இவற்றின் மறுதலையாகிய பழி பாவம் அறியாமை யென்பனவற்றுள் யாது விளையுமோ வென்றும் இவ்வழியால் கவலையையடைவர்; கயவர் அப்புகழ் முதலியவற்றை யொழித்துப் பழி முதலியவற்றைச் செய்யா நின்றும் சிறிதுங் கவலையுடையரல்லராகலால் 'திருவுடையர்' எனஅவரைக் குறிப்பா லிகழ்ந்தவாறும். இதனால் கயவர் பழிபாவ முதலியவற்றிற்கு அஞ்சாரென்பது சொல்லப்பட்டது.

(கு-து.) கீழ்மக்கள் பழிமுதலியவற்றிற் கேதுவாய காரியங்களை அஞ்சாது செய்தும் அதுபற்றிக் கவலையில்லாதுமிருப்பர்.

2. The base are happier than those who know what is good; as they have no anxiety as to the good.

———

ங. தேவ ரனையர் கயவ ரவருந்தா
மேவன செய்தொழுக லான்.

பரி:—(இ-ள்.) தேவருங் கயவரும் ஒரு தன்மையர்; அஃதியாதனு னெனின், தேவரைப்போன்று தம்மை நியமிப்பாரின்றிக் கயவருந்தாம் விரும்புவனவற்றைச் செய்தொழுகலான், (எ-று).

*உயர்வும் இழிவுமாகிய தங் காரணவேறுபாடு குறிப்பாற் றோன்ற நின்றமையின், இது ‡புகழ்வார்போன்று பழித்தவாறாயிற்று. இதனால் கயவர் விலக்கற்பாடின்றி வேண்டிய செய்வரென்பது கூறப்பட்டது.

தெளி: —(இ-ள்.) தேவரனையர்கயவர்-தேவரும் கயவரும் ஒருதன்மையராவர், (அஃது எதனாலெனின்), அவரும் – அக்கயவரும், (தேவரைப்போன்று தம்மை நியமிப்பாரில்லாமல்), தாமேவன–

---

*விரும்புவனவற்றைச் செய்யாமை உயர்விற்குக் காரணமா மென்றும், (விலக்கப்படுதலில்லாமல் , விருப் புவனவற்றைச் செய்தல் இழிவிற்குக் காரணமா மென்றுங் கொள்க. 'உயர்ச்சியும் தாழ்ச்சியுமாகிய' என்றும் பாடமுண்டு.

‡'தேவ ரனையர் கயவர்' என்று புகழ்வார்போன்று'மேவன செய்தொழுக லான்' என்னும் ஏதுவினால் கயவரைப்பழித்தா ரென்க.

இது புகழ்வது போலப் பழித்திறம் புனைதலாம் ; அஃதாவது ஒன்றனைப் புகழ்ந்தாற் போன்று பழிப்பதாம்.

தாம் விரும்புவனவற்றை, செய்தொழுகலான் செய்து நடத்தலால், (எ-று).

உயர்வும் இழிவுமாகிய தமது காரண வேறுபாடு குறிப்பால் தோன்ற நின்றமையால், இது கயவரைப் புகழ்வார் போன்று பழித்த படியாயிற்று. இதனால் கயவர் விலக்கப்படுத லில்லாமல் வேண்டிய வற்றைச் செய்வாரென்பது சொல்லப்பட்டது.

(க-து.) கீழ்மக்கள் விலக்கப்படுதலில்லாது தாம் விரும்பியவற்றை விரும்பியவாறே செய்வர் என்பது.

3. The base are likened to gods; for they act as they like.

---

ச. அகப்பட்டி யாவாரைக் காணி னவரின்
மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ்.

பரி:—(இ-ள்.) கீழாயினன் தன்னிற் சுருங்கிய *பட்டியா யொழுகு வாரைக் கண்டானாயின், அவ்வொழுக்கத்தின்கண் †அவரிற் றன் மேம் பட்டு ‡அதனாற் றன்மிகுதிகாட்டி யிறுமாக்கும், (எ-று).

()அகப்பட்டி - அகமாகியபட்டி, பட்டிபோன்று வேண்டியவாறே யொழுகலின் ' பட்டி ' என்றார்; §" நோதக்க செய்யுஞ் சிறுபட்டி " என்றார் பிறரும். இதனால் ⁑அவர் மேம்படுமாறு கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) கீழ் - கீழாயினன், அகப்பட்டியாவாரை - (தன்னிற்) சுருங்கியபட்டியாய் நடப்பவரை, காணின் - கண்டா ணுயின், (அந்நடக்கையில்), அவரின் - அவரைக் காட்டிலும், மிகப் பட்டு - (தான்) மேம்பட்டு, செம்மாக்கும் - (அதனால் தன் மிகுதியைக் காட்டி) இறுமாப்படைவன், (எ-று).

அகப்பட்டி - அகமாகியபட்டி (கீழாயினர்) பட்டிபோன்று வேண்டியபடியே நடத்தலால் (அவரைப்) 'பட்டி' என்றார். இதனால் அவர் மேம்படும் விதம் சொல்லப்பட்டது.

---

* பட்டியாய் - காவலில்லாதவராய்.

† அவரின் - அகப்பட்டியாயொழுகுவாரிலும்

‡ அதனால் - அம்மேம்பாட்டினால்.

() அகப்பட்டி-அகமாகிய மனம் சுருங்குதலுடையவராய்ப் பட்டி (கள்வன்) போன்று தாம் விரும்பியவாறே யொழுகுகின்றவர்.

§ கலித்தொகை - குறிஞ்சிக்கலி, 15. இதன் பொருள். நோவத் தக்க தொழில்களைச் செய்யுஞ் சிறியனாகிய காவலில்லாதவன் என்பது.

⁑அவர் - கயவர்.

(க-து) கீழ்மகன் தன்னிற் கீழாயினுரைக் கண்டவிடத்து அவரிடத்துத் தனது செய்கைகளை வியந்து கூறி, இறுமாப்படைவன் என்பது.

4. The base prides himself when he sees those whose acts are meaner than his own.

———

## ரு. அச்சமே கீழ்கள தாசார மெச்ச மவாவுண்டே லுண்டாஞ் சிறிது.

பரி:—(இ-ள்.) *கயவரதாய வாசாரங் கண்டதுண்டாயின், †அதற்குக் காரணம் அரசனுன் ஏதம் வருமென்றஞ்சு மச்சமே; ‡அஃதொழிந்தால், தம்மால் அவாவப்படும்பொருள் ¶அதனுலுண்டாமாயிற் | சிறிதுண்டாம், (எ-று).

‡ஆசாரத்தின் காரணத்தை 'ஆசாரம்' என்றும், ⁝அவாவப் படுவதனை 'அவா' என்றுங் கூறினுர். ०எச்சத்தின்கண் ணென்னு மேழாவது இறுதிக்கட் டொக்கது §பெருப்பான்மை அச்சம், சிறு பான்மை பொருட்பேறு, இவ்விரண்டானு மன்றி இயல்பாக வுண்டாகாதென்பதாம். வேண்டியசெய்தலே இயல்பு, ஆசாரஞ் செய்தல் இயல்பன்றென்பது இதனுற் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) கீழ்சள தாசாரம் – கீழோரது ஆசாரத்தை, (கண்டதுண்டாயின் அதற்குக் காரணம்), அச்சமே – (அரசனுல் துன்பம் வருமென்று அஞ்சும்) அச்சமே, எச்சம் – (அஃது) ஒழிந்தால், அவா – (தம்மால்) அவாவப்படும் பொருள், உண்டேல் – (அதனுல்) உண்டாமாயின், சிறிதுண்டாம் – (அது) சிறிதுண்டாகும், (எ-று).

---

* கயவரதாய – கயவர்களுடையதாகிய.

† அதற்கு – அவ்வாசாரத்திற்கு ‡ அஃது – அவ்வச்சம்.

¶ அதனுல் – அவ்வாசாரத்தால்.

| சிறிதுண்டாம் – கீழ்மக்களிடத்து அவ்வாசாரம் சிறிதுண்டா யிருக்கும்.

‡ கீழ்மக்களது ஆசாரத்தின் காரணமாகிய அச்சத்தை 'அச்சமே கீழ்களதாசாரம்' என்றொற்றுமை செய்து கூறினமையின், இது காரணம் காரியமாய உபசார வழக்காம். அச்சம் – காரணம்; ஆசாரம் – காரியம்.

⁝ அவா என்பது அவாவப் படுதற்கேதுவாயபொருளை யுணர்த்து தலால், காரியவாகு பெயராம், பொருள் – காரணம்; அவா – காரியம்.

० எச்சம் என்பதனிறுதியில் கண் என்னும் ஏழனுருபு செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது; அதன் பொருள் ஒழிந்தால் என்பதாம்.

§ கீழ்மக்களிடத்து ஆசாரம் பெரும்பான்மை அச்சங் காரண மாகவும் சிறுபான்மை பொருட்பேறு காரணமாகவு மிருப்பதன்றி, இயல்பாக இருப்பதில்லை யென்பதாம். பொருட்பேறு-மணி, பொன், நெல் முதலிய பொருள்களைப் பெறுவதாம்.

*ஆசாரத்தின் காரணத்தை 'ஆசாரம்' என்றும், அவாவப்படும் பொருளை 'அவா' என்றும் சொல்லினர். எச்சத்தின்கண் என்னும் (கண் என்னும்) ஏழனுருபு இறுதியில் தொக்கு நின்றது. கீழ்மக்களுக்கு ஆசாரம் பெரும்பான்மை அச்சம், சிறுபான்மை பொருட்பேறு என்னுமிவ்விரண்டாலு மல்லாமல் இயல்பாக உண்டாகா தென்ப தாம். கீழ்மக்களுக்கு வேண்டியவற்றைச் செய்தலே யியல்பு, ஆசாரஞ்செய்த லியல்பன் றென்பது இதனாற்சொல்லப்பட்டது. ஆசாரம் – ஒழுக்கம்.*

(கு-து.) *கீழ்மக்களிடத்து ஆசாரம் அச்சம் பொருட்பேறு என்னு மிவற்றுள் ஒன்றாலன்றி இயல்பாக விருப்பதில்லை என்பது.*

5. Fear is the only motive power in the degenerate ; if any other, hope of gain, to some extent.

———

**சா. அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட**
**மறைபிறர்க் குய்த்துரைக்க லான்.**

பரி :—(இ-ள்.) தாங்கேட்டமறைகளை இடந்தோறுந் தாங்கிக்கொண்டு சென்று பிறர்க்குச் சொல்லுதலான், கயவர் அறையப்படும் *பறையினை யொப்பர், (எ-று).

*மறை-வெளிப்படிற் குற்றம் விளையுமென்று பிறரை மறைத்து ஒருவன் சொல்லிய சொல். பிறர்-அம்மறைத்தற்குரியார். 'உய்த்து' என்றார்; †அவர்க்கது பெரும்பாரமாதனோக்கி. பறை ஒருவன் கையாற்றன்னை யறிவித்த தொன்றனை இடந்தோறுங் கொண்டு சென்று யாவரையு மறிவிக்குமாகலான், ‡இது தொழிலுவமம். இதனால் ¶அவரது செறிவின்மை கூறப்பட்டது.*

தெளி :—(இ-ள்) *தாங்கேட்ட—, மறை-இரகசியங்களை, உய்த்து-(இடந்தோறுந்) தாங்கிக்கொண்டுபோய், பிறர்க்கு—, உரைக்கலான் – சொல்லுதலால், கயவர் – கீழ்மக்கள், அறைபறை யன்னர்-அறையப்படும் பறையினை யொப்பாவர், (எ-று).*

---

* *பறை-பறையர் கொட்டும் வாத்தியங்களுள் ஒன்று.*

† *அவர்க்கு (கீழ்மக்களுக்கு) அது (தாங்கேட்ட இரகசியம்) பெரும் பாரமாதல் (பெரும்பளுவா யிருத்தலை) நோக்கி.*

‡ *பறை ஒருவன் கையால் தன்னை யறிவித்ததொரு விஷயத்தை யிடந்தோறுங்கொண்டு சென்று யாவர்க்கும் அறிவித்தல்போன்று கீழ்மக்கள் தாங்கேட்ட இரகசியத்தை யுட்கொண்டு பலவிடங்களிற் சென்று பிறர்க்குச் சொல்லுதலால், இக்குறள் தொழிலுவமை யாயிற்றென்க. பறையறி வித்தல் உவமானம்; கீழ்மக்கள் சொல்லுதல்-உவமேயம்.*

¶ *அவரது செறிவின்மை-கயவரது அடக்கமில்லாமை.*

மறை-வெளிப்பட்டால் குற்றம் விளையுமென்று பிறரைமறைத்து ஒருவன் சொல்லியசொல். பிறர்-அவ்விரகசியங்களை மறைத்தற் குரியவர். 'உய்த்து' என்றார்; அவர்க்கு அது பெரும்பாரமாதலை நோக்கி. பறை ஒருவன் கையால் தன்னையறிவித்ததொன்றனை இடந் தோறுங் கொண்டுசென்று அறியாதவர் யாவரையும் அறிவிக்குமாத லால், இது தொழிலுவமமாம். இதனால் அவரது செறிவில்லாமை சொல்லப்பட்டது.

(க-து.) கீழ்மக்களிடத்து இரகசியம் வெளியாகாதிருத்தலில்லை என்பது.

6. The degenerate are like a drum that is beaten, for they reveal the secrets they have heard.

---

எ. *ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூன்கைய ரல்லா தவர்க்கு.

பரி:—(இ-ள்.) கயவர்தங் ‡கதுப்பினை நெரிப்பதாக வளைந்த கையினை யுடைய ரல்லாதார்க்குத் தாமுண்டு †பூசியகையைத் தெறித்தல் வேண்டு மென்றிரந்தாலுந் தெறியார், (எ-று).

வளைந்தகை-முறுக்கியகை. ¶மெலிவார்க்கு யாதுங்கொடார்; நலிவார்க்கு எல்லாங்கொடுப்பரென்பதாம்.

தெளி:—(இ-ள்.) கயவர்-கீழ்மக்கள், கொடிறுடைக்கும்-(தமது) கதுப்பினை நெரிப்பதாக, கூன்-வளைந்த, கையரல்லாதவர்க்கு-கையினை யுடைய ரல்லாதவர்க்கு, ஈர்ங்கை-(தாம் உண்டு) பூசியகையை, (தெறிக்கவேண்டுமென்று இரந்தாலும்), விதிரார்-தெறியார், (எ-று).

வளைந்தகை-முறுக்கியகை. கீழ்மக்கள் மெலிவார்க்கு ஒன்றுங் கொடார்; தம்மை வருத்துவார்க்கு எல்லாங் கொடுப்பரென்பதாம்.

(க-து.) கீழ்மக்கள் தம்மை வருத்துவார்க்கன்றி மெலிவார்க்கு அவர் யாது கூறினும் ஒன்றுங் கொடார் என்பது.

---

* "தளிர்மேலே நிற்பினுந் தட்டாமற் செல்லா, உளிநீரார் மாதோகயவர்-அளிநீரார்க், கென்னுஞ் செய்யா ரெனைத்தானுஞ் செய்பவே, இன்னாங்கு செய்வார்ப் பெறின்" என்று நாலடியார் கூறுவதும், "பெற்றார் பிறந்தார் பெருநாட்டார் பேருலகில், உற்றா ருகந்தாரெனவேண்டார்-மற்றோர், இரணங் கொடுத்தா லிடுவ ரிடாரே, சரணங் கொடுத்தாலுந் தான்' என்று நல்வழி கூறுவது மிங்குணர்தற்பாலனவாம்.

‡ கதுப்பினை-கன்னத்தை. † பூசியகை-கழுவிய கை.

¶ மெலிவார்க்கு-உணவின்மையால் வருந்தி யாசிப்பவர்க்கு.

7. The degenerate would grudge even to shake off (a bit of rice) that sticks to their hands save to those who would break their jaws with clenched fists.

---

அ. **சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோற்**
**கொல்லப் பயன்படுங் கீழ்.**

**பரி:—(இ-ள்.) மெலியார் சென்று தங்குறையைச் சொல்லிய துணையானே இரங்கிப் பயன்படுவர் மேலாயினோர் ; மற்றைக்கீழாயினோர் கரும்புபோலவலியார் நையநெருக்கியவழிப் பயன்படுவர், (எ-று.)**

*பயன்படுதல் - உள்ளது கொடுத்தல். கீழாயினோரதிழிவுதோன்ற மேலாயினோரையும் உடன் கூறினார். இவை யிரண்டுபாட்டானும் *அவர் கொடுக்குமாறு கூறப்பட்டது.*

*தெளி:—(இ-ள்.) சான்றோர்-மேலாயினோர், சொல்ல-(மெலியவர் சென்று தங்குறையைச்)சொல்லியவளவாலே,பயன்படுவர்-(இரங்கிப்) பிரயோசனப்படுவர், கீழ்-மற்றைச்கீழாயினோர், கரும்புபோல்-கரும்பை (நையநெருக்குவது) போல, கொல்ல-(வலியவர்) நையநெருக்கிய விடத்து, பயன்படும்-பிரயோசனப்படுவர், (எ-று).*

*பிரயோஜனப்படுதல் – உள்ளபொருளைக் கொடுத்தல். கீழாயினோரது இழிவுதோன்றச் 'சொல்லப்பயன்படுவர் சான்றோர்' என மேலாயினோரையும் (ஒன்றின முடித்தல் தன்னின முடித்தலென்னு முத்தியால்) உடன் சொல்லினார். இவை இரண்டுபாட்டாலும் அவர் கொடுக்கும் விதம் சொல்லப்பட்டது. வலியவர்— கொடுங்கோல் மன்னர், கள்வர் முதலாயினோர்.*

*(க-து.) கீழ்மக்கள் வலியார் தம்மை நன்றாக வருத்தியவிடத்தே அவர்க்குத் தமக்குள்ள பொருளைக் கொடுப்பர் என்பது.*

8 The noble become fruitful (by giving alms) on hearing the suffering of the poor ; but the base, like the sugar-cane, only give when tortured.

---

கூ. **உடுப்பதூஉ முண்பதூஉங் காணிற் பிறர்மேல்**
**வடுக்காண வற்றாகுங் கீழ்.**

**பரி:—(இ-ள்.) பிறர் செல்வத்தாற் படுந் துகிலு முடுத்தலையும் பாலோடடிசி லுண்டலையுங் கீழாயினோன் காணுமாயின், †அவற்றைப் பொருது §அவர்மாட்டு வடுவில்லையாகவும் உண்டாக்க வல்லனும், (எ–று).**

** அவர் - கயவர். † அவற்றை – உடுத்தலையும் உண்டலையும்.*

*§ அவர்மாட்டு – பிறரிடத்து. '' உண்டு குணமிங் கொருவர்க் கெனினுங்கீழ், கொண்டு புகல்வதவர் குற்றமே '' என்று நன்னெறி கூறுவதிங் குணர்தற்பாலதாம்.*

*உடுப்பது உண்பதென்பன ஈண்டவ்வத் தொழின்மே னின்றன ; †அவற்றாற் பூண்டல் ஊர்தன் ‡முதலிய பிற தொழில்களுங் கொள்ளப் படும், ||அவற்றைக்கண்ட துணையானே பொறாமையெய்தலிற் 'காணின்' என்றும், கேட்டார் இது கூடுமென் றியையப்படைத்தல் அரிதாகலின் 'வற்றாகும்' என்றுங்கூறினார். இதனாற் $கயவர் பிறர் செல்வம் பொறாமை கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) கீழ் - கீழாயினோன், (பிறர் செல்வத்தால்), உடுப்பதூஉம் - (பட்டுந்துகிலும்) உடுத்தலையும், உண்பதூஉம் - (பாலுடன்சோறு) உண்ணுதலையும், காணின் - காண்பானாயின், (அவற்றைப்பொறாமல்), பிறர்மேல் - அவரிடத்து, (குற்றமில்லை யாகவும்), வடுக்காண - குற்றமுண்டாக்க, வற்றாகும்-வல்லவனாவன், (எ-று).

உடுப்பது உண்பது என்பன இங்கு அவ்வத்தொழிலின்மேல் நின்றன ; அவற்றால் ஆபரணம் பூணுதல் வாகனமேறுதல் முதலிய பிறதொழில்களும் கொள்ளப்படும். கீழாயினோன் அவற்றைக் கண்ட வளவாலே பொறாமையடைதலால் 'காணின்' என்றும், கேட்டவர் இக்குற்றம் இவரிடத்திருக்கலாமென்று உடன்படச்செய்தல் அரிதாகலால் 'வற்றாகும்' என்றும் சொல்லினார். இதனால் கயவர் பிறர் செல்வம் பொறாமை சொல்லப்பட்டது.

(க-து.) கீழ்மக்கள் பிறருடுப்பதையும் உண்பதையும் காண்பா ராயின், பொறாமையடைந்து அவரைப் பழித்துக் கூறுவர்.

9. The vile man will bring an evil accusation against others when he sees them well clothed and fed.

---

கO. எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து.

---

* உடுப்பது உண்பது என்னும் வினைமுற்றுக்கள் இங்கு உடுத்தல் உண்டல் என அந்தந்தத் தொழிலின்மேல் நின்றன. "உலகந் தழீஇ யதொட்பம்" என்னுங் குறளின் விசேடவுரையில் "தழீஇயது இல்லது என்பன அவ்வத்தொழின்மே னின்றன" என்று வரைந்திருப்பதும் இங்குணர்தற்பாலதாம்.

† அவற்றால் - உடுத்தல் உண்டல்களால்.

‡ முதலிய என்றமையின், கலவைபூசுதல், பூச்சூடுதல் முதலிய வற்றையுங் கொள்க.

|| அவற்றை - உடுத்தல் உண்டல் முதலியவற்றை.

$ கயவர் பிறர் செல்வம் பொறாமை - கீழ்மக்கள் பிறர் செல்வ முடையவராயிருத்தலைக்கண்டு பொறாமையடைதல்.

பரி:—(இ-ள்.) கயவர் தம்மை யாதானுமொரு துன்ப முற்றக்கால் அதுவே பற்றுக்கோடாக விரைந்து தம்மைப் பிறர்க்கு விற்றற்குரியர்; அதுவன்றி வேறெத்தொழிற்குரியர், (எ-று).

*உணவின்மையாகப் ‡பிறிதாக ஒன்றுவந் துற்றதுணையானென் பது தோன்ற 'ஒன்றுற்றக்கால்' என்றும், கொள்கின்றார் தங் கயமை யறிந்து வேண்டா வென்றற்குமுன்னே விற்று நிற்றலின் 'விரைந்து' என்றுங் கூறினார். ஒரு தொழிற்கு முரியரல்லரென்பது குறிப்பெச்சம். இதனாற்கயவர் தாம்பிறர்க்கடிமையாய் நிற்பரென்பது கூறப்பட்டது.*

தெளி.–(இ-ள்.) *கயவர்–கீழாயினார், ஒன்று-(தம்மையாதாகிலும்) ஒரு துன்பம், உற்றக்கால்–அடைந்தவிடத்து, (அத்துன்பமே சார்பாக), விரைந்து—, விற்றற்குரியர்–(தம்மைப் பிறர்க்கு) விலை செய்தற்கு உரியவராவர், எற்றிற்குரியர் – (அதுவல்லாமல் வேறு) எத்தொழிற்கு உரியவராவர், (எ–று).*

*உணவில்லாமையாகவாவது வேறாகவாவது ஒரு துன்பம் வந்த டைந்த அளவாலென்பது தோன்ற 'ஒன்றுற்றக்கால்' என்றும், கீழாயினார் தம்மைக் கொள்ளுகின்றவர் தமது கீழ்மையை அறிந்து வேண்டாமென்றற்கு முன்னே விற்று நிற்றலால் 'விரைந்து' என்றும் சொல்லினார். (கயவர்) ஒரு தொழிலுக்கும் உரியரல்லரென்பது குறிப்பெச்சமாம். இதனால் கயவர் தாம் பிறர்க்கு அடிமையாய் நிற்பரென்பது சொல்லப்பட்டது.*

(க-து.) *கீழ்மக்கள் தமக்கொரு துன்பம் நேர்ந்தவிடத்து, அதுவே சார்பாகத்தம்மைப் பிறர்க்கு விற்றற்குரியவராவரன்றி வேறெதற்கு முரியவராகார் என்பது.*

10. The ignoble will quickly sell themselves as soon as a calamity befalleth them. For what else are they fitted?

———

*ஒழிபியல் முற்றிற்று.*

*பொருட்பால் முற்றிற்று.*

*பொருட்பாலின் அதிகாரத்தொகை 70; அவற்றுள், அரசியல் 25, அங்கவியல் 32, ஒழிபியல் 13 ஆம்.*

*திருவள்ளுவமாலையில் பொருட்பால் எழுவகைப்படுமென்று கூறப்பட்டிருக்கின்றது. பரிமேலழகர் அவ்வேழும் அரசியல், அங்கவியல், ஒழிபியல் என்னுமூன்றனுளடங்குமென்றுட்கொண்டு, பொருட்பால் அரசியல், அங்கவியல், ஒழிபியலென மூன்றுவகைப் படுமென்று, அதனை வகுத்துக்கொண்டாரென்பது இங்குணர்தற் பாலதாம். அவ்வேழாவன: (1) அரசியல், (2) அமைச்சியல், (3) அரண், (4) கூழ் (பொருள்), (5) படை, (6) நட்பு, (7) குடி யென்பனவாம். போக்கியார் திருவள்ளுவமாலையில் "அரசிய லையைந் தமைச்சிய லீரைந், துருவல் லரணிரண்டொன் றொண்கூழ்- இருவிய, றிண்படை நட்புப் பதினேழ் குடிபதின்மூன், றெண்பொரு ளேழா மிவை" என்று கூறியிருப்பதிங்குணர்தற்பாலதாம்.*

---

‡ *பிறிதாக-உடுப்பது முதலியவற்றுள் ஒன்றில்லாமையாலாவது.*

# திருக்குறட் பொருட்பாலின்
# செய்யுண் முதற்குறிப்பகராதி

# பிழை பொறுக்க

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 430 | 14 | அதனுடைய | அதனையுடைய |
| 434 | 2 | யுடைவனுக்கு | யுடையவனுக்கு |
| 440 | 22 | செவிமெலெற்றி | செவிமேலேற்றி |
| 454 | அ.கு. 9 | யோகப் பியாசத்தை | யோகாப்பியாசத்தை |
| 463 | அ.கு. 5 | இரண்டற்குன் | இரண்டற்கும் |
| 467 | 11 | தும்பவிளைவின | துன்பவிளைவின |
| | 20 | தும்பந்தருவன | துன்பந்தருவன |
| | அ கு. 10 | குறிப்பெச்சனெமப் | குறிப்பெச்சமெனப் |
| 469 | அ.கு 3 | மற்றேரிந்திரியந்தின் | மற்றேரிந்திரியத்தின் |
| 476 | 16 | அலங்கார | அலங்காரமென |
| 479 | தலைப்பு | அறிவுடமை | அறிவுடைமை |
| 480 | 30 | உயர்ந்தாவாயினும் | உயர்ந்தார்வாயினும் |
| 483 | 18 | திருந்ததற்குக் | திருத்தற்குக் |
| 488 | 12 | who have not. | who have not (wisdom) |
| 489 | 17 | இஃதுதென் னுடையது | இஃதென்னுடையது |
| 501 | 17 | மழையின் தின்மை | மழையின தின்மை |
| 508 | 20 | பெறவெண்டுமாறு | பெறவேண்டுமாறு |
| 518 | அ கு. 4 | மிங்கறிய | இங்கறிய |
| 525 | அ.கு. 1 | எதிரதுதழிய | எதிரது தழீஇய |
| 526 | 20 | ஆராய்த்து | ஆராய்ந்து |
| 539 | 13 | என்னுங் | என்னும் |
| | 25 | peacock | peacock's |
| 557 | 10 | நிலக்கிடைக்கையும் | நிலக்கிடக்கையும் |
| 589 | 2 | பழமை | பழைமை |
| 591 | 14 | புறந்துப் | புறத்துப் |
| 601 | அ.கு. 2 | வெழுத்ததங் | வெழுந்ததங் |
| 611 | 5 | வாஞெக்கி | †வாஞெக்கி |
| 615 | 28 | வேண்டுவனற்றைக் | வேண்டுவனவற்றைக் |
| 675 | 23 | டொழுக | டொழுகுக |
| 688 | 12 | வினைவிழவான் | வினைவிழைவான் |
| 695 | தலைப்பு | ௬௫ | ௨௫ |
| 700 | 9 | heir | their |
| 701 | 17 | துன்பமுறுதலின் | துன்பமுறுதலிலன் |
| 705 | அ கு 11 | மந்திரத்திற்கு | மந்திரத்திற் |
| 706 | அ.கு. 14 | முற்றும்மை | முற்றும்மைப் |
| 715 | தலைப்பு | உ | க |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 716 | 1 | whe | who |
| | அ.கு. 10 | கல்வியுடமை | கல்வியுடைமை |
| 717 | தலைப்பு | ௧-வது அமைச்சு | ௨-வது சொல் வன்மை |
| 719 | 7 | செய்தனெச்சம் | செய்தெனெச்சம் |
| 727 | தலைப்பு | ௨ | ௫ |
| 730 | 24 | judgment | judgement |
| 756 | அ.கு. 7 | சந்தற்பத்திற்கு | சந்தர்ப்பத்திற்கு |
| 758 | தலைப்பு | திறக்குறன் | திருக்குறள் |
| 764 | 31 | ஒடு | ஓடு |
| 794 | 12 | aquired | acquired |
| 812 | அ.கு. 16 | உதயணன்) | (உதயணன்) |
| 826 | 7 | பொளுமுடைமை | பொருளுமுடைமை |
| 832 | அ.கு. 7 | ஏகதேசவுருக மாயிற்கு | ஏகதேசவுருவக மாயிற்று |
| 835 | 29 | களையலல்லார்க் | களையவல்லார்க் |
| 842 | 6 | வளவிலோ | வளவிலே |
| 861 | 13 | பின்னை | பின்னீர–பின்னை |
| 872 | 15 | தம்மோடு | தம்மோடு |
| 877 | அ.கு. 2 | உயர்த்தாரது | உயர்ந்தாரது |
| 887 | 23 | என்றாற் | என்றார் |
| 888 | 29 | கிநேகஞ் | சிநேகஞ் |
| 917 | 24 | தாந்தம்மை | தாந்தம்மைப் |
| 948 | 13 | இல்வுலகம் | இவ்வுலகம் |
| 960 | 27 | பென்மையை | பெருமையை |
| 973 | 12 | ஒழகுவார் | ஒழுகுவார் |
| 979 | 24 | நன்னுதலான் | நன்னுதலாள் |
| 983 | அ.கு. 2 | தொடியினை யையுடையார் | தொடியினை யுடையார் |
| 989 | அ.கு. 9 | இவ்வுருகத்தான் | இவ்வுருவகத்தான் |
| 1017 | 15 | அல்லூறு | அவ்வூறு |
| 1026 | 4 | இற்பிறந்தார்க்கண் | இற்பிறந்தார்கண் |
| 1046 | அ.கு. 5 | ஒழுக்கும் | ஒழுக்கம் |
| 1050 | அ.கு. 18 | சத்தான் | சாத்தன் |
| 1076 | அ.கு. 8 | அஃறிணையாய வழுமைதி | அஃறிணையாய வழுவமைதி |
| 1113 | அ.கு. 1 | அவ்விரண்டினையுங் | அவ்விரண்டினையும் |